ஸ்ரீ

# கம்பராமாயணம்

மூன்றாவது

## ஆரணிய காண்டம்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்

இயற்றிய உரையுடன்

வை. மு. நரசிம்மன்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி

17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,

திருவல்லிக்கேணி, சென்னை-5.

விசுவாவசு ஸ்ரீ ஆவணிமீ } 1965 [விலை ரூ. 9—00

நான்காம் பதிப்பு

# இப்புத்தகத்தில் அடங்கியவை:—



---


ஆனந்தாபார்வதி அச்சகம், 30 இடைப்பாளையம் தெரு, சென்னை-3.

# முகவுரை

வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கி
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்ற னுயிரை வாங்கிச்
சிலைவணக்கி மான்மறிய வெய்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
தலைவணக்கிக் கைகூப்பி யேத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்தித் தரணி தானே.

உலகில் ஒரு பொருளுக்கு ஏற்றமுண்டாவது, அப்பொருளி னிடத்துள்ள குணங்கண்டாகும்; மலருக்கும் மணிக்கும் மதிப்புண் டாவது, மணம் ஒளி முதலிய குணம் கண்டன்றோ? ஆகவே, குணத்தினால்தான் மதிப்பு உலகிலுண்டாவது என்பதைத் திண்ண மாய்க் கூறலாமன்றோ? அங்ஙனமே, ஒரு காவியத்துக்கு மதிப்புண்டா வது கவியின் திறமையினால் என்றாலும், உத்தம நாயகனைப் பெற் றிருப்பது பொன்மலர் நாற்றமுடையதுபோல் யாவராலும் அந்தக் காப்பியம் போற்றிச் சிரமேற்கொள்வதற்குக் காரணமாகும்.

இவ்வுண்மையைக் கண்டறிந்த கல்வியிற் பெரியராகிய கம்பர் தமது வாக்குப் பயன்பெறவேணு மென்ற கருத்தினாலேயே ஸ்ரீராம பிரானைக் கதாநாயகனாகப் பெற்ற இந்த இராமாயண காப்பியத்தைப் பாடினார். வடமொழியில் மகா கவியாகிய ஒருவர் "பூர்வர் பலரும் இராமசரித்திரத்தைப் பாடியுள்ளாரென்று இந்த இராமசரிதையை விட்டிடுவோமென்றால், இராமபிரானைப்போல் இவ்வளவு குணங்க ளோடு உலகில் துலங்கியவர் வேறுயாவர்? இங்கனுள்ளவனைக் கதாநாயகனாகக் கொள்ளாவிட்டால், கவிக்கு வேண்டிய குண கௌர வத்தைக்கொண்டு ஆழ்ந்து இனித்து விளங்குகின்ற சப்த பிரமத் தைக் கொண்டகவினர், தம் வாக்கை எங்ஙன் உதவுவார்கள்?" என்று இந்த இராமபிரானையல்லது பாடத்தக்கார்வேறெவருமில்லை யெனக் கூறியுள்ளனர்; நஞ்சடகோபரும் "கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ" என்று அருளிச் செய்தனர்.

ஒருசாரார் தமது சமயத்திலுள்ள ஊற்றத்தினால் சீவக சரிதை யைப் பழித்துக் கூறியதையொப்ப இராம சரிதையையும் தாழ்த்திக் கூறினாரென்றாலும், அங்ஙன்கூறியதற்குக்காரணம் அவர்களுடைய மதாபிமானமேயன்றி, இராமபிரானிடத்துள்ள குணங்களிற் குறை கண்டன்று என்பது, வெள்ளிடை மலையாகும்.

இவ்வாறு குணபூர்த்தியுள்ள இராமபிரானைக் கதாநாயகனாகக் கொண்ட இந்தக்காபபியத்தில் இராமபிரானைப் பரம்பொருளாக

வைத்துப் பேசியவை தவிர, மனிதனுகவேகொண்டு பேசிய இடங்களில் பலகுணங்கட்கும் உரியநிலயமாகப்பேசியன பலஉள. அவற்றுள் முக்கியமாகக் கவனிக்க வேண்டியவை இரண்டு: அவை வருமாறு:—தசரதசக்கரவர்த்தி தனக்கு மூப்புமேலிட்டதைக் கண்டு இராச்சியத்தில் இராமபிரானுக்குப் பட்டங்கட்டலாமென்று கருதிச் சபைகூட்டித் தன்கருத்தைத் தெரிவித்தாஞக, அவையோர், இராமபிரான் தலைவஞகவருவதிற் பெருமகிழ்வுகாட்டி "அத்த! நன்று" என்ருராக, சக்ரவர்த்தி, "இப்பொம்மல்வாசகம் உவகையின் மொழிந்ததோ? உள்ள நோக்கியோ? தகவென நினைந்தது எத்தன்மையால்?" என்று இவ்வகையாக வினவினன். வினவவும், வேத்தவையோர், "தானமுந் தருமமுந் தகவுந் தன்மைசேர், ஞானமு நல்லவர்ப் பேணு நன்மையும், மானவ! எவையு நின்மகற்கு வைகுமால், ஈனமில் செல்வம் வந்தியைகவென்னவே," "பனையவா நெடுங்கரப் பருமயானை யாய்!— மன்னுயிர்க்கு, எனையவா றன்பினனிராமனீண்டவற்கு, அனையவா றன்பினவவையும்" என்று மறுமொழி கூறியதுஒன்று: மற்ருென்று - சூர்ப்பணகை வாசகம்: அதுவருமாறு:—பஞ்சவடியில் சூர்ப்பணகை இராமலட்சுமணரைக் கண்டு காதலித்துத் தன் கருத்து நிறைவுறுதற்குத் தடை சீதையே யென்றுகருதி, அன்னுளைக் கவர்ந்துசெல்ல முயல, அப்போது இலக்குமணனுல் அன்னுள் அங்கபங்கஞ் செய்யப்பெற்றுக் கதறிக்கொண்டு சென்று, ஜநஸ்தானத்தில் தனனுடைய பாதுகாவலின்பொருட்டுச் சேனையொடு இருந்த கரன்காலில் விழுந்து செய்தி தெரிவிக்கின்ருள். அங்ஙன் தெரிவிக்கையில் இராம லட்சுமணரைப்பற்றி "இருவர் மானிடர் தாபதரேந்திய, வரிவில்வாட்கையர் மன்மதன் மேனியர், தருமநீரர் தயரதன் காதலர், செருவினேரு நிருதரைத்தேடுவார்," "ஒன்று நோக்கலர், வென்றிவேற்கை நிருதரை வேரறக், கொன்று நீக்குது மென்றுணர் கொள்கையார்" என்றும், கரவதத்தின்பிறகு கதறிக்கொண்டு இலங்கைபுக்கு இராவணன் பாதங்களில் வீழ்ந்து செய்தி தெரிவிக்கையில் "கானிடையடைந்து புவிகாவல் புரிகின்ருர், மீனுடை நெடுங்கொடியி ஞேனையர் மேல்கீழ், ஊனுடையுடம் புடைமையோ ருவமையொவ்வா, மானிடர்," "மன்மதனையொப்பர் மணிமேனி வடமேரு, தன்னெழிலழிப்பர் திரடோளின் வலிதன்ஞல், ***உலகேழின், நன்மதனழிப்ப ரொரிமைப்பி னனிவில்லான்," "வந்தனை முனித்தலைவர் பாலுடையர் வானத், திந்துவின் முகத்தரெறிநீரிலெழுநாளக், கந்தமலரைப் பொருவுகண்ணர் கழல்கையர், அந்தமிறவத்தொழிலராரவரை யொப்பார்," "வற்கலையர் வார்கழலர் மார்பினணிநூலார், விற்கலையர் வேதமுறை நாவர் தளிர்மெய்யர்," "மாரருளரே யிருவரோருலகின் வாழ்வார், வீரருளரேயவரின் வில்லதனின் வல்லார், ஆரொரு வரன்னவரை யொப்பவர்களைய, ஓரொருவரே யிறைவர் மூவரையு மொப்பார்" என்றும் வருவது. இங்ஙன், நண்பினரும் மாற்ருரும் பெருமை புகழ்ந்து பேசுமாறு ஒருகதாநாயகன் உள்ளானென்ருல், அந்தச்சரிதை அறம்பொருளின்பம் வீடு என்னும் நாற்பொருளையும் பயக்கத்தக்கதென்ருல், அந்தச்சரிதையினும் அந்தக் கதாநாயகனினும் மேம்பட்டன உண்டோ? இல்லையன்ருே?

இத்தகைய சிறப்புடன் கதாநாயகனைப் படைத்துள்ளதும், வேதோபப்பிரஹ்மணமான இதிஹாஸத்துட் சிறந்ததுமான இப் பெருங்காப்பியம், அடைக்கலமடைந்தோரைப் பாதுகாப்பவன் திருமால் என்ற பொருளை ஆங்காங்குத் தெரிவிக்கின்றதென்பர்: அதற்கு ஏற்ப, ஆரணியகாண்டத்தின் தொடக்கத்தில் அரக்கரால் நலிவுண்ட தண்டகாரணியவாசிகளான இருடியர் ஸ்ரீராமபிரான் அங்குவந்துள்ளதை யறிந்து அப்பிரானை யுபசரித்து அரக்கரால் தமக்கு நேர்ந்த இடரைத் தெரிவித்து, "அருளுடைவீர! நின்ன பயம் யாம்" என்று அபயம் வேண்ட, ஸ்ரீராமபிரானும் "ஆரறத்தி னுடன்றி நின்றார் அவர் வேரறுப்பன்: வெருவன்மின்னீர்" என்று அபயமளித்திருத்தல் காண்க. (இப்பொருள் இவ்விராமாயணத்தில் பாலகாண்டம் தொடங்கி யுத்தகாண்ட மீறுகவுள்ள எல்லாக் காண்டங்களிலும் கூறப்பட்டுள்ள தென்பது, யுத்தகாண்ட முக வுரையில் விரிவாகக் காட்டப்படும்.)

இனி, இக்காண்டத்திற் கூறப்படுகின்ற பிராட்டியினது பிரிவு தேவர்களின் சிறையை விடுவித்தற்குக் காரணமாவதுபோலவே தன் கொழுநனுக்கு ஏற்ப இவள் அபயமளித்தலைக் கொண்டுள்ளதுமாகும்: இவ்வுண்மையை, "பிராட்டி முற்படப்பிரிந்தது, தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக" என்ற ஸ்ரீவசனபூஷண வாக்கியமும், "ஸர்வேஶ்வரனுடைய தத்தத் அவதார ஸஜாதீயமான [1]விக்ரஹ பரிக்ரஹம் பண்ணி வந்து அவதரிக்குமவளாகையாலே...அவன் சக்கரவர்த்தித் திருமகனானவாறே [2]ததனுரூபமாகத் தானும் ஜநக ராஜன் திருமகளான பிராட்டி தண்டகாரணியத்திலே யெழுந்தருளி யிருக்கச்செய்தே ராவணன் பிரித்தானென்று ஒருவ்யாஜத்தாலே [3]ப்ரதமம் பெருமாளைப் பிரிந்து லங்கைக்கு எழுந்தருளிற்று - 'தேவ்யா காருண்ய ரூபயா' என்று [4]தத்குணஸாரத்வத்தாலே காருண்யம் தானாகச் சொல்லும்படியான பரம க்ருபையைப் ப்ரகாசிப்பிக்கைக்காக வென்கை: எங்ஙனேயென்னில்,—தேவஸ்த்ரீகள் சிறையை விடுவிக் கைக்காகத் தான் சிறையிருக்கையாலும், அவ்விருப்பிலே தன்னை அல்லும் பகலும் [5]தர்ஜநபர்த்ஸநம் பண்ணி யருவித்தின்ற க்ரூர ராக்ஷஸிகள் ராவணன் [6]பராஜிதனாகவும் பெருமாள் [7]விஜயியாகவும் த்ரிஜடை ஸ்வப்நம்கண்டத்தாலே [8]பீதபீதைகளாய் நடுங்குகிற

---

[1]விக்ரஹபரிக்ரஹம்-திருமேனியைக்கொள்கை. [2]ததனுரூபமாக-அதற்கு ஏற்ப.

[3]ப்ரதமம்-முதலில். [4]'தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேஶ:' என்பது ப்ருஹ்மஸூத்ரம். அந்தக்குணமே முக்கியாமிசமாய்மிக்கிருத்தலால் அந்தக்குணமாகவேகூறுவது: இதற்கு உதாரணம் - ஆன்மா உணர்வையே முக்கியாமிசமாய் மிக்குக்கொண்டிருத்தலால் அந்த ஆன்மாவை 'உணர்வு' என்றே கூறுவதுபோல்வது. [5]தர்ஜநபர்த்ஸநம் - அதட்டுதலும் மருட்டுதலும். [6]பராஜிதன் - வெல்லப்பட்டவன். [7]விஜயி - வென்றவன். [8]பீதபீதைகள் - மிகவும் அஞ்சின

தசையிலே 'பவேயம் ஶரணம்ஹிவ: [உங்கட்குச் சரணமாவேன்'] 'நீங்கள் நோவுபடும் ஸமயத்துக்கு நான் இருந்தேனே! நீங்கள் அஞ்ச வேண்டா' என்று அபயப்ரதானம் பண்ணுகையாலும், அது [9]உக்திமாத்ரமாய்ப் போகாமே ராவணவதாநந்தரம் தனக்கு ஶோபனஞ் சொல்லவந்த திருவடி [அனுமான்] 'இவர்களை [ராக்ஷஸிகளை]ச் சித்ரவதம்பண்ணும்படி காட்டித்தரவேணும்' என்ன, அவனோடே [அந்த அனுமானுடனே] மன்றுடி......அவர்கள் குற்றத்தைக் குணமாக உபபாதித்தும்,...பிறர்நோவுகண்டு பொறுத்திருக்கத் தக்க நெஞ்சுரம் தனக்கு இல்லாமையை முன்னிட்டு அவனுக்கும் இரங்கியல்லது நிற்கவொண்ணாதபடி உபதேசித்தும், இப்படி ஒருநிலே நின்று தான் [10]அடியிற்பண்ணின ப்ரதிஜ்ஞாநுகுணமாக [11]ஆர்த்ராபராதைகளை ரட்சிக்கையாலும் தன்னுடைய க்ருபையை வெளியிட்டாளிறே" என்ற அதன வ்யாக்யாநமும் தெரிவிக்கும்.

இங்ஙன் இராமாயணத்திற் பிரதிபாதிக்கப்படுகின்ற தலைமைப் பொருளான சரணாகதபரித்ராணம் [அடைக்கலமடைந்தோரைப் பாதுகாத்தல்] என்ற குணம் கதாநாயகனிடம் இருப்பதை வெளிப்படையாக முதன்முதலிற் காட்டுவதாகும், இவ்வாரணியகாண்டம்.

இங்ஙனுள்ள இக்காண்டத்திற்கு உரை, எனது ஆசிரியன்மாரும் உரையெழுதுவதிற் பெரும்பெயர்பெற்று என்றும் புகழ் மெய்யினால் உயிர்த்திருப்பவர்களுமாகிய காலஞ்சென்ற ஸ்ரீ. உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. சே. கிருஷ்ணமாசார்யஸ்வாமி என்பவர்களால் எழுதி வெளியிடப்பட்ட உரைகளைத் தழுவியே எழுதப்பட்டுள்ளது.

ஆயினும், அடியேன் பாலகாண்டம் அயோத்தியாகாண்டம் சுந்தரகாண்டம் யுத்தகாண்டம் என்ற இந்தக்காண்டங்களைப் போலவே இந்தக்காண்டத்தையும் பதிப்பிக்க எண்ணமுடையனானேன். அதற்கு ஏற்பப் பலபிரதிகளைக் கொண்டு இந்தக்காண்டத்தையும் ஒப்புநோக்கிக் கூடியவரையிற் சிறந்தபாடத்தைக் கைக்கொண்டு அதற்குத்தக உரையையும் ஆங்காங்குத் திருத்தியமைத்துள்ளேன்: அன்றியும், சில இடங்களில் முன்னையபொருளை

---

வர்கள். [9]உக்திமாத்ரம் - (அநுஷ்டானத்துக்குவராமல்) பேச்சளவோடு நிற்பது. [10]அடியிற்பண்ணின ப்ரதிஜ்ஞாநுகுணம் - த்ரிஜடையின் ஸ்வப்நத்தைக்கேட்டு ராக்ஷஸிகள் மிகவும் அஞ்சி நடுங்கியபோது தன்னை மிகவும் நலிகிற அந்தராக்ஷஸிகளிடத்துக் கருணைகொண்டு அவர்களை நோக்கி 'உங்கட்குஏதேனும் தீங்கு நேருவதாக ஏற்படின் உங்கட்கு நான் ரட்சகையாவேன்' என்று பொருள் கொண்ட 'பவேயம்ஶரணம்ஹிவ:' என்று பிரதிஜ்ஞையை முந்திச் செய்து கொடுத்ததற்கு ஏற்ப. [11]ஆர்த்ராபராதைகள் - (தங்கட்குத் தீங்கு சேர்தற்கு) முந்திய க்ஷணம்வரையில் தன் திறத்துக் குற்றம்புரிந்தவர்கள்.

மாற்றவும் செய்யவேண்டியதாயிற்று. மற்றும், அரும்பதவகராதி செய்யுண்முதற்குறிப்பகராதி என்பவற்றையும் இறுதியிற் சேர்த்துள்ளேன்.

இவ்வுரையில் இக்காண்டத்தாற் கற்போர் அறியலாகும் நீதிகள் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ளன. அன்றியும், பதினெண்கீழ்க்கணக்கு எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலிய பண்டைக்கால நூல்களின் சொற்பொருள்களின கருத்துக்கள வந்துள்ள ஒற்றுமைப்பகுதி முதலியனவும், ஸ்ரீவான்மீகமுனிவரியற்றிய இராமாயணக் கதைபபோக்குக்கும் இந் நூலிற்கூறிய கதைப்போக்குக்கும் வேற்றுமையுள்ள விடத்து அவையும் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ளன.

இந்தப்பதிப்பில் சீர்பிரித்த செய்யுளும் பதவுரையும் அமைந்திருப்பதோடு பாடலிற் கூறியுள்ள விடயம் விளங்குமாறு எல்லாச் செய்யுட்கும் தலைப்பு கருத்து பதசாரம் தொனிப்பொருள் ஆங்காங்குக் கூறற்குரிய இலக்கணக் குறிப்புக்கள் அணிகள் புராண கதைகள் பிரதிபேதங்கள் யாப்பிலக்கணம் என்பனவும் காட்டப்டுள்ளன.

இந்தப்பதிப்பிற் பலவகையான திருத்தமானபாடங்களும் முன்னர் அச்சில் வெளிவராத பாடல்களும் வெளிவந்துள்ளன: இங்ஙன் வருதற்குக் காரணம், இப்போதுதிருவாங்கூர் சர்வகலாசாலையில் தமிழ்த்துறைக்குத் தலைவராகஇருக்கும் திருவாளர் ராவ்ஸாஹெப் S. வையாபுரிப்பிள்ளை B. A. B. L. என்பவர். அவர்கள் தாம் பல ஏட்டுப்பிரதிகளை யொப்புநோக்கிப் பல பாடபேதங்களைக் குறித்து வைத்திருந்த தமது புத்தகத்தைத் தந்ததோடு சில ஏட்டுப்பிரதிகளையும் தந்தனர்: ஆகையால், அவர்கள் செய்தஉதவிக்காக யானும் இப்பதிப்பாற் பயனைநுகர்வோரும் அவர்கள் திறத்து நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளோம். மற்றும் ஸ்ரீ. உ. வே. பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமிகள் அச்சிட்டு வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரிப்பிரதியும் இந்தப்பதிப்பிற்கு உதவிற்று என்பதையும் மகிழ்வோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். அன்றியும், திருவாளர். ராவ்ஸாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் கம்ப ராமாயண சாரமும் இப்பதிப்பிற்கு உதவிற்று.

இந்த ஆரணிய காண்டம் முழுவதையும் பிழைநிகழாதிருக்க வேணுமென்ற கருத்துடனே அச்சுப்பிழைகளைத் திருத்திவந்ததோடு தமக்குத் தோன்றிய நுட்பமான விஷயங்களையும் எடுத்துக் காட்டி என்னால் ஏற்றுக்கொள்ளப்பெற்றவற்றை இவ்வுரையில் அமையுமாறும் உதவியவர், விவேகாநந்தா கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரான ஸ்ரீ வித்வான் ஜகந்நாதாசார்யர் எம். ஏ., எல். டி. என்பவர்: அன்னவர்க்கு இராமபிரான் வேண்டிய நலன்களை யெல்லாம் அருள்புரிவாராக.

இப்பதிப்பில் அடியேனுடைய திரிபுணர்ச்சி சோர்வு அறியாமை முதலியவற்றாற் காணப்படுங் குற்றங்குறைகளை விவேகிகள் பொறுப்பதன்றித் தாம் கண்ட அக்குறைவுகளையேனும் அடியேனுக்குப் புலப்படாத அரியபெரிய விடயங்களையேனும் எடுத்துத் தெரிவிப்பராயின், அப்பெரியாரிடத்துப் பெருமகிழ்வோடு நன்றிபாராட்டி அவ்விஷயங்களைச் சமயம் வாய்க்கும்போது தமிழுலகிற்குப் பயன் படுமாறுஞ் செய்வேன்.

இந்த ஆரணியகாண்டத்தைப் பதிப்பிக்குமாறு விருப்பை யுண்டாக்கித் தோன்றாத்துணையாய் நின்று அவ்விருப்பை நிறைவேறுமாறு திருவருள் புரிந்த ஸ்ரீராமபிரானது திருவடித்தாமரைகளை என்றுங் கருத்திற்கொண்டு வணங்குவேன்.

திருவல்லிக்கேணி.
4—3—53.

இங்ஙனம்.
வை மு. கோபாலக்ருஷ்ணன்.



மூன்றும் பதிப்பு:—ஹேவிளம்பி ௵ சித்திரைமீ (1957) வெளியிடப்பட்டது.

நான்காம் பதிப்பு:—இந்தப்பதிப்பு மூன்றும் பதிப்பை யொட்டியே அமைந்துள்ளது. இந்தப்பதிப்பு அச்சாகுங்காலத்தும் அச்சுத்தாளைத் திருத்தல் முதலியவகையால் பெரிதும் உதவியவர் விவேகாநந்தர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப்பேராசிரியரான வித்வான் C. ஜெகந்நாதாசாரியர், எம். ஏ., எல். டி. அவர்கள். இவருடன் துணைபுரிந்தோர் ஈகை. ஸ்ரீ. E. S. வரதாசாரியர், பி. ஏ. இவ்விருவர் திறத்தும் நன்றியறிதலுடையேன்.

விசுவாவசு ௵
ஆவணிமீ
1965

வை. மு. நரசிம்மன்.

# கம்பராமாயணம்

## மூன்றாவது

# ஆரணிய காண்டம்

இவ்வடமொழித் தொடர்மொழி - இரண்டனுருபும் பொருளு முடன் தொக்கதொகை. ஆரணியம் = ஆரண்யம்: அரணியசம்பந்த மானது; அரணியம் - காடு. காண்டம் - கூட்டம்; இப்பொதுப் பெயர் - இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை உணர்த்துஞ் செய்யுட் களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளப்பட்டு, ஒரு பெரும் பிரி வுக்குப் பெயராகவழங்கியது. ஸ்ரீராமலக்ஷ்மணர் திருவயோத்தியி னின்று புறப்பட்டுக் கங்காநதியைத்தாண்டியது முதல் நடந்தவை யெல்லாம் அரணிய சம்பந்தமான சரித்திரமே யாயினும், ஸ்ரீபரதாழ் வான் திருவயோத்தியிலிருந்து சித்திரகூடத்திற்கு வந்து மீள்வது முதலிய நகரசம்பந்தமான சரிதைகள் இடையே கூறப்படுதலால், அவை அயோத்தியாகாண்டத்தின்பாற்பட்டு, பின் தண்டகாரணி யத்திற் புகுந்ததுமுதல் நிகழ்ந்தவையே ஆரணியகாண்டத்தின்பாற் பட்டன வென்க.

இக்காண்டம், விராதன் வதைப்படலம் முதலாகச் சவரி பிறப்பு நீங்கு படலம் ஈருக 11 - படலங்களை யுடையது.

கீழ் அயோத்தியா காண்டத்தில், இராமாயண கதாபுருஷர்க ளான இராமனுதியரால் மேற்கொள்ளப்பட்டனவான தந்தையின் சொல்லைக்காத்தல் முதலிய பொதுவான அறங்களும், பகவானுக்கு அடிமையாகை, அன்னுனுக்குப் பாதந்திரனுகை, பாகவதரின் அபிமா னத்துக்குப் பாத்திரமாகை முதலிய சிறப்புறும் அறங்களும் சொல் லப்பட்டன: இக்காண்டத்தில் சாதுக்களான சனங்களைப் பாதுகாத் தல் முதலிய சாமானிய தருமமும், மோட்சத்தை யளிக்கையாகிற பரத்துவசின்னமும் சொல்லப்படுகின்றன. இனி, அயோத்தியா காண்டத்தில் அவித்தைகளை முற்றிலும் போக்கி யிருக்கை, என்றும் மாறாத ஆநந்தத்தால் நிரம்பியிருக்கை, எல்லாப் பொருளிலும் உள்ளும் புறம்பும் பரம்பியிருக்கை, யாவற்றினும்விஞ்சிப் பேரொளி கொண்டிருக்கை, ஒப்புமையற அறத்தைப் பரவச்செய்கை முதலிய குணகணங்கள் கூறப்பட்டன வென்றும், இக்காண்டத்தில் சற்சனப் பாதுகாப்பாகிய சிறப்புற்ற அறம் சொல்லப்படுகின்றதென்றுஞ் சொல்வர். இன்னும் இம்மகா காவியத்திலுள்ள மறைபொருள்களை விரிப்பிற் பெருகும்.

# 1 - ஆவது விராதன் வதைப்படலம்.

விராதனது வதையைப்பற்றித் தெரிவிக்கும் படலமென்று விரியும். விராதன் - ஓரரக்கன்; இவன், முன்னே தும்புரு என்னும் பெயருள்ள கந்தருவனாக இருந்து குபேரனது சாபத்தாற் பின்பு ராக்ஷஸனாகி வனத்தில் திரிந்து வருபவன்: விராதனென்னும் வட சொல்லுக்கு - மிகுதியாய் அபராதஞ் செய்பவனென்று பொருள். வதை - வதமென்னும் வடமொழித்திரிபு. கூட்டமென்று பொருளுள்ள படலமென்ற தற்சமவடசொல் - காண்டத்திற்கு உட்பட்ட சிறுபிரிவைச் சங்கேதத்தாற் காட்டிற்று.

இப்படலம் இராமலட்சுமணர்கள் விராதனைக்கொன்ற கதையைக் கூறுவது: இப்படலத்திற்கூறும் விரிவான பொருள்—பரதாழ்வான் சித்திரகூடத்தினின்றும் அயோத்திக்குச் சென்றான்; பின்பு ஸ்ரீராமபிரான், இவ்விடத்திலிருந்தால் அயோத்தியிலுள்ளார் அடிக்கடிவருவார்களென்று நினைத்து இளையபெருமாளோடும் பிராட்டியோடுந் தண்டகாரணியத்திற்குச் செல்ல நினைத்தான். செல்லும் நெறியிடையில், அத்திரிமகாரிஷியினது ஆச்சிரமஞ் சென்றான்; அவர் பத்தினியாகிய அநசூயை சீதைக்கு அணிகளும் பட்டாடைகளும் அளித்து அலங்கரித்தாள். பிறகு தண்டகவனம் புகலானான்; புகுந்தவுடன் விராதனென்று பெயர் பெற்ற அரக்கனொருவன் சானகியைத் தூக்கிச்சென்றான்: அது கண்டு ஸ்ரீராமலட்சுமணர்கள் அவனை எதிர்த்தனர்: அவன் அவளைவிட்டு இவர்களிருவரையும் தூக்கிக்கொண்டு செல்லலானான்: இவர்கள் அவனது தோள்களைத் துணித்து அவனைப் பள்ளம் வெட்டிப் புதைத்துக் கொன்றனரென்பது.

## 1.—கடவுள் வாழ்த்து.

பேதி யாதுநிமிர் பேத வுருவம் [1]பிறழ்கிலா
ஓதி யோதி யுணருந்தொறு முணர்ச்சி யுதவும்
[2]வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் [3]தெரிகிலா
ஆதி [4]நாத ரவரெம் மறிவினுக் [5]கறிவரோ.

திருப்பாற்கடலில் யோகநித்திரை புரியும் பரம புருடனாகிய திருமாலே தசரதன் மதலையாய், இம்மாண்கதைக்கு ஓர் தலைவனாய், ஸ்ரீராமனாகித் திருவவதரித்ததனால், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர், ஈடு மெடுப்புமில்லாத அவ்வுத்தமநாயகன் விஷயமாகச் செய்யப்புக்க இப்பெருங்காப்பியத்திற்கு அவனையே வாழ்த்தல் வேண்டும்; அதனால் காண்டந்தோறும் அவன் விஷயமாகவே கடவுள் வாழ்த்துக் கூறத் துணிந்து, பாலகாண்டத்தில் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களைச் சொல்லுகின்ற முறையாலே மூன்று கவிகளாற் கூறி, அயோத்தியாகாண்டத்தில் இக்காப்பியத்தலைவனாகிய ஸ்ரீராமபிரான் இவ்வுலகையெல்லாம் சரீரமாகக்கொண்டவனான சருவேசுவரனென்று கூறி, ஆரணியகாண்டத்தில் இக்கவியால், அவ்வெம்பெருமான் வேதம் முதலிய நூல்களாலும் பிரமன் முதலிய பெரியோர்களாலும் உணர்தற்கரிய பரவஸ்து என்கிறார்.

(இதன் பொருள்.) பேதியாது-(தத்தம் தன்மை) வேறுபடாமல், நிமிர் - தோன்றிவளர்கின்ற, பேதம் உருவம் - பலவேறுவகைப்பட்ட வடிவங்களினின்றும், பிறழ்கிலா-வேருகாமலும்,—ஓதி ஓதி-(ஆசிரிய னிடத்துக் கற்றுப் பலமுறை) பாராயணஞ் செய்து, உணரும் தொறும் - (தம்பொருளை) ஆராய்ந்தறியும் பொழுதெல்லாம், உணர்ச்சி - மெய்யுணர்வை, உதவும் - மேன்மேற்கொடுக்கின்ற, வேதம் - வேதங்களாலும், வேதியர் - அவ்வேதங்களை யுணர்ந்த அந்தணர்களாலும், விரிஞ்சன் முதலோர் - பிரமன் முதலிய தேவர் களாலும், தெரிகிலா - ஆராய்ந்தறியப்படாமலும்நின்ற, ஆதிநாதர் அவர் - (எல்லாப்பொருட்கும்) முதல்தலைவராகிய ஸ்ரீராமபிரான், எம் அறிவினுக்கு - எமது அறிவுக்கு, அறிவு - அறியப்படுபொருள், (என்றவாறு.)

சராசரரூபியாக இருப்பவனும், வேதம் வேதியர் விரிஞ்சன் முதலியோர்களால் ஆராய்ந்தறியப்படாமல் நிற்பவனுமாகி எல்லாப் பொருள்கட்கும் முதல்தலைவனுகிய ஸ்ரீராமபிரான் எம்மறிவினுக்கும் அறிவானவ ரென்பதாம். ஆகையால், அவரை வணங்குவோமென் பது குறிப்பு: இங்ஙனம் வணங்கியதனுல், எடுத்த கருமம் இனிது முடியுமென்று கருத்து.

பேதியாது நிமிர்தலாவது - அனலின் வெம்மையும் நீரின் தண் மையும்போல் அவ்வவற்றின் தன்மை அவ்வப்பொருள்களினின்றும் வேறுபடாதிருத்தல். பேதவுருவம் என்றது-தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்று சொல்லப்பட்ட சராசர ரூபங்கள். உருவம் பிறழ்கிலாமையாவது - எல்லாப் பொருள்களுள் ளும் உடலுக்குள் உயிர்போல உயிருள்ளும் உயிராய் [அந்தர்யாமி யாய்] உளனுதல். மெய்யுணர்வாவது-பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதஜயங்களானன்றி உண்மையா னுணர்தல்; இதனை வடநூலார் தத்துவஞான மென்பர். வேதமென்பதற்கு - செய்யவேண்டிய விதிகளையும் தவிர வேண்டிய விலக்குக்களையும் அறிவிப்பதென்பது பொருள். வேதியர் - வேதங்களைப் பழுதறக் கற்று அவற்றிற்குத்தக அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற் பவர். வேதங்களை ஓதுதலும் ஓதுவித்தலும் பார்ப்பாரது தொழிலே யாதலால், வேதியரென்பது அந்தணரையே யென அறிக. திருமா லினது திருவுந்திக் கமலமலரினின்றுந் தோன்றி உலகங்களையெல் லாம் படைக்குங் கடவுளாதலால், விரிஞ்சனை முதலாக்கூறினுர். ஆதி நாதர் - ஆதியாகிய தலைவர்; என்றது - மும்மூர்த்திகளுள்ளும் முதன்மூர்த்தியாகிய ஸ்ரீமந்நாராயணனது ஏழாவது திருவவதார மாகிய ஸ்ரீராமபிரானை. எம்மறிவினுக் கறிவென்றது - "பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்றவாறு பக்தராகிய எமக்கு அறியப்படுமவனென்றபடி. அறியப்படுபொருளை 'அறிவு' என்றது, ஆகுபெயர்.

இனி, 'பேதியாதுநிமிர் பேதவுருவம் பிறழ்கிலா' என்பதற்கு - தான் வேறுபடாமல் ஒன்றி நெருங்கிய வேற்றுமைப்பட்ட உருவங் கள்தோறும் இருந்துகொண்டே வேறுபடாத என்றும் பொருள்

கொள்ளலாம்; அப்பொருளில் தான் பலவகைப்பட்ட சேதநாசேத நங்களோடு கலந்திருக்கையில் அவற்றின் தன்மை தன்னிடத்தே தட்டத் தன் தன்மை வேறுபடாமலே யிருப்பவனென்று கருத்து; இப்பொருளில் 'பேதியாது' இருந்தும் 'பிறழ்கிலா' என்று இயையும். "யாவையுமெவருந்தானா யவரவர் சமயந்தோறுந், தோய்விலன் புல னைந்துக்குஞ் சொலப்படா னுணர்வின்மூர்த்தி, ஆவிசேருயிரி னுள்ளால் ஆதுமோர் பற்றிலாத, பாவனையதனைக் கூடி லவனையுங் கூட லாமே" என்னும் பாசுரத்தின் விசேஷார்த்தங்கள் இங்கே விசாரித் தறியத்தகும்; மேற்படலத்தில் "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற சுடர்" என்னுமிடத்தும் இக்கருத்து அமைந்திருத் தல் காண்க. 'ஓதியோதியுணருந்தொறு முணர்ச்சியுதவும்' என்ப தற்கு, தமது திருநாமங்களைப் பலமுறை உச்சரித்துத் தியானஞ்செய் யும்பொழுதெல்லாந் தத்துவஞானத்தைக் கொடுக்குமென்று உரைத்து, ஆதி நாதரோடு கூட்டுதலுமாம்.

இனி, [2]வேதவேதியர் என்னும் பாடத்திற்கு - வேதங்களால் அறியப்படுபவ ரென்று பொருளாய், வேதவேதியரும் விரிஞ்சன் முதலோரும் தெரிகிலா ஆதிநாதரு மாகிய அவ ரென்க. 'அறி வரோ' என்பதனை அறிவர் ஓ எனப் பிரித்து, ஓகாரத்தை எதிர் மறையாக் கொண்டு, வேதங்கட்கும் வேதியர்க்கும் விரிஞ்சன் முத லோர்க்கும் அறியப்படாத கடவுள், சின்னாட்பல்பிணிச் சிற்றறிவினை யுடைய சிறியேமாகிய எமது அறிவிற்கு அறியப் படுவரோ? என்றும் பொருள்கொள்ளலாம்.

துறை - கடவுள்வாழ்த்து; "வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே" என்றதன்கண் 'வகை' என்றதனாற் கொண்ட அறுமுறை வாழ்த்தன்றித் தனக்கும் பிறர்க்கும் பயன்படும்படி "யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது" என்றதனால், முன்னிலையன்றி யுங் கடவுளைவாழ்த்துதலின், இக்கவி கடவுள்வாழ்த்தெனப்பெயர் பெற்றது; [அறுமுறைவாழ்த்துக்களுள் வாழ்த்தப்படும் பொருள்க ளாவன:—முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமாம்.]

பிறழ்கிலா, தெரிகிலா என்ற ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச் சங்கள் அடுக்கி, ஆதிநாத ரென்னும் வினைமுதற்பெயர் கொண்டன; "மூவா முதலா வுலகம்" என்பதிற்போல. 'எம்' என்னுந் தன்மைப் பன்மை, ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மை. இனி, உலகத்தாரையுந் தன்னோடுகூட்டிக் கூறினாரெனினு மமையும். அரோ - ஈற்றசை.

பி - ம்:—[1]பிறழ்கிலாது. [3]வெளியிடா. [4]தேவர். [5]அறிவரே.

இதுமுதல் நாற்பத்தேழுகவிகள் - நெடிலடிநான்குகொண்ட கலித்துறை. இவற்றை அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தமாக அலகிடினும் இழுக்காது. (1)

## 2.—இராமன் முதலியோர் அத்திரிமுனிவனது ஆச்சிரமஞ் சேர்தல்.

**[1]முத்தி ருத்தியவ் விருந்தனைய மொய்ந்ந கையொடும்**
**சித்தி ரக்குனி சிலைக்குமரர் சென்ற னுகினார்**

அத்தி ரிப்பெய ரருந்தவ [2]னிருந்த வமைதிப்
பத்தி ரப்பழு மரப்பொழி [3]றுவன்ற பழுவம்.

(இ - ள்.) சித்திரம் - அழகிய, குனி சிலை - வளைந்த வில்லினை யுடைய, குமரர் - ஸ்ரீராமலக்ஷ்மணர்கள்,—முத்து - முத்துக்களை, இருத்தி - ஒழுங்காய்ப் பதித்துவைக்க, அவ் - அம்முத்துக்கள், இருந்து அனைய - இருந்தாற் போன்ற, மொய் நகையொடும் - நெருங்கியபற்களையுடைய சீதாபிராட்டியுடனே,—அத்திரிப்பெயர் - அத்திரியென்னுந் திருநாமத்தையுடைய, அருந்தவன் - (பிறரால்) செய்தற்கரிய தவத்தினையுடைய மகாமுனிவன், இருந்த-எழுந்தருளி யிருந்த, அமைதி - இடமாகிய, பத்திரம் பழு மரம் பொழில் - இலை களையுடைய பழுத்த மரங்களையுடைய சோலைகள், துவன்ற - நெருங் கிய, பழுவம் - ஆச்சிரமத்தை. சென்று அணுகினர் - போய்க் கிட்டினார்கள்; (எ - று.)

நிறம் அழகு முதலியனபற்றிப் பல்லுக்கு முத்து உவமையாம். இருத்தி - இருத்த வென்னுஞ் செயவெனெச்சத்தின் விகாரம்; இருந்தென்னும் வேறுவினைமுதல்வினை கொண்டு முடிந்தது. அவ் - சுட்டடியாகப்பிறந்த அஃறிணைப்பன்மைப்பெயர். இனி, 'முத் திருத்தியவிருந்தனைய' என்று பாடங்கொண்டு, இருத்திய-இருத்தி யனவாகிய, முத்துக்கள் இருந்த தன்மையை யொத்த என்றும், அ இருந்தனைய எனப் பிரித்து அகரத்தைச் சாரியையாக் கொண்டு, இருத்தியிருந்தனைய எனக் கூட்டியும் உரைக்கலாம்; அன்றியும், அகரத்தைச் சுட்டாக்கொண்டு அம்மொய்ந்நகை யென்றுதல், அக்குமரரென்றுதல் கூட்டுதலும் ஒன்று. இருந் தனைய என்பதனை இருந்தாலனைய என்பதன் திரிபாகவாயினும், இருந்ததனைய என்பதன் விகாரமாகவாயினுங் கொள்க. மொய்ந் நகை - அன்மொழித்தொகை. வில்லுக்குச் சித்திரமாவது - குமரர்க ளது கையோடுசேர்ந்த சேர்த்தியாலுண்டான அழகு; ("காஞ்சந சித்ரகார்முகௌ" என்றார், ஸ்ரீ வால்மீகிபகவானும்.) பழுமரம் - ஆலமரமாகவுமாம். பழுவம் - ஆச்சிரமம். இனி, பத்திரம் - மங்கள கரமான பழுவம் - சோலை யெனினுமாம்: பத்ரம் - சுபம்.

பரதன் மீண்ட பிறகு தபோவனத்தில்வாழும் இராமன், தனது ஆச்சிரமத்துக்கு முன்புறத்தில் வாழும் முனிவர்கள் வேறுபாடுஅடைந்து ஒருவரோடொருவர் கண் சாடைகளாலும் புருவநெறிப்பாலும் தன்னைச்சுட்டிக்காட்டி மெதுவாகப் பேசிக் கொள்வதைக் கண்டான். குலபதிமகரிஷியைக்கண்டு வினவினன். அவர் "நீ இங்குவந்ததுமுதல் கரனால் முனிவர்கட்கு மிக்க துயர்நிலை யேற்பட்டுள்ளது. அதுகுறித்ததே, இவர்கள் பேச்சு; நாங்கள் இந்தஇடத்தைவிட்டு வேற்றிடத்துக்குப் போகிறோம்" என்று சொல்லினர்: இராமன் எவ்வளவு சமாதானவார்த்தை சொல்லியும் குலபதிமுனிவர் கேளாமல் முனிவர்கூட்டத்துடன் சென்றார். அவர்கள் சென்றதும், பலகாரணங்களால், ஸ்ரீராமன், அங்கு உறைய மனமில்லாது வேற்றிடஞ் செல்வோமென்று அத் திரியினாச்சிரமத்தைச் சேர்ந்தான். அங்கு அநசூயையினிடத்து

அணிகலனையும் ஆடையையும் சற்காரமாகச் சீதை பெற்றபின் வனத்தின் கொடுமையைக் கூறி இருடியர் வழி காட்டத் தண்டகா ரணியத்தில் புகலானு னென்று திருவயோத்தியாகாண்டம் ஸ்ரீவான்மீகியால் முடிக்கப்படுகிறது. பி-ம்:—[1]முத்திருத்தியதெனத் திகழும். [2]அமைந்த. [3]துவன்று. (2)

## 3.—இராமன் முதலியோர் அத்திரிமுனிவனை வணங்குதல்.

திக்கு றுஞ்செறி[1]பரந்தெரிய நின்ற திரள்பொற்
கைக்கு றுங்கண்மலை போற்குமரர் காம முதலா
முக்கு றும்பற வெறிந்த வினை[2]வான் முனிவனைப்
புக்கி றைஞ்சின[3]ரருந்தவ னுவந்து புகலும்.

(இ-ள்.) திக்கு உறும் - திக்குக்களிற்பொருந்திய, செறி பரம் - மிகுந்த பாரத்தை, தெரிய நின்ற - (இவ்வளவென்று) அறியுமாறு தாங்கிநின்ற, திரள் பொன் கை - திரண்ட அழகிய துதிக்கையையும், குறுங் கண் - சிறிய கண்களையுமுடைய, மலை - யானைகளை, போல்-போன்ற, குமரர் - ராம லக்ஷ்மணர்கள்,—புக்கு - (அவ்வாச்சிரமத்தினுட்) பிரவேசித்து,—காமம் முதல் ஆம் முக் குறும்பு - காமம் முதலிய மூன்று குற்றங்களையும், அற - முற்றும்நீங்கும்படி, எறிந்த - கடிந்த, வினை - தவவினையையுடைய, வால் - தூய்மையையுடைய, முனிவனை - அவ்வத்திரிமகாமுனிவனை, இறைஞ்சினர் - வணங்கினார்கள்; (வணங்க), அருந் தவன்-அம்முனிவன், உவந்து - மனமகிழ்ந்து, புகலும் - சொல்லுவான்; (எ - று.)

திக்குறுமலை - திக்கஜம். கைக்குறுங்கண் மலையெனவே, யானையென்றதாயிற்று. முக்குறும்பு - காம வெகுளி மயக்கங்கள்; அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அது பற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக் கட்செல்லுங் கோபமும் என வடநூலார் குற்றமைந்தென்றார்; தமிழ்நூலார் அவற்றுள், அகங்காரம் அவிச்சைக்கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலால், குற்றம் மூன்றென்பர்; "காமம் வெகுளி மயக்க மிவை மூன்ற, னாமங் கெடக் கெடுநோய்" என்றார், தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும். இடையறாத பக்தி யோகங்களின் முன்னர் இக்குற்றங்களெல்லாம் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போலு மாதலின், அத்தன்மைதோன்ற, 'அறவெறிந்த' என்றார். முக்குறும்பு - வித்தியாமதம் தனமதம் குலமதம் என்றலும் ஒன்று. குறும்பும் என்னும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. வான் முனிவன் எனப்பிரித்து, பெரியமுனிவனென்றுமாம். [2]வாண்முனிவன் என்னும் பாடத்திற்கு, காமம் முதலிய குற்றங்களாகிய குறுநிலமன்னர்குழாத்தை முழுவதும் அறவீசிய தவவினையாகிய வாட்படையையுடைய முனியரசனெனக. 'முக்குறும்பறவெறிந்த வினை வான்முனிவனை' என்ற தொடர்மொழியால், அத்திரியென்பதன் பொருளைப்பெறவைத்தார்: [அ திரி - மூன்று இல்லாதவன்.] அருந்தவனென்னும் பெயர், சொல்லுவான் குறிப்பால் அவ

னென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று; மேல் வருவன வற்றிற்கெல்லாம் இஃது ஒக்கும். புகலும் - செய்யுமென்முற்று ஆண்பாலிற்சென்றது. பி-ம்:—[1]மறம், மரம். [3]அறிந்தவன், அருந் தவனும். (3)

## 4.—அத்திரிமுனிவன் கூறிய முகமன்.

குமரர் நீரிவ ணடைந்துதவு கொள்கை யெளிதோ
அமரர் யாவரொடு மெவ்வுலகும்[1]வந்த தலவோ
எமரின் யார்தவ[2]முயன்றனர் களென்று ருகினன்
தமரெ லாம்வர வுகந்[3]தனைய தன்மை முனிவன்.

(இ - ள்.) தமர் எலாம் - சுற்றத்தார் யாவரும், வர - (தம்பக்கல் ஒருங்கே) வந்துசேர, (அதனால்), உகந்து அனைய தன்மை - மகிழ்ந் தாற்போன்ற தன்மையையுடைய, முனிவன் - அம்முனிவன்,— (ஸ்ரீராமலக்ஷ்மணரை நோக்கி),—'குமரர்-சக்கரவர்த்தி திருமகர்காள்! நீர் - நீங்கள், இவண் - இவ்விடத்தில், அடைந்து உதவு கொள்கை - வந்துகாட்சிகொடுத்த தன்மை, எளிதோ-கிடைப்பதற்கு எளியதோ? (நீர் வந்தது), அமரர் யாவரொடும் - எல்லாத்தேவர்களுடனும், எ உலகும் - எல்லாவுலகங்களும், வந்தது அலவோ - வந்ததன்மையே யன்றோ? எமரின்-எங்களில், தவம் முயன்றனர்கள்- (இங்ஙனம் நீவிர் வரப் பெறுவதற்கேற்ற) தவத்தைச் செய்தவர்கள், யார் - யாவரோ?' என்று-என்றுசொல்லி, உருகினன்-மனமுருகினான்; (எ-று.)

இனி, 'எமரின் யார் தவ முயன்றனர்கள்' என்பதற்கு - இப் பெறற்கரும் பேறுபெற்ற எம்மைப்போல நல்வினை செய்தோர் எவ ரென்றுமாம். 'குமரர் நீர் இவணடைந்துதவு கொள்கை யெளி தோ' என்றதனால் அடியவர்க் கெளியனாதலும், 'அமரர்யாவரொடு மெவ்வுலகும் வந்ததலவோ' என்றதனால் சகலசேதநாசேதநங்க ளுள்ளும் அந்தாயாமியாயிருத்தலும், 'எமரின் யார் தவமுயன்றனர் கள்' என்றதனால் இத்தகைய எம்பெருமானைச் சேரப்பெறுதலினும் பெரும்பேறு பிறிதில்லை யென்பதுங் குறிப்பிக்கப்பட்டன. இங்கு அத்திரிமுனிவரின் பேச்சாக வந்துள்ளவை, மகாகவிஞரான கம்பர் தம் மனக்கண்ணாற் கண்டு கூறியன. அமரர் என்பதற்கு - மரண மில்லாதவரென்பது அவயவப்பொருள். பி - ம் :—[1]வந்தவளவே. [2]முயன்றவர்கள். [3]அனையதான. (4)

## 5.—சீதை அநசூயையினிடத்து ஆபரணம்முதலியன பெற, மூவரும் தண்டகவனம்போதல்.

அன்ன மாமுனியொ டன்றவ ணுறைந்த வனரும்
பன்னி கற்பி னனசூயை பணியா லணிகலன்
துன்னு தூசிநெடு சந்திவை சுமந்த சனகன்
பொன்னொ டேகி யுயர்தண் டகவனம் புகுதலும்.

பதினைந்துகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (இராமலட்சுமணர்), அன்ன மா முனியொடு - அந்த மகாமுனிவனுடன், அன்று - அற்றைநாளில், அவண்-அவ்வாச்சிர

மத்தில், உறைந்து-தங்கியிருந்து,—அவன் - அம்முனிவனது, அரும் பன்னி - அரியபத்தினியாகிய, கற்பின் - கற்புநிலைமையையுடைய, அனசூயை - அநசூயையென்பவளது, பணியால் - கட்டளையின்படி [அவளால் அளிக்கப்பட்ட], அணிகலன் - அழகிய ஆபரணங்களும், துன்னு தூசினொடு-பொருந்திய வஸ்திரங்களும், சந்து - சந்தனமும், இவை - (ஆகிய) இவற்றை, சுமந்த-தரித்த, சனகன் பொன்னொடு - ஜாநகிப்பிராட்டியுடனே, ஏகி-(மற்றைநாள் அவ்வாச்சிரமத்தினின்று புறப்பட்டுச்) சென்று, உயர் தண்டகவனம் - சிறந்த தண்டகாரணியத்தை, புகுதலும் - பிரவேசித்தவுடனே,—(எ-று.)—“சாரவந்து எதிர்விலங்கினன்...விராதனெனுமக் ... கொடுந்தொழிலினன்” (19) என்று முடியும்.

இராமபிரான் அத்திரியாச்சிரமத்தில் அன்று தங்கினனாக,அந்த முனிவரின் மனைவி தன்னைத் தொழுத சீதாபிராட்டியின் கற்பின் பெருமையை யுணர்ந்து உவந்து அணிகலமுதிகளைத்தர, அவற்றைப் பெற்ற அப்பிராட்டியோடு தண்டகாரணியம் புகலானனென்க.

முநி என்பதற்கு-கடவுளின் தியானத்தை யுடையவனென்றும், தத்துவஞான முடையவ னென்றும், திரிகால ஞானமுடையவ னென்றும் பொருளாம். பன்னி - பத்நீ, கற்பு - பாதிவிரத்தியம்; அஃதாவது - தன்கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்: அது, கொண்டானிற்சிறந்ததெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறே குற்றவேல்செய்து நீ வழிபட்டொழுகெனவும் இருமுதுகுரவர் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையாற் கற்பித்தலானும், அந்தணர்திறத்தும் சான்றோர்தேஎத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று, ‘கற்பினனசூயை’ என்றதனால், பிராட்டிக்கு அநசூயை பாதிவிரத்திய தருமம் உபதேசித்ததாக வால்மீகத்திற் கூறிய விருத்தாந்தம் குறிப்பிக்கப்பட்டது, அநசூயைஎன்பதற்கு - அழுக்காறில்லாதவளென்பது பொருள். சந்து-சந்தனமென்பதன் சிதைவு. ‘இவை’ என்றதனால், புஷ்பம் முதலியன கொள்க. கலனணிதலும், தூசு உடுத்தலும், சந்துபூசுதலும் அடங்க, ‘சுமந்த’என்னும் பொது வினையாற் கூறினர்; இனி, அணிகலன் முதலியன பிராட்டியினது திருமேனியழகை மிகுக்காது அதனை மறைத்துப் பாரமாய்நிற்றலின், ‘சுமந்த’ எனக் கூறினரெனினுமாம். சனகன் பொன் - ஜநகராஜன் மகள்: பொன - இலக்குமி; பெருமாள் ஸ்ரீராமனாகத் திருவவதரித்தருளினபொழுது பிராட்டி சீதையாகத் திருவவதரித்தமைபற்றி, ‘பொன்’ என்றார்.

தண்டகவனம் என்னும் பெயர்க்காரணம்:—சூரியகுலத்து மநு சக்கரவர்த்தியினது குமாரனான இட்சுவாகுமகாராஜனுடையமக்கள் நூற்றுவருள் கடைப்பட்டவனும், மூடனும் மூர்க்கனும் துஷ்டனுமாய்த் தண்டனைக்கு உரிய னென்ற காரணங்கருதி எதிர்காலவுணர்ச்சியையுடைய தந்தையால் ‘தண்டன்’ என்று பெயரிடப்பட்டவனும், தண்டகனென்று வழங்கப்படுபவனுமாகிய ஓரரசன் விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத்

தன்னாட்சிக்கு உரியதாகக்கொண்டு, மதுமந்தமென்கிற பட்டணத்தை யமைத்து அங்கு அரசாண்டு வருகையில், ஒருநாள் தனது புரோகிதனை சுக்கிராசாரியனது ஆச்சிரமத்தினுட் சென்று அவன் மகளாகிய அரஜை யென்பாளைக் காதலித்து வலியக்கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப் பார்க்கவன் சினந்து 'ஏழுநாள்களின் அவன் குடும்பத்தோடும் சேனை முதலிய பரிவாரத்தோடும் அழிந்து போக அவனதுநாடு மண்மழையால் யாதொரு ஜீவஜந்துவு மில்லா மற்பாழாகக்கடவது' என்று சபிக்க, அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் ஏழாநாள் மண்மழையால் அழிந்து போய்விட, அவ்விடம், பின்பு காடாகித் தண்டகாரணியமெனப் பெயர்பெற்றதென்பதாம்.()

### 6.—இதுமுதற்பதினான்குகவிகள் - விராதனதுவருகையைக் கூறும்.

எட்டொ டெட்டு மத[1]மா கரியிரட்டி [2]யரிமா
வட்ட வெங்கண்வரை யாளி பதினாறு [3]வகையின்
கிட்ட விட்டிடை [4]கிடந்தன செறிந்த வொருகைத்
தொட்ட முத்தலை யயிற்[5]றொகை மிடற்க ழுவொடே.

(இ-ள்) எட்டொடு எட்டு மதம் மா - பதினாறு மதயானைகளும், கரி இரட்டி அரி மா - அவ்யானைகளினும் இரண்டுமடங்காகிய [முப்பத்திரண்டு] சிங்கங்களும், வட்டம் வெங் கண் - வட்டவடிவமாகிய கொடிய கண்களையுடைய, வரை - மலையிலேயுள்ள, பதினாறு யாளி - பதினாறுயாளிகளும், வகையின் - ஒழுங்காக, கிட்ட இட்டு - நெருங்கக் கோக்கப்பட்டு, இடை கிடந்தன செறிந்த - இடையே பொருந்தினவாகி நெருங்கியிருக்கப்பெற்ற, ஒரு கை தொட்ட - ஒரு கையாற் பிடித்த, முத்தலை - மூன்று தலைகளையும், அயில் தொகை - மிக்க கூர்மையையும், மிடல் - வலிமையையுமுடைய, கழுவொடு - சூலாயுதத்துடனே,—(எ - று.)—ஏகாரம் - ஈற்றசை.

தான் புசித்தற்காக விராதன் யானைமுதலியவற்றைத் தனது பெரிய இருப்புச்சூலத்திற் கோத்துக் கையிற்பிடித்துக் கொண்டிருக்கிறானென்பதாம். 'தொட்ட' என்னுஞ் சொல்லாற்றலால், அலட்சியமாக எளிதிற் பிடித்து வந்தானென்பது குறிக்கப்படுகின்றது. கரி - கரத்தையுடையது; கரம் - கை: இங்கே துதிக்கை; இது, இங்குச் சுட்டுமாத்திரையாயிற்று. கீழ்க்கூறிய கரியினு மிரட்டி யென்றதனால், முப்பத்திரண்டாதல் பெறப்பட்டது. இரட்டி - இரண்டாதலையுடையது. அரிமா - அரியாகிய மாஎன்க. அரி - ஹரி யென்பதன் விகாரம்; சிங்கம்: யானைமுதலிய பெரிய விலங்குகளையும் அழிக்கவல்லதென்பது பொருள். இனி, எட்டொடு பெருக்கிய எட்டெனக் கொண்டு அறுபத்துநான்கு மதம் பிடித்த பெரிய யானைகளையும், அவற்றினும் இரட்டியாகிய நூற்றிருபத்தெட்டுச் சிங்கங்களையு மென்றுமாம். யாளி - துதிக்கையுடையதும் யானையைக் கொல்வதும் சிங்கம்போல்வதுமாகிய தொரு மிருகம். அயில்தொகை - கூர்மையின் தொகுதி: எனவே, மிக்க கூர்மையாம்.
பி - ம் :—[1]மால். [2]வயமா. [3]வலியிற். [4]கிடந்தது. [5]தொழில். (6)

7. செஞ்சு டர்ச்செறி மயிர்ச்சுருள் செறிந்த செனியன்
நஞ்சு[1]வெற்புருவு பெற்றிடை நடந்த தெனமா
மஞ்சு[2]சுற்றிய வயங்குகிரி [3]வாத விசையிற்
பஞ்சு பட்டது படப்படி யின்மேன் முடுகியே.

(இ - ள்.) செஞ் சுடர் - சிவந்த ஒளியையுடைய, செறி மயிர் சுருள் - மிகுந்த சுருட்டைமயிர்கள், செறிந்த - நெருங்கியிருக்கப் பெற்ற, செ(ன்)னியன் - தலையையுடையனாகி,—நஞ்சு - விஷமானது, வெற்பு உருவு பெற்று - மலையின் வடிவத்தைக்கொண்டு, இடை நடந்தது என - வனத்தினிடையே நடந்து வந்ததுபோல,—மா மஞ்சு சுற்றிய வயங்கு கிரி - கரியபெரிய மேகங்கள் சூழ்ந்து தங்கப் பெற்ற விளங்குகின்ற மலைகள், (கால்களின் நடைவேகத்தால்), வாத விசையின் - காற்றின்விசையில், பஞ்சு பட்டது பட - பஞ்சு அடைந்த நிலைமையை அடையும்படி, படியின்மேல் - பூமியின்மேல், முடுகி - விரைந்து நடந்து;—(எ - று.)

நஞ்சுவெற்புருவு பெற்றிடைநடந்ததென - இல்பொருளுவமை; "கிரிச்ருங்காபம்" என்றார், ஸ்ரீவான்மீகி பகவான். என முடுகி என இயையும். முடுகி என்ற வினையெச்சத்திற்கு, மேல் 19 - ஆஞ் செய்யுளில் வரும் 'விராதனெனும் அக்கோரவெங்கணுருமேறன கொடுந்தொழிலினன்' என்பது-எழுவாய்: 'விலங்கினன்' - பயனிலை. மா - இரட்டுறமொழிதல். பி-ம்:—[1]தட்டுருவு, தொட்டுருவு. [2]தட்டிய. [3]பாத. (7)

8. புண்டு ளங்கியன கண்க [1]ளனல்பொங்க மழைசூழ்
விண்டு ளங்கிட விலங்கல்கள் குலுங்க வெயிலும்
கண்டு ளங்[2]கதிர்[3]குறைந்திட நெடுங்க டல்[4]சுலாம்
மண்டு ளங்க வயவந்தகன் மனந்த ளரவே.

(இ - ள்.) புண் துளங்கியன கண்கள் - புண்கள்போலச் (சிவந்து) ஒளிசெய்கின்றனவாகிய (தன்) கண்களினின்று, அனல் பொங்க - நெருப்புப் பொறி பறக்க,—(அதனால்), மழை சூழ் விண் - மேகங்கள் சூழ்ந்த ஆகாயம், துளங்கிட - நடுங்கவும்,—விலங்கல்கள் - மலைகள், குலுங்க - அசையவும்,—வெயில் கதிர்உம் - வெயிலாகிய கிரணங்களையுடைய சூரியனும், கண்டு - பார்த்து, உளம் குறைந்திட - மனமழியவும்,—நெடுங் கடல் சுலாம் - பெரியகடல் சூழ்ந்த, மண் - பூமி, துளங்க - நடுங்கவும்,—வய அந்தகன் - வலிமையையுடைய யமனும், மனம் தளர - மனந் தளர்ச்சியடையவும்,— (எ - று.)—விலங்கினன் (19) என்க.

துளங்குதல் - ஒளி செய்தல். கதிர் - கதிரையுடைய சூரியனுக்கு ஆகுபெயர்; உம்மை - உயர்வுசிறப்பு. அந்தகன் - எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைச்செய்பவன். பி - ம்:—[1]கனல். [2]கதி. [3]குழைந்திட. [4]சுலாய், குலாம்.
(8)

9. [1]புக்கு வாளரி முழங்கு செவியின் பொறியுறப்
பக்க மின்னு மணிமேரு சிகரங் குழைபடச்

செக்கர் வான்மழை [2]நிகர்த்த வெதிருற்ற[3]செருவத்
துக்க வீர ருதிரத்தி னொளிர்செச் சையினொடே.

(இ - ள்.) வாள் அரி - ஒளியையுடைய சிங்கங்கள், புக்கு - பிரவேசித்து, முழங்கு - பேரொலிசெய்கின்ற, செவியின் பொறி - காதுகளில், உற - பொருந்த, பக்கம் மின்னும் - எல்லாப்பக்கங்களிலும் ஒளிவிட்டு விளங்குகின்ற, மணி மேரு சிகரம் - அழகிய மகா மேருமலையினது முகடு, குழைபட - குண்டலமாகியிருக்க,—வான் செக்கர் மழை நிகர்த்த - ஆகாயத்தே காணப்படுகின்ற செவ்வானத்தை யொத்த, எதிர் உற்ற செருவத்து உக்க வீரர் உதிரத்தின் ஒளிர் - எதிர்த்துச்செய்த போரிலே இறந்துவிழுந்த வீரர்களது இரத்தத்தால் விளங்குகின்ற, செச்சையினொடு - செஞ்சந்தனக்குழம்புப்பூச்சுடனே, (எ - று.)—'மாலைதோள் பொலிய' (10) என்க.

இனி, முழங்குகின்ற வாளரிகள் செவியின்பொறி புக்கு உற என்றுமாம். விராதனது செவிகளைக் குகையென மயங்கியதனால், சிங்கங்கள் புக்கு முழங்குவனவாயினவென்க. விராதனது கரிய தோளிலே பூசப்பட்ட சிவந்த இரத்தப்பூச்சு, கரிய ஆகாயத்தே காணப்படுகின்ற செவ்வானத்தை யொக்குமாறு அறிக. வானுக்கு இடியொலியும் மின்னலும் கூறப்படுவது இயற்கை யாதலால், விராதனது மேனிவானத்துக்கும் இரண்டும் கூறினார். 'வாளரிமுழங்கு' என்னும் அடைமொழியை மேருசிகரத்தோடு கூட்டுதலும் ஒன்று. உதிரம், செச்சை—ருதிரம், சர்ச்சா. சர்ச்சா-பூச்சு. பி-ம்:—[1]புக்க. [2]நிகர்க்க. [3]செருவந்து. (9)

10. படையொ டாடவர்கள் [1]பாய்புரவி மால்க ளிறுதேர்
நடைய வாளரிகள் கோளுழுவை நண்ணி யவெலாம்
அடைய வாரி [2]யர வாலசை யனேக வித[3]வந்
தொடையன் மாலை துயல்வந் துலவுதோள் பொலியவே.

(இ-ள்.) படையொடு ஆடவர்கள் - ஆயுதங்களோடு கூடிய வீரர்களையும், பாய் புரவி - தாவிப்பாய்கின்ற குதிரைகளையும், மால்களிறு - பெரிய மதயானைகளையும், தேர்-தேர்களையும், நடைய வாள் அரிகள் - நடையினையுடைய ஒள்ளிய சிங்கங்களையும், கோள் உழுவை-(உயிரைக்) கொள்ளுதலையே [கொல்லுதலையே] தொழிலாகவுடைய புலிகளையும், நண்ணிய எலாம் - மற்றும் அகப்பட்டவை யெல்லாவற்றையும், அடையவாரி-முழுவதும்வாரிக்கொண்டு வந்து, (அவற்றை), அரவால் - மலைப்பாம்பால், அசை-கட்டிய, அநேக விதம்-பலவகையாகிய, அம் தொடையல் மாலை-அழகிய தொடுக்கப்பட்ட மாலைகள், துயல்வந்து - தொங்கி யசைந்து, உலவு - விசாலமாகவுள்ள, தோள்-தோள்களில், பொலிய-விளங்க,-(எ-று.)—விலங்கினன் (19) என்க.

மால் - இரட்டுறமொழிதல். பெருமிதமுடையானுக்குச் சிங்கவேறு நடையான் உவமையாக் கூறப்படுதலின், 'நடையவாளரி' என்றார். கோள் - வலிமையுமாம். பி - ம் :—[1]மால்களிறுபாய்புரவி. [2]அரவான்முடி. [3]வன். (10)

11. குன்று துன்றின வெனக்குமுறு கோப மதமா
ஒன்றி[1]னொன் றிடை யடுக்கின தடக்கை யுதவப்
பின்று கின்ற பிலனிற் பெரிய வாயி னொருபான்
மென்று தின்று விளியாது விரியும் பசியொடே.

(இ-ள்.) குன்று துன்றின என - மலைகள் நெருங்கியவைபோல, இடை அடுக்கின - (தன்) விரலினிடையே அடுக்கிவைக்கப்பட்டன வாகிய, குமுறு கோபம் மதம் மா - முழங்குகின்ற கோபத்தையுடைய மதயானைகளை, ஒன்றின் ஒன்று - ஒன்றன்பின் ஒன்றாக, தட கை - பெரிய கைகள், உதவ - கொடுத்துக்கொண்டுவர, (அவற்றையெல்லாம்), பின்றுகின்ற பிலனின் பெரிய வாயின் - (செல்லச் செல்லப்) பின்னிடுகின்ற குகைபோன்ற பெரிய வாயின், ஒருபால் - ஒருபக்கத்தில், மென்று தின்று-மென்று தின்றுகொண்டிருந்தும், விளியாது - அடங்காமல், விரியும் - (மேன்மேல்) மிகுகின்ற, பசியொடு - பசியுடன்,—(எ-று.)

கைவிரல்களின் சந்துகளுக்கு இடையில் இடையில் யானைகளை வைத்துக்கொண்டு அவ்யானைகளை மற்றொரு கைவிரலால் வாய்ப் பிலனில் தள்ளுகின்ற விராதன் அப்போதும் பசி நீங்காதிருப்பவனான னென்க. இனி, 'இடையடுக்கின' என்பதற்கு, கீழ் 6 - ஆம் பாட்டிற் கூறியபடி சூலத்தினிடையில் கோக்கப்பட்ட என்றும் பொருள் கூறலாம். பின்றுதல்-செல்லச்செல்லத் தொலையாதிருத்தல். 'வாயி னொருபால்' என்பதனால், இவையனைத்தும் அவன் கடைவாய்க்கும் போதா வென்றபடி. பி-ம்:—[1]ஒன்றினிடை. (11)

12. பன்ன காதிபர் பணாமணி பறித்த வைபகுத்
[1]தென்ன [2]விண்ணவர் விமான மிடை[3]யிட் டரவிடைத்
துன்னு கோளினொடு தாரகை தொடுத்த துழனிச்
சன்ன வீர மிடைமின்னு தடமார்பி னொடுமே.

(இ-ள்.) பன்னக அதிபர்-சிறந்த பெரும்பாம்புகளின், பணா மணி- படங்களிலுள்ள மணிகளை, பறித்து-பிடுங்கிக் கொண்டு வந்து, அவை - அவற்றை, பகுத்து என்ன-பிரித்துப் பதித்தாற்போல, அரவிடை- மலைப்பாம்புகளின் உடலிலே, விண்ணவர் விமானம் - தேவர்களது விமானங்களையும், துன்னு கோளினொடு - விளங்குகின்ற நவக்கிரகங்களையும், தாரகை-நட்சத்திரங்களையும், இடை இட்டு-இடையேயிடையே மாற்றிமாற்றிவைத்து, தொடுத்த - தொடுக்கப்பட்ட, துழனி-ஒலியையுடைய, சன்னவீரம்-வெற்றி மாலைகள், இடை மின்னு-இடையே விளங்குகின்ற, தடமார்பினொடும்-விசாலமான மார்புடனே,—(எ-று.) —மார்பினொடும் (12) பசியொடு (11) எதிர்விலங்கினன் (19) என்க.

தேவர்களின் விமானங்களையும் கிரகங்களையும் நட்சத்திரங்களையுங்கொண்டு மலைப்பாம்பிற் கோத்து விராதன் அணிந்து கொண்டிருந்த வெற்றிமாலை, மாணிக்கவாரத்தை யொத்திருந்த தென்க. பன்னகாதிபர் - பன்னகங்களுக்குத் தலைவர்: இத்தொடர் - வாசுகி, அநந்தன், தட்சன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகா பதுமன், கார்க்கோடகன் என்ற அஷ்டமகாநாகங்களைக் குறிக்கு

மென்னலாம். பங்கமென்பதற்கு - கால்களால் நடவாததென்று பொருள்; மார்பினு லூர்வதென்று கருத்து: வடமொழிப் புணர்ச்சி, தீர்க்கசந்தி. இச்செய்யுட்குப் பலர் பலவாறு உரைகூறுவரேனும் அவையொன்றும் நன்கு பொருந்தாது. பி-ம்:—[1] இன்ன. [2] வானவர். [3] விட்டு. (12)

13. பம்பு செக்க [1]ரெரியொக்கு மயிர்பக்க மெரியக்
கும்ப முற்ற வுயர்நெற் றியின்விசித் தொளிகுலாம்
உம்ப ருக்கரசன் மால்[2]கரியி னோடை[3]யெயிறின்
கிம்பு ரிப்பெரிய தோள்வ ளையொடுங் கிளரவே.

(இ - ள்.) பம்பு - பரவிய, செக்கர் - செவ்வானத்தையும், எரி - நெருப்பையும், ஒக்கும் - (நிறத்தால்) ஒக்கின்ற, மயிர் - செம்மயிர்கள், பக்கம் - பக்கங்களில், எரிய - விளங்கவும்,—கும்பம் உற்ற - பானையை யொத்த, உயர் நெற்றியின்-உயர்ந்த (தனது) நெற்றியிலே, விசித்து- கட்டப்பட்டு, ஒளி குலாம் - ஒளி வீசுகின்ற, உம்பருக்கு அரசன் மால் கரியின் - தேவேந்திரனுடைய பெரிய ஐராவதத்தினது, ஓடை-நெற் றிப்பட்டம், எயிறின் கிம்புரி - (அவ்யானையினது) தந்தத்தி லணியப் பட்ட பூண்களாகிய, பெரிய தோள்வளையொடும் - பெரிய வாகுவல யத்துடனே, கிளர - விளங்கவும்,—(எ - று.)

செக்கச்செவேரென்றுள்ள செம்பட்டமயிர் உடற்புறத்துத் தொங்கப்பெற்ற விராதனுக்கு ஐராவதத்தினோடை நெற்றிப்பட்டமும், அதன்கிம்புரி வாகுவலயமு மாயின வென்க. உற்ற - உவமவுருவு: "வாளுற்ற கண்ணாள்," "செப்புற்ற கொங்கை" என்னுமிடங்களிற் போல். கும்பம் உற்ற - பானைபோலவுள்ள மஸ்தகம் பொருந்திய என்றுமாம். உம்பருக்கரசன் - தேவராஜன். 'எயிற்றின்' என்பது, சந்தவின்பம்நோக்கி இரட்டாது நின்றது. பி - ம்:—[1]என, ஒளி. [2]களிறின். [3]எயிறெண். (13)

14. தங்கு திண்கரிய காளிமை தழைந்து தவழப்
பொங்கு வெங்கொடுமை [1]யென்பது புழுங்கி யெழமா
[2]மங்கு பாதகம் விடங்கனல் [3]வயங்கி நிமிரக்
[4]கங்கு பூசிவரு கின்றகலி கால மெனவே.

(இ - ள்.) தங்கு - பொருந்திய, திண் - வலிய, கரிய காளிமை - மிக்க கறுப்பு, தழைந்து தவழ-செழித்துப் பொருந்தவும்,—பொங்கு- பொங்குகின்ற, வெம் - வெவ்விய, கொடுமை என்பது - கொடுமை யென்கிற தீக்குணம், புழுங்கி எழ - கோபித்து வளரவும்,—(அவற்றி னால்), மா மங்கு பாதகம் - மிகக்கொடிய பாவமும், விடம் - விஷமும், கனல் - நெருப்பும், வயங்கி நிமிர-விளங்கி ஓங்க, கங்கு பூசி வருகின்ற- இருளைப் பூசிக்கொண்டு வருகிற, கலிகாலம் என - கலிகாலமென்று சொல்லவும்,—(எ - று.)

கன்னங்கரேலென்றுள்ள நிறத்துடனே கொடுமையே வடி வெடுத்தாற்போன்று தீவினைகளையே புரியும் விராதனை, பாதகமும் விடங்கனல்களும் தன்னிடத்து நிமிரக் கங்குபூசிவருகின்ற கலிகாலம்

போல்வா னென்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. கலிகாலத்தின் நிறத்தைக் கருமையாகக்கூறியது இயல்பே: மிகவுங் கறுத்திருத்த லால், 'கங்குபூசிவருகின்ற கலிகாலம்' என்றார். பி - ம்:—[1]வஞ்சனை. [2]மங்குல். [3]வயங்குதிமிரம். [4]கங்குல். (14)

15. செற்ற வாளு ழுவைவன் செறியதட்[1]டிருகுறச்
சுற்றி [2]வாரண [3]வுரித்தொகுதி நீவி தொடரக்
கொற்ற மேவு திசையானை யின்மணிக் குலமுடைக்
கற்றை மாசுணம் விரித்து வரிகச் சொளிரவே.

(இ - ள்.) செற்ற - (தான்) கொன்ற, வாள் உழுவை - கொடிய புலியினது, வல் - வலிய, செறி - நெருங்கிய, அதள்-தோல், திருகுற- (உத்தரீயமாக) முறுக்கியிருக்கவும், வாரணம் உரி தொகுதி - யானை யின் தோற்கூட்டம், நீவி தொடர - அரைவஸ்திரமாகப் பொருந்த, சுற்றி - உடுத்துக்கொண்டு,—கொற்றம் மேவு - வெற்றிபொருந்திய, திசை யானையின் - திக்கஜங்களின், மணிகுலம் - மணிகளது கூட் டத்தை, உடை - கோக்கப்பட்டுடைய, கற்றை மாசுணம் - திரண்ட மலைப்பாம்பை, விரித்து—, (அதனால்), வரி - (அந்த அரையாடையின் மேல்) கட்டிய, கச்சு - இடைக்கச்சு, ஒளிர - விளங்கவும்,—(எ - று.)

அந்த விராதன் தான் கொன்ற புலித்தோலை உத்தரீயமாக முறுக்கி யணிந்தும், அங்ஙனே தான் கொன்ற யானையின் தோல் தொகுதியை அரையாடையாக அணிந்தும், திக்கஜங்களின் மணிகள் [முத்துக்கள்] அழுத்திய மலைப்பாம்பைக் கச்சையாகக் கட்டிக்கொண் டும் உள்ளானென்க. மணி - நவரத்தினங்களிற் சேர்ந்ததான முத்து. செற்ற வாரணம் என்க. இனி, செற்றம் - கோபத்தையுடைய, வாளு ழுவை என்றுமாம். இடையாடைமுடியை யுணர்த்தும் நீவிஎன்னும் வடசொல் - இங்கு, இலக்கணையாய், ஆடைமாத்திரத்தை உணர்த் திற்று. திசை - திசா. பி-ம்:—[1]தருகுற. [2]மாசுணம். [3]விரிந்தவுரி.(15)

16. [1]செங்க ணங்கவர வின்பொரு வின்செம் மணிவிராய்
வெங்க [2]ணங்க வலயங்களும் [3]விலங்க விரவிச்
சங்க ணங்கிய சலஞ்சல மலம்பு தவளக்
கங்க ணங்களு மிலங்கிய கரம்பி றழவே.

(இ - ள்.) செங் கண் அங்கம் அரவின் - சிவந்த கண்களையும் (நீண்ட) உடலையுமுடைய சர்ப்பங்களது, பொருவுஇல் - ஒப்பில்லாத, செம் மணி-சிவந்த மாணிக்கங்களை, விராய்-பொருத்திச் செய்யப்பட்டு, வெங்கண் - வெவ்விய தன்மையையுடைய, அங்கம் வலயங்கள்உம் - அங்கத்திலே அணிதற்கு உரிய வளைகளும்,-விலங்க - விளங்குமாறு, விரவி - பொருந்தி, சங்கு அணங்கிய - சங்குகளை வருந்திப்பெற்ற, சலஞ்சலம் - சலஞ்சலமென்னுஞ் சங்கங்களினொலியன்ற, அலம்பு-ஒலிக் கின்ற, தவளம் கங்கணங்களும் - வெண்மையாகிய கைவளைகளும், இலங்கிய - விளங்குகின்ற, கரம் - கைகளில், பிறழ - விளங்கவும்,—

அரவங்களின் செம்மணியினு லியன்ற வலயங்களோடு முத்துக் கங்கணத்தையும் அணிந்துள்ளனன் அவ்விராதனென்க. வெங்கண்

அங்க வலயம் - கொடியகண்களையுடைய அங்கத்திலணியும் வளை யென்றுமாம். விராய் என்ற வினையெச்சம், வருவிக்கப்பட்ட 'உடைய' என்பதனோடு இயையும். சலஞ்சலம்-வலம்புரியாயிரஞ் சூழ்ந்த சங்கு. இனி, அணங்கிய சலஞ்சலச் சங்கென்று கூட்டி, அழகிய சலஞ்சல மென்னுஞ் சங்கு என்றுமாம். பி - ம்:—[1]செங்கணங்கரவெனும். [2]அங்கை. [3]இலங்கவணிய. (16)

17. முந்து வெள்ளிமலை பொன்னின் மலையோடு முரணப்
[1]பந்தி னுந்துகழல் பாடுபட வூடு படர்வோன்
வந்து மண்ணினிடை யோனெனினும் வானி[2]னிடையோர்
சிந்தை யுள்ளும் விழியுள்ளு முளனென்ற திறலோன்.

(இ - ள்.) முந்து வெள்ளி மலை - சிறந்த கைலாசபருவதத்தை யும், பொன்னின் மலையோடு - மகாமேரு பருவதத்தையும், முரண - (ஒன்றோடொன்று) மாறுபடும்படி, பந்தின் உந்து - பந்துகளாக முன்னே தள்ளவல்ல, கழல் - கால்களால், பாடு பட - கம்பீரமாக, ஊடு படர்வோன் - இடையே செல்லுகின்ற தன்மையையுடைய வனும்,—வந்து மண்ணின் இடையோன் எனினும் - பூமியிலே வந்து சஞ்சரிப்பவனாயினும், வானின் இடையோர் - வானினிடத்திலுள்ள தேவர்களது, சிந்தையுள்உம் - மனத்திலும், விழியுள்உம் - கண் களிலும், உளன் - உள்ளவன், என்ற - என்று சொல்லப்படுகின்ற, திறலோன் - வலிமையையுடையவனும்;—(எ - று.)

கைலாய மலையையும் மேருகிரியையும் பந்துபோல் ஆடவல்ல வலிய பெரிய தாள்களால் அந்த வனத்தினிடையே சஞ்சரிப் பவன் விராதன் என்க. அந்த விராதனிடத்தே உண்டான மிக்க அச்சத்தால் தேவர்கள் எப்பொழுதும் அவனை இடைவிடாது நினைப்பதனாலும், கண்களுக்கு எதிரில் அவனுருவம் தோன்றுவது போலக் காணுதலாலும், 'வானினிடையோர் சிந்தையுள்ளும் விழி யுள்ளு முளனென்ற திறலோன்' என்றார். பின்னிரண்டடி - முரண் விளைந்தழிவணி. பரமசிவன் இருக்குமிடமாதலால், 'முந்து வெள்ளி மலை' என்றார். பாடுபட - வருத்தமுண்டாக என்றுமாம். இனி, வெள்ளிமலையும் பொன்மலையும் மாறுபட ஆடுகின்ற பந்தின் தன்மையையும் வீசியெறிகின்ற கழற்காயின் தன்மையையும் அடைய என்றுமாம். வான்-சுவர்க்கலோகத்துக்கு இலக்கணை. பி-ம்:—[1]பந்து முந்து. [2]இமையோர். (17)

18. பூத மத்தனையு மோர்வடிவு [1]கொண்ட புதிதென்று
ஓத வொத்த வுருவத்த னுருமொத்த குரலன்
காத லித்தய னளித்த கடையிட்ட கணிதப்
[2]பாத லக்க மத [3]வெற்பிடை படைத்த வலியான்.

(இ-ள்.) 'பூதம் அத்தனையும் - எல்லாப்பிராணிகளும், புதிது - புதுமையாய், ஓர் வடிவு கொண்ட - ஒரே உருவத்தை எடுத்து இவ்வாறு வந்தன,' என்று ஓத ஒத்த - என்று சொல்லத்தக்க, உருவத்தன் - வடிவத்தையுடையவனும்,—உரும் ஒத்த குரலன் - இடியோசையை யொத்த குரலோசையை யுடையவனும்,—அயன் -

பிரமதேவன், காதலித்து - (தான் செய்த தவத்திற்கு) மகிழ்ந்து, அளித்த-கொடுத்த, கடை இட்ட - கடையிலே வைத்த, பாதம் - காலென்னுங் கணக்கையுடைய, லக்கம் கணிதம் - லக்ஷமென்னுங் கணக்காகிய, மத வெற்பு - மதயானைகள், இடை படைத்த - தங்கனிடத்தே உடைத்தான, வலியான் - பலத்தையுடையவனுமான,—(எ - று.)—திறலோன் (17) வலியானுன (18) தொழிலினன் (19) என்க.

முன்னிரண்டடிகள் - அவ்விராதனுடைய உருவத்தின் தன்மையையும் குரலின் தன்மையையும் கூறுவனவாம். பிரமதேவனது வரத்தால் விராதன் லட்சத்திருபத்தையாயிரம் யானைபலம் பெற்றனனென்க. பூதம் - பஞ்சபூதங்களாகவுங் கொள்ளலாம். அயன்-அஜன்: ஸ்ரீமகாவிஷ்ணுவினின்றுந் தோன்றியவ னென்பது பொருள்; கடையிட்ட பாதலக்ககணித மெனவே, ஸபாதலக்ஷம்; ஒன்றேகால் லக்ஷம்: லட்சத்து இருபத்தையாயிரம்; மேல், சடாயு உயிர்நீத்த படலத்திலும் "அரைகடையிட்ட முக்கோடி" என்பர். பி-ம்:—[1]கொண்டு. [2]பாதலத்த. [3]வெற்பவை. (18)

19. சார வந் [1]தெதிர் [2]விலங்கினன் மரங்க டரையில்
பேர வன்கிரி பிளந்துக வளர்ந்தி கல்பெரு
வீர வெஞ்சிலையி னோரெதிர் விராத னெனுமக்
கோர வெங்கணுரு மேறன கொடுந்தொ ழிலினன்.

(இ - ள்.) விராதன் எனும் - விராதனென்கிற, அ - அந்த, கோரம் வெங்கண் - அச்சத்தை யுண்டாக்குகின்ற வெவ்விய கண்களையும், உரும் ஏறு அன கொடுந் தொழிலினன் - ஆணிடி [பேரிடி] போன்ற கொடிய தொழிலினையுமுடையவன்,—(வருகின்ற வேகத்தால்), மரங்கள்—, தரையில் பேர - இடம்விட்டுப் பெயரவும்,—வல் கிரி - வலிய மலைகள், பிளந்து உக - பிளந்து சிதறவும்,—வளர்ந்து - வளர்ச்சியையுடையனாகி, இகல் பெரு வீரம் வெஞ் சிலையினோர் - போரைப் பெருத வீரத்தன்மையையுடைய வெவ்விய வில்லினையுடைய ஸ்ரீராமலக்ஷ்மணர்களது, எதிர் - முன்னே, சார வந்து-கிட்ட வந்து, எதிர் விலங்கினன் - எதிராக [குறுக்கே] நின்றான்; (எ - று.)

இகல் பெறுமாறு வீரவெஞ்சிலையேந்தியோரெதிர் விராதனெனும் கொடுந்தொழிலினோன் விளக்கில் விட்டிற்பூச்சிவந்து விழுவதுபோல அச்சிலைக்கு இலக்காகுமாறு எதிர்வந்து விலங்கினனென்க. எட்டாஞ்செய்யுள் தொடங்கி வந்த 'தளர' முதலிய செயவெனெச்சங்கள் - அடுக்கி, இச்செய்யுளிலுள்ள 'சாரவந்தெதிர் விலங்கினன்' என்பதனோடு தொடரும். தொழிலினன் (19) கழுவொடே (6) முடுகி (7), வளர்ந்து எதிர்சார வந்து விலங்கினன் என்க. "தினவுறு முழவுத் தோளினன்" என்றாற்போல, 'இகல் பெரு வீரவெஞ்சிலையினோர்' என்றார். பி-ம்:—[1]அயல். [2]விலங்கின.

ஸ்ரீவான்மீகத்தில் ஆரணியகாண்டத்தின் முதற்சருக்கத்து, இராமபிரான் தண்டகாரணியமென்னும் பெருவனத்துப் புகுந்து இருடியரின் பேரொளியோடு மிளிரும் ஆச்சிரமமண்டலத்தைக்

கண்டான்: அன்னவர் இராமாதியர்க்கு அதிதிபூசைசெய்து அவ் வப்போது காத்தற்கு உரியமென்று வேண்டி வழிவிட்டன ரென்று கூறியுள்ளது: 4-ஆம் சருக்கத்துக் காட்டினுட்புக்கு அதனிடையே விராதனைக் கண்டமை முதலியன உள்ளன. (19)

## 20 —விராதன் சீதையை எடுத்துச்செல்லுதல்.

நில்லு நில்லுமென வந்து நிணமுண்ட நெடுவெண்
பல்லும் வல்லெயிறு மின்னு பகுவாய் முழைதிறந்
தல்லி புல்லுமல ரன்ன மனையாளை யொருகைச்
சொல்லு மெல்லையின் முகந்துயர் விசும்பு தொடர.

(இ - ள்.) நிணம் உண்ட - மாமிசத்தைப் புசித்த, நெடு வெள் பல்உம்-நீண்ட வெள்ளிய பற்களும், வல் எயிறுஉம் - வலிய கோரப் பற்களும், மின்னு - விளங்குகின்ற, முழை பகு வாய் - மலைக்குகை போன்று பிளவுபட்ட வாயை, திறந்து—, நில்லும் நில்லும் என - (அவர்களை) 'நில்லுங்கள் நில்லுங்கள்' என்று சொல்லிக்கொண்டு, வந்து—,அல்லி புல்லும் மலர் - இதழ்கள்நெருங்கிய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, அன்னம் - திருமகளாகிய, மனையாளை-(ஸ்ரீராமனது) மனைவியான சீதையை, சொல்லும் எல்லையின் - ஒரு வார்த்தை சொல்லும்பொழுதில் [கணப்பொழுதி லென்றபடி], ஒரு கை - ஒரு கையால், முகந்து - எடுத்துக்கொண்டு, உயர் விசும்பு - உயர்ந்த ஆகாசமார்க்கத்தில், தொடர - செல்லாநிற்க,—(எ - று.)—'அது கண்டு' என மேற்கவியில் தொடரும்.

நில்லும் நில்லுமென்று சொல்லிய வண்ணம் அந்த விராதன் வந்து கணப்பொழுதில் சீதாபிராட்டியை ஒருகையாலெடுத்துக் கொண்டு விசும்பில் தொடரலானானென்பதாம். நில்லும் நில்லும் - வெகுளியின்கண் அடுக்கிவந்தது. அன்னம்போன்ற நடையை யுடைமையின், 'அன்னம்' என்றார்; உவமவாகுபெயர். மலரன்ன மெனவே, திருமக ளென்றதாயிற்று. அன்னம் அனையாள் எனப் பிரித்து - தாமரையிலுள்ள அன்னம்போன்றவ ளெனவுமாம். சொல்லுமெல்லையின் என்பதற்கு - தான் நிலலும் நில்லுமென்று சொல்லுஞ் சொல் முடிவதற்கு முன்பே யென்றுமாம். (20)

## 21 —இராமலட்சுமணர் விராதன்போக்கைத் தடுத்துக்கூறுதல்.

காளை மைந்தரது கண்டு கதம்வந்து [1]கதுவத்
தோளின் வெஞ்சிலை யிடங்கொடு தொடர்ந்து சுடர்வாய்
வாளி தங்கிய வலங்கை யவர்வஞ் சனை [2]யடா
[3]மீளு கெங்ககறி யென்பது விளம்ப வவனும்.

(இ - ள்.) காளை மைந்தர் - இளவெருதுபோன்ற அவ்விராம லட்சுமணர்கள்,—அது கண்டு - அதனைப் பார்த்து, கதம் வந்து கதுவ - கோபம் பிறந்து வளர,—தோளின் வெம் சிலை - தோளிலே தரித்திருந்த வெவ்விய வில்லை, இடம் கொடு - இடக்கையிலே பிடித் துக் கொண்டு, சுடர் வாய் வாளி தங்கிய - ஒளியோடுகூடிய நுனி யினையுடைய அம்பு பொருந்திய, வலங் கையவர் - வலக்கையை

ஆ—3

யுடையவர்களாய் [யுத்தசன்னத்தராய்], தொடர்ந்து - (அவ்வரக்கனைப்) பின்தொடர்ந்து, 'அடா—! வஞ்சனே - வஞ்சனையால், எங்கு அகறி-எங்கே நீங்கிச்செல்கிறாய்? மீளுக-திரும்புவாயாக,' என்பது - என்கிற வார்த்தையை, விளம்ப - சொல்ல,—அவனும் - அவ்வரக்கனும்,—(எ-று.)—'புகல' (22) என்க.

இராமலட்சுமணர் பெருஞ்சீற்றத்தோடு போர்க்கு ஆயத்தமானவராகி, 'அடா ! எங்கே போகிறாய்?' என்று சொல்லிய வண்ணம் தொடரலாயினரென்பதாம். காளை-காம்பீரியத்துக்கும், வலிமைக்கும், நடைக்கும் உவமை. அடா - இழிபுணர்த்துவதோர் ஆண்பால்விளி. பி-ம்:—[1]கதுவி. [2]எடா. [3]மீள்தி. (21)

## 22.—விராதனது செருக்குமொழி.

ஆதி நான்முகன் வரத்தி னெனதாவி யகலேன்
ஏதி யாவதுவு மின்றி யுலகியாவு மிகலிற்
சாதி யாதனவு மில்லை யுயிர்தந் தன[1]னடா
[2]போதிர் மாதிவளை யுந்தி யினிதென்று புகல.

(இ - ள்.) 'ஆதி நான்முகன் வரத்தின் - முதன்மையாகிய பிரமதேவன் கொடுத்த வரத்தினாலே, எனது ஆவி அகலேன் - எனது உயிர் நீங்கப்பெறேன்; உலகு யாவும் - எல்லா வுலகத்தவரும், இகலினும்-எதிர்த்துப் போர்செய்தாலும், ஏதி யாவதுஉம் இன்றி - ஆயுதமொன்றும் இல்லாமலே, சாதியாதன - (என்னால்) வெல்லக்கூடாதன, இல்லை-(அவற்றில் எவையும்) இல்லை; அடா - ! உயிர் தந்தனன் - (உங்கட்கு) உயிரை (யான் பிச்சையாகக்) கொடுத்தேன்; மாது இவளைஉந்தி - இப்பெண்ணை (என்னிடத்தில்) விட்டு, இனிது போதிர்-சுகமாய்ப்போய்ச்சேருங்கள்,' என்றுபுகல - என்று சொல்ல,—(எ-று.) 'தெரியா...படைத்தபொழுது' (23) என்க.

'பிரமனது அநுக்கிரகத்தினால் கொல்ல முடியாமையையும், இவ்வுலகத்தில் பிளத்தல் அறுத்தல் செய்யமுடியாமையையும் வரமாகப்பெற்றேன்: ஆயுத மின்றியே எதனையும் யான் வெல்ல வல்லேன்: இவளை எனக்கு மனைவியாகவிட்டுத் தாபசவேடத்தைப் பூண்ட நீங்கள் இனிதுசெல்லுங்கள்' என்று விராதன் கூறினன் என முதனூலுக்கு ஏற்ப விரித்துக்கருத்துக்காண்க. ஏதி = ஹேதி: ஆகுபெயர். உம்மை மாறுக. அடா போதிர் - ஒருமைப்பன்மை மயக்கம். காதலென்னும் பொருளதாகிய மாதரென்னும் உரிச்சொல், ஈறுகுறைந்து, ஆகுபெயராய்ப் பெண்ணை உணர்த்திற்று. பி - ம்:—[1]எடா. [2]போதி.

இனி 'ஆதி - முதல்வனே! நான்—, முகன் - (உங்களுக்கு) எதிரிலே, வரத்தின் - வருதலினால், எனது ஆவி அகலேன் - எனது உயிர் நீடித்திருக்கப்பெறேன்; உலகு யாவும் - உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளிடத்திலும், ஏது யாவதுஉம் இன்றி - காரணமொன்று மில்லாமலே, இகலின் - பகைமைகொண்டு, சாதியாதனஉம்-(யான்) செய்யாத அகிருத்தியங்களும், இல்லை—; அடா-(இவ்வாறு செய்வது எனக்குத்) தகாதனவேயாம்; உயிர்தந்தனன் -

(எனது) உயிரைக் கொடுத்துவிடுகின்றேன்; [நீவிர் என்னைக் கொன்றபின்பு], மாது இவளை - இப்பெண்ணை [சீதையை], உந்தி - அழைத்துக்கொண்டு, இனிது போதிர் - சுகமாகப்போவீர்களாக,' என்றுபுகல—, என இச்செய்யுள் அமங்கலமாகப்பொருள்பட்டு, விராதன் இறப்பதை முன்னமே தெரிவிக்குமெனக்கூறுவர். (22)

## 23.—இராமபிரான் நாணொலியெழுப்புதல்

வீர னுஞ்சிறிது [1]வெண்முறு வல்வெண் ணிலவுகப்
போர றிந்தில னிவன்றனது பொற்பு[2]முரனும்
தீரு மெஞ்சியென நெஞ்சி னுறுசிந்தை [3]தெரியாப்
பார வெஞ்சிலையி னாணொலி படைத்த பொழுதே.

(இ - ள்.) வீரன்உம் - ஸ்ரீராமசந்திரனும்,—சிறிது வெள் முறுவல்-வெண்மையான புன்சிரிப்பாகிய, வெள் நிலவு - வெள்ளிய நிலா, உக - தோன்ற [புன்சிரிப்புச்செய்து], 'போர் அறிந்திலன் - (இவன்) யுத்தத்தின் தன்மை அறிந்தானிலன்; இவன் தனது - இவனது, பொற்புஉம் - பொலிவும், உரன்உம் - வலிமையும், எஞ்சி தீரும்-குறைந்து அழிந்துவிடும்,' என-என்று, நெஞ்சின் உறு சிந்தை தெரியா - (தன்) மனத்திற் பொருந்திய கருத்தால் ஆலோசித்து அறிந்து,—பாரம் வெம் சிலையின் - பாரமாகிய வெவ்விய (கோதண்டமென்னும்) வில்லில், நாண் ஒலி - நாணின் ஓசையை, படைத்த பொழுது-உண்டாக்கிய காலத்தில்,—(எ-று.)—'உரற' (24) என்க.

'நமது போர்த்திறமையை அறியாமல் இவ்விராதன் இவ்வாறு பிதற்றுகின்றான்' என்று இராமபிரான எள்ளல்நகை தோன்றச் சிறிதே சிரித்து, 'இனி இவனுடைய பொலிவும் உரனும் எஞ்சித் தீரும்' என்று நெஞ்சில் நினைந்து, தனது வில்லில் நாணொலியை யுண்டாக்கின னென்பதாம். பொலிவு-வீரத்தினால் விளங்குந்தன்மை, வீரச்செருக்கு. இனி, நாணொலிகேட்டவர்கள் இவ்வரக்கனது பொற்பும் உரனும் எஞ்சித்தீருமென்னும்படி நாணொலி படைத்த பொழுது என்றுமாம். முறுவலை நிலவென்றதற்கு ஏற்ப, வீரனென்பதற்கு ஸ்ரீராமசந்திரனென்று உரைக்கப்பட்டது. பி - ம் :—[1]மெல். [2]முரணும். [3]திரியப். (23)

## 24.—நாணொலியின் வருணனை.

இலைகொள் வேலட விராம னெழுமேக வுருவன்
சிலைகொ ணாணெடிய கோதை யொலியேறு [1]திரைநீர்
மலைக ணீடுதல நாகர்பிலம் வான [2]முதலாம்
உலக மேழு முருமே றெனவொலித் துரறவே.

(இ - ள்.) எழு மேகம் உருவன் - (கார்காலத்திலே மழைபொழிவதற்கு) எழுகின்ற நீலமேகத்தின் நிறம்போன்ற திருநிறமுடையவனாகிய, இலை கொள் வேல் - அரசிலைவடிவத்தைக்கொண்ட வேலினையும், அடல்-வலியினையுமுடைய, இராமன் - ஸ்ரீராமனது, சிலை - கோதண்டத்தில், கொள் - ஏறிட்ட, நாண் - நாணியாகிய, நெடிய கோதை-நீண்ட கயிற்றின், ஒலி ஏறு - மிக்க ஒலியானது,—திரை

நீர் - அலைகளையுடைய கடல்சூழ்ந்த, மலைகள் நீடு - மலைகள் உயர்ந்திருக்கப்பெற்ற, தலம்-பூலோகமும், நாகர் பிலம்-சர்ப்பசாதியாரது பாதாளலோகமும், வானம் - சுவர்க்கலோகமும், முதல் ஆம் - முதலாகிய, உலகம் ஏழ்உம் - ஏழுலகங்களிலும், உரும் ஏறு என - இடியேறு போல, ஒலித்து உரற-பேரொலிசெய்யாநிற்க,—(எ-று.)—'அழலா,' (25) என்க.

இராமபிரானெறிந்த வில்லின் நாணொலி, உலகமேழிலும் இடியேறுபோல ஒலித்துப் பேரொலி செய்ததென்றவாறு. காத்தல் தொழிலன்றி அழித்தல்தொழில்பூண்ட முக்கட்கடவுட்குச் சூலவேல் படையாதலானும், முருகற்கு வேல் படையாதலானும், சான்றோர் வேற்படையையே சிறப்புப் பெரும்பான்மை கூறலானும், வேலைக் கூறி, அதனால் ஏனைப்படைகளைப் பெறவைத்தார். உரு - நிறமாதல், "உருவேயட்டையும் வடிவும் நிறமும்" என்பதனாலறிக. 'தலம்நாகர்பிலம் வானம்' என்றதனால், சுவர்க்க மத்திய பாதாளமென்னும் மூவுலகங்களைக் கூறி, மற்றையவற்றையெல்லாம் 'முதலாம்' என்றதனால் பெறவைத்தார். உலகமேழ் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜநலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்னும் மேலுலகேழும்; அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்னுங் கீழுலகேழுமாம். 'நாகர் என்பதற்கு - தேவரென்றும் பொருள் கூறி, வானத்தோடுங் கூட்டலாம். இனி, வில்நாணினது ஒலி, ஏறு - சென்று போந்த, உலகமேழும், ஒலித்து உரற - பிரதித்தொனிசெய்ய என்றுமாம். (24)

**25.—விராதன் சீதையை விட்டிட்டுச் சினந்துபொர, இராமபிரான் உடன்பொருதலை இனிப்பத்துக்கவிகளிற் கூறுகின்றார்.**

வஞ்ச கக்கொடிய பூசை [1]நெடுவாயின் மறுகும்
பஞ்ச ரக்கிளி யெனக்கதறு பாவை யைவிடா
நெஞ்சு ளுக்கின னெனச்சிறிது நின்று நினையா
அஞ்ச னக்கிரி யனொனெதி ரரக்க னழலா.

(இ - ள்.) அரக்கன் - அவ்விராதன்,—வஞ்சகம் கொடிய பூசை - வஞ்சனைத்தன்மையையுடையதாகிய கொடுந்தன்மையையுடைய பூனையின், நெடு வாயில்-பெரிய வாயிலே, மறுகும்-(அகப்பட்டு மனங்) குழம்புகின்ற, பஞ்சரம் கிளி என-கூட்டிலுள்ள கிளிபோல, கதறு - அழுது கூக்குரலிடுகின்ற, பாவையை- சீதையை, விடா - கீழேவிட்டு, நெஞ்சு உளுக்கினன் என-மனஞ்சிதைந்தவன் போல, சிறிது நின்று நினையா-சற்றேநின்று ஆலோசித்து, அஞ்சனம் கிரி அனான் எதிர் - மைம்மலை போன்ற அந்த ஸ்ரீராமனுக்கு எதிரில் (வந்து நின்று), அழலா-கோபித்து,—(எ-று.)—'எறிய' (26) என்க.

இடியேறுபோலப் பேரொலிபட ஒலித்த சிலைநாணொலியைக் கேட்டலும், விராதன், திடுக்கிட்டுச் சீதையை விட்டிட்டவனாகிச் சிறிது ஆலோசித்து இராமபிரான் மீது அழன்றானென்க. பூசை -

இல்லுறை பூனை. பஞ்சரம்-பறவைகளை வைத்து வளர்க்குங் கூடு. பஞ்சரக்கிளி - கூட்டில்வைத்துப் பலநாளாகப் பாலூட்டி இன்மொழி பயிற்றி வளர்க்கப்பட்ட கிளி. ஒருவாற்றானும் தப்பிப் பிழைத்துச் செல்ல நெறியறியாத மெல்லிய கிளி யென்பது விளங்க, பஞ்சரக் கிளியை உவமை கூறினர். பாவை-சித்திரப்பிரதிமை; அதுபோன்ற வளுக்கு உவமவாகுபெயர். அஞ்சனக்கிரி - நிறத்துக்கும், துளக்க லாகாத வலிமைநிலைக்கும், கம்பீரமான தோற்றத்துக்கும் உவமை. பி-ம்:—[1] வரு. (25)

26. பேய்மு கப்பிணி யறப்பகைஞர் பெட்பி னுதிரந்
தோய்மு கத்தது கனத்தது சுடர்க்கு திரையின்
[1]வாய்மு கத்திடை நிமிர்ந்து வடவேலை பருகுந்
தீமு கத்திரி சிகைப்படை திரித்தெ றியவே.

(இ - ள்.) பேய்முகம் பிணி - பேய்களினிடத்தேயுள்ள (பசி யாகிய) நோய், அற - நீங்க, பகைஞர் - பகைவர்களது, உதிரம் - இரத்தத்திலே, பெட்பின் - விருப்பத்தோடு, தோய்-தோய்ந்த, முகத் தது-நுனியையுடையதும்,—கனத்தது - பாரமுடையதும்,—வட(வை) குதிரையின் - படபையென்னும் பெண்குதிரையினது, வாய்முகத் திடை - வாயினிடையே, நிமிர்ந்து-தோன்றிவளர்ந்து, வேலை பருகும்- கடல்நீரைக் குடிக்கின்ற, சுடர் தீ-ஒளியினையுடைய நெருப்புப்போன்ற நெருப்பை, முகம் - (தன்) முகத்திலேயுடைய, திரி சிகை - மூன்று நுனிகளையுடையதுமாகிய, படை-சூலாயுதத்தை, திரித்து - சுழற்றி, எறிய - (ஸ்ரீராமன்மேற்) பிரயோகிக்க,—(எ-று.)—'வரலும், இராமன் வாளிவிட' (27) எனத் தொடரும்.

அழன்ற விராதன், இராமபிரான்மீது தீமுகத்திரிசிகைப் படை யைத் திரித்தெறிந்தானென்றவாறு. விராதனெறிந்த சூலாயுதம், பகைவருடலிலே குத்தி அவ்வுடலைப் பேய்கள் பசிநீங்கி வயிறாரத்தின் னும்படி அவர்களைக்கொல்வதனால் உதிரந்தோய்ந்த முகத்தையுடைய தென்க: இனி, இவனிடத்தேயுள்ள பசிப்பிணியாகிய பேய் அறும் படி யென்றுமாம். பகைவரைக் கொல்லுந் தொழிலிலே அரக்கனுக்கு உள்ள விருப்பத்தை அவன்படைமே லேற்றி, 'பெட்பினுதிரந்தோய் முகத்தது' என்றார். இனி, பெட்பின் உதிரம் - விரும்பப்படும் இரத்த மெனினுமாம். கடலினிடையே யுள்ளதொரு பெண்குதிரையின் முகத்தினின்றுந் தோன்றுகின்ற தீ, அக்கடல்நீரை மழைமுதலிய வற்றால் மிகாதபடி வற்றச்செய்யு மென்ப. வட(வைக்) குதிரையென மாறுக. படபா என்னும் வடசொல்லின் விகாரமாகிய வடவையென் பது, ஈறு குறைந்து 'வட' என நின்றது: இனி, வடவை வடகடலின் புறத்திலுள்ளதனால் இவ்வாறு கூறப்பட்ட தென்றலுமொன்று. அன்றி, வட வேலை - வடசமுத்திரமுமாம். சூலத்திலே தோன்று கின்ற அக்கினிச்சுவாலை பகைவராகிய கடலை வற்றச்செய்தலால், அதற்கு வடவைத் தீயை உவமைகூறினர். திரிசிகை - வடசொற் றிரிபு. திரிசிகைப் படை - முத்தலைச்சூலம். பி - ம் :—[1]வாய்முகத் துற. (26)

27. திசையும் வானவரு நின்ற திசைமாவு முலகும்
அசையு மாலமென வன்னவயின் [1]மின்னி வரலும்
வசையின் மேருமுதன் மால்வரைக ளேழின் வலிசால்
விசைய வார்சிலை யிராம னொருவாளி விடவே.

(இ - ள்.) அன்ன அயில் - அந்தச்சூலாயுதமானது,—திசை உம் - எட்டுத்திக்குக்களும், வானவர்உம் - (அத்திக்குக்களிலுள்ள) அஷ்டதிக்பாலகர்களும், திசை நின்ற மாஉம் - அத்திக்குக்களிலே நின்ற அஷ்டதிக்கஜங்களும், உலகுஉம் - எல்லாவுலகங்களும், அசையும்-கலங்குதற்குக் காரணமான, ஆலம் என-ஹாலாஹலமென்னும் விஷத்தைப்போல, மின்னி-மின்னிக்கொண்டு, வரலும்-வந்தவளவில், —இராமன்—, வசை இல்-குற்றமில்லாத, மேரு (இன்)-மகாமேருபருவதத்தினும், முதல் மால் வரைகள் ஏழின்-சிறந்த பெரிய ஸப்தகுலபர்வதங்களினும், வலி சால்-வலிமை மிகுந்த, விசையம் - வெற்றியைத் தருகின்ற, வார்-நீண்ட, சிலை-கோதண்டத்தில், ஒரு வாளி விட - ஒப்பற்ற ஓரம்பைத் தொடுத்துவிட,—(எ - று.)—அற்றகண்டமவையாசையின தந்தமுற' (28) என்க.

விராதனெறிந்த சூலப்படை ஆலகாலவிடம்போல எல்லாவுலகும் கலங்குமாறு மின்னிவர, இராமபிரான், ஏழுகுலமலைகளினும் மேருவினும் வலிமைமிக்க கோதண்டத்தில் ஓரம்பு வைத்துத் தொடுத்துவிட்டன னென்பதாம். திசை வானவர் - இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என இவர். திசைமா - எட்டுத்திசைக்குஉரிய ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புட்பதந்தம், சாருவபௌமம், சுப்பிரதீபம் என்ற எட்டுயானைகள்: இவற்றிற்கு முறையே பிடிகள் - அப்பிரமை, கபிலை, பிங்களை, அநுபமை, தாமிரபருணி, சுப்பிரதந்தி, அஞ்சனை, அஞ்சநாவதி என்பன. 'மா' - விலங்கின் பொதுப்பெயர், சிறப்பாய் யானைக்கு வந்தது. முன்னும் பின்னும் 'திசையும்' 'திசைமாவும்' எனக் கூறியதனால், அவற்றிற்கு ஏற்ப, நடுநின்ற 'வானவர்' என்பதற்கு - திசைக்காவலரென்று உரைக்கப்பட்டது: அவர்களைக் கூறவே, ஏனைய வானவரும் அடங்குவர். ஆலம்-ஹாலாஹலம். வரைகளேழ் - கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன. 'இன்' உருபை மேருவோடுங்கூட்டுக. இனி, மால்வரைகளேழுபோலவும் முதன்மையதாகியவசையில்லாத மேருபோலவும் வலிசான்ற சிலை யென்றுமாம். விஜயம்-விசயமெனத் திரிந்து, எதுகைநோக்கிப் போலியாயிற்று. ஒரு-இரட்டுறமொழிதல். பி-ம் :— [1]மின்ன. (27)

28. இற்ற தின்றொடிவ் வரக்கர்குல மென்று பகலே
வெற்ற விண்ணினிடை நின்று நெடுமீன் விழுவபோல்
சுற்ற மைந்த சுடரெஃகம திரண்டு துணியா
அற்ற கண்டமவை யாசையின தந்த முறவே.

(இ-ள். 'இ அரக்கர் குலம்-இவ்விராக்கதக்கூட்டம், இன்றொடு-இற்றைநாளுடனே, இற்றது-முடிந்தது', என்று-என்று குறிப்பித்து, பகலே-பகற்காலத்திலே, வெற்ற விண்ணினிடை நின்று - வெறுமை

யாகிய ஆகாயத்தினிடத்தினின்றும், நெடு மீன்-பெரிய நட்சத்திரங்கள், விழுவபோல் - விழுவனபோல,— சுற்று அமைந்த சுடர் - சுற்றிலும்பொருந்திய ஒளியினையுடைய, எஃகம் அது-அந்தச்சூலமானது, இரண்டு துணி ஆ - இருதுண்டாக, அற்ற - அறுந்துவிழுந்த, கண்டம்அவை-துண்டங்கள், ஆசையினது அந்தம் - திக்குக்களின் எல்லையை, உற-அடைய—, (எ-று.)—'கண்டு, விடலும்' (29) என்க.

இராமபிரானது அம்பினால் விராதனது அந்த முத்தலைவேல் இரண்டுதுண்டாகி, 'இன்றொடு அரக்கர் குலம் இற்றிடும்' என்று குறிப்பிக்குமாறு பகலிலே நட்சத்திரங்கள் விழுவதுபோலத் திக்குக்களினெல்லையில் விழுந்த தென்றவாறு: தற்குறிப்பேற்றவணி. பகலிலே நட்சத்திரம் விழுதல், பின்னேநிகழுந் தீமையைக் குறிப்பித்தற்கு முன்னேதோன்றும் உற்பாதம். இற்றது - விரைவினாலுந்தெளிவினாலும் வந்த காலவழுவமைதி. மீன் - மின்னுதலையுடையதெனக் காரணப்பெயர். எஃகு - கருவியாகுபெயர்; அம் - சாரியை. அது, அவை - பகுதிப்பொருள்விகுதி. துணி - துணிபட்ட பொருள். ஆசையினதந்த முறுதல் - இருபுறத்திலும் நெடுந்தூரம் போய்விழுதல். (28)

29. சூரொ டுங்கயி றுணிந்திறுதல் கண்டு சிறிதும்
போ[1]ரொ டுங்கலன் மறங்கொடு புழுங்கி நிருதன்
பாரொ டுங்குறு கரங்கொடு பருப்ப தமெலாம்
வேரொ டுங்கடி தெடுத்[2]தெதிர் விசைத்து விடலும்.

(இ-ள்.)நிருதன்-அவ்வரக்கன்,—சூர் ஒடுங்கு அயில்-தேவர்களும் அடங்குதற்குக் காரணமான (தனது)சூலாயுதம், துணிந்து இறுதல்-துணிபட்டு விழுந்ததனை, கண்டு - பார்த்தும், போர் சிறிதும் ஒடுங்கலன் - போர்செய்தலிற் சற்றுந் தளர்ச்சியில்லாதவனாய்,—மறம் கொடு-வீரப்பண்பை மேற்கொண்டு, புழுங்கி - கோபித்து, பார் ஒடுங்குறு கரம் கொடு - பூமியும் ஒடுக்கமடையும்படியான [மிகவும்நீண்ட] (தனது) கைகளால், பருப்பதம் எலாம் - மலைகள் பலவற்றையும், வேரொடும் - வேரொடு, கடிது எடுத்து-விரைவாகப் பிடுங்கியெடுத்து, எதிர் - (இராமனுக்கு) எதிரே, விசைத்து விடலும்-வேகமாய் எறிந்தவளவில்,—(எ - று.)—'கடவலான் உடல் ஊறுபடலும்' (30) என்க.

தான் எறிந்த அயில் இரண்டு துண்டமாகி விழுந்திடவே, அது கண்ட விராதன், சிறிதும் பின்வாங்காது பலபருப்பதங்களையும் வேரோடும் பறித்தெறியலானானென்பதாம். இச்சூலத்தைக்கொண்டு தேவர்களையெல்லாம் அடக்கி வென்று வந்ததனால், 'சூரொடுங்கயில்' என்றார். 'சூரும்' 'கண்டும்' என்ற சிறப்பும்மைகள் விகாரத்தால் தொக்கன. பாரொடுங்குறு கரம் - நிலவுலகத்தவர் அஞ்சியொடுங்குதற்குக் காரணமான கர மென்றுமாம். பருப்பதம் = பர்வதம். பி-ம்:—[1]ஒடுங்கிலன். [2]அவன். (29)

30. வட்ட [1]மிட்ட கிரியற்றுக வயங்கு வயிரக்
கட்[2]ட மைந்த கதிர்வாளி யெதிரே கடவலான்
விட்ட விட்ட[3]மலைமீள வவன் [4]மெய்யின் விசையாற்
பட்ட பட்டவிட மெங்கு முடலூறு படலும்.

(இ-ள்.) வட்டம் இட்ட - (விராதனால் எறியப்பட்டுத் தன்னைச்) சூழ்ந்து வருகின்ற, கிரி-மலைகள், அற்று உக-பிளவுபட்டு விழும்படி,— (இராமன்), வயங்கு-விளங்குகின்ற, வயிரம் கட்டு அமைந்த - உறுதி யாகிய கட்டுப் பொருந்திய, கதிர் வாளி - கூர்மையையுடைய பாணங் களை, எதிரே கடவலான் - (அம்மலைகளுக்கு) எதிராக எய்ததனால்,— விட்ட விட்ட மலை-(அவன்) மேன்மேல் விட்ட மலைகளெல்லாம், மீள- திரும்பவும், அவன் மெய்யின்-அவ்வரக்கனுடலில், விசையால்-வேகத் தோடு, பட்ட பட்ட இடம் எங்கும் - பட்டபட்ட இடங்களி லெல்லாம், உடல்-உடம்பு, ஊறுபடலும் - காயம்பட்ட வளவில்,— (எ-று.)—'எற்றவரலும்' (31) என்க.

விராதன் வீசியெறியும் மலைகள் யாவும் பிளவுபட்டு விழும்படி இராமபிரான் தன்னம்புகளை எதிரே செலுத்துதலால், அவன் மேன்மேல் விட்ட மலைகள் யாவும் அவ்வரச்கனுடலில்தானே மீண்டுவிசையோடு தாக்கவே அவ்வரக்கனுடலெங்கும் ஊறுபட்ட தென்றவாறு. உக கடவலான் மீள ஊறுபடலும் என இயையும். கிரி, மலை-சாதியொருமை. வயிரக்கட்டு - வச்சிரத்தாலாகிய கட்டு மாம். கட்டு - புங்கம். வயிரக்கட்டமைதல் - மிக்க வலிமை பொருந்து தலும், கதிர் - ஒளியுமாம். பி - ம்:—[1] இட்டுமிளிர்செற்றியின். [2] அமை த்த. [3] வரை. [4] மெய்யில். (30)

31. ஓம ராமரை யொருங்கு முணர்வோ ருணர்வுறும்
நாம ராமவரை நல்லற நிறுத்த நணுகித்
தாம ராவணை துறந்து தரைநின்ற வரையோர்
மாம ராமர மிறுத்தது கொடெற்ற வரலும்.

(இ - ள்.) ஓர் மா மராமரம் இறுத்து - ஒரு பெரிய மராமரத்தை வேரோடு பிடுங்கி, அதுகொடு - அதனால்,—(அவ்வரக்கன்),— ஒருங்கும் உணர்வோர் - முற்றும் அறிந்த தத்துவஞானிகள், உணர்வுறும் - அறிந்துதியானிக்கின்ற, நாமர் ஆம் அவரை-திரு நாமங்களையுடையவரும், நல் அறம் நிறுத்த - நல்ல தருமத்தை நிலைநிறுத்துதற்காக, தாம்—, அரா அணை துறந்து - ஆதிசேஷ சயனத்தை விட்டு, தரை நணுகி நின்றவரை - பூமியில் வந்து திரு வவதரித்தவருமாகிய, ஓம் அ ராமரை - பிரணவமந்திரத்தின் பொருளாகிய அந்தஸ்ரீராமரை, எற்ற - மோத, வரலும் - வந்தவள வில்,—(எ - று.)—'விழுத்தி, அழுத்த' (32) என்க.

விராதன் ஒரு மராமரத்தை வேரோடு பிடுங்கி, அதனால் இராம பிரானை எற்றவந்தனனென்றவாறு: இராமபிரானது நிலையை யுணராது அறிவிலியாய் விராதன் இங்ஙன்செய்யலுறுகின்றனே என்பது தோன்ற, "ஓமராமரை" என்பது முதலாக இராமபிரானைச் சிறப்பித்துக் கூறினர். இனி, ஓமமென்பதனை ஹோமமென்பதன் விகாரமாக்கொண்டு, யாகத்தின்ஸ்வரூபமும், சாதநமும், அங்கமும், விஷயமும், பயனும், செய்பவரும், செய்விப்பவரும், நிறைவேற்று பவரும், பெற்றுக்கொள்பவரும், தலைவருமாகிய இராமரென்றுங் கொள்ளலாம். துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்து மறத்தை வீட்டி அறத்தைநாட்டத் திருவவதரித்ததனால், 'நல்லறநிறுத்த

நணுகின்றவர்' என்றார். 'தாமராவணை துறந்து' என்றதனால், அத் திருவனந்தாழ்வான் இளையபெருமாளாய்த் திருவவதரித்துச் சிறிதும் இடைவிட்டுப்பிரியாது கூடஇருக்கும் நிலைமை ஒருவாறு குறிப்பிக்கப்பட்டது. அடிதோறும் முதலெழுத்துத் தவிர இரண்டு முதலிய சில எழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள் வேறுபட்டுவந்ததனால், இச்செய்யுள் - திரிபு என்னுஞ் சொல்லணியாம். (31)

32. ஏறு சேவக னிரண்டிரெ டிரண்டு கணையால்
வேறு வேறுதுணி செய்தது [1]விழுத்த விசையான்
மாறு மாறுநிமிர் தோளிடையு மார்பி னிடையும்
ஆறு மாறுமயில் வெங்கணை யழுத்த வவனும்.

(இ-ள்.) ஏறு சேவகன் - உயர்ந்த [மகா] வீரனாகிய ஸ்ரீராமன், இரண்டிரெடு இரண்டு கணையால்-நான்குபாணங்களால், அது-அம் மராமரத்தை, வேறு வேறு துணிசெய்து-வெவ்வேறாகத் துணிபடச் செய்து, விழுத்தி - தள்ளிவிட்டு, நிமிர்தோளிடைஉம்-(அவனது) உயர்ந்த தோள்களிலும், மார்பினிடைஉம்-மார்பிலும், மாறு மாறு - மாற்றிமாற்றி, விசையால் - வேகத்தோடு, ஆறுஉம் ஆறுஉம் - அவ்வாறாகிய, அயில் வெம் கணை - கூரிய வெவ்விய அம்புகளை, அழுத்த-அழுந்தச்செய்ய,—அவனும்-அவ்வரக்கனும்,—(எ - று.)— 'உதற' என்க.

விராதனெறிந்த மராமரத்தை நான்குகணைகளால் துண்டித்து வீழ்த்தி, ஸ்ரீராமன், அந்த விராதனது மார்பிலும் தோள்களிலும் அவ்வாறு கணைகளை யழுத்தின னென்க. இனி, ஏறுபோலுஞ் சேவகனென வுரைப்பின், நடையாலும் வீரதாலும் தோற்றப் பொலிவாலும் சிங்கவேற்றைப்போன்றவ னென்க: "ஏறுசேவகனார்க்கு" என்றார், நம்மாழ்வாரும். பி-ம்:—[1]விழுத்து. (32)

33. மொய்த்த முட்டன துடற்றலை [1]தொளைப்ப முடுகிக்
[2]கைத்த லத்தி னிமிரக் கடிதுகன்றி விசிறும்
எய்த்த மெய்ப்பெரிய கேழலெ னவெங்கும் விசையின்
தைத்த [3]வக்கணை தெறிப்பமெய் சிலிர்த்து தறவே.

(இ - ள்.) மொய்த்த - (மிகுதியாக) நெருங்கிய, முள் - கூரிய அம்புகள், தனது உடல்தலை - தன் உடலினிடத்தே, தொளைப்ப - தொளைசெய்ததனால், முடுகி - விரைந்து, கடிது கன்றி-மிகவும் மனம் வெதும்பி, கைத்தலத்தின் எங்கும் - (தன்) தோள்முழுவதும், விசையின்-வேகத்தோடு, தைத்த—, அ கணை - அவ்வம்புகள், நிமிர தெறிப்ப-நிமிர்ந்து தெறிக்கும்படி, விசிறும்-வீசியுதறுகின்ற, எய்த்த - முட்களைக்கொண்ட, மெய்-உடம்பையுடைய, பெரிய-, கேழல் என - முள்ளம்பன்றிபோல, மெய்-(தன்) உடம்பை, சிலிர்த்து உதற—, —(எ-று.)—'இராமன் கணைவிட உணர்வுசோர்வுறுதலும்' என்க.

முள்-கூரிய அம்புக்கு இலக்கணை. எய்த்த-'எய்' என்ற பெயர்ப் பகுதினடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். இனி, நெருங்கிய முள் தனது உடலிலிருந்து தொளைத்து வருத்துதலால் மிகக்கோபித்து விரைந்து உதறுகின்ற இளைத்த உடம்பையுடைய பெரியகேழல்போல,

தனது தோளிலே இராமபாணங்கள் மிகுதியாகத் தைக்கக் கடிது கன்றித் தைத்த அக்கணை விசையின் எங்குந் தெறிப்ப மெய்சிலிர்த்து உதறஎன அநுவயித்துப்பொருள் கூறவுமாம். பி - ம்:—[1]முளைத்த. [2]கைத்தவற்றின். [3]வெங். (33)

34. எரியின் வார்கணை யிராமன்விட வெங்கு நிலையா
துருவி யோடமற மோடு தல்செயா வுணர்வினன்
அருவி பாயும்வரை போற்குருதி யாறு பெருகிச்
சொரிய வேகவலி கெட்டுணர்வு சோர்வு றுதலும்.

(இ-ள்.) (பின்னும்), இராமன்—, எரியின் வார் கணை-நெருப்புப் போன்ற நீண்ட அம்புகளை, விட-பிரயோகிக்க,(அவ்வம்புகள்), எங்கும் நிலையாது-எங்குந் தடைப்பட்டுநிற்காமல், உருவி ஓட - ஊடுருவிச் செல்லாநிற்க,—மறம் ஓடுதல் செயா உணர்வினன் - கொடுந்தன்மை நீங்காத அறிவினையுடைய அவ்வரக்கன், வரை பாயும் அருவி போல் - மலையினின்றும் பாய்கிற நீரருவிபோல, குருதிஆறு - இரத்தநதி, பெருகி சொரிய-(தன்உடலினின்றும்) பெருகி வழிவதனால், வேகம் வலி கெட்டு - (தனது) உக்கிரமான பலமழிந்து, உணர்வு சோர்வுறுதலும்-அறிவழிந்த [மூர்ச்சித்த] அளவில்,—(எ-று.)—'துணித்துமென தோளிருவரேற' (35) என்க. வேகவலி-வேகமும் வலியு மென்றுமாம்.

இராமபிரான் கணைவிட, ஊடுருவப்பெற்ற அதனால் உடலிற் குருதிசோர வேகவலிகெட்டு விராதன் உணர்வு சோரலுற்றன னென்பதாம். எரியின் கணை எரிக்கவேண்டியதாக இருக்க, வரபலத்தால் அவனை உருவியோடலாயிற்று என்க. (34)

### 35.—இராமலட்சுமணர் விராதன்கையை வெட்டுமாறு அவன்தோளிலேறுதல்.

மெய்வ ரத்தினன் மிடற்படை விடப்ப டுகிலன்
செய்யு மற்றுமிக லென்று சினவா ளுருவிவன்
கைது ணித்துமென முந்து கடுகிப் படர்புயத்து
[1]எய்வின் மற்பொருவு தோளிருவ ரேற நிருதன்.

(இ-ள்.) எய்வு இல் - மெலிதலில்லாத, மல் பொருவு - மற்போர் செய்வதில் வல்ல, தோள்-தோள்களையுடைய, இருவர் - அவ்விராம லட்சுமணர், '(இவ்வரக்கன்), மெய் வரத்தினன்-மெய்யான வரத்தை யுடையவன்; மிடல் படை விட-வலிய ஆயுதங்களைப் பிரயோகிப்பதனால், படுகிலன்-இறவான்: மற்றும் இகல் செய்யும் - மீளவும் போர் செய்வான்', என்று-என்று ஆலோசித்து,—சினம் - கோபத்தோடு, வாள்-வாளை, உருவி—, 'வல் கை துணித்தும் - (இவனது) வலிய கைகளை வெட்டிவிடுவோம்,' என - என்று, முந்து கடுகி-மிகவும் விரைந்து, படர் புயத்து-பெரிய (அவனது) தோள்களில், ஏற—,— நிருதன்- அவ்வரக்கன்,—(எ - று.)—'குருதியான் எழுந்தனன்' (36) என்க.

'வரம்பெற்றிருப்பவனாதலால் மிடற்படைக்குப் பட்டிடான்: மற்றும் போர்புரிவான்: அதனால், பொரமுடியாதபடி இவன்கையை

வெட்டுவோம்' என்று இராமலட்சுமணரென்ற அவ்விருவரும், அந்த அரக்கன் தோளின்மேலேறினரென்க. உடையாரது சினத்தை வாளின்மேலேற்றி, சினவாளென்று ரெனினும் அமையும். பி-ம்:—[1]எய்தி. (35)

## 36.—விராதன் இராமலட்சுமணரைத் தூக்கிக்கொண்டு செல்லுதல்.

உண்டெழுந்தவுணர் வவ்வயி னுணர்ந்து முடுகித்
தண்டெழுந்தனைய தோள்கொடு சுமந்து தழுவிப்
பண்டெழுந்தனது வன்கதி [1]பதிற்றின் முடுகிக்
கொண்டெழுந்தனன் விழுந்தழி கொழுங்குருதியான்.

(இ - ள்.) விழுந்து அழி கொழுங் குருதியான்-பெருகிவழிகின்ற மிக்க இரத்தத்தையுடையவனாகி,—அவ் வயின் - அப்பொழுது, உண்டு எழுந்த உணர்வு-மீண்டும் உளதாகித் தோன்றிய அறிவினால், உணர்ந்து - (இராமலட்சுமணர்களைத் தன்மேலுள்ளவர்களாக) அறிந்து, முடுகி - (மனம்) விரைந்து, தண்டு எழுந்து அனைய தோள் கொடு-உயர்ந்த தண்டாயுதத்தைப போன்ற (தனது) தோள்களால், தழுவி சுமந்துகொண்டு-சேர்த்துப் பிடித்துத் தாங்கிக்கொண்டு, பண்டு எழும் - முன்னேயுள்ள, தனது—, வல் கதி - வலிய நடை, பதிற்றின் - (முன்னிலும்) பதின்மடங்கு அதிகமாக, முடுகி-விரைந்து, எழுந்தனன் - எழும்பியவனாய்,—(எ - று.)—'திரிந்தனன்' (37) என முடியும்.

இராமபிரானது எரியின்கணை உடலெங்கும் ஓடுதல் செய்யவே, குருதியாறு பெருகி உணர்வுசோர்வுற்ற அவ்விராதன், தன்தோளின் மீது அவர்களைச் சுமந்த வண்ணம் அவர்களைக் கையால் தழுவி முன்னிலும் பதின்மடங்கு விசையுடன் சென்றனனென்க. 'உண்டு' என்ற குறிப்புமுற்று, இங்கே வினையெச்சப்பொருள் பட்டுநின்றது. தண்டு-தண்டமென்பதன் விகாரம். பி - ம்:—[1]பயிற்றல்கடுகி. (36)

## 37.—இரண்டு கவிகள்-அப்போதைய விராதனது தோற்றம் கூறும்.

முந்து வான்முக டுறக்கடிது முட்டி முடுகிச்
சிந்து சோரியொடு சாரிகை திரிந்த னனரோ
வந்து மேருவினை நாடொறும் வலஞ்செய் [1]துழல்வோர்
இந்து சூரி யரையொத் திருவரும்பொ லியவே.

(இ - ள்.) மேருவினை - மகாமேருவை, நாள்தொறும் - தினந்தோறும், வலம் செய்து உழல்வோர் - பிரதட்சிணஞ்செய்து சஞ்சரிப்பவர்களாகிய, இந்து சூரியரை ஒத்து - சந்திர சூரியர்களைப் போன்று, இருவரும் பொலிய - இராமலட்சுமணரிருவரும் (தனது இருதோள்களிலும்) விளங்கும்படி,—முந்து வான் முகடு உற - உயர்ந்த வானத்தின் உச்சியை அளாவுமாறு, முட்டி—, சிந்து - வழிகின்ற, சோரியொடு-இரத்தத்துடனே, (விராதன்) கடிது முடுகி-மிகவும் விரைந்து, சாரிகை திரிந்தனன் - வட்டமாய்ச்சுற்றினான்; (எ-று.)

சோரி சிந்துதற்குக்காரணம் உடலெங்கும் கணையாலூடுருவப் பட்டதனால் என்பதை, 34-ஆஞ் செய்யுளாலறிக. மேருமலை - சிந்து சோரியொடு திரிகின்ற அரக்கனுக்கும், சந்திர சூரியர்கள் - இராம லட்சுமணர்களுக்கும் உவமை. கலைநிறைதலாற் சந்திரனும், பிரதாபத் தாற் சூரியனும் உவமையென்க. வந்து - அசை; இது புறனடையாற் கொள்க: அன்றி, வலஞ்செய்துவந்து என்று கூட்டியுரைத்தலுமாம். சாரிகை-மண்டலாகாரமான கதி, அரோ-ஈற்றசை. பி-ம்:—[1]உழலும்.

38. சுவணவண்ணனொடு கண்ணன் [1]மிசைகொள்ள விசைதோய்
அவண விண்ணிடை [2]நிமிர்ந்து படர்கின் றவனறஞ்
[3]சிவண தன்னசிறை [4]முன்னவரொ டேகு [5]செலவத்
[6]துவண வண்ணலெனு மன்னவனையுமொத் தனனரோ.

(இ - ள்.) சுவணம் வண்ணனொடு - பொன்போன்ற நிறத்தை யுடைய இலக்குமணனுடன், கண்ணன் - ஸ்ரீராமன், மிசைகொள்ள - (அந்தவிராதனுடைய தோளில்) ஏறியிருக்க, விசை தோய் - வேகம் பொருந்தி, அவண் - அவ்விடத்தினின்றும், அ விண்ணிடை-அந்த ஆகாயத்தில், நிமிர்ந்து - எழும்பி, படர்கின்றவன் - செல்லுகின்ற அவ்வரக்கன், அறம் சிவணது அன்ன - தருமம் வடிவெடுத்ததனை யொத்த, சிறை - (தன்) சிறகுகளில், முன்னவரொடு - பலராமகிருஷ்ணர்களோடு, ஏகு - செல்லுகின்ற, செலவத்து - வேகத்தையுடைய, உவணன் அண்ணல் எனும் - கருடவண்ணலென்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற, மன்னவனை உம் - பறவையரசனையும், ஒத்தனன்—;

பெரியதிருவடி யெனப்படுகிற கருடபகவான் தருமசுவரூபி யாதலால், 'அறஞ்சிவணதன்ன சிறை' என்றார். அவன் பலராம க்ருஷ்ணர்களைத் தன்தோள்களில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றது, பாணாசுரவிசயகாலத்திலெனை அறிக. திருமாலினது அமிசமாகிய ஸ்ரீராமனுக்குக் கிருஷ்ணனும், ஆதிசேஷனது அமிச மாகிய லக்ஷ்மணனுக்குப் பலராமனும் உவமை. முன்னவதார மாகிய இராமலட்சுமணர்களுக்குப் பின்னவதாரமாகிய பலராம க்ருஷ்ணர்களை உவமை கூறியது, பின்னிட்டவரான கவியின் கூற் றுதலி னென்க. இதனைக் கால பேதவழுவா மென்று கொண்டு, வேறுவகையாகப் பொருள்கூறி இச்செய்யுளின் பொலிவை யழிக் கத் தொடங்குதல் தவறு. சுவணவண்ணன் - ஸ்வர்ணவர்ண னென்பதன் சிதைவு. இளையபெருமாளது நிறம் பொன்னிறமா தலை, பாலகாண்டச் செய்யுள்களானு முணர்க. கண்ணன் - கரியோ னென்னும் பொருளதாகிய க்ருஷ்ணனென்னும் வடமொழி பிரா கிருதமாய்ச் சிதைந்துவந்தது; இது, இங்கே அவதாரப் பெயரன் றிககே வந்த காரணப்பெயர். 'தோயந்து' என்னும் வினையெச்சம், விகுதி முதலியன கெட்டு, தோய்என நின்றது; "வரிப்புனை பந்து" எனபதில் 'வரி' என்பதுபோல. அவண, அ-அசையுமாம். தோயம் வ(ண்)ணம் விண்ணிடை என எடுத்து-கடலின் நிறமாகவுள்ள ஆகாயத்திலே யெனினுமாம். தோயம் - வடசொல்: நீர். வண் ணம் = வர்ணம். உவணன்-ஸுபர்ண னென்பதன் சிதைவு; அழகிய சிறகுடையவனென்று பொருள். அண்ணல் - பெருமையிற் சிறந்த

வன். பி-ம்:—[1]உறைதோளன். [2]எழுந்து. [3]சிவண. [4]மன்னவரொடு. [5]செயல்வந்து. [6]உவணமெனன்னு நெடுமன்னவனும். (38)

## 39 —இரண்டு கவிகள்-விராதனால் தூக்கிக்கொண்டு செல்லப் பெறும் இராமலட்சுமணரைக்கண்ட சீதையின் துயரத்தைக் கூறும்.

மாத யாவுடைய தன்கணவன் வஞ்சன் [1]வினையிற்
போத லோடு மலமந்தனள் புலர்ந்து பொடியிற்
கோதை யோடுமொசி கொம்பென விழுந்த னள்குலச்
சீதை சேவல்பிடி யுண்ட சிறையன்ன மனையாள்.

(இ - ள்.) குலம் சீதை - உயர்குலத்தில் தோன்றிய சீதையான வள்,—மா தயா உடைய - மிக்க அருளினையுடைய, தன் கணவன் - தனது நாயகனாகிய இராமன், வஞ்சன் வினையின் - வஞ்சகனாகிய விராதனது கொடுந்தொழிலால், போதலோடும் - (ஆகாய மார்க்க மாய்த் தன்னைவிட்டுச்) செல்கின்றவளவில்,—அலமந்தனள் - மனங் கலங்கியவளாகி, புலர்ந்து - வாட்ட மடைந்து, சேவல் பிடியுண்ட - (தன்) ஆணன்னம் (பிறரால்) பிடிக்கப்பட்ட, சிறை அன்னம் - சிறகு களையுடைய பெண்ணன்னத்தை, அனையாள் - ஒத்தவளாகி, ஒசி கொம்பு என - துவண்டு விழுகின்ற பூங்கொம்புபோல, கோதை யோடும் - (தன்) கூந்தலுடனே, பொடியில் - புழுதியில், விழுந் தனள்;— (எ - று.)

தனது கணவனை ஆகாயமார்க்கமாக வஞ்சன் தூக்கிச் செல் லவே, சேவல் பிடியுண்ட பெண்ணன்னம்போன்று மிகவும் மனங் கலங்கினவளாகி, சீதை, தன்கூந்தல் புழுதியிற் புரள விழுந்தன ளென்பதாம். குலம் - நிமிகுலம். குலச்சீதையென்றது - ஆசாரப்பிர தானையென்றற்கு. ஜநகமகாராஜன் யாகசாலை அமைப்பதற்காகப் பூமியை உழுதபோது கலப்பையுழுபடைச்சாலில் அகபபட்டதனால், சீதையெனப் பெயர்; சீதை - உழுபடைச்சால் என்று பொருளுள்ள ஸீதா என்பதன் திரிபு; இதனால், அயோநிஜத்வம் கூறப்படுகின் றது. "சேவற் பெயர்கொடை சிறகொடு சிவணு, மாயிருந்தூவி மயில லங்கடையே" என்றதனால், ஆணன்னத்தைச் சேவ லென்றார். பி - ம்:—[1]வலியிற். (39)

40. பின்னை யேது முதவுந்துணை பெருளு ரைபெருள்
மின்னை யேயிடை நுடங்கிட விரைந்து [1]தொடரா
அன்னை யேயனைய வன்பி னறவோர்க டமைவிட்
டென்னை யே[2] நுகர்தி யென்றன ளெழுந்து விழுவாள்.

(இ - ள்.) (அங்ஙனம் விழுந்தவள்),—எழுந்து - (மீண்டும்) எழுந் திருந்து, உதவும் துணை-(தன் துன்பத்தை நீக்கி) உதவி செய்கின்ற துணை, பின்னை ஏதும் பெருள் - மற்றையெதுவும் பெறுதவளாய், உரை பெருள் - ஒருசொல்லையும பெறுதவளாகி, மின்னை ஏய் இடை - மின்னலையொக்கின்ற இடை, நுடங்கிட - துவள, விரைந்து—, தொடரா - (அவ்வரக்கனைப்பின்) தொடர்ந்துசென்று, —(அவனை நோக்கி) 'அன்னையே அனைய - (உலகத்துக்கெல்லாந்) தாயையே

போன்ற, அன்பின் - அன்பினையுடைய, அறவோர்கள் தமை - தரும சுவரூபிகளாகிய சக்கரவர்த்திதிருமகர்களை, விட்டு—, என்னை நுகர்தி-என்னையே புசிப்பாயாக,' என்றனள்-என்றுகூறி, (மீண்டும்), விழுவாள்—; (எ-று.)

விராதன் செல்லுகின்ற நெறியைத் தொடர்ந்து, தருமசொரூபிகளான இராமலட்சுமணர்களை விட்டுத் தன்னை நுகருமாறு கூறினள் சீதையென்க. இதனால், பிராட்டியினது கற்புநிலையின் உறுதி விளங்கும்: 'உரைபெருள்' என்பதற்கு-ஒருவார்த்தை சொல்வதற்கும் நாவெழாதவளா யென்றுயினும், தனக்குத் தேற்றரவு கூறும் வார்த்தையைப் பெருதவளா யென்றுயினுங் கருத்துக்கொள்க. பி - ம் :—[1]தொடர்வாள். [2]உணவுகொள்கென. (40)

## 41.—சீதையின் துயரத்தை இலக்குமணன் இராமனிடங் கூறுதல்.

அழுது வாய்குழறி யாருயி ரழுங்கி யலையா
எழுது பாவை யனையா ணிலையுணர்ந் திளையவன்
தொழுது தேவி துயர்கூர விளையாட லுெழிலோ
பழுது வாழியென வூழி [1]முதல்வன் பகர்வுறும்.

(இ-ள்.) அழுது—, வாய் குழறி-வாய்குளறி, அரு உயிர் அழுங்கி - அரிய உயிர் தளரப்பெற்று, அலையா - வருந்தி, எழுது பாவை அனையாள்-எழுதிய சித்திரப்பிரதிமையைப் போன்று அசையாது விழுந்துகிடக்கின்ற அச்சீதையினது, நிலை - நிலைமையை, உணர்ந்து-அறிந்து,—இளையவன் - இளையபெருமாள்,—தொழுது - (இராமனை) அஞ்சலிசெய்து, 'தேவி துயர்கூர - பிராட்டி மிக்க வருத்தமடைய, விளையாடல்-விளையாடுவது, தொழிலோ - செய்தற்குஉரிய நற்காரியமோ? பழுது-குற்றமாகும்,' என-என்று விண்ணப்பஞ்செய்ய,—ஊழி முதல்வன-காலத்துக்கு முதல்வனாகிய இராமன், பகர்வுறும்-சொல்லுவான்; (எ-று.)—அதனை, மேற் காண்க. வாழி - அசை.

சீதையின் நிலையைக்கண்டே, இலக்குமணன், இராமபிரானைத் தொழுது, "தேவியைத் துயர்கூர விட்டு விளையாடலாமா? இது பழுது' என்ன, இராமபிரான் கூறலானானென்க. எழுதுபாவை, அசையாதுநிற்றற்கு உவமை; இதனால், பிராட்டி துயர் மிகுதியால் மூர்ச்சையடைந்தன ளென்க. 'இளையவனுணர்ந்து' என்றதனால், மூத்தவன் வழிச்செலவின்கணுள்ள கருத்தாற் சானகியது நிலையை உணர்ந்தில னென்பது குறிப்பிக்கப்படுகின்றது. ஆதியந்தமில்லாமல் நித்தியனாயிருப்பதனால் 'ஊழிமுதல்வன்' என்றார்; இனி உலகங்கட்கு முதல்வ னென்றுமாம். பி-ம்:—[1]ஒருவன். (41)

## 42.—இராமபிரான் விராதனைக் காலினால் தள்ளுதல்

ஏக நின்ற நெறியெல்லை கடி [1]தேறி யினிதிற்
[2]போக வன்றெனநினைந்த னனிவன் பொருவிலோய்
[3]சாக வின்று பொருளன் றெனநகுந் தகைமையோன்
வேக வெங்கழலி னுந்தலும் விராதன் [4]விழவே.

(இ - ள்.) 'பொருவு இலோய் - ஒப்பில்லாதவனே! ஏக நின்ற - (நாம்) போகவேண்டிய, நெறி எல்லை - வழியினதெல்லையை, கடிது - விரைவிலே, இனிதின் - இனிமையாக, ஏறி போகல் - (இவன்மேல்) ஏறிச்செல்லுதல், நன்று என-நல்லதென்று, நினைந்தனன்-எண்ணினேன்; இன்று - இப்பொழுது, இவன்சாகல்-இவன் (நம்மால்) இறப்பது, பொருள் அன்று - ஒருபெரிய காரியமன்று,' என - என்று அருளிச்செய்து, (இராமபிரான்),—நகும் தகைமையோன்-புன்சிரிப்புச் செய்கின்ற தன்மையையுடையவனாய், வெம் கழலின் - (தனது) வலிய பாதத்தால், வேகம் - வேகத்தோடு, உந்தலும் - தள்ளினவளவிலே, விராதன்—, விழ - கீழேவிழாநிற்க,—(எ - று.)—'தோளிரண்டும் வாள்கொடு துணித்து' (43) என்க.

'நாம் செல்லக் கருதியிருக்கின்ற வழியாகவே இந்த விராதன் செல்வதனால் நடந்துசெல்லும் வருத்தமின்றி இனிதின் செல்லலாமென்று எண்ணியிருந்தேன்; இவனைக் கொன்று வீழ்த்துவது நமக்கு அருமையான காரியமன்று' என்று எள்ளற் சிரிப்புடனே தன் கழலினால் உந்த, அந்த விராதன் தரையில் விழலானானென்பதாம். பொருவு இலோய் என்று பிரிக்காமல், பொரு விலோய் - போர் செய்கின்ற வில்லினையுடையோ யெனினுமாம். வெங் கழல் - விரும்பப் படுகின்ற கழ லென்றுமாம். பி-ம்:—[1]ஏகி, எய்தி. [2]போகை. [3]சாகை. [4]விழலும். (42)

## 43.—இராமலட்சுமணர் விராதனது தோளை வெட்டிச் செல்ல, அவன் அவர்களைத் தொடர்தல்.

தோளி ரண்டும் வடிவாள்கொடு துணித்து விசையான்
மீளி மொய்ம்பினர் குதித்தலும் வெகுண்டு புருவத்
தேளி ரண்டு நெரியச் சினவு செங்க ணரவக்
கோளி ரண்டு சுடருந் தொடர்வதிற் குறுகலும்.

(இ - ள்.) மீளிமொய்ம்பினர் - வலியதோள்களையுடைய ஸ்ரீராம லக்ஷ்மணர்கள், விசையால் - வேகத்தோடு, வெகுண்டு - கோபித்து, வடி வாள்கொடு - கூர்மையான வாளாயுதத்தால், தோள் இரண்டு உம் - (விராதனது) இரண்டு தோள்களையும், துணித்து - அறுத்துத் தள்ளிவிட்டு, குதித்தலும் - தாவிச்செல்லுதலும்,—(அவ்விராதன்), புருவம் தேள் இரண்டும் நெரிய - தேள்போலும் (தனது) புருவங்களிரண்டும் நெரியும்படி (வெகுண்டு), சினவு - கோபிக்கின்ற, செங் கண் - சிவந்தகண்களையுடைய, அரவம் கோள் - பாம்பாகிய இராகு வென்னுங் கிரகம், இரண்டு சுடரும் - சூரியசந்திரர்களிருவரையும், தொடர்வதின் - (ஒரேகாலத்திற் பிடிப்பதற்காகப்) பின்தொடர்வது போல, குறுகலும் - (அவ்விராமலட்சுமணர்களைத் தொடர்ந்து) வந்தவளவில்,—(எ - று.)—'எனலும்' (44) என்க.

விராதன் கீழ் விழும்போது குதித்தனராக, அவ்விராதன் சினத்தினால் புருவத்தை நெரித்து அந்த இராமலட்சுமணர்களைத் தொடரலானானென்பதாம். "இராமலட்சுமணர்கள் தோளை வெட்டவும் விராதன் கீழ் விழலானான்: அவனைக் கைகளாலும் கால்களாலும் மற்றும்

பல பாணங்களினலும் பலபடி இராமலட்சுமணர்கள் மோதியும் நெருக்கியும் அவ்விராதன் சாகாதிருந்தான்: அது கண்டு 'இவன் தான் பெற்ற வாத்தினல் இவனை ஆயுதங்கொண்டு கொல்லமுடியாது. இவனைக் குழிவெட்டி மண்ணிலே புதைத்து விடவேண்டும்' என்று ஸ்ரீராமன் லட்சுமணனை நோக்கிக் கூறினன்: அச்சொல் செவிப்படவும், அந்த விராதன், இராமபிரானைநோக்கி 'இந்திரனையொத்த உன்னல் கொல்லப்பட்டேன்: மோகத்தால் முன்னம் உன்னை உணர்ந்தேனில்லை: இப்போது உங்களையறிந்திட்டேன்' என்று கூறி, தன் சாபவரலாற்றையும் உரைத்து, தன்னுடலைக் குழிவெட்டிப் புதைக்குமாறும், அரையோசனைத்தூரத்திலுள்ள சரபங்க முனிவரை யடைந்து அவரால் நன்மை பெறுமாறும் கூறிச் சுவர்க்கலோகஞ் சென்முன்" என்று ஸ்ரீவான்மீகி ராமாயணத்து உள்ளது. இராமன் வலத்தோளையும், இலக்குமணன் இடத்தோளையுமாகத் துணித்து வீழ்த்தின ரென்க. கிரகண காலங்களிற் சூரியசந்திரர்களை மறைக்குஞ் சாயையை இராகுகேதுக்களென்னும் பாம்புகளாகக் கூறும் புராண வழக்குப்பற்றி, 'அரவக்கோள்' என்முர். அரவக்கோள் இரண்டு சுடரையும் ஒருங்கு தொடர்வது, இல்பொருளுவமை: தற்குறிப்பேற்றவணி யெனினுமாம். (43)

**44.—இராமன் விராதனை மண்ணிற்புதைக்கவேண்டுமென்றல்.**

புண்ணி டைப்பொழி [1]புதுப்புனல் [2]பரந்து விழவும்
விண்ணி டைப்படர்தல் விட்டெழு விகற்ப நினையா
எண் [3]ணி டைக்குரிசி லெண்ணி யிளையோ விவனையிம்
மண்ணி டைக்கடிது பொத்துதல் வழக்கெ னலுமே.

(இ - ள்.) புண்ணிடை - விரணங்களினின்றும், பொழி - வழிகின்ற, புது புனல் - புதிய ரக்தநீரானது, பரந்து விழஉம் - பரவி வழிந்து கொண்டிருக்கவும், (அவ்வரக்கன்), விண்ணிடை படர்தல் விட்டு-(உயிர்) மேலுலகத்திற்குப்போகாமல் [இறவாமல்], எழு - எழுகின்ற, விகற்பம் - மாறுபாட்டை, நினையா - நினைத்து,—எண் இடை குரிசில் - (யாவர்) மனத்திலுங் எழுந்தருளியிருத்தலையுடைய ஸ்ரீராமன், எண்ணி - (அவன்சாகாததன்மையை) ஆலோசித்து, 'இளையோய் - தம்பீ! இவனை - இவ்விராதனை, இ மண்ணிடை - இப்பூமியில், கடிது - விரைவாக, பொத்துதல் - புதைத்தல், வழக்கு - முறைமை,' எனலும் - என்றுசொன்ன வளவில்,—(எ - று.)— 'வகிர்ந்த' (45) என்க.

உயிருடனே குழியில் தள்ளிப்புதைத்தலே செய்யவேண்டிய செயலென்றனன் ஸ்ரீராமனென்க. இனி, புண்ணிடைப்பொழி புதுப்புனல் [இரத்தம்] பரந்து வழியவும் அவன் ஆகாயமார்க்கத்திற் செல்லுதலைவிட்டுப் பூமியில் தொடர்ந்து வருகின்ற மாறுபாடென்றுமாம். விகற்பம் - விகல்பம். "ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டஃ [எல்லாருடைய ஹ்ருதயத்திலும் நான் தங்கியுள்ளேன்]" என்று அருளிச்செய்ததற்கு ஏற்ப, 'எண்ணிடைக்குரிசில்' என்முர். குரிசில்- பெருமையிற் சிறந்தோன்; ஆண்பாற் சிறப்புப்பெயர். பி - ம்:—
[1] கறைப், உயிர்ப். [2] பொலிந்து வரவும். [3] உடை. (44)

## 45.—இராமன் விராதனை இலக்குமணன் வெட்டிய குழியில் தள்ளுதல்.

மதநல் யானையனை யானிலம் வகிர்ந்த குழிவாய்
நதமு லாவு[1] நளி நீர்வயி னழுந்த நவைதீர்
[2]கதழ்வ மாய்நறுநெ யுண்டுலகி லன்பர் கருதிற்
றுதவு சேவடி யினுலமல னுந்து தலுமே.

(இ - ள்.) மதம் நல் யானை அனையான்-சிறந்த மதயானையைப் போன்ற இலக்குமணன், நிலம்-பூமியில், வகிர்ந்த - வெட்டியெடுத்த, குழிவாய் - குழியில், நதம் உலாவும் நளி நீர்வயின் - ஆற்றினது ஓடுகின்ற மிக்கநீரில், அழுந்த - அழுந்தும்படி,—நவை தீர் கதழ்வம் ஆய் - குற்றமில்லாத யாகாக்கினிசொரூபமாகி, நறு நெய் உண்டு - நல்ல நெய்யைப்பருகி, உலகில்-உலகத்திலுள்ள, அன்பர் - பக்தர்கள், கருதிற்று - எண்ணிய வரங்களை, உதவு - கொடுக்கின்ற, அமலன் - குற்றமில்லாத ஸ்ரீராமபிரான், சேவடியினால் - (தனது) சிவந்த திருவடிகளால், உந்துதலும் - (அவ்வரக்கனைத்) தள்ளியவளவில்,—(எ - று.)—'உணர்ந்து உடல்விட்டு விண்ணிடை விளங்கினன்' (46) என்க.

நதம் - மேற்குநோக்கிச் செல்லும் ஆறு; இது இங்கே தபதி யென்றேனும், நருமதை யென்றேனுங் கொள்ளலாமென்பர்: மிகவும் ஆழமாகப் பள்ளம் தோண்டியதனால் அங்கு நதியில் நீர் போல ஊற்றுநீர் சுரந்துவருவதுபற்றி இவ்வாறு கூறிய தென்னலாம். நதியிடையே பள்ளம் வெட்டி விராதனைத் தள்ளியதாக முதனூலி லும் இல்லை. கதழ்வமென்பது-உக்கிரமுள்ளது என்ற காரணம்பற்றி அக்கினியைக் காட்டிற்று. [2] அதவமாய்என்ற பாடத்திற்கு - துடுப்பா யென்க: அதவம்-யாகாக்கினியில் நெய்யைச் சொரியுமாறு அத்திக் கட்டையாற் செய்த அகப்பை; அதவு-அத்தி: அம்-சாரியை. எம்பெரு மான் தானே யாகத்திற்குச் சாதனமாகிய பொருள்களின் வடிவாயு மிருத்தலால், இவ்வாறு கூறினா ரென்க. அமலன்-பிரகிருதிசம்பந்த மில்லாதவன். ஈற்றடியில் 'சேவடியினன்' என்று பாடமிருப்பின், நேராகவே பொருள் கூறலாம். பி-ம்:—[1] நளிர். (45)

## 46.—விராதன் சாபம்நீங்கி விண்ணில் தோன்றுதல்.

பட்ட தன்மையு முணர்ந்து படர்சாப [1]மிடமுன்
கட்ட வன்பிறவி தந்த கடையான வுடருன்
[2]விட்டு விண்ணிடை விளங்கினன் விரிஞ்ச னெனவோர்
முட்டை தந்ததனில் வந்தமுதன் முன்ன வனினே.

(இ - ள்.) (அவ்வரக்கன்), முன் படர் சாபம் இட - முன்னே (குபேரன்) பெரிய சாபத்தைக் கொடுத்ததனால் (வந்து), வல் பிறவி கட்டம் தந்த-வலிய பிறவித்துன்பங்களைக் கொடுத்த, கடை ஆன - இழிவாகிய, உடல் - அரக்கச்சரீரம், விட்டு - நீங்கப்பெற்று,—பட்ட தன்மைஉம் உணர்ந்து - முன்னே நடந்த தன்மையையும் அறிந்து, விண்ணிடை - ஆகாயத்தினிடத்தே,—ஓர் முட்டைதந்ததனில் - ஒப்

பற்ற அண்டத்தைப் படைத்ததில், விரிஞ்சன் என - விரிஞ்சனென்று ஒருபெயர் வழங்கும்படி (பிரமதேவனது உருவமாகி), வந்த-(படைக்குந் தொழிலைச் செய்யுமாறு) வந்த, முதல் முன்னவனின் - புராணபுருஷனாகிய பிரமன்போல,—விளங்கினன் - (முன்னுள்ள கந்தருவசரீரத்தோடு) விளங்கினான்; (எ-று.)

சாபம்நீங்கினவுடன் முற்பிறவியுணர்ச்சியோடு முன்னைய கந்தருவ சரீரத்தைப்பெற்றுப் பிரமதேவன்போல விளங்கினனென்க. பரம்பொருளாகிய திருமால் ஆதியில் நீரைப்படைத்து அந்நீரில் தன்னுடையசங்கற்பத்தால் அண்டத்தைப் படைத்து அதற்குள்ளே மற்றை ஸ்ருஷ்டிகளைச் செய்யுமாறு பிரமதேவனைப் படைத்து வைக்கின்றானென்பது, நூற்கொள்கை: "ஈச்வரன்... ஓரண்டமாக்கி அதுக்குள்ளே சதுர்முகனை ஸ்ருஷ்டித்தருளும்" என்று தத்வத்ரயத்தில் அருளிச்செய்திருத்தல் முதலியன காண்க. விரிஞ்சனெனவந்த என்க. விரிஞ்சன் - அன்னப்பறவையால் தாங்கப்பெறுபவனென்று அவயவப்பொருள் தரும் வடசொல். பிரமதேவன் பிதாமஹனென்றும் புராணபுருஷனென்றும் கூறப்படுவதனால், அவனை 'முதன் முன்னவன்' என்றார். பட்ட தன்மையுணர்தல்-பூர்வ ஜந்ம ஞானம்: உம்மை-எச்சப் பொருளது. படர் சாபமிட்ட வரலாறு மேலே காண்க. கட்டம்-கஷ்டம். பிறவித்துன்பங்களாவன-தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாம்; இவை, முறையே ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகமெனப்படும். பி-ம்:—[1]விட. [2]விட்ட. (46)

### 47.—விராதன் தத்துவஞானத்தால் ஸ்ரீராமனைப் புகழத் தொடங்குதல்.

பொறியி னொன்றி யயல்சென்று திரிபுந்தி [1]யுணரா
நெறியி னொன்றி நிலைநின்ற நினைவுண் டதனினும்
பிறிவி லன்புதனி பண்டுடைய பெற்றி தனினும்
அறிவு வந்துதவ நம்பனை யறிந்து பகர்வான்.

(இ-ள்.) (அவன்),—பொறியின் ஒன்றி - பஞ்சேந்திரியங்கட்குவசப்பட்டு, அயல் சென்று-விஷயார்த்தங்களிலேபோய், திரி - அலைகின்ற, புந்தி - புத்தியினால், உணரா - உணரமுடியாத, நெறியின்-நல்வழியிலே, ஒன்றி - பொருந்தி, நிலைநின்ற - நிலைபெற்றுநின்ற, நினைவு - எண்ணம், உண்டதனின்உம்-உண்டாகியதனாலும்,—பிறிவு இல் - நீங்குதலில்லாத, தனி - ஒப்பற்ற, அன்பு-பக்தியை, பண்டு-பழமையாய், உடைய - உடைத்தான, பெற்றிதனின்உம் - தன்மையினாலும்,—அறிவு - தத்துவஞானம், வந்து உதவ - வந்துகூட, (அதனால்), நம்பனை-இராமநம்பியை, அறிந்து - (ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அமிசமென்று) தெரிந்து, பகர்வான்-துதிப்பான்; (எ-று.)

விராதனுக்குத் தத்துவஞானந் தோன்றியதற்கு இரண்டு காரணங்கள் கூறுகிறார்: ஒன்று - பொறிகளின்வழியே புலன்களைச் செலுத்தாது நினைவு நன்னெறியிலே பொருந்தியதாக உண்டாகியது: மற்றொன்று - கடவுளினிடத்துப் பக்தியைப் பண்டுமுதலே

பெற்றிருந்தமை. "உன்னருளால் கொடுஞ்சாபத்தினின்று விடு பட்டேன்" என்ற இவ்வளவல்லது வேறே துதி கூறியதாக முத னூலிலில்லை: கம்பர் தமது மனக்கண்ணினால் சாபத்தினின்று விடு பட்ட அன்னான் துதித்திருப்பானென்று கொண்டு, இந்த வியாஜத் தில் ஸ்ரீராமனைப் பரம்பொருளாகக் கொண்டு துதிக்கின்றனர்: வேறும் துதிவருமிடங்களிலெல்லாம் இங்ஙனமே துதிகள் வந்தன என்றுகொள்க. பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி. அயல் - உரியவல்லாத புலம்: ஆகுபெயர். பி-ம்:—[1]உணரான். (47)

வேறு.

## 48.—இதுமுதற் பதினான்கு கவிகள் - விராதன் துதி.

வேதங்க ளறைகின்ற வுலகெங்கும் விரிந்தன [1]நின்
பாதங்க ளிவையென்னிற் படிவங்க ளெப்படியோ
ஓதங்கொள் கடலன்றி யொன்றினோ டொன்றொவ்வாப்
பூதங்க டொறுமுறைந்தா லவையுன்னைப் பொறுக்குமோ.

(இ - ள்.) வேதங்கள் - எல்லா வேதங்களாலும், அறைகின்ற - துதிக்கப்படுகின்ற, இவை - இந்த, நின் பாதங்கள் - உனது திருவடி களே, உலகு எங்கும் - உலகமுழுவதும், விரிந்தன என்னின் - பரந் தனவென்றால், படிவங்கள் - மற்றைத் திருவவயவங்கள், எப் படியோ - எத்தன்மையனவோ? ஓதம் கொள் - குளிர்ச்சியைக் கொண்ட, கடல் அன்றி - கடலில்மாத்திரமேயல்லாமல், ஒன்றினோடு ஒன்று ஒவ்வா - ஒன்றோடொன்று (தம்மில்) ஒத்திராத, பூதங்கள் தொறும் - மற்றைப் பூதங்களிலும், உறைந்தால் - (நீ) வாசஞ்செய் தால், அவை - அப் பூதங்கள், உன்னை—, பொறுக்குமோ - தாங்க வல்லனவோ? [தாங்கவல்லனவல்ல]; (எ - று.)

வேதங்களிற் கூறப்படுவதெல்லாம் எம்பெருமானது திருவடி களின் பெருமையே யாதலால், 'வேதங்களறைகின்ற' என்றான்: அறைகின்ற பாதங்க ளெனக் கூட்டுக. இனி, வேதங்கள் (சிலம்பு போல்) ஒலிக்கின்ற பாதங்களென்றுமாம். தனது அருகிலிருத் தல்பற்றி, 'இவை' என்று சுட்டினான். 'உலகெங்கும் விரிந்தன' என்றது, திரிவிக்கிரமாவதாரக்கதையையுட்கொண்டு. 'படிவங்க ளெப்படியோ' என்றது - உனது திருமேனி இத்தன்மைத்தென்று உத்தேசித்து அறிய முடியாதென்றபடி.

"தன் படிக்குக் காற்கூறும் போராதத்தையிறே அமுது செய் தது; திருவடிக்கு அளவான பூமியை அமுது செய்து" என்ற ஈட்டை யும் ஈண்டு ஒருசார் ஒப்பு நோக்குக. ஓதம் - வெள்ளமும் அலை யுமாம். பூதங்கள் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என் பன. நிலம் - நிலையாயிருத்தலும், கந்தமுடையதாதலும்; நீர் - பாய்ந் தோடுதலும், குளிர்ந்த பரிசமுடையதாதலும்; தீ - மேல்நோக்கி யெரிதலும், சுடும் பரிசமுடையதாதலும்; காற்று-பத்துத்திசைகளி லும் வீசுதலும், உருவமின்றிப் பரிசமுடையதாதலும்; விசும்பு - எங்கும்பரவியிருத்தலும், சப்தகுணமுடையதாதலுமாகிய தன்மை

வேறுபாடுகளைப்பற்றி, 'ஒன்றினொடொன்றொவ்வாப் பூதங்கள்' என்றது. "மாகடல் நீருள்ளான்" என்றவாறு பஞ்சபூதங்களுள் ஒன்றன் சொரூபமான கடலில் மாத்திரமேயன்றி, மற்றைப் பூதங்களிலும் நீ உறைந்தால், அவை உன்னைப் பொறுக்கவல்லன வல்ல என்றது, அவற்றையும் நீயே தாங்குகிறாயென்பது தோன்றற்கு. 'பூதம்' என்கிற சொல்லாற்றலால், விநோதமாகக் காட்டப்படுஞ் சடைப்பூதங்களினுட் புகுந்த மனிதனே அவற்றைத் தாங்கிச் செலுத்துதல்போல, ஐம்பெரும்பூதங்களினுள்ளுறைகின்ற நீயே அவற்றைத் தாங்குகிறாயென்பது தோன்றுமாறு காண்க. 'ஓதங்கொள் கடலன்றி' எனக் கடலிலுறைதலைத் தனியே எடுத்துக் கூறியது - திருப்பாற்கடலில் திருவநந்தாழ்வான்மேல் திருக்கண் வளர்தலும், பிரளயகாலத்துப் பெருங்கடலில் ஆலிலைமேற் பள்ளிகொண்டருளுதலுமாகிய விசேஷத்தன்மையை நோக்கி யென்றலும் உண்டு. 'வேதங்க ளறைகின்ற' என்றதனால் ஸகல வேதப் பிரதிபாத்யனாதலும், 'உலகெங்கும் விரிந்தன' என்றதனால் ஸர்வவியாபியாதலும், 'பாதங்களிவை' என்றதனால் பத்துடையடியவர்க் கெளியவனாதலும், 'படிவங்களெப்படியோ' என்றதனால் மனமொழிமெய்களுக்கு எட்டாதவனாதலும், 'ஓதங்கொள்கடலன்றி' என்றதனால் வியூகநிலைமையும், 'பூதங்கடொறுமுறைந்தால்' என்றதனால் ஸர்வாந்தர்யாமியாதலும், 'அவையுன்னைப் பொறுக்குமோ' என்றதனால் அனைத்துக்கும் ஆதாரமாதலும், ஸர்வ சக்தித்வமும் கூறப்பட்டன.

இங்குக்கூறிய பொருளில், படிவங்கள் என்பதற்கு - அவயவங்கள் என்ற பொருள் இலக்கணையாக அன்றி, நேரே இல்லாமையால், அங்ஙன் கூறாது, படிவங்கள் என்பதிலுள்ள 'கள்' என்பதை அசையாக்கி, படிவம் - திருமேனியென்று கூறுவதே பொருத்தமென்று கூறியுள்ளனர், இராமாயண சாரமுடையார். மற்றும், அறைகின்ற என்பதை முற்றாகவும் கொண்டுள்ளார். படிவம் என்பதற்கு உறுப்பு என்று நேரே பொருளில்லாவிட்டாலும், அவயவங்களின் வடிவங்கள் என்றே கூறின் இலக்கணைப் பொருள் கொள்ளவேண்டியதில்லை யென்றும், 'கள்' அசையாக்க வேண்டுவதில்லையென்றும் எமக்குத் தோன்றுகின்றது. 'அறைகின்ற' என்று சொன்னேக்கில் பெயரெச்சமாத் தோன்றுவதை முற்றாக்குதலும் வலிந்துகூறுதலாகத் தோன்றுகின்றது.

ஓகாரம் இரண்டனுள் முன்னையது - ஐயத்தின்பாற்படும்; பின்னையது - எதிர்மறை. தொறும் - எஞ்சாமைப் பொருளதாகிய ஏழாம் வேற்றுமைப்பொருளுணர நின்ற இடைச்சொல். பி - ம்:—[1]உன்.

இதுமுதற் பதினான்குகவிகள் - பெரும்பாலும் எல்லாச்சீர்களும் காய்ச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட தரவுக்கொச்சகங்கள்.

49. [1]கடுத்துநிமிர் கராங்கவ்வக் கையெடுத்து மெய்கலங்கி
உடுத்ததிசை யனைத்தினுஞ்சென் றொலிகொள்ள வுறுதுயரால்
அடுத்தபெருந் தனிமூலத் தரும்[2]பரமே பரமேயென்
றெடுத்தொருவா ரணமழைப்ப நீயோவந் தேனென்றாய்.

(இ - ள்.) ஒரு வாரணம் - ஒரு யானையானது [ஒப்பற்ற கஜேந்திராழ்வான்],—கடுத்து - கோபித்து, நிமிர் - (தன்னிலத்தி லிருத்தலால் வலிமைச் செருக்கினால்) நிமிர்ந்த, கராம் - முதலை யானது, கவ்வ - (தன்காலைக்) கவ்விக்கொள்ள, உறு துயரால் - அதனாலுண்டாகிய துன்பத்தினால், மெய் கலங்கி - உடல் கலக்க முற்று, கை - (தன்) துதிக்கையை, எடுத்து - உயரத் தூக்கிக் கொண்டு, உடுத்த திசை அனைத்தின்உம் - சூழ்ந்த திக்குக்க ளெல்லாவற்றிலும், ஒலி சென்று கொள்ள - ஒலி போய்ப்பரவும் படி,—'அடுத்த - (யாவர்க்கும் ரக்ஷகனைப்) பொருந்திய, பெரு - பெருமையையுடைய, தனி - ஒப்பில்லாத, மூலத்து - ஆதிகாரண மாகிய, அரு - அரிய, பரமே பரமே - பரம்பொருளே! பரம்பொருளே! என்று—, எடுத்து அழைப்ப - குரலெடுத்து அழைக்க, நீயோ - நீயன்றோ, வந்து - (அப்பொழுதே மடுக்கரைக்கு) ஓடிவந்து, ஏன் என்றாய்-ஏனென்று அங்கேஎழுந்தருளி அதனைக்காத்தாய்; (எ-று.)

ஒரு விலங்கினாலே மற்றொரு விலங்கினுக்கு வந்த நோவையும் பொறாமே அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்து உதவின பெரும்பண்பிலே ஈடுபட்டு இவ்வாறு கூறினான். முதலை சினந்தது தனக்கு இருப்பிடமாகிய மடுவை யானை வந்து கலக்கினதனாலென்க. கராம்-க்ராஹம். உறுதுயர் - ஆயிரமாண்டு முதலைவாயிலகப்பட்டு ஆஹாராதிகளில்லாமையாலான மிக்க துன்பம். இனி, தான் பறித்த பூவைச் செவ்வி வாடாமே கடவுளுக்குச் சமர்ப்பிக்காமையாலானது மாம். பரம்-எல்லாவற்றினுஞ் சிறந்த பொருள். பரமே பரமே - அன்பு மிகுதிபற்றிவந்த அடுக்கு. முற்பிறப்பிற செய்த பூஜாபலத்தினால் விஷ்ணுபக்தி மாறாதிருந்த மேன்மை பற்றி, 'ஒருவாரணம்' என்றார். நீயோ, ஓகாரம்-வினாவகையால் நிச்சயப்பொருளை உணர்த்திற்று.

வாரண மழைத்த வரலாறு:—பாண்டியநாட்டில் இந்திரத்யும்ந னென்று ஓரரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையனா யிருந்தான். அவன் ஒருநாள் விஷ்ணுபூஜை செய்கையில் அகஸ்தியமகாமுனி வன் அங்கு எழுந்தருள, அவற்கு அவன் உபசாரஞ் செய்யா திருக்க, முனிவன் கோபித்து 'நீ யானையாகக் கடவை' என்று சபித்தனன்; அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும், முன்செய்த விஷ்ணுபக்தியின் மகிமையால், அபபொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக் கொண்டு விஷ்ணுவை அருச்சித்துப் பூசைசெய்துவந்தான். அங் ஙனஞ் செய்யுநாட்களில் ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடா கத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறித்தற்குப் போய் இறங்கியபொழுது, அங்கே முன் நீர்நிலையில்நின்று தவஞ்செய்து கொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரியமுதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னுங் கந்தருவன் அவ்யானையின்காலைக் கவ்விக் கொள்ள, அதை விடுவித்துக்கொள்ள முடியாமற் கஜேந்திரன் ஆதி மூலமே யென்று கூவியழைக்க, உடனே திருமால் ஸ்ரீகருடவாக நாரூடனாய் அங்கெழுந்தருளித் தம் திருவாழியாழ்வானைப் பிரயோ கித்து, முதலையைத்துணித்து, அதன்வாயினின்றும் விடுவித்துக்

கஜேந்திரனால் மலர்கள் சமர்ப்பிக்கப்பெற்று மோக்ஷமளித்துப்போக, ஹூஹூவும் சாபவிமோசனமாகித் தன்னுலகம் சேர்ந்தனனென்பதாம். பி-ம்:—[1]கடுத்த கராங் கதுவஙிமிர். [2]பொருளே. (49)

50. புறங்[1]காண வகங்காணப் பொதுமுகத்தி னருணோக்கம்
இறங்காத தாமரைக்க ணெம்[2]பெருமாஅ னியம்புதியால்
அறங்காத்தற் குனக்கொருவ ராருமொரு துணையின்றிக்
கறங்காகு மெனத்திரிய நீயேயோ [3]கடவாய்தான்.

(இ - ள்.) புறம் காண-புறத்தவர் காணவும், அகம் காண - அகத்தவர்கள் காணவும், (இவ்விருதிறத்தவர்கள் பக்கலிலும்), பொது முகத்தின் - பக்ஷபாதமில்லாமல் [நடுவுநிலைமையாக], அருள் நோக்கம் இறங்காத - அருட்பார்வை நீங்காத, தாமரை கண் - செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய, எம்பெருமாஅன் - எங்கள் தலைவனே!— அறம் காத்தற்கு - தருமத்தைக் காப்பதற்கு, உனக்கு ஒருவர் ஆரும் ஒரு துணை இன்றி - உனக்குப் பிறரொருத்தரும் சிறிதுந் துணையில்லாமல், கறங்கு ஆகும் என - காற்றாடி போலுமென்னுமாறு, திரிய - அலைவதற்கு, நீயே ஓ - நீதானோ, கடவாய்-கடமையுடையவனாயிருக்கிறாய்? இயம்புதி - சொல்வாயாக;

அகத்தார்திறத்திலும் புறத்தார்திறத்திலும் பொதுவாக அருணோக்கங்கொண்டு அறத்தை நிலைநாட்ட யாரும் துணையாகுபவரில்லாமல் நீ தன்னந்தனியாய்த் திரிகின்றாயே! இது, உனக்குக் கடமையோ? இயம்புவாய் என்று எம்பெருமான் தருமத்தை நிலைநாட்டத் திருவவதரிப்பதில் ஈடுபட்டுக் கூறுகின்றார், கவிஞர் பெருமான் என்க. அகத்தவர் - பரமபதத்திலேயுள்ள நித்தியர்களும், முக்தர்களும். புறத்தவர் - மற்றையுலகங்களிலுள்ள பக்தர்கள். அருளாவது - தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கள் மேலுஞ் செல்வதாகிய கருணை. இனி, 'இறங்காத' என்பதனைச் சிலேடையாகக்கொண்டு, புறத்தவர்களாகிய தன்னடியரல்லாதாரைக் காணவும், அகத்தவர்களாகிய தன்னடியாரைக் காணவும் இவ்விருவர் திறத்தும் பொதுப்பட அருணோக்கமிறங்காத கண்கள் என உரைத்து, புறத்தவர்களிடத்தே அருணோக்கம் பொருந்தாத எனவும், அகத்தவர்களிடத்தே அருணோக்கம் நீங்காத எனவும் கருத்துக் கொள்ளினும் அமையும். அன்றியும், புறமாகிய ஊனக்கண்ணாற் காணவும், அகமாகிய ஞானக்கண்ணாற் காணவுமென்றுங் கொள்ளலாம். மலர்ச்சியும் குளிர்ச்சியும் கண்டோரை மகிழ்வித்தலும் பற்றிக் கண்களுக்குத் தாமரைமலர் உவமை. பி - ம்:—[1]காணாரகங்காணார் பொருண்முகத்தினருணோக்கி. [2]பெருமான். [3]கடவாயே. (50)

51. துறப்பதே தொழிலாகத் [1]தோன்றினோர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மையது வன்[2]றுகின் மற்றவர்போல்
[3]பிறப்பரோ வெவர்க்குந்தாம் பெற்றபதம் பெறலரிதோ
இறப்பதே பிறப்பதே யெனும்விளையாட் [4]டினிதுகந்தோய்.

(இ - ள்.) இறப்பது ஏ - இறத்தலும், பிறப்பது ஏ-பிறத்தலும், எனும் - என்கின்ற, விளையாட்டு - திருவிளையாட்டை, இனிது -

இனிமையாக, உகந்தோய் - திருவுள்ளமுவந்து செய்தருள்கின்ற வனே! எவர்க்குஉம் - யாவர்க்கும், தாம் பெற்ற பதம்-தாம் முன்னே யடைந்தநிலையை, பெறல் மீண்டும் அடைதல், அரிதுஓ-அரியதோ? (அன்று; ஆகவே), துறப்பதுஏ தொழில்ஆக தோன்றினோர் - துறத்தலையேதொழிலாகக்கொண்டு தோன்றியவர் [முற்றத்துறந்த முனிவர்கள்], தோன்றியக்கால் - (எக்காரணத்தாலேனும் வேறொரு பிறவியை யெடுத்துப்) பிறந்தால், தம்மை மறப்பர்ஓ - தமது முன்னைய நிலைமையை மறப்பார்களோ? [மறவார்]; அது அன்று ஆகில் - அதுவுமல்லாமல், மற்றவர்போல் பிறப்பர்ஓ-சாதாரணமான மற்றவர்களைப்போலவே (வேறுபாடில்லாமற்) பிறப்பார்களோ? [பிறவார்]; (எ - று.)

எப்படிப்பட்டவர்க்கும் தாம் பெற்ற பதவியைப் பெறுதல் அரிது அன்று: அங்ஙனாக, நீ உன்பதவியை விட்டிட்டாய்போல் காண்கின்றாயே, இது என்னமாயை! என்று வியந்தபடி. பரதராஜன் பெருந் துறவியாய்ச் சாளக்கிராமத்தில் மகாயோகியாகித் தவம் புரிகையில் தனது அந்திமகாலத்தில் மான்குட்டியினிடத்துப்பாசம் இருந்த தனால் மானாகப்பிறந்தும் முற்பிறவியின் நினைவைப் பெற்றிருந்து பின்னர் ஜடபரதனாகப்பிறந்தும் சென்ற பிறவியினுணர்ச்சியைப் பெற்றுத் தத்துவஞானமுடையவனாகி ஸௌவீரராஜனுக்குப் பரமார்த்ததத்துவங்களை உபதேசித்ததாகவருவது முதலிரண்டடி களை விளக்கக்கூடிய எடுத்துக்காட்டாம். அகர்மவசியனாய் அயர்வறும மரர்கள் முனிவர்க ளதிபதியாகிய நீ உன் பேரருளால் எல்லா ஆன் மாக்களையும் பாதுகாத்தலின்பொருட்டு இருவினைக்கு உட்பட்டோர் பிறக்குந் தண்ணிய பிறவிகளிலே பிறக்கும்பொழுது, அம்முனிவர் களைப்போல உன்தன்மை யழியாதபடி அதில் தோய்வின்றிக்கே வந்துபோகாமல், அடியறிவார், 'நீதான் ஸ்ரீமந்நாராயணன்' என்று உணர்த்தினாலும், 'எனக்கு அவை தெரியாது காண்; என்னை மனிதனாக நினைக்கிறேன்' என்று சூழ்த்துக்கொடுக்கும்படியே அதுக்கு அவ்வருகு அறியாதானாய்க் கொண்டு தன்நிலையை மறந்து, புரையற அவற்றோடு ஏகஜாதீய னென்னலாம்படி திருவ வதரிக்கிறாயென்று கூறியவாறு. இங்கே "உயிரளிப்பா, னெங்ஙின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்," "ஒருவரொருவன் புகாவா - றுருமாறு, மாயவர்" என்னும் பெரியார்பாசுரங்களின் விசேஷார்த்தங்கள் விசாரித்து அறியத்தகும். இனி, துறப்பதே தொழிலாகத் தோன்றிய முனிவர்கள் நீ தோன்றினால் உன்னைச் சரணமடைதலே யன்றி மறப்பார்களோ? அங்ஙனம் மறவாதிருத்தலின்மேலும் பரம பதத்தையடைதலேயன்றி மற்றவர்களைப்போல மீண்டும் இவ்வுலகிற் பிறப்பெடுப்பார்களோ? இங்ஙனம் பரமபதத்தையடைதல் அம் முனிவர்களுக்கு மாத்திரமேயன்றி நின்திருவடியடைந்த யாவர்க்கும் அரிதன்று என்று கருத்துப்படப் பொருள் கூறுவாருமுளர். தன் இச்சாமாத்திரத்தால்உண்டாதல் முதலிய செயல் எளிதாகஇருத்த லால், 'விளையாட்டு' என்றார். இறப்பதே, பிறப்பதே—ஏகாரங்கள் - எண்ணுப் பொருளன. பி - ம்:—[1]தொன்மையோர். [2]ஆகி. [3]பிறப்ப ரேலவர்க்கும். [4]உவந்தனையே.

52. பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் [1]புணைபற்றி
நனிநின்ற சமயத்தோ ரெல்லாரு நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின் றகைமூர்த்தி நீயாகின்
[2]இனிநின்ற முதற்றேவ ரென்கொண்டென் செய்வாரே.

(இ - ள்.) (உன்னை), பனி நின்ற - அச்சந் தரும்படி நின்ற, பிறவி பெருங்கடல் - பிறப்பாகிய பெரிய கடலை, கடக்கும் - நீந்தித் தாண்டுதற்கு உரிய, புணை பற்றி - புணையாகக் கொண்டு, நனி நின்ற சமயத்தோர் எல்லாஉம் - மிகுதியாய் நின்ற எல்லாச் சமயங்களிலுள்ளவர்களும், நன்று என்ன - (தத்தம் கடவுளைப்பற்றுதலைப் பற்றி) நல்லதென்று சொல்லாநிற்க, நீ—, தனி நின்ற - ஒப்பற்று நின்ற, தத்துவத்தின் தகை மூர்த்தி ஆகின் - (அப்பிறசமயத்தவரின் வழிபாட்டினையும் கொள்ளும்) பெரிய தத்துவசொரூபியானால், இனி - பின்பு, நின்ற முதல் தேவர் - (அவ்வச்சமயங்களுக்குத்) தலைவராய் நின்ற தேவர்கள், என் கொண்டு - என்ன பெருமையைக் கொண்டு, என்செய்வார் - என்ன காரியங்களைச் செய்வார்கள்! (எ-று.)

பலசமயத்தோரும் தத்தந் தெய்வமே நன்றென்று கொண்டு தந்தம் இஷ்டதெய்வங்களுக்குச்செய்யும் வழிபாடுகளை யெல்லாம் நீயே பெற்றுக்கொண்டு அவரவர்க்குத் தக்கபடி பயன்களை அளிக்கின்றாயாதலால் அவ்வத்தேவர்களால் யாதுபய னென்பதாம்; "நும்மின்கவிகொண்டு நுந்நுமிட்டா தெய்வமேத்திறைற், செம்மின் சுடர்முடியென் றிருமாலுக்குச்சேருமே", "யாங்கடவுளென் றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும், ஆங்கடவுணீயென்றா லஃதுனக்கு வியப்பாமோ" என்பன, இங்குக் கருதத்தக்கவை.

'பனிநின்ற' என்னும் அடையைக் கடலுக்குக் கூட்டும்போது, குளிர்ச்சிபொருந்திய வென்க. காரண காரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலால் 'பிறவிக்கடல்' என்றும், சகரர் கல்லின குழியை நீக்குதற்கு, 'பெருங்கடல்' என்றும் கூறினான். பெரும் பிறவிக்கடல் கடத்தல் - பிறவியறுதல். சமயம் - மதம், 'ஆகின்' என்னும் எதிர்கால வினையெச்சம், துணிபுப்பொருளை உணர்த்திற்று. பி-ம்:—[1]படி. [2]தனி. (52)

53. ஓயாத மலரயனே முதலாக வுளராகி
மாயாத வானவர்க்கு மற்றொழிந்த மன்னுயிர்க்கும்
நீ[1]யாகின் முதற்றாதை நெறிமுறையா லீன்றெடுத்த
தாயாவார் [2]யாவரே தருமத்தின் றனிமூர்த்தீ.

(இ - ள்.) தனி - ஒப்பில்லாத, தருமத்தின்மூர்த்தீ - தருமசொரூபியே! ஓயாத - (படைப்புத்தொழிலில்) ஒழிவில்லாத, மலர் அயனே - தாமரை மலரில் தோன்றிய பிரமதேவனே, முதல்ஆக- ஆதியாக, உளர்ஆகி - உள்ளவர்களாகி, மாயாத - அழியாத, வானவர்க்குஉம் - தேவர்களுக்கும், ஒழிந்த - (அத்தேவர்கள்) நீங்கலான, மற்று மன் உயிர்க்கும் - மற்றை நிலைபேறுடைய உயிர்களுக்கும், முதல் தாதை - முதலாகிய தந்தை, நீ ஆகின் - நீ யானால்,—நெறி

முறைபால் - உலகவழக்கத்தின்படி, ஈன்று எடுத்த - (அவர்களைப்) பெற்று வளர்த்த, தாயாவார் - (முதல்) தாயாகுபவர், யாவரே - (வேறு) எவரோ? (எ - று.)

பிதாமகனாகிய பிரமனையும் படைத்தவனாதலால், 'முதல் தாதை' என்றான். முதலென்பதனைத் தாயென்பதனோடுங் கூட்டுக. 'தாயாவார் யாவரே' என்றது - ஒருவருமில்லை: நீயே யென்றபடி; மேல் "உலகின்றாய்" என்பதுங் காண்க. இதனால், வேறு துணையில்லாமலே சராசரங்களனைத்தையும் படைத்துக்காக்கின்ற அகடிதகடநாசாமர்த்தியம் கூறப்பட்டது. இனி, நின்தேவியாகிய திருமகளே லோகமாதாவென்றும் கருத்துக் கொள்ளலாம். கற்பங்கள் தோறும் ஒவ்வொரு பிரமனாதலால்,பிரமதேவர் அனேகரென்பது பற்றி, 'ஓயாத மலரயன்' என்றானுமாம். திருமாலினது திருவுந்திக் கமலமலரில் தோன்றியவனாதலால், 'மலரயன்' என்றான். 'அயனே முதலா' என்றதனால், அவனே முதலிலுண்டானவனென்பதும், மற்றெல்லாவுயிர்களுக்கும் அவனே காரணனென்பதும் கூறப் பட்டன. அமரராதலால், 'மாயாத வானவர்' எனப்பட்டனர்; உடம் பழியினும் உயிர் அழியாது வேறு உடம்பு பெற்றுநிற்கு மாதலால், 'மன்னுயிர்' எனப்பட்டது. பி- ம்:—[1] ஆதி. [2] யாவரோ. (53)

54. நீ[1]யாதி பரம்பரமு நின்னவே யுலகங்கள்
ஆயாத சமயமுநின் [2]னடியவே யயலில்லை
தீயாரி னொளித்தியால் வெளிநின்றாற் றீங்குண்டோ
வீயாத பெரு[3]மாயை விளையாட்டும் வேண்டுமோ.

(இ-ள்.) ஆதி பரம்பரம்உம்-முதன்மையாகிய மேலான கடவுளும், நீ-நீயே; உலகங்கள்-எல்லாவுலகங்களும், நின்ன ஏ - உனக்குக் கீழ்ப் பட்டவையே; ஆயாத சமயம்உம் - ஆராய்ந்தறிதற்கு அரிய எல்லா மதங்களும், நின் அடியஏ-உன்னைக்காரணமாப்பற்றியவையே; அயல் இல்லை-வேறு இல்லை; (அங்ஙனமிருக்கவும்), தீயாரின் ஒளித்தி - வஞ்சகர்களைப்போல ஒளிக்கின்றாய்; வெளி நின்றால் - (அங்ஙனம் ஒளியாது) வெளிப்பட்டு நின்றால், தீங்கு உண்டு ஓ-(உனக்குத்) தீமை உண்டோ? வீயாத-அழியாத, பெருமாயை விளையாட்டுஉம் - பெரிய மாயையாகிய விளையாட்டும், (உனக்கு), வேண்டுமோ—? (எ - று.)

பராத்பரமென்றது, பரம்பரமென வந்தது; சிறந்ததினுஞ் சிறந்த தென்பது பொருள். நின்னஏ-உன் சுவரூபமானவையே யென்றுமாம். வானத்தினின்றும் பெய்கின்ற மழைநீரெல்லாம் கடலையே கலக்குமாறுபோல, எத்தேவர்களைக் குறித்துச் செய்கின்ற வந்தனை வழிபாடுகளும் சருவேசுவரனையே சேருமாதலால், 'ஆயாதசமயமு நின்னடியவே' என்றான். "நெஞ்சிற் கரவுடையார் தம்மைக் கரப்பர்" என்றபடி 'தீயோரே தம்மைக் கரக்க வேண்டியவர்: ஒளித்திருக்க வேணுமென்பதற்கு உனக்குயாதொரு காரணமும் இல்லை: அவ்வாறு இருந்தும் உன்னை வெளிக்காட்டாது ஒளித்திருக்கும் இந்த மாய விளையாட்டு எற்றுக்கு?' என்று வினவும் முகத்தால் ஈசுவரனது மாயையின் மகிமை கூறப்பட்டது. 'தீயாரின்' என்னும் உபமானத்தில், பழிப்பினால் புகழ்ச்சிதோன்றுமாறு காண்க. இனி, தீயவர்க்கு

ஒளிக்கிறாயெனவுமாம். பி - ம்:—[1] ஆதிப்பரப்பிரமம். [2] அடியனவே. [3] மாயவிளையாட்டும். (54)

55. தாய்தன்னை யறியாத கன்றில்லை தன்கன்றை
ஆயு [1] மறியு முலகின்றா யாகின்ய
நீயறிதி யெப்பொருளு மவையுன்னை நிலையறியா
மாயையிது வென்கொலோ வாராதே வரவல்லாய்.

(இ-ள்.) ஐய-தலைவனே! வாராதே வர வல்லாய் - (அடியவர்க்கு) வருதற்கரியாரைப்போல இருந்தே அறஎளிமையாய் வரத்தக்க வல்லமையுடையோனே! (உலகத்தில்), தாய் தன்னை அறியாத கன்று இல்லை - (தன்னைப்பெற்ற) தாயைத் தெரிந்துகொள்ளாத கன்றுகளில்லை; (அவ்வாறே), தன் கன்றை ஆய்உம் அறியும் - தன் கன்றுகளைத் தாயகளும் அறிந்துகொள்ளும்; (அங்ஙனமிருக்க), உலகின் தாய் ஆகின் - (நீ) எவ்வுலகத்திற்குந் தாயானால், நீ எ பொருள்உம் அறிதி - நீ எல்லாப்பொருள்களையும் அறிகிறாய்; அவை உன்னை நிலை அறியா - அப்பொருள்களெல்லாம் உன்னை இத்தன்மையதான நிலையுடையவனென்று அறியமாட்டா; மாயை இது-இம்மாயை, என்கொல்-யாதோ? (எ - று.)

தாயும் கன்றையறியவேணும்; கன்றும் தாயை யறியவேணும்: இவ்வாறிருக்க, தாயாகிய நீமாத்திரம் எல்லாவுலகத்து உயிர்களையும் அறிந்திருக்க, கன்றாகிய உலகத்துயிர்கள் உன்னையறியாமலிருப்பது என்னவியப்போ? என்பது கருத்து. "பல்லாவுளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக்கோடலை" என்றார் நாலடியாரிலும். எவனொருவன் கடவுளின் தன்மை நம்மாலறியமுடியாததென நினைக்கின்றானோ அவனால்தான் நீ நன்கறியப்பட்டவனாவா யென்பது'வாரா தேவரவல்லாய்' என்பதற்குக் கருத்து: கடவுளின் தன்மை மனோ வாக்குக்களுக்கு எட்டாததாதலால், அவனை அவ்வாறு உணர்ந்தவனே உண்மையுணர்ந்தவனென்க: "வந்தாய்போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே" என்றார் பெரியாரும். இனி, இந்தப் பிரகிருதியிற் சம்பந்தப்படாமலே இதனுட்புகுந்து நடக்கவல்லா யென்றும், ஊனக் கண்ணுக்கு வந்துதோன்றாமலே ஞானக்கண்ணுக்குவந்து தோன்ற வல்லா யென்றும், பரமபதத்தினின்றும் நீங்காமலிருந்தே இங்கே திருவவதரிக்கவல்லா யென்றும், கர்மவசியமாய்ப் பிறக்கும் பிறவி போலாகாமே அருள்பற்றியுளதாகின்ற இச்சாமாத்திரத்தால் அவதரிக்கவல்லா யென்றும் பொருள் கொள்ளலாம். பி-ம்:—[1] அறிவுறு மவ்வுலகின்றாய். (55)

56. பன்னலா மென்றுலகம் பலபலவு [1] நினையுமால்
[2] உன்னலாற் பெருந்தெய்வ முயர்ந்துளோ ரொழுக்கன்றே
அன்னவூர் தியைமுதலா மந்தணர்மாட் டருந்தெய்வம்
நின்னலா வில்லாமை நெறிநின்றார் நினையாரோ.

(இ - ள்.) உலகம் - உலகத்திலுள்ள சாதாரண ஜனங்கள், பன்னல்ஆம் என்று - துதிக்கலாமென்று, பல பலஉம் - பலபல தெய்வங்களையும், நினையும்-நினைப்பார்; (என்றாலும்), உன் அலால்-

உன்னை யல்லாமல், பெருந் தெய்வம் - வேறு சிறந்த தெய்வம் (உண்டென்னுதல்), உயர்ந்துளோர் ஒழுக்கு அன்றே - உயர்ந்தோர்களது ஒழுக்கமன்று: நெறி நின்றார் - நல்லொழுக்கத்தில் நின்ற அப்பெரியோர்கள், அன்னம் ஊர்தியை முதல்ஆம் - அன்னப் பறவையை வாகனமாகவுடையவனை பிரமன் முதலாகிய, அந்தணர் மாட்டு - அந்தணர்களால் ஆராதிக்கத்தக்க, அருந் தெய்வம் - அரிய கடவுள், நின் அலால் இல்லாமை - உன்னையன்றி வேறில்லாமையை, நினையார்ஓ - ஆராய்ந்து அறியமாட்டார்களோ? (எ - று.)

"தெய்வம்பல வவர்நூலும்பல வவைதேர்பொழுதில், பொய்வம்பலவென்றுதோன்றும் புல்லோர்கட்குப் போத நல்லோர், உய்வம் பலனுமவனே யென்றோதி யுணர்வர் நெஞ்சே, கொய்வம் பலர் சொரியுஞ் சோலைமாமலைக் கொண்டலையே" என்ற செய்யுளும் இக்கருத்துக் கொண்டதே. 'உண்டென்னுதல்' என்பது, சொல்லெச்சம். இனி, உன்னையல்லாமல் வேறு பெருந்தெய்வத்தைத் தேர்ந்தறியலா மென்று உலகம் [சாதாரண ஜநங்கள்] பலவற்றையும் நினைக்கும்: அது உயர்ந்துள்ளோ ரொழுக்கன் றெனவுமாம். இதனால், பிரமன் முதலிய தேவர்க்குந் தேவனுந் தன்மை கூறப்பட்டது.உயர்ந்துளோர், நெறிநின்றார் - தத்துவஞானிகள். அந்தணர் - அழகிய தட்பத்தினை [அருளினை] யுடையார்; அன்றிக்கே, அந்தத்தை அணவுவோ ரென வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவருமாம். பி - ம்:—[1]நினையலுமற்று, நினையலுமாறு [2]உன்னலாம். (56)

57. பொருவரிய சமயங்கள் [1]புகல்கின்ற புத்தேளிர்
[2]இருவினையு முடையார்போ [3]லிருந்தவநின் றியற்றுவார்
திருவுறையு மணிமார்ப நினக்கென்னை செயற்பால
ஒருவினையு மில்லார்போ லுறங்குதியா லுறங்காதாய்.

(இ - ள்.) திரு உறையும் அணி மார்ப - திருமகள் வீற்றிருக்கின்ற அழகிய மார்பினையுடையவனே! உறங்காதாய் - தூங்காதவனே!—பொருவு அரிய - ஒப்பு இல்லாத, சமயங்கள் - பலமதங்களிலுள்ளவர்களும், புகல்கின்ற - (தம்தம் தெய்வமென்று சிறப்பித்துச்) சொல்லுகின்ற, புத்தேளிர் - தேவர்கள், இரு வினை உம் உடையார் போல் - (நல்வினை தீவினையென்னும்) இரண்டு வினைகளையு முடையவர்களைப்போல, இருந் தவம் - பெரியதவத்தை, நின்று இயற்றுவார் - செய்துநிற்பார்கள்; நினக்கு-உனக்கு, செயல்பால - செய்யத்தக்க வினைகள், என்னை - என்ன இருக்கின்றன? [ஒன்றுமில்லை]: (ஆகையால்), ஒருவினை உம் இல்லார்போல் - வினையொன்றும் இல்லாதவர்களைப்போல, உறங்குதி-நித்திரை செய்தருளுகிறாய்; (எ-று.)

சிவபெருமான் கல்லாலின்கீழ் யோகநிலையுடனிருத்தலாலும், பிரமதேவன் பதுமாசனத்திலமர்ந்திருத்தல் இடைவிடாது வேத மந்திரங்களை யோதுதல் முதலியன செய்தலாலும், புத்தாதிகளும் யோகநிலையிலிருத்தலாலும், "சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர் இருவினையுமுடையார்போ லிருந்தவ நின்றியற்றுவார்' என்றது: உனக்கோ கருமத்திற்குக் கட்டுப்பட்டுச் செய்யவேண்டிய செயல்

யாதுமில்லை யென்பது தோன்றுமாறு உறங்குகின்றாய் என்கின்றான்.

'உறங்காதாய்' என்றதற்கு - மற்றவர்களைப்போலத் தூங்காமல் யோகநித்திரை செய்தருளுகின்றவனே யென்றும், அழிவில்லாதவனேயென்றுங் கருத்துக்கொள்க. 'ஒருவினையு மில்லார்போலுறங்குதி' என்றதனால், படைத்தல்முதலிய தொழிலெல்லாம் உன்னுடையனவே யென்பது குறிப்பிக்கப்பட்டது. திருமால் இவ்வுலகத்தைக் காத்தற்பொருட்டே யோகநித்திரை செய்கின்றன னாதலால், 'ஒருவினையு மில்லார்போலுறங்குதியாலுறங்காதாய்' என்றான்; "உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை" என்றார், ஆழ்வாரும். சமயம் - ஆகுபெயர். தீவினையைப்போல நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலான், 'இருவினையுமுடையார்போல்' என்றான். இந் நல்வினை தீவினையிரண்டும், ஒருவனுக்குத் தத்துவ ஞானத்தைத் தடுத்துப் பந்த முறுத்துதற்கண், பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவாமென்க; "இருள்சேரிருவினையுஞ் சேரா" என்றார், நாயனாரும். உம்மை-முற்றும்மை. 'போல்' இரண்டும்-ஒப்பில்போலி. மணி மார்ப என்றும் பிரிக்கலாம்: இனி, திருவும், கௌஸ்துபமணியும் பொருந்திய மார்பினையுடையா யென்றுமாம். பி - ம்:—[1] அறைகின்ற. [2] அரு. [3] அருந்தவம். (57)

58. அரவாகிச் சுமத்தியா [1]லணியெயிற்றி னேந்துதியால்
[2]ஒருவாயின் விழுங்குதியா லோரடியா லொளித்தியால்
திருவான [3]நிலமகளை யிஃதறிந்தாற் சீறுளோ
மருவாருந் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவாள்.

(இ - ள்.) திரு ஆன நிலமகளை - அழகான பூமிப்பிராட்டியை, அரவு ஆகி-ஆதிசேஷனது உருவமாகி, சுமத்தி - தாங்கியருளுகின்றாய்; அணி எயிற்றின்-அழகிய கோட்டினால், ஏந்துதி - (ஸ்ரீவராகாவதாரமாய்) எடுத்தருளுகின்றாய், ஒரு வாயின் விழுங்குதி - (பிரளய காலத்திலே)ஒருவாயில் விழுங்கியருளுகிறாய்; ஓர் அடியால் ஒளித்தி-(திரிவிக்கிரமாவதாரத்தில்) ஒரு திருவடியால் அளந்து மறைத்தருளுகின்றாய்; இஃது-இங்ஙனம் அவளிடத்தே அன்பு கொண்டு உதவுதலை, அறிந்தால-தெரிந்தால், மரு ஆரும் - வாசனை வீசுகின்ற, துழாய் அலங்கல்-திருத்துழாய் மாலையையுடைய, மணி மார்பின் - அழகிய திருமார்பில், வைகுவாள் - தங்குகின்ற பெரிய பிராட்டி, சீறுளோ - ஊடல்கொள்ளாளோ? (எ-று.)

அரவாகிச் சுமத்தலை ஸ்ரீபகவத்கீதையிற் கண்ணன் "நாகங்களில் அநந்தனாகின்றேன் யானே" எனக் கூறியவாற்றானு முணர்க. மரு வாரும் - தேனொழுகுகின்ற என்றுமாம். "பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட, பேராளன்" என்றார் பெரியாரும். துழாய் = துளஸீ. உலகத்தில் தன் கணவன் சக்களத்தியான மாதினிடத்து அன்புகாட்டினால் சீறும் வழக்கம் பற்றி "அரவாகிச்சுமத்தியால்...நிலமகளை இஃதறிந்தால் சீறுளோ...மார்பினவைகுவாள்" என்றான்: அங்ஙன சீறவொட்டாது தேவிமார் பலரைக் கொண்டிருத்தலும் உனது பெருந்திறனைக் காட்டும் எனக்

கூறியதாக் கொள்ளலாம். பி - ம் :—[1]அயில். [2]ஒருவாமல். [3]நில மதனையது. (58)

59. மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தா னுகாதோ வுனக்கென்ன குறையுண்டோ
வையத்தார் [1]வானத்தார் மழுவாளிக் கன்றளித்த
ஐயத்தாற் சிறிதையந் [2]தவிர்ந்தாரு முளரையா.

(இ - ள்.) ஐயா - தலைவனே! நீ விதித்த மன் உயிர்கள் - நீ உண்டாக்கி நியமித்த நிலைபொருந்திய உயிர்கள், மெய்மை - (நீயே பரதத்துவமென்னும்) உண்மையை, சிறிது உணர்ந்து - கிஞ்சித்து அறிந்து, உய்ய ஆகாதுஓ-உஜ்ஜீவித்தாலாகாதோ? மழுவாளிக்கு - பரமசிவனுக்கு, அனறு - அக்காலத்தில் [பிரமகபாலத்தைக் கையி லேந்திப் பிட்சாடனஞ்செய்தபொழுது], அளித்த - (அக்கபாலம் நிறைந்து கையைவிட்டு நீங்கும்படி நீ) இட்டருளிய, ஐயத்தால் - பிச்சையினுல், சிறிது ஐயம் தவிர்ந்தார்உம் - சிறிது சந்தேகம் நீங்கி னவர்களும், வையத்தார் - நிலவுலகத்தவருள்ளும், வானத்தார் - வானுலகத்தவருள்ளும், உளர் - உண்டு; (எ - று.)

"பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும், நாயகன வனே கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்றது, இங்கே காணத்தக்கது. மழு ஆளி-மழுவை ஆளுதலுடையவன்; அன்றிக்கே, மழு வாளி - மழுவாகிய ஆயுதத்தை யுடையவன்: மழு - எரியிரும் பாயுதம். ஐயமாவது - பலதலையாய உணர்வு; இங்கே யாரோ பரதத் துவ மென்பது. தான் - அசை.

மழுவாளிக்கு ஐயமளித்த கதை:—பரமசிவன், தன்னைப் போலவே பிரமனும் ஐந்துசிரமுடையனுயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்ற தெனக் கருதி அவனது சிரங்களி லொன்றைக் கிள்ளிவிட, அக்கபாலம் அப்படியே அவன்கையி லொட்டிக் கொள்ளுதலும், இதற்கென்செய்வதென்று அலமர, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்கு இக்கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையை விட்டகலும்' என்று உரைக்க, அங்ஙனமே சிவபிரான் பல காலம் பல தலங்களினுஞ்சென்று பிச்சை யேற்றுக்கொண்டு வருந் தித்திரிந்தும் அக்கபாலம் நிறைந்து நீங்காதாக, ஒருநாள் ஸ்ரீமகா விஷ்ணுவை அடைந்து ஏற்றபோது, அவர் 'அட்சயம்' என்று பிச்சையிட, உடனே அதுநிறைந்து கையைவிட்டகன்றது என்ப தாம். பி-ம்:—[1]வானகத்தார். [2]தெளிந்தாரும். (59)

60. அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ யவையுன்னை
முன்னமா ரோதுவித்தா ரெல்லாரு [1]முடிந்தாரோ
பின்னமா யொன்றுதல் [2]பிரிந்தேயோ பிரியாதோ
என்னமா மாயமிவை யேனமாய் மண்ணிடந்தாய்.

(இ-ள்.) ஏனம் ஆய் மண் இடந்தாய் - வராகரூபியாய்ப் பூமி யைக் கோட்டாற்குத்தி யெடுத்தருளியவனே! நீ—, அன்னம் ஆய் - ஹம்ஸசொரூபியாய், அரு மறைகள் - அறிதற்கரிய வேதங்

களை, அறைந்தாய் - (பிரமதேவனுக்கு) உபதேசித்தாய்; அவை - அவற்றை, முன்னம் - முன்னே, உன்னை ஓதுவித்தார் - உனக்குக் கற்பித்தவர், ஆர்-யாவர்? எல்லாரும் - (அவர்கள்) அனைவரும், முடிந்தாரோ - (இப்பொழுது) அழிந்துபோனார்களோ? (பரமாத்மாவாகிய நீ), பின்னம் ஆய் ஒன்று ஆதல் - (சேதநாசேதநங்களினின்றும்) வேறாகியும் ஒன்றாகியு மிருத்தல், பிரிந்துஏஓ - (அவற்றைப்) பிரிந்து நின்றோ? பிரியாதோ-பிரியாமலிருந்தோ? இவை - (வேறும் ஒன்றுமாயிருக்கிற) இத்தன்மைகள், என்ன மா மாயம் - என்ன பெரிய மாயை? (எ-று.)

பிரமனுக்கு வேதங்களை முதலில் ஹம்ஸரூபியாயிருந்து உபதேசித்தருளினதனால், 'அன்னமா யருமறைக ளறைந்தாய்' என்றான்; ஒருவன் ஒன்றை ஒருத்தற்குத் திறம்படக் கற்பித்தால் 'இதனை அவனுக்குக் கற்பித்தார் யார்?' என்ற கேள்வி பிறத்தல் இயற்கையாதலால், 'அவையுனனை முன்னமாரோதுவித்தார்' என்றது. இவ் வினாவுக்கு விடையிறுக்க முடியாமையால், 'எல்லாரும் முடிந்தாரோ?' என்கின்றான்; இதனால், ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனென்றவாறு. திருமால் தனக்குச் சேதநாசேதநங்களையெல்லாம் சரீரமாகக் கொண்டுள்ளானாதலால், சரீரசரீரிகளைப் பேதமாகவும் அபேதமாகவும் கூறும் மரபின்படியே இச்சேதநாசேதநங்களினின்று வேறுபடுத்தியும், ஒன்றாக்கியும் கூறப்படுவன் என்று பின்னிரண்டடிகளிற் கூறிய இதனால், விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தை வெளியிட்டபடி. ஆயென்பது - ஈண்டு இன்மைகுறித்து நின்றது.

ஏனமாய் மண்ணிடந்த கதை:—முன் ஒரு காலத்திற் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கடலில ழுமழ்கிப்போன இரணியாக்கனை, திருமால், வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று, பூமியைக் கோட்டாற் குத்தி யெடுத்துக் கொண்டுவந்து விரித்தருளின னென்பதாம்.
பி - ம:—[1]முடிந்தாரே. [2]பிறிந்தாயோபிறியாயோ. (60)

61. ஒப்பிறையும் [1]பெறலரிய [2]வொருவாமுன் னுவந்துறையும்
அப்[3]புறையு டுறந்தடியே னருந்தவத்தா [4]லணுகுறலால்
இப்பிறவிக் கடல்கடந்தே னினிபபிறவே னிருவினையும்
[5]துப்புறழு நீர்த்தசுடர்த் திருவடியாற் றுடைத்தாய்நீ.

(இ - ள்.) இறைஉம் ஒப்பு பெறல் அரிய - சிறிதும் உவமை பெறுவதற்கரிய [ஒப்பில்லாத], ஒருவா - தனிநாயகனே!—நீ —, முன்-முன்னே, உவந்து - (திருவுள்ளம்) உகந்து, உறையும் - பள்ளிகொள்கின்ற, அப்பு உறையுள் - திருப்பாற்கடலாகிய இருப்பிடத்தை, துறந்து - விட்டு, அடியேன் அருந் தவத்தால் - அடியவனாகிய எனது (முன்னேசெய்த) அரிய தவத்தினால், அணுகுறலால்-(இங்கே) எழுந்தருளியதனால்,—இ பிறவி கடல் - இந்தப் பிறப்பாகிற கடலை, கடந்தேன் - தாண்டினேன்; இனி பிறவேன-இனிமேல் (யான்) பிறப்பேனல்லேன்; இரு வினைஉம் - (இப்பிறவிக்குக்காரணமாகிய எனது) இரண்டுவினைகளையும், துப்பு உறழும் நீர்த்த - பவழம்போன்ற [சிவந்த] திருநிறத்தையுடைய, சுடர் - ஒளியினையுடைய, திரு அடியால்-(உன்) திருவடிகளால், துடைத்தாய்-போக்கியருளினாய்; (எ-று.)

ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தோள்மேல் தாங்கித் தூக்கிக்கொண்டு போனபொழுதும், ஸ்ரீராமன காலாலுதைத்துப் பள்ளத்தில் தள்ளிய பொழுதும் திருவடிகள் தன்மேறபட்ட பாக்கியத்தை வியந்து, 'திருவடியால் துடைத்தாய்' என்றான். பேராத பவப் பிணியையும் பேர்த்த எளிமையினை நோக்கி, 'துடைத்தாய்' என்றான். ஒப்பில்லாமை கூறியதனால், உயர்வில்லாமை தானே பெறப்படும். "பனிக்கடலிற் பள்ளிகோளைப்பழகவிட்டுடோடிவந்தென், மனக் கடலில் வாழவல்ல மாயமணாளநம்பீ", "பறவையேறுபரம் புருடா நீ யென்னைக் கைக்கொண்டபின், பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்ற பெரியாரருளிச்செயலை அடியொற்றியது, இச்செய்யுள். அப்பு - கடலுக்கு ஆகுபெயர். துப்புறழும் நீர்த்த - தூய்மைபொருந்திய தன்மையையுடைய என்றுமாம். திருமால் திருவவதரிப்பது நம்மை ஈடேற்றுதலின் பொருட்டே என்று கருதுவது பெரியோரியல்பு என்ற பொருள், இங்கு வெளியாதல் காண்க. 'ஒப்பிறையும் பெறலரிய ஒருவா' என்றவிடத்து— "ஒருவகையொப்பின்றிக்கேயிருக்கிறது பரத்வத்திலல்ல: ஆத்மாநம் மாநுஷம் மந்யே என்கிறபடியே, அவதரித்து மனிச்சு ஏறிட்டுக் கொண்டு நிற்கிற நிலையிலே" என்ற ஆளவந்தார்மகனார் சொட்டை நம்பிகள் வாக்குக் காணத்தக்கது. பி - ம் :—[1]பிறிதறியாய். [2]ஒருவினை. [3]பொறையும். [4]அணுகுதலால். [5]துப்பறநீத்தனைய. (61)

வேறு.

## 62.—'உன்சரிதஞ்சொல்' என்று இராமன் விராதனை வினவுதல்

இற்றெ லாமி யம்பினான், நிற்ற லோடு நீயிவ்வா
றுற்ற வாறு ணர்த்தெனா, வெற்றி யான்வி ளம்பினான்.

(இ - ள்.) (அத்தேவசரீரங்கொண்ட விராதன்),— இற்று எலாம் - இத்தன்மையவெல்லாவற்றையும், இயம்பினான நிற்றலோடும் - சொல்லித்துதித்து நின்றவளவில, வெற்றியான் - வெற்றியையுடைய ஸ்ரீராமன, (அவனை நோக்கி), 'நீ இ ஆறு உற்ற ஆறு-நீ இங்ஙனம் பொருந்திய வரலாற்றை, உணர்த்து - தெரியச்சொல்வாய்,' எனா - என்று வினவ, விளம்பினான் - சொல்லலானான்: (எ-று.)

இற்றெலாம் - ஒருமைப்பன்மைமயக்கம். வெற்றி - விராதன் வதை.

இதுமுதற் பன்னிரண்டுகவிகள் - பெரும்பாலும் முதலிரண்டு சீர்கள் மாச்சீர்களும், மற்றையதொன்று விளச்சீருமாகிய சிந்தடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்தங்கள்: குறளடியான் வந்தனவாக அலகிடினுமாம். (62)

## 63.— விராதன் தன் வரலாறு கூறத்தொடங்கல்.

கள்ள மாய வாழ்வெலாம், விள்ள ஞானம் வீசுதாள்
வள்ளல் வாழி கேளெனா, உள்ள வாறு ணர்த்தினான்.

(இ - ள்.) (அதற்கு விராதன்), 'கள்ளம் ஆய - பொய்யாகிய, வாழ்வு எலாம் - (இவ்வுலக) வாழ்க்கைகளெல்லாம், விள்ள - நீங்கும் படி, ஞானம் - தத்துவஞானத்தை, வீசு - உண்டாக்குகின்ற, தாள்- திருவடிகளையுடைய, வள்ளல் - வரையாது கொடுப்பவனே!—வாழி - வாழ்வாயாக; கேள் - (இதனைக்) கேள்,' என - என்று, உள்ள ஆறு- நடந்த வரலாற்றை, உணர்த்தினன் - தெரிவித்தான் ; (எ-று.)— அது மேல் ஏழுகவிகளிற் கூறுகின்றார்.

இனி, 'கள்ளமாயவாழ்வு' என்பதற்கு - குற்றம் பொருந்திய சாபத்தால் வந்த ராக்ஷஸசரீரமென்றும் உரைக்கலாம். இராம பிரானது திருவடிகள் பட்டதும் தனது வஞ்சகம் நிரம்பிய மாய வாழ்க்கை நீங்கி ஞானம் பெற்றதனால் 'கள்ளமாய வாழ்வெலாம் விள்ளஞானம் வீசுதாள் வள்ளல்' என்கிறான். வீசுதல் - ஈதல். தன்சாபத்தைப்போக்கி அறியாமையை நீக்கி ஞானத்தையுண் டாக்கிய உபகாரத்தை நோக்கி, 'வள்ளல் வாழி' என்கிறான். (63)

## 64.—ஏழுகவிகள்-விராதன் தன்வரலாறு கூறுதலைத் தெரிவிக்கும்.

ஆட ரம்பை நீ[1]டரங்கு, ஊடு நின்று பாடலால்
[2]ஊடல் வந்து கூட[3]விக், கூடு வந்து கூடினேன்.

எட்டுக் கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஆடு அரம்பை - நர்த்தனஞ் செய்கின்ற ரம்பை யென்னுந்தெய்வப்பெண், நீடு அரங்கு ஊடு - பெரிய நடனசபையில், நின்று - வந்து நின்று, பாடலால் - பாடுதலினாலே, (அப்பொழுது அவளிடத்தே, யான் வேட்கையுற்று), ஊடல் வந்து கூட - ஊடுத லுண்டாகி (அவளோடு) புணர்ந்ததனால், இ கூடு வந்துகூடினேன்- இவ்விராக்கத சரீரத்திலே வந்து சேர்ந்தேன் ; (எ-று.)

அரம்பையினிடம் நான் காதல்கொண்டு அவளைக்கூடி, அக் காதல் மோகத்தில், தலைவனான குபேரனை அலட்சியஞ்செய்ததால் அவன் சபிக்க, இந்த அரக்கப் பிறவியில் தோன்றினேன் என்று கூறியதாகக் கருத்தை விரிக்க. ஜயனென்பானுக்கும் சதஹ்ரதை யென்பாளுக்கும் புத்திரனாய்த் தோன்றினன் விராதன் என்பதை யும் முதனூலா லறிக. 'ஆடரம்பை பாடலால்' என்றதனால், ஆட்டத்தோடே கூடிய பாட்டைப் பாடினா ளென்க. ஊடலாற் கூடலின்பஞ் சிறத்தலால், 'ஊடல்வந்துகூட' என்றான்; "ஊடுதல் காமத்திற்கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்" என்றார், நாயனாரும். கூடு - பறவைக் கூடு; இங்கே அதுபோன்ற உடலுக்கு உவமவாகுபெயர். பி - ம் :—[1]அரங்கின். [2]ஊடு. [3]வெய்ய. (64)

65. இம்ப ருற்றி தெய்தினேன், வெம்பு விற்கை வீரபேர்
தும்பு ருத்த னாழிவா, மும்ப ரத்து ளென்பரே.

(இ - ள்.) வெம்பு வில் - வெப்பம் பொருந்திய வில்லினை யேந்திய, கை - திருக்கையையுடைய, வீர - வீரனே!—இம்பர் உற்று-

இவ்வுலகத்தே (இவ்வாறு) பிறந்து, இது எய்தினேன் - இந் நிலைமையை அடைந்தேன்; பேர் - (எனது) பெயர், ஊழி வாழ்-வெகு காலம் (அழியாமல) வாழ்தற்குக் காரணமான, அம்பரத்துள் - தேவலோகத்தில், தும்புருத்தன் என்பர் - தும்புருத்தனென்று சொல்வார்கள்; (எ-று.)

கோதண்டத்தின் வெப்பத்தைத் தான் நேரே கண்டு அநுபவித் தமை தோன்ற, 'வெம்பு வில்' என்றான். தும்புருத்தன் என்பதில், தன் - சாரியை யென்னலாம். வானுலகத்தவர் அமர ரென்னும்படி நெடுங்காலம் மரணமின்றி வாழ்பவ ராதலால், 'ஊழிவா ழம்பரத்துள்' என்றான். அம்பரம் - ஆகுபெயர். அச்சிட்டுள்ள பிரதிகளில் இச் செய்யுள், பின்னிரண்டடிகளில் 'தும்புருத்தனதன்சூழ், அம்பரத் துளேனரோ' என்ற பாடத்தோடு "கள்ளமாய" (63) என்ற பாடலுக் குப் பின்னிருக்க, இதற்குப்பின் "ஆடரம்பை" (64) என்ற பாடல் காணப்படுகின்றது. (65)

66. கரக்க வந்த காம நோய், துரக்க வந்த தோமினால்
இரக்க மின்றி [1]யேயினார், அரக்கன் மைந்த னாயினேன்.

(இ-ள்.) கரக்க-(அறிவை) மறைக்கும்படி, வந்த-மிகுதியாயுண்டா கிய, காமம் நோய்-காமவியாதி, துரக்க-தொடர்தலால், வந்த-உளள தான, தோமினால்-குற்றத்தினால், இரக்கம் இன்றி-சிறிதும் இரங்குத லில்லாமல், ஏயினார் - (வானவர் என்னை அரக்கனாகும்படி) சபித்தார்; (ஆதலால் யான்), அரக்கன் மைந்தன் ஆயினேன்-ராக்ஷஸகுலத்தில் தோன்றிய மகனானேன்; (எ - று.)

'இம்பருற்றிதெய்தினேன்' என்று கீழ்க்கூறியதை விவரிக் கின்றான். தான் சேர்ந்த இடத்தே மிக்கவருத்தத்தை உண்டாக் குதலால், காமத்தை 'நோய்' என்றான். சாபங்கொடுத்தது குபேர னென்பது, முதனூலால் விளங்கும்: அதற்கு ஏற்ப "இம்பருற்று" (65) என்ற பாடலில் 'தும்புருத்தனதன் சூழ்' என்ற பாடம் சில பிரதிகளில் அமைந்துள்ளது. தோம் = தோஷம். 'ஏவினான்' என்ற பாடம். குபேரன் என்னை அரக்கனாம்படி சபித்தான் எனப் பொருள் படுதலால் சிறக்கும். (66)

67. வலஞ்செய் திந்த வானெலாம், நலிஞ்சு [1]தின்னு நாமவேல்
பொலிஞ்ச வென்றி பூணுமக், கிலிஞ்சன் மைந்த னாயினேன்.

(இ-ள்) இந்த வான் எலாம்-இவ்வானுலகத்திலுள்ளார் யாவரை யும், வலம்செய்து-சுற்றிவந்து, நலிஞ்சு தின்னும்-வருத்தப்படுத்தித் தின்கின்ற, நாமம் வேல் - அச்சத்தைத்தருகின்ற வேலாயுதம், பொலிஞ்ச-விளங்கிய, வென்றி பூணும் - ஜயத்தையே மேற்கொள்ளு கின்ற, அ கிலிஞ்சன்-அப்படிப்பட்ட கிலிஞ்சனென்னும் அரக்கனது, மைந்தன் ஆயினேன்-மகனாகப் பிறந்தேன்; (எ-று.)

'அரக்கன்மைந்தனாயினேன்' என்று கீழ்க்கூறியதை இதனால் விவரிக்கின்றான். முதனூலில் இவனுக்கு 'ஜயன்' என்று பேர் கூறியதற்கு ஏற்ப 'வென்றிபூணும்' என்று கிலிஞ்சனுக்கு அடை

மொழி கொடுத்தார் போலும். வான்-ஆகுபெயர். நலிஞ்சு, பொலிஞ்ச என்பவை - நலிந்து, பொலிந்த என்பவற்றின் போலிகள். நாம் என்பது, அச்சமுணர்த்தும் உரிச்சொல்; "பே நா முருமென வரூஉங்கிளவி, யாமுறை மூன்று மச்சப்பொருள" என்பதனாலறிக: அ-அசை. இனி, நாமமெனக்கொண்டு, அதிசயத்தை விளக்கின்ற வேலென்றுமாம். 'அக்கிலிஞ்சன்', அகரச்சுட்டு - அவனதுகொடுமையின் பிரசித்தியைக் காட்டும். பி-ம்:—[1] இன்ன. (67)

68. [1] அன்ன மாய மேயினர், இன்ன றீரு மீகையான்
நின்ன தாளி னீங்குமென், [2] றுன்னு மெற்[3] கு ணர்த்தினர்.

(இ - ள்.) உன்னும் எற்கு - (இச்சாபம் எவ்வாறு நீங்குமென்று) நினைத்து வருந்துகினற எனக்கு, அன்ன மாயம் ஏயினர்-அவ்வாருன விசித்திர சாபத்தை (எனக்கு)த்தந்தவர், இன்னல் தீரும் ஈகையான்-(இரப்பவர்களது) வறுமைத்துன்பம் நீங்குதற்குக் காரணமான தானத்தை யுடையோனாகிய, நின்ன-உன்னுடைய, தாளின்-திருவடிகளின் பரிசத்தால், நீங்கும்—, என்று—, உணர்த்தினர்—; (எ-று.)

எற்கு - அகரச்சாரியை யின்றி வந்தது. இரண்டாம்அடியில் 'ஈகையால்' என்று பிரிக்கலாம். [3] உணர்த்தினன் என்ற பாடத்திற்கு-இன்னல்தீரும் ஈகையான் - குபேரன் என்னலாம். பி - ம்:—[1] அன்னயக்கனுதியாய். [2] உன்னலால். முதலடியில் 'ஏயினன்' என்றும், நான்காமடியில் 'உணர்த்தினன்' என்றும் பாடம் இருப்பின் நலம். (68)

இந்தப்பாடலையடுத்து ஏட்டுப்பிரதி பலவற்றிற் காணப்படும் பாடல் வருமாறு:—

*வெம்பு விற்கை வீரநீ, அம்பரத்து நாதனல்
தும்புருத்தன் வாய்மையா, லிம்பருற்ற தீதரோ.

69. அன்று மூல மாதியாய், இன்று காறு மேழையேன்
நன்று தீது நாடலேன், [1] தின்று தீய தேடினேன்.

(இ-ள்.) ஆதியாய்-முதல்வனே! ஏழையேன்-அறிவில்லாத யான், அன்று மூலம் - அந்நாள்முதலாக, இன்று காறும்-இந்நாள்வரையிலும், நன்று தீது நாடலேன் - நல்லதின்னது தீயதின்னதென்று ஆராயாதவனாய், தின்று - (அகப்பட்ட பிராணிகளையெல்லாங் கொன்று) தின்று, தீய-தீவினைகளையே, தேடினேன் - சம்பாதித்துக் கொண்டேன்; (எ - று.)

காமநோயால் அறிவிழந்து அரம்பையைக்கூடி அரக்கனாக நேர்ந்தமைபற்றிய கழிவிரக்கந் தோன்ற, 'ஏழையேன்' என்கிறான். பி-ம்:—[1] தின்றுதீய நேடினேன். (69)

* இச்செய்யுள் - இன்றியமையாததன்று; ஆதலாற் பொருளெழுதப் படவில்லை.

70. தூண்ட நின்ற தொன்மைதான், வேண்ட நின்ற வேதநூல்
பூண்ட நின்பொ லங்கொடாள், தீண்ட வின்று தேறினேன்.

(இ - ள்.) தூண்ட நின்ற - (தன்னை ஓதியுணர்ந்தவர்க்கு நல்லறிவைத்) தூண்டும்படி நின்றனவும், தொன்மை தான் வேண்ட நின்ற - பழமையாகத் தான் (எல்லாராலும்) வேண்டப்பட்டு இன்றியமையாது நின்றனவுமாகிய, வேதம் நூல் - வேதங்களை, பூண்ட - மேற்கொண்ட, நின் - உனது, பொலம்கொள - பொற்கழலை யணிந்த, தாள் - திருவடிகள், தீண்ட - மேற்படுதலால், இன்று—, தேறினேன் - துன்பந் தீர்ந்தேன்; (எ - று.)

தூண்டுதல் - உண்டாக்கிவளர்த்தல். தூண்டநின்ற வேண்ட நின்ற வேதமென்க. வேதநூல் - வேதமாகிய நூலென இருபெயரொட்டுப் பண்புத்தொகை; உம்மைத்தொகையாய், வேதங்களும் அவற்றோடொப்பச் சொல்லப்படுகின்ற மற்றைச் சாஸ்திரங்களுமென்றுமாம். வேதநூல் பூணுதல் - எல்லா நூல்களாலும் புகழப்படுதல். இனி, முதலடிக்கு - முன்னேசெய்துநின்ற பழமையாகிய எனது நல்வினை தான் தூண்டியதனாலென்று உரைத்து, 'தீண்ட' என்பதனோடு கூட்டலுமாம். (70)

## 71.—விராதன் தன்னுலகத்தைச் சேர்தல்.

[1]தெறுத்து வந்த தீதெலாம், அறுத்த வுன்னை யாதனேன்
ஒறுத்த தன்மை யூழியாய், பொறுத்தி யென்று போயினான்.

(இ - ள்.) ஊழியாய்—! தெறுத்து - (உயிர்களை) அழித்ததனால், வந்த - (எனக்கு) நேர்ந்த, தீதுஎலாம் - தீவினையையெல்லாம், அறுத்த - போக்கியருளிய, உன்னை—, ஆதனேன் - அறிவுகேடனாகிய யான், ஒறுத்த - (பலவாறு) வருத்திய, தன்மை - குற்றத்தை, பொறுத்தி - பொறுத்தருளுவாயாக, என்று - என்று பிரார்த்தித்து, போயினான் - (விடைபெற்றுத் தன்னுலகஞ்) சென்றான்; (எ - று.)

இனி, என்னை யழித்துநின்று என்பாற் பொருந்திய தீமையையெல்லாம் போக்கிய உன்னை யென்றுமாம். தீதெலாம் - ஒருமைப்பன்மைமயக்கம். 'ஊழியாய்' என்பதற்குக் கீழ் 'ஊழிமுதல்வன்' என்றவிடத்து உரைத்தாங்கு உரைக்க. பி - ம்:—[1] திறத்தின். (71)

## 72.—இராமன்முதலிய மூவரும் அப்பாற் செல்லுதல்.

தேவு காதல் சீரியோன், ஆவி போயி னானெனாப்
பூவு லாவு பூவையோ, டேவ லாரு மேகினார்.

(இ - ள்.) தேவு காதல் சீரியோன் - தேவர்களை வருத்துதலையே (தனக்குச்) சிறப்பாகவுடைய அவ்வரக்கன், ஆவி போயினான் எனா - உயிர் நீங்கினானென்று மகிழ்ந்து,—ஏ வலார் உம் - அம்பில் வல்லவர்களாகிய அவ்விராம லக்ஷ்மணர்களும்,—பூ உலாவு பூவையோடு - தாமரைமலரில் வீற்றிருக்கின்ற பிராட்டியுடனே, ஏகினார் - (அப்பாற்) சென்றார்கள்; (எ - று.)

இனி, 'பூவுலாவு' என்பதற்கு - பொலிவு பொருந்திய என்று உரைத்து, முன விராதன்வரவா லிழந்த பொலிவை இப்பொழுது அவன்வதையால் மீண்டும் பெற்ற ஜாநகியோ டென்றுமாம். 'ஏவலார்' என்பதற்கு - எல்லா வுலகங்களையும் அடிமையாகக் கொண்டு ஆணை செலுத்துகின்றவர்களென்றும், தாய்தந்தையர் களின ஏவலினபடிநின்றவாக ளென்றும் பொருள் கொள்ளலாம். பூவை - நாகணவாயப்புள்: அதுபோன்ற மொழியாளுக்கு உவம வாகுபெயர். (72)

## 73.—இராமன்முதலியோர் பகலில் ஒருதபோவனத்துத் தங்குதல்.

**கைகொள் கால வேலினர், மெய்கொள் வேத மெய்யர்வாழ்**
**மொய்கொள் சோலை முன்னினர், வைக லூனும் [1]வைகினர்.**

(இ - ள்.) கை கொள்-கையிலே கொண்ட, கால வேலினர்-யமன் போன்ற வேலினையுடைய அவ்வீரர்கள்,—மெய் கொள் வேதம் மெய்யர்-மெய்ம்மையாகிய வேதங்களையே வடிவாக வுடைய முனிவர்கள், வாழ் - வாழ்கின்ற, மொய் கொள் - நெருங்குதலைக் கொண்ட, சோலை - சோலையை, முன்னினர்-கிட்டினவர்களாய்,—வைகல்தானும்-பகல்முழுவதும், வைகினர்-(அங்குத்) தங்கினார்கள்; (எ - று.)

பகைவருயிரைக் கவர்தலால், வேலிற்குக் காலனை ஒப்பிட்டார். காலத்தை வரையறைசெய்தலாற் காலனெனப்பெயர். 'வேத மெய்யர்' என்பதற்கு, வேதவிதிப்படி நித்திய நைமித்திக கருமங் களிற் சிறிதும் வழுவாது ஒழுகுபவ ரென்பது கருத்து. பி - ம்:— [1]வைகினன். (73)

**விராதன் வதைப்படலம் முற்றிற்று.**

---

# 2 - ஆவது சரபங்கன் பிறப்புநீங்கு படலம்.

சரபங்கனென்னும் முனிவன் ஸ்ரீராமனது அருளாற் பிறப்பு நீங்கிப் பரமபதமடைந்த கதையைச் சொல்லுஞ் சிறிய பிரிவென்ப தாம். 'சரபங்கன்' என்பதற்கு - (மன்மத) பாணங்களைப் பங்கப்படுத் தினவன் [வென்றவன்] என்பது பொருள்; முக்குற்றங்களுள்ளும் முதலதாகிய காமத்தை ஒழித்தவனென்பது கருத்து: காமத்தை யொழித்தவ னெனவே, மற்றைய வெகுளிமயக்கங்களை யொழித்தமை தானே பெறப்படும்; பிறப்புநீங்குதலைத் தெரிவிக்கும் படலத்தைப் பிறப்பு நீங்குபடலம் என உபசரித்துக் கூறினர். சரபங்கர் பிறப்பு நீங்கு படலம் என்று பிரதிபேதம்.

இப்படலம், ஸ்ரீராமன் விராதனது சாபந்தீர்த்தபின்னர்ச் சர பங்கனது ஆச்சிரமத் தருகிற் சென்றபோது, பிரமனது கட்டளை யால் அம்முனிவனைச் சத்தியலோகத்திற்கு அழைத்துப்போக வந்திருந்த தேவேந்திரன் இராமனைக்கண்டு துதித்துப்போக,

பின்பு இராமபிரான் முனிவனைச் சேர, இராமபிரானது சேவைக்குக் காத்திருந்த அம்முனிவன் அப்பிரான் எழுந்தருளினவுடனே சேவித்து அப்பிரானதுஎதிரிலேயே அக்கினி பிரவேசஞ்செய்து ஊனுட லொழித்து வானுலகடைந்த வரலாற்றைக் கூறுகின்றது.

வேறு.

### 1. இராமன்முதலியோர் மாலையில் சரபங்க முனிவனது ஆச்சிரமஞ்சேர்தல்.

குரவங் குவிகோங் கலர்கொம் பினொடும்
இரவங் கணுறும் பொழு[1]தே கினரால்
சரவங் கனிருந் துதவங் கருதும்
மரவங் கிளர்கோங்[2]கொளிர்வாசவனம்.

(இ - ள்.) இரவு-அன்றை இராத்திரியானது, உறும் பொழுது- வருங்காலத்தில் [மாலைப்பொழுதில்],—(ஸ்ரீராம லட்சுமணர்கள்),— குரவம் - குராவரும்பும், குவி கோங்கு - குவிந்த கோங்கரும்பும், அலர்- (தன்மயிர்முடியில்) மலரப்பெற்ற, கொம்பினொடும் - பூங்கொம்பு போன்ற சீதையுடனே,— அங்கண் - அவ்விடத்தினின்றும், சரவங் கன் - சரபங்கனென்னும் முனிவன், இருந்து—, தவம் கருதும்-தவத் தைச் செய்கின்ற, மரவம் கிளர் - குங்குமமரங்கள் உயர்ந்து வளர்ந் திருக்கப்பெற்றதும், கோங்கு ஒளிர் - கோங்க மரங்கள் விளங்கப்பெற் றதுமாகிய, வாசம் வனம் - வாசனையையுடைய ஆச்சிரமத்திற்கு, ஏகினர் - சென்றார்கள்; (எ - று.) ஆல்-அசை.

குரவம் - குராமரம். குரவம், கோங்கு என்பன - முதலாகுபெயர் கள். கொம்பு - உவமவாகுபெயர். வாசவனம் - வாஸஸ்தானமாகிய சோலையுமாம். பி-ம்:—[1] எய்தினரால். [2] இள. சிலபிரதிகளில் 'சரவங்க னிருந்து தவஞ்செய்வனத், தரவங்கிளர் வெஞ்சிலையாண்டகையோர்' எனறு பின்னிரண்டடிகள்.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - பெரும்பாலும் நான்கு சீரும் மாசசீர்களாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். இப்பாடல்களை முச்சீரடி வஞ்சிவிருத்தமாக அலகிடுவாருமுண்டு. (74)

### 2.—அப்போது இந்திரன் அங்கு வந்திருத்தல்.

செவ்வே லவர்சென் றனர்[1]சே ரலுறும்
அவ்வே லையினெய் தின[2]ன் யிராந்
தவ்வா திரவும் பொலிதா மரையின்
வெவ்வே றலர்கண் ணினன்விண் ணவர்கோன்.

பதின்மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) செம் வேலவர்-சிவந்த வேலினையுடைய அவ்வீரர்கள், சென்றனர் சேரல்உறும் - (அம்முனிவனது ஆச்சிரமத்துக்குச்) சென்று சேர்கின்ற, அ வேலையின் - அப்பொழுதில்,— இரவும் - இராத்திரி காலத்தும், தவ்வாது - குவியாமல், பொலி - மலர்ந்து விளங்குகின்ற, தாமரையின் - செந்தாமரைமலர்களைப்போல, வெவ்

வேறு அலர் - தனித்தனியே விளங்குகின்ற, ஆயிரம் ஆம் கண்ணினன் - ஆயிரங்கண்களையுடையவனாகிய, விண்ணவர் கோன்-தேவேந்திரன், எய்தினன் - (அங்கே) வந்திருந்தான்; (எ - று.)

இராமலட்சுமணர் சரபங்கனாச்சிரமத்திற்குச் சென்றபோது தேவேந்திரன் அங்கு வந்திருந்தனனென்பதாம். பகைவரது இரத்தந் தோய்ந்திருத்தலின், 'செவ்வேல்' என்றார்; வேலிற்குச் செம்மை - கூர்மையாகவுங் கொள்ளலாம். இமையாதகண்களாதலால், குவியாத தாமரைகள் உவமை கூறப்பட்டன; இல்பொருளுவமை: தேவர்கள் கண்ணிமைப்பதில்லையென்பது நான்மரபு. வெவ்வேறு-வேறுவேறு என்பதன் மரூஉ. பி-ம்:—[1]சேறலுறும், சேர்தலுறும். [2]ஆயிரம்.(75)

## 3.—பதினொருகவிகள் - இந்திரனது வருணனை.

அன்னச் செலவிற் படிமே லயல்சூழ்
பொன்னிற் பொலிவா ரணிபூ [1]ணொளிமேன்
மின்னிற் செறிகற் றைவிரிந் தனபோற்
பின்னிச் சுடரும் பிறழ்பே ரொளியான்.

(இ - ள்.) (அவ்விந்திரன்),—அயல் படிமேல் - (தனது) அருகு இடங்களில், சூழ் - சுற்றிலுமிருக்கின்ற, அன்னம் செலவின்-அன்னம் போன்ற நடையினையுடைய, பொன்னின் பொலிவார்-திருமகள்போல விளங்குகின்ற தெய்வப்பெண்கள், அணி - (தனது உடம்பில்) அணிந்த, பூண் - ஆபரணங்களின், ஒளிமேல் - ஒளியின் மேலே, மின்னின் செறி கற்றை விரிந்தனபோல் - மின்னல்களின் மிகுந்துள்ள கூட்டம் பரவியதுபோல, பின்னி சுடரும் - கலந்து விளங்குகின்ற, பிறழ் பேர் ஒளியான் - மிகுந்த சிறந்த தேக காந்தியையுடையவன்;

தெய்வமகளிராலணியப்பெற்ற ஆபரணங்களின் காந்தியினும் மேற்பட்டு விளங்குகின்ற சரீரகாந்தியையுடையானென்பதாம். இனி, தன்னருகி லிருக்கின்ற தெய்வப்பெண்கள் தாந்தாம் அணிந்துகொண்டிருக்கின்ற ஆபரணங்களி னொளியின்மேற் கலந்து விளங்குகிற தனனொளியையுடையானென்றுமாம். பி-ம்:—[1]முலையார். (76)

4. வானிற் பொலி[1]தோ கையர்கண் மலர்[2]வண்
கானிற் படர்கட் களிவண் டொடு [3]கார்
மேனித் திருநா ரதன்வீ ணையிசைத்
தேனிற் [4]பொலியுஞ் செவிவண் டுடையான்.

(இ - ள்) கார் மேனி - கறுத்த (தனது) உடம்பிலே,— வானின் பொலி தோகையர் - தேவலோகத்துப் பொருந்தி விளங்குகின்ற தெய்வமகளிரது, கண் - கண்களாகிய, வள் மலர் கானில் - வளப்பம்பொருந்திய மலர்க்காட்டில், படர் - சூழ்ந்துமொய்க்கின்ற, கண் - (தன்) கண்களாகிய, களி வண்டொடு - களிக்கின்ற வண்டுகளுடனே,—திரு நாரதன் - ஸ்ரீநாரதமகாமுனிவனது, வீணை - (மஹதீ யென்னும்) யாழினது, இசை - பாட்டாகிய, தேனின் - தேனைப் பருகியதனால், பொலியும் - விளங்குகின்ற, செவி வண்டு - செவிகளாகிய வண்டுகளையும், உடையான் - உடையவன்; (எ - று.)

வண்டுகள் மலர்வனத்தில் மொய்த்தல்போலத் தன்னைச் சூழ்ந்து வாழ்கின்ற அரமகளையரின் கண்களைத் தன் ஆயிரங்கண் களாற பார்த்துக் களித்தும், வண்டுகள் தேனைப் பருகிக்களித்தல் போல நாரதனது வீணையிசையைக் கேட்டுக்களித்தும் இருந்தனன் இந்திர னென்பதாம்: உருவகவணி. கார்மேனி(யிலே) கண் வண் டொடு செவிவண்டு உடையான் என இயையும். தோகையர் - மயில் போலுஞ் சாயலையுடையார். மலர்த்தொகுதியை, 'மலர்க்கான்' என் றார். மலர் - தாமரையும், கருங்குவளையும். நாரத னென்பதற்கு - ஆத்தும ஞானத்தை உபதேசிப்பவனென்றும், நரர்களுக்கு உள்ள ஒற்றுமையைப் பிளப்பவ னென்றும் பொருளாம். பி-ம்:—[1]கோதை யர். [2]வாழ், வான். [3]தார். [4]படியும். (77)

5. [1]அனையின் றுறையைம் பதொடைம் பதுநூல்
[2]வினையின் றொகைவேள் வி[3]நிரப் பியமா
முனைவன் முதுதே வரின்மூ வ[4]ரலார்
புனையும் முடிதுன் றுபொலங் கழலான்.

(இ - ள்.) நூல் - சாஸ்திரங்களாற் சொல்லப்படுகின்ற, அனை யின் துறை - அக்கினியினிடத்தே செய்யவேண்டிய, வினையின் தொகை - தொழில்களது கூட்டத்தையுடைய, ஐம்பதொடு ஐம்பது வேள்வி-நூறு அசுவமேதயாகங்களை, நிரப்பிய - குறைவில்லாமல் நிறைவேற்றிய, மா-பெரிய, முனைவன்-முன்னவன், முது தேவரின் - பழமையாகிய தேவர்களுள், மூவர் அலார் - திரிமூர்த்திகளல்லாத மற்றைத்தேவர்களெல்லாம், புனையும் - தரித்துக்கொண்டிருக்கிற, முடி-கிரீடங்கள், துன்று - நெருங்குகின்ற, பொலம் கழலான் - பொன்னாலாகிய வீரக்கழலையுடையவன்; (எ-று.)

நூறு அசுவமேதயாகஞ் செய்தவனே இந்திர பதவியைப் பெறுவா னென்ற கொள்கை, இங்கு அறியத்தக்கது, மூவர் - பிரம விஷ்ணு ருத்திரர்கள். திரிமூர்த்திகட்கு அடுத்தபடியிலிருப்பவன் இந்திரனெனறவாறு. தேவர்களெல்லாம் தத்தம் முடி இவனடியிலே படுமாறு காலில்விழுந்து வணங்குதலால், 'முடிதுன்று பொலங்கழ லான்' என்றார். எதுகைநோக்கி, அனலென்பது அனையெனத் திரிந்து நின்றது; துறை - ஏழனுருபு. வினை - யாகத்திற்கு அங்க மாகிய பிரவர்க்கியம், அவபிருதம் முதலிய தொழில்கள்.பி-ம்:—[1]அன லின். [2]நினைவின்படி. [3]நிரம்பிய. [4]அலால். (78)

6. செம்மா மலரா ணிகர்த்தே வியொடும்
மும்மா மதவெண் ணிறமுன் னுயர்தாள்
வெம்மா மிசையான் விரிவெள் ளிவிளங்
கம்மா மலையண் ணலையே யனையான்.

(இ - ள்.) செம் மா மலராள் நிகர் தேவியொடும் - சிவந்த பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்ற(தன்) மனைவி யாகிய சசிதேவியுடனே, மும் மா மதம்-மிக்க மூன்று மதங்களையும், வெள் நிறம் - வெள்ளைநிறத்தையும், முன் உயர் தாள் - முன்னே உயர்ந்த (முன்) கால்களையும், வெம் - வெப்பத்தையுமுடைய, மா -

ஐராவதத்தின், மிசையான் - மேல் ஏறிவருகிறவன்; (அங்ஙனம் ஏறி வரும்பொழுது), விரி - ஒளி வீசுகின்ற, வெள்ளி - வெள்ளிமயமாய், விளங்கு விளங்குகின்ற, அ மா மலை - அந்தப் பெரிய கைலாசகிரியில் (பார்வதீதேவியோடு வீற்றிருக்கின்ற), அண்ணலை - பரமசிவனையே, அனையான்-ஒத்திருப்பவன்; (எ - று.)

வெண்ணிறமான ஐராவதயானையின்மேல் சசீதேவியோடு வீற்றிருக்குந் தேவேந்திரனுக்கு, வெள்ளிமயமான கைலாசகிரியில் பார்வதியுடன் வீற்றிருக்கும் பரமசிவனை உவமை கூறினர். மும்மதம் - துதிக்கைமதம்.கர்ணமதம், பீஜமதம். யானைக்கு மதம்பிடித்திருக்கும்போது உடல் வெப்பமாயிருக்குமாதலால், 'வெம் மா' என்றார்; இனி, வெம்மை - கொடுமையும், அழகுமாம். (79)

7. தானின் றயனின் றொளிர்தண் கதிரோன்
யானின் றதெனென் றொளியெஞ் சிடமா
வானின் றபெரும் பதர்வந் துருவாய்
மே[1]னின் றெனநின் றொளிர்வெண் குடையான்.

(இ - ள்.) அயல் நின்று ஒளிர் - வெளியிடங்களிலெல்லாஞ் சென்று பரவி விளங்குகின்ற, தண கதிரோன் - குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன், இன்று யான் நின்றது என் என்று - 'இந்நாளில் யான் (இவ்வுலகில்) விளங்கிநிற்றலாற பயனென்னை?' என்று எண்ணி, ஒளி எஞ்சிட-ஒளிகுறையும்படி,-மா வான் நின்ற-உயர்ந்த மேலுலகத்தே பொருந்திய, பெரும்பதம்-பெரிய சுவர்க்கந்தானே, உரு ஆய் வந்து - குடையின வடிவமெடுத்துவந்து, மேல் நின்றுஎன - தன்மேலே பொருந்திறற்போல, நின்று - பொருந்தி, ஒளிர்-விளங்குகின்ற, வெள் குடையான் - வெள்ளைக் குடையையுடையவன்; (எ-று.)

சந்திரனும் வெள்கித் தன்னொளி குறைந்திடுமாறு பேரொளியுடனே சுவர்க்கமே குடையாக வந்ததுபோலுமென்றவாறு: தற்குறிப்பேற்றவணி. சந்திரனினும் வெள்ளொளியது குடையென்பது, முன்னிரண்டடிகளின் கருத்து: தொடர்புயர்வுநவிற்சியணி. பினனிரண்டடிகளில் இன்பம்பயத்தல்பற்றி, சுவர்க்கமே குடையாக வந்தது போலுமென்றது. எஞ்சிட ஒளிர் என இயையும். பி - ம்:—[1]நின்றன.

8. திசைகட் டியமால் கரிதெட் டமதப்
பசைகட் டினகிட் டினபற் பலபோர்
விசை[1]கட் டழிதா னவர்[2]விட் டிகல்பேர்
இசைகட் டியவொத் திவர்சா மரையான்.

(இ - ள்.) திசை கட்டிய - திக்குக்களிற் கட்டப்பட்ட, மால் கரி - பெரிய அஷ்டதிக்கஜங்களின், தெட்ட - தெளிவான, மதம் பசை- மதநீர்ப்பசையோடு, கட்டின - சம்பந்தமுடையனவாய், கிட்டின - எதிர்த்துநெருங்கிய, பற்பல போர்-பல்பல போர்களில், விசைகட்டு அழி-(தத்தம்) வேகமும் உறுதிநிலையும் அழிந்து தோற்றுப்போன, தானவர் - அசுரர்களினின்று, விட்டு-நீக்கி, இகல் பேர் இசை -

வலிமையினாலான மிக்க கீர்த்தியை, கட்டிய ஒத்து-(தனியே) கட்டிய வற்றைப் போன்று, இவர்-வீசி விளங்குகின்ற, சாமரையான் - வெண் சாமரையையுடையவன்; (எ-று.)

தேவாசுர யுத்தங்களில் அஷ்டதிக்கஜங்களும் தேவர்பக்கல் வந்து நின்று போர்செய்யுமாதலால், 'திசைகட்டிய...போர்' என்றார். தோற்ற தானவர் விட்டுப்போன இசைகளைக் கட்டிவைத்தாற்போல விளங்குவது சாமரை யென்றது-தற்குறிப்பேற்றவணி. தானவர்-தநு என்பவளிடத்துப் பிறந்தவர். புகழை வெண்ணிறத்ததென வருணித்தல், கவிமரபு. சாமரை-சமரமென்னும் மானினது வாலின் மயிராற் செய்யப்பட்டதொரு ராஜசிந்நம். கட்டு-உறுதி. வரும்போது குடை சாமரைகளுடன் வந்திருப்பானென்று பெருங்கவிஞர் தம்மனக் கண்ணினாற் கண்டு வருணிக்கின்றனரென்க. பி - ம் :—[1]கட்டின. [2]விட்டவர், விட்டகல். (81)

9. [1]தீர்விற் றிரிசெங் கதிர்தங் குவதோர்
[2]ஊருற் றதெனப் பொலியொண் முடியான்
போர்வித் தகனே மிபொறுத் தவன்மா
மார்விற் றிருவிற் பொலிமா லையினான்.

(இ - ள்.) ஓர் - ஒப்பில்லாத, ஊர் - பரிவேஷத்தை, உற்றது - பொருந்தியதாகிய, தீர்வு இல் திரி செம் கதிர் - ஒழிவில்லாது திரிகின்ற சிறந்த கிரணங்களையுடைய சூரியன், தங்குவதுஎன-(வந்து) தங்கியதுபோல, பொலி - விளங்குகின்ற, ஒள் முடியான் - ஒள்ளிய கிரீடத்தையுடையவன்; போர் வித்தகன் - யுத்தத்தில் மிக்க வல்லமையுடையவன்; நேமி பொறுத்தவன் - திருவாழியேந்தி யருளிய திருமாலினது, மா மார்வில்-விசாலமான திருமார்பில் வீற்றிருக்கின்ற, திருவின்-திருமகளைப்போல, பொலி - விளங்குகின்ற, மாலையினான்-இரத்தினவாரத்தையுடையவன்; (எ-று.)

சூரியன் - கிரீடத்துக்கும், பரிவேடம் - அக்கிரீடத்தைச்சூழ்ந்து கட்டப்பட்ட பட்டத்துக்கும் உவமை. ஊர்-சூரியசந்திரரைச் சுற்றித் தோன்றும் வட்டம். போர்வித்தகனாகிய நேமிபொறுத்தவ னென இயைத்தலு மொன்று. பின்னிரண்டடிகட்கு-திருமாலின் மார்பிலே திருவோடு விளங்குகின்ற வனமாலைபோன்ற பாரிஜாத மாலையை யுடையா னெனினுமாம். பி-ம்:—[1]தேரில். [2]ஊரிற்றது,ஊறிற்றது. (82)

10. செற்றிக் கதிரிற் பொலிசெம் மணியின்
கற்றைச் சுடர்விட் டெரிகஞ் சுகியான்
வெற்றித் திருவின் குளிர்வெண் ணகைபோற்
சுற்றிக் [1]கிளருஞ் [2]சுடர்தோள் வளையான்.

(இ ள்.) செற்றி-பதிக்கப்பட்டு, கதிரின்-சூரியனைப்போல், பொலி-விளங்குகின்ற, செம்மணியின் - சிவந்த இரத்தினங்களினது, சுடர் கற்றை-ஒளியின் கூட்டம், விட்டு எரி-விட்டு விளங்குகின்ற, கஞ்சுகியான்-கவசத்தை யுடையவன்; வெற்றி திருவின்-ஜயலட்சுமியினது, குளிர் வெள் நகைபோல்-குளிர்ந்த வெள்ளிய புன்சிரிப்புப்போல, சுற்றி

கிளரும்-சுற்றிலும் விளங்குகின்ற, சுடர்தோள்வளையான்-ஒளிர்கின்ற வாகுவலயத்தை யுடையவன்; (எ-று.)

கஞ்சுகி-கஞ்சுகத்தையுடையவன்; இச்சொல் 'ஆன்' என்பதை யும் விகுதியாகப் பெற்று வந்தது; இனி, புவனம்-புவனி என்றாற் போல, கஞ்சுகம் என்பது கஞ்சுகிஎன்று திரிய, அது 'ஆன்' என்னும் ஆண்பால் விகுதிபெற்ற தென்றலும் ஒன்று. சுற்றி-தோளைச்சுற்றி யென்றேனும் சுற்றுப்பக்கங்களிலென்றேனும் கொள்க. கதிர் - ஆகு பெயர். பி-ம்:—[1]சுடரும். [2]கிளர். (83)

11. பல்லா யிரமா மணிபா டமுறுந்
தொல்லா ரணிகால் சுடரின் றொகைதாம்
எல்லா முடனா யெழலா [1]னொருதன்
வில்லா லொளிர்மே கமெனப் பொலிவான்.

(இ-ள்.) பல் ஆயிரம் மா மணி-பலவாயிரம் பெரிய இரத்தினங் கள், பாடம் உறும் - பளபளக்கின்ற, தொல் ஆர் - பழமையாகப் பொருந்திய, அணி-ஆபரணங்கள், கால் - வெளிவீசுகின்ற, சுடரின் தொகை-ஒளியின் கூட்டம், எல்லாம்—, உடன் ஆய் - ஒருங்குகூடி, எழலான்-வெளியே விளங்குதலால், தன் ஒரு வில்லால் ஒளிர் மேகம் என-(தனது) ஒப்பற்ற வில்லோடு [இந்திரதநுசோடு] விளங்குகின்ற காளமேகம்போல, பொலிவான் - விளங்குபவன்; (எ - று.)—தாம் - அசை.

'வில்லால்', ஆல்-உடனிகழ்ச்சிப்பொருளது. கருமேகம் - இந்திர னது மேனிக்கும், இந்திரவில்-அதனிடத்தே நவமணிகளுமிழைத்துப் பலநிறங்களுமுடையவாய் விளங்குகின்ற ஆபரணங்களின் காந்திக்கும் ஒப்பு. பி-ம்:—[1]அயலே. (84)

12. மானா வுலகந் தனின்மன் றல்பொருந்
தேனா றுநலஞ் செறிதொங் கலினன்
மீனோ டுகடுத் துயர்[1]வென் றியவாம்
வானா டியர்கண் ணெனும்வா ளுடையான்.

(இ - ள்.) மானா-(ஒன்றோடொன்று) ஒத்திராத, உலகந்தனில் - பலவுலகங்களிலும் (செல்லும்படி), மனறல் பொரும் - வாசனை வீசு கின்ற, தேன் நாறு - தேனொழுகுகின்ற, நலம் செறி - அழகு மிக்க, தொங்கலினன்-பூமாலையை யுடையவன்; மீனோடு கடுத்து-மீன்வகைக ளோடு ஒத்து, உயர் வென்றிய ஆம் - சிறந்த வெற்றியை யுடையன வாகின்ற, வான் நாடியர் கண் எனும் - தேவலோகத்துமகளிரது கண்களாகிய, வாள் உடையான்-வாள்களைத் தன்மேலுடையவன்;

ஊர்வசி முதலிய தேவமகளிரனைவரும் தேவேந்திரனது மேனி யழகையே எப்பொழுதும் இமையாது நோக்குதலால், 'வானாடியர் கண்ணெனும் வாளுடையான்' என்றார்: இனி, வானாடியர்கண்ணே வென உவமைகூறத்தக்க உடைவாளைத் தன்னிடையி லுடையா னெனினும் அமையும். மானாவுலக மென்பதற்கு - தனக்கு ஒப்பில் லாத உலகமென, தேவலோகமென்றும் உரைக்கலாம். பொருந்

தொங்கல், நாறு தொங்கல், செறிதொங்கலென இவையும். கண்களுக்கு வெறறி - ஆடவர்களை மயக்கித் தம்வயப்படுத்துதல். பி-ம்:—[1]வென்றியவா. (85)

13. வெல்வா [1]னசையால் [2]விசையால் விடுநாள்
எல்வான் சுடர்மா லையிரா வணன்மேல்
நெல்வா லு[3]மரு தநிறம் [4]பிறழா
வல்வாய் மடியா வயிரப் படையான்.

(இ - ள்.) எல் - சூரியன்போன்ற, வான் சுடர் - மிக்க ஒளியை வீசுகின்ற, மாலை - (வெற்றித்) தொகுதியையுடைய, இராவணன் மேல்—, வெல்வான் நசையால் - சயிக்கவேண்டு மென்னும் விருப்பத்தால், விசையால் - வேகத்தோடு, விடு நாள் - பிரயோகித்த பொழுதும், நெல் வாலும் அருத - நெல்லின் வாலினளவும் [சிறிதும்] தான் அருத, நிறம் பிறழா - (தன்) முனையொளியும் மாருத, வல் வாய் மடியா - (தன்) வலிய நுனிக் கூர்மையையும் மடங்காத, வயிரம் படையான் - வச்சிராயுதத்தை யுடையவன்; (எ - று.)

இராவணன்மேல் எறியப்பட்டபோதும் சிறிதும் வாய்மடியாதது வச்சிரப்படை என இந்திரனது படையின் உறுதித் தன்மையைக் கூறியவாறு. 'எல் வான் சுடர் மாலை' என்னும் அடைமொழி - வரையெடுத்தல், திக்குவிசயஞ் செய்தல் முதலிய இராவணனது பேராற்றலை உணர்த்தும். எல்வான் சுடர்மாலை - இரத்தின ஹாரமென்பாருமுளர். ராவணன் - பரஹிம்ஸையாலே நாட்டை இருந்ததேகுடியாகக் கூப்பிடும்படி பண்ணினவன்; அன்றிக்கே, தான் கைலாசாதிகளை எடுத்து நெருக்குண்டு கூப்பிடுமவன் : இதனால், தனக்கும் பிறர்க்கும் ஹிதமறியாத துஷ்டஸ்வபாவனென்கை. நெல் வால் - மிக்க சிறுமைக்குக் காட்டுவதொரு அளவை. வால் - பின்நுனி. அருத பிறழாத மடியாத படையென்க. பி - ம்:—[1]நசையின். [2]விசையின். [3]அருது. [4]பிறிதாய். (86)

## 14.—சரபங்கன் இந்திரனையெதிர்கொண்டு, வந்த காரணம் வினவல்.

நின்ருனெதிர்நின் றநெடுந் தவனுஞ்
சென்ருனெதிர்கொண் டுசிறப் [1]பமையா
என்ருனிவணெய் தியவா றெனலும்
பொன்ருதபொலங் கழலோன் புகலும்.

(இ - ள்.) (இத்தகைய தேவேந்திரன்), நின்ருன் - (சரபங்கனாச்சிரமத்திற்குச்) சென்று நின்ருன்; எதிர் நின்ற - அங்கு எதிரே நின்று கண்ட, நெடுந் தவன் உம் - மிக்கதவத்தையுடைய அம் முனிவனும், சென்ருன் எதிர் கொண்டு - எதிரேவந்து அளவளாவி யழைத்துப்போய், சிறப்பு அமையா - சிறப்பான மரியாதைகளைச் செய்து, 'இவண் எய்திய ஆறு - (நீ) இங்கே வந்ததற்குக் காரணம்,

என் - என்ன ?' எனலும் - என்று வினவியவளவில்,—பொன்றாத பொலம் கழலோன் - அழியாத பொற்கழலையுடைய அவ்விந்திரன், புகலும் - சொல்லுவான்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

எதிர்கொண்டு சென்று னென்றும் மாற்றலாம். பொன்றாத கழலென்க. மூன்றாவது பாடல்முதல் பதின்மூன்றும் பாடல் வரையிலுள்ள ஒளியான் படையான் முதலியவைகள், இரண்டாம் பாடலிலுள்ள விண்ணவர்கோன் என்பதற்கு விசேடணமாகி, அது, 'நின்றான்' என்று இந்தப்பாடலிலுள்ள வினைமுற்றுக்கு எழுவாயாம். பி - ம்:—[1] அயர்வான். (87)

## 15 —இதுவும் அடுத்த கவியும் இந்திரன் பிரமதேவனது கட்டளையைத் தெரிவித்தல் கூறும்.

நின்னு [1]லியைநீ திநெடுந் தவமின்
[2]றென்னு னும்விளம் பரிதென் றுணர்வான்
அந்நான் முகனின் னையழைத் தனனாற்
பொன்னார் சடைமா தவபோ துதியால்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பொன் ஆர் சடை மா தவ - பொன்போன்ற சடையையுடைய மிக்க தவமுடையோனே! - அ நான் முகன்-நான்கு முகங்களையுடைய அப்பிரமதேவன், 'நின்னால் இயை - உன்னாற் செய்யப்பட்ட, நீதி நெடுந் தவம்-முறைமைதவறாத பெரிய தவமானது, என்னுனும்- சிறிதும், விளம்ப அரிது - சொல்லுதற்கு அரியது', என்று உணர்வான் - என்று அறிபவனாய், நின்னை அழைத்தனன் - உன்னை(த் தன்உலகத்திற்கு வரும்படி) கட்டளையிட்டான்; ஆல் - ஆதலால், இன்று - இப்பொழுது, போதுதி - (நீ) வருவாயாக; (எ - று.)

சரபங்கமுனிவன் தவம், நான்கு முகங்களையுடைய பிரமனாலுஞ் சொல்லுதற்கு அரிதென்பதாம்: எனவே, மற்றையோர் அறிந்து சொல்லவொண்ணாமை அருத்தாபத்தியால் விளங்கும். என் ஆனும்-எவ்வளவு சிறிது மென்க. விளம்பரிது-தொகுத்தல்; இனி, விளம்பு என்பதை முதனிலைத்தொழிற்பெயராகக்கொண்டு, விளம்பு தற்கு அரிதென்றுமாம். பி - ம்:—[1] இயல். [2] என்னாலும். (88)

16. எந்தா யுலகியா வையுமெவ் வுயிருந்
தந்தா னுறையுந் நெறிதந் தனனால்
நந்தா த[1]பெருந் தவநா டதுநீ
வந்தா யெனினின் னெதிரே வருவான்.

(இ - ள்.) எந்தாய் - எம்பெரியோனே! நந்தாத பெருந் தவ - கெடுதலில்லாத மிக்க தவமுடையோனே!—உலகு யாவைஉம் - எல்லாவுலகங்களையும், எ உயிர்உம் - (சராசரங்களாகிய) எல்லா வுயிர்களையும், தந்தான் - படைத்தவனாகிய பிரமதேவன், உறையும் - (தான்) வாசஞ்செய்கின்ற, நெறி-பதவியை, தந்தனன் - (உனக்குக்) கொடுத்தான்; நீ—, நாடு அது - அந்நாட்டுக்கு, வந்தாய் எனின் -

வருவையாளுல், நின் எதிரே வருவான் - உன்னை (அழைத்துப் போதற்கு அவன்) எதிர்கொண்டு வருவான்; (எ - று.)

பெருந்தவநாடு-பெரியதவத்தா லடையப்படும் நாடெனவுமாம். வந்தாய்-காலவழுவமைதி. பி-ம்:—[1]பெரும்பதநாடதனில், பெரும்பத நாடதுநீ. (89)

## 17.—முனிவன் இந்திரனதுமொழியைத் தடுத்துக்கூறத் தொடங்குதல்.

எல்லா வுலகிற் குமுயர்ந் தமையான்
சொல்லா வகைநீ யுணர்[1]தொன் மையையால்
[2]நல்லா யுடனே நடநீ யெனலும்
அல்லே னெனவா லறிவா னறைவான்.

(இ - ள்.) நல்லாய் - நல்லதவமுடையோனே! (அப்பிரமலோகம்), எல்லா உலகிற்குஉம் உயர்ந்தமை-எல்லாவுலகங்களினுஞ் சிறந்திருத் தலை, யான் சொல்லா வகை-யான் உணர்த்த வேண்டாமலே, நீ—, உணர்-அறிகின்ற, தொன்மையை-பழமையுடையளுயிருக்கிருய்; ஆல் -ஆகையால், நீ—, உடனே நட-உடனே வருவாயாக, எனலும் - என்று (இந்திரன்) சொன்னவளவில்,—வால் அறிவான் - தத்துவ ஞானத்தையுடைய அம்முனிவன், அல்லேன் என-(அதற்கு) உடன் படேனென்று, அறைவான்-சொல்லுவான்; (எ - று.)—அது மேற் கூறுகின்ருர்.

'பிரமன் வேண்டுகோளின்படி பிரமலோகத்திற்குச் செல்வாய்' என்று தேவேந்திரன் தெரிவிக்க, அந்தச் சரபங்க முனிவன் கூறலாளுனென்பதாம். பி - ம் :—[1]தொன்மையையாய். [2]நல்லா ளுடனே. (90)

## 18.—மூன்றுகவிகள் - சரபங்கமுனிவனது மறுமொழி.

சொற்பொங் குபெரும் புகழோய் தொழின்மாய்
சிற்பங் களின்வீ வன[1]சேர் குவெனே
அற்பங் கருதே னெனருந் தவமோ
கற்பம் பல[2]சென் றதுகா ணுதியால்.

நான்குகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) சொல் பொங்கு - (எல்லாராலுஞ்) சொல்லப்பட்டு விளங்குகின்ற, பெரும் புகழோய் - மிக்க புகழையுடையவனே!— தொழில் மாய் சிற்பங்களின்-செயலழியத்தக்க சித்திரங்களைப் போல, வீவன-(நாளடைவில்) அழிகின்ற உலகங்களை, சேர்குவெனே-(யான்) அடைவேனே? அற்பம் கருதேன்-(அவ்வாறு) அல்பமான பதவிகளை (யான்) மனத்தாலும் நினையேன்; என் அருந் தவம்ஓ - எனது அரிய தவமோ, கற்பம் பல சென்றது - அநேக கல்பகாலங்கள் கழியப் பெற்றது: காணுதி-(நீ) அறிவாய்;(எ-று.)

நான் பல கற்பகாலமாக அருந்தவம்புரிந்துள்ளேன்: இந்தத் தவத்திற்குப் பயனாக அழியுந்தன்மையனவாய அற்பமான பதவிகளை விரும்பேனென்றவாறு. புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படுமாதலால் அவையிரண்டும் அடங்க, 'சொற்பொங்கு பெரும்புகழ்' எனருன்; இனி, சொல்லுக்கு அடங்காத புகழெனவுமாம். சித்திரவேலைகள் பார்வைக்கு அழகியனவாயினும் நாளடைவில் உருக்குலைந்து அழிவனபோல, மேனோக்கில் சிறந்தன போலத் தோன்றினும் நாளடைவில் அழிவையுடைய லோகமென்பார் 'தொழின்மாய்சிற்பங்களின் வீவன' என்ருர். சிற்பம், அற்பம், கற்பம்- வடமொழி. பிராகிருதபிரளயத்திற் பிரமலோகமும் அழியுமென்க. பி-ம்:—[1]தேர்குவெனே, சேர்குவெனே. [2]சென்றன. (91)

19. சொற்றுந் தரமன் றிதுசூழ் கழலாய்
பெற்றும் [1]பெறுகில் லதொர்பெற் றியதே
மற்றென் பல[2]சொல் லிவண்வந் துதவம்
முற்றும் பகரு னு[3]முடித் தனனல்.

(இ - ள்.) சூழ் கழலாய்-கட்டிய கழலுடையானே! இது - இவ்வார்த்தை, சொறறும் தரம் அன்று-(என்னிடத்திற்) சொல்லத்தக்கதன்று: பெற்றும் பெறுகில்லது ஓர் பெற்றியதுஏ-(அப்பிரமலோகம்) பெற்ருலும் பெருததற்கொப்பான தன்மையையுடையதே: மற்று பல சொல் என்-வேறு பலவார்த்தை சொல்லிப் பயனென்னே? (யான்), இவண் வந்து - இவ்விடத்திற்பொருந்தி, தவம் முற்றும் பகல்தான் உம்-தவம் நிரம்ப வேண்டியன மிக்ககாலமும், முடித்தனன் - (தவஞ் செய்து) முடித்தேன்; (எ-று.)

அற்பப் பதவியில் நசையற்றுப் பெருந்தவம் புரிந்து பலகாலங் கழித்துள்ள என்னிடத்து 'பிரமலோகத்தைப் பெற்றுக்கொள்' என இவ்வாறு கூறுவது தக்கதன்று: இந்தப் பிரமலோகம் பெற்றும் பெருதது போன்றதேயா மென்கிருன்; பிரமலோகம் புக்கவர்க்கும் மீண்டும் பிறப்பு உண்டாதலால், 'பெற்றும் பெறுகில்லதொர் பெற்றியது' என்ருன்; மீளாவுலகம் பெறுதற்கு உரிய மிக்க தவஞ் செய்தேனென்பதாம். ஏ-தேற்றம். இவண் வந்து உதவ என அகரவீருக்கி, ஸர்வேசுவரன் தானே இவ்விடத்தில் வந்து பரமபதத்தை அளிக்கும்படி (தவம்) முடித்தேனென்றுமாம். பி-ம்:—[1]பெறலாயது. [2]நீயிவண்வந்ததனல். [3]முடிந்துளதால். (92)

20. [1]சிறுகா லேயிலா நிலேயோ திரியா
குறுகா நெடுகா குணம்வே றுபடா
உறுகால் கிளர்பூ தமெலா முகினும்
மறுகா நெறியெய் துவென்வா னுடையாய்.

(இ - ள்.) வான் உடையாய் - தேவலோகத்தை யுடையவனே! சிறு காலை இலா-சிறிய காலவரையறை யில்லாமலும், நிலை ஓ திரியா - நிலைமை வேறுபடாமலும், குறுகா நெடுகா - சுருங்குதலும் வளர்தலு மில்லாமலும், குணம் வேறுபடா - குணம் மாறுபடாமலும்,—உறுகால் - பெரிய காற்றினல், கிளர் பூதம் எலாம் -

விளங்குகின்ற எல்லாப் பூதங்களும், உகினும் - அழிந்தாலும், (அக்காலத்திலும்), மறுகா - அழியாமலுமுள்ள, நெறி - பதவியை [பரமபதத்தை], எய்துவென் - (யான்) அடைவேன்; (எ - று.)

இது, ஸ்ரீவைகுண்டபதவியை இன்னவாறனதெனக் கூறுவது. நிமிஷம், காஷ்டை, கலை, நாழிகை, முகூர்த்தம், நாள், மாதம், வருஷம், யுகம் முதலிய காலவரையறை பரமபதத்தி லில்லை யாதலால் 'சிறுகாலையிலா' என்றும், இளமை முதுமை முதலிய பருவவகைகள் அங்குள்ளார்க்கு இல்லாமையால் 'நிலையோதிரியா' என்றும், தன்னடைவிலாதல் காலவசத்தாலாதல் சுருக்கமும் பெருக்கமுமில்லை யாதலால் 'குறுகா நெடுகா' என்றும், முக்குணங்களும் மாறிமாறிவராது சுத்தசத்துவகுணமயமாகவே யிருத்தலால் 'குணம் வேறுபடா' என்றும், ஸ்ரீமகாவிஷ்ணுவினது திருமுகத்தினின்றும் ஒருமூச்சுக்காற்று உண்டாகி நூறாண்டளவும் வீசிக்கொண்டிருந்து அனைத்தையும் அழிக்கின்ற அப்பிரளயகாலத்திலும் அழிவில்லாது நித்தியமாயிருத்தலால் 'உறுகால் கிளர்பூதமெலாமுகினும் மறுகாநெறி' என்றுங் கூறினர். 'சிறுகாலையிலா' முதலிய ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சங்கள், 'நெறி' என்பதனோடு இயையும். பி-ம்:—[1]சிறுகாபெருகா. (93)

## 21 —சரபங்கனுச்சிரமஞ்சார்ந்த இராமன் முதலியோர் அங்கே யாதுவிசேடமென ஆராய்தல்.

என்றின் னவிளம் பிடுமெல் லையின்வாய்
வன்றிண் சிலைவீ ரரும்வந் தணுகா
ஒன்றுங் கிளரோ தையினு [1]லுணர்வார்
நின்றென் னைகொலின் 'னதெனு நினைவார்.

(இ - ள்.) என்று இன்ன விளம்பிடும் எல்லையின்வாய் - (சரபங்கமுனிவன்) என்று இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லி முடித்தபொழுது, வல் - வலிய, திண் - கட்டமைந்த, சிலை - வில்லினையுடைய, வீரர்உம் - அவ்விராமலக்ஷ்மணர்களும், வந்து அணுகா - (அவ்வாச்சிரமத்தை) வந்துகிட்டி,—ஒன்றும் - (அங்கே) பொருந்திய, கிளர் ஓதையினால் - மிக்க ஆரவாரத்தால், உணர்வார் - (அதன் காரணத்தை) அறிபவராய், நின்று - (அங்குச் சற்றே) நின்று, இன்னது என்னை எனு - இது என்னவென்று, நினைவார் - ஆலோசிப்பாரானார்; (எ - று.)

வல்சிலை திண்வீரர் எனக்கூட்டி - வலிய சிலையையுடைய திண்ணிய வீரரென்றுமாம். கொல் - அசைநிலை. பி - ம்:—[1]உணர்வானின்று. (94)

## 22.—இந்திரன் வந்துள்ளதை யூகித்தல்.

[1]கொம்பொத் தனநா லொளிர்கோள் வயிரக்
கம்பக் கரிநின் றதுகண் டனமால்
இம்பர்த் தலைமா தவர்பா [2]லிவனும்
உம்பர்க் கரசெய் தினனென் றுணரா.

மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) 'ஒளிா - விளங்குகின்ற, கோள் - கோட்பாட்டை யுடைய, வயிரம் - வைரக்கற்களிழைத்த பூணினையுடைய, ஒத்தன - (தம்மில் ஒன்றோடொன்று) ஒத்தனவாகிய, நால் கொம்பு - நான்கு தந்தங்களையுடைய, கம்பம் கரி - கட்டுத்தறியிற்கட்டப்படுகின்ற ஐராவதயானை, நின்றது - நின்றதனை, கண்டனம் - (நாம்) பார்த்தோம்: ஆல் - ஆதலால், இம்பர்த்தலை - இவ்விடத்திலுள்ள, மாதவர்பால்- சரபங்க முனிவனிடத்தில், இவன் உம்பர்க்கு அரசு-இத்தேவேந்திரன், எய்தினன் ஆம் - வந்தானவன்,' என்று உணரா - என்று அறிந்து,—(எ - று.)—'நிறுவா' (23) என்க.

இங்கு நாலு தந்தங்களையுடைய ஐராவதமென்ற வெள்ளையானை நிற்பதால், தேவேந்திரன் இம்முனிவனிடம் வந்திருக்க வேணுமென்று இராமனுதியர் ஊகித்தனரென்றவாறு. கோட்பாடு - ஒளி கொண்டிருக்குந் தன்மை. வயிரம் - கிம்புரிக்குக் கருவியாகுபெயர். இனி, வயிரம் பொருந்திய கொம்பென்றுமாம். கம்பம் கரி - மதத்தாலே கம்பத்தினின்றும் விடவொண்ணாதபடி நிற்கும் யானை; அன்றிக்கே, கண்டாரெல்லாம் நடுங்கும்படி மதிப்பையுடைய யானையென்றுமாம்; கம்பம் - நடுக்கம். அருகிலிருத்தல் பற்றி 'இவன்' எனச் சுட்டினார். பி - ம்:—[1]கொம்பத்தன, கொம்பத்தொளிர். [2]இவண். (95)

## 23.—இராமன் தனியே அச்சோலையிற் சேர்தல்.

மா[1]னே யனையாளொடு[2]மைந் தனையப்
பூநேர் பொழிலின் புறனே நிறுவா
ஆனே றெனவா ளரியே றெனத்
தானே யவகன் பொழில்சா ருதலும்.

(இ - ள்.) (ஸ்ரீராமன்), மானே அனையாளொடு - பெண்மான் போன்ற பார்வையையுடைய சீதையுடனே, மைந்தனை - லக்ஷ்மணனையும், அ பூ நேர் பொழிலின் புறனே - மலர்நிறைந்த அச்சோலைக்கு வெளியிலே, நிறுவா - நிறுத்திவிட்டு,—ஆன் ஏறு என - ருஷபம் போலவும், ஆள் அரி ஏறு இது என - வலிமையுள்ள ஆண் சிங்கம் போலவும், தானே - தான்மாத்திரமே, அ அகல் பொழில் - விசாலமான அந்தச்சோலையை, சாருதலும் - சேர்ந்தவளவில்,—(எ - று.)—'கண்டான்' (24) என முடியும்.

சீதாபிராட்டியையும் இலக்குமணனையும் அந்த முனிவன் வாழும்பொழிலுக்குப் புறத்தே நிறுத்தி, பெருமிதம் காம்பீரியம் வலிமைஎன்ற பண்புகள் நடையிலே தோன்ற ஸ்ரீராமன் அந்தச் சோலையைச் சார்ந்தனனென்பதாம். பெருமிதத்துக்கும், காம்பீரியத்துக்கும், வலிமைக்கும், நடைக்கும் - ஆனேறும், அரியேறும் உவமை. பி-ம்:—[1]நேர். [2]மைந்தனையும்.

"சீதாலட்சுமணரோடு ஸ்ரீராமன் சரபங்கமுனிவராச்ரமத்தை நோக்கிப்போகையில், அற்புதப்பேரொளி தோன்றுவதுகண்டு, சில

அடையாளங்களால் 'தேவேந்திரன் வந்துள்ளான்போலும்' என்று அனுமானித்துக்கூறிச் சீதாலட்சுமணர்களைப் புறம்பே நிறுத்தித் தான் செல்லலானான். பலவீரர் சூழவும், வெண்கொற்றக் குடை முடிமீது விளங்கவும், அமரமகளிர் சாமரைவீசவும், பேரொளியுடன் பச்சைக்குதிரைகள்பூண்ட தேர் வானத்தின் மீதிருக்கவும், தேவேந்திரன் தன்கால் நிலத்தில்தோயாமலே சரபங்கமுனிவருடன் பேச்சு நிகழ்த்துவதைச் சேய்மையினின்று கண்டான். அப்போது தேவேந்திரன் முனிவரை நோக்கி, "ஸ்ரீராமபிரான் வருகிறான்: எனக்கு விடை தருக: இப்போது அப்பிரானோடு பேச்சுநிகழ்த்தின் மானுடபாவனையில் மறைந்து தேவகாரியத்தை நிறைவேற்ற இருக்கிற அப்பிரானுடைய கடவுள் தன்மை வெளிப்படும்: இராவணவதமாகிய தேவகாரியம் முற்றியபிறகு அப்பிரானைத் தரிசிப்பேன்' என்றுகூறி ஸ்ரீராமபிரானை நேர்முகமாகக்காணாமலே வானுலகுசென்றான்" என்று ஸ்ரீவான்மீகிமுனிவர் கூறியுள்ளனர். (96)

## 24.—இந்திரன் இராமபிரானைக் காணுதல்.

[1]கண்டா மவையா யிரமுங் கதுவக்
கண்டா மரைபோற் கருஞா யிறெனக்
கண்டா னிமையோ ரிறைகா சினியின்
கண்டா னருநான் மறையின் கனியை.

(இ - ள்.) இமையோர் இறை - தேவராசனாகிய இந்திரன்,— காசினியின்கண் - அவ்விடத்தில், அரு-(காணுதற்கு) அரிய, நால் மறை இன் கனியை - நான்குவேதங்களின் இனிய பயனாகிய ஸ்ரீராமனை,—தாமரைபோல் கண் - தாமரைமலர்போலுங் கண்களையுடைய, கரு ஞாயிறு என - கரிய சூரியனைக் கண்டாற்போல, கண் அவை ஆயிரமும் கதுவ - (தனது) ஆயிரங்கண்களும் பொருந்த, கண்டான் - பார்த்தான்; (எ-று.)—தான், தாம் - அசைகள்.

ஸ்ரீராமனது திருநிறம் கருமை யாதலால், கருஞாயிற்றை உவமை கூறினார்: "செந்தண் கமலக்கண் கைகால் சிவந்தவாயோர் கருஞாயிறு, அந்தமில்லாக் கதிர்பரப்பி யலர்ந்த தொக்குமம்மானே" என்பது, நம்மாழ்வார் பாசுரம். இரண்டாமடிக்கு - தன் கண்கள் தாமரை போன்றனவாகவும், ஸ்ரீராமன் அவற்றை அலர்த்துஞ் சூரியன்போலாகவுமென்றும் உரைக்கலாம். எல்லாத் தேவர்களாலும் புகழப்படுதலால், 'நான்மறையின் கனி' என்றார். கனியென்றது- அப்போதே நுகரலாம்படி பக்குவபலமா யிருப்பவனென்றபடி; "அமுதம் பொதி யின்சுவைக், கரும்பினைக் கனியைச் சென்று நாடி" என்றார், பெரியாரும். பி - ம் :—[1]கண்டான். (97)

## 25.—இந்திரன் இராமபிரானை வணங்குதல்.

காணா மனநொந் துகவன் றனனால்
ஆணா தனையந் தணர்நா யகனை
நாணா ளும்[1]வணங் கியநன் முடியால்
தாணா கியதோள் கொடவற் றெழுவான்.

(இ - ள்.) (இந்திரன்), காணு - (அவ்வாறு) பார்த்து, மனம் நொந்து - மனம்வருந்தி, கவன்றனன் - கவலைப்பட்டவனாய்,—ஆண் நாதனை-புருஷோத்தமனும், அந்தணர் நாயகனை - முனிவர்தலைவனு மாகிய ஸ்ரீமந்நாராயணனை, நாள் நாளும் - எந்நாளும், வணங்கிய - வணங்குகின்ற, நல் முடியால் - (தனது) அழகிய தலையாலும், தூண் ஆகிய தோள் கொடு - தூண்களுக்குஒப்பான கைகளாலும், அவன் - அந்த (நாராயணனது திருவவதாரமாகிய) ஸ்ரீராமனை, தொழுவான் - வணங்கி அஞ்சலிசெய்வான்; (எ-று.)

மகாவிஷ்ணுவே தங்களைக் காப்பதற்காக இவ்வாறு திருவவ தரித்து வனத்தில் திரிகின்றனனே யென்னுங் கருத்தினால், இந்தி ரன் மனநொந்து கவன்று தலைவணங்கிக் கைகூப்பித் தொழுதனன் என்பதாம். ஆள்நாதனை என்றும் பிரிக்கலாம். பி - ம்:—[1]வணங் கினன்.

(98)

வேறு.

## 26.—இந்திரன் இராமபிரானைத் துதிக்கத் தொடங்குதல்.

துவசமார் தொல்லமருட் டுன்னாரைச் செற்றுஞ் சுருதிப் பெருங் கடலின் சொற்பொருள் கற்பித்தும், திவசமா நல்லறத்தின் செந் நெறியி னுய்த்துந் திருவளித்தும் வீடளித்துஞ் சிங்காமைத் தங்கள், கவசமா யாருயிராய் [1]மெய்த்தவமாய்க் கண்ணாய்க் கடையிலா ஞான மாய்க் காப்பானைக் காணு, அவசமாய்ச் சிந்தை யழிந்தயலே நின்று னறியாதான் போல வறிந்தவெலாஞ் சொல்வான்.

(இ - ள்.) துவசம் ஆர் - வெற்றிக்கொடிகள் நிறைந்த, தொல் அமருள் - பழமையாகிய யுத்தங்களில், துன்னாரை - பகைவர்களை, செற்றுஉம் - கொன்றும்,—சுருதி பெருங்கடலின் - பெரியகடல் போன்ற வேதங்களின், சொல் பொருள் - பதங்களையும் அருத்தங் களையும், கற்பித்துஉம் - உபதேசித்தும், திவசம்ஆ-நாள்தோறும், நல் அறத்தின் - நல்லதருமத்தினது, செம் நெறியின் - சன்மார்க்கத் தில், உய்த்துஉம் - கொண்டுசெலுத்தியும், திரு - செல்வத்தை, அளித்துஉம் - கொடுத்தருளியும்,— வீடு - பரமபதத்தை, அளித் தும்—,—சிங்காமை-அழியாதபடி, தங்கள் - (தேவரான) தங்களுக்கு, கவசம்ஆய் - கவசமாகியும், அரு உயிர்ஆய் - அரிய உயிராகியும், மெய் தவம் ஆய் - உண்மைத் தவமாகியும், கண்ஆய் - விவேகமாகி யும், கடை இலா ஞானம்ஆய் முடிவில்லாத தத்துவ ஞானமாகியும், காப்பானை - காக்கின்ற இராமபிரானை, காணு - கண்டு, (இந்திரன்), அவசம் ஆய் - பரவசமாகி, சிந்தை அழிந்து—, அயலே நின்றான் - (அவனது) பக்கத்தில் நின்றவனாகி,— அறியாதான் போல - (அவனது மகிமைகளை நன்றாய்த்) தெரியாதவன் போலவே, அறிந்த எலாம் - (தான்) அறிந்த அவனது மகிமைகளை யெல்லாம், சொல் வான் - கூறித் துதிசெய்வான்; (எ - று.)—இந்திரன் துதிப்பதை மேல் ஐந்து கவிகளிற் காண்க.

தேவாசுரயுத்தங்களிற் பலமுறையுஞ் சென்று பொருது தீநெறியிலொழுகுகின்ற அசுரர் முதலியோரை அழித்து நல்வழிச் செல்லுகின்ற தேவர்களைக் காத்தருளுதலால் 'துவசமார்தொல்ல மருட் டுன்னுரைச் செற்று' என்றும், வேதங்களையும் அவற்றின் பொருளையும் ஆதியில் ஹம்ஸரூபியாய்ப் பிரமதேவனுக்கு உப தேசித்தருளினதனால் 'சுருதிப்பெருங்கடலின் சொற்பொருள் கற்பித்து' என்றும், தருமத்தினின்றும் வழுவி அதருமத்தை அநுஷ்டிக்குங்காலத்தில் அப்பொழுதைக்கப்பொழுது அநேக திருவவதாரங்கள் செய்து தருமத்தை நிலைகுலையாதபடி நிறுத்து தலால் 'திவசமா நல்லறத்தின் செந்நெறியி னுய்த்து' என்றும், தன்திருவடி யடைந்தவர்களுக்கு இம்மை மறுமை வீடென்னும் மூன்றிலும் அளவில்லாத சிறந்த இன்பங்களைத் தருதலால் 'திருவளித்தும் வீடளித்தும்' என்றும், பிரளயகாலத்தில் அனைத் தையுந் தன்வயிற்றுள் அழியாதபடி அடக்கிவைத்துக் காத்தலால் 'சிங்காமைத் தங்கள் கவசமாய்' என்றும், அந்தர்யாமியாய் எல்லாப் பொருள்களுள்ளும் மறைந்திருத்தலால் 'ஆருயிராய்' என்றும், ஈசுவரனை அடைவதற்குத் தத்துவஞானமும் அந்த ஞானத்தைப் பெறுதற்கு விவேகமும் அதற்குத்தவமும் முறையே ஒன்றுக் கொன்று இன்றியமையாத காரண மாதலால் அவை யெல்லாம் சருவேசுவரனது சொரூபமே யென்பது விளங்க 'தவமாய்க் கண்ணுய்க் கடையிலாஞானமாய்' என்றும், முத்தொழிலிலும் அளித்தல் தொழிற்குஉரிய கடவுளது அவதாரமாதலால் 'காப்பான்' என்றுங் கூறினர். அவசமாய்-தன்வசமில்லாமல். அவசமாதலும் சிந்தையழி தலும், பக்திமிகுதியா லுளவான மெய்ப்பாடுகளென்க. இனி, அறியா தான்போல அயலேநின்று னெனமாற்றி, பக்திமிகுதியால் ஒன்று மறியாத பித்தனைப்போலப் பக்கத்திற் சற்றேநின்று பின்தெளிந்து, அறிந்தவெலாஞ் சொல்வானென்றுமாம். நின்றுனென்பதில் இரண்ட னுருபு தொக்கதாக்கொண்டு, ஸர்வஜ்ஞத்துவமுடையனுயினுந் தான்கொண்ட அவதாரத்திற்கு இணங்க யாதொன்றுந்தெரியாத வனைப்போல அருகிலேநின்ற இராமனை நோக்கி இந்திரன் தானறிந் தவையெல்லாஞ் சொல்வானென்றும் உரைப்பினும் அமையும். துவசம் = த்வஜம். வேதங்கள் தாம் அநந்தமா யிருத்தலால் அவற்றிற் குப பெருங்கடலை உவமை கூறினர். திரு-இவ்வுலகங்களிலடைகின்ற அஷ்டைசுவரியங்கள். கடையில்லாமை - தாழ்வில்லாமையுமாம். பி - ம்:—[1] தவமாய்.

இதுமுதல் ஆறுகவிகள் - மாச்சீரும் விளச்சீரும் காய்ச்சீரும் விரவிவந்த கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரிய விருத் தங்கள். (99)

## 27.—இதுமுதல் ஐந்துகவிகள் - இந்திரனது தோத்திரம்.

[1]தோய்ந்தும் பொருளனைத்துந் [2]தோயாது நின்ற [3]சுடரே தொடக் கறுத்தோர் சுற்றமே பற்றி, நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா நிலயமே வேத நெறிமுறையி னேடி, ஆய்ந்த வுணர்வி னுணர்வே

*பகையா லலைப்புண் டடியே மடிபோற்ற வந்நாள், ஈந்த வரமுதவ வெய்தினையே யெந்தா யிருநிலத்த வோநின் னிணையடித் தாமரை தாம்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பொருள் அனைத்தும் - எல்லாப் பொருள்களிலும், தோய்ந்தும் - (அந்தர்யாமியாய்க்) கலந்திருந்தும், தோயாது நின்ற - (அவற்றின் குண தோஷங்களில் தான்) சம்பந்தப்படாமலே நின்ற, சுடரே - சோதியுருவமே! தொடக்கு அறுத்தோர் - பற்றுக் களை முற்றத்துறந்த முனிவர்களுக்கு, சுற்றமே - உறவானவனே! பற்றி நீந்த அரிய - (ஒன்றைப்) புணையாகக்கொண்டு கடப்பதற்கு அரிதாகிய, நெடுங் கருணைக்கு எல்லாம் நிலயமே - மிக்க அருளுக் கெல்லாம் இருப்பிடமானவனே! [கிருபாசாகரமே!] வேதம் நெறி முறையின் - வேதங்களிற்கூறிய வழிகளின் முறைமையால், நேடி - தேடி, ஆய்ந்த - ஆராய்ந்தறிந்த, உணர்வின்-தத்துவஞானத்திற்கு, உணர்வே - அறியப்படும் பொருளே! எந்தாய் - எமக்குத் தாயுந் தந்தையுமானவனே!— அடியேம் - அடியவர்களாகிய யாங்கள், பகையால் - பகைவர்களால், அலைப்புண்டு - துன்பப்படுத்தப்பட்டு, அடி போற்ற - (உன்) திருவடிகளை (வந்து) துதிக்க, அ நாள் - அப்பொழுது, ஈந்த - தந்தருளிய, வரம் - வரத்தின்படி, உதவ-உதவி செய்தற்கு, எய்தினை - (இப்பொழுது) எழுந்தருளினையே! நின் இணை அடி தாமரை - உனது இரண்டு திருவடித் தாமரைகள், இரு நிலத்தவோ - இப்பெரிய பூமியிற் பொருந்தத்தக்கனவோ? (எ-று.)

பரம்பொருளே! கால்நிலந்தோயாது நிற்றற்கு உரிய நீ, எமது விருப்பத்தின்படியே மண்ணில் தாள்தோயத் திருவவதரித் தனையே! உன் கருணையை என்னென்பது! ! என்று ஈடுபட்டுக்கூறு கின்றன னென்பதாம். தொடக்கறுத்தோர்சுற்றம்—பற்றற்றார் பற்று. அகத்திலுள்ள அஜ்ஞாநவிருளைப் போக்கி ஞான வொளியைத் தருதலால் 'சுடர்' என்றும், முனிவர்களைக் காப் பதற்கு மனிதனாய்த் திருவவதரித்து அவர்கள்பக்கற் சேர்ந்த தனால் 'தொடக்கறுத்தோர் சுற்றம்' என்றும் கூறினான். தொடக்கறுத்தல் - தானல்லாத உடம்பை யானென்றும் தன் னுடைமையில்லாத பொருளை எனதென்றும் கருதி அவற்றின்கட் பற்றுச்செய்தற்கு ஏதுவாகிய அறியாமையை, ஆசிரியர்பாற் பெற்ற உறுதிமொழிகளானும் யோகப்பயிற்சியானும் அவை யான் எனது அன்மை தெளிந்து விடுதல். கருணைக்கு நீந்தவரிய நிலய மென்றதனால், அவனது கருணைக்கு அளவில்லை யென்ற தாயிற்று. பகை - பண்பாகுபெயர். பிரமன் முதலிய மற்றைத் தேவர்களையும் உளப்படுத்தி, 'அடியேம்' என்றான். அந்நாள் - தேவர்கள் மேருமலைமீதிருந்து பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பரமனைப் பிரார்த்தித்த காலம். ஈந்த வரம் - "வருந்தல் வஞ்சகர் தந்தலை யறுத்திடர் தணிப்பென்," "தசரதன் மதலையா வருதும்," "வளையொடுதிகிரியும் * * * பாயலும், இளையர்களென வடிபரவ வேகிநாம், வளைமதிலயோத்தியில் வருதும்" என்றது. பி - ம்:—

[1]தோய்ந்து. [2]தோயாதநின்ற, தோயாதசொரு. [3]சொல்சுடரே [4]வெம்பகையால், வினையால். (100)

28. மேவா தவரில்லை மேவினரு மில்லை வெளியோ டிருளில்லை மேல்கீழு மில்லை, [1]மூவாமை யில்லை மூத்தமையு மில்லை முதலிடையோ டீறில்லை முன்னொடு பின்னில்லை, தேவாவிங் [2]கிவ்வோ [3]நின்னொன்று நிலையென்றாற் சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிக ணோவக், [4]காவா தொழியிற் பழிபெரிதோ வன்றேற் கருங்கடலிற் [5]கண்வளர்ந்தோய் கைம்மாறு முண்டோ.

(இ - ள்.) தேவா - தேவனே! கருங் கடலில் - கருநிறமடைந்த திருப்பாற்கடலில், கண் வளர்ந்தோய் - திருக்கண்வளர்ந்தருளுகின்றவனே!—(உனக்கு), மேவாதவர்-பகைவர், இல்லை—;-மேவினர்உம்-நண்பர்களும், இல்லை—; வெளியோடு-ஒளியும், இருள் - இருளும் இல்லை—; மேல் கீழும்-மேலும் கீழும், இல்லை—; மூவாமை - இளமை, இல்லை—; மூத்தமைஉம்-முதுமையும், இல்லை—; முதல் இடையோடு ஈறு - ஆதியும் மத்தியமும் அந்தமும், இல்லை—; முன்னொடு பின் - முன்னும் பின்னும், இல்லை—; நின்ஒன்று நிலை-நின்னிடம் பொருந்திய நிலைமை, இங்கு இவ்வோ என்றால் - இங்கு(க் கூறிய) இவைகளே யென்றால், சிலை ஏந்தி-கோதண்டத்தைக் கையிலேந்தி, சே அடிகள் நோவ-சிவந்த திருவடிகள் நோகும்படி, வந்து-நடந்துவந்து, எம்மை - எங்களை, காவாது ஒழியின் - காவாமற் போனால், பழி பெரிதுஓ - பெரும்பழி உளதாமோ? அன்றுஎல் - அதுவன்றாயின், கைம்மாறுஉம் - பிரதியுபகாரமும், உண்டுஓ - உளதோ? [இல்லை யென்றபடி]; (எ-று.)

பகைநண்பொடில்லானாகிய நீ அசுரர்களையழித்து எம்மைக் காப்பது, தன்னைச் சரணமடைந்தவர்களைக் காவாது கைவிட்டாற் பெரும்பழியுளதா மென்னுங் கருத்தாலோ? அன்றிக்கே, எம்மிடத்துப் பிரதியுபகாரம் பெறலா மென்னுங் கருத்தாலோ? ஒன்றுமின் றென்பதாம்; அடைந்தார்க்கு அளித்தல் இறைவனுக்கு இயல்பென்க. நித்தியனாதலால், "மூவாமையில்லை மூத்தமையுமில்லை முதலிடையோ டீறில்லை" என்றான். இங்கு வந்து என்றுங் கூட்டலாம்.

திருப்பாற்கடல் வெளுத்த நிறத்ததாயினுந் திருமாலினது திருமேனியின் நிழலீட்டாலே கறுத்த நிறத்த தாதலால், 'கருங் கடல்' என்றான்; 'நீலக் கடலுள் நெடுங்காலங் கண்வளர்ந்தான்", "நீலக்கடல் கடைந்தாய்" என்றார் பெரியாரும். இனி, கடல்கள் தோறுங் கண்வளர்ந் தருளுமென்று ஒரு பிரமாணஸித்தி யுண்டாகையாலே, "உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான்" என்கிறபடியே, 'கருங்கடல்' என்று இந்த லவணசமுத்திரந் தன்னையே சொல்லிற்றாகவுமாம்; இனி, பிரளயகாலத்துக் கடலுமாம்; அன்றிக்கே, கருமை-பெருமையாய்ப் பெருங்கட லென்றுமாம். [5]கண்வளராய் என்ற பாடத்துக்கு-வளராய் என்பது மறையாகாது வழக்காய் உடன்பாடுணர்த்திற்று; இது "வேண்டுவனம்பி" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளில் 'வில்வலான்' என்பதற்கு நச்சினார்க்கினியருரைத்த உரையான்

விளங்கும்; அன்றிக்கே, எதிர்மறையாகவே கொண்டு, பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடி வந்து இங்குத் திருவவதரித்தவனே யென்றும் உரைக்கலாம். சேவடிகள் நோவவென்பது. பக்தியதி சயத்தை விளக்குகின்றது; மேற்கவியில் 'தாமரைக்கைநோவ' என்ப தும் இக்கருத்தேபற்றி யென்க. பி - ம்:—[1]மூவாதமை. [2]இதுவோ. [3]நீசென்ற. [4]காவாது நீயொழியிற் பழி பெரிதோவன்றே. [5]கண் வளரக், கண்வளர்ந்தாய். (101)

29. நாழி நவைதீ [1]ருலகமெலா மாக நளினத்து நீதந்த நான் முகனார் தாமே, ஊழி பலபலவு நின்றளந்தா [2]லொன்று முலவாப் பெருங் [3]குணத்த வுத்தமனே மேனாள், தாழி தரையாகத் தண்டயிர் நீராகத் தடவரையே மத்தாகத் தாமரைக் கைநோவ, ஆழி கடைந்த முத மெங்களுக்கே யீந்தா யவுணர்கடா [4]நின்னடிமை யல்லாமை யுண்டோ.

(இ - ள்.) நீ—, நளினத்து - (உனது) திருவுந்தித்தாமரையில் தந்த - தோற்றுவித்த, நான்முகனார்தாமே - பிரமதேவரே, நவை தீர் உலகம் எல்லாம்-குற்றமற்ற உலகங்களெல்லாம், நாழி ஆக - அளவுகருவியாகக் கொண்டு, ஊழி பல பலஉம் - அநேக கற்ப காலமும், நின்று - ஒழியாமலிருந்து, அளந்தால் - (உனது திருக் கலியாணகுணங்களைத் தானியராசியாக்கொண்டு) அளவிட்டாலும், ஒன்றும் உலவா-(அவற்றுள்) சிறிதும் முடியாத, பெருங்குணத்த - மிக்க திருக்கலியாண குணங்களையுடைய, உத்தமனே புருஷோத் தமனே! (நீ), - மேல் நாள் - முற்காலத்தில், தரை தாழி ஆக-பூமியே தயிர்த்தாழியாகவும், நீர் தண் தயிர் ஆக-திருப்பாற்கடலே குளிர்ந்த தயிராகவும், தட வரைஏ மத்து ஆக-பெரிய மந்தரமலையே கடைகிற மத்தாகவும் (கொண்டு), தாமரை கை நோவ - (உனது) தாமரை மலர்க்கு ஒப்பான திருக்கைகள் நோகும்படி, ஆழி கடைந்து - கடலைக் கடைந்து, அமுதம்-(அதினின்றும் எடுத்த) அமிருதத்தை, எங்களு க்குஏ - (தேவர்களாகிய) எங்களுக்கு மாத்திரமே, ஈந்தாய் - கொடுத் தருளினாய்: அவுணர்கள் - (கடைகையில் எங்களோடு பாடுபட்ட) அசுரர்கள், நின் அடிமை அல்லாமை-உனது அடியவராகாமைஉண் டோ - உளதோ? (எ - று.)

பிரமனாலும் அளவிடலரிய பெருங்குணங்களையுடையாயென் றது, நின்மைந்தனாய் நாபியிற்றோன்றி உலகனைத்தும் படைக்கும் பிரமனுக்குஞ் சிறிதும் அளப்பரிய அநந்தகலியாண குணங்கள் எங்களாற் சிறிதேனும் அறியத்தக்கனவோ என்ற கருத்தினது. யாவருந் தனக்கடியார்களே யாயினுந் துஷ்டர்களை நிக்கிரகித்துச் சிஷ்டர்களைப் பரிபாலனஞ் செய்யுந் தன்மையனாதலால், அசுரர் களுக்கு அமுத மீயாமல், அமரர்களுக்கே ஈந்தானென்க. பகவா னது கலியாண குணங்களைத் தானியராசியாகவும், பலவாயிரம் அண்டங்களையும் அளவு கருவியாகவும், பிரமனை அளவுகாரனாக வும் உருவகப்படுத்தினான், அவற்றின் அளப்பருமையைக் குறித் தற்கு. உலகங்களை நாழியென்றதற்கு ஏற்பக் குணங்களைத் தானிய ராசியென்னுமை, ஏகதேசவுருவகம். பிச்சையளவுகருவியன்றென் றற்கு, 'நவை தீருலகு' என்றான். 'நீர்' என்பதற்கு, சந்தர்ப்பம்

நோக்கிப் பாலெனப் பொருள்கொள்ளப்பட்டது. உலகு - உயர்ந்தவரு மாம். மத்து = மந்தம்: வடசொல். எங்களுக்கே, ஏகாரம் - பிரிநிலை. அடிமை - பண்பாகுபெயர்.

அமரர்களும் அசுரர்களும் தனது நியமநத்தின்படி மந்தரபருவ தத்தை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிருகவுங் கொண்டு திருப் பாற்கடலைக்கடையும்போது எம்பெருமான் தேவர்களை வாசுகியின் வாலையும் அசுரர்களைத் தலையையும் பிடிக்கும்படியாக நியமித்துத் தானும் ஒருதிருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொருதிருமேனியைத்தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும்நின்று வாசுகியினுடைய வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தருளினதனுல் 'தாமரைக் கைநோவ ஆழிகடைந்து' என்றும், அப்பால் அமிருத பூர்ணமான கலசத்தைக் கையிலெடுத் துக்கொண்டு அந்தப்பாற்கடலிலிருந்து உதித்த தந்வந்திரியின் கையிலிருந்த அந்தஅமிருதகலசத்தைத் தைத்தியர்கள் வலியக் கவர்ந்துகொண்டபோது ஜகந்மோகநகரமான ஒருபெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர் களுக்கு அருளியதனுல், 'அமுதம் எங்களுக்கே யீந்தாய்' என்றுங் கூறினன். பி - ம்:—[1]உலகெலாம். [2]என்றும். [3]குணத்தெம். [4]உனக்கு. (102)

30. ஒன்[1]ருகி மூலத் துருவம் பல[2]வாகி [3]யுணர்வு முயி ரும் பிறிதாகி யூழி, சென்ரு சறுங்காலத் [4]தந்நிலைய தாகித் [5]திறத்துலகந் தாகிச் [6]செஞ்செவே நின்ற, நன்ருய ஞானத் தனிக்கொழுந்தே நங்க ணவைதீர்க்கு நாயகமே நல்வினையே நோக்கி, நின்ருரைக் காத்தி [7]யயற்பேரைக் காய்தி [8]நிலையில் லாத் தீவினையு நீதந்த தன்றே.

(இ - ள்.) மூலத்து - ஆதிகாலத்தில், ஒன்று ஆகி - ஒன்றே யாகி யிருந்து, (பின்பு), உருவம் பல ஆகி - பலவேறு ரூபங்களாய், (அந்தவேறு வடிவங்களிலும்), உணர்வுஉம் உயிர்உம் பிறிது (உம்) ஆகி - அறிவும் உயிரும் உடலுமாகி, ஊழி சென்று ஆசறும் காலத்து - மகாப்பிரளயமுண்டாகி முடியுங்காலத்தில், அந் நிலையது ஆகி - அப்பொழுதுள்ள தன்மையாகி [ஒன்ருகி], திறத்து உலகம் ஆகி - (மீண்டும்படைக்கும்பொழுது) பலதிறப்பட்ட உலகங்களுமாய், செஞ்செவே நின்ற - மிகவுஞ் செவ்வையாய் நின்ற, நன்று ஆய ஞானம் - நல்ல தத்துவஞானத்தினது, தனி கொழுந்தே - ஒப்பற்ற கொழுந்தே! நங்கள் நவை தீர்க்கும் - எங்கள் குறைகளைப் போக்கு கின்ற, நாயகமே - தலைமைப்பொருளே! (நீ), நல்வினைஏ நோக்கி நின் ருரை - புண்ணியத்தையே கருதி(த் தருமங்களைச்செய்து) நிற்பவர் களை, காத்தி - காக்கின்ருய்; அயல் பேரை - பாவத்தையே கருதி அதருமங்களைச் செய்துநிற்பவர்களை, காய்தி - நிக்கிரகிக்கின்ருய்; நிலை இல்லா தீவினைஉம் - நிலையில்லாத அப்பாவமும், நீ தந்தது அன்றே - நீ உண்டாக்கிய தன்ருே? (எ - று.)

"ஸதேவ ஸோம்ய இதம் அக்ர ஆஸீத்" என்கிறபடியே படைப் புக்காலத்திற்குமுன் சேதநாசேதநங்களெல்லாம் தன் திருமேனிக்

குள் இலயித்து நிற்கப் பரம்பொருள் ஒன்றே நிற்கும்: அந்தப் பரம் பொருள் "பஹு ஸ்யாம் [பலவாக ஆகக் கடவேன்]" என்று சங்கற் பங்கொண்டு இவ்வுலகத்தையெல்லாம் தன் திருமேனியினின்று விரியச்செய்யும்: இங்ஙனம் தேவ திர்யக் மநுஷ்ய ஸ்தாவரங்களாகிய நால்வகைப் பிறவியாகத் தோன்றிய பொருள்தோறும் "கரந்தசில் இடந்தொறும் இடந்திகழ்பொருள்தொறும் கரந்தெங்கும் பரந் துளன் இவையுண்டகரனே" என்றபடி அந்த ஞானத் தனிமூர்த்தி பரந்திருப்பானாதலால் 'ஒன்றாகி...ஞானக்கொழுந்தே' என்றது. 'ஊழி சென்றுசறுங்காலத்து அந்நிலையதாகித் திறத்துலகந்தானாகி' என்ற தொடர், ஒன்றாகி மூலத்துருவம் பலவாகி உணர்வும் உயிரும் பிறிதாகி என்பதை விவரிப்பதாகும். அயோத்தியாகாண்டத்தில் "வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கு, மூனு முயிரு முணர்வும்போ லுள்ளும் புறனு முளனென்ப" என்றதற்கு ஏற்பப் பிறிதென்பதற்கு உடலென்றுஉரைத்து, எண்ணும்மை பின் னுங் கூட்டப்பட்டது.

ஆசறுதல் - முடிதல்; நிலையில்லாத்தீவினை - தோற்றமுடைய பொருள்கள் யாவும் நிலையுத லிலவாந் தன்மையை யுணராமையால் உளவாகுந் தீவினைகள். தீவினையுந் தான் தந்ததேயாயினும் அவரவர் செய்வினைக்குத் தக்கபடி அளித்தலும் அழித்தலும் ஈசுவரனது இயற்கை. தந்ததென்றார், சாதியொருமையால். பி - ம்:—[1] ஆகும். [2] ஆய். [3] உணர்வாகியுயிராகிப், உரையாயுயிராய்ப். [4] அன்னிலையதாகி. [5] தீர்ந்து. [6] செவ்வேதானின்ற. [7] அயலாரை. [8] நிலையாத. (103)

31. வல்லை வரம்பில்லாத மாயவினை தன்னான் [1]மயங்கி னரோ டெய்தி மதிமயங்கி மேனாள், அல்லை யிறையவனீ யாதியெனப் பேதுற் [2]றலமருவே முன்னை யறப்பய னுண்டாக, எல்லை [3]வலயங்க [4]ணின்னுழையென் றந்நா ளெரியோனைத் தீண்டி யெழுவ ரெனநின்ற, தொல்லை [5]முதன்முனிவர் சூளுற்ற போதே தொகைநின்ற வையந் துடைத்திலையோ வெந்தாய்.

(இ - ள்.) எந்தாய்—! மேல்நாள் - முன்னொருகாலத்தில், வரம்பு இல்லாத - அளவில்லாத, மாயவினை தன்னால் - மாயையின் சூழ்ச்சி களால், நீ இறைவன் அல்லை (என) - நீ பரதத்துவமல்லாயென்றும், (நீ இறையவன்) ஆதி என - நீயே பரதத்துவமாகிறா யென்றும், பேதுற்று - (இரண்டிலொன்றைத் துணியமாட்டாமற்) பேதப்பட்டு, மயங்கினரோடு - மதிமயங்கிக்கிடந்த பல தேவர்களுடனும் முனிவர்க ளுடனும், எய்தி-அடைந்து, மதி மயங்கி - அறிவுதிகைத்து, அலமரு வேம் முன்னை-தடுமாறுகின்ற எங்களுக்கெதிரில், அந்நாள் - அப் பொழுது, அறம் பயன் உண்டாக - (முன்செய்த) நல்வினையின் பலனுண்டாதலால், வல்லை-விரைவாக, எழுவர் என நின்ற தொல்லை முதல் முனிவர் - ஏழுபேரென்று சிறப்பித்துச்சொல்லும்படி நின்ற பழைய முதன்மையான முனிவர், எரியோனை - பரமசிவனை, தீண்டி - சேர்ந்து (மீண்டுவந்து), 'எல்லை வலயங்கள் - எல்லா வுலகங்களது எல்லையும், நின்னுழை - உன்னிடத்தே (தோன்றி வளர்ந்துவருபவை): [நீயே பரதத்துவம்].' என்று—, சூள் உற்ற

போதே-சித்தாந்தஞ் செய்த காலத்தே, தொகை நின்ற ஐயம்-(மிகுதி யாய்த்) தொக்குநின்ற சந்தேகத்தை, துடைத்திலை - (நீ) தீர்த்தா யல்லையோ? (எ - று.)

மாயவினை - ராஜஸ தாமஸ புராணங்களில் பிறகடவுளரைப் பரதேவதையாகச் சொல்லியமை. இறைவன் - மத்திமதீபம். பேது - பேதம்: விகாரம். கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி நெருப்புப் போல எரியும் மேனிநிறத்தை யுடைத்தாயிருத்தலால், 'எரியோன்' என்றார்; "தழனிற வண்ணன்" என்றார், பெரியாரும்: 'எரியோனைத் தீண்டி' எனவே, இனம்பற்றிப் பிரமனைத்தீண்டி யென்பதுங் கொள்க. எழுவர் முனிவர்-ஸப்தருஷிகள்; அத்திரி, பிருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கீரஸர். முனிவர் கூறுற்றது - பிருகுமுனிவர்மூலமாகப் பரதத்துவத்தை நிச்சயித்தது.

இச்செய்யுளிற் குறித்த செய்தி வருமாறு:—முன்னொரு காலத்தில் முனிவர் தேவர் முதலிய யாவரும் கூடி மேருமலையின் சிகரத்தைச் சேர்ந்து பரதத்துவநிர்ணயஞ்செய்யத் தொடங்கினபொழுது, முத் தொழிற்கும் உரியராய அயன் அரி அரன் என்னும் மூர்த்திகள் மூவருள்ளும் பரதத்துவம் இன்னாரென்று அறியாது ஐயமுற்று ராஜஸ தாமஸ புராணங்களிற் கூறியுள்ள கோட்பாடுகளால் மயங்கி மாறுபட்டு, ஸப்தருஷிகளைச் சரணமடைந்து வினவ, அவர்களுள் தலைமைபெற்ற பிருகுமாமுனிவன், 'முக்குணங்களுள்ளும் சத்துவ குணத்தையே யுடையவன் யாவனோ, அவனே பரதத்துவம்; அவனை இன்னானென்று சென்று அறிந்துவந்து சொல்வேன்' என்று, முதலிற் கைலாசகிரிக்குச் சென்று கோயில் வாயிலைச்சேர்ந்து ஆங்குள்ள நந்திதேவரால் தடுக்கப்பட்டு ஏழுநாள்கழிந்தபின்னர்ச் சிவன் உமாதேவியோடு புணர்ச்சி செய்து கொண்டிருக்குந் தன்மையை அறிந்து 'தாமசகுணத்தாற் காமமுற்று என்னை விஞவிச் சற்கரியாதிருந்த அக்கடவுட்கு இருகுறியுந் துணிந்து விழக்கடவது' என்று சபித்துப்போக, அவ்வளவிற் கலவிப்பெருங்கடல் கடந்து வந்த முக்கட்கடவுள் நந்தியால் நிகழ்ந்தது உணர்ந்து அம்முனிவனை மீள அழைத்து அவன் சினந் தீர்க்கும்பொருட்டுத் தன்னுடன் பிறந்தவ னென்னுங் கருத்தால் தழுவுமாறு அணுகியபொழுது, அம் முனிவன், 'வாலாமை [அசுசி] யான நீ என்னைத் தொடாதே' என்று தடுக்க, உமாபதி, மிகச்சினந்து தனது நெற்றியிலுள்ள நெருப்புக் கண்ணை விழித்து அம்முனியை அழிக்கப் பார்த்தவளவில், அவன் அஞ்சாது தன்பாதத்தின் பெருவிரலிலுள்ள கண்ணைவிழித்து அதனினின்று எழுந்த அழலால் அவ்வழலை அடக்கிவிட்டு, 'நீ பிராமணியதெய்வ மாகாது போதி' என்று மீளவுஞ் சபித்திட்டுச் சத்தியலோகஞ்சேர்ந்து பிரமனை யடைந்து வணங்க, அவன் ராஜச குணத்தால் தந்தையைத் தனயன் வணங்குதல் தக்கதே யென நினைந்து பிரதிவந்தனமுஞ் செய்யாதிருக்க, முனிவன், பெற்ற தந்தை யென்பதையு மெண்ணமல் 'உனக்கு ஆலயபிரதிஷ்டை இன்றுமுதல் இல்லையாகுக' என்று சாபங் கொடுத்து, ஸ்ரீவைகுண்டஞ்சென்று கோயில்சேர்ந்து வாயில் காவலர் அஞ்சிநிற்க உள்ளேபுக்குத் திருவனந்தாழ்வான்மேலே திருமகளும் நிலமகளும் திருவடிவருடப்

பள்ளிகொண்டிருக்கும் பரமனை மார்பி லுதைக்க, அப்பெருமான் மக்கள் மேல்விழத் தாயுகப்பதுபோல மனம் மகிழ்ந்து அக்கணத் தினிற் கடிதெழுந்து 'ஐய! என்பொருட்டாக இன்று உமது மெல்லிய பாதம் நொந்ததோ? உமது திருவடித்தாமரை பட்டதனால், என் மார்வம் திருநிலைபெற்றது; நுமதுவரவை யான் அறியாது படுத் திருந்ததனைப் பொறுப்பீர்' எனப் பலவாறு முகமனியம்ப, முனிவன் அப்பரமன் திருவடிகளில் விழுந்து தண்டனிட்டுக் கைகூப்பிக் கொண்டு, 'சுத்தசாத்துவிக குணசுவரூபியாகிய பரதத்துவத்தை அறியும் பொருட்டு யான் செய்த இப்பெரும்பிழையைப் பொறுத் தருள்க' என்று பிரார்த்தித்து, மேரு சேர்ந்து தன்வருகையையே எதிர்பார்த்திருந்த யாவர்க்கும் 'ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவம்' என்று சித்தாந்தஞ்செய்து பகர, ஆங்குள்ளவர் யாவரும் அவ் வெம்பெருமானையே பிரார்த்தித்துப் போயின ரென்பதாம். பி - ம்:—[1]மயங்கினர்களோடே. [2]அலமருவோர். [3]உலகங்கள். [4]எம்முறை. [5]மறை.

(104)

வேறு.

## 32.—இந்திரன் விடைபெற்றுத் தன்னகரஞ் சார்தல்.

இன்னன பலநினைந் தேத்தின னியம்பாத்
துன்னுத லிடையுள தெனிநனி துணிவான்
தன்னிகர் முனிவனைத் [1]தரவிடை யென்னுப்
பொன்னொளிர் நெடுமுடி புரந்தரன் போனான்.

(இ - ள்.) பொன் ஒளிர் - பொன்மயமாகி விளங்குகின்ற, நெடு முடி-நீண்டகிரீடத்தையுடைய, புரந்தரன்-தேவேந்திரன், - இன்னன பல-இத்தன்மையாகிய பலவற்றை, நினைந்து-(மனத்தில்)தியானித்து, இயம்பா - (வாயினால்) சொல்லி, ஏத்தினன் - துதிசெய்தவனாய்,— 'இடை-நடுவிலே, துன்னுதல்-பொருந்துவதொரு விசேஷம், உளது - இருக்கின்றது,' என-என்று, நனி துணிவான் - நன்றாக நிச்சயிப் பவனாய்,—தன் நிகர் முனிவனை - தனக்குத்தானே ஒப்பாகிய சரபங் கனை நோக்கி, 'விடை தர - (யான் போவதற்கு) உத்தரவு கொடுப் பீராக,' என்னா - என்று கேட்டு (உத்தரவு பெற்றுக்கொண்டு), போனான்-(தேவலோகத்திற்குச்) சென்றான்; (எ - று.)

துன்னுத லிடையுள தென்றது - இராமபிரான் அங்கு எழுந் தருளியதனால், அப்போது அங்கு நடக்கப்போவதனைச் சிந்தித்து. தர = அகரவீற்று வியங்கோள். இராமனிடத்து விடைபெற்றமை, அருத்தாபத்தியாற் கொள்க. புரந்தரன் - (பகைவரது) நகரங்களை அல்லது உடல்களை அழிப்பவன். பி - ம் :—[1]தவிருதி.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - பெரும்பாலும் முதல் மூன்று சீர் விளச்சீர்களும் ஈற்றுச்சீரொன்று மாச்சீருமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள்.

(105)

## 33.—சரபங்கமுனிவன் இராமபிரானை வரவேற்று அன்பு கொள்ளுதல்.

**போனவ னகநிலை புலமையி னுணர்வான்
வானவர் தலைவனை வரவெதிர் கொண்டான்
ஆனவ னடிதொழ வருள் [1]வர வழுதான்
[2]தானுடை யிடவகை தழுவின னுழைவான்.**

(இ - ள்.) (பின்பு சரபங்கன்),—போனவன் - போன தேவேந்திரனது, அகம் நிலை - மனத்தின்நிலைமையை, புலமையின் - (தனது) ஞானக்கண்ணால், உணர்வான் - அறிபவனாகி,—வானவர் தலைவனை - தேவாதிதேவனாகிய ஸ்ரீராமனை, வர எதிர்கொண்டான் - எழுந்தருளும்பொழுது எதிர்கொண்டுவந்து அளவளாவினான்: (அப்பொழுது), ஆனவன் - அந்த இராமன், அடி தொழ - (முனிவனது) திருவடிகளில் விழுந்து வணங்க,—தான் உடை இடம்வகை-தான் உடைமையாகக்கருதுகின்ற (பரமபதமாகிய) வகுத்த தலத்தை, தழுவினன் நுழைவான் - தழுவிச்சேரப்போகின்றவனாய், அருள்வர - அன்பு மேன்மேலும் பெருகுதலால், அழுதான்—; (எ-று.)

இராமபிரானைத் தரிசித்தற்காகவே காத்திருப்பதனால் அப்பிரானைத் தரிசித்த முனிவனை 'எதிர்கொண்டான் தானுடையிடவகை தழுவினனுழைவான்' என்றார். வானவர் - நித்தியமுக்தர்களுமாம். அருள் - இலக்கணையாய், அன்பிற்காயிற்று; இனி, இராமனுக்கு அருளுண்டாகுமாறு அழுதா னென்றுமாம்: ஈண்டு அழுகை- உவகைக் கலுழ்ச்சி. இறைவனது உடைமையெல்லாம் அடியார்க்கு உரியவை ஆதலின், 'தானுடையிடவகை' என்றது: "குடியிருப்பாரோபாதியாயிற்று, பரமபதத்தில் ஸ்ரீவைகுண்ட நாதனுக்கு; ப்ராப்திதேசம் நித்யசூரிகள் இட்ட வழக்காயிருக்கும்" என்றனர், நம்பிள்ளைகள். "அடியாரது வைகுந்தம், அவனது வையம்" என்று அதிரஸமாகப் பணித்தனர்; பிள்ளைதிருநறையூரரையர். பி - ம்:— [1]புரிமுனிவன், நனிபுரிவான். [2]தானடவிட. (106)

## 34.—இராமன் சீதாலட்சுமணரோடு அங்குச்சென்று மகிழ்ந்திருத்தல்.

**ஏழையு மிளவலும் வருகென வினிதா
வாழிய வவரொடும் [1]வந்தனன் [2]மகிழ்வால்
ஊழியின் முதன்முனி [3]யுறையுளை யணுகா
ஆழியி [4]லறிதுயி லவனென மகிழ்வான்.**

(இ - ள்.) (சரபங்கன் இராமனைநோக்கி), 'இனிது ஆ வாழிய- நன்றாய் வாழ்க; ஏழைஉம் இளவல்உம் வருக - சீதையும் இலக்குமணனும் வருவார்களாக,' என - என்று சொல்ல,—(இராமன்), அவரொடும் - அவர்களுடனே, வந்தனன் - வந்தவனாய்,—மகிழ்வால்- சந்தோஷமாக, ஊழியின் முதல் முனி - பலயுகங்களுக்குமுன்னே தொடங்கி உள்ள அம்முனிவனது, உறையுளை - ஆச்சிரமத்தை, அணுகா - சேர்ந்து, ஆழியில் அறி துயிலவன் என - திருப்பாற்

கடலில் யோகநித்திரைகொண்டு திருக்கண்வளர்ந்தருளுகின்றவன் போல, மகிழ்வான் - களிப்பானுயினான்; (எ - று.)

ஆழியிலறிதுயிலவ னென மகிழ்வா னென்றது - அவ்வாச் சிரமத்தைத் திருப்பாற்கடல்போலெண்ணி மகிழ்ந்தா னென்றபடி. இனி, [3]உறையுளையணுக என்னும் பாடத்திற்கு - இராமன் சரபங்க னாச்சிரமத்தைச் சேர, அம்முனிவன் திருப்பாற்கடலில் யோகநித் திரை செய்தருளுகின்ற எம்பெருமா னென்று எண்ணி மகிழ்ந்தன னென்க. பி - ம்:—[1]வள்ளலும். [2]மகிழா. [3]உறையுளினுறைவான். [4]அறிதுயிலெனவகம், விழிதுயிலவனென. (107)

## 35.—இராமன்முதலியோர் முனிவனது நீதிமொழியைக் கேட்டுக்கொண்டு அவ்விரவில் அவ்வாச்சிரமத்தில் தங்குதல்.

அவ்வயி னழகனும் வைகின னறிஞன்
செவ்விய [1]வறவுரை செவிவயி [2]னுதவ
நவ்வியின் விழியவ ளொடுநனி யிருளைக்
கவ்விய நிசியொரு கடையுறு மளவின்.

(இ - ள்.) அவ் வயின் - அவ்விடத்தில், அறிஞன் - தத்துவ ஞானியாகிய அம்முனிவன், செவ்விய அறம் உரை - நல்லதரும வார்த்தைகளை, செவிவயின் - (தம்) காதுகளில், உதவ - கூற (க்கேட்டுக்கொண்டு),—அழகன்உம் - இராமனும், நவ்வியின் விழிய வளொடு - பெண்மான்போன்ற பார்வையையுடைய சீதையுடன், இருளை நனி கவ்விய - இருளை மிகுதியும் உடையதான, நிசி-இராத் திரியானது, ஒரு கடைஉறும் அளவின் - ஒருமுடிவை அடையு மளவும் [இராத்திரி கழியுமளவும்], வைகினன் - தங்கியிருந்தான்;

சீதையைக் கூறியது, இலட்சுமணனுக்கும் உபலட்சணம். பி-ம்:—[1]அறிவுரை. [2]நுகரா. (108)

## 36.—சூரியோதய வருணனை.

விலகிடு நிழலினன் வெயில்விரி யயில்வாள்
இலகிடு சுடரவ [1]னிசையன திசைதோய்
அலகிட [2]லரியத னவிர்கர நிரையால்
உலகிடு நிறையிரு ளுறையினை [3]யுரிவான்.

(இ - ள்.) (அப்பொழுது), விலகிடு நிழலினன் - வீசுகின்ற சாயையையுடையவனும், இலகிடு சுடரவன் - விளங்குகின்ற ஒளி யினையுடையவனுமாகிய சூரியன்,—இசையன - (ஒன்றோடொன்று) இணங்கி நிற்பனவாகிய, திசை - எல்லாத் திக்குகளிலும், தோய் - பரவுகின்ற, அலகு இடல் அரிய - எண்ணி யளவிடுதற்கு அரு மையான, அவிர் - விளங்குகின்ற, தன் - தனது, கரம் நிரையால் - கிரணங்களாகிய கைகளது கூட்டத்தால், விரி-பரப்புகின்ற, வெயில்- வெயிலாகிய, அயில் வாள் - கூர்மையான வாளைக்கொண்டு, உலகு இடு-உலகங்களை மூடிய, நிறை இருள் - நிறைந்த இருட்டாகிய, உறை யினை - போர்வையை, உரிவான் - கழற்றுவானுயினான்; (எ - று.)

சூரியன் தன்கிரணங்களால் இருள் நீங்குமாறு உதித்தன னென்பதாம்: உருவகத்தை யங்கமாகக்கொண்டுவந்த ஏதுத்தற்குறிப் பேற்றவணி. நிழலின னென்பதை இரண்டுசொல்லாகக் கொண்டு, நிழலையுடைய, இனன் - சூரிய னென்றுமாம். உலகை மூடிய இருளைப் போக்குதற்கு வெயிலும், அதனைப் பரப்புதற்குக் கிரணமும் கருவி யாதலால், அவற்றை முறையே உறையும், வாளும், கையுமாக உருவகப்படுத்தினர். இசை அன எனப்பிரித்து - இராமனது புகழை ஒக்கின்ற என்றும் கொள்ளலாம். ஆயிரங்கிரணங்க ளாதலால், 'அலகிடலரிய கரம்' என்றார். சிலேடையுருவகம்பற்றி, கரமென்ப தற்கு - கிரணமாகிய கை யெனப்பட்டது. பி - ம்:—[1] இசையென. [2] அரிதெனும். [3] உரிவார். (109)

## 37.—முனிவன் அக்கினிபிரவேசஞ்செய்யச் சித்தனாகி இராமனை விடைகேட்டல்.

ஆயிடை யறிஞனு மவனெதி [1] ரழுவத்
[2] தீயிடை நுழைவதொர் தெளிவினை [3] யுடையான்
நீவிடை தருகென நிறுவின னெறியால்
காயெரி வரன்முறை கடிதினி னிடுவான்.

(இ - ள்.) ஆயிடை - அப்பொழுது, அழுவம் தீயிடை - மிருந்த அக்கினியில், நுழைவது - பிரவேசிப்பதாகிய, ஒர் தெளிவினை - ஒப் பற்றதொரு தெளிந்த அறிவை, உடையான் - உடையவனாகிய, அறிஞன்உம் - சரபங்கனும்,- அவன்எதிர் - அவ்விராமபிரானுக்கு எதிராக, காய் எரி - சொலிக்கின்ற நெருப்பை, வரன்முறை நெறி யால் - சாஸ்திரவிதியின் முறைமைப்படி, கடிதினின் - விரைவில், இடுவான் - வளர்ப்பவனாகி,—(இராமனைநோக்கி), 'நீ—, விடை தருக - விடைகொடுக்கவேண்டும்,' என - என்று, நிறுவினன் - கேட்டான்; (எ - று.)

'இடுவான்' என்பதனை வினையெச்சமாகக்கொண்டு, இடுதற்கு விடை தருக என்றுங் கூட்டலாம். பி - ம்:—[1] தழுவத். [2] தீயினை. [3] உடையேன். (110)

## 38.—இராமன் வினவ, முனிவன் அதற்குக் காரணங்கூறல்.

வரிசிலை யுழவனு மறையுழ வனைநீ
புரிதொழி லெனையது புகலுதி யெனலும்
திருமக டலைவசெய் [1] திருவினை [2] யுறயான்
எரிபுக நினைகுவெ னருள்கென விறைவன்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வரி சிலை உழவன்உம் - கட்டமைந்த வில்லில் வல்ல இராமனும், மறை உழவனை - வேதம்வல்ல சரபங்கனை நோக்கி, 'நீ புரி தொழில்-நீ செய்ய விரும்பிய செய்கை, எனையது-எத்தன்மை யது? புகலுதி-சொல்வாயாக,' எனலும் - என்றுகேட்டவளவில்,— அம்முனிவன்), 'திருமகள் தலைவ - இலக்குமி கேள்வனே! யான்—,

செய் திருவினை-செம்மையாகிய மோட்சலட்சுமியை, உற - அடையும் படி, எரி புக - அக்கினிபிரவேசஞ்செய்ய, நினைகுவென் - நினைப்ப வனுகின்றேன்; அருள்க - (நீ) கிருபை செய்வாயாக,' என - என்று சொல்ல,—இறைவன்-இராமன்,— (எ-று.)—, எனலும்' (39) என்க.

"வில்லேருழவர்", "சொல்லேருழவர்" என்றாற்போல, 'சிலையுழவன்', 'மறையுழவன்' என்றார்; சிலையை ஏராகவுடைய உழவன், மறையை ஏராகவுடைய உழவ னெனப் பொருள் கொள்க. உழவன்-உழுபவன். பி - ம் :—[1] இரு. [2] அற. (111)

## 39.—மீண்டும் இராமன் வினவலும் முனிவன் விடைகூறத் தொடங்கலும்.

யான்வரு மமைதியி னிதுசெய லெவனே
மான்வரு தனியுரி மார்பினை யெனலும்
மீன்வரு கொடியவன் விறலடு மறவோன்
ஊன் [1]விடு [2]முவகையி னுரைநனி [3]பகர்வான்.

(இ - ள்.) 'மான் வரு - மானினிடத்தினின்று உரிக்கப்பட்ட, தனி உரி - ஒப்பில்லாத தோலினைத் தரித்த, மார்பினை - மார்பை யுடைய முனிவனே! யான் வரும் அமைதியின் - நான் வருகின்ற பொழுதில், இது செயல் - (நீ) இக்காரியத்தைச் செய்தல் எவன் - என்னை?' எனலும் - என்றுகேட்ட வளவில்,—மீன் வரு கொடியவன் - மீனினதுவடிவம் எழுதப்பட்ட கொடியினையுடைய மன்மதனது, விறல் - வெற்றியை, அடு - பங்கப்படுத்திய, மறவோன் - மன வுறுதியையுடைய அம்முனிவன், ஊன் விடும் - உடலைவிடுவதனு லுண்டாகும், நனி உவகையின் - மிக்க களிப்பினால், உரை பகர்வான்-உத்தரஞ் சொல்லுவான்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

"நூலே கரக முக்கோல் மணையே, யாயுங் காலை யந்தணர்க்குரிய" என்னுஞ் சூத்திரத்தில் 'ஆயுங்காலை' என்றதனால், மான்தோல் கூறினார். மானுரி வரு தனிமார்பென்றுங் கூட்டலாம். சரபங்க னென்னும்பெயரது பொருள் விளங்க, 'மீன்வருகொடியவன் விறலடு மறவோன்' என்றார். எவனே, ஓகாரம் - அசை. பி - ம்:—[1]வரும். [2]உவகையன். [3]புரிவான். (112)

## 40.—இரண்டுகவிகள் - சரபங்கமுனிவனது மறுமொழி.

ஆயிர முகமுள தவ [1]மயர் குவெனுன்
நீயிவண் வருதிகொ லெனு [2]நினை வுடையேன்
போயின விருவினை [3]புகலுறு விதியான்
மேயினை யினியொரு வினையிலை விறலோய்.

மூன்றுகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) விறலோய் - வெற்றியையுடையோனே ! ஆயிரம் முகம் உள - பலவகைப் பட்டனவான, தவம் - தவங்களை, அயர்குவென் - செய்து வருகின்றவனாகிய, நான்—, நீ இவண் வருதி எனும் - நீ இவ் விடத்தில் எழுந்தருளுவாயென்னும், நினைவு உடையேன்-நிச்சயமான எண்ணமுடையவனாகிக் காத்திருக்கின்றேன்; இருவினை - (எனது)

இரண்டுவினைகளும், போயின-கழிந்தன; புகலுறு விதியால்-நேரிடக் கூடிய முறையின்படி, மேயினை-(நீயும் இப்பொழுது) எழுந்தருளினாய்; இனி ஒரு வினை இலை - இனி (இங்கே எனக்கு) ஒரு காரியமும் இல்லை; (எ - று.)

கொல் - அசை. புகலுறுவிதி - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற விதியுமாம். பி-ம்:—[1]முயல்குவென்யான். [2]நிலை. [3]புரவல. *(113)*

41. இந்திர [1]னருளின னிறுதிசெய் பகலா
வந்தனன் மருவுதி மலரய னுலகந்
தந்தன னெனவது சாரல னுரவோய்
அந்தமி லுயர்பத மடைதலை முயல்வேன்.

(இ - ள்.) உரவோய் - வலிமையையுடையவனே! இந்திரன்—, வந்தனன் - வந்து, 'மலர் அயன் - தாமரையில் தோன்றிய பிரமன், உலகம் தந்தனன்-(தனது) சத்தியலோகத்தை (உனக்குக்) கொடுத்தான்; (ஆகையால்), இறுதி செய் பகல்ஆ-(உலகங்கள்) அழிகின்ற காலம்வரையும், மருவுதி-(அங்குவந்து) தங்குவாயாக,' என-என்று, அருளினன் - சொன்னான்; (அங்ஙனஞ் சொல்லவும்), - அந்தம் இல் - அழிவில்லாத, உயர் பதம்-பரமபதத்தை, அடைதலை-அடைவதற்கு, முயல்வேன் - முயற்சி செய்பவனாகிய யான், அது சாரலன் - அப்பதவியை யடைந்தேனில்லை; (எ-று.)

'பிரமதேவன் அழைக்கின்றானாதலால், உலகம் அழியுமளவும் பிரமனுலகில் தங்குக' என்று தேவேந்திரன் பிரமனது வேண்டுகோளைத் தெரிவிக்க, 'பரமபதத்தையே யடைய முயல்வதனால் அங்குத்தான் சேர்வேன்' என்று நான் தேவேந்திரனிடத்து என் கருத்தைத் தெரிவித்தேனென்றவாறு. 'இறுதிசெய் பகலா' என்பதற்கு-நேற்று மாலைப்பொழுதிலென்று உரைத்து, 'வந்தனன்' என்பதனோடு கூட்டவுமாம். 'உரவோய்' என்பதில் உரமென்பதற்கு-இரட்டுறமொழிதலால் உடலின்வலிமை யென்றும், அறிவின் வலிமை யென்றுங் கொள்க. அடைதலை-உருபுமயக்கம்; ஐ-சாரியையுமாம். பி - ம்:—[1]நாளினதிறுதிகள்பகர. *(114)*

## 42.—இராமனிடத்து விடைபெற்றுச் சரபங்கமுனிவன் மனைவியோடு தீக்குதித்து மோட்சஞ்சேர்தல்.

ஆதலி [1]னிதுபெற வருளென வுரையாக்
காதலி யவளொடு கதழெரி முழுகிப்
போதலை மருவினன் னொருநெறி புகலா
வேதமு மறிவரு மிகுபொரு ளுணர்வோன்.

(இ - ள்.) புகலா - (எவராலுஞ்) சொல்லப்படாத, வேதம்உம் - வேதங்களும், அறிவு அரு - அறிதற்கு அரிய, மிகு பொருள் - பரத்த்துவத்தை, உணர்வோன் - அறிபவனாகிய சரபங்கன்,—'ஆதலின் - ஆகையால், இது பெற - இப்பரமபதத்தை அடையும்படி, அருள்-அருள்செய்', என-என்று, உரையா - சொல்லி,—(உடனே), காதலியவளொடு - (தன்) மனைவியுடன், கதழ் எரி முழுகி - உக்கிர

மான அக்கினியிலே புகுந்து, ஒரு நெறி - ஒப்பற்ற பரமபதத்திற்கு, போதலை மருவினன்-போய்ச் சேர்ந்தான்; (எ - று.)

சரபங்கமுனிவன் தான் அதுவரை யீட்டிய நல்வினைகளையெல்லாம் ஸ்ரீராமபிரானது திருவடிகளில் சமர்ப்பித்தான்: அப்பிரான் அங்கீகரித்ததும், பரமபதமடையவிரும்பி மந்திரவிதியுடனே எரியும் அக்கினியில் ஓமஞ்செய்து பிரமமேத அக்கினியில் தன்னுடலை ஓமஞ்செய்யலானா னென முதனூலுக்கு ஏற்பக் கருத்தை விரித்து உரைத்துக்கொள்க. "அப்பொழுதே பரமபதமடைய வேணு மென்று பெருவிருப்புத்தோன்றின், பிரமமேதத்திற்கு ஏற்ற எரியிற்புகக் கடவன்" என்று விதியிருத்தலை யறிக. சரபங்கமுனிவன் மனைவியுடன் தீப்புகுந்தானென்று முதனூலிற் கூறுவிடினும், துறவறத்தார்க்கு அக்கினிகாரியத்தில் அதிகாரமில்லையாகையாலும், முன்பின் சந்தர்ப்பங்களை நோக்கின் அம்முனிவன் புகுந்தது ஆஹிதாக்கினிஎன்று ஏற்படுவதாலும், முனிவன் தன்மனைவியுடன்தான் எரியிற்புகுந்திருப்பனென்று மனக்கண்ணாற் கண்டு கம்பர் கூறியது சிறப்புறப் பாராட்டத்தக்கது. இந்த இராமசரித்திரத்தில் சரபங்கமுனிவன் மனைவியோடு எரிபுகுந்தது கூறப்படவேண்டுவதில்லையென்று ஸ்ரீ வான்மீகி முனிவர் அப்பொருளைக் கூறாதுவிட்டனராதல் வேண்டும். தனக்கு அணித்தாதலாலும், கீழ்க்கவியிற் கூறியதனாலும், 'இது' எனச் சுட்டினான். எவராலுஞ் செய்யப்படாது அபௌருஷேயமாய் நித்தியமாகியதென்றற்கு, 'புகலா வேதம்' என்றார். மிகுபொருள் - மனமொழி மெய்களுக்கு எட்டாத பரம்பொருள். பி - ம்:—[1] அது. (115)

## 43.—இதுவும் அது.

தேவரு முனிவரு முறுவது தெரிவோர்
மாவரு நறுவிரை மலரயன் முதலோர்
ஏவரு [1]முடிவினி லிருவினை யொருவிப்
போவது கருதுமவ் வருநெறி புக்கான்.

(இ - ள்.) உறுவது தெரிவோர்-(பின்னே) வருவதை (த் தமது ஞானக் கண்ணினால் முன்னே) அறிபவர்களாகிய, மா வரும் - பெருமை பொருந்திய, நறு விரை - நல்ல வாசனையையுடைய, மலர் - தாமரைமலரில் தோன்றிய, அயன் - பிரமனை, முதலோர் - முதலாகவுடையவராகிய, தேவர்உம் - தேவர்களும், முனிவர்உம் - முனிவர்களும், ஏவர்உம் - மற்றையெல்லாரும், இரு வினை - இரண்டு வினைகளையும், ஒருவி - நீக்கி, முடிவினில் - முடிவாக, போவது - போய் அடையுமாறு, கருதும் - எண்ணுகின்ற, அ அரு நெறி - பெறுதற்கு அரிய அப்பரமபதத்தை, புக்கான் - போய்ச்சேர்ந்தான், (சரபங்கன்;) (எ - று.)

தமது கருமப்பயனை இராமபிரானது திருவடிகளிற் சமர்ப்பித்துவிட்டுச் சரபங்கமுனிவன் பரமபதமடைந்தனனென்பதாம். உறுவது தெரிவோர் - புரோஞானியர்; இது, தேவர்க்கும் முனிவர்க்கும் அடை. உறுவது - சாதியொருமை; இது, பூர்வ

ஞானத்துக்கும் உபலட்சணம். கீழ்க்கவியில், 'ஒருநெறி' என்றதன் பெருமையை இக்கவியில் விளக்கினுர். பி-ம்:—[1] அறிவினில். (116)

## 44.—கவிக்கூற்று: சரபங்கமுனிவனது பேறு

அண்டமு மகிலமு மறிவரு நெறியால்
உண்டவ ஞெருபெய ருணர்குந ருறுபேறு
எண்[1]டவ [2]நெடிதெனி னிறுதியி [3]லவனைக்
கண்டவ ருறுபொருள் கருதுவ தெளிதே.

(இ-ள்.) 'அண்டம்உம் - எல்லாவண்டங்களையும், அகிலம்உம் - (அவ்வண்டங்களுக்கு உட்பட்ட) சராசரங்களனைத்தையும், அறிவு அரு நெறியால் - அறியவொண்ணாதபடியாக, உண்டவன் - (பிரளய காலத்தில்) வயிற்றில்வைத்து அடக்கியருளிய இராமனது, ஒரு பெயர் - (ஆயிரந் திருநாமங்களுள்) ஒரு திருநாமத்தை, உணர்குநர் - அறிபவர், உறு பேறு - அடைகின்ற பாக்கியம், எண் தவநெடிது - நினைப்பிற்கும் எட்டாது மிகவும்பெரியது,' எனின் - என்றால், இறுதியில் - அந்திமகாலத்தில், அவனை - அந்த எம்பெருமானை, கண்டவர் - (கண்ணுக் கெதிராகச்) சேவித்தவர், உறுபொருள் - அடைகின்ற பதவி, கருதுவது எளிதுஏ - நினைப்பதற்கு எளியதோ? (எ - று.)

இக்கவி - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. அந்திம காலத்து இராமபிரானைக் கண்ணாரக் காணப்பெற்ற பேறு சொல்ல வொண்ணுப் பெருமைவாய்ந்த தென்றவாறு. "வைகலந்த மூவிலைவே லீசற்கும் வாசவற்கும் வாசப்பூமேன், மெய்கலந்த நால்வேத விரிஞ்ச னுக்கு மேலா வீற்றிருப்பர் மாதோ, பைகலந்தபாம்பணைமேற் றிரு வரங்கப் பெருநகருட் பள்ளிகொள்ளுங், கைகலந்த நேமியான் றிரு நாமத் தொருநாமங் கற்றூர்தாமே" எனப் பின்னுள்ளாரும் கூறியது காண்க. பி-ம்:—[1] தப. [2] நெடிதுயிர். [3] இவனை. (117)

சரபங்கன் பிறப்புநீங்கு படலம் முற்றிற்று.

---

# 3 - ஆவது அகத்தியப்படலம்.

அகத்தியமுனிவன்பக்கல் ஸ்ரீராமன் சீதாலட்சுமணர்களோடு எழுந்தருளியதைஉணர்த்தும் படலம். அகத்தியன் = அகஸ்த்யன்; இச்சொல்லுக்கு - (விந்திய) பருவதத்தை (வளரவொண்ணாது தடுத்து) அடக்கியவ னென்று பொருள்: அகம் - மலை; சலியாதது. ஒருசாரார் இச்சொல்லைத் தமிழ்மொழியென்னவேண்டுமென்று ஒருமுருட்டுப்பண்பை மேற்கொண்டு, சொல்தோன்றியுள்ள முறை யையும் அறியாது, 'தாம் கூறும்பொருள் பண்டைத்தமிழில் வழங்குகின்றதா?' என்று ஓர்தலுமின்றி, தமிழுக்கு அகத்திய மானவர் [இன்றியமையாதவர்] எனப்பொருள் கூறுகின்றனர்: இஃது பொருந்துவதன்று.

இப்படலம், ஸ்ரீராமன் சரபங்கமுனிவனுக்குப் பரமபதமளித்த பின்னர்த் தன்மனைவியோடுந் தம்பியோடும் வாலகில்லியர் தன்னைக் கண்டுமகிழ அகஸ்தியனது ஆச்சிரமஞ் சென்று, முன் வருணனிடத்திற் கொடுத்திருந்த வில்லும் தூணீரமும் வாளும் தண்டும் அவன் தரப் பெற்றுக்கொண்ட வரலாற்றைக் கூறு கின்றது.

சரபங்கமுனிவர் தம்நல்வினைகளையெல்லாம் இராமபிரானது திருவடிகளில் அர்ப்பணஞ்செய்ய, அதனை அங்கீகரித்த இராம பிரான் 'இந்தப்பெருங்கானில் உம்மால் குறிக்கப்பட்ட இடத்தில் வாழவிரும்புகிறேன்' என்று கூறினுகை, சரபங்கமுனிவர் இந்தக் காட்டில் 'ஸுதீக்ஷணரென்ற தருமாத்துமாவான முனிவர் வசிக் கிறார்: அவரை யடைக: அவர் உனக்கு நன்மையைப் புரிவார்' என்று கூறிவிட்டு, அக்கினிபிரவேசஞ் செய்தனர். அந்த முனிவரினுச்சிரமத்தில்தானே வைகாநசர் வாலகில்யர் முதலிய பலவகைப்பட்ட முனிவரும் வந்து, அந்த இராமபிரானிடத்து அரக்கரால் தாம் படும் இடரையெல்லாம் தெரிவித்துக் காக்கு மாறு வேண்டினர்: இராமபிரானும் அவர்கட்கு அபயதானஞ் செய்து அன்னுருடன் சுதீட்சிணமுனிவரினுச்சிரமத்தை நோக்கிச் சென்றுன். சென்றவன், அம்முனிவரால் பாராட்டி உபசரிக்கப் பெற்றபின்னர் 'நீவிர்காட்டும் இடத்திலே வாசஞ்செய்ய விரும்பு கின்றேன்' என்றுன். முனிவர் அப்பிரானுடைய சொல்லைக் கேட்டு 'நீ இங்குஇனிதுவசிக்கலாம்: ஆனுல், இங்கு விலங்கும் பறவைகளும் அச்சமற்றனவாய்ச் சஞ்சரித்துச் செல்லுகின்றன: இந்த ஒரு உபத்திரவமேயுள்ளது' என்றனர்: இராமபிரான் 'எனது வில்வல்லமைகொண்டு காட்டுப்பிராணிகளால் நலிவுநேராதபடி பாதுகாக்கவல்லேன்: ஆயினும், உமக்குத் தீங்கிழைத்தவனு வேன்: ஆகவே, விடைதருக: இந்தத் தண்டகவனத்திலுள்ள முனிவர்களின் ஆச்சிரமங்களைக் கண்டு களிக்க விரும்புகிறேன்' என்றுன். சுதீட்சிணமுனிவர் 'குழந்தாய்! உன் விருப்பின்படியே சென்றுகண்டு மீள இங்குவருக' என்றனர். விடைபெற்ற இராமன் சீதாலட்சுமணரோடும் முனிவரோடும் வில்வீரக்கோலத்தோடு, சீதை தனக்கு விருப்பமின்மையைத் தெரிவிக்கவும், செல்லலானுன். வெகுதூரஞ் சென்றபின் யோசனை விரிவுள்ள ஓர் தடாகம் அங்கு உறைபவர் எவரும் இல்லாமலே அணிகலவொலியோடு இனிய வாச்சியங்களினுெலி கேட்கப்படுவதுகண்டு வியப்புற்றுத் தன் னுடன்வரும்முனிவருள் தர்மப்ருத் என்பவரை வினவினுன்: அவர் அந்தப் பஞ்சாப்ஸரஸ்தடாகத்தின் சரிதையைக் கூறினுர். பின்னரும் சென்று முனிவர்களின் ஆச்சிரமமண்டலங்களைக்கண்டு ஆங்காங்குச் சிலசிலகாலம் உறைந்து இங்ஙனம் பத்துயாண்டுகள் கழித்துப் பிறகு மீண்டும் சுதீட்சிணமுனிவரைச்சார்ந்து அம்முனிவர் கூறிய படியே அகத்தியமுனிவருக்கு உடன்பிறந்தோரினுச்சிரமத்தைச் சார்ந்து பின்னர் அகத்தியமுனிவரினுச்சிரமத்தைச் சேர்ந்தா னென்று முதனூலில் உள்ளது.

வேறு.

## 1.—இராமன் முதலிய மூவரும் சரபங்கராச்சிரமத்தினின்று அப்பாற்செல்லுதல்.

அனையவ னிறுதியி [1]னமைதி நோக்கலின்
இனியவ [2]ரின்னலா னிரங்கு நெஞ்சினர்
குனிவரு திண்சிலைக் குமரர் கொம்பொடும்
புனிதன துறையுணின் றரிதிற் போயினார்.

(இ - ள்.) இனியவர் - இனிமையைத் தருகின்றவர்களாகிய, குனி வரு - வளைவு பொருந்திய, திண் சிலை - வலிய வில்லினையுடைய, குமரர் - ஸ்ரீராமலக்ஷ்மணர்கள்,—அனையவன் - அந்தச் சரபங்க முனிவனது, இறுதியின் - அந்திமகாலத்தின், அமைதி - தன்மையை [அக்கினிபிரவேசமானதை], நோக்கலின்-கண்டதனால், இன்னலான்-வருத்தத்தோடு, இரங்கு நெஞ்சினர் - பரிதபிக்கின்ற மனமுடையவர்களாய்,—கொடியொடுஉம் - பிராட்டியுடனே, புனிதனது உறையுள் நின்று - பரிசுத்தனாகிய அம்முனிவனது ஆச்சிரமத்தினின்று, அரிதின் - அருமையாக, போயினார் - (அப்பாற்) போனார்கள்; (எ - று.)

சரபங்கமுனிவன் அக்கினியிற் புக்கு நல்லுலகஞ் சேர்ந்தது கண்டு இராமனாதியர் வியப்பெய்தின ரென்பர், ஸ்ரீவான்மீகி பகவான். கொம்பு - சீதைக்கு உவமையாகுபெயர்; மெல்லியதாய் ஒல்கியொசிதலில் உவமை. பி - ம்:—[1] அமைவு. [2] இன்னலார்.

இதுமுதற் பதினாறு கவிகள் - மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (118)

## 2.—ஸ்ரீராமன்முதலிய மூவரும் நீங்கிய வழிகள்.

மலைகளு மரங்களு மணிக்கற் பாறையும்
அலைபுன னதிகளு மருவிச் சாரலும்
இலைசெறி பழுவமு மினிய சூழலும்
நிலைமிகு தடங்களு மினிது நீங்கினார்.

(இ - ள்.) மலைகள்உம் - பருவதங்களையும், மரங்கள்உம் - விருட்சங்களையும், மணி கல் பாறைஉம் - அழகிய கருங்கற்பாறைகளையும், அலை புனல் நதிகள்உம் - அலைகின்ற நீரையுடைய ஆறுகளையும், அருவி சாரல்உம் - நீரருவிகள் பாய்கின்ற மலைப்பக்கங்களையும், இலை செறி பழுவம்உம் - தழைகள் அடர்ந்த சோலைகளையும், இனிய சூழல்உம் - இனிப்பான இடங்களையும், நிலை மிகு தடங்கள்உம் - ஆழம் மிகுந்த தடாகங்களையும், இனிது - இனிமையாக, (இராமன்முதலிய மூவரும்), நீங்கினார் - கடந்துசென்றார்கள்; (எ - று.)

சூழலுக்கு இனிமை - கண்ணுக்கு இனிமையும், வசித்தற்கு இனிமையும். சூழல் - ஆச்சிரமங்கள். நிலை - பரப்புமாம். (119)

## 3.—தண்டகாரணியத்து இருடியர் அப்போது இராமனைத் தரிசித்தல்.

[1]பண்டைய வயன்றரு பால கில்லரும்
முண்டரு மோனரு முதலி னோர்களத்
தண்டக வனத்துறை தவத்து ளோர் [2]கடாம்
கண்டன ரிராமனைக் களிக்குஞ் சிந்தையார்.

(இ - ள்.) பண்டைய - பழமையாகிய, அயன் - பிரமதேவன், தரு - பெற்றருளிய, பாலகில்லர்உம் - வாலகில்லியரென்பவர்களும், முண்டர்உம் - மழித்த தலையை யுடையவர்களும், மோனர்உம்- மௌனவிரத முடையவர்களும், முதலினோர்கள்-முதலியவர்களாகிய, அ தண்டகவனத்து உறை - அத்தண்டகாரணியத்தில் வசிக்கின்ற, தவத்து உளோர்கள் - முனிவர்கள், இராமனை—, கண்டனர்-(எதிரில் வந்து) கண்டவர்களாய், களிக்கும் சிந்தையார்-மகிழ்கின்ற மனமுடையவரானார்கள்; (எ - று.)

பாலகில்லர் = வாலகில்யர்: பகவானது மயிரினின்றுந் தோன்றினவர். மோனர் = மௌனர். பி - ம்:—[1]பண்டயன் பயந்தருள். [2]எலாம். (120)

## 4.—இதுமுதல் நான்குகவிகள் - தண்டகாரணியத்து முனிவர்களின் மகிழ்ச்சி கூறும்.

[1]கனல்வரு கடுஞ்சினத் தரக்கர் காயவோர்
வினைபிறி தின்மையின் வெதும்பு கின்றனர்
[2]அனல்வரு கானகத் தமுத ளாவிய
[3]புனல்வர வுயிர்வரு முலவை போல்கின்றார்.

(இ - ள்.) கனல் வரு - தீப்போற் சொலிக்கின்ற, கடுஞ் சினத்து - மிக்க கோபத்தையுடைய, அரக்கர் - ராக்ஷஸர்கள், காய- கோபிப்பதனால், ஓர் வினை பிறிது இன்மையின் - (அவர்களை அழிக்கவல்ல) உபாயம் வேறொன்றும் இல்லாமையால், வெதும்பு கின்றனர் - வாடுகின்ற அம்முனிவர்கள்,—(ஸ்ரீராமனது வரவால்), அனல் வரு கானகத்து - தீப்பற்றியெரியுங் காட்டில், அமுது அளாவிய புனல் - அமிருதத்தின் தன்மைபொருந்திய நீர்ப் பெருக்கு, வர - வருதலால், உயிர் வரும் - (அழியாது) பிழைத்துச் செழிக்கின்ற, உலவை - உலர்ந்த மரங்களை, போல்கின்றார் - ஒக்கின்றவரானார்கள்; (எ - று.)

தண்டகாரணியவாசிகளான முனிவர்களுக்குக் காட்டிலுள்ள உலர்ந்தமரங்களும், ராக்ஷசர்களுக்கு நெருப்பும், அவர்களுடைய கோபத்துக்கு நெருப்பினது வெப்பமும், இராமனது வருகைக்குக் குளிர்ந்தநீர்ப்பெருக்கின்வருகையும், முனிவர்கள் களித்து மகிழ்ந்ததற்கு உலர்ந்த மரங்கள் தளிர்த்துச் செழித்தலும் உவமை. பி-ம்:—[1]தனை. [2]அனை. [3]புனை. (121)

5. ஆய்வரும் பெருவலி யரக்கர் நாமமே
வாய்வெரீஇ யலமரு மறுக்க நீங்கினர்
தீவரு வனத்திடை யிட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் றன்மையார்.

(இ - ள்.) ஆய் வரும்-மேன்மேல் மிக்குவளர்கின்ற, பெரு வலி-பெரு வலிமையையுடைய, அரக்கர்-இராட்சசரது, நாமம் ஏ-பெயர்களையே, வாய் வெரீஇ-வாய்குழறச் சொல்லி, அலமரும் - வருந்துகின்ற, மறுக்கம்-மனக்குழப்பத்தை, நீங்கினர்-நீங்கப்பெற்ற அம்முனிவர்கள், —தீ வரு வனத்திடை - நெருப்புப்பற்றியெரியுங் காட்டில், இட்டு தீர்ந்தது-விட்டு நீங்கியதாகிய, ஓர் தாய் - ஒப்பற்ற (தன்) தாய்ப்பசுவானது, வர-(மீண்டு) வர, நோக்கிய-கண்ட, கன்றின் - கன்றினது, தன்மையார்-தன்மையை யுடையவரானார்கள்; (எ - று.)

முன்னிரண்டடி, முனிவர்கள் அரக்கரிடத்துக்கொண்டிருந்த அச்சமிகுதியை விளக்கும். முனிவர்கள் எரிவனத்திடைவிட்டுத் தீர்ந்த தாய்ப்பசுவைக்கண்ட கன்றுபோலக் களித்தார்களென்றபடி. ஆய்வுஅரு எனப் பிரிப்பினுமாம். (122)

6. [1]கரக்கருங் கடுந்தொழி லரக்கர் காய்தலிற்
[2]பொரற்கிட மின்மையிற் புழுங்கிச் [3]சோருநர்
[4]அரக்கரென் கடலிடை யாழ்கின் றுரொரு
[5]மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினர்.

(இ - ள்.) கரக்க அரு - (எவராலும்) மறுத்தற்குஅரிய, கடுந் தொழில் - கொடியசெய்கைகளையுடைய, அரக்கர் - ராக்ஷஸர்கள், காய்தலின் - சினந்து வருத்துவதனால், பொரற்கு இடம் இன்மையின்-(அவர்களைப்) போர்செய்துவெல்வதற்கு (இதுவரையில்) உபாயமில்லாமையால், புழுங்கி சோருநர்-மனம்அவிந்து தளர்கின்றவராகி, அரக்கர் என் கடலிடை - அரக்கர்களாகிய கடலின் நடுவே, ஆழ்கின்றார்-அமிழ்கின்ற அம்முனிவர்கள், ஒரு மரக்கலம் பெற்றுஎன - (அங்ஙனம்ஆழாது கரைசேருமாறு) ஒருகப்பலைப் பெற்றாற்போல, (இராமபிரானைக் கண்டு), மறுக்கம் நீங்கினர் - மனக்கலக்கம் நீங்கப் பெற்றார்கள்; (எ - று.)

கடலிலாழ்பவர்க்கு மரக்கலம் கிடைத்தாற்போல அரக்கரால் நலிவுறும் முனிவர்கட்கு ஸ்ரீராமபிரான் கிடைத்தனனென்பதாம். உருவகத்தை அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. இனி, கரக்கருங்கடுந்தொழில்-வெளிப்படையாச்செய்கின்ற கொடுந் தொழிலுமாம். பி - ம்:—[1]காக்கரும். [2]போக்கிடம். [3]சோர்குநர். [4]ஆக்கருங். [5]மாக்கலம். (123)

7. தெரிஞ்சுற நோக்கினர் செய்த செய்தவம்
அருஞ்சிறப் புதவநல் லறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடுபெற் றனைய பெற்றியார்.

(இ-ள்.) தெரிஞ்சுஉற - நன்றாய்த் தெரியும்படி, நோக்கினர் - (ஸ்ரீராமனைக்) கண்ட அம்முனிவர்கள்,—செய்த - (தாம் வருந்திச்) செய்த, செய் தவம்-சிறந்த தவமானது, அருஞ் சிறப்பு உதவ - பெறுதற்கரிய சிறப்பைக் கொடுக்குமாறு, நல் அறிவு - தத்துவ ஞானத்தை, கைதர-உதவிய அதனால்,—விரிஞ்சுஉற பற்றிய - பரவி நின்று (தம்மைச்) சூழ்ந்த, வெம்-கொடிய, பிறவி துயர் - பிறவித் துன்பங்களாகிய, பெருஞ் சிறை-பெரிய சிறைச்சாலையினின்று, வீடு பெற்று அனைய - விடுதலையடைந்து மோக்ஷம் பெற்றாற்போன்ற, பெற்றியார் - தன்மையுடையவ ரானார்கள்; [பரமாநந்த மடைந்தன ரென்றபடி]; (எ-று.)

தமது தவம் சிறப்பைத் தரும் தத்துவஞானத்தை யுண்டாக்கவே, அந்தமுனிவர்கள் பிறவித்துயராகிய சிறையினின்றும் விடுதலை யடைந்தவர்போலானார்களென்பதாம். தெரிஞ்சுற நோக்குதல் - ஸ்ரீராமனை ஸ்ரீமகாவிஷ்ணுவினது திருவவதாரமென நன்றாய் அறிந்து காணுதல். (124)

## 8.—முனிவர்கள் அரக்கர்களை யடக்காததன் காரணம்.

வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுள ராயினும் பொறையி [1]னாற்றலான்
மூண்டெழு வெகுளியை [2]முதலி னீக்கினார்
ஆண் [3]டுறை யரக்கரா லலைப்புண் டாரரோ.

(இ - ள்.) (அம்முனிவர்கள்), வேண்டினர்க்கு - விரும்பிச் செய்தவர்களுக்கு, வேண்டின - (அவர்தாம்) வேண்டிய பயன்களை, அளிக்கும் - (வேண்டியவாறே பெறும்படி) கொடுக்கின்ற, மெய்தவம்- உண்மையான தவத்தை, பூண்டுஉளர் ஆயின்உம்-மேற்கொண்டுள்ள வர்களானாலும், பொறையின் ஆற்றலால் - பொறுமையின் வல்லமை யால், மூண்டு எழு வெகுளியை - மேன்மேல் மிக்கு வருகின்ற கோபத்தை, முதலின் நீக்கினர் - வேரோடுகளைந்தார்கள்; (ஆதலால்), ஆண்டுஉறை அரக்கரால் - அவ்வனத்திலே வசிக்கின்ற ராக்ஷசர் களால், அலைப்புண்டார் - வருத்தப்பட்டார்கள்; (எ - று.)

இதனால், நிறைமொழி மாந்தராகிய அம்முனிவர் தம் தவ வலி மையால் அவ்வரக்கரை வெகுண்டு சபித்து அழியாமைக்குக் காரணங் கூறப்பட்டது. கூடாவொழுக்கமாகிய பொய்த்தவத்தினின்றும் நீக்குதற்கு 'மெய்த்தவம்' என்றார். பொறையாவது - காரணம்பற்றி யாதல் மடமையாலாதல் ஒருவன் தமக்கு மிகை செய்தவழித் தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தல். வேண்டின - பெயர். "வேண்டியவேண்டியாங்கெய்தலாற் செய்தவ, மீண்டுமுயலப்படும்" என்றார், நாயனாரும். பி - ம்:—[1] ஆற்றலார். [2] முறையின். [3] உறைந்து. (125)

## 9.—இராமபிரான் வணங்க, முனிவர்கள் வாழ்த்தல்.

எழுந்தன ரெய்தின ரிருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்றவக் குரிசில் வீரனைப்

பொழிந்தெழு காதலிற் பொருந்தி ஞரவன்
தொழுந்தொறுந் தொழுந்தொறு மாசி சொல்லுவார்.

(இ - ள்.) (அம்முனிவர்கள்), எழுந்தனர் - புறப்பட்டு, எய்தினர்- வந்து,—இருண்ட மேகத்தின் கொழுந்து என - கறுத்த மேகத் தினது கொழுந்து போல, நின்ற - (அவ்விடத்தில்) இருந்த, அ குரிசில் வீரனை - வீரனாகிய அந்த ஸ்ரீராமனை,—பொழிந்து எழு காதலின் - (மேலோங்கிப்) பொங்கி யெழுகின்ற அன்போடு, பொருந்தினர் - அடைந்தார்கள்; (அப்பொழுது), அவன் - அந்த ஸ்ரீராமன், தொழும்தொறும் தொழும்தொறும் - (தம்மைத் தனித் தனியே) வணங்குந்தோறும் வணங்குந்தோறும், ஆசி சொல்லு வார் - ஆசீர்வாதஞ் செய்பவரானார்கள்; (எ-று.)

ஸ்ரீராமன் திருமாலினது திருவவதார மாதலால் தேவரும் முனிவரும் யாவரும் வணங்குந் தன்மையனாயினும், இப்பொழுது தான்கொண்ட மானுடத்திருக்கோலத்துக்கு இணங்க, முனிவரை வணங்கின னென அறிக: அம்முனிவர்களும் பொங்கும் பரிவால் ஆசிகூறினர். ஸ்ரீராமனெழுந்தருளின செய்தி கேள்வியுற்றவுடனே காலக்கழிவுசெய்யாது வந்தமை தோன்ற 'எழுந்தனரெய்தினர்' என்றும், நீருண்டு அப்பொழுதுதான் புதிதாய்த்திரண்ட நீலமேக மென்பார் 'இருண்ட மேகத்தின் கொழுந்து' எனறுங் கூறினர். காள மேகத்தை உவமை கூறியது-கருநிறத்திறகும், கைம்மாறு கருதாது கருணை செய்தற்கும். (*126*)

## 10.—முனிவர்கள் அங்கு இராமனுறையுமாறு ஒரு சாலையை அளித்துப் பிறகு குறைவேண்ட வருதல்.

இனியதோர் சாலைகொண் [1]டேகி யிவ்வயின்
நனி[2]யுறை யென்[3]றவற் [4]கமைய நல்கித்தாந்
தனியிடஞ் [5]சார்ந்தனர் தங்கி மாதவர்
அனைவரு மெய்தின ரல்லல் சொல்லுவான்.

(இ - ள்.) (பின்பு), மாதவர் அனைவர்உம் - அம்முனிவர்கள் யாவரும்,—இனியது ஓர் சாலை - வசித்தற்கு இனியதாகிய ஒரு பர்ணசாலைக்கு, கொண்டு ஏகி - (ஸ்ரீராமனை) அழைத்துக்கொண்டு போய், இவ் வயின் நனி உறை என்று - 'இவ்விடத்திற் சுகமாக வசித்திரு' என்று சொல்லி, அவற்கு - அந்த ஸ்ரீராமனுக்கு, அமைய - பொருந்தும்படி, நல்கி - (நன்றாக) உபசரித்து,—தாம் - தாங்கள், தனி இடம் சார்ந்தனர் - தனியான வேறிடத்தைச் சேர்ந் தவர்களாகி, தங்கி - தங்கியிருந்து,—(பின்பு), அல்லல் சொல்லு வான் - (அரக்கர்களாலுண்டாகிற தமது) துன்பத்தைச் சொல்லு தற்பொருட்டு, எய்தினர் - (ஸ்ரீராமனை மீண்டும்) அடைந்தார்கள்;

தமது துன்பம் இராமபிரான் மனத்திலுறுத்துவதற்காகவும், அனைவருந் துன்பமுற்றவரே யென அறிவித்தற்காகவும் அனை வரும் எய்தின ரென்க. நனி உறை - பலநாள் வாசஞ்செய்யென்று மாம். அமையம் நல்கி எனப் பிரித்து, இருப்பிடந்தந்தென்றும்,

இனைப்பாறுதற்கு அவகாசங் கொடுத்தென்றும் உரைக்கலாம். (127)
பி - ம் :—[1]எய்தி. [2]உறைக. [3]அகம். [4]பைய. [5]எய்தினர்.

## 11.—இதுமுதல் நான்கு கவிகள் - முனிவர்கள் இராமபிரானிடத்து அரக்கரால் நேர்ந்த துன்பமனைத்தையும் எடுத்துக்கூறுதலைத் தெரிவிக்கும்.

எய்திய முனிவரை யிறைஞ்சி [1]யேத்துவந்து
ஐயனு மிருந்தன [2]னருளென் னென்றலும்
வையகங் காவலன் [3]மதலை வந்ததோர்
வெய்யவெங் [4]கடுந்துயர் விளைவு கேளெனா.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) ஐயன்உம்-ஸ்ரீராமனும், எய்திய முனிவரை-(அவ்வாறு தன்னை) அடைந்த முனிவர்களை, இறைஞ்சி-வணங்கி, ஏத்து உவந்து-(அவர்களைத்) துதித்தலை மகிழ்ந்து செய்து, இருந்தனன்-வீற்றிருந்து, அருள் என்-'(எனக்கு இப்பொழுது) கட்டளை என்ன?', என்றலும் - என்று கேட்டவளவில்,—(அவர்கள்), 'வையகம் காவலன் மதலை - உலகங்களைக்காத்தல்வல்ல தசரத சக்கரவர்த்திக்குத் திருமகனே! வந்தது - (இப்பொழுது) நேரிட்டதாகிய, ஓர் - ஒரு, வெய்ய வெங் கொடுந் தொழில் - மிகவும் அதிக கொடுமையான செய்கைகளின், விளைவு-பெருக்கத்தை, கேள்-(நீ) கேட்டருள்', எனா-என்று,—(எ-று.) —'என்றார்' (16) என்பதனோடு முடியும்.

எய்திய முனிவர்களை இராமபிரான் வணங்கி உவப்போடு துதித்துத் தங்கியிருந்து 'எனக்கு யாதுகட்டளை?' என்று அம் முனிவர்களை வினவினன்: சக்கரவர்த்தித் திருமகனே! எமக்கு நேர்ந்துள்ள துயரின் விளைவைக் கேட்பாயென்று அம்முனிவர்கள் கூறலானார்களென்பதாம். ஏத்துஉவந்து - அவர்களாற் செய்யப் பட்ட தோத்திரத்துக்குத் தான் மகிழ்ந்து என்றுமாம். மதலை - அண்மைவிளி. வெய்யவெங்கொடு - ஒருபொருட்பன்மொழிகள்; மன மொழி மெய்களென்னுந் திரிகரணங்கள்பற்றி, மூன்று கூறினருமாம். பி - ம்:—[1]ஏத்திவந்து. [2]அருளும். [3]மைந்த. [4]கொடுந் தொழில். (128)

12. இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்
அரக்கரென் றுளர்சில ரறத்தி னீங்கினார்
நெருக்கவும் யாம்படர் நெறிய லாநெறி
துரக்கவு மருந்தவத் துறையு ணீங்கினேம்.

(இ - ள்.) இரக்கம் என்ற ஒருபொருள் - இரங்குதலென்று சொல்லப்பட்ட ஒரு செய்கை, இலாத - (ஒரு சிறிதும்) இல்லாத, நெஞ்சினர் - மனமுடையவர்களும், அறத்தின் நீங்கினார் - தருமத் தினின்றும் நீங்கினவர்களுமாகிய, அரக்கர் என்று - ராக்ஷசரென்று சொல்லப்பட்டு, சிலர் உளர் - சிலர் இருக்கின்றனர்; (அவர்கள்), நெருக்கஉம் - (எங்களை) வருத்தப்படுத்துவதனாலும், யாம் படர் நெறி அலா - நாங்கள் ஒழுகுதற்குஉரிய நல்லொழுக்கம் அல்லாத,

நெறி - தீயொழுக்கத்தில், தூக்கஉம் - செலுத்துவதனாலும், அருந் தவம் துறையுள் - அரியதவத்தினது வழியிலின்றும், நீங்கினேம் - விலகினோம்; (எ - று.)

'அரக்கர் அறத்தின் நீங்கினர்; யாம் தவத்துறையுள் நீங்கி னேம்' என்றவிடத்து ஒருநயம் காண்க. என்றொரு - தொகுத்தல். பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு எனபவற்றை வைசேடிகர் அறுவகைப்பொருளென்றாற்போல, ஈண்டுத் தொழில் பொருளெனப்பட்டது; "சினத்தைப் பொருளென்று கொண்ட வன்" என நாயனார் குணத்தைப் பொருளாகக்கூறியதும் காண்க. துறையுள் - உருபுமயக்கம். இனி, தவத்து உறையுள் எனப் பிரித்து, தவஞ்செய்யுமிடமாகிய ஆச்சிரமங்களினின்று என்று உரைத்தல், சிறப்பின்மையும் மோனைத்தொடைக்குப் பொருந்தாமை யும் உணர்க. (129)

13. வல்லியம் பலதிரி வனத்து மானென
எல்லியும் பகலுநொந் திரங்கி யாற்றலெம்
சொல்லிய வறநெறித் துறையு நீங்கினெம்
வில்லியன் மொய்ம்பினாய் வீடு [1]காண்குமோ.

(இ - ள்.) வில் இயல் மொய்ம்பினாய் - கோதண்டம் பொருந்திய புயத்தையுடையவனே! பல வல்லியம் - அநேகம் புலிகள், திரி - திரி கின்ற, வனத்து - காட்டிலுள்ள, மான் என - மான்போல, எல்லிஉம் பகல்உம்-இரவும் பகலும், நொந்து இரங்கி - மனநொந்து வருந்தி, ஆற்றலெம் - (அரக்கர்கள் செய்யுங் கொடுமைகளைப்) பொறுக்கமாட் டாதவர்களாயிருக்கின்றோம்; சொல்லிய - (நூல்களிற்) சொல்லப் பட்ட, அறம் நெறி துறைஉம்-தருமமார்க்கத்தின் வகைகளினின்றும், நீங்கினெம் - வழுவினோம்; வீடு காண்குமோ - (இனி இந்தத்துன்பங் களினின்று) விடுபடுதலை அடைவேமோ? (எ - று.)

நீ அரக்கரைக் கொல்லுங் கருவியை யுடையா யென்பது, 'வில்லி யல்மொய்ம்பினாய்' என்றதன் குறிப்பு: ஆகவே, நீ எமது துன்பத் தைப் போக்கவேணு மென்று தெரிவித்தவாறு. துன்ப மிகுதியைக் குறிப்பித்தற்கு, 'வீடுகாண்குமோ' என்றார்; அறநெறியினின்று வழு வினமையால் பரமபதத்தை எங்ஙனம் அடைவோ மென்று கூறினரு மாம். புலி - அரக்கர்க்கும், மான் - முனிவர்க்கும் உவமை. பி - ம்:— [1]காண்டுமோ. (130)

14. மாதவத் [1]தொழுகலெ மறைகள் யாவையும்
ஓதலெ மோதுவார்க் குதவ லாற்றலெம்
மூதெரி வளர்க்கிலெ முறையி னீங்கினேம்
ஆதலி னந்தண ரேயு மாகிலேம்.

(இ - ள்.) மா தவத்து - பெருமைபொருந்திய தவநெறியில், ஒழுகலெம் - ஒழுகுகின்றோமில்லை; மறைகள் யாவைஉம் - வேதங்க ளெல்லாவற்றையும், ஓதலெம் - ஓதுகின்றோமில்லை; ஓதுவார்க்கு - ஓதுகின்றவர்களுக்கு, உதவல் ஆற்றலெம் - உதவிசெய்கின்றோ

*மில்லை [ஓதுவிக்கின்றோமில்லை]; முதுஎரி - பழமையாகிய வேள்வித் தீயை, வளர்க்கிலெம் - வளர்க்கின்றோமில்லை; (இத்தன்மையராகி), முறையின் - உரிய ஒழுக்கத்தினின்றும், நீங்கினேம்—; ஆதலின்—, அந்தணர்ஏ உம் ஆகிலேம் - பிராமணராயும் ஆகின்றோமில்லை;*

*அந்தணர்க்குரிய ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், தவஞ்செய்தல் முதலிய செய்கைகளொன்றும் தம்மிடத்து இல்லை யாதலால் இங்ஙனம் அம்முனிவர்கள் கூறுகின்றார். எரி வளர்த்தல்- வேள்விசெய்தல்; அது தொன்றுதொட்டு அந்தணர் செய்துவருஞ் செய்கை யென்பது தோன்றவும், வேள்வித்தீயை எஞ்ஞான்றும் அவியாது வளர்த்துக்கொண்டேயிருக்க வேண்டுமென்ற விதி தோன்றவும் 'மூதெரி' என்றார். மறைகளொன்றொழியாது யாவையு மென்றது, அவற்றின் அங்கங்களும் உபாங்கங்களும் அடங்குதற்கு. "மறப்பினுமோத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" என்பவாகலின், 'முறையினீங்கினே மாதலி,னந்தண ரேயு மாகிலேம்' என்றார். இந்தத் தீவினையைநீக்க நீயேபுகலென்ற வாறு. பி - ம்:—[1]ஒழுகிலெம்.* *(131)*

இங்குச் சிலபிரதிகளில் மிகையாகச் சிலபாடல்கள் காணப்படு கின்றன: அவை வருமாறு:—

1. அருந்திற லுலகொரு மூன்று மாளையிற்
புரந்திடுந் தசமுகத் தொருவன் பொன்றிலாப்
பெருந்தவஞ் செய்தவன் பெற்ற மாட்சியால்
வருந்தினேம் நெடும்பகல் வரத யாமெலாம்.

2. தேவர்க டமைத்தினந் துரந்து மற்றவர்
தேவியர் தமைசிறைப் படுத்தித் திக்கெலாம்
கூவிடத் தடிந்தவர் செல்வங் கொண்டபோர்
மாவலித் தசமுகன் வலத்துக் கியார்வலார்.

3. அவன்வலி படைத்துமற் றரக்கர் யாவரும்
சிவன்முதன் மூவரைத் தேவர் சித்தரைப்
புவனியின் முனிவரை மற்றும் புங்கவர்
எவரையுந் துரந்தன ரிறைவ வின்னுமே.

4. ஆயிர கோடியென் றுரைக்கு மண்டமேன்
மேயபோ ரரக்கரே மேவ லல்லதைத்
தூயசீ ரமரரென் றுரைக்குந் தொல்கணத்து
ஆயவ ரெங்ஙனென் றறிந்தி லோமையா.

5. வெள்ளியங் கிரியிடை விமலன் மேலைநாட்
கள்ளிய வரக்கரைக் கடிகி லேனெனு
ஒள்ளிய வரமவர்க் குதவி னுன்கடற்
பள்ளிகொள் பவன்பொரு திளைத்த பான்மையான்.

6. நான்முக னவர்க்குநன் மொழிகள் பேசியே
தானுறு செய்வினைத் தலையி னிற்கின்றான்
வானில்வெஞ் சுடர்முதல் வயங்கு கோளெலாம்
மேன்மையி லருஞ்சிறைப் பட்டு மீண்டுளார்.

15.—இதுவும் அடுத்த கவியும்-முனிவர்கள் இராமபிரானிடத்து 'நீயே இரட்சகன்' என்றலைத் தெரிவிக்கும்.

இந்திர னெனினவ னரக்க ரேயின
சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையான்
எந்தைமற் றியாருள ரிடுக்க ணீக்குவார்
வந்தனை யாஞ்செய்த தவத்தின் மாட்சியால்.

(இ-ள்.) இந்திரன் எனின்-தேவேந்திரனோ என்றால், அவன்—, அரக்கர் ஏயின-அரக்கர் கட்டளையிட்ட தொழில்களை, சிந்தையின் - மனத்திலும், சென்னியின்-சிரசிலும், கொள்ளும் - கொள்ளுகின்ற, செய்கையான் - தொழிலையுடையவனாயிருக்கின்றான்; (ஆகையால்), எந்தை-எமது தலைவனே! இடுக்கண் நீக்குவார்-(எங்கள்) துன்பங்களைப் போக்குகின்றவர், மற்று யார் உளர் - (உன்னையன்றி) வேறு எவரிருக்கின்றனர்? [ஒருவருமில்லை]; யாம் செய்த—, தவத்தின் மாட்சியால்-தவத்தின் பெருமையால், வந்தனை - (நீ எங்களைக் காத்தற்கு இங்கு) எழுந்தருளினாய்; (எ - று.)

இதனால், முனிவர்கள் தமது அநந்யகதித்வத்தை [வேறு புகலில்லாமையை] வெளியிடுகின்றனரென்க. இந்திரனெனி னென்பது, அவன்சிறப்பைக் குறித்துநின்றது. ஏயின-ஏவின: பெயர். சிந்தையிற் கொள்ளுதல் - அதுவே கருத்தாயிருத்தல், சென்னியிற் கொள்ளுதல்-தலைமேற்கொண்டு வணக்கத்தோடு செய்தல். (132)

16. உருளுடை நேமியா [1]லுலகை யோம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்கிலா
[2]இருளிடை வைகினே மிரவி தோன்றினாய்
அருளுடை வீரநின் னபயம் யாமென்றார்.

(இ - ள்.) உருள் உடை - (உலகமுழுவதும்) உருளுதலை [செல்லுதலை] யுடைய, நேமியால்-ஆஜ்ஞாசக்கரத்தினால், உலகை - உலகமுழுவதையும், ஓம்பிய - காத்த, பொருள் உடை - எல்லாச் செல்வங்களையுமுடைய, மன்னவன் - தசரதசக்கரவர்த்தியினது, புதல்வ-திருமகனே! போக்கு இலா - நீங்குதலில்லாத, இருளிடை - (துன்பமாகிய) இருளிலே, வைகினேம் - தங்கினோம், (யாம்); இரவி தோன்றினாய் - (அவ்விருளைப் போக்குதற்குச்) சூரியன்போல (நீ இங்கே) எழுந்தருளினாய்; அருள் உடை வீர - கருணையுடைய வீரனே! யாம்—, நின் அபயம்-உனக்கு அடைக்கலம், என்றார் - என்று (முனிவர்கள் ஸ்ரீராமன்சந்நிதியில்) விண்ணப்பஞ் செய்தார்கள்; (எ - று.)

இதனால், முனிவர்கள் இராமபிரானிடத்துச் சரணாகதி செய்கின்றனர். ஆணையைச் சக்கரமென்றல், செய்யுள்வழக்கு. 'உலகை

யோம்பிய மன்னவன் புதல்வ' என்றது, எங்களைப் பாதுகாப்பது உனக்குக்கடமை யெனக் குறிப்பித்தவாறு. துன்பத்தை இருளாக் கூறுவது, கவிசமயம். இரவி-ரவி; ரவ்விற்கு இகரம் மொழிமுதலாகி வந்தது. 'அருளுடை வீர' என்றதனால், சிஷ்டபரிபாலநத்திற்கு வேண்டிய அருளுடைமையும், துஷ்டநிக்கிரகத்திற்கு வேண்டிய வீரமுடைமையும் கூறப்பட்டன. அபயம் - பயப்படாதே என்று சொல்லிக் காக்கத்தக்க பொருள். பி - ம் :—[1] உயிர்கள். [2] இருளுடை வைகலேம். (133)

வேறு.

## 17 —இதுமுதல் ஆறுகவிகள் - இராமபிரான் அரக்கரைக் கொல்வதாக வாக்களித்து அம்முனிவர்க்கு அபயமளித்தலைத் தெரிவிக்கும்.

புகல்பு குந்திலரேற் புறத்தண் டத்தின்
அகல்வ [1]ரேனுமென் னம்பொடும் வீழ்வரால்
தகவி றுன்பந் [2]தவிருதிர் நீரெனப்
பகல வன்குல மைந்தன் பணிக்கின்றான்.

(இ - ள்.) (அவ்வார்த்தையைக்கேட்டு), பகலவன் குலம் மைந்தன் - சூரியகுலத்தில்தோன்றிய ஸ்ரீராமன், '(அவ்வரக்கர்கள்), புகல் புகுந்திலர் ஏல் - (இனித் தீமைசெய்வதில்லை என்று சொல்லி) அடைக்கல மடையாமற்போவாரானால், புறத்து அண்டத்தின் அகல்வர் ஏனும் - (இவ்வண்டத்தைவிட்டு) அப்பாலுள்ள வேறு அண்டங்களில் ஓடிப்போவாரானாலும், என் அம்பொடும் - எனதுபாணத்தோடும், வீழ்வர் - கீழேவிழுந்திறப்பர்; ஆல் - ஆகையால், நீர் - நீங்கள், தகவு இல் துன்பம் - தகுதியில்லாத இத்துன்பத்தை, தவிருதிர் - நீங்குங்கள்', என - என்றுசொல்லி, பணிக்கின்றான் - (பின்னும்) சொல்லுகின்றான்; (எ - று.)

சாதுக்களும் மிக்கபெரியோர்களுமாகிய உங்கட்கு இவ்வாறு வருத்தம்வருதல் தக்கதன்றென்பான் 'தகவில்துன்பம்' என்றான். பகலவன் - தன்சேர்க்கையாற் பகலைச் செய்பவன். 'அம்பொடும் வீழ்வர்' என்னுமிடத்து அம்பினது வீழ்ச்சியாகிய காரணத்திற்கும், அரக்கர்களின் வீழ்ச்சியாகிய காரியத்திற்கும் ஒருகாலத்தில் உண்டாகுகை கூறப்பட்டதனால், முறையிலுயர்வுநவிற்சியணி; இதனை வடநூலார் அக்கிரமாதிசயோக்தி யென்பர்: இது காரிய விரைவைத் தெரிவிப்பதாம். "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்பதிற்போல 'ஒடு' உருபைக் கருவிப்பொருளில் வந்ததாக் கொண்டு, அம்பினால் வீழ்வ ரென்றுமாம். பி - ம்:—[1] என்னினும். [2] தவிருமின்.

இதுமுதற் பத்தொன்பதுகவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகி வந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (134)

18. வேந்தன் வீயவும் யாய் [1]துயர் மேவவும்
ஏந்த லெம்பி வருந்தவு மென்னகர்
மாந்தர் வன்றுயர் கூரவும் யான்வனம்
போந்த தென்னுடைப் புண்ணியத் தாலென்றான்.

(இ - ள்.) 'வேந்தன் வீயஉம் - சக்கரவர்த்தி [தசரதன்] இறப்பவும், யாய் துயர் மேவஉம் - தாய் [கௌசலை] துன்பமடையவும், ஏந்தல் எம்பி வருந்தஉம் - பெருமையையுடைய என்தம்பி [பரதன்] வருத்தமடையவும், என் நகர் மாந்தர் - எனது நகரத்தில் [அயோத்தியில்] உள்ள ஜனங்கள், வல் துயர் கூரஉம் - வலிய துன்பத்தை மிகுதியாக அடையவும், யான் வனம் போந்தது - நான் காட்டிற்குப் புறப்பட்டுவந்தது, என்னுடை புண்ணியத்தால் - எனது நல்வினையாலாகும்,' என்றான்—; (எ - று.)

வேந்தன் வீதல், புத்திரசோகத்தால்; பரதன் வருந்துதல், இராச்சியபாரந் தாங்கற்கு அருமையால். மூத்தமகனாகிய தனக்கே உரிய தாதலால் 'என்னகர்' என்றும், முனிவர்களுக்குப் பகைதீர்த்து உதவிசெய்யப் பெற்றதனால் 'போந்த தென்னுடைப் புண்ணியத்தால்' என்றும் கூறுகின்றான்: வனம்போந்ததிலுள்ள குற்றத்தில் குணமிருப்பதாகக்கூறிய இதில் அநுஜ்ஞாலங்கார மெனப்படும் வேண்டலணி தோன்றும். பி - ம்:—[1]வரம். (135)

19. அறந்த வாநெறி யந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலை யேனெனின்
இறந்து போகினு நன்றிது வல்லது
பிறந்தி யான்பெறும் பேறென்பதி யாவதோ.

(இ - ள்.) அறம் நெறி - தருமமார்க்கத்தினின்றும், தவா - (சிறிதும்) நீங்காத, அந்தணர் - முனிவர்களது, தன்மையை - பெருமையை, மறந்த - மறந்து (அவர்கட்கு) வருத்தத்தைச் செய்கின்ற, புல்லர் - அற்பர்களாகிய அவ்வரக்கர்களது, வலி - பலத்தை, தொலையேன் எனின் - அடியோடு அழிக்காமற் போவேனானால், இறந்து போகின்உம்-(அவ்வரக்கர்களாலே யான்) இறந்துபோனாலும், நன்று - நல்லதே; இது அல்லது - இதனை யல்லாமல், யான்—, பிறந்து - (இவ்வுலகில் மானுடப்பிறவியெடுத்துத்) தோன்றி, பெறும் - அடைகின்ற, பேறுஎன்பது-பாக்கிய மென்று சொல்லப்படுவது, யாவதுஓ- வேறு எதுவோ? [ஒன்றுமில்லை]; (எ - று.)

இதனால், இராமபிரான் தனது அவதாரம் துஷ்டநிக்கிரகஞ் செய்து சிஷ்டபரிபாலனஞ்செய்தற்பொருட்டே யெனக் குறிப்பாகத் தெரிவிக்கின்றனனென்க. (136)

20. நிவந்த வேதியர் [1]நீவிருந் தீயவர்
கவந்த பந்தக் களிநடங் [2]கண்டிட
அமைந்த வில்லு மருங்கணைத் தூணியும்
சுமந்த தோளும் பொறைத்துயர் தீருமால்,

(இ - ள்.) நிவந்த - உயர்ந்த, வேதியர் - வேதமுணர்ந்த அந்தணர்களாகிய, நீவிர்உம் - நீங்களும், தீயவர் - துஷ்டர்களாகிய அவ்வரக்கர்களது, கவந்தம் பந்தம் - தலையற்ற உடற்குறைகளது கூட்டங்கள் ஆடுகின்ற, நடம் - கூத்தை, களி - களிப்போடு, கண்டிட - காணும்படியாக,—அமைந்த வில்உம் - கட்டமைந்த வில்லையும், அருங்கணை தூணிஉம் - தடுத்தற்கரிய அம்புகளையுடைய தூணீரங்களையும், சுமந்த- தாங்கிக்கொண்டிருக்கின்ற, தோள்உம்-(என்னுடைய) தோள்களும், பொறை துயர் - (அவற்றைச்) சுமப்பதாலாகிய துன்பத்தை, தீரும் - நீங்கப்பெறும்; (எ - று.)

நான் பகைவரைத் தவறாது கொல்வேன் என்றவாறு. தோள்கள் வில்லுந் தூணியுந் தாங்குதற்குப் பயன் போரிற் பகைவரை வெல்லுதலே யாதலால், 'தோளும் பொறைத்துயர் தீரும்' என்றான். தோளுமென்ற உம்மை - பூமியும் பாரநீங்கும்; நீவிரும் துன்பம்நீங்குவிரெனக் குறிப்பித்தது. நீவிரு மென்ற உம்மை, மற்றை யாவரையுந் தழுவியது. உம் தீயவர் எனப் பிரித்து, உமக்குத் தீமையைச்செய்கின்றவ ரென்றுமாம். கவந்தம் - கபந்தம். பந்தம் - ப்ருந்தம்என்ற வடசொல்லின் திரிபு. கணைத் தூணி - அம்புப்புட்டில். தூணி - வடசொற்சிதைவு. பி - ம்:—[1]நீரிரும். [2]காண்டிரால். (137)

21\. ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்
[1]யாவர்க் கானு மெளியவர்க் காயினும்
சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழுந் தேவர்க ளாகுவார்.

(இ - ள்.) ஆவுக்கு ஆயின்உம்-பசுக்களைக் காப்பதற்கானாலும், அந்தணர்க்கு ஆயின்உம் - பிராமணர்களைக் காப்பதற்கானாலும், எளியவர்க்கு ஆயினும்-ஏழைகளைக் காப்பதற்கானாலும், யாவர்க்கு ஆனும்-(இன்னும் மற்றை) எவர்களைக் காப்பதற்கானாலும், சாவ பெற்றவர்ஏ - (உதவிசெய்து) இறக்கப்பெற்றவர்கள்தாமே, தகை வான் உறை-பெரிய சுவர்க்கலோகத்திலே வசிக்கின்ற, தேவர்க்கும்—, தொழும்-வணங்குகின்ற, தேவர்கள் ஆகுவார்—; (எ - று.)

தனது பாலாலும் உழவுத்தொழிலைச்செய்யும் எருத்துமாடுகளை ஈனுவதாலும், வயலின்உரத்துக்குஏற்ற சாணம் சிறுநீர்களைத் தருதலாலும் 'ஆவுக்காயினும்' என்று முதலிற்கூறினார்; உயிர்க்கு ஆதாரமான உடம்பின் நன்மைக்குப் பசு ஆதாரமாக இருத்தல்போல, அந்தணர் உயிரின் நன்மைக்குஏற்ப ஞானத்தையுதவுதலால் அவரை ஆவுக்கு அடுத்தபடி கூறினர். இங்ஙன் ஆவையும் அந்தணரையும் ஒருசேரவைத்துக் கூறுதல் கவிமரபு: "ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்" "ஆன்முலையறுத்த அறனிலோர்க்கும்...பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்", "பார்ப்பார்...பசுப்பத்தினிப் பெண்டிர் ...தீத்திறத்தார்பக்கமே சேர்க", சிதைவகல்காதல் தாயை...... தெய்வப்பதவி யந்தணரை ஆவை" என்ற இடங்களைக் கவனிக்கவும். இன்னோர்க்கு உதவிசெய்வதால் இறந்தவர் தேவர்களுள்ளுஞ் சிறந்த தேவரென்றபடி. எளியவர் - வலிமையுஞ் செல்வமு மில்லாதவர். ஆனும் = ஆயினும். பி-ம்:—[1]ஏவர்க்கேயும். (138)

22. சூர றுத்தவ னுஞ்சுடர் நேமியும்
ஊர றுத்த வொருவனு [1]மோம்பினும்
ஆர றத்தினெ டன்றிநின் றூரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீரென்றான்.

(இ - ள்.) சூர் அறுத்தவன்உம் - சூரபதுமனென்னும் அசுரனை அழித்த சுப்பிரமணியனும், சுடர் நேமிஉம் - விளங்குகின்ற சக்கராயுதத்தையுடைய திருமாலும், ஊர் அறுத்த ஒருவன்உம் - திரிபுரங்களை எரித்தழித்த பரமசிவனும், ஓம்பின்உம் - (துணையாக வந்து) காத்தாலும், ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் - எவ்வரக்கர்கள் தருமத்தோடு பொருந்தாமல் அதருமத்தோடு பொருந்திநின்றார்களோ அவர்களை, வேர் அறுப்பென் - வேரோடு அழியச்செய்வேன்; நீர் வெருவன்மின் - நீங்கள் பயப்படாதேயுங்கள், என்றான்—; (எ - று.)

இதனால், ஸ்ரீராமன் அபயம்வேண்டிய முனிவர்களை நோக்கி 'மும்மூர்த்திகளே முன்னின்று காக்கினும், அறத்தோடு மாறுபட்ட அரக்கரை அடியோடு அழிப்பேன்' என அபயப்பிரதானஞ்செய்கின்றானென்க. சூர் - ஸூரர் : வடசொற்சிதைவு. திரிமூர்த்திகளுள்ளும் பிரமன் அந்தணனாகி வைதிகநிஷ்டையில் இருப்பவனாதலால், அவனைநீக்கி, போரில் வல்லவனும் தேவசேநாபதியுமாகிய சுப்பிரமணியனைச் சேர்த்தனன். இராமபிரான் தான் திருமாலின்வடிவமாயினும் மனிதனாகத் திருவவதரித்ததற்கு ஏற்ப, அத்தெய்வத்தன்மையை மறைத்து, நாராயணமூர்த்தியை 'சுடர் நேமி' எனப் படர்க்கையாகப் பிறன்போலக் கூறினான். நேமி - சக்கரபாணிக்கு ஆகுபெயர்; அன்றிக்கே, சுடர்நேமி - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையுமாம். 'ஓம்பினும்' என்றது, ஓம்பாமையே கருதிற்று. பி-ம்:—[1]காப்பினும். (139)

## 23.—இராமனிடத்து அபயம் பெற்ற முனிவர்களின் மகிழ்ச்சி.

உரைத்த வாசகங் கேட்டுவந் [1]தோங்கிட
இரைத்த காதல ரேகிய வின்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
நிருத்த மாடினர் நின்று விளம்புவார்.

(இ - ள்.) உரைத்த வாசகம் - (இவ்வாறு ஸ்ரீராமன்) சொன்ன வார்த்தையை, (அம்முனிவர்கள்), கேட்டு—, உவந்து-மகிழ்ந்து, ஓங்கிட இரைத்த காதலர்-அதிகமாகப் பொங்கியெழுந்த அன்பினை யுடையவர்களும், ஏகிய இன்னலர் - நீங்கிய துன்பத்தை யுடையவர்களும், திரித்த கோலினர்-(கையால்) திரித்த தண்டத்தை யுடையவர்களும், தே மறை பாடினர் - இனிப்பான வேதங்களைப் பாடினவர்களும், நிருத்தம் ஆடினர்-கூத்தாடினவர்களுமாகி, நின்று —, விளம்புவார்-சொல்லுவார்கள்; (எ - று.)

கோல்திரித்தல் முதலிய மூன்று செயல்களும், பெருமகிழ்வுக் குறிப்பு. ஏகிய இன்னலர் என்று கூறியதனை "அருங்கேடன்,'

"சென்று சேர்கல்லரப்புள்ளவுள்ளி, லென்றூழ் வியன்குளம்" என்பனபோலக் கொள்க; இனி, இன்ன லேகியவர், கோல்திரித்தவ ரென விகுதிபிரித்துக் கூட்டுவாரு முண்டு. "நூலே கரக முக்கோல் மணையே, யாயுங் காலை யந்தணர்க் குரிய" என்பதனால், கோல் கூறினார். தே மறை-தெய்வத்தன்மையையுடைய வேதமென்றுமாம். நிருத்தம்=ந்ருத்தம். பி-ம்:—[1]ஓங்கிய. (140)

## 24.—முனிவர்கள் இராமனைப் புகழ்தல்.

தோன்ற னீமுனி யிற்புவ னத்தொகை
மூன்று போல்வன முப்பது கோடிவந்து
ஏன்ற போது மெதிரல வென்றலின்
[1]சான்று வேதந் தவம்பெரு ஞானமே.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தோன்றல் - தலைவனே !, நீ முனியின் - நீ கோபிப்பாயானால், மூன்று போல்வன - இந்தத் திரிலோகங்களையும் போல்வனவாகிய, முப்பது கோடி புவனம் தொகை - முப்பதுகோடி லோகங்களுடைய கூட்டங்கள், வந்து - (ஒரேகாலத்தில் ஒருங்கே சேர்ந்து) வந்து, ஏன்ற போதுஉம்-எதிர்த்தாலும், (அவை), எதிர் அல - (உனக்கு) ஈடல்ல, என்றலின் - என்ற தன்மையில், வேதம் - வேதங்களும், தவம் - (எங்களுடைய) தவங்களும், பெரு ஞானம் - தத்துவஞானமும், சான்று - சாட்சியாகும்; (எ - று.)

நீ போர் செய்வதற்கு முன்னதாக அவர்கள்மீது கொள்ளுஞ் சீற்றமே அவர்களை அடியற அழிக்க அமையுமென்றவாறு. பகவானது பெருமையையே வேதங்கள் ஓதுவதுபற்றியும், தவவலிமையாலும் அதனா லுண்டாகின்ற தத்துவஞானத்தாலும் தாம் அதனை அறிவதுபற்றியும், 'சான்று வேதந் தவம் பெருஞானம்' என்றார். பெருஞானம் - ஐயந்திரிபில்லாத உண்மையுணர்வு. தோன்றல் - ஆண்மைவிளி. புவனம் மூன்று - சுவர்க்க மத்திம பாதாளங்கள். 'முப்பதுகோடி' என்றது, மிகப் பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு. பி-ம்:—[1]சான்றலோ வெந்தகைப். (141)

## 25.—முனிவர்களது வேண்டுகோளின்படி ஸ்ரீராமன் அங்குத் தங்கியிருத்தல்.

[1]அன்ன தாகலி னேயின வாண்டெலாம்
இன்னல் காத்திங் கினிதுறை வாயெனச்
சொன்ன மாதவர் பாதந் தொழுதுயர்
மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினான்.

(இ - ள்.) அன்னது ஆகலின் - (நின்மகிமை) அத்தன்மையதாதலால், ஏயின ஆண்டுஎலாம் - (நீ வனத்திலே யிருக்கும்படி) ஏற்படுத்தியவற்றில் எஞ்சிய வருடங்களெல்லாம், இன்னல் காத்து - (எங்களுக்குத்) துன்பம்வாராமற் காத்துக்கொண்டு, இங்கு - இந்தத் தண்டகவனத்து ஆச்சிரமங்களில், இனிது உறைவாய் - சுகமாக வசிப்பாய், என-என்று, சொன்ன—, மா தவர் - முனிவர்களின்,

பாதம்-திருவடிகளை, தொழுது-வணங்கி, உயர் மன்னர் மன்னவன் மைந்தன்உம்-சிறந்த சக்கரவர்த்தி திருமகனும், வைகினன் - (அவ் விடத்தில்தானே) தங்கியிருந்தான்; (எ று.)

'இன்னல் காத்து' என்பது, 'குற்றமே காக்க பொருளாக' என்பதுபோலத் தடுத்தலென்ற பொருளைத் தந்தது. 'உயர்' என்பதனை மன்னர்க்கு ஆதல், மன்னவற்கு ஆதல், மைந்தற்கு ஆதல் கூட்டுக. பி - ம்:—[1]அன்னைகாதலின். (142)

## 26.—இராமன் முதலிய மூவரும் முனிவராச்சிரமங்களிற் பத்துவருடம் கழித்துப் பின்பு அவர்களனுமதிப்படி அகத்திய ராச்சிரமத்துக்குப் புறப்படுதல்.

[1]ஐந்து மைந்து மமைதியி னுண்டவண்
மைந்தர் தீதிலர் வைகினர் மாதவர்
சிந்தை யெண்ணி யகத்தியற் சேர்கென
இந்து நன்னுத றன்னொடு மேகினர்.

(இ - ள்.) மைந்தர் - ஸ்ரீராமலட்சுமணர்கள், அவண் - அவ் விடத்தில் [முனிவர்களினாச்சிரமமண்டலத்தில்], ஐந்துஉம் ஐந்து உம்ஆண்டு-பத்துவருடகாலம், தீது இலர்-ஒரு துன்பமு மில்லா மல், அமைதியின்-சுகமாக, வைகினர்-தங்கியிருந்தார்கள்; (பின்பு) மா தவர்-அம்முனிவர்கள், சிந்தை எண்ணி - மனத்தினால் ஆலோ சித்து, அகத்தியன் சேர்க என-'அகத்திய முனிவரைச் சேர்வீராக' என்று சொல்ல,—(அவ்வாறே), இந்து நல் நுதல் தன்னொடுஉம் - பிறைச்சந்திரன்போன்ற அழகிய நெற்றியையுடைய சீதையுடனே, ஏகினர்-புறப்பட்டார்கள்; (எ-று.)

ஒவ்வொரு ஆச்சிரமத்திலுஞ் சிலசிலநாளாக முனிவர்க ளாச் சிரமங்கள்தோறுந் தங்கியிருக்கப் பத்துவருஷங்கள் கழிந்தன வென்க. முக்காலமுணர்ந்த முனிவர்கள் மேல் இராவணவத நிமித் தம் இராமபிரான் அகத்தியனிடத்து வில்முதலியன பெறவேண்டி யிருத்தலின் 'சிந்தையெண்ணி அகத்தியற்சேர்க' என்றனர். பி-ம்:— [1]ஐந்தொடு. (143)

## 27.—அம்மூவரும் ஸுதீக்ஷ்ணனது ஆச்சிரமஞ் சேர்தல்.

விடர கங்களும் வேய்செறி கானமும்
படருஞ் சின்னெறி பைப்பைய நீங்கினர்
சுடரு மேனிச் [1]சுதீக்கண னென்னுமவ்
விடரி லானுறை சோலைசென் றெய்தினர்.

(இ-ள்.) (புறப்பட்ட அவர்கள்), விடர் அகங்கள்உம்-வெடிப்புள்ள இடங்களிலும், வேய் செறி கானம்உம் - மூங்கில்கள் நிறைந்த காடு களிலும், படரும்-செல்லுகின்ற, சில் நெறி-சிறிய வழிகளை, பைப்பைய - மெல்ல மெல்ல, நீங்கினர் - கடந்தவர்களாய்,—சுடரும் மேனி - விளங்குகின்ற மேனியையுடைய, சுதீக்கணன் என்னும்-ஸுதீக்ஷ்ண னென்கிற, அ இடர் இலான்-பிறவித்துன்பங்களில்லாத அம்

முனிவன், உறை - தங்கியிருக்கின்ற, சோலை - சோலையை, சென்று எய்தினர் - போய்ச்சேர்ந்தார்கள்; (எ-று.)

காட்டின்வழியை, விடரகங்களும் வேய்செறிகானமும் படரும் நெறி யென்று விளக்கினர். சுடர்தல் - பிரமதேஜசு வெளிவிளங்குதல். சுதீக்கணன்-விகாரம்; மிகவும் உக்கிரமான தவமுடைமையால், ஸுதீக்ஷ்ணனெனப் பெயர். தவத்தால் மெய்யுணர்வு பெற்று, அதனால் இருவகைப்பற்றும் அறவே பிறவித் துன்பங்கள் தாமே கழிதலால், 'இடரிலான்' என்றார்; இனி ஐம்பொறிகளால் உளதாகும் வருத்த மில்லாதவ னென்றுமாம். வேய்-மற்றை முண்மரங்களுக்கும் உபலட்சணம். சின்னெறி-சின்மையாகிய நெறி; சின்மை - சிறியதாந் தன்மை. பைப்பைய-பைய பைய என்னும் அடுக்கின் விகாரம். பி-ம்:—[1]சுதீட்டனென் பான்றொடர். (144)

## 28.—இராமலட்சுமணர்கள் சுதீட்சிணனை வணங்க, அம் முனிவன் வரவேற்றல்.

அருக்க னன்ன முனிவனை யவ்வழிச்
செருக்கில் சிந்தையர் சேவடி தாழ்தலும்
இருக்க வீண்டென் றினியன கூறினன்
மருக்கொள் சோலையின் மைந்தரும் வைகினர்.

(இ - ள்.) செருக்கு இல் சிந்தையர் - கருவமில்லாத மனத்தையுடைய ராமலட்சுமணர்கள், அவ்வழி - அங்குள்ள ஆச்சிரமத்தில் (சென்று), அருக்கன் அன்ன முனிவனை - சூரியனையொத்து விளங்குகின்ற அம்முனிவனை, சேவடி தாழ்தலும் - சிவந்ததிருவடிகளில் விழுந்து வணங்கியவளவில்,—(அம்முனிவன்), ஈண்டு இருக்க என்று - 'இவ்விடத்தில் தங்குவீர்களாக' என்று, இனியன கூறினன் - இனிய உபசாரவார்த்தைகளைச் சொன்னன்; (சொல்ல), மைந்தர்உம் - அவ்வீரர்களும், மரு கொள் சோலையில் - (மிக்க) வாசனையைக்கொண்ட அச்சோலையில், வைகினர் - தங்கினர்கள்;

அருக்கன் - பேரொளியிலும், அஞ்ஞானமனவிருளகற்றுதலிலும் உவமை. (145)

## 29.—சுதீக்கணனது முகமன்.

வைகும் வைகலின் மாதவன் [1]மைந்தர்பாற்
செய்கை [2]யாவையுஞ் செய்திவட் செல்வநீ
எய்த யான்செய்த தெத்தவ மென்றனன்
ஐய னும்மவற் கன்பினன் கூறுவான்.

(இ - ள்.) வைகும் வைகலின் - (அங்ஙனம்) தங்கியிருக்கும் பொழுது, மாதவன் - அம்முனிவன், மைந்தர்பால் - ஸ்ரீராமலக்ஷ்மணரிடத்தில், செய்கை யாவைஉம் - செய்யவேண்டிய உபசாரங்களெல்லாவற்றையும், செய்து,— 'செல்வ - செல்வமுடையோனே! இவண் எய்த - இவ்விடத்தில் எழுந்தருளும்படி, யான் செய்தது—, எ தவம் - எத்தன்மைய தவமோ?' என்றனன் - என்று சொன்னன்;

(அப்பொழுது), ஐயன்உம் - ஸ்ரீராமனும், அவற்கு - அம்முனிவனுக்கு, அன்பினன் - அன்பையுடையவனுகி, கூறுவான்—; (எ-று.) —அது மேற் கூறுகின்ருர்.

செல்வன் - அரசச்செல்வத்துக்குஉரியவன் : இம்மை மறுமை வீடுகளில் அடையும் பாக்கியங்களைத் தன் அடியார்க்குத் தருபவன். பி - ம் :—[1]மைந்தன். [2]யாவதும். (146)

## 30.—இராமபிரான் எதிராக அம்முனிவனைப் போற்றுதல்.

சொன்ன நான்முகன் றன்வழித் தோன்றினர்
முன்னை யோரு ளுயர்தவ முற்றினுர்
உன்னின் யாருள ருன்னரு ளெய்திய
என்னின் யாருள [1]ரிப்புவி மீதென்ருன்.

(இ - ள்.) 'இ புவிமீது - இந்தப்பூமியின்மேல், சொன்ன - சிறப்பாகச் சொல்லப்படுகின்ற, நான்முகன்தன் - பிரமதேவனது, வழி - வமிசத்தில், தோன்றினர் - பிறந்தவர்களாகிய, முன்னையோருள் - முதன்மையான முனிவர்களுக்குள், உயர் தவம் முற்றினுர் - சிறந்த தவத்தை முற்றச்செய்தவர்கள், உன்னின் - உன்னைப்போல, யார்உளர் - வேறு எவரிருக்கின்றனர்? உன் அருள் - உன்னுடைய கிருபையை, எய்திய - அடைந்த, என்னின் - என்னைப் போல, (மேம்பட்டவர்), யார்உளர் - வேறு எவரிருக்கின்றனர் !' என்ருன்—; (எ-று.)

ஒப்புயர்வில்லாத தவமுடைய உனது கருணையைப் பெற்றேனுதலால், என்னினும் பேறுபெற்றவர் எவருமில்லை யென்பதாம். பிராமண ரென்பதன் பொருள்பற்றி, 'நான்முகன்வழித் தோன்றினர்' என்ருன். உன்னின் - ஆலோசித்தா லென்றுமாம். பி-ம்:— [1]இற்பிறந்தார். (147)

## 31.—முனிவன் தன்தவத்தைக் கையுறையாக ஏற்குமாறு இராமனை வேண்டுதல்.

உவமை நீங்கிய தோன்ற லுரைக்கெதிர்
நவமை [1]நீங்கிய நற்றவன் சொல்லுவான்
அவமி லாவிருந் [2]தாகியென் ஞலமை
தவமெ லாங் [3]கொள்க தக்கிணை யாவென்ருன்.

(இ - ள்.) நவமை நீங்கிய நல் தவன் - புதுமையில்லாத [பழைய] சிறந்த தவத்தையுடையவனை அம்முனிவன், உவமை நீங்கிய தோன்றல் - ஒப்பில்லாத ஸ்ரீராமனது, உரைக்கு - வார்த்தைக்கு, எதிர் சொல்லுவான் - உத்தரஞ் சொல்லுபவனுய், '(நீ), அவம் இலா விருந்து ஆகி - வீண்போகாத விருந்தினனுகி, என்னுல் அமை தவம் எலாம் - என்னுற் செய்யப்பட்ட தவங்களையெல்லாம், தக்கிணை ஆ - தட்சிணையாக, கொள்க - பெற்றுக்கொள்வாயாக', என்ருன்—; (எ-று.)

தனது நற்செயலைப் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்தல் பெரியோர்களின் தன்மையா மென்றும், இச்செயல் ஸாத்விகத்யாக மெனப்படுமென்றும் அறிக. நவமை - வடசொல்லடியாகவந்த பண்புப்பெயர். அவமிலா விருந்து - தக்க விருந்து. தகுதி-ஞானவொழுக்கங்களான் உயர்தல். தக்கிணை = தக்ஷிணை: காணிக்கை. பி - ம்:—[1]தோன்றிய. [2]ஆக. [3]கொளத்தக்கனையால். (148)

## 32.—இராமபிரான் அகஸ்தியராச்சிரமஞ் செல்லவேண்டுமெனல்.

மறைவ லானெதிர் வள்ளலுங் கூறுவான்
இறைவ நின்னரு ளெத்தவத் திற்கெளிது
அறைவ தீண்[1]டுண் டகத்தியற் காண்பதோர்
குறைகி டந்த தினியெனக் கூறினன்.

(இ-ள்.) வள்ளல்உம்-ஸ்ரீராமனும், மறை வலான் - அம்முனிவனுக்கு, எதிர் கூறுவான் - உத்தரஞ் சொல்லுபவனாய், 'இறைவ - தலைவனே! நின் அருள்-உன் கருணை, எ தவத்திற்கு - எப்படிப்பட்ட (உயர்ந்த) தவத்திற்கு, எளிது-தாழ்ந்தது?' (என்று சொல்லி, அத்தவத்தை ஏற்றுக்கொண்டபின்பு),— 'ஈண்டு - இப்பொழுது, அறைவது - சொல்லவேண்டுவது, உண்டு - (ஒருபொருள்) உண்டு; (அது என்னவென்றால்), இனி—, அகத்தியன் காண்பது - அகத்திய முனிவனைக் காணவேண்டுவதாகிய, ஓர் குறை-ஒருகுறைவு, கிடந்தது -(என்மனத்தில்) உள்ளது,' என-என்று, கூறினன்—; (எ-று.)

நின்னருள் எத்தவத்திற்குஎளிது - நினதருளே எல்லாத்தவத்திற்கும் உயர்ந்ததென்பதாம். முனிவர்தலைவனாதலால், 'இறைவ' என்றான். குறை - செய்யவேண்டிய காரியம்: இன்றியமையாத செயலுமாம். பி-ம்:—[1]ஒன்று. (149)

## 33.—இதுவும் அடுத்த கவியும் - முனிவன் அவ்வேண்டுகையை உடன்பட்டுக் கூறுதலைத் தெரிவிக்கும்.

நல்ல தேநினைந் தாயது நானுமுன்
சொல்லு வான்றுணி கின்றது தோன்றனீ
[1]செல்க வாண்டவற் சேருதி சேர்ந்தபின்
இல்லை நின்வயி [2]னெய்தலில் லாதவே.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.)(பின்னும் சுதீட்சிணமுனிவன் கூறுவான்):—தோன்றல் - தலைவனே! நீ—, நல்லதுஏ நினைந்தாய் - நல்ல காரியத்தையே ஆலோசித்தாய்; அது - அக்காரியம், நானும்—, முன் - முன்னமே, சொல்லுவான் துணிகின்றது-சொல்லும்படி நிச்சயித்தது; ஆண்டு செல்க அவன் சேருதி - அவ்விடத்திற் சென்று அம்முனிவனைச் சேர்வாயாக; சேர்ந்தபின்—, நின்வயின் - உன்னிடத்தில், எய்தல் இல்லாத-அடையாத பேறுகள், இல்லை-ஒன்றுமில்லை; (எ-று.)

உனக்குச் சகலபாக்கியங்களும் உண்டாகுமென்பதாம். முன் துணிகின்றது - இயல்பிறுல்வந்த காலவழுவமைதி. செல்கவென் னும் முற்றே சென்றுஎனப் பொருள்தந்தது; முற்றெச்சம். பி-ம்:—[1]செல்லுகாண்டு, செல்தியாண்டு. [2]எய்தகில்லாதவே. (150)

34. அன்றி யுந்நின் வரவினை யாதரித்து
இன்று காறுநின் றேமுறு மாலவற்
சென்று [1]சேருதி சேருதல் செவ்வியோய்
நன்று தேவர்க்கும் யாவர்க்கு [2]நன்றெனு.

(இ - ள்.) அன்றிஉம் - அதுவல்லாமலும், (அம்முனிவன்), நின் வரவினை - உனதுவருகையை, ஆதரித்து - விரும்பி, இன்று காறுஉம் - இந்நாள்வரையிலும், நின்று - (எதிர்பார்த்து) நின்று, ஏமுறும் - (நீ இப்போது சென்று சேர்தலால்) களிப்புறுவன்; ஆல் - ஆகையால், செவ்வியோய் - எல்லா நன்மைகளையுமுடையோனே! அவன் - அம்முனிவனை, சென்று சேருதி-போய்ச் சேர்வாயாக: சேருதல்—, தேவர்க்குஉம் - தேவர்களுக்கும், நன்று-நல்லது; யாவர்க்குஉம்-மற்றையெல்லோர்க்கும், நன்று-நல்லது, எனு - என்று சொல்லி,—(எ - று.)—கூறி (35) என்க.

அங்குச்சென்று சேர்ந்து அநேகம் அஸ்திரசஸ்திரங்களை அம் முனிவன்பாற் பெற்று அவற்றைக்கொண்டு மேல் ராவணுதிராக்ஷஸ வதஞ்செய்து, அரக்கர்களால் அனைத்துலகங்களுக்கும் உண்டாயிருக் கும் அருந்துயரை யொழித்தருளுவதனை, இம்முனிவன் தன் ஞானக் கண்ணுல் அறிந்தன னுதலால், 'தேவர்க்கும் யாவர்க்கும் நன்று' என்றுன். தேவர்களது பிரார்த்தனையால் திருவவதரித்தமைபற்றி, தேவரை முன்னர்க் கூறினுன். பி-ம்:—[1]சேருதல்செய்குதி, சேருதல் சேருதி. [2]நன்றரோ. (151)

## 35.—இராமன் முதலியோர் அகத்தியமுனிவனுச்சிரமத்திற்குச் செல்லுதல்.

வழியுங் கூறி [1]வரம்பக லாசிகள்
மொழியு மாதவன் மொய்ம்மலர்த் தாடொழாப்
பிழியுந் தேனிற் பிறங்கரு வித்திரள்
பொழியுஞ் [2]சோலை விரைவினிற் போயினுர்.

(இ - ள்.) வழிஉம் கூறி - (அவ்வாச்சிரமத்துக்குப் போகும்) வழியையுஞ் சொல்லி, வரம்பு அகல் ஆசிகள் - அளவில்லாத ஆசீர் வாதங்களையும், மொழியும் - சொல்லுகின்ற, மா தவன் - அம்முனி வனது, மொய் மலர் தாள் - (வண்டுகள்) மொய்க்கின்ற தாமரை மலர்போலுந் திருவடிகளை, தொழா - (இராமலட்சுமணர்கள்) வணங்கி,—(பின்பு), பிழியும் - வடிகின்ற, தேனின் - தேனினது, பிறங்கு - விளங்குகின்ற, அருவி திரள்- அருவித்தொகுதியை, பொழியும் - சொரிகின்ற, சோலை - (அகத்தியன் எழுந்தருளியிருக்கின்ற) சோலைக்கு, விரைவினின்-சீக்கிரமாக, போயினுர்—; (எ-று.)

அருவித்திரளின் பெருக்குப்போலத் தேனின் பெருக்கைப் பொழிவது, அகத்திய முனிவனிருக்குஞ் சோலையென்க. பி - ம் :— [1]வரம்பிலது. [2]சாரல். (152)

வே று.

## 36.—அகத்தியமுனிவன் இராமலட்சுமணர்களை எதிர் கொள்ளுதல்.

ஆண்டகைய ரவ்வயி னடைந்தமை யறிந்தான்
ஈண்டுவகை வேலைதுணை யேழுலக மெய்த
மாண்டவர தன்சரண் வழங்கவெதிர் வந்தான்
நீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்.

(இ - ள்.) நீண்ட தமிழால் - பெரிய தமிழ் மொழியால், உலகை - உலகமுழுவதையும், நேமியின் - சக்கரபாணியாகிய திரு மாலைப்போல, அளந்தான் - அளந்த அகத்தியமுனிவன்,—ஆண் தகையர் - ஆண்மைக்குணமுள்ள அவ்விராமலக்ஷ்மணர்கள், அவ் வயின் - அவ்விடத்தில் [அப்பொழுது], அடைந்தமை - சேர்ந்ததனை, அறிந்தான் - அறிந்தவனாகி, ஈண்டு உவகை வேலை - மேன்மேலெழு கின்ற மகிழ்ச்சியாகிய கடல், துணை ஏழ்உலகம் - ஈரேழு [பதினான்கு] லோகங்களையும், எய்த - அடையும்படி,—மாண்ட வரதன் - மாட்சி மைப்பட்ட வரங்களைக் கொடுத்தருளுகின்ற ஸ்ரீராமன், சரண் வழங்க- (தன்) பாதங்களில் விழுந்து வணங்கும்படி, எதிர் வந்தான்-அப்பிரா னெதிரில் வந்தான்; (எ - று.)

இராமபிரானை அகத்தியனெதிர்கொள்வது இராவணாதியரின் சங்காரத்துக்குப் பரம்பரையாகக் காரண மாவதனால், பதினான்கு உல கமும் உவகை எய்துவதாயின: இனி, 'உவகைவேலை துணையேழுலக மெய்த' என்றது, ஆநந்தம் அளவில்லாது அதிசயிக்க என்றபடியு மாம். 'வரதன் சரண்வழங்க' என்பதற்கு - பாதங்களில் ஸ்ரீராமனை அகத்தியமுனிவன் இராவணாதியரின் சங்காரத்திற்காகச் சரண மடைய என்று கூறுவாருமுளர்; அப்பொருள் முதனூலின் போக் குக்குச் சேராது.

பரமசிவன் தானே அகத்தியற்கு அருளிய தாதலாலும், சிறந்த தொண்டர்பலர் கடவுளைத் துதித்ததெல்லாம் இம்மொழியினாலே யாதலாலும், 'நீண்ட தமிழ்' எனப்பட்டது. பரமசிவனாலே இலக்கண முபதேசிக்கப்பெற்றுத் தமிழைத் தென்றிசைக்கண்ணே விருத்தி செய்ததனால், அகத்தியனை 'தமிழாலுலகை யளந்தான்' என்றான்; தமிழால் உலகை அளத்தல்-தமிழ்மொழியை உலகமுழுவதும் பரவச் செய்தல். நேமி - ஆகுபெயர்; இன்-உவமப்பொருவு. திருமாலுவமை- உலகமளத்தற்கு. தகை - தகுதி; சற்குணம்: இது தொழிலடியாப் பிறந்ததாயினும் பொருளாற் பண்பப்பெயர். அவ்வயின் - இரட்டுற மொழிதல்.

இதுமுதல் இருபத்துநான்கு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளங்காய்ச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (153)

## 37.—இதுமுதல் ஐந்து கவிகள்-அகத்தியமுனிவனது சிறப்பைத் தெரிவிக்கும்.

பண்டவுணர் மூழ்கினர் படார்களென வானோர்
எண்டவ வெமக்கருள் கெனக்குறை [1]யிரந்தார்
கண்டொருகை வாரினன் [2]மு கந்துகட லெல்லாம்
உண்டவர்கள் பின்னுமிழ்க வென்றலு முமிழ்ந்தான்.

பத்துக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அவ்வகத்தியன்),—வானோர் - தேவர்கள், பண்டு - முன்னொருகாலத்தில், 'அவுணர் - அசுரர்கள், மூழ்கினர் - (கடலில்) அமிழ்ந்து மறைந்தார்கள்; (ஆகையால்), படார்கள் - அழியமாட்டார் கள்,' என - என்று எண்ணி, 'எண் தவ - (யாவராலும்) மதிக்கப்படு கின்ற தவமுடையானே! எமக்கு - எங்களுக்கு, அருள்க - அருள்செய் வாயாக,' என - என்று, குறைஇரந்தார் - (தமது) குறையைச் சொல்லி) இரந்தவர்களாக,—கண்டு-(அவர்களைப்) பார்த்து, (இரங்கி), கடல் எல்லாம் - சமுத்திர முழுவதனையும், ஒரு கை - (தனது) ஒரு கையில், வாரினன் முகந்து-வாரி மொண்டெடுத்து, உண்டு-குடித்து, பின் - பின்பு, 'அவர்கள் - அத்தேவர்கள், உமிழ்க - உமிழ்ந்தருளு வாயாக,' என்றலும் - என்று பிரார்த்தித்தவளவில், உமிழ்ந்தான் - (மீண்டும்) உமிழ்ந்தவன்; (எ - று.)

தம்பகைவனாகிய விருத்திராசுரன் மற்றும்பல அசுரர்களுடனே கடலில் ஒளித்துக்கொண்டபோது இந்திரன் முதலிய தேவர்கள் அகத்தியமகாமுனிவனை வந்து பிரார்த்திக்க, அம்முனிவன் அக்கடலி னீரைத் தனது ஒரு கையால் முற்றும் முகந்து பருகி யருளி, உடனே ஒளித்திருந்த அவ்வசுரனை இந்திரன் கொன்றபின், அவன் வேண்டு கோளின்படி மீண்டும் உமிழ்ந்தனனென்க. பி - ம்:—[1] இரந்தார்க் கண்டு, இரப்பக்கண்டு. [2] முகந்த. (154)

38. தூயகட னீரடிசி லுண்டது துரந்தான்
ஆய[1]வ தலாலமரு மெய்யுடைய வன்னோன்
மாயவினை வாளவுணன் [2]வாதவிதன் வன்மைக்
காயமினி துண்டுலகி னோரிடர் களைந்தான்.

(இ - ள்.) அமரும் - குறுகிக் கிடக்கின்ற, மெய் உடைய - திரு மேனியையுடைய, அன்னோன்-அம்முனிவன்,—தூய - பரிசுத்தமாகிய, கடல் நீர் - கடலின் நீரை, அடிசில் உண்டு - உணவாகப் பருகி, அது துரந்தான் - அதனை மீண்டும் உமிழ்ந்தவன், ஆய அது அலால் - (அங்ஙனஞ்) செய்த அந்தக் காரியமாத்திரமே யன்றி, மாயம் வினை - வஞ்சகச் செய்கையையுடைய, வாள் அவுணன் - வாள்போலுங் கொடிய அசுரனாகிய, வாதவிதன் - வாதாபி யென்பவனது, வன்மை

காயம் - வலிமையாகிய உடலை, இனிது உண்டு - (தான்) இனிமையாகப் புசித்து, உலகின்-உலகத்தவரது, அரு இடர்- (போக்குதற்கு) அரிய துன்பத்தை, களைந்தான்-போக்கியருளினான்; (எ - று.)

கீழிற்கவியிற் கூறிய சரிதையை மீண்டும் ஈண்டு முதலடியிற் சுருக்கிக்கூறியது, இஃது அரும்பெருஞ்செயலென்று இம்மூலமாக அவன்பெருமையை நன்குவிளக்குதற்கு. உண்டலென்பது- உண்பன தின்பன என இவ்வாறுப் பிரித்துக் கூறின் சிறப்புவினையும், பசிப்பிணி தீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாதலிற் பொதுவினையுமா மாதலால், 'நீரடிசிலுண்டு' என்றார். குறுமுனி யென்பதன் பொருள் விளங்க, 'அமருமெய்யுடையவன்றான்' எனப்பட்டது. வாதவி = வாதாபி. பி - ம்:—[1] அதனால். [2] மாயவவன்.

வாதாவிதன் காயம் இனிது உண்ட வரலாறு:—சகோதரர்களாகிய இல்வலன் வாதாபி என்னும் அசுர ரிருவர் இருந்தனர்; அவர்களுள் மூத்தவனாகிய இல்வலன் நாள்தோறும் பார்ப்பனவடிவம் பூண்டு சிராத்தமென்று ஒருவ்யாஜம் வைத்துப் பிராமணர்களை வரவழைத்து ஆட்டின்வடிவங்கொண்ட இளையவனாகிய வாதாபியைக் கொன்று அவனுடைய இறைச்சியை அம்முனிவர்களுக்கு விருந்திட்டு அவர்கள் உண்டபின்பு 'வாதாபீ! வெளியே வா' என்று உரக்கக் கூப்பிட்டழைக்க, அவன் இறந்தவர்களை யெழுப்பும் மிருதசஞ்சீவி யென்னும் மந்திரத்தினது வல்லமையால் அம்முனிவர்களின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு உயிரோடு வெளியில்வர, பின்பு இருவரும் இறந்த அம்முனிவர்களது ஊனைத் தின்று ஜீவித்து வந்தனர்: இங்ஙனம் அவர்களால் அநேகம் முனிவர்கள் அழிக்கப்பட்டவளவில், முனிவரெல்லாம் அகத்திய மஹர்ஷியைச் சரணமடைய, அவ்விருடி தானொருநாள் அங்ஙனமே சென்று வாதாபியினிறைச்சியை உண்டவுடனே இல்வலன் வழக்கப்படி அழைக்கும்போது 'வாதாபீ! ஜீர்ணமடைவாயாக' என்று சொல்லித் தன் தவவலிமையால் அவனை அழிக்க, பின்னர் அதுநோக்கி, அளவிறந்த கோபங்கொண்டு தன்மேலெதிர்த்து வந்த இல்வலனையும்தன் கண்களால் தீப்புறப்படச் சினந்துவிழித்து நோக்கி அழித்தருளின னென்பதாம். (155)

39. யோகமுறு பேருயிர்க டாமுலைவு று[1]மல்
[2]ஏகுநெறி யாதென மிதித்தடியி னேறி
மேகநெடு மாலைதவழ் [3]விந்தமெனும் விண்டோய்
நாகமது நாகமுற நாகமென நின்றான்.

(இ-ள்.) (மற்றும் அம்முனிவன்),—யோகம் உறு பெருஉயிர்கள்- யோகமார்க்கத்தில் நிலைநிற்கின்ற பெரிய முனிவர்கள், உலைவு உறாமல்- துன்பமடையாதபடி, ஏகும் நெறி - (சூரியசந்திராதி கிரகங்களும் நக்ஷத்திரங்களும்) செல்லுகின்ற வழி, யாது என-எதுவென்று சொல்லி (த் தம்மை) வேண்டிநிற்க, அடியின் மிதித்து ஏறி - கால்களால் மிதித்து மேலேஏறி, மேகம் நெடு மாலை தவழ் - பெரிய மேகங்களின் வரிசை தவழ்கின்ற, விந்தம்எனும் - விந்திய மென்கிற,

விண் தோய் நாகம்அது - ஆகாயத்தை அளாவி வளர்ந்த மலையானது, நாகம்உற - பாதாளத்தை யடைந்து குறுகும்படி, நாகம் என - யானைபோல, நின்றான்-(கம்பீரமான தோற்றத்தோடு) நின்றான்; (எ-று.)

அகத்தியன் விந்தமலை பாதலமடையநின்றகதை;—முன்னொரு காலத்தில் விந்தியமலை மேருமுதலிய எல்லாமலைகளினும் தான் உயர வேண்டுமென்று கருதி ஆகாயத்தையளாவிஉயர்ந்து சூரியன் முதலிய கிரகங்களும் நட்சத்திரங்களுஞ்செல்லுகின்ற வழியையெல்லாம் மறுத்துநின்றபொழுது, தேவர் முனிவர் முதலிய யாவரும் வந்து அதை அடக்கியருள வேண்டுமென்று அகத்தியனைப் பிரார்த்திக்க, அவன் அங்கு எழுந்தருளி, அப்பொழுது தன்னைக் கண்டு வணங்கிநின்ற அம்மலையை 'இனி யான் வடதிசையிலிருந்து தென்திசைக்கட் சென்று மீண்டுவருமளவும் இவ்வாறே குறுகிக் கிடப்பாய்' என்று சொல்லி அடக்கியருளி, அம்மலையின் மேலேறி அப்பாற் சென்றன னென்பதாம்.

நாகம் - வடசொல்; அது மலையும் பாம்பும் யானையுமாதல் "நாகம் விண் குரங்கு புன்னை நற்றாசு மலை பாம்பி யானை" என்பதனு லறிக. 'நாகமுற' என்றதில், நாகம் - அவை வசிக்கின்ற லோகத்துக்கு ஆகுபெயர். நான்காமடி-சொற்பின்வருநிலையணி. தாம்-அசை.
பி - ம்:—[1]மற்று. [2]ஏக. [3]விந்தை. (156)

40. மூசரவு சூடுமுத லோ[1]னுரையின் மூவா
மாசி[2]றவ வேகென [3]வடாதுதிசை மேனாள்
[4]நீசமுற [5]வானினெடு மா[6]மலய நேரா
ஈசனிக ராயுலகு சீர்பெற விருந்தான்.

(இ - ள்.) (அன்றியும் அம்முனிவன்),—மேல்நாள் - முன்னொரு காலத்தில், வடாது திசை - வடக்குத்திக்கானது, நீசம் உற-தாழ்வை யடைய,—(அதுநோக்கி), மூசு அரவு சூடு முதலோன் - நெருங்கிய சர்ப்பங்களை (ஆபரணமாக)த் தரித்த சிவன், 'மூவா - மூப் படையாத [மேன்மேல் வளர்கின்ற], மாசு இல் தவ - குற்றமில்லாத தவத்தையுடையவனே! ஏகு-(தென்றிசைக்கண்) செல்வாய்,' என - என்றுகட்டளையிட,—உரையின் - அவ்வார்த்தையின்படி, வானின் நெடு - ஆகாயத்தையளாவி யுயர்ந்த, மா மலயம் - பெரிய பொதிய மலையை, நேரா - சேர்ந்து, ஈசன் நிகர் ஆய் - பரமசிவனுக்கு ஒப்பாய், உலகு சீர் பெற - உலகமுழுவதும் சமநிலையை யடையும்படி, இருந்தான் - (அங்குத்) தங்கியிருந்தவன்; (எ - று.)

பார்வதியின் திருமணகாலத்தில், பரமசிவன் முதலியதேவர் யாவரும்கூடி 'யாம் சேர இருத்தலால் வடதிசைதாழ்ந்து தென்திசைஉயர்ந்தது; இதற்கு அகத்தியனுரே தெற்கிலிருத்தற்கு உரியர்' என்று அவனை வேண்டிக்கொள்ள, அவனும் தென்திசைக்கட் போந்து, இருதிசையும்ஒப்ப நிலைபரம் பெற்று நடுவு நிலைமை யடையும்படி பொதியிலின்கண் இருந்தருளினனென்பதாம். மும் மூர்த்திகளுள் ஒருமூர்த்தி யாதலால் சிவனை 'முதலோன்' என்றும்,

கைலாசத்தின்கண் பரமசிவனோடு ஒப்பப் பொதியிலின்கண் வீற்றிருந்ததனால், 'ஈசனிகராய்' என்றும் கூறினர். இனி, 'வடாது திசைநீசமுற' என்பதற்கு - வடதிசை தாழ்வடைந்து தென்திசை சிறப்புறும்படி யென்று உரைத்து, இருந்தா னென்பதோடு கூட்டவுமாம். பி - ம்:—[1]உறையும். [2]தவனேவலில். [3]வடாதுலகம். [4]மீச. [5]நேமிநெடு. [6]மலேயைமேவா. (157)

41. உழக்குமறை நாலினு[1]முயர்ந்துலக மோதும்
வழக்கினு [2]மதிக்கவியி னும்[3]மரபி னுடி
நிழற்[4]பொலி கணிச்சிமணி நெற்றி[5]யுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவு ளந்ததமிழ் தந்தான்.

(இ - ள்.) (மேலும் அம்முனிவன்),—நிழல் பொலி-ஒளி விளங்குகின்ற, கணிச்சி - மழுவாயுதத்தையும், மணி நெற்றி - அழகிய நெற்றியிலே, (தழல்) உமிழ் - நெருப்பை வெளிப்படுத்துகின்ற, செம் கண்-சிவந்த கண்ணேயுமுடைய, தழல் புரை - நெருப்பை ஒக்கின்ற, சுடர் - ஒளிவடிவாகிய, கடவுள் - பரமசிவன், தந்த - உபதேசித்தருளிய, தமிழ் - தமிழிலக்கணங்களே, உழக்கும் மறை நாலின்உம் - வருந்திப் பழகுகின்ற நான்கு வேதங்களினும், உயர்ந்து - மேம்பட்டு, உலகம் ஓதும் வழக்கின்உம் - நல்லாசிரியர் கூறுகின்ற வழக்கைக்கொண்டும், கவியின்உம்-செய்யுள்வழக்கைக் கொண்டும், மதி - (தனது) அறிவால், மரபின் - முறைப்பட, நாடி - (நன்றாக) ஆராய்ந்து, தந்தான் - (தென்னாட்டவர்க்குத்) தந்தருளியவன்; (எ - று.)

சிறந்த தொண்டர்களெல்லாம் கடவுளைத் துதித்த தமிழ் வேதங்கள் எல்லாச்சாதியிலும் இருபாலார்க்கும் உரியனவாகி யாவர்க்கும் அறிதற்குஎளியனவாய் வடமொழிவேதத்தினுஞ் சிறப்புறுதலால், 'உழக்குமறைநாலினுமுயர்ந்து' என்றார். மரபின் நாடுதல்-அவ்விலக்கணங்களெல்லாஞ் சில்வாழ்நாட்பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு அறியலாகுமாறு அமைத்தல். பி - ம்:—[1]உணர்ந்து. [2]மதிக்கவினினும், மதிக்கவையினும். [3]பரிவின். [4]பொழி. [5]உகு.

தழற்புரைகடவுள் தந்த தமிழ் தந்தான்என்பதிலடங்கிய கதை:— பூர்வத்தில் பெருமுனிவர்களெல்லாம் சேர்ந்து ஸம்ஸ்கிருதபாஷையை அபிவிருத்திசெய்து காசியில் வடமொழிச்சங்கமொன்று ஏற்படுத்த, அச்சங்கப்புலவருள் ஒருவனாகிய அகத்தியன், மற்றைப் புலவர்களோடு பலகாலும் தருக்கஞ்செய்துகொண்டுவந்து ஒரு நாள் அவர்களோடு மாறுகொண்டு, அவர்களிறுமாப்பை அடக்கும் பொருட்டுச் சிவபெருமானிடஞ் சென்று தன்கருத்தை வெளியிட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கையில், தான் நின்ற மண்டபமுழுவதுந் திவ்விய பரிமள மொன்று வீச, அகத்தியன் பரமசிவனை நோக்கி 'சுவாமி! இவ்வாசனை ஏது?' என்று வினவ, பரமசிவன் அவனை அம்மண்டபத்தில் ஓர் மூலைக்கு அழைத்துக் கொண்டுபோய், குவியலாய்ப் போகட்டிருந்த சிலஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்ட மாத்திரத்தில் மதுரமென்று அருத்தங்கொள்ளும் 'தமிழ்' என்னும் இன்பமான பெயரைச் சொல்ல, உடனே பரமசிவன் அப்பாஷைக்கு ஆதாரவிதிகள் இவ்வேட்டுப் பிரதிகளிலுள்ளனவென்று எடுத்துக்

கொடுத்து உபதேசிக்க, தக்கணமே தட்சிணத்திலுள்ள பொதிய மலைக்குப் போய்த் தனிவாசஞ்செய்து அவ்விதிகளைக்கொண்டு, பேரகத்தியம், சிற்றகத்திய மென்னும் இலக்கண நூல்களை இயற்றி, அவற்றைத் தம் மாணாக்கராகிய தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச் செய்தா னென்பது. (158)

## 42.—நான்குகவிகள் - அகத்தியன் இராமபிரான்வருதற்கு மகிழ்தல்.

விண்ணினி னிலத்தினில் விகற்ப வுலகிற்பேர்
எண்ணினி லிருக்கினி லிருக்குமென யாரும்
உண்ணினை [1]கருத்தினை யுறப்பெறுவெ னாலென்
கண்ணினி லெனக்கொடு களிப்புறு மனத்தான்.

(இ - ள்.) (அப்படிப்பட்ட அகத்தியன்),—'விண்ணினில் - தேவலோகத்திலும், நிலத்தினில் - பூலோகத்திலும், விகற்பம் உலகில்- மற்றும் பல உலகங்களிலும், பேர் எண்ணினில்-(அவ்வுலகங்களிலுள்ளவர்களுடைய) பெரிய உள்ளத்திலும், இருக்கினில்-வேதங்களிலும், இருக்கும் - (எப்பொழுதும்) உள்ளதாகும், என - என்று, யார்உம் - யாவரும், உள் நினை - உள்ளத்திலே நினைக்கின்ற, கருத்தினை-கருதப்படும் பொருளை [ஸ்ரீராமனை], என் கண்ணினில் - எனது கண்களால், உற பெறுவென்-இன்று பார்க்கப்பெறுவேன்,' என கொடு - என்று எண்ணி, களிப்புஉறும் - ஆநந்தமடைகின்ற, மனத்தான்-மனத்தை யுடையவனானன்; (எ - று.)

'விகற்ப வுலகு' என்றது, அதலம், முதலியவற்றை. எல்லாப் பொருள்களுள்ளும் கரந்துறைவதாலும், அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர்நினைந்த வடிவோடு விரைந்து சென்று வீற்றிருத்தலாலும், எல்லாமறைகளும் தெரிவிக்கிற பொருளாதலாலும், இவ்வாறு கூறினார். ஆல் - வியப்புப்பொருளது. பி - ம்:— [1]கருத்தனை. (159)

43. இரைத்தமறை நான்கினொ டியைந்தபிற யாவும்
நிரைத்த[1]நெடு ஞானநிமிர் [2]கல்லினெடு நாளிட்டு
[3]அரைத்து[4]மய னாலு[5]மறி யாத[6]பொரு ணேர்நின்று
[7]உரைக்குதவு மாலெனு முணர்ச்சியி னுவப்பான்.

(இ - ள்.) (அன்றியும் அகத்தியன்), 'இரைத்த - பேரொலி கொண்டுஒலிக்கின்ற, மறை நான்கினொடு - நான்குவேதங்களையும், இயைந்த-(அவற்றோடு) பொருந்திய, பிறயாஉம்-மற்றையெல்லா நூல்களையும், நிரைத்த-முறையே பயின்றதனாலுண்டான, நெடு ஞானம்- சிறந்த அறிவாகிய, நிமிர் கல்லில் - உயர்ந்த அம்மியில், இட்டு வைத்து, நெடுநாள்-பலநாள், அரைத்தும்—[ஆராய்ந்தும்], அயனால் உம் - பிரமதேவனாலும், அறியாத - அறியப்படாத, பொருள் - பரம் பொருள் [ஸ்ரீராமன்], (இன்று), நேர் நின்று - எதிரில் நின்று,

உரைக்க-பேசும்படி, உதவும்-அருள்செய்வான்,' எனும் - என்கின்ற, உணர்ச்சியின் - அறிவால், உவப்பான்-மகிழ்பவனானான்; (எ - று.)

'பிரமன் முதலிய தேவர்களுக்கும், வேதம் முதலிய நூல்களுக்கும், அறிய எட்டாத பொருள் நேர்நின்று பேசும் பேறு நேர்ந்ததே!' என்ற உணர்ச்சியால் அகத்தியன் உவப்புக் கொள்பவனானெனன்பதாம். 'இயைந்த பிறயாவும்' என்றது - அவ்வேதங்களின் பொருளை அறியக் கருவியாகிய மீமாம்சை, புராணம், நியாயம், தருமசாஸ்திரம் முதலியவற்றை. இனி மறைமுதலிய நூல்களாகிய குழவியைக்கொண்டு தன்ஞானமாகிய கல்லில் அரைத்தும் என்றுமாம். உரைக்குதவும்-தொகுத்தல்; உரைக்கு உதவும் எனப்பிரித்து, உரையாடுவதற்கு உதவு மென்றுமாம். பி - ம்:—[1]நெறி. [2]கல்வி. [3]உரைத்தும். [4]அயனாரும். [5]உணராத. [6]பொருளோவின்று. [7]உரைத்துதவும். (160)

44. உய்ந்தன ரிமைப்பில [1]ருயிர்த்தனர் தவத்தோர்
அந்தண [2]ரறத்திநெறி நின்றனர்க ளாறு
வெந்திற லரக்கர்விட வேர்முத லறுப்பான்
வந்தனன் மருத்துவ னெனத்தனி வலிப்பான்.

(இ - ள்.) (அவ்வகத்திய முனிவன்),— 'ஆறு - நீங்காத, வெம்திறல்-கொடிய வலிமையையுடைய, அரக்கர்-ராக்ஷசர்களாகிய, விடம்-நஞ்சினது, வேர்-வேரை, முதல்-அடியோடு, அறுப்பான்-அறுத்தற்கு, மருத்துவன் - வைத்தியன் [ஸ்ரீராமன்], வந்தனன்—; (ஆகையால், இனி), இமைப்புஇலர் - தேவர்கள், உய்ந்தனர் - பிழைத்தார்கள்; தவத்தோர்-துறவறத்தவரான முனிவர்கள், உயிர்த்தனர் - உயிர்பெற்றார்கள்: அந்தணர்-(இல்லறத்தவரான) பிராமணர்கள், அறத்தின் நெறி-தருமமார்க்கத்தில், நின்றனர்கள் - நின்றார்கள்,' என - என்று, தனி-ஒப்பில்லாமல் [நன்றாகவென்றபடி], வலிப்பான் - துணிபவனானான்; (எ - று.)

அரக்கராகிய நச்சுமரத்தை வேரோடறுக்கத் திருவவதாரஞ் செய்த மூர்த்தி வந்திட்டானதலால், தேவர்கள் நல்வாழ்வு பெற்றவராக உயிரொடுங்கிய தவமுனிவர்கள் உயிர்பெற்றனராக இல்லறத்தவரான அந்தணர்கள் அறநெறிநிற்பவராவா ரெனத் துணிவு கொண்டனன் அம்முனிவ னென்க.

உய்ந்தனர் முதலிய இறந்தகாலவினைமுற்றுக்கள் - தெளிவு பற்றிவந்த காலவழுவமைதி. 'வேரறுப்பான்' என்றதற்கேற்ப, விடம்-நச்சுமரமென்னலாம். மருத்துவன் - நோயின்தன்மையறிந்து மருந்து கொடுப்பவன்; "மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா" என்றார் பெரியாரும். பி - ம்:—[1]உயர்ந்தனர். [2]மனத்துயரகன்றதெனநோனு, அறத்திநெறி நின்றவர்களானார். (161)

45. ஏனையுயி ரா[1]முலவை யாவுமிடை வேவித்து
ஊனுக ரரக்க[2]ருரு மைச்சுடு சினத்தின்
[3]கானவ னலைக்கடி தவித்துல களிப்பான்
வானமழை வந்ததென முந்துறு மனத்தான்.

(இ - ள்.) (பின்னும் அம்முனிவன்),—'ஏனை உயிர் ஆம் உலவை யாஉம் - மற்றைஉயிர்களாகிய மரங்கள் எல்லாவற்றையும், இடை வேவித்து - உள்ளவிடத்தில்தானே வேகச்செய்து; ஊன் நுகர் - (அவற்றின்) உடலைப்புசிக்கின்ற, அரக்கர் - ராக்ஷசர்களது, உருமை சுடு-இடியையுஞ் சுடுகின்ற, சினத்தின்-கோபமாகிய, கானம் அனலை-காட்டுத்தீயை, கடிது-விரைவாக, அவித்து-அழித்து, உலகு அளிப்பான்-உயிர்களைக் காப்பதற்கு, வானம் மழை-ஆகாயத்தே தோன்றுகின்ற மேகம் [ஸ்ரீராமன்], வந்தது—', என - என்று, முந்துறும் - (அவனைப் பார்த்தற்குத் தன்னினும் விரைந்து) முற்படுகின்ற, மனத்தான்-மனத்தையுடையவன்; (எ - று.)

அந்த அரக்கரையொழித்து ஏனையுயிராம் உலவையைத் தளிர்க்கச்செய்யும் வானமழை வந்ததென்று அம்முனிவன் விரைந்து எதிர்கொள்ளும் மனமுடையனானா னென்பதாம். இச்செய்யுள் உருவக வணி. அஃறிணைப்பொருளுள் தாவரத்தையும் எரிந்துவிடச் செய்வது அரக்கரின் சினமென்பான் 'உலவையாவு மிடைவேவித்து உருமைச்சுடுசினத்தி னரக்கர்' என்றான். இனி உருமைச் சுடுகின்ற சினத்தோடு பொருந்திய அரக்கராகிய கானவனலை எனக்கூட்டவுமாம். உலவை-மரம். பிராணிகளைப்போல உயிருள்ளமை நன்கு புலப்படாமையால், 'ஏனையுயிராமுலவை' என்றார். பி - ம் :—[1]முதல. [2]வெருவ. [3]ஆன. (162)

## 46.—அகத்தியமுனிவன் இராமனைக்கண்டு மகிழ்வுக்கண்ணீர் சொரிந்துநிற்றல்.

கண்டன னிராமனை வரக்கருணை கூரப்
புண்டரிக வாணயன நீர்பொழிய நின்றான்
எண்டிசையு மேழுலகு மெவ்வுயிரு முய்யக்
குண்டிகையி னிற்பொருவில் காவிரி கொணர்ந்தான்.

(இ - ள்.) எண் திசைஉம் - எட்டுத்திக்குக்களும், ஏழ் உலகு உம் - ஏழுலகங்களும், எ உயிர்உம் - (அவற்றிலுள்ள) எல்லாவுயிர்களும், உய்ய - நற்கதியடையும்படி, குண்டிகையினில் - (தனது) கமண்டலத்தில், பொருவுஇல்-ஒப்பில்லாத,-காவிரி-காவேரி நதியை, கொணர்ந்தான் - கொண்டுவந்த அம்முனிவன்,—இராமனை - ஸ்ரீராமனை, வர-எழுந்தருள, கண்டனன் - பார்த்தவனாய்,—கருணை கூர-அன்புமிகுதலால், புண்டரிகம் வாள் நயனம் - தாமரைமலர் போன்ற ஒளியினையுடைய கண்கள், நீர் பொழிய-ஆநந்தக் கண்ணீரைச் சொரியும்படி, நின்றான்—; (எ-று.)

இராமனைக் கண்டு மகிழ்ச்சிக்கண்ணீர் சொரிந்தனன் அகத்திய முனிவனென்க. நயனத்துக்குத் தாமரையை ஒப்பிட்டதற்கு ஏற்ப, அதனினின்றும் பெருகுகின்ற கண்ணீர்க்குத் தாமரையினின்றும் பெருகுகின்ற தேனை ஒப்பிடுக. ஏழுலகு - ஏழுவகைத் தீவையுடைய பூமி யென்றல் ஏற்கும். காவிரி - வடசொல்விகாரம்; கவேரமென்னும் மலையினின்று உண்டானதென்றும், கவேரனென்னும் அரசனது மகளென்றும் பொருள்.

அகத்தியன் காவிரிநதி கொணர்ந்த வரலாறு:—அகத்தியன் தென்திசைக்கட் போகின்றபொழுது கங்கையாருழைச்சென்று காவிரியாரை வாங்கிக் கமண்டலத்திற்கொண்டு குடகுமலைச்சாரலில் வைத்துவிட்டுச் சலகாரியத்திற்குச் செல்லாநிற்க, ஆங்கொரு காகம் வந்து அதனை உருட்டிவிட, அதுவே பெருநதியாய்ப் பெருகிற் றென்பதாம். (163)

47.—இராமன் வணங்க, அகத்தியன் முகமன்கூறுதல்.

நின்றவனை [1]வந்தநெடி யோனடி பணிந்தான்
அன்றவனு மன்பொடு தழீஇயழுத கண்ணான்
நன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தான்
என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்.

(இ - ள்.) நின்றவனை - (அங்ஙனம் எதிரில் வந்து) நின்ற அகத்தியனை, வந்த நெடியோன் - (அங்கே) வந்த ஸ்ரீராமன், அடி பணிந்தான் - திருவடிகளில் விழுந்து வணங்கினான்: அன்று - அப்பொழுது, என்றும் உள - எந்நாளும் உள்ளதாகிய, தென் தமிழ் - இனிய தமிழின் இலக்கணங்களை, இயம்பி - சொல்லி, இசை கொண்டான் - கீர்த்தியைப் பெற்றவனாகிய, அவன்உம் - அம்முனிவனும், அன்பொடு - அன்பினால், தழீஇ - தழுவிக் கொண்டு, அழுத கண்ணான் - (ஆநந்தக்கண்ணீர்விட்டு) அழுத கண்களையுடையவனாய், வரவு நன்று - '(உன்) வருகை நன்றாயிருந்தது', என்று—, பல நல் உரை - அநேகம் நல்ல உபசார வார்த்தைகளை, பகர்ந்தான் - சொன்னான்; (எ - று.)

எதிர் வந்துநின்ற அகத்தியமுனிவனைக் கண்டதும் இராமன் அவனடிபணிய, உவகைக் கண்ணீர் பொழிய நின்ற அம்முனிவன், அப்பிரானை அன்போடு தழுவி, நல்வரவை யுசாவினனென்பதாம். தேவர்களைக்காத்தற்குக் குறள்மாணியாய் முன் மாவலிபக்கல் மூவடிமண் வேண்டி உலகனைத்தும் ஈரடியாலொடுக்கித் திரிவிக்கிரமனாய்த் திருவவதரித்த திருமாலே இப்பொழுது சக்கரவர்த்தி திருமகனாய்த் தோன்றினா னென்பது விளங்க 'வந்த நெடியோன்' என்றார்; இனி, திருக்கலியாணகுணகணங்களால் யாவரினும் உயர்ந்தோ னென்றுமாம். தென் தமிழ்-தெற்குத்திக்கில் மிக்கு வழங்கும் தமிழென்றுமாம். 'என்று முள தென்றமிழியம்பியிசை கொண்டான்' என்றதனால், பாணினிபகவான் வடமொழிக்கு இலக்கணநூ லுண்டாக்கியதுபோல அகத்தியன் தமிழிற்குஇலக்கணநூ லுண்டாக்கினனே யன்றிப் பாஷையை உண்டாக்கினானில்லை யென்பது விளங்குகின்றது; அன்றியும், இந்நூலாசிரியர், வடமொழியில் வேதம் நித்தியமாக இருப்பதெனக் கொள்ளுங் கொள்கைக்கு ஒப்பத் தமிழ்வேதமாகிய திருவாய்மொழி நித்தியமென்று கொள்கின்ற கொள்கையின ராதலால், தமிழ்மொழியும் என்றுமுளதென்றார்: "ஆகஸ்த்யமும் அநாதி" என்றார், அழகிய மணவாளப்பெருமாள்நாயனாரும். பி - ம்:—[1]வந்து. (164)

## 48.—அந்தணர்கள் உபசரிக்க, அகத்தியன் இராமனைத் தனது ஆச்சிரமத்திற்கு அழைத்துக்கொண்டு செல்லுதல்.

வேதியர்கள் [1]வேதமொழி வேறுபல கூறிக்
காதன்மிக நின் [2]றெழில் கமண்டலுவி னன்னீர்
மாதவர்கள் வீசிநெடு மாமலர்க டூவப்
போதுமண நாறுகுளிர் சோலைகொடு புக்கான்.

(இ - ள்.) *மா தவர்கள்-மிக்க தவமுடையவர்களாகிய, வேதியர்கள் - அந்தணர்கள், காதல் மிக - அன்புமிகுதலால், நின்று - வந்து சூழ்ந்துநின்று, வேதம் மொழி வேறு பல - பலவேறுவகைப்பட்ட வேதவாக்கியங்களை, கூறி - சொல்லி, எழில் கமண்டலுவின்- (தமது) அழகிய கமண்டலங்களிலுள்ள, நல் நீர் - நல்ல நீரை, வீசி- தெளித்து, நெடு மா மலர்கள் - மிக்க அழகிய புஷ்பங்களை, தூவ - மேலேசிந்தாநிற்க,—(அகத்தியன்), (ஸ்ரீராமனை), போது மணம் நாறு - மலர்களின் மணம் வீசுகின்ற, குளிர் சோலை - குளிர்ந்த (தனது) சோலைக்குள், கொடு புக்கான் - அழைத்துக்கொண்டு சென்றான்; (எ - று.)*

*வேதமந்திரங்களைக்கொண்டு செபித்து நன்னீர் வீசுதலும் மலர்தூவுதலும் அம்முனிவர் செய்யும் உபசாரவகையைச் சேர்ந்தன. கமண்டலு - வடசொல். கமண்டலுவி னன்னீர் வீசுதல்- தமது கமண்டலங்களிற் புண்ணியதீர்த்தங் கொணர்ந்து வேத மந்திரத்தாற் புரோட்சித்தல். மலர்கள்தூவுதல் - மந்திரபுஷ்பம் சமர்ப்பித்தல். பி - ம்:—[1]வேறுபலவேதமொழிகூற. [2]ஒளிர். (165)*

## 49.—இதுமுதல் மூன்றுகவிகள் - அகத்தியனும் இராமனும் அளவளாவுதலைத் தெரிவிக்கும்.

[1]பொருந்த வமலன் பொழிலகத் தினிதுபுக்கான்
விருந்தவ னமைத்தபின் விரும்பினன் விரும்பி
இருந்தவ [2]மிழைத்தவென தில்லிடையின் வந்தென்
அருந்தவ முடித்தனை யருட்கரச வென்றான்.

(இ - ள்.) *அமலன் - ஸ்ரீராமன், பொழிலகத்து - (அகத்தியனது) சோலைக்குள், பொருந்த - (மனம்) பொருத்தமுற, இனிது- இனிமையாய், புக்கான் - புகுந்தவனாய்,—அவன் - அம்முனிவன், விருந்து அமைத்தபின்-விருந்திட்டு உபசரித்த பின்பு, விரும்பினன் - (அங்கே) மகிழ்ந்திருந்தான்; (அப்பொழுது அம்முனிவன்), விரும்பி - மகிழ்ந்து, (ஸ்ரீராமனை நோக்கி), அருட்கு அரச - கருணைக்குத் தலைவனே! (நீ), இருந் தவம் இழைத்த-மிக்க தவத்தைச் செய்த, எனது-என்னுடைய, இல்லிடையின் - வீட்டில், வந்து - எழுந்தருளி, என் அருந் தவம்-எனது அரிய தவத்தை, முடித்தனை- நிறைவேற்றினாய், எனறான்—; (எ - று.)*

*நீ இங்ஙனம் எழுந்தருளியது யான் முற்பிறப்புக்களிலும் இப் பிறப்பிலுஞ் செய்த தவத்தா லென்றும், யான் செய்துவருந் தவம்*

இப்பொழுது நீ எழுந்தருளிய பின்பே ஈடேறிற் றென்றுங் கூறினு ணும். இனி, விரும்பினனாகிப் புக்கா னென்றுமாம். "என்னமா தவஞ் செய்ததிச்சிறுகுடில்" என்றவாறு 'இருந்தவ மிழைத்த வெனதில்' என்றுனுமாம். விருந்து - புதுமை; புதிதாய் வந்தவர்க்குச் செய்யும் உபசாரத்துக்கு இருமடியாகுபெயர். பி - ம்:—[1]பொருந்தவன்மலர்ப். [2]இயற்றும். (166)

50. என்றமுனி யைத்தொழு திராம னிமையோரும்
நின்றதவ [1]முற்று நெடியோரி னெடியோரும்
உன்றனருள் [2]பெற்றிலர்க ளுன்னருள் சுமந்தேன்
வென்றன னனைத்துலகு [3]மேலினிதெ னென்றான்.

(இ - ள்.) என்ற முனியை - என்று கூறிய அகத்தியனை, இராமன்—, தொழுது—, 'இமையோர்உம் - தேவர்களும், நின்ற தவம் - (தமக்குச் செய்யவேண்டுவதாகப்) பொருந்திநின்ற தவத்தை, முற்றும் - முடியச் செய்த, நெடியோரின் - பெரியோர்களுள்ளும், நெடியோர்உம் - பெரியோர்களாகிய மகாமுனிவர்களும், உன்தன் அருள் - உன்னுடைய கருணையை, பெற்றிலர்கள்-(எளிதிற்) பெற்றார் களில்லை; உன் அருள் - (அத்தன்மையதாகிய) உனது கருணையை, சுமந்தேன் - (யான் இன்று) பெற்றேன்; (ஆகையால்), அனைத்து உலகுஉம் - எல்லாவுலகங்களையும், வென்றனன் - சயித்தவனு வேன்; மேல் இனிது என் - இனிப் பெறவேண்டிக் குறை யாகக் கிடந்த நன்மை யாது உளது? [ஒன்றுமில்லை],' என் றான்—; (எ - று.)

பெறற்கு அரிய உன்னருளைப் பெற்றதனால், எல்லாவுலகத் தவரினுஞ் சிறந்தவனானே னென்று இராமன் கூறின னென்க. அனைத்துலகும் வென்றனன் என்பதற்கு - எல்லாவுலகமும் யான் பெறுமாறு எனக்கு அடங்கியன எனக் கருத்துக் காணலாம். 'மேலினிதென்' என்றது நின்னருளாற்பெறுதபேறு எதுவுமில்லை யென்றபடி. பி - ம்:—[1]முற்றி. [2]பெற்றவர்கள். [3]மேலினியென். (167)

51. தண்டக வனத்துறைதி யென்றுரை தரக்கொண்டு
உண்டுவர வித்திசை யெனப்பெரி துவந்தேன்
எண்டகு குணத்தினை யெனக்கொடுயர் சென்னித்
துண்டமதி வைத்தவனை யொத்தமுனி சொல்லும்.

(இ - ள்.) உயர் சென்னி - உயர்ந்த அங்கமாகிய தலையில், துண்டம் மதி - பிறைச்சந்திரனை, வைத்தவனை - வைத்தருளிய பரமசிவனை, ஒத்த - போன்ற, முனி - அம் முனிவன்,—(ஸ்ரீராமனை நோக்கி), 'எண் தகு குணத்தினை - (யாவராலும்) தியானஞ் செய்யப் படுகின்ற திருக்கலியாணகுணங்களை யுடையவனே! (நீ), தண்டக வனத்து - தண்டகாரணியத்தில், உறைதி - எழுந்தருளியிருக்கிறாய், என்று உரைதர - என்று சொல்ல, (கேட்டு), கொண்டு - மனத்துக் கொண்டு, இ திசை-இந்த இடத்திற்கு, வரவு - (உனது) வருகை, உண்டு - உளதாகும், என - என்று, கொடு - கொண்டு, பெரிது

உவந்தேன் - மிகவும் மகிழ்ந்திருந்தேன்,' என - என்று சொல்லி, சொல்லும் - (மீண்டுஞ்) சொல்வான்; (எ - று.)—அதனை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

'எண்தகு குணத்தோய்! நீ தண்டகவனத்து உறைகின்றாயென்பதையறிந்து, நீ இங்கே வருவாயென்று கருதினேன்' என்றான், அகத்தியன். நீ அவ்வாறே எழுந்தருளினை யென்பது, குறிப்பெச்சம். இனி, எண்தகு குணத்தினை யென்பதற்கு - அபஹதபாப்மத்வம் [வினைத்தொடர்பின்மை], விஜரத்வம் [மூப்பின்மை], விம்ருத்யுத்வம் [மரணமின்மை], விசோகத்வம் [துயரின்மை], விஜிகித்ஸ்வம் [உணவுநசையின்மை], அபிபாஸத்வம் [நீர்வேட்கையின்மை], ஸத்யகாமத்வம் [விரும்பியதைத் தவறாது பெறுந்தன்மை], ஸத்யஸங்கல்பத்வம் [தவறாமல் நிறைவேறுங்கருத்துடைமை] என்னும் எண்வகைப்பட்ட குணங்களை யுடையாயென்க: வாற்சலியம், சுவாமித்வம், சௌசீல்யம், சௌலப்பியம், ஜ்ஞாநம், சக்தி, ப்ராப்தி, பூர்த்தி என்னும் எண்வகைப்பட்ட குணங்களையுடையா யென்றுமாம். (168)

## 52.—இதுவும் அடுத்த கவியும் - அகத்தியன் இராமனை இங்கேயே இருக்கவேணு மென்றலைத் தெரிவிக்கும்.

ஈண்டுறைதி யையவினி யிவ்வயி [1]னிருந்தால்
வேண்டியன மாதவம் விரும்பின முடிப்பாய்
தூண்டுசின வாணிருதர் தோன்றியுள ரென்றால்
மாண்டுக மலைந்தெமர் மனத்துயர் [2]துடைப்பாய்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஐய - தலைவனே! (நீ), இனி—, ஈண்டு உறைதி-இங்கு வசித்தருள்வாயாக; இ வயின் - இவ்விடத்தில், இருந்தால்—,— வேண்டியன - இன்றியமையாதனவும், விரும்பின - (நாங்கள்) விரும்பியவையுமாகிய, மா தவம்-பெரிய தவங்களை, முடிப்பாய் - நிறைவேற்றுவாய்; தூண்டு சினம் - வளர்கின்ற கோபத்தையுடைய, வாள் நிருதர் - கொடிய அரக்கர், தோன்றி உளர் என்றால் - வருவார்களாயின், (அவர்களை), மாண்டு உக - இறந்து அழியும்படி, மலைந்து - போர்செய்து, எமர் - எங்களது, மனம் துயர் - மனத்திலுள்ள துயரத்தை, துடைப்பாய் - தீர்ப்பாய்; (எ-று.)

'நீ இங்கேயேயிருந்தால், எங்கள் தவம் தடையின்றி நிறைவேறும்: எமது தவத்துக்கு இடையூறுபுரியும் அரக்கர் தோன்றின் அவர் ஒழிய மலைந்து எமதுமனத்துயரைப்போக்குவாய்' என்றனன் அகத்தியனென்பதாம். மற்றைய முனிவர்களையும் உளப்படுத்தி, 'எமர்' என்றான். பி - ம்:—[1]உறைந்தால். [2]முடிப்பாய். (169)

53\. வாழுமறை வாழுமனு நீதியறம் வாழும்
தாழுமிமை யோருயர்வர் தானவர்க டாழ்வார்
ஆழியுழ வன்புதல்வ வையமிலை மெய்யே
ஏழுலகும் வாழுமினி யீங்குறைதி யென்றான்.

(இ - ள்.) ஆழி உழவன் புதல்வ - சக்கரவர்த்திதிருமகனே! —மறை - வேதங்கள், வாழும் - வாழ்வுபெறும்; மனு நீதி - (அவ் வேதங்களோ டொப்பச் சொல்லப்படுகின்ற) மநுமுதலியவர் களாற் செய்யப்பட்ட நீதிநூல்கள், வாழும்—; அறம் - (அந்நீதி நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாகிய) தரு மங்கள், வாழும்—; (அதனால்) தாழும் இமையோர்-(அரக்கர்களால்) தாழ்வடைகிற தேவர்கள், உயர்வர் - உயர்வடைவார்கள்; (அவர்கள் உயர), தானவர்கள் - (உயர்வடைகிற) அசுரர்கள், தாழ்வார் - தாழ் வடைவார்கள; (இதில்), ஐயம் இலை - (சிறிதுஞ்) சந்தேகமில்லை; மெய்ஏ - உண்மையேயாகும்; (இதுவுமன்றி), ஏழ் உலகும் வாழும்—; (ஆகையால்), இனி இங்கு உறைதி—, என்றான்—; (எ-று.)

வாழும் மறை யென எடுத்து, நித்தியமாகிய வேத மெனினு மாம். பதினெட்டு நீதிநூல்களுள்ளும் மநு மிகச் சிறந்த தாதலால், மநுநீதி யென்றார். நீதிஅறம் - நீதிநூல்களுட் கூறப்பட்டுள்ள தரும மெனினுமாம். 'தாழுமிமையோர்' என்றதற்கேற்ப, உயருந் தானவ ரெனப்பட்டது. தானவர்க்கும் அரக்கர்க்கும் வேற்றுமை உளதாயி னும், தேவர்கட்குப் பகைவராகும் பொதுமை பற்றி, அபேதமாக் கூறினார். ஆழியுழவன் - ஆஜ்ஞாசக்கரமாகிய ஏரால் உலகமுழுவதை யும் உழுபவன். (170)

சில ஏட்டுப் பிரதிகளில் இங்கே காணப்படுஞ் செய்யுள்கள் வரு மாறு:—

1\. என்றுபினு மாதவ னெடுத்தினி துரைப்பான்
அன்றமரர் நாதனை யருஞ்சிறையில் வைத்தே
வென்றிதரு வேற்றச முகப்பதக ஞதி
வன்றிற லரக்கர் வலிமைக்கு நிகரியாரே.

2\. ஆயவர்க டங்கள்குலம் வேரற மலைந்தே
தூயதவ வாணரொடு தொல்லமரர் தம்மை
நீதனி புரந்திடுத னின்கடன தென்றான்
நாயகனு நன்றெனு வவற்கு நவில்கின்றான்.

## 54.—இராமன் தன்கருத்தைத் தெரிவித்தல்.

செருக்[1]கடை யரக்கர்புரி தீமைசிதை [2]வெய்தித்
தருக்கழி தரக்கடிது கொல்வது சமைந்தேன்
வருக்கமறை யோயவர் வருந்திசையின் முந்துற்று
இருக்கைநல [3]நிற்கருளெ னென்றன னிராமன்.

(இ - ள்.) (அப்பொழுது), இராமன்—, (அந்த முனிவனை நோக்கி), 'வருக்கம் மறையோய் - கூட்டமாகிய வேதங்களை யுடைய வனே! செருக்கு அடை - கருவத்தையடைந்த, அரக்கர்-ராக்ஷஸர்கள், புரி - செய்கின்ற, தீமை - கொடுமை யெல்லாம், சிதைவு எய்தி - அழி தலையடைந்து, தருக்கு அழிதர - (அவர்கள்) களிப்பு அழியும்படி, கடிது - விரைவிலே, கொல்வது - கொல்வதாக, சமைந்தேன்-சித்தமா யிருக்கின்றேன்; (ஆகையால்), அவர் வரும் திசையின் - அவர்கள்

வரும் (தெற்குத்) திக்கில், முந்துற்று இருக்கை-முற்பட்டுச் சென்றிருத்தல், நலம்-நன்மை, (என்றுஎனக்குத் தோன்றுகின்றது); நிற்கு - உனக்கு, அருள் என் - விருப்பமென்ன?' என்றனன்—;

அரக்கரின் கொடுமையொழித்து அன்னார் செருக்கு ஒழியும்படி அவர்களைக் கொன்றிடுமாறு சமைந்துள்ளேன்: அதற்கு ஏற்ப அவர்கள் வருந் திசையில் முந்துற்று இருப்பது நலமென்று கருதுகின்றேன். நுமது திருவுள்ளத்தைத் தெரிவித்தருள்க என்று ஸ்ரீராமன் அகத்தியமுனிவரிடத்து விண்ணப்பித்தனனென்க. இங்குத்தானேயிருந்து அரக்கர்களை யொழிப்பின், ஆச்சிரமத்தின் தூய்மை கெட்டிடுமாதலால், அங்கன் செய்ய விரும்புகின்றிலேனென்பது குறிப்பு. செருக்கடை, கடை-ஏழனுருபாய், யுத்தகளத்திலென்றுமாம். வேதங்கள் அநந்தமாதலால், 'வருக்கமறை' என்றார். ராக்ஷஸராஜதானியாகிய இலங்கையும், கரதூஷணாதிபருள்ள ஜநஸ்தாநமும் தெற்கிலுள்ளன வாதலால், தென்திசை, 'அவர் வருந்திசை' எனப்பட்டது. பி - ம்:—[1]உடை. [2]எய்த. [3]என்றனனெனக்கடிது. *(171)*

## 55.—இதுவும் அடுத்த கவியும் - அகத்தியன் இராமனுக்கு வில்முதலியன அளித்தலைத் தெரிவிக்கும்.

விழுமியது சொற்றனையிவ் வில்லிதிவண் மேனாள்
முழுமுதல்வன் வைத்துளது மூவுலகும் யானும்
வழிபட விருப்ப திதுதன்னை வடிவாளிக்
குழுவழுவில் புட்டிலொடு கோடியென நல்கி.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகேட்ட அகத்தியன்), 'விழுமியது சொற்றனை-சிறப்பான வார்த்தை சொன்னாய்; இவண் - இவ்விடத்திலுள்ள, இ வில் இது - இந்தவில், மேல் நாள் - முற்காலத்தில், முழு முதல்வன் - ஸ்ரீமகாவிஷ்ணு, வைத்து உளது-வைத்துக்கொண்டிருந்தது; மூவுலகும்-திரிலோகமும், யானும்—, வழிபட-வணங்கிப் பூசைசெய்யும்படி, இருப்பது—; இதுதன்னை - இவ்வில்லை, வடி வாளி குழு - கூர்மையான அம்புகளின் கூட்டம், வழுவு இல்-குறைபடாத தன்மையையுடைய, புட்டிலொடு - (இரண்டு) தூணீரங்களுடன், கோடி - கொள்வாய்', என - என்று சொல்லி, நல்கி-கொடுத்து,—(எ - று.)— 'நல்கா' என மேற்கவியோடு தொடரும்.

விசுவகருமாவினால் நிருமிக்கப்பட்டு விஷ்ணுவினிடத்தே தங்கிப் பின்பு பரசுராமன்பால் வந்து சேர்ந்த வில், அவனால் ஸ்ரீராமனுக்குக் கொடுக்கப்பட்டது: அதனை ஸ்ரீராமன் வருணனிடத்தே காக்கும்படி வைத்தனன். அவ்வருணன், இப்பொழுது கராதி ராக்ஷஸவதம் நெருங்கிற்றென்று கருதி, ஸ்ரீராமனுக்குச் சமர்ப்பிக்கும்படி அகத்தியனிடம் கொணர்ந்து கொடுத்திருந்தனனென அறிக. வாளிக்குழு வழுவில் புட்டி - அக்ஷயதூணீரம். *(172)*

56\. இப்புவன முற்றுமொரு தட்டினிடை யிட்டால்
ஒப்பு [1]வர விற்றென வுரைப் [2]பரிய வாளும்

வெப்புருவு பெற்றவரன் மேருவரை [3]விஃலா
முப்புர மெரித்ததனி [4]மொய்க்கணையு நல்கா.

(இ - ள்.) இ புவனம் முற்றும் - இவ்வுலகமுழுவதையும், ஒரு தட்டினிடை இட்டால் - ஒருதராசுதட்டில் வைத்து நிறுத்தாலும், ஒப்பு வரவிற்று என உரைப்பு அரிய - (இதனை வைத்த தட்டுக்கு) ஒப்பாக வருதலையுடைய தென்று சொல்லுதற்கரிய, வாள் உம் - வாளையும், வெப்பு உருவு பெற்ற - அனற்பிழம்பினுருவம் பொருந்திய, அரன் - பரமசிவன், மேரு வரை - மகாமேருமலையை, வில் ஆ - வில் லாகக் கொண்டு, முப் புரம் எரித்த - திரிபுரங்களை எரித்தழித்த, தனி-ஒப்பில்லாத, மொய் கணை உம் - வலிய அம்பையும் [வைஷ்ணவ சரத்தையும்], நல்கா - கொடுத்து,—(எ-று.)—'என்றான்' என ஐம்பத்தொன்பதாங் கவியில் முடியும்.

உலகமெல்லாவற்றையும் ஒருதட்டிலிட்டால் அவற்றுக்கெல் லாம் ஒப்பாகவல்ல வாளையும், முப்புரமெரித்த திருமாலாகிய கணை யையும் கொடுத்தனன் அகத்திய முனிவ னென்க. அரன் - ஹரன்: பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஹரிப்பவன்; ஹரித்தல் - அழித்தல்: அன்றிக்கே, தொண்டர்களது துன்பங்களைத் துடைப் பவன. முப்புரம் - தனித்தனி இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதிலை யுடைய மூன்று பட்டணங்கள். பி - ம்:— [1]வரவற்றென. [2]அரியதொவ்வா. [3]வில்லான், வில்லாய். [4]மொய்கணை. (173)

## 57.—மூன்றுகவிகள்-பஞ்சவடியிலிருக்குமாறு அகத்தியன் விடைகொடுத்து அனுப்ப இராமனாதியர் செல்லுதலைத் தெரிவிக்கும்

ஓங்குமர னோங்கிமலை யோங்கியண லோங்கிப்
பூங்[1]குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தூங்குதிரை யாறுதவழ் சூழலதொர் குன்றின்
பாங்க[2]ருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச.

(இ - ள்.) மஞ்ச - மைந்தனே!—ஓங்கு மரன் ஓங்கி - உயர்ந்த மரங்கள் வளரப்பெற்றும், மலை ஓங்கி - மலைகள் உயரப்பெற்றும், மணல் ஓங்கி - மணற்குன்றுகள் உயரப்பெற்றும், பூ குலை குலாவு - பூங்கொத்துக்கள் விளங்குகின்ற, குளிர் சோலை - குளிர்ந்த சோலை கள், புடை விம்மி - பக்கங்களில் விளங்கப்பெற்றும், தூங்கு திரை - மிக்க அலைகளையுடைய, யாறு தவழ் - ஆறுகள் பாயப்பெற்று முள்ள, சூழலது - சுற்றிடங்களையுடையதாகிய, ஓர் குன்றின் - ஒரு மலையின், பாங்கர் - அருகில், பஞ்சவடி - பஞ்சவடி யென்கிற, உறையுள் - வாழிடமொன்று, உளது - உள்ளது; (எ - று.)

அகண்டகோதாவரிக் கரையில் நாசிகாத்திரியம்பகத்துக்குச் சமீபத்தி லுள்ளது, பஞ்சவடியென்னும்இடம்: அது உன்கருத் திற்கு ஏற்ப வாழிடமாகத்தக்க தென்பதாம். முதலடி - சொற்பொருட் பின்வருநிலையணி. பூங்குலை - உம்மைத்தொகையாய், பூக்களும் பழக்

குலைகளு மென்றுமாம். யாறு - கோதாவரி முதலியன. பஞ்சவடி - ஐந்து ஆலமரங்களின் தொகுதி; அதனையுடைய இடத்திற்கு ஆகு பெயர். பி-ம்:—[1]குவை. [2]உள கானுறையுள். (174)

58. கன்னியிள வாழைகனி [1]யீவகதிர் வாலின்
செந்நெலுள தேனொழுகு போதுமுள தெய்வப்
பொன்னியென லாயபுன லாறுமுள போதா
அன்னமுள பொன்னிவளொ டன்பின்விளை யாட.

(இ - ள்.) (அவ்விடத்தில்), கனி ஈவ - பழங்களைத் தருவன வாகிய, கன்னி இள வாழை - மிகவும் இளமையான வாழைமரங் களும், கதிர் - கதிர்களையும், வாலின் - வாலையுமுடைய, செந்நெல் - செந்நெற்பயிர்களும், உள - உள்ளன; தேன் ஒழுகு போதுஉம் - தேன் வழிகின்ற மலர்களும், உள - உள்ளன; தெய்வம் - தெய்வத் தன்மையையுடைய, பொன்னி எனல் ஆய - காவிரியென்று சொல் லத்தக்க, புனல் ஆறுஉம் - நீர்வெள்ளத்தையுடைய நதிகளும், உள- உள்ளன; பொன இவளொடு - இச்சீதையுடன், அன்பின் விளை யாட - அன்போடு விளையாடுதற்கு, போதா - பெருநாரைகளும், அன்னம் - ஹம்ஸங்களும், உள - உள்ளன; (எ - று.)

இது, இராமபிரானை வசிக்குமாறுசொல்லும் பஞ்சவடியின் தன்மைகூறியது. உணவுக்கும் நீருக்கும் அங்குப் பஞ்சமில்லை: மற்றும் இந்தச்சீதை பொழுதுபோக்க அன்னப்பறவையும் அங்குஉள்ளது: அது வாழ்க்கைக்கு ஏற்றஇடம் என்றவாறு. கன்னி யிள - ஒருபொருட்பன்மொழி. இனி, வாலின் கதிர் என மாற்றி - அணில்வால்போன்ற கதிருள்ளசெந்நெற்பயிரென்றுமாம். பொன் - இலக்குமி. 'பொன்னியெனலாய புனலாறு' என்ற இடத் துக் கவியின் தேசாபிமானம் விளங்கும். பி - ம்:—[1]மீறு. (175)

59. ஏகியினி யவ்வயி னிருந்துறைமி னென்றான்
மேகநிற [1]வண்ணனும் வணங்கிவிடை கொண்டான்
பாகனைய சொல்லியொடு தம்பிபரி விற்பின்
போகமுனி சிந்தைதொட ரக்கடிது போனான்.

(இ - ள்.) இனி—, அ வயின் - அவ்விடத்தில், ஏகி - சென்று, இருந்து உறைமின் - தங்கியிருங்கள், என்றான் - என்று (அகத் தியன்) சொன்னான்; மேகம் நிறம் வண்ணன்உம் - மேகம் போன்ற (கரு) நிறத்தையும் (கைம்மாறு கருதாதுகொடுக்கும்) தன்மையையு முடைய இராமனும், வணங்கி—, விடை கொண்டான் - (அம் முனிவன்பக்கல்) அநுமதி பெற்றுக்கொண்டு, பாகு அனைய சொல்லியொடு - வெல்லப்பாகைபோன்ற இன்சொல்லினையுடைய சீதையுடன், தம்பி-லக்ஷ்மணனும், பரிவின்-அன்போடு, பின் போக- பின்னேவரவும்,—முனி சிந்தை - அம்முனிவனது மனம், தொடர - பின்தொடரவும், கடிது-விரைவாக, போனான் - (அப்பாற்) சென்றான்; (எ - று.)—(அகத்தியன்) (55) நல்கி, (56) நல்கா, (59) என்றான் என முடிபு காண்க.

'பஞ்சவடி உறைதற்கு ஏற்றஇடம்' என்று அகத்தியமுனிவன் கூறியதும், இராமபிரான் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு சீதாலட்சுமணர் உடன்வரவும் அகத்தியன்மனம் பின்தொடரவும் புறப்பட்டுப்போனு னென்பதாம். பி - ம்:—' அண்ணலும், (176)

அகத்தியப்படலம் முற்றிற்று.

---

## 4 - ஆவது சடாயுகாண் படலம்.

சடாயு - ஜடாயு; இச்சொல்லுக்கு - பலமயிர்கள் சேர்த்துத் திரித்த ஜடைபோன்ற ஆயுளுள்ளவ னென்று பொருள்: மிக்க ஆயுளுள்ளவ னென்று கருத்து; இனி, இதற்கு-இறகில் உயிரை யுடையவ னென்றும், ஜடையையுடையவ னென்றுங் கூறுவாரு முளர். இவன், அருணனதுபுத்திரன்: சம்பாதியினது தம்பி; இவன் தசரதசக்கரவர்த்திக்குத் தமையன்முறை யாதல்பற்றி, இவற்கு வைஷ்ணசம்பிரதாயத்தில் 'பெரியவுடையார்' என்று திருநாமம். 'சடாயுகாண்' என்பதற்கு-இரட்டுறமொழிதலால், சடாயு இராமலட்சுமணரைக் காண்கிற வென்றும், இராமலட்சுமணர்கள் சடாயுவைக் காண்கிற என்றும் விரித்து உரைக்க. சில பிரதிகளில் இப்படலத்திற்குச் சடாயுப்படலம் என்று பெயர் காணப்படுகின்றது.

இப்படலம், தசரதசக்ரவர்த்திக்குப் பல உதவிகள்செய்து உயிர்த்தோழனுனவனும் கழுதுக்கரசுமாகிய சடாயு என்பவனை இராமலட்சுமணர் காண, அவன் அம்முறைபற்றி இவர்களைப் புத்திரராகவே பாவித்துப் பாதுகாக்க, பஞ்சவடியைச் சேர்ந்த வரலாற்றைக் கூறுகின்றது.

வேறு.

### 1.—இராமன் முதலிய மூவரும் சடாயுவைக் காணுதல்.

நடந்தனர் காவதம் பலவு நன்னதி
கிடந்தன நின்றன கிரிகள் கேண்மையில்
தொடர்ந்தன துவன்றின சூழல் யாவையும்
கடந்தனர் கண்டனர் கழுகின் வேந்தையே.

(இ - ள்.) (இராமன் முதலிய மூவரும்),—காவதம் பலஉம் - பலகாதவழிதூரம், நடந்தனர் - நடந்தவர்களாய்,—கிடந்தன - (ஆங்காங்குப்) பொருந்தியவைகளாகிய, நல் நதி-சிறந்த ஆறுகளையும், நின்றன -நிலைநின்றனவாகிய, கிரிகள்-மலைகளையும், தொடர்ந்தன - (ஒன்றோடொன்று) தொடர்ந்தவையும், துவன்றின-நெருங்கியவையு மாகிய, சூழல் யாவைஉம் - மற்றைக் காட்டினிடங்களையும், கேண்மையின் - முறைமையால், கடந்தனர் - தாண்டிச்சென்று,—(அங்கு), கழுகின் வேந்தை-கழுகுகளுக்கு அரசனுகிய சடாயுவை, கண்டனர் - **கண்டார்கள்; (எ - று.)**

இராமனாதியோர் பஞ்சவடியிலுறையுமாறு நதிகளையும் மலைகளை யும் மற்றுமுள்ள காட்டினிடங்களையும் பலகாவததூரங்கடந்துசெல் லுகையில், இடைவழியில் சடாயுவைக் கண்டனரென்பதாம். காவ தம் - விகாரம். புண்ணிய தீர்த்த மாதலால், 'நன்னதி' என்றார். இனி, கேண்மையிற்றொடர்ந்தன வென்பதற்கு-நட்புக்கொண்டாற் போல ஒன்றையொன்று தொடர்ந்துள்ள பல இடங்களையு மென்று மாம்.

இதுமுதல் இருபதுகவிகள் - கீழ்ப்படலத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (177)

## 2.—இதுமுதல் ஏழுகவிகள் - சடாயுவின் வருணனை.

உருக்கிய சுவணமொத் துதயத் துச்சிசேர்
[1]அருக்கனிவ் வகலிடத் தலங்கு திக்கெலாம்
தெரிப்புறு [2]செறிசுடர்ச் [3]சிகையி னாற்சிறை
விரித்திருந் தனனென விளங்கு வான்றனை.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உருக்கிய—, சுவணம் - பொன்னை, ஒத்து - போன்று, உதயத்து-உதயகிரியினது, உச்சி-சிகரத்தை, சேர்-சேர்ந்து உதித்த, அருக்கன்-இளஞ்சூரியன், இ அகல் இடத்து-இந்த அகன்ற பூமியில், அலங்கு திக்கு எலாம் - பொருந்திய எல்லாத் திசைகளையும், தெரிப் புறு-விளங்கச் செய்கின்ற, செறி சுடர் - நெருங்கிய (தனது) கிரணங் களின், சிகையினால்-ஒளியினால், சிறை - சிறகுகளை, விரித்து இருந் தனன் என-விரித்துக்கொண்டிருந்தான் போல, விளங்குவான்தனை- விளங்குபவனும்,—(எ - று.)

ஜடாயுவுக்குப் பாலசூரியனும் அவனது விரிந்தசிறகுக்குப் பரந்த கிரணமும் உவமை. உதயத்துச்சிசேரருக்கனைப்போலச் சடாயு தன்சிறைகளை விரித்துக்கொண்டு ஒருமலையினுச்சியில் தங்கியிருந்தா னென்பதாம்; சடாயு ஒருமலையினுச்சியில் தங்கியிருந்தானென்பதை மேலிற் கவிகளானு முணர்க. வடநூலார் உதயமென்றே அம் மலைக்குப் பெயர் கூறுவர். அருக்கன் = அர்க்கன். சிலபிரதிகளில் இந்தப்பாடல் அடுத்தபாடலுக்குப்பின் காணப்படுகின்றது.பி - ம்:— [1]அருக்கனினிழல்படை. [2]தெரி. [3]சிறையினாற்றிசை. (178)

3\. முந்தொரு கருமலை முகட்டு முன்றிலிற்
சந்திர னொளியொடு தழுவச் சார்த்திய
அந்தமில் கனைகட லமரர் நாட்டிய
மந்தர [1]கிரியென வயங்கு வான்றனை.

(இ-ள்.) முந்து-(தங்களுக்கு) முன்னே, ஒரு கரு மலை-ஒரு பெரிய மலையினது, முகடு முன்றிலின்-உச்சியினிடத்திலே,— அமரர்-தேவர் கள், அந்தம் இல்-அளவில்லாத, கனை கடல் - ஒலிக்கின்ற திருப்பாற் கடலில், சந்திரன் ஒளியொடு - சந்திரனது ஒளியுடன், தழுவ - பொருந்தும்படி, சார்த்திய நாட்டிய - சேர்த்து நிறுத்திவைத்த,

மந்தரகிரி என - மந்தரமலைபோல, வயங்குவான் தனை - விளங்கு பவனும்,—(எ - று.)

அமரரும் அசுரரும் அமுதமெழப் பாற்கடல்கடைந்த காலத்துச் சந்திரனை அடைதூணுகக் கொண்டதனுல், 'சந்திர ஞெளியொடு தழுவச்சார்த்திய மந்தரம்' எனப்பட்டது; சார்த்திய கிரி, நாட்டிய கிரி யென்க. மந்திரகிரி ஜடாயுவுக்கும், சந்திரஞெளி அவனது ஒளிக் கும் உவமை. கீழே பாலசூரியனை உவமை கூறி, இங்கே சந்திரனை உவமை கூறியதனுல் செந்நிறங்கலந்த ஒளி பற்றிக்கூறியன உவமைக ளெனப. சடாயு தங்கியிருந்த மலை, பாற்கடற்கு உவமையா மென்க. சடாயு ஆலமரத்துத் தங்கியிருந்தா னென்று முதனூல் கூறும். முன்றில் - இல்லுக்கு முன்னுகிய இடம்; இலக்கணப்போலி: இது, இங்கே முனனிட மென்னு மாத்திரை யாயிற்று. முன்றிலின் வயங்குவா னெனக் கூட்டுக. பி - ம:—[1]மலை. (179)

4. [1]மானிற விசும்பெழின் மறையத் தன்மணிக்
   கானிறச் சேயொளி கதுவக் கண்ணகல்
   நீனிற [2]வரையினிற் பவள நீள் [3]கொடி
   போனிறம் [4]பொலிந்தெனப் பொலிகின் ருன்றனை.

(இ - ள்.) கண் அகல்- இடமகன்ற, நீல் நிறம் - நீலநிறத்தை யுடைய, வரையினில் - அம்மலைமேலே,—மால் நிறம் விசும்பு - கரு நிறத்தையுடைய ஆகாயத்தினது, எழில்-நிறம், மறைய - (தன்நிறத் தால்)மறையவும்,—பவளம் நீள் கொடி - நீண்டபவழக்கொடி, போன் நிறம் பொலிந்து என - (தனது) அழகியநிறத்தோடு விளங்கினுற் போல, தன்-தனது, மணி கால்-அழகிய கால்களின், நிறம் - நிறத் தினது, சேய் ஒளி-சிவந்தஒளி, கதுவ - பொருந்தவும்,—பொலிகின் ருன் தனை -விளங்குகின்றவனும்,—(எ - று.)

'விசும்பின் மால்நிறம் இவனது மேனி நிறத்தால் மறைய' எனவே இவனது, உடம்பிஞெளி மேற்புறமாக வீசுவதைக் கூறினுர். ஆகவே, காலின் நிறத்தால் கீழ்ப்புறமெல்லாம் சேயொளி கதுவலா யிற்றென்பது பெறப்படும் இக்கவியை "நீணிறத்தாற் சோலை நிறம் பெயர நீடியதன், ருணிறத்தாற் பொய்கைத்தலஞ் சிவப்ப-மாணிறத் தான், முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகும், அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு" என்பதனேடு ஒப்பிடுக. வரையினிற் பொலி கின்ரு னென்க. சேய் - செம்மையென்னும் பண்புப்பெயரின் விகாரம். நீல் - கடைக்குறை. பொன்னிறம் - போனிறமென, எதுகைநோக்கிய விகாரம்; "போனிறப் புத்திசேனன் பொன்னணி பகழி சிந்தி" என்னுஞ் சிந்தாமணியிற் போல. இனி, பவழக்கொடி பொன்னி னிடத்தே நிறம் விளங்கினுற்போலத் தன் பொன்மேனியிடத்தே சிவந்த காலிஞெளி பொருந்த என்பாருமுளர். பி - ம்:—[1]வான் [2]வரையினை. [3]கிரி. [4]பொலிந்திட. (180)

5. [1]தூய்மைய னிருங்கலை துணிந்த கேள்வியன்
   வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மையன்
   [2]ஆய்மையின் மந்திரத் தறிஞ ருமெனச்
   [3]சேய்மையி னேக்குறு சிறுக ணுன்றனை.

(இ-ள்.) தூய்மையன் - பரிசுத்தியையுடையவனும்,—இருங் கலை துணிந்த கேள்வியன்-மிக்க கல்வியையும் தெளிந்த கேள்வியையு முடையவனும்,—வாய்மையன் - சத்தியத்தையுடையவனும், மறு இலன் - குற்றமில்லாதவனும்,—மதியின் கூர்மையன் - அறிவின் நுட்பத்தை யுடையவனும்,—ஆய்மையின் - ஆராய்ச்சியையுடைய, மந்திரத்து - ஆலோசனையால், அறிஞன் ஆம் என - அறிபவனைப் போல, சேய்மையின் நோக்குறு - மிக்க தூரத்திலுள்ளவற்றையுங் காண்கின்ற,சிறு கணன் தனை-சிறிய கண்களையுடையவனானவனும்,—

விலங்கினத்துத் தோன்றினும் உடல்தூய்மையுடனே கல்வி கேள்விகளையும் மதிக்கூர்மையையும் பெற்று, அம்மதிக்கூர்மையால் சேய்மையான பொருளையும் அறிவதுபோலவே, புறக்கண்ணாலும் சேய்மையிலுள்ள பொருளையும் அறியவல்லான் அந்தச் சடாயு என்பானென்றவாறு. கல்வியாவது - கற்றற்குஉரிய நூல்களைக் கற்றல்.கேள்வியாவது-கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்: கற்றவழி அதனினாய அறிவை வலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனை உண்டாக்குதலானும், இது, கல்வியின்பின் வைக்கப்பட்டது. வாய்மையாவது-மெய்யினது தன்மை. மறுவாவது - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப் பட்ட ஆறு குற்றங்கள். மதியாவது-கல்விகேள்விகளினாய அறிவோடு உண்மையறிவு. உபமானத்தில் 'சேய்மையின் நோக்குறுசிறுகண்' என்பதற்கு-காலமிடையிட்டவற்றையும் தேயமிடையிட்டவற்றையும் அறிகின்ற நுண்ணறிவென்க. ஆம் - அசை. பி - ம்:—[1] தூயவன். [2] ஆய்வுறு. [3] சேயினின். (181)

6. வீட்டிவா ளவுணரை விருந்து கூற்றினை
ஊட்டிவீழ் மிச்சிரு னுண்டு நாடொறும்
தீட்டிமே லிந்திரன் சிறுகண் யானையின்
தோட்டிபோற் றேய்ந்தொளிர் துண்டத் தான்றனை.

(இ-ள்.) வாள் அவுணரை - கொடிய அசுரர்களை, வீட்டி - (உடலும் உயிரும் வெவ்வேறாக) விடுவித்து [கொன்று],—கூற்றினை-யமனை, விருந்து ஊட்டி - (அவ்வசுரர்களதுஉயிரை) விருந்திட்டு உண்பித்து,—வீழ் மிச்சில் - கீழ்விழுந்து மிகுதியாய்நின்ற உடலை, தான் உண்டு—, நாள்தொறும்-தினந்தோறும், தீட்டி - தீட்டப்பட்டு,—மேல் இந்திரன் - மேன்மையுள்ள தேவேந்திரனது, சிறுகண் யானையின் - சிறிய கண்களையுடைய (ஐராவதமென்னும்) யானையினது, தோட்டிபோல் - அங்குசம்போல, தேய்ந்து ஒளிர் - தேய்ந்து விளங்குகின்ற, துண்டத்தான்தனை - மூக்கையுடைய வனும்,—(எ - று.)

இந்தச் சடாயு கொடிய அரக்கரைக்கொன்று அவருயிரைக் கூற்றுவனுக்கு விருந்தூட்டி அவர்களுடலைத் தன்சாதிக்கு ஏற்பு உண்டு, இங்ஙன் செய்யும் தன் துண்டத்தைத் தீட்டுவதால், அந்தத் துண்டம் ஐராவதயானையின் அங்குசம்போல் கூரியதாக விளங்குமென்க. மிச்சில் - ஒழிபொருள். துண்டம் - பறவை மூக்கு. தீட்டித் தேய்ந்தொளிர் துண்ட மென்க. (182)

7. கோளிரு நான்கினோ டொன்று கூடிய
ஆளுறு திகிரிபோ லாரத் தான்றனை
[1]நீளுறு மேருவி னெற்றி முற்றிய
வாளிர வியிற்பொலி மௌலி யான்றனை.

(இ - ள்.) இரு நான்கினோடு ஒன்று கூடிய கோள் - நவக்கிர கங்களையும், ஆளுறு - ஆளுதலையுடைய, திகிரிபோல் - சிம்சுமார சக்கரம்போன்ற, ஆரத்தான்தனை - நவரத்தினமாலையையுடைய வனும்,—நீள் உறு - உயர்ந்த, மேருவின் - மேருமலையினது, நெற்றி- உச்சியில், முற்றிய - பொருந்திய, வாள் இரவியின் - ஒளியினை யுடைய சூரியன்போல, பொலி - விளங்குகின்ற, மௌலியான்தனை- கிரீடத்தையுடையவனும்,—(எ - று.)

சடாயுவினது உருவத்துக்கு மேருவும், சிரசுக்குச் சிகரமும், கிரீடத்துக்குச் சூரியனும் உவமை. கழுகுக்கரசு ஆதலால், முடியும் ஆரமுங் கூறினார். ஆரத்திற்குத் துருவசக்கரமும், அவ்வாரத்தில் சுற்றிலும் பதித்துள்ள நவமணிகளுக்கு அச்சக்கரத்தின்கண்ணே யுள்ள நவக்கிரகங்களும் உவமை. ஆரம் - ஹாரம். நவக்கிரகங்கள்- சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், பிருகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேது. நவமணிகள் - கோமேதகம், நீலம், பவளம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். ஆளுறு திகிரி - துருவன் தான் நடுவிலேயிருந்து சுற்றிக்கொண்டு காற்றின் வடிவமான கயிறுகளினாலே கட்டப்பட்ட நவக்கிரகங் களையுஞ் சுற்றித் திருப்புகின்ற சக்கரம். பி-ம்:—[1]நீளுயர்மேனியின்.

8. சொற்பங்க முறநிமி ரிசையின் சும்மையை
அற்பங்க முறவரு மருணன் செம்மலைச்
சிற்பங்கொள் [1]பகலெனக் கடிது சென்று [2]தீர்
கற்பங்க ளெனைப்பல கண்டு ளான்றனை.

(இ - ள்.) சொல் பங்கம்உற - சொற்கள் தோல்வியடையும் படி, நிமிர் - வளர்கின்ற, இசையின் சும்மையை - கீர்த்தியின் மிகு தியையுடையவனும், - அல் பங்கம் உற - இருள் அழிவையடையும் படி, வரும் - உதிக்கின்ற, அருணன் - அருணனது, செம்மலை - புத்திரனும்,—கற்பங்கள் எனைபல - அநேக கல்ப காலங்களை, கடிது சென்று தீர் சிற்பம் கொள் பகல் என - விரைவிற் கழிந்து போகின்ற சிறுமையைக்கொண்ட நாள்களைப்போல, கண்டு உளான்தனை - கண்டிருப்பவனும்,—(எ - று.)

மிக்க புகழையும் நீண்ட ஆயுளையும் பெற்றவன், அருணன் புதல்வனான அந்தச்சடாயு என்க. சொல்லச்சொல்ல முடியாது மேன்மேல் வளர்கின்ற புகழென்றற்கு, 'சொற்பங்கமுற நிமிரிசை' என்றார். அருணன் - சூரியசாரதி. இரண்டாம் பாடல்முதல் இந்தப் பாடல் வரையிலுமுள்ள 'விளங்குவான்றனை...கண்டுளான்றனை' என்ற இரண்டாம்வேற்றுமை விரிகள், மேற்பாடலிலுள்ள வீரனை என்பதற்கு அடைமொழிகள்: இனி, முதற்பாடலி லுள்ள 'கழுகின்

வேந்தை' என்பதற்கு அடைமொழியாகக் கூட்டுதலுமொன்று.
பி - ம்:—[1]கடலெனை. [2]எதிர். (184)

9.—இரண்டுகவிகள் - இராமலட்சுமணர் சடாயுவையணுகி ஐயுறுதலைத் தெரிவிக்கும்.

ஓங்குயர் நெடுவரை யொன்றி னின்றது
தாங்கல திருநிலந் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய [1]வலியினி லிருந்த வீரனை
ஆங்கவ ரணுகின ரயிர்க்குஞ் சிந்தையார்.

(இ - ள்.) ஓங்கு உயர் நெடு வரை ஒன்றில் - மிகவும் உயர்ந்த பெரிய தொரு மலையில், நின்று-பொருந்தி, அது தாங்கலது-அம்மலை (தன்னைத்) தாங்கமாட்டாமல், இரு நிலம் தாழ்ந்து - பெரிய நிலத்திற் குள்ளே புதைந்து, தாழ்வுற - கீழமையடையும்படி, வீங்கிய வலியினில்-மிக்கபலத்தோடு, இருந்த—, வீரனை - வீரத்தன்மையையுடைய வனுமாகிய அச்சடாயுவை, அவர்-அவ்விராம லக்ஷ்மணர்கள், ஆங்கு - அவ்விடத்தில், அணுகினர் - சமீபித்து, அயிர்க்கும் சிந்தையார் - சந்தேகிக்கின்ற மனமுடையவரானார்கள்; (எ-று.)

தான் தங்கியிருந்த மலை தன்னுடற்பொறையைத் தாங்கமாட்டாது சரியும்படி மிக்க வலிமையோடு சடாயு தங்கியிருந்தானாக, இராமலட்சுமணர் அவ்வீரனை யணுகிக்கண்டு பின்வருமாறு அயிர்க்கலாயினரென்க. பி-ம்:—[1]வலியினன். (185)

10. இறுதியைத் தன்வயி னியற்ற வெய்தினான்
அறிவிலி யரக்கனா மல்ல னாமெனின்
[1]எறுழ்வலிக் கலுழனே யென்ன வுன்னியச்
செறிகழல் வீரருஞ் செயிர்த்து நோக்கினார்.

(இ - ள்.) அ செறி கழல் வீரர்உம் - நெருங்கிய வீரக்கழலை யணிந்த அவ்விராமலக்ஷ்மணர்களும்,—'(இவன்), தன்வயின் - தன் மூலமாக, இறுதியை - அழிவை, இயற்ற - (எமக்குச்) செய்ய (எண்ணி), எய்தினான் - (பறவையுருவங்கொண்டு) வந்தவனான, அறிவு இலி அரக்கன் ஆம் - அறிவில்லாதவனாகிய ராக்ஷசனாவன்; அல்லன் ஆம் எனின் - அவ்வாறல்லாமற் போனால், எறுழ் வலி கலுழனே (ஆம்)-மிக்கவலியினையுடைய கருடனே யாவன்,' என்ன உன்னி-என்று எண்ணி, செயிர்த்து-சந்தேகப்பட்டு, நோக்கினார் - பார்த்தார்கள்; (எ - று.)

'அயிர்க்குஞ் சிந்தையார்' என்று கீழ்க்கூறியதை, இதனால் விவரிக்கின்றன ரென்க. இது, வடிவுபற்றி வந்த ஐயநிலையுவமை யணி. தன்வயின் இறுதியை இயற்ற என்பதற்கு - தனக்குத் தானே முடிவை உண்டாக்கிக்கொள்ள என்றுமாம். எறுழ் - உரிச்சொல்; "எறுழ் வலியாகும்." எறுழ்வலி - ஒருபொருட்பன்மொழி. கலுழன் - வடசொற் சிதைவு. வீரரும், உம்மை - எதிரதுதழுவியது.
பி - ம்:—[1]உறு. (186)

11.—இதுமுதல் ஐந்துகவிகள் - சடாயு இராமலட்சுமணரைக் குறித்துப் பலவகையாக நினைத்தலைத் தெரிவிக்கும்.

வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
அனையவன் ருனுங்கண் டயிர்த்து நோக்கினன்
வினையறு நோன்பின ரல்லர் வில்லினர்
புனைசடை முடியினர் புலவ ரோவென.

(இ - ள்.) அனையவன் தான்உம் - அச்சடாயு தானும்,—வனை கழல் - கட்டிய வீரக்கழலையும், வரி சிலை - கட்டமைந்த வில்லையும், மதுகை - வலிமையுமுடைய, மைந்தரை - அக்குமாரர்களை, கண்டு - பார்த்து,—'புனை சடை முடியினர் - தரித்த சடையோடுகூடிய முடியினையுடைய இவர்கள், வினை அறு நோன்பினர் - இருவினையும் அறுதற்குக்காரணமான தவத்தினையுடைய முனிவர்களென்றாலோ, வில்லினர் - வில்லையுடையார்; (ஆதலால்), அல்லர்—, புலவர் ஓ - தேவர்களோ?' என - என்று, அயிர்த்து - ஐயமுற்று, நோக்கினன்—; (எ - று.)

இராமலட்சுமணரைக்குறித்து அந்தச்சடாயு அயிர்த்தவகையையும் அதன் காரணத்தையும் தெரிவிக்கின்றார். அனையவன் ருனும், உம்மை - இறந்தது தழுவியது. புலவர் - அறிவுடையவர்: விபுதரென்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. இராமலட்சுமணர்களிருவரும் அந்தப் பட்சியைப்பார்த்து 'நீ யார்?' எனவினவ, அந்தக் கழுகு 'நான் உன்தந்தை தசரத மகாராசனுக்கு நண்பனென்று என்னைத் தெரிந்துகொள்' என்று மறுமொழியிறுத்ததாக முதனூலிலுள்ளது. (187)

12. புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தர நோக்குவெ னேமி யானுமவ்
வரந்தரு மிறைவனு மழுவ லாளனும்
கரந்தில ரென்னையா னென்றுங் காண்பெறல்.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) புரந்தரன் முதலிய - இந்திரன் முதலான, புலவர் யாரைஉம் - தேவர்கள் யாவரையும், நிரந்தரம் - இடைவிடாமல் [எப்பொழுதும்], நோக்குவென் - பார்ப்பேன்; நேமியான்உம்-சக்கராயுதத்தையுடைய விஷ்ணுவும், அ வரம் தரும் இறைவன்உம் - விரும்பிய வரங்களைக் கொடுக்கின்ற அப்பிரமனும், மழு வலாளன் உம் - மழுவாயுதத்தையுடைய சிவனும், என்னை - எனக்கு, கரந்திலர்- ஒளிக்கமாட்டார்கள்; யான்—, என்றுஉம் - எப்பொழுதும், காண்பென் - (அவர்களைப்) பார்ப்பேன்; (எ - று.)-ஆல் - ஈற்றசை.

'புலவரோ' என்று பொதுவாக அயிர்த்ததனை இரண்டு பாடல்களால் சிறப்புற ஆராய்ந்து, இன்னாரென்று தெரிகின்றிலேனென்கிறான் சடாயு வென்பான். 'கரந்திலரென்னை யான் என்றும் காண்பெறல்' என்றதனால், இவர்கள் அன்னவரல்லரென்று குறிப்பு. "நான்முகனை நாராயணன் படைத்தா னான்முகனும், தான்

முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்றதை யொட்டி முறைப்பட வைத்தார். என்னை - உருபுமயக்கம். நிரந்தரம் - வடசொல். (188)

13. காமனென் பவனையுங் கண்ணி னோக்கினேன்
தாமரைச் செங்கணித் தடக்கை வீரர்கள்
பூமரு பொலங்கழற் பொடியி னோடு[1]மொப்பு
ஆமென வறிகிலெ னார்கொ லாமிவர்.

(இ - ள்.) காமன் என்பவனைஉம் - மன்மதனென்று (அழகிற் சிறப்பித்துச்) சொல்லப்படுகின்றவனையும், கண்ணின் நோக்கினேன்- கண்களாற் பார்த்திருக்கிறேன்; தாமரை செம் கண் - தாமரை போலுஞ் சிவந்த கண்களையும், தட கை - பெரிய கைகளையுமுடைய, இ வீரர்கள் - இந்த வீரர்களின், பூ மரு பொலம் கழல் - தாமரை மலர்போன்ற அழகிய பாதங்களது, பொடியினோடும் - தூளியோடும், ஒப்பு ஆம் என - (அவன்) ஒப்பாவானென்று, அறிகிலென் - அறிகின்றேனில்லை; இவர் - இவ்வீரர்கள், ஆர் கொல்ஆம் - யாவராவரோ? (எ - று.)

ஒப்பாமென அறிகிலெனென்றது - ஒப்பாகமாட்டா னென்று அறிவே னென்றபடி. இவை யிரண்டுகவிகளாலும், புலவ ரன்றெனத் தெளிந்தமை கூறப்பட்டது. இவ்விராமலட்சுமணர்களைப் புரந்தரன் முதலியவ ரல்லரெனத் தெளிந்த காரணம் - இவர்கள் இரட்டையரா யிருத்தலாலும், புரந்தரன் முதலியோர்க்கு உள்ள வச்சிரப்படையுடைமை முதலியவான சிறப்புத்தன்மை காணப் படாமையாலுமாம். கண்ணினென வேண்டாது கூறினார், அநங்கனாகிய அவனைக் காணற்கு அருமை விளக்குதற்கு. பி - ம்:—[1]ஒப் பானலன்வருபவர். (189)

14. உலகொரு மூன்றுந்தம் முடைமை யாக்குறும்
அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்
மலர்மகட் குவமையா ளோடும் வந்தவிச்
சிலைவலி வீரரைத் [1]தெரிகி லேனெனா.

(இ - ள்.) உலகு ஒரு மூன்றுஉம் - மூன்றுலோகங்களையும், தம் உடைமை ஆக்குறும் - தமக்கு உரியபொருளாகச் செய்பவல்ல, அலகு அறும் - அளவில்லாத, இலக்கணம் - உத்தமபுருடலட்சணங்கள், அமைந்த - பொருந்திய, மெய்யினர் - மேனியையுடையவர்களாய்,— மலர் மகட்கு உவமையாளோடுஉம் - தாமரை மலரில் தோன்றிய திருமகளுக்கும் உபமானமாகச் சொல்லத்தக்க ஒரு பெண்ணுடனே, வந்த—, இ சிலை வலி வீரரை - வில்லின் வலிமையையுடைய இவ்வீரர்களை, தெரிகிலேன் - (இன்னாரென்று) அறியேன், எனா - என்றுகருதி,—(எ - று.)—"எனப் பலநினைப்பின மனத்துளெண்ணுவான்" என்று 16-ஆங் கவியோடு தொடரும்.

புலவரன்றென்றுதெளிந்தமையைக் கீழேகூறியதனால், இங்கு இவரை இன்னாரென்று அறிகின்றிலேனென்கிறான், சடாயு. உல

கொருமூன்றுந் தம்முடைமையாக்குறு மிலக்கணம் - சக்கரவர்த்திக்கு உரிய லக்ஷணங்கள். அலகறும் - குற்றமற்ற என்றுமாம். எல்லாப்பெண்களுக்கும் உபமானமாகச் சொல்லப்படுகின்ற சிறப்புடைய திருமகளுக்கும் உபமானமாகச் சொல்லத்தக்க அழகினையுடையவளெனவே, ஒப்புயர்வில்லாதவளென்றதாயிற்று. பி-ம்:—[1]தெரிக்கிலேனென. (190)

15. கருமலை செம்மலை யனைய காட்சியர்
திருமகிழ் மார்பினர் செங்கண் வீரர்தாம்
அருமைசெய் குணத்தினென் றுணைவ னாழியான்
ஒருவனை யிருவரு [1]மொத்து ளாரரோ.

(இ - ள். கரு மலை செம்மலை அனைய - நீலமலையையுஞ் சிவந்த மலையையும் போன்ற, காட்சியர் - தோற்றத்தையுடையவர்களும்,— திரு மகிழ் மார்பினர் - ஐபலக்ஷ்மி மகிழ்ந்து வீற்றிருக்கின்ற மார்பினையுடையவர்களுமாகிய, செம் கண் - சிவந்த கண்களையுடைய, வீரர் இருவர்உம் - இவ்விரண்டுவீரரும், அருமை செம் குணத்தின்- பெறுதற்கரிய நற்குணங்களையுடைய, என் துணைவன் - எனது சிநேகிதனாகிய, ஆழியான் ஒருவனை - தசரதசக்கரவர்த்தியை, ஒத்து - போன்று, உளார்-இருக்கின்றனர்; (எ - று.)—தாம், அரோ, அசைகள்.

இதனால், தசரதனதுமக்கள்போலுமென ஒருவாறு ஊகித்தாளாயிற்று. கருமலைக் காட்சியன் இராமபிரான்: செம்மலைக் காட்சியன் இலக்குமணன். பி - ம்:—[1]ஒத்தவாறரோ. (191)

## 16.—சடாயு இராமலட்சுமணரை நீவிர் யாவரென வினவல்.

எனப்பல [1]நினைப்பின மனத்து ளெண்ணுவான்
சினப்படை [2]வீரர்மேற் செல்லு மன்பினன்
கனப்படை வரிசிலைக் [3]காளை யீர்கள்யார்
மனப்பட வெனக்குரை வழங்கு வீரென்றான்.

(இ - ள்.) என - என்று, பல நினைப்பின - பல எண்ணங்களை, மனத்துள் எண்ணுவான் - மனத்தில் நினைப்பவனாகியும்,—சினம் படை வீரர்மேல் - கோபத்தையுடைய ஆயுதங்களையுடைய அவ்வீரர்களிடத்தில், செல்லும் - செல்லுகின்ற, அன்பினன் - அன்பையுடையவனாகியு மிருந்து,—'கனம் - சிறப்பையுடைய, வரி சிலை படை - கட்டமைந்த விற்படையையுடைய, காளையீர்கள் - காளை போல்கின்ற நீங்கள், யார் - யாவர்? மனம் பட - மனத்திற்பதியும்படி, எனக்கு—, உரை வழங்குவீர் - உத்தரஞ்சொல்லுங்கள்,' என்றான்-;

பலவகையாக ஐயவுணர்வைப்பெற்ற சடாயு தயரதன் சாயலைக்கொண்டுளார் இவர் என்று ஒரெண்ணங்கொண்டதனால் அன்னார்மீது அன்புமிக, 'நீவிர் இன்னாரென்பதை என்மனத்திற் படுமாறு கூறுக' என்று வினவினனென்க. நினைப்பு இனம் எனப் பிரித்து, நினைப்புக்களின் கூட்டமென்றுமாம். பி - ம்:—[1]நினைப்பினன். [2]வீரரைத்தெளியும். [3]சரத்தர்நீங்கள், காளைநீர்கள். (192)

## 17.—இராமலட்சுமணர்கள் தம்மைத் தெரிவித்தல்.

வினவிய காலையின் மெய்ம்மை யல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கி லாமையால்
கனைகட னெடுநிலங் காவ லாழியான்
வனைகழற் றயரதன் மைந்தர் யாமென்றார்.

(இ - ள்.) வினவிய காலையின் - (என்று ஜடாயு) கேட்ட பொழுது,—புனை மலர் தாரவர் - சூடிய பூமாலையையுடைய அவர்கள்,—மெய்ம்மை அல்லது புகல்கிலாமையால் - சத்தியமல்லது (வேறொன்றைச்) சொல்ல அறியாமையால்,—'யாம்—, கனை கடல் நெடு நிலம் காவல் - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பெரிய உலக முழுவதையுங் காத்தலையுடைய, ஆழியான் - ஆஜ்ஞாசக்கரத்தை யுடையவனாகிய, வனை கழல் தயரதன் - தரித்த வீரக்கழலையுடைய தசரத சக்கரவர்த்தியினது, மைந்தர் - புத்திரர்கள்,' என்றார்—;

ஜடாயுவை இன்னானென்று அறியாது 'ஒருகால் அரக்கனாயிருப்பனோ?' என ஐயுற்றிருந்தும், உண்மையே கூறியதனால், 'மெய்ம்மையல்லது புகல்கிலாமையால்' என்றார். தயரதன் = தசரதன்: இது, தச ரதன் எனப்பிரித்து, பத்துத்திக்குக்களிலுஞ் செல்லவல்ல தேருடையவனென்றுபொருள் கொள்ளப்படும்; இதனால், எங்கும் வீரம் தடையின்றிச் செல்லவல்லவனென்றதாயிற்று; இது, இந்திரனைச் சிறையிட்ட சம்பராசுரனை வதைக்கும் பொருட்டு அவன் சென்ற இடமெல்லாஞ்சென்றமையால் விளங்கியது: இச் சொல்லுக்கு, தச - பட்சி, ரத - வாகனம் என்று பொருள் கொள்ளின், கருடவாகனனான திருமாலுக்குப் பெயராகும்; தெய்வப்பெயரை மனிதருக்கிடுவது பரிசுத்திகரமென்கிற காரணத்தால் இவ்வரசனுக்கு இப்பெயரிட்டு வழங்கியதென்று சொல்லலாம். (193)

## 18.—அதனைக் கேட்ட சடாயு தசரதனது க்ஷேமத்தை வினவுதல்.

உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையன்
தரைத்தலை யிழிந்தவர்த் தழுவு காதலன்
விரைத்தடந் [1]தாரினிர் வேந்தர் வேந்தன்றன்
வரைத்தடந் தோளிணை வலிய வோவென்றான்.

(இ - ள்.) உரைத்தலும் - (என்று அவர்கள்) சொன்னவளவில்,—(ஜடாயு), பொங்கிய - கிளர்ந்த, உவகை வேலையன் - களிப்பாகிய கடலையுடையவனாகி,—தரைத்தலை - பூமியில், இழிந்து - (அம்மலைச் சிகரத்தினின்றும்) இழிந்து, அவர் தழுவு காதலன் - அவர்களைத் தழுவுகின்ற அன்பினையுடையனாகி (வந்து), 'விரை தட தாரினிர் - வாசனையுடைய பெரிய மாலையை யுடையவர்களே! வேந்தர் வேந்தன் தன் - அச்சக்கரவர்த்தியினது, வரை தட தோள் இணை - மலைபோன்ற விசாலமான இரண்டுபுயங்களும், வலியவோ - வலியுள்ளனவாயிருக்கின்றனவா?' என்றான்—; (எ - று.)

தயரதன்மைந்தர் என்று கூறவே, தனது நண்பனான தயரதனது இனியவாழ்வைச் சடாயு வினவலானானென்க. அரசருக்குத் தோள்வலியே முக்கியமாதலால், 'தோளிணை வலியவோ' என்றது: அவன் க்ஷேமமாக இருக்கின்றனனா? என்றபடி. பி-ம்:—[1] தாரினன். ()

## 19 —தசரதன் இறந்ததை இராமன் தெரிவிக்க, சடாயு மூர்ச்சித்தல்.

மறக்கமுற் றுதன வாய்மை காத்தவன்
துறக்கமுற் றனென [1]விராமன் சொல்லலும்
இறக்கமுற் றனென வேக்க மெய்தினன்
உறக்கமுற் றனென வுணர்வு நீங்கினன்.

(இ - ள்.) 'அவன்-அச்சக்கரவர்த்தி, மறக்க முற்றுதன-மறக்கக் கூடாதவையாகிய, வாய்மை-சத்தியத்தை, காத்து-(தவறுமற்) பாதுகாத்து, துறக்கம் உற்றான்-சுவர்க்கலோகத்தை அடைந்தான்,' என-என்று, இராமன்—, சொல்லலும் - சொன்னவுடனே,—(ஜடாயு), இறக்கம் உற்றான் என (தனது உயிர்நண்பன்) மரணமடைந்தானென்னுங்காரணத்தால், ஏக்கம்எய்தினன்-துன்பமடைந்தவனாய்,— உறக்கம் உற்றான் என - தூக்கமடைந்தவன் போல, உணர்வு நீங்கினன் - அறிவுநீங்கப்பெற்றான் [மூர்ச்சித்து விழுந்தான்]; (எ - று.)

தசரதன் இறந்ததைக் காரணத்தோடு இராமன் தெரிவித்ததும், சடாயு பேரவலமுற்று அறிவுசோர்ந்தனனென்பதாம். மறத்தல் - மறந்துதவறுதல். வரங்களிரண்டாதலால், 'முற்றுதன' எனப் பன்மையாற் கூறினர். இனி, மூன்றும் அடிக்கு - மரணதசையடைந்தவன்போல ஏங்கி யென்றுமாம். பி - ம்:—[1]முன்னம். *(195)*

## 20 —இராமலட்சுமணரால் தேற்றப்பட்ட சடாயு புலம்பத் தொடங்குதல்.

தழுவின ரெடுத்தனர் தடக்கை யான்முகம்
கழுவின ரிருவருங் கண்ணி னீரினால்
வழுவிய வின்னுயிர் வந்த மன்னனும்
அழிவுறு நெஞ்சின னரற்றி னனரோ.

(இ - ள்.) இருவர்உம் - இராமலக்ஷ்மணரிரண்டுபேரும், தடகையால் - (தங்களது) பெரிய கைகளால், தழுவினர் எடுத்தனர் - (கீழே விழுந்த சடாயுவைத்) தழுவியெடுத்து, கண்ணின் நீரினால் - (தங்கள்) கண்களினின்றும் பெருகுகின்ற நீரினால், முகம்-(அவனது) முகத்தை, கழுவினர்-கழுவினார்களாக,—வழுவிய இன் உயிர் வந்த - நீங்கிப்போன இனிய (தனது) உயிர் மீண்டும் வரப்பெற்ற [மூர்ச்சை தெளிந்து எழுந்த], மன்னன்உம்-அச் சடாயுவும், அழிவு உறும் நெஞ்சினன் - அழிவடைகின்ற மனத்தை யுடையவனாய், அரற்றினன் - புலம்புவானாயினன்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

அங்ஙன் உணர்வுநீங்கிய சடாயுவை இராமலட்சுமணர் தழுவியெடுத்துத் தம் கண்ணீர் கொண்டு நீராட்ட, அன்னாரின் உபசரிப்

பால் அந்தச்சடாயுவுக்கு மூர்ச்சைதெளிந்து அறிவு வர, நண்பன் இறந்த துயர் மனத்து மூளவே, அவன் நெஞ்சம் அழிந்து பின் வருமாறு புலம்பலாயினனென்பதாம். தடக்கை - முழந்தாளளவு நீண்டகை. கண்ணினீர், சோகத்தால். (196)

வே று.

## 21.—இதுமுதல் மூன்றுகவிகள் - சடாயு தசரதனைக்குறித்துப் புலம்புதலைத் தெரிவிக்கும்.

பரவலருங் கொடைக்குநின்றன் [1]பனிக்குடைக்கும் பொறைக்கு நெடும் பண்பு தோற்ற, கரவலருங் கற்பகமு முடுபதியுங் கடலிடமுங் களித்து வாழப், புரவலர்தம் புரவலனே பொய்ப் பகையே மெய்க் கணியே புகழின் வாழ்வே, இரவலரு நல்லறமும் யானுமினி யென்பட நீத் தேகி னையே.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) புரவலர்தம் புரவலனே - அரசர்க்கரசனே! பொய் பகையே - பொய்ம்மைக்குப் பகையானவனே! மெய்க்கு அணியே - உண்மைக்கு அலங்காரமானவனே! புகழின் வாழ்வே - கீர்த்திக்கு வாழ்ந்திருக்குமிடமாக இருப்பவனே!—நின்தன் - உனது, பரவல் அரு - புகழ்தற்குஅரிய, கொடைக்குஉம் - தானத்திற்கும், பனி குடைக்குஉம் - குளிர்ச்சிபொருந்திய வெண்கொற்றக்குடைக்கும், பொறைக்குஉம் - பொறுமைக்கும், நெடும் பண்பு தோற்ற - சிறந்த (தன்) குணம் தோல்வியடைந்த, கரவல் அருங் கற்பகம்உம் - (இரப் பவர்க்கு) ஒளித்தலில்லாத கற்பகவிருக்ஷங்களும், உடுபதிஉம்-சந்திர னும் கடல் இடம்உம் - கடலாற்சூழப்பட்ட பூமியும், களித்து வாழ - களிப்படைந்து வாழும்படி, இரவலர்உம் - யாசகர்களும், நல் அறம் உம் - நல்ல தருமமும் யானும்—, இனி—, என் பட - என்ன துன் பத்தை அநுபவிக்க, நீத்து - (எங்களை) விட்டு, ஏகினையே - (நீ) போனாயோ? (எ - று.)

நிரனிறையாய்க் கொடைக்குத் தோற்ற கற்பகமும், குடைக் குத் தோற்ற உடுபதியும், பொறைக்குத் தோற்ற கடலிடமும் களித்து வாழவும், நினதுகொடையால் இனிது வாழ்ந்துவந்த இரவ லரும் குடையால் நன்கு நடந்து வந்த நல்லறமும், பொறையால் மிக்க நட்புப் பெற்றுவந்த யானும் வருந்தவும் ஏகினையோ என்கிறான். "ஒருவர்பொறை, இருவர்நட்பு" என்ப வாதலின், நட்புக்குப் பொறை காரணமாகக் கூறப்பட்டது. யானென்றது, உலகத்தாரையும் உள்ளிட்டுநின்றது.

கைம்மாறு கருதாது வேண்டியார் வேண்டிய வேண்டியாங்கு ஈதலாற் கொடைக்குக் கற்பகமும், வட்டவடிவாலும் வெண்மை நிறத்தாலும் குளிர்ச்சியினாலும் குடைக்குப பூர்ணசந்திரனும், தன்னை அகழ்வாரையும் வீழாமல் தாங்குமதுபோலத் தம்மை இகழ்வாரையும பொறுத்தலாற் பொறைக்குப பூமியும் உவமை கூறப்படும். மிக்க காவலுள்ள இந்திரனது நந்தனவனத்தில்

இரப்பவர்க்கு வந்தடைந்து ஏற்றற்கு அரியதாய் ஒருபால் ஒளித்துக்கிடந்து அருமையாய்த் தன்பக்கல்வந்து ஏற்றவர்களுக்கு ஏற்ற பின்பே ஏற்றவளவே கொடுக்கின்ற கற்பகதரு - அயோத்தியாபுரியில் யாவர்க்கும் வந்தடைதற்கு எளியனாய் விளங்கியிருந்து ஏழைகள்பக்கல் தான்சென்று அவர் கேட்டற்குமுன்பே விரும்பிய அளவினும் மிகுதியாய் வெறுப்பக்கொடுப்பான் ஒருசக்கரவர்த்தியது கொடைக்குத் தோற்றதாகும். தேய்தலும் வளர்தலு முடைத்தாய் மறுவினையுடைய சந்திரன் - தேய்தலும் வளர்தலுமின்றி எந்நாளும் ஒருநிலையாயிருக்கின்ற களங்கமற்ற அவனது குடைக்குத் தோற்றதாகும். ("மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித், தண்ணிழல் பரப்பவுமிருளைத் தள்ளவு, மண்ணறன் குடைமதியமையு மாதலான், மண்ணிடை மதியினை மிகையின்றென்னவே" என்றார், பாலகாண்டத்தும்.) தனக்குத் தீங்குசெய்தாரையுந் தாங்கி எல்லாவற்றையும் பொறுக்கின்ற பூமி - அப்பூமியையும் எளிதில் தோள்களால் தாங்குகின்ற அவனது பொறுமைக்குத் தோற்றதாகுமென்க. தசரதனே! நினது கொடை முதலியன கற்பகம் முதலியவற்றினும் மேம்பட்டனவா மாதலால், உனது மரணத்தால் இரவலரும் நல்லறமும் யானும் மிக்க பெருந்துன்பத்து ஆழ்ந்திருக்கும் நிலை நேர்பட்டதென்று இரங்கியவாறு.

அரசர்க்கரசனாய் உலகனைத்தையும் ஆண்டும், ஒருபொய் சொல்லுதற்கு அஞ்சிக் கைகேசி சூழ்வினையின்படி ஸ்ரீராமனைப் பிரிந்து வாய்மைகாத்துப் புத்திரசோகத்தால் நிலையில்லாத பூதவுடம்பை விட்டு நிலையான புகழுடம்பைப்பெற்றதனால், 'புரவலர் தம்புரவலனே பொய்ப்பகையே மெய்க்கணியே புகழின்வாழ்வே' என்றான். கொடை, குடை, பொறை என முன்னர்க் கூறினதற்கு ஏற்ப, 'இரவலரும் நல்லறமும் யானும்' என்றான். 'என்பட' என்றது, இனி எங்களை ஆதரிப்பாரில்லை யென்பதுகொண்டு: இனி மிகப்பெரியதோர் துன்பமடைய என்ற பொருளையும் இத்தொடர் குறிப்பிக்கும்: அத்துயரம் இவ்வளவானதெனப் பாவித்தற்கு உரியதேயன்றிச் சொல்லமுடியாத தென்ற கருத்தினது: "உளைவுறு துயர்முகத்தொளியிதாமெனின், முளையெயிறிலங்கிடு முறுவலென்படும்!" என வருவதும் காண்க. எங்களைவிட்டுப்போக உனக்கு மனந்துணிந்ததோ என்றற்கு, 'நீத்தேகினையே' என்றான்.

இனி, பரவு அலரும், கரவு அலரும் எனப்பிரித்து - புகழ்விரிந்த, கரத்தலுண்டாகிய என்றும் உரைக்கலாம். கரம் அலரும் கற்பகம் எனப் பிரித்து, ஒளியோடுகூடிய பூத்திருக்கும் கற்பகம் என இடர்ப்பட்டுப்பொருள் கூறினாருமுளர்: இது கவிஇதயத்துக்கு ஏற்குமா என்பது ஆராய்தற்கு உரியது. நெடும்பண்பு - ஒப்புயர்வில்லாத பெருமை. உடுபதி-நக்ஷத்திரங்களுக்குத் தலைவன். களித்துவாழ்தல்—இனித் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாமையால். வாழவென்னும் வினையெச்சம், ஏகினை யென்பதனோடு முடியும். புரவலர், இரவலர் - புரத்தலில் வல்லவர், இரத்தலில் வல்லவர்; அன்றிக்கே, புரத்தலையுடையவர், இரத்தலையுடையவர்: புரத்தல் - காத்தல், இரத்தல் - ஏற்றல். ஏகாரம் - இரக்கம். கரவல் - கரவுஎன்ற தொழிற்பெயரின்

மேல் 'அல்' சாரியை. கரவு அலரும்—காத்தல் தொழில் மிக்கு விளங்குகின்ற [இரவலர்க்கு எளிதிற் கிட்டமுடியாது வானுலகிற் பதுங்கியிருக்கிற] என்று உரை விரிக்கலாம். இனி, ஒருசாரார் கரவு அல் அருங் கற்பகம் எனப் பிரித்து—கரத்தலில்லாத அருங்கற்பகம் என்றார்: அன்னார், அன்மைக்கும் இன்மைக்கும் வேறுபாடு உணராமையால் அவ்வாறு கூறினர். இறந்தாய் என்ற பொருளில் ஏகினாய் என்றது - மங்கலவழக்கு. பி-ம்:—[1] தனி.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதல் நான்கு சீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய கழி நெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (197)

22. அலங்கார மெனவுலகுக் [1]குயிரளிக்குந் தனிக்குடையா யாழி சூழ்ந்த, நிலங்காவ [2]லதுகிடக்க [3]நிலையாத நிலையுடையே னேய நெஞ்சின், நலங்காண [4]நடந்தனையோ நாயகனே தீவினையே[5]னண்பி னின்றும், விலங்கானே [6]னாதலினால் விலங்கினே னின்னு முயிர் [7]விட்டி லேனால்.

(இ - ள்) உலகுக்கு - உலகங்களுக்கு, நாயகனே - அரசனே! அலங்காரம் என - (தோற்றம் மாத்திரத்தைக்கொண்டு இது உனக்கு) அழகைத் தருவதென்று சொல்லாநிற்க, உயிர் அளிக்கும்-உயிர்களைப் பாதுகாக்கின்ற, தனி குடையாய் - ஒப்பற்ற வெண் கொற்றக்குடையை யுடையவனே! (நீ), ஆழி சூழ்ந்த - கடலாற் சூழப்பட்ட, நிலம் - பூமண்டலத்தினது, காவல் அது - காத்தல்செய்தலாகிய அத்தொழில், கிடக்க - தடைப்பட்டு நிற்கவும், (அதனைப் பொருட்படுத்தாது),—நிலையாத - நிலையில்லாத [சஞ்சலமான], நிலை உடையேன் - நிலைமையுடைய எனது, நேயம் நெஞ்சின் - அன்புள்ள மனத்தினது, நலம்-நன்மையை, காண-பரிசோதித்தறியும் பொருட்டு, நடந்தனை ஓ-(இவ்வுலகம்விட்டுப்) போயினையோ? தீவினையேன்-பாவத் தொழில்களையுடைய நான், விலங்கு ஆனேன் ஆதலினால் - விலங்காயிருக்கின்றேனாகையால், நண்பினின்றும்-சிநேகதருமத்தினின்றும், விலங்கினேன்-தவறினவனாகி, இன்னும் - இன்னமும் [உன் மரணத்தைக் கேட்டறிந்த பின்னும்], உயிர் விட்டிலேன்—; (எ-று.)

விதிவலியாற் சக்கரவர்த்தி இறந்ததைச் சடாயு தன்மனநிலையைப் பரிசோதிக்கும்படி இறந்ததாகக் காரணங்கற்பித்துக் கூறியதாகவந்த இது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி. விலங்கு - குறுக்காக வளர்வதென்னும் பொருளதாகிய 'திர்யக்' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. காரண விடுகுறிவகையால் விலங்கான யான் இப்பொழுது உனது நண்பினின்றும் விலங்கினதனாற் காரணக்குறியாலும் விலங்கானே னென்றதாம்; பிரிநிலைநவிற்சியணி. இன்னுமுயிர்விட்டிலே னென்றதனால், விலங்குஅல்லேனாயின், உடனே உயிர்விட்டிருப்பே னென்றதாயிற்று. உடலிரண்டாயினும் உயிரொன்றே எனக் கருதும் தலையான நண்பருள் ஒருவர் இறந்தால், மற்றவர் தொலைவில் இருப்பினும் "உயிர் உறவு அறியும்" என்றபடி அறிந்து உயிர்நீப்பர்: இடையாய நண்பரோ நண்பர் இறந்ததைக் கண்டாலும் கேட்டாலும் உயிர்நீப்பர்: கடையாய நண்பரோ

அப்போதும் உயிரைவைத்துக்கொண்டிருப்பர்: அவ்வாறான கடையான நட்பினனாயினேனே யென்று தான் உயிர்கொண்டிருப்பதற்கு மிகவும் வருந்துகின்றானென்ப: இனி, சாதலிற்சாதலாகிய நண்பனிலக்கணம் தனபாலில்லாமைக்கு வருந்துகின்றானெனலாம்.

நிலையாத நிலை-உறுதிப்பாடில்லாத மனநிலையும், நின்றவிடத்தில்நில்லாது எப்பொழுதுந் திரிந்துகொண்டேயிருக்கிற உடலநிலையும். [1]அமுதளிக்கும்என்றபாடத்துக்கு, கீழ்க்கவியிற குடையைச் சந்திரனோடு ஒப்பிட்டதற்கேற்ப, இவ்வாறுகூறியதென்க: இங்கே, அமுதளித்தல்-அருள்வைத்துக் காத்தல்: இனி, அமுதளிக்குங் குடை-அமுதம்போலினிய நிழலைக் கொடுக்கின்ற ஏகசத்ரமென்றுமாம். நிலங்காவலதுகிடக்க என்றது - என்மனநிலையைச் சோதிப்பதற்காக நிலங்காத்தலாகிய பெரிய காரியத்தையும் உபேக்ஷித்தாயென்றபடி. கீழ்க்கவியில் ஏகினாயென்பதுபோல, இங்கு நடந்தனை-மங்கலவழக்கு. தீவினை - உயிர்நண்பனை இழப்பதற்குஏற்ற பாவம். நண்பில் நின்றும் - நட்பிலே நிலைநின்றிருந்தும என்றுமாம். பி-ம்:— [2]இது. [3]நினையாத. [4]ஏகினையோ, நடந்தனையென். [5]நம்பியின்று. [6]ஆகலினால். [7]விட்டிலேனே. (198)

23. தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி சம்பரனைத் தடிந்த [1]வந்நாள், அயிர்கிடக்கு்ங் கடல்[2]வலயத் தயலறிய நீயுட[3]னா ளாவியென்று, செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய் செப்பினாய் [4]திறம்பா நின்சொல், உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினா ருணர்[5]விறந்த கூற்றி னாரே.

(இ-ள்.) செயிர் கிடத்தல் செய்யாத - குற்றமானது (சிறிதும்) இருத்தலைச்செய்யாத [குற்றமற்ற], திருமனத்தாய் - அழகிய [தூய] மனத்தை யுடையவனே! தயிர் உடைக்கும் மத்து என்ன-தயிர்க்கட்டியை யுடைத்துச் சிதறவடிக்கின்ற மத்துப்போல, உலகை நலி-உலகங்களை வருத்திச் சிதறவடித்த, சம்பரனை - சம்பராசுரனை, தடிந்த அ நாள் - வென்ற அக்காலத்தில,—(நான் உதவியது காரணமாக), அயல் - (போர்காணவந்தவரான) பக்கத்திலுள்ள மண்ணோரும் விண்ணோரும், அறிய - அறியும்படி, 'நீ உடல—; நான் ஆவி-நான உயிராவேன.' என்று—, செப்பினாய் - சொன்னாய்; நின் சொல்-உனவார்த்தைகளோ, திறம்பா - மாறுபடாவாம்; (அங்ஙனமாக), உணர்வு இறந்த - பகுத்தறிவில்லாத, கூற்றினார் - யமனார், அயிர் கிடக்கும் கடல வலயத்து-நுண்மணலகள்பொருந்திய கடலாற் சூழப்பட்ட இப்பூமியில, உயிர் கிடக்க - உயிர் இருக்க, உடலை - சரீரத்தை, விசும்பு ஏற்றினார் - சுவர்க்கத்திற கொண்டு போனாரே

இந்திரனுடன் போர்செய்து வென்று பொன்னுலகத்தைப் பறித்துக்கொண்ட சம்பரனென்னும் அசுரனை, அவனிடம் தோற்று வந்து தனனிடங் குறைகூறிய இந்திரனது வேண்டுகோளால், தசரத சக்கரவர்த்தி பொரச்சென்று கைகேசி சாரத்தியஞ்செய்யவும் ஜடாயு துணைசெய்யவும் பொருது வென்றனன். அக்காலத்துச் சடாயு துணைசெய்ததற்கு மனமுவந்து தசரதன 'நான உடல: நீ எனக்கு உயிர்' என்று அருமை பாராட்டிக் கூறினான். தசரதனோ சத்திய

சந்தன் என்பது பிரசித்தம். இத்தன்மைகளைச் சடாயு மனத்துக் கொண்டு, உடலைவைத்து உயிரைக் கொண்டுபோகும் வழக்கத்திற்கு மாறாக, உயிரென்ற என்னை வைத்திட்டு உடலென்ற உன்னை எடுத்துப்போனான் என்று அந்தக் கூற்றுவக்கடவுளின் புன்மை கருதி, 'உணர்விறந்தகூற்றனார்' என்கிறான். இனி தவறாத நினது சொல்லும் உயிரும் இங்குத் தங்கியிருக்க, அறிவில்லாத யமனார் உடலொன்றையுமே கொண்டு போனானென்றுமாம். ஜடாயு தன்னை உயிரென்றது - தான் தசரதனிடத்து வைத்திருந்த அன்பின் மிகுதியை விளக்குதற்பொருட்டு: தன்னை உயர்த்திக்கூறவேணு மென்ற கருத்தினாலன்று. 'உணர்விறந்த கூற்றினார்' என்ற தொடரை, உயிர்கிடக்க உடலைவிசும் பேற்றினார் என்ற தொடர் சமர்த்தித்துநின்றது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்.

கூற்றினாரென்று பன்மையாற் கூறினதும், இகழ்ச்சி; ஒருவனைச் சொல்லும் பன்மைசொல் உயர்த்துச் சொல்லுஞ் சொல்லன்றோ வெனின்,—'தாம் வந்தார் தொண்டனார்' என்புழிப் போல உயர் சொல்தானே குறிப்புநிலையால் இழிபுவிளக்கிற்றெனபது. உலகத்துக் குத் தயிரும, சம்பரனுக்கு மத்தும் உவமை. சிதறிப்போவதற்கு மத்தெறிதயிர் உவமை கூறப்படுதலை "ஆயர்மத்தெறி தயிரினாயினார்" என்ற சிந்தாமணியிலும் காண்க பி - ம்:—[1]வாளாய். [2]வலயத்தார். [3]தான், யான். [4]திறம்பாய். [5]உடைய. (199)

## 24.—சடாயு தன் வமிசாவளியைக் கூறத்தொடங்குதல்.

எழுவதோ ரிசைபெருக விப்பொழுதே யொப்பரிய வெரியுந் தீயின், [1]விழுவதே நிற்கமட மெல்லியலார் தம்மைப்போ னிலத்தின் மேல்வீழ்ந்து, [2]அழுவதே யானென்னா [3]வறிவுற்றா னென வெழுந்தாங் கவரை நோக்கி, முழுவதே [4]ழுலகுடையான் [5]மைந்தன்மீர் கேண்மி னென முறையிற் [6]சொல்வான்.

(இ - ள்.) 'யான்—, எழுவது - உண்டாவதாகிய, ஓர் இசை - ஒபபற்றகீர்த்தி, பெருக -வளரும்படி, இபபொழுதே—, ஒபபு அரிய - ஒப்பில்லாத, எரியும் தீயின் - எரிகின்ற நெருப்பில், விழுவதுஏ நிற்க - விழுவதுவே யொழிய, - மடம் மெல்லியலார் தம்மை போல் - பேதைமையையுடைய பெண்களைப்போல, நிலத்தின்மேல் வீழ்ந்து - பூமியின்மீது விழுந்து, அழுவதுஏ - அழுவதுதகுமோ?' என்னா - என்று, அறிவுற்றான் என - அறிந்தவன்போல, (அழுதலைத் தவிர்ந்து), எழுந்து - எழுந்திருந்து, ஆங்கு - அப்பொழுது, அவரை நோக்கி - அவ்விராமலட்சுமணர்களைப் பார்த்து, 'முழுவது ஏழ் உலகு உடையான் - ஏழுலகங்கள் முழுவதையும் உரியபொருளாக வுடைய [சக்கரவர்த்தியான] தசரதனது, மைந்தன்மீர் - குமாரர்களே! கேண்மின் - கேளுங்கள்,' என - என்று, முறையின்-முறைமையாக, சொல்வான்—; (எ - று.)

அன்பர் இறந்தகாலத்து மண்ணில்விழுந்து புரண்டு அழுதல் பெண்களுக்கு இயற்கை. அவ்வாறு அழுவதைவிட்டு எரியிற் புகு வதே தனக்கு இப்போது செய்யத்தக்க செயல் என்று கருதிய

சடாயு, தான் இன்னானென்பது அன்னவர்க்கு விளங்குமாறு தன் சரிதையைக் கூறலானா னென்பதாம். தந்தையின் நண்பனென்று சடாயு கூறவே, அவனைப் பூஜித்துப் பிறகு மகிழ்ச்சியுடனே அவன் குலத்தையும் பேரையும் இராமன் வினவ, சடாயு கூறினா னென்று முதனூலி லுள்ளது. பி - ம்:—[1]விழுவதோ. [2]அழுவதோ. [3]அழிவுற்றானென்ன வெழுந்தவரை. [4]உலகுடைய. [5]மைந்தர்காள், மூன்பினீர். [6]சொன்னான். (200)

## 25.—இதுமுதல் ஆறுகவிகள்-ஒரு தொடர்; சடாயு தனது வமிசாவளியைக் கூறியமையைத் தெரிவிக்கும்.

தக்கன்[1]மனை வயிற்றுதித்தா ரைம்பதின்மர் தடங் கொங்கைத் தையலாருள், தொக்கபதின் மூவரையக் காசிபனும் புணர்ந்தனனத் தோகை மாருள், மிக்கவதி திப்பெயராண் [2]முப்பத்து முக்கோடி விண்ணோ ரீந்தாள், மைக்கருங்கட் டிதியென்பா ளதினிரட்டி யசுரர் தமை வயிறு வாய்த்தாள்.

(இ - ள்.) தக்கன் - தக்ஷபிரஜாபதியினது, மனை - மனைவியின், வயிறு-வயிற்றில், உதித்தார் - தோன்றியவர்களான, ஐம்பதின்மர்- ஐம்பதுபேராகிய, தட கொங்கை தையலாருள் - பெரிய தனங்களை யுடைய மகளிர்களுள், தொக்க - ஒருவகுப்பாகச்சேர்ந்த, பதின் மூவரை - பதின்மூன்றுபெண்களை, அ காசிபன்உம்-அந்தக் காசியபப் பிரஜாபதியும், புணர்ந்தனன் - மணந்து கூடினான்; அ தோகை மாருள் - அந்தப் பெண்களுள், மிக்க - சிறந்த, அதிதி பெயராள்- அதிதி யென்னும் பெயரையுடைய பெண், முப்பத்து முக்கோடி விண்ணோர் - முப்பத்துமூன்றுகோடி தேவர்களை, ஈந்தாள் - பெற்றாள்: மை கருங் கண் - மையிட்ட கரிய கண்களையுடைய, திதி என்பாள் - திதி யென்பவள், அதின் இரட்டி அசுரர்தமை - அத்தொகையினும் இரண்டுமடங்காகிய [அறுபத்தாறுகோடி]அசுரர்களை,வயிறு வாய்த் தாள் - பெற்றாள்; (எ-று.)

தக்கன் = தக்ஷன். தையலார் - அழகினையுடையவர்; தையல் - அழகு. காசிபன் - காச்யபன. தோகைமார் - மயில்போலுஞ் சாயலை யுடையார். அசுரனென்பதற்கு - அமிருதம்பெறாதவர்க ளென்றும், தேவர்களுக்குப் பகைவர்க ளென்றும், பகைவருயிரைக் கவர்பவ ரென்றும் பொருள் கொள்ளத்தகும். வயிறுவாய்த்தல்-கருப்பமாதல். முதனூலுக்குஏற்ப ஐம்பதின்மர் என்பது அறுபதின்மர் என்று இருக் கலாம். பி - ம்:—[1]நனி. [2]முக்கோடிசுரருடன்விண்டுவையும், முக்கோடி சுரர்விண்டுவையும். (201)

26. தானவரே முதலோரைத் தனுப்பயந்தாண் மதியென் பாண் [1]பனிதர் தம்மோடு, ஆனவரு டங்களவை யடை வடைவே பயந்தனளாற் சுரபி யென்பாள், தேனுவுடன் [2]சரா சரமற் றுளவாய பிறபயந்தா டெரிக்குங் காலை, மானமுடைக் குரோதவசை கழுதைமரை [3]யொட்டகமும் வயிறு வாய்த் தாள்.

(இ - ள்.) தனு - தனுவென்பவள், தானவர் முதலோரை - தானவர் முதலியவர்களை, பயந்தாள் - பெற்றாள்; மதி என்பாள்-மதியென்பவள், மனிதர் தம்மோடு-மனுஷ்யர்களோடு, ஆன-பொருந்திய, வருடங்கள் அவை - வர்ஷங்களையும், அடைவு அடைவே-முறைமுறையாக, பயந்தனள்-பெற்றாள்; சுரபி என்பாள் சுரபியென்பவள், தேனுவுடன் - பசுக்களுடனே, மற்று உள ஆய பிற சர அசரம்-இன்னுமுள்ளனவாகிய பிற சராசரங்களையும், பயந்தாள் - பெற்றாள்: தெரிக்கும் காலை - தெரியச்சொல்லுமிடத்து, மானம் உடை-மானத்தையுடைய, குரோதவசை - குரோதவசை யென்பவள், கழுதை - கழுதைகளையும், மரை-மான்களையும், ஒட்டகம் உம் - ஒட்டகங்களையும், வயிறுவாய்த்தாள் - பெற்றாள்; (எ - று.)—ஆல் - அசை.

[1]மனிதர் தம்மூடான வருணங்க ளவயவத்தடைவே பயந்தனள் என்ற பாடத்துக்கு—மனிதர் தம்மூடு ஆன வருணங்கள் அவயவத்து அடைவே பயந்தனளென்றது - பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரரென்னும் வருணங்களாகப் பிரிக்கப்பட்ட மனிதர்களை முறையே முகத்தினின்றும், தோள்களினின்றும், தொடைகளினின்றும், பாதங்களினின்றும் பெற்றா ளென்றபடி. வருடங்கள் - வர்ஷங்கட்கு அபிமானிகளான தேவதைகளென்க. மானம் - நாணம்; இது, மற்றைப் பெண்குணங்களுக்கும் உபலக்ஷணம். குரோதவசை-கோபத்துக்கு வசப்பட்டவள். முதனூலில் சில பெயர்கள் மாறுபட்டுள்ளன: மணக்கப்பட்டோர் தொகையும், பெறப்பட்டனவும் மாறுபட்டுள்ளன: வேறு நூல்கொண்டு ஓதியதாதல் வேண்டும். பி - ம்:—[2]கந்தருவமற்றுள்ள. [3]ஒட்டைபிற. (202)

27. மழை [1]புரையுங் குழல்விநதை [2]வானிடிமி னருணனுடன் [3]வயிநதேயன், தழைபுரையுஞ் சிறைக்கூகை பாறுமுதல் பெரும்பறவை தம்மை யீன்றாள், இழைபுரையுந் தாம் பிரையூர்க் குருவிசிவல் காடை[4]முதல் பிறவு மீன்றாள, கழையெனுமக் கொடிபயந்தாள் கொடியுடனே செடிமுதலாக் கண்ட வெல்லாம்.

(இ - ள்.) மழை புரையும்-மேகத்தையொக்கின்ற, குழல்-கூந்தலையுடைய, விநதை-விநதையென்பவள், வான் - மேகத்தே தோனறுகின்ற, இடி - இடியும், மின்-மினனலும், அருணனுடன்-அருணனும் (ஆகிய இவற்றுடன), வயிநதேயன் - கருடனும், தழை புரையும் சிறை-தழைகளையொக்கின்ற சிறகுகளையுடைய, கூகை-கோட்டானும், பாறு - பருந்தும், முதல் - முதலான, பெரும் பறவைதம்மை-பெரிய பறவைகளை, ஈன்றாள் - பெற்றாள்; இழை புரையும் - (மகளிர்க்கு) ஆபரணத்தையொக்கின்ற [மகளிர்க்குட் சிறந்த], தாம்பிரை - தாம்பிரையென்பவள், ஊர்க்குருவி - ஊர்க்குருவிகளையும், சிவல்-கௌதாரிகளையும், காடை - காடைகளையும், முதல்-முதலிய, பிறஉம் - பிறபலவற்றையும், ஈன்றாள் - பெற்றாள்; கழைஎனும் அ கொடி - கழையென்னும் பெயரையுடைய அந்தப் பூங்கொடி போன்றவள், கொடியுடனே செடி முதல்ஆ - கொடியும் செடியும் முதலாக, கண்ட எல்லாம் - காணப்படுகின்றவற்றையெல்லாம், பயந்தாள் - பெற்றாள்; (எ - று.)

வயிநதேயன் = வைநதேயன்; விநதையின் மகனென்று பொருள். கூகை - கூவென்று ஒலிசெய்கின்றதென்று பொருள். தாம்பிரை-வடசொற்றிரிபு. கொடி - உவமவாகுபெயர்; மேற்கவியில் 'மின்' என்பதும் அது. பி - ம்:—[1]புரைபூங். [2]வளி. [3]வயினன்மறறை. [4]பல. தாம்பிரையென்று வருமிடங்களில் 'காம்பிரை' என்று காணப் படுகின்றது. (203)

28. வெருட்டியெழுங் கண[1]பணத்தின் வியாளமெலாங் கத்துருவா மின்னு மீன்ருள், [2]மருட்டிகழு மொருதலைய புயங்க மெலாஞ் சுதையென்னு மாது தந்தாள், அருட்டையெனும் [3]வல்லிதந்தா ளோந்தி[4]யுடும் பணில்கண்முத லாய வெல்லாம், தெருட்டிடுமா திளையீந்தாள் செலசரமா கிய[5]பலவுந் தெரிக்குங் காலை.

(இ - ள்.) தெரிக்கும் காலை - ஆராய்ந்து சொல்லுமிடத்து,— கத்துரு ஆம் - கத்துருவென்பவளாகிய, மின்உம் - மின்னல்போன்றவளும், வெருட்டி எழும் - (பிறரை) அச்சமுறுத்தி யெடுக்கின்ற, கணம் பணத்தின் - கூட்டமாகிய படங்களையுடைய, வியாளம் எலாம் - சர்ப்பங்களை யெல்லாம், ஈன்ருள் - பெற்ருள்; சுதை என்னும் மாது-சுதையென்னும் பெண், மருள் திகழும் - அச்சத்தைச்செய்து விளங்குகின்ற, ஒரு தலைய - ஒருதலையையுடைய, புயங்கம் எலாம் - நாகங்களையெல்லாம், தந்தாள் - பெற்ருள்; அருட்டை எனும்-அரிஷ்டையென்கின்ற, வல்லி - கொடிபோன்ற பெண், ஓந்தி - ஓணானும், உடும்பு - உடும்பும், அணில்கள் - அணிற் பிள்ளைகளும், முதல் ஆய எல்லாம் - முதலானவற்றை யெல்லாம், தந்தாள்-பெற்ருள்; இளை-இளையென்கின்ற, தெருட்டிடும் மாது - (கண்டவர்கள் மனத்தைத்) தெளிவிக்கின்ற பெண், செல சரம் ஆகிய பலஉம் - நீர்வாழ்வனவாகிய பலவற்றையும், ஈந்தாள் - பெற்ருள்; (எ - று.)

கணபணம்-இருதலை, ஐந்தலை, எழுதலை, ஒன்பதுதலை, ஆயிரந் தலை முதலியன. புயங்கம் - புஜங்கம்; வக்கிரமாகச் செல்வது: அன்றிக்கே, கால்களால் நடவாது மார்பினுல் நகர்வது. செலசரம் - ஜலசரம்; ஜலத்திற் சஞ்சரிப்பன: மீன் முதலியன. பி - ம்:— [1]'பணப்பை. [2]மருட்டிகெழு. [3]அவளளித்தாள். [4]உடும்பவைமுதல வன்ன. [5]பிறவும். (204)

29. அதிதிதிதி தனுவருட்டை சுதைகழையே சுரபியணி விநதை யான்ற, மதியிளைகத் துருவுடனே குரோதவசை தாம் பிரையா மடந லார்கள், விதிமுறையே யிவையனைத்தும் பயந்த னர்கள் விநதைசுத னருணன் மென்ரேள், புதுமதிசேர் நுதலரம்பை தனைப்புணர வுதித்தனம்யாம் [1]புவனி மீதே.

(இ - ள்.) அதிதி—, திதி—, தனு—, அருட்டை—, சுதை—, கழை—, சுரபி—, அணி - அழகிய—, விநதை—, ஆன்ற - சிறந்த, மதி—, இளை—, கத்துரு—, உடனே - ஆகிய இவர்களுடனே, குரோதவசை—, தாம்பிரை—, ஆம் - ஆகிய, மடம் நலார்கள் -

அழகியபெண்கள், விதி முறையே - முறைப்படியே, இவை அனைத்தும் - இவை யெல்லாவற்றையும், பயந்தனர்கள் - பெற்றார்கள்; (அவர்களுக்குள்), விநதை சுதன்-விநதையின் மகனாகிய, அருணன்—, மெல் தோள் - மெல்லிய தோள்களையும், புது மதி சேர் நுதல்-இளம் பிறையை யொக்கின்ற நெற்றியையுமுடைய, அரம்பைதனை - ரம்பை யென்னுந் தெய்வப்பெண்ணை, புணர - சேர, யாம்—, புவனிமீதே-இவ்வுலகத்திலே, உதித்தனம்-தோன்றினோம்; (எ - று.)

தன் தமையனாகிய சம்பாதியையும் உளப்படுத்தி, 'யாம்' என்றான். "புண்டரிக மலரதன்மேற் புவனியெல்லாம் படைத்தவனே" என்பது முதலாகப் பெரியாரும் பணித்தலால், புவனி யென்பதும் பூமிக்கு ஒருபெயர். பி - ம்:—[1]புவியின். (205)

30. அருணன்றன் புதல்வனியா னவன்படரு முலகெல்லாம் [1]படர்வே னாழி, [2]இருண்மொய்ம்பு கெடத்துரந்த தயரதற்கின் னுயிர்த் துணைவ னிமையோ ரோடும், வருணங்கள் [3]வகுத்திட்ட காலத்தே வந்துதித்தேன் கழுகின் [4]மன்னன், தருணங்கொள் பேரொளியீர் சம்பாதி [5]பின்னர்வரு சடாயுவென்றான்.

(இ - ள்.) தருணம் கொள் - இளமையைக்கொண்ட [மேன் மேல் வளருந்தன்மையையுடைய], பேர் ஒளியீர் - மிக்க ஒளியினை யுடையவர்களே! யான்—, அருணன் தன் புதல்வன் - அருணனது புத்திரன்; அவன் படரும் - அவன் செல்லுகின்ற, உலகு எல்லாம்-உலகங்களிலெல்லாம், படர்வேன் - செல்லுந்தன்மையை யுடையேன்; ஆழி - ஆஜ்ஞாசக்கரத்தை, இருள் மொய்ம்பு கெட - (பகைவர்களாகிய) இருளின்வலிமை கெடும்படி, துரந்த - (உலக முழுவதுஞ்) செலுத்திய, தயரதற்கு—, இன் உயிர் துணைவன் - இனிய பிராணசிநேகிதன்; இமையோரோடுஉம் - தேவர்களுடனே, வருணங்கள் - மற்றச்சாதிகளையும், வகுத்திட்ட காலத்தே - வகைப் படுத்திய காலத்திலே, வந்து உதித்தேன் - வந்து தோன்றியவன்; கழுகின் மன்னன்-கழுகுகளுக்கு அரசன்; சம்பாதி பின்னர் வரு - சம்பாதியென்பவனது பின்னே தோன்றிய, சடாயு-ஜடாயுவென்னும் பெயருடையேன், என்றான்—; (எ - று.)

ஒளியை மறைப்பது பற்றி, பகைவரை 'இருள்' என்றான். தருணம்-யௌவநம். இனி, யௌவனத்தையும் ஒளியையுமுடையீ ரென்றுமாம். சம்பாதி யென்பதற்கு - நன்றாய்ப்பறத்தலுடையவ னென்றுபொருள். பி - ம்:—[1]அடைவேன். [2]இருணன்கு. [3]விதித் திட்ட. [4]வேந்தன். [5]உடன்பிறந்த. (206)

**31.—சடாயுவின் வரலாற்றைக் கேட்ட ராமலக்ஷ்மணர் மகிழ்தல்.**

ஆண்டவனீ துரைசெய்ய வஞ்சலித்த மலர்க்கையா ரன்பினோடு, மூண்டபெருந் [1]துன்பத்தான் முறைமுறையி னிறைமலர்க்கண் மொய்த்த [2]நீரார், பூண்டபெரும் புகழ்நிறுவித் தம்பொருட்டாற் [3]பொன்னுலகம் புக்க தாதை, மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே யொத்தனரவ்,விலங்கற் றோளார்.

(இ - ள்.) அவன்-அச்சடாயு, ஆண்டு-அப்பொழுது, ஈது - இவ் வார்த்தையை, உரைசெய்ய - சொல்லியவளவில்,— அ விலங்கல் தோளார் - மலைபோலுந் தோள்களையுடைய அவ்விராமலக்ஷ்மணர்கள் அஞ்சலித்த-கூப்பிய, மலர் கையார் - தாமரைமலர்போலுங் கைகளை யுடையவர்களாய், அன்பினோடும்-அன்புடனே, மூண்ட - வளர்ச்சி பெற்ற, பெருந் துன்பத்தால்-மிக்க வருத்தத்தினால், முறை முறையின் - முறைமையாக முறைமையாக [மேன்மேலும்], நிறை-நிறைந்த, மலர் கண் - தாமரைமலர்போலுங் கண்களில், மொய்த்த - மிகுதியாய்த் தோன்றிய, நீரார்-கண்ணீரையுடையவராய்,— பூண்ட-மேற்கொண்ட, பெரும் புகழ்-மிக்ககீர்த்தியை, நிறுவி-(இவ்வுலகத்தில்) நிலைநிறுத்தி, தம்பொருட்டால்-தமக்காக, பொன்உலகம்-தேவலோகத்தை, புக்க - அடைந்த, தாதை - (தமது) தந்தையாகிய தசரதன், மீண்டனன் வந்தான் அவனை-திரும்பி வந்தவனை, கண்டனரே-பார்த்தவர்களையே, ஒத்தனர்-போன்றார்கள் [மிகமகிழ்ந்தார்கள்]; (எ-று.)

சடாயு தன் வரலாற்றைக் கூறித் தயரதற்கு இன்னுயிர்த் துணைவனென்னவும், அதுகேட்ட இராமலட்சுமணர், கைகுவித்து அஞ்சலி செய்தவண்ணம், தந்தை யிறந்தமையைக் கருதியதனால் துயர்க்கண்ணீரும், தாதையே மீண்டு வந்தான்போலுமென்று கருதுமாறு அத்துணை அன்புள்ள சடாயுவைக் காணுமாறு நேர்ந்ததனால் மகிழ்வுக் கண்ணீரும் மாறிமாறித்தோன்ற நின்றன ரென்க. 'அன்பினோடு மூண்ட பெருந்துன்பத்தான் முறைமுறையின் நிறை மலர்க்கண் மொய்த்தநீரார்' என்றதனால், இவ்வாறு கூறியது. இனி, 33 - ஆஞ்செய்யுளிற்போலவே, இங்கும், முறைமுறையின் - தாரை தாரையாக எனக் கூறுவாருமுளர். அன்பினோடு அஞ்சலித்த என்றுங் கூட்டலாம். வாய்மை காத்தற் பொருட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர் களை வனத்திற்கு அனுப்பிப் பின்னர்ப் புத்திர சோகத்தால் இறந்த மைபற்றி, 'புகழ்நிறுவித் தம்பொருட்டாற் பொன்னுலகம் புக்க தாதை' என்றார். பி-ம்:—[1] துன்புற்றார். [2] நீரால். [3] மேல். (207)

## 32.—சடாயு தான் அக்கினிபிரவேசஞ் செய்வதாக அன்புமொழி கூறுதல்.

மருவினிய குணத்தவரை [1] இருசிறகா லுறத்தழுவி [2] மக்காள் நீரே,
உரியகடன் வினையேற்கு முதவுவீ ருடலிரண்டுக் குயிரொன் [3] றானான்,
பிரியவுந்தான் பிரியாதே யினிதிருக்கு முடற் [4] பொறையாம் [5] பீழை
பாராது, எரியதனி னின்றேபுக் கிறவேனே வித்துயர மறவே
னென்றான்.

(இ - ள்.) (பின்னர்ச் சடாயு),—மருவு இனிய - கலப்பதற்கு இனியதான, குணத்தவரை - திருக்கலியாணகுணங்களையுடைய அவ்வீரர்களை, இரு சிறகால் - (தன்னுடைய) இரண்டு சிறகு களால், உற தழுவி-நன்றாய்த் தழுவிக்கொண்டு, 'மக்காள் - பிள்ளை களே! நீர்ஏ - நீங்களே, வினையேற்குஉம் - தீவினையையுடைய எனக் கும், உரிய கடன் - (இறந்தபின்பு) செய்தற்குஉரிய கடமைகளை, உதவுவீர் - செய்யுங்கள்; உடல் இரண்டுக்கு-இரண்டு உடம்புக்கு, உயிர் ஒன்று ஆனான்-ஒருயிராகிய தசரதன், பிரியஉம்-பிரிந்துபோக

வும், தான் பிரியாதுஎ-தான் நீங்காமல், இனிது இருக்கும்-இனிமை யாக இருக்கின்ற, உடல் பொறைஆம்-தேகபாரமாகிய, பீழை - துன் பந் தருவதனை, பாராது - பாராமலே, எரிஅதனின் - அக்கினியில், இன்றுஎ-இன்றுதானே, புக்கு—, இறவேன்எல்-இறவாமற் போவே னால், இ துயரம்-இத்துன்பத்தை, மறவேன் - மறக்க மாட்டேன்,' என்றான்—; (எ - று.)

நண்பனிறந்த துன்பம் இலதாம்படி யானும் எரியில் வீழ்ந்து இறப்பேனென்பதாம். நண்புரிமையை நன்குசெய்யாமைபற்றி, உடலை 'பொறை' என்றான். இனி, தசரதனது நண்பர்களுக்கு அவர்களுடம்பு அவன்நண்பினால், சுமையாகத் தோன்றாமல் இன்பம் தந்திருந்தது: தசரதன் மறையவே அன்னானுடைய நண்பும் மறைந்திட்டது: இந்த நிலைமையில் உடல் சுமையாகித் துன்பந்தருவதாயிற்று என்பது இங்குக் குறிப்பாக விளங்கும். இரட்டை மக்களை இரண்டுகையால் தழுவுவதுபோல சடாயு அவ்விராமலட்சுமணரை இருசிறகால் தழுவினனென்க. சடாயு தன் வரலாற்றைக் கூறியபின், 'நீ விரும் புவாயாயின் அரக்கர்கள் திரியும் இவ்வனத்தில் உங்கட்குப் பயன் படுவேன்: நீயும் இலட்சுமணனும் வெளிச்செல்லும்போது சீதைக்குப் பாதுகாவலாக இருப்பேன்' என்று சொல்ல, தந்தைக்கு நண்ப னென்ற காரணத்தால் அவனை நமஸ்கரித்துச் சீதைக்குப் பாதுகாவ லாக இருக்கும்படி கேட்டுக் கொண்டு அந்தச்சடாயுவோடு அன்னார் பஞ்சவடி சேர்ந்தனரென்று முதனூல் கூறும். பீழை - பீடாஎன்னும் வடமொழியின் சிதைவு. ஒரு சாரார், இத்துயரம் அறவேன் என்று பிரித்து—இத்துயரம் அறப்பெறேன் என்று பொருள் கூறலாமென் கின்றனர்; 'அறேன்' என்று வந்ததன்றி 'அறவேன்' என எதிர் மறைத்தன்மையொருமையில் பிரயோகம் உண்டா என்று ஆராய வேண்டும். பி - ம்:—[1]வரு. [2]மக்கள். [3]அன்னான். [4]பொறையால், பொறையார். [5]பிழைப்பாராரோ. (208)

வேறு.

33.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராமலட்சுமணர் கண்ணீர் பெருக நின்று சடாயுவை இறவாதிருக்குமாறு வேண்டுதலைத் தெரிவிக்கும்.

என்று ரைத்த வெருவை யரசனைத்
துன்று தாரவர் நோக்கித் தொழுதுகண்
ஒன்று முத்த முறை[1]முறை யாயுக
நின்று மற்றின்ன நீர்மை நிகழ்த்தினர்.

(இ - ள்.) என்று உரைத்த - என்று சொன்ன, எருவை அரசனை - கழுகுக்குஅரசனாகிய சடாயுவை, நோக்கி—, துன்று தாரவர் - நெருங்கிய மாலையையுடைய அவ்வீரர்கள், தொழுது - வணங்கி,—கண் - கண்களில், ஒன்றும் - பொருந்திய, முத்தம் - முத்துப்போன்ற நீர், முறை முறைஆய் உக - மேன்மேலுஞ் சிந்தும்படி, நின்று—,—இன்ன - இவ்வார்த்தைகளை, நீர்மை - அன்

போடு, நிகழ்த்தினர் - சொன்னார்கள்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

யான் எரிபுகுந்து இறப்பேனென்ற எருவையரசனுரையைக் கேட்கவே, கண்களில் நீர்பெருக, அவ்வரசகுமரர்கள் பின்வருமாறு கூறலானார்களென்பதாம். முத்தம் - உவமவாகுபெயர். மற்று - அசை. [1]உறையாயுக என்னும் பாடத்துக்கு-மழைத்தாரை போலப் பொழிய வென்க. இச்செய்யுள் அச்சிட்ட பிரதிகளிலிருப்பினும் பலஏட்டுப்பிரதிகளி லில்லை.

இதுமுதற் பதினாறுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடிநான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (209)

34. உய்விடத் துதவற் குரியா னுந்தன்
மெய்[1]வி டக்கரு தாதுவிண் ணேறினன்
இவ்வி டத்தினி லெம்பெரு மாஅனெமைக்
கைவி டிற்பினை யார்களை கண்ணுளார்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உய்வுஇடத்து - பிழைக்கவேண்டும்பொழுது [துன்பம் நேருங்காலத்தில்], உதவற்கு உரியான்உம் - (எங்களைக்) காப்பாற்றித் துணைசெய்தற்குஉரிய சக்கரவர்த்தியும், தன் மெய் விட கருதாது - தனக்குஉரிய சத்தியத்தைக் கைவிட எண்ணாமல், விண் ஏறினன - தேவலோகமடைந்தான்; இ இடத்தினில் - இப்பொழுது, எம்பெருமாஅன் - எமதுதலைவனே! எமை - எங்களை, கைவிடின் (நீயும்) கைவிட்டுப்போனால், பினை - பின்பு, களைகண் உளார் - (எங்களுக்குப்) பற்றுக்கோடாக உள்ளவர், யார் - (வேறு) யாவர்? (எ-று.)

எரியதனில் இன்றே புக்கிறப்பேனென்று சடாயு கூறவே, இராமலட்சுமணர் சடாயுவைநோக்கி, 'உய்விடத்துதவும் எந்தை மெய்யைவிடக் கருதாது விண்ணேறினன்: தந்தையின் தானத்திலுள்ள பெருமானே! நீயும் எம்மைக் கைவிட்டுச்சென்றால் வேறு களைகணுவார் இல்லையே: அதனால், நீ உயிர்நீங்காது எமக்குக் களைகணுவாய்' என வேண்டினரென்பதாம். எம்பெருமாஅன், அளபெடை - விளியுருபு. பி - ம்:—[1]விடற்கரிதாகி. (210)

35. [1]தாயு நீங்கருந் [2]தந்தையுந் [3]தண்ணகர்
வாயி னீங்கி வனம்புகுந் தெய்திய
[4]நோயு நீங்கிய நுண்ணிய வெங்களை
நீயு நீங்குதி யோநெறி நீங்கலாய்.

(இ - ள்.) நெறி நீங்கலாய் - அறநெறியினின்றுந் தவறாதவனே! (நாங்கள்), நீங்க அரு-பிரிதற்கு அரிய, தாய்உம்-தாயையும், தந்தைஉம் - தந்தையையும், நீங்கி—பிரிந்து,—தண் நகர் வாயின் - குளிர்ந்த நகரத்தினின்றும், வனம் புகுந்து - காட்டைச் சேர்ந்ததனால், எய்திய - அடைந்த, நோய்உம் - வருத்தத்தையும், நீங்கிய -

(உன்னைக்கண்டதனால்) போக்கிய, நுண்ணிய - எளியரான, எங்களை—, நீஉம் - (எம்துயர் நீங்கக்காரணமான) நீயும், நீங்குதி - விட்டுப் பிரியக்கடவையோ? (எ - று.)

தாய்தந்தையரை விட்டுப்பிரிந்து வனமெய்தியதனாற் பெருவருத்தம் எங்கட்குஉளதாக, உன்னைக் கண்டதனால் அவ்வருத்தம் நீங்கினேம்: அப்படிப்பட்ட நீ எம்மைவிட்டுப்பிரிந்து செல்லல் தக்கதன்றென்றனரென்க. நீங்கரு - மத்திமதீபம். நீங்குதியோ-நீங்குவது தகுமோ வென்றவாறு. பி - ம்:—[1] தாயின். [2] தந்தையின். [3] தன். [4] நோயினீங்கினெனுன்னினெனன், நோயு நீங்கியநுன்னிய. (211)

## 36.—'நீங்கள் உமதுநகரஞ் சேர்ந்தபின்பு இறப்பேன்' என்று சடாயு கூறுதல்.

[1] என்று [2] சொல்ல [3] விருந்தழி நெஞ்சினன்
நின்ற வீரரை நோக்கி நினைந்தவன்
அன்ற தென்னி னயோத்தியி [4] னையன்மீர்
சென்ற பின்னவற் சேர்குவென் யானென்றான்.

(இ - ள்.) என்றுசொல்ல - என்று (ராமலட்சுமணர்) சொல்ல, இருந்து அழி நெஞ்சினன் - அழிந்தவண்ணமிருக்கின்ற மனத்தையுடையவனாகி,—நின்ற—, வீரரை - ராமலக்ஷ்மணரை, நோக்கி - பார்த்து,—அவன்-அந்தச்சடாயு,—நினைந்து-(அவர்களது நிலையை) ஆலோசித்து, 'ஐயன்மீர் - பிள்ளைகளே! அது அன்று என்னின் - (இப்பொழுதே யான் இறக்கின்ற) அச்செயல் (உங்களுக்கு) உடன்பாடன்றாகுமாயின், அயோத்தியின் சென்றபின் - (நீங்கள்) அயோத்தியாபுரியிற்போய்ச் சேர்ந்தபின்பு, யான்—, அவன் சேர்குவென் - அந்தத்தசரதசக்கரவர்த்தியை அடைவேன் [இறப்பேன்]', என்றான்—;(எ-று.)

யான் இப்போதேயிறப்பது நுங்கட்கு உடன்பாடு அன்றாயின் நீங்கள் வனவாசஞ்செய்து அயோத்திசெல்லுமளவும் உங்கட்குக் களைகணாயிருந்து பின்னர் அந்தத்தயரதன் புக்கஉலகிற் புகுவேனென்றனன் சடாயுஎன்க. அயோத்தி - அயோத்யா என்னும்வடசொல்லின் திரிபு: சண்டையிடுதற்குக் கூடாததென்பது பொருள்: அகழி, மதில், ஆயுதம், சேனை முதலியவற்றால் தக்க காவலுடையதென்பது கருத்து: இதனால், அந் நகரத்தையாண்ட சக்கரவர்த்திகளது வீரத்தன்மை தொனிக்கின்றது. பி-ம் :—[1] என்ற. [2] சொல்லர். [3] இறந்தழிநெஞ்சினர். [4] ஐயநீர். (212)

## 37.—இதுவும் அடுத்தகவியும்-சடாயு இராமலட்சுமணர்களை வனத்திற்கு வந்த காரணம் வினவுதலைத் தெரிவிக்கும்.

வேந்தன் விண்ணடைந் தானெனின் வீரர்நீர்
ஏந்து ஞால மினிதளி யாதிவண்
போந்த தென்னை புகுந்தவென் புந்திபோய்க்
காந்து கின்றது கட்டுரை யீரென்றான்.

(இ - ள்.) 'வேந்தன்-சக்கரவர்த்தி, விண் அடைந்தான் எனின் - சுவர்க்கத்தை யடைந்தானுயின், வீரர் நீர் - வீரர்களாகிய நீங்கள், ஏந்து ஞாலம் - தாங்குதற்கு [ஆளுதற்கு] உரிய இராச்சியத்தை, இனிது அளியாது - இனிமையாய்க் காவல்செய்யாமல், இவண்-இவ் விடத்தில் [வனத்தில்], போந்தது - வந்தது, என்னே - என்னகார ணத்தால்? என் புந்தி - எனது அறிவு, போய் காந்துகின்றது - (நீங் கள் இவ்வாறு வனத்தில் வந்து வருந்துவதனுல்) மிகவும் வெதும்பு கின்றது; (ஆகையால்), புகுந்த-நடந்த வரலாறுகளை, கட்டுரையீர்- உறுதியாய்ச் சொல்லுங்கள்,' என்றுன்—; (எ - று.) (213)

38. தேவர் தானவர் திண்டிற ஞகர்வேறு
ஏவ ராக விடரிழைத் தாரெனின்
பூவ ராவு பொலங்[1]கறை வேலினீர்
[2]சாவ ராக்கித் தருவெ னரசென்றுன்.

(இ - ள்.) 'பூ அராவு - (இலைவடிவமாக இருக்குமாறு) கூர்மை யாக அராவிச் செய்யப்பட்ட, பொலம் - அழகிய, கறை-உதிரக் கறை யையுடைய, வேலினீர் - வேலையுடையவர்களே!—திண் திறல் - மிக்க வலிமையையுடைய, தேவர் (ஆக) - தேவர்களாயினும், தானவர் (ஆக)-அசுரர்களாயினும், நாகர் (ஆக) - பாதாளலோக வாசிகளாயி னும், வேறு ஏவர் ஆக-வேறு எவராயினும், இடர் இழைத்தார் எனின்-(உங்களுக்குத்) துன்பத்தைச் செய்திருப்பாராறுல், சாவர் ஆக்கி-(அவர்களை) இறந்தவராகச்செய்து [கொன்று], அரசு-இராச் சியத்தை, தருவென் - (உங்களுக்குக்) கொடுப்பேன்,' என்றுன்—;

நான் நும்மை விஞவுவது நிகழ்ந்த நிகழ்ச்சியை அறிந்து கொள் ளற்பொருட்டாகவே யன்று: நுமக்கு எவராலேனும் இடருண்டாகி அதனுல் நீவிர் கானகஞ் சேர்ந்தீரென்றுல் அப்போது நுமக்கு இட ரிழைத்தவரை யொழித்து நுமக்கு அரசைத் தருவதறகாகவுமென் கின்றுன், சடாயுவென்க. வேறேவ ரென்றது - நிலவுலகத்தவரை. விகற்பப்பொருளதாகிய ஆகவென்பது, பிறவிடத்துஞ் சென்று இயைந்தது. பி - ம்:—[1]கதிர். [2]சாவது. (214)

## 39.—இராமன் குறிப்பிக்க, இலக்குமணன் வரலாறு கூறுதல்.

தாதை கூறலுந் தம்பியை நோக்கினுன்
சீதை கேள்வ னவனுந்தன் சிற்றவை
மாத ரால்வந்த செய்கை வரம்பிலா
ஓத வேலை [1]யொழிவின் றுணர்த்தினுன்.

(இ - ள்.) தாதை-சடாயு, கூறலும் - (இவ்வாறு) விஞவியவள வில்,—சீதை கேள்வன்-சீதாபதியாகிய ஸ்ரீராமன், தம்பியை-இலக்கு மணனை, நோக்கினுன்-(குறிப்பாய்ப்) பார்த்தருளினுன்: அவன் உம் - அவ்விலக்குமணனும், தன் சிற்றவை மாதரால்-தன் சிறியதாயாகிய கைகேயியால், வந்த-உண்டான, செய்கை-காரியமாகிய, வரம்பு இலா- அளவில்லாத, ஓதம் வேலை-பெரியகடலை, ஒழிவு இன்று - சிறிதும் தவிர்தலில்லாமல், உணர்த்தினுன்-தெரியச் சொன்னுன்;—(எ-று.)

"நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால், கண்ணல்ல தில்லைபிற" என்றவாறு குறிப்பறிதற்கு நுண்கருவி நோக்கமா தலின், ஸ்ரீராமன் நடந்தவிருத்தாந்தத்தை ஜடாயுவுக்கு முழுவதும் கூறும்படி நோக்காற்குறிப்பித்தான்: குறிப்பித்ததனை குறிப்பறி தல்ல் வல்லவனாகிய இலட்சுமணன் அறிந்து அவ்வாறே கூறினா னென்க. தசரதற்குப் பிராணசிநேகிதனான சடாயு, இராமபிரானால் தந்தைமுறையாகப் பாராட்டப்படுவதனால், 'தாதை கூறலும்' என்றது. இராமனால் சடாயு தந்தை முறையாகப் பாராட்டப்படு தலையும், சடாயு இராமலட்சுமணரை மைந்தர் முறையாகப் பாராட் டிப்பேசுதலையும் கீழ் 31, 32-ஆம் கவிகளில் விளங்கக் காணலாம். அவை = அவ்வை: ஔவை: தாய். சிறு அவை - சிறிய தாய். பி - ம்:—[1]ஒழிவின். (215)

40.—இரண்டுகவிகள் - ஒரு தொடர்: சடாயு இராமனைப் புகழ்ந்து கொண்டாடுதலைத் தெரிவிக்கும்.

உந்தை யுண்மைய னாக்கியுன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி
வந்த தம்பிக் குதவிய வள்ளலே
எந்தை வல்ல தியாவர் வல்லாரென.

(இ - ள்.) (பின்னர்ச் சடாயு ஸ்ரீராமனைநோக்கி), 'உந்தை - உன் தந்தையை, உண்மையன் ஆக்கி - சத்தியமுடையவனாகச் செய்து, உன் சிற்றவை - உன் சிறியதாய், தந்த - சொன்ன, சொல்லை - வார்த்தையை, தலை கொண்டு - தலைமேற்கொண்டு, (அங்ஙனமே), தாரணி-பூமியை, வந்த - உடன்பிறந்த, தம்பிக்கு-பரத னுக்கு, உதவிய-கொடுத்த, வள்ளலே-ஈகைத்தன்மையுடையவனே! எந்தை-என்னப்பனாகிய நீ, வல்லது-வல்லவனாகிச்செய்த காரியத்தை, வல்லார்-செய்யவல்லவர், யாவர் - வேறு எவர்?' என - என்று,— (எ - று.)—'புல்லி மோந்து' என அடுத்த கவியோடு தொடரும்.

தந்தையை உண்மை நோன்பினனாகச் செய்ய, கிடைத்த அரசை யும் தம்பிக்கு ஈந்த வள்ளன்மையைக் கருதி 'வள்ளலே! உன்போன்று செய்பவர் யாவர்?' என்று அவ்விராமனைக் கொண்டாடுகின்றா னென்க. தாரணி-தரணி யென்பதன் விகாரம். எந்தை - முன்னிலைப் படர்க்கை. இனி, எந்தையென்பதனை அண்மைவிளியாக்கொண்டு, நீ வல்லது யாவர் வல்லா ரெனவுமாம். (216)

41. அல்லித் தாமரைக் கண்ணனை யன்புறப்
புல்லி மோந்து பொழிந்தகண் ணீரினன்
வல்லை மைந்தவம் மன்னையு மென்னையும்
எல்லை யில்புக ழெய்துவித் தாயென்றான்.

(இ - ள்.) அல்லி - இதழ்களையுடைய, தாமரை - செந்தாமரை மலர்போன்ற, கண்ணனை - கண்களையுடைய ஸ்ரீராமனை, அன்பு உற - மிக்க அன்பினால், புல்லி - தழுவிக்கொண்டு, மோந்து - உச்சி மோந்து, பொழிந்த கண் ணீரினன் - சொரிந்த ஆநந்தக்கண்ணீரை

யுடையவனாய்,—'வல்லை - வல்லவனாகிய, மைந்த - குமாரனே! (நீ) - அ மன்னனை உம் - அச்சக்கரவர்த்தியையும், என்னையும்—, எல்லை இல் புகழ் - அளவில்லாத கீர்த்தியை, எய்துவித்தாய் - அடைச்செய் தாய்,' என்றான்—; (எ - று.)

இராமபிரானுடையசெயலைப் பாராட்டிய மகிழ்ச்சி மீக்கூரவே, சடாயு, அன்புறப்புல்லி மோந்து கண்ணீர்பெருக்கி நேரேதந்தை யாகியமன்னனையும் மன்னவன்நண்பனாகி உனக்குத் தந்தைமுறையா யுள்ள என்னையும் எல்லையில் புகழெய்துவித்தாயென்று கொண்டாடு கிறான். தாமரை கண்களுக்கும், அல்லி அக்கண்களின் இமைக்கும் உவமை. வல்லை - விரைவிலே யென்றுமாம். (217)

## 42. சடாயு சீதையை யாவளென வினவுதல்.

பின்ன ரும்மப் பெரியவன் பெய்வளை
அன்ன மன்ன [1]வணங்கினை நோக்கினன்
மன்னர் மன்னவன் மைந்தவிவ் வாணுதல்
இன்ன ளென்ன வியம்புதி யாலென்றான்.

(இ - ள்.) அ பெரியவன் - அச்சடாயு, பின்னர்உம் - பின்பும், பெய் வளை - அணிந்த வளையல்களையுடைய, அன்னம் அன்ன - அன்னப்பேடு போன்ற, அணங்கினை - சீதையை, நோக்கினன் - பார்த்தவனாய், 'மன்னர் மன்னவன் மைந்த - சக்கரவர்த்தி திருமகனே! இ வாள் நுதல்-இப்பெண், இன்னள் என்ன - இன்னா ளென்று, இயம்புதி-சொல்வாய்,' என்றான்—; (எ - று.)

வாணுதல் - ஒளியினையுடைய நெற்றியுடையவள்: அன்மொழித் தொகை. பி - ம்:—[1]நடையவணங்கினை. (218)

## 43.—இளையபெருமாள் தம்வரலாறுகளை முற்றிலுங் கூறுதல்.

அல்[1]லி றுத்தன தாடகை யாதியா
வில்[2]லி றுத்த திடையென மேலைநாள்
புல்[3]லி றுத்த தியாவும் புகன்றுதன்
சொல்லி றுத்தனன் றோன்றல்பின் றோன்றினான்.

(இ - ள்.) தோன்றல் பின் தோன்றினான் - ஸ்ரீராமபிரானுக்குப் பின்னே திருவவதரித்த இளையபெருமாள்,—மேலை நாள் - முன் நாளில், அல் இறுத்து அன-இருள் ஒருவடிவமெடுத்துவந்தாற் போன்ற, தாடகை-தாடகையை(க் கொன்றது), ஆதிஆ - முதலாக, வில் இறுத்தது - (ஜநகராஜன் கொடுத்த) சிவன்வில்லை முறித்தது, இடை என - நடுவாக, புல் இறுத்தது - வனத்தை அடைந்தது, (ஈறாக), யாஉம்-எல்லாவற்றையும், புகன்று - சொல்லி, தன் சொல் - தன்வார்த்தையை, இறுத்தனன் - முடித்தான்; (எ - று.)

'கொன்றது' எனவும், 'ஈறாக' எனவும் வருவிக்க, இனி, இறுத்த தென்பதனைத் தாடகை யென்பதனோடுங் கூட்டி, தாடகையை அழித் தது முதலாக என்றுமாம். தாடகை - மலைகளில் திரிபவள். இனி, புல்லிறுத்ததென்பதற்கு, சக்கரவர்த்திக்குச் சரமகைங்கரியஞ்செய்த

தென்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1] இறுத்தவன். [2] இறுத்தங்கரிவையை. [3] இறுத்தன. (219)

### 44.—சடாயு 'நீவிர் யான் காக்க இங்கே வைகுமின்' என்றல்.

கேட்[1]டு வந்த [2]கிளரொளி மௌலியான்
தோட்ட லங்கலி னீர்துறந் தீர்வள
நாட்டி [3]னீவிரு [4]நன்னுத ருனுமிக்
காட்டில் வைகுதிர் காக்குவென் யானென்ருன்.

(இ - ள்.) கேட்டு - அதுகேட்டு, உவந்த - மகிழ்ந்தவனுன, கிளர் ஒளி மௌலியான் - ஒளிவிளங்குகின்ற முடியையுடைய அச்சடாயு,— 'தோடு அலங்கலினீர் - பூவிதழையுடைய மாலையை யுடையவர்களே! வளம் நாட்டின் - வளப்பத்தையுடைய நாட்டினின்றும், துறந்தீர் - விட்டு நீங்கிவந்தவர்களாகிய, நீவிர்உம் - நீங்களும், நல்நுதல்தான் உம் - அழகிய நெற்றியையுடைய சீதையும், இ காட்டில்—, வைகுதிர்-தங்கியிருங்கள்; யான்—, காக்குவென் - காப்பேன்,' என்ருன்—;

யான் பாதுகாக்க நீவிர் இந்நங்கையோடு இங்கு உறையலாமென்றனன் சடாயுஎன்க. பி - ம்:—[1]உவந்தனன். [2]கேழ் கிளர். [3]நீரினி, நீவிரிந். [4]நன்னுதலோடும், நண்ணுதல்காறும். (220)

### 45.—இராமனது மறுமொழி.

இறைவ வெண்ணி யகத்திய னீந்[1]துளது
அறையு நன்மணி யாற்றி னகன்கரைத்
[2]துறையி னுண்டொரு சூழலச் சூழல்புக்கு
உறைது மென்றன னுள்ளத் துறைகுவான்.

(இ - ள்.) உள்ளத்து உறைகுவான்-(யாவரது) உள்ளக் கமலத்திலும் உறைகின்ற ஸ்ரீராமன்,—(சடாயுவை நோக்கி),—'இறைவ - தலைவனே! அகத்தியன் - அகத்தியமுனிவன், எண்ணி - (வாசஞ்செய்தற்குத் தக்க இடமென்று) ஆலோசித்து, ஈந்து உளது - (வசிக்கும்படி) சொல்லியருளியதாகிய,— அறையும்-ஒலிக்கின்ற, நல் - சிறந்த, மணி-அழகிய, யாற்றின் - (கோதாவரி) நதியினது, அகல் - பரந்த, கரை துறையின்-கரையினிடத்தில், ஒரு சூழல் - ஓர் இடம், உண்டு—; அ சூழல்-அவ்விடத்தில், புக்கு உறைதும் - போய் வசிப்போம்,' என்றனன்—; (எ-று.)

'இக் காட்டில் வைகுதிர்' என்று சடாயு கூறவே, அகத்திய முனிவர் உறைவதற்கு ஏற்ற இடமென்று கோதாவரிக் கரையில் பஞ்சவடியென்ற இடத்தைக் குறித்திருத்தலால் அங்கு உறைய விரும்புகின்ருேமென்று, இராமன், தன் கருத்தைத் தெரிவித்தனனென்க. கழுகுகளுக்கு அரசனுதலாலும், தமக்குத் தந்தைமுறையாதலாலும், ஸ்ரீராமன், சடாயுவை 'இறைவ' என்ருன். அறையும் நன்மணி யாறு - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நல்லமுத்துப் போலத் தெளிந்த நீருள்ள ஆறு என்றுமாம். பி - ம் :—[1]உள. [2]துறையுள். (221)

## 46.—சடாயு அதற்கு உடன்பட்டு அவ்விடத்தை அவர்கட்குக் காட்டுதல்.

பெரிது நன்றப் பெருந்துறை வைகிநீர்
[1]புரிதிர் மாதவம் போதுமின் யானது
தெரிவு றுத்துவெ [2]னென்றவர் [3]திண்சிறை
விரியு நீழலின் [4]மேவவிண் சென்றனன்.

(இ - ள்.) (பின்னர்ச் சடாயு),—'அ பெருந் துறை - அந்தப் பெருமை பொருந்திய இடம், பெரிதுஉம் நன்று - மிகவும் நல்லது: நீர்-நீங்கள், வைகி- (அங்குத்தானே) தங்கி, மா தவம் புரிதிர்-சிறந்த தவத்தைச் செய்யுங்கள்; போதுமின்-வாருங்கள்; யான்—, அது-அவ்விடத்தை, தெரிவுறுத்துவென் - (உங்களுக்குக்) காண்பிப்பேன்,' என்று - என்றுசொல்லி,—அவர்-அவ்விராம லக்ஷமணர்கள், திண் சிறை - (தனது) வலிய சிறகுகளின், விரியும் நீழலில்-பரந்த நிழலில், மேவ-பொருந்தி வரும்படி, விண்-ஆகாயமார்க்கத்தே, சென்றனன் - பறந்துபோனான்; (எ-று.)

அவர்களுக்கு நிழலுண்டாகும்படி ஆகாயத்திற் பறந்துபோயினானென்பதாம். பி-ம்:—[1]புரியும். [2]என்றனன். [3]தன். [4]செல்ல. ()

## 47.—சடாயு காட்ட, அவர்கள் பஞ்சவடி சேர்தல்.

ஆய சூழ லறிய வுணர்த்தியத்
தூய [1]சிந்தைய தோமில் [2]குணத்தினன்
போய பின்னைப் பொருசிலை வீரரும்
ஏய சோலை யினிதுசென் றெய்தினர்.

(இ - ள்.) தூய சிந்தைய-பரிசுத்தமான மனத்தையுடைய, அ தோம் இல் குணத்தினன்-குற்றமற்ற குணங்களையுடைய அச்சடாயு, ஆய சூழல்-அப்பஞ்சவடியை, அறிய உணர்த்தி-தெரியும்படி காட்டி, போய பின்னை-போனபின்பு,—பொரு சிலை வீரர்உம் போர் செய்கின்ற வில்லையுடைய அவ்வீரர்களும், ஏய சோலை - பொருந்திய அச்சோலையில், இனிது-இனிமையாக, சென்று எய்தினர் - போய்ச் சேர்ந்தார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]சிந்தையத். [2]குணத்தவன். (223)

## 48.—சடாயு அவர்களைப் பாதுகாத்துவருதல்.

வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை
[1]ஏற்பச் சிந்தனை யிட்டவ் வரக்கர்தஞ்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் சேக்கையிற்
பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்.

(இ - ள்.) அ அரக்கர் தம்-அங்குள்ள ராக்ஷசர்களது, சீர்ப்பை - சிறப்பை, சிக்கு அற - ஐயமில்லாமல், தேறினன் - நன்றாயறிந்த அச்சடாயு,—ஏற்ப-தக்கபடியாக, சிந்தனை இட்டு-ஆலோசித்து,—வார் - கச்சணிந்த, பொன் கொங்கை-அழகிய தனங்களையுடைய, மருகியை - (தம்) மருமகளாகிய சீதையையும், மக்களை - புத்திரர்களாகிய ராம

லக்ஷ்மணர்களையும்,—சேக்கையில்-கூட்டிலுள்ள, பார்ப்பை-(தம்) குஞ்சுகளை, பார்க்கும் - பாதுகாத்துவருகின்ற, பறவையின் - பறவைபோல, பார்க்கின்றான்-பாதுகாத்துவருகின்றவனானான்; (எ-று.)

பொற்கொங்கை - பொன்போலுஞ் சுணங்குபரந்த கொங்கை யென்றுமாம். சீர்ப்பு-மாயம் முதலியன. பார்ப்பு - இளமைப்பெயர்; "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார். பி-ம்:—[1]ஏர்ப்ப. (224)

சடாயுகாண் படலம் முற்றிற்று.

---

# 5 - ஆவது சூர்ப்பணகைப்படலம்.

இத்தொடர்மொழி - சூர்ப்பணகையினது செய்தியை யுணர்த்தும் பாகமென இரண்டனுருபும் பயனுந்தொக்க தொகையாக விரியும். சூர்ப்பணகை யென்ற சொல்-இலக்கணையால், அவளதுசெய்தியை உணர்த்தியதென்க. இனி, சூர்ப்பணகையினது சம்பந்தமான படல மென்று ஆறும் வேற்றுமைத்தொகையாக விரித்து, சூர்ப்பணகையைப்பற்றிக் கூறுகிற பாக மென்று கருத்துஉரைப்பினு மாம். சூர்ப்பணகை=சூர்ப்பணகா: "ஆவீறு ஐயும்": [நன் - பத - 20]. இது, சூர்ப்பம் நகம் எனப் பிரிந்து, முறம்போன்ற (வடிவமுடைய) நக முள்ளவ ளென்று காரணப்பொருள்படும். அன்றி, சூர்ப்பம் - இரத்தம்நிறைந்த பாத்திரம்; அதனால், நகா - (யாகம் முதலிய நற்கருமங்களைக்) கெடுப்பவள் என்றுமாம். இரத்தத்தைப் பாத்திரங்களிற்கொண்டுவந்து மேற்சொரிந்து அதனால் வேள்வியைத் தூய்மையற்றதாக்கி அழிப்பவ ளென்று கருத்து. இது, அவளுக்கு வடிவம்பற்றி வைக்கப்பட்ட காரணக்குறியாகிய இயற்பெயர். இது, பெயராதலால், வடமொழிவிதிப்படி, சூர்ப்பணகா என நிலைமொழியில் ரகாரம்வர வருமொழியில் நகாரம் ணகாரமாயிற்று; ராமாயணம், நாராயணன் என்பவற்றிற்போல: அங்ஙனமாகாமல் சூர்ப்பநகா என்று நிற்கும்போது பெயராகாது தன்மை குறிக்கிற மாத்திரமாம். இது, சிறுபான்மை 'சூர்ப்பநகி' என்றும் வழங்கும்: அப்பொழுது, ஈயீறு இகரமான தென்க; அதுவும், பெயராகாது காரணமாத்திரமாய்நிற்பதென்னவேண்டும்: 'சூர்ப்பணகீ' என்பது, வடநூலிலக்கணவிதிப்படி வழுவாம். ஆயினும், சூர்ப்பநகை யென்ற வழக்கும் சூர்ப்பணகீ யென்ற வழக்கும் தமிழ்மொழியில் வழங்கிவருகின்றன என்று சிலர் கொள்வர். சில ஏட்டுப் பிரதிகளில் முதலொன்பதுபாடல்கள் பஞ்சவடிப்படலம் என்றும், அதற்குமேல் சூர்ப்பநகி மூக்கரிபடலம் அல்லது சூர்ப்பணகைப்படலம் என்றும் உள்ளன.

சூர்ப்பணகை - இராவணனுடைய தங்கை; பிரமபுத்திரனாகிய புலஸ்தியமுனிவனுடைய குமாரனான விச்ரவசினது இரண்டாம் மனைவியாகிய கேகசியின் வயிற்றில் இராவணகும்பகர்ணர்களுக்குப் பின் விபீஷணனுக்குமுன் பிறந்தவள். இவளை, இராவணன், காலகையென்பவளுடைய மக்களாகிய காலகேயருளொருவனான

வித்யுச்சிகுவனென்பானுக்கு மணஞ்செய்து வைத்திருந்தான்; பின்பு இராவணன் திக்குவிசயஞ்செய்துவருகிற பொழுது அசும நகரத்திற் பிரவேசித்து அங்கிருந்த காலகேயரைப் போர்செய்து அழிக்கையில், வித்யுச்சிகுவனும் இராவணனாற் கொல்லப்பட்டான்: கணவனை யிழந்த சூர்ப்பணகை இராவணன் காலில்விழுந்து மிகப் பலவாறு முறையிட, அவன் அவளை வெகுசமாதானங் கூறிக் கோபந்தணித்து, தண்டகாரணியத்தில் ஜநஸ்தாநமென்ற விடத்து ஓரிராச்சியமுண்டாக்கி அதில் அவளை மேன்மையோடிருக்கச் சொல்லி, தூஷணனென்னுஞ்சேனாதிபதிக்கு உட்பட்டதொரு பெருஞ்சேனையையும், தனது தாயினுடன் பிறந்தவள் மகனான கரனை யும் அவளுக்கு உதவியாக இருந்து அவளிட்ட கட்டளைப்படி நடக்குமாறு நியமித்து, அங்கு அவளைத் தன்விருப்பின்படி திரியு மாறு அனுப்பிவிட்டான்.

அங்ஙனமே அவ்விடத்திற் குடியேறி அங்குள்ள வனவாசி களை வருத்திக்கொண்டு உல்லாசமாகத் திரியுந்தன்மையுள்ள இவள், இராமலட்சுமணர் சீதையோடு கோதாவரிநதிதீரத்திற் பஞ்சவடியாச்சிரமத்தில் வசித்துவருகிறபொழுது ஒருநாள் இராம பிரானது திருமேனியழகைக் கண்டு பெருங்காதல் கொண்டு அழகியவடிவமெடுத்து அருகில்வந்து தன்னைக்கூடும்படி பலவகை யால் வேண்டவும், அதற்கு அப்பெருமான் உடன்படாது பலகூறி மறுத்திட்டான். அதனால் மிகவருந்தி மீண்டு, 'ஒப்புயர்வில்லாத பேரழகுபடைத்த மனைவியுடனிருத்தலால், அவளுள்ள அளவும் என்னை இவன் விரும்பான்; அவளை வஞ்சனையால்எடுத்துப்போய் மறைத்துவைத்துவிடின், நான் இவனுடன் கூடிவாழக் கூடும்' என்று எண்ணி மறுநாளுதயத்தில் வந்து இராமன் காலைக்கடன் கழித்தற்கு நீர்நிலைநோக்கிச் சென்ற சமயம் பார்த்துச் சீதையைப் பிடிக்கத்தொடர்ந்தாள்; அப்பிராட்டிக்குக்காவலாக அருகிற்சோலையி லிருந்த இலக்குமணன் கண்டு விரைந்துவந்து இவளது கூந்தலை ஒரு கையாற் பற்றிக்கொண்டு மற்றொருகையால் உடைவாளை யெடுத்து அதனால் இவளது மூக்கையும் காதுகளையும் முலைகளையும் அறுத்து, பெண்கொலை செய்தல்தகுதியன் றென்ற கருத்தினால் இவளைக் கொல்லாமல் உயிரோடு விட்டிட்டான். பின்பு இவள், பெருங் குரல் பாய்ச்சிக் கதறியழுது, மீண்டும் இராமனை நோக்கித் தன்னை மணஞ்செய்துகொள்ளவாவது தம்பிக்கு மணஞ்செய்விக்கவாவது வேண்டு மென்று மிகவும் வேண்டியும் சிறிதும்பயன்பெறாமல், அவர்களால் வெருட்டப்பட்டாள். பிறகு அவள் 'உங்களையழிக்கக் கரனைக் கொண்டுவருகிறேன்' என்று அவர்கள்மீது கறுக்கொண்டு சென்றனளென்பது, இப்படலத்தின் கதை.

வேறு.

### 1.—இராமலக்குமணரும் சீதையும் கோதாவரிநதியைக் காணுதல்.

**புவியினுக் கணியா யான்ற பொரு[1]டந்து புலத்திற் றாகி**
**அவியகத் துறைக டாங்கி யைந்திணை நெறிய ளாவிச்**

சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை [2]வீரர் கண்டார்.

(இ - ள்.) புவியினுக்கு அணி ஆய் - பூமிக்கு (ஓர்) அலங்காரமாய், ஆன்ற பொருள் தந்து - சிறந்த பொருள்களைக் கொடுத்து, புலத்திற்று ஆகி - அறிவினிடத்ததாய் [வயல்களுக்கு உரியதாய்], அவி அகம் துறைகள் தாங்கி - அமைந்த அகப்பொருளிலக்கணத் துறைவகைகளை யுடையதாய் [வெப்பந்தணியத்தக்க இடத்தை யுடைய நீராடுதுறைகளை யுடையதாய்], ஐந் திணை நெறி அளாவி - ஐந்துதிணைகளின் இலக்கணத்தைத் தழுவி [ஐவகைநிலங்களின் வழியைச் சேர்ந்து], சவி உற தெளிந்து - செவ்வையாகத்தெளிந்து, தண் என்ற ஒழுக்கம்உம் தழுவி - குளிர்ச்சியான நல்லொழுக்கத்தை யுங்கொண்டு [குளிர்ச்சியாய்ப் பெருகுந்தன்மையை யுடையதாய்], சான்றோர் கவி என கிடந்த - பெரியோர்செய்த செய்யுள்போலப் பொருந்தியுள்ள, கோதாவரியினை - கோதாவரிநதியை,—வீரர் - பராக்கிரமமுடையவரான இராமலட்சுமணர், கண்டார்-பார்த்தனர்;

கோதாவரிநதிக்குச் சான்றோர்செய்யுளைச் சிலேடைமூலமாக உவமைகூறியதனால், இச்செய்யுள் - சிலேடையணியை அங்கமாகக் கொண்ட உவமையணி.

சான்றோர்செய்யுளுக்கு:—(1) புவியினுக்கு அணியாதல் - பலவகைபலங்காரங்களையுமுடையதாய் உலகத்தில் உயர்ந்தோர் பலராலுங் கொண்டாடப்படுதல்; (2) ஆன்றபொருள் தருதல் - சிறந்த அறம் பொருளின்பம் வீடென்னும் உறுதிப்பொருள்களின் திறத்தை யுணர்த்துதல்; (3) புலத்திற்றுதல் - தன்னைக்கற்போர்க்கு நுண்ணறிவை விளைப்பதும், அறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்யச்செய்ய நன்கு புலப்படும் ஆழ்ந்த பொருளுள்ளதுமாய் அறிவுக்கு உரியதாதல்; (4) அவியகத்துறைகள் தாங்குதல்-எழுத்து சொல் பொருள் யாப்பு அணி யென்னும் தமிழிலக்கண மைந்தனுள் பொருளின் பகுதியாகிய அகம் புறம் என்னும் இரண்டில் அகப்பொருளின் பாகுபாடுகளாகிய களவு கற்பு என்னும் ஒழுக்கங்களின் தன்மைகளைக் கூறுதல்: (புறப்பொருள் துறைகளைத் தாங்குதலும் செய்யுட்கு இலக்கணமாயினும், புறப்பொருளினும் அகப்பொருள் கேட்போர்மனத்துக்கு மகிழ்ச்சி விளைப்பதாய்ச் சிறத்தலால், அதுவே பிரதானமாக எடுத்துக்காட்டப்பட்டது; இச்சிறப்பு விளங்க, 'அவி' என்னும் அடைமொழி கொடுத்தன ரென்க.) அவி என்பதற்கு - (மனத்துயரத்தை) மாற்றுவிக்கிற என்றும் பொருள்கொள்ளலாம். (அகமாவது - ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட்கூடுகின்ற காலத்துப் பிறந்து அக் கூட்டத்தின் பின்னர் அவ்விருவராலும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப்புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத்து உணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம். இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை 'அகம்' என்றது - ஆகுபெயர்: அகம் - உள், மனம். நவரசங்களுள் முதலதான சிருங்காரரசமாகிய அகப்பொருளைக் கூறினது, மற்றை ரசங்களாகிய புறப்பொருள்கட்கும் உபலக்ஷணம். 'வட

நூலுட் போசராசனும், சுவைபலவென்று கூறுவார் கூறுக: யாம் கூறுவது இன்பச்சுவையொன்றனையுமே யென இதனையே மிகுத்துக் கூறினன்' என்ற பரிமேலழகருரையாலும், அகப்பொருளின் தலைமையை அறிக.) (5) ஐந்திணைநெறியளாவுதல் - குறிஞ்சி முல்லை பாலை நெய்தல் மருதம் என்னும் ஐவகை நிலங்களுக்கும் முறையே உரியன எனப்படுகிற புணர்தல்இருத்தல் பிரிதல் இரங்கல் ஊடல்என்னும் ஐவகை யொழுக்கங்களையும், அவற்றிற்கு அங்கமானவற்றையும் உரைத்தல்; (6) சவியுறத்தெளிதல் - மயங்கவைத்தலென்னுங் குற்றத்திற்குச் சிறிதுமிடமின்றி விளங்கவைத்தலென்னும் அழகுக்கு முழுவதும் இடமாய் நன்றாகப் பொருள்விளங்குதல்; (7) தண்ணென்ற ஒழுக்கந் தழுவுதல் - தீயொழுக்கத்தையுணர்த்தாமல் நல்லொழுக்கத்தை யுணர்த்துதல்: அன்றி, மெல்லென்ற ஓசையோடு தட்டறச் செல்லுஞ் சிறந்தநடையை யுடைமையுமாம்.

கோதாவரிக்கு:—(1) புவியினுக்கு அணியாதல் - பூமியில் அழகியதொரு பெருநதியாதல்: அன்றி, பூமியாகிய பெண்ணுக்கு ஒரு முத்தாரம்போ லிருத்தலுமாம்; ("விலகிவில்லுமிழ் விரிகதிர் மணி பல வரன்றிப், பொலன் முகட்டுயர் பொன்னெடுங் குன்றின்வீழருவி, குலவுதெண்டிரைக் குரைகடலுடுத்த பார்மடந்தை, அலர்முலைத் தலைத்துயல்வரு மாரமொத் துளதால்" எனக் காண்க.) (2) ஆன்ற பொருள் தருதல் - சிறந்த மலைபடுபொருள்கள் முதலியவற்றை அடித்துக்கொண்டு வருதல்: அன்றி, தனதுவளத்தால் நாட்டுக்குச் செழுமையையுண்டாக்கி விளைவுப்பொருள் பலவற்றையும் விளைத்தலுமாம்: புண்ணியநதி யாதலால், தன்னில் மூழ்குவார்க்குத் தீவினை தீர்த்து நல்வினைப்பயனாகிய அறம்பொருளின்பங்களையும் வீட்டையுங் கொடுத்தலுமாம்; (3) புலத்திற்றுதல் - விளைநிலத்தின் வளச் செழுமைக்கு உதவுதல்: அன்றி, வெள்ளப்பெருக்கினாலும் வாய்க்கால் வழியாகவும் எங்கும் பரவி நிறைதலுமாம்; (4) அவியகத்துறைகள் தாங்குதல்-இறங்குநீர்த்துறைகள் பலவற்றை ஆங்காங்கு உடைத்தாதல்; (5) ஐந்திணைநெறியளாவுதல்-ஐவகை நிலங்களின் வழியாகச் செல்லுதல்; (மலையும் மலைசார்ந்த இடமும் - குறிஞ்சியும், காடும் காடு சார்ந்த இடமும்-முல்லையும், நாடும் நாடுசார்ந்தஇடமும் - மருதமும், கடலும் கடல்சார்ந்த இடமும் - நெய்தலும், நீரும் நிழலுமில்லாத வெற்றிடம்-பாலையுமாமெனக் காண்க.) (6) சவியுறத்தெளிதல் - மிக்க ஆழத்திலுள்ள பொருளும் கட்புலனாம்படி மிகத்தெளிந்திருத்தல்; (7) தண்ணென்றொழுக்கந் தழுவுதல் - ஜீவநதியாதலால் குளிர்ந்த நீர்ப்பெருக்கை என்றும் இடையறாமலுடையதாதல்.

'வீரர் கண்டார்' எனச் சிறப்புடைய ஆடவர்மேல் வைத்துக் கூறினது, சீதை கண்டதற்கும் உபலட்சணம். வீரர்க்குச் சிறப்பு, பெருங்கானகத்திடையே கொடு விலங்குகளால் யாதோரிடையூறும் நேராவண்ணம் காக்கவல்ல ஆற்றலைப் பெற்றிருத்தல். சவி என்ற வடசொல்லுக்கு-ஒளியென்று பொருள். கவியென்னும் வடசொல் - கவனஞ்செய்பவனைக் குறிக்கும்; இது, தமிழில், செய்தான்பெயர் செய்யப்பட்டதன்மேல் நிற்குங் கருத்தாவாகுபெயராய், செய்யுளையும் உணர்த்தும். பி - ம்:—[1] தருந்திறத்ததாகி. [2] தெரியக்.

இதுமுதல் ஏழுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ் சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழி நெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில், மூன்று ஆறுஞ் சீர்கள், தேமாச்சீர்களாகவே நிற்கும். (225)

## 2.—இரண்டு கவிகள் - கோதாவரி வருணனே.

வண்டுறை கமலச் செவ்வி வாண்முகம் பொலிய வாசம்
[1]உண்டுறை குவளை யொண்க ணொருங்குற நோக்கி [2]யூழின்
தெண்டிரைக் கரத்தின் வாரித்[3]திருமலர் தூவிச் செல்வர்க்
கண்டடி [4]பணிவ தென்னப் பொலிந்தது கடவுள் யாறு.

(இ - ள்.) கடவுள் யாறு - தெய்வத்தன்மையையுடைய அந்த நதியானது,—வண்டு உறை கமலம் - வண்டுகள் மொய்க்கப்பெற்ற செந்தாமரை மலராகிய, செவ்வி வாள் முகம் - அழகிய ஒள்ளிய முகம், பொலிய - மலர்ந்து விளங்க,—வாசம் உண்டு உறை குவளை - நறுமணத்தை உட்கொண்டு தங்குகிற நீலோற்பலமலர்களாகிய, ஒள்கண் - ஒளியுள்ள கண்களால், ஒருங்கு உற நோக்கி - ஒரே விதமாகப் பார்த்து,—ஊழின் தெள் திரை கரத்தின் - முறையே [ஒன்றன்பின் ஒன்றாய் வரிசையாக] வருகிற தெளிவான அலைகளாகிய கைகளால், திரு மலர் - சிறந்த பூக்களை, வாரி தூவி - மிகுதியாக எடுத்துச் சொரிந்து,—(இத்தன்மையால்), செல்வர் கண்டு - செல்வப்பிள்ளைகளாகிய இராமன்முதலிய மூவரையும் பார்த்து, அடிபணிவது என்ன - அவர்கள்பாதத்தில் வணங்குவதுபோல, பொலிந்தது - விளங்கிற்று; (எ - று.)

இராமன் முதலியோர் அவ்விடம் வருகையில், தாமரைமலரக் குவளைகள் நிமிர்ந்துவிளங்க அலைகளாற் பலவகைப் பூக்களைச் சிதறிக்கொண்டு அவர்கள் நின்ற கரையிலே ஒதுங்கி விரைவாகத் தணிந்துவருகிற கோதாவரிநதியின் காட்சி—கோதாவரிநதியென்னும் நங்கை அளவிறந்த மகிமையையுடைய அவர்களது வருகையை அறிந்து முகமலர்ச்சிபெற்றுத் தன்கண்களால் அவர் வரவையே எதிர்நோக்கிக்கொண்டு விரைவாக அருகில்வந்து அவர்கள் திருவடிகளிற் கைந்நிறையப் பலவகைப்பூக்களைத் தன் கைகளால் எடுத்து இட்டு அருச்சித்து வணங்குவதுபோலிருந்தது என்பதாம். நான்காமடியில் வருகிற தற்குறிப்பேற்றவணிக்கு முதல் மூன்றடிகளிலுள்ள உருவகம் அங்கமாய் நின்றது: உறுப்புறுப்பிக்கலவையணி. வடிவத்தில் கைக்கு அலை உவமையென்க; "சேந்தொளி விரியுந் தெண்டிரையெனு நிமிர்கையால், ஏந்தினளொருதானே யேற்றின ளினிதப்பால்" எனக் கீழ்க் கங்கைப்படலத்திலும் அலை கையெனப்பட்டவாறு காண்க.

ஒருங்குற நோக்குதல் - ஒருமுகமாகப் பார்த்தல். இனி, ஊழின் தூவி என இயைத்து-(பெரியோர்களுக்குச் செய்யவேண்டும்) முறைப்படி அருச்சித்து என்றுங்கொள்ளலாம். வாரித்திருமல ரென எடுத்து - சிறந்த நீர்பூக்க ளென்றலும் ஒன்று. பி - ம்:—[1]உண்டுறு குவளையுண். [2]கோதில். [3]செழு. [4]பணிவனென்ன. (226)

3. [1]எழுவுறு காத லாலிங் கிரைத்திரைத் தேங்கி [2]யேங்கிப்
[3]பழுவநாட் குவளைச் செவ்விக் கண்பனி பரந்து சோர
வழுவிலா வாய்மை மைந்தர் வனத்துறை வருத்த நோக்கி
அழுவது மொத்த தாலவ் வலங்குநீ ராறு மன்னோ.

*(இ - ள்.) அ அலங்கு நீர் ஆறு - அசைந்துபெருகுகின்ற நீரையுடைய அந்தக்கோதாவரிநதி.—வழு இலா வாய்மை மைந்தர் வனத்து உறை வருத்தம் நோக்கி - தவறுதலில்லாத மெய்ம்மை மொழியையுடைய அத்தசரதகுமாரர்கள் காட்டிலே வந்து வசிக்கிற வருத்தந்தரும் நிலைமையைப் பார்த்து, எழுவுறு காதலால் - (அவர்களிடத்து) மிகுதியாய் மேலெழுகிற அன்பினால், ஏங்கி ஏங்கி - மிக இரங்கி, பழுவம் நாள் குவளை செவ்வி கண் பனி பரந்து சோர - தொகுதியாகவுள்ள அன்றுமலர்ந்த நீலோற்பல மலர்களாகிய அழகிய கண்களினின்று (தேனாகிய) நீர்த்துளி பரவி வழிய, இரைத்து இரைத்து அழுவது ஒத்தது - கதறிக்கதறிப் புலம்புவதையும் போன்றது; (எ - று.)—ஆல், மன், ஓ - ஈற்றசைகள். இங்கு - அசை.*

*மலர்ந்த கருங்குவளைமலர்களினின்றுதேன்வழிய மிக்க ஆரவாரஞ்செய்துகொண்டு பெருகுகின்ற அந்நதியை நோக்கினால், அது, சக்கரவர்த்தியினது செல்வக்குமாரர் வனத்திலுறைகிற துயரநிலையைப் பார்த்து அவர்களிடத்துத் தான் மிகுதியாகக் கொண்டுள்ள அன்பினால் மிக்க துயர்கொண்டு ஏங்கிக் கண்ணீர் பெருகக் கதறியழுவதுபோன்றதென்பதாம்; தற்குறிப்பேற்றவணிக்கு இரண்டாமடியிலுள்ள உருவகம் அங்கமாய் நின்றதென்க. குவளையைக் கண் என்றதற்கு ஏற்ப, தேன் நீர்த்துளியாகக் கொள்ளப்பட்டது: இனி, இராமலக்ஷ்மணர் கோதாவரிநதியைச் சார்ந்த காலம் பனிக்காலத்துக்குச் சிறிதுமுந்தின தாதலால், பனி யென்பதற்கு - பனிநீர்த்துளி யென்றே கொள்ளினுமாம்.*

*கொடியவரான இராக்கதரை வேரறுத்துத் துயர்தீர்த்திடுகிறோமென்று தாம் தண்டகாரணியத்து முனிசனங்களுக்கு வாக்குத்தத்தஞ் செய்ததனை நிறைவேற்றுதற்குச் சமயம்பார்த்து நிற்பவரென்பது தோன்ற, 'வழுவிலாவாய்மைமைந்தர்' என்றார்; இனி, தமதுதந்தை கைகேயிக்கு இரண்டு வரங்கொடுத்திருந்த வார்த்தையின் மெய்ம்மைதவறுமற் பாதுகாத்தற்பொருட்டு வனம் புகுந்த மைந்தரெனினுமாம். பழுவம் - காடு; இங்குத் தொகுதி யென்னும் பொருளின்மேல் நின்றது. பி - ம்: —[1]எழுவுகாதலின்வந்தென்ன, எழுவுறுகாதலாரின். [2]ஏங்கப். [3]குழுவநாட்.* (227)

## 4.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராமனும் சீதையும் அந்நதியின்வளங்களைக் காணுதலைத் தெரிவிக்கும்.

**நாளங்கொ ணளினப் பள்ளி நயனங்க ளனைய நேமி, வாளங்களுறைவ கண்டு மங்கைதன் கொங்கை [2]நோக்கும், நீளங்கொள் சிலையோன் மற்றை நேரிழை நெடிய நம்பி, தோளின்கண் [3]மனம்வைத் தன்ன சுடர்மணித் தடங்கள் கண்டாள்.**

(இ - ள்.) நீளம் கொள் சிலையோன் - நீட்சியைக்கொண்ட வில்லையுடைய இராமன்,—நாளம் கொள் நளினம் பள்ளி - காம்பைக் கொண்ட தாமரைமலராகிய படுக்கையில், நயனங்கள் அனைய நேமி வாளங்கள் உறைவ - கண்கள்போல இரட்டையாகவுள்ள சக்கரவாகப்பறவைகள் தங்குவனவற்றை, கண்டு - பார்த்து, (உடனே), மங்கைதன் கொங்கை நோக்கும் - இளம்பருவமுடைய சீதையினது தனங்களைப் பார்த்தருள்வான்; நேர் இழை - தகுதியான ஆபரணங்களை யணிந்துள்ள சீதை, நெடிய நம்பி தோளின் கண்மனம் வைத்து - பெருமைக்குணமுள்ள இராமனது தோள்களினிடத்து(த் தன்)மனத்தைச் செலுத்திக்கொண்டு, அன்ன சுடர் மணி தடங்கள் கண்டாள் - அத்தோள்களையொத்த விளங்குகிற இரத்தினங்களையுடைய (அந்நதிக்கரையின்) மணற்குன்றுகளைப் பார்த்தாள்; (எ - று.)—மற்று - வினைமாற்றுப்பொருளில் வந்தது; ஐ-சாரியை: ஐயீற்றுடைக்குறறியலுகரம்.

அந்நதியிலுள்ள தாமரைமலர்களைப் படுக்குமிடமாகக்கொண்டு அவற்றில் தங்கியுள்ள ஆணும்பெண்ணுமாகிய இரட்டைப்பட்ட சக்கரவாகப்பறவைகளை நோக்குகையில், இராமனுக்கு, அவற்றை யொத்த சீதையின் நெருங்கிய இணைக்கொங்கை ஞாபகத்துக்கு வந்ததனால், இராமன் உடனே அவற்றை நோக்குவானாயின னென்றும், அவ்வாற்றங்கரையிலுள்ள மணற்குன்றுகளை நோக்குகையில், சீதைக்கு அவற்றையொத்த இராமனது உயர்ந்த தோள்கள் ஞாபகத்துக்கு வந்ததனால், சீதை அத்தோள்களை நினைத்துக் கொண்டே அம்மணல்மேடுகளை உற்றுநோக்கினாளென்றும் உணர்க. ஒரு பொருளைக்கண்டு ஒப்புமையினால் மற்றொருபொருளை நினைத்தல் கூறப்பட்டமையின், இது-நினைபபணி. நேமிவாளங்களுறைவ கண்டு கொங்கை நோக்கும் என்று இராமனுக்குக் கூறி,சீதைக்குத் தோளின் கண்மனம்வைத்து தடங்கள் கண்டாள் என்று கூறிய நயம் காணத் தக்கது.

சக்கரவாகப்பறவை கொங்கைக்கு உவமையாகக்கூறப்படும். சக்கரவாகம்-பகல்முழுவதும் ஆணும்பெண்ணுங் கலந்திருந்து இரவிற் பிரிந்து வருந்துந் தன்மையதாகிய ஒருவகைப்பறவை. கொங்கைக்குச் சக்கரவாகவுவமை-வடிவத்திற்கும், தோளுக்கு மணற்குன்று உவமை-உயர்ச்சிக்கு மென்க. மகளிர்க்குத் தனமும் ஆடவர்க்குத் தோளும் வேட்கைவிளைக்குஞ் சிறந்த உறுப்புக்களாதலால், அவற்றை இங்கு ஒருங்கே கூறினார். சக்கரவாகங்களுக்குக் கண்களை உவமைகூறியது, இரட்டையாய் ஒன்றையொன்று நெருங்கி இணையொத்துள்ளன வென்பதை விளக்குதற்கு; இனி, அன்பினால் ஒன்றுக்கொன்று கண்போலவுள்ள என்றுமாம். இங்கே, நேரிழை யென்றது-அத்திரி முனிவனது பத்தினியான அநசூயையால் அன்போடு கொடுக்கப் பட்ட பலவகை ஆபரணங்களை அணிந்துள்ளவள் என்றவாறு; அத் தன்மை, கீழ் விராதன் வதைப்படலத்தில் விளங்கும். 'நெடியநம்பி' என்றது - தேவாதிதேவ னென்றும், திரிவிக்கிரமாவதாரஞ் செய்தவ னென்றும், புருடோத்தம னென்றும், இலட்சுமணனுக்குத் தமையனான இராம னென்றும் கருத்துப்படும். வட்டவடிவை

யுணர்த்துகிற நேமி வாளம் என்ற சொற்கள்-ஒருபொருட்பன்மொழியாகத் தொடர்ந்துநின்று, அவற்றின் பரியாயநாமமாகிய சக்கரமென்ற சொல்லாற் பெயர் குறிக்கப்படுகிற சக்கரவாகப்பறவையை உணர்த்தின வெனக. மணல் மேட்டுக்கு, மணி ஆற்று வெள்ளத்தாற் கொணர்ந்து ஒதுக்கப்பட்டவை. தோள்கள் இரத்தினாபரணங்களையணிதற்கு உரியனவாதல்பற்றி, அவற்றிற்கு உவமையாகிற தடங்களுக்கு 'சுடர்மணி' என்ற அடைமொழி கொடுத்தார். பி - ர்:— [1]மேனி. [2]நோக்கி. [3]நயனம்வைத்தாள். (228)

5. ஓதிம மொதுங்கக் கண்ட வுத்தம னுழைய ளாகும், சீதை தன் னடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான், மாதவ டானு மாண்டு வந்துநீ ருண்டு மீளும், போதக நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்.

(இ - ள்.) (அந்த ஆற்றின் அருகே), ஓதிமம் - அன்னப்பறவை, ஒதுங்க-நடந்துசெல்ல, கண்ட-பார்த்த, உத்தமன்-புருடோத்தமனான இராமன்,—உழையள் ஆகும் சீதைதன் நடையை நோக்கி - அருகிலுள்ளவளான சீதையினது நடையைப்பார்த்து,சிறியது ஓர் முறுவல் செய்தான்-ஒரு புன்சிரிப்பைச் செய்தான்; ஆண்டுவந்து நீர் உண்டு மீளும்-அவ்விடத்தில் வந்து நீரைப்பருகி மீளுகிற, போதகம் - ஆண்யானை, நடப்ப - (விலகி) நடக்க, மாது அவள் தான்உம் - (அதனைப் பார்த்த)அச்சீதையும், நோக்கி-(அருகிலுள்ள இராமனது நடையைப்) பார்த்து, புதியது ஓர் முறுவல்பூத்தாள-ஒரு புன்சிரிப்புத் தோன்றப் பெற்றாள்; (எ-று.)

இராமனும் சீதையும் அந்நதியினருகில் உல்லாசமாகச் சஞ்சரிக்கும் பொழுது, இராமன் அங்கு அன்னப்பறவை தன் இயல்பின்படியே மானிடைக் கண்டவுடன் ஒதுங்கி நடத்தலைச்செய்தது; அன்னநடையைக் கண்டதும் இராமபிரானுக்குச் சீதையின் நடை நினைவுக்குவர, உடனே அவள் நடையை இராமபிரான் உற்றுப் பார்த்து, அது அன்னநடையினுஞ் சிறந்திருத்தலை யுணர்ந்து, இப்படிப்பட்ட நடையழகில் தான் ஒப்பாகமாட்டாமைபற்றியே அன்னம் இவள்முன் நிற்கலாற்றாது நாணி விலகிச்செல்கின்றதெனக் கருதி, அவ்வன்னநடையின எளிமைபற்றிய இகழ்ச்சியினாலும், சீதைநடையின் சிறப்புப்பற்றிய மகிழ்ச்சியினாலும், சிறிது சிரித்திட்டனன்: அங்ஙனமே, சீதையும், அங்கு வந்து நீர்பருகிய யானை இயல்பாக மீண்டுசெல்லும் நடையைக் கண்டு, அதனால் இராமனது நடை நினைவுக்கு வரப்பெற்று, உடனே அவன் நடையை உற்றுப்பார்த்து, அது யானைநடையினுஞ் சிறந்திருத்தலை யுணர்ந்தாள்: இப்படிப்பட்ட நடையழகில் தான் ஒப்பாகமாட்டாமைபற்றியே யானை இவன்முன் நிற்கலாற்றாது நாணி அப்பாற்செல்கின்றதெனக்கருதி, அவ்யானை நடையின் எளிமைபற்றிய இகழ்ச்சியினாலும், இராமனது நடையின் சிறப்புப் பற்றிய மகிழ்ச்சியினாலும், சிறிது சிரித்திட்டனள் என்பதாம். இதில், ஏதுத்தற்குறிப்பேற்றவணியோடு கீழ்க்கூறிய நினை பணி தொனிக்கு மாறு அறிக. 'ஒதுங்க, மீளும்' என்ற சொற்கள் விலகிப்போக என்ற

பொருளையும், எதிர்த்து நிற்கமாட்டாது புறங்கொடுத்தோடும் என்ற பொருளையும் தோற்றுவித்து, இங்குக் கூறிய கருத்துக்கு உபகாரப்பட்டுநிற்கும். இராமனைபபற்றி முறுவல்செய்தான் என்று கூறிய கவி, சீதையைப்பற்றி முறுவல்பூத்தாள் என்ற நயம், பாராட்டத்தக்கது: மகளிர் முறுவல் வெளித்தோன்ருது அடங்கி நிற்கு மென்பதைக் காட்டுதல் காண்க. "பேதைநகை மொக்குளுள்ளது" என்ருர் நாயனருைம்.

உண்ணலென்பது - உண்பன தின்பன பருகுவன நக்குவன எனப்பிரித்துக்கூறுமிடத்துச் சிறப்புவினையும், அங்ஙனம் வேறுபாடு கருதாத இடத்துப் பசிதாகங்கள் தீர உட்கொள்ளபபடும் பொருளெல்லாம் உணவெனப் படுதலின் பொதுவினையுமாகுதலால், 'நீருண்டு' என்ருர். பத்துப்பிராயத்து யானைக்குட்டிக்குப் போதமென்று பெயர்; அது, கப்பிரத்தியயம் பெற்று, போதகமென நின்றது. நான்காமடியில் 'புதியது' என்பது, இரண்டாமடியில் 'சிறியது' எனறதற்கு ஈடாக நின்றதனல், புதியதோர் முறுவல் - இளநகை யெனபபட்டது. (229)

6. [1]வில்லிய றடக்கை வீரன் வீங்குநீ ராற்றின் பாங்கர், வல்லிக [2]ணுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்கு [3]ேேநாக்க, [4]எல்லியங் குவளைக் கானத் திடையிடை [5]மலர்ந்து நின்ற, அல்லியங் கமலங் கண்டா [6]ளண்ணறன் வடிவு கண்டாள்.

(இ - ள்.) வில் இயல் தட கை வீரன் - விற்பொருந்திய பெரிய [நீண்ட] கையையுடைய வீரனை இராமன், வீங்கு நீர் ஆற்றின் பாங்கர்-மிக்க நீரையுடைய அந்நதியினிடத்திலே, வல்லிகள் நுடங்க- (வஞ்சி முதலிய) நீர்க்கொடிகள் அசைய, கண்டான்-பார்த்து, மங்கை தன் மருங்குல் நோக்க - (அதனுற்) சீதையினது (துவளுகிற) இடை (ஞாபகத்துக்குவந்ததுபற்றி அதனைப்) பார்க்க,—(அச்சீதை), எல்லி அம் குவளை கானத்து இடை இடை - இருள்போலக்கறுத்த அழகிய குவளைமலர்த்தொகுதியின் இடையிடையே, மலர்ந்து நின்ற—, அல்லி அம் கமலம் - அகவிதழ்களையுடைய அழகிய செந்தாமரைமலர்களை, கண்டாள் - பார்த்து, அண்ணல்தன் வடிவு கண்டாள் - (அதனுல்) இராமனது (கரிய) திருமேனி (ஞாபகத்துக்குவர) அதனைப் பார்த்தாள்; (எ - று.)

இராமன் கொடியைக்கண்டு ஒப்புமையினுல் சீதையின் இடையையும், சீதை நீலோற்பலமலர்க்குழாத்தின் இடையிடையே மலர்ந்துள்ள தாமரைமலர்களைக்கண்டு இராமனது வடிவத்தையும் நினைத்து உற்றுநோக்கினரெனக் கூறியதனல், இதிலும் கீழ்க்கவிகளிற் போல நினைப்பணி தொனித்தல் காணலாம். இராமன் திருமேனிக்குக் கருங்குவளைக்காடு உவமை. கருங்குவளைமலர்த்தொகுதியின் நடுவிடங்களில் மலர்ந்துநின்ற செந்தாமரைமலர்கள், இராமபிரானது கரியதிருமேனியில் விளங்குகிற கண் கை கால் முகம் வாய் முதலிய திருவவயவங்களைப் போலு மென்க. வில் இயல் - வில்தொழிலிற் பயின்ற எனினுமாம். தடக்கை-ஆஜாநுபாஹு. பி - ம்:—[1]வில்லு

யர். [2] நடக்கம். [3] நோக்கி. [4] எல்லுயர், எல்லியல். [5] அலர்ந்து. [6] அண்ணல் கண்ணவளும், அண்ணறன் வடிவம். (230)

### 7.—இராமன் முதலியோர் பஞ்சவடி சேர்ந்து தங்குதல்.

அனையதோர் [1] தன்மை யாலங் கருவிநீ ராற்றின் பாங்கர்ப்
[2] பனிதரு படிவப் பஞ்ச வடியெனும் [3] பருவச் சோலைத்
தனியிட மதனை நண்ணித் தம்பியாற் சமைக்கப் பட்ட
[4] இனியபூஞ் சாலை யெய்தி யிருந்தன னிராம னிப்பால்.

(இ - ள்.) இராமன்—,—அனையது ஓர் தன்மையால் - அப்படிப் பட்டதொரு தன்மையினால் [அவ்வாறு அந்நதியின் வளங்களைப் பார்த்துக்கொண்டே],—அ அருவி நீர் ஆற்றின் பாங்கர் - அருவியாகப் பெருகிய நீரையுடைய அந்தநதியின் அருகிலுள்ள, பனி தரு படிவம் பஞ்சவடி எனும் பருவம் சோலை தனி இடம் அதனை-குளிர்ச்சியைச்செய்கிற தன்மையையுடைய பஞ்சவடி யென்கிற காலத்தில்மலரும் சோலையாகிய ஏகாந்தமான [ஒப்பற்ற] இடத்தை, நண்ணி - சேர்ந்து, தம்பியால் சமைக்கப்பட்ட இனிய பூ சாலை எய்தி - (அங்கு) இலக்குமணனால் செய்யப்பட்ட (தன்மனத்துக்கு) இனிமையான அழகிய பர்ணசாலையையடைந்து, இருந்தனன் - (அங்கு) வசித்திருந்தான; இப்பால் - இதன்பின்பு,—(எ - று.)—'(சூர்ப்பணகை) எய்தினள்' என மேற் பத்தாங்கவியோடு தொடர்ந்து முடியும்.

இராமபிரான் 'இன்னஇடத்துப் பர்ணசாலை யமைப்பாய்' என்று தன்மனத்துக்குப்பிடித்த இடத்துப்பர்ணசாலையை யமைக்குமாறு தம்பிக்குக் கட்டளையிட, அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு இளைய பெருமாள் பர்ணசாலை யமைத்து நிற்க, அங்கு மனவுவப்போடு மகிழ்ந்து வாழலானனென்பதாம். பர்வம், சாலா என்னும் வடசொற்கள் திரிந்தன. பி-ம்:—[1] தன்மையான. [2] பனிவருங்குன்றில். [3] பழுவச். [4] இனியன. (231)

வேறு.

### 8.—இரண்டு கவிகள் - சூர்ப்பணகையின் தன்மை.

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கு [1] மொய்ம்பினள்
மேலைநா [2] ளுயிரொடும் பிறந்து தான்விளை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீலம் மா மணி நிறம் நிருதர் வேந்தனை-சிறந்த நீலரத்தினம் போன்ற கருநிறத்தையுடைய இராக்கதர்க்கு அரசனான இராவணனை, மூலம் நாசம் பெற - வேரோடு [குலத்தோடு] அழிவையடையும்படி, முடிக்கும் - இனி அழிக்கப்போகிற, மொய்ம்பினள் - வலிமையையுடையவளும்,—மேலை நாள் - முற்காலத்திலே [பிறந்த பொழுதே], உயிரொடும் பிறந்து - உயிரோடுகூடவே தோன்றி,

தான் விளை காலம் ஓர்ந்து-தான் (வெளிப்பட்டுப்) பயன் விளைத்தற்கு உரிய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு, உடன் உறை - அவ்வுயிரோடுகூடவே தங்குகிற, கடிய நோய் அனாள் - கொடிய வியாதியை ஒத்தவளும்,—(எ - று.)—ஆகிய சூர்ப்பணகை யென்க.

இவள் பின்பு இராமனை வலியப்புணர விரும்பும் விருப்பமும் அதற்குத் தடையென்று தன்னாற்கருதப்பட்ட சீதையை எடுத்துக்கொண்டு போகத்துணியுந் துணிவும் ஆகிய இவளதுவலிமை மிகுதியே பின்பு இராவணன் இராமனுக்குப்பகையாய்க் குலத்தோடு அழிதற்கு மூலகாரணமாதலால் 'நிருதர்வேந்தனை மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்' என்றார். 'உடன்பிறந்தார் சுற்றத்தாரென்றிருக்க வேண்டா, வுடன்பிறந்தே கொல்லும் வியாதி" என்றபடி இராவணனுக்கு உடன்பிறந்தவளாயிருந்தும் அவன் அழியும்படியான காரியத்தை ஒருகாலத்தில் தொடங்கிய இவள் ஓருயிர் உடம்போடு கூடிப்பிறக்கும்பொழுது அப்பிராணியுடனே தானும் பிறந்து உடனிருந்துகொண்டே பின்பு ஒருகாலத்தில் அப்பிராணியையே கொல்லுமாறு வெளிப்படுகிற பயங்கரமானதொரு வியாதி போல்வ ளென்பார் 'மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்விளை காலமோர்ந்து உடனுறை கடிய நோயனாள்' என்றார்: "உந்தருநிலையதாகியுடனுறையுயிர் கடம்மை, யந்தகற் களிக்குநோய்போல ரக்கி" என்பர், கரன்வதைப் படலத்தும். பி - ம்:—[1]முன்பினாள். [2]உடன்பிறந்துயிரின்வேவினைக்.

இதுமுதல் இருபத்துமூன்றுகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடிநான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (232)

9. செம்பரா கம்[1]படச் செறிந்த கூந்தலாள்
[2]வெம்பரா குத்[3]தனி [4]விளைந்த மெய்யினாள்
உம்பரா னவர்க்குமொண் டவர்க்கு மோதநீர்
இம்பரா னவர்க்குமோ [5]ரிறுதி யீட்டுவாள்.

(இ - ள்.) செம்பு அராகம் பட - தாமிரத்தினது செந்நிறம் போன்ற செந்நிறம் (தன்னிடத்திலே) பொருந்த, செறிந்த-அடர்ந்த, கூந்தலாள் - தலைமயிரையுடையவளும், ராகு வெம்ப - இராகுவென்னுங்கொடியகிரகம் (ஒப்பாகமாட்டாமல்) வாடும்படி, தனிவிளைந்த - ஒப்பில்லாமல் வளர்ந்துள்ள, மெய்யினாள் - உடம்பையுடையவளும்—உம்பர் ஆனவர்க்கும் - மேலிடத்திலுள்ள தேவர்களுக்கும், ஒள் தவர்க்கும் - சிறந்த தவத்தையுடைய முனிவர்களுக்கும், ஓதம் நீர் இம்பர் ஆனவர்க்கும் - கடலின் நீர்சூழ்ந்த இவ்வுலகத்திலுள்ளவர்களுக்கும், ஓர் இறுதி ஈட்டுவாள் - ஒரு அழிவை ஒருங்கே செய்யவல்லவளும்,—(எ - று.)—ஆகிய சூர்ப்பணகை யென்க.

செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள் - செம்பட்டமயிருடையவள்: இனி, செம்பினது செந்நிறம் (முன்நிற்கமாட்டாமல்) அழியும்படி (அதனினும் மிகச்சிவந்ததாய்) அடர்ந்த கூந்தலுடைய

வள் என்றும் உரைக்கலாம். அராகம் - ராகமென்னும் வடசொல் ரகாரத்துக்கு அகரம் மொழிமுதலாகி முன்வரப்பெற்றது. இனி, 'செம் பராகம் படச்செறிந்த கூந்தலாள்' என்று பிரித்து - சிவந்த புழுதியின் நிறம் பொருந்த அடர்ந்த கூந்தலுடையாளென்றலு மாம்; பராகம் - புழுதி: வடசொல்.

திருமாலை வஞ்சித்து அவனிடமுள்ள அமிருதத்தைப்பெற்று உண்டு இன்பமடையக்கருதின ராகுபோல இவள் திருமாலின் திருவவதாரமான இராமனை வஞ்சித்து அவனது அதராமிருதத்தைப் பெற்றுப் பருகி இன்பமனுபவிக்கக் கருதியவளாதலாலும், அவ்வஞ்சனையையுணர்ந்த திருமாலால் அங்கபங்கமடைந்த ராகு போல இவளும் அவ்வஞ்சனையை யுணர்ந்த இளையபெருமாளால் அங்கபங்கமடைபவளாதலாலும், இராகு சூரியசந்திரரைப் பீடித்து வருத்துதல்போல இவள் ராமலக்ஷ்மணரைப் பீடித்து வருத்த வருபவளாதலாலும், கரும்பாம்புவடிவமான ராகுபோலப் பயங்கரமான கொடியகரியவடிவத்தையுடையவளாதலாலும், இவளுக்கு இராகுவோடு ஒப்புமை ஏற்கும்; அத்தன்மைகளில் இராகுவினும் இவளுக்குக் கொடுமைமிகுதி கூறுவார், 'ராகுவெம்பத் தனி விளைந்த மெய்யினாள்' என்றார். இனி, ராகு வெம்ப - இராகு (இவள் தன்மையை) விரும்பும்படி யென்றும் உரைக்கலாம்; "வெம்புஞ்சுடர்" என்றாற்போல. ராஹு - வடசொல்; நவக்கிரகங்களுள் ஒன்று. எல்லாவுலகத்தாரையும் அழிக்கவல்லவளென்பது, பின்னிரண்டடியின் கருத்து. தேவர்களினும் மனிதர்களினும் முனிவர்களுக்கு உள்ள தனிச்சிறப்புத் தோன்ற, அவரை உம்பரிலும் இம்பரிலும் அடக்காமல் தனியேகூறினரென்க.
பி - ம்:—[1]பெற. [2]வெம்பராகம். [3]பெற. [4]விளைந்துவீங்கலால். [5]உறுதி. (233)

## 10.—சூர்ப்பணகை இராமனிருந்த இடத்துக்கு வருதல்.

வெய்யதோர் காரண முண்மை மேவினாள்
வைகலுந் தமியளவ் வனத்து வைகுவாள்
[1]நொய்தினிவ் வுலகெலா நுழையு நோன்மையாள்
எய்தின ளிராகவ னிருந்த சூழல்வாய்.

(இ - ள்.) வெய்யது ஓர் காரணம் உண்மை மேவினாள் - கொடியதொரு காரணமிருத்தலைப் பொருந்தியவளாய், (அதனால்), தமியள் அ வனத்து வைகலும் வைகுவாள் - தனியளாய் அந்தக் காட்டில் நாள்தோறும் வசிப்பவளும்,—இ உலகு எலாம் நொய்தின் நுழையும் நோன்மையாள் - இவ்வுலகமுழுவதிலும் விரைவாக [அல்லது எளிதிலே] புகுந்துசெல்லத்தக்க வலிமையுடையவளுமாகிய சூர்ப்பணகை, இராகவன் இருந்த சூழல்வாய் எய்தினள் - இராமபிரான் தங்கியிருந்த ஆச்சிரமத்தினிடம் வந்துசேர்ந்தாள்; (எ - று.)

'வெய்யதோர் காரண முண்மை மேவினாள், வைகலுந் தமியள் அவ்வனத்து வைகுவாள்' என்றது - தனது கணவனை வித்யுச்சிகுவனென்னும் அசுரனைத் தனது தமையனான இராவணன்

இக்குவிசயகாலத்துக் காலகேயரை வெல்லுகையிற் கொல்ல, அதனால் தான் கைம்மையை யடைந்து இராவணனை வெகுவாக நிந்தித்து அவன் வேண்டுகோளினால் கரன முதலிய இராக்கத வீரர் பலரது துணைமையோடு தண்டகாரணியத்தில் ஜநஸ்தான மென்னுமிடத்தை யடைந்து தனக்குவேண்டியபொழுதெல்லாம் யதேச்சையாக அவ்வனமுழுவதுந் தனியே திரிந்துவருந் தன்மையுடையாளென்றவாறு: அன்றி, (முனிசனங்களைத் தான் வருத்த வேண்டு மென்னுங்) கொடியதொரு நிமித்தம்பற்றி எந்நாளும் அக்காடுமுழுவதுந் தனியே உலாவுபவளெனினுமாம். இனி, வெய்யதோர்காரணமுண்மை மேவினளாய் இராகவனிருந்த சூழல் வாய் எய்தினள் என்று இயைத்து - (இராவணாதி இராக்கதர் குலத்தோடுந் தொலையும்படியான) கொடியதொரு ஊழ்வினை அடுக்கப் பெறறவளாய் அதனால் அவள் அப்போது இராமனிருந்த இடம் வந்தாள் எனினும அமையும். இனி, 'வெய்யதோர் காரணம்' என்றது - பெருமாள் பிராட்டியைப் பிரியும்படியானதொரு காரணம் என்றுங் கொளளலாம். பி - ம்:—[1] நொய்தினின். (234)

## 11.—சூர்ப்பணகை இராமனைக் காணுதல்.

எண்[1]டகு மிமையவ ரரக்க ரெங்கண்மேல்
விண்டனர் விலக்குதி யென்ன மேலைநாள்
அண்டசத் தருந்துயி றுறந்த வையனைக்
கண்டன டன்கிளைக் கிறுதி காட்டுவாள்.

(இ - ள்.) மேலை நாள் - முன்னொருகாலத்தில், எண் தகும் - (யாவராலும்) நன்குமதிக்கத்தக்க, இமையவர் - தேவர்கள், 'அரக்கர் எங்கள் மேல் விண்டனர் - இராக்கதர்கள் எங்கள்மேற் பகைத்தார்கள்; விலக்குதி - (அவர்களாலாகிய துன்பங்களைத்) தீர்த்தருள்வாய்', என்ன - என்று பிரார்த்திக்க, (அதனால்), அண்டசத்து அருந் துயில் துறந்த - ஆதிசேஷனிடத்து அருமையான 'யோகநித்திரைகொள்ளுந்தன்மையை நீங்கித் தசரதகுமாரனாய்த் திருவவதரித்த, ஐயனை - மேன்மையையுடையவனான ஸ்ரீராமனை, தன் கிளைக்கு இறுதி காட்டுவாள் - தன்சுற்றத்துக்கு அழிவை அடைவிப்பவளான சூர்ப்பணகை, கண்டனள் - பார்த்தாள்; (எ - று.)

இராவணாதி இராக்கதரின் உபத்திரவம் பொறுக்கமாட்டாத தேவர்களின் வேண்டுகோளால் திருப்பாற்கடல்நாதனை திருமால் இராமனாய்த் திருவவதரித்தன னென்ற சரித்திரம் பிரசித்தம்: கீழ்ப் பாலகாண்டத்தில் திருவவதாரப்படலத்திலும் விவரிக்கப்பட்டது சர்ப்பங்களுக்குத் தலைவனான ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷன் திருமாலுக்குப படுக்கையாதலை "புல்கும், அணையாந் திருமாற்கு அரவு" என்ற பொய்கையார் பாசுரத்தாலும், அறிக. மூலகாரணமானவடிவம் அங்கு நிற்கவும் 'அண்டசத்து அருந் துயில் துறந்த' என்றது, "பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து என், மனக்கடலில் வாழவல்ல மாய மணாளநம்பீ" என்றாற்போலக் கவிகள் உபசரித்துக் கூறுவதொரு வழககமாம்.

யாதொருநினைப்புமின்றி மெய்ம்மறந்து பரவசப்பட்டுத் தூங்குந் தூக்கமே யன்றி எல்லாவுயிர்களையும் பாதுகாக்கும்விதத்தை ஆலோசித்துக்கொண்டே செய்யும் அறிதுயில் திருமாலொருவற்குஒழியப் பிறரெவர்க்கும் இல்லை யாதலால், அதனை, அருந்துயி லென்றார். காட்டுவாள் என்பதை முற்றெச்சமாகக்கொண்டு - தன் இனத்துக்கெல்லாம் அழிவை அடைவிப்பவளாய் இராமனைக்கண்டாள் எனக்கொள்ளுதல், நேராம்; இவள் இராமனைக் கண்டது, உடனே அவனிடம் காதல்கொள்ளுதற்கும், முடிவில் இராக்கதகுலநாசத்துக்கும் ஏதுவாதல் காண்க. அண்டஜ மென்னும் வடசொல்லுக்கு - முட்டையினின்று தோன்றின தென்று உறுப்புப்பொருள்; இது - இங்கே, பாம்புக்குக் காரணப்பெயர். பி-ம்:—[1] தரு. (235)

## 12.—இரண்டுகவிகள் - சூர்ப்பணகை பொதுவாக இராமனது திருமேனியழகில் ஈடுபடுதலைக் கூறும்.

சிந்தையி னுறைபவற் குருவந் தீர்ந்ததால்
இந்திரற் காயிர நயன மீசற்கு
முந்திய மலர்க்கணோர் மூன்று நான்குதோள்
உந்தியி னுலகளித் தாற்கென் றுன்னுவாள்.

(இ - ள்.) 'சிந்தையின் உறைபவற்கு - (யாவரது) மனத்திலுந் தங்குபவனாகிய மன்மதனுக்கு, உருவம் தீர்ந்தது - வடிவம் ஒழிந்திட்டது: இந்திரற்கு-தேவேந்திரனுக்கு, ஆயிரம் நயனம் - ஆயிரங் கண்கள் (உண்டு); ஈசற்கு-சிவபிரானுக்கு, முந்திய மலர் கண் ஓர் மூன்று-(மலர்களுட்) சிறந்த தாமரைமலர்போலுங் கண்கள்மூன்றாம்: உந்தியின் உலகு அளித்தாற்கு-(தனது) திருநாபியினின்று உலகங்களை உண்டாக்கியருளின திருமாலுக்கு, நான்கு தோள் - தோள்கள் நான்காம்,' என்று உன்னுவாள்-என்று நினைப்பாள்; (எ - று.)

இராமனது திருமேனியின் திவ்வியசௌந்தரியத்தைக்கண்ட சூர்ப்பணகை, மிகவியப்புக்கொண்டு, 'இவன் மன்மதனேவென்றால், மன்மதனுக்கு வடிவ மில்லையே: அநங்கனன்றோ அவன்! இவனது வடிவம் கட்புலனாகக் காணப்படுகின்றதே! ஆதலால், இவன் மன்மதனல்லன். அன்றி, இவன் தேவராசனான இந்திரனே வெனின், அவனுக்கு உடம்புமுழுவதும் ஆயிரங்கண்கள் இருக்கவேண்டுமே: இவனுக்கு இரண்டுகண்கள்தாமே உள்ளன; ஆதலால், இவன் இந்திரனல்லன். இனி, இவன் சிவபிரானே வென்றால், அவனுக்கு முகக்கண் இரண்டும் நெற்றிக்கண் ஒன்றுமாக மூன்று கண்கள் இருக்குமே. அங்ஙனம் இவனுக்கு இல்லாமையால், அவனல்லன். மற்றுத் திருமாலோ வெனின், அவனுக்கு நான்குதோள்கள் இருத்தல் வேண்டுமே: இவனுக்கு இரண்டுதோள்கள் தாமே உள்ளன; ஆதலால், அவனுமல்லன்' என்று ஐயமும் தெளிவும் தோன்றச் சிந்தித்தனள் என்பதாம். ஒருபொருளைக் கண்டு இதுவோ அதுவோ என்று பலவாறு கருதுகிற ஐயவணி இதில் உள்ளவாறு காண்க. ஆல் - ஈற்றசை.

**சிந்தையின் உறைபவன்** - (எல்லாப்பிராணிகளின்) உள்ளத்தி னும் காமரூபியாகத் தோன்றுபவ னுதலால், மன்மதனுக்கு 'சித்த ஜன்' 'மநோபவன்' என்பவைமுதலியவாக வடமொழியில் பெயர் வழங்குதல் காண்க. அவனுக்கு உருவந்தீர்ந்த வரலாறு, அடுத்த பாட்டின்கீழ் உரைக்கப்படும். இந்திரனுக்கு ஆயிரங்கண்கள், கௌதமமுனிவனது சாபஅநுக்கிரகங்களா லாகியவை. சூரியன் சந்திரன் அக்கினிஎன இறைவனுக்கு முச்சுடரும் முக்கண்களாத லால், செந்தாமரை வெண்டாமரை செவ்வல்லி ஆகிய மலர்கள் போன்ற கண்கள் என்று 'மலர்க்கண்' என்பதற்கு உரைத்துள்ளார். பிரளயக்கடலிற் பள்ளிகொண்டுள்ள திருமாலினது திருநாபியில் தோன்றின தாமரைமலர் பிரளயம் நீங்குமளவில் மலர்ந்திட அதனி னின்று சிருஷ்டிகர்த்தாவான பிரமனும் உலகங்களும் தோன்று தலால், 'உந்தியினுலகளித்தான்' என்ருள். (236)

13. கற்றையஞ் சடையவன் கண்ணிற் காய்தலால்
இற்றவ னன்றுதொட் டின்று காறுந்தான்
நற்றவ மியற்றியவ் வநங்க னல்லுருப்
[1]பெற்றன னுமெனப் பெயர்த்து மெண்ணுவாள்.

(இ - ள்.) கற்றை அம் சடையவன் - தொகுதியான அழகிய சடையையுடைய சிவபிரான், கண்ணின் - நெற்றிக்கண்ணினுல், காய் தலால் - கோபித்து விழித்துப்பார்த்ததனுல், இற்றவன் - அழிந்த வனும், அ அநங்கன் - (அதனுல்) அங்கமில்லாதவனுமான அந்த மன்மதன், அன்று தொட்டு இன்று காறுஉம் - அந்நாள்முதல் இந் நாளளவும், தான்—, நல் தவம் இயற்றி - சிறந்த தவத்தைச் செய்து, (அதனுல்) நல் உரு பெற்றனன் ஆம் - முன்னினும் அழகிய வடி வத்தைப் பெற்ருன்போலும், என-என்று, பெயர்த்துஉம் எண்ணு வாள்-மீண்டும் நினைப்பாள்; (எ - று.)

இராமனை மந்மதனென்று கருதி, சிந்தையினுறைபவற்கு உரு வந்தீர்ந்ததனுல் இவன் மன்மதனல்லனென்று முதலில் தெளிவுற்ற சூர்ப்பணகை, 'மன்மதனினும் அழகு விஞ்சியவன் இவ்விராமன்' என்ற எண்ணம் மனத்திலுறைத்து நிற்பவே, பரமசிவனது நெற் றிக்கண்ணின் நெருப்பினுல் எரிபட்டு உடம்பொழிந்து அரூபி யான மன்மதன் வெகுகாலமாய்ப் பெருந்தவஞ் செய்து அத்தவத் தின் வலிமையால் அதிசுந்தரமான வடிவம் பெற்று இங்ஙனம் வந் திட்டான் என்று எண்ணினள் என்பதாம். இது, தற்குறிப்பேற்ற வணி: ஆம்என்பது, இதற்கு உருபாய் நின்றது. பி - ம்:—[1]பெற் றவன்.

மன்மதன் அநங்கனுன கதை:—முன்னொருகாலத்தில் கைலாச கிரியிற் சிவபிரான், சனகர் முதலிய நால்வர்க்கு யோகநிலையை உணர்த்துதலினிமித்தம் தான யோகஞ்செய்து கொண்டிருக்கை யில், தேவர்களேவலால் தன்மீது மலரம்புகளை யெய்து தனது தவத்தைக் கெடுக்க முயன்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன் நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து சாம்ப

லாய்ப் போம்படி செய்தன னென்பதாம். அநங்கன் - வடசொல்: ந + அங்க + அன். (237)

### 14.—இராமனது கையழகில் ஈடுபாடு.

தரங்களி னமைந்துதாழ்ந் [1]தழகின் சார்பின
மரங்களு நிகர்க்கல மலையும் புல்லிய
உரங்களி னுயர்திசை [2]யோம்பு மானையின்
கரங்களே யிவன்மணிக் [3]கரமென் றுன்னுவாள்.

(இ - ள்.) 'இவன் மணி கரம் - இவனது அழகிய திருக்கைகள், தரங்களின் அமைந்து - (சாமுத்திரிக நூல்களிற் கூறிய) உத்தம விலக்கணங்களின்படி பொருந்தி, தாழ்ந்து - (முழந்தாளளவும்) நீண்டு, அழகின் சார்பின - அழகுக்கு ஒருதங்குமிடமாகவுள்ளன; (ஆதலால்), மரங்கள்உம் நிகர்க்கல - (இவற்றை) மரங்களும் ஒப்பன வல்ல; மலைஉம் புல்லிய - (இவற்றுக்குஉவமையாந் தன்மையில்) மலைகளும் எளியனவாய்விடும்; (ஆதலால், இக்கைகள்), உரங்களின் உயர் திசை ஓம்பும் ஆனையின் கரங்கள் ஏ - வலிமைகளால் மிக்க திக்கைத் தாங்கும் யானைகளின துதிக்கைகளேயாம்,' என்று உன்னுவாள் - என்று நினைப்பாள்; (எ - று.)

செழித்துப் பருத்து வளர்ந்து உருண்டு நீண்ட தன்மையில் மரத்தையும், அழித்தற்குஅரிய வலிமையில் மலையையும் வீரர் கைக்கு உவமைகூறுதல் சாதாரணவழக்காயினும், இவன் கைகள் அத்தன்மைகளில அவற்றினும் மிகமேம்பட்டிருத்தலால், அவை இவற்றிற்கு உவமையாகுந் தகுதி யுடையனவல்ல; எல்லா இலக்கணங்களும நிரம்பிய மிக அழகியனவாகவுள்ள இவன்கைகள் வடிவொப்புமையால் திக்கஜங்களின துதிக்கைகளே போலுமென்று எண்ணினள் என்பதாம. இரண்டாமடியை முதலடி சாதித்தது, தொடர்நிலைச் செய்யுட்குறியணி. இரண்டாமடி - எதிர்நிலையணி. பின்னிரண்டடிகளில் உபமேயத்தை உபமானமாகவே கூறினது, காட்சியணி.

மரங்கள் - வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுக்குங் கல்பக விருட்சங்களுமாம். மணிக்கரம் - நீலமணிபோலும் நிறமுடைய கையென்றும், இரத்தினாபரணமணிதற்கு ஏற்ற கையென்றும் கொள்ளலாம். 'மலையும்புல்லிய' என்றதில் - மலைகள் புறக்கீழ யுடையன; (ஆதலால், நிகராகா) என்ற பொருளுந் தோன்றும். பி - ம்:—[1]உயர்ந்ததாலமா, உயர்ந்துதாலமா, உயர்ந்ததானமார். [2]ஓங்கும். [3]கையென்று. (238)

### 15.—இராமனது தோளழகில் ஈடுபாடு.

வின்மலை வலவன் வீரத் [1]தோளொடும்
கன்மலை நிகர்க்கில கனிந்த நீலத்தின்
தன்மலை [2]யல்லது நாம மேருவும்
பொன்மலை யாதலாற் பொருவ லாதென்பாள்.

(இ - ள்.) 'வில் மலை வல்லவன் - வில்லினால் போர்செய்ய வல்லவனான இவனது, வீரம் தோளொடும் - பகைவெல்லும் வல்லமையுடைய தோள்களுடனே, கல் மலை நிகர்க்கில - கல்மயமான சாதாரணமலைகள் சமமாகமாட்டா; கனிந்த நீலத்தின் நல் மலை அல்லது - முதிர்ந்த [மிகச்சிறந்த] நீலரத்தினமயமான அழகிய மலைகள் (இவற்றுக்கு ஒப்பாகக்கூடுமே) அல்லாமல், நாமம் மேருஉம் - பிரசித்தமான மேருமலையும், பொன் மலை ஆதலால் பொருவலாது - செம்பொன்மயமான மலையாதலால் ஒப்பாகமாட்டாது,' என்பாள் - என்று எண்ணுவாள்; (எ - று.)

திரண்டுருண்டு சுற்றுடைமைபொருந்தி வலிமையோடு நீலமணி போன்று நிகுநிகுப்புள்ள இவன்தோளுக்கு, பொனமலையும் கன்மலையும் நிகராகா: நீலமணிமலையே நிகராதற்கு ஏற்றது: பொன்மலையும் பொன்மயமாக இருத்தலால், நீலமணிபோன்ற இத்தோள்களுக்கு நிறத்தால் ஒப்பாகா என்று எண்ணினள் என்பதாம். முதலடியில், மலையென்பதை மலைய என்னுஞ் செயவெனெச்சத்தின் தொகுத்தலென்றுவது, வினைப்பகுதியே வினையெச்சப்பொருள்பட்டதென்றுவது, மலைதலெனப் பொருள்படும் முதனிலைத்தொழிற்பெய ரென்றுவது கொள்க. இனி, மலை வில் வல்லவன் என மாற்றி, மலைபோன்ற வலியபெரிய வில்லில் வல்லவனெனறலும் ஒன்று. அன்றி, மேருமலையின் அமிசமான சிவதநுசை முறித்தலில் வல்லவனென்றலும் பொருந்தும். பி - ம்:—[1]தோணெடும். [2]அன்றது. (239)

## 16.—இராமனது மார்பினழகில் ஈடுபாடு.

[1]தாளுயர் தாமரைத் [2]தளங்க டம்மொடும்
[3]கேளுயர் நாட்டத்துக் கிரியின் றேற்றத்தான்
தோளொடு [4]தோள்செலத் தொடர்ந்து [5]நோக்குறின்
நீளிய வல்லக [6]ணெடிது மார்[7]பென்பாள்.

(இ - ள்.) தாள் உயர் - நாளத்தோடுகூடி உயர்ந்த, தாமரை - செந்தாமரை மலரினது, தளங்கள் தம்மொடும் - இதழ்களுடனே, கேள் உயர் - ஒற்றுமை [ஒப்புமை] மிக்க, நாட்டத்து - கண்களையும், கிரியின் தோற்றத்தான் - மலைபோலச் சிறந்து தோன்றுகிற காட்சியையு முடையவனான இவனது, தோளொடு தோள் செல - ஒருதோளோடு மற்றொருதோளை அளாவ, தொடர்ந்து நோக்குறின்-தொடர்ச்சியாகப் பார்க்குமிடத்து, கண் நீளிய அல்ல - (எமது) கண்கள் நீண்டனவல்ல; மார்பு நெடிது - மார்பு விசாலமுள்ளது, என்பாள் - என்று எண்ணுவாள்; (எ - று.)

தோள்களிரண்டுக்கும் நடுவிலுள்ள இடமாதலால் புஜாந்தரமென்று வழங்கப்படுகிற மார்பினது பரப்புமுழுவதையும் [இக்கோடியோடு அக்கோடியளவும்] ஒருங்கே நோக்கத் தொடங்கினால், இயல்பில் எவ்வளவுதூரம் கண் பார்வை ஒரேகாலத்திற் செல்லக் கூடுமோ அவ்வளவினும் மார்பின் எல்லை மிகப்பரந்துள்ளதனால், அங்ஙனம் பார்த்தற்கு இயல்வதில்லையென்று, உத்தம விலக்கணப்படி அதிவிசாலமாகவுள்ள இராமனதுமார்பின் தன்மையைக் கருதினளென்

பதாம். தாமரையிதழையும் மலையையும் உவமைகூறியதனால் முன்னி ரண்டடி - உவமையணியாம். கண் - கண்ணின் பார்வைக்கு, இலக் கணை. பறிக்கப்படாத வாடாமலரென்றற்கு, 'தாளுயர் தாமரை' எனப் பட்டது. பி - ம்:—[1]தாளுறு. [2]தடஙகள. [3]கேளுறு. [4]தோளிணை. [5]பார்ககவும், நோக்குற. [6]மிடிய. [7]எனருள். (240)

## 17.—இராமனது திருமுகமண்டலத்தில் ஈடுபாடு.

அதிகநின் றொளிரு மிவ் வழகன் [1]வாண்முகம்
பொதியவிழ் தாமரைப் [2]பூவை யொப்பதோ
கதிர்மதி யாமெனிற் கலைக டேயுமம்
மதியெனின் [3]மதிக்குமோர் மறுவுண் [4]டென்பரால்.

(இ - ள்.) அதிகம் நின்று ஒளிரும் - மிகுதியாய் நிலைபெற்று [ஒரேவகையாக] விளங்குகிற, இ அழகன் வாள் முகம் - சுந்தரமூர்த்தி யான இவனது ஒளியுள்ள முகம், பொதி அவிழ் தாமரை பூவை ஒப் பது ஓ - முறுக்கு விரிந்த தாமரைமலரை ஒக்குமோ? [அதனை உவ மையாகக் கொள்ளாது என்றபடி]: கதிர் மதி ஆம் எனின் - ஒளியை யுடைய சந்திரனென்று உவமை சொல்வோமென்றால், கலைகள் தேயும்-(அச்சந்திரனுக்குக்) கலைகள் (நாள்தோறும்) தேய்ந்துவிடும்; (அன்றி), அ மதி எனின் அந்த [பதினாறுகலையும் நிரம்பிய] பூர்ண சந்திரனென்று ஒப்புமை கூறுவோமென்றால், மதிக்கு உம் ஓர் மறு உண்டு என்பர் - அச்சந்திரமண்டலத்துக்கும் களங்கமொன்று உளளதென்று (யாவரும் பிரசித்தமாக) இகழ்ந்து கூறுவர், (என்று எண்ணினாள்); (எ - று.)—ஆல் - ஈற்றசை.

முன்பின் பாடல்களை நோக்கி 'என்று எண்ணினாள்' என்பது வருவித்து முடிக்கப்பட்டது. அன்றி, பின்பாட்டிலுள்ள 'என்கின் றாள' என்பதையே இதற்கும் பயனிலையாகக் கூட்டி முடிப்பினும் அமையும். இனி, [4] 'என்பளால்' என்று பாடங்கொண்டு, என்று எண்ணுவாள் என்று உரைத்தல் பொருத்தமாம்.

அதிகமாக ஒளிர்கின்ற இவன் முகத்திற்குத் தாமரை ஒப்பா காது: இனி, உலகத்திற் சாதாரணமாகச் சொல்லுகிறபடி சந்திரன் இவன் முகத்திற்கு உவமையென்றால், அச்சந்திரனுக்கு நாளடை விற் கலைகள் குறைதலும் வளர்தலும் இயல்பு ஆதலால், அது, என்றும் ஒருபடியாக விளங்குகிற அல்லது நாளடைவில் ஒளி வளர்தலைமாத்திரமே பெறுகிற இவன்முகத்திற்கு ஈடாகாது; இனி, கலைநிறைந்த பூர்ணசந்திரன் அந்நிலையில் உவமையென்றால், நீங்காதகளங்கத்தோடு கூடிய அதுவும், மாசுமறுவற்ற இவன் முகத்துக்கு ஒப்பாக அமையாது எனபதாம். முன்னிரண்டடிகட்கு இபபடி என்றும் மலர்ந்து மாசற வாடாதுவிளங்குகிற முகம் அச் சந்திரனாற் குவிதலையும் அவனுக்கு எதிரான சூரியனால் மலர்தலை யும் மாறிமாறிபபெறுகிற தாமரைமலர்க்கு ஒப்பு என்பது தகு தியோ? என்றனள் எனக் கருத்துவிரிக்கலாம்; எதிர்நிலையணி. கலைகள்தேயும், மறுவுண்டு என உபமேயத்திலும் உபமானத்

துக்கு உள்ள வேற்றுமையை விளக்கினது - வேற்றுமையணியாம். பி-ம:—[1]ஆண். [2]பூத்தபொங்கிருங். [3]அதற்கொரு, அதற்குமோர்.

## 18—இராமனது தவவடிவத்தில் ஈடுபாடு.

எவன்செய [1]வினியவிவ் வழகை யெய்தினேன்
அவஞ்[2]செயத் திருவுடம் [3]பலச நோற்கின்றான்
நவஞ்செயத் தகையவிந் நளின நாட்டத்தான்
தவஞ்செயத் தவஞ்செய்த தவமெ னென்கின்றாள்.

(இ - ள். 'இனிய இ அழகை எய்தினேன் - இனிமையான இப்படிப்பட்ட (நிறைந்த) அழகை அடைந்த இவன், எவன் செய- (இந்த அழகினும் மிக்கதாக) எதைப்பெறுதற்காக, அவம்செய - (இவ்வழகு) வீண்பட, திரு உடம்பு அலச - அழகிய உடம்பு வருந்த, நோற்கின்றான் - தவஞ்செய்கிறான்? நவம் செய தகைய - (பார்க்குந்தோறும்) புதுமைவிளைக்கத்தக்க, இ நளினம் நாட்டத்தான் - தாமரைமலர்கள்போலுங் கண்களையுடைய இவன், தவம் செய-தவஞ்செய்யும்படி, தவம் செய்த தவம் என் - அத்தவந்தான் செய்த தவம் யாதோ?' என்கின்றாள் - என்று எண்ணுகிறாள்;

மரவுரியுடையுஞ் சடைமுடியுமாகவுள்ள இராமனது தவவேடத்திற் கருத்தைச் செலுத்தின சூர்ப்பணகை, 'எல்லாப்பொருள்களினுஞ் சிறந்த இத்திவ்வியசௌந்தரியத்தைப் பெற்ற இவன், இதனினுஞ் சிறந்தபொருள் எதுவும் உலகத்தில் இல்லையாதலால், யாது பெறும்பொருட்டு இவ்வழகை வீணாக்கித் திருமேனி வருந்தத் தவஞ் செய்கின்றனனோ? அதுநிற்க: இப்புருடோத்தமன் தவத்தை யேற்றுக்கொள்ளும்படி அத்தவந்தான் யாதுதவஞ்செய்து இவனை யடைந்ததோ?' என்று சிந்தித்தனள் என்பதாம். எவன செய நோற்கின்றான் என்று இயையும். எவன் - வினாவடியாப் பிறந்த அஃறிணைப்பொதுக் குறிப்புவினைமுற்றாலணையும் பெயர். நளின நாட்டத்தான் - புண்டரீகாக்ஷன். பி - ம:—[1]இனியவன். [2]செய்து. [3]அசைய. 'அவன், நவன், தவன்' என மூன்றடிகளிலும் போலியாகப் படிப்பாரு முண்டு. (242)

## 19.—இராமனது திருவடியழகில் ஈடுபாடு.

உடுத்தநீ ராடைய ளுருவச் செவ்வியள்
பிடித்தரு நடையினள் பெண்மை நன்றிவன்
அடித்தலந் தீண்டலி னவனிக் கம்மயிர்
பொடித்தன [1]போலுமிப் புல்லென் றுன்னுவாள்.

(இ - ள்.) 'உடுத்த நீர் ஆடையள் - தான் உடுத்துக்கொண்டுள்ள [எப்புறத்துஞ்சூழ்ந்த] கடலாகிய சேலையையுடையவளும், உருவம் செவ்வியள்-வடிவத்தின் அழகை யுடையவளும், பிடி தரு நடையினள் - பெண்யானையின் நடையையொத்த நடையையுடையவளுமாகிய பூமிதேவியினது, பெண்மை - பெண்தன்மை, நன்று - நன்றாயிருந்தது: இ புல் - (பூமியில் முளைத்துக் காணப்படுகின்ற) இந்தப் புறகள்,—இவன் அடித்தலம் தீண்டலின-இவனது திருவடி

கள் பரிசித்தலால், அவனிக்கு - அப்பூமிதேவிக்கு, அம் மயிர்-அழகிய மயிர்கள், பொடித்தன போலும்-சிலிர்த்தனவற்றை ஒக்கும்,' என்று உன்னுவாள் என்று நினைப்பாள்; (எ-று.)

பூமியில் தோன்றியுள்ள புற்கள் யாவும், இவ்வாண்மகனது சீர் பாதங்கள் பூமிதேவியினமீது பட்டமாத்திரத்தில் அவள் மிக்க மகிழ்ச்சியை யடைந்து இவனிடம் காதல்விஞ்சி உடம்புமுழுவதும் புளகமடைய அங்ஙனஞ்சிலிர்ப்புற்ற மயிர்களே யென்றும், இபபடி புருடோத்தமனது திருவடி தன்மீது படப்பெற்று ஆநந்தமடைந்த பூமிதேவியின் பாக்கியமே பாக்கிய மென்றும் எண்ணுவள் என்ப தாம்; தற்குறிப்பேற்றவணி. 'பெண்மை நன்று' என்று, பூமிதேவி பெண்ணாய்ப்பிறந்த பயனைப் பெற்றமையைப் பாராட்டியதனால், உல கத்திற் பெண்பிறப்பெடுத்தலின் பயன் இப்படிப்பட்டவனது திருவடி தீண்டப்பெறுதலே யென்று தான் அதனிடத்து விருப்பங் கொண்டமை தோன்றும். பூமியைச்சூழ்ந்துள்ள கடலைப் பூமியாகிய பெண் உடுக்கும் ஆடையெனறல், கவிமரபு. பூமிதேவி என்பது, பூலோ கத்துக்கு உரிய பெண்தெய்வத்தையாதலால், அவள், 'உருவச்செவ் வியள்' என்றும், 'பிடித்தருநடையினள்' என்றும் விசேடிக்கப்பட் டாள். பி - ம்:—[1]நிகர்க்குமால். (243)

## 20.—இராமனது திருமேனியொளியில் ஈடுபாடு.

[1]வாணிலை மருங்குலான் வயங்கு சோதியைக்
[2]காணல னேகொலோ கதிரி னாயகன்
சே[3]ணெலாம் புல்லொளி செலுத்திச் [4]சிந்தையின்
நாணலன் மீமிசை [5]நடக்கின் றானென்றாள்.

(இ - ள்.) 'வாள் நிலை மருங்குலான் - உடைவாள் நிலைபெற்ற இடையையுடைய இவனது, வயங்கு சோதியை - (திருமேனியில்) விளங்குகிற திவ்விய காந்தியை, கதிரின் நாயகன் - ஒளிக்குத் தலைவனான சூரியன், காணலன்ஏ கொலோ-பார்த்திலனேபோலும்: (ஆகையினாலேயே), சிந்தையில் நாணலன் - மனத்தில் வெட்கப் படாதவனாய், சேண் எலாம் புல் ஒளி செலுத்தி - நெடுந்தூரத் தளவும் அற்பமான (தனது) ஒளியைச் செல்லவிட்டுக்கொண்டு, மீமிசை நடக்கின்றான் - மிக மேலே [வானத்திற்] செல்லுகிறான்' என்றாள்—; (எ - று.)

இவ்வாறு ஒளிமிகுதியைக் கண்டுள்ளானாயின் சூரியன் மிக வெள்கி ஒளித்தலேயொழிய இங்ஙனம் முன்னின்று தனது அற்ப மான ஒளியை வீசிக்கொண்டு நடவானென்று எண்ணினளென் பதாம் சூரியனைப் பழித்ததனால், இராமபிரானுடைய திருமேனி யொளியின்மிகுதி பெறப்படுதலால், இது வஞ்சப்புகழ்ச்சியணியின் பாற்படும். முச்சுடருள் மற்றையிருசுடராகிய சந்திர அக்கினியர் போலப் பதினாறு எழு கிரணங்களை யுடையனாகாமல் சூரியன் அவற்றிற்கெல்லாம் ஒளியைக் கொடுத்துவாங்கும் ஆயிரங்கிரணங் களையுடையனாகையால், 'கதிரின்நாயகன்' எனப்பட்டான். சூரிய னொளியையும் தன்னு ளடக்கிக்கொள்ளுதலால், 'வயங்குசோதி'

என்றது: "வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறைய" என்றார், அயோத்தியாகாண்டத்தும். பி-ம்:—[1]வாணிலா முறுவலன், வாணிலைமருங்கினன். [2]காணலானேகொலோ, காணலனேகொலாம். [3]உலாம். [4]சிந்தையுள். [5]நடக்குமென்கின்றாள். சில பிரதிகளில் "நாறிய" (24), "நறகலை" (22), தொடையமை" (23), "வாணிலை" (20), "குப்புறற்கு" (21) என்ற முறையிற் பாடல்கள் உள்ளன. (244)

## 21.—இராமனது அதரசௌந்தரியத்தில் ஈடுபாடு.

குப்புறற் கரியமாக் குன்றை வென்றுயர்
இப்பெருந் தோளவ னிதழுக் [1]கேற்பதோர்
ஒப்பென வுலகமே [2]லுரைக்க வொண்ணுமோ
துப்பினிற் றுப்புடை [3]யாதைச் சொல்லுகேன்.

(இ - ள்.) குப்புறற்கு அரிய - கடத்தற்கு அருமையான, மா குன்றை - பெரிய மலையை, வென்று-(தமக்கு ஒப்பாகாதபடி) சயித்து, உயர் - (அதனினும்) உயர்ந்துள்ள, இ பெரு தோளவன் - பெரிய தோள்களையுடைய இவனது, இதழுக்கு - அதரத்துக்கு, உலகமேல் - உலகத்தில், (ஒருபொருளை), ஏற்பது ஓர் ஒப்பு என-தகுதியானதோர் உவமைப்பொருளென்று, உரைக்க - சொல்வதற்கு, ஒண்ணும் ஓ - கூடுமோ? [கூடாது]: (ஏனெனில்), - துப்பினில் துப்பு உடை - பவழத்தினும் வலிமையுடைய [மேம்பட்ட], யாதை - எதை, சொல்லுகேன் - சொல்லுவேன [எதையுஞ் சொல்லவல்லேனல்லேன்]; (எ-று.) —'என்றாள்' என வருவித்து முடிக்க.

உலகத்திற் சாதாரணமாக அதரத்திற்குச் செம்மைபற்றிப் பவழம் சிறந்தஉவமையாக எடுத்துக்காட்டப்படுகின்றது; அப் பவழத்தை மிகச்சிறந்துள்ள இவனிதழுக்கு ஒப்பாகக்கூறுவதோ தகாது: அதனினும் மேலாக எதுவும் காணப்படவில்லையென்பதாம். இதழுக்கு உவமையாகும் துப்பினை இராமனிதழுக்கு ஒப்பாகாது என மறுத்துக்கூறினமையால் இது - எதிர்நிலையணி. இதனால், இவ்வதரம் ஒப்பற்றதென்று கூறியவாறு. [2]உரைக்கினுள்ளமே துப்பெனில் எனப்பாடங்கொண்டு, உரைக்கின் - (எவரேனும் பவழத்தை உவமை) கூறினால், உள்ளமே துப்புஎனில் - மனமே! காறியுமிழ்வாயென்ன வேண்டியிருத்தலின் என்று உரைப்பாருமுளர்: அவ்வுரைக்கு—பவழத்துக்கு 'துப்பு' என வழங்குகிறதொரு இடுகுறிப் பெயர்க்கு, இவன் அதரத்துக்கு ஒப்பாகாமல் இகழ்ந்து துப்பப்படுதலால் 'துப்பு' என்று பெயர்வந்ததென்று ஒருகாரணத்தைக் கற்பித்துக்கொண்டு, அதனால் 'இதழுக்கேற்பதோர் ஒப்பென வுலகமேலுரைக்கின் உள்ளமே துப்பெனில்' எனக் கூறியதென்க; இதில், பிறிநிலைநவிற்சியணி யெனப்படுகிற நிருக்தியலங்காரம் தோன்றுகின்றது: அதனிலக்கணம், பெயர்களுக்கு உறுப்பு ஆற்றலால வேறொரு காரணப்பொருளைக் கற்பித்து உரைத்தல்: இனி, இப்பாடத்துக்கே இவனுடைய அதரத்துக்கு ஏற்றதோர் ஒப்பென்று உலகத்தில் (யாதாயினும் ஒருபொருளை ஒருவர்) கூறினால் அங்ஙனங் கூறத் துணிந்த அவர் மனமே கடுமையானதெனப்படுமானால், இதனினும்

மேன்மையுடைய எதனைச் சொல்வேன்? என்றும் பொருள் கூற லாம். பி - ம்:—[1]ஒப்பதோர். [2]உரைக்கவொண்ணுமேல், உரைக்க வொண்ணுமேல், உரைக்கினெண்ணுமோ. [3]யாரை. (245)

## 22.—இராமனது இடையழகில் ஈடுபாடு.

நற்கலை மதியுற வயங்கு நம்பிதன்
[1]எற்கலை திருவரை யெய்தி யேமுற
வற்கலை நோற்றன மாசி லாமணிப்
பொற்கலை நோற்றில போலு மாலென்றாள்.

(இ - ள்.) நல் கலை மதி உற - சிறந்த கலைகள் நிரம்பிய பூர்ண சந்திரன்போல, வயங்கும் விளங்குகிற, நம்பிதன் - இவ்வாண்மகனது, எல் கலை திருஅரை-சூரியனும் (இதன் ஒளிமிகுதியை நோக்கி) நிலை குலையும்படியான [மிக்க ஒளியையுடைய] அழகிய இடையை, எய்தி - சேர்ந்து, ஏம் உற - களிப்படைதற்கு, வற்கலை நோற்றன - மரவுரி யாடைகள் தவஞ்செய்துள்ளன; மாசு இலா மணி பொன் கலை நோற்றில போலும் - குற்றமில்லாத அழகிய பொன்மயமான பீதாம் பரங்கள் தவஞ்செய்தில போலும், என்றாள் - என்று எண்ணினாள்; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

இவன் தனது திருவரையில் மரவுரியாடையை உடுத்துள்ளதை நோக்கி, 'இவனது இடையைச்சேர்ந்து பேராநந்தம்பெறுதற்கு மர வுரியாடை செய்த தவம் பொற்பட்டாடை செய்யவில்லை போலும்; அதனாலேயே, இவன் பொற்பட்டாடையை உடுத்திடாது மரவுரியை உடுத்துள்ளான்' என்று எண்ணினளென்பதாம்: மிக்க தவஞ் செய் திருந்தா லன்றி உத்தமனான இவனைச் சேர்தல் கூடாதென்று கரு தியமை வெளியாம். இச்செய்யுள் - தன்மைத்தற்குறிப்பேற்றவணி: திரிபு என்னுஞ் சொல்லணியுங் காண்க. முதலடியில், கலை - சந்திரன் பங்கு; நான்காமடியில், கலை-ஆடை; இரண்டாமடியில், கலையென்னும் வினைப்பகுதி-காரியப்பொருளில் வந்த வினைத்தொகை. இனி, 'எற் கலைத்திருவரை என்ற பாடத்துக்கு-சூரியன் போன்ற ஒளியையுடைய திருவரையென்க. வற்கலை = வல்கலா: இது, பூர்ஜமென்னும் ஒருவகை மரத்தினின்றும் உரித்து எடுக்கப்படும் பட்டையா லமைவது. (246)

## 23.—இராமனது முடியழகில் ஈடுபாடு.

தொடையமை நெடுமழைத் தொங்க லாமெனக்
கடைகுழன் றிடைநெறி கரிய குஞ்சியைச்
சடையெனப் [1]புனைந்தில னென்னிற் றையலார்
உடையுயி [2]ருடையுமென் றுன்னிநிற் கின்றாள்.

(இ - ள்.) தொடை அமை நெடு மழை தொங்கல் ஆம் என - (ஒழுங்காகத்) தொடர்ச்சிபபட்டுப் பொருந்திய நீண்ட மேகக்கூறு களின் கீழிறங்கியவரிசையா மென்று உவமைசொல்லும்படி, கடை குழன்று-நுனிசுருண்டு, இடை நெறி கரிய-இடையிடையே நெறிப்புக் கொண்டு கரியதாகவுள்ள, குஞ்சியை - (தனது) தலைமயிர் முடியை, சடை என புனைந்திலன் என்னில் - (இவன்) சடையாகத் தரித்திரா

ளுயின், தையலாருடை உயிர் உடையும் - (உலகத்திலுள்ள) மகளிருடைய உயிர்கள் அழிந்திடும், என்று—, உன்னி நிற்கின்றாள் - சிந்தித்துத் திகைத்து நிற்பவளானாள்; (எ - று.)

அலங்கரித்துமுடிக்கப்படாமற் சடையாகக் கட்டப்பட்டுள்ள நிலையில் தன்மனத்தையுருக்குகிற இக்கேசத்தி னழகு அலங்கரித்து முடிக்கப்படுமிடத்து மகளிரனைவருயிரையும் ஒழித்திடு மென்றனள் என்க. "மைவண்ணநறுங்குஞ்சி" என்றார், திருமங்கைமனனனும். கேசம் சடையாக்கப்பட்டமைக்குக் காரணங்கற்பித்துக் கூறியது எனக்கொண்டு, ஒருசாரார் ஏதுத்தற்குறிப்பேற்றவணி யென்பர். பி-ம்:—[1]கரந்திலன். [2]யாவையுமுடையுமாலென்றாள். (247)

## 24.—இராமனது முழுமெய்யழகில் ஈடுபாடு.

நாறிய நகையணி நல்ல புல்லினல்
ஏறிய [1]செவ்விமே லியற்று மோவெனா
மாறகன் முழுமணிக் கரசின் மாட்சிதான்
வேறொரு மணியினல் விளங்கு மோவென்றாள்.

(இ - ள்.) 'நாறிய நகை - வெளித்தோன்றுகிற ஒளியையுடைய, நல்ல அணி - சிறந்தனவாகிய ஆபரணங்கள், புல்லினல் - (இவன் திருமேனியின்மீது) சேர்ந்தால், (அவை இத்திருமேனிக்கு), ஏறிய செவ்வி-மிக்க அழகை, மேல் இயற்றுமஓ-பினனும் செய்யக்கூடுமோ?' எனா - என்று சொல்லி,—'மாறு அகல் முழு மணிக்குஅரசின் மாட்சி தான்-ஒப்பில்லாத நல்லிலக்கணம் நிரம்பின சிறந்த இரத்தினத்தின் அழகு, வேறு ஒரு மணியினல்-வேறோர் இரத்தினத்தைத் தன்மீது அணிவதனல், விளங்கும்ஓ-(முன்னிலும் மேலாக) ஒளிவிடுமோ? ஒளி விடாதன்றோ]?' என்றாள்-எனறும் எண்ணினள்; (எ-று.)

'இயல்பில்மிகச்சிறந்து வெகு அழகியதாய் விளங்குகிற முழு மணிக்கு அழகைமிகுவித்தற்கு வேறொருமணி வேண்டாமை போல இயல்பில் அழகின் முடிவெல்லையை யடைந்துள்ளவனுக்கு அழகு செய்ய அணிகலம் வேண்டுவதில்லை' என்று நிச்சயித்தனளென்ப தாம். முன்னிரண்டடியோடு பின்னிரண்டடி பிம்பப் பிரதிபிம்பபாவந் தோன்ற இயைவதனல், இது - எடுத்துக்காட்டுவமையணி. இங்கு, "முற்ற, முழுமணிப்பூணுக்குப் பூண் வேண்டாயாரே, அழகுக் கழகு செய்வார்" என்பது, அறியத்தககது. பி - ம்:—[1]செவ்வியன், செவ்வியின். 'செவ்வியின்' என்பதில், இன்சாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது. (248)

## 25.—இராமன் திருமேனியின் நல்லிலக்கணவமைதியில் ஈடுபாடு.

கரந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான்முகன் [1]பழிப்புற் றனரோ
[2]இரந்திவ னிணையடிப் பொடியு [3]மேற்கலாப்
புரந்தர னுலகெலாம் புரக்கின் றானென்றாள்.

(இ - ள்.) இலக்கணம் - உத்தமவிலக்கணங்களை யெல்லாம், கரந்திலன் - ஒளித்திடாமல் [மிச்சமில்லாமல் என்றபடி], எடுத்து காட்டிய - (இவனுடம்பில்) உண்டாகி விளங்கச்செய்த, பரம் தரு நான்முகன் - மேன்மைபொருந்தின பிரமதேவன், பழிப்பு உற்றான் - நிந்தனையடைந்தான்; (ஏனெனில்),— இவன் - இவனது, இணை அடி - ஒன்றோடொன்றுஒத்த திருவடிகளின், பொடிஉம் - துகளுககும், இரந்து ஏற்கலா - (தான் ஈடாக) வேண்டியும் அங்ஙனம் ஈடாகப் பெறாத, புரந்தரன் - இந்திரன், உலகு எலாம புரககின்றான்-எல்லாவுலகங்களையும் ஆளுகிறான், என்றாள் - என்றுஎண்ணினாள்; (எ - று.)

உத்தமவிலக்கணவமைதியில் இவனது கால்துகளுக்கும் ஒப்பாதற்கு ஏலாத இந்திரன் சகலலோகங்களையும் ஆண்டுகொண்டிருக்க, உத்தமவிலக்கணம் முழுவதும் நிரம்பபெற்றுள்ள இவன ஓராட்சியுமின்றி வனத்தில் வசிககின்றன னாதலால், சாமுத்திரிகலட்சணத்துக்குஏற்ப அவரவர்பயன் பெறுமாறு படைத்தல்தொழில்செய்தலை மேறகொண்ட பிரமன் இவ்விடயத்தில் தவறிப் பழிக்கத்தக்கவனாயினனென்பதாம். இனி, முதலடிக்கு - சாமுத்திரிகலக்ஷணங்களை ஒளித்திடாமற் பயனோடுவிளக்கிய என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. இந்திரன் தேவலோகத்தரசாட்சிக்குமாத்திரமே யன்றி மூவுலகத்தரசாட்சிக்கும் உரியவனென்பது, நூல்துணிபு. இலக்கணம் - லக்ஷணம். 'பரந்தருநான்முகன்' என்பதற்கு - மேலானகடவுளாகிய திருமாலாற் பெறப்பட்ட பிரமனென்றலுமாம். பி-ம்:—[1]பழியுறறான். [2]இருந்தவன். [3]ஒக்கிலாய், ஏற்கிலா. (249)

## 26.—சூர்ப்பணகை இராமனிடம் வேட்கை விஞ்சிக் கலங்குதல்.

நீத்தமும் பரவையுங் குறுக நெஞ்சிடைக்
கோத்தவன் புணர்விடை [1]குளிப்ப மீக்கொள
[2]ஏத்தவும் [3]புரியவொன் றீக லான்பொருள்
காத்தவன் புகழெனத் தேயுங் கற்பினாள்.

(இ - ள்.) நீத்தம்உம் பரவைஉம் குறுக - ஆற்றுப்பெருக்கும் கடல்வெள்ளமும் சிறியதென்னும்படி, நெஞ்சிடை கோத்த - (இங்ஙனம் பலவாறு சிந்தித்துத் தன) மனத்திலே தொடாச்சியாகக் கொண்ட, அன்பு - அனபின் பெருக்கு, உணர்வு இடை குளிப்ப மீ கொள - அறிவு தன்னுள்ளே மூழ்கும்படி அதிகபபட,—ஏத்த உம் - (தன்னைத்) துதிககவும், புரிய ஒனறு ஈகலான் - (ஏத்தினவன்) விரும்பும்படி ஒருசிறிது பொருளையுங் கொடுத்திடாதவனாய், பொருள் காத்தவன் - அப்பொருளைப பாதுகாத்துவரும் உலோபியினது, புகழ் என - கீர்த்தி (வரவரக்குறைதல்) போல, தேயும் - வரவரக்குறைகிற, கறபினாள் - கற்புநிலைமையையுடையவளாயினாள், (சூர்ப்பணகை); (எ - று.)—கறபினாள் என்பதைக் குறிப்பு முற்றெச்சமாககொண்டு, வருங் கவியோடு குளகமாககி, "தேயுங் கறபினளாய் ஓவியம்போன்றனள" என்று இயைத்து முடிப்பினும் அமையும்.

கீழ்க்கூறியபடி சூர்ப்பணகை இராமனது பேரழகைக் குறித்துப் பலவாறு மேல்மேலெண்ணி ஆற்றுப்பெருக்கினளவினுங் கடலினளவினும் மிகுதியாக அவன்பக்கல் ஆசைவெள்ளத்தைக் கொண்டதனால், அறிவழிந்து கற்பொழிந்தனள் என்பதாம். வறியவனாகவன்றிச் செல்வமுடையவனாயிருந்தும் தான தருமங்களிற் பொருட்செலவுசெய்யாமல் அப்பொருளைப் பாதுகாத்துவருகிற உலோபியின் புகழ் தேய்தல், கற்புத்தேய்தற்கு உவமை. கற்பு - கல்லின் தன்மை: உறுதிப்பாடு என்னலுமாம். முன்னிரண்டடி - உயர்வுநவிற்சியணி; பின்னிரண்டடி - உவமையணி. [2]ஏத்தறம் என்று பாடமாயின், ஏத்து அறம் எனப் பிரிந்து, சிறப்பித்துச் சொல்லப்படுகிற தருமமென்று பொருள். பி-ம்:—[1]குளித்து, குளிக்க. [2]ஏத்தவம். [3]பரிவின். (250)

## 27.—அப்பொழுதைய சூர்ப்பணகையின் நிலைமை

வான்றனில் [1]வரைந்ததோர் மாத ரோவியம்
போன்றனள் [2]புலர்ந்தனள் புழுங்கு நெஞ்சினள்
[3]தோன்றறன் சுடர்மணித் தோளி னாட்டங்கள்
[4]ஊன்றினள் பறிக்கவோ ரூற்றம் பெற்றிலள்.

(இ - ள்.) வான்தனில் வரைந்தது ஓர் மாதர் ஓவியம் போன்றனள் - ஆகாயத்திலெழுதப்பட்டதொரு பெண்வடிவமான சித்திரத்தையொத்து [திகைத்துநின்று], புலர்ந்தனள் - மனம்வாடி, புழுங்கு நெஞ்சினள் - (காமதாபத்தால்) வெதும்பின மனமுடையவளாய்,—தோன்றல் தன் சுடர் மணி தோளில் - இராமபிரானது விளங்குகிற அழகிய திருத்தோளில், நாட்டங்கள் ஊன்றினள் - (தன்) கண்களைப் பதிபவைத்தவளாய், - பறிக்க ஓர் ஊற்றம் பெற்றிலள் - (அவற்றை) மீட்டுவாங்குதற்கு ஏற்றதொரு வலிமையைப் பெறாதவளாயினாள், (சூர்ப்பணகை): (எ - று.)

சித்திரப்பாவைபோலத் திகைத்துநின்று மெலிந்து மனந்தவித்து இராமன் தோள்களில்வைத்த கண்பார்வையை வாங்கமாட்டாது காதல்கைம்மிக்கன ளென்பதாம். இவளுக்கு உபமானமாகக்கூறிய ஓவியத்தை 'வான்றனில் வரைந்தது' என்ற அடைமொழி கொடுத்துக் கூறியதனால் இவள் ஆகாய வழியாக வந்தனளென்பது விளங்கும்; மேல் 30 - ஆம் பாட்டில் "பொங்கொளி விசும்பினிற் பொலியத் தோன்றினாள்" என்பது முதலாகக் கூறப்படுவனவுங் காண்க. இங்கே, இவளுக்குச் சித்திரப்பாவை - செயலறுதல்மாத்திரத்துக்கு உவமம்; மிக்க அழகுடைமைக்கு ஒப்பன்று: இவள் இச்சமயத்தில் தன்னுடைய இயற்கைக்கோரரூபத்துடனேயே யிருந்தன ளாதலால்; அத்தன்மை, மேல் 29 - ஆம் பாடலால் தெளியப்படும். ஊற்றம் - ஊன்றுகோல், பற்றுக்கோடு; இங்கே, வலிமை யென்ற பொருளில் இலக்கணை. முதலடி - இல்பொருளுவமை. பி - ம்:—[1]வளர்ந்ததோர். [2]நின்றனள். [3]தோன்றல. [4]ஊன்றின. (251)

## 28.—சூர்ப்பணகை இராமனைச் சேரத்துணிந்து அவனெதிரிற்செல்ல வழிதேடல்.

நின்றன [1]ளிருந்தவ னெடிய மார்பகம்
ஒன்றுவெ னன்றெனி னமுத [2]முண்ணினும்
பொன்றுவென் போக்கினி யரிது [3]போன்மெனுச்
சென்றெதிர் நிற்பதோர் செய்கை [4]தேடுவாள்.

(இ - ள்.) நின்றனள் - (இராமனது தோளைப் பார்த்தபடியே) நின்ற அச்சூர்ப்பணகை,—'இருந்தவன் - இங்குஉள்ளவனாகிய இவனது, நெடிய மார்பு அகம் - பரந்த மார்பினிடத்தை, ஒன்றுவென்- (நான்) சேர்ந்துதழுவுவேன்; அன்று எனின் - அங்ஙனந்தழுவக் கிடைத்திடாதாயின், அமுதம்உண்ணின்உம் பொன்றுவென் - (சாவாமருந்தாகிய) தேவாமிருதத்தை உண்டாலும் பிழையாம லிறப்பேன்: இனி போக்கு அரிது போன்ம் - இனிமேல் (எனக்கு) வேறு விதம் இல்லைபோலும்,' எனு - என்று எண்ணி, எதிர் சென்று நிற்பது ஓர் செய்கை தேடுவாள் - அவனெதிரில் தான்போய் நிற்கும் படியானதோருபாயத்தை ஆராய்பவளானாள்; (எ - று.)

இவனை நாயகனாகப்பெறுவிட்டால் உயிரையிழப்பேனென்று துணிந்து அவனெதிரிற்போய் நிற்றற்குஉரிய உபாயத்தை ஆலோசித்தன ளென்பதாம். 'மார்பகமொன்றுவென், அன்றெனின் அமுதமுண்கினும் பொன்றுவென்' என்றதனால், இராமனது சேர்க்கையாலாகும் இன்பத்தைத் தேவாமிருதத்தினும் மிக இனியதும் விசேடப்பயன் தருவதுமாகக் கருதியமை தோன்றும். பி - ம்:— [1]நின்றவன். [2]உண்கினும். [3]போல். [4]தேடுவான். (252)

## 29.—சூர்ப்பணகை அழகியவடிவங்கொள்ளக் கருதுதல்.

எயிறுடை யரக்கியெவ் வுயிரு மிட்டதோர்
வயிறுடை யா[1]ளென மறுக்கு மாதலால்
குயிறொடர் குதலையோர் கொவ்வைச் [2]செவ்விவாய்
மயிறொட ரியலியாய் [3]மருவ னன்றெனு.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'எயிறு உடை அரக்கி-கோரப்பற்களையுடைய இந்த ராக்ஷசி, எ உயிர்உம் இட்டது ஓர்வயிறு உடையாள்-எல்லாப்பிராணிகளையும் போகட்டதொரு வயிறறையுடையவள்', என-என்று எண்ணி வெறுத்து, மறுக்கும் - (என்னை இவன் ஏற்றுக்கொள்ளாமல்) மறுக்கக்கூடும்: ஆதலால்—,—குயில் தொடர் குதலை-குயில் கூவுதலையொத்த மழலைச்சொற்களையும், கொவ்வை செவ்வி வாய்-கொவ்வைப் பழம்போலச் சிவந்த அழகிய அதரத்தையு முடைய, ஓர் மயில் தொடர் இயலி ஆய் - மயிலின் சாயலையொத்த சாயலுள்ள ஓர் அழகிய மங்கைவடிவங்கொண்டு, மருவல்-(நான் இவனருகிற்) செல்லுதல், நன்று-நல்லது', எனு - என்று எண்ணி,—(எ-று.)—"பாவியா ஆய்ந்தனள் தோன்றினள்" என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

இவன் என்னைக் கொடிய அரக்கியென்றெண்ணித் தள்ளிவிட வொண்ணுதபடி 'நான் சிறந்தகட்டழகியின் வடிவங்கொண்டு செல்லவேண்டும்' என்று எண்ணினள் என்பதாம். எவ்வுயிருமிட்ட தோர் வயிறுடையாள் - பலவகைப்பிராணிகளையும் மிகுதியாகத் தின்பவ ளென்றபடி. குதலையும் மழலையும் ஒருபொருளன வென்பது, ஒருசாரார் துணிபு; பரிமேலழகர் கருத்தும் இதுவே: மற்றொரு சாரார் 'குதலை-எழுத்துவடிவு பெருதது' என்றும், 'மழலை-எழுத்து வடிவம் பெற்றுச் சொல்வடிவுபெருதது' என்றும் வேறுபாடு கூறுவர். பி-ம் :—[1] எனின். [2] வாயிள. [3] வருகை. (253)

## 30.—சூர்ப்பணகை மந்திரபலத்தால் அழகிய வடிவுபெறுதல்.

பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா
அங்கையி னுயமந் திரத்தை யாய்ந்தனள்
திங்களிற் சிறந்தொளிர் முகத்தள் செவ்வியள்
பொங்கொளி விசும்பினிற் பொலியத் தோன்றினாள்.

(இ - ள்.) பங்கயம் செல்வியை - செந்தாமரைமலரில்வாழ்கிற செல்வத்துக்கு உரிய தெய்வமான திருமகளை, மனத்து பாவியா - (தன்) மனத்திலே தியானித்து, அம் கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்தனள - தனது அகங்கை வசப்பட்டுள்ள (அவ்விலக்குமி விடய மான) மந்திரத்தைஜபித்து, (அதன் மகிமையால்), திங்களின் சிறந்து ஒளிர் முகத்தள் - சந்திரனினும் மேம்பட்டு விளங்குகிற முகமுடைய வளும், செவ்வியள் - அழகியவளுமாய், பொங்கு ஒளி விசும்பினில் பொலிய-மிக்க (தன்உடம்பின்) ஒளி ஆகாயத்தில் விளங்க, தோன்றினாள் - வடிவம்மாறி நின்றாள்; (எ - று.)

திருமகள் மந்திரத்தைத் தியானத்தோடு உச்சரித்து மிக்க அழகுபெற்றன ளென்பதாம். மிக அழகிய வடிவமுள்ள திருமகளை நினைத்துக்கொண்டு, விரும்பியவடிவம் பெறுதற்கேற்ற மந்திரத்தை உருவிட்டதனால், நினைத்தபடி அழகிய வடிவம்பெற்றாளென்றுங் கொள்ளலாம். மந்த்ரம் - வடசொல்; "நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த, மறைமொழிதானே மந்திர மென்ப" என்ற தொல்காப்பியத்தால், மந்திரத்தின் தன்மையை அறிக. (254)

### வேறு.

## 31.—மூன்றுகவிகள் - சூர்ப்பணகை இராமனெதிரில் வருதலைத் தெரிவிக்கும்.

பஞ்சி[1]யொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்ச[2]நிமிர் [3]சீறடி பெயர்ப்பாள்
அஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென [4]மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்.

(இ - ள்.) பஞ்சி - செம்பஞ்சும், ஒளிர் விஞ்சு குளிர் பல்லவம் - விளக்கம் மிக்க செழித்த தளிர்களும், அனுங்க - (செம்மையிலும் மென்மையிலும் தமக்கு ஒப்பாகாமல்) வருந்தும்படி, செம் செவிய

கஞ்சம் நிமிர்-சிறந்த அழகுள்ள தாமரைமலர்போலத் தோன்றுகிற, சிறு அடி - (தன்) சிறியபாதங்களை, பெயர்ப்பாள் - எடுத்து வைப்பவளாய் —அம் சொல் இள மஞ்ஞை என - அழகிய சொல்லையுடைய இளமையான மயில்போலவும், அன்னம் என-அன்னப் பேடைபோலவும், மின்னும் வஞ்சி என - விளங்குகிற வஞ்சிக்கொடி போலவும், நஞ்சம் என விஷம்போலவும், வஞ்சம் மகள் - வஞ்சனையுடையவளான சூர்ப்பணகை, வந்தாள் —; (எ-று.)

வஞ்சகியான சூர்ப்பணகை உத்தமவிலக்கணம் நிரம்பிய மிக அழகியவடிவங்கொண்டு வந்தனளென்பதாம். பஞ்சி யெனினும், பஞ்சு எனினும் ஒக்கும். இனி, முதலடிக்கு - செம்பஞ்சிக்குழம்பு ஊட்டப்பட்டு மிகவிளங்குகிற தளிரும் ஒப்பாகாது வருந்தும்படி யென்றும் உரைக்கலாம். இந்தச் செய்யுள்களிலேனையும், சூர்ப்பணகையின் வேற்றுவடிவத்தின் வருணனையைக்கூறிய வகையும் மிகவும் பாராட்டற்பாலன. மயில் - சாயற்கும், அன்னம் -நடைக்கும், வஞ்சி-மெல்லியதாய் ஒல்கி ஒசியும் வடிவத்துக்கும், நஞ்சு - கொடுமைக்கும் உவமை. மயிலைச்சாயற்கேயன்றி நடைக்கும் உவமையாக்கொள்ளுதல் உண்டு: "மயில்கண்டன்னமடநடைமகளிர்" எனவும், "மயிலெனப் போந்து" எனவும் திருமுருகாற்றுப்படையினும், திருக்கோவையாரினும் வருதல் காண்க. நஞ்சை உவமைகொள்ளுமிடத்து, "மெய்பொடிப்பச், சிங்கி குளிர்ந்துங்கொலும்" என்பது அறியத்தக்கது. பலஉவமைகள் தொடர்ச்சியாக வந்ததனால், இப்பாட்டு - மாலையுவமையணி [மாலோபமாலங்காரம்]. பி-ம்:—[1]ஒளி. [2]நிகர். [3]சீறடியளாகி. [4]மின்னு.

இதுமுதல் எட்டுக்கவிகள் -பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று தேமாசீரும், மற்றைமூன்றும் கூவிளங்காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிமுடுகுவிருத்தங்கள். (255)

32\. பொன்னொழுகு [1]பூவிலுறை பூவையெழில் பூவை
பின் [2]னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் [3]முகத்தாள்
கன்னியெழில் கொண்டது கலைத்தட மணித்தேர்
[4]மின்னிழிவ தன்மையிது விண்ணிழிவ தென்ன.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்) பொன் ஒழுகு - பொன்னிறமான தாதுகள் சிந்தப்பெற்ற, பூவில் - செந்தாமரைமலரில், உறை - தங்குகின்ற, பூவை - மகளான இலக்குமியினது, எழில் - அழகும், பூவை (எழில்) - கிளியினது அழகும், பின் - (தனக்கு முன்) பிற்படும்படியான, எழில் - சிறந்தஅழகை, கொள் - கொண்ட, வாள் இணை பிறழ்ந்து ஒளிர் முகத்தாள் - இரண்டுவாள்கள் ஒளிவீசி விளங்கப்பெற்ற முகத்தையுடைய சூர்ப்பணகை,—இழிவ தன்மை இது - (தான் வானத்தினின்று) இறங்கிவருவதாகிய இத்தன்மை, கன்னி எழில் - கலியாணமாகாத இளம்பெண்ணின் வடிவத்தையும், கலை தட மணி தேர் - மேகலாபரணத்தை யணிந்த அழகிய தேரையும், கொண்டது - (தான்) கொண்டதாகிய, மின் - ஒருமின்னற்கொடி, விண் இழிவது-வானத்தினின்று இறங்குவதுபோலும், என்ன - என்று (கண்டோர் உவமை) கூறும்படி,—(எ - று.)—'வந்தாள்' (33) எனமுடியும்.

சூர்ப்பணகை, இளம்பெண்வடிவத்தையும் மேகலாபாணத்தாற் சூழப்பட்ட அல்குலையுங் கொண்டதொரு மின்னல் வானத்தினின்று இறங்கிவந்தாற்போலத் தான் வானத்தினின்று இறங்கி வந்தனள் என்பதாம். பொன், பூவை, வாளிணை, தேர் - உவமையாகுபெயர்கள். 'பொன்னொழுகுபூவிலுறைபூவை' என்பதற்கு - பொன்மயமாய்ப் பொருந்திய தாமரைமலரில வாழ்கிற திருமகளென்றுங் கொள்ள லாம்: இனி, பொன் ஒழுகு - அழகு மிக்கு வழிகிற எனினு மாம்.

வாளிணை, கலைத்தடமணித்தேர் என உபமேயங்களை உப மானச்சொற்களால் குறித்தது - உருவகவுயர்வுநவிற்சியணி. பின் னிரண்டடியிற் கூறியது, இல்பொருளுவமை. கலை-மேகலா என்னும் வடசொல்லின் விகாரம்; மேகலை-எட்டுக்கோவையுள்ள இடையணி: இது வேறு பலவாறும் உரைக்கப்படும். பி - ம்:—[1]பூவினதுபூவொ டொளிர். [2]இயல். [3]முகத்தோர். [4]மின்னழிவிறன்மையது, மின் னிழிவிறன்மையிது. (256)

33. கானினுயர் கற்பக முயிர்த்த கதிர்வல்லி
மேனிநனி பெற்றுவிளை காம நிறை வாசத்
தேனின்மொழி [1]யுற்றினிய செவ்விநனி [3]கொண்டோர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.

(இ - ள்.) கானின் உயர் - நறுமணத்தினாற் சிறந்த, கற்பகம் உயிர்தத கதிர்வல்லி - கற்பகமரத்தாற் பெறப்பட்ட ஒளி யுள்ளதொரு பூங்கொடி [காமவல்லி], மேனி நனி பெற்று - ஒரு பெண்வடிவம் (நன்றாக) அமையப் பெற்று, விளை காமம் நிறை - (மேனமேல்) விளைகிற காமவொழுக்கம்நிறைந்து, வாசம் தேனின் மொழி - நறுமணமுள்ள தேன்போன்ற சொற்களையும், உற்று - அடைந்து, இனிய செவ்வி நனி கொண்டு - கண்ணுக்கு இனிய அழகை மிகுதியாகப் பெற்று, ஓர் மானின் விழி பெற்று - ஒப்பற்ற மான்பார்வைபோன்ற பார்வையைப் பெற்று, மயில் வந்தது என - மயில்போலுஞ் சாயலும் நடையுங் கொண்டு வந்தாற்போல, வந்தாள்—; (எ - று.)

தேவலோகத்தில் கற்பகவிருட்சத்தைச் சார்ந்து அதன்மேற் படர்கிற காமவல்லியென்னுந் தெய்வப்பூங்கொடி, பெண்வடிவத் தையும நிரம்ப இன்பந்தருந்தன்மையையும் இன்சொற்களையும் மிக்க அழகையும் மானபார்வையையும் மயில்நடையையும் மயிற் சாயலையு முடையதாய் வந்தாறபோல வந்தனள் சூர்பபணகை என்பதாம்; தன்மைத்தற்குறப்பேற்றவணி. 'கானினுயர்' என்றது, வல்லிக்கும் அடைமொழியாகலாம்: உத்தமசாதி மகளிரது உடம்பு இயற்கையில் நறுமணமுடையதென்பது நூற்கொள்கை யாத லால், அதற்கு உபமானமாகிய வல்லிக்கு கானினுயர்' என்ற அடைமொழி கொடுத்தனரென்க. காமநிறைந்த மொழியைச் சூர்ப்பணகைபேசுதலை, மேற்காண்க. பி - ம்:—[1]நெறி. [2]ஒத்து. [3]பெற்றோர். (257)

**34.—இரண்டுகவிகள்-இராமன் சூர்ப்பணகையைப் பார்த்தலைக் கூறும்.**

நூபுரமு மேகலையு நூலுமற லோதிப்
பூமுரலும் வண்டுமிவை பூசலிடு மோசை
தாமுரைசெய் கின்றதொரு தையல்வரு மென்னுக்
கோமகனு மத்திசை [1]குறித்தெதிர் விழித்தான்.

(இ - ள்.) நூபுரம்உம்-(அவளது) காற்சிலம்பும், மேகலைஉம் - இடையணியும், நூல்உம்-நூலிற்கோத்த ஆரங்களும், அறல் ஓதி பூ முரலும் வண்டுஉம் - கருமணல்போன்ற கூந்தலிற் சூடிய மலர்களில் மொய்த்தொலிக்கிற வண்டுகளும், இவை - என்னும் இவைகள், பூசல் இடும்-ஆரவாரஞ்செய்கிற, ஓசை—, ஒரு தையல் வரும் என்று உரைசெய்கின்றது - ஒருபெண் (இங்கே) வருவளென்று சொல்லுகிறதாக,— கோமகனஉம் - சக்கரவர்த்தித்திருமகனான ஸ்ரீராமனும், அ திசை குறித்து எதிர் விழித்தான் - அவ்வோசை வருகிற திக்கைக் குறிப்பிட்டு எதிரே நோக்கினன்; (எ - று.)— தாம் - அசை.

சூர்ப்பணகை வருகிறபொழுது, அவளது சிலம்பு மேகலை ஆரம் முதலிய அணிகள் ஒலித்தலாலும் அவள்கூந்தலிற்சூடியுள்ள மலர்களில் மிகுதியாக மொய்க்கிற வண்டுகள் ஆரவாரித்தலாலும் உண்டான ஓசை இராமன் செவியிற்பட்டமாத்திரத்தில், அவ்வொலியின்குறிப்பால் யாரோ ஒருமகள் இங்கு வருகிறுளென்று அறிந்து, அப்பெருமான், அவ்வொலிவரும்வழியிற் கண்செலுத்தினன் என்பதாம். நூல் - ஆகுபெயர். உரைசெய்தல் - குறிப்பித்தலென்றமாத்திரமாய் நின்றது: இது, பேசாததைப் பேசுவதுபோலச் சொன்ன மரபுவழுவமைதி. பி - ம்:—[1]குறித்தனன். (258)

35. [1]விண்ணருள வந்ததொரு மெல்லமுத மென்ன
வண்ணமுலை கொண்டிடை வணங்கவரு [2]போழ்தத்து
எண்ணருளி யேழைமை துடைத்தெழு [3]மெய்ஞ் ஞானக்
[4]கண்ணருள்செய் கண்ணனிரு கண்ணினெதிர் கண்டான்.

(இ - ள்.) விண் - தேவலோகம், அருள - கொடுக்க, வந்தது (அங்கு நின்று) வந்ததான, ஒரு மெல் அமுதம் என்ன - ஒப்பற்ற இனிய அமிருதம்போல, (அவள்), வண்ணம் முலை கொண்டு இடை வணங்க வரு போழ்தத்து - அழகிய தனங்களையுடையளாய் (அவற்றின் பாரத்தால்) இடை துவளும்படி அடித்துவருகிற சமயத்தில்,—எண் அருளி - (தனது) திருவுள்ளத்தில் அருள் கொண்டு, ஏழைமை துடைத்து - (அதனால்) அடியார்களது அறியாமையைப் போக்கி, (அவர்களுக்கு), எழு மெய் ஞானம் கண் அருள் செய் - மேன்மேல்வளர்கிற தத்துவஞானமாகிய கண்ணைக் கொடுத்தருளுகிற, கண்ணன் - திருமாலின் திருவவதாரமான இராமபிரான், இரு கண்ணின் எதிர் கண்டான்-(தனது) இரண்டு கண்களாலும் (அவளை) எதிரிலே பார்த்தான்; (எ - று.)

தேவலோகத்திலிருந்து அமிருதம் வருகின்றவாறுபோல இன்ப வடிவங்கொண்டவளான அவள் வானத்தினின்று இறங்கிவருஞ் சமயத்தில், இராமன் அவளைக் கண்ணெனுதிரிற் கண்டனனென்பதாம்; தற்குறிப்பேற்றவணி.

'எண்ணருளி யேழைமைதுடைத்து எழுமெய்ஞ்ஞானக்கண்ணருள்செய் கண்ணன்' என்றதனை, திருமால் இயல்பாகிய கருணைகொண்டு அடியார்களுக்குத் தவிர்க்கவேண்டியன தவிர்த்து அளிக்கவேண்டியதை அளித்தருளுந் தன்மை விளங்கும். தற்காலத்தில் எதிரிலேயுள்ள பொருளைமாத்திரமே காணும் ஊனக்கண்ணினும், காலமிடையிட்டவற்றையும் தேயமிடையிட்டவற்றையும் அறியத்தக்க ஞானக்கண்ணுக்கு உள்ள சிறப்புத்தோன்ற, 'எழுமெய்ஞ்ஞானக்கண்' எனப்பட்டது. பி-ம்:—[1]விண்ணவருந்தவரும். [2]மானே. [3]விஞ்ஞானக். [4]கண்ணருளு. (259)

## 36.— இராமன் அவளைக் கண்டு வியத்தல்.

பேருழைய நாகருல கிற்பிறிதின் வானில்
பாருழையி னில்லதொரு மெல்லுருவு பாரா
ஆருழைய டங்குமழ கிற்[1]கவதி யுண்டோ
நேரிழையர் யாவ[2]ரிவர் நேரென நினைந்தான்.

(இ - ள்.) பேர் உழைய - பெரிய இடத்தையுடைய, நாகர் உலகில்-சர்பசாதியாரது லோகமாகிய பாதாளத்திலும், வானில் - தேவலோகத்திலும், பிறிதின பார் உழையின் - மற்றொன்றாகிய பூலோகத்தினிடத்திலும், இல்லது-இல்லாததாகிய, ஒரு - ஒப்பற்ற, மெல் உருவு-மென்மையான அப்பெண்வடிவத்தை, பாரா பார்த்து,- (இராமன),—'ஆர்-(இவர்) யாவர்? உழை அடங்கும் அழகிற்கு அவதி உண்டோ - இவரிடத்தில் தங்கிய அழகுக்கு ஓர் எல்லை உளளதோ? [இல்லையென்றபடி]; நேர் இழையர் - தக்கஆபரணங்களையணிந்த மகளிருள், யாவர் இவர் நேர்-எவர் இவர்க்கு ஒப்பாவர்?' [எவருமில்லையென்றபடி], என-என்று, நினைந்தான-எண்ணினன்; (எ-று.)

மூன்றுலோகத்திலும் எப்பொழுதுமில்லாத இப்படிப்பட்ட அழகியவடிவத்தைப் பார்த்து, ஸ்ரீராமன், இப்பேரழகுடையார் யாவரென்றும், இவரழகுக்கு எல்லையில்லையென்றும், அழகில் இவரோடொப்பார் எவருமிலரென்றும் கருதினன் என்பதாம். இவ்வாறு இராமபிரான் கருதியதாகக் கம்பர் கூறியது அப்பிரான் மானுடபாவனையை மிகுதியாகத் தோற்றுவிப்பவனென்பதைப் புலனாக்குவதற்காகவும், இராமனும் வியக்குமாறு அத்துணைப் பேரெழில் படைத்தனள் அந்தச்சூர்ப்பணகை என்பதைத் தெரிவித்தற்காகவுமாம்.

நேரிழையர்-ஏற்ற ஆடையை யுடையவருமாம்; இழை யென்னும் நூலின்பெயர்-ஆடைக்குக் கருவியாகுபெயரென்க. புதிதாகக் கண்ட ஒருபெண்ணைக் குறித்து 'இவள்' என ஒருமையாக் கருதுதலினும் 'இவர்' எனப் பன்மையாகக் கருதுதல் பெருந்தகைமைக்குச் சிறப்பாத

லால், 'இவர்நேரென நினைந்தாள்' எனப்பட்டது. பி - ம்:—[1] அனை இ. [2] இவள். (260)

## 37.—சூர்ப்பணகை இராமனருகில் வந்து வணங்கிநிற்றல்.

அவ்வயினவ் வாசைத [1]னகத்துடைய வன்னாள்
செவ்விமுக முன்னியடி செங்கையி னிறைஞ்சா
வெவ்விய நெடுங்கணயில் வீசி[2] யயல் பாரா
நவ்வியி னொதுங்கியிறை நாணியய னின்றாள்.

(இ-ள்.) அ வயின்-அவ்விடத்து [அப்பொழுது], அ ஆசை தன் அகத்து உடைய அன்னாள் - அப்படிப்பட்ட [கீழ்க்கூறிய] மிக்க காதலைத் தன்மனத்திலேயுடைய அச்சூர்ப்பணகை, செவ்வி முகம் முன்னி-(இராமனது) அழகிய முகத்தை நோக்கி, அடி செம் கையின் இறைஞ்சா - (அவனது) திருவடிகளைச் சிவந்த (தன) கைகளால் தொழுது, வெவ்விய நெடுங் கண் அயில் வீசி அயல் பாரா - கொடிய நீண்ட (தன்) கண்களாகிய வேல்களை வீசிப் பக்கங்களிற் பார்த்துக் கொண்டு, நவ்வியின் ஒதுங்கி - (மருண்ட) மானபோல ஒருபுறததில் விலகி, இறை நாணி-சிறிது நாணங்காட்டி, அயல் நினறாள-அருகில் நின்றாள்; (எ - று.)

இராமபிரான் அவளது வடிவழகைக்கண்டு வியக்கும்போது அவள் அப்பிரானது முன்சென்று செஙகையாலிறைஞ்சி முகங் கோட்டுதலாற் சிறிதுநாணங்காட்டி நேராகப்பாராமல் பக்கப் பார்வையாகப் பார்த்து நின்றன ளென்பதாம். நெடுங்கணயில் - உருவகம். நவ்வியினொதுங்கி - உவமை. நவ்வியின் பாரா என இயைக்கவும் அமையும். 'செவ்வி முகம் முன்னி' என்பதற்கு - தனது அழகிய முகத்தை முன்னெடுத்து என்றலும் ஒன்று. பி - ம:—[1] மனத்து. [2] வியவார. (261)

## 38.—இதுமுதற் பத்தொன்பது பாடல்களில், இராமனுக்கும் சூர்ப்பணகைக்கும் நடந்த சம்பாஷணை விவரிக்கப்படுகிறது.

### இராமன் சூர்ப்பணகையை நோக்கி வினவல்.

தீதில்வர வாகதிரு நின்வரவு சேயோய்
போதவுள தெம்முழையொர் புண்ணிய [2]மதன்றோ
ஏதுபதி யேதுபெயர் யாவருற வென்றான்
வேதமுதல் பேதையவ டன்னிலை விரிப்பாள்.

(இ - ள்.) வேதம் முதல் - வேதங்களிற் சித்தாந்தஞ்செய்யப் பட்ட முதற்கடவுளான ஸ்ரீராமன், (அவளைநோக்கி), 'திரு - திருமகள் போன்றவளே! சேயோய் - செந்நிறமுடையவளே! [அல்லது செம்மைக்குணமுடையவளே!] நின வரவு - உனது வருகை, தீது இல் வரவு ஆக - தீஙகில்லாத நல்வரவாயிருக்கக்கடவது: போத - (நீ இவ்விடத்தில்) வரும்படி, எம்உழைஉளது - எம்மிடததிலுள்ளது, ஓர் புண்ணியம்அது அன்றோ - ஒப்பற்ற நல்வினையன்றோ? பதி ஏது -

(உனது) ஊர் எது? பெயர் எது - (உன்) பேர் யாது? உறவு யாவர் - உனக்கு உறவினர் யாவர்? என்றான் - என்று வினவினன்: பேதை அவள் - இளமைகொண்ட அவள், தன் நிலை விரிப்பாள் - தனது தன்மையை விளக்குபவளானாள்; (எ-று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

யாவுமறிந்தவனான இராமன் தான்கொண்ட மானுடவவதாரத்துக்கு ஏற்றபடி ஒன்றுமறியாதவனபோலப் பாவித்துக் கபடமில்லாமல் அக்கொடியாளைத் தோற்றத்தினபடி நல்லாளாக நிச்சயித்து நல்வரவுகொண்டாடி உபசரித்து வினவ, அவ்வறிவிலாள் தன்வஞ்சனையால் அப்பெருமானைத் தன்வசப்படுத்தத் தொடங்கிப் பேசலுற்றனளென்பதாம். 'வேதமுதல்' என்பதற்கு - வேதங்களை ஆதியில் வெளியிட்ட கடவுளென்றும், வேதப்பொருளை யுணர்ந்த தலைவனென்றும் பொருள் கூறலாம். இனனென்று அறியாமல் அவனைத் தன்வசப்படுத்துக்கொள்ள இயலுமென்று கருதுகின்றாளே என்ற கருத்துத் தொனிக்க, இராமனை 'வேதமுதல்' என்றும், சூர்ப்பணகையை 'பேதையவள்' என்றும் இங்கே கவி குறித்தனரென்க. 'தீதில்வரவாக' என்பது - சிறந்தவர் வருகையைக் கொண்டாடுமிடத்து வடமொழியில் வழங்குகிற 'ஸ்வாகதம்' என்பதன் பொருள் கொண்டது. சேயோய் - சேய்மையி லுள்ளவளான நீ என்றுமாம். பி - ம்:— [1]செய்யோய். [2]இது. (262)

வேறு.

## 39.—சூர்ப்பணகை இராமனுக்குத் தன்னைத் தெரிவித்தல்.

**பூவிலோன் புதல்வன் மைந்தன் [1]புதல்விமுப் புரங்கள் செற்ற**
**சேவலோன் துணைவ னான செங்கையோன் றங்கை திக்கின்**
**மாவெலாந் [2]தொலைத்து வெள்ளி மலையெடுத் துலக மூன்றுங்**
**காவலோன் [3]பின்னை காம வல்லியாங் கன்னி யென்றாள்.**

(இ - ள்.) '(நான்),—பூவிலோன் புதல்வன்மைந்தன் புதல்வி - தாமரைமலரில் தோன்றிய பிரமனது புத்திரனான புலஸ்தியப் பிரஜாபதியினுடைய குமாரனாகிய விச்சிரவசு என்னும் முனிவனது பெண்: முப்புரங்கள் செற்ற - மூன்றுபட்டணங்களை யழித்த, சேவலோன் - விருஷபத்தை ஏறிநடத்துதல்வல்ல சிவபிரானது, துணைவன் ஆன - நண்பனாகிய, செம் கையோன் - சிவந்த கைகளையுடைய குபேரனது, தங்கை—: திக்கின் மா எலாம் தொலைத்து - திக்கஜங்களையெல்லாம் வலியழித்து, வெள்ளி மலை எடுத்து-வெள்ளிமயமான கைலாசமலையைக் (கைகளால்) பெயர்த்து எடுத்து, உலகம் மூன்றும் காவலோன் - மூன்று உலகங்களையும் காத்தலில் வல்ல இராவணனது, பின்னை - பின்பிறந்தவள்: காம வல்லி ஆம் கன்னி - காமவல்லியென்று சொல்லப்படுகிற பெண்,' என்றாள் - என்று சொன்னாள்; எ - று.)

இப்பாடலினால், சூர்ப்பணகை தனது குலப்பெருமையையும் உடன்பிறந்தோர் திறமையையுங் கூறித் தன்னை உயர்த்தினாள்.

படைப்புத்தொழிலில் தனக்குத்துணைவராம்படி பிரமதேவனால் ஆதிகாலத்தில் உண்டாக்கப்பட்ட உபப்பிரமர்கள் ஒன்பதின்மருள் ஒருவனாகிய புலஸ்திய னென்னும் முனிவன் திருணபிந்து வென்னும் ராஜரிஷியின் மகளை மணஞ்செய்துகொண்டு அவளிடம் விச்சிரவசு என்னும் மகனைப் பெற்றான்: அக்குமாரன், பரத்துவாசமுனி புத்திரியை விவாகஞ் செய்துகொண்டு அவளிடம் ஒரு மகனை உண்டாக்க, அவன், பின்பு பெருந்தவஞ்செய்து, இந்திரன் யமன் வருணன் என்பவரோடு சமமான லோகபாலகனாய் வடதிசையை ஆள்பவனும் செல்வத்துக்குத் தலைவனுமாய்க் குபேரனென்று பிரசித்தி பெற்றான்; பின் ஒருகாலத்தில் சுமாலியென்னும் இராக்கதன் தன்மகளான கேகசிக்குக் குபேரனது சிறப்பைக் காட்டி 'இப்படிப்பட்டவனைப் பெற்ற விச்சிரவமுனிவனை நீயும் சேர்ந்து நன்மக்களைப் பெறுவாய்' என்று செலுத்த, அங்ஙனமே அவள் மாலைப்பொழுதில் அம்முனிவனிடஞ் சென்று தன் கருத்தைக் குறிப்பித்து வேண்ட, முனிவன் அவளை அங்கீகரித்து 'நீ அசுரவேளையில் வந்ததனால், கொடிய பிள்ளைகள் உன்னிடம் உண்டாவர்' என்று அருளிச்செய்ய, அது கேட்ட அவள் மீண்டும் வெருவாக வேண்ட, அவன், 'இறுதியில் உதிப்பவன் நன்மகனாவான்' என்று அனுக்கிரகித்தனன்; அவ்வாறே அவளிடம் இராவணன் கும்பகர்ணன் சூர்ப்பணகை விபீஷணன் என்பவர் முறையே தோன்றினரென வரலாறு காண்க: இது, மேல் உத்தரகாண்டத்தில் விளக்கப்பட்டுளளது.

'பூவிலோன்' என்பதில், இல் - சாரியை; "தவழும், அரசிலாரில் வழியிலலை" என றவிடததுப்போல. இனி, பூ இலோன் - தாமரை மலரை இடமாகவுடையா னென்னின், இல - இடமாம். சே - எருது. குபேரன, ஒருகாலத்தில் இமயமலைச்சாரலிலிருந்து நெடுநாள் பெருந்தவஞ்செய்து சிவதரிசனத்தைபெற்று அப்பெருமா னருளால் அக்கடவுளுக்கு நண்பனாயினமைபற்றி, 'சேவலோனதுணைவனை' செங்கையான' எனப்பட்டான. குபேரன் தனத்திற சிறந்தவ னெனபதை, 'தநதன' என்ற அவனபெயராலும் உணர்க. காமவல்லி - கற்பகத்திறபடர்கொடி; வேண்டுவார்க்கு வேண்டியபொருள்களைத் தருவது. தான் காமவல்லிபோல் அழகியவளாயும் இன்பந் தருபவளாயு மிருத்தலால் தன்னை யாவரும அப்பெயரால வழங்குவ ரெனபது தோனற, காமவல்லியாங் கன்னி' எனறாள்.

முப்புரம் - பொன் வெள்ளி இரும்பு என்னும் இவற்றா லாகிய மதிலையுடைய மூன்றுபட்டணம். சிவபிரான் திரிபுரமெரித்தவரலாறு:— தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனால் சுவர்க்க மத்திய பாதாளமென்ற மூன்றிடங்களிலும் முறையே பசும்பொன வெண்பொன கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாய மார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையுடைய மூன்று பட்டணங்களைப் பெற்று, மற்றுமபல அசுரர்களோடு அங்நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிற் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கி வருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர்

முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச்சாரதியாகவும், மகா மேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயு வாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தராய்ச் சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச் செய்து அவ்வசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பதாம்.

இராவணன் திக்குவிசயகாலத்தில் ஐராவதம் முதலிய திக்கஜங்களை எதிர்த்து அவற்றின் தந்தங்களை ஒடித்து அவற்றை வலி தொலைத்தனனென்க.

இராவணன் கைலையெடுத்தது:—இராவணன் திக்குவிசயஞ் செய்கையில் குபேரனோடு எதிர்த்துப் பொருது அவனை வென்று அவனது புஷ்பகவிமானத்தைப் பறித்து அதனமேலேறிக்கொண்டு கைலாசமலைக்குமேலாக ஆகாசமார்க்கத்திலே விரைந்து மீண்டு வருகையில், அம்மலையின் மகிமையால் விமானம் தடைப்பட்டு நிற்க, அதற்குக் காரணம் இன்னதென்று அறியாது திகைக்கையில், நந்தி எதிரில்வந்து 'சிவபிரானுக்குத் தங்குமிடமான திருக்கயிலாயத்தின் பெருமை இது' என்று சொல்லவும், கேளாமல் தசமுகன் தனது பிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடு பறித்து எடுத்து அப்பாலெறிந்து விட்டுத் தடையின்றி மேற்செல்வேனென்று கூறி விமானத்தினின்றும் இறங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின்கீழ்க்கொடுத்து அதனைப் பெயர்த்து அசைத்தனனென்பது. பி - ம்:—[1]பாவை. [2]தொலைய. [3]தங்கை.

இதுமுதல் முப்பத்துமூன்று கவிகள் - இப்படலத்தின் முதற் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (263)

## 40.—இராமன் சங்கித்து மீண்டும்வினவல்.

அவ்வுரை கேட்ட வீர னையுறு மனத்தான் [1]செய்கை, செவ்விதன் றறித லாகுஞ் [2]சிறிதினென் [3]றுணராச் செங்கண், வெவ்வுரு வமைந்தோன் றங்கை யென்பது மெய்ம்மை யாயின், இவ்வுரு [4]வியைந்த தன்மை மியம்புதி [5]யியல்பி னென்றான்.

(இ - ள்.) அ உரை கேட்ட வீரன் - (சூர்ப்பணகை சொன்ன) அந்தவார்த்தையைச் செவியுற்ற இராமன்,—ஐயுறு மனத்தான் - (அரக்கிக்கு இப்படிப்பட்ட அழகு எங்ஙனம் அமைவது என்று) சந்தேகங்கொண்ட மனத்தையுடையவனாய், — 'செய்கை செவ்விது அன்று - (இவளது) செயல் களங்கமற்றதன்று; சிறிதின் அறிதல் ஆகும் - சிறிது விசாரித்து அறிதல் தகுதி', என்று உணரா - என்று எண்ணி,—(அவளை நோக்கி),—'செம் கண் வெவ் உரு அமைந்தோன் தங்கை என்றது மெய்ம்மை ஆயின - எப்பொழுதும் சினத்தாற்

சிவந்த கண்களையும் கொடிய வடிவத்தையும் பொருந்தியவனை இராவணனுக்குத் தங்கை நீ யென்றது உண்மையானால், இ உரு இயைந்த தன்மை இயல்பின் இயம்புதி - இந்த அழகியவடிவம் பொருந்தியவிதத்தை உள்ளபடி கூறுவாய்,' என்றான் - என்று வினவினான்; (எ - று.)

அச்சொல்லைக்கேட்டு, ஸ்ரீராமன், ஐயமுற்று, 'கோரவுருவமுள்ள அரக்கனது தங்கை நீ யென்பது உண்மையானால், இந்நல்லுருவம் உனக்கு எப்படிக் கிடைத்தது? உண்மையாகச் சொல்' என்று வினவினன் என்பதாம். செயகை யென்பதற்கு - உடம்பென்று உரைப்பாருமுளர்; தொழிலாகுபெயராகிய காரணக்குறி. செவ்விதன்று - மாயையாலமைந்ததுபோலு மென்றபடி. இங்கே, 'செங்கண்' என்றது, கொள்ளிக்கண் கொடுங்கண் குருதிக்கண் என்றாற்போல விகாரத்தன்மையைக் காட்டும். 'சிறிதின் அறிதலாகும்' என்பதற்கு - சிறிதுபொழுதில் அறியலாமென்று உரைத்தலு மொன்று. பி-ம்:—
[1]செல்கை. [2]சிறியள. [3]உணரச். [4]அமைந்த. [5]விரைவின். (264)

## 41.—அதற்கு அவள் விடைகூறுதல்.

தூயவன் பணியா முன்னஞ் சொல்லுவாள் சோர்வி லாளம்
மாயவல் லரக்க ரோடு வாழ்வினை [1]மதிகக லாதேன்
ஆய்வுறு மனத்தே னாகி யறந்தலை நிற்ப தானேன்
தீவினை தீய நோற்றுத் தேவரிற் பெற்ற தென்றாள்.

(இ - ள்.) தூயவன் பணியா முன்னம் - பரிசுத்தகுணமுள்ள இராமன் இங்ஙனஞ்சொல்லுதற்குமுன்னே [சொன்னவுடனே விரைவில் என்றபடி], சோர்வு இலாள் சொல்லுவாள் - (ஏற்ற விடை கூறுதற்குச் சிறிதும்) பின்வாங்குதலில்லாமல் உத்தரஞ் சொல்பவளாய்,—'அ மாயம் வல் அரக்கரோடு வாழ்வினை மதிக்கலாதேன் - மாயையையும் கொடுமையையு முடைய (இராவணன் முதலிய) அவ்விராக்கதர்களுடனே கூடிவாழ்தலைத் தகுதியென்று எண்ணாதவளாய், ஆய்வு உறு மனத்தேன் ஆகி - (நல்லவைதீயவைகளை) ஆராய்ந்து பகுத்தறியும் விவேகம் பொருந்திய மனத்தை யுடையவளாய், அறம் தலைநிற்பது ஆனேன் - தருமத்தையே மேற்கொண்டு அவ்வழியில் நிற்குந் தன்மையையுடையவளான நான், தீவினை தீய நோற்று-பாவங்களொழியும்படி தவஞ்செய்து, தேவரின் பெற்றது - தேவர்களுடைய அநுக்கிரகத்தால் அடைந்தது, (அழகிய இவ் வடிவம்), என்றாள்-என்றுசொன்னாள்; (எ-று.)

இப்பாட்டினால், சூர்ப்பணகை தனது தீக்குணமின்மையையும், தீயோர்சேர்க்கையையொழிந்தமையையும், விவேகமுடைமையையும் அறநெறியொழுகுதலையும், தவமுடையளானமையையும், தேவானுக்கிரகம்பெற்றமையையும் வெளியிட்டனள்.

வஞ்சகமுள்ள இராக்கதரோடு வாழ்தலை நீக்கி நல்வழிநிற்கத் தொடங்கித் தவஞ்செய்து தேவர்களிடத்தினின்று இந்நலலுருவம் பெற்றேனென்றனளென்பதாம். தூயவனபணியாமுனனஞ் சொல

லுவாள் - மிகையுயர்வுநவிற்சியணி. 'தேவரிற்பெற்றது' என்பது - தேவர்போலப்பெற்ற தென்றும் பொருள்படும். 'பெற்றது' என்ப தற்கு எழுவாய், முன்பாட்டிலுள்ள 'இவ்வுரு' என்பதே. பி - ர்:— [1]மதிக்கிலாதேன். (265)

## 42.—இராமன் மீண்டும் வினவல்.

இமையவர் தலைவ னேயு மெளிமையி னேவல் செய்யும்
அமைதியி னுலக மூன்று மாள்பவன் றங்கை யாயின்
சுமையுறு செல்வத் தோடுந் தோன்றலை துணையு மின்றித்
[1]தமியைநீ வருதற் கொத்த தன்மையென் றையை லென்றான்.

(இ - ள்.) 'தையல்-அழகியவளே! நீ—, இமையவர் தலைவன் ஏஉம் எளிமையின் ஏவல்செய்யும் அமைதியின உலகம் மூன்றுஉம் ஆள்பவன் தங்கை ஆயின - தேவர்களுக்குஅரசனான இந்திரனும் எளியதாய்றேவல் செய்யத்தக்க தன்மையோடு எல்லாவுலகங் களையும் அரசாளுகிற இராவணனது தங்கை யானால்,—சுமை உறு செல்வத்தோடுஉம் தோனறலை - மிகுதிபொருந்திய செல்வச் சிறப்புக்களோடு வாராமல், துணைஉம் இன்றி தமியை வருதற்கு - துணைபொருவருமில்லாமல் தனியளாய இங்குவருவதற்கு, ஒத்த தன்மை-பொருந்தின காரணம், என்-யாது?' என்றான்-என்றுவினவினன், (இராமன்) ; (எ - று.)

'நீ மூவுலகத்தையும் ஆள்பவனுக்குத் தங்கையானால் தாதிமார் முதலிய பலவகை விபவத்தோடுங் கூடி வரக்கூடுமே: அங்ஙனமின்றி, துணையுமில்லாமல் தனித்துவருவதற்கு ஏது என?' என்று வினவினனென்பதாம். பி - ம்: — [1]தமியணீ. (266)

## 43.—அதற்கு அவள் விடைகூறுதல்.

வீரனஃ துரைத்த லோடு மெய்யிலாள் விமல யானச்
சீரிய ரல்லார் மாட்டுச் [1]சேர்கிலென் றேவர் பாலும்
ஆரிய முனிவர் பாலு மடைந்தனெ னிறைவ வீண்டோர்
காரிய முண்மை நின்னைக் காணிய வந்தே னென்றாள்.

(இ - ள்.) வீரன்-இராமன், அஃது உரைத்தலோடுஉம் - அவ்வார்த்தையைக் கூறியவளவிலே, மெய இலாள்-உண்மையில்லாதவளான சூர்ப்பணகை,—(அப்பெருமானை நோக்கி),—'விமல - குற்றமில்லாதவனே! இறைவ - தலைவனே! யான்—, ஆசிரியர் அல்லார் மாட்டு சேர்கிலென - நற்குண நற்செய்கையுடையரல்லாத (இராவணன் முதலிய) அவ்வரக்கரிடத்துச் சேராமல், தேவர்பால்உம் ஆரியர் முனிவர்பால்உம் அடைந்தனென் தேவர்கள பக்கலிலும சிறந்த முனிவர்கள் பக்கலிலும் சேர்ந்துள்ளேன; ஈண்டு - இவ்விடத்தில் [உன்னிடத்தில], ஓர் காரியம் உண்மை-(எனக்கு) ஒரு காரியம் ஆக வேண்டியிருததலால், நின்னை காணிய வந்தேன் - உன்னைக் காணும் பொருட்டு (இங்கு) வந்தேன்', என்றாள்-என்று சொன்னாள்; (எ-று)

யான் இராவணன் தங்கையாயினும் அவ்விராவணன் முதலிய கொடிய அரக்கரோடுகூடி வாழ விருப்பமில்லாமல் அறநெறி யொழுக்கங்கொண்டு நல்லோரான தேவரிடத்தும் முனிவரிடத்தும் சார்ந்திட்டதனால், எனக்கு இராவணன் தங்கைக்கு உரிய ஆடம்பா மில்லை; நின்னிடத்தில் எனக்கு அந்தரங்கமா யாகவேண்டிய காரிய மிருப்பதனால், துணையின்றித் தனியேவந்தேனென்றன ளென்பதாம். 'சிரியரல்லார்மாட்டுச் சேர்கிலென் தேவர்பாலு மாரியமுனிவர்பாலு மடைந்தனென்' என்று பொய்யாகக் கற்பித்துக் கூறியமைபற்றி, 'மெய்யிலாள்' என்றார். ஆரிய - சிறந்தவனே! என விளியாகவுங் கொள்ளலாம். பி - ம்:—[1]சேரலென். (267)

## 44.— இராமன் அவளை வந்த காரியமென்னென்றல்.

அன்னவ ளுரைத்த லோடு மையனு மறிதற் கொல்லா
நன்னுதன் மகளிர் சிந்தை நன்னெறிப் பால வல்ல
பின்னிது தெரியு [1]மென்னாப் பெய்வளைத் தோளி யென்பால்
[2]என்னகா ரியத்தை சொல்லஃ [3]தியையுமே லிழைப்ப லென்றான்.

(இ - ள்.) அன்னவள் உரைத்தலோடும் - அவள் (அப்படி) சொன்னவுடனே, ஐயன் உம்-இராமனும், 'நல் நுதல் மகளிர் சிந்தை - அழகிய நெற்றியையுடைய மாதரது மனக்கருத்துக்கள், அறிதற்கு ஒல்லா - எளிதில் அறியமுடியாதன; (அன்றியும்), நல் நெறி பால அல்ல-நல்ல வழியில் உரிமைகொண்டு நிற்பனவு மல்ல; இது-இவள் மனக்கருத்து, பின் தெரியும்-பின்பு தெரியக்கூடும்,' என்னா - என்று எண்ணி —(அவளை நோக்கி),—'பெய் வளை தோளி - அணிந்த வளையல்களையுடைய தோள்களையுடையவளே! என்பால் என்ன காரியத்தை - என்னிடத்து (நீ) என்னகாரிய முடையாய்? சொல் - சொல்வாய்; அஃது-அக்காரியத்தை, இயையுமேல் இழைப்பல் - செய்யக் கூடுமாறு செய்துகொடுப்பேன,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

மாதருள்ளம் ஆழ்ந்த தாதலால் அறிதற்கு அரிதென்றும் அது தீவழியிலுஞ் செல்லத்தக்கதென்றும் எண்ணி, அவளை நோக்கி, 'வந்தகாரியஞ்சொல்: தகுமாறு செய்வேன்' என்றன னென்பதாம். "பெண்ணெனப்படுவகேண்மோ...உள்நிறையுடையவல்ல ஓராயிர மனத்தவாகும்" என்ற சிந்தாமணிச் செய்யுள் ஒப்பு நோக்கத்தக்கது. பி - ம்:—[1]என்பான். [2]என்னை. [3]இசையு மேலிசைப்பென். (268)

## 45.—அவள் தன்கருத்தை வெளியிடுதல்.

தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்பது
[1]ஆமென லாவ தன்று லருங்குல மகளிர்க் கம்மா
ஏமுறு முயிர்க்கு நோவே னென்செய்கேன் யாரு மில்லேன்
காமனென் றொருவன் செய்யும் வன்மையைக் காத்தி யென்றாள்.

(இ - ள்.) தாம் உறு காமம் தன்மை - தாங்கள் அடைந்துள்ள சிற்றின்ப விருப்பத்தின் தன்மையை, தாங்களே உரைப்பது என்பது - தாங்களே சொல்வது, அருங் குலம் மகளிர்க்கு - அருமையான [மேன்மையான] உயர்குடியிற் பிறந்தமாதர்க்கு, ஆம் எனல் - தக்கதென்பது, ஆவது அன்று - பொருந்துவதன்று: (ஆயினும்), ஏம் உறும் உயிர்க்கு உம் நோவேன் - எல்லாவின்பத்தையும் அடையத் தக்க உயிரோடு கூடிவாழ்தற்கும் (வகையில்லாமல்) வருந்துபவளும், யார் உம் இல்லேன் - வேறொருவருந் துணையில்லாதவளுமாகிய யான், என் செய்கேன் - (என் காமத்தை யானே சொல்லாது) வேறு யாது செய்வேன்? [ஆதலாற் சொல்வேன் என்றபடி]: காமன் என்ற ஒருவன் செய்யும் வன்மையை காத்தி - மன்மதனென்ற ஒருத்தன் செய்கிற கொடுமையைத் தடுத்து (என்னைப்) பாதுகாத்தருள்வாய், என்றாள் - என்று கூறினாள்; (எ - று.) — ஆல் - ஈற்றசை. அம்மா - தனது காமமிகுதியைப்பற்றிவந்த வியப்பிடைச்சொல்.

தமது காமத்தின் தன்மையைத் தாமேசொல்வது குலமகளிர்க்கு அடுப்பதன்று; ஆயினும், யான் அக்காமமிகுதியால் மரணவேதனையடையும்படியான நிலைமையைப் பெற்றமையாலும், என்கருத்தைத் தெரிவித்து நிறைவேற்றுதற்கு ஏற்ற பாங்கிமார் முதலிய துணை ஒருவரும் எனக்கு இல்லாமையாலும், யானே என் காமத்தை உன்னிடம் இப்பொழுது வெளியிட்டுக்கூறுவேன்; உன்திறத்தில் மன்மதனால் எனக்கு உண்டான வேதனையைப் போக்கிக் காத்திடவேண்டுமென்றனளென்பதாம். "கன்னியருற்ற நோய்கண்ணனைக்குமஃ, தின்னதென்றுரையலர் நாணின்" என்ற சிந்தாமணி, இச்செய்யுளின் முன்னிரண்டடிகளிற் காணத்தக்கது. "கொம்மைவெம் முலை தெரிவைபர்க் குளங்கூசுமாசை நோய் கூறுகிறபதென்று, எம்மனோர்களும் சொல்வர்" என்ற வில்லிபாரதமும் காண்க. சூர்ப்பணகை தன்காமத்தைத் தானே சொல்லுந் துணிவைக் கொண்டதனால், முகவுரையாகக் கூறும்போது 'ஆமெனலாவதன்று' என்று நீட்டிப்பேசுகின்றாள்: இந்த முகவுரையால், தான் தன்காமத்தைக் கூறப்போவதைக் குறிப்பாக வுணர்த்துகின்றாளென்க. ஆமெனல் ஆவதன்று-தக்கதன்று என்றபடி. ஏமுறும் உயிர்க்கு நோவேன் - (நான்கொண்ட காமத்தைத் தீர்க்க மாட்டாமையால்) கலங்குகிற உயிர் படும் பாட்டிற்கு வருந்துகின்றேன்; என செய்கேன்? யாருமிலேன் - அதற்கு உதவி செய்வார் இல்லையே! (இருந்தால் அவரைக் கொண்டு என்காமத்தைச் சொல்லச் செய்வேன்: இல்லாமையால் யானே சொல்லக்கடவேனானேன்) என்று மூன்றாமடியிற் பொருள் விரிப்பர் ஒரு சாரார். இந்த மூன்றாமடி, தான் குலமாதர்க்குச் செய்யத்தகாத செயலைச் செய்வதற்கு ஒருப்பட்டதற்குக் காரணம் கூறுவதாம். ஏம்-ஏமமென்பதன் விகாரம். பி - ம்:—[1] ஆமெனிலாவதென்றால். (269)

## 46.—அதுகேட்ட இராமன் அவள்தன்மையை நிச்சயித்தல்.

சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி வெவ்வேறு
ஏணுற [1]மிளிர்ந்து நாணு விதம்புரண் டிருண்ட வாட்கட்

பூணியல் கொங்கை யன்ன ளம்மொழி புகற லோடும்
நாணில ளைய னெய்ய ணல்லளு மல்ல [2]னென்றான்.

(இ - ள்) சேண் உற - நெடுந்தூரத்திலே பொருந்த, நீண்டு - நீண்டு சென்று, மீண்டு - (தடைப்பட்டு அப்பாற்செல்ல இடம்பெறாமல்) திரும்பி, செவ் அரி சிதறி - (உத்தமவிலக்கணமாகிய) சிவந்த ரேகைகள் சிதறப்பெற்று, வெவ்வேறு ஏண்உற மிளிர்ந்து - வேறு வேறு வகையான நிலைமைகள் தோன்றப் பிறழ்ந்து, நானாவிதம் புரண்டு - பலவாறு தடுமாறி, இருண்ட - கறுத்துள்ள, வாள் கண் - வாள்போன்ற [கூரியகொடிய] கண்களையும், பூண் இயல் கொங்கை - ஆபரணங்கள் பொருந்தின தனங்களையுமுடைய, அன்னாள் - அவள், அ மொழி புகறலோடுஉம் - அந்தவார்த்தையைச் சொன்னவுடனே,— ஐயன் - இராமன்,—'(இவள்), நாண் இலள் - வெட்கமில்லாதவள்; நொய்யள் - இழிகுணமுடையவள், நல்லள்உம் அல்லள் - சிறிதுநற்குண முடையவளு மல்லள்,' என்றான் - என்று எண்ணினான்; (எ - று.)

சூர்ப்பணகை அங்ஙனஞ்சொல்லக் கேட்டவுடன், இராமன் இவள் நாணமில்லாத கீழ்மகளென்று கருதின னென்பதாம். நாற்புறத்தும் மூக்கு புருவம் காது கபோலம் என்னும் அவயவங்களின் தடை யில்லாமலிருப்பின் முகமுழுதுங் கண்கள் பரந்திடு மென்ற கருத்து, 'சேணுறநீண்டுமீண்டு' என்றதில் அமையும். காண்பார்க்கு இன்பமும் துன்பமுந்தோன்ற நோக்குகிற அன்புநோக்கு குறிப்புநோக்கு முதலிய பலவகைப்பார்வை வேறுபாடுக ளெல்லாம், 'வெவ்வேறுஏணுறமிளிர்ந்து நானாவிதம்புரண்டு' என்றவற்றால் விளக்கப்பட்டன. பி - ம்:—[1]மிளர்ந்து. [2]என்பாள். (270)

## 47.—சூர்ப்பணகை மீட்டும் தன்கருத்தைச் சொல்லத் தொடங்குதல்

பேசல னிருந்த வள்ள லுள்ளத்தின் பெற்றி யோராள்
பூசல்வண் டரற்றுங் கூந்தற் பொய்ம்மகள் புகன்ற வென்கண்
ஆசைகண் டருளிற் றுண்டோ வன்றென லுண்டோ வென்னும்
[1]ஊசலா லுலாவு கின்றாள் மீட்டுமோ ருரையைச் [2]சொல்வாள்.

(இ ள்.) (இவ்வாறு எண்ணி), பேசலன் இருந்த - (யாதொன்றும்) பேசாமல் மௌனமாயிருந்த, வள்ளல் - வண்மைக் குணமுடைய இராமனது, உள்ளத்தின் பெற்றி - மனத்தின் தன்மையை, ஓராள் - அறியாதவளாய் —பூசல் வண்டு அரற்றும் கூந்தல் பொய் மகள் - (ஒன்றோடொன்று) மோதுகிற வண்டுகள் நெருங்கிமொய்த்து ஆரவாரிக்கப் பெற்ற கூந்தலையுடைய பொய்ம்மைக்குணமுள்ள அச்சூர்ப்பணகை,— 'புகன்ற என்கண் ஆசை கண்டு அருளிற்று உண்டுஓ - (உட்கருத்தைச) சொன்ன என்னிடத்து (இவன்) ஆசை கொண்டருளினமை உண்டோ? அன்று எனல் உண்டுஓ - அன்றென்று மறுத்துவிடுத லுண்டோ? என்னும் - என்று கருதுகிற, ஊசலால் - தடுமாறுகிற கருத்தினால், உலாவுகின்றாள - அலைகின்றவளாய்,—மீட்டும் - மறுபடியும், ஓர் உரையை சொல்வாள் - ஒருவார்த்தையைக் கூறுபவளானாள்; (எ - று.) அதனை, அடுத்த கவியிற் காண்க.

தன் கருத்தை வெளியிட்டமை கேட்டு இராமன் ஒன்றும் மறுமொழிகூறாது வாளாஇருந்ததனால், அவள், 'இவனுக்கு என்னிடத்து ஆசைஉண்டோ? இல்லையோ?' என்று அறியமாட்டாது மனந்தடுமாறி அலைந்து, மறுபடி தன்கருத்தை வேறுவகையாற் சொல்லத்தொடங்கினளென்பதாம். ஊசல் - இலக்கணையால், தடுமாறுகிற கருத்து என்ற பொருளைத் தந்தது. பி-ம்:—'ஊசலில், [2]சொன்னாள். (271)

## 48 —சூர்ப்பணகை தன்கருத்தை வேறுவகையால் வெளியிடுதல்.

எழுதரு மேனி யாயீண் டெய்திய தறிந்தி லாதேன்
முழுதுணர் முனிவ ரேவற் செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடு மிளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலு மென்றாள்.

(இ - ள்.) 'எழுது அரு மேனியாய் - (சித்திரத்தில்) எழுது தற்கும் அருமையான வடிவழகுடையவனே!—ஈண்டு எய்தியது அறிந்திலாதேன் - (நீ) இவ்விடத்திற் சேர்ந்துள்ள தன்மையை அறியாதவளாய், (நான்), முழுது உணர் முனிவர் ஏவல் செய் தொழில் முறையின் முற்றி-எல்லாவற்றையும் அறிந்த முனிவர்களின் ஏவுதலைக்கொண்ட செய்பத்தக்க தொழிலை முறைமைபபடி முடியச் செய்துகொண்டிருந்ததனால், பழுதுஅறு பெண்மையோடுஉம் இளமைஉம் பயன் இன்று ஏக - (எனது) குற்றமில்லாத பெண் தன்மையும் இளமையும் பயனில்லாமற் செல்ல, பொழுதொடு நாள் உம் வாளா கழிந்தன போலும்-ஒவ்வொருநாளும் அதன் ஒவ்வொரு சிறுபொழுதும் வீணாய்க்கழிந்துவிட்டனபோலும்,' என்றாள்-என்று சொன்னாள்; (எ - று.)

நீ இங்கிருப்பது தெரியாமையால் நான் ஆங்காங்கு முனிவர்களுக்குப பணிவிடைசெய்து பொழுதுபோக்கிக் கொண்டிருந்தேன்: அதனால் எனது பெண்மையும் யௌவநமும் பயனில்லனவாக, நாளும்பொழுதுங்கழிந்தன என்றாள்; என்றது, நீ இங்கிருக்கின்றமை தெரிந்திருந்தால் முன்னமே நான் வந்து உனனைக்கூடி அதனால் என்பெண்மையும் இளமையும் பயன்பட, கழிந்தநாள்களின் ஒவ்வொருகணத்தையும் சரியாக உபயோகப்படுத்தி இன்ப நுகர்ந்திருக்கக்கூடு மென்றனள் என்றவாறு. முற்றி = முற்ற: எச்சத் திரிபு பொழுது-நாளின் சிறுபகுதிகளாகிய காலை நண்பகல் எற்பாடு மாலை இடையாமம் வைகறை என்பன. (272)

## 49.— இராமன், பார்ப்பனமாதை அரசர் மணம்புரியலாகா தென்றல்.

நிந்தனை யரக்கி நீதி நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே வள்ள[1]லு மனத்துட் கொண்டான்
சுந்தரி [2]மரபிற் கொத்த தொன்மையின் றுணிவிற் றன்றால்
அந்தணர் பாவை நீயா னரசரில் வந்தே னென்றான்.

(இ-ள்.) (அதுகேட்டு), வள்ளல் உம் - இராமனும், 'நிந்தனை அரக்கி - பழிக்கப்படுந்தன்மையுள்ள இந்த ராக்ஷசி, நீதி நிலை இலாள் - நியாய வழியில் நிற்குந்தன்மையில்லாதவள்; (அன்றியும்), மற்று வினை எண்ணி வந்தனள் ஆகும் - நீதிக்குமாறான தீத்தொழிலைக் கருதி வந்தவளாவாள்', என்று மனத்துள் கொண்டான - என்று திருவுள்ளத்தில் நிச்சயித்துக் கொண்டவனாய்,—(அவளை நோக்கி), 'சுந்தரி - அழகியவளே! நீ விரும்பிக் கூறிய சேர்க்கை), மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிவிற்று அன்று - சாதிமுறைமைக்கு ஏற்ற தொன்றுதொட்ட ஒழுக்கத்தின் உறுதியுடையதன்று; (ஏனெனில்), —நீ—, அந்தணர் பாவை - பிராமணசாதிமகள்: யான—, அரசரில் வந்தேன் - க்ஷத்திரியசாதியிற்பிறந்தவன்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

அதுகேட்டவுடனே, இராமன், இவள் நற்குணஞ் சிறிதுமில்லாமல் தீக்குணம் பெரிதுமுடையளென்று நிச்சயித்து, அவளைத் தக்க காரணஞ் சொல்லி மறுத்து அனுப்பிவிடத் தொடங்கி, அந்தணர்கன்னிகையான உன்னை அரசசாதியனான நான் மணஞ்செய்துகொள்ளுதல் தகாதென்று கூறினனென்பதாம். ஒவ்வொருசாதியாரும் தன்சாதிமகளிரை மணஞ்செய்தல் உத்தமமென்பதும், அங்ஙனமானாயின் தன்சாதிக்குக் கீழ்ப்பட்ட சாதிமகளிரையன்றி மேற்பட்டசாதிமகளிரை மணஞ்செய்தலாகாதென்பதும் அறநூற்கொள்கை. "இறையோனுயரினுங் குறைவின்றென்மனார்" என்ற நம்பியகப்பொருளையும், "மிகவோனாயினுங் கடிவரையின்றே" என்ற தொல்காப்பியத்தையும் ஈண்டு நினைவுகூர்க. ஸுந்தரீ - வடசொல். (பி-ம்:—[1]உண்டாட்டங். [2]மணத்துக்கொத்த தன்மையின் றுணையிற்று. (273)

## 50 அதற்குச் சூர்ப்பணகை சமாதானங்கூறுதல்

ஆரணமறையோ னெந்தை யருந்ததி கற்பி னெம்மோய்
தாரணி புரந்த [1]சால கடங்கடர் மரபின் றையல்
போரணி பொலங்கொள் வேலாய் பொருந்தலை யிகழ்தற் கொத்த
காரண மிது[2]வே யாயி னென்னுயிர் காண்ப னென்றாள்.

(இ - ள்.) 'போர் அணி பொலம் கொள் வேலாய் - பொருதலையே அணியாகக்கொண்ட அழகுள்ள வேலாயுதத்தையுடையவனே! எந்தை - எங்கள் தந்தை, ஆரணம் மறையோன - வேதத்துக்குரிய அந்தணன்; அருந்ததி கற்பின எம்மோய் - அருந்ததியினது கற்புநிலைமையையொத்த கற்புநிலைமையையுடைய எங்கள் தாய், தாரணி புரந்த - பூமியையரசாண்ட, சாலகடங்கடர் - சாலகடங்கடரெனனும் இராக்கதராசரது, மரபின் - குலத்திற்பிறந்த, தையல் - பெண்: (ஆதலால்), பொருந்தலை இகழ்தற்கு - (நீ என்னோடு) கூடுதலை மறுத்தற்கு, ஒத்த - ஏற்ற, காரணம் இதுவே ஆயின்—, என் உயிர் காண்பென் - எனது உயிரை யான் பிழைத்திடக்காண்பேன் [ஒழிகிறவுயிரைப் பெற்றிடுவேன் என்றபடி],' என்றாள்—;

எனது தந்தை அந்தணனாயினும் எனது தாய் அரசர்குலத்தவளாதலால் அவளிடத்துப்பிறந்த என்னை நீ மணஞ்செய்யத்தடை

யில்லை யென்றனனென்பதாம்; என்றது, விவாகஞ்செய்து கொண்ட வர்களான பிராமணனுக்கும் க்ஷத்திரியஸ்திரீக்கும் பிறந்தவர்கள் அநுலோமசாதியாருள் பிராமணரையொத்த க்ஷத்திரியரென்றும், தந்தையின் சாதி உயர்ந்ததாயினும் தாயின்சாதி தாழ்ந்ததாகை யால் இவர்கள் தந்தையின் சாதியைச்சேராதவர்களாய்த் தாயின் சாதியைக்காட்டிலும் சிறிதுமேன்மையான தனிச்சாதியா ராகின்றன ரென்றும், இவர்கள் தாய்வமிசத்துத்தருமங்களை மேற்கொள்ளத் தக்கவர்களாகையால் இவர்களை க்ஷத்திரியர் மணஞ்செய்துகொள் ளலாமென்றும் நூற்கொள்கை யாதலால் என்னை மணக்கலா மென்றவாறும். 'பொருந்தலை யிகழ்தற்கொத்த காரணம் இதுவே யாயின் என்னுயிர்காண்பென்' என்றது - க்ஷத்திரியனாகிய நீ என் னைப் பிராமணசாதிக்கன்னிகையென்று எண்ணி என் மணத்துக்கு இசையேனென்பையானால், நான் உண்மையில் அப்படிப்பட்டவ ளன்றிப் பிராமணனுக்கும் க்ஷத்திரிய ஸ்திரீக்கும் பிறந்த உயர்ந்த க்ஷத்திரியகன்னிகையே யாதலால், அத்தன்மையை வெளியிடு மிடத்து நீ தடைசொல்லாது மணஞ்செய்து கொள்வாயாயின் உன்னைச்சேராமையாலாகிய காமதாபத்தின் மிகுதியாலுண்டாகிற மரணவேதனையை ஒழிந்து யான் நிச்சயமாய்ப் பிழைத்திடுவே னெனறபடி.

'ஆரணம்' என்ற அடைமொழி வந்ததனால், 'மறையோன்' என்றது - காரணக்கருதாமல் வெறுஞ் சாதிப்பெயர்மாத்திரமாய் நின்றது; அன்றியும், தன் தந்தையினது 'விச்ரவஸ்' என்னும் பெயரின் பொருளபற்றி, 'ஆரணமறையோன்' என்றதாகவுங் கொள்க: அவ்வரலாறு வருமாறு:—பிரமபுத்திரரான புலஸ்தியமுனி வன் மேருமலைச்சாரலில் தவத்தோடு வேதாத்தியயநஞ்செய்து கொண்டிருக்கையில் அவ்விடம் மிக இனியதாயிருந்ததுபற்றி மங்கை யர்பலர் அங்குவந்து நாள்தோறும் விளையாட, அது தனதுதவத் துக்கு இடையூறாயிருந்ததனால், அம்முனிவன் 'இன்றுமுதல் யாவ ளாயினும் எனகண்ணெதிரில் நிற்பளாயின, அவள் உடனே கருவுறக் கடவள்' என்று சபிக்க, திருணபிந்து வென்னும் இராசவிருடியின் மகள் அச்சாபத்தையறியாது அங்குவந்து, வேதமோதிக்கொண் டிருந்த அம்முனிவனது முன்னே நின்றதனாற் கருவுற்றாள்: அவள் பின்பு தந்தையால் அம்முனிவனுக்கே மணஞ் செய்விக்கப்பட்டுப் பணிவிடைசெய்து கொண்டிருக்கையில், அம்முனிவன் 'நான் வேத மோதிக்கொண்டிருக்கையில் நீ வந்து அத்தொனிகேட்கையிற் கரு வுற்றனை யாதலால், உன்னிடம் பிறக்கும் பிள்ளைக்கு 'விச்ரவஸ்' என்று பேராகக்கடவது' என்று அருளிச்செய்ய, பிறந்த குமாரன் அங்ஙனமே பெயர்பெற்று, வேதாத்தியயநத்தில் ஊக்கமுடையவனா யிருந்தன னென்பதாம்.

பொருந்தலை யென்பதை முற்றெச்சமாக் கொண்டு, நீ மன மிணங்காமல் இகழ்வதற்கு எனஉரைக்கவும் அமையும். அருந்ததி - வசிஷ்டமுனிவனது மனைவி; கற்புடையார் பலரினும் இவளுக்கு மேன்மை என்னவென்னின்,-நட்சத்திரநிலையிலும் கணவனைப பிரியா திருக்கை.

சாலகடங்கடர் மரபுளனப்பட்ட வரலாறு:—அரக்கக்குலத்திற் பிறந்த ஹேதியென்பவனது மகனான வித்யுத்கேச னென்பவன், சந்தியையின் மகளான சாலகடங்கடையென்பவளை விவாகஞ்செய்து கொண்டு சுகேசனைப் பெற, அவனது மக்களான மாலியவான், சுமாலி, மாலி யென்பவருள் சுமாலியின் மகள், இராவணன் முதலியோரது தாயான கேகசி யென்க. இங்குக்குறித்த சாலகடங் கடை, பிள்ளையைப் பெற்றவுடன் அங்கேயே விட்டிட்டுக் கணவ னுடன் சென்றிட, யாருமில்லாமல் அழுதுகொண்டிருந்த அக் குழந்தையைப் பார்வதீபரமேசுவரர் கண்டெடுத்து அக்குழந் தைக்கு அப்பொழுதே தாய்க்குச் சமமான பருவ முண்டாம்படி அனுக்கிரகித்து நீண்ட ஆயுளையும் வானத்திற் பறந்து செல்லத் தக்கதொரு நகரத்தையும் கொடுத்து, இராக்கத மகளிர்க்கு விரைவிற் கருவுறுதலும், உடனே மகப்பெறுதலும், பிறந்தமகவு உடனே தாயோடு ஒத்த பருவமடைதலு மாகிய வரத்தையும் அளித்துச்செல்ல, அவ்வரப்பயன்களைப் பிந்தின அரக்கர்யாவரும் பெற்றுச் சிறப்புற்றன ரென்பதாம். சாலகடங் கடையின் வழித் தோன்றியவர் - சாலகடங்கடர். இக்குலத்தவர் தொன்றுதொட்டு அரசாட்சியே செய்துவந்ததனால், அவரை க்ஷத்திரியரென்று குறித்து, 'தாரணிபுரந்த சாலகடங்கடர்மரபின் தையல்' என்று தனனைக் கூறி, அதனால், கீழ் இராமன்கூறின ஆட்சேபத்தை மறுத்தன ளென்க. பி - ம் :—[1] சாலகடங்கர்தம். [2] மெய். (274)

## 51. இராமன், அரக்கரை மனிதர் மணஞ்செய்யலாகா தென்றல்.

அருத்திய [1] எனைய கூற வகத் [2] துறு நகையின் வெள்ளைக்
குருத் [3] தெழு கின்ற நீலக் கொண்டலுண் டாட்டங் கொண்டான்
வருத்தநீங் கரக்கர் தம்மின் [4] மானுயர் மணத்த [5] னங்கை
பொருத்தமன் றென்று சாலப் புலமையோர் புகல்வ ரென்றான்.

(இ-ள்.) அருத்தியள்-ஆசையுள்ளவளான சூர்ப்பணகை, அனைய கூற - அவ்வார்த்தைகளைச் சொல்ல,—அகத்து உறு நகையின் வெள்ளை குருத்து எழுகின்ற நீலம் கொண்டல்-உள்ளே பொருந்தின சிரிப்பினது வெண்மையான இளவொளி வெளித் தோன்றப்பெற்ற நீலநிறமுள்ள மேகம்போன்ற இராமன்,—உண்டாட்டம் கொண்டான் - விளையாட்டுக் கொண்டவனாய்,—'நங்கை - மகளிரிற்சிறந்தவளே! வருத்தம் நீங்கு அரக்கர் தம்மின் - துன்பமில்லாத இராக்கதரோடு, மானுயர் மணத்தல்-(பலதுன்பங்கட்கு மிடமான) மனிதர் விவாகஞ் செய்துகொள்ளுதல், பொருத்தம் அன்று-இயைபன்று, என்று—, புலமையோர்-அறிவுடையோர், சால புகல்வர்-மிகுதியாகக் கூறுவார் கள்,' என்றான்-என்று சொன்னான்; (எ - று.)

அரக்கியாகிய உன்னை மனிதனாகிய நான் மணத்தற்குஇசையே னென்றவாறு. 'மநுஷ்யகணத்தவரும் ராக்ஷசகணத்தவரும் ஒரு வரோடொருவர் மணஞ்செய்துகொள்ளக்கூடாது' என்ற கணப் பொருத்தநிலையும் இங்குக் காணத்தக்கது. சிரிப்பை அதிகமாக

வெளிப்படுத்தாமல் தனது மேன்மைத்தன்மைக்கு ஏற்றபடி உள்ளடக்கியுள்ளமை தோன்ற, 'அகத்து நகை' எனப்பட்டது. இங்கே, நகைபுக்குக்காரணம், அவள்பேதைமையை நோக்கியது. சீற்றங்கொண்டு ஒருவகையாய் மறுத்துத்துரத்திவிடாமல் உடன் படல் மறுத்தல் என்னும் இருதன்மையையும் உடையவன் போல விநோதமாக வெவ்வேறுகாரணங்களை ஒன்றனபின் ஒன்ருகக்கூறிப் பேச்சை வளர்த்திச் சாந்தமானவழியில் மறுக்கின்றமைபற்றி, 'உண் டாட்டங்கொண்டான்' என்ருர்.

இரப்போன்என்றுபொருளுள்ள அர்த்தீஎன்னும் வடசொல் லின் திரிபாகிய அருத்தியென்பது - தமிழில், வேண்டுதலென்று பொருள்படும். குருத்து - இளங்கொழுந்து; இளவொளிக்கு, இலக் கணை. நீலக்கொண்டல் - இராமனுக்கு உவமவாகுபெயர். மானுயர் - மாநுஷர்: (காசியபமுனிவனது மனைவிமார்களுள்) மநுஎன்பவளிடம் பிறந்தவ ரென்பது, இதன் காரணப்பொருள். பி-ம்:—[1] அன்ன. [2] எழு. [3] எழுகின்றதென்னக். [4] மானுடர். [5] நங்காய். (275)

## 52. —அதற்கு அவள் சமாதானங் கூறல்.

[1] பராவரு வித்தி யாதர் பன்னியான் [2] பவத்தை [3] யோராது
இராவணன் றங்கை யென்ற தேழைமைப் பால [4] தென்பால்
அராவணை யமல னன்று யறிவித்தேன் முன்னந் தேவர்ப்
[5] பராவினி னீங்கி னேனப் பழிபடு பிறவி யென்ருள்.

(இ - ள்.) 'யான்—,—(இப்போது), பராவு அரு-சொல்லுதற்கு அருமையான, வித்தியாதர் பன்னி - வித்தியாதரப்பெண்ணுவேன்; பவத்தை ஓராது (இப்போதுள்ள) பிறவியை ஆராயாமல், என்பால்-என்னிடத்து, இராவணன் தங்கை என்றது-இராவணனது தங்கை யென்றே கருதியது, ஏழைமை பாலது - தகுதியில்லாமையின் பாற்படுவது; அராஅணை அமலன் அன்னய் - ஆதிசேஷனுகிய சயநத்தையுடைய குற்றமற்ற திருமாலை யொத்தவனே! அ பழி படு பிறவி பழிக்கப்படுகிற அவ்விராக்கத சன்மத்தை, தேவர் பராவினின் நீங்கினேன் தேவர்களை வணங்கித் துதித்ததனுல் நீங்கிவிட்டேன்; (இதனை), முன்னம் அறிவித்தேன-முனனமேதெரிவித்திருக்கிறேன் என்ருள்-என்றுசொன்னுள்; (எ-று.)

இப்போது நான் வித்தியாதரப்பெண்ணுகிவிட்டேன்; இதனை யாராயாமல் இராவணனதுதங்கை யென்று சொன்னதுகொண்டு பிறந்த பிறவியைக் கருதி எனனை மணமமறுத்தல் தகுதியன்று யான் கீழ்க்கூறியபடி தேவர்களுககு மிக்க வழிபாடுசெயத பயனுல் அவர்கள அநுக்கிரகிக்க எனக்கு அரக்கத்தன்மை ஒழிந்திட்ட தென முன்னமே கூறினே னன்ரே என்றனளென்பதாம். 'அறி வித்தேன் முன்னம்' என்றது-கீழ் 41 - ஆங்கவியிற கூறியதைக் குறிக்கும். வித்தியாதர் - வித்தியாதரரெனபதன்திரிபு. பன்னி பதநீ: மனைவியென்று பொருளுளள இது பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது. 'பவத்தையோரா திராவணன்றங்கை யென்ற தேழைமைப் பாலதென்பால்' என்பதற்கு-நான் இப்போதுள்ள

பிறவியையேகூறாது என்பிறவியைக் குறித்து இராவணன் தங்கையென்றது என்னிடத்துள்ள அறிவில்லாத்தன்மையாலாமென்று உரைப்பினுமாம். பி - ம்:—[1]பராவருஞ்சிரத்தையாரும் பத்தியின். [2]பயத்தை. [3]ஓரேன. [4]என்னை. [5]பராவினேய். (276)

## 53.—இராமன், உரியவர்கொடாமல் மணஞ்செய்யே னென்றல்.

ஒருவனோ வுலக மூன்றிற் கோங்கொரு தலைவ னூங்கில்
ஒருவனோ குபேர [1]னின்னோ டுடன்பிறந் தவர்க ளனார்
தருவரேற் கோடு மன்றேற் றமியைவே றிடத்துச் சார
வெருவுவெ னங்கை யென்றான் வேதத்தி னறிவை வென்றான்.

(இ - ள்.) 'நங்கை - மகளிரிற் சிறந்தவளே! ஊங்கில் - ஊன்றி நோக்குமிடத்து, நின்னோடு உடன் பிறந்தவர்கள் - உனது உடன் பிறந்தவர்களில், ஒருவன ஓ - ஒருத்தனோ, உலகம் மூன்றிற்கு ஓங்கு ஒரு தலைவன் - மூவகையுலகத்துக்கும் உயர்ந்த ஒரு தனிநாயகனான இராவணன்: ஒருவன் ஓ - மற்றொருவனோ, குபேரன் - (திக்குப்பாலகனான) குபேரன்: அனார் - அவர்களில் ஒருவர், தருவர் ஏல் - (உன்னை எமக்குக்) கொடுப்பாரானால், கோடும் - மணஞ்செய்து கொள்வோம்; அன்று ஏல் - அங்ஙனமன்றாயின், தமியை - தனியளாய் வந்த நீ, வேறு இடத்து சார - வேறிடஞ் செல்வாயாக: வெருவுவென் - (அவர்கள் வலிமையை நோக்கித் தனியே உன்னோடு பேசுதற்கும்) அஞ்சுவேன்,' என்றான் - என்று கூறினான்; (யாவனெனில்), —வேதத்தின அறிவை வென்றான் - வேதங்களின் அறிவைக் கடந்துள்ளவனான ஸ்ரீராமன்; (எ - று.)

உனது தமையன்மாரில் ஒருத்தன் திரிலோகாதிபதி; மற்றொருத்தன் ஒரு திக்குப்பாலகன்; அப்படிப்பட்ட சிறப்புடையவர் உன்னைக் கன்னிகாதானஞ்செய்துகொடுத்தால் யாம் ஏற்றுக்கொள்வோம்: அங்ஙனமன்றி, தனியே வந்த உன்னுடன் பேசுதல்மாத்திரமுந் தகுதியன்று: இதனை யறிந்தால் பேராற்றலையுடைய அவர்கள் என்செய்வரோஎன்று அச்சமுறுகின்றேன்; ஆதலால், நீ விரைவில் வேறிடஞ்செல்வா யென்றனன் என்பதாம். இங்ஙனங் கூறினது, அவள்மனத்தைச் சோதித்தற்காகவும், தனது சாந்தகுணத்துக்கு ஏற்றபடி கடுமையாகக் கூறாமல் நல்வார்த்தையாகவே கூறி மறுத்தற்காகவு மென்க. 'வேதத்தி னறிவை வென்றான்' என்பதற்கு - யாவும் உணர்த்தும் வேதங்களாலும் தனது குணஞ்செயல்கள் உள்ளபடி முழுது மறியப்படாதவ னென்று கருத்து; இத்தன்மை, வேதத்திலேயே கூறப்பட்டுள்ளது. பிறப்புமுறைப்படி குபேரனை முன்னும் இராவணனைப் பின்னுமாகக் கூறாமல் இராவணனை முன்னே வைத்தது-அவனுக்கு அடுத்த தமையனாதலாலும், ஒருதாய்வயிற்றிற்பிறந்த உரிமையுடைமையாலுமென்க. ஒரு தலைவன் - ஏகாதிபதி. ஊங்கில் - ஊங்கு என்னும் வினைப்பகுதியடியாப்பிறந்த செயினென்னும்வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இனி, அவ்விடத்தில் என்றும் பொருள்கொள்ளலாம்.

'தமியைவேறிடத்துச்சார வெருவுவென்' என்பதற்கு - அவர்களிடத்தைவிட்டு வேறிடமாகிய இவ்விடத்துக்கு நீ தனியாய் வந்ததைக்குறித்து அஞ்சுவேன் எனப பொருள் கொள்ளுதலும் ஒன்று. குபேரன் என்ற பெயர் - குற்சிதமான [விகாரப்பட்ட] உடம்புடையவ னென்று பொருள்படும்: பேரம் - உடம்பு. இவன், இமயகிரிச்சாரலில் தவஞ்செய்துகொண்டிருக்கையில் அங்கு எழுந்தருளிய சிவபிரானது பக்கத்தில் நின்ற உமாதேவியின்மேல் இடக்கண்ணைச்செலுத்தி, அவ்வபசாரத்தால் அந்தக்கண் பசந்து ஒளி மழுங்கப்பெற்று ஏகாக்ஷிபிங்கள னென்னும பெயரைப் பெற்றன னென்பது, உத்தரகாண்ட வரலாறு. பி - ம்:—[1]நின்னின். [2]மீட்டவளிணையசொன்னாள். (277)

## 54.—இதுவும், அடுத்த கவியும்-அதற்குச் சூர்ப்பணகைகூறிய மறுமொழி.

காந்தர்ப்ப மென்ப துண்டாற் காதலிற் கலந்த [1]சிந்தை
மாந்தர்க்கு மடந்தை மார்க்கு மறைகளே வகுத்த கூட்டம்
ஏந்தற்பொற் [2]றோளி னுயிஃ தியைந்தபி னெனக்கு மூத்த
வேந்தர்க்கும் [3]விருப்பிற்றாகும் வேறுமோ ருரையுண் டென்றாள்.

(இ - ள்.) 'ஏந்தல் பொன் தோளினாய் - மலைபோன்ற அழகிய தோள்களையுடையவனே! காதலின் கலந்த சிந்தை - வேட்கையால் ஒற்றுமைப்பட்ட மனத்தையுடைய, மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் - ஆடவர்க்கும் மகளிர்க்கும், மறைகளே வகுத்த கூட்டம் - வேதங்களே விதித்த சேர்க்கை, காந்தர்ப்பம் என்பது உண்டு ஆல் - காந்தர்வமென்பது ஒரு விவாகவகை உள்ளதன்றோ? இஃது இயைந்த பின் - இச்சேர்க்கை (நமக்கு) நிகழ்ந்த பின்பு, (அது), எனக்கு மூத்த வேந்தர்க்கும் - எனது தமையன்மாராகிய அவ்வரசர்களுக்கும், விருப்பிற்று ஆகும் - விருப்பமுள்ளதாம்; (அன்றியும்), வேறும்ஓர் உரைஉண்டு - மற்றுஞ் சொல்லவேண்டுவதொரு வார்த்தையுண்டு,' என்றாள் - என்று சொன்னாள்; (எ - று.)—வேறுமோருரை யின்னதென்பதை அடுத்த கவியிற் காண்க. ஆல் - தேற்றம்.

ஒருவர்மேலொருவர் அன்புகொண்டு கருத்து ஒருமித்த ஆடவரும் மகளிரும் பெரியோர் தமக்கு மணஞ் செய்விக்கவேண்டாமல் தாமே தம்மிற் கூடுமாறு காந்தருவ மென்னும் விவாகம் வேதத்தில் விதிக்கப்பட்டுள்ளதன்றோ? அந்தப்படி நாம் மணந்தால், அது பின்பு அறியப்படுமிடத்து, என் தமையன்மார்களுக்கும் உடன்பாடேயாம் என்றன ளென்பதாம்.

காந்தர்வம் - எட்டுவகை விவாகங்களுள் ஒன்று. அவையாவன—பிரமம், தைவதம், பிராஜாபத்தியம், ஆர்ஷம், ஆசுரம், காந்தர்வம், இராக்கதம், பைசாசம் என்பன; அவற்றுள், காந்தர்வமாவது - ஒத்த அன்பினராய தலைமகனுந் தலைமகளும் கொடுப்பாரும் அடுப்பாரு மின்றித் தம்மில் தாமே கூடுங் கூட்டம்; இதற்கு, 'யாழோர் கூட்டம்' என்று தமிழிற் பெயர்: இது, கல்வினைப்பய

ஞல் தனியே ஒருவரையொருவர் சந்தித்துக் கூடுகிற கந்தர்வர்களின் வழக்கத்தைத் தழுவிய தாதலால், காந்தருவமென்று பெயர் பெறும். தொல்காப்பிய நச்சினார்க்கினியத்தில், 'உலகத்து மன்றலாவது - குரவர் கொடுப்பதற்கு முன்னர் ஒருவற்கும் ஒருத்திக்கும் கண்ணும் மனமும் தம்முள் இயைவதே என வேதமுங் கூறிற்று,' 'இனிக்கந் தருவமாவது - கந்தருவகுமாரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்ததுபோல, தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர் வது: "அதிர்பயில்வம்பம்பூணுரு மாடவரும் தம்முள், எதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப—கதிர்ப்பொன்யாழ், முந்திருவர்கண்ட முனி வறு தண்காட்சிக் கந்திருவர் கண்ட கலப்பு" என இதனால் உணர்க' என்ற வாக்கியங்கள் இங்கு அறியத்தக்கன. காந்தர்ப்பம்-வடசொல் திரிபு. ஏந்தல் - உயர்ச்சியையுடையது என மலைக்குக் காரணப்பெயர். பி - ம்:—[1] மார்க்கம். [2] தோளிணைய விசைந்த. [3] விருப்பமுற்றும். (278)

**55.** முனிவரோடுடையர்முன்னே முதிர்பகைமுறைமை நோக்கார்
தனியைநீ யாத லான்மற் றவரொடுந் தழுவற் கொத்த
வினையமீ தல்ல தில்லை விண்ணுநின் னாட்சி யாக்கி
[1] இனியரா யன்னர் வந்துன் னேவலி னிற்ப ரென்றாள்.

(இ - ள்.) '(எனது தமையன்மார்), முன்னே முனிவரோடு முதிர் பகை உடையர் - முன்னமே முனிவர்களுடன் முற்றின பகைமையை யுடையவர்: (அன்றியும் அவர்கள்), முறைமை நோக்கார்-(பகைவரைக் கெடுத்தலில்) நீதி முறைமையையும் பார்க்கமாட்டார்கள்: ஆதலால்—, தனியை நீ (துணையில்லாமல்) தனிப்பட்டவனாயுள்ள நீ, அவரொடும் தழுவற்கு - அவர்களுடன் சந்தி செய்து கொள்வதற்கு, ஒத்த-ஏற்ற தான, வினையம் - தொழில், ஈது அல்லது இல்லை - இது வல்லது வேறில்லை: (இதனை நீ நிறைவேற்றுவையானால்), அன்னர்-அவர்கள், இனியர் ஆய் - (உன்னிடத்து) இனிய அன்புடையவராய், விண் உம் நின் ஆட்சி ஆக்கி - (இவ்வுலகத்தையே யன்றித்) தேவலோகத்தை யும் உனது ஆளுகையிலாகச்செய்து, உன் ஏவலில் வந்து நிற்பர் - (தாங்களும்) உனது கட்டளையின்கீழ் வந்து அடங்கி நிற்பார்கள்,' என்றாள - என்றுஞ் சொன்னாள்; (எ - று.)—மற்று - அசை; வினை மாற்றுமாம்.

நீயோ தனியனாய்த்தவசியாயிருக்கிறாய்: என்னண்ணன்மாரோ தவசியரோடு பெரும் பகைமை பாராட்டுபவர்கள்: ஆதலால காந் தருவமணம் நமக்குள் நிகழுமாயின் அப்போது அதனையுணர்ந்து என்னுடைய அண்ணன்மார் அந்தச் செயலை ஆதரத்தோடு உடன் படுவார்கள்: நீ என் தமையன்மாரால் யாதொருதுன்பமும் அடையா திருக்க இதுவே இப்போது செய்யவேண்டிய செயலென்றனளென்ப தாம். பி - ம்:—[1] இனியவர்மகிழ்ந்து. (279)

## 56.—அது கேட்டு இராமன் பரிகசித்தல்.

[1] நிருதர்த மருளும் பெற்றே னின்னலம் பெற்றே னின்னோடு
ஒருவருஞ் [2] செல்வத் தியாண்டு முறையவும் பெற்றே னென்றோ

திருநகர் தீர்ந்த [3]பின்னர்ச் செய்தவம் பயந்த தென்று
வரிசிலை [4]வடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்.

(இ - ள்.) 'நிருதர்தம் அருள்உம் பெற்றேன் - இராக்கதரது கருணையையும் அடைந்தேன்; நின் நலம் பெற்றேன் - உனது இன்பத்தையும் அடைந்தேன்; நின்னொடு - உன்னுடன், ஒருவு அருஞ் செல்வத்து - நீங்குதலில்லாத [நிலையான] செல்வவாழ்க்கையில், யாண்டுஉம் உறையஉம் பெற்றேன் - எந்நாளும் கூடிவாழவும் பெற்றேன், திரு நகர் தீர்ந்த பின்னர் - சிறந்த அயோத்தியாநகரத்தை விட்டு நீங்கினபின்பு, செய் தவம் பயந்தது - முன்பு செய்த தவம் (எனக்குப்) பயன்பட்டது, ஒன்று ஓ - ஒருவகையோ? [அன்று: பல வாறு பயன்பட்டது என்றபடி]', என்று - என்று சொல்லி, வரி சிலை வடித்த தோளான் - கட்டமைந்த வில்லில் தேர்ந்த புயவலிமையை யுடைய இராமன், வாள் எயிறு இலங்க நக்கான் - ஒளியுள்ள பற்கள் விளங்கச் சிரித்தான்; (எ - று.)

உன்னை மணஞ்செய்துகொண்டு அதனால் அரக்கருளைப் பெற்று உன்னுடன் நெடுநாள் பெருஞ் செல்வவாழ்க்கையனுபவிக்குமபடி எனது புண்ணியதவம் இப்பொழுது மிகுதியாகப்பலித்ததென்று எதிர்மறையிலக்கணையாற் பரிகாசமாகக்கூறி ஸ்ரீராமன் இகழ்ச்சி நகைசெய்தனனென்க. பி - ம்:—[1]நிருதனது [2]காலமெல்லாம். [3]வேந்தன். [4]பிடித்த, வடிவுத். (280)

## 57.—அச்சமயத்திற் சீதை அங்கு வருதல்.

விண்ணிடை யிம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க் கெல்லாம்
கண்ணிடை யொளியின் பாங்கர்க் கடிகமழ் [1]சாலை நின்றும்
பெண்[2]ணிடை யரசி தேவர் [3]பெற்றநல் வரத்தாற் பின்னர்
மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே [4]போல்வாள் வந்தாள்.

(இ - ள்.) பெண்ணிடை அரசி - மகளிரினத்தில் தலைவியாயுள்ளவளும், மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள் - பூமியினின்று இரத்தினமயமாகத் தோன்றிய வஞ்சிக்கொடிபோல் மெல்லியவடிவ முடையவளுமான சீதை,—பின்னர் - பின்பு, கடி கமழ் சாலை நின்றும் - நறுமணம வீசுகிறபர்ணசாலையினின்று, இம்பர் நாகர் விண்ணிடை விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம் கண் இடை ஒளியின் பாங்கர் - இவ்வுலகத்தாரும் கீழுலகத்தாரும் மேலுலகத்தி லுள்ள பிரமன் முதலிய தேவர்களும் ஆகிய எல்லோர்க்கும் கண் கூசும்படியான ஒளிவடிவமுள்ள இராமமூர்த்தியினருகில், தேவர் பெற்ற நல் வரத்தால்-தேவர்கள்பெற்ற நல்ல தவப்பயனால், வந்தாள்-வந்து சேர்ந்தாள்; (எ - று.)

இங்ஙனம் சூர்ப்பணகைக்கும் இராமனுக்கும் பேச்சு நடத்தலும், பிராட்டி பர்ணசாலையினின்று புறப்பட்டு இராமபிரானருகில் வந்திட்டனளென்பதாம். 'விண்ணிடையிம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க் கெல்லாங் கண்ணிடையொளி' என இராமபிரானது திருமேனியின் திவ்விய காந்தியைச் சிறப்பித்து, அவனுக்கு ஒருபெயர் கூறினார். இனி, கண் இடை ஒளி - திரிலோகத்தாரும கண்ணிடையிலே வைத்

துக் காக்கத்தக்க ஒளிவடிவமானவனென்று உரைத்தலு மொன்று. அன்றி, கண் இடை ஒளியின் - யாவருங் கண்டு கண் கூசும்படியான ஒளியோடு, பாங்கர் கடி கமழ் சாலையின்றும்-அருகிலுள்ள பர்ணசாலையினின்று, வந்தாள் என உரைப்பினும் அமையும். இலைக்குடிசைக்குப் பரிமளம்-சுற்றிலுமுள்ள செடிகொடி மரங்களின்மலர்களாலாகியது. மணியின் வஞ்சி என்றது சிறப்பினாலும், ஒளியினாலும், மண்ணிடைத் தோன்றுதலாலுமென்க. 'தேவர் பெற்றநல்வரத்தால்வந்தாள்' என்றது- இவள் இப்பொழுது வந்தமை, இவளழகைச் சூர்ப்பணகை கண்டு வியந்து இவள் அருகிலுள்ளவளவும் தன்னை இவன்விரும்பானென்று துணிந்து இவளையெடுத்துப்போகுமளவில், இலக்குமணன் வந்து அவளை அங்கபங்கஞ்செய்ய, அது, முறையே இராவண நாசத்துக்கு மூலமாய், அரக்கர்களாகிய துயரத்தைத் தேவர்கள் தீர்தற்கு ஏதுவாய் முடிவதனாலென்க. இனி, தேவர்பெற்ற நல்வரத்தாற் பின்னர் மண்ணிடை மணியின்வந்த வஞ்சியேபோல்வாள் என்று இயைத்து- (தேவர்கள்பாற்கடல் கடைதலால் முன்பு அதனினின்று திருமகளாய்த் தோன்றியது போலப்) பின்பு தேவர்கள் நல்லவரம்பெற்றதனாற் பூமியினின்று தோன்றிய மெல்லியலாள் என்றுஉரைத்தலும் அமையும். திருமால்தேவர்க்கு வரமளித்தவாறே இராமனாகத் திருவவதரித்ததற்கு ஏற்பத் திருமகள் சீதையாகத் திருவவதரித்ததனாலும், தேவர்கள் இராவணனியாற்பட்ட துன்பந் தீர்தற்குப் பெருமாளினும் பிராட்டி முற்பட்ட காரணமாகுதலாலும், 'தேவர் பெற்ற நல்வரத்தால் பின்னர் மண்ணிடைவந்தாள்' என்றதென்க. பி - ம் :—[1]சோலைநின்று [2]உடை. [3]பெற்றுயர், பெற்றுடை. [4]போல. (281)

## 58.—சூர்ப்பணகை பிராட்டியைக் காணுதல்.

ஊன்சுட வுணங்கு பேழ்வா யுணர்விலி யுருவ நாறும்
வான்சுடர்ச் சோதி வெள்ளம் வந்திடை வயங்க நோக்கி
மீன்சுடர் விண்ணு மண்ணும் விரிந்தபோ ரரக்கரென்னுங்
கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டாள்.

(இ-ள்.) ஊன் சுட உணங்கு பேழ் வாய்-தசையைப் பதஞ்செய்து தின்னுதற்குப் பதைக்கிற திறந்த வாயையுடைய, உணர்வு இலி - அறிவில்லாதவளான சூர்ப்பணகை, - உருவம் நாறும் (பிராட்டியின்) வடிவத்தினின்று வெளியிலே தோன்றுகிற, வான் சுடர் சோதி வெள்ளம் மிக்கபளபளப்பையுடைய ஒளியின் மிகுதி, வந்து இடை வயங்கல் - வந்து இடையிலே விளங்குதலை, நோக்கி - (முதலிற) பார்த்து,—(உடனே), மீன் சுடர் விண் உம் மண் உம் விரிந்த - நட்சத்திரங்கள் விளங்குமிடமான ஆகாயத்திலும் பூமியிலும் [எவ்வுலகத்திலும்] பரவியுள்ள, போர் அரக்கர் என்னும் கான் - போர்செய்யவல்ல இராக்கதராகிய காட்டை, சுட-எரித்தழித்தற்கு, முளைத்த - தோன்றிய, கற்பின் கனலியை - பதிவிரதா தருமமாகிய அக்கினிச்சுவாலையையுடைய அச்சீதையை, கண்ணின் கண்டாள் - கண்களாலே கண்டாள்; (எ-று.)

தூரத்திற் சீதை வரும்பொழுதே அவளதுதிருமேனியின் மிக்க திவ்வியஒளி முன்புவந்து தனக்கும் இராமனுக்கும் மத்தியிலே

மின்னலின்ஒளிவிளங்கினாற்போல விளங்க, அவ்வொளியைச் சூர்ப்பணகை முன்பு கண்டு பின்பு அவ்வொளிக்கு இடமான சானகியைக் கண்ணுற்றன ளென்பதாம். சீதையின் மேனியொளி 'பொன்னின்ஒளி பூவின்வெறி சாந்துபொதிசீதம், மின்னினிழலன்னவடன் மேனியொளிமான" என்றவிடத்தும் பாலகாண்டத்துப் பேசப்பட்டிருத்தல் காண்க.

சீதையின்கற்பு இராக்கதநாசத்துக்குக் காரணமாதல், பிரசித்தம். 'ஊண்சுட வுணங்கு பேழ்வாய்' என்றது - ஊனைத்தின்று ஊனைப்பெருக்குதலையே எப்பொழுதும் உரிய தொழிலாகக்கொண்டவளென அரக்கியின் இழிவைப் புலப்படுத்தும். தசையின் அசுத்தத்தையும், கொலைப்பாவத்தின் கொடுமையையும், தன்னுயிர்போலப் பிறவுயிரையும் பாவிக்கவேண்டுமென்ற நீதியை உணராமையையும் பற்றி, 'உணர்விலி' எனப்பட்டாள்; அன்றியும், தனது மிக்க கீழ்மையையும் இராமனது மிக்கமேன்மையையும் சிறிதும் அறியாமல் அவனைத் தனக்கு ஆசைநாயகனாகக் கொள்ளக் கருதி மேன்மேன் முயல்பவளை உணர்விலி யென்னத் தட்டில்லை யென்க. (282)

## 59. —சீதையை அரக்கி திருமகளோவென்று ஐயுறல்.

மருவொன்று [1]கூந்த லாளை வனத்திவன் கொண்டு வாரான்
உருவிங்கி துடைய ராக மற்றையோர் யாரு மில்லை
அரவிந்த மலரு ணீங்கி யடியிணை படியிற் றோயத்
திருவிங்கு [2]வருவாள் கொல்லோ வென்றகந் திகைத்து நின்றாள்.

(இ-ள்.) மரு ஒன்று கூந்தலாளை-நறுமணம் பொருந்திய கூந்தலையுடைய (தன்) மனையாளை, இவன்—, வனத்து கொண்டு வாரான் - காட்டில் அழைத்துக்கொண்டுவந்திருக்கமாட்டான்; இது உரு உடையார் ஆக - இப்படிப்பட்ட வடிவழகுள்ளவராக, மற்றையோர் யார்உம்-வேறு எந்தமகளிரும், இங்கு-இவ்விடத்தில், இல்லை—; திரு - இலக்குமி, அரவிந்தம் மலருள் நீங்கி - (தனக்குத் தங்குமிடமான) செந்தாமரைமலரினின்று நீங்கி, அடி இணை படியில் தோய - உபய பாதமும் நிலத்திலே பதிய, இங்கு வருவாள் கொல் ஓ-இங்கு வருபவளாவளோ? என்று-என்று எண்ணி, அகம் திகைத்து நின்றாள்-மனம் பிரமித்து நின்றிட்டாள்; (எ - று.)

இராசகுமாரனாகிய இவன் அருமையான தன்மனையாளைக் கொடிய இக்காட்டில் இட்டுக்கொண்டுவாரான்; ஆதலால், இவள் இவன்மனைவியா யிருக்கமாட்டாள்: வேறு வனமகளிரி லொருத்தியோ இவளெனின், இங்கு இப்படிப்பட்டபேரழகுடையாரெவருமில்லை; இனி, நான் செபித்த மந்திரத்துக்கு உரிய தேவதையே தாமரை மலரைவிட்டு நீங்கிக் கால்நிலந்தோய வருகின்றாளோ எனின், அத்திருமகளார் பூமியாகிய இங்கு எற்றுக்கு வரவேணும்? வரக்காரணம் இல்லையே என்று, அச்சீதையினழகை நோக்கித் திகைத்தனளென்பதாம். தெய்வச்சாதியாரின் தாள் நிலத்திலதோயா என்பவாதலாலும், திருவும் தெய்வச்சாதியளாதலாலும், 'திரு அரவிந்தம் நீங்கி யடியிணை படியில் தோய' என்றாள். 'மருவொன்று கூந்தலாள்' என்ற

தொடர், மனைவி என்ற பொருளைக் குறிப்பித்தது. சீதையைக் கண்ணி ஞற் கண்டாளென்று கூறிய கம்பர், மருவொன்று கூந்தலாள் என்ற தொடரால் மூக்குப்புலனாலும் கண்டாளென்று தோன்ற வைத்தாரென்னலாம். மைருள்-வேற்றுமை மயக்கம். பி-ம்:—[1]கூந்தலாளை. [2]வருவதென்னே. சிலபிரதிகளில் "பண்புற" (60), "பொரு திறத்தானை" (61), 'மருவொன்று' (59) என்ற முறைமையிற் பாட லுள்ளன. (283)

## 60 —அரக்கி பிராட்டியினழகை வியத்தல்.

பண்புற [1]நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகிற் கெல்லை யில்லையா மென்று நின்ருள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்ருலென்படும் பிறருக் கென்ருள்.

(இ - ள்.) பண்பு உற - (சீதையின்) அழகுப் பண்பு (தன் கண் களிலும் கருத்திலும்) பொருந்தும்படி, நெடிது நோக்கி-(பிராட்டி வடிவத்தை) நெடுநேரம் பார்த்து,—'படைக்குநர் சிறுமை அல்லால் - சிருட்டிப்பவரது வேலைத்திறக்குறைவே யல்லாமல், எண் பிறங்கு அழகிற்கு எல்லை இல்லை ஆம் - (யாவரது) மனத்திலும் நீங்காது தங் கும்படியான அழகுக்கு ஒரு வரையறை யில்லை,' என்று நின்ருள்- என்று எண்ணிநின்ருள்; (மற்றும்), 'கண்ட - (இவளைப்) பார்த்த, பெண் பிறந்தேனுக்கு - பெண்ணாய்ப் பிறந்துள்ளவளான எனக்கே, கண்-கண்கள், பிற பொருளில் செல்லா-வேறுபொருள்களிற் செல்ல மாட்டா: கருத்து எனின் - மனமோ வென்ருல், அஃது அவ - (அதுவும்) அத்திறத்ததே [பிறபொருளிற் செல்லாது]; என்ருல்-, பிறருக்கு- (இவற்றைக்கண்ட) ஆடவர்க்கு, என் படும் - (கண்ணும் கருத்தும்) எந்தநிலையைப் பெறுமோ?' என்ருள்-என்றும் கருதினள்; (எ - று.)

பிராட்டியின் திருமேனியழகு முழுவதையும் நெடுநேரம் நன்கு பார்த்து, தான் இராமனது வடிவழகிற் கருத்தூன்றி இவ்வழகனை அணையப்பெருவிடின் அமுதம் அருந்தினும் ஆவி பிரிந்திடும் என்று பெருமோகம்பூண்ட நிலையினின்றும் நெகிழ்ந்து, சூர்ப்பணகை, அப் பிராட்டியினது வரம்பிலழகிற் கருத்தூன்றி, 'உலகத்தில் அழகுக்கு ஒருவரையறை காண்பது, அவ்வவ்வடிவத்தைப் படைப்பவரின் தொழிற்குறைவினலே யன்றி, அழகெனனும் பொருளுக்கோ எல்லை யில்லை' என்று சித்தாந்தஞ்செய்தனள்: அன்றியும், 'சிறந்த மகளி ரழகைக் கண்ட ஆடவர்க்குக் கண்ணுங் கருத்தும் அவ்வடிவத்தை விட்டு நீங்காமல் அதிலேயே பதிந்தழுந்துதல், உலக வியற்கை: அங்ஙனமன்றி, இவளழகு பெண்பாலாகிய எனக்கே கண்ணுங் கருத் தும் வெளிச் செல்லவொண்ணுதபடி வியப்பைத் தருகின்றதே! இது, ஆடவர்க்கு எந்நிலைமை விளைவிக்குமோ?' என்று அதிசயித்துத் திகைத்துநின்றனளென்பதாம். அழகுடைப்பொருளைத் தன்மனத்தி னுல் கற்பித்துச் சித்திரந்தீட்டவோ, அல்லது கல் மரம் முதலிய பொருள்களில் செதுக்கவோ, கவிகளில் வருணனையாக அமைக்கவோ கருதுகின்ற படைப்புத்தொழிலை மேற்கொண்டவர், அதனை அழகு எல்லையிலடங்கும்படி அமைக்கின்றனர். அப்படியமைப்பது அந்தப்

படைத்தற்செயலை மேற்கொண்டோரின் திறமைக்குறைவினாலே தான்: எங்ஙனெனின், அழகு என்ற இந்தப் பண்புப்பொருளுக்கு எல்லையில்லையென்பது இந்தக்கட்டழகுள்ள பேரழகினைப் பதினாயிரங் கண் கொண்டு பார்த்தாலும் இவளழகை முற்றக் காணமுடியாததுள்ள தன்றோ என்று இங்ஙன் ஓர்கொள்கையைக் கொண்டன ளென்பது, 'படைக்குநர் சிறுமையல்லால் அழகுக்கெல்லையில்லையாமென்று நின்றாள்' எனபதன் கருத்து. எண்பிறங்கழகு என்பது - கண்ணின் வழியாகக் கருத்திற்பதியும் அழகு. சீதாதேவியின் வரம்பு கடந்துள்ள அழகை "கஞ்சத்துக்களிக்குமினறேன் கவர்ந்துணும் வண்டுபோல, அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லா மருளினை ளழகை மாந்தித், தஞ்சொற் கள் குழறித்தத்தந்தகை தடுமாறினரார், மஞ்ஞர்கடு மாதரார்க்கு மனமென்பதொன்றேயன்றோ", "இழைகுலா முலையினாளை யிடையுவா மதியிஞேக்கி, மழைகுலாவோதி நல்லார்களிமயக்குற்றுநின்றார், உழைகுலாநயனத்தார் பாட்டு ஒன்றென்றே விரும்பற்கொத்தது, அழகெலா மொருங்கே கண்டால் யாவரே யாற்றவல்லார்" எனக் கீழ்ப் பாலகாண்டத்திற் கூறியன கொண்டு காண்க. 'பெண்பிறந்தேனுக்கு இங்ஙனமாறல் பிறர்க்கு என்படும்' என்றது, தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணியாம். மிகுபேரழகைக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் அமைத்துள்ள திறன், பேரறிஞர் தம்மனக்கண்ணாற் கண்டு களிப்ப தன்றி, இத்தன்மையதெனப் பேசினாற் கூறமுடியாதவாறு அமைந்துள்ள அற்புதம் காண்க. பி - ம்:—[1]நோக்கிமீண்டு. (284)

## 61.—சீதாராமரது அழகொற்றுமையை அரக்கி மதித்தல்.

பொருதிறத் தானை நோக்கிப் பூவையை நோக்கி நின்றாள்
கருதமற் றினிவே றில்லை கமலத்துக் கடவு [1]டானே
ஒருதிறத் துணர நோக்கி யுருவினுக் குலக மூன்றின்
இருதிறத் தார்க்குஞ் செய்த வரம்பிவ ரிருவ ரென்றாள்.

(இ-ள்.) (சீதையினழகில் மனமாழ்ந்து தான் காதலித்த இராமபிரானையும் சற்று மறந்திருந்த சூர்ப்பணகை),—(இராமபிரானைப் பற்றிய நினைவு திரும்பிவரவே காதலான்றி அழகின் திறத்தில்), பொரு திறத்தானை நோக்கி - போர்செய்யும் வல்லமையையுடைய இராமனைப் பார்த்து, (அவ்வாறே), பூவையை நோக்கி-கிளிபோன்ற சீதையையும் பார்த்து, நின்றாள் - (ஆச்சரியப்பட்டு) நின்று,— 'கமலத்து கடவுள் தானே-தாமரைமலரில் தோன்றிய பிரமனே, ஒரு திறத்து - ஒப்பற்ற திறமையால், உணர நோக்கி - (இன்னஉறுப்பு இன்னபடி யிருக்கவேணுமென்று) நல்லாராய்ச்சியமைய நன்கு ஆராய்ந்து, உலகம் மூன்றின் - மூவுலகத்திலுமுள்ள, இரு திறத் தார்க்கும் - (ஆடவர் மகளிரென்னும்) இருவகைப்பட்டோர்க்கும்,- உருவினுக்கு செய்த வரம்பு-அழகின் முடிவெல்லையாகச் செய்யப்பட்டவர், இவர் இருவர்-இவ்விருவரும்: (இவர்கட்கு இங்ஙன் ஒத்திருத்தலும் மிக்கிருத்தலும் இல்லாத பேரழகு வாய்த்தற்குக் காரணம்), இனி வேறு கருத இல்லை- இனிமேல் வேறுவகை எண்ண வேண்டுவதில்லை,' என்றாள்-என்று எண்ணினாள்; (எ - று.)—மற்று - அசை: வினைமாற்றுமாம்.

அழகின் சிறப்பில் ஒருவரையொருவர் ஒத்தவரும் தமக்கு ஆண்பெண்களில் வேறு உவமை பெறாதவருமான இராமன் சீதை யென்னும் இருவரையும் ஒருசேர நோக்கிய சூர்ப்பணகை, தன்னை மறந்து கண்ணுங் கருத்துங் குளிரக்கண்டு களிபேருவகை யெய்தி ஒத்தஆண்பெண் இரட்டையைப் படைத்த படைப்புக்கடவுளை நினைந்து, 'படைத்தற்கடவுளான பிரமன் மூவுலகத்திலு முள்ள உயர்திணையா ரனைவரது அழகையும் முற்றும் செவ்வையாக நோக்கி அவர்களெல்லோர்க்கும் மேலான அழகுள்ள ஒரு மைந்தனையும் மங்கையையும் படைக்கக்கருதி, இவர்க்குமேல்எவருமில்லை யென்னும் படி எல்லா உறுப்புக்களிலும் பெருங்கட்டழகு பெற்று அழகிற்கு முடிவெல்லையாயிருக்குமாறு அமைத்த ஒரு சிறந்த ஆடவனும் சிறந்தபெண்ணும் ஆவர் இவர்' என்று நிச்சயித்தன ளென்பதாம். பூவை - நாகணவாய்ப் பறவையுமாம். பி - ம்:—[1] தானும். (285)

## 62.— அரக்கி, சீதையைத் தன்னைப்போ லிடையில்வந்தவ ளென்று எண்ணுதல்.

பொன்னைப்போ [1]லொளிருமேனிப் பூவைப் [2]பூவண்ணத் தானிம்
மின்னைப்போ லிடையா ளோடு [3]மேவுமெய் யுடைய னல்லன்
தன்னைப்போற் றகையோ ரில்லாத் தளிரைப்போ [4]லடியின்னாளும்
என்னைப்போ லிடையே வந்தா ளிகழ்விப்பே னிவளை யென்னா.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'பொன்னை போல் ஒளிரும் மேனி - பொன்போல விளங்குகிற திருவுருவத்தையும், பூவை பூ வண்ணத்தான் - காயா மலர்போன்ற கரியதிருநிறத்தையு முடைய இவன், இ மின்னை போல் இடையாளோடு - மின்போல் நுண்ணிதாய் விளங்குகிற இடையையுடைய இவளுடனே, மேவு மெய்உடையன் அல்லன் - (அறநெறியால்) மணந்த உடம்பையுடையவனல்லன் [இவளது கணவனல்லன்]; (மற்று), தன்னை போல் தகையோர் இல்லா - தன்னைப் போல அழகுடையவரை (வேறு) பெறாத [ஒப்பற்ற], தளிரைப் போல் அடி இன்னாள்உம் - தளிர்போல் (மெல்லியசிவந்த) பாதங்களை யுடைய இவளும், என்னை போல் இடைஏ வந்தாள் - என்னைப்போல (இவனிடம் ஆசைகொண்டு) இடையிலே வந்தவளாவள்; இவளை—, இகழ்விப்பேன் - (இவனைக்கொண்டு) இகழும்படிசெய்வேன்', என்னா - என்றுஎண்ணி, (எ - று.)—'என்றாள்' என அடுத்த கவியில் முடியும்.

மேற்கூறியவாறு சீதாராமரது வடிவழகில் ஈடுபட்டு வியப்புற்றிருந்த சூர்ப்பணகைக்கு இராமபிரானைக் காதலித்த அந்நினைவு மீட்டும்வந்தது: வரவே அவர்களிருவரின் வடிவழகி லீடுபட்ட நிலை போய், மோகம் மிகுந்து, தன்கருத்து நிறைவேறுதற்கு இம்மாது இடையூறாயிருக்கின்றாளென்று ஒருகருத்துக்கொண்டாள்: கொண்ட அவள், இவள் இவனுக்கு மனைவியல்லளென்றும், இவனிடத்துக் காதல்கொண்டு என்னைப்போலவே இவனைச் சேரும்பொருட்டு

இடையில்வந்தவளென்றும், யான் இவனை வசப்படுத்தித் தழுவுதற்கு ஓர் எதிரிடையாகவுள்ள இவளிடத்து இவனுக்குத் தீய எண்ணத்தை யுண்டாக்கி இவனைக்கொண்டு இவளை இகழும்படி செய்விப்பேனென்றும் எண்ணினளென்பதாம். பி - ம்:—[1]பொருவில். [2]போல். [3]உறைந்தவேடத்தன். [4]அடியிணுளும். (286)

## 63.—சூர்ப்பணகை இராமனிடம் சீதையைக்குறித்துப் பழித்தல்.

வருமிவண் மாயம் வல்லள் வஞ்சனை யரக்கி நெஞ்சந்
[1]தெரிவில டேறுந் தன்மை சீரியோய் [2]செயலிற் றன்றால்
[3]உருவமு மெய்ய தன்று லூனுகர் வாழ்க்கை யாளை
வெருவினெ னெய்தி டாமல் விலக்குதி வீர வென்றாள்.

(இ - ள்.) 'சீரியோய் - நற்குணநற்செய்கையுடையவனே! வீர - வீரனே! வரும் இவள் - (இங்கு) வருகிற இவள், மாயம் வல்லள் - மாயையில் வல்லவள்; வஞ்சனை அரக்கி - வஞ்சனைக்குணமுள்ள ராக்ஷசியாவள்; நெஞ்சம் தெரிவு இலள் - மனம் அறிதற்குக் கூடாதவள்; தேறும் தன்மை - (இவளை நல்லளென்று) தெளிதல், செயலிற்று அன்று - செய்யத்தக்க தன்மையுள்ளதன்று: (அன்றியும்), உருவம்உம் மெய்யது அன்று - (காணப்படுகிற இவளது) இவ் வடிவமும் உண்மையானதன்று: ஊன் நுகர் வாழ்க்கையாளை - தசையை யுண்டு வாழுந் தொழிலுடைய இவளை, வெருவினென்- (கண்டு) அஞ்சினேன் ; (இவளை), எய்திடாமல் விலக்குதி - அருகில் வரவொட்டாமல் தடுத்திடுவாய்,' என்றாள் - என்றுசொன்னாள்;

இராமன் சீதையை விலக்கவேணுமென்ற கருத்தால் தன்னுடைய தீய தன்மைகளையெல்லாம் நற்குணம்மிக்க அப்பிராட்டியின் மேலேற்றிக் கூறி 'இவளை யஞ்சினேன்: இந்தப் பொல்லாவரக்கியை நீக்குவாயாக' என்றனளென்பதாம். இங்ஙன கூறியதனால், சூர்ப்பணகையின் தீக்குணம் நன்குவிளங்குமாறு காண்க. ஆல் - அசை. பி-ம்:—[1]தெரிவிலதேறுந். [2]செயலிது. [3]உருவிது. (287)

## 64.—அதுகேட்டு இராமன் பரிகாசமாகச் சிலகூறல்.

ஒள்ளிது னுணர்வு மின்னே யுன்னையா ரொளிக்கு மீட்டார்
தெள்ளிய நலத்தி னாலுன் சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவல் லரக்கி போலா மிவளைநீ காண்டி யென்னா
வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட வீர னக்கான்.

(இ - ள்.) 'மின்னே - மின்னல்போல்விளங்குகிறவளே! உன் உணர்வு - உனது அறிவு, ஒள்ளிது - நன்றாகவுள்ளது; உன்னை ஒளிக்கும் ஈட்டார் யார் - உன்னை வஞ்சிக்கும் வல்லமையுள்ளவர் யார் (உளர்)? [எவருமில்லை யென்றபடி]; உன் சிந்தனை - உனது எண்ணம், தெள்ளிய நலத்தினால் தெரிந்தது - தெளிந்த நற்குணமுள்ளதாகத் தெரிந்தது; அம்மா - ஆச்சரியம்! கள்ளம்வல் அரக்கி போல் ஆம் - (இவள் நீ சொன்னபடி) வஞ்சனையுள்ள கொடிய ராக்ஷசியேபோலும்! இவளை நீ காண்டி - இவளைநீ நன்றாகப்பார்ப்

பாய்', என்று - என்றுசொல்லி,—வெள்ளிய முத்தம் முறுவல் வெளிப்பட - வெண்மையான முத்துப்போன்ற பறகள் வெளித் தெரியும்படி, வீரன்-இராமன், நக்கான்-சிரித்தான்; (எ-று.)

அறிதற்கரிய வஞ்சனையுள்ள கொடுமாயக்கள்ளியின் சூழ்ச்சியை உள்ளபடியறிந்தமையால் உன் அறிவு மிகச்சிறந்த தென்றும், உனக்குத்தெரியாதபடி தம்தன்மையை ஒளிப்பதற்கு எவராலும் ஆகாதென்றும், வடித்தெடுத்த நற்குணங்களோடு கூடிய உனது கருத்து நீ கூறுஞ்சொற்களால் நன்குகத்தெரிந்ததென்றும், 'இவள் அரக்கியேபோலும்: இவளைக் குறிக்கொண்டு நோக்கிடுவாய்' என்றும் சிலபரிகாசவார்த்தைகள் கூறிச் சிரித்திட்டனன் இராமபிரானென்பதாம்: வஞ்சப்புகழ்ச்சியணி. இப்பாட்டில் முதல் மூன்றடியில் வந்தன யாவும், எதிர்மறையிலக்கணையாகிய பிறகுறிப்பு. (288)

## 65.—சூர்ப்பணகை சீதையை வெருட்டல்.

ஆயிடை யமுதின் வந்த வருந்ததிக் கற்பி னஞ்சொல்
[1]வேயிடை தோளி ளுளும் வீரனைச் சேரும் வேலை
நீயிடை வந்த தென்னை நிருதர்தம் பாவை யென்னுக்
காயெரி யனைய கள்ள வுள்ளத்தாள் கதித்த லோடும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) அ இடை-அச்சமயத்தில்,—அமுதின் வந்த - தேவாமிருதம்போல வந்தவளும், அருந்ததி கற்பின் அருந்ததியின் கற்புப் போன்ற கற்புநிலையையும், அம் சொல்-அழகிய சொற்களையும், வேய் இடை தோளிளுள் உம் - மூங்கில் (ஒப்பாகாமற்) பின்னிடும்படியான தோளழகையு முடையவளுமாகிய சீதையும், வீரனை சேரும் வேலை - இராமனை அடுத்துநெருங்கும்பொழுது,—காய் எரி அனைய கள்ளம் உள்ளத்தாள் - பற்றியெரிகிற நெருப்பை யொத்த [மிகக்கொடிய] வஞ்சனைக்கருத்துள்ள சூர்ப்பணகை, (பிராட்டியை நோக்கி), 'நிருதர் தம் பாவை-இராக்கத குலத்திற் பிறந்த மகளே! நீ இடை வந்தது என்னை-(நானும் இவனும் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருக்கையில்) நீ நடுவிலே வந்தது யாதுபற்றி?' என்னு - என்றுசொல்லி, கதித்தலோடு உம் - அதட்டினவளவிலே,—(எ - று.)—'அஞ்சினள்' என அடுத்த கவியில் தொடர்ந்து முடியும்.

பிராட்டி இராமனது சமீபத்திற் கிட்டும்பொழுது, சூர்ப்பணகை, அவளை 'அரக்கியாகிய நீ இங்கு வாராதே' என்று அதட்டினளென்பதாம். இராமன் கீழ்ப் பலகூறிப் பரிகசிக்கவும், அதனைத் தனது அறிவின்மையால் அறிந்துகொள்ளாமல் உண்மையிற் கூறுவதாகவே யெண்ணினளாதலால், இங்ஙனஞ் செய்பவளானுள். சீதாபிராட்டி திருமகளினது திருவவதார மாதலால், 'அமுதின்வந்த' என்பதற்கு - திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று அமுதத்தோடு தோன்றிய என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]வேயுடைத். (289)

## 66.—சீதை அஞ்சி இராமனைத் தழுவுதல்.

அஞ்சினள் [1]வஞ்சி யன்ன மின்னிடை யலச வோடிப்
பஞ்சின்மெல் லடிகணோவ பதைத்தனள் பருவக் கால
மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் [2]வல்லி யென்னக்
குஞ்சர மனைய வீரன் குவவுத்தோ டழுவிக் கொண்டாள்.

(இ - ள்.) அஞ்சினள்-(அரக்கி வெருட்டியதற்குப்) பயந்தவளான சீதை,—வஞ்சி அனன மின் இடை அலச - வஞ்சிக்கொடி போல (நுண்ணியதாய்) விளங்குகிற இடை துவளவும், பஞ்சின் மெல் அடிகள் நோவ-பஞ்சுபோல மென்மையான பாதங்கள் நோவவும், பதைத்தனள் ஓடி-திடுக்கிட்டு ஓடிப்போய்,—பருவம் காலம் மஞ்சு இடை வயங்கி தோனறும் பவளத்தின் வல்லிஎன்ன-கார்காலத்தில் மழைபொழியவருகிற கரிய மேகத்தினிடையிலே விளங்கித் தோன்றுகிற பவழமயமானதொரு கொடிபோலத் (தோன்றுமாறு), குஞ்சரம் அனைய வீரன் குவவு தோள் - யானையை யொத்த இராமபிரானது திரட்சியையுடைய தோள்களை, தழுவிக் கொண்டாள்—; (எ-று.)

சீதைமிகவும் அஞ்சி, தன்மெல்லியஇடை அலைய மென்மையான கால்கள் நோவத் திடுக்கிட்டு ஓடிவந்து அடுத்து இராமனைத் தழுவிக் கொண்டனளென்பதாம். நீலமேகம் - இராமனது கரிய திருமேனிக்கும், பவழக்கொடி-சீதையினது சிவந்த மெல்லிய திருமேனிக்கும் உவமையாம். மேகத்திற் பவழக்கொடி, அது கடலின்நீரைப் பருகும் பொழுது அங்குநின்று சேர்ந்ததாம்; அன்றி, இல்பொருளுவமையுமாம் காலமஞ்சு-காளமேகம். பி - ம்:—[1]அஞ்சியன்னம். [2]வல்லியே போல். (290)

## 67.—இராமன், சூர்ப்பணகையை 'அப்பாற்போ' எனல்.

வளையெயிற் றவர்க ளோடு வரும்விளை யாட்டென் றாலும்
விளைவன தீமை யேயா மென்பதை [1]யுணர்ந்து வீரன்
உளைவன வியற்றே லொல்லை யுன்னிலை யுணரு மாயின்
இளையவன் முனியு நங்கை யேகுதி விரைவி னென்றான்.

(இ - ள்.) 'வளை எயிற்றவர்களோடு - வளைந்த கோரப்பற்களையுடைய அரக்கருடனே, விளையாட்டு வரும் என்றாலும் விளையாட்டு நேர்வதானாலும், விளைவன தீமைஏ ஆம் - (அதனால்) உண்டாகும் பயன்கள் தீங்குகளேயாம்', என்பதை—, உணர்ந்து - ஆலோசித்து, வீரன்-இராமன், (சூர்ப்பணகையை நோக்கி), 'உளைவன இயற்றேல் - துன்பந்தரும்படியான காரியங்களைச் செய்யாதே; இளையவன்-(எனது) தம்பி[லக்ஷ்மணன்], உன் நிலை உணரும் ஆயின்-உனது நிலைமையை அறிவனானால், ஒல்லை முனியும் - விரைவில் [உடனே] கோபிப்பான்; (ஆதலால்), நங்கை-பெண்ணே! விரைவின் ஏகுதி-துரிதமாக அப்பாற் செல்வாய்,' என்றான்-என்று சொன்னான்; (எ - று.)

'அரக்கரோடு விளையாட்டுத் தொடங்கினாலும் அது தீங்காய் விளையும்' என்பதை நினைந்தறிந்த இராமபிரான, பரிகாசச் சொல்லை விட்டு, 'துன்பந் தருஞ்செயலைச் செய்யின் உன்னிலையை என் தம்பி

யறிவானாயின் தன் சினச்செயலைக் காட்டுவான்; ஆதலால், நங்காய்! இவ்விடத்தைவிட்டு விரைவில் அப்பாற் செல்வாய்' என்றனன் என்பதாம். பி - ம்:—[1] உணர்ந்த. (291)

## 68.—சூர்ப்பணகை மீண்டும் வார்த்தையாடுதல்.

பொற்புடை யரக்கி பூவிற் புனலினிற் பொருப்பில் வாழும்
[1]அற்புடை யுள்ளத் தாரு மநங்கனு மமரர் மற்றும்
எற்பெறத் தவஞ்செய் கின்றா ரென்னைநீ [2]யிகழ்வ தென்னே
நற்பொறை நெஞ்சி [3]னில்லாக் கள்வியை நச்சி யென்றாள்.

(இ - ள்.) பொற்பு உடை அரக்கி-அழகின்விளக்கமுடைய அந்த ராக்ஷசி,—(இராமனை நோக்கி), 'பூவில்-தாமரைமலரிலும், புனலினில்-கடலிலும், பொருப்பில்-கைலாசகிரியிலும், வாழும் - வாழ்கின்ற, அன்பு உடை உள்ளத்தார்உம் - (எல்லாவுயிர்களிடத்தும்) அன்பையுடைய மனமுள்ள அயன் அரி அரனென்பவரும், அநங்கன்உம் - (யாவரும்விரும்பும் கட்டழகுடைய) மன்மதனும், மற்று அமரர்உம் - மற்றுமுள்ள (இந்திராதி) தேவர்களும், என் பெற-என்னை (த்தமக்கு உரியவளாக)ப் பெறும்பொருட்டு, தவம் செய்கின்றார்—; (அங்ஙனிருக்க), நீ—, நல்பொறை நெஞ்சின் இல்லா - நல்ல பொறுமைக் குணத்தை மனத்திலே உடையளல்லாத, கள்வியை - வஞ்சகியான இவளை, நச்சி-விரும்பி, என்னை-(அப்படிப்பட்ட சிறப்புடைய) என்னை, இகழ்வது-அலட்சியஞ்செய்வது, என்னே - என்ன தகுதியுடைத்து?' என்றாள்-என்று சொன்னாள்; (எ - று.)

பிரமனும் திருமாலும் சிவபிரானும் ஆகிய திரிமூர்த்திகளும் அழகின் தெய்வமான மன்மதனும், மிக்கசிறப்பையுடைய மற்றைத்தேவர்களும், என்னைக் காதலித்துப் பெறும்படி தவஞ்செய்து கொண்டிருக்கின்றனர்: அவர்களை மதியாமல் உன்னை நன்குமதித்து வலிய வந்து அடைந்துள்ளேன் யான்: என்னை நீ இகழ்ந்து, நற்குணமில்லாதவளும் வஞ்சனையுள்ளவளுமான இந்த அரக்கியை விரும்புவது தகுதியாமோ? என்றாளென்பதாம். நெஞ்சின் நில்லா என்றும் பிரிக்கலாம். பி - ம்:—[1] அற்புரை, அற்புறை. [2] இகழ்வதேயிங். [3] கல்லாக். (292)

## 69 —இராமன் அரக்கியை வெறுத்துப் பர்ணசாலையினுட் செல்லுதல்.

தன்னொடுந் தொடர்வி லாதே மென்னவுந் தவிரா டானிக்
கன்னெடு மனத்தி சொல்லுங் கள்ளவா சகங்க ளென்னா
மின்னொடு [1]நடந்து செல்லு மேகம்போன் மிதிலை [2]வேந்தன்
பொன்னொடும் புனிதன் போயப் பூம்பொழிற் சாலை புக்கான்.

(இ - ள்.) 'இகல் நெடு மனத்தி - கற்போல வலிய நீண்ட மனத்தையுடைய இவ்வரக்கி, தன்னொடுஉம் தொடர்வு இலாதேம் என்னஉம் தவிராள் - அவளோடு உறவுகொள்ளமாட்டோமென்று நாம மறுத்துச் சொல்லவும் (இவ்விடத்தைவிட்டு) நீங்குகிறாளில்லை; கள்ளம் வாசகங்கள் சொல்லும்-வஞ்சனைப்பேச்சுக்களையே பேசுகிறாள்,'

என்று-என்று (அவளது தீய இயல்பைக்) கருதி,—புனிதன்-பரிசுத்த குணமுள்ள ஸ்ரீராமன்,—மின்னொடு நடந்து செல்லும் மேகம் போல்-மின்னலுடன் நடந்துசெல்லுகின்ற மேகம் போல, மிதிலை வேந்தன் பொன்னொடும்-மிதிலாநகரத்தரசனான சனகனது திருமகள்வடிவமான மகளாகிய சீதையுடனே, போய் - (அவ்விடம்விட்டுச்) சென்று, அம் பூ பொழில் சாலை புக்கான்-அழகிய அச்சோலையினிடையிலுள்ள பர்ணசாலையினுட் சென்றான்; (எ - று.)—தான்-அசை.

யாம் இவளோடு தொடர்ச்சிகொள்ள விருப்பமுடையோமல்லோமென்று பலமுறை பலவாறு சொன்னாலும் இவள் அது கேட்டு அப்பாற்சென்றிடாமல் தனதுதீக்குணத்துக்கு ஏற்றபடி வஞ்சனையான பேச்சுகளைப் பேசிக்கொண்டிருக்கிறாள்: ஆதலின், இக்கொடியவளுள்ள இடத்தை விட்டு நாம் சென்றிடுவோமென்று எண்ணி இராமபிரான் பிராட்டியுடனே பர்ணசாலையுட் புக்கனனென்பதாம். உவமையணி.

நெடுமனம்-வரம்பில்லாது மேன்மேற் செல்லும் ஆசைக்கருத்து நீட்சியையுடைய மனம். மிதிலை-மிதி யென்னும் அரசனால் ஏற்படுத்தப் பட்ட நகர மென்று காரணப்பெயர்; நிமியென்னும் அரசனது குமாரனும் சனககுலத்தலைவனுமான அரசனுக்கு, மிதியென்று ஒருபெயர். திருமகளின் திருவவதார மாதலால்,சானகி, 'பொன்' எனப்பட்டனள். பி - ம்:—[1]தொடர்ந்து. [2]வந்த. (293)

## 70.—அப்பொழுது சூர்ப்பணகை தவித்தல்.

புக்கபின் போய தென்னு முணர்வினள் [1]பொறையி னீங்கி
உக்கதா முயிர ளொன்று முயிர்த்தில ளொடுங்கி நின்றாள்
[2]தக்கிலன் மனத்துள் யாதுந் [3]தழுவிலன் சலமுங் [4]கொண்டான்
மைக்கருங் குழலி னாண்மாட் [5]டன்பினில் வலிய [6]னென்பாள்.

(இ - ள்.) புக்க பின்-(இராமன் ஆச்சிரமத்தினுட்) சென்றிட்ட பின்பு, (சூர்ப்பணகை), போயது என்னும் உணர்வினள் - போயிற்றெனப்பட்ட அறிவு நீங்கியவளாய, பொறையின் நீங்கி உக்கது ஆம் உயிரள் - உடம்பினின்று நீங்கிக் கழிந்ததான உயிருடையளாய் [மூர்ச்சையடைந்து], ஒன்றும் உயிர்த்திலள் ஒடுங்கி நின்றாள் - சிறிதும் சுவாசம்விடவும்மாட்டாது ஒடுங்கிநின்று, (பின்பு சிறிதுதேறி), '(இவன்), மனத்துள் தக்கிலன் - மனத்தில் தகுதிக் குணமில்லாதவனும் [சாந்தகுணமில்லாதவனும்], யாதும் தழுவிலன் - (காமத்தால்தவிக்கின்ற எனதுதாபந்தீர்தற்கு) யாதொரு பற்றுக்கோட்டையும் செய்யாதவனுமாகி, சலம்உம் கொண்டான் - (என்பக்கல்) தணியாக்கோபமுங் கொண்டுள்ளான்: மை கருங் குழலினாள்மாட்டு அன்பினில் வலியன் - மைபோலக்கரியகூந்தலையுடைய அம்மங்கையினிடத்து அன்புசெய்தலில் உறுதியுடையவன், (இவன்)', என்பாள் - என்று எண்ணுபவளானாள்; (எ - று.)

இராமன் இப்படி தன்னைநேசியாது பர்ணசாலைக்குள் நுழைந்து மறைந்தவுடனே, சூர்ப்பணகை, அறிவு ஒழிய, உயிர்ப்பு அடங்க, செயல் ஒடுங்க, உயிர்போனாற்போலச் சிறிதுபொழுதுமூர்ச்சித்துப்

பின்பு தானேதெளிந்து, 'மனத்திற் சிறிதுந் தகுதியின்றி என் கருத்தை நிறைவேற்ற வழியொன்றுஞ்செய்யாது என்னிடம் வயிரங் கொண்டு, என்னை அவன் இப்படி இகழ்ந்து புறத்தில் தனியேவிட்டு அவளை உடன்கொண்டு உள்ளேசென்றது, யாவரினும் மிக்க அழகை யுடைய அவளிடத்து மிக்க அன்புகொண்டிருத்தலாலேயே' என்று கருதின ளென்பதாம்.

'மைக்கருங்குழலினுள்மாட்டு அன்பினில் வலியன்' என்று சீதை யினிடம் இராமன் கொண்டுள்ள அன்பின்மிகுதியிற் கருத்தூன்றி னது - பின்பு இவள் பிராட்டியை எடுத்துப்போதற்குத் தோற்றுவா யாம்; அதனை மேல் 90 - 92 ஆங் கவிகளிற் காண்க. மை - அஞ்சனம்; மேகமுமாம். காமவேதனை மிக்க இவளுக்கு அப்பொழுதுவலிமையழி வால் தன் உடம்பும் தாங்கமாட்டாததொரு பெரியபாரமாகத் தோன் றிய தென்பது தோன்ற, இங்கே உடம்பை வேறுபெயராற் குறியா மல் 'பொறை' என்ற சொல்லாற் குறித்தார். இனி, பொறை - (உயி ரைப்) பொறுப்பது [தாங்குவது] என ஏதுப்பெயருமாம். பி - ம்:— [1]பொறையுள். [2]தக்கிலள் தகுதியாதும். [3]தழுவிலள். [4]கொண்டாள். [5]அன்பினன். [6]என்றுள். (294)

## 71.—சூர்ப்பணகை அப்பாற்செல்லுதலும், சூரியன் அத்தமித்தலும்

நின்றில ளவனைச் சேரு [1]நெறியினை நினைந்து போனாள்
இன்றிவ னாகம் புல்லே னெனினுயி ரிழப்பெ னென்னாப்
பொன்றிணி [2]சரளச்சோலைப் பளிக்கறைப் பொதும்பர்ப் புக்காள்
சென்றது பரிதி மேல்பாற் செக்கர்வந் திறுத்த தன்றே.

(இ - ள்.) (இங்ஙனம் வருந்தி), நின்றிலள் - (அங்கு) நில்லாமல், அவனை சேரும் நெறியினை நினைந்து போனாள்-அப்புருஷோத்தமனை(த் தான்) தழுவும் உபாயத்தை எண்ணியபடியே சென்று, இன்று இவன் ஆகம் புல்லேன எனின் உயிர் இழப்பென் என்னா - இப் பொழுது இவனது உடம்பைத் தழுவேனாயின் எனது உயிரை இழந்துவிடுவே னென்றும் எண்ணி, பொன் திணி சரளம் சோலை பளிங்கு அறை பொதும்பர் புக்காள் - பொற்கொடிபோன்ற பூந்தாது கள் அடர்ந்த இனியதொரு சோலையிலுள்ள (தனது) பளிக்கறையின் உள்ளிடத்திலே நுழைந்திட்டாள்; அப்பொழுது, பரிதி - சூரியன், மேல் பால் சென்றது-மேற்குத்திக்கிற போய்ச் சேர்ந்தது [அஸ்தமித் தது]; செக்கர் வந்து இறுத்தது - (அத்திசையிற்) செவ்வானம் வந்து சேர்ந்தது; (எ-று.)

அப்பால் அங்கு நிற்றலிற் பயனில்லை யாதலால், அரக்கி, அவனைத் தவறுமற் சேர்தற்குச் செய்யவேண்டும் முயற்சியைப்பற்றி எண்ணிக்கொண்டே அப்பாற் சென்று, 'இவனை நான் சேராவிடின் காதல்நோய் மிகுதியால் எனக்கு மரணமே நேர்ந்திடும்' என்றுங் கருதி, அழகியதொரு சோலையினிடையில் தனக்கு இருப்பிடமாக அமைக்கப்பட்டுள்ள பளிக்கறையினுட் சென்றிட்டாளாக, அவ்வள

விற் சூரியன் அத்தமித்தான்: செவ்வானமும் பரவிற்று என்பதாம். அன்று, ஏ-ஈற்றசை. பி-ம:—[1]நெறியென. [2]சாரற்சீதப். (295)

வேறு.

## 72.—இதுமுதற் பதினேழுகவிகள்-சூர்ப்பணகையின் காமதாபவருணனை.

அழிந்த சிந்தைய ளாயயர் வாள்வயின்
மொழிந்த காமக் கடுங்கனன் மூண்டதால்
வழிந்த நாகத்தின் வன்றொளை வாளெயிற்று
இழிந்த கார்விட [1]மேறுவ தென்னவே.

(இ - ள்.) வழிந்த - (விஷம்) மிக்குவடியப்பெற்ற, நாகத்தின் - நல்லபாம்பினது, வல்-வலிய, தொளை - துவாரமுள்ள, வாள்எயிறு - கூரிய கொடியபற்களினின்று, இழிந்த - (கடித்தவாயிற்) சொரிந்த, கார் விடம்-கரிய நஞ்சு, ஏறுவது என்ன - (தலைக்கு) ஏறுவதுபோல, அழிந்த சிந்தையள் ஆய் அயர்வாள்வயின் - ஒடுங்கிய மனமுடையவளாய்த் தளர்பவளான அச்சூர்ப்பணகையினிடத்து, மொழிந்த காமம் கடுங் கனல் மூண்டது-(கீழ்ச்) சொல்லப்பட்ட காமமாகிய கொடிய தீ மிக்குஏறிற்று; (எ - று.)

நாகப்பாம்பின் விஷம் தலைக்கு ஏறி வருத்தத் தொடங்கினாற் போல, அரக்கியைக் காமநோய் மீதூர்ந்து வருத்தலுற்ற தென்பதாம்; உவமையணி. 'மொழிந்தகாமக்கடுங்கனல்' என்பதற்கு, "ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு, நீருட்குளித்து முயலாகும் - நீருட், குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்றாற்போலச் சிறப்பித்துக்கூறப்படுகிற காமக் கொடுந்தீ யென்றும் உரைக்கலாம்; 'கடுங்கனல்' என்றதும், தீயினும் அதற்கு உள்ள கொடுமையைக் குறித்தற்கே. தொளையென்றது-விஷப்பையின் வாயினின்று பல்லினுள்ளால் விஷஞ்சொரியும் வழியை. நாகத்தின் விஷப்பற்கள்-காளி காளாத்திரி யமன் யமதூதி என நான்காம். பி - ம்:—[1]ஏறியது.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிவந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (296)

73. தாட கைக்கொடி யாடட மார்பிடை
ஆட வர்க்கர சன்னயி லம்புபோற்
பாட வத்தொழின் மன்மதன் பாய்கணை
ஓட வுட்கி யுயிருளை ந் தாளரோ.

(இ - ள்.) தாடகை கொடியாள் - தாடகையென்னுங் கொடிய அரக்கியினது, தட மார்பிடை-பெரியமார்பில், ஆடவர்க்கு அரசன்-புருஷோத்தமனான இராமனது, அயில் அம்பு போல் - கூர்மையையுடைய பாணம்போல,—பாடவம் தொழில் மன்மதன் பாய் கணை-சாமர்த்தியமாகச்செய்யும் போர்த்தொழிலையுடைய மன்மதனது

பாய்கின்ற அம்புகள், ஊட - (சூர்ப்பணகையின் மார்பில் தைத்து ஊடுருவி அப்பால்) செல்ல, (அதனால் அவள்), உட்கி - அஞ்சி, உயிர் உளைந்தாள்-உயிர்வருந்தினாள், (எ-று.)

தாடகைமார்பில் இராமபாணந் தைத்தாற்போலச் சூர்ப்பணகைநெஞ்சில் மன்மதபாணந் தைக்க, அவள் மிகவருந்தினாளென்க.

தாடகை - மலைகளிற்சஞ்சரிப்பவள்; இவள் சுகேதுவென்னும் யக்ஷனது மகள்: சுந்தனென்பவனது மனைவி; ஆயிரம்யானை வலிமை கொண்டவள்; கணவன் அகத்தியமகாமுனிவன் கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானதை யறிந்த இவள், தன் புத்திரர்களான சுபாகுமாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்றபொழுது, அவனிட்ட சாபத்தால், தன்மக்களோடு இராக்கதத் தன்மை யடைந்தனள். பின்பு முனிவர்களுடைய யாகாதிகளைக் கெடுக்கிற இவர்களை அழித்துத் தன்வேள்வியைக் காக்கும் பொருட்டு விசுவாமித்திரமுனிவன் தசரதசக்கரவர்த்தியினிடம் அனுமதி பெற்று இளம்பிராயமுடைய இராமலக்குமணரை அழைத்துக்கொண்டு போனபொழுது, அம்முனிவனாச்சிரமத்துக்குச் செல்லும் வழியிடையிலே வந்து எதிர்ந்த தாடகையை இராமபிரான் முனிவன்கட்டளைப்படி பெண்ணென்று பாராது பொருது கொன்றருளினானென்பது வரலாறு.

தாடகை - ஆவீறு ஐயான வடசொல். கொடியாள் - இராவணனது வெற்றிக்கொடி போன்றவளென்றுமாம்; கொடி-துவசம்; "பொடியுடைக்கானமெங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த, தடியுடையெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகடோறு, முடியுடையரக்கற் கந்நாள் முந்தி யுற்பாதமாகப், படியிடை யற்றுவீழ்ந்த வெற்றியம்பதாகை யொத்தாள்" எனக் கீழ்ப்பாலகாண்டத்துக் கூறியதை உணர்க. பாடவம் - வடசொல்; படுத்தன்மை; திறமை. மந்மதன் என்ற வடசொல்லுக்கு - அறிவைக்கலக்குபவனென்பது, காரணப்பொருள். சூர்ப்பணகை உயிர் உளைந்தாள் - வழுவமைதி. (297)

74. கலை [1]யு வாமதி யேகறி யாகவன்
[2]சிலையின் மாரனைத் தின்னு நினைப்பினள்
மலைய மாருத மாநெடுங் காலவேல்
உலைய மார்பிடை யூன்றிட வோயுமால்.

(இ - ள்.) கலை - பதினாறுகலைகளும்நிறைந்த, உவா மதியை - பௌர்ணமீசந்திரனே, கறி ஆக-கறியாக அமைய, வல் சிலையின் மாரனை - வலிய வில்லையுடைய மன்மதனை, தின்னும் - (உணவாகக் கடித்துத்) தின்னவேண்டுமென்கிற, நினைப்பினள் - எண்ணமுடைய அவ்வரக்கி,—மலையம் மாருதம் ஆம்-பொதியமலையினின்று வருகிற (தென்றற்) காற்றாகிய, நெடுங் காலன் வேல் - நீண்ட யமனது சூலாயுதம், உலைய - வருத்தமுண்டாம்படி, மார்பிடை ஊன்றிட-மார்பிலேபாய்தலால், ஓயும்-செயலொடுங்குவாள்; (எ-று.)

மன்மதனுக்குத் துணையாய்நின்று குளிர்ந்தநிலவினாற் காமநோயைவளர்த்துத் தன்னைவருத்துகிற நிறைமதியுள்பட அம் மன்மதனைப் பிடித்துத் தின்று ஒழித்துத் தனதுதாபம் தணியலாமென்று கருதி எழுந்தாள, சூர்பபணகை: எழுமளவில், மலையமலையினின்றுவருகிற தென்றற்காற்று மார்பில்வீசிக் காலவேல்பாய்ந்தாற்போலமிகவருத்திற்று: அதனால், தன் வலிமை யொழிந்து ஒடுங்கினளென்பதாம்; உருவகவணி. இந்த வருணனையில் தான் ஒரு செயலைச் செய்ய முயலுமளவில் அச்செயல்நிகழாது அதற்குமாறான செயல் நிகழ்வதாகக் கூறும் த்குதியின்மையணி உள்ளது: இங்கன் வரும் மேற் செய்யுள்களிலும் இது காண்க.

காமோத்தீபகப்பொருள்களிற் சிலவற்றை இவள் அழிக்கலுற்றபொழுது, அவற்றில் மற்றொன்றே தன் இனத்துக்காகப் பரிந்து எதிர்த்து இவளை வலிகெடுத்த தென்பது, இதில் தோன்றும். போரில் பகையரசனையேனும் அவன்பரிவாரங்களுள் சிலவற்றையேனும் அழிக்கத்தொடங்குவாரை மற்றைப் பரிவாரம் ஊக்கத்தோடு இடையிற்புக்கு அழித்திடுந் தன்மை. இங்குக் குறிக்கப்பட்ட தென்க. அடுத்த மூன்றுகவிகளிலும் இங்ஙனமே காண்க. சந்திரனோடுகூடிய மன்மதனை அழிக்கலுற்றபொழுது இவளை மந்தமாருதம் மேற் பாய்ந்து அழித்ததை, வெண்கொற்றக் குடையோடு கூடிய ஒரு வீரனை யெதிர்த்து அழிக்கலுற்றபொழுது அவ்வெதிரியை அவ்வீரனதுதேர் மேற்பாய்ந்து அடக்கினாற்போலக் கொள்ளலாம். "ஆலைக் கரும்பு சிலையைங்கணை பூ நாண் சுரும்பு, மாலை இளிபுரவி மாருதந் தேர்—வேலை, கடிமுரசம் கங்குல் களிறு குயில் காளம், கொடி மகரம் திங்கள்குடை" என்றதனால், மன்மதனாகிய அரசனுக்குத் திங்கள் குடையும் மாருதம் தேரு மாதலை யறிக. தேவர்களைத் தடையறப் பிடித்துத் தின்னுங் கொடியவலிய அரக்கி யாதலாலும், வருத்த வருங் கொடுவிலங்கு முதலிய உயிர்களையெல்லாம் பிடித்துத்தின்றொழித்து அவற்றாலாகுந் துயரைத் தீரும் இயல்பின ளாதலாலும், காமவேதனையால் மனந்திகைத்தலாலும், மதியையும் மாரனையுந் தின்ன எண்ணினாளென்க. என்னை வருத்துதற்குத் துணையானவனையே யான் தின்னும் உணவிறகுத் துணையாகக்கொள்வேனென்று கறுக்கொண்டு கருதினளென்பது, 'மதியேகறியாக' என்ற ஏகாரத்தால் விளங்கும். 'வன்சிலை' என்றது, தொழிலாற்றல்பற்றி. உவா - நிறைமதிக்கு உரிய பௌர்ணமி. பி - ம்:—[1] அவாம். [2] சிலைய.

75. அலைக்கு மாழி யடங்கிட வங்கையால்
மலைக்கு லங்களிற் றூர்க்கு மனத்தினள்
நிலைக்கும் வானி னெடுமதி நீணிலா
[1]மலைக்க நீங்கு [2]யிடுக்கினண் மாந்துவாள்.

(இ - ள்.) அலைக்கும் - (தன்னை) வருத்துகிற [அல்லது அலை வீசுகிற], ஆழி-கடல், அடங்கிட-இல்லாமலழியும்படி, அம் கையால்-(தனது) அகங்கைகளால், மலை குலங்களின் - மலைகூட்டங்களைக் கொண்டு, தூர்க்கும் - (அதனைத்) தூர்த்துவிடவேண்டுமென்னும், மனத்தினள்- மனத்தையுடைய அரக்கி,—நிலைக்கும் வானில் - நிலை

பெற்றவானத்திலே(விளங்குகிற), நெடு மதி-பெரிய பூர்ணசந்திரனது, நீள் நிலா நீண்ட நிலாவொளி, மலைக்க - (தன்னை) எதிர்த்து அழித்தலால், நீங்கும்-நீங்கின, மிடுக்கினள் - வலிமையுடையவளாய், மாந்துவாள்-உள்ளழிவாள்; (எ - று.)

ஒலியினால் காமத்தை வளர்த்துத் தன்னைவருத்துவதனால் கடலைத் தன் வலிமைக்கு ஏற்பப் பலமலைகளைப் போகட்டுத் தூர்த்து அழித்திடவேண்டுமென்று கருதினாள்: கருதுமளவில், நிலா தன் மேற்பட்டுவருத்துதலால், வலிமையழிந்து வருந்துபவளானாளென்பதாம். கடலினின்று தோன்றி அக்கடல் தன்னைக் கண்டமாத்திரத்திற்பொங்கிக்கிளரும்படி அதற்கு மிக்க மகிழ்வையுண்டாக்குகிற சந்திரனுக்கும் கடலுக்கும் பிள்ளையுந் தாயுமாகிய உறவுமுறைமை அமைதலான், தாயாகிய கடலை இவள் வருத்தத்துணிந்தவளவில், மகனாகிய சந்திரன் இவளை வலியொடுக்கினா னென்ற கற்பனையும் அமையுமாறு, இப்பாட்டிற் கடலையும் மதியையும் அமைத்தனரென்க. பி-ம்:—[1] அலைக்கும், மலைக்கும். [2] மிடுக்கிலள். (299)

76. பூவெ லாம்பொடி யாகவிப் [1] பூமியுள்
காவெ லா [2] மொடிப் பென்னெனக் காந்துவாள்
சேவ லோடுறை செந்தலை யன்றிலின்
நாவி னால்வலி [3] யெஞ்ச [4] நடுங்குவாள்.

(இ-ள்.) 'பூ எலாம்-மலர்கள் யாவும், பொடி ஆக-தூளாம்படி, இ பூமியுள் கா எலாம்-இவ்வுலகத்திலுள்ள சோலைகளையெல்லாம், ஒடிப்பென்-முறித்துவிடுவேன்', என - என்று, காந்துவாள் - கோபதாபங்கொள்பவளான அவள் -சேவலோடு உறை-ஆணோடு கூடி வசிக்கிற, செம் தலை அன்றிலின் -சிவந்த தலையையுடைய அன்றிற்பறவையினது, நாவினால்-வாய்க்குரலினால், வலி எஞ்ச-(தன்) வலிமை குறைய, நடுங்குவாள்-அஞ்சித்திடுக்கிடுவாள்; (எ-று.)

அன்றிற்பறவை மரத்தில்வாழ்வதாதலால், அந்தப்பறவைக்கு உறைவிடமான அந்தமரச்சாதி முழுவதையும் அழிக்குமாறு கோபங்கொண்டவளை அன்றில் வலியழித்திட்டதென்பது பற்றி, சோலையையும் அன்றிலையும் ஒருங்கேகூறினர்.

அன்றிலென்பது - ஓர்புள்; இது, எப்பொழுதும் ஆணும் பெண்ணுங் கூடியேயிருக்கும்; கணப்பொழுது ஒன்றையொன்று விட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்றுதரங் கதறிக்கூவி அதன்பின்புந் தன்துணையைக் கூடாவிட்டால் உடனே இறந்துபடும்; "எரிதலைக்கன்னசெந்தலையன்றில், பிரியின் வாழாது" என்றதுங் காண்க. இதனை வடநூலார் க்ரௌஞ்ச மெனபர். எப்பொழுதும் இணையாகவுள்ள அன்றிற் பறவையும், அது மாலைப்பொழுதிற் பார்வைகுறைந்து துணையையிழந்து நலிந்து எழுந்து பறந்து வருந்துவதும், அங்ஙனம் வால் அது கூவுகிற குரலும், காமோத்தீபகமாய்க் காமுகரை வருத்துமென்பது, கவிமரபு. பி-ம்:—[1] பூமியிற. [2] மொடிப்பென். [3] எஞ்சி, அஞ்சி. [4] நடுங்கினாள். (300)

77. [1] அணவி றிங்களை நுங்க வராவினைக்
கொணர்வெ னோடி யெனக்கொதித் துன்னுவாள்
பணையின் மென்முலை மேற்பனி மாருதம்
புணர வாருயிர் வெந்து புழுங்குமால்.

(இ - ள்.) அணவு இல் - (தனக்கு) அநுகூலித்த லில்லாத, திங்களை-சந்திரனை, நுங்க விழுங்கும்பொருட்டு, அராவினை-(அதற்குப் பகையாகிய) பாம்பை, ஓடி கொணர்வென் - ஓடிப்போய்க் கொண்டு வருவேன், என-என்று, கொதித்து-கோபங்கொண்டு, உன்னுவாள் - நினைப்பவளான அவள்,—பணையின் மெல்முலைமேல் - பருமையை யுடைய மெல்லிய (தனது) தனங்களின்மேல், பனி மாருதம் புணர - குளிர்ந்த காற்றுப் பட, ஆர் உயிர் வெந்து புழுங்கும் - அருமையான உயிர் தவிக்கப்பெற்று வெதும்புவாள்; (எ-று.)

கூடினார்க்குக் குளிர்ந்த கிரணத்தாற் களிப்பைவிளைத்து நட்பு ஆக இருத்தல்போலவன்றிக் கூடாத தனக்குப் பகையாய் வருத்தத்தைமிகுவிக்கிற சந்திரனை முற்றும் விழுங்கிவிடுமாறு அதற்குப் பகையாகிய ராகுகேது என்னுங் கரும்பாம்பு செம்பாம்புகளை விரைவிற்சென்று அழைத்துக்கொண்டு வருவேனென்று கோபத்தோடு சூர்ப்பணகை கருதினாள்: அவ்வளவில், குளிர்ந்தகாற்று உடம்பிற் பட்டு அவளுயிரைத் தவிக்கச்செய்த தென்பதாம். சந்திரனையழித் தற்குப் பாம்பைக்கொணர நினைத்தவளவில், அதற்கு உணவாகிய பனிக்காற்று வர, அது இவளை வலியழித்திட்ட தென்னலாம். 'பனிமாருதம்' என்றது, அதன் இயற்கைபற்றி; இவளுக்குக் குளிர்ந் திருந்த தென்பதுபற்றி யன்று. கிரகணகாலத்திற் சந்திர சூரியரை மறைக்கிற சாயாகிரகங்களாகிய இராகுகேதுக்களைப் பாம்புகளென் றும், இராகுகேதுக்கள் சந்திர சூரியரை விழுங்குகின்றன ரென்றுங் கூறுதல், கவிமரபு. பி-ம்:—[1] அணைவில். (301)

78. கைக ளாற்றன் கதிரிளங் கொங்கைமேல்
ஐய தண்பனி யள்ளின ளப்பினாள்
மொய்கொ டீயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்.

(இ - ள்) (தன்வெப்பத்தைத் தணித்துக்கொள்ளும் பொருட்டு), கைகளால் - (தன்) கைகளால், தன் கதிர் இளங்கொங்கை மேல் - தனது ஒளியுள்ள இளமையான தனங்களின்மேல், ஐய தண் பனி - வியக்கத்தக்க குளிர்ந்த பனிக்கட்டியை, அள்ளினள் அப்பினாள் - (அவள்) நிரம்பஎடுத்து அப்பிக்கொள்ள,—(அப்பனிக்கட்டி), மொய் கொள் தீயிடை வெந்து முருங்கிய - வலிமையைக்கொண்ட நெருப்பிலே வெந்து நிலைமாறிய, வெய்ய பாறையில்-வெவ்வியதொரு பாறையின்மேல்வைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, நிகர்க்கும் - ஒக்கும் [கரைந்து உருகும்]; (எ - று.)

அரக்கி தனது வெப்பத்தைத் தணிக்குமாறு மிகக்குளிர்ந்த பனிக்கட்டியைத் தன்கைகளால் அள்ளியெடுத்துத் தனங்களின் மேல் அப்பிக்கொள்ள, அது, அவளது மிக்கதாபத்தைத் தணிக்க

மாட்டாமல் அவளுடம்பின் தாபத்தால் தான் தீப்பட்டுவேகிற பாறையிலிட்ட வெண்ணெய்போல நீராயுருகிற்றென்க. மொய் கொள்தீ - அவளது மிக்ககாமதாபத்துக்கும், தீயிடைவெந்து முருங்கிய வெய்யபாறை - காமாக்கினியில்வெந்தழிகிற அவளது வலிய கொங்கைக்கும், அப்பாறையில் இட்ட வெண்ணெய் - கொங்கையில் அள்ளியப்பிய பனிக்கட்டிக்கும் உவமை. வெப்பத்தாற் கரைதல், பனிக்கட்டியின் இயல்பு. இனி, இப்பாட்டுக்கு - குளிர்ச்சிக்காகக் கைகளாற் பனிநீரை அள்ளிக் கொங்கைமேல் அப்பிக்கொள்ள, அது குளிர்ந்தபொருள்யாவும் காமுகர்க்குத் தாபந்தணிவிக்கமாட்டாமல் அத்தாபத்தையே மிகுவிக்கிற தன்மையின்படி மிகவருத்துதலால், நெருங்கியதீயில் வெந்தபாறையிலுள்ள வெண்ணெய்போல நெகிழ்ந்துகரைந்தன ளென்னலாம். ஐய - வியப்பினையுணர்த்தும் 'ஐ' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். (302)

79. அளிக்கு [1]மெய்யுயிர் கான்றழ லஞ்சினள்
குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசுமால்
விளிக்கும் வேலையை [2]வெங்க ணநங்கனை
ஒளிக்க லாமிடம் யாதென வுன்னுமால்.

(இ - ள்.) அளிக்கும் - அன்போடு பாதுகாக்கப்படுகிற, மெய் - (தன்) உடம்பினின்று, உயிர் கான்று - பெருமூச்சு விட்டுக்கொண்டு, அழல் அஞ்சினள் - அக்காமத்தீக்கு அச்சங்கொண்டவளாய், குளிக்கும் - (தான்) மூழ்குகிற, நீர்உம் - தண்ணீரும், கொதித்து எழ - கொதிப்புக்கொண்டுபொங்க, (அது நோக்கி), கூசும் - மிக அஞ்சுவாள்: விளிக்கும் - பேரொலி செய்கிற, வேலையை - கடலுக்கும், வெம் கண் அநங்கனை - கொடிய தன்மையையுடைய மன்மதனுக்கும், ஒளிக்கல் ஆம் - (தான் இலக்காகாமற்) பதுங்கிமறையத்தக்க, இடம்—, யாது-எது? என-என்று, உன்னும் - சிந்திப்பாள்; (எ - று.)

தன் உடம்பிற் சரியாய் மூச்சு வரவொட்டாமற் பெருமூச்செறியும்படி வெதுப்புகிற காமதாபத்துக்கு அஞ்சி அதனைத் தணிக்கும்பொருட்டு அனலுக்கு எதிரிடையான குளிர்ந்த நீரிலே மூழ்க, உலகத்துத் தீயை அவிக்கவல்லதான அந்நீரும் இந்தத் தீயை அவிக்கமாட்டாமல் இதன்வெப்பத்தால் தான கொதித்து மேலெழக்கண்டு, யாதொன்றும் கிடைத்திடாமையால் மிக அஞ்சுவாள்; ஒலியால் வருத்துகிற கடலுக்கும் செயலால் வருத்துகிற மன்மதனுக்கும் இலக்கு ஆகாமல் மறையும் இடமும் உண்டோ என்று சிந்திப்பாள் என்பதாம். "ஊருளெழுந்த வுருகெழுசெந்தீக்கு, நீருட்குளித்து முயலாகும் - நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமே" என்றது, அறியத்தக்கது. பி - ம் :—[1]என்னுயிர்வென்று. [2]வெங்கணனங்கனைக்கு.
(303)

80. வந்து கார்மழை தோன்றினு மாமணிக்
கந்து காணினுங் கைத்தலங் கூப்புமால்
இந்து காந்தத்தி னீர நெடுங்கலும்
வெந்து காந்த [1]வெதுப்புறு மேனியாள்.

(இ - ள்.) ஈரம் - குளிர்ச்சியான, நெடு - பெரிய, இந்து காந்தத்தின் கல்உம் - சந்திரகாந்தமாகிய கல்லும், வெந்து காந்த - வெந்துகருகும்படி, வெதுப்பு உறும் - மிகத்தபித்தலைக் கொண்ட, மேனியாள் - உடம்புடையவளான அவள்,—கார் மழை வந்து தோன்றின்உம் - காளமேகம் (கண்ணெதிரில்) வந்து காணப்பட்டாலும், மா மணி கந்து காணின்உம் - சிறந்த நீலரத்தினத்தாலாகிய தூணை எதிரிற்கண்டாலும், கை தலம் கூப்பும் - (அவை இராமபிரானது திருமேனிக்கு ஞாபக மாதலால் அவற்றைநோக்கித்தன்) கைகளைக் கூப்பித் தொழுவாள்; (எ - று.)

குளிர்ந்த சந்திரகாந்தக்கல்லும் இவள்முன் நேர்ந்தால் தாபமடையும்படி உடம்பில் மிக்க வெப்பங்கொண்ட அவள், மழை பொழியுங் காளமேகம் வரும்பொழுது இராமனே தனக்கு அருள் செய்ய வந்ததாகவும், நீலமணித் தூண்களைக் காணும்பொழுது இவை இராமனது திருத்தோள்களே யென்றும் ஒபபுமையினாற் பாவித்து, பேரன்போடு அவற்றைநோக்கித் தனதுதுயரத்தை விரைவில் தீர்த்திடுமாறு அஞ்சலிசெய்திடுவ ளென்பதாம். "நன்று பெய்யும் மழை காணில் நாரணன்வந்தா னென்றாலும்" "கரும்பெரு மேகங்கள் காணில் கண்ணனென் றேறப் பறக்கும்" என்றாற் போன்றவை, இங்கு நினைவுக்கு வருகின்றன. கந்து - ஸ்கந்தம். இந்துகாந்தம் - சந்திரனது முனனிலையில் நீரையுமிழவதொரு வகைக்கல். மணிக்கந்து - வடிவுக்கு உவமை. பி - ம்:—[1]வெதும்புறு. (304)

81. வாம மாமதி யும்பனி வாடையும்
காம னுந்தனைக் கண்டுண ராவகை
நாம வாளெயிற் றோர்கத நாகம் [1]வாழ்
சேம மால்வரை யின்முழை சேருமால்.

(இ - ள்.) வாமம் மா மதிஉம் - அழகிய பெரிய சந்திரனும், பனி வாடைஉம் - குளிர்ந்த காற்றும், காமன்உம் - மன்மதனும், தனை கண்டு உணராவகை - (வருத்தும்பொருட்டுத்) தன்னைப் பார்த்தறியக் கூடாதபடி,—நாம - அச்சத்தைத்தருகிற, வாள் எயிறு - கூரிய கொடிய பற்களையுடைய, ஓர் - ஒரு, கதம் நாகம் - கோபத்தையுடைய பாம்பு, வாழ் - தங்குகிற, சேமம மால் வரையின் முழை-பாதுகாவலாகவுள்ள பெரியதொரு மலையின் குகையினுள், சேரும் - சேரத்தொடங்குவாள்; (எ - று.)

சந்திரனும் மந்தமாருதமும் மன்மதனும் தன்னை வருத்தவொண்ணாதபடி அவர்கட்குப் பதுங்கி யொளிக்குமாறு, சூர்ப்பணகை, பெருங் கொடும்பாம்பு தங்குவதோர் அடக்கமான மலைக்குகையினுள் நுழையலானாள் என்பதாம். இராகுகேதுக்களாகிய பாம்பு சந்திரனுக்குப் பகையாய் அவனை விழுங்குதல் பற்றியும், காற்றைப் பாம்பு உணவாக உட்கொண்டிடவல்லதாதல்பற்றியும், மதிக்கும் வாடைக்கும் அஞ்சி, 'நாகம்வாழ் முழைசேரும்' என்று குறித்தனர். மன்மதனா லுண்டாகுந் துன்பத்தினும் நாகப்பாம்பால் உண்டாகுந் துன்பம் மிக்கதன்றென்று கருதினமை, 'மன்மதனுக்கு அஞ்சுகிறவள் நாகம்வாழ்முழையிற் சேர்வள்' என்பதனால் தொனிக்கும் என்ப: இனி, நாகம் சிவபிரா

னுக்கு அணிகல மாதலின் ஒருகால் தன்னை யெரித்த சிவபிரான் அங்குத் தன்னணிகலத்தைக்கொள்ளுமாறு வந்துள்ளானோ என்று மன்மதன் அஞ்சுவனென்று கருதினனுமாம். வாடை-வடக்கிற்செல்வ தென்று தென்றலையும் காட்டும். பி - ம்:—ஆய். (305)

82. அன்ன காலை யழன்[1]மிகு தென்றலும்
[2]முன்னின் மும்மடி யாய்முலை வெந்துக
இன்ன வா[3]செய்வ தென்றறி யாதிளம்
பொன்னின் வார்தளி ரிற்புரண் டாளரோ.

(இ-ள்.) அன்ன காலை-அச்சமயத்தில், அழல் மிகு தென்றல்உம்- வெப்பம் மிக்க தென்றற்காற்றும், முன்னின மும்மடிஆய் - முன்பு வருத்தின நிலைமையினும் மூன்றுமடங்கு அதிகமாக (வருத்த),— (அதனால்), முலை வெந்து உக - தனங்கள் தபித்து அனல் சொரிய, (அவள்), இன்னஆ செய்வது என்று அறியாது - இன்னவகையாக (இதற்குப்பரிகாரஞ்) செய்வதென்று அறியாமல், இளம்பொன்னின் வார் தளிரில் புரண்டாள் இளமையான பொன்னினிறமான மிக்க துளிர்களின்மேல் விழுந்து புரண்டாள்; (எ - று.)

காமுகர்க்குக்கொடிய தென்றற்காற்று முன்னிலும்பலமடங்கு மிகுதியாக வருத்த, அதனாற் கொங்கை வெதும்பவே அரக்கி இன்ன படிசெய்வதென்றறியாமல், குளிர்ந்த செந்நிறமான இளந்தளிர்களைப் பறித்துப் படுக்கையாகக் கீழேபரப்பிக்கொண்டு அதன்மேல் விழுந்து புரண்டன ளென்பதாம். அரோ-ஈற்றசை. பி - ம்:—[1]மிகுத்தேறவும். [2]முன்னமேனியளாய். [3]செய்வன். (306)

83. வீரன் மேனி வெளிப்பட [1]வெய்யவள்
கார்கொள் மேனியைக் கண்டன ளாமெனச்
சோரும் வெள்குந் துணுக்கெனு மவ்வுருப்
பேருங் [2]கால்வெம் பிணி[3]யிடைப் பேருமால்.

(இ - ள்.) வீரன் - இராமபிரானது, மேனி - திருமேனி, வெளிப்பட - (உருவெளித்தோற்றத்தால்) கட்புலனாய்த் தோன்ற,—வெய்யவள் - கொடிய அரக்கி,—கார் கொள் மேனியை கண்டனள் ஆம் என - நீலமேகத்தையொத்த இராமபிரான் திருமேனியை உண்மையாக எதிரிற்கண்டவள்போல, வெள்கும்-நாணமடைவாள்: சோரும்- (அதனால்) தளர்வாள்: (கண்ணெதிர்ப்படுதற்கு அரிய வீரன் திருமேனி எதிர்பாராமற் கண்ணெதிர்ப்பட்டதனால்), துணுக்கெனும் - திடுக்கிடுவாள்; அ உரு - அந்தஉருவெளித் தோற்றம், பேரும் கால் - நீங்கிவிட்டபொழுது, வெம் பிணியிடை பேரும்-கொடிய விரகநோயில் மீண்டும் அகப்படுவாள்; (எ - று.)

எப்பொழுதும் இடைவிடாமல் மனத்திலே நினைக்கப்படும் பொருள் அப்பாவனையின் மிகுதியாற் கண்ணுக்கு எதிரிலுள்ளவாறு போலக் காணப்படும் இயல்பின்படி இராமன்வடிவத்தை உருவெளித் தோற்றத்திலே கண்டு சிறிதுதாபந்தணிந்து நாணிச் சோர்ந்து திடுக்கிடுமளவில், அப்பொய்த்தோற்றம் நீங்கியிட, மீண்டும் இவள கண்ணிலான் பெறறிழந்தானென மிக்க காம நோயால் அழிந்திடுவ

ளென்பதாம். பி - ம்:—[1]வெய்தவன், வெய்தவண். [2]காமப். [3]இறை பேர்கலாள். (307)

84. ஆகக் [1]கொங்கையி னையனென் றஞ்சன
மேகத் தைத்தழு வும்மவை [2]வெந்தன
போகக் கண்டு புலம்புமப் புன்மையாள்
மோகத் துக்கொர் முடிவுமுண் டாங்கொலோ.

(இ - ள்.) அ புன்மையாள் - அற்பகுணமுள்ள அவ்வரக்கி,— அஞ்சனம் மேகத்தை-மைபோலக் கருநிறமாகவுள்ள காளமேகத்தை, ஐயன் என்று - (ஒப்புமையால்) இராமனென்றே கருதி, ஆகம் கொங்கையின் தழுவும் - (தனது) மார்பிலுள்ள தனங்களிற் பிடித்துத்தழுவுவாள்; (அப்பொழுது அவளுடம்பின் வெப்பத்தால்), அவை வெந்தன போக - அம்மேகங்கள் வெந்தழிய, கண்டு - (அதனைப்) பார்த்து, புலம்பும்-அழுவாள்: மோகத்துக்கு-காமமயக்கத்துக்கு, ஒர் முடிவும் உண்டாம் கொல் ஓ - ஒருவரையறையு முண்டோ [இல்லையென்றபடி]; (எ - று.)

காளமேகங்களைக் கண்டு இராமபிரான் வடிவமென்று நிச்சயித்து அவற்றைத் தன்மார்பில் தழுவுமளவில், அவை இவளது உடம்பின்தாபத்தால் வெந்தொழிய, இவள் இராமனுக்கே அபாயமுண்டாய்விட்ட தென்று எண்ணிப் புலம்பத்தொடங்குவளென்பதாம். மோகம் - மன்மதாவத்தையி னொன்று; அது - அழுங்கலும் மொழிபல பிதற்றலும். பொதுப்பொருளைக் கூறும் இறுதியடி - முன்னடியிற்கூறிய சிறப்புப்பொருளை விளக்குதற்காக வந்ததாகுதலால், இச் செய்யுள் - வேற்றுப்பொருள்வைப்பணியாம். கொங்கையின் ஆக என மாற்றி, தனங்களிற்படும்படி என்றும் பொருள் கொள்ளலாம். பி - ம்:—[1]கொங்கையில். [2]வெந்துகும். (308)

85. ஊழி வெங்கன லுற்றன ளொத்துமவ்
வேழை யாவி யிறந்தில ளென்பரால்
ஆழி யானை [1]யடைந்தனள் பின்னையும்
வாழ லாமெனு மாசை மருந்தினே.

(இ - ள்.) ஊழி வெம்கனல் உற்றனள் ஒத்துஉம்-பிரளயகாலத்துப்பரவுகிற கொடுந்தீயிலகப்பட்டவள்போல மிகத்தவித்தும்,—பின்னைஉம் - இனமேலும், ஆழியானை அடைந்தனள் வாழல் ஆம் எனும் ஆசை மருந்தினே - இராமபிரானைச்சேர்ந்து (தான்) வாழக்கூடு மென்கிற அவாவாகிய மருந்தினால், அ ஏழை - அந்த அறிவிலாமகள், ஆவி இறந்திலள் - உயிரொழிந்தாளில்லை; (எ-று.)

சூர்ப்பணகை காலாக்கினியில் அகப்பட்டுக்கொண்டாற்போல மிகக் கொடிய காமாக்கினியில் அகபபட்டு மரணவேதனையடைந்தும், இனியாயினும் எவ்வகை உபாயத்தினாலாவது இராமனைத் தழுவி இன்பவாழக்கை பெறலா மென்னும் ஆசையே இந்நோய்க்கு ஒருபரிகாரமாய்ச் சஞ்சீவிமருந்துபோ லிருக்க, அதனால் உயிர் நீங்காது அரிதின் உயிர்தரித்திருந்தன ளென்பதாம். ஒரு பொருளினிடத்து மிக ஆசைகொண்டார்க்கு அது தமக்குக் கிடைத்திடக்

கூடு மென்ற எண்ணமே மேலிடுவ தன்றிக் கிடைக்கமாட்டா தென்ற எண்ணம் தோன்றுவதில்லை யாதலால், இங்ஙனம் ஆசை கொண்டாள். கிடைத்தற்குஅரிய பொருளை அரியதெனறு தெளியாது எளியதென்று எண்ணின அறிவின்மைபற்றி, 'அவளை 'ஏழை' என்றார். ஆழியான் - கடல்போலக் கருநிறமுடையவன். ஆசை மருந்து - உருவகம். 'என்பர்' என்பது - அசை. பி-ம்:—[1]அடைந்தவள். (309)

86. வஞ்ச னைக்கொடு மாயை வளர்க்குமென்
நெஞ்சு புக்கென [1]தார்வத்தை நீக்கெனும்
அஞ்ச னக்கிரி யேயரு ளாயெனும்
[2]நஞ்ச நக்கினள் போல நடுங்குவாள்.

(இ - ள்.) (இன்னும் அவள் இராமனை எதிரில் இருக்கிறது போலப் பாவித்து), 'வஞ்சனை கொடு மாயை வளர்க்கும் என் - வஞ்சனைக்கு இடமான கொடிய மாயையை மேன்மேற்செய்யவல்ல எனது, நெஞ்சு - மனத்தினுள், புக்கு - (நீ) புகுந்து, எனது ஆர்வத்தை நீக்கு - எனதுகாதலைப் போக்குவாய்,' எனும் - என்று பிரார்த்திபபாள்; 'அஞ்சனம் கிரியே - மைம் மலைபோன்றவனே! அருளாய - (எளியேன்பக்கற்) கருணைசெய்வாய்,' எனும் - என்பாள்: (இங்ஙனம் காமநோயால்), நஞ்சம் நக்கினள் போல - விஷத்தை நாவினால் நக்கி யுட்கொண்டவள்போல, நடுங்குவாள்- மிக வருந்துவாள்; (எ - று.)

அந்தச் சூர்ப்பணகை, மதிமயக்கினால், இராமனைத் தன் எதிரில் உள்ளானாகக் கருதி, அவனைநோக்கி 'கொடியவளான எனது மனத்தினுள் நீ சேர்ந்து அம்மனத்துள்ள காதலைத் தீர்த்தருள வேண்டும்' என்றுவேண்டி, அவ்வருத்தம் தீராமையால் நஞ்சுண்டவள் போலத் தவித்தன ளெனபதாம்.

யாவரையும் வருத்தும்படி வஞ்சகத்தையும் கொடிய மாயையையும் மிகுதியாகச் செய்யவல்ல எனது ஆற்றல் ஒழியுமாறு நீ உனது திறத்தால் என்னைக் காதலுக்கு உள்ளாக்கி வருத்தினை யென்பது தோன்ற, 'வஞ்சனைக் கொடுமாயை வளர்க்கும் என் நெஞ்சுபுக்கு' என்றாள்: அன்றி, இப்படிப்பட்ட அரிய ஆபத்து நேர்ந்திருக்கிற சமயத்தில் எனது துர்க்குணங்களைப் பொருள் செய்யாமல் அருளவேண்டுமென்னுங் கருத்தாற் கூறினளு மாம். இராமனது கரியதிருமேனி இவளை மிக வருத்துதலால், அதனைக் காதலித்தற்கே 'நஞ்சநக்கினள்போல' என்று உவமை கூறியதாகவுங் கொள்ளலாம்: பி - ம்:—[1]ஆவத்தை. [2]நஞ்சு. (310)

87. காவி யோகய லோவெனுங் கண்ணிணைத்
தேவி யோதிரு மங்கையிற் செவ்வியாள்
[1]பாவி யேனையும் பார்க்குங்கொ லோவெனும்
ஆவி யோயினு [2]மாசையி னோய்விலாள்.

(இ - ள்.) ஆவி ஓயின்உம் - உயிரொழிவதானாலும், ஆசையின் ஓய்வு இலாள் - ஆசையினொழிவைப்பெறாத அவ்வரக்கி,—

'காவிஓ - நீலோற்பலமலரோ? கயல் ஓ - கயல்மீனோ? எனும்-என்று ஐயுறத்தக்க, கண் இணை - இரண்டு கண்களையு முடைய, தேவிஓ - மனையாளோ, திருமங்கையின் செவ்வியாள் - இலக்குமியினும் அழகு உடையாள்; (இப்படியிருக்க), பாவியேனை உம் - தீவினையுடைய வளான என்னையும், பார்க்கும் கொல் ஓ - (அவன் ஒரு பொருளாக மதித்துக்) கண்ணெடுத்துப் பார்த்திடுவனோ?' எனும் - என்று சிந்திப்பாள்; (எ - று.)

எப்படிப்பட்டவரையும் தன் கண்ணழகால் வசப்படுத்தவல்ல ளாய் அருகிலுள்ளவள் திருமகளினும் அழகுடைய ளாதலால், அவன் அப்பேரழகிபக்கலிலே மிக்கஅன்புசெயதலன்றிக் கொடிய ளான என்னையும் பொருள்செய்து நோக்குதலாவது செய்வனோ? என்று அருமைகருதிக் கவன்றன ளென்பதாம். முனனர்ச் சீதை யைக் குறித்து இடையே வந்தவள் எனக் கருதினவள் அப்போ தைய நிகழ்ச்சியால் மனையாளென்று அவளைத் தேறினளென்று அறியலாம். ஈற்றடி - அவளது ஆசைமிகுதியைக் காட்டும். முத லடி - ஐயவணி. கருமையிற் காவியும், பிறழ்ச்சியிற் கயலும், கண் ணுக்கு ஒப்பாம். பி - ம்:—[1]பாவியோங்களை. [2]ஆசையை. *(311)*

88\. *மாண்ட கற்புடை யாண்மலர் [1]மாமகள்
ஈண்டி ருக்கு[2]நல் லாண்மக ளென்னுமால்
வேண்ட கிற்பி[3]ன னல்வர மெய்யிடைத்
தீண்ட கிற்பதன் றோதெறுங் காமமே.

(இ - ள்.) 'ஈண்டு - இவ்விடத்தில் [இவனருகில்], இருக்கும் - இருக்கின்ற, நல்லாள் மகள் - அழகியவளான பெண், மாண்ட கற்பு உடையாள் - சிறந்த பதிவிரதாதருமத்தை யுடையவளான, மலர் மா மகள் - செந்தாமரை மலரில் வாழுந் திருமகளேயாவள்,' என்னும் - என்று எண்ணுவாள்; 'வேண்டகிற்பின் - (ஒருத்தரை) விரும்பி ஆசைப்பட்டால் [அம்மாத்திரத்தில்], தெறும் காமம் - (அகப்பட் டாரை) அழிப்பதாகிய ஆசைநோய், அனல் வர மெய்யிடை தீண்டகிற்பது அன்றோ - நெருப்புப்போன்ற வெம்மையுண்டாக உடம்பிற் சேர்வதன்றோ!' (என்று எண்ணுவாள்); (எ-று.)—முன் வாக்கியத்திலுள்ள 'என்னும்' என்பதை, பின்வாக்கியத்திலும் கூட்டுக.

திருமால் போன்ற அவனது அருகிலுள்ளவள் திருமகளே யென்று எண்ணுவாளென்பது, முன்னிரண்டடிகளின் பொருள்: இது கூறியது, அவன் தன்னை விரும்பான்போலுமென்று குறிப்பிக்க. பின்னிரண்டடிகள், காமத்தி னியல்பு கூறியது. இதனால், சூர்ப்ப ணகை தன் காமதாபத்தை விவரித்தாளாம்: இது-பொதுப்பொரு ளால் சிறப்புப்பொருளை விளக்கும் பிறதுமொழிதல் என்னலாம்.

---

* இப்பாட்டு—அச்சிட்ட பிரதி யொன்றிற் காணப்படவில்லை.

இனி, 'மாண்டகற்புடையாள்' என்பதைச் சூர்ப்பணகையாக்கி அழிந்த கற்புடையாளென்று உரைத்து, 'என்னும்' என்ற முற்றுககு எழுவாயாகக் கொள்ளினும் அமையும்; 26 - ஆம் பாட்டில் "தேயுங்கற்பினாள்" என்றமை காண்க. மா - இலக்குமி; வடசொல். இராமன் அடிககடி அருகில் எதிரில் தோன்றுதலால், 'ஈண்டு' என அண்மைப்பொருள குறிககும் இகரச்சுட்டாற குறித்தாள். தான் கொண்ட ஒருதலைக்காமமே இங்ஙனம் வருந்துதறகுக் காரணமா மென்பதைக கருதினளென்பது, பின்னிரண்டடியின் கருத்து.

[2]அல்லால் என்ற பாடத்துக்கு - விருப்பங்கொண்டாலன்றிக் கொடிய காமம் உடம்பில் தோன்றி வருத்துவதன்று என்று எண்ணினாளென்க: அப்பொழுது நான் அவனிடத்து விருப்பங் கொண்டதனால், என்னை இந்நோய் வருத்துகிறது; என்னிடத்து அவன் விருப்பங்கொள்ளாமையால், அவனை இந்நோய் வருத்துகிற தில்லையென்ற உண்மையை நினைத்தன ளென்பது கருத்து. இப் பொருளில், ஓ-தெரிநிலை. அன்றி 'வேண்டுமெனாலும் வேண்டா மென்றாலுங் கொடியகாமம் உடம்பில் தோன்றி வருத்துமன்றோ?' என்று பொருள்கொண்டு, சூர்ப்பணகை பலவாறு வருந்தினளென்ற சிறப்புப்பொருளை விளக்குதறகுக் கவி கூறிய பொதுப்பொருளாக்கி, வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற் படுத்தலும் அமையும்; இப் பொருளில் வேண்டகிற்பின் என்பதன் பின்னும் அல்லால் என்பதன் பின்னும் உம்மை வருவிக்க. அன்றோ-தேற்றம். பி - ம்:—[1]மார்பகம். [2]நல்லான். (312)

## 89.—மறுநாட் சூரியோதய வருணனை.

ஆன்ற காத லஃதுற வெய்துழி
மூன்று லோகமு மூடு மரக்கராம்
ஏன்ற காரிரு ணீக்க விராகவன்
தோன்றி னானென வெய்யவன் றோன்றினான்.

(இ - ள்.) (சூர்ப்பணகை), ஆன்ற காதல்-நிறைந்த காமநோயை, அஃது-அவ்வாறு, உற-மிகுதியாக, எய்துழி-அடைந்த சமயத்தில்,—மூன்றுலோகம்உம் மூடும் அரக்கர் ஆம் ஏன்ற கார் இருள் நீக்க - மூன்று உலகங்களிலும் நிறைந்துள்ள இராக்கதர்களாகிய பொருந்திய கரிய இருட்டை ஒழிப்பதற்கு, இராகவன் - இராமபிரான், தோன்றினான் என-உதித்தமைபோல, வெய்யவன் தோன்றினான் - சூரியன் உதித்தான்; (எ - று.)

அப்படி அவ்வரக்கி வரம்புகடந்த வேட்கைநோயை அடைந்து வருந்துமளவில், சூரியன் உதித்தன னென்பதாம். எங்கும் நிறைந்த கரிய அச்சந்தருகிற இருளை யொழிக்கத் தோன்றிய சூரியனுக்கு, எங்கும் நிறைந்த கரிய அச்சந்தரும் அரக்கரை யழிக்க அவதரித்த இராமபிரானை உவமைகூறினார்; எதிர்நிலையணி. அரக்கராம் காரிருள் என்ற உருவகவணி இதற்கு அங்கமாய் நின்றது. (313)

வேறு.

90.—இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்: சூர்ப்பணகை சீதையை எடுத்துக்கொண்டுபோகத்தொடங்க, இலட்சுமணன் கண்டமை கூறும்.

விடியல் காண்டலி னீண்டுதன் னுயிர்கண்ட வெய்யாள்
படியி லாண்மருங் குள்ளள வென்னையவன் பாரான்
கடிதி னோடினெ னெடுத்தொல்லைக் கரந்தவள் காதல்
வடிவி னானுடன் வாழ்வதே [1]வாழ்வென மதியா.

(இ - ள்.) விடியல் காண்டலின்-பொழுது விடிந்ததைக் கண்டதனால், ஈண்டு தன உயிர் கண்ட - (உடம்பைவிட்டுநீங்காமற்) கூடிய தனதுஉயிரைப் பார்த்த [உயிர்பிழைக்கப்பெற்ற], வெய்யாள் - கொடியவளான அரக்கி,—'படி இலாள - ஒப்பில்லாதவளான தேவி, மருங்கு உள் அளவு-(தன்) பக்கத்தில் உள்ளளவும், எனை-என்னை, அவன்—, பாரான - (கண்ணெடுத்துப்) பார்க்கவும் மாட்டான்; (ஆதலால், நான்), கடிதின ஓடினென - விரைவாக ஓடிச்சென்று, எடுத்து-(அவளை) எடுத்துக்கொண்டுபோய், ஒல்லை - விரைவிலே, கரந்து- எங்கேனும்) மறைத்துவைத்துவிட்டு, (பினபு), அவள் காதல் வடிவினானுடன்-அவளது ஆசைவடிவமான அவனுடனே, வாழ்வது ஏ - கூடிவாழ்வதே, வாழவு-சிறந்தவாழ்க்கையாம்,' என - என்று, மதியா - எண்ணி,—(எ-று.)—'வந்துநோக்கினள்' என அடுத்த கவியோடு தொடரும்.

இராப்பொழுது கழிந்து சூரியோதயமானவளவிலே, சிறிது தாபங்குறைந்து உயிர்தேறிய அக்கொடியவள், 'ஒப்பற்ற மனையாள் தன் அருகிலுள்ளமட்டும் என்னை அவன் சிறிதும விரும்பானாதலால், அவளை நான் விரைந்தோடி யெடுத்துப்போய் எவ்விடத்திலாயினும் மறைவாக வைத்துவிட்டால், பின் அவன் என்னுடன் கூடி இன்பமளிப்பன்: ஆதலால், அதுவே விரைவில் நான் செய்யவேண்டிய தொழில்' என்று எண்ணினளென்பதாம்.

இரவிற்பட்ட துன்பம் பகல்தொடங்கியவளவில் சிறிது குறைவுபட்ட தன்மை முதலடியில் விளங்கும். பகலில் இந்திரியங்கள் பலவேறுவகைப்பட்ட பொருள்களை நாடுதல் கூடுமாதலால், ஒருவாறு காதல்நோய் குறையப்பெறலாம்; இரவில் அங்ஙனமன்றி எல்லாப்பொருளுமடங்க இந்திரியங்களோடு மனம் பிரிந்தபொருளொன்றையே நாடுதலாலும், கலவிக்கு உரிய காலமாதலாலும், அதில் காதல் நோயை ஆற்றுதல் அரிது என்க. அவள் காதல் வடிவினான்-அவளிடத்து [சீதையிடத்து] மிக்க காதல்கொண்டு அதன் வசபட்டு அதன்மயமாய் நிற்பவன்; இனி, அவளாற் காதலிக்கப்பட்ட வடிவழகுடையானென்றுமாம். பி-ம்:—[1]மதியென.

இதுமுதற் பதினொரு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (314)

91. வந்து நோக்கினள் வள்ளல்போ யொருமணித் [1]தடத்திற்
சந்தி [2]நோக்கின னிருந்தது கண்டன டம்பி
இந்து நோக்கிய நுதலியைக் காத்தய லிருண்ட
கந்த நோக்கிய சோலையி லிருந்தது காணாள்.

(இ - ள்.) வந்து நோக்கினள் - (அவர்களுள்ள பர்ணசாலையினிடம்) வந்துபார்த்து,—(அப்பொழுது), வள்ளல் - இராமன், போய்—, ஒரு மணி தடத்தில் - அழகியதொரு கோதாவரியாற்றங்கரையிலே (சேர்ந்தவனாய்), சந்தி நோக்கினன் இருந்தது - சந்தியாவந்தநகாரியத்திற் கருத்துச்செலுத்திக் கொண்டிருந்ததை, கண்டனள் - பார்த்து,—தம்பி - (அவனது) தம்பியான இலக்குமணன், இந்து நோக்கிய நுதலியை காத்து - சந்திரனை யொத்த நெற்றியையுடைய பிராட்டியைப் பாதுகாத்துக்கொண்டு, அயல் இருண்ட கந்தம் நோக்கிய சோலையில் இருந்தது - பக்கத்திலுள்ளதும் அடர்ச்சியால் இருட்சிபெற்றதும் நறுமணம் மேல்நோக்கிவீசப்பெற்றதுமான சோலையில் இருந்ததை, காணாள் - பார்த்திடாதவளாய்.—(எ - று.)—'தோகையைத் தொடர்ந்தாள்' என அடுத்த கவியோடு முடியும்.

கீழ்க்கூறியபடி தீயசிந்தனைகொண்ட சூர்ப்பணகை, இராமன் முதலிய மூவரும் இருந்த பர்ணசாலைக்கு வந்துபார்க்குமளவில், இராமன் விடியற்காலததுச்சென்று கோதாவரிநதியின் ஒருதுறையில் நீராடி அங்குச் சந்தியாவந்தநம் சூரியநமஸ்காரம் முதலிய காலைக்கடமைகளைக் கழித்துக்கொண்டிருக்கக்கண்டு, சீதைக்குப் பாதுகாவலாய் இலக்குமணன் அவ்வாச்சிரமத்தினருகிலுள்ள இருண்ட சோலையிலிருத்தலை அச்சோலையின் இருட்சியாற் பாராது இங்குச் சீதையைத்தவிர எவரு மில்லை யென்று எண்ணினாள் என்பதாம்.

*114* - ஆம் பாட்டில் "நின்றந்த நதியகத்து நிறைதவத்தின் குறைமுடித்து" என வருவதனால், இங்கே 'தடம்' என்பதற்கு கோதாவரிநதியினிட மென்னவேண்டும். சந்தி - ஸந்த்யா; இது, அக்காலத்துக்கு உரிய கடமைகளைக் குறித்தது. இந்து, கந்தம் - வடசொற்கள். பி - ம்:—[1]தடத்தான். [2]நோக்கியே. (315)

92. தனியி ருந்தனள் சமைந்ததென் [1]கருத்தெனத் தாழ்வுற்று
இனியி ருந்தெனக் கெண்ணுவ தில்லென வெண்ணா
துனியி ருந்தவன் மனத்தின டோகையைத் தொடர்ந்தாள்
கனியி ரும்பொழில் காத்தய லிருந்தவன் கண்டான்.

(இ - ள்.) 'தனி இருந்தனள் - (நான்வந்த இப்பொழுது) தனியளாயே இருந்திட்டாள்; (ஆதலால்), என் கருத்து சமைந்தது - எனது எண்ணம் பலித்தது,' என - எனவும்,—'இனி - இனிமேல், தாழ்வு உற்று இருந்து - காலதாமதமடைந்து, எண்ணுவது - ஆலோசிக்கவேண்டுவது, எனக்கு—, இல் - (யாதொன்றும்) இல்லை,' என - எனவும், எண்ணா - எண்ணி, துனி இருந்த வல் மனத்தினள் - கூறுத்தங்கிய கொடியமனத்தையுடையவளாகிய அச்சூர்ப்பணகை,

தோகையை தொடர்ந்தாள் - மயில்போலுஞ் சாயலுள்ள சீதையைப் பிடித்தற்குப் பின்தொடர்ந்தாள்; (அதனை), கனி இரும் பொழில் காத்து அயல் இருந்தவன் - பழங்களையுடைய பெரிய அச்சோலையிற் காவல்செய்துகொண்டு அருகிலிருந்த இலக்குமணன், கண்டான் - பார்த்திட்டான்; (எ - று.)

'நான் இவளையெடுத்துக்கொண்டு போகவேண்டுமென்று எண்ணங்கொண்டு வந்தபொழுது, இவள் கொழுநனைப்பிரிந்து வேறுஎவருந் துணையிலலாமல் தனியேயுள்ளாளாதலால் எனது எண்ணம் ஈடேறிவிட்டது; இனி ஒன்றும் ஆலோசிக்கவேண்டுவதில்லை; தாமதம் சிறிதுஞ்செய்யலாகாது' என்று எண்ணி உடனே அரக்கி பிராட்டியைத்தொடருமளவில், அவளுக்குப் பாதுகாவலாய் அருகிற்சோலையிலிருந்த இலக்குமணன் பார்த்திட்டானென்பதாம். சமைந்தது - காலவழுவமைதி. பி - ம்:—[1] சிந்தனை. (316)

## 93 — இதுவும் அடுத்த கவியும்-குளகம்: இலக்குமணன் சூர்ப்பணகையை அங்கபங்கஞ்செய்தலைக் கூறும்.

நில்ல டீஇயெனக் கடுகினன் பெண்ணென நினைந்தான்
வில்லெ டாதவள் [1]வீங்கெரி யாமென விரிந்த
சில்ல லோதியைச் [2]செங்கையிற் றிருகுறப் பற்றி
[3]ஒல்வ யிற்றுதைத் தொளிகிளர் சுற்றுவா ளுருவி.

(இ - ள்.) (அத்தீச்செய்கையைக் கண்ட இலக்குமணன்),—(கோபங்கொண்டு), நில அடீஇ என-'அடீஇ! நில்' என்று அதட்டிச் சொல்லிக்கொண்டு, கடுகினன் - விரைவாக வந்து, பெண் என நினைந்தான் - 'பெண் கொலை பெரும்பாவம்' என்று எண்ணினனாதலால், வில் எடாது - (அம்பெய்து அவளைக்கொல்லும் பொருட்டு) வில்லைக் கையிலெடுக்காமல், அவள் - அவளுடைய, வீங்கு எரி ஆம் என விரிந்த சில் அல் ஓதியை - நனகுபற்றியெரிகிற நெருப்புபபோலப் பரந்துள்ள சிலஅல்லாத [மிகப்பலவாகிய] தலைமயிரை, செம கையின் - (தனது) சிவந்த (இடக்) கையால், திருகு உற பற்றி - முறுக்குண்டாகப் பிடித்துக்கொண்டு, ஒல் வயிறு உதைத்து - விரைவாக வயிற்றிற் காலாலுதைத்து, ஒளி கிளர் சுற்று வாள் உருவி - ஒளிவிளங்குகிற உடைவாளை (வலக்கையில்) உருவியெடுத்து,—(எ - று.)—'நூக்கி' என அடுத்த கவியோடு தொடரும்.

அரக்கி பிராட்டியைத் தொடர்தலைக் கண்டவளவிற் கோபங்கொண்டு, இலக்குமணன் 'யாரடீ! தொடராதே, விலகிநில்' என்று சினமொழிகளைக் கூறிக்கொண்டே விரைவாக அருகிலவந்து, பெண்கொலை பெரும்பாதகமாதலால் அவளை வில்லம்புதொடுத்துக்கொல்லநினையாமல் அங்கபங்கஞ்செய்து உயிருடனே விட்டிடக்கருதி, அவளது சிவந்த தலைமயிர்க்கற்றையை ஒருகையால் முறுக்கிபபிடித்துக்கொண்டு அவள்வலிமை கெடுமாறு அவள் வயிறறில் ஓருதையுதைத்து மற்றொருகையால் உடைவாளையெடுத்துக்கொண்டனனென்றவாறு. சுற்று என்பது - அரையைச்சுற்றியுள்ளதான இடைக்

கச்சைக் குறிக்க, சுற்றுவர்ள் என்பது - அதிற்கட்டப்படும் உடைவா ளுக்குக் காரணப்பெயராம். பி-ம்:—[1]வயங்கு. [2]சிக்குறச்செங்கையாற். [3]ஒல்லையீர்த்துவைத்து. (317)

94. [1]ஊக்கித் தாங்கிவிண் [2]படர்வெனென் றுருத்தெழு வாளை
நூக்கி நொய்தினின் வெய்திழை யேலென நுவலா
மூக்குங் காதும் [3]வெம் முரண்முலைக் கண்களு முறையாற்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான்.

(இ - ள்.) (அப்பொழுது), 'ஊக்கி - வலிமைகொண்டு, தாங்கி விண் படர்வென் - (இவனை) எடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் சென்றிடுவேன்,' என்று - என்று எண்ணி, உருத்து எழுவாளை - கோபங்கொண்டு அங்ஙனஞ் செய்யத் தொடங்கும் அவளை, நொய்தினின் நூக்கி - எளிதில் [அலட்சியமாக] விரைவிற் கீழே தள்ளி, வெய்து இழையேல்என நுவலா - '(இப்படிப்பட்ட) கொடுந் தொழிலை இனிச்செய்யாதே' என்று புத்திசொல்லிக்கொண்டே,—மூக்குஉம் - (அவளது) மூக்கையும், காதுஉம் - காதுகளையும், வெம் முரண் முலை கண்கள்உம் - கொடிய வலிய முலைக்காம்புகளையும், முறையால் போக்கி - ஒன்றன்பின்ஒன்றாக அறுத்து, (அதன் பின்பு), போக்கிய சினத்தொடுஉம் - தணிந்த கோபத்துடனே [கோபந்தணிந்து], புரி குழல் விட்டான் - (தன்கையிற்) சுற்றிப் பிடித்த அவள்தலைமயிரை விட்டிட்டான்; (எ - று.)

இங்ஙனம் இலக்குமணன் சூர்ப்பணகையின் தலைமயிரைக் கையாற்பற்றிக்கொண்டு வாளையெடுத்தபொழுது, அவள் இவனைத் தன் வலிமையால் எடுத்துக்கொண்டு வானிற் சென்றிடுவதாகத் துணிந்து உக்கிரங்கொண்டு வலிமையோடு அங்ஙனஞ்செய்யத் தொடஙகுமளவில், இலக்குமணன் அவளைத் தன் வலிமையால் எளிதிற் கீழேதள்ளி, 'இனி இப்படிச்செய்யாதே, செய்யாதே' என்று சொல்லிக்கொண்டு மூக்குமுதலிய சிலஉறுப்புக்களை யறுத்துப் பின்பு கோபமாறி அவளமயிரைக் கைவிட்டன னென்பதாம். எவர்க்கும் மூக்கு இனமை பார்ப்பதற்கே அவலட்சணமாகப்புலப்படும். முலைக்கும காதுக்கும் ஊனமுண்டாதல் பெண்மைக்கு இழுக்கா மென்பதை "முலையிரண்டு மில்லாதாள் பெண்காமுற்றற்று" என்ற திருக்குறளினாலும், "காதிரண்டு மில்லாதா ளேககழுத்தஞ்செய்தலும்" என்ற சிறுபஞ்சமூலத்தாலும் அறிக. பி - ம்:—[1]ஊக்கத்தேதாக்கி, ஊக்கித்தாக்கி. [2]படர்வெம். [3]மென்முகிழ். (318)

## 95.—அவளது கதறலும், இரத்தப்பெருக்கும்.

அக்க ணத்தவள் வாய்திறந் தரற்றிய [1]வமலை
திக்க னைத்தினுஞ் [2]சென்றது தேவர்தஞ் செவியும்
புக்க துற்றது புகல்வதென் மூக்கெனும் புழையூடு
உக்க சோரியி னீரமுற் [3]றுருகிய துலகம்.

(இ - ள்.) அ கணத்து - அந்தக் கணத்திலே, அவள்—, வாய் திறந்து அரற்றிய - வாயை(ப் பெரிதாக)த் திறந்துகொண்டு கதறின, அமலை-ஓசை, திக்கு அனைத்தின்உம் சென்றது-எல்லாத்திக்குக்களி

லும் போய்ப் பரவியது, தேவர்தம் செவிஉம் புக்கது - (மேலுலகத்துள்ள) தேவர்களது காதுகளிலும் போய்நுழைந்தது: உற்றது புகல்வது என்-(மற்றும்) நடந்ததைப்பற்றிச் சொல்லவேண்டுவது யாது உளது? மூக்கு எனும் புழையூடு-(அவளது) மூக்கென்கிற துவாரத்தினின்று, உக்க-வழிந்த, சோரியின் நீரம்-இரத்தநீர், உற்று - மிக்குப் பாய்தலால், உலகம் உருகியது - நிலவுலகம் கரைந்தது; (எ - று.)

அப்பொழுது அவள் மிகவருந்திப் பேரிரைச்சலிட்ட ஓசை எட்டுத்திக்குக்களிலும் போய் மேலுலகத்தாரது காதிலும்பட்டதென்றால், அம்முழக்கம் இன்னின்னது செய்ததென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுவதென்? இதுநிற்க: அவளது அறுபட்ட மூக்கின் துவாரவழியாய்ப் பெருகின இரத்தவெள்ளம் பாய்தலால் மண்முழுவதும் கரைந்திட்டதென்பதாம்; உயர்வுநவிற்சியணி. பி - ம்:—[1]ஓசை. [2]நின்றது. [3]உருகிய. (319)

## 96.—சூர்ப்பணகையை அங்கபங்கப்படுத்தியதன் வருணனை.

கொலைதுமித்துயர் கொடுங்கதிர் வாளினக் கொடியாள்
முலைதுமித்துயர் மூக்கினை நீக்கிய [1]முறைமை
மலைதுமித்தென விராவணன் மணியுடை மகுடத்
தலைதுமித்தற்கு நாட்கொண்ட [2]தொத்ததோர் தன்மை.

(இ - ள்.) கொலை துமித்து - (சூர்ப்பணகையைக்) கொல்லுதலையொழித்து [கொல்லாமல்], உயர் கொடுங் கதிர் வாளின் - சிறந்த கொடிய ஒளியுள்ள உடைவாளினால், அ கொடியாள் முலை துமித்து - அந்தக்கொடியவளது கொங்கைகளை அறுத்து, உயர் மூக்கினை நீக்கிய - உயர்ந்த மூக்கையும் அறுத்திட்ட, முறைமை - செய்கை,—மலை துமித்து என - மலையைக் கொடுமுடி துணித்தாற்போல, இராவணன் மணி உடை மகுடம் தலை துமித்தற்கு - இராவணனது இரத்தினங்களையுடைய கிரீடத்தை யணிந்த தலைகளைத் துணிப்பதற்கு, நாள் கொண்டது ஓர் தன்மை ஒத்தது-நல்லநாள் கொண்டு தொடங்கிவைத்ததொரு தன்மையைப் போன்றது;

இளையபெருமாள் சூர்ப்பணகையை அன்று உறுப்பறுத்திட்ட செயல், பின்பு இராமபிரான் அவள் தமையனது தலைகளைத் துணித்தற்பொருட்டு நாட்கொண்டிட்ட தன்மை போன்றதென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. மலைதுமித்தென-மணியுடை மகுடத்தலை துமித்தற்கு - உவமையணி. நாட்கொள்ளுதலாவது - ஒருகாரியத்தைச் செய்தற்கு ஏற்ற நாளையும் இலக்கினத்தையும் அமைத்துக் கொண்டவர் யாதாயினும் ஒருகாரணத்தால் அப்போது அக்காரியத்தைச் செய்ய இயலாதாயின் அதற்கு அங்கமானதொரு காரியத்தை அம்முகூர்த்தம்தவறாமல் அதிலே தாமாவது தமதுபரிவாரத்தைக் கொண்டாவது தொடங்கிவைத்தல். முன்பு நாட்கொண்டு அங்கமான காரியத்தைச் செய்தது பின்பு பிரதானகாரியத்தை முடிப்பதற்குக் காரணமாகு மென்ற கொள்கையின்படி,சூர்ப்பணகையைக் கொல்லாமல் உறுப்பறுத்துவிட்டது அவள் போய் இராவணனைக் கொண்டுவந்து மடிதற்குக் காரணமாதல் காண்க. கொலைதுமித்து உயர்

என எடுத்து-வாளுக்கு அடைமொழியாக்கி, கொல்லுதலுண்டாம்படி (பகையை) வெட்டி மேம்பட்ட என்று வாளின் இயற்கையை விளக்கிய தாகப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. கதிர்-கூர்மையுமாம். இங்கே, முலையையும் மூக்கையுங் கூறியது-காதுக்கும் உபலக்ஷணம்; இது மேலுங்கொள்க. பி - ம்:—[1]மூத்தம், முகத்து. [2]ஒத்ததத்.

இராமாயணப்போர் பதினெட்டு மாதகாலம் நடந்ததென்ற செய்தி, "செறிகழல் வேந்தன் தென்தமிழாற்றல், அழியாது மலைந்த வாரிய மன்னரை,...உயிர்த்தொகை யுண்ட ஒன்பதிற்றிரட்டி யென்று, யாண்டுமதியும் நாளுங் கடிகையும்,ஈண்டு நீர் ஞாலங் கூட்டி யெண்கொள,...ஒருபகலெல்லை யுயிர்த்தொகையுண்ட, செங்குட்டு வன்" [27. 5 13] என்ற சிலப்பதிகாரப் பகுதிக்கு—"தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டிலும், இராம ராவண யுத்தம் பதினெட்டு மாதத்தி லும், பாண்டவதுரியோதன யுத்தம் பதினெட்டுநாளிலும்...முடிந்த" என்ற அரும்பதவுரை யினாலும், சிந்தாமணியில் "எண்கொண்ட ஞாட்பு" (2353) என்னும் மூலத்திற்கு - தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்றபோர்" என்றுள்ள உரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரதமுளவென்று, ஓவாவுரையோயும்படி" என்ற கலிங் கத்துப்பரணியாலும், சங்ககாலம் முதல் தமிழ் மக்களால் வழங்கப் பட்டதென்பது தெரிகின்றது: இந்த 18 - மாதக் கணக்கு, வான்மீ கத்து எவ்வகையாலும் ஒத்திருக்க வில்லை. இது குறித்து, ஸ்ரீமாந் ராவ்ஸாஹெப். மு. இராகவய்யங்கார்ஸ்வாமிகள் தாம் எழுதிய ஆராய்ச்சித்தொகுதி என்ற கட்டுரைத்தொகுதி நூலில் 2 - ஆவது கட்டுரை 10-ஆம் பகுதியில், "கொலைதுமித்து" என்று கம்பர் பாடிய இப்பாடலை யெடுத்து, 'இவ்வங்கச்சேதனஞ் செய்த நாளை ராமராவண யுத்தத்தின் தொடக்கமாகக்கொண்டு, இராமாயணப்போர் 18 - மாத வளவினதாகத் தமிழர் கணக்கிட்டனரோ?...இது ஆராய்தற்கு உரியது' என்று எழுதியுள்ளார். (320)

## 97.—இலக்குமணனால் தள்ளப்பட்ட சூர்ப்பணகை எழுதல்.

அதிர மாநிலத் தடிபதைத் தரற்றிய வரக்கி
கதிர்கொள் காலவேற் கரன்முத னிருதர் [1]வெங் கதப்போர்
எதிரி லாதவ ரிறுதியி னிமித்தமா வெழுந் தாண்டு
உதிர மாரிபெய் கார்நிற மேகமொத் துயர்ந்தாள்.

(இ - ள்.) அதிர - அதிர்ச்சியுண்டாக, மா நிலத்து - பெரிய தரையிலே (கிடந்து), அடி பதைத்து - (மிக்கநோவினால்) கால்களை உதறிக்கொண்டு, அரற்றிய - கதறிய, அரக்கி—,—கதிர் கொள் - ஒளியைக்கொண்ட [அல்லது கூர்நுனிகொண்ட], காலன் வேல் - யமன்போலக்கொடிய வேலாயுதத்தையுடைய, கரன் முதல் - கரன் முதலான, வெம் கதம் போர் எதிர் இலாதவர்-கொடிய உக்கிரத் தோடு போர்செய்தலில் மாறில்லாதவராகிய, நிருதர் - இராக்கத ரது, இறுதியின் நிமித்தம் ஆ-நாசத்தின்பொருட்டாக, எழுந்து—, ஆண்டு-அவ்விடத்து, உதிரம் மாரி பெய் கார் நிறம் மேகம் ஒத்து - இரத்தமழையைச்சொரிகிற கறுத்தநிறமுள்ள மேகத்தைப் போன்று, உயர்ந்தாள் - உயர்ந்துதோன்றினாள்; (எ - று.)

இலக்குமணனால் தள்ளப்பட்டுக் கீழ்விழுந்து உறுப்பு அறுப்புண்டு அந்நோவுபொறுக்கமாட்டாமல் கால்களை உதறிக்கொண்டு நிலம் அதிரும்படி பேரிரைச்சலிட்ட கருநிறம்படைத்த அவள் பின்பு எழுந்து இரத்தஞ்சொரிய உயர்ந்த தோற்றம், அரக்கரழிவைத் தெரிவிக்குந் துர்நிமித்தமாகத் தோன்றி அவ்விடத்தில் இரத்தமழையைச் சொரிகிற கருமேகம் தோன்றியது போன்றிருந்த தென்பதாம்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மேகம் இரத்த மழை பொழிதல், ஓர் உற்பாதம். பி - ம் :—[1] தம். (321)

## 98.—இரண்டுகவிகள்-சூர்ப்பணகை பலவாறு துயருறுதலைத் தெரிவிக்கும்.

உயரும் விண்ணிடை மண்ணிடை விழுங்கிடந் துழைக்கும்
அயருங் கைகுலைத் தலமரு மாருயிர் சோரும்
பெயரும் பெண் [1]பிறந் தேன்பட்ட [2]பிழையெனப் பிதற்றும்
துயரு மஞ்சிமுன் றொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்.

(இ - ள்.) துயர்உம் - துன்பமென்கிற குணந்தானும், அஞ்சி - பயந்து, முன் தொடர்ந்திலா - இதற்குமுன் சேரமாட்டாத, தொல் குடி - பழமையான (அரக்கர்) குலத்தில், பிறந்தாள் - பிறந்தவளான அவள்,—(புண்ணின்வலியால்), விண்ணிடை உயரும் - வானத்தில் எழுவாள் மண்ணிடை விழும் - தரையில்விழுவாள்; கிடந்து உழைக்கும் - (அங்கேவிழுந்தபடியே) கிடந்து மிகவருந்துவாள்; அயரும் - தளர்வாள்; கைகுலைத்து அலமரும் - கைகளைப்பிசைந்துகொண்டு மனஞ்சுழல்வாள்; ஆர் உயிர் சோரும் - அரிய உயிர் சோர்வாள் [மூர்ச்சிப்பாள்]; பெயரும் - (அம்மூர்ச்சைதெளிந்து) எழுவாள்; பெண் பிறந்தேன் பட்ட பிழை - பெண்ணாய்ப்பிறந்த யான் அடைந்த பரிபவம் (என்னே!), என பிதற்றும் - என்று பலமுறை கூறுவாள்;

தேவர்கள் முதலியோர் அனுக அஞ்சியதுபோலவே, இதுவரையிலும் துன்பமென்பதும் அஞ்சித் தொடரப்பெறுததாகித் தொன்று தொட்டுவருஞ் சிறந்த அரக்கர் குலத்திலே பிறந்தே பெருந்துன்பமுற்ற அவள் அத்துன்பமிகுதியால் வானத்தை நோக்கி எழும்பத் தொடங்குவாள்: கீழ் விழுவாள்: அங்கே விழுந்து கிடந்து இட்ட காலிட்டகைபளாய் வருந்துவாள்; நிலைதளர்வாள்; இன்னது செய்வதென்றறியாது கைகளைப் பிசைந்துகொண்டு மூர்ச்சிப்பாள்; தானே அரிதில் தெளிந்தெழுவாள்; யான் பெண் பிறந்து என்னபாடு பட்டேனென்று வாய்பிதற்றுவாளென்பதாம். இராவணன பிறந்தகுலமே துன்பத்தையறியாததென்பார் 'துயருமஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடி' என்றார். பிழை - பரிபவம்: சிறுமையுமாம்: இச்சொல், சூர்ப்பணகையின துன்பமிகுதியைக் குறிப்பிக்குமாறு, 'என்னே' என்று வரக்கூடிய முடிவுச் சொல்லைப் பெறாது நின்றது. துயருமஞ்சித்தொடர்ந்திலாத் தொல்குடிஎன்ற தொடர், மிகவும் இனபுறுதற்கு உரிய கவிநலம் சிறந்ததாம். துயர் அஞ்சுதல் - அஞ்சாதது அஞ்சுவதுபோலக் கற்பனை வகையாற் கூறப்பட்டது; மரபுவழுவமைதி. பி - ம்:—[1] பிறந்தியான். [2] பழி. (322)

99. ஒற்று மூக்கினை யுலையுறு தீயென வுயிர்க்கும்
எற்றுங் கையினை நிலத்தினி லிணைத்தடங் கொங்கை
பற்றும் பார்க்குமெய் [1]வெயர்க்குந்தன் [2]பருவரன் மயக்கால்
சுற்று மோடும்போய்ச் சோரிநீர் சொரிதரச் சோரும்.

(இ - ள்.) மூக்கினை - (இரத்தம் பெருகுகிற) மூக்கை, ஒற்றும் - (ஆடையினால்) ஒற்றிக்கொள்வாள், உலை உறு தீ என - உலைக்களத்திற்பொருந்திய நெருப்புப்போல, உயிர்க்கும் (வெவ்விதாகப) பெருமூச்சுவிடுவாள்; நிலத்தினில் கையினை எற்றும் - தரையிற் கைகளை மோதுவாள்; இணை தட கொங்கை பற்றும் பார்க்கும் - பெரிய இரண்டு தனங்களையும் (கைகளால்) பிடித்துப்பார்ப்பாள்; மெய் வெயர்க்கும் - உடம்புவேர்ப்பாள்; தான் - தனது, பருவரல் மயக்கால் - துன்பத்தினாலான மதிமயக்கத்தினால், சுற்றும் ஓடும் - சுற்றிலும் ஓடுவாள்; போய் - (அங்ஙனஞ்) சென்று, சோரி நீர் சொரிதர - இரத்தம் பெருக, சோரும் - தளர்வாள்; (எ - று.)

காம்புகள் அறுக்கப்பட்டனவாதலால் கொங்கையைப்பற்றிப் பார்ப்பாளானாள். பூமிக்கு 'அசலா' என்றும், 'ஸ்திரா' என்றும் வடமொழியில் வழங்குகிறபெயர்களின் பொருளோடு 'நிலம்' என்றதனை ஒப்பிடுக. பி - ம்:—[1]நோக்கும். [2]பருவலிக்காலாற். (323)

## 100.—அவள் தன்குலத்தாரைக் குறிப்பிட்டுப் புலம்பத் தொடங்குதல்.

ஊற்று மிக்கநீ ரருவியி னொழுகிய குருதிச்
சேற்று வெள்ளத்துட் டிரிபவ டேவரு மிரியக்
கூற்று முட்குந்தன் [1]குலத்தினோர் பெயரெலாங் கூறி
[2]யாற்று கிற்கிலள் பற்பல பன்னி நின் [3]றழைத்தாள்.

(இ - ள்.) ஊற்று மிக்க - (மேன்மேற்சுரக்கின்ற) ஊற்றினின்று மிக்குப் பெருகிய, நீர் அருவியின் - நீர்ப்பெருக்குப்போல, ஒழுகிய - (தன்உடம்பினின்று மிக்கு) வழிந்த, குருதி - இரத்தத்தாலாகிய, சேறு வெள்ளத்துள் - மிக்க சேற்றினிடையிலே, திரிபவள் - அலைபவளாகிய அவள்,—ஆற்றுகிற்கிலள் - (துன்பம்) பொறுக்க மாட்டாதவளாய்,—தேவர்உம் இரிய - தேவர்களும் (தன்முழக்கங்கேட்டு) அஞ்சியோடும்படி, கூற்றும் உட்கும் தன் குலத்தினோர் பெயர் எலாம் கூறி - யமனும் அஞ்சும்படியான தனது குலத்தாரது பேரையெல்லாஞ் சொல்லி, பல் பல பன்னி நின்று - மற்றும் பலபல பேச்சுக்களையும் எடுத்துச்சொல்லிக்கொண்டு, அழைத்தாள் - கூப்பிடுபவளானாள்; (எ - று.)—அதனை, அடுத்த பதின்மூன்று கவிகளிற் காண்க.

பெருவெள்ளமாய்க் குருதிநீர் பெருகி அன்னாளிருந்த இடத்தைச் சேறுமாறு செய்ய, ஆங்கு திரிபவளான சூர்ப்பணகை, வேதனை பொறுக்கமாட்டாது, தன பெருங்குரலோசையைக்கேட்டுத் தேவர்களும் இரியுமாறு, யமனும் அஞ்சுகின்ற தன குலத்தோர் பெயர்களையெல்லாம் சொல்லிப் பற்பல பன்னி விளிப்பவளானா ளென்பதாம். ஊறுவது, ஊற்று. தேவரும் என்ற உம்மை-அவர்களது மேலுல

கத்திலுள்ள தன்மையையும், கூற்றும் என்ற உம்மை - அவனது யாவரையும் அஞ்சுவிக்குந் தன்மையையும் புலப்படுத்தும் உயர்வுசிறப் பாம். பி - ம்:—[1] சுற்றத்தார். [2] ஆற்றுகின்றிலள். [3] அழுதாள். (324)

வேறு.

## 101.—இனிப்பதின்மூன்றுகவிகள்-சூர்ப்பணகை புலம்பல்.

நிலை[1]யெடுத்து நெடுநிலத்து நீயிருக்கத் தாபதர்கள்
சிலையெடுத்துத் திரியு[2]மிது சிறிதன்றோ தேவரெதிர்
தலையெடுத்து விழியாமைச் [3]சமைப்பதே தழலெடுத்தான்
மலையெடுத்த தனிமலையே யிவைகாண வாராயோ.

பதினொன்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தழல் எடுத்தான் - அனலைக் கையிலேந்தியுள்ள சிவ பிரானது, மலை-கைலாசகிரியை, எடுத்த-(கைகளாற் பெயர்த்து உயர) எடுத்த, தனி மலையே - ஒப்பற்ற மலைபோல்பவனே!—நீ—, நெடு நிலத்து-பெரிய இப்பூலோகத்தில், நிலை எடுத்து இருக்க-(வாழ்க்கை) நிலைகொண்டிருக்கையில், தாபதர்கள்-முனிவேடங் கொண்டவர், சிலை எடுத்து திரியும் இது - (அச்சமின்றிக் கையில்) வில்லையேந்திக் கொண்டு சஞ்சரிக்கிறஇது, சிறிது அன்றோ - (உன் பெருமைக்குக்) குறைவானதன்றோ? தேவர் எதிர தலைஎடுத்து விழியாமை சமைப் பதுவே-தேவர்கள உன் எதிரில் தலையெடுததுப பார்க்கவொண்ணாத படி செயதிடுதல் மாத்திரமேயோ (உன்செயல்)? இவை காண வாராய்ஓ-(யான்பட்ட) இச்சிறுமைகளைப் பார்க்க வரமாட்டாயோ?;

தாருகவனத்து முனிவர்களா லேவப்பட்டுத் தன்னைக் கொல் லுதறகு வந்த பெருநெருப்பைத் தனது ஆற்றலால் வலியடக்கித் தனது கையொனறி லேந்திய பெருந்திறல்படைத்த உருத்திர மூாத்தியின வாழிடமான கயிலைமலையையும் நிலைபெயர்த்தெடுத்த பேராற்றலுடையவனே! நீ யாவரையும் வென்று எங்குந்தடையற ஆணைசெலுத்தி இவ்வுலகத்தில் வாழ்ந்துகொண்டிருக்கையில், உன்னைப் பொருள்செய்யாமல் உனக்கு எதிராகச் சில தவவேடத் தோர் படைக்கலமெடுத்துத் திரிவது, உனது பெருந்திறலுக்கும் பெரும்புகழ்க்குங் குறைவன்றோ? தேவர்களையெலலாம் தலை யெடுகக வொட்டாமல் வென்று அடககிவிடுதல்மாத்திரமே உன்னாண்மைக்கு அமைவதோ? இப்படிப்பட்ட சிறுபகைகளையும கவனிகக வேண்டா வோ? என்றபடி.

மரவுரியும் சடைமுடியுமாகிய வேடமாத்திரத்தைக்கொண்டு, 'தாபதர்கள்' என்றாள. தாபதர் = தாபஸர்: இசசொல், எளியவ ரென்ற பொருளிலும் பயில்வதுண்டு. 'தேவரெதிர் தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே' என்பதற்கு-தேவர்கள் முன்னிலையில் நான் தலையெடுத்து விழிக்கக் கூடாதபடி என்னை இவர்கள் பங்கப்படுத்து வது தகுதியோ? எனறும் பொருள் கொள்ளலாம். 'விழியாமை சமைப்பதே' என்ற இபல்பான பாடததுக்கு - எதிர்மறைத் தொழிற் பெயர் இரண்டாமவேற்றுமைத்தொகையில் விகாரத்தியல்பாய் நின்ற

தென்க. சமைத்தல்-அமைத்தல், செய்தல். மலையை யெடுத்த பெரு மலையே யெனவிளிப்பாள், 'தனிமலையே' என்றாள். மலை - இராவண னுக்கு உவமவாகுபெயர். பி-ம்:—[1]எடுத்தார். [2]அது. [3]சமைப்பதோ.

இதுமுதல் முப்பத்திரண்டு கவிகள் - பெரும்பாலும் நாற்சீரும் காய்ச்சீராய்வந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். இவற்றை நாற்சீர் நான்கடித் தரவுகொச்சக மென்றலும் ஒன்று. ()

102. புலிதானே புறத்தாகக் குட்டிகோட் படா [1]தென்ன
ஒலியாழி யுலகுரைக்கு முரைபொய்யோ வூழியினும்
சலியாத மூவர்க்குந் [2]தானவர்க்கும் வானவர்க்கும்
வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ.

(இ - ள்.) ஊழியின்உம் சலியாத - கற்பாந்தகாலத்திலும் நிலை குலையாத, மூவர்க்குஉம்-திரிமூர்த்திகளுக்கும், தானவர்க்குஉம்-அசுரர் களுக்கும், வானவர்க்குஉம்-தேவர்களுக்கும், வலியானே- (மேம்பட்ட) வலிமையுடையவனே!—'புலி தானே புறத்துஆக-தாய்ப்புலி பின்னே யிருக்க, குட்டி கோள்படாது - அதன் குட்டி (எவராலும்) பிடித்து வருத்தமடைவிக்கபடாது,' என்ன - என்று, ஒலி ஆழி உலகு உரைக்கும் - ஒலியையுடைய கடல் சூழ்ந்த நிலவுலகத்திலுள்ளார் கூறுகிற, உரை-வார்த்தை, பொய்ஓ-பொய்யாமோ? யான் பட்ட வலி காண வாராய்ஓ நான் அடைந்த கொடுநோவைப் பார்க்க வரமாட் டாயோ? (எ - று.)

'புலிதானே புறத்தாகக்குட்டி கோட்படாது' என்ற வாக்கியம் - உபமானத்தால் உபமேயத்தை விளக்கும் பிறிதுமொழிதல் என்னும் அலங்காரமாய், வலிய பெரியோர் புறத்தேயிருக்க அவரைச்சார்ந் தோர் எவராலுந் துன்புறுத்தப்படார் என்ற உவமேயவாக்கி யத்தை விளக்கும். பெரியதமையனை நீ எனக்குப் புறங்காவலாக இருக்கையில் உன்னுடைய செல்வத்தங்கையான என்னை இவர் வருத்தியதனால், புலி புறத்தாகக் குட்டி கோட்படாது என்ற அந்தப் பழமையான பொய்யாமொழி பொய்ம்மொழியாயிற்றே? என்கிறாள். இச் செய்யுளின் முதலடியில "புலிபுறங்காக்குங் குருளைபோல" என்ற புறநானூறும், "குட்டியைத்தின்னலாமோ கோட்புலி புறத்ததாக" என்ற சீவகசிந்தாமணியும் ஒப்புநோக்குதற்கு உரியன. பி - ம் :— [1]என்னும். [2]வானவர்க்குந்தானவர்க்கும். (326)

103. ஆர்த்தானைக் காசுந்தி யமரர்கணத் தொடு [1]மடர்ந்த
போர்த்தானை யிந்திரனைப் பொருதவனைப் போர்தொலைத்து
வேர்த்தானை யுயிர்கொண்டு மீண்டானை வெரிநபண்டு
பார்த்தானே யான்பட்ட பழி வந்து பாராயோ.

(இ - ள்.) ஆர்த்து - ஆரவாரஞ்செய்துகொண்டு, ஆனைக்கு அரசு உந்தி - யானைகட்கு அரசனான ஐராவதத்தை ஏறிநடத்தி, அமரர் கணத்தொடுஉம் - தேவர்கள்கூட்டத்துடனே, அடர்ந்த - வந்துநெருங்கிய, போர் தானை இந்திரனை-போர்செய்யவல்ல சேனைக ளோடு கூடிய தேவேந்திரனை, பொருது - எதிர்த்துப்போர்செய்து, அவனை—, போர் தொலைத்து - யுத்தத்தில் வலிமையழியச்செய்து,

வேர்த்தானை உயிர் கொண்டு மீண்டானை-(அப்பொழுது அச்சத்தால்) உடம்புவியர்த்து உயிரை அழியாமற் கொண்டு(போரினின்று)மீண்ட அவ்விந்திரனை, பண்டு-முன்பு, வெரிந் பார்த்தானை - முதுகுகண்டவனே! யான் பட்ட பழி வந்து பாராய்ஓ-நான் அடைந்த சிறுமையை வந்துபார்க்கமாட்டாயோ? (எ - று.)

தேவேந்திரனையும் வென்ற இந்திரசித்தே! பெருந்திறல் படைத்த நீ தாபதரால் எனக்கு நேர்ந்த இந்தப்பழியைப் பார்த்து இதற்கு மாற்றுச்செயலைச் செய்யமாட்டாயா என்று கதறுகின்றனள் சூர்ப்பணகை யென்பதாம். இச் செய்யுளிற்குறித்த வரலாறு:—இராவணன் திக்குவிசயஞ்செய்து எல்லாவுலகத்தவரையுங் கீழ்ப்படுத்தத் தொடங்கி ஆங்காங்குச் சேனையோடு சென்று பொருது சயித்துக் கொண்டே போகும்பொழுது சுவர்க்க லோகத்தை யடைந்து இந்திரனை யெதிர்க்க, அவன் தேவசேனையுடனே வந்து தனது வலிய பெரிய ஐராவதயானையின்மீது ஏறிக்கொண்டு இராவணனும் வியக்கும்படி உக்கிரமாகப் போர்செய்யுமளவில், இராவணன்மகனான மேகநாதன் மாயையில்மறைந்து ஆயுதமழை சொரிந்து அவ்விந்திரனைக் கலங்கச்செய்து அவன் அஞ்சி ஓடலுறுமளவில் அங்ஙனஞ்செல்லவொண்ணாதபடி மாயைப் பாசத்தால் அவனைப் பிணித்து வெற்றி கொண்டு மீண்டு இராவணனோடும் சேனையோடும் இலங்கைக்கு வந்து அவனைச் சிறையில் வைத்திருக்க, அச்செய்தியை உணர்ந்த பிரமதேவன் வானவர் சூழ அங்கு வந்து இராவணனைக்கண்டு 'இந்திரனைச் சயித்ததனால், உன்மகனுக்கு இந்திரஜித் என்று இனிப பெயர் வழங்குக' என்று உபசாரவார்த்தைகூறி அம்மகனுக்கு வரமுமளித்து இந்திரனைச் சிறைமீட்டுக்கொண்டு சென்றனனென்பது.

இனி, "இராவணனும் இராக்கதசேனையும் இந்திராதிதேவர்களால் மிக வருத்தமடைந்த நிலையில், மேகநாதன் மாயையாற்பொருது இந்திரனைச் சிறைபிடித்துக் கொண்டுவந்து இராவணனுக்குக் காட்ட, அவன் மிகமகிழ்ந்து 'இந்திரனைப்பிடித்தவாறே நீ தேர்மீது ஏறி இச் சேனையெல்லாம் புடைசூழ முந்தி இலங்கைக்குச் செல்; யான் உன் பின்னே வருகிறேன்' என்று சொல்லி அங்ஙனமே மகனைச் சிறப்பாக முன்செலுத்தித் தான் அவன்பின்னே சென்றனன்" என்று வால்மீகி ராமாயணத்தின் உத்தரகாண்டத்திலுள்ளதனால், இப்பாட்டுக்கு- இந்திரனை எதிர்த்துத்தாக்கி அவனைப்போரழித்து, வேர் தானைஉயிர் கொண்டு - (தனது) சிறந்த சேனையை உயிரிறவாதபடிசெய்து உடன் கொண்டு, மீண்டானை - (வெற்றியோடு போரினின்று) மீண்ட மேகநாதனை, பண்டு - முன்பு, வெரிந் பார்த்தானே - முதுகை நோக்கிக் கொண்டு (மகிழ்ச்சியோடு) பின்சென்ற இராவணனே! என்றும் உரைக்கலாம். இங்ஙனங் கொள்ளுதல், முன்பின்பாடல்களில் இராவணனை விளித்துள்ளதனோடும் பொருந்தும். வேர்த்தானை - அடிப்படை; மூலபலம். பி - ம்:—[1] ஆர்த்த. [2] காணவாராயோ. (327)

104. காற்றினையும் புனலினையுங் கனலினையுங் கடுங்காலக்
கூற்றினையும் விண்ணினையுங் கோளினையும் பணிகொண்டற்கு

ஆற்றினை நீ யீண்டிருவர் [1]மானுடவர்க் காற்றுது
மாற்றினையோ வுன்வலத்தைச் சிவன்றடக்கை வாள்கொண்டாய்.

(இ - ள்.) சிவன் தட கை வாள் கொண்டாய் - சிவபிரானது பெரிய கையாற் கொடுக்கப்பட்ட வாளாயுதத்தைப் பெற்றவனே! நீ—, காற்றினை உம் - காற்றின்தெய்வமாகிய வாயுவையும், புனலினை உம் - நீரின்தெய்வமாகிய வருணனையும், கனலினை உம் - நெருப்பின் தெய்வமாகிய அக்கினியையும், கடுங் காலம் கூற்றினை உம் - கொடிய காலத்தை வரையறைசெய்கிற யமனையும், விண்ணினை உம் - சுவர்க்கத்தையும், கோளினை உம் - நவக்கிரகங்களையும், பணி கொண்டற்கு - குற்றேவல் கொள்ளுதற்கு, ஆற்றினை - வல்லமையுடையவனாய்; (அப்படிப்பட்ட நீ), ஈண்டு இருவர் மானுடவர்க்கு ஆற்றுது - இங்குள்ள மனிதரிரண்டுபேர்க்கு எதிர்செய்யும் வலிமையில்லாமல், உன் வலத்தை மாற்றினையோ - உனது வலிமையை மாறச்செய்து விட்டாயோ? (எ-று.)

இந்திரனுள்ளிட்ட திக்குப்பாலகரையும் சூரியன் முதலிய கிரகங்களையும் வென்று கீழ்ப்படுத்தி அடிமையாக்கிக் குற்றேவல் செய்வித்துக்கொள்ளவல்லவனான நீ, எனக்கு இப்படி இடையூறு செய்த இந்தமனிதரிருவர்க்கும் ஏற்ற தண்டனை செய்தற்கு வாராமல் நிற்கின்றனையே; உனது வலிமைக்கு ஏதேனும் குறைஉண்டாயிற்றோ? என்று கதறினாளென்க. பி - ம்:—[1]மானிடனார்க்கு.

சிவன்தடக்கைவாள்கொண்ட வரலாறு:—இராவணன் கைலாசத்தைப் பெயர்த்தெடுக்கலுற்றபொழுது அதன்மேலுள்ள சிவபிரான் தன்திருவடியின் பெருவிரலினால் அம்மலையை அழுத்தியூன்ற, அதனால் இராக்கதராசன் கைகள் நசுக்குண்டு பெயர்க்கமாட்டாமற் பேரிரைச்சலிட்டு மந்திரிகள் சொன்னபடி சாமவேத கானத்தால் அக்கடவுளை வெகுகாலந் தோத்திரஞ்செய்ய, பரமசிவன் மனமிரங்கி விரலைத்தளர்த்தி அவன் தோள்களை விடுவித்து ராவணனென்னும் பெயரையும் அவனது வேண்டுகோளின்படி நீண்ட ஆயுளையும் சந்திரஹாஸமென்பதொரு சிறந்தவாளாயுதத்தையும் தந்தருள, அவற்றை அவன் பெற்று மீண்டனனென்பது. (328)

105. உருப்[1]பொடியா மன்மதனை யொத்துளரே [2]யாயினுமுன்
செருப்படியிற் பொடி யொவ்வா மானிடரைச் சீறுதியோ
[3]நெருப்படியிற் [4]பொடிசிதற [5]நிறைந்தமதத் திசையானை
மருப்பொடியப்பொருப் [6]பிடியத்தோணிமிர்த்த [7]வலியோனே.

(இ-ள்.) அடியின் பொடி நெருப்பு சிதற - (கால்களை வலிபப் பதியவைத்து நடக்கும்பொழுது) அக்கால்களினலெழுபபப்படுகிற துகள் (உக்கிரத்தால) நெருபபுப்பொறி சிந்தும்படி, (ஆங்காங்குச் சென்று), நிறைந்த மதம் திசை யானை மருபபு ஒடிய நிறைந்த மதத்தையுடையதிககஜஙகளின் தந்தங்கள் ஒடியவும், பொருபபு இடிய - மலைகள் இடிந்திடவும், தோள் நிமிர்த்த- இருபதுதோளகளைச் செலுத்திய, வலியோனே - வலிமையையுடையவனே! உரு பொடியா மன்மதனை ஒத்து உளர் ஏ ஆயின் உம் - உருவம் நீருக்கப்பெறுத மன்

மதனைப்போன்று உள்ளவர்களே யானாலும், உன் செருப்பு அடியில் பொடி ஒவ்வா - (பலபராக்கிரமங்களில்) உனது செருப்பினடியிலுள்ள துகளுக்கும் ஒப்பாகமாட்டாத, மானிடரை - இம்மனிதரை, சீறுதிலை- (நீ) கோபிப்பாயோ? [கோபிக்கமாட்டாயென்றபடி]; (எ - று.)

அதிர்ச்சியுண்டாம்படி உக்கிரமாக விரைந்து சென்று திக்கஜங்களைத் தந்தபங்கஞ்செய்து வென்று அடங்காமிடுக்காற் குலமலைகளையும் முறித்துதள்ளின புயபலத்தையுடையவனை நீ, அழகில் மிகச் சிறந்தாராயினும் ஆற்றலில் நீ காலிற்பூண்ட செருப்புக்களிலொட்டிக் கொண்டுள்ள துகளுக்கும் நிகராகமாட்டாத இவரைச் சீறியெதிர்த்தல் உன் பெருமைக்குக் குறைவு என்று கருதி இவர்கள்மீது சீற்றங் கொள்ளாதிருக்கின்றாய்போலும் என்பது கருத்து. செரு படியில் பொடி ஒவ்வா எனப்பிரித்து - போர்க்களத்தில் (உனக்குமுன்) அணுவுக்கும் நிகராகமாட்டாத என்று உரைத்தலும் உண்டு. பி-ம்: —[1]படிவம். [2]ஆனாலும். [3]செருப்பொடியப். [4]பொறி. [5]நிறைமதத்த. [6]ஒடிய. [7]வாளானே.

இச்செய்யுளைப்பற்றிக் கர்ணபரம்பரையாக வழங்குவதொரு விவரம் வருமாறு:—கம்பர் இராமாயணம் அரங்கேற்றுகையில், இப்பாடலை வாசிக்கக் கேட்டு, அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர், கம்பநாடரை நோக்கி, 'ஏன்காணும் ஸ்ரீஸர்வேசுரனாகிய ஸ்ரீசக்கரவர்த்தித்திருமகனார் விஷயத்திலும் ஸ்ரீசுமித்திரை சிங்கத்தின் விஷயத்திலும் "செருப் படியிற் பொடி யொவ்வா மானிடர்", என்று கூறி அபசாரப்படுகிறீர்?' என்று வினவ, கம்பநாடரின் பக்கத்திலிருந்த அம்பிகாபதி அவருக்குத் தண்டன்சமர்ப்பித்து, 'கும்பகர்ணன் இறந்த செய்தியை யறிந்த இராவணன் தன்னைக்கண்டோர் யாவரும் புலம்பியழத் தானும் அழுதானென்று சொல்லுதல், அவனுடைய வீரத்துக்குக் குறைவாமென்று எண்ணித் தான் தேடிக் கொண்ட தீமையால் தன்னையும் மற்றவர்களையும் அழுவித்தான் என்னும் பொருள்பட "பண்டைத்தன் னமைத்தின் காரணத்தைப் பாரித்தான்" என்று சொன்னவர் ஸ்ரீபகவான்விஷயத்திலும் அவரடியார் விஷயத்திலும் அபசாரப்படுவாரோ?' என்ன, ஸ்ரீமந்நாதமுனிகள், புன்னகை கொண்டு, அந்த ஸ்ரீவைஷ்ணவரை நோக்கி, 'கவி கூறுங் கூற்றன்றி அரக்கிகூறுருகச் சொல்லி "உன்செருப்படியிற் பொடியொவ்வா மானிடர்" என்றதற்கு - ராமலக்ஷ்மணர்கள் அவளிஷ்டப்படி நடவாமையாலும், மூக்கு முதலிய அவயவத்தைச் சேதித்தமையாலும், அவள் இப்படியே தூஷிப்பாளாகையால், இது ஒரு கருத்தும், செரு படி எனப் பிரித்து, உனது யுத்தபூமியில் ஒரு துகளுக்கும் ஒப்பாகாத மானுடரென வேறொருகருத்தும படும்படி சிலேடையாகச் சொன்னது கவித்துவசாமர்த்தியமே யல்லது அபசாரமன்று' என்று அருளிச்செய்தனர்; அதுகேட்டு யாவரும் ஆனந்தித்தார்கள் என்பது.

(329)

106. தேனுடைய நறுந்தெரியற் றேவரையுந் தெறுமாற்றல்
தானுடைய விராவணற்குந் தம்பியர்க்குந் தவிர்ந்ததோ
வானுடைய வுடம்பினரா யெங்குலத்தோர்க் குணவாய
மானுடவர் மருங்கேபுக் கொடுங்கினதோ வலியம்மா.

(இ - ள்.) தேன் உடைய - தேனையுடைய, நறு - பரிமளமுள்ள, தெரியல்-(கற்பகப்பூ) மாலையைத் தரித்த, தேவரைஉம் - தேவர்களை யும், தெறும்-அழிக்கிற, ஆற்றல்-வல்லமையை, உடைய—, இராவ ணற்குஉம்-இராவணனுக்கும், தம்பியர்க்குஉம் - (அவனது) தம்பி மார்க்கும், தவிர்ந்ததுஓ-(அப்படிப்பட்ட வலிமை இப்பொழுது) நீங்கி விட்டதோ? ஊன் உடைய உடம்பினர் ஆய் - (வலிமையில்லாமல்) தசைமாத்திரத்தையுடைய உடம்பையுடையவர்களாய், எம் குலத் தோர்க்கு உணவு ஆய - எமதுகுலத்தார்க்கு [அரக்கர்க்கு] இரையாக வுள்ள, மானுடவர் மருங்கே - மனிதர்களிடத்தே, வலி - அவ்வலிமை, புக்கு ஒடுங்கினதுஓ-போய்ச்சேர்ந்திட்டதோ? அம்மா-ஆச்சரியம்!

உண்ணும் உயிராகிய அரக்கர்க்கு வலிமை தவிர, உண்ணப் படும் உயிராகிய மனிதர்க்கு வலிமை அமைந்ததே என்று வியந்த வாறு. (330)

107. மரனேயு நெடுங் [1]கானின் மறைந்துறையுந் தாபதர்கள்
உரனேயோ வடலரக்க [2]ரோய்வேயோ வுற்றெதிர்ந்தார்
அரனேயோ வயனேயோ வரியேயோ வெனுமாற்றற்
கரனேயோ யான்பட்ட கையறவு காணாயோ.

(இ - ள்.) உற்று எதிர்ந்தார் - நேர்ந்துஎதிரிட்டவர், அரன் ஏஓ அயன் ஏஓ அரி ஏஓ எனும்-திரிமூர்த்திகளுள் ஒருவனோ என்று கரு தத்தக்க, ஆற்றல்-வலிமையையுடைய, கரனேயோ-ஓ கரனே! மரன் ஏயும்-மரங்கள் நிறைந்த, நெடுங் கானில் - நீண்ட காட்டில், மறைந்து உறையும்-ஒருபுறத்தில் ஏகாந்தமாய் வசிக்கின்ற, தாபதர்கள் - தவ வேடத்தோரது, உரன்ஏஓ-வலிமையினாலேயோ, அடல்அரக்கர் ஓய்வு ஏஓ-(இயற்கையில்) வலிமையுள்ள அரக்கரது வலியழிவினாலேயோ, யான் பட்ட-நான் அடைந்த, கைஅறவு - துன்பத்தை, காணாய்ஓ- (நீ வந்து) பார்க்கமாட்டாயோ? (எ - று.)

'சூலமும் சொல்லும் கிரியும் என்பவற்றை முறையே தமக்கு உரிய படைக்கலமாகக் கொண்டு அவற்றாற் கொடியோரை யழித்துத் தம்தொழிலைத் தடையறநடாத்துகிற அரனும் அயனும் அரியும் போல எதிர்ப்பவரைத் தடையின்றி அழிக்கிற திறமையை யுடைய கரனே! அரக்கியான நான் மனிதனால் இப்பாடுபட்டேன்: என் கூக் குரலைச் சேய்மையிலுள்ள சுற்றத்தார் கேட்கவில்லையென்றாலும், அண்மையிலுள்ள நீயேனும் என் குரலைக் கேட்டு யான் படும்பாட்டைக் கண்டு அதற்கேற்ற பரிகாரஞ் செய்யமாட்டாயோ? மரங்களடர்ந்த பெரிய காட்டில் அப்பிரசித்தராய் ஓரிடத்திலிருக்கிற தவவேடத் தோர்க்கு வலிமை மிக்கதோ? நாடுநகரங்களில் பிரசித்தராய் வசிக்கிற அரக்கர்கரு வலிமை குறைந்ததோ!' என்று கதறினளென்பதாம்.

பி - ம்:—[1]கானம். [2]கோவேயோ. (331)

108. இந்திரனு [1]மரனயனு மிமையவரும் பணிகேட்பச்
சுந்தரிபல் லாண்டிசைப்ப வுலகேழுந் தொழுதேத்தச்
சந்திரன்[2]போ றனிக்குடைக்கீழ் நீயிருக்குஞ் சவைநடுவே
வந்தடியே னுறுது முகங்காட்ட வல்லேனோ.

(இ - ள்.) இந்திரனும்—, அரன் அயன்உம் - சிவபிரானும் பிரமதேவனும், இமையவர்உம்-மற்றைத்தேவர்களும், பணி கேட்ப - (நீ இடும்) கட்டளைகளைக் கேட்டு அவற்றின்படியே குற்றேவல் செய்தொழுகவும், சுந்தரி - அழகியதேவமகளிர், பல்லாண்டு இசைப்ப - வாழ்த்துப்பாட்டுப் பாடவும், உலகு ஏழ்உம் - ஏழுலோகங்களிலுள்ளாரும், தொழுது ஏத்த-வணங்கித் துதிக்கவும், சந்திரன் போல் தனி குடை கீழ்-பூர்ணசந்திரன்போலுள்ள ஒற்றைவெண்கொற்றக் குடையின்கீழ், நீ இருக்கும் நீ வீற்றிருக்கிற, சவை நடுவே - சபையின் மத்தியில், அடியேன்—, நாணாது - வெட்கமில்லாமல், வந்து-, முகம் காட்ட வல்லேன்ஓ-முகங்காட்டுந் தகுதியுடையேனோ? (எ-று.)

பல்வகைச்சிறப்புடனே நீ கொலுவீற்றிருக்கிற சபையில் மூக்கறையும் காதறையுமாகி இப்படி அங்கபங்கப்பட்ட நான் நாணமில்லாமல் எப்படிவந்து முகங்காட்டுவே னென்பதாம்: இங்கே, திருமாலைக் கூறாதது, தேவாதிதேவனை அவ்வெம்பெருமான் இராவணனுக்குக் கீழ்ப்படிந்து நடவா னென்ற கருத்தினாலென்பர். சுந்தரி என்றது - சாதியொருமையாய், பலமகளிரைக் குறித்தது. தேவர்களை அடுத்து வந்ததனால் 'சுந்தரி' என்ற சொல்லுக்கு - தேவமாதரென்று பொருள்கொள்ளப்பட்டது. பல்லாண்டு - அநேக வருஷகாலம் வாழவேண்டு மென்று வாழ்த்திப் பாடும் பாட்டுக்கு இலக்கணை. பி - ம்:—[1]மாலயனும். [2]பொற்குடைகிழற்றவிசைந் திருந்த. (332)

109. உரனெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள் பார்க்க நான் [1]கிடந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ விவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த [2]வண்ணாவோ வண்ணாவோ.

(இ - ள்.) அரன் இருந்த-சிவபிரான் வீற்றிருந்த, மலை - கைலாசகிரியை, எடுத்த-பெயர்த்துஎடுத்த, அண்ணாவோ அண்ணாவோ—! உரன் நெரிந்து விழ - வலிமை சிதைந்து கீழ் விழும்படி, என்னை உதைத்து உருட்டி-என்னை உதைத்துத்தள்ளி, மூக்கு அரிந்த - (எனது) மூக்கை யறுத்த, நரன்-ஒருமனிதன், இருந்து - அழியாமலிருந்து, தோள் பார்க்க - (தனது வெற்றி தோன்றச் செருக்கோடு உற்சாகத்தால் தன்) தோளை(த் தான்) பார்த்துக்கொண்டிருக்க, நான்—, கிடந்து புலம்புவது ஓ-விழுந்துகிடந்து அழுவது தகுதியோ? கரன் இருந்த வனம் அன்றோ - கரன் (ஆட்சிசெய்து) தங்குகிற காடன்றோ (இது)? இவை படஉம் கடவேன ஓ - (இவ்விடத்திலே) இத்துன்பங்களை (நான்) அடையவுந் தகுவேனோ? (எ-று.)

'நரனிருந்து தோள்பார்க்க' என்றது - இங்ஙனஞ் செய்தவனை ஏற்ற தண்டனையாகத் தோளையறுத்து விழுத்தி அழித்திட வேண்டாவோ? என்பதாம். ஓகாரம் - எதிமறை. வேற்றிடத்திலேயாகாமல் இவ்விடத்திலேயே இப்பெரும் பரிபவமடைதல் மிக்க இழிவாமெனபது, மூன்ருமடியின் கருத்து. இங்கே, 'உரனெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி' என்றதனால், கீழ 93, 94-ஆம் பாடல்

களில் 'ஒல்வயிற்றுதைத்து, நூக்கி' என இயைத்ததே பொருத்த மாத லறிக. பி - ம்:—[1] இருந்து. [2] ஐயாவோவையாவோ. (333)

110. நசையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட
வசையாலே [1] நினதுபுகழ் மாசுண்ட தாகாதோ
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
விசையாலே [2] நிறைந்தபுயத் திராவணவோ விராவணவோ.

(இ - ள்.) திசை யானை - திக்கஜங்கள், விசை கலங்க - கோபாவேசம் அடங்க, செரு செய்து - போர்செய்து, மருப்பு ஒசித்த - தந்தங்களை யொடித்த, இசையால் நிறைந்த புயத்து - கீர்த்தியால் நிரம்பின தோள்களையுடைய, இராவணவோ இராவணவோ—!— நசையால் - ஆசையினால், மூக்கு இழந்து—, நாணம் இலா - வெட்கமில்லாமல் [நாணங்கெடும்படி], நான் பட்ட - நான் அடைந்த, வசையால்-அவமானத்தாலாகிய பழியினாலே, நினது புகழ்-உனது கீர்த்தி, மாசு உண்டது களங்கமடைந்ததாக, ஆகாதோ—? (எ - று.)

உனது தங்கையான நான் பட்ட பழி உன்புகழுக்குக்குறைவேயாதலால், இதற்குஏற்ற பரிகாரஞ்செய்வது உனது கடமையன்றோ? என்பதாம். இங்கே, 'நசையால்' என்றதற்குக் கருத்து,-மேற் படலத்தில் 7 - ஆம் பாட்டுக்கும், மாரீசன்வதைப்படலத்தில் "அன்னவள் தன்னை யுன்பாலுய்ப்ப லென் றெடுக்க லுற்ற, என்னை" என்பதற்கும் ஏற்ப, இராவணன்பொருட்டாகச் சீதையை யெடுத்துக்கொண்டு போகவேண்டு மென்ற ஆசையினா லென்று கொள்ளவேண்டும்; இது அவள் பொய்யாகக் கற்பித்துக் கூறியது: அன்றி, உள்ளபடி இராமனைச் சேரவேண்டுமென்ற ஆசையால் என்று கூறுதல் சிறப்பன்று; உண்மைகூறித் தன் குற்றத்தைத் தன்னினத்தார்க்கு உணர்த்தாளன்றோ. பி -ம்:—[1] நின்புகழும். [2] எழுதுபெயர். (334)

111. [1] கானமதி னிடையிருவர் [2] காதொடுமூக் குடனரிய
[3] மானமதாற் பாவியே னிவண்மடியக் [4] கடவேனோ
தானவரைக் [5] கருவறுத்துச் [6] சதமகனைத் [7] தளையிலிட்டு
வானவரைப் பணிகொண்ட மருகாவோ மருகாவோ.

(இ - ள்.) தானவரை-அசுரர்களை, கரு அறுத்து - குலத்தோடு அழித்து, சதமகனை-இந்திரனை, தளையில் இட்டு-விலங்கிட்டுச் சிறைப்படுத்தி, வானவரை பணிகொண்ட - தேவர்களைக் குற்றேவல்செயயும் அடிமையாகக்கொண்ட, மருகாவோ மருகாவோ - மருமகனே மருமகனே!—கானம் அதனிடை-காட்டில், இருவர் இரண்டுமனிதர், காதொடு மூக்கு உடன் அரிய காதையும் மூக்கையும் ஒருங்கே அறுக்க, மானமதால்-(அதனாலாகிய) அவமானத்தால், பாவியேன் - தீவினையுடைய யான், இவண் மடிய கடவேனோ- இவ்விடத்தில் அழியத்தகுவேனோ?

'என் மருகனை நீ தேவேந்திரனையும் வென்று சிறைப்படுத்தித் தேவர்களைப் பணிகொள்ளும் பெருவீரத்தோடு அமைந்திருக்கையில், காட்டில் வழிப்போக்கரான யாரோஇருவர் எனது அங்கங்கட்குப் பங்கத்தைச் செய்ய, இந்த அவமானத்தால் வெளிச்

செல்லமாட்டாது பாவியேன் இங்குத்தானே மடியக்கடவேனோ?' என்று புலம்புகின்றாள்: இது, இந்திரசித்தைநோக்கிக் கூறியது; அடுத்த பாட்டும் இப்படியே. இராவணன் திக்குவிசயஞ் செய்கையில் தேவர்கள் மனிதர்கள்மாத்திரமேயன்றி அசுரர்களும் பலர் அழிக்கப்பட்டன ரென்பதை உத்தரராமாயணங்கொண்டு உணரலாம். 'மானமதால்மடிய' என்பதற்கு - நான் மானமுள்ளவளாதலால் அம்மானக்கேடுநேர்ந்தபின் வெளிப்புறப்படாமல் கிடந்தவிடத்தே அழிய என்பது கருத்து. இலக்குமணன் செய்கை இராமனுக்கு உடன்பாடாதலால் அவனையுஞ் சேர்த்து, வேறுதுணையில ரென்றற்காக, 'இருவர்' என்றாள். சதமகன் - நூறு (அசுவமேத) யாகஞ்செய்தவன். மருகன் - இங்கே, உடன்பிறந்தான் மகன். பி - ம்:—[1]கானதனில். [2]காதோடுமூக்கரிய. [3]மானமிழந்தியானோதானிவைபடவும். [4]வல்லேனோ. [5]துரிசறுத்து. [6]புரந்தரனைத். [7]தனியிட்டு. சிலபிரதிகளில் "கல்லீரும்" (113), "கானமதின்" (111), "ஒருகாலத்து" (112) என்ற முறையிற் பாடல்கள் உள்ளன. ()

112. ஒருகாலத் துலகேழு [1]முருத்தெரியத் தனுவொன்றால்
திருகாத சினந்திருகித் திசை[2]யனைத்துஞ் செலநூறி
இருகாலிற் புரந்தரனை யிருஞ்[3]சிறையி [4]னிடுவித்த
மருகாவோ மானிடவர் வலிகாண வாராயோ.

(இ - ள்.) ஒரு காலத்து-முன்னொருகாலத்திலே, உலகு ஏழ்உம்-ஏழுலோகங்களும், உருத்து எரிய - மிகுந்து எரியும்படி, தனு ஒன்றால்-ஒருவில்லைக்கொண்டு, திருகாத சினம் திருகி - தணியாத கோபத்தால் மாறுபாடுகொண்டு, திசை அனைத்துஉம் செல நூறி-எல்லாத்திக்குகளையும் முற்ற அழித்து, புரந்தரனை - இந்திரனை, இரு காலில் இருஞ் சிறையின் இடுவித்த - இரண்டுகாலிலும (விலங்கிடுவித்துப்) பெரியசிறையில் வைத்த, மருகாவோ - ஓ மருகனே! மானிடவர் வலி காண வாராய்ஓ - இம்மனிதரது வலிமையைப்பார்ப்பதற்கும் வரமாட்டாயோ? (எ - று.)

ஏககாலத்தில் சகலலோகங்களும் பற்றியெரியும்படி அழியாப் பெருங்கோபத்தைக்கொண்டு வில்வலிமையால் எல்லாதிக்கிலுள்ளாரையும் அழித்து இந்திரனைச்சிறைகொண்ட உனக்கு, மனிதரது வலிமை ஒருபொருளன்றாயினும் அதனை இத்தன்மைத்தென்று பரிசோதித்தற்காயினும் வரமாட்டாயோ என்பதாம். பி - ம்:—[1]உருத்திரிய, உருத்தெரிகக, உருத்தெதிர. [2]திசையே. [3]தனியில். [4]இட்டலைத்த. (336)

113. கல்லீரும் படைத்தடக்கை யடற்கரது டணர்முதலா
அல்லீருஞ் சுடர்மணிப்பூ ணரக்கர்குலத் தவதரித்தீர்
கொல்லீரும் படைக்கும்ப கருணனைப்போற் [1]குவலயத்துள்
எல்லீரு முறங்குதிரோ யா[2]னழைத்தல் கேளீரோ.

(இ - ள்.) கல் ஈரும் - (வலிய) கல்லையும் பிளக்கவல்ல, படை - ஆயுதங்களை யேந்திய, தட கை-பெரிய கைகளையுடைய, அடல் கர

தூடணர் முதல்ஆ - வலிமையுள்ள கரனும் தூஷணனும் முதலாக, அல் ஈரும் சுடர் மணி பூண் அரக்கர் குலத்து அவதரித்தீர்-இருளைப் பிளந்தழிக்கிற ஒளியையுடைய இரத்தினாபரணங்களைத் தரித்த இராக்கதாது குலத்தில் உயர்வாகத்தோன்றியவர்களே!—கொல் ஈரும் படை கும்பகருணனை போல்-கொல்லுதல் அராவப்பட்ட [கூர் மையான] ஆயுதங்களையுடைய கும்பகர்ணனைபோல, குவலயத்துள் - பூமியில், எல்லீரும் - நீங்களெல்லோரும், உறங்குதிரோ - தூங்குகிறீர் களோ? (அதனால்), யான் அழைத்தல் கேளீரோ - நான்கூப்பிடுகிற ஒலியைக்கேட்கின்றீரில்லையோ? (எ-று.)

தூரத்திலுள்ளவரான என் தமையனார் மருகர் முதலானோர் இச் சமயத்துவரவில்லை யென்றாலும், ஜனஸ்தானத்தில்தானே எனக்குப் பாதுகாவலாக வைக்கப்பட்டுள்ள கரனையுள்ளிட்ட அரக்கரே, நான் இவ்வளவு கதறவும் வந்து இச்செயல்புரிந்தாரை அடாக்க வேண்டி யிருக்க வாளா இருக்கின்றீரே! கும்பகருணனைப்போல நீவிரும் பெருந் துயில் கொண்டுள்ளீரோ என்றனளென்பதாம். கும்பகர்ணன என்ற வடசொல்லுக்கு - குடம்போன்ற காதுடையவனென்று பொருள்; இவன் இளமையில் மிக்கதவஞ்செய்கையில் இவனுக்கு வேண்டிய வரங்கொடுத்தற்குப் பிரமதேவன் பிரதியட்சமாக, அக்கடவுளை 'யான் என்றும் அழியாது நித்யனாயிருக்கவேண்டும்' என்று வரங்கேட்கத் தொடங்கிய இவன, தேவாகள விருப்பத்தினபடி தனநாவில் வந்து நின்ற சரசுவதீதேவியின் சூழ்ச்சியால 'எனறும் யான் நித்திரையுள் ளவனா யிருக்கவேண்டும்' என்று வரங்கேட்க, அப்படியே அக் கடவுள் அநுக்கிரகித்ததனால், இவன் என்றும் நெடுந்தூக்கமுடைய வனாயவிட்டான்' என்பது, வரலாறு. பி - ம்:— 'கொடியீர்காள். [1] அழைபபக். (337)

## 114.—அச்சமயத்தில் இராமன் அங்கு வருதல்.

என்றின்ன பலபன்னி யிகலரக்கி [1] யழுதிரங்கிப்
பொன்றுன்னும் படியகத்துப் புரள்கின்ற பொழுதகத்து
நின்றந்த நதியகத்து நிறைதவத்தின் குறைமுடித்து
வன்றிண்கைச் சிலைநெடுந்தோண் மரகதத்தின் மலைவந்தான்.

(இ - ள்.) என்று—, இன்ன-இத்தன்மையனவான, பல-அநேக வார்த்தைகளை, பன்னி-அடுத்தடுத்துச்சொல்லி, இகல் அரக்கி-வலிய அந்த ராக்ஷசி, அழுது-புலம்பி, இரங்கி-சோகித்து, பொன் துன்னும் படி அகத்து-அழகுபொருந்திய அவ்வாச்சிரம பூமியினிடத்தில், புரள் கின்ற பொழுதகத்து-புரளுகிறபொழுதிலே,—வல் திண் கை சிலை - மிகவலியகையிற்பிடித்த வில்லையும், நெடுந் தோள் - நீண்டதோள் களையுமுடைய, மரகதத்தின் மலை-மரகதத்தின்மயமான மலைபோன்ற இராமபிரான், அந்த நதியகத்து நிறை தவத்தின் குறை முடித்து - அந்தக்கோதாவரியாற்றினிடத்திலே வேதவிதிமுறைநமைநிரம்பின நித்தியகருமமாகிய இன்றியமையாச்செய்கையைச் செய்துமுடித்து, நின்று-அங்குநின்று, வந்தான்—; (எ - று.)

சூர்ப்பணகை இவ்வாறுபுலம்பிப் புரளுகிறவளவில் ஸ்ரீராமன் அந்தக் கோதாவரிநதியில் நாட்கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டுவந்து சேர்ந்தனன்என்பதாம். பி-ம்:—[1] அழைத்து. (338)

**115.—அரக்கி தான் பட்ட பாட்டை இராமனுக்கு உணர்த்தல்.**

வந்தானை [1]முகநோக்கி வயிறலைத்து மழைக்கண்ணீர்
செந்தாரைக் [2]குருதியொடு செழுநிலத்தைச் சேறாக்கி
அந்தோவுன் றிருமேனிக் கன்பிழைத்த வன்பிழை யால்
எந்தாயான் பட்டபடி யிதுகாணென் [3]றெதிர்விழுந்தாள்.

(இ - ள்.) (சூர்ப்பணகை), வந்தானை - (அங்ஙனம்) வந்த இராமனை, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, வயிறு அலைத்து - வயிற்றில் அடித்துக்கொண்டு,—மழை கண் நீர் - மழைபோலச் சொரிகிற கண்ணீரினாலும், செம் தாரை குருதியொடு-சிவந்த தாரை யாகப்பெருகுகிற இரத்தத்தினாலும், செழு நிலத்தை - அழகிய [பெரிய] அவ்விடத்தை, சேறு ஆக்கி - சேறாகச்செய்து கொண்டு, (இராமனைநோக்கி), 'எந்தாய் - எனது தலைவனே! அந்தோ - ஐயோ! உன் திருமேனிக்கு அன்பு இழைத்த வல்பிழையால் - உனது அழகிய வடிவத்தினிடத்தில் ஆசைவைத்ததாகிய கொடிய குற்றத் தால், யான் பட்ட படி இது - நான் அடைந்த இந்நிலைமை, காண் - பார்ப்பாயாக,' என்று-என்று சொல்லி, எதிர்விழுந்தாள்-இராமன் முன்னிலையில் விழுந்திட்டாள்; (எ - று.)

'உன் திருமேனிக்குத் தீங்குசெய்த வன்பிழையாளர் இங்ஙனம் பங்கப்படலாம்; அன்புசெய்த யான் இங்ஙனம்படுதல் தகுதியோ?' என்றனளென்பதாம். பி - ம்:—[1] இடை. [2] குருதியொடுமிரு. [3] அடி வீழ்ந்தாள். (339)

**116.—இராமன் நிகழ்ந்ததையுணர்ந்து அவளை நீயாரென்றல்.**

விரிந்தாய கூந்தலாள் வெய்யவினை யாதானும்
புரிந்தா[1]ளென் பதுதனது பொருவரிய திருமனத்தால்
தெரிந்தானின் றிளையானே யிவளைநெடுஞ் செவியொடுமூக்கு
அரிந்தானென் பதுமுணர்ந்தா[2]னம்மனைநீ யாரென்றான்.

(இ - ள்.) 'விரிந்து ஆய கூந்தலாள் - விரிபட்டதாயுள்ள கூந்தலையுடைய இவள், வெய்ய வினை யாது ஆனும் புரிந்தாள்- கொடியதொழில் எதையேனுஞ் செய்தவளாவள்', என்பது - என் பதை, (இராமன்), தனது பொருவு அரிய திருமனத்தால் தெரிந் தான் - தன்னுடைய ஒப்பில்லாத சிறந்தமனத்தினால் அறிந்து கொண்டு, இன்று இளையானே இவளை நெடுஞ் செவியொடு மூக்கு அரிந்தான் என்பதும் உணர்ந்தான் - இப்பொழுது இலக்குமணனே இவளை நீண்ட காதையும் மூக்கையும் அறுத்திட்டவ னென்பதையும் அறிந்துகொண்டு, (அவ்வரக்கியைப் பார்த்து), 'அம்மனை - அம்மா! நீ யார்—?' என்றான் - என்று வினவி னான்; எ.- று.)

'இவள் ஏதேனுந் தீங்கிழைத்திருப்பாள்: அதற்காகவே இலக்குமணன் இவளைத் தலைவிரிகோலமாய்ப் புலம்பும்படி மூக்கையுங் காதையும் அறுத்துத் தண்டித்திருப்பன்' என்று நிகழ்ந்த செய்தியை இராமன் தன் உணர்வால் ஊகித்தறிந்துகொண்டு, அவளைப்பார்த்து 'நீ யார்?' என்று கேட்டனன் என்பதாம். சூர்ப்பணகை நேற்றுவந்தபொழுதுகொண்டிருந்த மிக அழகியவடிவத்துக்கும், இன்றைக்குக் காணப்படுகிற கோரவடிவத்துக்கும் சிறிதும் பொருத்தமில்லாமையால், இவளை முந்திவந்தவளென்று துணியாமல், வேறொருத்தியாகக்கருதி, நீயாரென்று புதிதாக வினவினனென்க. ஆனும = ஆயினும். பி - ம்:—[1]என்பதும். 'அம்மனையோ, ஐயோநீ, அவளைநீ. (340)

## 117.—அதற்கு அவள் தன்னை இன்னாளென்று உரைத்தல்.

அவ்வுரைகேட் [1]டடலரக்கி யறியாயோ நீ என்னைத்
தெவ்[2]வுரையென் றோருலகு மில்லாத சீற்றத்தான்
வெவ்விலைவே லிராவண[3]னும் விண்ணுலக முத[4]லாக
எவ்வுலகு முடையானுக் குடன்பிறந்தேன் யானென்றாள்.

(இ - ள்.) அ உரை கேட்டு - அந்தவார்த்தையைச் செவியுற்று,—அடல் அரக்கி - கொடிய அந்த ராக்ஷசி,—'நீ என்னை அறியாயோ - நீ என்னை அறியமாட்டாயோ? தெவ் என்ற உரை ஓர் உலகும் இல்லாத - (தனக்குப்) பகைமையென்ற பேச்சும் உலகமொன்றிலும் இல்லையாம்படி செய்த, சீற்றத்தான் - கோபமுடையவனான, வெம் இலை வேல் இராவணன் ஆம் - கொடிய இலை வடிவமாக அமைந்த வேலாயுதத்தையுடைய இராவணனாகிய, விண் உலகம் முதல் ஆக எ உலகும் உடையானுக்கு - சுவர்க்கலோகம் முதலாக எல்லாவுலகங்களையும் தனக்கு உரிமையாகவுடையவனுக்கு, உடன் பிறந்தேன் யான்-கூடப்பிறந்தவளன்றோ நான்?' என்றாள் - என்றுசொன்னாள்; (எ - று.)

'நான் நேற்றுவந்தவளே' என்றதைக் குறிப்பதற்கு 'அறியாயோ? நீ யென்னை' என்றாள். எவ்வுலகத்தும் சிறிதும் பகையற முற்றும் வென்றவ னென்பது, இரண்டாமடியின் கருத்து. பி - ம்:—[1]அவ். [2]உலகு. [3]இவ். [4]ஆய. (341)

## 118.—'வந்த காரியமென்?' என்ற இராமனுக்கு அவள் விடை கூறுதல்.

தாமிருந்த தகையரக்கர் புகலொழியத் தவ[1]மியற்ற
யாமிருந்த நெடுஞ்சூழற் கென்செயவந் தீரெனலும்
வே[2]மிருந்தை யெனக்கனலும் [3]வெங்காம வெம்பிணிக்கு
மாமருந்தே நெருநலினும் வந்திலெனோ யானென்றாள்.

(இ - ள்.) 'தகை அரக்கர் தாம் இருந்த புகல் ஒழிய - பெருமையையுடைய இராக்கதர்கள் இருந்த இடம்நீங்க [அவ்விடத்தை விட்டு என்றபடி],—தவம் இயற்ற யாம் இருந்த நெடுஞ் சூழற்கு என் செய வந்தீர் - தவஞ்செய்யும்பொருட்டு நாம் தங்கியிருந்த

செம்மையான இவ்விடத்துக்கு யாதுசெய்யும்பொருட்டு நீர் வந்தீர்?', எனலும் - என்று(ஸ்ரீராமன்) வினவியவளவிலே,— 'வேம் இருந்தை என கனலும் - நெருப்பில்வேகின்ற கரிபோலத்தபிக்கிற, வெம் காமம் வெம் பிணிக்கு - கொடிய காமமாகிய கொடிய நோய்க்கு, மா மருந்தே - சிறந்த மருந்துபோன்றவனே! யான்—, நெருநலின் உம் வந்திலென்ஓ - நேற்றும் வந்தேனில்லையோ?' என்றாள் - என்றுஞ் சொன்னாள், (சூர்ப்பணகை); (எ-று.)

யான் இராவணன்தங்கை யென்று அவள்சொன்னதைக் கொண்டே இராமன் நேற்றுவந்தவளேயிவளென்று நிச்சயித்திடாமல், வடிவுவேறுபாட்டையே முக்கியமாகக்கொண்டு, இராவணனது வேறொருதங்கையா யிருக்கலா மென்று கருதினான்போல 'நீ உன் இனத்தாரான அரக்கர் சிறப்போடிருக்கிற இடத்தை விட்டு யாம் தவவேடங்கொண்டு தங்கியிருக்கிற நெடுந்தூரத்திலுள்ள இவ்விடத்துக்கு வந்தது என்னகாரணம்?' என்று புதிதாகக் கேட்க, அவள், நேற்று வந்தவளே நானென்பதை வெளிப்படையாய்த் தெரிவித்தன ளென்பதாம். இங்கே தவமென்றது, தமது சாதிக்கு அடுத்த நாடாளுகையை விட்டு மரவுரியுஞ் சடைமுடியுந் தரித்து முனிவர்போலக் காய்கனிகிழங்குகளைப்புசித்துக் கொண்டு வனத்தில் வசித்தலை. பி - ம்:—[1]புரியும். [2]இருந்திலென, இருந்தினென, இருந்தியென. [3]எரி. (342)

## 119.—'முன் வந்தவளோ? நீ' என்ற இராமனுக்கு அவள் விடைகூறுதல்.

செங்கயல்போற் கருநெடுங்கட் டேமருதா மரையுறையும்
நங்கையிவ ரெனநெருந னடந்தவரோ நாமென்னக்
கொங்கைகளுங் குழைக்காதுங் கொடிமூக்குங் [1]குறைத்தழித்தால்
அங்கணர சேயொருவர்க் கழியாதோ வழகென்றாள்.

(இ - ள்.) 'செம் கயல் போல் - சிவந்த கயல்மீன்போலப் பிறழ்கிற, கரு நெடுங் கண் - கரிய நீண்ட கண்களையுடைய, தே மரு தாமரை உறையும் நங்கை - தேன் பொருந்தின தாமரைமலரில் வீற்றிருக்கிற மகளிரிற்சிறந்தவளான திருமகள், இவர்—, என - என்று (காண்பவர்) குறிக்கும்படி, நெருநல் - நேற்று, நடந்தவர்ஓ - வந்தவர் தாமோ? நாம் - நீர்,' என்ன - என்று (இராமன சொல்ல) - (அதற்கு அரக்கி), 'அம் கண் அரசே - அழகிய கண்களையுடைய அரசனே! கொங்கைகள் உம் - தனங்களையும், குழை காது உம் - குழையென்னும் அணியை யணிந்த காதுகளையும், கொடி மூக்கு உம்- கொடிபோன்ற மூக்கையும், குறைத்து அழித்தால் - அறுத்துப் போக்கிவிட்டால், ஒருவர்க்கு—, அழகு அழியாதோ—?' என்றாள்—; (எ-று.)

'இப்பொழுது குரூபியாகக் காணப்படுகிற நீ நேற்றுக் கண்டவர் திருமகளெனனுமபடி கட்டழகியாய் வந்தவளோ? என்று இராமன் கேட்க, அவள், கொங்கை முதலிய உறுப்புக்களை அறுத்

துத்தள்ளிவிட்டால் எத்துணையழகியோர்க்கும் அவ்வழகு கெட்டிடமாட்டாதோ?' என்றனள் என்பதாம். இங்கு, நாம் என்பது, "ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" என்றவாறு வந்ததோர் இடவழுவமைதி. "நாமரையாமத்தெனதோ வந்து வைகிநபந்தது" எனத் திருக்கோவையாரில் வருவதையும், அங்குப் பேராசிரியர் 'நாம் எனனும் முன்னிலையுளப்பாட்டுத்தன்மை, உயர்வுதோன்ற முன்னிலைக் கண்வந்தது' என உரைத்தமையையும் உணர்க. இங்ஙனம் வருதல் உலக வழக்கத்திலும் உண்மை காண்க. மூக்குக்குக் கொடி உவமை கூறப்படுதல், "புலக்குண்டலப் புண்டரீகத்த போர்க்கெண்டை வல்லியொன்றால், விலக்குண்டுலாகின்று வேல் விழிக்கின்றன" என நம்மாழ்வார் பாசுரத்திலுங் காணத் தக்கது. "கொடிமூக்கும் காதிரண்டும் ஈராவிடுத்து" என்றார், திருமங்கை மன்னனும். பி - ம்:—[1] துறைந்தழிந்தால். (343)

## 120. இராமன் இலக்குமணனைநோக்கி 'இவள் பிழை என்?' என்றல்.

மூரன்முறு வலனிளைய மொய்ம்பினோன் முகநோக்கி
வீர[1]விரைந் தனையிவடன் விடுகாதுங் கொடிமூக்கும்
ஈரநினைத் திவளிழைத்த பிழையெவ்வெனவ[2]றைவினவச்
சூரநெடுந் தகையவனை யடிவணங்கிச் சொல்லுவான்.

(இ - ள்.) (அதுகேட்டு), இறை - (எல்லாவுயிர்களுக்குந்) தலைவனான இராமன, மூரல் முறுவலன் - பற்கள் சிறிதுவெளித் தோன்றக் கொண்ட சிரிப்புள்ளவனாய், இளைய மொய்ம்பினோன் முகம் நோக்கி - இளையவீரனான இலக்குமணனது முகத்தைப் பார்த்து, 'வீர - வீரனே! (நீ), விரைந்தனை - துரிதப்பட்டு, இவள் தன் விடு காதும் கொடி மூக்கும் ஈர - இவளுடைய தொங்குகிற காதையும் கொடிபோல நீண்ட மூக்கையும் அறுக்கும்படி, இவள் நினைத்து இழைத்த பிழை - இவள் எண்ணிச்செய்த குற்றம், என் - யாது?' என்று—, வினவ-கேட்க,—சூரன் நெடுந் தகை சூரனாகிய பெருமைக் குணமுள்ள இலக்குமணன், அவனை அடி வணங்கி - அவ்விராமனைத் திருவடிதொழுது, சொல்லுவான் - விடைகூறுவான்; (எ - று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க.

இராமன் இலக்குமணனை நோக்கி 'இவளை இவ்வாறு அங்கபங்கஞ்செய்ய இவளிழைத்த பிழை என்?' என்று வினவ, இலக்குமணன் கூறலானான் என்க. மூரல் முறுவல் என்பவற்றை ஒருபொருட் பன்மொழியெனினுமாம். பி - ம்:—[1] வெகுண்டனை. [2] இவை. (344)

## 121.—இலக்குமணன் விடைகூறுதல்.

தேட்டந்தான் வாளெயிற்றிற் றின்னவோ தீவினையோர்
கூட்டந்தான் புறத்[1]துளதோ குறித்தபொரு[2]ளறிந்திலனால்
நாட்டந்தா னெரியுமிழ நல்லாண்மேற் பொல்லாதாள்
ஓட்டந்தா ளரிதனிவ ளுடன்றெழுந்தா ளெனவுரைத்தான்.

(இ - ள்.) 'வாள் எயிற்றின் - கூரிய கொடிய பற்களால், இன்னதின்னுதற்கு, தேட்டம் தான்ஓ - (இரை) தேடுதலினாலோ? தீவினையோர் கூட்டம் தான் புறத்து உளதுஓ-கொடுந்தொழிலுடையோரது கூட்டம் பின்னே யிருக்க அதன் தூண்டுதலினாலோ? குறித்த பொருள் அறிந்திலன்-(இவள்) செய்யக் கருதியகாரணத்தை (இன்னதென்று துணிவாக) அறிந்தேனில்லை; பொல்லாதாள் இவள்-கொடுந்தீயவளான இவள், நாட்டம்தான் எரி உமிழ-கண்கள் நெருப்புப் பொறியைச் சொரிய, அரிதின் - (பிறர்க்கு) அருமையானவகையால், உடன்று எழுந்தாள் - கோபங்கொண்டு புறப்பட்டு, நல்லாள்மேல் ஓட்டந்தாள் - நற்குணமுடையவளான சானகியின்மேல் [சானகியை நோக்கி] ஓடிவந்தாள்,' என உரைத்தான் - என்றுசொன்னான், (இலக்குமணன்); (எ - று.) - ஆல் - தேற்றம்.

ஓட்டந்தாள் என்பது, ஓட்டந்தாளென விகாரப்பட்டது; "ஓட்டந்துபாய்ந்திடுகின்ற" எனத் திவ்வியப் பிரபந்தத்திலுங் காண்க. பி-ம்:—[1]உண்டோ. [2]உணர்ந்திலனால், அறிந்திலமால். (345)

## 122.—அரக்கி, தான் அங்ஙனஞ் செய்ததற்குக் காரணம் காட்டுதல்.

ஏற்றவளை வரிசிலையோ னியம்பாமு னிகலரக்கி
சேற்றவளை தன்கணவ னருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை [1]நீருழக்குந் துறைகெழுநீர் [2]வளநாடா
மாற்றவளைக் கண்டக்கா லழலாதோ மனமென்றாள்.

(இ - ள்.) ஏற்ற - கையிலேந்திய, வளை வரி சிலையோன் - வளைந்த கட்டமைந்த வில்லையுடைய இலக்குமணன், இயம்பாமுன்- (இங்ஙனஞ்) சொல்லா முன்னே [சொன்னவுடன் மிகவிரைவிலே என்றபடி], இகல் அரக்கி - கொடிய அந்த ராக்ஷசியானவள்,— சூல் தவளை - கருக்கொண்ட [புணர்ச்சிக்கு உரியதல்லாத] பெண் தவளை, தன் கணவன் அருகு - தனது கணவனாகிய ஆண் தவளையின் அருகில், சேற்ற வளை இருப்ப - சேற்றிலுள்ள (பெண்பாலாகிய) சங்கு இயல்பாகவிருந்ததனால், சினம் திருகி - (தன் கணவன் அதனோடு கூடியதென்று) கோபத்தால் மாறுபாடுகொண்டு, நீர் உழக்கும் - நீரைக் கலக்கப்பெற்ற, துறை கெழு - இறங்குதுறைகள் பொருந்திய, நீர் வளம் நாடா - நீர்நிலைகளின் வளப்பத்தையுடைய நாட்டையுடையவனே! —மாற்றவளை கண்டக்கால் - சக்களத்தியைப் பார்த்தால், மனம் அழலாதுஓ - மனம் கோபங்கொள்ளாதோ?' என்றாள் - என்று சொன்னாள்; (எ - று.)

'சக்களத்தியைக்கண்டால் மகளிர்க்கு மனம் சினங்கொள்ளுதல் உலகவியல்பன்றோ?' என்ற இப்பொதுப்பொருளினால், தான் இராமனைக் கொழுநனாகக்கொள்ளுதற்கு மிக்கவிருப்பங்கொண்ட மாத்திரத்தில் தன்னை அவனுக்குரிய மனைவியாகப் பாவித்து அவ்வுறவுமுறைமையால் அவன்மனைவியான சீதையைத் தனக்குச் சக்களத்தியாகத் துணிந்து அதுபற்றி அவள்மீது பகைமை

கொண்டு அவளைத் துரத்திவிடத் தொடர்ந்ததாகக் காரணம் விவரித்துக் கூறினனென்பது தெளிவாம்.

பகுத்தறிவிற் குறைவுபட்டதோர் அஃறிணையுயிர்தானும் தான் கலவிக்கு உரியதல்லாத நிலையிலும் தன் கணவனருகில் தன் சாதியினுங் கீழ்ப்பட்ட அயற்பெண்பால் இருத்தலை நோக்கிப் பிணங்கும் நாட்டி லுள்ளவனை நீ, என்போன்ற விவேகிகள் கல விக்குஉரிய பருவத்தில் தன் கணவனருகில் ஏற்ற மாற்றாளிருத் தலை நோக்கி மனம்பொறாது அவளுக்குக் கேடுசூழக்கருதுதல் இயல்பே யென்பதை அறிதற்குரியாயென்பாள், இங்ஙனம் சந்தர்ப் பத்துக்கு ஏற்றவாறு நாட்டுவருணனைகூறி இராமனை விளித்தாள்; "கதிர்க்கோட்டு நந்தின்சுரிமுகவேற்றை, நாகிளந்தவளையொடு பகன் மணம்புகூஉம், நீர்திகழ் கழனி" என்ற புறப்பாட்டடிகள் [செ: 266] இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கன. இராமன் க்ஷத்திரியசாதியானு தலால், 'நாடா' என விளிக்கப்பட்டான். 'ஏற்றவளை வரிசிலையோன்' - பகையழிப்பதிற் கருத்தாயுள்ளவனென்றபடி. இப்பாட்டு - திரிபு என்னுஞ்சொல்லணி. ஏற்ற-தகுதியான, நாணைத் தாங்கிய என்றும் பொருள் கொள்ளலாம். இகல் அரக்கி-பகைக்கின்ற அரக்கி என்றும், பகையையுடைய அரக்கிஎன்றும் உரைக்கலாம். பி-ம்:—[1] துனி. [2] வயல்.

## 123.—இராமன் சூர்ப்பணகையை 'இங்கு நில்லாம லோடிப்போ' எனல்.

பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை யொருங்கவிப்பான்
தேடிப்போந் தனமின்று தீமாற்றஞ் சிலவிளம்பி
வீடிப்போ காதேயிம் மெய்வனத்தை விட்டகல
ஓடிப்போவென் [1]றுரைப்ப வுரைகடந்தாற் [2]கவ[3]ளுரைப்பாள்.

(இ - ள்.) 'பேடி போர் - பேடித்தன்மையுள்ள போரைச்செய்கிற, வல் அரக்கர்-கொடிய இராக்கதர்களது, பெருங் குலத்தை-பெரியவமி சத்தை, ஒருங்கு அவிப்பான் - ஒருசேர [முழுவதும்] அழிக்கும் பொருட்டு, தேடி போந்தனம் - (அவர்கள் எங்குஉள்ளா ரென்று) தேடிக்கொண்டு வந்துள்ளோம்; (ஆதலால்), இன்று - இப்பொழுது, (நீ), தீ மாற்றம் சில விளம்பி - சில கொடுஞ்சொற்களைக் கூறி, வீடி போகாதே - அழிந்துபோய்விடாமல், இ மெய் வனத்தை விட்டு அகல ஓடிப்போ - சத்தியத்துக்குஉரிய இந்தக் காட்டை விட்டு விலக ஓடிப்போய்விடு,' என்று உரைப்ப-என்று சொல்ல, உரை கடந்தாற்கு - சொற்களைக் கடந்துள்ள இராமபிரானுக்கு, அவள் உரைப்பாள் - அவ்வரக்கி கூறுவாள்; (எ - று.)—அதனை, அடுத்த பதினொருகவி களிற் காண்க.

தருமயுத்தஞ் செய்யாமல் நபும்சகர்போல மாயையில்மறைந்து நின்று அதருமயுத்தஞ்செய்கிற துஷ்டர்களான இராக்கதர்களுடைய கூட்டத்தை வேரோடு அழிப்பதற்குச் சங்கற்பங்கொண்டே இங்கு வந்துள்ளோம்; ஆதலால், பின்னும் ஏதேனுங் கடுஞ்சொற்களைக் கூறுவையானால் உன்னையும் கொன்றிடுவோம்; ஆனது பற்றி,

உடனே ஓடிச்செல் என்று இராமன் அதட்டிப்பேச, தம்பி, அவள் பலவாறு சமாதானங் கூறத்தொடங்கின னென்பதாம்.

வேதபுருஷன் முனிவர் தேவர் முதலிய யாவர் சொற்களுக்கும் எட்டாமல் வாசாமகோசரமாகவுள்ள [பேச்சுக்குநிலமல்லா] நிலைமையை யுடையவ னென்பது, 'உரைகடந்தான்' என்பதன் பொருள். உரைகள் தந்தான்-வேதங்களை (ப் பிரமனுக்கு) உபதேசித்தவ னென்றலும் ஒன்று. பி-ம்:—[1]உரைத்த. [2]இவை. [3]உரைத்தாள். (347)

124.—இனிப்பதினொரு கவிகள்-சூர்ப்பணகை பலவாறுகூறித் தன்னை மணஞ்செய்துகொள்ளும்படி வேண்டுதலைத் தெரிவிக்கும்.

நரைதிரை[1]யென் றில்லாத நான்முகனே முதலமரர்
கரையிறந்தோ ரிராவணற்குக் [2]கரமிறுக்குங் குடியென்றால்
விரையுமிது நன்றன்று வேருக யானுரைக்கும்
உரையுளது நுமக்குறுதி யுணர்[3]வுளதே லென்றுரைப்பாள்.

(இ - ள்.) 'நரை (என்று) - மயிர் வெளுத்தலும், திரை என்று - தோல் சுருங்குதலும், (ஆகிய மூப்பின்குணங்கள்), இல்லாத—, நான்முகன் ஏ முதல் - பிரமன் முதலிய, கரை இறந்தோர் அமரர்-எல்லையில்லாத தேவர்யாவரும், இராவணற்கு கரம் இறுக்கும் குடி - இராவணனுக்குக் கப்பஞ்செலுத்துங் கீழ்ப்பட்ட குடியாவர், என்றால்—[ஆதலால் என்றபடி], விரையும் இது - (நீங்கள்) துரிதப்படுகிற இச்செய்கை, நன்று அன்று - நல்லதன்று; (அன்றியும்), நுமக்கு-உங்களுக்கு, உறுதி உணர்வு உளது ஏல் - நன்மை தருவதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் உள்ளதானால், வேறு ஆக யான் உரைக்கும் - தனியாக யான் சொல்லவேண்டிய, உரை - வார்த்தை, உளது-இருக்கிறது', என்று-என்றுசொல்லி, உரைப்பாள் - மற்றுஞ்சொல்வாள்; (எ-று.)

பிணிபசி மூப்புத்துன்பு இல்லாத பிரமன் முதலிய தேவர்களெல்லோரும் இராவணனுக்குக் கீழ்ப்பட்டுக் குடியிருப்பவராய்க் கப்பஞ் செலுத்துபவராதலால், சாதாரண மனிதராகிய நீங்கள் இப்படித் துரிதப்பட்டு அவன் தங்கையாகிய என்னைப் பரிபவப்படுத்துவதும், அரக்கரைப்பற்றி அலட்சியமாகப் பேசுவதும் தகுதியல்ல: உங்களுக்கு நன்மையடையவேண்டுமென்ற எண்ணமிருந்தால் யான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடப்பீராக என்றன ளென்பதாம். பி - ம்:—[1]ஒன்று. [2]கடன். [3]உளதே. (348)

125. ஆக்கரிய மூக்குங்கை யரியுண்டா ளென்றுரை
நாக்கரியுந் தயமுகனார் நாகரிக ரல்லாமை
மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீ ரினியுமக்குப்
போக்கரிதிவ் வழகையெல்லாம் [1]புல்லிடையி லுகுத்தீரே.

இதுமுதல் பத்துக் கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'உங்கை - உமது தங்கை, ஆக்கு அரிய மூக்கு அரியுண்டாள் - (மீளவும்) உண்டாக்கிக்கொள்ளமுடியாத மூக்கு அறு

பட்டாள்,' என்றுரை - என்று (நிகழ்ந்த செய்தியைச்) சொன்ன வரையும், நாக்கு அரியும் - (கோபித்து) நாக்கறுத்திடும்படியான, தயமுகனூர்-இராவணனூர், நாகரிகர் அல்லாமை-கண்ணோட்டமுடைய வரல்லாமையால், மூக்குஅரிந்து நும்குலத்தை முதல் அறிந்தீர் - (என்னை) மூக்கறுத்து (அதனால்) உங்கள் குலத்தை வேரொடும் அறுத்திட்டீர்; இனி - இனிமேல், உமக்கு போக்கு அரிது - உங்களுக்கு (உயிர்பிழைத்துய) போகும்விதம் இல்லை; இ அழகை எல்லாம் புல் இடையில் உகுத்தீரே-(பெறுதற்கு அரிய) இந்த உங்கள் சௌந்தரியமுழுவதையும் வீணாய்ப் புல்லிலே சொரிந்திட்டீர்களே! (எ-று.)—ஈற்றேகாரம்-இரக்கம்.

நான் உங்களால் மூக்கறுபட்ட இந்த உண்மையான செய்தியை யாரேனும் என்தமையனாரிடம் போய்ச்சொன்னாலும், அவர், என்னிடத்து உள்ள மிக்க அன்பினாலும், இப்படிப்பட்ட தீங்கு ஒருகாலும் நமது தங்கைக்கு நேர்ந்திராதென்ற துணிவினாலும், அசம்பாவமான ஒருமொழியைக் கற்பித்துக் கூறினாரென்று பெருங்கோபங்கொண்டு அக்கூறினவரை நாக்கறுத்துத் தண்டித்திடுவார்; இப்படிப்பட்ட தன்மையுடைய என்தமையனார் சிறிதுங் கண்ணோட்டமில்லாதவராதலால், நான் உண்மையில் மூக்கறுபட்ட செய்தியை அறிந்தால், உடனேவந்து உங்களைக் குலத்தோடுந் தொலைப்பாரே; இப்படி நீங்கள் அழியும்வழியை நீங்களே தேடியதனால், பெறுதற்கரிய அமிருதம் பெற்றதைப் புல்லிலே சொரிந்து வீணாக்கினாற்போல உங்களுடைய நிறைந்த அழகை நீங்கள் வீணே இழந்திட்டீரென்றனளென்பதாம். இனி, இராவணன் தனக்கு அவமானத்தை விளைக்கும் செய்தியை யுரைப்பவர்மேல் கோபிப்பவனென்பதை மேல் கிங்கரர் தோற்ற வகையைக் கூறியவர் மேல் சினந்தமையாலும் உணரலாம்: [சுந்தர காண்டம், கிங்கரர்வதைப் படலம் - 82—87]. அழகு என்ற பண்பை உகுக்கமுடியாதாகையால், சந்தர்ப்பத்திற்கு ஏற்ப அழகை அமுது எனக் கொள்க.

நாகரிகம் என்பது - கண்ணோட்டமென்னும் பொருளதாதலை, "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்" என்ற திருக்குறளிலுங் காண்க; அக்குறளினுரையில் பரிமேலழகர் 'நாகரிகமென்பது கண்ணோட்டமாதலை "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின், நஞ்சுமுண்பர் நனிநாகரிகர்" என்பதனாலும் அறிக' என மேற்கோள் காட்டினமையும் உணரத்தக்கது. தயமுகன் = தசமுகன். தம்பியின்செயலைத் தமையனது உடன்பாடுபற்றி நிகழ்ந்ததாகக் கருதி, அவ்வொற்றுமையால் அவன் செயலைத் தமையன்மேலேற்றி இராமனைநோக்கி 'மூக்கரிந்து முதலரிந்தீர்' என்றாள். 130-ஆம் பாட்டில் "போக்கினீ ரென்னசி" என்பதுங் காண்க; இதனை, இங்ஙனமே வருகிற பிறவிடத்துக்குங் கொள்க. அன்றியும், "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி இராமனுக்கு இலக்குமணன் வலக்கைபோலிருத்தலால், இலக்குமணன் செயலை இராமன்மேல் ஏற்றிக்கூறும் வழக்கை நூல்களிற் பலவிடத்துங் காணலாம். பி-ம்:—[1]புல்லிடையே. (349)

**126.** வான்காப்போர் மண்காப்போர் மாநாகர் வாழுலகந்
தான்காப்போ ரினித்தங்க டலைகாத்து நின்றுங்கள்
ஊன்காக்க வுரியார்யா ரென்னையுயிர் நீர்[1]காக்கின்
யான்[2]காப்பெ னல்லாலவ் விராவணனு ருளர்[3]ரென்றால்.

(இ-ள்.) *என்னை நீர் உயிர் காக்கின்* - (எனது வேட்கையைப் பூர்த்தி செய்து) *என்னுயிரை நீர் அழியாமற் பாதுகாப்பீரானால், யான் காப்பென்* - *நான் (உங்களை அவ்விராவணனரிடத்தினின்று) உயிர்காத்திடுவேன்; அல்லால் - அங்ஙனமல்லாவிட்டால், இனி - இனிமேல், அ இராவணனர் உளர் என்றால்-(உங்களையழிக்க எனது தமையனரான) அந்த இராவணனர் இருக்கும்போது, வான் காப்போர் - மேலுலகத்தைப் பாதுகாக்கிற தேவர்களிலும், மண் காப்போர்-நில வுலகத்தைப் பாதுகாக்கிற அரசர்களிலும், மா நாகர் வாழ் உலகம் காப்போர் - பெரிய சர்ப்பசாதியார் வாழ்கிற கீழுலகத்தைப் பாதுகாக்கிறவர்களிலும், தங்கள் தலை காத்து நின்று உங்கள் ஊன் காக்க உரியார்-தங்களுடைய தலையை (த் துணிபடாமற்) பாதுகாத்துக்கொண்டு நின்று உங்களுடைய உடம்பையும் அழியாமற் பாதுகாத்தற்கு உரியவர், யார்-எவர் உளர்?* [யாரும் இல்லை யென்றபடி]; (எ - று.)—*தான்-அசை.*

*சுவர்க்க மத்திய பாதாள மென்னும் மூவுலகத்திலு முள்ளவர் யாவரும் இராவணனுக்கு அஞ்சியொடுங்கியொழுகுபவரே யாதலால், அவன் சினங்கொள்ளுமிடத்து அவரவர் தம்தம் தலையைத் தாம் அழியாதபடி காத்துக் கொள்ளுதலே அரிது; ஆதலால், அவன் தங்கையான எனக்கு இப்படித் தீங்குசெய்த நீங்கள் புகலிடமாக அவர்களில் எவரையடைந்தாலும் உங்களைப் பாதுகாக்கவல்லா ரில்லை; ஆனதுபற்றி, உம்மைக்கண்டு மோகங் கொண்டு மரணந்தமான காம வேதனை யுற்ற என்னை நீர் அங்கீகரித்து மகிழ்வித்து உயிர்காப்பீரா யின், நான் உங்களுயிரை இராவணன் அழித்திடாதபடி செய்வேன்: அல்லாவிடில், உங்களைத் தவறுமலழித்தற்கு அவனுள்ளான் என் றனளென்பதாம். பி-ம்:—[1]காத்தால். [2]காப்பதல்லாமல். [3]என்றாள்.()*

**127.** காவற்றிண் கற்பமைந்தார் தம்[1]பெருமை தாங்கழறார்
ஆவற்பே ரன்பினு லறைகின்றே னு[2]மன்றே
தேவர்க்கும் வலியான்றன் றிருத்தங்கை யாளிவளீண்டு
[3]ஏவர்க்கும் வலியாளென் றினையானுக் கியம்பீரோ.

(இ - ள்.) *காவல் - (தம்மைத் தாம் ஒழுக்கந்தவறுமற்) பாதுகாத் துக்கொள்வதான, திண்-கலங்காதநிலைமையுள்ள, கற்பு - பதிவிரதா தருமம், அமைந்தார்-பொருந்தப்பெற்ற மகளிர், தம் பெருமை தாம் கழறார் - தமது பெருமையைத் தாமே எடுத்துச் சொல்லமாட்டார்; (ஆயினும்), (யான்),—ஆவல் பேர் அன்பினல் - (உம்மிடத்து) மிக்க ஆசைகொண்ட பெரிய அன்பினல், அறைகின்றேன் ஆம் அன்றே- (என்பெருமையை யானே எடுத்துச்) சொல்லுகிறேனன்றோ? 'தேவர்க்குஉம வலியான் தன் திரு தங்கையாள் இவள்-எல்லாத்தேவர்களைக் காட்டிலும் வலிமையுடையவனன இராவணனது சிறந்த தங்கை யாகிய இவள், ஈண்டு ஏவர்க்குஉம்வலியாள் - இவ்வுலகத்தில் யாவரி*

னும் வலியவள்,' என்று—, இளையானுக்கு - (உமது) தம்பிக்கு, இயம்பீர்ஓ - (எனது திறத்தை நீர்) சொல்லமாட்டீரோ? (எ - று.)

கற்பிற்சிறந்த மாதர் தற்புகழ்ச்சியாகத் தமதுசிறப்பைத் தாமே கூறுதற்கு உரியரல்லர்: அப்படிப்பட்ட மாதரு ளொருத்தியாயினும், யான், உம்மிடத்து அளவுகடந்த ஆசை கொண்டுள்ளதனால், அவ் வாசையை நிறைவேற்றிக்கொள்ளுதற்கு இன்றியமையாமைபற்றி வேற்றுமைகருதாமல் உமது முன்னிலையில் மாத்திரம் எனதுசிறப்பி னியல்பை இப்பொழுது கூறுகின்றேன்; ஆகையால், எனதுசிறப்பை யான் சொல்லக்கேட்டிருந்த நீர்தாமே, 'இளங்கன்று பயமறியாது' என்றபடி அதனையறியாமல் என்னை இங்ஙனஞ்செய்த உமது தம் பிக்கு 'அனைத்துலகையும்வென்றவனது தங்கையான இவள் யாவரி னும் ஆற்றலுடையவள்' என்று கூறி, அவனை அடக்கி அவனுக்கு என்னிடம் நன்குமதிப்பை உண்டாக்குவீர் என்பதாம். ஆம், அன்று, ஏ - தேற்றம். பின்னிரண்டடிகளில் 'தேவர்க்குவலியான்றன் றிருத்தங்கை யா னிவளீங்கு, ஏவர்க்கு வலியானுக் கிளையா ளெற்கி யம்பீரே' என்ற பாடத்துக்கு - யானே தேவர்க்கும்வலியனான இரா வணனுடைய சிறந்ததங்கையாவேன்: அங்குள்ளஇவள் வலியனான யாவனுக்குத் தங்கைஎன்று எனக்குச்சொல்லுங்கள் என்று சீதை யைப்பற்றி வினவியதாகப் பொருள் காண்க. பி - ம் :—[1]காவல். [2]அன்றே. [3]ஏவர்க்குவலியானுக்கிளையாணீரியம்பீரோ. (351)

128. மாப்போரிற் புறங்காப்பென் வான்சுமந்து செலவல்லேன்
தூப்போலக் கனிபலவுஞ் சுவையுடைய தரவல்லேன்
காப்போரைக் கைத்தென்னீர் கருதியது தருவேனிப்
பூப்போலு மெல்லியலாற் பொரு[2]ளென்னோ [3]புகல்வீரே.

(இ - ள்.) மா போரில்-பெரியயுத்தங்களில், புறங்காப்பென்-(நான் உம்மைப்) பாதுகாத்திடுவேன்; வான் சுமந்து செல வல்லேன்-ஆகாய மார்க்கத்தில் (உம்மை) எடுத்துக்கொண்டுபோக வல்லேன், (யான்): தூ போல-மாமிசம்போல, சுவைஉடைய - உருசியுடையனவான, கனி பலஉம் - பழங்கள் பலவற்றையும், தர வல்லேன் - (உமக்குக்) கொணர்ந்துகொடுக்க வல்லமையுடையேன்; (அன்றியும்), நீர் கருதி யது தருவேன் - நீர் மனத்தில்விரும்பியதைக் கொணர்ந்து கொடுப் பேன்: காப்போரை கைத்து என் - (இங்ஙனம் பலவகையாலும்) பாது காத்தற்கு உரியாரைவெறுத்தலால் யாதுபயன்? இ பூ போலும் மெல் இயலால் பொருள் என்-பூப்போலும் மென்மையான தன்மையை யுடையவளான இவளால் (உமக்குப்) பயன்யாதோ? புகல்வீர் - சொல் வீர்; (எ - று.)—என்னோ, ஓ - அசைநிலை.

நீர் விரும்பியதையெல்லாம் செய்துமுடித்தலிலும் உம்மைப் பல வகையாலும் பாதுகாத்தலிலும் வல்ல என்னைப் பொருட்படுத்தாது யாதொருவகையிலும் உதவமாட்டாத இவளை விரும்பி உடன்வைத் துக்கொண்டு உறைதலில் என்ன பயன்? சொல்வீ ரென்றனள் என்ப தாம். 'இப் பூப்போலு மெல்லியல்' என்றதனால் குற்றமெடுத்துக் கூறத் தலைப்பட்டாரும் நல்லியல்பான மெல்லியல்பையன்றி வேறொன் றையும் எடுத்துக்காட்டவொண்ணாத பிராட்டியினது சுகுமாரத்

தன்மை வெளியாம். நீர் விரும்பியதைச் செய்துமுடிக்க வல்லமை யற்றவ ளென்ற கருத்தில் சீதையைச் சூர்ப்பணகை மெல்லியலென் றாள். பி - ம்:—[1]போல. [2]என்னே. [3]புகலீரால், புகல்வீரால். (352)

129. குலத்தாலு நலத்தாலுங் குறித்தனவே கொணர்தக்க
வலத்தாலு மதியாலும் வடிவாலு [1]மடத்தாலும்
நிலத்தாரும் விசும்பாரு நேரிழையா ரென்னைப்போற்
சொலத்தானிங் குரியாரைச் [2]சொல்லீரோ வல்லீரேல்.

(இ - ள்.) குலத்தால்உம் - உயர்குலச்சிறப்பினாலும், நலத்தால்உம் - மேன்மைகளாலும், குறித்தனஏ கொணர் தக்க வலத்தால்உம் - குறிப்பிட்டவற்றைக் கொண்டுவரத்தக்க வலிமையினாலும், மதியால்உம் - அறிவினாலும், வடிவால்உம் - வடிவழகினாலும், மடத்தால்உம் - இளமையாலும், என்னை போல் சொல உரியார் - என்னைப்போன்றவளென்று சொல்லுதற்கு உரியவரான, நேர் இழையாரை - மகளிரை, நிலத்தார்உம் விசும்பார்உம் - மண்ணுலகத்தாருள்ளும் விண்ணுலகத்தாருள்ளும், வல்லீர்ஏல்-வல்லமையுடையீரானால், இங்கு - இப்பொழுது, சொல்லீர்ஓ - சொல்வீரோ? (எ - று.)

குலம் முதலிய சிறப்புக்களால் நிலவுலகத்து மகளிருள்ளும் வானுலகத்து மகளிருள்ளும் எனக்குச் சமமாகவுள்ளவ ரில்லை யெனத் தற்புகழ்ந்தவாறு. இரண்டாம் வேற்றுமையுருபுபிரித்துக்கூட்டப் பட்டது. பி - ம்:—[1]மடப்பாலும். [2]சொல்லீரே. (353)

130. போக்கினீ ரென்னாசிபோய்த்தென்னீர் [1]பொறுக்குவி ரேல்
ஆக்குவெ னோர் நொடிவரையி னழகமைவெ னருள் [2]கூடும்
பாக்கியமுண் டெனினதனாற் பெண்மைக்கோர் [3]பழு துண்டோ
மேக்[4]குயரு நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றே.

(இ - ள்.) என் நாசி போக்கினீர் - எனதுமூக்கை அறுத்திட்டீர்; போய்த்து என் - (அதனால்) போனது என்ன? நீர் பொறுக்குவிர் ஏல் - நீர் (என்னை) ஏற்றுக்கொள்வீரானால், ஓர் நொடி வரையின் ஆக்குவென் - ஒரு நொடிப்பொழுதில் (அதனை) உண்டாக்கிக்கொள்வேன்; அழகு அமைவென் - அழகும் நிரம்பப் பெறுவேன்; அருள் கூடும் பாக்கியம் உண்டு எனின் - (உமது) கருணை மிகப்பெறுதலாகிய பேறு (என் திறத்து) உண்டாகுமானால், அதனால் - மூக்கில்லாமையால், பெண்மைக்கு ஓர் பழுது உண்டுஓ - பெண்தன்மைக்கு ஒரு குற்றமுண்டோ? மேக்கு உயரும் நெடு மூக்குஉம் மடந்தையர்க்கு மிகை அன்றுஓ - அதிகமாக உயர்ந்துள்ள நீண்ட மூக்கும் மகளிர்க்குக் குற்றமன்றோ? (எ - று.)

நீர் என்மூக்கையறுத்ததனால் ஒன்றுங் கேடு இல்லை; நீர் என்னை அங்கீகரிப்பீரானால் அதனை உண்டாக்கிக்கொண்டு அழகு நிரம்புவேன்: 'வேண்டும்போதுதானே கொள்ளவேணும்! இயற்கையில் இல்லையே' எனின்,—அங்ஙனமில்லாவிடினும் உம்மைப் போன்ற சிறந்த காதலனது கருணை நல்வினைப்பயனாற் கைகூடிவிடுமானால் அது விசேடமேயொழிய இந்த ஒருறுப்புக்குறை மற்றைப்

பெண் இலக்கணவமைதியாலாம் மேன்மையைத் தாழ்வுபடுத்தவல்ல தாகுமோ? அன்றியும், அளவுக்குமேல் மூக்கு நீண்டிருந்தாலும் மகளிரிலக்கணத்துக்குக் குறைவன்றோ? என்றன ளென்பதாம். பி - ம்:—[1]போற்றுவிரேல், போக்கலிரேல், போக்குவிரேல். [2]கூடும். [3]பழிப்பு. [4]உயர்ந்த. (354)

131. விண்டாரே யல்லாரோ வேண்டாதார் [1]மனம்வேண்டின்
உண்டாய காதலினென் னுயிரென்ப துமதன்றோ
கண்டாரே காதலிக்குங் கட்[2]டழகும் விடமன்றோ
கொண்டாரே கொண்டாடு முருப்பெற்றாற் கொள்ளீரோ.

(இ - ள்.) விண்டார்ஏ அல்லார்ஓ - மனம்வேறுபட்டவரல்லரோ, வேண்டாதார் - விரும்பப்படாதவர்? (அங்ஙனமன்றி), உண்டாய காதலின்-(உமது மனத்தில்) உண்டான அன்போடு, மனம் வேண்டின்-(உம்முடைய) மனம் விரும்பினால், என் உயிர்என்பது உமது அன்றுஓ-எனதுஉயிர் உமக்கே உரியதாமன்றோ? கண்டார்ஏ காதலிக்கும் கட்டழகுஉம்-பார்த்தவர்யாவரும் (பார்த்த மாத்திரத்தில்) விரும்பும்படியான மிக்கஅழகும், விடம் அன்றுஓ - விஷம்போலக் கொடியதன்றோ? கொண்டார்ஏ கொண்டாடும் உருபெற்றால்-மணஞ் செய்துகொண்டவர்மாத்திரமே கொண்டாடத்தக்க வடிவத்தை (நான்) பெற்றால், கொள்ளீர்ஓ-அங்கீகரிக்க மாட்டீரோ? (எ-று.)

மனம்ஒற்றுமைப்படாமல் வேற்றுமைப்பட்டிருப்பின் எவ்வளவு கட்டழகுடையாரும் விரும்பப்படாதவரேயாவர்; அங்ஙனமன்றி, மனம் ஒற்றுமைபபட்டிருந்தால், வடிவழகிற் குறைவுபட்டாரும் உரியராகக் கொள்ளப்படுவர்: ஆனதுபற்றி, உம்மிடத்து மிக்க காதல் கொண்டுள்ள என்னிடத்து நீரும் காதல்கொள்வீராயின், யான் உமக்கு உயிருமுட்பட உரியளாதற்குத் தட்டில்லை; அன்றியும், "பார்யா ரூபவதீ சத்ரு:" என்றபடி மனைவி கட்டழகையுடையவளா யிருத்தல், கொடுந்தீங்கு தருவதொன் றன்றோ? அங்ஙனம் கண்ட வரும் விரும்பும்படியன்றி, கொண்ட நீர் விரும்புதற்கு வேண்டியபடி நான் அழகியவடிவுகொண்டால், அவ்வளவுமாத்திரமே என்னை ஏற்றுக்கொள்ளுதற்குப் போதாதோ? என்றன ளென்பதாம். பி-ம்:—[1]நான். [2]அழகு. (355)

132. சிவனுமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தெறுகுலிசத்
தவனு[1]மடுத் தொன்றாகி நின்றன்ன வுருவோனே
புவனமனைத்தையு[2]மொருதன்பூங்கணையாலுயிர்வாங்கும்
அவனுமுனக் கிளையானோ [3]விவனேபோ [4]லருளிலனால்.

(இ-ள்.) சிவனும்—, மலர்திசைமுகன்உம் - தாமரைமலரில் தோன்றிய பிரமனும், திருமால்உம் - ஸ்ரீமகாவிஷ்ணுவும், தெறு குலிசத்தவன்உம் - (பகைவரை) அழித்திடுகிற வச்சிராயுதத்தை யுடைய இந்திரனும், அடுத்து-சேர்ந்து, ஒன்று ஆகி நின்று அன்ன - ஒருவடிவங்கொண்டு நின்றாற்போன்ற, உருவோனே - சிறந்தவடிவ முடையவனே!—புவனம் அனைத்தைஉம் - சகலலோகங்களிலுமுள்ள பிராணிகளையும், தன் பூ கணையால் - தனது மலரம்புகளால், உயிர்

வாங்கும்-மரணவேதனைப்படுத்துகிற, ஒரு அவன்உம் - ஒப்பற்ற அம் மன்மதனும், உனக்கு இளையான்ஓ - உனக்குத் தம்பியோ? இவன்ஏ போல் அருள் இலன் ஆல் - இந்தஉனது தம்பிபோலவே (அவனும் என்னிடம்) கருணையில்லாதவனு யிருக்கின்றானே; (எ - று.)—ஆல் - ஈற்றசையுமாம்.

திரிமூர்த்திகளும் இந்திரனும் சேர்ந்து ஒருவடிவமாகி நின்றாற் போன்ற வடிவமுள்ளவனேயென விளித்தது - பராக்கிரமமும், ஒழுக்கமும், ஆட்சியும், பொலிவும் விளங்கப்பெற்ற தோற்றமுடையவனே யென்றபடி. மன்மதன் அங்கமில்லாதவன்: வன்மையற்ற மலர்களைக் கணையாகக் கொண்டவன்: மூவுலகத்துஉயிர்களையும் தன்னாணைக்கு உட்படுத்துந் தனிப்பெருவீரன் என்ற இப்பொருள் புலப்பட அவனை 'புவனமனைத்தையும் ஒரு தன் பூங்கணையால் உயிர் வாங்குமவன்' என்றது. இலக்குமணன் கண்ணோட்டமில்லாமல் தன்னை வருத்தியதுபோல மன்மதனும் மிகவருத்துகின்றன னென்பாள், 'ஒரு* * * அவனு முனக்கிளையானோ' என்றாள். பி - ம்:—[1]எழுந்து. [2]பொருவன். [3]அவனேயோ, இவனேயோ. [4]அருளினால். ()

வேறு.

133. பொன்னுருவப் பொருகழலீர் [1]புழைகாண மூக்கரிவான் பொருள்வே றுண்டோ, [2]இன்னுருவ மிதுகொண்டிங் கிருந்தொழியு நம்மருங்கே யேகா ளப்பால், பின்னிவளை யயலொருவர் [3]பாராரென் றேயரிந்தீர் பிழைசெய் தீரோ, அன்னதனை யறிந்தன்றோ வன்பிரட்டி [4]பூண்டதுநா னறிவி லேனோ.

(இ - ள்.) பொன் உருவம் பொரு கழலீர் பொன்மயமான அழகிய போர்க்குஉரிய வீரக்கழலுடையவர்களே!—'இன் உருவம் இது கொண்டு இங்கு நம் மருங்கே இருந்தொழியும் - (நாம் இவளை அங்கபங்கப்படுத்திவிட்டால்) இனிய இந்தக்குறைபட்ட வடிவத்தைக் கொண்டு இவ்விடத்தில் நமது அருகிலேயே எப்பொழுதும் இருந்துதீர்வாள்: அப்பால் ஏகாள் - (நம்மிடத்தைவிட்டு) அயலிற் செல்லமாட்டாள்; பின் இவளை அயல் ஒருவர் பாரார் - (அங்கபங்கமடைந்த) பின் இவளை வேறொருவரும் விரும்பிநோக்கார்', என்றுஏ - என்று எண்ணியே, அரிந்தீர் - அறுத்தீர்கள்; (ஆதலால்), பிழை செய்தீர்ஓ - (எனக்கு நீங்கள்) தவறு செய்தீர்களோ? [அல்லீர் என்றபடி]; (இவ்வாறன்றி),புழை காண - பெருந்துளைபடும்படி, மூக்கு அரிவான்- (எனது) மூக்கையறுத்தற்கு, பொருள் வேறு உண்டுஓ - (நான் இப்பொழுது சொல்லுங் காரணமொன்றொழிய) வேறோர் கருத்து உள்ளதோ? [இல்லையென்றபடி]; அன்னதனை அறிந்து அன்றுஓ - அந்தஉட்கருத்தை அறிந்தல்லவா, நான்—, அன்பு இரட்டி பூண்டது - முன்னினும் இருமடங்காக அன்பு கொண்டது; அறிவு இலேன்ஓ - (இல்லாவிட்டால் என்னுடம்பை யறுத்த உம்மிடம் முன்னினும் மிக்க அன்புகொள்ளுதற்கு நான்) அறிவில்லாதவளோ? (எ - று.)

'இவள் இப்படிப்பட்ட குறையற்ற பேரழகுடனே யிருந்திட்டால் இவளை வேறுயாரேனும் பார்த்து ஆசைகொள்ளக்கூடும்;

அங்ஙனமன்றி, சிறிதுகுறையுண்டாம்படி ஒருசார் அங்கபங்கப் படுத்திவிட்டால் எவரும் இவளை விரும்பார்: ஆதலால், எங்குஞ் செல்லாமல் இங்கேயே நம்மிடத்தில் என்றும் நிலைத்திருப்பள்' என்ற கருத்தினாலே மூக்கறுத்தீர்; இப்படி என்னிடம் காதல்பற்றி இதுசெய்தீ ரொழியப் பிழைபாடாகச் செய்தீரல்லீர்; அவ்வுட் கருத்தை நான் குறிப்பாக உணர்ந்ததனாலேயே முன்னிலும் மிகுதி யாக உம்மிடம் காதல்கொண்டேன்; அங்ஙனம் உட்கருத்தையறி யாவிடின், தீங்கு செய்தவரிடம் அதிகபாசம் வைக்கும்படி அவ்வளவு புத்தியில்லாதவளோ நான்? என்றன ளென்பதாம். பி - ம்:— பிழை காணீர். [2]என்னுருவைக் கைக்கொண்டீர். [3]பாராராமென. [4]கொண்டது.

இதுமுதல் இப்படலம் முடியுமளவுமுள்ள பதினொரு கவிகள் - பெரும்பாலும், முதல் நான்கு சீர்கள் காய்ச்சீர்களும், மற்றிரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். இவற்றில் ஈற்றுச்சீர், தேமாச்சீராகவேநிற்கும். (357)

134. வெப்பழியா நெடுவெகுளி வேலரக்க ரீதறிந்து வெகுண்டு நோக்கின், அப்பழியா லுலகனைத்து நும்பொருட்டா லழிந்தனவா மறத்தை நோக்கி, ஒப்பழியச் [1]செய்கில்லா ருயர்குலத்துத் [2]தோன் றினோ ருணர்ந்து நோக்கி, இப்பழியைத் துடைத்துதவி யினிதிருத்தி ரென்னொடுமென் றிறைஞ்சி நின்றாள்.

(இ - ள்.) வெப்பு அழியா - உக்கிரத்தன்மை நீங்காத, நெடு வெகுளி-பெருங்கோபமுடைய, வேல் அரக்கர் - ஆயுதப்பயிற்சியில் வல்லவரான இராக்கதர்கள், ஈது அறிந்து - (நீர் செயத) இச்செய் தியை உணர்ந்து, வெகுண்டு நோக்கின் - கோபங்கொண்டு விழித் துப்பார்க்கின், (அம்மாத்திரத்தால்), அ பழியால் - (நீர் எனக்குத் தீங்குசெய்ததாகிய) அந்தக் குற்றத்தால், உலகு அனைத்தும் - உலகத்து உயிர்களெல்லாம், நும் பொருட்டால் அழிந்தன ஆம் - உங்களுக்காக அழிந்தனவாய்விடும்; உயர்குலத்து தோன்றினோர் - உயர்ந்த குலத்திற் பிறந்தவர், அறத்தை நோக்கி - தருமத்தை ஆலோசித்து, ஒப்ப அழிய செய்கில்லார் - (தங்களுக்காக உலக மெல்லாம்) ஒருங்கே அழியச் செய்யமாட்டார்; நோக்கி உணர்ந்து - (அந்த முறைமையை நீரும்) ஆராய்ந்து அறிந்து, இ பழியை துடைத்து - (உமக்கு நேரக்கூடிய) இந்தப்பழியை இல்லையாக்கி, உதவி - நன்மைசெய்து, என்னொடும் இனிது இருத்திர் - என் னுடனே இனிமையாகக்கூடி வாழ்ந்திருப்பீர், என்று - என்று சொல்லி, இறைஞ்சி நின்றாள் - (இராமனை) வணங்கி நின்றாள், (சூர்ப்பணகை); (எ - று.)

இயல்பாகவே சினந்துபொரும் இயல்புள்ள அரக்கர்கள், நீர் எனக்குச்செய்த பிழையைக் கேட்டறிந்து உம்மை யழித்தற் பொருட்டுக் கோபித்துப் பார்ப்பாராயின், அப்பார்வையின் கொடுமையாலே உம்மோடு உலகமுழுவதும் அழிந்திடும்; இப்படித் தமதுபிழையால் உலகமுழுதையும் அழியச்செய்தல் உயர்குலத் தோர்க்கு உரிய தருமமாகாது; ஆதலால், பழிப்புக்கு இடமில்லாத

படி வாழ்ந்திருப்பீர் என்று இராமனைச் சூர்ப்பணகை நமஸ்கரித்தனள் என்பதாம். எனது அன்பிற்காக என்னுடன் சேராதிருப்பினும், உலகத்தின் துன்பமின்மைப் பொருட்டாகவாயினும் என்னுடன் சேர்வீர் என்றாள். பி - ம்:—[1]செய்கிலீர். [2]தோன்றினீர்.

## 135.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராமன் சூர்ப்பணகையை வெருட்டலைக் கூறும்.

**நா[1]டறியாத் துயரிழைத்த [2]நவையரக்கி நின்[3]னன்னை தன்னை நல்குந், தாடகையை யுயிர்கவர்ந்த சரமிருந்த தன்றியுநான் றவமேற் [4]கொண்டு, [5]தோடகைய துறுமலர்த்தா ரிகலரக்கர் குலந்தொலைப் பான் றேன்றி நின்றேன், போடகலப் புல்[6]லொழுக்கை வல்லரக்கி யென்றிறைவன் புகலும் பின்னும்.**

(இ-ள்.) 'வல் அரக்கி - கொடிய அரக்கியே! நாடு அறியா துயர் இழைத்த-உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளுக்கும் (இதுவரையிலும்) பட்டிராத கொடுந்துன்பத்தைச் செய்த, நவை அரக்கி-குற்றமுள்ள ராக்ஷஸியாகிய, நின் அன்னை தன்னை நல்கும் தாடகையை - உனது தாயைப் பெற்றவளான தாடகையை, உயிர் கவர்ந்த-உயிரை (உடம்பினின்று) பறித்த [கொன்ற], சரம்-அம்பு, இருந்தது - (என்னிடம்) உள்ளது; அன்றிஉம்-அதுவல்லாமலும், நான்—, தவம் மேல் கொண்டு-தவத்தை மேற்கொண்டு, தோள் தகைய - தோள்வலிமையுள்ளவர்களான, துறு மலர் தார் இகல் அரக்கர்-நெருங்கியபூமாலையையுடையவர்களும் பகைமைக் குணமுள்ளவர்களுமான இராக்கதரது, குலம் - வமிசத்தை, தொலைப்பான் - முற்றும் அழிக்கும்பொருட்டு, தோன்றி நின்றேன் - பிறந்துநின்றேன்; (ஆதலால்), புல் ஒழுக்கை - (உனது) அற்ப நடத்தையை, அகல போடு - தூரவிட்டிடு', என்று - என்று சொல்லி, இறைவன்-ஸ்ரீராமன், பின்னும் புகலும் - மீண்டுஞ் சொல்வான்; (எ-று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

உலகத்துக்குப் பெருந்துன்பஞ்செய்த கொடிய ராக்ஷஸியான தாடகையை அழித்த அம்பு என்னிடம் உள்ளதனாலும், தவவொழுக்கத்தை மேற்கொண்டு அதனை நெடுங்காலம் மிகுதியாகச் செய்து அதனாற் பெற்ற வரங்களின் பலத்தாற் செருக்கியுள்ள அரக்கரைக் குலத்தோடு தொலைத்தற்குப் பிறந்தவன் நான்ஆதலாலும், நீ இத்தீயொழுக்கத்தை யொழித்து உடனே அப்பாற் செல்லாவிடின் உன்னைக் கொன்றிடுவே னென்று சொல்லி அச்சமுறுத்தினன் என்பதாம். இதனால், நான் பெண்கொலை செய்ய மாட்டேனென்று கருதவேண்டா என்றும், மிக்கவலிமையுள்ள உன்னைக் கொல்லவலலேன் என்றும் வெளியிட்டவாறு. சுகேதுவின் மகளும் சுந்தனது மனைவியுமான தாடகை கணவனையிழந்த பின் மைந்தரான சுபாகுமாரீசரோடு அரக்கத்தன்மையயடைந்து இராவணனது மாதாமகனான சுமாலியைச் சார்கையில் சுபாகுமாரீசர் அவனுக்கு அபிமானபுத்திரராய்ப் பிற்காலத்தில் இராவணனுக்கு மாதுலமுறைமைபூண்டனர் என்ற வரலாறு பற்றி, இங்கே சுபாகு மாரீசரது தாயான தாடகையை இராவணனது தாயான கேகசியின்

தாயென்று அன்புமிகுதியைக் காட்டுமாறு ஒற்றுமைநயம்படக் கூறிய தென்க. பி-ம்:—[1]அயரத், அறியத். [2]வல். [3]அவ்வைதௌவை நல்கா. [4]கொண்ட. [5]தோடசையத். [6]ஒழுக்கின். (359)

136. தரையளித்த தனிநேமித் தயரதன்றன் புதல்வரியாந் தாய்சொற் ருங்கி, விரையளித்த கான்புகுந்தேம் வேதியரு மாதவரும் வேண்ட [1]நீண்டு, கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர் குலந் தொலைத்துக் கண்டாய் பண்டை,வரையளித்த குலமாட நகர்[2]புகுவே மிவைதெரிய மனக்கொ ளென்றான்.

(இ - ள்.) யாம் - நாங்கள், தரை அளித்த தனி நேமி தயரதன் தன் புதல்வர் - நிலவுலகமுழுவதையும் அரசாண்ட ஏகசக்ராதிபத்தியத்தையுடைய தசரதசக்கரவர்த்தியினது குமாரர்: தாய் சொல் தாங்கி- (எமது) தாய்மாருள் ஒருத்தியான கைகேயியின் கட்டளையை ஏற்றுக்கொண்டு, விரை அளித்த கான் புகுந்தேம் - பரிமளத்தை மிகுதியாகவீசுகிற காட்டிற் சேர்ந்தோம்: (இங்கு), வேதியர்உம் மாதவர்உம் வேண்ட - (தண்டகாரணியத்தில்வசிக்கின்ற) வேதத்துக் குரியரான பிராமணர்களும் பெருந்தவமுடையரான முனிவர்களும் வேண்டியதனால், நீண்டு கரை அளித்தற்கு அரிய படை கடல் அரக்கர் குலம் தொலைத்து கண்டாய் - மிகப்பரந்து எல்லையமைத்தற்கு அருமையான சேனாசமுத்திரத்தையுடைய இராக்கதாது வம்சத்தை முற்றும் அழித்தபின்பே, பண்டை - பழமையான [தொன்றுதொட்டு எங்களுக்குஉரியதான], வரை அளித்த குலம் மாடம் நகர் - மலைகளை ஒப்பாகக் கொண்ட சிறந்தமாளிகைகளையுடைய அயோத்தியாநகரத்தில், புகுவேம் - சேர்வோம், இவை - இவற்றை, தெரிய மனம் கொள் - விளங்க மனத்திற்கொள்வாய், என்றான் - என்று சொன்னான், (ஸ்ரீராமன்;) (எ - று.)

நாங்கள் பூலோக முழுவதையும் தனதுஒராளுகையின்கீழ் அரசாண்ட தசரதசக்கரவர்த்தியின் குமார ரென்றும், மாத்ருவாக்ய பரிபாலநத்துக்காக வனம்புகுந்தோ மென்றும், அங்ஙனம் புக்க விடத்திலே முனிவர்கள் பலரும் வேண்டிக்கொண்டதனால் அளவிடற்கரிய அரக்கர்குலத்தைத் தொலைத்தே எமதுநகர்க்கு மீள்வதாக யாம் சங்கற்பித்துள்ளோ மென்றும், இவ்வியல்புகளையெல்லாம் நன்றாக மனத்திற்கருதி நீ எமதுமுன்னிலையில்நில்லாதுசென்று பிழைப்பா யென்றும் கூறினனென்பதாம். கீழ் 'அரக்கர்குலந் தொலைப்பான் தோன்றிநின்றேன்' என்று தொகுத்துச்சுட்டியதை, இங்கு வகுத்துக்காட்டியவாறு. இச்செய்யுளால் அவதாரரஹஸ்யம் புலப்படுத்தியவாறு. பி-ம்:—[1]நின்ற. [2]புகுவதிது. (360)

137. நெறித்தாரை [1]செல்லாத நிருதரெதிர் நில்லாதே நெடிய தேவர், மறித்தாரீண் [2]டிவரிருவர் மானிடவ ரென்னாது வல்லையாகின், வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர் முதலினர்நீ மிடலோ ரென்று, குறித்தாரை யாவரையுங் கொணருதியே னின்னெதிரே கோறு மென்றான்.

(இ - ள்.) 'நெறி தாரை செல்லாத - நல்லொழுக்கத்தின் வழியிலே நடவாத, நிருதர் - இராக்கதரது, எதிர் - எதிரில், நில்லாதே - நிற்கமாட்டாமல், நெடிய தேவர் - சிறந்த தேவர்களும், மறித்தார் - தோற்று அழிந்தார்: ஈண்டு இவர் - இங்குள்ள இவர், இருவர் மானிடவர் - இரண்டு சாதாரண மனிதர்கள்,' என்னுது - என்று எளிதாகநினையாமல்,—வல்லை ஆகின் - நீ வல்லவளானால், வெறி தாரை வேல் அரக்கர் - கோபாவேசத்தையும் கூர்நுனியுடைய வேலாயுதத்தையுமுடைய இராக்கதருள்ளும், விறல் இயக்கர் முதலினர்-வலிமையையுடைய யக்ஷர் முதலியோருள்ளும், மிடலோர் என்று நீ குறித்தாரை யாவரைஉம் - வலிமையுடையோரென்று உன்னுற் குறிக்கப்பட்டவ ரெல்லோரையும், கொணருதி எல் - அழைத்துக்கொண்டுவருவையானுல், நின் எதிரே கோறும் - உனது முன்னிலையில்தானே (அவர்களையெல்லாம்) கொன்றிடுவோம், என்ருன் - என்றுங் கூறினுன், (இராமன்); (எ - று.)

வல்லமையுடையோயானுல், நீ, வலிமையுடையவரென்று பெருமதிப்புக்கொண்டுள்ள அரக்கர் இயக்கர் முதலினேரையெல்லாம் அழைத்துவா: அவர்களையெல்லாம் கொன்றிடுவோமென்று இராமபிரான் கூறினனென்க. 'அரக்கரெதிரில் தேவர்களனைவருமே அழிந்தாரே: இம்மனிதரெவ்வளவு? எனறு அவமதிப்புக் கொள்ளாதே' என்பது முன்னிரண்டடியின் பொருள். இயக்கர் முதலினரையுஞ் சேர்த்துச் சொன்னது, இவளது முதல் தமையனை குபேரன் இயக்கர்களுக்கு அரசனுதல்பற்றி யென்க. பி - ம்:—[1]சொல்லாத. [2]இருவரிவர். (361)

## 138.—இது முதல் நான்கு கவிகள் - அரக்கி தன்னை மணஞ்செய்துகொள்ளுமாறு பின்னும் வற்புறுத்தலைத் தெரிவிக்கும்.

கொல்லலா மாயங்கள் குறித்தனவே கொள்ளலாங் கொற்ற முற்ற, வெல்லலா [1]மவரியற்றும் [2]வினையெல்லாங் கடக்கலா மேல் வாய் நீங்கிப், பல்லெலா முறத்தோன்றும் பகுவாயா ளென்னுது பார்த்தி யாயின், நெல்லெலாஞ் சுரந்[3]தளிக்கு நீர் நாட கேளென்று நிருதி கூறும்.

(இ - ள்.) 'நெல் எலாம் சுரந்து அளிக்கும் நீர் நாட - நெல் முதலிய தானியங்களையெல்லாம் மேல்மேல் மிகுதியாகவிளைவிக்கின்ற நீர்வளமுள்ள நாட்டையுடையவனே! கேள் - (யான் சொல்வதைக்) கேட்பாயாக; மேல்வாய் நீங்கி - வாயின் மேலிடத்தைவிட்டு, பல் எலாம் உற தோன்றும் - பற்களெல்லாம் நன்ருய் வெளித்தோன்றப்பெற்ற, பகு வாயாள் - திறந்த பெரியவாயை யுடையவள் (இவள்), என்னுது- என்று இகழாமல், பார்த்தி ஆயின்-(என்மீது) அன்புநோக்கம் வைப்பையானுல்,— கொல்லல் ஆம் - (அரக்காதியோரை) அழிக்கலாம்: மாயங்கள் குறித்தனவே கொள்ளல் ஆம் - (அவர்களுடைய) மாயைகளை உள்ளபடியே அறிந்துகொள்ளலாம்: கொற்றம் முற்ற வெல்லல் ஆம் - (அவர்களின்) வெற்றியை முழுவதுஞ் சயித்திடலாம்: அவர் இயற்றும் வினை எல்லாம் கடக்கல் ஆம்-அவர்கள் செய்யுங் கொடுங்

தொழில்கட்கெல்லாம் உள்ளாகாது தப்பலாம்,' என்று - என்று சொல்லி, நிருதி-அரக்கியான சூர்ப்பணகை, கூறும்-(மீண்டுஞ்) சொல்வாள்: (எ-று.)—அதனை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

மிக்கவலிமையுடையவளான என்னை விகாரரூபமுடைய ராக்ஷசியென்று அலட்சியஞ்செய்யாமல் அங்கீகரிப்பாயானால், எனது உதவியால் அரக்கரது மாயைகளையெல்லாம் அறிந்து அவர்கள் செய்யுங் கொடுஞ்சூழ்ச்சிகளுக்கெல்லாந் தப்பி அவர்களைக் கொல்லுதலும் வெல்லுதலுஞ் செய்திடலா மென்றனள் என்பதாம். நீ வாக்குத்தத்தஞ்செய்தது நிறைவேறுதற்கும் என்னை மணத்தல் இனியஉபாயமா மென்று எடுத்துக்காட்டினள். பி - ம்:—[1]மற்றியற்றும். [2]வினையமெலாம். [3]உதவும். (362)

**139.** காம்பறியுந் தோளானைக் கைவிடீ ரென்னினும்யான் மிகையோ கள்வர், ஆம்பொறியி லடலரக்க ரவரோடே செரு[1]ச் செய்வா னமைந்தீ ராயின், தாம்பொறியிற் பலமாயந் தரும்[2] பொறிக ளறிந்தவற்றைத் தடுப்பே னன்றே, பாம்பறியும் பாம்பினகா லென மொழியும் பழமொழியும் பார்க்கி லீரோ.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) காம்பு அறியும் தோளானை - இளமூங்கிலையொத்த தோள்களையுடைய இவளை, கைவிடீர் என்னின்உம் - விட்டிடமாட்டீராயினும், யான் மிகைஓ - நான் மிகுதியோ? கள்வர் ஆம் - வஞ்சகர்களாகிய, பொறி இல் - நல்லறிவில்லாத, அடல் அரக்கரவரோடே - வலிய அந்த அரக்கர்களுடனே, செரு செய்வான் - போர்செய்தற்கு, அமைந்தீர் ஆயின் - சித்தரானீரானால், பொறியின் - பஞ்சேந்திரியங்கள்போல, பல மாயம் தரும் - அனேகவஞ்சனைகளைச் செய்யவல்ல, பொறிகள் - (அவ்வரக்கர்களது) யந்திரங்களை, அறிந்து - (நான்) அறிந்திருத்தலால், அவற்றை தடுப்பேன் அன்றே - அவற்றைத் தடுத்து உதவுவேனன்றோ; பாம்பின கால் பாம்பு அறியும் என மொழியும் பழமொழிஉம் பார்க்கிலீர்ஓ - 'பாம்பின்காலைப் பாம்பே அறியும்' என்று (உலகத்தார் யாவரும்) சொல்லுகிற தொன்றுதொட்ட வார்த்தையையேனும் பொருள்செய்கின்றீரில்லையோ?

'பாம்பின்காலைப் பாம்பே அறியும்' என்ற முதுமொழியின்படி அரக்கரது சூழ்ச்சிகளை அரக்கியாகிய யானே நன்கு அறிவேனாதலால், அரக்கரைக் கொல்லச் சங்கற்பித்த உமக்கு நான் நல்ல துணையாவேன்; ஆதலால், அவளை விட்டிடீராயினும் என்னையுங் கூடவே அங்கீகரிக்கலாகாதோ?' என்றன ளென்பதாம். குறித்த இலக்குத் தவறாமல் மனத்தையிழுத்துத் தம்வசப்படுத்திக் கெடுக்கிற இந்திரியங்கள் அங்ஙனஞ் செய்யுங் கொடியயந்திரங்களுக்கு ஏற்ற உவமையாயிற்று. 'பாம்பின்காலைப்பாம்பேயறியும்' என்றுபழமொழி யுள்ளதனை "புலமிக்கவரைப்புலமை தெரிதல், புலமிக்கவர்க்கே புலனாம் - நலமிக்க, பூம்புனலூர பொதுமக்கட் காகாதே, பாம்பறியும் பாம்பின கால்" என்ற பழமொழிச்செய்யுளாலும் அறிக. பாம்பின - ஆறாம் வேற்றுமைவிரி. பி - ம்:—[1]மலைய. [2]பொறியின். (363)

140. உளங்[1]கோட லுனையிழைத்தா[2]ளுளளொருத்தி யென்னு தியே னிருத ரோடும், களங்கோடற் குரியசெருக் கண்ணியக்கா லொருமூவேங் கலந்த [3]காலைக், குளங்கோடு [4]மென்றெய்திக் கொடியதிறல் வீரர்தமைக் கொன்ற பின்னர், இளங்கோவோ டெனை [5]யிருத்தி யிருகோளுஞ் சிறைவைத்தாற் [6]கிளையா ளென்றே.

(இ - ள்.) உனை உளம் கோடல் இழைத்தாள் ஒருத்தி உளள் என்னுதி ஏல்-உன்னை மனத்திலேவிரும்பிக் கொழுநனாகக் கொள்ளுதலைச்செய்த ஒருத்தி உடனிருக்கிறு ளென்று கருதுவாயானால்,— நிருதரோடும் - (எதிர்த்து வருகிற) அரக்கருடனே, களம் கோடற்கு உரிய செரு - போர்க்களத்தைச்சொந்தமாக்கிக் கொள்ளுதற்கு உரிய போரை, கண்ணியக்கால் - (நீ) செய்யநினைத்தால், (அப்போது), ஒரு மூவேம் கலந்த காலை - (நீங்களிரண்டுபேரும் நானொருத்தியு மாகிய) நாம் மூன்றுபேரும் ஒருங்குசேர்ந்தபொழுது, 'குளம் கோடும்- (போர்க்களத்தை) இரத்தவெள்ளமாகச்செய்து வெற்றிகொள்வோம்,' என்றுஎய்தி - என்றுவந்து சேர்ந்து, கொடிய - கொடுமையைக் காட்டுபவரான, திறல் - வலிமை யமைந்த, வீரர் தமை-அவ்விராக்கத வீரரை, கொன்றபின்னர் - (நாம்) கொன்ற பிறகு, இரு கோள்உம் சிறை வைத்தாற்கு இளையாள் என்று - (சூரியசந்திரரென்னும்) இரண்டு கிரகங்களையுஞ் சிறையிலே வைத்த இராவணனுக்கு இளைய வளாகிய யான் (அவனுக்குப்) பின்னிடேனென்றுங்கொண்டு, இளங் கோவோடு - (உனது) தம்பியுடனே, எனை இருத்தி - என்னை (நீ) வாழவைப்பாய்; (எ - று.)

'மிக்க அன்போடு என்னைக் காதலித்துள்ள மனைவியொருத்தி எனக்கு இருக்கையில் உன்னையுங்கூட அங்கீகரித்தல் தகுதியன்று' என்று நீ என்னை மணம் மறுப்பையானால், இராவணன் தங்கை யான யான் வலிமையில் இராவணனினும் குறைந்தவளல்ல ளென் பதை நாம் மூன்றுபேரும் ஒருங்குகூடி எளிதில் அரக்கரை வென்றிடு தலாலறிந்தபின் உன் தம்பிக்காயினும் என்னை மணஞ்செய்விப்பா யென்றன ளென்பதாம். இரட்டுறமொழிதலால், 'இளையாள்' என்ப தற்கு - உடன்பாட்டுக்குறிப்பு வினையாலணையும் பெயரும், எதிர் மறைத் தெரிநிலைமுற்றுமாக இருபொருள் ஒருங்கே கொள்ளப் பட்டன. சூரியசந்திராதி தேவரனைவரையும் வென்று அவரவர்வச மில்லாதபடி தன்வசமாக்கிக் கீழ்ப்படுத்தியதுபற்றி, இராவணனை 'இருகோளுஞ்சிறைவைத்தான்' என்றது. பி - ம்:—[1]கோடற்கன்பு, கோடாத்துணை. [2]உண்டு. [3]போது. [4]என்றிதுவுமுறுகோளேயென் றுணருங்குறிக்கோளில்லா. [5]இருத்தின். [6]இளையேனென்றாள். (364)

141. பெருங்குலா வுறுநகர்க்கே யேகுநாள் வேண்டுமுருப் பிடிப்பே னன்றேல், அருங்கலா [1]முற்றிருந்தா னென்னினுமீங் கிளையவன்ற னரிந்த நாசி, ஒருங்கிலா விவளோடு [2]முறைவேனே வென்பானே விறைவ வொன்று, மருங்கிலா தவளோடு மன்றோ[3]நீ நெடுங்காலம் வாழ்ந்த தென்பாய்.

(இ - ள்.) பெருங் குலாவுறு நகர்க்கு ஏகும் நாள் - பெரிய கொண்டாட்டம்மிக்க அயோத்திநகரத்துக்கு (நீங்கள்) மீண்டுசெல்

லுங்காலத்தில், நன்றுஎல் - (வேண்டும் உருப்பிடித்தலே) நன்று என்பீராஞல், வேண்டும் உரு பிடிப்பேன் - (எனது மாயாசக்தியால்) வேண்டியவடிவத்தைக் கொள்வேன்; ஈநகு - இப்பொழுது, இளைய வன் - (உனது) தம்பி, அருங் கலாம் உற்று இருந்தான் என்னின் உம் - நீங்குதற்கரிய கோபத்தையுடையஞ யிருந்தாஞயினும், அரிந்த நாசி ஒருங்கு இலா இவளோடுஉம் உறைவேன்ஓ என்பானஎல் - 'அறுபட்டமூக்கு முழுவதுமில்லாத இவளுடன் நான் கூடிவாழ் வேஞே என்று குறை கூறுவாஞயின்,—இறைவ - தலைவனே! நீ—, மருந்து ஒன்றுஉம் இலாதவளோடுஉம் அன்ருே நெடுங்காலம் வாழ்ந்தது என்பாய் - இடைசிறிதும் இல்லாதவளோடன்ருே வெகு காலமாய் (நான) கூடி வாழ்ந்துவருவதும்' என்று (அவனுக்கு ஏற்ற சமாதானங் கூறுவாய்; (எ - று.)

நீங்கள் அயோத்திநகரத்துக்குச் செல்லவேண்டுங் காலத்தில், உங்களோடு வரும் என்னைக்கண்டு ஊரவர் வெருவவோ வெறுப்பவோசெய்வாரெனறு எண்ணவேண்டா; அங்ஙன்நிகழாத படி மாயையால் வேண்டியவடிவம் எடுத்துக்கொள்வேன்; இப்பொழுது உன்தம்பி நீ கூறுதலால் என்னிடம் மாறுபாடுநீங்கி என்னை மணஞ்செய்தற்கு ஒருசார் உடன்படினும், 'மூக்கென்னும் ஓர் உறுப்புமுழுவதும் இல்லாதவளோடு நான்சேர்ந்துவாழ்வேஞே?' என்று ஒருசார் தடைகூறுவாஞயின், 'யான் இடையென்னும் ஒருறுப்பு முழுவதும் இல்லாதவளோடு நெடுங்காலமாய்க் கூடி வாழ்கின்றேனே, நீ வாழத்தடையென்ன?' என்று தக்கவிடை யளித்து அவனை உடன்படுத்துவா யென்றனள் என்பதாம். இங்குச் சீதையின் இடைநுட்பம் நன்குவிளங்கும். பின்னிரண்டடியால், சூர்ப்பணகை சமயோசிதமாகக் கறபித்துக் கூறிய நயம் பாராட்டத் தக்கது. அன்றுஎல் என்று பிரித்து இநகு வேண்டு முருக் கொள்ளாவிடினும் என்று உரைத்தலும் உண்டு. பி - ம்:—[1]உற் றிருந்தாளென்னலுமாம். [2]உறைவதோ. [3]நாம். (365)

## 142.—இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்:

### இராமலக்குமணர் அவளைக் கொல்லுமாறு ஆலோசிக்க, சூர்ப்பணகை கரனை வரவழைப்பேனென்று செல்லுதலைக் கூறும்.

**[1]என்றவண்மே லிளையவன்ரு னிலங்கிலை[2]வேல் கடைக்கணியா விவளை யீண்டு, கொன்றுகளை யேமென்ரு னெடிதலைக்கு மருளென் கொல் கோவே யென்ன, நன்றதுவே யாமன்ருே போகாளே லாக வென நாதன் கூற,ஒன்றுமிவ ரெனக்கிரங்கா ருயிரிழப்பே னிற்கினென வரக்கி யுன்ஞு.**

(இ - ள்) என்றவள்மேல் - என்றுசொன்ன அச்சூர்ப்பணகையின்மேல், (கடுங்கோபங்கொண்டு), இளையவன்தான் - இலக்குமணன், இலங்கு இலைவேல் கடைக்கணியா - விளங்குகிற இலை வடிவமான வேலாயுதத்தைக் கடைக்கண்ணுற் பார்த்து, 'இவளை—, ஈண்டு - இப்பொழுதே, கொன்று களையேம் என்ருல் - கொன்று

ஒழித்திடோமானால், நெடிது அலைக்கும் - மிகவும் வருத்துவாள்; கோவே-தலைவனே! அருள் என்கொல் (உனது) கட்டளை யாதோ?' என்ன - என்று (இராமனை) நோக்கி வினவ,—(அதுகேட்டு), நாதன்-தலைவனான இராமன், 'அதுவே நன்று ஆம்-(நீ சொன்னபடி செய்யும்) அதுவே மிகநல்லதாம்; போகாள் எல் - (இனியும் அப்பாற்) செல்லாளாயின், ஆக - அங்ஙனமேசெய்ய அமையும், என - என்று, கூற - சொல்ல,—(அந்தச்சம்பாஷணையைக் கேட்டு), அரக்கி - சூர்ப்பணகை, 'இவர் எனக்கு ஒன்றுஉம் இரங்கார் - இவர் எனனிடத்திற் சிறிதும் இரக்கங்கொள்ளார்; (ஆதலால்), நிற்கின்-(இன்னுஞ் சிறிதுபொழுது நான்இங்கு) நின்றால், உயிர் இழப்பேன் - (இவர்களால்) உயிரை யிழந்திடுவேன்,' என-என்று, உன்னு-எண்ணி,-(எ- று.)—'போனாள்' என வருங் கவியோடு முடியும். அன்றே - தேற்றம்.

'இவளை இப்போதே கொன்றிடுவேன்: இல்லாவிடின் மிகவும் அலைப்பாள்: கட்டளையருள்க' என்று தன்வேலைப் பார்த்த வண்ணம் இளையவன் கூற, இராமபிரான், 'நீ கூறுவது நன்றே: தானே செல்லாளாயின் கொல்க' என்ன, அதுகேட்ட சூர்ப்பணகை, 'இவர் இரங்கார்: இங்கு நின்றால் உயிரிழக்கநேரும்' என்று நினைத்திட்டாளென்க. அருள் என்கொல் - இவள் திறத்துத் தயை என்? எனினுமாம். [1]என்றனள்மேல் என்ற பாடத்துக்கு, என்றனள் - என்று சொன்னாள்: மேல் - அதன்பின்பு என்று பொருள்கொள்க. ஒன்றும் - ஒருவகையாலும் என்றலுமாம். பி - ம்:—[1]என்றலுமே. [2]வாள். (366)

143. ஏற்றநெடுங் கொடிமூக்கு மிருகாது முலையிரண்டு மிழந்தும் வாழ, ஆற்றுவனே வஞ்சனையா லுமையுள்ள பரிசறிவா னமைந்ததன்றோ, காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக் கொடியானைக் கரனையுங்கள், கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றே னென்றுசலங் கொண்டு போனாள்.

(இ - ள்.) 'ஏற்ற - அழகியதாயமைந்த, நெடு - நீண்ட, கொடி மூக்குஉம் - கொடிபோன்ற மூக்கையும், இருகாதுஉம் - இரண்டுகாதுகளையும், முலை இரண்டுஉம் - இரண்டுமுலைகளையும், இழந்துஉம் - (உங்களால்) இழந்தபின்பும், வாழ ஆற்றுவன்ஏ-(உங்களுடன்கூடி) வாழ்ந்திருக்கப் பொறுப்பேனோ? உமை உள்ள பரிசு அறிவான்-(நான் மீண்டுவந்துகூறியது முழுவதும்) உங்களியல்பை உள்ளபடி யறியும் பொருட்டு, வஞ்சனையால் அமைந்தது அன்றோ - வஞ்சனையாகச் செய்ததன்றோ? காற்றினில்உம் கனலினில்உம் கடியானை கொடியானை - காற்றைக்காட்டிலும் விரைவுள்ளவனும் நெருப்பைக் காட்டிலும் கொடுமையுள்ளவனுமான, கரனை —, உங்கள் கூற்றுவனை - உங்களுக்கு யமனாகும்படி, இப்பொழுதுஏ கொணர்கின்றேன் - இப்பொழுதே அழைத்துக் கொண்டுவருகிறேன்,' என்று - என்று சொல்லி, சலம்கொண்டு - தணியாத முற்றின வைரங்கொண்டு, போனாள் - (சூர்ப்பணகை) சென்றிட்டாள்; (எ - று.)

நான் உங்களியல்பை உள்ளபடி யறிய இங்ஙன்பேசியதேயன்றி, காது முதலியன இழந்த பின்பும் வாழ்ந்திருக்கப் பெறுவேனோ!

உங்களை யொழிக்கக் கூற்றுவனைக் கொண்டுவருவேனென்று தணியாதவேகத்தோடு சூர்ப்பணகை சென்றிட்டாளென்பதாம். 'காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக் கொடியானை' என்பது - காற்றினிலுங் கடியானை,கனலினிலுங்கொடியானை என்று முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப் பொருள்கோள். (367)

தகாத காரியத்தைப்புரிந்தவர்க்குத் தக்கதண்டனை சான்றோராற் செய்யப்படு மென்பதும், அங்ஙனஞ்செய்யுமிடத்து இன்றியமையாதபொழுதன்றி மற்றையபொழுது சானறோர் கொடிய பெண்ணையுங் கொலைசெய்யத்துணியா ரென்பதும், பெண்கொலை தகுதியன்றென்ற காரணத்தால் மாத்திரமேயன்றிக் கரன்முதல் இராவணனீருகக் கொடிய அரக்கரை யெல்லாந் தொலைத்தற்கு ஒருதூதாக அமைதற்பொருட்டும் சூர்ப்பணகையை அவர்கள் உயிரோடு விட்டிட்டன ரென்பதும், விளையாட்டு வினையாய்முடியும் என்பதும் முதலியன இப்படலத்தில் வெளியாம்.

ஸ்ரீவால்மீகி ராமாயணத்தில் - இராமன் மனைவியோடும் தம்பியோடும் பஞ்சவடியில் பர்ணசாலையில் வசிக்கையில் முன்பனிக்காலம் வந்த வளவிலே, சூர்ப்பணகை, வந்து அப்பெருமானழகைக்கண்டு காமமயக்கங்கொண்டு அடுத்துவினவி இன்னானென்று அறிந்து தன்னை இன்னாளென்று தெரிவித்துத் தன்வேட்கையை வெளிப்படையாகக்கூறித் தன்னை மணஞ்செய்துகொள்ளும்படி பலவிதமாய்ச் சொன்னாள். அதற்கு உடன்படாமல் இராமன் விளையாட்டாய் 'மனைவியுடனிருக்கிற என்னை நீ மணஞ்செய்துகொள்ளுதலில் விசேடமில்லை; மனையாளுடன்கூடியிராத என்தம்பியை மணஞ்செய்துகொண்டு சக்களத்தியில்லாமல் வாழ்வாய்' என்று கூற, அங்ஙனமே அவள் இராமனைவிட்டு இலக்குமணனையடைந்து, தன்னை மணஞ்செய்து கொள்ளவேண்டு மென்ன, அதற்கு அவ்விளைய நம்பி 'அடியவனான எனக்கு மனைவியாய் நீயும் அடியவளாவதிற் சிறப்புஎன்ன? தலைவனான இராமனையே . கொழுநனைப் பெறுவாய்' என்ன, அதுகேட்டு அவள் மீண்டும் இராமனையடைந்து தன்னை மணஞ்செய்துகொள்ளுமாறு வற்புறுத்திக்கூறி 'இந்த மானுடமகளை இப்பொழுதே உண்டொழித்து மாற்றவளில்லாமல் உன்னுடன்கூடி வாழ்வேன்' என்று சொல்லிச் சீதையைப் பிடிக்கத் தொடர, அது கண்டு கோபங்கொண்ட இராமன் தம்பியை நோக்கி, 'கொடியவரோடு பரிகாசஞ்செய்தல் தக்கதன்று: இவளைத் தண்டிப்பாய்' என்று நியமிக்க, இளையபெருமாள் வாளையெடுத்துக் காதையும் மூக்கையும் அறுத்திட, அவள் இரத்தம்பெருக்கிக் கொண்டு கதறி யிரைச்சலிட்டபடியே கரனை நோக்கிச் சென்றன ளென்று வரலாறு கூறப்பட்டுள்ளது.

இங்ஙனம் முதனூலோடு சிறிதுசிறிது வேறுபடுவது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணம்பற்றி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள் கொண்டு அமைக்கப்பட்டதென அறிக. இவ்வாறுவருவன பிறவற்றிற்கும்

இங்ஙனமே கொள்க. இங்ஙனம் மாறுபட்ட இடத்து 'ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும், இதிகாசாந்தர புராணாதிகளிலே யாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும்' என ஆன்றோர் அருளிச்செய்து அமைத்திருத்தல் உணரத்தக்கது. இதிகாசாந்தரமாகிய பாரதத்திலும், ஸ்காந்தம் கூர்மம் பாத்மம் முதலிய புராணங்களிலும் இராமசரித்திரம் சிற்சிலவிடத்து வேறுபடக் கூறியிருத்தல் காண்க.

சூர்ப்பணகைப்படலம் முற்றிற்று.

---

# 6 - ஆவது கரன் வதைப்படலம்.

கரனது வதையைப்பற்றிக் கூறும் பாகமென்று பொருள். இது இராமபிரான் கரனைக் கொன்றதை யுணர்த்துதலால், கரனது என்ற ஆறனுருபு செயப்படுபொருளில் வந்த தென்க: கரன் - கொடியவன்; வடசொல். திரிசிரன் முதலியோரின் வதையும் சொல்லப்பட்டிருப்பினும், தலைமைபற்றி, இப்படலத்திற்குக் கரன் வதைப்படல மென்று பெயராயிற்று. பல ஏட்டுப்பிரதிகளில் முதல் 140-பாடல்கள் திரிசிரா வதைப்படலம் எனவும், அவற்றிற்குமேல் 21 - பாடல்கள் தூடணன் வதைப்படலம் எனவும், அவற்றிற்குமேல் படலம் முடியுமளவும் கரன் வதைப்படலம் எனவும் காணப்படுகின்றன.

கரன் - பூர்வீக ராக்ஷச சிரேஷ்டனான சுமாலியின் மகளும், இராவணன் தாயான கேகசியின் தங்கையும், இராவணனது தந்தையான விசிரவமுனிவனையே கொழுநனாக அடைந்தவளும், இங்குக் காட்டிய இருமுறையாலும் இராவணனுக்குச் சிறியதாயுமாகிய கும்பீநசியின் குமாரன்; இராவணனுக்குத் தம்பி முறையில் நிற்பவன்; தண்டகாரணியத்திலே ஜநஸ்தானத்தில் சூர்ப்பணகை வசிப்பதற்கென்று ஏற்படுத்திய இராச்சியத்தில் அவளுக்குப் பாதுகாவலாகவும் இவள் இட்ட கட்டளைப்படி நடப்பதற்காகவும் இராவணனால் நியமித்துவைக்கப்பட்ட பெரிய அரக்கர்சேனைக்கு முதற்றலைவன்.

இராமலக்குமணரிடம் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகை கரன் காலில் விழுந்து புலம்பி முறையிட்டு 'வனத்தில் வந்த இரண்டு மனிதர்களுடன் நின்ற ஒருகட்டழகியை இராவணனுக்காக நான் எடுத்துச்செல்ல முயலுகையில் அவர்கள் என்னை இப்படி பங்கப்படுத்தினார்கள்' என்று சொல்ல, அதுகேட்டு அவன் சினந்து போருக்கு எழுகையில், பதினான்கு இராக்கதவீரர்கள் வந்து 'இத்தொழிலை எங்களுக்குக் கொடுத்திடு' என்று சொல்லி அவனிடம் விடைபெற்றுச் சூர்ப்பணகை வழிகாட்டச்சென்று இராமனுடன் பொருது அழிய, அரக்கி மீண்டும்ஓடி நடந்ததைச் சொல்ல, கரன் மிகப்பெரிய சேனையோடும் அறுபதுலக்ஷம் படை வீரர்களோடும்

சேனைத்தலைவர் பதினால்வரோடும் தூஷணன் திரிசிரா என்னும் முக்கிய சேனாதிபதிகளோடும் புறப்பட்டு, அப்பொழுது சம்பவித்த தீநிமித்தங்களை அகம்பனென்ற அறிவாளன் வந்து சொல்லித் தடுக்கவும் கேளாமல் செருக்கி விரைந்து வந்து போர் தொடங்குகையில், இராமன், பர்ணசாலையினின்று வெளிப்பட்டு, போர்க்கோலங் கொண்ட லக்ஷ்மணனை விலக்கிச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டு, தான் தனியே யெதிர்த்துச் சென்று பெரும்போர் செய்து பலரையும் அழித்து, முடிவில் கரனைக்கொல்லும்பொருட்டு ஓரம்பு தொடுக்கத் தொடங்குகையில், இராமனது வில் முறிந்துவிடவே, இராமன் தன் கையைப் பின்னே நீட்டி வருணன் தந்த விஷ்ணுதனுசைப் பெற்று அதனை வளைத்து நாணேற்றி அம்புதொடுத்து முன்னர்க் கரனது வலக்கையைத் துணித்துப் பின்பு கரனையுந் துணித்து வெற்றி கொள்ள, அது கண்டமாத்திரத்தில் அரக்கர்குலத்தையழிப்பவளான சூர்ப்பணகை இராவணனுக்குச் செய்தி கூறும்பொருட்டு இலங்கையை நோக்கி ஓடினளென்பது, இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

## 1.—சூர்ப்பணகை சென்று கரன்காலில் விழுதல்.

இருந்த மாக்கரன் றுளிணை யின்மிசைச்
சொரிந்த சோரியள் கூந்தல நேம்பெனத்
தெரிந்த மூக்கினள் வாயினள் செக்கர்மேல்
விரிந்த மேக மெனவிழுந் தாளரோ.

(இ - ள்.) சொரிந்த சோரியள் - பெருகுகிற இரத்தத்தை யுடையவளும், கூந்தலள் - (விரிந்த) தலைமயிரையுடையவளும், தூம்பு என தெரிந்த மூக்கினள் - மதகுபோலத் துவாரங்காணப்படுகிற மூக்கை யுடையவளும், வாயினள் - (பெரிய) வாயையுடையவளுமாகிய சூர்ப்பணகை,—மேல் செக்கர் விரிந்த மேகம் என - மேலே செவ்வானம் படரப்பெற்ற மேகம்போல, இருந்த மா கரன் தாள் இணையின் மிசை- (சபையில்) இருந்த பெருமையுள்ள கரனுடைய இரண்டு கால்களின் மேல், விழுந்தாள் - விழுந்திட்டாள்; (எ - று.)

"கரனை யுங்கள் கூற்றுவனை யிப்போதே கொணர்கின்றேன்" என்று முதிர்ந்த வைரங்கொண்டு சென்ற சூர்ப்பணகை, அறுபட்ட உறுப்புக்களினின்று இரத்தம்பெருகத் தலைவிரிகோலத்தோடும் பெருவாய்திறந்து கதறிக்கொண்டு சபையில் வீற்றிருந்த கரனது கால்களில் விழுந்தனளென்பதாம். இவளது உடம்பின் மீது வழிகிற இரத்தப்பெருக்குக்கும் பரவிய செம்பட்டமயிர்க்கும் செவ்வானத்தையும்,கரியஉடம்புககு மேகத்தையும் உவமைகூறினரென்க. 'சொரிந்த' என்பதைக் கூந்தலுக்கும் அடைமொழியாக்கலாம். அரோ-ஈற்றசை. உவமையணி.

இதுமுதல் 29-கவிகள், இப்படலத்தின் 72-ஆம் கவி போன்ற கலிவிருத்தங்கள். (368)

## 2.—சூர்ப்பணகை கதறுதலும், புரளுதலும்.

அழுங்கு நாளிதென் றந்தக ளுணையால்
தழுங்கு பேரி யெனத்தனித் தேங்குவாள்
[1]முழங்கு மேக [2]முடித்தவெந் தீயினாற்
புழுங்கு நாக மெனப்புரண் டாளரோ.

(இ-ள்.) அழுங்கு நாள் இது என்று- (அவ்வரக்கர்கள்) அழிகிற தினம் இது என்று, அந்தகன் ஆணையால் தழங்கு - யமனுடைய கட்டளையால் (அடிக்கப்பட்டு) ஒலிக்கிற, பேரி என - முரசவாத்தியம் போல, தனித்து ஏங்குவாள் - தனியே (பேராரவாரம்படக்) கதறுபவளான சூர்ப்பணகை,—முழங்கு மேகம் முடித்த - ஆரவாரஞ்செய்கிற மேகம் வெளிப்படுத்திய, வெம் தீயினால் - கொடிய நெருப்புமயமான இடியினால், புழுங்கு-வெந்து வருந்துகிற, நாகம் என - பாம்புபோல, புரண்டாள்—; (எ-று.)—அரோ-ஈற்றசை.

சூர்ப்பணகை கதறியழுகிற குரலோசை அங்குள்ள கரன் முதலிய அரக்கரை இராமபிரானுடன் உடனே போர்செய்ய எழும்படி தூண்டி அவரனைவரும் அன்றைக்கே இறந்தொழிதற்குக் காரணமாவது பற்றி, அக்கதறல் இராக்கதநாசசூசகமாக யமன் அறைவித்த பறை போலு மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இனி அழுங்குநாள்- (உலகத்துஉயிர்கள் அனைத்தும்) மடியும் ஊழிக்கால மென்பாரும் உளர். பின்னிரண்டடி - உவமையணி. இடிக்குஅழிதல், நாகத்தின் இயல்பு. முடித்தல்-பிராணிகட்கு அபாயமுண்டாம்படி முதிரவெளியிடுதல். ஆணை-ஆஜ்ஞா: வடசொல். பி-ம்:—[1]விழுங்கு. [2]இடித்த. (369)

## 3.—கரன் சூர்ப்பணகையை 'இங்ஙனஞ்செய்தவர் யார்?' என்றல்.

வாக்கிற் கொப்பப் புகைமுந்து வாயினான்
நோக்கிக் [1]கூசலர் நுன்னையித் தன்மையை
ஆக்கிப் போனவ ரார்கொலென் றானவன்
மூக்கிற் சோரி [2]முழீஇக்கொண்ட கண்ணினாள்.

இதுமுதல் ஐந்து கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகண்டு), அவன் - கரன், வாக்கிற்கு ஒப்ப புகை முந்து வாயினான்-(பின்னே வெளிப்படுஞ்) சொல்லின் கடுமைக்குத் தகுதியாகப் புகை முந்திவெளிப்படுகிற வாயையுடையவனாய், நோக்கி- (அந்தச்சூர்ப்பணகையைப்) பார்த்து, 'கூசலர் - கூச்சமில்லாதவர்களாய், நுன்னை இ தன்மையை ஆக்கி - உன்னை இப்படிப்பட்ட தன்மையையுடையவளாகச் செய்து, போனவர்-சென்றவர், ஆர்கொல் - யாரோ?' என்றான்-என்று வினவினான்: (அதுகேட்டு), மூக்கின் சோரி முழீஇக்கொண்ட கண்ணினாள் - மூக்கினின்று பெருகுகிற இரத்தத்தால் முழுகடிக்கப்பட்ட கண்களையுடையவளான அச் சூர்ப்பணகை,—(எ-று.)—'சொல்லினாள்' என மேல் 7-ஆங் கவியோடு முடியும்.

உள்ளிருந்து பற்றி மேலெழுகிற நெருப்புக்கு அறிகுறியாகப் புகை முந்தி மேற்கிளம்புதல்போலத் தான் சொல்லுங் கடுஞ்சொல்லின் அழற்சிக்கு ஏற்பக் கோபாக்கினியாலுண்டான புகை வெளிப்படும் வாயுடையா னென்பது, முதலடியின் கருத்து. நோக்கி என்றுனென இயையும். நோக்கிக் கூசலரென்று இயைத்து, உன்னை நோக்கியும் அஞ்சாமல் என்று உரைப்பாரும் உளர். இன்னனென்று அறியாமையின், 'போனவர்' என்று பன்மையாற் கூறினன்; துணியலாகாவிடத்துப் பன்மையாற் கூறுதல், மரபு. முழீஇ = முழுகி. நான்காம் அடியினால், மூக்குமுழுவதும் அறுபட்டமை விளங்கும்; அன்றியும், புரானுகையில் மூக்கின்சோரியிற் கண் முழுகிற்று. பி-ம்:— [1]கூசிடாது. [2]மொழிக். (370)

4.—இதுமுதல் நான்கு கவிகள் - சூர்ப்பணகை கூறும் விடை.

இருவர் மானிடர் தாபத ரேந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்
தரும நீரர் தயரதன் காதலர்
செருவி னேரு நிருதரைத் தேடுவார்.

(இ - ள்.) இருவர் மானிடர்-இரண்டுமனிதர்கள், தாபதர்-முனிவேடங்கொண்டவர்கள்: ஏந்திய வரி வில் வாள் கையர் - தரித்த கட்டமைந்த வில்லையும் வாளையுமுடைய கையையுடையவர்கள்: மன்மதன் மேனியர்-மன்மதன்போலும் அழகியவடிவமுடையவர்கள்: தருமம் நீரர்-தருமகுணமுடையவர்கள்: தயரதன் காதலர் - தசரத சக்கரவர்த்தியினுடைய குமாரர்கள்: செருவில் நேரும் நிருதரை தேடுவார்-போரில் எதிர்ப்படும் அரக்கரைத் தேடித்திரிபவர்கள்; ()

மரவுரியுடுத்தமையும் சடைமுடிதரித்தமையும்பற்றி, 'தாபதர்' என்றாள். 'மன்மதன்மேனியர்', 'தருமநீரர்' என்றதனால், வைரங்கொண்டு கூறுங்காலத்தும் பாராட்டும்படி விஞ்சியிருந்த இராம லக்ஷ்மணர்களது பேரழகும் நற்குணநிறைவும் விளங்கும். 'நுன்னை யித்தன்மையையாக்கிப்போனவ ரார்கொல்' என்ற கரன்வினாவிற்கு விடைகூறுமிடத்து 'மன்மதன்மேனியர்,' 'தருமநீரர்' என்னவேண்டுவதில்லை யாயினும், சூர்ப்பணகை அவர்களிடத்துக் கொண்ட வேட்கையின் மிகுதியால் மயங்கி, தன்னைப்பங்கப் படுத்தினபின்பும் அவர்கள்பக்கல் மனத்தில் வைராக்கியங் கொள்ளாமல், உடன்பிறந்தவன் முன்னிலையிற் சொல்வதுந் தவிர்வதும் உணராது, தன் மனத்தினுட் கிடந்த கருத்தைப் புலப்படுத்தி இங்ஙனங்கூறினளென்க. இருவரிடத்தும் இவள் ஒரு நிகராகக் காதல்கொண்டதனால், இருவரைப்பற்றியும் ஒருநிகராக எடுத்துக் கூறுகிறாள். 'தாபதர்' என்றதனால், அவர்களுக்குத் தவவேடமும் அழகியதாயிருந்த தென்றாளாம். 'வரிவில்வாட்கையர்' என்றதனால், அவர்களது போர்த்திறத்தையும் பராக்கிரமத்தையுங் குறித்தாள். 'தயரதன்காதலர்' என்றதனால், அவர்களது இளமையைவெளியிட்டவாறு, 'தாபதர் வரிவில்வாட்கையர்' என்ற சொற்சேர்க்கையால், நம்மால் எளிதிலழிபடும் வலியிலா நிலைமை

யுடைய தவத்தினரும் இங்ஙனஞ் செழிக்கலாயிற்றே யென்றவாறும். [இவ்விடத்து ஸ்ரீவால்மீகிராமாயணத்திலுள்ள "தருணௌரூபஸம்பந்நௌ - ஸுகுமாரௌ மஹாபலௌ | புண்டரீக விசாலாக்ஷௌ - சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ || பலமூலாசநௌதாந்தௌ - தாபஸௌ தர்மசாரிணௌ | புத்ரௌதசரதஸ்யாஸ்தாம் - ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ ||" என இங்கனுள்ள சுலோகங்களும், அவற்றின்வியாக்கியானங்களும் மிகஇனியனவாம்.] இராமலட்சுமணர்கள் செருவில் நேரும் நிருதரைத் தேடுவதைக் கீழ்ப்படலத்திற் கூறப்பட்ட அவரது சொல்லாலுஞ் செயலாலும் அறிந்தானென்க. மன்மதன்மேனியர் - தொகையுவமையணி. (371)

5. ஒன்று நோக்கல ருன்வலி யோங்கறன்
நின்று நோக்கி நிறுத்து [1]நினைப்பினர்
வென்றி வேற்கை நிருதரை வேரறக்
கொன்று நீக்குது மென்றுணர் கொள்கையார்.

(இ - ள்.) உன் வலி ஒன்றும் நோக்கலர்-உனது வலிமையைச் சிறிதும் பொருள்செய்கின்றிலர்: ஓங்கு அறன் நின்று நோக்கி நிறுத்தும் நினைப்பினர் - சிறந்த தருமவழியிலே (தாங்கள்) நின்று ஆராய்ந்து (அத்தருமத்தை உலகமெங்கும்) நிலைபெறச்செய்யுங் கருத்துடையவர்: 'வென்றிவேல் கை நிருதரை - வெற்றியைத்தரும் வேலையேந்திய கையையுடைய அரக்கர்களை, வேர் அற கொன்று நீக்குதும் - அடியோடுதொலையக் கொன்றொழிப்போம்,' என்று உணர்-என்று நிச்சயித்த, கொள்கையார்-கோட்பாடுடையவர்கள்; (எ - று.)

அவர் உன்னை ஒருபொருட்டாக மதிக்கின்றிலர்: அறமாகிய பயிரைச் செழிப்பிக்கும்பொருட்டு அதற்கு விரோதிகளான அரக்கராகிய களைகளை வேரோடு அறக் களையுந் துணிவின ரென்க. வேரற - வமிசநாசமாக என்றபடி. உன் - (எனக்கு உதவியாகவுள்ள) உனது என்றவாறு. பி - ம்:—[1]நினைப்பினால். (372)

6. மண்ணி னோக்கரு வானினின் மற்றினில்
எண்ணி னோக்குறின் [1]யாவரு நேர்கிலாப்
பெண்ணி னோக்குடை யாளொரு பேதையென்
கண்ணி னோக்கி யுரைப்பருங் காட்சியாள்.

(இ - ள்.) ஒரு பேதை - (அவர்களுடன் உள்ள) ஓர் இளமகள்,— மண்ணில் - பூலோகத்திலும், நோக்க அரு வானினில் - எளிதிற் காணவொண்ணாத மேலுலகத்திலும், மற்றினில் - மற்றவுலகமாகிய பாதாளத்திலும், எண்ணின் நோக்குறின் - (இவளுக்குஒப்பாவார் யாரென்று) ஆலோசனையாற் பார்க்குமிடத்து, யாவரும் நேர்கிலா-யாரும் உவமையாகமாட்டாத, பெண்ணின் நோக்கு உடையாள் - பெண்களுக்குஉரிய அழகு முழுவதுமுடையவள்: என் கண்ணின் நோக்கி உரைப்பு அரு காட்சியாள் - எனதுகண்களாற் பார்த்து (வாயால்) வருணித்துச்சொல்லமுடியாத தோற்றமுடையவள்;

பிராட்டியின் காணக்கண்கூசும்படியான திவ்வியகாந்தியின் மிகுதியும், எவ்வளவுகண்டாலும் முற்றுங் கண்டுதீர்க்கமுடியாத கட்டழ

இன்மிகுதியும், அவ்விரண்டும் பேச்சுக்குநிலமல்லாதிருக்குந் தன்மையும், ஈற்றடியில் வெளிப்படும். பெண்பாலான சூர்ப்பணகையே பெண்பாலான சீதையின் அழகில் ஈடுபட்டு இங்ஙனங் கூறியதனால், "பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்" என்றாற்போலக் கண்ட மகளிருங் காதல்கொள்ளுங் கட்டழகுடையவள் பிராட்டியென்பது தெற்றெனப் விளங்கும். அன்றியும், தன்னாற்சக்களத்தியாகக்கருதி மாறுபாடுகொள்ளப்பட்ட ஒருமகளைக்குறித்துக் கொடிய அரக்கி இங்ஙனங் கூறுதற்கு ஏற்ற காரணம், அவளது அழகின் மிகுதியேயாம். பி - ம்:—[1] யாவர்க்குநோக்கலாப். (373)

7. கண்டு [1] நோக்கருங் காரிகை யாடனைக்
கொண்டுபோவ லிலங்கையர் கோக்கெனா
விண்டு மேல்விழுந் தேனை வெகுண்டவர்
துண்ட மாக்கினர் மூக்கெனச் சொல்லினாள்.

(இ - ள்.) கண்டு - (இத்தன்மையளாகிய அழகியபெண்ணைப்) பார்த்து, 'நோக்கு அரு காரிகையாள்தனை - காணவொண்ணாத அழகுடைய இவளை, இலங்கையர் கோக்கு - இலங்காபுரியிலுள்ளார்க்கு அரசனாகிய இராவணனுக்காக, கொண்டு போவல் - எடுத்துக்கொண்டு போவேன்,' எனா விண்டு - என்றுசொல்லி, மேல்விழுந்தேனை - அவள் மேற் பாய்ந்த என்னை, அவர் - அம்மனிதர்கள், வெகுண்டு - சினந்து, மூக்கு துண்டம் ஆக்கினர் - மூக்கறுத்தார்கள், என - என்று, சொல்லினாள் - சொன்னாள்; (எ - று.)

இராவணன்பொருட்டு அந்தக்கட்டழகியைக் கொண்டுபோவேனென்று அவள்மேல் விழுந்தபோது அவர் வெகுண்டு என் மூக்கைத் துண்டமாக்கின ரென்றனளென்க. மூக்கு - மற்றையறுபட்ட உறுப்புக்களுக்கும் உபலக்ஷணம். மேல்விழுதல் - மிக்க பரபரப்போடு முயலுதல். எனா - என்று எண்ணி, விண்டு - மனம் மாறுபட்டு எனினுமாம். பி - ம்:—[1] நோக்கியக். (374)

## 8.—அதுகேட்டுக் கரன்வெகுண்டு சூர்ப்பணகையை மூக்கைக்காட்டெனல்.

கேட்ட னன்னுரை [1] கண்டிலன் கேடினர்
தோட்ட நுங்கிற் றொளை [2] யுறு மூக்கினைக்
காட்டெ னாவெழுந் தானெதிர் கண்டவர்
நாட்டந் தீய வுலகை நடுக்குவான்.

(இ - ள்.) எதிர் கண்டவர் நாட்டம் தீய - (தன்னை எதிரிற்) பார்த்தவர்களது கண்கள் கருகிப்போய்விடும்படி, உலகை நடுக்குவான் - உலகத்திலுள்ள உயிர்களையெல்லாம் (அச்சத்தால்) நடுங்கச் செய்பவனாகிய கரன்,—கண்டிலன் - (மூக்கறுபட்டதை முதலில்) உற்றுநோக்கிற்றிலனாதலால், உரை கேட்டனன் - அவ்வார்த்தையைக் கேட்டவளவில், 'கேடினர் - கெடுங்காலமுடைய அம்மனிதர்களால், தோட்ட நுங்கின் தொளை உறும் - தோண்டப்பட்ட பனை நுங்குபோலத் துளைபொருந்திய, மூக்கினை - (உனது) மூக்கை,

காட்டு - காண்பி,' என - என்றுசொல்லி, எழுந்தான் - எழுந்திருந்தான்; (எ - று.)

கீழ் மூன்றாங்கவியில் "கூசலர் நுன்னை யித்தன்மையை யாக்கிப்போனவ ரார்கொல்" என்ற பொழுது, இவளுடம்பின்மேல் முழுவதும் பெருகிவழிகிற இரத்தவெள்ளத்தையும் தலைவிரிகோலத்தையும் விழுந்து புரண்டு கதறியழுதலையும் மாத்திரமே பொதுப்படக் கண்டு 'உன்னை இங்ஙனம் பரிபவப்படுத்தியவர் ஆர்?' என்று வினவினனென்றும், பின்பு சூர்ப்பணகை வார்த்தையைக் கேட்டதனால் விவரமறிந்து 'இரத்தப்பெருக்கில் மறைந்த அறுபட்ட மூக்கைக் காட்டு' என்று இங்குக்கூறினனென்றும் உணர்க: எனவே, மாறுகொளக்கூற லென்னுங் குற்றத்துக்கு இடமின்றாம். இனி, தொளையுறுமூக்கினை நுங்கின் தோட்ட கேடினர்க் காட்டு என்று கொண்டுகூட்டி, துவாரம் பொருந்திய மூக்கை நுங்கைப் போலத் தோண்டிய நாசகாலமுடையாரைக் காட்டு என்றனனெனக் கொள்ளினுமாம். கண்டிலன் என்பதைத்தன்மை யொருமை முற்றாகக் கொண்டு, கண்டேனில்லை யெனக் கரன் வார்த்தையாக்கினுமாம். இங்ஙனம் தன்னைச்சேர்ந்தவர்களுக்குத் தீங்கியற்றியவர் தன்னால் உடனே யழிதல் தவறாதெனத் துணிந்த செருக்குடையானாதலால் 'கேடினர்' என்றான். தோட்டஎன்றதில், தொள் - பகுதி. பி - ம்:— [1]கண்டனன் றீண்டியத், கண்டனன் றீண்டிய. [2]அறு. (375)

## 9.—கரனுடைய கோபாவேசமும், வீரவாதமும்.

> எழுந்து நின்றுல கேழு மெரிந்துகப்
> பொழிந்த கோபக் [1]கனலுகப் பொங்குவான்
> கழிந்து போயினர் மானிட ரென்னுங்கால்
> அழிந்த தோவிவ் வரும்பழி யென்னுமால்.

(இ - ள்.) எழுந்து நின்று-(இவ்வாறுசொல்லி) எழுந்து நின்று, உலகு ஏழ்உம் எரிந்து உக-ஏழுவகையுலகங்களும் வெந்து பொடியாச் சிதறும்படி, பொழிந்த கோபம் கனல் உக-(தனதுகண்கள்) சொரிந்த கோபாக்கினி வெளிச்சிந்த, பொங்குவான் - மனங்கொதிப்பவனான கரன்,—'மானிடர் கழிந்து போயினர் என்னும் கால் - (இத்தீங்கு செய்த) மனிதர்கள் (என்னால்) இறந்து போனார்கள் என்னும் மாத்திரத்தில், இ அரு பழி அழிந்ததுஓ - இந்த அரிய பழிப்பு ஒழிந்ததாமோ? [ஆகாது],' என்னும்-என்று சொல்வான்; (எ-று.)

தான் இப்பொழுது இராமலட்சுமணர்களை எதிர்த்து அழித்தல் நிச்சயமென்றும், அங்ஙனம் அவர்களை அழித்தல் மாத்திரமும் இந்தப் பெரும்பழி யொழிதற்குப் போதுமான பரிகார மாகாதென்றுங் கூறினனென்க. உலகேழ் - மேலேழும், கீழேழும். எழுந்து நின்று பொங்குவான் என இயையும். ஆல் - ஈற்றசை. பி - ம்:— [1]கனல்னிற். (376)

## 10.—அவ்வளவிற் பதினான்கு வீரர்கள் போருக்கு எழுதல்.

வருக தேரெனு மாத்திரை மாடுளோர்
இருகை மால்வரை யேழினொ டேழனார்
ஒருகை யாலுல கேந்து முரத்தினார்
தருக விப்பணி யெம்வயிற் றானென்றார்.

இரண்டுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) (இவ்வாறு கூறிய கரன்), தேர் வருக எனும் மாத்திரை- (எனது) தேர் வரக்கடவதென்று கட்டளையிடுமளவில்,—மாடு உளோர் - அவனருகிலிருப்பவர்களும், ஒருகையால் உலகு ஏந்தும் உரத்தினார்-ஒருகையால் உலகமுழுவதையும் எடுத்துத் தாங்கும் வலிமையுள்ளவர்களும், இரு கை மால் வரை ஏழினொடு ஏழ் அனார் - இரண்டு கைகளையுடைய பெரிய ஏழினோடு கூடிய ஏழு [பதினான்கு] மலைகளை யொத்தவருமான (பதினான்கு) சேனாவீரர்கள், (கரனை நோக்கி), இ பணி எம்வயின் தான் தருக - 'இந்தப் போர்த்தொழிலை எம்மிடத்தே நியமித்தருள்வாயாக,' என்றார் - என்று வேண்டினார் கள்; (எ-று.)

இரண்டுகைகளையுடைய பெருவலிபடைத்த பதினால்வரான இவர்கள்வடிவம் உருவத்தாலும் வலிமையாலும் பெரிய மலைபோலுதலின், உபமானமாகிய மலைக்கு 'இருகை' என்ற அடைமொழி கொடுத்தார்; இல்பொருளுவமை. தான்-பிரிநிலை. (377)

## 11.—அவ்வரக்கர்களின் வருணனை.

சூலம் வாண்மழுத் தோமரஞ் சக்கரம்
கால பாசங் கதைபொருங் கையினார்
வேலை ஞாலம் வெருவுறு [1]மார்ப்பினார்
ஆல காலந் திரண்டன்ன வாக்கையார்.

(இ - ள்.) (அவ்வரக்கர்கள்), சூலம் வாள் மழு தோமரம் சக்கரம் காலபாசம் கதை பொரும் கையினார்-சூலம் முதலிய ஆயுதங்களாற் போர்செய்யுங் கைகளையுடையவர்கள்: வேலை ஞாலம் வெருவுறும் ஆர்ப்பினார்-கடல்சூழ்ந்த உலகத்தின் உயிர்கள் அச்சமடையத்தக்க ஆரவாரமுடையவர்கள்: ஆலகாலம் திரண்டு அன்ன ஆக்கையார் - ஆலாகலவிஷம் (சில வடிவங்களாகத்) திரண்டாற்போன்ற உடம்பை யுடையவர்கள்; (எ - று.)

கையினார், ஆர்ப்பினார், ஆக்கையார் என்ற மூன்று விசேஷணங்களையும் முந்தியகவியில் வந்த 'ஏழினொடேழனார்' என்ற அடைகொளியோடு [விசேடியத்தோடு] சேர்த்துக் குளகமாகப் பொருள் காண்க. சூலம் - முத்தலைவேல். மழு - எரியிரும்புப்படை; கோடாலியுமாம். தோமரம் - இருப்புலக்கை; எரியீட்டியும், பேரீட்டியுமாம். காலபாசம் - யமனதுகையிலுள்ளதும் அவன் பிராணிகளை வலியக்கட்டியிழுக்குங் கயிற்றின் வடிவமானதுமாகிய பாசாயுதமென்க. ஹாலாஹலம்என்ற வடசொல், ஆலகாலமெனத் திரிந்தது;

இது, கருநிறத்தோடுகொடுஞ்செயலுக்கு உவமையாம். ஞாலம் - ஆகுபெயர். பி - ம்:—[1]மாண்பினர். (378)

## 12.—அவ்வரக்கர்கள் கரனை விலக்குதல்.

வெம்பு [1]கோபக் கனலர் விலக்கினர்
நம்பி [2]யெம்மடி மைத்தொழி னன்றெனு
உம்பர் [3]மேலின் றுருத்தனை போதியோ
இம்பர் மேலினி யா[4]முளெ மோவென்றார்.

(இ - ள்.) வெம்பு கோபம் கனலர் - கொதிக்கிற கோபாக்கினியையுடைய அவ்வரக்கர்கள், (கரனை நோக்கி), 'நம்பி - சிறந்த ஆண்மகனே! எம் அடிமை தொழில் நன்று - எங்களது அடிமைத்தொழில் நன்றாயிருந்தது', எனு - என்றுசொல்லி, 'இன்று - இப்பொழுது, உம்பர்மேல் - தேவர்கள்மேல், உருத்தனை போதிஓ - கோபித்துச்செல்கின்றாயோ? (அன்றே; இப்படி நீ மனிதர்கள் மேற்போருக்குச் சென்றால்), இனி—, இம்பர்மேல் - இவ்வுலகத்தில், யாம் உளெம் ஓ - நாங்கள் சீவித்துள்ளேமாவோமோ?' என்றார் விலக்கினர் - என்றும் சொல்லி(க் கரனைப் போர்க்குச்செல்லாதபடி) தடுத்தார்கள்; (எ-று.)

நம்பி - ஆண்மைவிளி. 'எம் அடிமைத்தொழில் நன்று' என்றது-பிறகுறிப்பு: நாங்கள் உனக்கு அடியவர்களாய் நீ இட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு செய்தற்குப் பணியாளராகக் காத்திருக்கையில், நீ எங்களுக்கு யாதொன்றுங் கட்டளையிடாது நேரிற் போருக்கு எழுந்துவிட்டால் எங்கள் அடிமை யாதுபயன் படுவதாம்? என்றபடி. நீ தேவர்கள்மேற் போருக்குச் செல்வையாயின், அது எங்களாலாகாதென்று நீ எண்ணிச் சென்றதாக நினைக்கவுங்கூடும்: அன்றியும், அது உனதுபெருமைக்குந் தகுதியாம்: அங்ஙனமன்றி, எளியமனிதர்மேற் செல்லக்கண்டயாம் இனிப்பிழைத்திருப்பதும் பயனின்றுமென்றன ரென்க. 'இம்பர்மேலினியாமுளெமோ' என்ற வார்த்தை தீநிமித்தமாகப் பொருள்படுதலுங் காண்க. பி - ம்:—[1]வேலைக்கனலன்ன வெம்மையார். [2]நம். [3]மேலும். [4]உளமென்கின்றார். (379)

## 13.—கரன் இணங்கி அவ்வரக்கருக்குக் கட்டளையிடுதல்.

நன்று [1]சொல்லினிர் நானிச் சிறார்கண்மேல்
சென்று போர்செயிற் றேவர் சிரிப்பரால்
கொன்று சோரி குடித்தவர் கொள்கையை
வென்று மீளுதிர் மெல்லிய லோடென்றான்.

(இ - ள்.) 'நன்று சொல்லினிர் - நன்றாகச்சொன்னீர்கள்; நான் இ சிறார்கள்மேல் சென்று போர் செயில் - நான் இச்சிறு மனிதர்கள் மேல் எதிர்த்துச்சென்று போர்செய்தால், தேவர் சிரிப்பர் - (அது கண்டு) தேவர்கள் இகழ்ந்துசிரிப்பார்களே: கொன்று - (நீங்கள் சென்று அவர்களைக்) கொன்று, சோரி குடித்து - அவர்களிரத்தத்தைப் பருகி, அவர் கொள்கையை வென்று - அவர்கள் கோட்பாட்டைச் சயித்து, மெல்லியலோடு மீளுதிர் - (அவர்களிடத்துஉள்ள)

மென்மையான தன்மையுள்ள பெண்ணினுடனே திரும்பிவாருங்கள்,' என்றான்-என்று (கரன் அப்பதினன்கு இராக்கதவீரர்க்குக்) கட்டளை யிட்டான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. ஆதலால் என்பதன் விகார மாம்.

நன்றுசொல்லினிர் - தக்கதையே சொன்னீர்களென்றபடி. நில வுலகத்தில் நிகழும்போரை மேலே நின்று காணுதல் தேவர்களியல் பாதலால், அவர்களையெடுத்துக்கூறினன்; அன்றியும், நமக்குப் பழம் பகைவராய்த் தோற்றொடுங்கிய தேவர்கள் எனது பெருமைக்குக் குறைவாக நான் மானிடச்சிறுவர்மேற் சென்று பொருவதை நோக் கின் பரிகசிப்பரென்றானுமாம். அவர்கொள்கை - கீழ் ஐந்தாங்கவியிற் கூறிய "நிருதரை வேரறக் கொன்று நீக்குது மென்று உணர் கொள்கை." பி - ம்:—[1] சொல்லுதிர்நாணில். (380)

## 14.—அவர்கள் இராமலக்குமணருள்ளவிடத்தை யடைதல்.

என்ன லோடும் விரும்பி யிறைஞ்சினர்
சொன்ன நாணிலி யந்தகன் றூதென
[1]அன்னள் பிற்படர் வாரென வாயினர்
மன்னன் காதலர் வைகிட நண்ணினர்.

(இ - ள்.) என்னலோடும் - என்று (கரன்) கட்டளையிட்டவள விலே, (அப்பதினன்குபேரும்), விரும்பி இறைஞ்சினர் - மகிழ்ச்சி கொண்டு (அவனை) வணங்கி, சொன்ன நாண் இலி அந்தகன் தூது என அன்னள் பின் படர்வார் என ஆயினர் - (கீழ்ச்) செய்தி கூறின வெட்கங்கெட்டவளான சூர்ப்பணகை யமன் அனுப்பிய தூதுபோல முன்செல்ல அவள்பின்னே செல்பவ ரென்னவாகி, மன்னன் காதலர் வைகு இடம் நண்ணினர் - தசரத சக்கரவர்த்திகுமாரர் தங்கியுள்ள இடத்தைச்சேர்ந்தார்கள்; (எ - று.)

சூர்ப்பணகை வழிகாட்டிக்கொண்டு முன்னேசெல்ல அரக்கர் கள் அவள் பின்னே தொடர்ந்துசெல்லுதற்கு, தம்மைப் பரலோகத் திற்கு அழைத்துப் போதற்பொருட்டு யமனனுப்பிய தூதன் முன் செல்லப் பின்னே அவன் காட்டும்வழியிலே விடாது தொடர்ந்து செல்லுதலை உவமையாக்கிக் கூறினர். இவள் அவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டுபோதல் அவ்வரக்கர்க்கு நாசகரமாய் முடிவது விளங்க இங்ஙனங் கூறப்பட்ட தென்க; தற்குறிப்பேற்றவணி. 'சொன்னநாணிலி' என்பதைச் சொன்னம் நாண் இலி எனப் பிரித்து, சொர்ணமயமான மங்கலநாணில்லாத விதவையான சூர்ப் பணகையென்று உரைப்பாருமுளர்; அப்பொழுது, சொன்னம் - ஸ்வர்ணமென்ற வடசொல்திரிந்தது. பி-ம்:—[1] அன்னதர்ப்படர்வார்.

## 15.—சூர்ப்பணகை இராமனைச் சுட்டிக்காட்டல்.

துமிலப் போர் [1]வல் லரக்கர்க்குச் [2]சுட்டினள்
அமலத் தொல்பெய ராயிரத் தாழியான்
நிமலப் பாத நினைவி னிருந்தவக்
கமலக் கண்ணனைக் கையினிற் காட்டினள்.

(இ - ள்.) அமலம்-குற்றமற்ற, தொல் பெயர் ஆயிரத்து-பழமை யான ஆயிரந்திருநாமங்களையுடைய, ஆழியான் - சக்கர பாணியான திருமாலினது, நிமலம் பாதம்-குற்றமற்ற திருவடிகளின், நினைவின் - தியானத்திலே, இருந்த—, அ கமலம் கண்ணனை-செந்தாமரை மலர் போலுந் திருக்கண்களையுடையனான அவ்விராமபிரானை, துமிலம் போர் வல் அரக்கர்க்கு - பேராரவாரத்தோடு போர்செய்யவல்ல அவ் விராக்கதர்க்கு, (சூர்ப்பணகை), கையினில் சுட்டினாள் காட்டினாள் - (தன்) கைவிரலாற் சுட்டிக் காண்பித்தாள்; (எ-று.)

திருமாலினது திருவவதார விசேஷமான ஸ்ரீராமன் தான் மானிடனாகப் பிறந்ததற்கு ஏற்பத் தனதுகுலதெய்வமான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தியானஞ்செய்து கொண்டிருந்தனனென்க. இங்கே 'ஆழியான்' என்றது - ஸ்ரீரங்கநாதனை. ஆதியில் சத்திய லோகத்திற் பிரமதேவனது திருவாராதனத்திருவுருவமாயிருந்த ஸ்ரீரங்கநாதனைச் சூரியகுலத்து வைவச்சுவதமனுவின் குமாரனான இட்சுவாகுமகாராசன் பிரமனைக்குறித்துப் பலகாலஞ்செய்த தவப் பேற்றால் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிகொண்டுவந்து பிரதிஷ்டைசெய்து ஆராதனம்பண்ணிவந்தா னென்றும், அந்தத் திருவரங்கநாயகனே இட்சுவாகுமுதல் இராமபிரானீறாகவுள்ள இரவிகுலமன்னவரெல்லார்க்குங் குலதெய்வமாக விளங்கினா னென்றும், அவ்வெம்பெருமானை இராமன் பின்பு விபீஷணனிடங் கொடுக்க அவ்வரக்கர்தலைவனாற்கொணரப்பட்ட அவ்வெம்பிரான் உபயகாவேரிமத்தியில்வந்து சேர்ந்தருளினா னென்றும் உணர்க. கீழ் அயோத்தியாகாண்டத்தில் கௌசல்யை இராமனதுநன்மைகளை உத்தேசித்துக் குலதெய்வத்தை வணங்கச் சென்றமை கூறிய பொழுது, "மின்னு நேமியன் மேவிட மேவினாள்" என்றதற்கு ஏற்ப, இங்கு 'ஆழியான்' என்றார். "கோதறுதவத்துத் தங்குலத்துளோர் தொழும், ஆதியஞ்சோதியை யடிவணங்கினான்" என்று பால காண்டத்திலும், "தன்திருவுள்ளத்துள்ளே தன்னையே நினையுமற்றக், குன்றிவர்தோளினான்," 'ஐயனு மச்சொறகேளா வாயிர மௌலி யானைக், கைதொழுது" என்று அயோத்தியாகாண்டத்திலும் இரா மன் அரங்கநாதனைத் தியானித்து வணங்கினமை கூறப்பட்டவாறு காண்க. பேர்ஆயிரம் - ஸஹஸ்ரநாமம். 'அமலப்பெயர்' என்றது, தன்னை உச்சரித்தாரது கருமங்களை யொழிக்குந் திருநாம மென்ற வாறு. துமிலம் - போர்க்குழப்பமுமாம்; துமுல மென்னும் வடசொல் லின் திரிபு. பி -ம்:—[1]வில். [2]சுட்டியே. (382)

## 16.—அரக்கர்கள் வீரவாதத்தோடு இராமனைச் சூழ்தல்.

எற்று வாம்பிடித் [1]தேந்துது மென்குநர்
பற்று வாநெடும் பாசத்தி னென்குநர்
[2]முற்று வாமிறை சொன்முறை யாலெனாச்
சுற்றி னார்வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார்.

(இ - ள்.) 'பிடித்து எற்றுவாம் - (இம்மனிதர்களைப்) பிடித்து மேலேஎறிவோம்: (பிடித்து)ஏந்துதும்-(இவர்களைக்)கையிலே பிடித்து ஏந்திக்கொள்வோம்,' என்குநர் - என்று சொல்பவர்களும்,— 'நெடு

பாசத்தின் - நீண்ட பாசாயுதத்தால், பற்றுவாம் - பிடித்துக் கட்டுவோம்,' என்குநர் - என்றுசொல்பவர்களுமாகி,— (அவ்வரக்கர்கள்), இறை சொல் முறையால் முற்றுவாம் என - (நமது) தலைவனான கரன் சொன்ன முறைப்படி செய்துமுடிப்போமென்றுஞ் சொல்லி, வரை சூழ்ந்து அன்ன தோற்றத்தார் - மலைகள் சூழ்ந்து நின்றாற் போன்ற தோற்றமுடையவர்களாய், சுற்றினர்-(இராமலக்குமணருள்ள விடத்தைச்) சூழ்ந்துகொண்டார்கள்; (எ-று.)

பிடித்து-மத்திமதீபம். இறைசொல்முறை-கீழ்ப் பதின்மூன்றாங் கவியில் "கொன்றுசோரி குடித்தவர்கொள்கையை, வென்று மீளுதிர் மெல்லியலோடு" என்றது. நான்காமடி - உவமையணி. பி - ம்:— [1]என்குநரேந்துதும். [2]முற்றுநாம். (383)

## 17. இராமன் போருக்கு எழுதல்.

ஏத்து வாய்மை யிராம னிளவலைக்
காத்தி தையலை யென்றுதன் கற்பகம்
பூத்த தன்ன பொருவி றடக்கையால்
[1]ஆத்த நாணி னருவரை வாங்கினன்.

(இ-ள்.) ஏத்து வாய்மை இராமன்-(யாவராலுங்) கொண்டாடப்படுகிற சத்தியத்தையுடைய இராமபிரான், இளவலை - தம்பியான இலக்குமணனை (நோக்கி), தையலை காத்தி என்று-(தன்)மனைவியான சீதையைப் பாதுகாத்துக்கொண்டிரு என்று கட்டளையிட்டு,— பூத்தது கற்பகம் அன்ன-பொலிவுபெற்ற கற்பகவிருட்சம் போன்ற, பொருவு இல்-வேறுஒப்பில்லாத, தட - பெரிய, தன் கையால்-தன்னுடைய கையினால், ஆத்த நாணின் - கட்டப்பட்ட நாணியையுடைய, அரு வரை - அழித்தற்கரிய மலைபோன்ற வில்லை, வாங்கினன் - எடுத்துக்கொண்டான்; (எ - று.)

தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் இராக்கதருடைய உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் தன்னைவந்து சரணமடைந்த பொழுது அவர்களுக்குத் தான் அவ்வரக்கர்களையெல்லாம் வேரறுப்பதாக வாக்குத்தத்தஞ் செய்திருந்ததைப் பழுதுபடாதபடி நிறைவேற்றத்தொடங்கின னாதலால், 'ஏத்துவாய்மை யிராமன்' என்றார். கற்பகம் - நினைத்தபொருள்களைத் தருதற்கு உவமை; பயனுவமை. ஆத்த=யாத்த: மரூஉ. 'அருவரை' என்றது, உருவகம். வரை - உவமையாகுபெயர்; மூங்கி லெனக்கொண்டு வில்லுக்குக் கருவியாகுபெயரென்றலும் ஒன்று. வாங்கினன் - வளைத்தானுமாம். பி - ம்:—[1]ஆர்த்த. (384)

## 18.—இராமன் போர்செய்யத் தொடங்குதல்.

வாங்கி வாளொடு வாளிபெய் புட்டிலும்
தாங்கித் தாமரைக் கண்ணனச் சாலையை
நீங்கி யிவ்வழி நேர்மி னடாவென
வீங்கு தோளன் மலைதலை மேயினன்.

(இ - ள்.) தாமரைக் கண்ணன் - செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய இராமன், வாங்கி - (வில்லை) எடுத்துக் கொண்டு, வாளொடு - வாளாயுதத்துடனே, வாளி பெய் புட்டிலும்-அம்புகளை நிரம்பவைத்துள்ள (அம்பருத்) தூணியையும், தாங்கி-எடுத்துத்தரித்துக்கொண்டு, அ சாலையை நீங்கி - (தான் எழுந்தருளியுள்ள) அந்தப் பர்ணசாலையை விட்டுப்புறப்பட்டு, இ வழி நேர்மின் அடா என - 'இவ்விடம் வாருங்களடா' என்று (அவ்வரக்கரைநோக்கி) வீரவாதங்கூறி, வீங்கு தோளன் - (கோபாவேசத்தாற்) புடைபருத்த தோள்களையுடையவனாய், மலைதலை மேயினான் - போர்செய்தலைப் பொருந்தினான் [போர்செய்யத்தொடங்கினான்]; (எ - று.)

இக்கவியின் முதலில் 'வாங்கி' என்றது, கீழ்க்கவியிற் கூறியதன் அநுவாதம்; தொடர்ச்சிதோன்றக் கூறியது. வாளை இடையிலும், அம்புப்புட்டிலைத் தோட்புறத்திலும் தாங்கினனென்க. (385)

## 19.—இராமன் அவ்வரக்கர்களைக் கைதுணித்தல்.

மழுவும் [1]வாளும் வயங்கொளி முச்சிகைக்
கழுவுங் காலவெந் தீயன்ன காட்சியார்
எழுவி னீட்டடக் கையெழு நான்கையுந்
தழுவும் வாளிக ளாற்றலஞ் [2]சார்த்தினான்.

(இ - ள்.) காலம் வெம் தீ அன்ன - கொடிய பிரளயகாலாக்கினியை ஒத்திருக்கப்பெற்ற,காட்சியார் - தோற்றமுடையவர்களாகிய அவ்வரக்கர்கள் பதினால்வருடைய, மழுவும் - மழுவென்னும் ஆயுதத்தையும், வாள்உம் - வாளாயுதத்தையும், வயங்கு ஒளி-விளங்குகின்ற ஒளியையுடைய, மு சிகை கழுவும் - முத்தலைவேலையும், (இவ்வாறான படைக்கலங்களையேந்திய), எழுவின் நீள் தட கை எழு நான்கைஉம் - தூண்போன்ற நீண்டபெரிய கைகளிருபத்தெட்டையும்,தழுவும் வாளிகளால் - (குறித்த இலக்கைத் தவறாது) சாரும் அம்புகளால், தலம் சார்த்தினான் - (துணித்துத்) தரையில் தள்ளினான்; (எ-று.)

அந்தப்பதினான்கு அரக்கவீரர் கைகளையும் இராமபிரான் தன் வாளிகளால் தடிந்து பிடித்தபடைக்கலங்களுடனே தரையில் வீழ்த்தினானென்பதாம். முன்னிரண்டடி - உவமையணி. பி - ம்:—[1]வாளி. [2]சேர்த்தினான். (386)

## 20.—இராமன் அவர்களைத் தலைதுணித்தல்.

மரங்கள் போனெடு வாளொடு தோள்விழ
[1]உரங்க ளானடர்ந் தார்க்குர வோன்விடுஞ்
சரங்க ளோடின [2]தைக்க வவர்கடஞ்
சிரங்க ளோடின தீயவ ளோடினாள்.

(இ - ள்.) நெடு வாளொடு - பெரிய ஆயுதங்களுடனே, தோள் - (தங்கள்) தோள்கள், மரங்கள் போல் விழ - மரங்கள் வெட்டுப்பட்டு வீழ்வதுபோலத் துணிபட்டுக் கீழ்விழுந்தபின்பும், உரங்களான் அடர்ந்தார்க்கு - மார்பின்வலிமைகொண்டு தாக்கிப் போர்செய்தற்கு

நெருங்கிய அவ்வரக்கர்களின்பொருட்டு, உரவோன் விடும்-வலிமையை யுடைய இராமபிரான் எய்த, சரங்கள் - அம்புகள், ஓடின தைக்க - விரைந்துசென்று பாய்தலால், அவர்கள் தம் சிரங்கள் ஓடின-அவர்க ளுடைய தலைகள் துணிபட்டு அப்பாற் சென்றன: (அதுகண்டு), தீய வள் ஓடினுள் - கொடியவளான சூர்ப்பணகை ஓடலுற்றாள்; (எ - று.)

அந்தப்பதினன்கு வீரர்களின் கைகளும் பிடித்த ஆயு தங்களுடனே அற்றுக் கீழ்வீழ்ந்திடவும், அவ்வரக்கவீரர்கள் சலி யாது நின்று தம்முரங்களால் அடர்க்கலுற, அப்போது அப்பிரா னது சரங்கள் விரைந்தோடித்தைக்க அவர்கள்சிரங்கள் அறுப்புண்டு விழலாயின என்றவாறு. வாள் - இங்கே, ஆயுதப்பொது. முதலடி- உவமை. பி-ம்:—[1]உரங்களோடடர்ந்தார்க்கு. [2]தைத்தவரக்கர்தம். ()

## 21.—சூர்ப்பணகை மீண்டோடிக் கரனுக்குச் செய்திகூறல்.

ஒளிறு வேற்கரற் குற்ற துணர்த்தினுள்
குளிறு கோபவெங் கோளரி மாவடக்
களிறெ லாம்படக் கைதலை மேலுறப்
பிளிறி யோடும் பிடியன்ன பெற்றியாள்.

(இ - ள்.) குளிறு - கர்ச்சிக்கிற, கோபம் - கோபத்தையுடைய, வெம்-கொடிய, கோள் - வலிமையையுடைய, அரிமா - சிங்கம், அட- கொன்றதனால், களிறு எலாம்-ஆண்யானைகளெல்லாம், பட - இறந் தொழிய (அதுகண்டு), கை தலைமேல் உற பிளிறி ஓடும் - துதிக்கை தலையின்மேற்பொருந்த வைத்துக்கொண்டு வீரிட்டு ஓடுகிற, பிடி - பெண்யானையை, அன்ன-ஒத்த, பெற்றியாள் - நிலைமையை யுடையவ ளான சூர்ப்பணகை, - ஒளிறு வேல் கரற்கு - விளங்குகிற வேலாயுதத் தையுடைய கரனுக்கு, உற்றது உணர்த்தினுள் - நடந்தசெய்தியைத் தெரிவித்தாள்; (எ - று.)

சிங்கம் அடர்த்ததனல் தன்குலத்துக் களிற்றுயானைகளெல் லாம் இறந்தொழியத் தன் துதிக்கையை மத்தகத்துக்கொண்டு வீரிட்டோடுகிற பெண்யானைபோல, இராமபிரானல் பதினன்கு அரக்கவீரர்கள் ஒழியவே தன்கையைத் தலைமேற்கொண்டு சூர்ப் பணகை கதறியவண்ணம் ஓடிக் கரனுக்கு உணர்த்தலாயினளென்ப தாம். அரிமா - இராமபிரானுக்கும், களிறு - அரக்கர்க்கும், பிடி- சூர்ப்பணகைக்கும் உவமை. தலைமேல்கைவைத்துப் பிளிறியோடு தல் - சூர்ப்பணகைக்கும் அமையும். உவமையணி. (388)

## 22.—அதுகேட்டுக் கரன் கோபித்தல்.

அங்க ரக்க ரவிந்[1] தழிந் தாரெனப்
பொங்க ரத்தம் விழிவழிப் போந்துக
வெங்க ரப்பெய ரோன்வெகுண் டான்விடைச்
சங்க ரற்குந் தடுப்பருந் தன்மையான்.

(இ - ள்.) விடை - விருஷபவாகனத்தையுடைய, சங்கரற்கு உம் - (அழித்தல் தொழிற்கடவுளான) சிவபிரானுக்கும், தடுப்பு அரு - தடுக்கமுடியாத, தன்மையான்-வலிமைநிலையையுடையவனுன,

வெம் கரன் பெயரோன் - கொடிய கரனென்னும் பெயரையுடைய அரக்கன்,—அங்கு அரக்கர் அவிந்து அழிந்தார் என-அவ்விடத்தில் இராக்கதர்கள் இறந்தொழிந்தா ரென்று (சூர்ப்பணகை) சொல்ல (க்கேட்டு), பொங்கு அரத்தம் - உள்ளிருந்து பொங்குகிற இரத்தம், விழி வழி போந்து உக - கண்களின் வழியாய் வெளிச்சிந்த, வெகுண்டான்-கோபித்தான்; (எ - று.)

இக்கவியின் முதலடி - கீழ்க்கவியின் அநுவாதம். பி - ம் :—[1]ஒழிந்தார். (389)

## 23.—கரன் சேனைகளை யழைக்கச் சொல்ல, பணியாளர் பறையறைதல்.

அழை [1]யென் றேவ வரக்கர்வன் போர்ப்படை
உழைய ரோடி யொருநொடி [2]யோங்கன்மேன்
மழையென் மாமுர [3]சேற்றினர் வல்லையின்
முழையின் வாளரி யஞ்ச [4]முழக்குவார்.

(இ - ள்.) (வெகுண்ட கரன்),—'வல் அரக்கர் போர் படை-போர் செய்யவல்ல வலிய அரக்கச்சேனையை, அழை-வரவழைப்பாய்,' என்று ஏவ-என்று கட்டளையிட,—உழையர் - அருகிலுள்ள ஏவலாளர்கள், ஒரு நொடி-ஒரு கைந்நொடிப்பொழுதிலே, ஓடி - விரைந்துசென்று, (சேனைகளுள்ள விடஞ்சேர்ந்து), ஓங்கல்மேல் - யானையின்மேல், மழை என் மா முரசு - (பெருமுழக்கத்தால்) மேகமென்று சொல்லத்தக்க பெரிய பேரிகைகளை, வல்லையின் - விரைவில், ஏற்றினர் - ஏற்றி,—முழையின்-மலைக்குகையில் வசிக்கிற, வாள் அரி-கொடிய சிங்கமும், அஞ்ச-அஞ்சும்படி, முழக்குவார்-ஒலி யெழுப்புபவரானார்; (எ - று.)

வெகுண்ட கரன் குற்றேவலாளருள் ஒருவனை நோக்கி 'அரக்கப்படையை யழைத்துவா' என்ன, அருகிலிருந்தோர் பலர் ஓடிச்சென்று யானைமீது முரசேற்றிப் பறையறைந்து அரக்கச்சேனை வருமாறு கரன் கட்டளையிட்டதைத் தெரிவித்தன ரென்க. ஓங்கல் - மலைக்குத் தொழிலாகுபெயரும், அது யானைக்கு உவமவாகுபெயருமாம். பி - ம் :—[1]என்றேரெனக்காக்குவென்போர்படை. [2]உம்பல். [3]எற்றுதிர் வல்லென்முன். [4]முழங்குவான். (390)

## 24.—அரக்கர்சேனை திரண்டெழுதல்.

பேரி யோசை பிறத்தலும் பெட்புறு
மாரி மேகம் வரம்பில வந்தெனத்
தேரின் சேனை [1]திரண்டது தேவர்தம்
ஊரு நாக ருலகு முலைந்தவே.

(இ-ள்.) பேரி ஓசை பிறத்தலும்-(அங்ஙனம்) பேரிகைகளின் ஒலி வெளிப்பட்ட மாத்திரத்தில்,—பெட்பு உறு மாரிமேகம் வரம்பு இல வந்து என-பருமை மிக்க மழைபொழியும் மேகங்கள் அளவற்றன ஒருங்கு வந்தாற்போல, தேரின் சேனை-தேரையுடைய அரக்கச்சேனை,

திரண்டது-ஒருங்குவந்து கூடிற்று: (அதனால்), தேவர் தம் ஊர் உம் நாகர் உலகு உம் உலைந்த-தேவலோகமும் நாகலோகமும் வருந்தின;

தீயோரைநலிந்து தங்களைப் பாதுகாத்தற்பொருட்டுத் திருவவதரித்துள்ள இராமபிரானுக்கு இதனால் யாதாகுமோ என்று தேவர்களும், அளவற்ற சேனைகள் ஒருங்குகூடியதனாலாகிய பாரமிகுதியைப் பொறுக்கமாட்டாமற் கீழுலகத்துச் சர்ப்பசாதியாரும் வருந்தினரென்க. மேலுலகமும் கீழுலகமும் வருந்தியமை கூறவே அருத்தாபத்தியால் இவ்வுலகம் வருந்தியமை தானே பெறப்படும். சேனைகள் ஆயுதங்களைச்சொரிதலையும் பெருமுழக்கஞ்செய்தலையுங் கருநிறம் மிக்கிருத்தலையுங்கருதி, மாரிமேகத்தை உவமைகூறினர். பெட்புறும்-(போர்செய்யும) ஆசை மிக்க, சேனை எனினும் அமையும். வரம்பில - மிகப்பல எனறபடி. பி - ம்:—[1] திரண்டன. (391)

25.— இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்: அரக்கர்சேனை போர்க்கு எழுதலின் வருணனையைத் தெரிவிக்கும்.

> போர்ப்பெ ரும்[1]பணை பொம்மென் முழக்கமா
> நீர்த்த ரங்க நெடுந்தடந் [2]தேர்களா
> ஆர்த்தெ ழுந்த திறுதியி னார்கலி
> கார்க்க ருங்கடல் கால்கிளர்ந் தென்னவே.

(இ - ள்.) போர் பெரு பணை - போரைத்தெரிவிக்கிற பெரிய பேரிகை வாத்தியங்களின் ஒலி, பொம்மென் முழக்கம் ஆ - பொம்மென்றொலிக்கிற கடலின் ஆரவாரம்போலிருக்க,—நெடு தட தேர்கள - நீண்ட பெரிய தேர்கள், நீர் தரங்கம் ஆ - கடல்நீரிலுள்ள அலைகள் போலிருக்க,—ஆர் கலி கார் கரு கடல் - நிறைந்த ஓசையையும் மேகம்போன்ற கருநிறத்தையுமுடைய கடல், இறுதியின் - கற்பாந்தகாலத்திலே, கால் கிளர்ந்து என்ன - ஊழிக்காற்றினாற் பொங்கிமேலெழுந்தாற்போல, ஆர்த்து எழுந்தது - (அரக்கர் சேனை) ஆரவாரஞ்செய்துகொண்டு (போருக்கு) எழுந்தது; (எ - று.)

அரக்கச்சேனை, கற்பாந்தத்துக் கிளர்ந்து பேராரவாரத்துடன் கடலெழுவது போல எழுந்ததென்பதாம். உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த தற்குறிப்பேற்றம். பொம்மெனல் - சப்தாநுகரணம்; ஒலிக்குறிப்பு. பணை - அதனொலிக்கு, முதலாகுபெயர். பி - ம்:—[1]படை. [2]தோள்களா. (392)

26. காடு துன்றி விசும்பு [1]கரந்தென
> நீடி யெங்கு [2]நிமிர்ந்த நெடுங்கொடி
> ஓடு மெங்கள் பசியென் றுவந்தெழுந்து
> ஆடு கின்ற வலகையி னுடவே.

(இ - ள்.) காடு துன்றி விசும்பு கரந்து என - காடு அடர்ந்து மேலெழுந்து ஆகாயத்தை மறைத்தாற்போல, எங்கும் நீடிநிமிர்ந்த - எவ்விடத்தும் நீண்டு உயர்ந்த, நெடு கொடி - பெரிய துவசங்கள்,- எங்கள் பசி ஓடும் என்று உவந்து எழுந்து ஆடுகின்ற அலகையின் ஆட - 'எங்களுடைய பசி விரைவில் நீங்கிவிடும்' என்று மகிழ்ந்து

எழுந்து கூத்தாடுகிற பேய்கள்போல அசையவும்,—(எ - று.)—
'(சேனை) எழுந்தது' என முன்கவியோடு முடிக்க.

இது, அச்சேனையிலுள்ள கொடிகளின் வருணனை. அக்கொடிகள் அடர்ந்து வானம் மறைய அசைந்து மேலோங்கி நிற்றல், அத் தண்டகாரணியத்துள்ள மரத்தொகுதிகள் மேலெழுந்து ஆகாயத்தையளாவிநின்று மறைத்தல் போலுமென்பது, முன்னிரண்டடியிற் கூறிய பொருள். பின்னிரண்டடியில் அக்கொடிகளுக்குப் பேய்களை உவமை கூறினர். இரண்டும் - தற்குறிப்பேற்றவணிகளே. 'எங்கள் பசியோடும்' என்றது, தாம் தின்னுதற்கு உரிய பிணங்கள் இனி நிகழவிருக்கும் பெரும்போரில் விரைவில் மிகுதியாக நேர்படுமென்ற கொள்கையால். பி - ம்:—[1]கரந்தன. [2]நிரந்த. (393)

27. தறியி னீங்கிய தாழ்தடக் கைத் [1]துணைக்
[2]குறிகொ ளாமத வேழக் [3]குழுவனர்
[4]செறியும் வாளொடு வாளிடை தேய்த்துகும்
பொறியிற் கானெங்கும் வெங்கனல் பொங்கவே.

(இ - ள்.) தறியின் நீங்கிய - (மதமிகுதியாற்) கட்டுத்தறியினின்று வெளிப்பட்டவையும், குறி கொளா - (எவரையும்) ஒரு பொருளாகமதியாதவையுமான, தாழ் தட கை துணை மத வேழம்-தாழ்ந்து தொங்குகிற பெரிய இரண்டு துதிக்கையையுடைய மதயானைகளின், குழு - கூட்டத்தை, அனர் - ஒத்தவர்களாகிய அரக்கர்களது, செறியும் வாளொடு வாள் - அடர்ந்த வாளாயுதங்கள் ஒன்றோடொன்று, இடை தேய்த்து-நடுவிலே உராய்தலால், உகும் - வெளிச்சிந்துகிற, பொறியின் - தீப்பொறிகளால், கான் எங்கும் - அக்காடுமுழுவதும், வெம் கனல் பொங்க-கொடியநெருப்புப்பற்றி யெழவும்,—(எ - று.)—
'(சேனை) எழுந்தது' என 25 - ஆங் கவியோடு இயைக்க.

அரக்கவீரர்களின் அடர்ந்த வாட்படைகள் ஒன்றோடொன்று தாக்குதலாற் கனற்பொறியெழுந்து அக்காடு முழுவதும்பற்றி யெரிவதாயிற்று என அவ்வரக்கச் சேனையின் அடர்த்தியையும் அவ்வரக்க வீரர் போரில் ஊக்கங்கொண்டு செல்லுதலையும் விளக்கினர். கட்டுக்கு அடங்காது வரம்புகடந்தவரும் செருக்கினல் எவரையும் பொருள்செய்யாதவருமாகிய கொழுத்த வலிய பெரிய அரக்கர்க்கு, தறியினீங்கி குறிகொளாமதவேழக்குழு உவமையாயிற்று. இவ்வரக்கர்களுடைய இரண்டு கைகளும் திரண்டுருண்டு நீண்ட வடிவத்தில் யானைத்துதிக்கைபோறலுதலால், உபமானமாகிய வேழத்துக்கு 'தாழ்தடக்கைத் துணை' என்ற அடைமொழியைக் கொடுத்து இல்பொருளுவமையின் பாற்படுத்தினர். தன்னைக் கட்டியுள்ள தறியைக் கோபாவேசத்தால் முறித்துத தள்ளிவிட்டுத் தடையின்றி வெளிச்செல்லல், மதயானையின் இயல்பு. பி-ம்:—[1]தனிக். [2]குறிகொண்மா. [3]குழுவினர். [4]செறியின். (394)

28. முருடி ரண்டு [1]முழங்குறத் தாக்கொலி
உருடி ரண்[2]டெழுந் தேரொலி யுட்புக

அருடி ரண்ட வருக்கன்றன் மேல்வழங்கு
இருடி ரண்டுவந் [3]தீண்டிய தென்னவே.

(இ - ள்.) முருடு - முருடு என்னும் வாத்தியவிசேஷங்கள், இரண்டு - இரண்டு பக்கங்களிலும், முழங்குற - முழக்கமுண்டாம்படி, தாக்கு - அடிக்கப்படுதலாலாகிய, ஒலி - ஓசை, உருள் திரண்டு எழும் தேர் ஒலியுள் புக - சக்கரங்கள் உருளுதலால் மேல்வருகிற தேர்களின் ஆரவாரத்தினுள்ளே அடங்கவும்,—அருள் திரண்ட அருக்கன்தன் மேல் - கருணையே (ஓருருவாகத்) திரண்டு வடிவெடுத்தாற்போன்ற சூரியன்மேல், வழங்கு இருள் - (உலகத்துப்) பயில்கிற இருட்டு, திரண்டு வந்து ஈண்டியது என்ன - ஒருங்குசேர்ந்து வந்து நெருங்கியதுபோலவும்,—(எ - று.)—'(சேனை), எழுந்தது' என 25 - ஆம் கவியோடு இயையும்.

இராமபிரானுக்குச் சூரியனையும், அவன்மேற் போர்க்குஎழுந்து நெருங்கிய அரக்கச் சேனைக்குச் சூரியன்மேல் வந்துநெருங்கும் இருளின் தொகுதியையும் உவமை கூறியதனால், இரவிமுன் இருள் போல இராமபிரான்முன் இவர்கள் எளிதில் அழியப்போகின்றமை பெறப்படும். இருளையொழித்தலும் மிக்கஒளியைத் தருதலும் முதலிய சூரியனதுசெயல்கள் உலகத்துக்கு மிகவும் பேருதவியாக இருத்தலால், அவனை 'அருள்திரண்டவருக்கன்' என்றார்: "மலர்தலை யுலகத் திருளெறி விளக்கும், மன்னுயிர் விழிக்கக் கண்ணிய கண்ணும்,........அருளும்பொருளுமாகித், திருவுல களிக்கும் பரிதி வானவனே" என்ற கல்லாடம், இங்குக் காணத்தக்கது. பின்னிரண்டடிகளில் சூரியகுலத்தவனாகிய இராமனுக்குச் சூரியனும், கருநிறமுடைய அரக்கரின் குழாத்துக்கு இருளின் திரட்சியும் உவமையாக நன்குபொருந்தும். சூரியன்மேல் இருள்திரண்டுவந்தீண்டுதல் இல்பொருளுவமையெனக் கொள்க. முருடு இருகட்பறை யாதலால் 'முருடிரண்டு முழங்குறத் தாக்கொலி' எனப்பட்டது. இரண்டு - இரு பக்கத்துக்கு, எண்ணலளவையாகுபெயர். வாத்தியகோஷமும் தேராரவாரமும் ஐக்கியப்பட்டுஒலிக்க என்பது, முன்னிரண்டு அடிகளின் கருத்து. 'உருள்திரண்டெழும்' என்பதற்கு-சக்கரங்களுடன் கூட்டமாயெழுகிற என்றும் உரைக்கலாம். பி - ம் :—[1]முழக்குமுழக்கொலி. [2]எழுந்தோரொலியுட். [3]ஈண்டெழுந்து. (395)

29. தலையின் மாசுணந் தாங்கிய தாரணி
நிலைநி லாது முதுகை நெளிப்புற
உலைவி லேழுல கத்தினு மோங்கிய
மலையெ லாமொரு மாடுதொக் கென்னவே.

(இ - ள்.) மாசுணம்-(ஆதிசேஷன்முதலிய) பெரும்பாம்புகளால், தலையில் தாங்கிய-தலைமேற்கொண்டு சுமக்கப்படுகிற, தாரணி - பூமி, நிலை நிலாது-(அதிகபாரத்தைப்பொறுக்கமுடியாமையால் சலனமின்றி) ஒருநிலையில் நிற்கமாட்டாமல், முதுகை நெளிப்புற-முதுகை நெளிக்கும்படி, உலைவு இல் ஏழ்உலகத்தின்உம் ஓங்கிய மலை எலாம் ஒருமாடு தொக்கு என்ன-அழிவில்லாத ஏழுலகங்களிலும் வளர்ந்து பொருந்

திய மலைகள்யாவும் ஓரிடத்தில்வந்து சேர்ந்தாற்போலவும்,—(எ-று.) —'(சேனை) எழுந்தது' என 25-ஆம் கவியோடு முடியும்.

ஏழுலகத்து மலைகளும் ஒருங்குதிரண்டாற்போல அரக்கர் ஒருங்கு அப்போர்க்களத்துத் திரண்டனரென்க: தற்குறிப்பேற்றவணி. மலைகள் - அரக்கர்க்கு உவமை, வலியபெரியவடிவமுடைமையால். முதுகு என்றது, மேற்புறத்தை. கீழ்ச்செய்யுளில் தேரைக் கூறியிருத்தலால், மலையெலாமொருமாடுதொக்கென்ன என்றது-தேர்கள் திரண்டதைப் பற்றிய வருணனை யெனினுமாம். தாரணி முதுகைநெளிப்புற-தொடர் புயர்வுநவிற்சியணி. (396)

வேறு.

## 30.—மிக்க அரக்க வீரரின் வருணனை.

வல்லியக் குழாங்களோ மழையி னீட்டமோ
[1]ஒல்லிபத் தொகுதியோ [2]வோங்கு மோங்கலோ
அல்லமற் றரிகளி [3]னனிக மேயெனப்
பல் [4]பதி னுயிரம் படைக்கை வீரரே.

(இ-ள்.) 'வல்லியம் குழாங்கள்ஓ-புலிக்கூட்டங்களோ? மழையின் ஈட்டம்ஓ-மேகங்களின் திரட்சியோ? ஒல் இபம் தொகுதிஓ - ஒலியை யுடைய யானைகளின்கூட்டமோ? ஓங்கும் ஓங்கல்ஓ - உயர்ந்தமலைக ளோ? அல்ல-(இவை யாவும்) அல்ல: அரிகளின் அனிகம்ஏ - சிங்கங் களின் சேனையே,' என-என்று சொல்லும்படி (வந்த), படை கை வீரர் - ஆயுதங்களையேந்திய கைகளையுடைய இராக்கதவீரர்களின் தொகை, பல் பதினுயிரம்-அநேகம்பதினுயிரக்கணக்காம்; (எ - று.)

படைக்கை வீரரிடத்து வல்லியக்குழாங்கள் முதலியவற்றின் தன்மையை மறுத்து அரிகளினனிகமே என்று நாட்டியது-அபநுதி யணியின்பாற்படும்: அதனோடு - ஐயவணியும் மயக்கவணியும் விரவி வந்த இச்செய்யுள் - கலவையணி; வடநூலில் 'சந்தேகசங்கரம்' எனப்படும். தைரியத்துக்குப் புலியும், கரியபெரிய வடிவத்துக்கும் ஆரவாரத்துக்கும் மேகமும், வலியபெரிய வடிவத்துக்கு யானையும் மலையும், பராக்கிரமத்துக்குச் சிங்கமும் அரக்கர்க்கு உவமையாதலால், 'வல்லியக் குழாங்களோ' என்பது முதலவாக ஐயுறப்பட்டன. ஒல் - ஒலிக்குறிப்பு. என என்பதன்பின், ஒருசொல் வருவிக்க. பி - ம் :— [1]புல்லிபத், புல்லியற். [2]பொங்குமோங்கலோ, பொங்குலோகமோ. [3]அனிகமோ. [4]பதினுயிரர்.

இதுமுதல் 26 - கவிகள்-கீழ்ப்படலத்தின் 8 - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (397)

## 31 - 33 : இம்மூன்று கவிகளும் - குளகம்: திரண்ட சதுரங்க சேனைகளின் வருணனை.

31. ஆளிகள் பூண்டன வரிகள் பூண்டன
மீளிகள் பூண்டன வேங்கை பூண்டன

ஞாளிகள் பூண்டன நரிகள் பூண்டன
கூளிகள் பூண்டன குதிரை பூண்டன.

32. ஏற்றின மார்த்தன வேன மார்த்தன
காற்றின மார்த்தன கழுதை யார்த்தன
தோற்றின மாத்திரத் துலகு சூழ்வரும்
பாற்றின மார்த்தன பணில மார்த்தன.

33. தேரினந் துவன்றின சிறுகட் செம்முகக்
காரின [1]நெருங்கின காலிற்[2]கால்வரு
தாரினங் குழுமின தடையில் [3]கூற்றன்ன
பேரினங் கடலெனப் பெயருங் காலையே.

இம்மூன்றுகவிகட்கு-ஒருங்கு உரையிடப்படும்.

(இ - ள்.) (33) தடை இல் கூற்று அன்ன - தடுக்கப்படாத யமனை யொத்த, பேர் இனம் - பெரிய அரக்கர்கூட்டம், கடல்என பெயரும் காலை - கடல்பொங்கிவந்தாற்போல வரும்பொழுதில், - (31) ஆளிகள் பூண்டன - யாளிகள் பூட்டப்பட்டவையும், அரிகள் பூண்டன - சிங்கங்கள் பூட்டப்பட்டவையும், மீளிகள் பூண்டன - வலிய யானைகள் பூட்டப்பட்டவையும், வேங்கை பூண்டன - புலிகள் பூட்டப்பட்டவையும், ஞாளிகள் பூண்டன - நாய்கள் பூட்டப்பட்டவையும், நரிகள் பூண்டன - நரிகள் பூட்டப்பட்டவையும், கூளிகள் பூண்டன - பூதங்கள் பூட்டப்பட்டவையும், குதிரை பூண்டன - குதிரைகள் பூட்டப்பட்டவையும், (32) ஏறு இனம் ஆர்த்தன - எருதுகளின் கூட்டம் கட்டப்பட்டவையும், ஏனம் ஆர்த்தன - பன்றிகள் கட்டப்பட்டவையும், காற்று இனம் ஆர்த்தன - காற்றுவடிவமான பேய்வகைகள் கட்டப்பட்டவையும், கழுதை ஆர்த்தன-கழுதைகள் கட்டப்பட்டவையும், பாறு இனம் ஆர்த்தன - பருந்துவகைகள் கட்டப்பட்டவையும், (ஆகிய), தோற்றின மாத்திரத்து உலகு சூழ்வரும் - புறப்பட்டமாத்திரத்தில் உலகத்தைச் சுற்றிவருந்தன்மையுள்ள, (33) தேர் இனம் - தேர்களின் கூட்டங்கள், துவன்றின - நெருங்கின; சிறு கண் செம் முகம் கார் இனம் - சிறியகண்களையும் சிவந்த முகத்தையுமுடைய மேகங்கள் போன்ற யானைகளின் கூட்டங்கள், நெருங்கின - அடர்ந்தன: காலின்-காற்றுப்போல, கால் வரு கால்களால் விசைகொண்டு ஓடிவருகிற, தார் இனம்-குதிரைச்சேனைகளின் கூட்டங்கள், குழுமின-திரண்டன; (அப்பொழுது), (32) பணிலம் ஆர்த்தன - சங்கவாத்தியங்கள் ஆரவாரித்தன; (எ - று.)

இங்ஙனம் ஒருதொடராகிய செய்யுள்களில் பொருள்கோளுக்கு வேண்டியபடி சொற்களைத் துணித்துப் பலவிடத்திலும் எடுத்துக் கூட்டி அந்வயித்து உரைத்தல், தொல்காப்பியத்துக் கூறப்பட்ட செய்யுளுறுப்பு இருபத்தாறனுள் மாட்டு என்னும் உறுப்பாமென அறிக.

31.—ஆளி - மரூஉமொழி; துதிக்கையுடையதும் யானையைக் கொல்வதும் சிங்கமபோல்வதுமான ஒரு மிருகவிசேடம் என்ப. பூண்டன - பெயர். வலிமையுடைய தென்ற பொருளைத்தரும் மீளி

யென்ற பெயர் - இங்கே சந்தர்ப்பத்தால், யானையைக் குறித்தது; இனி 'மீளிகள்பூண்டன' என்பதற்கு - வலிய ஆட்களைக் கட்டப் பெற்றவை யென்று உரைப்பாரும் உளர். பூண்டன எனச் சொல்லும் பொருளும் மீண்டும் பலமுறை வந்ததனால், சொற்பொருட்பின் வரு நிலையணி; அடுத்த கவியில் 'ஆர்த்தன' என வருதலும் அது.

32.—மூன்றுமடியால், தேர்களின் விரைவு விளங்கும். இனி, இதனைப் பாறுக்கு அடைமொழியாக்கி, புறப்பட்டமாத்திரத்தில் உலகமுழுவதையுஞ் சுற்றிவரவல்ல பருந்து என்றலும் ஒன்று. பாற்றினம் - பெரும்பருந்து, சிறுபருந்து முதலியன. இறுதியிலுள்ள 'ஆர்த்தன' என்பது - முற்று: மற்றவையெல்லாம் - பெயர். பணில மார்த்தன என்பதற்கு - சங்குகள்போல் ஒலித்தவை யெனப்பொருள் கொண்டு, தேருக்கு அடைமொழியாக்கினும் அமையும். மூன்றுமடி - உயர்வுநவிற்சியணி.

33—கார் - உவமவாகுபெயர். யானையென்பது விளங்க, 'சிறு கட் செம்முகக்கார்' என்றார்; இது பிறகுறிப்பின்பாற்படும். செம் முகம் - செம்புள்ளிகளையுடைய முகம். "தீயுமிழ்சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய்" என்ற அரசயானையிலக்கணத்தால், சிறியகண்களும் செம்புள்ளிகளும் உத்தமயானைக்கு இலக்கணமாதல் அறிக. காலின், இன் - ஒப்பு. தார் - குதிரைச்சேனை. 'தடையில்கூற்றன்ன பேரினம் கடலெனப் பெயருங்காலை' என்றதில், காலாட்சேனை அடங்கும்: ஆகவே, நால்வகைச்சேனையுங் கூறியவாறும். துவன்றின, நெருங்கின, குழுமின என்றவற்றில் ஒருபொருளே மீண்டும் வந்ததனால், பொருட் பின்வருநிலையணி. பி - ம்:—[1] துவன்றின. [2] காற்பரித். [3] கூற் றென. (398, 399, 400)

## 34.—மூன்றுகவிகள்-குளகம்: ஆயுதவகைகள் நெருங்கியமை கூறும்.

மழுக்களு மயில்களும் வயிர வாள்களும்
எழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியும்
[1] முழுக்களு முசுண்டியுந் தண்டு முத்தலைக்
கழுக்களு முலக்கையுங் கால பாசமும்.

(இ - ள்.) மழுக்கள்உம் - எரியிரும்புப்படைகளும், அயில்கள்உம் -வேற்படைகளும், வயிரம் வாள்கள்உம் - உறுதிபொருந்திய வாட் படைகளும், எழுக்கள்உம் - வளைதடிகளும், தோமரம் தொகைஉம் - எறியீட்டிகளின் தொகுதியும், ஈட்டிஉம் - பேரீட்டிகளும், முழுக்க அ(ள்)ளும் - (பகைவருடல்) முழுதையுங்கவர்கிற, முசுண்டிஉம் - முசுண்டியென்னும் ஆயுதங்களும், தண்டுஉம் - கதாயுதங்களும், முத்தலை கழுக்கள்உம் - மூன்றுதலைகளையுடைய சூலங்களும், உலக்கை உம் - உலக்கைகளும், கால பாசம்உம்-காலபாசங்களும்,—(எ - று.)

முழுக்களும்-முழுக்க அள்ளும் என்பதன் தொகுத்தல். முசுண்டி- சிறுவாள். பி - ம் :—[1] முழுக்கலும். (401)

35. குந்தமுங் குலிசமுங் கோலும் பாலமும்
அந்தமில் சாபமுஞ் சரமு மாழியும்
வெந்தொழில் வலயமும் [1]விளங்கு [2]சங்கமும்
பந்தமுங் கப்பணப் படையும் பாசமும்.

(இ - ள்.) குந்தம்உம் - சிறியஈட்டிகளும், குலிசம்உம் - வச்சிராயுதங்களும், கோல்உம் - தடிகளும், பாலம்உம் - பிண்டிபாலமென்னும் முறுக்குத் தடிகளும், அந்தம்இல் - அளவில்லாத, சாபம்உம் - விற்களும், சரம்உம் - அம்புகளும், ஆழிஉம் - சக்கரங்களும், வெம்தொழில் வலயம்உம் - கொடிய தொழிலையுடைய வளையென்னும் ஆயுதங்களும், விளங்கு சங்கம்உம் - விளங்குகிற சங்குகளும், பந்தம்உம் - பந்தமென்னு மாயுதமும், கப்பணம் படைஉம் - கப்பணமென்னும் ஆயுதங்களும், பாசம்உம் - கயிறுகளும்,—(எ - று.)

பாலம் - பிண்டிபால மென்பதன் முதற்குறை விகாரம். வளை ஓராயுதமாதலைத் திருவிளையாடற்புராணத்து உக்கிரகுமாரனுக்கு வேல்வளைசெண்டு கொடுத்த படலத்தாலும், இந்திரன்முடிமேல் வளையெறிந்த படலத்தாலும் உணர்க. தனது பெருமுழக்கத்தாற் பகையை அஞ்சுவித்து அழித்தலால், சங்கும் ஆயுதத்தின்பாற்படும்; திருமாலின் பஞ்சாயுதங்களுள் பாஞ்சசன்னியமென்ற சங்கும் ஒன்றுதல் காண்க. பந்தம் - விலங்குபோலக் கட்டுப்படுத்துகின்ற ஓராயுதம் போலும். இனி, [2]சங்கனுபந்தமும் என்ற பாடத்திற்கு - இடம்புரி வலம்புரி சலஞ்சலம்ஆகிய சங்குகளின் இனங்களுமென்க. கப்பணம்- இரும்பால் யானைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணியது. பி - ம்:—[1]விலங்கும். [2]சங்கமாம். (402)

36. ஆதியி னருக்கனு மனலு [1]மஞ்சுறுஞ்
சோதிய [2]சோரியுந் தூவுந் துன்னிய
ஏதிகண் மிடைந்தன விமைய வர்க்கெலாம்
வேதனை கொடுத்தன வாகை வேய்ந்தன.

(இ - ள்.) ஆதியின் - (மழு முதலாகப் பாசம் ஈறுகக் கீழ் இரண்டுகவிகளிற் கூறியவை) முதலாகவுள்ள, அருக்கன்உம் அனல்உம் அஞ்சுறும் சோதிய - சூரியனும் அக்கினியும் அச்சமடையும் ஒளியையுடையவையும், சோரிஉம் தூஉம் துன்னிய - (பகைவர்களுடைய) இரத்தமும் மாமிசமும் பொருந்தப்பெற்றவையும், இமையவர்க்கு எலாம் வேதனை கொடுத்தன - தேவர்களுக்கெல்லாம் (முன்பு போரில்)துன்பந் தந்தவையும், வாகை வேய்ந்தன-(வெற்றிக்கு அறிகுறியான) வாகப்பூமாலையைச் சூடியவையும் ஆகிய, ஏதிகள் - ஆயுதங்கள், மிடைந்தன-நெருங்கின; (எ - று.)

தூ - தசை. ஹேதி - வடசொல். வாகை - இருமடியாகுபெயர். ஆதியின் ஏதிகள் என இயையும். ஆதியின் அருக்கன் என எடுத்து, முதற்சுடராகிய தலைமைபெற்ற சூரியனென்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]அஞ்சுறு. [2]உதிரமும். (403)

### 37.—சேனைத்தலைவர்கள்.

ஆயிர மாயிரங் களிற்றி னாற்றலர்
மாயிரு ஞாலத்தை விழுங்கும் வாயினர்
தீயெரி விழியினர் நிருதர் சேனையின்
நாயகர் பதின்மரோ டடுத்த நால்வரே.

(இ-ள்.) ஆயிரம் ஆயிரம் களிற்றின் ஆற்றலர்-மிகப்பல ஆயிரக் கணக்கான யானைகளின் வலிமையையுடையவர்களும், மா இரு ஞாலத்தை விழுங்கும் வாயினர் - மிகப்பெரிய பூலோகத்தையும் உட்கொள்ளத்தக்க [மிகப்பெரிய] வாயையுடையவர்களும், தீ எரி விழியினர்-நெருப்பு மூண்டெரிகிற கண்களையுடையவர்களும் ஆகிய, பதின்மரோடு அடுத்த நால்வர் நிருதர்-பதினான்கு ராக்ஷசர்கள், சேனையின் நாயகர் - அச்சேனைக்குத் தலைவர்களாவார்; (எ-று.)

இரண்டாம்அடி உயர்வுநவிற்சியணி; மற்றவை-தன்மைநவிற்சி. மாயிரு - உரிச்சொற்புணர்ச்சியாதலின், பொதுவிதிக்கு விலக்காக யகரம் பெற்றது. பதின்மரோடு அடுத்த நால்வர் - பத்துப்பேரோடு சேர்ந்த நாலுபேர். (404)

### 38.—அச்சேனைகளின் முழுத்தொகை.

ஆறினொ டாயிர மமைந்த வாயிரங்
[1]கூறின வொருபடை குறித்த வப்படை
[2]ஏறின வேழின திரட்டி யென்பரால்
ஊறின சேனையின் றொகுதி யுன்னுவார்.

(இ-ள்.) ஊறின சேனையின் தொகுதி உன்னுவார்- (வலிமையில்) ஊன்றிய சேனையின் தொகையை எண்ணிக்கணக்கிடுபவர்,—'கூறின ஒரு படை-கீழ்க்கூறப்பட்ட சேனைகளில் ஒன்றன் தொகை, ஆறினொடு ஆயிரம் அமைந்த ஆயிரம்-அறுபத்துலட்சமாகும்; குறித்த அ படை - அவ்வாறுகணக்கிடப்பட்ட சேனைகள், ஏழினது இரட்டி ஏறின - ஏழின் இருமடங்காகப் பெருக்கப்பட்ட பதினைகாகும்', என்பர் - என்று சொல்வார்கள்; (எ-று.)— ஆல் - ஈற்றசை.

முதலடியை, ஆறினாற்பெருக்கிய ஆயிரத்தாற் பெருக்கிய ஆயிர மென்க. பி-ம்:—[1]கூறினது. [2]ஏறினது. (405)

### 39.— இதுமுதல்எட்டுக்கவிகள் - சேனைவீரர்களின்வருணனை.

உரத்தின ருருமென [1]வுரறும் வாயினர்
கரத்தெறி படையினர் கமலத் தோன்றரும்
வரத்தினர் மலையென மழைது யின்றெழு
சிரத்தினர் தருக்கினர் செருக்குஞ் சிந்தையார்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அச்சேனைவீரர்கள்),—உரத்தினர் - மிக்கபலமுடையவர்கள்: உரும் என உரறும் வாயினர்-இடிமுழக்கம்போலப் பேரொலி செய்கிற வாயையுடையவர்கள்: கரத்து எறி படையினர் - கைகளால்

வீசியெறிகிற ஆயுதங்களையுடையவர்கள்: கமலத்தோன் தரும் வரத்தினர்-தாமரைமலரில்தோன்றிய பிரமதேவன் தந்த வரங்களைப் பெற்றவர்கள்: மலை என மழை துயின்று எழு சிரத்தினர் - மலையென்றுஎண்ணி மேகங்கள் நெடும்பொழுது தங்கி யெழப்பெற்ற தலையையுடையவர்கள்: தருக்கினர் - கர்வமுடையவர்கள்: செருக்கும் சிந்தையார்-(எப்பொழுதும்) உற்சாகங்கொண்ட மனமுடையவர்கள்:

மலையென மழைதுயின்றெழு சிரத்தினர்-மயக்கவணி. இதனால், அவர்களது நெடுமை விளங்கும். தருக்கினர் - எப்பொழுதும் வாது பேசுபவ ரென்றும், செருக்கும்-கர்வங்கொண்ட என்றும் உரைக்கலாம். தருக்கு = தர்க்கம்: வாதம். பி-ம்: —[1] உரற்றும். (406)

40. விண்ணள விடநிமிர்ந் துயர்ந்த மேனியர்
கண்[1]ணள விடவரு மார்பர் காலினால்
மண்ணள விடுநெடு [2]வலத்தர் [3]வானவர்
எண்ணள விடவருஞ் செருவென் [4]றேறினர்.

(இ - ள்.) விண் அளவு இட நிமிர்ந்து உயர்ந்த மேனியர் - ஆகாயத்தை அளவிடும்படி மிக ஓங்கிவளர்ந்த உடம்பையுடையவர்கள்; கண் அளவு இட அரு மார்பர் - கண்களால் அளவிடுதற்கு அருமையான [கண்பார்வையினெல்லைக்கு எட்டாதபடி பரந்துள்ள] மார்பையுடையவர்கள்: காலினால் மண் அளவு இடு நெடு வலத்தர் - (தங்கள்) கால்களால் பூமிமுழுவதையும் அளவிடத்தக்க மிக்கவலிமையுடையவர்கள்: வானவர் - தேவர்களோடு நிகழ்ந்த, எண் அளவு இட அரு - எண்ணினால் கணக்கிட முடியாத [மிகப்பலவான], செரு - போர்களில், வென்று - (அவர்களைச்) சயித்து, ஏறினர் - மேம்பாடடைந்தவர்கள்; (எ - று.)

முதலடியில், அளவிட - அளாவியிட எனினுமாம். வானவர் - தேவர்கள், எண் அளவிட-மனத்திலே கொண்டு மதிக்கும்படி, செரு வரும் - (இப்பொழுது) பெரும்போர் நேரும், என்று-என்று எண்ணி, ஏறினர் - (வீராவேசம்) மிகப்பெற்றவர்கள் என்று உரைத்தலும் ஒன்று. வலம் = பலம். பி - ம்: —[1] அளவிடல். [2] வரத்தர். [3] வானிடை. [4] எய்தினர். (407)

41. இந்திரன் முதலினோ ரெறிந்த மாப்படை
[1]சிந்தின தெறித்துகச் செறிந்த தோளினர்
அந்தக னடிதொழ அடங்கு மாணையார்
வெந்தழ லுருவுகொண் டனைய மேனியார்.

(இ - ள்.) இந்திரன் முதலினோர் - இந்திரன் முதலிய தேவர்கள், எறிந்த - வீசிய, மா படை - சிறந்த ஆயுதங்கள், சிந்தின தெறித்து உக - (தம்மைச் சிறிதேனும் ஊறுபடுத்தமாட்டாமல் மேற்பட்டவளவில்) தெறித்துச் சிதறிப் பொடியாய்விழும்படி, செறிந்த-வலிமை மிக்க, தோளினர் - தோள்களையுடையவர்கள்: அந்தகன் அடி தொழுது அடங்கும் ஆணையார் - பிராணிகளுக்கு) அழிவு விளைப்பவனான யமனும் (தங்கள்) பாதங்களில் வணங்கிக் கீழ்ப்படியும்படி செய்யுங் கட்டளையுடையவர்கள்; வெம் தழல் உருவு கொண்டு அனைய

மேனியார் - கொடியநெருப்பு அரக்கரின் வடிவத்தைக்கொண்டாற் போன்ற வடிவமுடையவர்கள்; (எ - று.)

மூன்றாமடியில் தொடர்புயர்வுநவிற்சியணியும், நான்காமடியில் தற்குறிப்பேற்றவணியும் காண்க. பி - ம்:—[1] சிந்தினர். (408)

42. சூலமும் பாசமுந் தொடர்ந்த செம்மயிர்ச்
சாலமுந் தறுகணு மெயிறுந் தாங்கினர்
ஆலமும் வெளிதெனு நிறத்த [1] ராற்றலால்
காலனுங் காலனென் றயிர்க்குங் காட்சியார்.

(இ - ள்) சூலம்உம்-சூலாயுதத்தையும், பாசம்உம் - பாசாயுதத்தையும், தொடர்ந்த செம் மயிர் சாலம்உம்-அடர்ந்த செம்பட்ட மயிர்த்திரளையும், தறுகண்உம் - கொடிய கண்களையும், எயிறுஉம் -கோரதந்தங்களையும், தாங்கினர் - தரித்தவர்கள்; ஆலம்உம் வெளிது எனும் நிறத்தர்-விஷமும் (தங்கள்நிறத்துக்குமுன்) வெண்மையானதென்று சொல்லத்தக்க கருநிறமுடையவர்கள்; ஆற்றலால் - (தமது) வலிமையால், காலன்உம் காலன் என்று அயிர்க்கும் - யமனும் (தன்னையழிப்பானொரு) யமனோ என்று (தங்களை நோக்கிச்) சந்தேகிக்கத்தக்க, காட்சியார் - தோற்றமுடையவர்கள்; (எ - று.)

அரக்கரின் கருமைநிறத்தை விளக்க 'ஆலமும் வெளிதெனும் நிறத்தர்' என்றார். தறுகண் - அஞ்சாமையுமாம். ஜாலம்- வடசொல். பி - ம்:—[1] ஆதலால். (409)

43. கழலினர் தாரினர் கவச மார்பினர்
நிழலுறு பூணினர் [1] நெறித்த நெற்றியர்
அழலுறு குஞ்சிய ரமரை வேட்டுவந்து
[2] எழலுறு மனத்தின [3] ரொருமை யெய்தினர்.

(இ - ள்.) கழலினர்-(காலில்) வீரக்கழ லுடையவர்கள்: தாரினர்-வெற்றிமாலையை யுடையவர்கள்; கவசம் மார்பினர் - கவசத்தைத் தரித்த மார்பையுடையவர்கள்: நிழல் உறு பூணினர் - ஒளி மிக்க ஆபரணங்களையுடையவர்கள்: நெறித்த நெற்றியர் - மேல்நெறித்த நெற்றியையுடையவர்கள்: அழல் உறு குஞ்சியர் - நெருப்பையொத்த தலைமயிர்முடியையுடையவர்கள்: அமரை வேட்டு - போரை விரும்பி, உவந்து - உற்சாகங்கொண்டு, எழல் உறு - கிளர்ச்சியடைகிற, மனத்தினர் - மனத்தையுடையவர்கள்: ஒருமை எய்தினர் - (தமக்குள்) ஒற்றுமைபெற்றவர்கள்; (எ - று.)

மூன்றும் அடியில், உறு-உவமவுருபு. ஒருமையெய்தினர் - ஒரே பிடிவாதமுடையவரெனினுமாம்; தாம் பிடித்ததையே சாதிப்போமென்னும் ஒன்றையே நோக்குபவரென்க. பி - ம்:—[1] நெறித்துப் பொங்கிய. [2] உழலுறு. [3] ஒருவரேயனர். (410)

44. மருப்பிரு மதக்களிற் றமரர் மன்னனும்
விருப்புறு முகத்தெதிர் விழிக்கின் வென்னிடும்

[1]உருப்பெரு துலைவுறு முலக மூன்றினும்
செருப்பெருத் தினவுறு சிகரத் தோளினர்.

(இ - ள்.) இரு - (எளிதில்) ஒடிபடாத [மிகவலிய], மருப்பு - (நான்கு) தந்தங்களையும், மதம் - மதசலத்தையுமுடைய, களிறு - (ஐராவதமென்னும்) ஆண்யானையையுடைய, அமரர் மன்னன்உம் - தேவராசனான இந்திரனும், விருப்புறு முகத்து எதிர் விழிக்கின் - விருப்பில்லாமல் [தன்னடைவே] (தங்களுடைய) முகத்துக்குஎதிரே விழிக்க நேர்பட்டாலும், (அப்போதே), வென் இடும் - முதுகு கொடுத்தோடுவான்; (அன்றியும் அவர்), உருபெரு து-(பெற்றுள்ள) உருவத்தை(த் தாங்கள்) கொண்டு நிற்கமுடியாமல், உலைவு உறும் - அழிவடையுந்தன்மையவான, உலகம் மூன்றின்உம் - மூவகையுலகங் களிலும், செரு பெரு தினவு உறு - (தங்களையெதிர்ப்பவர் எவரு மில்லாமையாற்) போரைப் பெறாமல் தினவுமிக்க, சிகரம் தோளினர் - மலைச்சிகரம்போலுந்தோள்களையுடையவர்கள்; (எ-று.)

இவ்வரக்கவீரர்களைத் தான் போருக்கு எதிர்த்துவரும் நிலையி லன்றிச் சாதாரணமானகாலத்திற் கண்ணுற்பார்க்கநேரிடினும், அப் போதும் தேவேந்திரனும் இவர்களெதிரேநிற்கமாட்டாமல் அச்சம் மிக்கு முதுகு கொடுத்தோடுவானென்று இவர்களின் வீரக்கடுமையை வலியுறுத்தியன, முன்னிரண்டடிகள். விழிக்கின் - கண்பார்வைக்கு இலக்கானால்: கண்ணெடுத்துப் பார்த்தவளவில். மூன்றும் அடிக்கு - இவர்களைக் காணுமிடத்து உலகமூன்றும் எதிர்நிற்கமுடியாது அஞ்சியுலைவுறுமென்க: உருப்பெருதுலைவுறுமுலக மூன்று என்ப தற்கு-இவர்களுடலைத் தாங்கப்பெறாமல் வருந்தும் மூவகையுலகங்க ளெனினுமாம். 'வென்னிடும்' என்ற பயனிலைக்கு 'அமரர்மன்னனும்' என்பது, எழுவாய். பி - ம்:—[1]உருப்பொரு. (411)

45. குஞ்சரங் குதிரைபேய் குரங்கு கோளரி
வெஞ்சினக் கரடிநாய் வேங்கை யாளியென்று
[1]அஞ்சுறக் கனல்புரை முகத்த ரார்கலி
நஞ்சுதொக் கெனப்புரை நயனத் தார்களும்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) குஞ்சரம்-யானை, குதிரை—, பேய்—, குரங்கு—, கோள் அரி-வலிய சிங்கம், வெம் சினம் கரடி-கடுங்கோபமுடைய கரடி, நாய்—, வேங்கை-புலி, யாளி—, என்று - என்கிற இவற்றின் முகவடிவாய், அஞ்சுற-(காண்பவர்) அஞ்சும்படி, கனல் புரை - நெருப்பையொத்த, முகத்தர் - முகத்தையுடையவர்களாகி,—ஆர்கலி நஞ்சு தொக்கு என புரை-பாற்கடலில்தோன்றிய விஷம் திரண்டாற்போலொத்த, நயனத் தார்கள்உம் - கண்களையுடையவர்களும்,—(எ-று.)— இறுதியிலுள்ள உம்மை-எண்ணுப்பொருளது; அடுத்த கவியிலும் இபபடியே: இனி, இறந்தது தழுவிய எச்சவும்மை எனக் கொண்டு, 39-ஆங் கவிமுதல் 46-ஆஞ் செய்யுள் வரையிலும் சேனைவீரர்களின் தன்மைகூறியன என்றலுமாம். பி - ம்:—[1]அஞ்சுதற்கு. (412)

46\. எண்கைய ரெழுகைய ரேழு மெட்டுமாய்க்
கண்கனல் சொரிதரு முகத்தர் [1]காலினர்
[2]வண்கையின் வளைத்துயிர் வாரி [3]வாயினிட்டு
உண்கையி னுவகைய ருலப்பி லார்களும்.

(இ-ள்.) எண் கையர் - எட்டுக்கைகளையுடையவர்களும், எழு கையர்-ஏழுகைகளையுடையவர்களும், ஏழ்உம் எட்டுஉம் ஆய் - ஏழும் எட்டும் என்னுந்தொகையுடையனவாய், கண் கனல் சொரிதரு - கண்களினின்று நெருப்புச்சொரிகிற, முகத்தர் - முகங்களையுடைய வர்களும், காலினர்-(வலிய) கால்களையுடையவர்களும், உயிர்-பிராணி களை, வண் கையின் வளைத்து வாரி - பெரிய (தங்கள்) கைகளால் வாரியெடுத்து, வாயின் இட்டு - வாயிலே போட்டுக்கொண்டு, உண் கையின்--புசிப்பதில், உவகையர்-விருப்பமுள்ளவர்களுமாகி,—உலப்பு இலார்கள்உம் - அழிவில்லாதவர்களும்,—(எ - று.)—'அச்சேனையி லுள்ளோர்' என வருவித்து, இவ்விரண்டு செய்யுட்கும் முடிபு காண்க.

ஏழும் எட்டுமான முக முடையவரென்க. இனி, ஏழுமுகத்தை யும் எட்டுக்கால்களையுமுடைய ரெனினுமாம். பி - ம் :—[1]காலினால். [2]மண். [3]வாயிடுமுண்கையருலக்கையர். (413)

47, 48.—இவையிரண்டும் - ஒருதொடர்: சேனைத்தலைவர்களின் சேனையில் துவசம் முதலியவற்றின் அடர்த்தி கூறும்.

இயக்கரிற் பறித்தன வவுண ரிட்டன
மயக்குறுத் தமரரை வலியின் வாங்கின
துயக்கில்கந் தர்ப்பரைத் துரந்து வாரின
[1]நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின.

கொடிதழை [1]கவிகைவான் றொங்கல் [2]குஞ்சரம்
படியுறு பதாகைமீ விதானம் [3]பல்வகை
இடையிலா தெங்கணு மிசைய மீமிசை
மிடைதலி னுலகெலாம் வெயி[4]லிழந்தவே.

இரண்டுசெய்யுட்கும் ஒருங்கே பொருள் உரைக்கப்படும்.

(இ - ள்.) (47) இயக்கரின் பறித்தன - யட்சர்களிடத்தினின்று வலியக் கவர்ந்தவையும், அவுணர் இட்டன-(தங்களுக்கு) அசுரர்கள் கொடுத்தவையும், அமரரை மயக்குறுத்து வலியின் வாங்கின-தேவர் களை (மாயையால்)மயங்கச்செய்து (அவர்களிடத்தினின்று தாங்கள்) வலிமையாற் பெற்றுக்கொண்டவையும், துயக்கு இல் கந்தர்ப்பரை துரந்து வாரின - சோர்தலில்லாத [வலிய] கந்தர்வர்களைத் துரத்தி யோட்டி வலியஎடுத்துக்கொண்டவையும், நயப்பு உறு சித்தரை நலிந்து வவ்வின - அன்புமிக்க சித்தர்களை வருத்திக் கவர்ந்தவையும் ஆகிய, (48) கொடி - துவசங்களும், தழை - மயிற்பீலிக்குடைகளும், கவிகை - குடைகளும், வான் தொங்கல் - உயர்ந்த குஞ்சங் களும், குஞ்சரம் படியுறு பதாகை - யானைகளின்மேல் அமைதல்

பொருந்திய பெருங்கொடிகளும், மீ விதானம் - மேற்கட்டிகளும், பல் வகை - மற்றும்பலவகை இராசசின்னங்களும், இடை இலாது எங் கண்உம் இசைய - இடைவெளியில்லாமல எவ்விடத்தும்பொருந்த, மீமிசை மிடைதலின் - ஆகாயத்தில் நெருங்குதலால், உலகு எலாம் வெயில் இழந்த - உலகங்களெல்லாம் சூரியனொளியை இழப்பன வாயின; (எ - று.)

47.—இச்செய்யுளினுல் அச்சேனையிற் கட்டியுள்ள கொடிகள் இன்னின்னவகையாய் வந்தன என்பதைக்கூறுகிறுர். கந்தர்பபர் - வடசொற் சிதைவு. நயப்புஉறு - யாவராலும் அன்புசெய்யத்தக்க என்க. பி-ம்:—[1] வியப்புறுபடைக்கல விழுமம்பெற்றுளார்.

48:—கொடிமுதலியன உலகுமுழுவதும் வெயில்புகாதபடி மறைத்து இருளசெய்தனவென்க: தொடர்புயர்வுநவிற்சியணி. தொங்கல் - தொங்குவதாகிய குச்சுக்குத் தொழிலாகுபெயர். [2] குஞ்சகம் என்ற பாடத்துக்கு - மயிர்க்குச்சு என்க. பல்வகையென்றது - சாமரம் ஆலவட்டம் முதலியவறறை. பி - ம்:—[1] கவிகையின். [2] குஞ்ச மேல். [3] பன்மணிக் குடைமிளிர்சாமரைக் குழாங்கொண்டெங்கணும். [4] இழப்பவே. (414, 415)

## 49.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: சேனைத்தலைவரின் வருணனை.

எழுவரொ டெழுவ[1]ரா முலக மேழொடேழ்
தழுவிய வென்றியர் தலைவர் [2]தானையர்
மழுவினர் வாளினர் வயங்கு சூலத்தர்
உழுவையொ டரியென [3]வுடற்றுஞ் சீற்றத்தார்.

(இ - ள்.) எழுவரொடு எழுவர்ஆம் தலைவர் - பதினல்வராகிய அச்சேனைத் தலைவர்கள், உலகம் ஏழொடு ஏழ் தழுவிய வென்றியர் - பதினன்குஉலகங்களிலும் பொருந்திய வெற்றியையுடையவர்கள்; தானையர் - பெருஞ்சேனையுடையவர்கள்: மழுவினர்-மழுவையுடையவர் கள்: வாளினர் - வாளையுடையவர்கள்: வயங்கு சூலத்தர் - விளங்கு கிற சூலத்தையுடையவர்கள்: உழுவையொடு அரி என உடற்றும் சீற்றத்தார் - புலியும் சிங்கமும் போல(ப்பிற வுயிரை) வருத்துங் கோபமுடையவர்கள்; (எ-று.)

39 - ஆங் கவிமுதல் 'தலைவர்' என்றது வரையில், சேனைத் தலைவர் பதினல்வரது சிறப்புக்களைக்கூறி, 'தானையர்' என்றது முதல் அச்சேனைகளிலுள்ள வீரர்களின் தன்மையைக் கூறுகிறுரென் பாருமுளர். பி-ம்:—[1] ரீள். [2] தானையின். [3] உரற்றுஞ். (416)

50. வில்லினர் வாளின [1]ரிதழின் மீதிடும்-
பல்லினர் மேருவைப் பறிக்கு மாற்றலர்
புல்லினர் திசைதொறும் புரவித் தேரினர்
சொல்லின முடிக்குறுந் துணிவி னெஞ்சினர்.

(இ-ள்.) **வில்லினர்**-வில்லையுடையவர்களும், **வாளினர்** - உடை வாளையுடையவர்களும், இதழின்மீது இடும் பல்லினர் - உதட்டின் மேற் கடித்துவைத்த பற்களையுடையவர்களும், மேருவை பறிக்கும் ஆற்றலர்-மகாமேருமலையையும் பறித்தெடுக்கவல்ல வல்லமையுடைய வர்களும், புரவி தேரினர் - குதிரைகள்பூண்ட தேர்களையுடையவர் களும், சொல்லின முடிக்குறும் துணிவின் நெஞ்சினர்-(தாம்)சொன்ன வற்றை (ச் சொன்னபடியே) செய்து முடிக்கவல்ல தைரியமுள்ள மன முடையவர்களுமான அவர்கள், திசை தொறும் புல்லினர்-எல்லாத் திக்குகளிலும், வந்துசேர்ந்தார்கள்; (எ-று.)

கீழ்க்கவியில் வந்த 'வாளினர்' என்றதனோடு கூறியதுகூறலா காமைப்பொருட்டு இக்கவியில், வாள் - உடைவா ளெனக் கொள்ளப் பட்டது. இதழின் மீதிடும்பல்லினராதல், கோபாவேசத்தால். 49-ஆங் கவியில் தானையர் என்பதுமுதல் சேனைவீரரின் தன்மையைக்கூறுவ தாகக்கொள்ளுமிடத்து, ஈற்றடிக்கு - தங்கள் தலைவர்கள்சொன்ன கட்டளைகளைத் தவறுமற்செய்து நிறைவேற்றுந் துணிவுள்ள மன முடையவ ரென்று உரைக்கலாம். பி - ம்:—[1] இதழை. (*417*)

## 51.—சேனைப்பெருந்தலைவர்கள் சேனைகளுடன்வந்து கரனைச் சேர்தல்.

> தூடணன் திரிசிராத் தோன்ற [1]லாதியர்
> கோடணை முரசினங் குளிறு சேனையர்
> ஆடவ ருயிர்கவ ரலங்கல் வேலினர்
> பாடவ நிலையினர் பலருஞ் சுற்றினர்.

(இ - ள்.) ஆடவர் உயிர் கவர் - வீரர்களுடைய உயிரை (உடம்பினின்று) எடுக்கவல்ல, அலங்கல் வேலினர் - வெற்றிமாலை யைத்தரித்த வேலாயுதமுடையவர்களும், பாடவம் நிலையினர் - திறமையுள்ள நிலைமையையுடையவர்களுமாகிய, தூடணன் - தூஷணனும், திரிசிரா தோன்றல் - திரிசிரஸ் என்னும் வீரனும், ஆதியர்-முதலியவர்களான, பலர்உம் - சேனைத்தலைவர்கள்பலரும், கோடணை முரசு இனம் குளிறு சேனையர் - ஆரவாரத்தையுடைய பேரிகைவாத்தியங்கள் முழங்குகிற சேனைகளையுடையவர்களாய், சுற்றினர் - (வந்து கரனைச்) சூழ்ந்தார்கள்; (எ-று.)

தூடணன்முதலிய பெருஞ்சேனைத்தலைவர் தங்கள் சேனை யோடுவந்து கரனைச் சூழ்ந்துகொண்டார்க ளென்பதாம். தூஷ ணன் என்ற வடமொழிப்பெயர் (யாவரையும்) நிந்திப்பவ னென் றும், திரிசிராஃ என்றவடமொழிப்பெயர் - மூன்றுதலைகளையுடை யவனென்றும் பொருள்படும். தோன்றல் - பெருமையிற்சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர். கோடணை = கோஷணம்; வடசொல். பி-ம்:—[1] ஆதியாய்க். (*418*)

## 52.—இப்படிச் சேனை சூழக் கரன் போர்க்குப் புறப்படுதல்.

> ஆன்றமை யெறிபடை யழுவத் தார்கலி
> வான்றொடர் மேருவை வளைத்த தாமென

ஊன்றின தேரின னுயர்ந்த தோளினன்
தோன்றினன் [1]கரனமன் றுணுக்க மெய்தவே.

(இ - ள்.) ஆன்று அமை - நிறைந்துபொருந்திய, எறி படை - பகையழிக்கவல்ல சேனையாகிய, அழுவத்து ஆர்கலி - பரப்பை யுடைய கடல், வான் தொடர் மேருவை - ஆகாயத்தை யளாவிய மேருமலையை, வளைத்தது ஆம் என - வளைத்துக்கொண்டது போல(த் தன்னைச்சூழ), ஊன்றின தேரினன் - (நடுவில்) நிலைப்பட்ட தேரையுடையவனும், உயர்ந்த தோளினன் - உயர்ந்ததோள்களை யுடையவனுமான, கரன்—,—நமன் துணுக்கம் எய்த தோன்றினன் - யமனும் அச்சமடையப் புறப்பட்டான்; (எ - று.)

கடல் மேருவை வளைத்ததுபோலத் தூஷணன் முதலிய அரக்க சேனையர் கரனைச் சூழநின்றன ரென்க. மேரு உவமை கரனுக்கு: தேருக்கு, உவமையுமாம். உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. பி - ம்:—[1]யாவரும். (419)

## 53.—சேனை செல்லுதலால் மேலெழுந்த தூளியின் வருணனை.

அசும்புறு மதகரி புரவி யாடகத்
தசும்புறு [1]சயந்தன மரக்கர் [2]தாடர
விசும்புறு தூளியான் வெண்மை மேயின
[3]பசும்பரிப் பகலவன் பைம்பொற் றேரரோ.

(இ - ள்.) அசும்புஉறு - நீரூற்றையொத்த [இடைவிடாது மேன்மேற் பெருகுகிற], மதம் - மதஜலத்தையுடைய, கரி - யானைகளும், புரவி-குதிரைகளும், ஆடகம் தசும்புஉறு சயந்தனம் - பொன்னலாகிய கலசம் பொருந்திய தேர்களும், அரக்கர்-இராக்கதர்களும், (ஆகிய நால்வகைச்சேனைகளும்), தாள் தர - கால்களை வைத்து நடத்தலால், விசும்பு உறு - (மேலெழுந்து) ஆகாயத்தை யடைந்த, தூளியான் - புழுதிகளால்,—பசு பரி - (தேரிற்) பச்சைக் குதிரைகளைப்பூண்ட, பகலவன் - சூரியனுடைய, பைம்பொன் தேர் - பசும் பொனனிறமான தேரும், வெண்மை மேயின(து) - (தனது நிறம் மழுங்கி மாறுபட்டு) வெண்ணிறமடைந்தது; (எ - று.) அரோ - ஈற்றசை.

நால்வகைச்சேனைக ளெழுப்பிய வெண்புழுதி மிகப்படிதலால் பகலவன் பசும்பரிப் பொற்றேரும் நிறம்மாறினதென்றது - பிறிதின் குணம்பெறலணியாம்: இதனால், மேலெழுந்த தூளியின்மிகுதி தொனிக்கும். [3]பசும்பரிபகலவனஎன்ற இயல்பான பாடத்துக்கு - பகலவனுடைய பைம்பொற்றேரும் அத்தேரிற்பூட்டிய பசும்பரி களும் வெண்மை மேயின வென்க. இரண்டு பாடத்திலும் கருத்து ஒன்றே. தேருக்குக் கால் என்றது, சக்கரத்தை. அரக்கரென்றது, பதாதிவீரரை. பகலவன் - பகற்பொழுதுக்கு உரியவன். ஹாடகம், ஸ்யந்தநம் என்ற வடசொற்கள் திரிந்தன. பி - ம்:—[1]திணி புயத்து. [2]தாடரு. (420)

## 54.—இதுவும் அது.

வனந்துகள் பட்டன மலையின் வானுயர்
கனந்துகள் பட்டன கடல்க டூர்ந்தன
இனந்தொகு தூளியா லிசைப்ப தென்னினிச்
சினந்தொகு நெடுங்கடற் சேனை செல்லவே.

(இ - ள்.) சினம் தொகு-கோபம் மிக்க, நெடு கடல் சேனை-பெரிய கடல்போற்பரந்த இராக்கதசேனை, செல்ல - புறப்பட்டவளவில்,—இனம் தொகு தூளியால்-கூட்டமாகத்திரண்டெழுந்த புழுதியால்,—வனம் துகள் பட்டன - காடுகளெல்லாம் புழுதியடைந்தன; மலையின் வான் உயர் கனம் துகள்பட்டன-மலைகளின் மேலும் வானத்தின் மீதுமாக உயரஏறியுள்ள மேகங்கள் மாசடைந்தன; கடல்கள் தூர்ந்தன-சமுத்திரங்கள் தூர்ந்துபோயின; இனி இசைப்பது என்-இனிச்சொல்லவேண்டுவது யாது? (எ - று.)

சேனைகளெழுப்பிய தூளி வனம் முழுதும் தூளிமயமாக்கியதும் அல்லாமல் மலைமீதும் வானத்தின்மீதும் தங்கிய மேகங்களையும் தூளியாக்கிற்று. மற்றும் கடலிலும் நிரம்பித்தூர்த்தவென்றவாறு: தொடர்புயர்வுநவிற்சியணி. 'இசைப்பதென்னினி' என்றது வியந்து கூறியவாறு. (421)

## 55.—அரக்கர்களின் மிகுதி.

[1]நிலமிசை விசும்பிடை நெருக்க லானெடு
மலைமிசை மலையினம் வருவ பேரன்மலைத்
தலைமிசைத் தலைமிசைத் தாவிச் சென்றனர்
கொலைமிசை நஞ்செனக் கொதிக்கு நெஞ்சினர்.

(இ - ள்.) நிலமிசை-பூமியின்மீதும், விசும்பிடை-ஆகாயத்தின் மேலும், நெருக்கலால்-(இடைவெளியின்றி) நெருக்கமுண்டானதனால்,—கொலை மிசை நஞ்சு என கொதிக்கும் நெஞ்சினர் - கொல்லுதல் தொழிலில் விஷம்போல உக்கிரங்கொள்ளும் மனமுடைய அரக்கர்கள்,—நெடு மலைமிசை மலை இனம் வருவ போல்-உயர்ந்த மலைகளின் மேல் வேறுமலைக்கூட்டங்கள் ஏறிவருவன போல, மலை தலைமிசை தலைமிசை தாவி சென்றனர்-மலைகளினுச்சிதோறும் (கால்வைத்துத்) தாண்டிக்கொண்டு சென்றார்கள்; (எ- று.)

பூமியிலும் ஆகாயத்திலும் சேனை அடர்ந்து வெற்றிடமின்றாக்கினதனால், பல அரக்கர்கள் மலைகளின்மேலேபாய்ந்து நடந்துகொண்டுபோயினரென்பதாம். அவர்க்கு மலைமேல் மலைவருதலை இல்பொருளுவமையாகக் கூறினார். இனி, திரண்டுள்ள அரக்கரின் மலைபோன்ற தலைகள்மீது காலைவைத்து மலைமேல்மலைவருதல் போல் பல அரக்கர்கள் தாவிச் சென்றனரென்றுமாம். வருவ-பெயர். (422)

பி - ம்:—[1]நிலை.

வேறு.

## 56 —அரக்கர்சேனை இராமனுள்ளவிடம் சேர்தல்.

வந்தது சேனை வெள்ளம் வள்ளியோன் [1]மருங்கு [2]மாய
பந்த[3]மா [4]வினையை மாளப் [5]பற்றறு பெற்றி யோர்க்கும்
உந்தரு நிலைய தாகி யுடனுறைந் துயிர்க டம்மை
அந்தகற் களிக்கு நோய்போ லரக்கிமுன் னாக வம்மா.

(இ - ள்.) மாயபந்தம் - மாயையின் தொடர்ச்சியாலாகிய, மா வினையை-பெரிய கருமங்களை, மாள - அழிக்கும்படி, பற்று அறு - உலகப்பற்றொழிந்த, பெற்றியோர்க்குஉம் - பெருமையுடையவர் களுக்கும், உந்து அரு நிலையது ஆகி - விலக்கமுடியாத நிலைமை யுடையதாய், உடன உறைந்து - உடமபுடனே பொருந்தி, உயிர்கள் தம்மை அந்தகறகு அளிக்கும் - அந்தந்த உயிரை யமனுக்குக் கொடுக் கிற [கொனறொழிக்கிற], நோய் போல் - வியாதிபோல, அரக்கி-சூர்ப் பணகை, முன் ஆக - முன்னேசெல்ல, சேனை வெள்ளம்-அவ்விராகக சேனைபபெருககு, வளளியோன் மருங்கு வந்தது - வரையாதருளுந் தன்மையனை இராமபிரானது அருகிலே வந்து சேர்ந்தது; (எ - று.) —அம்மா - ஈற்றசை; சேனையைப்பறறிய வியபபிடைச்சொல்லுமாம்.

அவித்யை யென்று ஒருபெயர்பெறும் அநாதியான மாயை கரு மங்களுக்கெல்லாம் காரணமாதலால், 'மாயபந்த மாவினை' எனப் பட்டது. தானல்லாத உடம்பை யானென்றுகருதி அகமாகிய அத னிடத்துச் செய்யும் பற்றாகிய அகங்காரமும், தன்னோடு இயைபில் லாத பொருளை எனதென்றுகருதிப் புறமாகிய அதனிடத்துச் செய் யும் பறறாகிய மமகாரமும் ஆகிய அபிமானங்களை ஆசிரியரிடத்துக் கேட்ட உபதேசமொழிகளாலும், யோகப்பயிற்சியாலும் அவை யான் எனது அன்மை தெளிந்து முற்றவொழித்தவர்களுப் பிறப்புக்குக் காரணமான கருமங்கள ஒழிதலால், 'வினையைமாளப் பற்றறுபெற்றி யோர்' எனறார். தத்துவ ஞானத்தாற் பற்றற்று வீடுபெறும் நிலையையடைந்தார்க்கும் எடுத்த இவ்வுடம்பால் நுகரப்பெறும்பிரா ரப்தகருமம் இபபிறபபில் அனுபவிககக்கடவதாயே நிற்கும் என்பது நூல்துணிபு. 'முன்கிடந்த துன்பங்களும்மேல்வரக் கடவ துன்பங் களும் இலவாதல் மெய்யுணர்வின்பயன்,' 'இவ்வாற்றானே மெய் யுணர்ந்தார்க்கு நிற்பன, எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப் பயன்களுமே யென்பது பெறறாம்,' 'முன்னும் பின்னும் வினைத் தொடர்பு அறுத்தார்க்குநடுவுநின்றவுடம்பும் அதுகொண்ட வினைப் பயன்களும் நின்றமையின்' என்ற பரிமேலழகருரைவாக்கியங்களின் கருத்து, இங்கு அறியத்தக்கது. இப்படிப்பட்ட பிராரப்த கருமமும், அதனாலாகிய நோயும் அதனாலாகும் மரணமும் தத்துவ ஞானிகளும் அனுபவித்தே தீரவேண்டியதா யிருத்தல் பற்றி, 'பற்றறுபெற்றி யோர்க்கும் உந்தருநிலையதாகி உயிர்கள் தம்மை யந்தகற்கு அளிக்கும் நோய்' என்றார். இராவணன் தங்கையான சூர்ப்பணகை தன்னுடன் பிறந்த முறையில்நின்ற கரன் முதலியோர்க்கு நாசகாரணமாய நிற் றல்பற்றி, 'உடனுறைந்து உயிர் கடம்மை அந்தகற்கு அளிக்கும் நோய்போலரக்கி' என்றார்; கீழ்ப்படலத்திலும் "மேலைநாளுயிரொடும்

பிறந்து தான்வினை, காலமோர்ந்து உடனுறை கடியநோயனுள்" என்று கூறியவாறும் காண்க. இப்படிப்பட்ட சூர்ப்பணகை முன்னே வழிகாட்டிக் கொண்டுசெல்ல அரக்கர்சேனை பின்னேவந்த தென்பதாம். பந்தமாவினை - உயிரைக் கட்டுப்படுத்தும் பெரிய கரும மென்க. மாள = மாள்விக்க; பிறவினைப்பொருளில் வந்த தன்வினை. வினையை யென்பதில் ஐகாரத்தைச் சாரியை யென்று விலக்கி, வினை மாள - கருமம்ஒழிய என்றலும் ஒன்று. பி - ர்:—[1]மருங்கின். [2]மாயாபந்தம், மாயப்பந்தம். [3]ஆம். [4]வினையின். [5]பற்றியபயத்தினார்க்கும்.

இதுமுதல் 14 - கவிகள் - கீழ்ப்படலத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (423)

57. தூரியக்குரலின் [1]வானின் முகிற்கணந் துணுக்கங் கொள்ள
வார்சிலை யொலியி னஞ்சி [2]யுருமெலா மறுக்கங் கொள்ள
ஆர்கலி [3]யார்ப்பி னுட்கி [4]யசைவுற வரக்கர் சேனை
போர் [5]வனத் திருந்த வீர ருறைவிடம் புக்க தன்றே.

(இ - ள்.) தூரியம் குரலின் - வாத்தியங்களின் முழக்கத்தால், வானின முகில் கணம துணுக்கம் கொள்ள - ஆகாயத்திலுள்ள மேகங்களின் கூட்டங்கள் அச்சமடையவும், வார் சிலை ஒலியின் - நீண்ட விறகளின் நாணொலியால், உரும் எலாம் அஞ்சி - இடிகளெல்லாம் பயந்து, மறுக்கம் கொள்ள - கலக்கமடையவும்,—ஆர்ப்பின் - (கர்ச்சனை முதலிய) ஆரவாரத்தால், ஆர்கலி உட்கி அசைவு உற- கடல் அஞ்சி நடுக்கமடையவும,—அரக்கர் சேனை—, அன்றே - அப்பொழுதே, வனத்து இருந்த போர் வீரர் உறைவிடம் புக்கது-அந்தக் காட்டிலிருந்த போரில்வலல வீரர்களான இராமலக்ஷ்மணர் வசிக்குமிடத்தை அடைந்தது; (எ - று.)

தூரியங்களினொலியும் சிலையின் நாணொலியும் மிகுந்தோன்ற அரக்கச்சேனை ஆரவாரஞ் செய்துகொண்டு, இராமலட்சுமணரிருந்த இடத்தைச் சார்ந்த தென்பதாம்: முதல் மூன்றடிகளினும் தனித்தனி தொடர்புயர்வுநவிற்சியணி காண்க போர் வனத்து இருந்த வீரர் என்றே எடுத்து,அரக்கரோடு போர்செய்யும் பொருட்டு வனத்திலிருந்த வீரர்க ளெனினுமாம். அசைவு - தளர்ச்சியுமாம். அன்றே - ஈற்றசையுமாம். பி - ம்:—[1]ஓசைவான்முகில். [2]உருமினம். [3]ஆர்ப்பை. [4]அமைவுற. [5]கருத்து. (424)

### 58 —அச்சேனையைக்கண்டு பறவைகளும் விலங்குகளும் அஞ்சியோடி வருதல்.

வாய்புலர்ந் தழிந்த மெய்யின் [1]வருத்தத்த வழியின் யாண்டும்
ஓய்வில நிமிர்ந்து வீங்கு முயிர்ப்பின வுலைந்த கண்ண
தீயவர் சேனை வந்து 'சேர்ந்தமை தெரியச் சென்று
வேய்தெரிந் துரைப்ப போன்ற புள்ளொடு விலங்கு மம்மா.

(இ - ள்.) புள்ளொடு விலங்குஉம் - (அவ்வனத்திலுள்ள) பறவைகளும் மிருகங்களும்,—வாய் புலர்ந்து அழிந்த - (அச்சேனையைக் கண்டு மிக அஞசியதனுல்) வாய்உலர்ந்து மனநிலைகெட்ட

வையும், மெய்யின் வருத்தத்த - உடம்பின் வருத்தமுடையவையும், வழியின் யாண்டுஉம் ஓய்வு இல - இடைவழியில் எவ்விடத்தும் இளைப்பாறி நிற்றலில்லாதவையும், நிமிர்ந்து வீங்கும் உயிர்ப்பின - மேல்நோக்கிமிக்குவருகிற பெருமூச்சுடையவையும், உலைந்தகண்ண - பார்வை மழுங்கிய கண்களையுடையவையுமாய், (ஓடிவந்து)—, தீயவர் சேனை வந்து சேர்ந்தமை - கொடிய அரக்கர்சேனை வந்து சேர்ந்த செய்தியை, தெரிந்து - (தாம்) அறிந்து, சென்று - முன் வந்து, தெரிய உரைப்ப - (இராமலக்குமணர்) அறியும்படி செய்திகூறுபவரான, வேய் ஒற்றர்களை, போன்ற-ஒத்தன: (எ-று.)— அம்மா-ஈற்றசை; வியப்பிடைச்சொல்லுமாம்.

பறவைகளும் விலங்குகளும் மிக அஞ்சி நிலைகெட்டுத் தரிப் பின்றி அரக்கர்சேனைவருதற்குமுன்னரே இராமபிரான்வீற்றிருந்த பர்ணசாலையைநோக்கி விரைந்தோடிவந்தமை, அரக்கர்சேனைவரு வதை அறிதற்குக் காரணமாயிற்றென்க. அப் பறவைவிலங்குகளை வந்து செய்திகூறும் ஒற்றர் போன்றன வென்றார்; தன்மைத்தற் குறிப்பேற்றவணி. வேய் - ஒற்று. பி - ம்:—[1]வருத்தத்தவ். [2]சேர்ந் தவை. (425)

## 59.—அங்ஙனம் அரக்கர்சேனை வருதலை இராமலக்குமணர் அறிதல்.

தூளியின் படலை வந்து தொடர்வுற மரமுந் [1]தூறுந்
தாளிடை யொடியு மோசை சடசட வொலிப்பக் கானத்து
ஆளியு மரியு மஞ்சி யிரிதரு [2]மலக்க ணோக்கி
மீளிமொய்ம் பினருஞ் சேனை மேல்வந்த துளதென் றுன்னு.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) தூளியின் படலை - புழுதிகளின் கூட்டம், வந்து தொடர்வுஉற - (முன்னே) வந்துதொடரவும்,—மரம்உம் தூறுஉம் - மரங்களும் புதர்களும், தாளிடை ஒடியும் - (அரக்கர்களது) கால் களில் அகப்பட்டு ஒடிபடுதலாலாகிய, ஓசை—, சடசட ஒலிப்ப - சட சடவென்று ஒலிக்கவும்,—கானத்து-காட்டிலுள்ள, ஆளிஉம்-யாளி களும், அரிஉம்-சிங்கங்களும், அஞ்சி இரிதரும் - பயந்து ஓடுகிற, அலக்கண்-துன்பத்தை, நோக்கி-பார்த்து, (அதனால்), மீளி மொய்ம் பினர்உம்-வலியதோள்களையுடைய இராமலக்குமணர்களும், சேனை மேல் வந்தது உளது என்று உன்னு - அரக்கர்சேனை தம்மேல் எதிர்த்துவந்தமை யுண்டென்று எண்ணி,—(எ - று.)— 'உன்னு' என்ற உடன்பாட்டு எச்சத்தை உன்ன எனச் செயவெனெச்சமாகத் திரித்து - இருவரும் நினைத்தவளவில் 'முனவந்த இலக்குமணனை நோக்கி இராமன் கூறலுற்றான்' என அடுத்த கவியோடு முடிக்க.

மிக்க துகளெழுச்சியின் வரவைக் கண்டும், மரவகைகள் ஒடிபடுகிற ஓசையைக் கேட்டும், கொடுவிலங்குகள் அஞ்சியோடுங் குழப்பத்தைப் பார்த்தும் இராமலட்சுமணர் சேனையின் வரவையறிந்தன ரென்க. தூளியின் படலையாலும், மரமுந்தூறுந்தாளிடை ஒடியும் ஓசை

யாலும், ஆளியும் அரியும் அஞ்சியிரிதலாலும் அரக்கச் சேனையின் வருகையை இராமலட்சுமணர் ஊகித்தறிந்ததாக வந்த இது - அநுமானலங்காரம். இனி, தூளியின் படலை வந்து தொடர்தலையும், மரமும் தூறும் ஒடியும் ஓசை ஒலித்தலையும், ஆளியும் அரியும் அஞ்சி இரிதற்குக் காரணமாக்கி யுரைப்பினும் அமையும். படலை=படலம். சடசட-ஈரடுக்கு ஒலிக்குறிப்பு; இரட்டைக்கிளவி. அலக்கண்-சஞ்சலப் பட்டகண்; கண்கலக்கம். இச்செய்யுளின் பின் "மரன்படர்" (62) "மின்னின்ற" (60) "நெறிக்கொண்மாதவர்க்கு" (61) என்ற முறையிற் பாடல்கள் சில ஏட்டுப்பிரதிகளி லுள்ளன. பி-ம்:—[1] தூரும். [2] அமலை.

## 60.—இலக்குமணன் போர்க்குச்சித்தனு யெழுதல்.

மின்னின்ற சிலையன் வீரக் கவசத்தன் விசித்த வாளன்
பொன்னின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன் புகையு நெஞ்சன்
நின்னின்று காண்டி யான்செய் நிலையென விரும்பி [1]நேரா
[2]முன்னின்ற பின்வந் தோனை நோக்கினன் மொழிய லுற்றான்.

(இ - ள்.) மின் நின்ற சிலையன் - மின்னலின்ஒளிபோன்ற ஒளி பொருந்திய வில்லையுடையவனும், வீரம் கவசத்தன்-அழியா வலிமை யுடைய கவசத்தையுடையவனும், விசித்த வாளன் - (இடையிற்) கட்டிய உடைவாளையுடையவனும், பொன் நின்ற வடிம்பின் வாளி புட்டிலன் - அழகுபொருந்திய நுனியுள்ள அம்பைக்கொண்ட தூணியையுடையவனும், புகையும் நெஞ்சன் - கோபத்தீமூண்ட மன முடையவனுமாய், (இராமனை நோக்கி), 'நில் - (போர்தொடங்காது) நில்: நின்று-(அங்ஙனம்) நின்று, யான் செய் நிலை-யான்செய்யும்போர் நிலைமையை, காண்டி-காண்பாய்,' என - என்றுசொல்லி, விரும்பி - (போர்செய்ய) விருப்பங்கொண்டு, நேரா-(போர்க்குச்) சித்தமாகி, முன் நின்ற-(தன்) முன்னே வந்துநின்ற, பின் வந்தோனை நோக்கினன் - (தனது) தம்பியான இலக்குமணனைப் பார்த்து, மொழியல் உற்றான்- (இராமபிரான்)சொல்லத் தொடங்கினான்; (எ-று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

'வனத்திலே கொடிய அரக்கர்களாலும் மற்றும் துஷ்டஜந்துக் களாலும் தனது தமையனார்க்கும் அவரதுதேவியார்க்கும் என்றே னும் ஏதேனும் தீங்கு நேருமோ!' என்று ஆசங்கித்து, இலக்கும ணன், எப்பொழுதும் சாக்கிரதைப் பட்டவனாய் வில்லேந்தித் தூணிதாங்கிக் கவசந்தரித்து வாள்கட்டிப் போர்க்குச் சித்தனாய் நிற்பவன்: நின்ற அவன் இப்போதுபோர்வருவது தெரிந்திடவே பின்னும் போர்முயற்சிகொண்டதன்மையை முன்னிரண்டடி விளக் கும். கீழ்ப்பதினான்குஅரக்கர் எதிர்த்துவந்தபொழுது இராமன் தானே போர்செய்ததுபோல இப்பொழுதும் போர்தொடங்காத படி விலக்கித் தான் போர்செய்யக்கருதி, 'நில்: நின்றுகாண்டி யான் செய்நிலை' என்றான், இலக்குவன். நேரா - (அரக்கரை) எதிர்த்து என்றுமாம். பின்வந்தோன்-பின்பிறந்தவன். பொன்னின்ற வடிம்பு என்பதைப் புட்டிலுக்கு அடைமொழியாக்கி யுரைப்பினுமாம். பி-ம்:— [1]நோக்கி. [2]முன்னின்று.

## 61.—இராமன் இலக்குமணனைப் போர்விலக்கிப்பேசுதல்.

நெறிக்கொண்மா தவர்க்கு முன்னே நேர்ந்தனெ[1]னிருத ராவி
பறிக்குவென் யானே[2]யென்ற பழமொழி பழுது றுமே
வெறிக்கொள்பூங் குழலி னானை வீரநீ வேண்டி னேன்யான்
குறிக்கொடு காத்தி[3]யின்னே கொல்வெனிக் குழுவை[4]யென்னா.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'வீர - வீரனே! நெறி கொள் - சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்த, மா தவர்க்கு - பெருந்தவமுடைய முனிவர்களுக்கு, முன்னே நேர்ந்தனென் - முன்பு (யான்) உடன்பட்டு, யானே நிருதர் ஆவி பறிக்குவென் என்ற - 'நானே அரக்கர்களுயிரைக் கவர்வேன்' என்று உறுதிகூறிய, பழமொழி - முன்னையவார்த்தை, பழுது உறாமே - வீண்படாதபடி, இ குழுவை இன்னே கொல்வென் - இவ்வரக்கர் கூட்டத்தை இப்பொழுதே நான் கொல்வேன்; வெறி கொள் பூ குழலினாளை - இயற்கைமணங்கொண்டதும் மலர்களைச் சூடியதுமான கூந்தலையுடைய ஜாநகியை, நீ குறி கொடு காத்தி - நீ கருத்துக் கொண்டு பாதுகாப்பாயாக: யான் வேண்டினேன் - நான் (உன்னை இது) வேண்டினேன்,' என்னா - என்று (இராமன் இலக்குமணனை நோக்கிச்) சொல்லி,—(எ - று.)—'புட்டில்கட்டிச் சாபமுந் தரித்தான்' என வருங் கவியோடு தொடரும்.

அரக்கர்க்கு அஞ்சிச் சரணமடைந்த தண்டகாரணியவாசிகளான முனிவர்க்கு இராமபிரான் அபயமளித்தமை, கீழ் அகத்தியப் படலத்திற் பரக்கக் கூறப்பட்டது. அரக்கர்குழாத்தை எதிர்த்தழிக்கும் ஆற்றல் தனக்குஇல்லை யென்று தமையன் கருதினதாகக் கொண்டு இலக்குமணன் வருத்தப்படாமைப்பொருட்டு, 'வீர' என விளித்ததோடு 'வேண்டினேன் யான்' என்றுங் கூறினான். குறிக்கொடு - தொகுத்தல்; குறிக்கொள்ளுதல் - சாக்கிரதைப்படுதல், கவனித்தல்.

பி - ம்:—[1] அரக்கர். [2] என்னும். [3] இன்றே. [4] எல்லாம். (428)

## 62.—இராமன் போர்க்கோலங்கொள்ளல்.

மரன்படர் கான மெங்கு மதர்பட வந்த சேனை
கரன்படை யென்ப தெண்ணிக் கருநிறக் கமலக் கண்ணன்
சரன்படர் புட்டில் கட்டிச் சாபமுந் தரித்தான் றள்ளா
உரன்படர் தோளின் மீளாக் கவசமிட் டுடைவா ளார்த்தான்.

(இ - ள்.) மரன் படர் கானம் எங்கும்-மரங்கள் வளர்ந்த காடு முழுவதும், அதர்பட-வழியாம்படி, வந்த—, சேனை—, கரன் படை - கரனுடையசேனை, என்பது எண்ணி-என்பதை நினைத்து,—கரு நிறம் கண்ணன்-கரிய திருநிறத்தையும் செந்தாமரைமலர் போலுந் திருக்கண்களையு முடைய இராமன்,—தள்ளா உரன் படர் தோளில் நீங்காத வலிமை மிக்க தோளிலே, சரன் படர் புட்டில் கட்டி-அம்புகள் நிறைந்த தூணியைக் கட்டி, சாபம்உம் தரித்தான் - வில்லையும் ஏந்தி, மீளா கவசம் இட்டு-நிலைபெயர்க்கப்படாத கவசத்தைத் தரித்து, உடைவாள் ஆர்த்தான்-உடைவாளையும் (அரையிற்) கட்டினான்; (எ-று.)

கீழ்ச் சூர்ப்பணகை "காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக் கொடியானைக் கரனை யுங்கள், கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றேன்" என்று கூறிச் சென்றுள்ளா ளாதலால், வந்தசேனை கரன்சேனை பென்று கருதினன். மரன், சரன், உரன்-மகரனகரம் மாறிவருஞ்சொல். அதர்பட - புழுதிபடிய என்றும், பொடிபட என்றும் உரைக்கலாம். மதர்படவந்த எனஎடுத்து - களிப்புமிகவந்த என்றலும் ஒன்று. மீளாக்கவசம்-அபேத்யகவசம். (429)

## 63.—இலக்குமணன் போருக்கு அனுப்புமாறு மீண்டும் வேண்டுதல்.

மீளருஞ் செருவின் விண்ணு மண்ணுமென் மேல்வந் தாலும்
நாளுலந் தழியு [1]மன்றே நானுனக் குரைப்ப தென்னே
ஆளியின் [2]றுப்பி னுயிவ் வமரெனக் கருளி [3]நின்றென்
[4]தோளினைத் தின்னு கின்ற சோம்பினைத் துடைத்தி யென்றான்.

(இ-ள்.) 'ஆளியின் துப்பினாய் - சிங்கம்போன்ற வலிமையுடையவனே! மீள் அரு செருவில்-(வென்று) மீளுதற்கு அரிய போரில், விணஉம் மணஉம்-மேலுலகத்து உயிர்களும் இவ்வுலகத்து உயிர்களும், மென்மேல் வந்தால்உம் - மேலேமேலே எதிர்த்து வந்தாலும், நாள் உலந்து அழியும் அன்றே-(அவை யாவும் என் முன்) ஆயுள்நாள் ஒழிந்து அழிந்திடுமன்றோ! நான் உனக்கு உரைப்பது என்னே - இதைப்பற்றி நான் உனக்குச் சொல்ல வேண்டுவது உண்டோ? இ அமர் எனக்கு அருளிநின்று - இந்தப் போரை எனக்கு (நீ) கொடுத்து நின்று, என் தோளினை தின்னுகின்ற சோம்பினை-எனது தோள்களை வருத்துகிற சோம்பலை, துடைத்தி - போக்குவாய்,' என்றான்-என்று (இலக்குமணன் இராமனை நோக்கிக்) கூறினான்; (எ-று.)

அடுத்த கவியின் முதலில் "என்றலு மிளையவீரன்" என்றதனால், இப்பாட்டிற்கு எழுவாய் இலக்குமணனென்று அறிக. கீழ் இராமபிரான் தன்கருத்தை வெளியிட்டிருக்கவும் மீண்டும் இலக்குமணன் இங்ஙனங்கூறுதல், இராமனுக்குத் திருமேனிக்காவல் செய்யும்பணிவிடையில் தனக்குஉள்ள வரம்புகடந்த ஊக்கத்தினாலென அறிக; "ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழும், பூங்காரரவு" என்றபடி, ஆதிசேடனவதாரமன்றோ இலக்குமணன்; இனி போர் செய்தலிலுள்ள உற்சாகமும் இதற்குக் காரணமாகலாம். தன்னை இராமன் விலக்கியதற்குக் காரணம் தனது போர்த்திறமையைக் குறைவாக மதித்ததாகலாமென்றுகொண்டு, முன்னிரண்டடிகளில் தனது ஆற்றலை வெளியிட்டான். மென்மேல் - விகாரம்; என்மேல் எனப் பிரித்தலும் ஒன்று. 'நானுனக்குரைப்ப தென்னே' என்றது, உனக்குத்தெரிந்ததே யென வற்புறுத்தியவாறு. நின்று - நீ போரொழிந்துநின்று என்றபடி. "எய்யென வெழுபகை யெங்குமின்மையால், மொய்பொரு தினவுறு முழவுத் தோளினான்" என்றாற்போல, 'தோளினைத் தின்னுகின்ற சோமபு' எனப்பட்டது: சோம்பு - போர்த்தொழிலின்றியிருக்கும் மந்தகுணம். பி - ம் :—[1]என்றே. [2]மொய்ம்பினாய். [3]இன்று. [4]தோளிணை தினவின்வைகும். (430)

## 64.—அதனை இராமன்மறுக்க இலக்குமணன் பிராட்டியைக் காத்துநிற்றல்.

[1]என்றலு மிளைய வீர [2]னிசைந்தில னிராம னேந்துங்
குன்றன தோளி னாற்ற லுள்ளத்தி னுணரக் கொண்டான்
அன்றியு மண்ண லாணை மறுக்கில னங்கை கூப்பி
நின்றன [3]னிருந்தான் கண்ணீர் நிலனுறப் புலர்கின் றாள்பால்.

(இ - ள்.) இளைய வீரன் - இலக்குமணன், என்றலும் - என்று சொன்னவுடன், இராமன் இசைந்திலன் - (அதற்கு) இராமன் உடன்பட்டானில்லை; (ஆதலால் பின்பு இலக்குமணன்), ஏந்தும் குன்று அன தோளின் ஆற்றல் உள்ளத்தின் உணர கொண்டான் - (இராமனது) உயர்ந்த மலையையொத்த தோள்களின் வலிமையை மனத்திலே அறிந்துகொண்டன னாதலாலும், அன்றிஉம் அண்ணல் ஆணை மறுக்கிலன் - அல்லாமலும் தமையனது கட்டளையை மறுக்க மாட்டாதவனாதலாலும், அம் கை கூப்பி நின்றனன் - அழகியகை களைக்கூப்பித் தொழுதுநின்று, கண் நீர் நிலன் உற புலர்கின்றாள்பால் இருந்தான் - கண்களின்நீர் நிலத்திலே வழியும்படி வருந்துகிற பிராட்டிபக்கல் (இராமபிரான் கட்டளைப்படியே பாதுகாவலாக) இருந் தான்; (எ - று.)

[1]என்றனன் இளையவீரன் என்ற பாடத்திற்குக் கீழ்க்கவியிற் கூறியதன் அநுவாதமென்க. 'அரக்கர்கள் கொடியவரும் பெருந் தொகையினரும் ஆதலால், பெருமானுக்கு யாதாகுமோ!' என்று, மாதர்க்கணிகலமாகிய பேதைமையால் பிராட்டி கண்ணீர்சிந்தத் துயருற்றனளென்க. துணையின்றித் தனியே மிகப்பலரோடு போர் செய்யஎழுந்த இராமன் விஷயத்தில் பிராட்டி கவலைப்பட்டதுபோல இலக்குமணன் கவலைப்படாமையின் காரணத்தை இரண்டாம் அடி விளக்கும். அங்கை - அகங்கையுமாம். பி - ம்:—[2]இசைந்தனன். [3]இருந்து. (431)

## 65.—இராமன் பர்ணசாலையினின்று போர்க்குப் புறப்படுதல்.

குழையுறு மதியம் பூத்த கொம்பனாள் குழைந்து சோரத்
தழையுறு சாலை நின்றுந் தனிச்சிலை தரித்த மேரு
மழையென முழங்கு கின்ற வாளெயிற் றரக்கர் காண
முழையினின் றெழுந்து செல்லு மடங்கலின் முனிந்து சென்றான்.

(இ - ள்.) குழை உறு - காதணிகள்பொருந்தியதொரு, மதியம் - சந்திரனை, பூத்த - மலராகப்பெற்றதொரு, கொம்பு - பூங் கொம்பை, அனாள்-ஒத்தவளான சீதை, குழைந்து சோர - தளர்ந்து வருந்த,— தழை உறு சாலைநின்றும்-பர்ணசாலையினின்று,— தனி சிலை தரித்த மேரு - ஒப்பற்றவில்லையேந்திய மகாமேருமலைபோன்ற ஸ்ரீராமன்,—மழை என முழங்குகின்ற வாள்எயிறு அரக்கர் காண - மேகங்கள்போல ஆரவாரிக்கின்ற கூரிய கோரதந்தங்களையுடைய இராக்கதர்கள் பார்க்கும்படி, முழையினின்று எழுந்து செல்லும் மடங்கலின் - மலைக்குகையினின்று எழுந்து வெளிச்செல்லுகிற

ஆண்சிங்கம்போல, முனிந்து சென்றான்-கோபங்கொண்டு வெளியே வந்தான்; (எ-று.)—மேரு, சோர, காண, சாலேயின்றும், மடங்கலின், சென்றா னென்க.

பர்ணசாலேயிலிருந்த இராமபிரான் அங்குத்தானே சீதையை இருக்கும்படியும் இலக்குவனை அன்னவளேக் காக்கும்படியும் கட்டளே யிட்டு மலேமுழைஞசிற சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து வேரிமயிர் பொங்க வெப்பாடும் பேர்ந்துஉதறி மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்படுமாறு போல் அந்தப் பர்ணசாலேயினின்று புறப்பட்டனனென்க.

குழையுறு மதியம் பூத்த கொம்பு - இல்பொருளுவமை. குழை யென்னும் அணியையணிந்த முகம் பூர்ணசந்திரமண்டலத்தை யும், அழகிய மெல்லிய திருமேனி பூங்கொம்பையும் போலுதலால், இங்ஙனங்கூறினர். மதியம், அம் - சாரியை. மேரு - உவமையாகு பெயர். தழையுறுசாலே-தழையால் வேயப்பட்ட உறைவிடம். (432)

## 66.—சூர்ப்பணகை கரன்முதலிய அரக்கர்களுக்கு இராமனேச் சுட்டிக்காட்டல்.

தோன்றிய தோன்ற றன்னேச் சுட்டினள் காட்டிச் சொன்னாள்
வான்றொடர் மூங்கி றந்த வயங்குவெந் [1]தீய தென்னத்
தான்றொடர் குலத்தை யெல்லாந் தொலேக்குமா சமைந்து நின்றாள்
ஏன்றுவந் [2]தெதிர்த்த வீர னிவனிக விராம னென்ன.

(இ - ள்.) வான் தொடர் மூங்கில் தந்த - ஆகாயத்தை அளாவி வளர்ந்த மூங்கில்கள் (ஒன்றோடொன்று உராய்தலால்) உண்டாக்கிய, வயங்கு வெம் தீ அதுஎன்ன-விளங்குகிற கொடிய நெருப்புப்போல, தான் தொடர் குலத்தை எல்லாம் தொலேக்கும் ஆ சமைந்து நின்றாள் - தான் பிறந்தகுலம் முழுவதையும் அழிக்கும்படி பொருந்திநின்ற சூர்பபணகை,-தோன்றிய தோன்றல்தன்னே-வெளிப்புறப்பட்ட இராம பிரானே, சுட்டினள்காட்டி - (கைவிரலாற்) குறித்துக்காண்பித்து, ஏன்று வந்து எதிர்த்த வீரன் இவன் - '(போர்க்கோலம்) பொருந்தி வந்து எதிரபபட்ட இந்த வீரனே, இகல் இராமன்-பகைமைகொண்ட இராமன்,' என்ன சொன்னாள்-என்று சொல்லினாள்; (எ - று.)

மூங்கிலினிடத்துப் பிறந்த நெருப்பு அந்த மூங்கிற்கட்டை யெல்லாம் எரித்தழிப்பதுபோல அரக்கர்குலத்திற் பிறந்த சூர்ப்ப ணகை அவ்வரக்கர்குலத்தை யெல்லாம் அழிப்பதற்கு மூல காரண மாய் நிற்றலின், அவளே மூங்கிலினின்று தோன்றிய நெருப்புக்கு உவமைகூறினர். தீயது, அது - பகுதிப்பொருள்விகுதி. தொலேக்கும் மாசு அமைந்து நின்றாள் என்றுபிரித்து - அழித்தலாகிய குற்றம் பொருந்திநின்றவள் என்று உரைத்தல், மோனேத் தொடைக்குச் சிறவாது. பி -ம் :—[1] தீயிது. [2] எதிர்ந்த. (433)

67.—இராமனைக் கண்ட கரன் நானே இவனைவென் றொழிப்பே னெனல்.

கண்டனன் கனகத் தேர்மேற் கதிரவன் கலங்கி நீங்க
[1]விண்டனி னின்ற வென்றிக் கரனெனும் விலங்கற் றோளான்
மண்டமர் யானே செய்திம் மானிடன் வலியை நீக்கிக்
கொண்டனன் வாகையென்று படைஞரைக் குறித்துச் சொன்னான்.

(இ - ள்.) கதிரவன் கலங்கி நீங்க - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனும் அஞ்சிவிலகும்படி, கனகம் தேர்மேல்-பொன்னினாலாகிய தேரினமேல், விண்தனில் நின்ற - ஆகாயத்தையளாவிநின்ற, வென்றி கரன் எனும் - வெற்றியையுடைய கரனென்கிற, விலங்கல் தோளான் - மலைகள் போலும் தோள்களையுடையனான வீரன்,— கண்டனன்-(இராமபிரானைக்) கண்டு,—படைஞரை குறித்து-(தனது) சேனைவீரரைநோக்கி, 'யானே - நானொருவனே, மண்டு அமர் செய்து-நெருங்கியபோரைச்செய்து, இ மானிடன வலியை நீக்கி - இந்த மனிதனது வலிமையை யொழித்து, வாகை கொண்டனன்-வெற்றிமாலையையணிவேன்,' என்று சொன்னான்—; (எ - று.)

தனிப்பட இராமனொருவனே பொருமாறு எதிர் நிற்றலால், அதுகண்ட கரன் 'இவனை வெல்லத் துணையாக எனக்குச் சேனையாவது துணைப்படைஞராவது வேணுமோ? யானே வெல்வேன்' என்று எளிதாகக்கூறினனென்பதாம்: இது, மேற்செய்யுளில்தெளிவாம். விரைவினாலும், தெளிவினாலும், 'கொண்டனன்' என்று இறந்தகாலத்தாற கூறினான்: காலவழுவமைதி. 'கனகத்தேர்மேல்' என்பதைக் கதிரவனுக்கு கூட்டலாம்; கீழ் "பகலவன் பைம்பொற்றேர்" என்று வந்தமை காண்க. 'விண்டனில் நின்ற' என்பதும், கதிரவனோடுசேர்தற்கு இயையும். இனி, விண்தனில் நின்ற - மேகம் போலநின்ற என்றலும் ஒன்று; விண்-மேகத்துக்கு இடவாகுபெயர்.
[1]பி - ம்:—விண்டனிநின்ற.
(434)

68.—இதுவும் அது.

மானிட னொருவன் வந்த வலிகெழு சேனைக் கம்மா
கானிட மில்லை யென்னுங் கட்டுரை கலந்த காலை
யானுடை வென்றி யென்னாம் யாவருங் கண்டு நிற்றிர்
வானுடை யிவனை யானே யுண்குவெ னுயிரை யென்றான்.

(இ - ள்.) 'மானிடன் ஒருவன் - (எதிரியாய்நிற்கும்) மனிதனோ ஒருத்தன்: வந்த வலி கெழு சேனைக்கு - (அவனுடன் எதிராகப் போர் செய்தற்கு) வந்த வலிமை மிக்க அரக்கர்சேனைக்கோ, கான் இடம் இல்லை - காட்டில்(நிற்க) இடம் போதவில்லை: அம்மா - ஆச்சரியம்!' என்னும் - என்று (உலகத்தார்) சொல்லுகிற, கட்டுரை - ஏற்ற வார்த்தை, கலந்த காலை - உண்டானபொழுது, யான் உடை வென்றி என் ஆம்-நான் கொண்டுள்ள வெற்றி யாதுபயனுடையதாம்? [பயனற்றதா மென்றபடி]; (ஆதலால்), யாவர்உம கண்டு நிற்றிர் - நீங்களெல்லோரும் (போர்தொடங்காமற்) பார்த்துக்கொண்டு நில்லுங்கள்:

யானே - நானொருவனே, ஊன்உடை இவனை உயிரை உண்குவென் - (நமக்கு) இறைச்சியுணவாகுந் தன்மையுடைய இம்மனிதனை உயிர் பருகுவேன,' என்றான் - எனறுசொன்னான், (கரன); (எ - று.)

ஒருமனிதனோடு பொரப் பெருஞ்சேனையோடு சென்றுமிகப்பல அரக்கர் எதிர்த்து வென்றால் அது எனது புகழுக்குப் பழிப்பாம்: ஆதலால், நீங்கள் எல்லீருங் காண யானே இவனை வென்று கொன்று தின்பேன் என்றான். "இருவரெதிரெதிர் தம்மிலிகல் பொருதல் உலகியற்கை" என்ற விலலிபாரதமும் ஈண்டு நினைவு கூர்க. யாவரும் நிற்றிர் - முன்னிலைக்குப் படர்க்கைவந்த இடவழு வமைதி. இவனை உயிரை உண்குவென் - இரண்டுசெயப்படுபொருள் வந்த வினை. (435)

## 69.—அப்போது அகம்பன் தீநிமித்தமுண்டானமையைக் கூறத்தொடங்குதல்.

அவ்வுரை கேட்டு வந்தா னகம்பனென் றமைந்த கல்விச்
செவ்வியா னொருவ னைய செப்புவென் செருவிற் சால
[1]வெவ்விய ராத னன்றே [2]வீரரி லாண்மை வீர
இவ்வயி னுளவாந் தீய நிமித்தமென் றியம்ப லுற்றான்.

(இ - ள்.) அகம்பன் என்று அமைந்த - அகம்பனென்று பேர் பொருந்திய, கல்வி செவ்வியான் ஒருவன் - கல்வியழகைப்பெற்ற ஓரரக்கன்,—அ உரை கேட்டு வந்தான் - அந்தக்கரன் வார்த்தையைக் கேட்டவளவில் (கரனருகில்) வந்து,—'ஐய - தலைவனே! வீரரில் ஆண்மை வீர - வீரர்களுட்சிறந்த பராக்கிரமமுடைய பெருவீரனே! செப்புவென் - (யான் ஒன்று) சொல்லுவேன், (கேட்பாயாக):— செருவில் சால வெவ்வியர் ஆதல் நன்று - போரில் மிகவும் உக்கிர முள்ளவராதல் இயல்பில் நல்லதே; (ஆயினும்), இ வயின்-இவ்விடத் தில் [இப்பொழுது], தீய நிமித்தம் உள ஆம் - துர்நிமித்தங்கள் உண்டாகின்றன', என்று - என்றுசொல்லி, இயம்பல் உற்றான்- (அந்தக்கொடிய நிமித்தங்களை இன்னவை யென்று விவரித்துக்) கூறத் தொடங்கினான்; (எ - று.)—அவற்றை அடுத்த மூன்றுகவி களிற் காண்க.

புள்ளின்நூல் தெரிந்தவ னென்பது தோன்ற, அகம்பனை 'அமைந்த கல்விச்செவ்வியான்' என்றார். அகம்பன் - (போரிற்) சலன மில்லாதவன். சால-உரிச்சொல். நிமித்தம் - பின்னே நிகழும்பயனை முன்னே அறிவிக்குங் குறி. பி - ம்:—[1]வெவ்வலியாதல். [2]வீரருள். ()

வேறு.

## 70.—இதுமுதல் மூன்றுகவிகள் - அரக்கர்பக்கலுண்டான தீநிமித்தங்களை அகம்பன் எடுத்துக் கூறுவன.

குருதி மாமழை சொரிந்தன மேகங்கள் குமுறிப்
பருதி வானவ னூர்வனைப் புண்டது பாராய்

கருது வீரநின் கொடிமிசைக் காக்கையின் கணங்கள்
பொருது வீழ்வன புலம்புவ நிலம்படப் புரள்வ.

நான்கு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) வீர-வீரனே! மேகங்கள்—, குமுறி-முழங்கி, குருதி மா மழை சொரிந்தன-மிக்க இரத்தமழையைப் பொழிந்தன; பருதி வானவன - சூரியனை, ஊர-பரிவேடம், வளைப்புண்டது - சூழ்ந்துகொண்டது; பாராய - (இவற்றைப்) பாரப்பாயாக: காக்கையின் கணங்கள் - காக்கைகளின் கூட்டங்கள், நின கொடி மிசை - உனது துவசத்தின் மேல, பொருது வீழவன - சண்டை செய்து விழுவனவாய, புலம்புவ- அழுதுகொண்டு, நிலம்பட புரளவ-தரையில விழுந்து புரளுகின்றன; கருது - (இதனை) மனத்திறகொளவாய; (எ - று.)

மேகங்கள் குமுறிக் குருதிமழை பொழிதலும், பரிதிவானவனை ஊர்கோள் வளைப்புண்டலும், கொடிமீது காக்கையின் கணங்கள் பொருது வீழ்வனவாயப் புலம்பி நிலம்படப் புரளுதலும் ஆகிய தீநிமித்தங்களை அகம்பன கரனுக்கு எடுத்துக்காட்டினனென்பதாம். ஊர் - ஊர்கோள்; சூழ்ந்துதோன்றும்வட்டம். பருதி வானவன - சூரியனாகிய தேவன். பருதி = பரிதி. கருது வீர என எடுத்தது, மதிக்கத்தக்க வீரனே யென்றுமாம்.

இதுமுதல் 19-கவிகள்-கீழ்ப்படலத்தின் 90-ஆங் கவி போன்ற கவிநிலைத்துறைகள். (437)

71. [1]வாளின் வாய்களை யீவளைக் கின்றன வயவர்
தோளு நாட்டமு மிடந்[2]துடிக் கின்றன தூங்கி
மீளி [3]மொய்ம்பரி [4]னிவுளிவீழ் கின்றன விரவி
ஞாளி யோடுநின் றுளைக்கின்ற நரிக்குலம் பலவால்.

(இ-ள்.) வாளின் வாய்களை-வாளாயுதங்களின் வெட்டு வாய்களை ஈ வளைக்கின்றன-ஈக்கள் சூழுகின்றன; வயவர் தோளும நாட்டமும் - சேனைவீரர்களது தோள்களும கண்களும், இடம் துடிக்கின்றன - இடப்பக்கம் துடிக்கின்றன; மீளி மொயமபரின இவுளி-வலிய தோள்களையுடைய சேனைததலைவரது குதிரைகள், தூங்கி வீழுகின்றன - (போருக்கு நின்ற நிலையில) தூங்கிக் கீழ் விழுகின்றன; ஞாளியோடு - நாயகளுடன், நரி குலம் பல-பல நரிகளின் கூட்டங்கள், விரவி நின்று - கலந்து வந்து நின்று, உளைக்கின்ற - ஊளையிடுகின்றன; (எ-று.)— ஆல்-ஈற்றசை.

வாய்-வெட்டுமிடம். உளைத்தல்-ஒலித்தல். வாள்-ஆயுதப் பொதுவெனக்கொண்டு, வாளின் வாய்களை - ஆயுதங்களின நுனிகளை யென்று உரைத்தலும் ஒன்று. ஆடவர்க்கு இடிந்துடித்தல், தீநிமித்தம். உளைக்கின்ற-முற்று. பி-ம்:—[1]வாளி. [2]துடிக்கின்றது. [3]மொய்ம்புடை. [4]இவுளிகள்விழுவன விறலோய். (438)

72. பிடியெ லாமதம் பெய்திடப் பெருங்[1]கவுள் வேழம்
ஓடியு [2]மான்மருப் புலகமுங் கம்பிக்கு முயர்வான்

இடியும் வீழ்ந்திடு மெரிந்திடும் பெருந்திசை யெவர்க்கும்
முடியின் மாலைகள் புலாலொடு முழுமுடை நாறும்.

(இ - ள்.) பிடி எலாம் - பெண்யானைகளெல்லாம், மதம் பெய்திட-மதசலத்தைச் சொரிய, பெரு கவுள் வேழம்-பெரிய கதுப்புடைய ஆண்யானைகள், மருப்பு ஒடியும்-தந்தங்கள் ஒடியப் பெறும்: உலகம் உம் கம்பிக்கும்-பூமியும் கம்பமடையும்; உயர் வான் இடி உம் வீழ்ந்திடும் - ஓங்கிய வானத்தினின்று இடிகளும் மேல் விழும்; பெரு திசை எரிந்திடும் - பெரிய திக்குக்கள் தாமே பற்றி யெரியும்; எவர்க்கு உம் - (அரக்கர்) எல்லோர்க்கும், முடியின் மாலைகள் - தலைமேல் அணிந்த பூமாலைகள், புலாலொடு முழு முடை நாறும்-புலால்நாற்றத்தோடு மிக்க வேறு துர்க்கந்தமும் வீசும்; (எ - று.)

பெண்யானைகளுக்கு இயல்பில் மதம் இல்லை: ஆதலின், அவை மதம்பெய்தல் தீநிமித்தமாம். ஒடியுமால் ஒன்பதில், ஆல் - அசை; மால் மருப்பு என எடுத்து, பெரிய தந்தங்க ளென்றலும் ஒன்று. மேகமின்றி இடிவிழுதல், துர்நிமித்தம். "பிடிமதம் பிறந்தன", "தடியுடை முகிற்குல மின்றித் தாவில்வான், வெடிபடவதிருமால்", "மற்பகமலர்ந்ததோள்மைந்தர் சூடிய, கற்பக மாலையும் புலவுகாலுமால்", 'வாரண முறியுமால் வலத்தவாண்மருப்பு" என மேற் சுந்தர காண்டத்தில் வருவன, இங்கு உணரற்பாலன. பி - ம் :—[1]கவின். [2]வாள். (439)

## 73.—தீநிமித்தங்களை யெடுத்துக்காட்டிய அகம்பன் 'இராமனை அலட்சியஞ்செய்யலாகாது' என்றல்.

இனைய வாகலின் மானிட னொருவனென் றிவனை
நினைய லாவ[1]திங் கேழைமை நீயமர்க் கியன்ற
வினையெ லாஞ்செய்து வெல்லலாந் தன்மைய னல்லன்
புனையும் வாகையாய் பொறுத்தியென் னுரையெனப் புகன்றான்.

(இ - ள்.) இனைய ஆகலின் - (தீநிமித்தங்கள்) இத்தன்மையன வாயிருத்தலால், மானிடன் ஒருவன் என்று இவனை இங்கு நினையல் ஆவது ஏழைமை-ஒருமனிதனென்று இவனை இப்போது அலட்சியமாக நினைத்தல் அறிவின்மையாம்: நீ அமர்க்கு இயன்ற வினை எலாம் செய்து- நீ போருக்குஏற்றுள்ள தொழில்களெல்லாவற்றையுஞ் செய்தாலும், வெல்லல ஆம் தன்மையன அல்லன்-சயிக்கக்கூடிய தன்மையையுடையவனல்லன் (இவன); புனையும வாகையாய் - அணிகின்ற வெற்றிமாலையையுடையவனே! என் உரை பொறுத்தி - எனது இவ்வார்த்தைகளைப் பொறுத்துக்கொள்வாய், என-என்று, புகன்றான் சொன்னான், (அகம்பன்); (எ - று.)

இப்போது நிகழ்ந்துள்ள தீநிமித்தத்தைப் பார்த்தால் நீ அரக்கரைக்கூட்டிப் பெரும்போர்த்தொழில் செய்தாலும் வெல்ல முடியாதவன் இராமனென்று தோன்றுகின்றதென்று அகம்பன் எச்சரித்தானென்பதாம். இப்படி எதிரியின் திறமையை யெடுத்துக்கூறி விலக்கியதற்குக் கரன் கோபங்கொள்ளாமைப்பொருட்டு

'பொறுத்தி யென்னுரை' என மன்னிப்புக் கேட்டுக்கொண்டா னென்க. பி - ம் :—[1]ஒன்றன்றதுநீதியாகின்ற, ஒன்றன்றதுநீதி யோய்கின்ற. (440)

## 74 —அவ்வார்த்தையைக் கரன் ஏற்றுக்கொள்ளா தொழிதல்.

உரைத்த வாசகங் கேட்டலு முலகெலா முலையச்
சிரித்து [1] நன்றுநஞ் சேவகந் தேவரைத் தேய
அரைத்த வம்மியா மலங்கெழிற் றோளமர் வேண்டி
இரைத்து வீங்குவ [2]மானிடற் கெளியவோ வென்றான்.

(இ - ள்.) உரைத்த வாசகம் கேட்டலும் - (இவ்வாறு அகம் பன்) சொன்ன வார்த்தையைக் கேட்டவளவில், (கரன்), உலகு எலாம் உலைய சிரித்து - உலகங்களெல்லாம் நடுங்கும்படி பெருஞ் சிரிப்புச்சிரித்து,—'தேவரை தேய அரைத்த அம்மி ஆம் - தேவர் களைத் தேயும்படி அரைத்துத்தள்ளிய அம்மிக்கற்போன்றனவும், அமர் வேண்டி இரைத்து வீங்குவ - போரை விரும்பிப் பருத்துப் பூரிப்பனவுமான, அலங்கு எழில் தோள் - அசைந்துவிளங்குகிற அழகையுடைய (நமது) தோள்கள், மானிடற்கு எளியவோ - ஒருமனி தனுக்கு எளிமைப்படுவனவோ? நம் சேவகம் நன்று - நமது வீரம் நன்றாயிருந்தது!,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

தான் முன்பு புயவலிமையால் தேவர்பலரை அழித்தொழித் தமைபற்றி, 'தேவரைத் தேய அரைத்த அம்மியாம் தோள' என்றது. 'தேவர்கள் பலரை எளிதில் அழித்த நாமோ இம்மனிதனொருவனுக்கு அஞ்சுவது?' என்று அகம்பன்கூறியதை ஏளனஞ்செய்து கூறிய வாறு. தோளாகிய அம்மிக்கு வலிமையைக் குழவியாகவும், தேவர் களை அரைக்கப்படுபொருளாகவுங்கொள்க: ஏகதேசவுருவகம், இனி தோளைக் குழவியாகக் கருதி, வீரம் அம்மி யெனப் பட்ட தென்றலு மொன்று. கேட்டலும் சிரித்து என்றானென இயையும். பி - ம்:— [1]நின்றவென், நின்றுதன். [2]மானுடற்கு. (441)

## 75.—அரக்கர்சேனை இராமனைச் சூழ்தல்.

என்னு மாத்திரத் தெறிபடை யிடியென விடியா
மன்னர் மன்னவன் மதலையை [1]வளைந்தன [2]வனத்து
மின்னும் வாலுளை மடங்கலை [3]முனிந்தன வேழந்
துன்னி னாலெனச் சுடுசினத் தரக்கர்தந் தொகுதி.

(இ - ள்.) என்னும் மாத்திரத்து - என்று (கரன்) சொல்லு மள வில்,—வனத்து-காட்டிலே, மின்னும் வால் உளை மடங்கலை - விளங்கு கிற சுத்தமான பிடரிமயிரையுடைய ஆண்சிங்கமொன்றை, முனிந் தனவேழம் துன்னினால் என - கோபங்கொண்டனவான(பல யானை கள் சூழ்ந்துநெருங்கினாற்போல,—மன்னர் மன்னவன் மதலையை - தசரதசக்கரவர்த்தித்திருமகனான இராமனை, சுடு சினத்து அரக்கர் தம்தொகுதி-வெவ்விய கோபத்தையுடைய இராக்கதர்களின் கூட்டங் கள், எறி படை இடி என இடியா - வீசுதற்கு உரிய ஆயுதங்களை

ஒன்றோடொன்று தாக்கி இடிமுழக்கம்போன்ற முழக்கத்தைச் செய்து கொண்டு, வளைந்தன - சூழ்ந்திட்டன; (எ - று.)

இராமனொருவனால் மிகப்பல அரக்கர்குழாம் எளிதில் அழிவது பற்றி, சிங்கத்தை யானைகள் வளைத்தலாகிய இல்பொருளுவமம் கூறினார். [2]வளைந்துஎன்ற பாடத்துக்கு - வளைந்துமின்னுகின்ற வாலிய உளையென்க. பி - ம்:—[1]வளைந்தனர். [2]வளைத்த. [3]முனிந்திட. (442)

## 76—இனி இருபதுகவிகள் - அரக்கர்சேனையை இராமபிரான் அழித்தலைக் கூறும்

வளைந்த காலையில் [1]வளைந்ததவ் விராமன்கை வரிவில்
விளைந்த போரையு மாவதும் விளம்புதும் விசையால்
புளைந்த பாய்பரி புரண்டன புகர்முகப் பூட்கை
உளைந்த மால்வரை யுருமிடி படவொடிந் தென்ன.

(இ - ள்.) வளைந்த காலையில் - (இங்ஙனம் அரக்கர்சேனை இராமனைச்) சூழ்ந்தபொழுதில், அ இராமன் கை வரி வில் வளைந்தது- அந்த இராமபிரானதுகையிலுள்ள கட்டமைந்த வில் (நாணியேற்றி அம்புதொடுக்கும்படி) வளைவுற்றது; விளைந்த போரைஉம் - (அப்பொழுது) உண்டானபோர்த்தொழிலையும், ஆவதுஉம் - அதன் முடிவையும், விளம்புதும் - கூறுவோம்; விசையால் - (இராமபாணங்களின்) வேகத்தால்,—பாய் பரி-பாயுந்தன்மையனவான குதிரைகள், புளைந்த- துளைபட்டனவாய், புரண்டன - கீழ்விழுந்து புரண்டன: உரும் இடி பட - பேரிடிவிழுதலால், மால் வரை ஒடிந்து என்ன - பெரியமலைகள் முறிபட்டாற்போல, புகர் முகம் பூட்கை - செம்புள்ளிகளையுடைய முகத்தையுடைய யானைகள், உளைந்த - வருந்திக் கீழவிழுந்தன;

அரக்கச்சேனை இராமனை வளைந்துகொள்ளவே, அப்பிரான் கையில்லும்வளைந்தது. அவ்வில்லினின்று கணைஎயறிந்தவிசையால்பரிபுரள, இடிபடஒடிந்த வரைபோல யானைகள் உளைந்தன என்பதாம்: ஈற்றடியில் உவமையணி காண்க. 'விளைந்தபோரையு மாவதும் விளம்புதும்' என்றது, கவிக்கூற்று. புளைந்த = புழைந்த: முற்றெச்சம். பூட்கை - புழைக்கை யென்பதன் மரூஉ: உட்டுளையுள்ள கையுடைய தென யானைக்கு அன்மொழித்தொகை. பி-ம் :— [1]வளைந்தன. (443)

77. சூல மற்றன வற்றன சுடர்மழுத் தொகைவாள்
மூல மற்றன வற்றன முரட்டண்டு பிண்டி
பால மற்றன வற்றன பகழிவெம் பகுவாய்
வேலு மற்றன வற்றன வில்லொடு [1]பல்லம்.

(இ - ள்.) (இராமபாணங்களால் அரக்கர்களுடைய), சூலம்-சூலாயுதங்கள், அற்றன - அறுபட்டன; சுடர் மழு தொகை - அக்கினிச்சுவாலையுள்ள மழுவென்னும் ஆயுதங்களின் கூட்டங்கள், அற்றன—: வாள் - வாட்படைகள், மூலம் அற்றன - அடியோடு அறுபட்டன; முரண் தண்டு - வலிமையுடைய கதாயுதங்கள், அற்றன—; பிண்டி பாலம் - பிண்டிபால மென்னும் எறியாயுதங்கள், அற்றன—: பகழி-

அம்புகள், அற்றன—: வெம் பகு வாய் வேல்உம்-கொடிய பிளக்கும் வாயையுடைய வேல்களும், அற்றன—; வில்லொடு பல்லம்-விற்களும் பல்லமென்னும் பாண விசேஷங்களும், அற்றன—; (எ - று.)

பகுவாய்-பிறவினை வினைத்தொகை; பகுத்தல் - தான் படும் உடம்பைப் பிளத்தல். பி - ம்:—[1]பலவும். இப்பாடல், சிலபிரதிகளில் 'சூலமற்றன சுடர்மழுத்தெறித்தனசுரிவாண், மூலமற்றன முசுண்டிக டெறித்த மாப்பிண்டி, பாலமற்றன தெறித்தன தண்டு பறபலவாம், வேலுமற்றனதெறித்தன வில்லொடுபல்லம்' என்று காணப்படு கின்றது. (444)

78\. தொடிது ணிந்தன தோளொடு தோமரந் துணிந்த
அடிது ணிந்தன [1]கடக்களி றச்சொடு நெடுந்[2]தேர்
கொடிது ணிந்தன குரகதந் துணிந்தன குலமா
முடிது ணிந்தன [3]துணிந்தன முளையொடு முசலம்.

(இ-ள்.) தொடி துணிந்தன-தொடியென்னுங் கைவளைகள் துணி பட்டன; தோளொடு தோமரம் துணிந்த - (பிடித்த) கைகளுடனே தோமரமென்னும்ஆயுதங்கள் துணிபட்டன; கடம் களிறு-மதயானை கள், அடி துணிந்தன-கால்கள் துணிபட்டன; அச்சொடு - அச்சு களுடனே, நெடு தேர்-பெரிய தேர்களும், கொடி-தேர்த்துவசங்களும், துணிந்தன—; குரகதம்-குதிரைகள, துணிந்தன—; குலம் மா-கூட்ட மாகிய (யாளிமுதலிய) விலங்குகள், முடி துணிந்தன - தலை துணிபட் டன; முசலம் - உலக்கைகள், முளையொடு துணிந்தன - அடியோடு துணிபட்டன: (எ - று.)

தொடிதுணிந்தன தோளொடு - தோள் தொடியொடு துணிந் தன எனினுமாம். அச்சு - இரிசு. குரகதம் - (ஒற்றைக்) குளம்பு களால் விரைந்து செல்வது; வடசொல். முளையொடு என்பதற்கு - இருப்புமுளையாகிய படைகளும் என்றும், தண்டாயுதங்களும் என் றும் உரைக்கவுங்கூடும். பி - ம் :—[1]கடகளிறு. [2]தேர்க். [3]முளையொடு துணிந்தன. (445)

79\. கருவி மாவொடு கார்மதக் கைம்மலைக் [1]கணத்தோடு
உருவி [2]மாதிரத் தோடின சுடுசர முதிரம்
அருவி [3]மாலையிற் பிறங்கிய தவனியி லரக்கர்
திருவின் மார்பகந் திறந்தன துறந்தன சிரங்கள்.

(இ - ள்.) சுடு சரம் - (இராமபிரானது) வெவ்விய பாணங்கள்,— கருவி மாவொடு-கல்லணைபூண்ட குதிரைகளையும், கார் மதம் கை மலை கணத்தோடு - கருநிறத்தையும் மதசலத்தையும் துதிக்கையையு முடைய மலைபோன்ற யானைகளின் கூட்டத்தையும், உருவி-ஊடுருவி (த்துளைத்து அப்பால் வெளிப்பட்டு), மாதிரத்து ஓடின-திசைகளில் விரைந்துசென்றன: உதிரம்-இரத்தம், அருவி மாலையின்-அருவியின் ஒழுங்குபோல, பிறங்கியது-விளங்கிறறு; அவனியில்-பூமியிலே, அரக் கர்-இராக்கதர்களது, திரு இல் மார்பு அகம்-பொலிவில்லாத மார்பி னிடங்கள், திறந்தன-பிளவுபட்டன; சிரங்கள்-தலைகள், துறந்தன - துணிபட்டு (உடம்பை) நீங்கின; (எ - று.)

அப்போரில் இராமபிரானது சுடுசரங்கள் குதிரைகளையும் யானைகளையும் ஊடுருவி மாதிரத்திலோட, பூமியிற்கிடக்கும் அரக்கரின் மார்பகம் பிளக்கப்படச் சிரங்கள் துணிப்புண்டன: அப்போது உதிரம் அருவிமாலைபோல் அம்புபட்ட பிராணிகளினுடலினின்று பெருகாநின்றது என்பதாம். கருவியென்பது - குதிரையின் மேல் தவிசையுணர்த்துதலை "கல்லணை யுபகரணங் கழறுங் கருவி" என்ற திவாகரத்தாலும் அறிக. 'கருவிமா' எனவே, குதிரையாயிற்று. கார்-மேகம்போன்ற என்றுமாம். மாவொடு, கணத்தோடு - மூன்றனுருபு இரண்டனுருபின் பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். திரு இல்-வெற்றித்திருவுக்கு இடமான என்றுமாம்: இனி, திருவின் மார்பகம் என எடுத்து-வீரலக்ஷ்மியையுடைய மார்பென்றுவது, திரு வில் என எடுத்து-மேலான ஒளியையுடைய என்றுவது உரைக்கலாம். பி - ம்:—[1]கணத்தூடு. [2]மாரியொத்து. [3]மாரியிற்றேங்கின, மாலையிற்பிறங்கினது. (446)

80. ஒன்று பத்துநா றுயிரங் கோடி யென் றுணராத்
துன்று பத்திய விராகவன் சுடுசரந் துரப்பச்
சென்று [1]பத்திரத் தலையின மலைதிரண் டென்னக்
கொன்று பத்தியிற் குவித்தன பிணப்பெருங் குன்றம்.

(இ - ள்.) ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி என்று உணரா-ஒன்று பத்து நூறு ஆயிரம் லக்ஷம் கோடி என்று கணக்கிட்டறிய முடியாதபடி, துன்று-நெருங்கிய, பத்திய - வரிசைப்பட்டனவாகிய, சுடு சரம்-வெவ்விய அம்புகளை, இராகவன் - ரகுகுலத்தில் அவதரித்தவனான ஸ்ரீராமன், துரப்ப - செலுத்த,—(அந்த அம்புகள்),—சென்று-(பகைவர்மேற்) சென்று (பொத்தி), கொன்று-(அவர்களைக்) கொன்று, பத்திரம் தலையின மலை - அம்புகளைத் தலையிற்கொண்ட (பல) மலைகள், திரண்டு என்ன - திரண்டாற்போல, பிணம் பெரு குன்றம்-பெரிய பிணக்குவியல்களை, பத்தியின் குவித்தன - வரிசையாகக் குவியும்படி செய்தன; (எ - று.)

அம்புபொத்தியபிணக்குன்றுகட்கு அம்புகள் பாய்ந்துள்ள மலைகள் உவமையாம். பத்திரம்-அம்பு ஆதலை "பகழியுஞ்சுரிகையும் பத்திரமென்ப" என்ற பிங்கலந்தையாலும் அறிக. [1]பத்திரத்தலையென என்ற பாடத்திற்கு - மலைகளின்சிகரம் போலவும் என்று உரைத்து, தலைக்கு மலைச்சிகரமும் உடம்புக்கு மலையும் உவமையென்க: நூறுயிரம்-இரட்டுறமொழிதல். பத்தி = பங்க்தி. (447)

81. காடு கொண்டகா ருலவைகள் [1]கதழெரி கதுவச்
சூடு கொண்டன வெனத்தொடர் குருதிமீத் தோன்ற
ஆடு கின்றன வறுகுறை யயிலம்பு விண்மேல்
ஓடு கின்றன வுயிரையுந் தொடர்வன வொத்த.

(இ-ள்.) காடு கொண்ட கார் உலவைகள்-வனத்தில் அடர்த்தியாகவுள்ள பெரியமரக்கிளைகள், கதழ் எரி கதுவ - மூளுகிறநெருப்புப் பற்ற, சூடு கொண்டன என - எரிதலைப்பொருந்தினபோல, அறு குறை-தலையற்ற உடற்குறைகள், தொடர் குருதி மீ தோன்ற-வழி

இற-இரத்தம் மேலே காணப்பட, ஆடுகின்றன-துடித்தசைகின்றன; விண்மேல் ஓடுகின்றன அயில் அம்பு - (அரக்கருடல்களையறுத்து விட்டு) ஆகாயத்தின்மேல் விரைந்துசெல்கின்றனவான கூரிய இராம பாணங்கள், உயிரைஉம் தொடர்வன ஒத்த- (அரக்கருடம்பையழித்த மாத்திரத்தோடு திருத்திப்படாமல் அவர்களது) உயிரையும் ஒழிக்கத் தொடர்பவை போன்றன; (எ-று.)

தழையின்றி மொட்டையாயுள்ள மரக்கிளை தலையற்ற அரக்க ருடற்குறையையும், அதன்மேல் தீப்பற்றியெரிதல் அவ்வுடலினின்று இரத்தம் பெருகிவருதலையும் போலும் என்றது—தன்மைத்தற்குறிப் பேற்றவணி: அங்ஙனம் உடற்குறையான கவந்தம் ஆடுமாறு அரக்கர் தலைகளையறுத்த இராமசரங்கள் விண்மேல்ஓடுபவை - வீரசுவர்க்கத் துச்சென்ற அரக்கருயிரையும் ஒழிப்பதற்குத் தொடர்வனபோலு மென்ற இதுவும்-அவ்வகைத் தற்குறிப்பேற்றவணியே. சூடு-முதனிலை திரிந்ததொழிற்பெயர். பி - ம்:—[1]காயெரி. (448)

82. கைகள் வாளொடு [1]களம்படக் கழுத்தறக் கவசம்
மெய்கள் போழ்படத் தாள்விழ [2]மிகநெடு நிருதர்
செய்ய மாத்தலை [3]சிந்திடத் திசையுறச் சென்ற
தையலார்நெடு விழியெனக் கொடியன சரங்கள்.

(இ - ள்.) தையலார் - மகளிரது, நெடு விழி என - நீண்ட கண் கள்போல, கொடியன - கொடுமையுடையனவான, சரங்கள் - இராம னம்புகள்,—மிக நெடு நிருதர் - மிகவும் ஓங்கிவளர்ந்த அரக்கர்களின், கைகள்—, வாளொடு - (ஏந்திய) வாட்படைகளுடனே, களம்பட - போர்க்களத்தில் துணிபட்டுவிழ, கழுத்து அற - கழுத்து அறுபட, கவசம் மெய்கள் போழ்பட - கவசத்தையணிந்த உடம்பு பிளவுபட, தாள் விழ - கால்கள் அற்றுவிழ, செய்ய மா தலை சிந்திட - (அவர்க ளுடைய) சிவந்த [செம்பட்டமயிருள்ள] கரிய தலைகளைச் சிதறுமாறு (செய்து), திசை உற சென்ற - திக்குக்களின் எல்லையை அளாவ அப் பாற்சென்றன; (எ - று.)

மகளிர்கண்போன்று கூரியனவும் மரணாந்தமான துயரை விளைப்பனவுமான இராமசரங்கள், அரக்கரின் வாளேந்திய கைகளும் தாள்களும் அற்று விழவும், கவசமணிந்த உடல்கள் பிளவுபடவும், கழுத்துக்கள் அறுபடவும், தலைகள் சிதறவும் செய்து, திசையுறச் சென்றன என்றவாறு. கவசத்தையணிந்த உடம்பு பிளவுபட்டமை கூறவே, கவசம் பிளவுபட்டமை தானே பெறப்படும். 'செய்யமாத் தலை' என்பதை 86 - ஆங் கவியில் வரும் "விரிந்த செம்மயிர்க் கருந் தலை" என்பதனோடு ஒப்பிடுக. இனி, மாத்தலை - பெருந்தலையுமாம். தையலார்விழிக்குக் கொடுமை, வேட்கைநோய்விளைத்து ஆடவரை வருத்துதலென அறிக். பெரும்பாலும் உபமானமாகக்கூறப்படுகிற சரத்தை உபமேயமாகவும், உபமேயமாகக்கூறப்படும் மகளிர்விழியை உபமானமாகவும் மாற்றிவைத்துக் கூறியது, எதிர்நிலையணி. பி-ம்:—[1]களப்பட. [2]வெருவிட. [3]சிந்தின. (449)

83. மாரி யாக்கிய வடிக்கணை வரைபுரை நிருதர்
பேரி யாக்கையின் பெருங்கரை வயின்றொறும் பிறங்க
ஏரி யாக்கின யாறுக [1]ளியற்றின நிறையச்
சோரி யாக்கின போக்கின வனமெனுந் தொன்மை.

(இ - ள்) வரை புரை - மலையையொத்த, நிருதர் - அரக்கர்களது, பேர் யாக்கையின் - பெரிய உடம்புகளாகிய, பெரு கரை - பெரிய கரைகள், வயின்தொறும் - பக்கங்களிலெல்லாம், பிறங்க - விளங்க, (நீரின்றி வெற்றிடமாகவுள்ள அங்கு), ஏரி - ஏரிகளின் தோற்றத்தை, ஆக்கின-செய்தனவும், யாறுகள் இயற்றின - நதிகளின் தோற்றத்தைச் செய்தனவுமாகி, (அப்போது), (அவற்றினிடையில்), மாரி ஆக்கிய - (இடைவிடாது சொரிதலால்) மழையின் தோற்றத்தைச் செய்த, வடி கணை - கூரிய இராமபாணங்கள் [அம்புமழைகள்],— நிறைய சோரி ஆக்கின - (ஏரியும் ஆறும் போன்ற தோற்றமுண்டாக்கிய வெற்றிடங்களை) நிறையும்படி இரத்தத்தைப் பெருகச்செய்தன; (இங்ஙனஞ்செய்தலால்), (அந்தத் தண்டகவனத்தினிடங்கட்கு), வனம் எனும் தொன்மை போக்கின - காடுகளென்ற பழைய நிலைமையை நீக்கிவிட்டன; (எ - று.)

இராமபாணத்தால் இறந்துவீழ்ந்த அரக்கருடல்கள் ஏரிகளின் கரைபோலவும், ஆறுகளின் கரைபோலவும் அமைந்து, இரு கரைக்கும் இடைப்பட்ட இடங்களை நீரற்ற ஏரியின உள்ளிடங்கள் போலவும் அவ்வாறான யாற்றினுள்ளிடங்கள்போலவும் காணப்படுந் தோற்றத்தையுண்டாக்க, இராமபாணங்கள் மழைபோற் பெய்து இரத்தப் பெருக்குக்களை யுண்டாக்கி, அந்த ஏரியாறுகளை நிரப்பின என்பதாம்: தற்குறிப்போடு கலந்துவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. இங்ஙன் இராமபாணங்கள் அவ்வனம் முழுவதையும் வனத்தன்மையைப் போக்கி இரத்தவேரிகளாகவும், இரத்தநதிகளாகவும் மாற்றின என்க. ஏரியாறுகளைச் செய்தற்கு உரிமைபற்றி அம்பினிடத்து மழையின் தன்மையை ஏற்றிக்கூறினர். பி - ம்:—[1] ஆக்கின வின்ரிக்குள. (450)

84. அலை[1]மி தந்தன குருதியின் பெருங்கட லரக்கர்
தலைமி தந்தன நெடுந்தடி மிதந்தன தடக்கைம்
மலை[2]மி தந்தன வாம்பரி மிதந்தன வயப்போர்ச்
சிலைமி தந்தன கொடியொடு மிதந்தன தேர்கள்.

(இ - ள்.) (அப்பொழுது), அலை மிதந்தன - அலைகள் மிகுதியாகக் கிளரப்பெற்றனவான, குருதியின் பெரு கடல் - பெரிய அவ்விரத்தக்கடலில், அரக்கர் - இராக்கதர்களுடைய, தலை - தலைகள், மிதந்தன—; நெடு தடி - நீண்ட தசைகள், மிதந்தன—; தட கை மலை - பெரிய துதிக்கையையுடைய மலைகள் போன்ற யானைகள், மிதந்தன—; வாம் பரி - தாவிச் செல்லுங் குதிரைகள், மிதந்தன—; வய போர்சிலை - வலிய போருக்கு உரிய விற்கள், மிதந்தன—; கொடியொடு - துவசங்களுடனே, தேர்கள்—, மிதந்தன—; (எ-று.)

அப்போரில் இராமபிரானது வடிக்கணையுண்டாக்கிய குருதிக் கடலில் அரக்கர் தலைமுதலியன மிதக்கலாயின என்பதாம். தடியென்

பதற்கு - தண்டாயுத மென்று உரைப்பாரும் உளர். சொற்பொருட் பின்வருநிலையணி. பி - ம்:—[1]மிகுந்தன. [2]மிதந்தனவாய்ப். (451)

85. ஆய காலையி னனல்விழித் [1]தார்த்திக லரக்கர்
தீய வார்கணை முதலிய [2]தெறுசினப் படைகள்
மேய மால்வரை யொன்றினை [3]வளைத்தன மேகந்
தூய தாரைகள் சொரிவன வாமெனச் சொரிந்தார்.

(இ - ள்.) ஆய காலையின்-அவ்வாறான அப்பொழுது,—இகல் அரக்கர்-வலிமையையுடைய இராக்கதர்கள் (பலர்),—அனல் விழித்து -நெருப்புப்பொறி பறக்கக்கோபத்தோடு விழித்துப்பார்த்து,ஆர்த்து-ஆரவாரஞ்செய்து,—மேய மால் வரை ஒன்றினை வளைத்தன மேகம் - நிலைபொருந்திய பெரிய மலையொன்றைச் சூழ்ந்தனவான மேகங்கள், தூய தாரைகள் சொரிவன என-வெண்மையான மழைத்தாரைகளைப் பொழிவனபோல,—தீய வார் கணை முதலிய தெறு சினம் படைகள்-கொடிய நீண்ட அம்பு முதலிய பகையழிக்கும் உக்கிரமுள்ள ஆயுதங்களை, சொரிந்தார்-(இராமன் மேற்)பொழிந்தார்கள்: (எ - று.)—ஆம்-அசை.

உவமையணி. இங்குக்கூறிய உவமையால், மேகங்கள் திரண்டு சூழ்ந்து எவ்வளவுமழை பொழிந்தாலும் அது மலைக்கு யாதொரு தீங்கையுஞ் செய்யமாட்டாமைபோல, அரக்கர் திரண்டு சூழ்ந்து வீசிய ஆயுதங்கள் பெருமானுக்கு யாதொரூறுபாடும் செய்யமாட்டாமை விளங்கும். பெரிய மலை - போரிற் சலியாது நின்ற இராமனுக்கும், அதைச்சூழ்ந்த மேகம்-இராமனைச் சூழ்ந்த கரிய அரக்கர்க்கும், மழைத்தாரைகள் - ஆயுதங்களுக்கும் உவமை. ஆயுதங்களையேந்தியவரது சினத்தை ஆயுதங்களின்மேலேற்றி, 'தெறுசினப் படை' என்றார்; இது, உடையாரது குணத்தை உடைமையின் மேலேற்றிக் கூறின உபசாரவழக்கு. பி-ம்:—[1]இரைத்து. [2]அடுசினப், சினத்தடு. [3]வளைத்தினம், வளைந்தன. (452)

86. சொரிந்த பல்படை துணிபடத் துணிபடச் சரத்தால்
அரிந்து [1]போந்தன சிந்திடத் திசைதிசை யகற்றி
நெரிந்து பார்மகண் [2]நெளிவுற வனமுற்று நிறைய
விரிந்த செம்மயிர்க் கருந்தலை மலையென [3]வீழ்த்தான்.

(இ-ள்.) (இராமபிரான்), சொரிந்த பல் படை-(தன்மேல் அரக்கர்) சொரிந்த பலவகையாயுதங்களையும், துணி பட துணி பட - பலவாறு துண்டுபடும்படி, சரத்தால்-(தான் எய்யும்) அம்புகளால், அரிந்து - அறுத்துத் தள்ளி,—போந்தன - மற்றும்மேல் வந்த ஆயுதங்களை, திசை திசை சிந்திட-எல்லாத்திக்குக்களிலும் சிதறும்படி, அகற்றி - (தனது அம்புகளால்) விலக்கி,—பார் மகள் நெரிந்து நெளிவு உற - பூமிதேவி நொருங்கி (த் தன் முதுகு [மேற்புறம்] அதிக பாரத்தால்) நெளியவும், வனம் முற்றும் நிறைய-காடு முழுவதும் நிரம்பவும், விரிந்த செம் மயிர் கரு தலை - பரந்த செம்பட்டமயிரையுடைய கரிய அரக்கர் தலைகளை, மலை என வீழ்த்தான் - (அறுத்துத்தள்ளிய) மலை போலக் குவித்தான்: (எ-று.)

இராமபிரான் அரக்கர் பொழிந்த பல படைகளையும் தன் சரங்களால்விலக்கிவிட்டுப்பின்னர்ப்பெரும்பாரத்தால் பூமிதேவிமுதுகு நெளியும்படியும் அவ்வனத்தலங்களெல்லாம் நிரம்பும்படியும் அரக்கரின் கருந்தலைகளை மலைகள்போல் தோன்றும்படி தன் கணைகளாற் கொய்துவீழ்த்தினனென்பதாம். முதலடியில், அடுக்கு-மிகுதி விளக்கும். பி-ம்:—[1]வெந்தன. [2]முதுகிற. [3]விழுந்த. (453)

87. கவந்த பந்தங்கள் களித்தன குளித் தகைம் மலைகள்
[1]சிவந்து பாய்ந்தவெங் குருதியிற் றிருகிய சினத்தால்
நிவந்த வெந்தொழி னிருதர்த நெடுநிணந் தெவிட்டி
உவந்த வன்கழு துயிர்சுமந் துளுக்கிய தும்பர்.

(இ - ள்.) (அப்பொழுது), கவந்த பந்தங்கள் - தலையற்றஉடற்குறைகள், களித்தன-கூத்தாடின; கைம்மலைகள்-யானைகள், சிவந்து பாய்ந்த வெம் குருதியில்-செந்நிறமாய்ப்பெருகிய கொடிய இரத்தத்தில், குளித்த-முழுகின; வல் கழுது-வலிய பேய்கள், திருகிய சினத்தால் நிவந்த-மாறுபாடுகொண்ட கோபத்தால் மிக்க, வெம் தொழில்-கொடுந்தொழிலுடைய, நிருதர் தம்-அரக்கர்களுடைய, நெடு நிணம் - மிக்க கொழுப்பை, தெவிட்டி-தெவிட்டும்படி நிரம்பஉண்டு, உவந்த - மகிழ்ந்தன; உம்பர்-தேவலோகம், உயிர் சுமந்து உளுக்கியது-(இறந்து வீரசுவர்க்கமடைந்த) உயிர்களை மிகுதியாகத்தாங்கி (அந்த அதிக பாரத்தைப் பொறுக்கமாட்டாமையால்) உடல் நெளித்தது; (எ-று.)

இராமசரங்களால் அரக்கர் பெருந்திரளாக மடிந்து மடிந்து விழவே, கவந்தங்கள் கூத்தாட, பெருகின பெருங்குருதி வெள்ளத்தில் யானைகள் மூழ்கின: பேய்கள் நிருதர் நிணங்களை யுண்டு மகிழ்ந்தன: வீரசுவர்க்கம் அப்போது ஆங்குப் போதும் வீரருயிர்களைத் தாங்கமாட்டாது உடல்நெளிந்ததென்பதாம். சேனையில் மிகப்பெரிய தொகை இறந்தபொழுது கவந்தம் எழுந்து கூத்தாடுதல் மரபுஆதலால், 'கவந்தபந்தங்கள் களித்தன' என்றார். கூத்தாடின என்ற பொருளில், 'களித்தன' என்றது, காரியப்பொருளைக் காரணச்சொல்லாற் கூறின உபசாரவழக்கு. உவந்த என்பதைப் பெயரெச்சமாக்கி, நிணந்தெவிட்டி உவந்த வன்கழுது-நிணத்தினிடத்து மிக்கதிருப்தியடைந்து மகிழ்ந்த வலியபேய்க்கணம், உயிர் சுமந்து - (அளவின்றிச உண்டதனால் மிக வயிறுபருத்த தமது உடம்பைச் சுமக்கமாட்டாமல்) பெருமூச்சு விட்டுக்கொண்டு, உம்பர்-ஆகாயத்தில், உளுக்கியது-அசைந்துசென்றது என்று உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு, கழுது-சாதிப்பெயர். இச் செய்யுளில் தொடர்புயர்வுநவிற்சியணி காண்க. (454)
பி-ம்:—[1]சிவந்த.

88. மருட ருங்களி வஞ்சனை வளையெயிற் றரக்கர்
கருட னஞ்சுறு கண்மணி காகமுங் கவர்ந்த
இருட ரும்[1]புரத் திழுதையர் [2]பழுதுறற் கெளிதே
அருட ருந்திறத் தறனன்றி வலியதுண் டாமோ.

(இ - ள்.) மருள் தரும் - மாயையைச் செய்கின்ற, களி வஞ்சனை - களிப்பும் வஞ்சனையுமுள்ள, வளை எயிறு அரக்கர் - வளைந்த

கோர தந்தங்களையுடைய இராக்கதர்களது, கருடன் அஞ்சுறு கண் மணி - (முன்பு) கருடனும்காண அஞ்சும்படியான கண்களின் கரு விழிகளை, காகம்உம் கவர்ந்த - (இப்பொழுது) காக்கைகளும் பறித் திட்டன; இருள் தரும் புரத்து இழுதையர் - இருளை யொத்த [மிகக் கரிய] உடம்பையுடைய வஞ்சகர்களிடத்தில், பழுது - அழிவு, உறற்கு எளிதுஏ - வருதற்கு எளியதேயாம்; அருள் தரும் திறத்து-கருணை யைச்செய்கிற தன்மையையுடைய, அறன் அன்றி - தருமமே யல்லா மல், வலியது - வலிமையுடையது, உண்டாம்ஓ - (உலகத்தில் வேறு) உள்ளதாமோ? (எ - று.)

"அறத்தினூங் காக்க மெவனோ வுயிர்க்கு", அறத்தினூங் காக் கமுமில்லையதனை, மறத்தலி னூங்கில்லை கேடு" என்றபடி உயிர்களுக் குத் தருமத்தினும் மிக்க நன்மைதருவதும் அதருமத்தினும் மிக்க கேடுதருவதும் வேறில்லையாதலால், அதர்மிஷ்டரான அரக்கர் எளி தாக அழிவடைந்தன ரென்க. ஈற்றடி - இராமபிரானே வென்றமை யைத் தெரிவிப்பது - பிறிதுமொழிதலணி. மூன்றும்அடி - முதலிரண் டடியிற் கூறிய பொருளைச் சாதித்தது - வேற்றுப்பொருள்வைப்பணி. பறவைகட்கு அரசனாதலாலும், திருமாலுக்கு வாகனமாதலாலும், கருடனையெடுத்துக் கூறினர். கருடனென்ற இடத்து உயர்வுசிறப் பும்மை விகாரத்தால் தொக்கது. காகமும், உம்மை - இழிவுசிறப்பு. இழுதையர் - பொய்யரும், அறிவிலருமாம். "அறனுமருளுடையான் கண்ணதே" என்றபடி அறத்துக்கு அருள் இன்றியமையாதாதலால், 'அருள்தருந் திறத்து அறன்' எனப்பட்டது. பி - ம்:—[1]புறத்து. [2]பழுதுரைக்கு. (455)

வேறு.

89\. பல்லாயிர மிருள்கீறிய பகலோனென வொளிரும்
வில்லாளனை முனியாவெயி லயிலாமென விழியாக்
கல்லார்மழை கணமாமுகில் கடைநாள் [1]விழு வனபோல்
எல்லாமொரு தொடையாவுட னெய்தார் [2]வினை செய்தார்.

(இ - ள்.) (இங்ஙனம் அரக்கரையழித்து), பல் ஆயிரம் இருள் கீறிய பகலோன் என ஒளிரும் - மிகப்பலவாகிய இருள்களின் தொகு தியைக் கிண்டழித்த சூரியன்போல விளங்குகிற, வில்லாளனை - விற் போரில் மிக்கவல்லவனான இராமபிரானை, (மற்றும் பல அரக்கர்கள்), —முனியா - கோபித்து, வெயில் அயில் ஆம் என விழியா - ஒளியை யுடைய வேலாயுதம்போலக் கூர்மையாகக் கண்விழித்துநோக்கி,— கணம் மா முகில்-கூட்டமாகிய கரியபெரிய மேகங்கள், கடை நாள் - கற்பாந்தகாலத்தில், கல் ஆர் மழை-கற்களால் நிறைந்த மழை, விழு வன போல்-சொரிவனபோலத் தோன்றுமாறு, எல்லாம் - எல்லா வகை அம்புகளையும், ஒரு தொடை ஆ-ஒரேதொடர்ச்சியாக, உடன் எய்தார்-ஒருங்கே (இராமன்மேல்) எய்து, வினை செய்தார் - போர்த் தொழிலைச் செய்தார்கள்; (எ - று.)

பல்லாயிரமிருள் - போரிலிறந்த பலஆயிரம் அரக்கர்களுக்கும், பகலோன்-இராமனுக்கும்; கல்மழை-பாணவருஷத்துக்கும், மேகக்

கூட்டம்-அரக்கர்குழாத்துக்கும் உவமை. எய்தார் என்ற வினையினால், 'எல்லாம்' என்றது, அம்புகளாயின. ஒருதொடையா-தொடுக்குந்தரமொன்றிலே செல்ல என்றபடி. கல்லார் என எடுத்து, தேர்ந்த அறிவில்லாத அரக்கரென்று உரைத்து, அதனை இப்பாட்டுக்கு எழுவாயாக்கலும் ஒன்று. பி-ம்:—[1]விடுவன. [2]படையெறிந்தார்.

இதுமுதற் பதினான்கு கவிகள்-ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும் மாங்கனிச்சீருமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (456)

90. எறிந்தாரென வெய்தாரென [1]நினைந்தாரென வெறிய
[2]அறிந்தாரென வறியாவகை யயில்வாளியி னறுத்தான்
செறிந்தாரையும் பிறிந்தாரையுஞ் செறுத்தாரையுஞ் [3]சினத்தான்
மறிந்தாரையும் வலித்தாரையு மடித்தான்சிலை பிடித்தான்.

(இ - ள்.) சிலை பிடித்தான்-வில்லைக்கையிலேந்தியவனான இராமபிரான்,—செறிந்தாரைஉம்-கூட்டங்கூட்டமாகத் திரண்டு வந்த அரக்கர்களையும், பிறிந்தாரைஉம்-தனித்தனி எதிர்த்து வந்த அரக்கர்களையும், செறுத்தாரைஉம்-மிகக்கோபித்துப் பகைத்த அரக்கர்களையும், சினத்தால் மறிந்தாரைஉம்-(முன்பு தோற்றோடிப் பின்பு) கோபத்தால் மீண்டுவந்த அரக்கர்களையும், வலித்தாரைஉம் - வலியப்போர் செய்த அரக்கர்களையும், (ஆக அனைவரையும்),—எறிந்தார் என - (இன்னார் வேல்முதலிய ஆயுதங்களை) மேல்வீசியவரென்றும், எய்தார் என-(இன்னார் பாணங்களைப்) பிரயோகித்தவரென்றும், நினைந்தார் என-(இன்னார் ஆயுதங்களை உபயோகிக்கக்) கருதினவரென்றும், எறிய அறிந்தார் என - (இன்னார் ஆயுதங்களை வீச) ஆராய்ந்து துணிந்தவரென்றும், அறியாவகை-அறியாதபடி,—அயில் வாளியின் அறுத்தான் - கூர்மையான (தனது) அம்புகளால் துணித்து, மடித்தான்-கொன்றொழித்தான்; (எ - று.)

இன்ன அரக்கர் இன்னவிதமாய் இன்னது செய்தாரெனறு அறியலாகாதபடி அவர்களையெல்லாம் மிகவிரைவில் ஸ்ரீராமன் துணித்திட்டனனென்க. செறிந்தார் - தன்னைச்சூழ்ந்து நெருங்கி நின்றவரும், பிறிந்தார் - விலகித்தூரத்தில் நின்றவரும் என்றும் உரைக்கலாம். சினம் - 'கோபத்தின்பின்னாகச் சிறிதுபொழுதிற்பது' எனப்படும். சினத்தால் மறிந்தார் என்பதற்கு - (ஓடுகிறவர்களைக்) கோபத்தினாலே தடுத்தவர்களென்றும், வலித்தார் என்பதற்கு - (பயந்தவர்களைப் போர்க்குவரும்படி) பிடித்திழுத்தவரென்றும் உரைப்பாருமுளர். பிறிந்தார் = பிரிந்தார். பி - ம்:—[1]எறியாநினைந்தனவும். [2]அறிந்தானென. [3]இறத்தால். (457)

91. வானத்தன கடலின்புற வலயத்தன மதிசூழ்
மீனத்தன [1]மிளிர்குண்டல வதனத்தன மிடல்வெங்
கானத்தன மலையத்தன திசை[2]முற்றிய கரியின்
தானத்தன காகுத்தன சரமுந்திய சிரமே.

(இ - ள்.) மிளிர் குண்டலம் வதனத்தன - விளங்குகிற குண்டலமென்னுங்காதணியையுடைய முகத்தையுடையனவான, காகுத்தன சரம் உந்திய - இராமபிரானுடைய அம்புகளால் அறுத்துத் தள்ளப்பட்ட, சிரம் - தலைகள்,—வானத்தன - மேகமண்டலத்திற் சென்று சேர்ந்தவையும், கடலின் புறம் வலயத்தன - கடலின் வெளிவட்டத்திற் சென்றுசேர்ந்தவையும், மதி சூழ் மீனத்தன - சந்திரனைச் சூழ்ந்துள்ள நக்ஷத்திரமண்டலத்திற் சென்றுசேர்ந்தவையும், மிடல் வெம் கானத்தன - வலியகொடிய காடுகளிற் சென்றுசேர்ந்தவையும், மலையத்தன - மலைகளிற் சென்றுசேர்ந்தவையும், திசை முற்றிய கரியின் தானத்தன - திக்குக்களின் எல்லையிலுள்ள (எட்டுத்திக்கு) யானையினிடத்திற் சென்றுசேர்ந்தவையுமாயின; (எ - று.)

எப்புறத்தும் நெடுந்தூரத்துக்கு அப்பாற் சென்று விழுந்தன என்பதாம். வானம் - சுவர்க்கலோகமுமாம். மீன்-விண்மீன். [1]மிளிர் குண்டலமிதுனத்தன என்ற பாடத்திற்கு - விளங்குகிற இரண்டு குண்டலங்களை யுடையவையாகிய என்று உரைத்து, சிரத்துக்கு அடைமொழியாக்குக. இதற்கு வேறுவகை யுரைத்தல், சுற்று வழியாம். காகுத்ஸ்தன்-வடசொல்: ககுத்ஸ்தனென்னும்அரசனது குலத்திற் பிறந்தவன்: அ-ஆறனுருபு. பி - ம் :—[2]சுற்றிய. (458)

92. மண்மேலன மலைமேலன மழைமேலன மதிதோய்
விண்மேலன நெடு [1]வேலையி னிடமேயின மிடலோர்
புண் [2]மேலுகு குருதிப் [3]பொரு திரையாறுகள் பொங்கத்
திண்மேருவை நகுமார்பினை [4]யுருவித்திரி சரமே.

(இ - ள்.) புண் மேல் உகு - புண்பட்டஉடல்களினின்று பெருகுவனவான, குருதி - இரத்தவெள்ளங்களாகிய, பொரு திரை ஆறுகள்-மோதுகிற அலைகளையுடைய நதிகள், பொங்க - மிகும்படி, மிடலோர் - வலிமையையுடைய அரக்கர்களது, திண் மேருவை நகும் மார்பினை - வலிய மகாமேருமலையையும் (தமதுவலிமைக்கு ஈடாகாதென்று) பரிகசிக்கின்ற மார்புகளை, உருவி - முழுவதுந் துளைத்து, திரி - அப்பாற்சென்ற, சரம் - இராமபாணங்கள்,—மண் மேலன - தரையில் விழுந்தவையும், மலை மேலன - மலைகளின்மேல் விழுந்தவையும், மழை மேலன - மேகங்களின்மேற் பட்டவையும், மதி தோய் விண் மேலன - சந்திரன் பொருந்திய ஆகாயத்தின்மேற் சென்றவையும், நெடு வேலையின் இடம் மேயின - பெரிய கடல்களினிடத்துச்சென்றவையு மாயின; (எ-று.)

இரத்தநதிகள் தோன்றும்படி அரக்கர்மார்பினை யூடுருவிச் சென்ற இராமசரங்கள், 'மண்மேலன......நெடுவேலையின் இடம் மேயின' என்க. இராமபாணம் ஒன்றற்கு அனேக இடத்துச் சென்றிருந்தமைகூறியது - முறையிற்படர்ச்சியணி: வடநூலார் பர்யாயாலங்காரமென்பர். இது, இராமனம்புகள் எதிரிகளுடலை யூடுருவிச்சென்ற விசையின் மிகுதியை விளக்கும். நகு - ஒத்த என உவமவுருபுமாம். பி - ம்:—[1]வேலையின் மேல்கீழன. [2]மேலன. [3]பொழி. [4]உருவுந்தெரி. (459)

93. பொலந்தா ரினரனலின் சிகை[1]பொழி கண்ணின [2]ரிமையோர்
வலந்தாங்கிய வடிவெம்படை விடுவார்சர மழையால்
உலந்தாருட [3]லடலோர்துறந் துலவாவுட லுற்ருர்
அலந்தார்நிசி சரராமென [4]விமையோரெடுத் தார்த்தார்.

(இ - ள்.) பொலம் தாரினர்-அழகிய மாலையையுடையவர்களும், அனலின் சிகை பொழி கண்ணினர்-அக்கினிச்சுவாலையைச் சிந்துகிற கண்களையுடையவர்களும், வலம் தாங்கிய வடி வெம் இமையோர் படை விடுவார்-வலிமைகொண்ட கூரிய கொடிய தெய்வாஸ்திரங்களை (இராமன்மேல்) எறிபவர்களுமாகிய, நிசிசரர்-அரக்கர்கள், சரம் மழையால் அடல்ஒ துறந்து - (இராமனது) பாணவர்ஷத்தால் (தமது) வலிமை கெட்டு, அலந்தார்-துன்புற்று, உடல் உலந்தார்-உடலழிந்து [இறந்து], உலவா உடல் உற்ருர் என-(தாம்தாம்) அழியாத தேவ சரீரத்தைப் பெற்ருர்களாக, இமையோர்-(தம்பகைவர் அழிவடைந்தா ரென்று மகிழ்ந்து) தேவர்கள், எடுத்து ஆர்த்தார் - குரலெடுத்து ஆரவாரஞ்செய்தார்கள்; (எ - று.)

[4]இமையோரொடு மார்த்தார் என்ற பாடத்துக்கு—போர்க் கோலங்கொண்டு வந்த கொடிய அரக்கர்கள் இராமன்மேற் படைக் கலங்களை யெறிந்தமாத்திரத்தில் அவனது அம்புகளால் துணிபட்டு இறக்க, தம்முடம்பை விட்டு நீங்கிச் சென்றவராய், உடனே வீர சுவர்க்கத்துக்கு உரிய தேவசரீரத்தைப் பெற்று வானத்தின்மீது எழுந்துநின்று, தாம் தேவர்களாயினமைக்கு ஏற்ற குணம் செயல் களை உடனேயடைந்து, அங்குநின்று போர் கண்டு அரக்கரழிவுக்கு மகிழுந் தேவர்கள்போலவே தாமும் அரக்கரழிவுக்குமகிழ்ந்துகளித்து ஆர்த்தனரென்பதாம்: இவ்வுரைக்கு அரக்கராயிருந்தவர் இறந்து ஒருநொடியில் தேவர்களாகமாறித் தாமே தமதுஅழிவுக்கு மகிழ்ந்தன ரென்ற இது, விபாவனை யென்னும் காரணவாராய்ச்சியணியின் வகை யைச்சேர்ந்ததாம். சிகை—வடசொல் திரிபு. வலம்-பலம். இனி, வலந் தாங்கியஎன்பதற்கு-வலக்கையிற் பிடித்த என்று உரைப்பாரும் உளர். நிசிசரர்-இரவில் (மிக்க வலிமை கொண்டு) சஞ்சரிப்பவர். அட லோ, ஓ-தெரிநிலை. பி - ம்:—[1]பொதி. [2]எவரும். [3]சுடலோடுற. (460)

94. ஈரற்செறி கமலத்தன விரதத் [1]திரள் புளினம்
வீரக்கரி முதலைக்குல மிதக்கின்றன [2]வுதிக்கும்
பாரக்குடர் மிடைபாசடை படர்கின்றன பலவான்
மூரித்திரை யுதிரக் [3]கடன் முழுகிக்கழு தெழவே.

(இ - ள்.) ஈரல் - (இறந்தபிராணிகளின்) ஈரல்களாகிய, செறி கமலத்தன - நெருங்கிய தாமரைமலர்களையுடையவையும், இரதம் - தேர்களாகிய, திரள் புளினம் - திரண்ட மணற்குன்றுகளையுடைய வையும், வீரம் கரி - வலியயானைகளாகிய, முதலை குலம் - முதலை களினகூட்டம், மிதக்கின்றன - மிதக்கப்பெற்றவையும், பாரம் குடர்- கனத்த குடல்களாகிய, மிடை பாசடை - நெருங்கிய பசியதாமரை யிலைகள், படர்கின்றன - மேலேபரவப்பெற்றவையுமாகிய, மூரிதிரை உதிரம் கடல் பல - பெரிய அலைகளையுடைய இரத்தக்கடல்கள் அநே

கும், கழுது முழுகி எழ-பேய்கள் முழுகிக்கிளம்பும்படி, உதிக்கும்-உண்டாயின; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

பெரிய இரத்தவெள்ளத்தைப் பேய்கள் நீராடியெழுதற்கிடமான தாமரைப்பொய்கைகளென்று உருவகப்படுத்தி, அவற்றுக்குக் குடல்களைத் தாமரையிலைகளாகவும், ஈரல்களைத் தாமரைமலர்களாகவும், தேர்களை மணற்குன்றுகளாகவும், யானைகளை முதலைகளாகவும் குறித்து வருணித்தார். ஈரல் - இதயத்தானம். பி-ம்:—[1] துறை. [2] உதிர்க்கும். [3] குளம். (461)

95. அழைத்தார் சிலர் [1] ரயர்ந்தார்சில [2] ரழிந்தார்சிலர் கழிந்தார், உழைத்தார்சில ருயிர்த்தார்சில ருருண்டார்சிலர் புரண்டார், குழைத் தாழ்திரைக் குருதிக்கடல் குளித்தார்சிலர் [3] கொலைவாய், மழைத் தாரைகள் படப்பாரிடை மடிந்தார்சில [4] ருடைந்தார்.

(இ - ள்.) கொலை வாய் மழை தாரைகள் - (பகைவரைக்) கொல்லுந்தன்மையுடைய நுனியையுடைய (இராமனது அம்பு) மழைப்பெருக்குகள், பட - மேல்விழுவதனால்,—சிலர் - (அரக்கர்களிற்) சில பேர், அழைத்தார் - (துன்பம்பொறுக்கமாட்டாமல் ஐயா அப்பா என்று) கூப்பிட்டார்கள்; சிலர்—, அயர்ந்தார் - சோர்ந்தார்கள்; சிலர்—, அழிந்தார் - உருவழிந்தார்கள்; சிலர்—, கழிந்தார் - நெடுந் தூரம் விலகிச்சென்றார்கள்; சிலர்—, உழைத்தார் - மிகவருத்தப்பட்டார்கள்; சிலர்—, உயிர்த்தார் - பெருமூச்சுவிட்டார்கள்; சிலர்—, உருண்டார் - (தரையிலே) உருண்டார்கள்; (சிலர்), புரண்டார்-(தரையிலே) புரண்டார்கள்; சிலர்—, குழை தாழ் திரை குருதி கடல்-குழை சேறுபெற்ற ஆழ்ந்த அலைகளையுடைய இரத்தக்கடலில், குளித்தார்-முழுகினார்கள்; சிலர்—, பாரிடை மடிந்தார் - தரையிலே விழுந்திறந்தார்கள்; (சிலர்), உடைந்தார் - உறுதிநிலைகெட்டார்கள்; (எ-று.)

பல அரக்கவீரர்களும் இராமனம்புகளாற் பலபடி ஆயினமையை, இச்செய்யுள் தெரிவிக்கும். அழைத்தார் என்பதற்கு-தமக்குத்துணை செய்தற்குப் பிறரையழைத்தார்களென்றும் உரைக்கலாம். 'குழைத் தாழ்' என்பதைக் குழைத்து ஆழ் எனப் பிரிப்பினும் அமையும். 'கொலைவாய்' என்ற அடைமொழியால், மழை-அம்புமழையாயிற்று. பி - ம்:—[1] ஆர்த்தார். [2] ஆழ்ந்தார். [3] குளிர்மா. [4] மருண்டார். (462)

## 96.—பதினான்கு சேனைத்தலைவர் தம்சேனைகளோடு பொரவருதல்.

உடைந்தார்களை நகைசெய்தன ருருடேரின ருடனாய்
அடைந்தார்படைத் தலைவீரர்கள் பதினால்வரு மயில்வாள்
மிடைந்தார்நெடுங் கடற்றானையர் மிடல்வில்லினர் விரிநீர்
கடைந்தார்வெரு வுறமீதெழு கடுவாமெனக் கொடியார்.

(இ - ள்.) விரி - பரந்த, நீர் - பாற்கடலை, கடைந்தார் - கடைந்த தேவாசுரர்கள், வெருஉற-அச்சமடையும்படி, மீது எழு - (அக்கடலினின்று) மேலெழுந்த, கடு ஆம் என - விஷம்போல, கொடியார்-கொடுமையுடையவர்களாகிய, படை தலை வீரர்கள் பதினால்வரும் - சேனைத்தலைமைகொண்டவீரர்கள் பதினான்குபேரும்,-உடைந்தார்களை

கைசெய்தனர் - (கீழ்) வலிமைகெட்டவர்களை இகழ்ந்து சிரித்துக் கொண்டு, உருள் தேரினர் - சக்கர வலிமை பெற்ற தேர்களில் ஏறிய வர்களும், அயில் வாள் மிடைந்தார் - வேலும் வாளும் பொருந்திய வர்களும், நெடு கடல் தானையர் - பெரிய கடல்போன்ற சேனை சூழ்ந்த வர்களும், மிடல் வில்லினர் - வலியவில்லேந்தியவர்களுமாய், உடன் ஆய் அடைந்தார் - ஒருங்கே வந்து (இராமனுள்ளவிடத்தைச்) சேர்ந் தார்கள்; (எ - று.)

கீர் - பால் என்னும்பொருளில் வருதலை, "தாழி தரையாகத் தண்டயிர் நீராக" எனக் கீழ்ச் சரபங்கர் பிறப்புநீங்குபடலத்திலும் காண்க. (463)

97.—இதுவும் அடுத்த கவியும்-இராமபிரானைச் சேனைத்தலைவர் பதினல்வர் வளைத்தமையைக் கூறும்.

நாகத்தனி பொருவில்லியை நளிர் [1]முப்புரர் முன்னாள்
மாகத்திடை [2]வளைவுற்றன ரெனவள்ளலை மதியார்
ஆகத்தெழு கனல்கண்வழி [3]யுகவுற்றெதி ரழன்றார்
[4]மேகத்தினை நிகர்வில்லியை வளைத்தார்செரு விளைத்தார்.

(இ - ள்.) நாகம் தனி ஒரு வில்லியை - (மேரு) மலையாகிய ஒப் பற்ற தொருவில்லையுடைய சிவபிரானை, முன் நாள் - முன்பு ஒரு காலத்தில், மாகத்திடை வளைவுற்றனர் - பெரிய ஆகாயத்திலே சூழ்ந்துகொண்டவர்களான, நளிர் முப்புரர் என - பெரிய திரிபுரத்து அசுரர்கள்போல, (அச்சேனைத்தலைவர் பதினல்வரும்), வள்ளலை மதி யார் - இராமபிரானை (ஒருபொருளாக) மதியாதவர்களும், ஆகத்து எழு கனல் கண் வழி உக-(தமது) மனத்தினின்று எழுந்த கோபாக் கினி கண்களின்வழியாய்ச் சிந்தும்படி, எதிர் உற்று - எதிர்த்து வந்து, அழன்றார் - கோபங்கொண்டவர்களுமாய், மேகத்தினை நிகர் வில்லியை வளைத்தார் - காளமேகத்தை யொத்த வில்வீரனை அவ் விராமபிரானைச் சூழ்ந்துகொண்டு, செரு விளைத்தார் - போர்செய் தார்கள்; (எ-று.)

முற்காலத்துத் திரிபுரத்து அசுரர்கள் சிவபிரானை வளைத்துக் கொண்டு செருவிளைத்தது போல, சேனைத்தலைவர் பதினல்வர் இராமபிரானை வளைத்துக்கொண்டு செருவிளைத்தாரெனபதாம். தனி வில்லி - வேறு துணையின்றித் தனித்துப் போர்க்குச்சென்ற வில்வீரன். இராமனுக்கு மேகம்-கருநிறத்திலும், அம்புமழை பொழி தலிலும், வில்லுடைமையிலும் உவமம். இனி, அப்புமழை சொரியுங் கருவி யாதலால் 'மேகத்தினைநிகர்' என்றதை வில்லுக்கு அடை மொழியாக்கலும் ஒன்று. 'மேகத்தினை நிகர் வில்லியை' என்றது, சுட்டுப்பொருளதாய் நின்றது. பி - ம்:—[1]முப்புரம். [2]வளைவுற்றன. [3]புக. [4]வேகத்தனிநெடு. (464)

98. எய்தார்பல ரெறிந்தார்பலர் [1]மழுவோச்சின ரெழுவால்
பொய்தார்பலர் புடைத்தார்பலர் கிடைத்தார்பலர் [2]பொருப்பால்

பெய்தார்மழை பிதிர்த்தா [3]ரெரி பிறைவாளெயிற் றரக்கர்
வைதார்பலர் தெழித்தார்பலர் மலையாமென வளைத்தார்.

(இ - ள்.) பிறை வாள் எயிறு-பிறைச்சந்திரன்போன்ற கூரிய கோரதந்தங்களையுடைய, அரக்கர் - (சேனைகளுடன்வந்த) இராக்கதர்களில், பலர்-அநேகம்பேர், எய்தார்-(இராமன்மேல்) பாணப்பிரயோகஞ் செய்தார்கள்; பலர்-, எறிந்தார்-(வேல்முதலிய ஆயுதங்களை) வீசினார்கள்; (பலர்), மழு ஓச்சினர்-மழுவென்னும் ஆயுதங்களைச் செலுத்தினார்கள்;பலர்—,எழுவால்-வளைதடிகளால், பொய்தார்-விளையாட்டாகப் போர்செய்தார்கள்; பலர்—, புடைத்தார் - (ஆயுதங்களைக்கொண்டு) அடித்தார்கள்; பலர்—, கிடைத்தார் - எதிர்த்துநெருங்கினார்கள்; (பலர்), பொருப்பு மழை ஆ பெய்தார்-மலைகளையெடுத்து மழைபோல மேற்சொரிந்தார்கள்: (பலர்),—எரி பிதிர்த்தார்-நெருப்பைச் சொரிந்தார்கள்: பலர்,— வைதார் - வசைமொழிகூறினார்கள்; பலர்—, தெழித்தார்-அதட்டி ஆரவாரித்தார்கள்; (இங்ஙனஞ்செய்து யாவரும்), மலை ஆம் என வளைத்தார் - மலைகள்சூழ்ந்தாற்போல (இராமனைச்) சூழ்ந்தார்கள்; (எ-று.)

பொய்தார் என்பது - விளையாடினாரென்று பொருள்படுதலை, பொய்தலென்னும் விளையாட்டுப்பெயர்கொண்டும் அறிக. பி - ம்:—
[1]எழுவோச்சினர்மழுவால். [2]பொருப்பால். [3]எறி. (465)

## 99.—இதுமுதல் நான்குகவிகள் – பதினான்கு சேனைத் தலைவர்களின் சேனைகள் மாண்டமையைக் கூறும்.

தேர்பூண்டன விலங்கியாவையுஞ் சிலைபூண்டெழு [1]கணையால்
பார்பூண்டன மத[2]மாகரி [3]பலிபூண்டன பரிமாத்
தார்பூண்டன வுடல்பூண்டில தலைவெங்கதிர் [4]தழிவந்து
ஊர்பூண்டன பிரிந்தாலென விரிந்தாருயி ருலைந்தார்.

(இ - ள்.) சிலை பூண்டு எழு கணையால் - (இராமனது) வில்லில் தொடுக்கப்பட்டு வெளியெழுந்த அம்புகளால்,—தேர் பூண்டன விலங்கு யாவைஉம் - (அவ்வரக்கர்களது) தேர்களிற் பூட்டப்பட்ட (யாளிமுதலிய) மிருகங்களெல்லாம், பார் பூண்டன-(இறந்துவிழுந்து) தரையைச் சேர்ந்தன; மதம் மா கரி-மதம்பிடித்த பெரிய யானைகள், பலி பூண்டன-பலியிடப்பட்டாற்போல் ஆயின [கொல்லப்பட்டன என்றபடி]; தார் பூண்டன பரி மா - கிண்கிணி மாலைகளையணிந்தனவான குதிரைகள், உடல் தலை பூண்டில-உடல்களில் தலைகள் பொருந்தப்பெற்றனவில்லை [தலை துணிந்து அழிந்தன]; (இங்ஙனம் ஆகவே அரக்கர்கள்), வெம் கதிர் தழிவந்து பூண்டன ஊர் பிரிந்தால் என - உஷ்ணமான கிரணமுடைய சூரியனை நெருங்கிவந்து சூழ்ந்தவையான பரிவேஷங்கள்விரைவில் நீங்கினாற்போல, இரிந்தார்-நிலைகெட்டு ஓடி, உயிர் உலைந்தார்-உயிர்நடுங்கினார்கள்; (எ - று.)

விலங்குயாவையும்-கீழ் 31, 32-ஆங் கவிகளிற் கூறியவை. 'வெங்கதிர் தழிவந் தூர்பூண்டன பிரிந்தால்' என்றது, இராமனை இடைவிடாதுசூழ்ந்த அரக்கர்கள் அப்பெருமானை யாதொன்றுஞ் செய்ய

மாட்டாது விரைவில் எளிமைப்பட்டு விலகிச்சென்றதை விளக்கும் உவமை. ஒருவர்பின் ஒருவராய்ப் பலவரிசைப்பட்டு அரக்கர்கள் சூழ்ந்து நின்றதை விளக்குதற்கு, 'ஊர்பூண்டன' என்று உவமையைப் பன்மையாக் கூறினர். தழி - தழுவியென்னும் வினையெச்சத்தின் மரூஉ; இதுவே, தழீஇ என அளபெடுக்கும்: "தமிழ்தழிய சாயலவர்" எனச் சிந்தாமணியில் தழிய என்னும் பெயரெச்சம் வந்தமையுங் காண்க. பி-ம்:—[1]கொலையால். [2]மால். [3]பல. [4]தழீஇ. (466)

100. மால்[1]பொத்தின மறவோருடன் மழை[2]பொத்தின வழிசெம்
பால்பொத்தின நதியிற்கிளர் படி [3]பொத்தின படர்வான்
மேல்[1]பொத்தின குழுவிண்ணவர் விழிபொத்தினர்[4]விரைவெங்
கால்பொத்தினர் நமன்றூதுவர் கடிதுற்றுயிர் கவர்வார்.

(இ - ள்.) மால் பொத்தின-மயக்கம் நிறைந்த, மறவோர்-கொடிய அரக்கர்களது, உடல்-உடம்பில், மழை பொத்தின வழி - அம்புமழை துளைத்த வழிகளிலே, செம் பால்-இரத்தப்பெருக்குகள், பொத்தின - நிறைந்தவையாய், நதியின் - ஆறுகள்போல, கிளர்படி பொத்தின - விளங்குகிற பூமியை மறைத்தன; படர் வான்மேல் பொத்தின-பரந்த ஆகாயத்தின்மேல் நிறைந்த, குழு விண்ணவர்-கூட்டமாகிய தேவர்கள், விழி பொத்தினர் - கண்களை மூடிக்கொண்டார்கள்: நமன் தூதுவர்-யமதூதர்கள், விரை வெம் கால் பொத்தினர் - விரைந்து வருகிற கொடிய காற்றை யொத்தவர்களாய், கடிது உற்று-விரைந்து வந்து, உயிர் கவர்வார்-அரக்கருயிரைக் கொள்பவரானார்கள்; (எ-று.)

பொத்துதல் - நிறைதல், மூடுதல். இது, நான்காமடியில், உவமவுருபாய் நின்றது. மால் - இயற்கையிலுள்ள அவிவேகத்தோடு, இப்பொழுதுபோரிலாகிய தடுமாற்றமும். மழை - அம்புத்தொகுதிக்கு உவமையாகுபெயர். செம்பாலென்றது - இரத்தமாதலை, "குருதி செம்பால் புலால்நீர்" என்ற நிகண்டினாலும் அறிக. விண்ணவர் கண்மூடுதற்குக் காரணம், இராமபாணங்களின் உக்கிரத்தைப் பார்க்கமாட்டாமையும், அரக்கர் அழிகிற கோரத்தைப் பார்க்கக்கூசுதலும். இனி, 'விழிபொத்தினர்' என்பதற்கு-கண்கள் (ஆனந்தக் கண்ணீரால்) நிறைந்தார்கள் என்று உரைத்தலும் ஒன்று. 'விரைவெங்கால் பொத்தினர் கடிதுற்று' என்பதற்கு - விரைந்துசெல்லுந்தன்மையுள்ள கொடிய தமதுகால்களை அடித்துக்கொண்டு விரைந்துவந்து எனவுரைப்பினுமாம்; கால்கள் விசையோடு அடிபட ஓடிவந்து என்றவாறு. இனி, கால் பிட்டத்திற்பட ஓடி என்றுமாம்: அன்றி, கடிதுற்று உயிர்கவர்வார் நமன் தூதுவர் விரைவெங்கால்பொத்தினரெனமாற்றி, விரைந்தோடி வந்து அரக்கருயிரைக் கவர்பவரான யமதூதர்கள் அங்ஙனம் மிகவிரைந்துவருகிற தமதுகால்களை (வலி நீங்கப்) பிடித்துக் கொண்டார்களென்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1]பொத்திய. [2]ஒத்துடன். [3]ஒத்ததுபனி. [4]விடல். (467)

101. பே[1]யேறின செருவேட்டெழு பித்தேறினர் பிலவாய்
நாயேறின [2]தலைமேனெடு நரியேறின வெரிகால்

வாயேறின வடிவாளியின் வானேறினர் வந்தார்
தீயேறிக லரியேறென முகி[3]லேறெனச் [4]செறிந்தார்.

(இ - ள்.) பேய் ஏறின-பேய்கள் மிக்குவருவதற்குக் காரணமான, செரு-போரை, வேட்டு - விரும்பி, எழு-உண்டான, பித்து - பைத்திய குணம், ஏறினர்-மிக்கவர்களாகிய அரக்கர்களது, பிலம் வாய் - மலைக் குகைபோல (உள்ளாழ்ந்து அகன்ற) வாய்களின்மேல், நாய் ஏறின - நாய்கள்வந்து ஏறின; தலைமேல் - தலைகளின்மேல், நெடு நரி ஏறின - பெரிய நரிகள் வந்து ஏறின; தீ ஏறு (என)-பெருநெருப்புப்போலவும், இகல் அரி ஏறு என-வலிய ஆண்சிங்கம் போலவும்,முகில் ஏறு என-மேகத்தில்தோன்றும் பேரிடிபோலவும், வந்தார் செறிந்தார் - வந்து நெருங்கிய அரக்கர்கள், எரி கால.வாய் ஏறின வடி வாளியின்-நெருப்பை யுமிழ்கிற நுனியிலே மிக்க கூர்மையையுடைய (இராம) பாணங்களால், வான் ஏறினர் - (போரில்இறந்து) வீரசுவர்க்கத்தின் மேல் ஏறிச்சென்றார்கள்; (எ-று.)

பேயேறின செரு-பேய்கள் பிணம்பிடுங்கித்தின்னவிரும்பி மிகுதி யாக வரும்படி பிராணிகளுக்கு அழிவையுண்டாக்கும் போர். பித்து- இங்கே, வரம்புகடந்தஆசை; அன்றி, மகாவீரனை இராமபிரானால் பல அரக்கர் இறந்ததை அறிந்தபின்பும் அவனுடன் இவர்கள் போர் செய்யவிரும்பிய அறிவின்மை பித்துஎனப்பட்டதாகக் கொள்ளினு மாம். நாயும் நரியும், இறந்தவுடலைப் பிடுங்கித்தின்ன வந்தவை. பி - ம்:—[1]ஏறினர். [2]தலையேநெடு. [3]ஏறினர். [4]செருவால். சிலபிரதி களில் இந்தப்பாடலின் இரண்டு மூன்று நான்காமடிகள் மூன்று நான்கு இரண்டாம் அடிகளாக வுள்ளன. (468)

102. தலைசிந்தின விழிசிந்தின தழல்சிந்தின தரைமேன்
மலைசிந்தின படிசிந்தின வரிசிந்துர [1]மழைபோல்
சிலைசிந்தின கணைசிந்தின திசைசிந்தின [2]திசையூடு
உலைசிந்தின பொறிசிந்தின வுயிர்சிந்தின வுடலம்.

(இ - ள்.) தலை சிந்தின - (அரக்கர்களது) தலைகள் சிதறின; தழல் சிந்தின விழி சிந்தின-நெருப்புப்பொறிகளை வெளியுமிழ்ந்தவை யான (அவர்கள்) கண்கள் சிதறின; தரைமேல் - பூமியிலே, மலை சிந்தின படி-மலைகள் சிதறிவிழுந்தாற்போல, வரி சிந்துரம் - (முதுகில் தவிசு)கட்டிய யானைகள், சிந்தின-சிதறிவிழுந்தன; மழை போல் சிலை சிந்தின கணை-மேகம்போல (இராமனது) வில் வெளிவீசிய அம்புகள், திசை சிந்தின சிந்தின - எல்லாத்திக்குக்களிலுஞ் சிதறி விழுந்தன; திசையூடு - அத்திக்குக்களிலெல்லாம், உலை சிந்தின பொறி சிந்தின உடலம்-உலைக்களத்தினின்று சிதறின நெருப்புப் பொறி போன்ற நெருப்புப்பொறிகளைச் சிதறியவையாகிய (அரக்கருடைய) உடம்பு கள், உயிர் சிந்தின-உயிர்நீங்கின; (எ-று.)

'தழல்சிந்தின விழி', 'உலைசிந்தின பொறி சிந்தின வுடலம்' என்றன - முன்னையநிலைமையைக் கருதி; இனி, விழிசிந்தின-கண்கள் சிதறின: தழல் சிந்தின - (அக்கண்கள் கொடுமையாற் பினனும்) நெருப்பையுமிழ்ந்தன என்றும், உயிர்சிந்தின உடலம் - உயிர் நீங்கிய உடம்புகள், உலை சிந்தின பொறி சிந்தின - (கொடுமையாற்

பின்பும்) உலைசிந்தின அனற்பொறிகளைச் சிதறின என்றும் உரைப்பாருமுளர். மழைபோல் சிலைகணை சிந்தின-மேகம்போல வில் அம்புகளைச் சொரிந்தன; சிந்தின திசை - (அந்த அம்புகள்) சிதறிவிழுந்த திக்குக்கள், சிந்தின - (அந்த அம்புகளின் வேகத்தால்) இடிந்து விழுந்தன; திசையூடு-அத்திக்குக்களிளெல்லாம், உலை சிந்தின பொறி சிந்தின-உலைக்களத்துப்பொறிகள்போன்ற தீப்பொறிகள் சிதறின என்றும் உரைக்கலாம். வரி-அழகினையுடைய எனினுமாம். பி - ம்:—[1]மலை. [2]சிலையூடு, திசையோடு. (469)

வேறு.

## 103. சேனைத்தலைவர்கள் பதினல்வர்தவிர மற்றையோர் இரத்தப்புனலில் மூழ்கியமை.

[1]படைப்பெருந் தலைவரும் படைத்த தேர்களும்
உடைத்தடம் படைகளு மொழிய வுற்றெதிர்
விடைத்தடர்ந் [2]தெதிர்ந்தவர் வீரன் வாளியால்
முடைத்தவெங் குருதியின் கடலின் மூழ்கினர்.

(இ-ள்.) படை பெரு தலைவர்உம் - பெரிய சேனைத்தலைவர்கள் பதினன்குபேரும், படைத்த தேர்கள்உம் - (அவர்கள்) கொண்ட இரதங்களும், உடை தட படைகள்-அவர்களுடைய பெரிய ஆயுதங்களும் என்னும் இவை, ஒழிய-நீங்கலாக,—எதிர் உற்று விடைத்து அடர்ந்து எதிர்ந்தவர் - (இராமபிரானுக்கு) எதிரில் வந்து பெருங்கோபங்கொண்டு நெருங்கியெதிர்த்த அரக்கர்களெல்லோரும், வீரன் வாளியால் - வீரனை அவ்விராமனது அம்புகளால், (இறந்து), முடைத்த வெம் குருதியின் கடலில் மூழ்கினர் - துர்க்கந்தமுள்ள கொடிய இரத்தக்கடலில் முழுகினர்கள்; (எ - று.)

வந்து எதிர்த்த அரக்கர்களுள் சேனைத்தலைவர்கள் பதினல்வர் தவிர மற்றையோரெல்லோரும் அழிந்தமையை இதிற் கூறினர். அப்பதினல்வர் அழிதல், இனிக் கூறப்படும். முடைத்த - குறிப்புப்பெயரெச்சம்: பி-ம்:—[1]படைத்தலைவருமவர். [2]எழுந்தவர்.

இதுமுதல் 9-கவிகள்-கீழ்ப்படலத்தின் 8-ஆங்கவிபோன்றவை. ()

## 104.—சேனைத்தலைவர் பதினல்வர்சினந்து இராமனைவளைத்தல்.

சுற்றுற நோக்கினர் தொடர்ந்த சேனையில்
அற்றில தலையெனு மாக்கை கண்டிலர்
தெற்றின ரெயிறுக டிருகி னர்சினம்
முற்றின ரிராமனை [1]முடுகு தேரினர்.

(இ - ள்.) (படைத்தலைவர் பதினல்வரும்),—சுற்றுற நோக்கினர் - (தம்மைச்) சுற்றிலும் எல்லாப்பக்கத்திலும் பார்த்து, தொடர்ந்த சேனையில் தலை அற்றில எனும் ஆக்கை கண்டிலர் - தொடர்ந்து வந்த (தமது) சேனைகளில் தலையற வில்லை யென்று சொல்லப்படும் உடம்புகளை (ஒன்றேனும்) காணுதவர்களாய், சினம் திருகினர் ,

கோபம்மிகப்பெற்றவர்களாகி, எயிறுகள் தெற்றினர்-பற்களைக் கடித்துக்கொண்டு, முடுகு தேரினர்-விரைந்து செல்லுந் தேரையுடையவர்களாய், இராமனை முற்றினர் - இராமபிரானைச் சூழ்ந்தார்கள்; (எ-று.)

சேனையிலிருந்த பிராணிகள்யாவும் தலையறுபட்டமை, இரண்டாம் அடியால் விளங்கும். பி - ம்:—[1] முழுங்கு. (471)

105.—இதுமுதல் ஐந்துகவிகள் -சேனைத்தலைவர்கள் பதினால்வரோடு ஸ்ரீராமன் பொருது அழித்தமையைத் தெரிவிக்கும்.

ஏழிரு தேரும்வந் திமைப்பின் முன்பிடைச்
சூழ்வன கணைகளிற் றுணிய நூறினான்
ஆழியும் [1] புரவியு மாளு மற்றவை
ஊழிவெங் காலெறி யோங்க லொத்தவே.

(இ - ள்.) வந்து இடை சூழ்வன - வந்து பக்கத்திலே சூழ்ந்தவையான, ஏழ் இருதேர்உம் - பதினான்கு தேர்களையும், இமைப்பின் முன்பு-கண்ணிமைப்பொழுதினுள்ளே, துணிய-துணிபடும்படி, கணைகளின் - அம்புகளால், நூறினான் - (இராமன்) அழித்தான்; (அப்பொழுது), அற்றவை-துணிபட்டவையாகிய, ஆழிஉம்-தேர்ச் சக்கரங்களும், புரவிஉம்-குதிரைகளும், ஆள்உம்-சாரதிசனங்களும், ஊழி வெம் கால் எறி ஓங்கல் ஒத்த-கல்பாந்தகாலத்திற் கொடுங் காற்றால் எடுத்துவீசப்படுகிற மலைகளைப் போன்றன; (எ - று.)

ஊழிக்காற்று - இராமபாணத்துக்கும், மலைகள் - வலியபெரிய சக்கரம் முதலியவற்றுக்கும் உவமை. 'பாகு' என்பதுபோல, 'ஆள்' என்பது - உயர்திணைப்பொருளில் வந்த அஃறிணைச்சொலென்றுவது, ஆள் என்ற உயர்திணைப்பெயர் சாதியையுணர்த்தி அஃறிணையின்பாற்பட்டதென்றுவது கொண்டால் 'ஒத்த' என அஃறிணைமுற்று வந்தது வழாநிலையாம்; அன்றி, ஆழி புரவி என அஃறிணைச்சொல் இரண்டும், ஆள் என உயர்திணைச்சொல் ஒன்றுமாயிருத்தலால், மிகுதிபற்றி ஆள்என்ற உயர்திணைப்பெயர் ஒத்தஎன்ற அஃறிணைமுடிபைப் பெற்றதென்று கொண்டால் திணைவழுவமைதியாம்; [நன்-பொது-27.] மற்றவை என எடுத்து, கொடி கொடிஞ்சி அச்சு ஆணி முதலிய மற்றைத்தேர் உறுப்புக்களும் என்று உரைப்பாரு முளர். பி-ம்:—[1] ஆணியும். (472)

106. அழிந்தன தேரவ ரவனி கீண்டுக
இழிந்தனர் வரிசிலை யெடுத்த கையினர்
ஒழிந்திலர் சரங்களை யுருமி னேறெனப்
பொழிந்தனர்[1] மிகுகனல் பொடிக்குங் கண்ணினார்.

(இ-ள்.) அழிந்தன தேர் - (இவ்வாறு) தேர்கள் அழிந்தன; (அழியவே), அவர் - அப்பதினால்வரும், அவனி கீண்டு உக - பூமி பிளந்துவிடும்படி, இழிந்தனர் - கீழிறங்கி, வரிசிலைஎடுத்த கையினர்- கட்டமைந்த வில்லையேந்திய கையையுடையவர்களும், மிகு கனல்

பொடிக்கும் கண்ணினூர்-மிக்க நெருப்பை வெளிச்சிந்துகிற கண்களை யுடையவர்களுமாகி, சரங்களை-அம்புகளை, உருமின் ஏறு என-பேரிடிக ளென்னும்படி, ஒழிந்திலர் பொழிந்தனர் - இடைவிடாது சொரிந் தார்கள்; (எ - று.)

தேரழிந்திடவே, பதினான்கு சேனைத்தலைவரும் தரையிலிருந்த படியே அம்புமழை சொரிந்தன ரென்றவாறு. அழிந்தன தேரவர் என எடுத்து, அழிந்தனவான தேர்களையுடையவர்க ளென்றலும் ஒன்று. பி-ம்:—[1]பொழி. (473)

107. நூறிய சரமெலா நுறுங்க வாளியால்
ஈறுசெய் தவர்சிலை யேழொ டேழையும்
ஆறினொ டாறுமோ ரிரண்டு மம்பினால்
கூறுசெய் தமர்த்தொழிற் கொதிப்பை நீக்கினான்.

(இ - ள்.) நூறிய சரம் எலாம் - (குறித்த இலக்கை) அழிக்குந் தன்மையுள்ள (அவ்வரக்கர்களுடைய) அம்புகளையெல்லாம், நுறுங்க- பொடியாம்படி, (இராமபிரான்), வாளியால் - (தனது) பாணங்களால், ஈறுசெய்து - அழித்து,—அவர் சிலை ஏழொடு ஏழைஉம் - அவர் களுடைய விற்கள் பதினான்கையும், ஆறினொடு ஆறுஉம் ஓர் இரண்டு உம் அம்பினால்-பதினான்கு பாணங்களைக் கொண்டு, கூறு செய்து - துண்டித்து, அமர் தொழில் கொதிப்பை நீக்கினான்-போர்த்தொழி லில் (அவர்களுக்கு இருந்த) உக்கிரத்தை யொழித்தான்; (எ-று.)

இராமபிரான் அரக்கர்பதினால்வர் தொடுத்து விடுத்த அம்பு களையெல்லாம் தன்னம்புகளால் அழித்து, பதினான்கு அம்புகளால் அவ்வரக்கவீரரின் விற்களைத் துண்டிக்கவே, அன்னார் போரின் வெம்மை குறையப் பெற்றனரென்பதாம். (474)

108. வில்லிழந் தனைவரும் வெகுளி மீக்கொளக்
கல்லுயர் நெடுவரை கடிதி னேந்தினார்
ஒல்லையி [1]னுருத்துயர் விசும்பி னோங்கி நின்று
[2]எல்லுயர் பொறியுக வெறிதன் மேயினார்.

(இ - ள்.) அனைவர்உம் - அப்படைத்தலைவ ரெல்லோரும், வில் இழந்து-விற்களை யிழந்ததனால், வெகுளி மீ கொள-சினம் அதிகப்பட, கல் உயர் நெடுவரை-கல்மயமாய் ஓங்கிய பெரிய மலைகளை, கடிதின் ஏந்தினார்-விரைவில் எடுத்துக்கொண்டு, ஒல்லையின் உருத்து உயர் விசும்பின் ஓங்கி நின்று-விரைவாக எழுந்து ஓங்கிய ஆகாயத்தில் உயர்ந்துநின்றுகொண்டு, எல் உயர் பொறி உக-சூரியனொளிபோன்ற மிக்கநெருப்புப்பொறிகள் சிந்த, எறிதல் மேயினார் - (அந்த மலைகளை இராமன்மேல்) வீசியெறிந்தார்கள். (எ - று.)

தம்விற்கள் துண்டிக்கப்படவே அவ்வரக்கவீரர் மலைகளை யேந்தி வானத்திலோங்கிநின்று எறியலுற்றன ரென்றவாறு. எல் உயர் பொறிஉக-சூரியனது உயர்ந்த தேரும் பொடியாம்படி, விசும் பின் ஓங்கிநின்று என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]உருத்தவர். [2]எல்லையில். (475)

109. கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியான்
இலைகொள்வெம் பகழியே ழிரண்டு வாங்கினன்
கொலைகொள்வெஞ் சிலையொடு புருவங் கோட்டினன்
மலைகளுந் தலைகளும் விழுந்த [1]மண்ணினே.

(இ - ள்.) கலைகளின் பெரு கடல் கடந்த - சாஸ்திரங்களாகிய பெரிய கடல்களைத் தாண்டிய[முற்றுமுணர்ந்த], கல்வியான்-அறிவையுடைய ஸ்ரீராமன், கொலை கொள் வெம் சிலையொடு புருவம் கோட்டினன்-(பகைவரைக்) கொல்லுதலைக்கொண்ட வெவ்விய (தனது) வில்லுடன் புருவங்களையும் வளைத்து, இலை கொள் வெம் பகழி ஏழ் இரண்டு வாங்கினன்-இலைவடிவத்தைக் கொண்ட கொடிய பதினன்கு பாணங்களை எடுத்து எய்தான்; (அவற்றால்), மலைகள்உம் - (அவ்வரக்கர்கள் எறிந்த) மலைகளும், தலைகள்உம் - (அவர்களுடைய) தலைகளும், மண்ணின் விழுந்த-(துணிபட்டுத்) தரையில் விழுந்திட்டன;

இராமபிரான் சினங்கொண்டு புருவத்தை நெரித்துப் பதினன்கு அம்புகளைப் பொழியவே, மலைகளும் அவற்றை யெறிந்த அரக்கரின் தலைகளும் ஒருசேரத் துணிபட்டுத் தரையில் விழுந்தன வென்றவாறு. சிலையொடு புருவங்கோட்டினன், மலைகளுந் தலைகளும் விழுந்த என உடனவிற்சியணியாகக் கூறிய நயத்தால, புருவம் விறபோன்றதென்றும், தலைகள் மலைகள்போன்றன வென்றும் தோனறும். சாஸ்திரங்களைக் கடல் என்றதறகு ஏறப, அறிவைப் புணை யென்னுமையால், ஏகதேசவுருவகவணி. "எண்ணில் நுண்ணூ, லாய்ந்தே கடந்தா னறிவெனனு மளக்கர்" எனப் பாலகாண்டத்தில் வந்ததனேடு முதலடியை ஒப்பிடுக. கல்வி - அறிவுக்கு இலக்கணை. பி - ம்:— மண்ணின்மேல். (476)

110.—இனி, இருபத்தாறுகவிகள்-திரிசிராவென்னும் அரக்கன் சேனையுடன் வந்து ஸ்ரீராமனேடு பொருது அழிதலைக் கூறும்.

படைத்தலை[1]த் தலைவர்கள் படலும் பல்படை
புடைத்[2]தடர்ந் தெதிரழல் புரையுங் கண்ணினர்
கிடைத்தன ரரக்கர்கள் கீழு மேலு[3]மொய்த்து
அடைத்தனர் திசைகளை யமர ரஞ்சினர்.

(இ-ள்.) படை தலை தலைவர்கள்-சேனைகளுக்கு முதன்மை பெற்ற தலைவர்கள் பதினன்குபேரும், படலும்-இவ்வாறு இறந்தவளவிலே,- அரக்கர்கள்-(வேறு) இராக்கதர்கள், பல் படை புடைத்து - பல ஆயுதங்களை வீசிக்கொணடு, அடர்ந்து-நெருங்கி, அழல் புரையும் கண்ணினர்-நெருப்பையொத்த கண்களையுடையவர்களாய், எதிர் கிடைத்தனர்-இராமபிரானெதிரிலே கிட்டி, கீழ்உம் மேல்உம் மொய்த்து - பூமியிலும ஆகாயத்திலும் நெருங்கி நின்று, திசைகளை அடைத்தனர் - திக்குக்களைமறைத்தார்கள்; (அது கண்டு), அமரர் அஞ்சினர்-தேவர்களும் பயந்தார்கள்; (எ-று.)

பதினன்கு படைத்தலைவரும் இறந்திடவே, வேறு அரக்கர்கள் சினத்துடன் ஆயுதங்களை வீசிக்கொண்டு எப்புறத்திலும் திரண்டு

நெருங்கவே அமரர்கள் அஞ்சினரென்பதாம். 'படைத்தலைத் தலைவர்கள்' என்பதற்கு-சேனையில் தலைவராகவுள்ளவர் என்றும் பதவுரை கூறலாம்: தலை - ஏழனுருபு. பி - ம்:—[1]வீரர்கள். [2]அடர்த்தார்த் தெரிபுகையுங். [3]ஆய். (477)

111. முழங்கின பெரும்பணை மூரி மால்கரி
முழங்கின வரிசிலை முடுகு நாணொலி
முழங்கின [1]சங்கொடு புரவி [2]முற்றுற
முழங்கின வரக்கர்த முகிலி னார்ப்பரோ.

(இ-ள்.) (அப்பொழுது), பெரு பணை-பெரிய போர்ப்பறைகளும், மூரி மால் கரி-வலிய பெரிய யானைகளும், முழங்கின-ஆரவாரித்தன; வரி சிலை முடுகு நாண் ஒலி-கட்டமைந்த விற்களில் விரையப்பூட்டப்பட்ட நாணிகளின் ஓசைகள், முழங்கின - ஆரவாரித்தன; சங்கொடு புரவி-சங்க வாத்தியங்களும் குதிரைகளும், முழங்கின—; அரக்கர்தம்-இராக்கதர்களுடைய, முகிலின் ஆர்ப்பு - மேககர்ச்சனைபோன்ற கர்ச்சனையொலிகள், முற்றுற - எங்கும், முழங்கின—; (எ-று.)

சொற்பொருட்பின் வருநிலையணி. 'அரக்கர்தம்' என்பதை 'பணை' முதலியவற்றுக்குங் கூட்டுக. பணை - பறைப்பொது; முரசம் முதலியன. சங்கு - அரக்கர்கள் தமதுபோர்த்திறத்துக்கு அறிகுறியாக வாயில்வைத்தூதியவை. பி - ம்:—[1]சஙகொலி. [2]மொய்த்துற. (478)

வேறு.

112. வெம்படை நிருதர் வீச விண்ணிடை மிடைந்த வீரன்
அம்பிடை யறுக்கச் சிந்தி யற்றன [1]படுமென் றஞ்சி
உம்பரு மிரியல் போனா ருலகெலா முலைந்து சாய்ந்த
கம்பமி றிசையி னின்ற களிறுங்கண் ணிமைத்த வன்றே.

(இ - ள்.) 'நிருதர் வீச - அரக்கர்கள் வீசியெறிதலால், விண்ணிடை மிடைந்த - ஆகாயத்தில் நெருங்கியவையான, வெம் படை - கொடிய ஆயுதங்கள், வீரன் அம்பு இடை அறுக்க - இராமனது பாணங்கள் நடுவிலே துணித்தலால், அற்றன - துணிபட்டவையாய், சிந்தி-சிதறி, படும் - நம்மேல்ஊறுண்டாக) விழக்கூடும்,' என்று - என்று எண்ணி, அஞ்சி - பயந்து, உம்பர் உம் - தேவர்களும், இரியல் போனார் - ஓடிப்போனார்கள்; உலகு எலாம் - உலகங்களெல்லாம், உலைந்து சாய்ந்த - நடுங்கித் தளர்ந்தன; கம்பம் இல் - நிலைபெயர்தல் இல்லாத, திசையில் நின்ற களிறு உம் - திக்குயானைகளும், கண் இமைத்த-(அச்சத்தால்) கண்களை மூடிக்கொண்டன; (எ-று.)

அரக்கரெறிந்த படைகளை இராமபிரானம்பு இடையே யறுத்தலால் அறுபட்ட அப்படைகள் நம்மேல் படக்கூடுமென்று அஞ்சித் தேவர்களும் நிலைகெட்டோட, உலகெல்லாம் நடுங்கித் தளர, திசைக் களிறும் அச்சத்தினாற் கண்ணிமைத்தன என்பதாம்: தொடர்புயர்வு நவிற்சியணி. பி - ம்:—[1]விழும். இது - கீழ்ப்படலத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தம். (479)

வேறு.

113. அத்தலைத் [1]தானைய னளவி லாற்றலன்
முத்தலைக் குரிசில் [2]பொன் முடியன் முக்கணான்
கைத்தலைச் சூலமே யனைய காட்சியான்
வைத்தலைப் பகழியான் [3]மழைசெய் வில்லினான்.

(இ - ள்.) அ தலை தானையன் - சிறந்த அந்தச் சேனையையுடைய தலைவன், (யாரெனில்)—அளவு இல் ஆற்றலன்-அளவில்லாத வல்லமையையுடையவனும், பொன் முடியன் - பொன்னினாலாகிய கிரீடத்தையுடையவனும், வை தலை பகழியால் மழை செய் வில்லினான்-கூரிய நுனியையுடைய அம்புகளைக்கொண்டு மழை பொழிகிற வில்லையுடையவனும், முக்கணான் கைத்தலை சூலம்ஏ அனைய காட்சியான்-மூன்று கண்களையுடைய சிவபிரானது கையினிடத்துள்ள சூலாயுதத்தையே போன்ற தோற்றமுடையவனுமாகிய, மு தலை குரிசில் - மூன்று தலைகளையுடைய திரிசிராவென்னும் வீரனும்; (எ - று.)

திரிசிரா என்னும் படைத்தலைவன் தன்மையைக் கூறியது. இச்செய்யுள். மூன்று தலைகளையுடைமைக்கும், அழித்தல்தொழில் செய்யுங் கொடுமைக்கும், சிவபிரானது சூலம் உவமை. பி - ம்:—[1]தானையின். [2]போர்முடிவில். [3]மலை.

இதுமுதல் 20 - கவிகள் - கீழ்ப்படலத்தின் எட்டாங்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (480)

114. அன்னவ னடுவுற லூழி யூழியீது
என்னவந் தெங்கணு மிரைத்த [1]சேனையுள்
தன்னிகர் வீரனுந் தமியன் வில்லினன்
துன்னிரு ளிடையதோர் விளக்கிற் றோன்றினான்.

(இ - ள்.) அன்னவன் நடுஉற-அத்தன்மையனான திரிசிரன் நடுவிலே பொருந்த, ஊழி ஆழி ஈது என்ன - பிரளயகாலத்துப் பெருங்கடல் இதுவென்று சொல்லும்படி, எங்கண் உம் வந்து-எல்லாப்பக்கங்களிலும் வந்து, இரைத்த - ஆரவாரித்த, சேனையுள் - அரக்கர்சேனையின் மத்தியிலே, தமியன் வில்லினன்-தனியே வில்லையேந்திநிற்கிற, தன்நிகர்வீரன்உம்-தன்னைத்தானே யொத்த [வேறுஉவமைபெறாத] வீரனான ஸ்ரீராமனும், துன் இருள் இடையது ஓர் விளக்கின் தோன்றினான்-நெருங்கிய இருளின் நடுவிலுள்ளதொரு விளக்குப்போல விளங்கினான்; (எ - று.)

திரிசிரா நடுவிலே பொருந்தப்பெற்ற அரக்கச் சேனைகள் தன்னைச் சூழநிற்க, அவர்களிடையிலே இராமபிரான் இருளிடையே தோன்றும் விளக்குப்போல விளங்கினானென்க. பி - ம்:—[1]சேனையும். (481)

115. [1]ஓங்கொளி வாளின னுருமி னார்ப்பினன்
வீங்கிய [2]கவசத்தன் வெய்ய கண்ணினன்
ஆங்கவ னணிக்கெதி ரணிக ளாகநேர்
தாங்கின னிராமனுஞ் சரத்தின் றானையால்.

(இ - ள்.) ஓங்கு ஒளி வாளினன் - மிக்கஒளியையுடைய வாளாயுதத்தையுடையவனும், உருமின் ஆர்ப்பினன்-இடிபோன்ற பேரொலியுடையவனும், வீங்கியகவசத்தன் - பருத்தகவசத்தையுடையவனும், வெய்ய கண்ணினன் - கொடியகண்களையுடையவனுமாகிய, ஆங்கு அவன்-அங்குவந்த அவ்வரக்கனது, அணிக்கு-படைவகுப்புக்களுக்கு, எதிர் அணிகள் ஆக-எதிர்ப்படைவகுப்புக்களாக, இராமனும்-, சரத்தின் தானையால்-அம்புகளாகிய சேனையால், நேர் தாங்கினன் - எதிரூன்றி நின்றான்; (எ - று.)

சதுரங்கங்களமைந்த திரிசிரனது படை வகுப்புக்கு எதிரில் இராமன் அம்புகளைக்கொண்டு படைவகுத்திட்டன னென்பது, பொருள். கரனது சேனையில் எத்தனை யானை தேர் குதிரை காலாள்களுண்டோ அத்தனையம்புகளை இராமன் அவற்றின்மீது ஒழுங்காக எதிர்தொடுத்தன னென்ற கருத்தை இங்ஙனம், வருணனை வகையாற் கூறினர். 'சரத்தின்தானை' என்றது, அம்புத் தொகுதியை. நேர்தாங்குதல் - எதிரில் நிலைப்படுத்தல். பி - ம்:—[1] ஓங்கிய. [2] வேகத்தன். (482)

116. தாளிடை யற்றன [1] தலையு மற்றன
தோளிடை யற்றன [2] தொடையு மற்றன
வாளிடை யற்றன மழுவு மற்றன
கோளிடை யற்றன [3] குடையு மற்றன.

(இ - ள்.) (அங்ஙனம் இராமன் ஒழுங்குபட எதிர் தொடுத்த அம்புகளால்), தாள் - (அரக்கர்களது) கால்கள், இடை அற்றன-நடுவே அறுபட்டன; தலைஉம்-தலைகளும், அற்றன—; தோள்-தோள்கள், இடை அற்றன—; தொடைஉம்-தொடையென்னும் உறுப்புக்களும், அற்றன—; வாள் - வாளாயுதங்கள், இடை அற்றன—; மழுஉம்-மழுப்படைகளும், அற்றன—; கோள் - வலிமைகளும், இடை அற்றன—; குடைஉம்-குடைகளும், அற்றன—; (எ - று.)

இராமனம்புகளால், அரக்கச்சேனைகளின் தாள்முதலியன அறுபட்டன என்கின்றார். தொடை என்பதற்கு - அம்பென்றும், கோள் இடை என்றுஎடுத்து-வலிய இடைகளென்றும் உரைப்பாருமுளர். பி - ம்:—[1] தலைகள். [2] தொடைகள். [3] குடைகள். இவையன்றியும், இரண்டுமூன்றுமடிகள் சிலபிரதிகளில் மூன்று இரண்டாம் அடிகளாக வுள்ளன. (483)

117. கொடியொடு [1] கொடுஞ்சினப் புரவிக் கூட்டறப்
[2] படியிடை படிந்தன [3] பருத்த தேர்பணை
நெடிய [4] வன் கடகரி புரண்ட [5] நெற்றியின்
இடியொடு முறிந்துவீழ் சிகர மென்னவே.

(இ - ள்.) கொடியொடு - துவசங்களும், கொடு சினம் புரவி கூட்டு - கொடிய கோபமுள்ள குதிரைகளின் தொடர்ச்சியும், அற - துணிபட்டொழிய,—பருத்த தேர் - பெரியதேர்கள், படியிடை படிந்தன-நிலத்திலே விழுந்தன; பணை நெடிய வல் கட கரி - பருத்த உயர்ந்த வலிய மதயானைகள், நெற்றியின் இடியொடு முறிந்து வீழ்

சிகரம் என்ன - உச்சியில் இடிவிழுந்ததனால் ஒடிந்து விழுகிற மலைச் சிகரங்கள்போல, புரண்ட - (கீழ்விழுந்து) புரண்டன; (எ - று.)

இராமபாணங்கள் மேல் விழவே, கொடியும் புரவியும் கூட்டுத் துணிபட்டொழிய, தேர் படியிடைப் படிய, கரிகள் இடியொடு முறிந்து வீழ் சிகரமென்னப் புரண்டனஎன்றவாறு. பி - ம்:—[1]கொடிஞ்சறப், கொடுஞ்சரப். [2]படியொடு. [3]பருதித்தேர்ப். [4]வெங். [5]நெற்றிவீழ். (484)

118. அற்றன சிரமென வறித றேற்றலர்
கொற்றவெஞ் சிலைச்சரங் [1]கோத்து வாங்குவார்
[2]இற்றவ ரிருதவ ரெழுந்து விண்ணினைப்
[3]பற்றின மழையெனப் படைவ ழங்குவார்.

(இ - ள்.) இற்றவர் - தலையறுபட்ட அரக்கர்கள், சிரம் அற்றன என அறிதல் தேற்றலர் - (தங்கள) தலைகள் அறுபட்டன என்று அறியாதவர்களாய், கொற்றம் வெம் சிலை சரம் கோத்து வாங்குவார் - வெற்றியையுடைய கொடிய வில்லினின்று அம்புகளைத் தொடுத்து எய்வார்கள்; இருதவர் - தலையறுபடாதவர்கள், எழுந்து—, விண்ணினை பற்றின மழை என - ஆகாயத்தைக்கவிந்த மழைபோல, படை வழங்குவார் - ஆயுதங்களை வீசுவார்கள்; (எ - று.)

விரைந்துதொழில்செய்பவரது உடம்பு தலையறுபட்டபின்பும் சிறிதுபொழுது முன்னையதொழிலை விடாதுசெய்தல் இயல்பு ஆதலின், இங்ஙனங் கூறினார்; "அடுசிலை பகழி தொடுத்து விடப்புகு மளவினி லயமெதிர் விட்டவர் வெட்டினர், உடல்சில விருதுணி பட்டன பட்டபின் ஒருதுணி கருது மிலக்கை யழிக்குமே" என்ற கலிங்கத்துப்பரணிச்செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. வாங்குதல் - வில்நாணியை யிழுத்துவிடுதல். இப்பாட்டின் முதலடியால், அரக்கர்களது தலைதெரியாத யுத்தாவேசம் விளங்கும். இச்செய்யுளில், தலையறுப்புண்டவர் தலையறுபடாதவர் ஆகிய இருவகை அரக்கவீரரின் போர்ச்செயலைக் கூறினார். பி - ம்:—[1]கொதித்து. [2]இற்றனதாளன, இற்றவர்தாளென, இற்றிலதாளென. [3]பற்றினர். (485)

119. கேடகத் [1]தடக்கையர் கிரியின் [2]றோற்றத்தர்
ஆடகக் [3]கவசத்தர் கவந்த மாடுவ
பாடகத் தரம்பையர் மருளப் பல்வித
நாடகத் [4]தொழிலினை நடிப்ப வொத்தவே.

(இ - ள்.) கேடகம் தட கையர் - கேடகமென்னும் ஆயுதத்தையேந்திய பெரிய கையையுடையவர்களும், கிரியின் தோற்றத்தர் - மலைபோன்ற பெரியவடிவமுடையவர்களும், ஆடகம் கவசத்தர் - பொன்னினாலாகிய கவசத்தை யணிந்தவர்களும் ஆகிய வீரர்களுடைய, கவந்தம் - தலையற்றஉடற்குறைகள், ஆடுவ - துடித்துத் துள்ளுபவை,— பாடகத்து அரம்பையர் மருள - பாடகமென்னுங் காலணியை யணிந்த தேவமாதர்கள் மயங்கும்படி, பல் விதம் நாடகம் தொழிலினை நடிப்ப ஒத்த - பலவகை நடனத்தொழில்களை நடித்துக்காட்டுவன போன்றன; (எ - று.)

அறுபட்ட வீரர்களின் உடற்குறைகள், ஆடலில் வல்ல தேவமாதர்களும் கண்டு அதிசயிக்கும்படி பலவாறு விசித்திரமாகக் கூத்தாடின என்பதாம். அரம்பையர்-ரம்பை முதலியோர். பி-ம் :—[1] தடக்கைய. [2] தோற்றத்த. [3] கவசத்த. [4] தொழிலினநாந்தகத்தின. (486)

120. கவரிவெண் குடையெனு [1] நுரைய கைம்மலைச்
[2] சுவறரு [3] சுறவமாழ் [4] சுழிய தண்டுறைப்
பவரினப் படுமணி குவிக்கும் பண்ணைய
உவரியைப் புதுக்கின வுதிர யாறரோ.

(இ - ள்.) கவரி - சாமரங்களும், வெள் குடை - வெள்ளைக் குடைகளும், எனும் - என்கிற, நுரைய - நுரைகளையுடையவையும்,— கை மலை-யானைகளாகிய, சுவல் தரு சுறவம்-உயர்ந்தமுதுகு கொண்ட சுறுமீன்கள், ஆழ் - முழுகப்பெற்ற, சுழிய - சுழிகளையுடையவையும்,— தண் துறை-குளிர்ந்த இறங்கு துறைகளிலே, பவர் இனம் படு மணி குவிக்கும் - நெருங்கிய பலவகைப்பட்ட இரத்தினங்களைக் கொண்டு குவிக்கிற, பண்ணைய-சேணங்களாகிய படகுகளையுடையனவும் ஆகிய, உதிரம் யாறு - இரத்தநதிகள், உவரியை புதுக்கின - கடலைப் புதியதாக்கின; (எ - று.)

இது, போரிலறுபட்ட சேனைகளின் உதிரப்பெருக்கின் வருணனை கூறியது. யாற்றுப்புதுவெள்ளம் விசையோடுசென்று கடலில் விழுந்து நெடுந்தூரமளவுங் கடலின்நிறத்தை வேறுபடுத்துவதுபோலவே, இரத்தநதிகள் சென்று சேர்ந்து கருங்கடலைச் செந்நிறமாக்கின வென்பதாம்: கருங்கடலை வேற்றுநிறமுண்டாகுமாறு உதிரயாறு செய்ததெனக் கூறியது - பிறிதின் குணம்பெறலணியாம். உபமேயமாகிய சேணமும் உபமானமாகிய படகும் என இருபொருளையும் 'பண்ணை' என்ற ஒருசொல்லே தந்தது-சிலேடையுருவகவணியாம். சேணங்களில் நிரம்பப் பலவகையிரத்தினங்களைப் பதித்திருத்தலையும், படகுகள் பலவகையிரத்தினங்களைக் கொணர்ந்து சேர்த்தலையுங் கருதி, பண்ணைக்கு 'பவரினப்படு மணிகுவிக்கும்' என்ற அடைமொழி கொடுத்தார். வெண்மையைக் கவரிக்குங்கூட்டுக. அரோ - ஈற்றசை. பி-ம் :—[1] நுரைசெய். [2] சுவரன. [3] கவந்தமாழ். [4] சுரிய. (487)

121. சண்டவெங் கடுங்கணை தடியத் தாஞ்சில
திண்டிறல் வளையெயிற் றரக்கர் தேவராய்
வண்டுழல் புரிகுழன் மடந்தை மாரொடும்
கண்டனர் [1] தம்முடைக் கவந்த நாடகம்.

(இ - ள்.) சண்டம் வெம் கடு கணை - மிகவுங்கொடிய இராம பாணங்கள், தடிய - கொல்லுதலால், திண் திறல் வளை எயிறு சில அரக்கர் - மிக்க வலிமையையும் வளைவான கோரதந்தங்களையுமுடைய சில இராக்கதர்கள், தேவர் ஆய் - (இறந்தவுடனே வீர சுவர்க்கம் பெறுந்) தேவர்களாகி, வண்டு உழல் புரிகுழல் மடந்தைமாரொடும்- வண்டுகள் சுழன்றுமொய்க்கத்தக்க அலங்கரித்த கூந்தலையுடைய

தேவமாதர்களுடனே (கூடி), தம்முடை கவந்தம் நாடகம் கண்டனர் - தங்களுடைய தலையற்ற உடற்குறைகளின் கூத்தாட்டத்தைப் பார்த்தார்கள்; (எ - று.)—தாம் - அசை.

மூன்று செய்யுட்கள் அரக்கர் வீரசுவர்க்கஞ் சேர்ந்தமையை வருணனைவகையால் தெரிவிக்கும். அரக்கரதுஉடல் இராம பாணத்தால் சின்னபின்னப்பட்டுத் துடித்துத் துள்ள உயிர் உடனே தேவசரீரமுற்று அரம்பையரோடுகூடி அவ்வுடம்புகளின் துள்ளலை விநோதமாகக்கண்டு வியந்தன என்பதாம்; இதில், விரைவில் தெய்வயாக்கைபெற்றமைவிளங்கும். தேவமாதர்களின் கூந்தலில் இயல்பில் வண்டு மொய்யாவாயினும், கூந்தலின் இயற்கைமணமும் அதிற்சூடப்பட்ட மலர்மாலைகளின் செயற்கை மணமும் நன்கு விளங்குதற்பொருட்டு, 'வண்டுழல்' என்ற அடைமொழி கொடுத்தார். பி - ம் :—[1] தம்முடற். (488)

122. ஆய்வளை மகளிரோ டமர ரீட்டத்தர்
தூயவெங் கடுங்கணை துணித்த தங்கடோள்
பேயொரு தலைகொளப் பிணங்கு [1] வாய்களின்
நாயொரு தலைகொள நகையுற் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்-சில அரக்கர்கள், - அமரர் ஈட்டத்தர் - (இராம பாணங்களாற் போரிலிறந்தவுடனே) தேவர்களின் கூட்டத்திற் சேர்ந்தவர்களாய்,—ஆய் வளை மகளிரோடு - சிறந்தவளையல்களையுடைய தேவமாதர்களுடன்,—தூய வெம் கடு கணை துணித்த தங்கள் தோள்-சுத்தமான மிகக்கொடிய இராமபாணங்களால் துண்டிக்கப்பட்ட தங்கள் தோள்களை, பேய் ஒருதலை கொள - பேய் ஒருபக்கத்திலே கௌவிக்கொள்ள, பிணங்கி-(அவற்றோடு) மாறுபட்டு, நாய்-நாய்கள், ஒரு தலை - மற்றொருபக்கத்திலே, வாய்களின் கொள - வாயாற்கௌவியிருக்க, (கண்டு), நகை உற்றார் - பரிகசித்தார்கள்; (எ - று.)—பி - ம் :—[1] வாய்விடா.

ஆய் வளை-பலவளைகளுள் தெரிந்தெடுத்த வளை. (489)

123. தெரிகணை மூழ்கலிற் றிறந்த மார்பினர்
இருவினை கடந்துபோ யும்ப ரெய்தினர்
நிருதர்தம் பெரும்படை நெடிது நின்றவன்
ஒருவனென் றுள்ளத்தி [1] னுலைவுற் றாரரோ.

(இ - ள்.) தெரி கணை - (இராமபிரான்) ஆராய்ந்து எடுத்து விட்ட அம்புகள், மூழ்கலின் - தைத்துப்பாய்தலால், திறந்த - பிளவு பட்ட, மார்பினர் - மார்பையுடையவர்களாய், இரு வினை கடந்து போய் - பெரிய போர்த்தொழிலை யொழித்துச் சென்று, உம்பர் எய்தினர் - மேலுலகு அடைந்தவரான, நிருதர் - சில அரக்கர்கள்,— 'தம் பெரு படை நெடிது-தம்முடைய [அரக்கர்களுடைய] பெரிய சேனையோ மிகநீண்டது: நின்றவன் - (அதனிடையில்) நின்ற இராமபிரானோ, ஒருவன் - ஒருத்தனேயாவன்,' என்று - என்றெண்ணி, உள்ளத்தில் உலைவு உற்றார்-மனத்தில் அச்சமடைந்தார்கள்; (எ - று,)—அரோ-ஈற்றசை.

கொடிய அரக்கர்கள் இராமபாணம்பட்டவளவிலே இறந்து தேவர்களாயினமையால் அத்தேவர்களுக்கு உரிய குணஞ்செயல்களை உடனேகொண்டு, 'சேனையாகத்திரண்ட அரக்கர்களோ மிகப்பலர்: அவற்றுடன் எதிர்த்துப் போர்செய்யும் இராமனோ துணையின்றி ஒருவனாயுள்ளான்' என்று இராமபிரானது தனிமையைக் கருதி அஞ்சினரென்பதாம். இங்கு நிருதர் இராமபிரானுக்காக உலைவுற்ற தாகக் கூறியது - தகுதியின்மையணியின்பாற்படும். இராம னிடத்து மிக்க அன்பையுடைய தேவர்களுக்கு அந்த அன்பின் மிகுதி யாலுண்டாகுங் கவலே, அரக்கர்களுக்கு விரைவிலுண்டான திறத்தை வியந்து கூறினர். 'இருவினைகடந்துபோயும்பரெய்தினர்' என்ப தற்கு - இருவகைக் கருமங்களையுங் கடந்து சென்று மோக்ஷலோக மடைந்தவர்களென்று உரைத்தல் மரபன்று. [1]உணர்வுற்றுர்சிலர் என்ற பாடத்திற்கு, இராமபாணங்களால் இறந்து துறக்கம் எய்தி அமரராய்விட்ட அரக்கர், 'நிருதர்தம் பெரும்படையின் நெடிது நின்றவன் ஒப்பற்ற கடவுள்' என்று அறிதலுற்ருரென்க. (490)

124. கைக் [1]கரி யன்னவன் பகழி கண்டகர்
மெய்க்குலம் வேரொடுந் [2]துணித்து வீழ்த்தின
மைக்கரு மனத்தொரு வஞ்சன் [3]மாண்பிலன்
பொய்க்கரி கூறிய கொடுஞ்சொல் போன்றவே.

(இ-ள்.) கை கரி அன்னவன் பகழி - துதிக்கையையுடைய யானை யைப் போன்ற இராமபிரானது அம்புகள், கணடகர் மெய்குலம் வேரொடும் துணித்து வீழ்த்தின - மிகக்கொடிய அரக்கர்களின் உடற்கூட்டங்களை அடியோடு அறுத்துத்தள்ளியவை, —மாண்பு இலன் - பெருந்தன்மையில்லாதவனாகிய, மை கரு மனத்து ஒரு வஞ்சன் - மைபோலக் கரிய மனத்தையுடைய ஒருவஞ்சகன், பொய் கரி கூறிய - (நீதித்தலத்திற்) பொய்ச்சாட்சி சொன்ன, கொடு சொல் - கொடிய சொற்களை, போன்ற - ஒத்தன; (எ - று.)

பொய்ச்சாட்சி மொழிகள் சொன்னவர்களது குலத்தை வேரோடு அறுத்தல்போல, இராமபாணங்கள் அரக்கர்குலத்தை வேரோடு அறுத்துத் தள்ளின என்பதாம். குலம் வேரொடுந் துணித்து வீழ்த்துதல் மாத்திரத்துக்கு இவ்வுவமை கூறியது. பலத்திலும் மேலானதோற்றத்திலும் நடையிலும் இராமனுக்கு யானை உவமை யாதல் மாத்திரமேயன்றி, யானைத்துதிக்கை இராமனது திருக்கை களுக்குத் திரண்டுருண்டு நீண்ட வடிவில் ஒப்புமையாதலுமபற்றி, 'கைக்கரியன்னவன்' எனயானைக்கும் அடைமொழிகொடுத்துக் கூறி னர். கை என்ற அடைமொழி அடுத்ததனுல், கரி யென்ற சொல்- காரணப்பொருளை நோக்காமல், யானையென்னும் வெறும்பெயர் மாத் திரமாய் நிற்கும். மைக்கருமனம் - மிக்க களங்கமுடைய மன மென்ற படி; தீயசிந்தையை யுடைமையைக் கரியதென்றல், மரபு; "அகங் குன்றி, மூக்கிற்கரியாருடைத்து" எனறதிருக்குறளும், "சிற்றம்பல மாதரியாக், கூழின் மலிமனம் போன்றிருளா நின்ற கோகிலமே" என்ற திருக்கோவையாரும் இங்குநோக்கத்தக்கன. பி - ம் :— [1]களிறனையவன். [2]துடைத்து. [3]மாண்பிலா. (491)

125. [1]அஞ்சிறை யறுபத மடைந்த கீடத்தைக்
தஞ்செனத் [2]தன்மய மாக்குந் தன்மைபோல்
வஞ்சகத் தரக்கரை [3]வளைத்து வள்ளருன்
செஞ்சரத் தூய்மையாற் றேவ ராக்கினுன்.

(இ-ள்.) அம் சிறை அறுபதம்-அழகிய இறகுகளையுடைய ஒரு சாதி வண்டு [குளவி], தஞ்சு என அடைந்த கீடத்தை-அடைக்கலப் பொருளாகத் தான் கொண்ட புழுக்களை, தன் மயம் ஆக்கும் தன்மை போல் - தனது வடிவமாகச் செய்யுந் தன்மை போல,— வள்ளல்-வரையாது அருள்செய்யுந்தன்மையையுடைய இராமபிரான், வஞ்சகத்து அரக்கரை வளைத்து - வஞ்சனையையுடைய இராக்கதர்களை வளைத்துக்கொண்டு, செம் சரம் தூய்மையால் தேவர் ஆக்கினுன் - சிறந்த (தனது) அம்புகளின் பரிசுத்த குணத்தால் (அவர்களைத்) தேவராகும்படி செய்தான், (எ-று.)—தான் - அசை.

கீழ்ச்செய்யுளில் முற்கூறியவாறு இராமசரங்கள் அரக்கரையழிக்கத்தொடங்கி வேரோடறுத்தமை கூறி, இச் செய்யுளில் அவர்களைத் தேவராகுமாறு தூய்மையாக்கினமையை விளக்குகின்றுரென்க. குளவி புழுக்களைப் பிடித்துக் கொட்டித் தன்வடிவமாக்குதல்போல, தேவனுன இராமன் அரக்கர்களையழித்துத் தேவர்களாக்கின னென்பதாம். அரக்கர்க்குத் தேவத்தன்மை யுண்டாயிற் றென்பது தகாததுபோலத் தோன்றுதலால், இது—தகுதியின்மையணியாம். குளவியென்னும் வண்டு ஒருவகைப்புழுக்களைக்கொண்டு போய்க் கூட்டில்வைத்து அவற்றின் தலையில் அடிக்கடி கொட்ட அவை குளவியையே நினைத்துக்கொண்டிருத்தலால் அதன்வடிவமாகமாறிச் சிறகுமுளைக்கப்பெற்றுப் பறந்து செல்லுந்தன்மையையடையு மெனபர். விலங்குநூல்வல்லவர் குளவிகளும் மற்றைப் பூச்சிகளும் பிறக்கும்போது முட்டைகளாய்ப் பிறந்து பின்புபுழுக்களாகி, முடிவில் தம்மை முட்டைகளாக ஈன்ற பூச்சியினது வடிவம் அடைகின்றன என்பர்: இவ்வாறு கொண்டு, முட்டையினின்று புழுவானவற்றைக் கொட்டித்தன் வடிவமுண்டாக்குதலாகிய செயலுண்மைபற்றிக் கூறியது என்பதில் அந்த விலங்கு நூலோடு மாறுபாடு இல்லையெனத் தோன்றுகின்றது: "குளவி தன்னிறமாக்கும்" என்ற பழமொழியையும் கருதுக. அறுபதம் - ஆறுகால்களையுடைய தெனப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணக்குறியாம். கீடம்- வடசொல். தஞ்சு- தஞ்சமென்பதன் விகாரம். பி-ம்:—[1] அஞ்சுதற் கறுபகையறுத்த நீதியர், அஞ்சுதற்கறுபகையறுத்து நீதியர். [2] தம். [3] வளைந்து. (492)

126. வலங்கொள்போர் [1]மானுடன் வலிந்து கொன்றமை
அலங்கல்வே லிராவணற் கறிவிப் பாமெனுச்
சலங்கொள் [2]போ ரரக்கர்த முருக்க [3]டாங்கின
இலங்கையி [4]னுற்றவக் குருதி யாறரோ.

(இ-ள்.) 'வலம் கொள் போர் மானுடன் - வலிமையைக் கொண்ட போரில்வல்ல ஒருமனிதன், வலிந்து கொன்றமை-(அரக்கர் பலரை) வலியக் கொன்றிட்டதை, அலங்கல் வேல் இராவணற்கு

அறிவிப்பாம்-வெற்றி மாலையையணிந்த வேற்படையையுடைய இராவணனுக்குத் தெரிவிப்போம்,' எனா-என்றுஎண்ணி, - அ குருதியாறு - அங்குஉண்டான இரத்தநதிகள், சலம் கொள்போர் அரக்கர் தம் உருக்கள் தாங்கின - மாறுபாடுகொண்ட போரையுடைய இராக்கதர்களது உடல்களைச் சுமந்தவையாய், இலங்கையின் உற்ற - இலங்கையிற் சேர்ந்தன; (எ - று.)

இரத்தப்பெருக்குகள் மிக்கவிசையோடு தென்கடலிற்சேர்ந்து அதனிடையிலுள்ள இலங்காபுரியளவுஞ் சென்றமை, இராமபிரானால், நேர்ந்த அரக்கரழிவை அங்குள்ள அரக்கர்கோமானான இராவணனுக்குத் தெரிவிக்கச் சென்றாற்போன்றதென்பதாம்: தொடர்புயர்வு நவிற்சியணியை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. அரக்கருடல்களை யடித்துக்கொண்டுவந்த இரத்தப் பெருக்கு, தன்னைக் கண்டவளவில் அரக்கரழிவை இராவணன் அறிந்துகொள்ளக் காரணமாய்க்கிடக்குமென்க. பி - ம்:—[1]மானிடன். [2]வேல். [3]தாங்கியபோய். [4]ஈர்த்த. (493)

127. [1]சூழ்ந்ததார் நெடும்படை பகழி சுற்றுறப்
போழ்ந்துயிர் குடித்தலிற் புரளப் பொங்கினான்
தாழ்ந்திலன் முத்தலைத் தலைவன் [2]சோரியின்
ஆழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கின்றான்.

(இ - ள்.) சூழ்ந்த-(தன்னைச்) சுற்றிலும்வந்த, தார் நெடு படை- அணிவகுப்பையுடைய பெரிய இராக்கதசேனைகளை, பகழி - இராம பாணங்கள், சுற்றுற போழ்ந்து-எப்புறத்தும் பிளந்து, உயிர் குடித்தலின்-கொன்றதனால், புரள - (அவை கீழவிழுந்து) புரள,—(அது கண்டு), முத்தலைத் தலைவன் - திரிசிர னென்னும் படைத்தலைவன், பொங்கினான் - கோபம் மூண்டு, தாழ்ந்திலன்-சிறிதுங் காலதாமதஞ் செய்யாமல், சோரியின் ஆழ்ந்த தேர் அம்பரத்து ஒட்டி-இரத்தத்திற் புதைந்த (தனது) தேரை ஆகாயத்திலே செலுத்தி, ஆர்க்கின்றான்- கர்ச்சனை செய்கின்றவனானான்; (எ - று.)

நிலத்தில் மிக்க இரத்தச்சேற்றில் தேர் புதைந்துமேற்செல்ல மாட்டாமையின் அதனை ஆகாயமார்க்கத்தாற் செலுத்தினனென்க. அரக்கனாதலால் தனது மாயாபலத்தினால் தேரை வானத்துச் செலுத்தவல்லனாயினான்போலும். தாழ்ந்திலனென்பதற்கு-பொறுக்க மாட்டாதவனாயென்றும் பொருள் கொள்ளலாம். தார்-போர்மாலையுமாம். பி-ம்:—[1]சூழ்ந்தன. [2]தானிணைந்து. (494)

128. ஊன்றிய தேரின னுருமின் வெங்கணை
வான்றொடர் மழையென வாய்மை யாவர்க்குஞ்
சான்றென நின்றவத் தரும மன்னவன்
[1]தோன்றறன் றிருவுரு மறையத் தூவினான்.

(இ - ள்.) ஊன்றிய தேரினன்-(இராமனெதிரில்) நிலைநிறுத்திய தேரையுடையவனாய,—(திரிசிரன்),—வாய்மை-(தவறாத)சத்தியத்தில், யாவர்க்குஉம் சான்றுஎன - எல்லோர்க்கும் சாட்சியாக, நின்ற—, அ தருமம் மன்னவன் - அறநெறிவழுவாத அந்தத் தசரத

சக்கரவர்த்திக்கு, தோன்றல்தன்-குமாரனான இராமனது, திரு உரு-அழகிய திருமேனி, மறைய-மறையும்படி, உருமின் வெம் கணை - இடி போன்ற கொடிய அம்புகளை, வான தொடர் மழை என-வானத்திற் பொருந்திய மழைபோல, தூவினான்-மிகுதியாகச் சொரிந்தான்;

தசரதன் கைகேயிக்குச் சம்பராசுரயுத்தத்தில் இரண்டுவரங் கொடுப்பதாக வாக்குத்தத்தஞ் செய்தான்: பின்பு அது தவற மாட்டாமல் அக்கைகேயியின் கொள்கைக்குக் குறுக்குச்சொல்ல அஞ்சி இராமனைப் பிரிந்தான். அந்தப் புத்திரசோகத்தால் உயிர் நீத்துப் புகழை நிலைநிறுத்தினான்: அதனால், தசரதசக்கரவர்த்தி சத்தியந்தவறாமைக்கு யாவருங் கொண்டாடிக் கூறும் நல்ல எடுத்துக் காட்டு ஆவன்: ஆதலால், 'வாய்மை யாவர்க்குஞ் சான்றென நின்றவத்தருமமன்னவன்' என்றார். தருமம் அன்னவன் என எடுத்து, தருமத்தின் சொரூபத்தை யொத்தவனென்றுமாம்; "இராமனென் னும், மொய்ம்மாண் கழலோற் றரு நல்லறமூர்த்தி யன்னான்" என்றார், கீழபாலகாண்டத்தும். பி - ம்:—[1]தோன்றினன். (495)

129. தூவிய சரமெலாந் துணிய வெங்கணை
ஏவின னிராமனு மேவி யேழிரு
[1]பூவியல் வாளியாற் பொலங்கொ டேரழித்து
ஆவிவெம் பாகனை [2]யழித்து மாற்றினான்.

(இ - ள்.) தூவிய சரம் எலாம் துணிய-(அத்திரிசிரன்) சொரிந்த அம்புகளெல்லாம் துணிபடும்படி, இராமனும்—, வெம் கணை ஏவினன் - கொடிய பாணங்களைத் தொடுத்தான்; ஏவி-அங்ஙனந்தொடுத்து, பூ இயல் ஏழ் இரு வாளியால் - பொலிவுகொண்ட பதினான்கு பாணங் களால், பொலம் கொள் தேர் அழித்து-பொன்மயமாய்ப் பொருந்திய (அவன்) தேரை நாசப்படுத்தி, வெம் பாகனை ஆவி அழித்து மாற்றி னான்-கொடிய (அவனது) சாரதியையும் உயிரழித்தொழித்தான்;

தன்னை மறையத்தூவின கணைகளைத் துண்டித்து ஸ்ரீராமன் பதினான்குபாணங்களை யேவி, திரிசிராவின் தேரை யழித்துப் பாகனை யும் ஒழித்தானென்க. மாற்றுதல்-அரக்கனைத் தேவனாக்குதலுமாம். 'பூவியல்வாளி' என்பதற்கு - (மனமதனுக்குப்பாணமாய்க் குறித்த இலக்கைத் தாக்குவதில் தவறாத)மலர்களை யொத்த அம்புகளென்று உரைப்பினும் அமையும். பி-ம்:—[1]பூமுகவாளியால். [2]அகற்றி. (496)

130. அன்றியு மக்கணத் தமர ரார்த்தெழப்
பொன்றெரி வடிம்புடைப் பொருவில் வாளியால்
வன்றொழி றீயவன் மகுட மாத்தலை
ஒன்றொழித் திரண்டையு முருட்டி னனரோ.

(இ - ள்.) அன்றிஉம் - (கீழ்க்கூறியவை) அல்லாமலும், அ கணத்து - அந்த க்ஷணத்தில், அமரர் ஆர்த்து எழ - தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்து கிளரும்படி, (இராமன்), பொன் தெரி வடிம்பு உடை பொருவு இல் வாளியால் - பொன்மயமாய் விளங்குகிற கூர்நுனியையுடைய ஒப்பில்லாத அம்புகளால், வல் தொழில் தீயவன் மகுடம் மா தலை - கொடுந்தொழில்களையுடைய

துஷ்டனான அத்திரிசிரனது கிரீடமணிந்த பெரிய (மூன்று) தலைகளுள், ஒன்று ஒழித்து இரண்டைஉம் - ஒன்றுதவிர்த்து மற்றைய இரண்டையும், உருட்டினான் - (துணிப்புண்டு) கீழவிழுந்து உருளச் செய்தான்; (எ-று.)

மற்றும் ஒப்பற்ற வாளியால் இராமபிரான் அந்தத்திரிசிராவின் மூன்றுதலைகளில் இரண்டை உருளச் செய்தனனென்க. பொன்று எரி வடிம்புஉடை எனப்பிரித்து - பகையழிதற்குக் காரணமான நெருப்பையுமிழும் நுனியையுடைய என்றலும் ஒன்று. (497)

131. தேரழிந் தவ்வழித் திரிசி ராவெனும்
பேரழிந் ததனினு மறம்பி ழைத்திலன்
வாரழிந் துமிழ்சிலை [1]வான நாட்டுழிக்
காரிழிந் தாலெனக் [2]கணைகள் சிந்தினான்.

(இ - ள்.) அ வழி - அவ்விடத்து, தேர் அழிந்து - (தனது) இரதமும் அழிந்து, திரிசிரா எனும் பேர் அழிந்ததனின்உம் - திரிசிரனென்ற (தனது) பெயரின் பொருளும் அழிந்ததனாலும், மறம் பிழைத்திலன் - கொடுமை நீங்காதவனாய், (அவ்வரக்கன),—வார் அழிந்து உமிழ் சிலை - நீட்சியொழிந்து [வளைந்து] (அம்புகளை) வெளிவிடுந் தன்மையதான (தனது) வில்லினின்று, வான(ம்) நாட்டுழி கார் இழிந்தால் என - ஆகாயத்தில் காளமேகம் இறங்கினாற்போல, கணைகள் சிந்தினான்-அம்புமழை பொழிந்தான்; (எ - று.)

தனதுதேரும் மூன்றுதலைகளுள் இரண்டுதலைகளும் அழிந்ததனாலும் அதைரியப்படாமல் பெருமறத்தோடு வானத்தில் நின்று அம்புசொரிந்தானென்றவாறு. இங்கு, 'வானநாடு' என்றது - அந்தரத்தை. திரிசிராவெனும் பேர் அழிந்து-மூன்றுதலைகளை யுடைமை பற்றிவந்த காரணப்பெயராகிய த்ரிசிரா என்ற பெயர் இரண்டுதலைகள் போய்விட்டதனால் அமையப்பெறாமல் என்றவாறு; திரிசிரனாயிருந்தவன் ஏகசிரனாயினனென்க. பி - ம்:—[1]வளைய. [2]கணைவழங்கினான். (498)

132. ஏற்றிய நுதலின னிருண்ட கார்மழை
தோற்றிய வில்லொடுந் தொடர மீமிசைக்
காற்றிடை [1]யழித்தெனக் கார்மு கத்தையும்
மாற்றரும் பகழியா லறுத்து மாற்றினான்.

(இ - ள்.) ஏற்றிய நுதலினன் - (கோபத்தால் நெறித்து) நெற்றியின்மேலேற்றிய புருவத்தையுடையவனாய் (திரிசிரன்), இருண்ட கார் மழை தோற்றிய வில்லொடுஉம் - இருட்சிபெற்ற கார்காலத்து மழையை (அம்புசொரிதலால்) உண்டாக்குகிற வில்லுடனே, தொடர-விடாதுநெருங்கிப் போர்செய்ய,—மீமிசை காற்று இடை அழித்து என-வானத்தின்மீது அடிக்கிற காற்று (மேகத்தை) இடையிலே சிதறியழித்தாற்போல (அழியும்படி), கார்முகத்தைஉம் - (அவனுடைய) வில்லையும், மாற்று அரு பகழியால் அறுத்து மாற்றினான்-(எவராலும்) விலக்கவொண்ணாத (தனது) பாணங்களால் துணித்தொழித்தான், (இராமன்); (எ - று.)

பின்னும் திரிசிரா தொடர்ந்து பொர இராமபிரான் அவனது வில்லையறுத்தனனென்க. 'ஏற்றிய நுதலின்' என்ற தொடர், இராமனைக்குறிப்பதாகவுமாம்; 109-ஆங் கவியில் "சிலையொடு புருவங் கோட்டினன்" என வந்தமை காண்க. இனி, வானத்தில் நின்ற திரிசிரனை நோக்கி உயர எடுத்த நெற்றியை யுடையவனாய் எனினும் அமையும். கார்முகம்-(போர்த்) தொழிற்கு உரியதென்று காரணப்பொருள்படும். பி - ம்:—[1] அறுத்தெனை, அழிந்தெனை. (499)

வேறு.

133. வில்லி ழந்தன னென்னினும் விழித்தவாண் முகத்தின்
எல்லி ழந்தில னிழந்திலன் வெங்கத மிடிக்குஞ்
சொல்லி ழந்திலன் றோள்வலி யிழந்திலன் சொரியுங்
கல்லி ழந்தில னிழந்திலன் கறங்கெனத் திரிதல்.

(இ - ள்.) (அத்திரிசிரன்),—வில் இழந்தனன் என்னின்உம்- வில்லை யிழந்திட்டானாயினும், விழித்த வாள் முகத்தின் எல் இழந்திலன் - உறுக்கிப்பார்க்கின்ற பிரகாசமுள்ள (தனது) முகத்தின் ஒளியை யிழந்தானில்லை; வெம் கதம் இழந்திலன் - கொடிய கோபத்தை யிழந்தானில்லை; இடிக்கும் சொல் இழந்திலன் - இடிமுழக்கம் போலக் கர்ச்சித்துக்கூறுகிற வீரவார்த்தைகளை யிழந்தானில்லை; தோள் வலி இழந்திலன் - தோள்களின் வலிமையையிழந்தானில்லை; சொரியும் கல் இழந்திலன் - (இராமன்மேல் எடுத்துச்) சொரியுங் கற்களை யிழந்தானில்லை; கறங்கு என திரிதல் இழந்திலன் - காற்றாடி போலச் சுழலுந்தொழிலையிழந்தானில்லை; (எ-று.)

வில் ஒழிந்தபின்பும் அவன் அதைரியப்படாமல் வீரவாதம் பேசிக்கொண்டு தானொருவனே எப்புறத்துஞ் சுற்றிவந்து புஜபலத்தாற் கற்களை யெடுத்து இராமன்மேற் சொரிந்தன னென்பதாம்; சொற்பொருட்பின்வருநிலையணி. "அகத்தி னழகு முகத்தில் தெரியும்" என்றபடி அவன்முகத்தி லொளியிழவாமை மனத்தில் துணிவு இழவாமையை அறியக்கிடத்தலை விளக்குவார், 'முகத்தி னெல்லிழந்திலன்' என்றார். ஆண் முகம் எனப்பிரித்து - பராக்கிரமம்விளங்கும் முகமென்று உரைப்பாருமுளர். எல் - ஒளிகுறிக்கும் இடைச்சொல். என்னின் = எனின்.

இதுமுதல் 29 - கவிகள், கீழ்ப்படலத்தின் 90-ஆங் கவிபோன்ற கலிநிலைத்துறைகள். (500)

134. ஆளி ரண்டுநூ றுள்வென வந்தரத் தொருவன்
மூளி ரும்பெரு [1]மாயையின் செருமுயல் வானைத்
தாளி ரண்டையு மிரண்டுவெங் கணைகளாற் றடிந்து
தோளி ரண்டையு மிரண்டுவெங் கணைகளாற் றுணித்தான்.

(இ - ள்.) அந்தரத்து - ஆகாயத்திலே, ஒருவன் - (தான்) தமியனாய் நின்றுகொண்டே, மூள் இரு பெரு மாயையின் - தொடங்கிய மிகப்பெரிய மாயையினால், இரண்டு நூறு ஆள் உள என - இருநூறுசனங்கள் உள்ளனபோல, செரு முயல்வானை-போரைச்

செய்கிற திரிசிரனை, (ஸ்ரீராமன்),—தாள் இரண்டைஉம் இரண்டு வெம் கணைகளால் தடிந்து-இரண்டுகால்களையும் கொடிய இரண்டு அம்புகளால் துண்டித்து, தோள் இரண்டைஉம் இரண்டு வெம் கணைகளால் துணித்தான் - இரண்டுதோள்களையும் கொடிய இரண்டு அம்புகளால் துண்டித்தான்; (எ - று.)

தானொருவன் போர்செய்தலே இருநூறுபேர் போர்செய்தல் போலத்தோன்றும்படி பெருமாயையாற் கடும்போர்செய்த திரிசிரனை, இராமன், பாணங்களால் மாயையையொழித்துத் தாளுந் தோளுந் துணித்தனனென்க. ஆள் உள என்ற முடிபு வழாநிலை யாதல், 105-ஆங் கவியிற் கூறியவாற்றால் விளங்கும். இருபெரு - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:—[1] மாயவெஞ். (501)

135. அற்ற தாளொடு தோளின னயிலெயி றிலங்கப்
பொற்றை மாமுழைப் புலாலுடை [1]வாயினன் புகுந்து
பற்ற வாதரிப் பான்றனை நோக்கினன் [2]பரியான்
கொற்ற வார் [3]சரத் தொழிந்ததோர் சிரத்தையுங் குறைத்தான்.

(இ- ள்.) அற்ற தாளொடு தோளினன் - கால்களும் கைகளும் அறுபட்டவனாகி, (அதன்பின்னும்), அயில் எயிறு இலங்க-கூரிய பற்கள் வெளிவிளங்க, பொற்றை மா முழை புலால் உடை வாயினன்- மலையின் பெரியகுகைபோன்ற புலால்நாற்றமுடைய வாயைத் திறந்து கொண்டவனாய், புகுந்து பற்ற ஆதரிப்பான்தனை - (தன்மேல்) விழுந்து (தன்னைக்) கவ்விக்கொள்ள விருப்புற்றவனான அத்திரி சிரனை, நோக்கினன் - பார்த்து, (இராமபிரான்), பரியான்-(சிறிதும்) இரக்கங்கொள்ளாதவனாய், கொற்றம் வார் சரத்து ஒழிந்தது ஓர் சிரத்தைஉம் குறைத்தான் - வெற்றியைத் தருகிற நீண்ட அம்பினால் (முன்பு) துணிபடாது எஞ்சிநின்றதாகிய ஒருதலையையும் துணித் தான்; (எ - று.)

நிராயுதனாய்க் கால்கைகளாகிய முக்கிய அவயவங்கள் போய் நின்ற நிலையிலும் அவன் கொடுமை யொழியாமல் இராமனைத் தான் விழுங்கிவிடக் கருதினனாதலால், அவன்பக்கல் பெருமான் பரிவு கொண்டிலன்: அவனது எஞ்சிய சிரத்தையும் கொய்தன னென்க. பி-ம்:—[1] வாயினிற். [2] பரிவான். [3] சிலைச்சரங்கொடுதலையையும். (502)

136.—திரிசிரா மாண்டதும், தூடணன் தடுக்கவும் நிருதர் அஞ்சியோடினமையையும் ஓடின அரக்கர்கட்கு நேர்ந்த நிலைமையையும் இதுமுதல் ஐந்துகவிகள் கூறும்.

திரிசி ராவெனுஞ் சிகரமண் சேர்தலுஞ் [1]செறிந்த
நிருத ரோடினர் தூடணன் விலக்கவு நில்லார்
பரிதி வாளினர் கேடகத் தடக்கையர், பரந்த
குருதி நீரிடை வார்கழல் கொழுங்குடர் தொடக்க.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) திரிசிரா எனும் சிகரம் - திரிசிரனென்கிற மலைச் சிகரம், மண் சேர்தலும் - தரையில் விழுந்தவளவிலே,—பரிதி வாளினர் - சூரியன்போல் விளங்குகிற வாட்படையை யுடையவர் களும், கேடகம் தட கையர்-கேடகத்தைப் பிடித்த பெரியகைகளை யுடையவர்களுமாய், செறிந்த -(முன்பு) அடர்ந்துநின்ற, நிருதர் - அரக்கர்கள், தூடணன் விலக்கவும் நில்லார் - தூஷணனென்ற சேனாதிபதி (ஓடன்மின் என்று தங்களை) மறுக்கவும் நில்லாதவர்க ளாய், ஓடினர்-ஓடினார்கள்; (அவர்களிற் சிலருடைய), வார் கழல் - நீண்ட கால்கள், பரந்த குருதி நீரிடை - பரவிய இரத்தவெள்ளத் திலே யுள்ள, கொழு குடர்-கொழுத்த குடல்களிலே, தொடக்க - மாட்டிக்கொள்ள, (அதுகண்டு),—(எ - று.)—'வானவர்கைபுடைத்து ஆர்த்தார்' என வருங் கவியோடு முடியும்.

போரில் நிற்கமாட்டாமல் மிக அஞ்சி ஓடிப்போகிறநிலையிலும் சிலர்க்கு அங்ஙனம் விரைந்துசெல்லவொண்ணாதபடி தற்செயலாய்த் தடைநேர்கிற ஊழ்வினையின் கொடுமை, ஈற்றடியில்விளங்கும்; அடுத்த சிலகவிகளிலும் இதுகாண்க. கைகளிற் படைக்கலம் இருக் கையிலும் போர்க்குத் துணியாத அவர்களது ஆற்றலின்மையை விளக்குதற்கு, 'பரிதிவாளினர், கேடகத்தடக்கையர்' என்ற அடை மொழி கொடுத்தார். இனி இச்செய்யுளைக் குளகமாகக்கொள்ளா மல், தூடணன் விலக்கவும், கொழுங்குடர்தொடக்க (உம்), நில் லார் (அரிதில்) ஓடின ரென்று உரைத்தலுமொன்று. தாம் நினைத்த செயல் நிறைவேறாமல் அதற்குமாறான செயல் தோன் றியதாக வந்த இது - தகுதியின்மையணியின்பாற் படும். பி-ம்:— [1]சிதறி. (503)

137\. கணத்தின் மேனின்ற வானவர் கைபுடைத் [1]தார்த்தார்
பணத்தின் மேனிலங் [2]குழியுறக் கால்கொடு[3] பறப்பார்
நிணத்தின் மேல்விழுந் தழுந்தினர் சிலர்சிலர் [4]நிவந்த
பிணத்தின் மேல்விழுந் [5]துருண்டன ருயிர்கொடு பிழைப்பார்.

(இ - ள்.) (அஞ்சியோடிய அரக்கர்களுடைய கால்கள் படுகளத் திற்கிடந்த குடல்களிலே சிக்கியதனைக் கண்டு), கணத்தின் மேல் நின்ற வானவர் கைபுடைத்து ஆர்த்தார் - கூட்டமாகத் திரண்டு வானத்தில்நின்ற தேவர்கள் (களிப்போடு பரிகசித்துக்) கைகொட்டி யாரவாரித்தார்கள்; சிலர்-மற்றும் சில அரக்கர்கள், பணத்தின் மேல் நிலம் குழி உற கால் கொடு பறப்பார் - (ஆதிசேஷனது) படங்களின் மேலுள்ள பூமி குழிபடும்படி (தங்கள்) கால்களைப் பதியவைத்துக் கொண்டு விரைந்தோடினவர்களாய், நிணத்தின்மேல் விழுந்து அழுந் தினர் - (அங்குக்கிடந்த) கொழுப்பில் வழுக்கிவிழுந்து (அச்சேற்றில்) ஆழ்ந்தார்கள்; சிலர் - வேறுசில அரக்கர்கள், உயிர் கொடு பிழைப் பார் - உயிரையழியாதபடி பாதுகாத்துக்கொண்டு பிழைத்தோட முயன்றவர்களாய், நிவந்தபிணத்தின்மேல் விழுந்து உருண்ட னர் - உயர்ந்த பிணங்களின்மேல் இடறிவிழுந்து கீழ்ப்புரண்டார் கள்; (எ - று.)

இது ஓடிச்செல்லும் அரக்கர்களின் உடற்பாரமிகுதியையும், செல்லும் விசையின் மிகுதியையும் விளக்கும் உயர்வுநவிற்சி. மேல் நின்ற வானவர்-போர்காண வந்தவர். போன பாடலோடு இப் பாடலைக் குளகமாகக்கொள்ளாவிடின், இப்பாட்டின் முதலடியைப் பின்வரும் ஒவ்வொருவாக்கியத்தோடும் இயைத்துப் பொருள் கொள்க. பணம்-வடசொல். கீழிருந்து தாங்குகிற ஆதிசேஷனது முடியளவும் தரை குழிபடும்படி யென்பது, 'பணத்தினமேல் நிலங் குழியுற' என்பதன் கருத்து. பி - ம்:—[1] ஆர்ப்பப். [2] குலைவுற. [3] பதைத் தார். [4] நிற்பப். [5] அழுந்தினர். (504)

**138.** வேய்ந்த வாளொடு வேலிடை [1] மிடைந்தன வெட்ட
ஓய்ந்து [2] ளார்சில ருலந்தன ருதிரநீர் யாற்றில்
பாய்ந்து கால்பறித் [3] தழுந்தினர் சிலர்சிலர் பயத்தால்
நீந்தி னூர்நெடுங் குருதியங் கடல்புக்கு நிலையார்.

(இ - ள்.)—சிலர்-(அஞ்சிஓடுகிற) சில அரக்கர்கள், இடை - வழியிலே, வேய்ந்த வாளொடு வேல் - (முன்பு இறந்துவிழுந்து கிடக்கிற அரக்கர்கள் கைகளிற்) கொண்டுள்ள வாள்களும் வேல் களும், மிடைந்தன வெட்ட-நெருங்கினவையாய(த் தமதுகால்களை) ஊறுபடுத்துதலால், ஓய்ந்துளார்-தளர்ச்சியடைந்தார்கள்; சிலர்-, உலந்தனர் உதிரநீர்யாற்றில் - முந்தியிறந்தவரான அரக்கர்களது இரத்தநதியில்,பாய்ந்து-இழிந்து, கால் பறித்து - கால்கள் இழுக்கப் பட்டு, அழுந்தினர்-முழுகிப்போனார்கள்; சிலர்—, பயத்தால்-அச்சத் தால், நெடு குருதி கடல் புக்கு - பெரிய இரத்தக்கடலில் இறங்கி, நீந்தினூர்-நீந்திச்சென்றவர்களாய், நிலையார்-(அங்கு) நிலைகொள்ளாத வரானூர்கள்; (எ - று.)—குருதியங்கடல், அம்-சாரியை.

உயிர்தப்புமாறு நிருதர்சிலர்ஓடுகையில் அவரைப் போர்க் களத்து நெருங்கிக்கிடக்கின்ற வேல்வாள்கள் ஊறுசெய்ய அதனுல் அவர்நடையோய்ந்தனராக, சிலர்குருதியாற்றுலிழுக்கப்பட்டு அழுந் தினராக, சிலர் அச்சத்தால் இரத்தக்கடலில் இழிந்துநீந்திக் கொண்டே அதனைக்கடந்து அப்பாற்சென்றுயினும் உயிர்பிழைக்கலா மென்று துணிந்து முயன்று ஆழ்ந்த அப்பரப்பில் தாவரிக்கமாட் டாமல் கால் கைஓய்ந்திட்டனர் எனபதாம். உயிர்பிழைக்கத்தப்பி யோடியவர் அதற்குமாறுக உயிரிழந்தமையைக் கூறியது-தக்குதி யின்மையணியாம். வேய்தல்-அலங்காரமாகத்தரித்தல். அரக்கர்கள் கையிற்பிடித்த ஆயுதங்கள் போர்வெற்றிக்கு உதவாமற் கைகளுக்கு ஓரணிகலம் போலுதல்மாத்திரமாயினமையால், 'வேய்ந்தவாளொடு வேல்' என்றூர், ஓய்தல் - ஓட்டமொழிதல். பி - ம்:—[1] மிடைந்தன ரோட்டம். [2] தாள். [3] ஒழுகினர். (505)

**139.** கச்சும் வாளுந்தங் காரெுடர்ந் [1] தீர்வன காணூர்
அச்ச மென்பதொன் றுருவு [2] கொண் டாலென வழிவார்
உச்ச வீரன்கைச் சுடுசர நிருதர்நெஞ் [3] சுருவத்
தச்சு நின்றன கண்டன ரவ்வழித் தவிர்ந்தார்.

(இ - ள்.)—கச்சுஉம்-(தமது) இடைக்கச்சும், வாள்உம்-(அதிற் செருகப்பட்டுள்ள) உடைவாளும், தம் கால் தொடர்ந்து ஈர்வன-(விரைந்தோடுகையில் நழுவிவிழுந்து) தங்கள் கால்களைச் சுற்றிக் கொண்டு அறுப்பவற்றை, காணார் - அறியாதவர்களாய், (இராம பாணங்கள்தாம் தம்மைத் தடுத்துப்பிடித்து அறுக்கின்றன என் றெண்ணி), அச்சம் என்பது ஒன்று உருவு கொண்டால் என அழி வார்-பயமென்கிற ஒருகுணமே வடிவமெடுத்தாற்போல (மிக அஞ்சி) மனமழியும் அரக்கர்கள்,—(அவ்விடத்தில்), நிருதர் நெஞ்சு உருவ தச்சுகின்றன-(அங்குக்கிடக்கிற) அரக்கர்களது மார்பு முழுதுந் துளை படும்படி தைத்துநின்றவையான, உச்ச வீரன் கை சுடு சரம்-சிறந்த வீரனான இராமனது கையினா லெய்யப்பட்ட வெவ்விய அம்புகளை, கண்டனர் - பார்த்தவர்களாய், அ வழி தவிர்ந்தார் - அந்தவழியில் (தாம் செல்லுதலை) நீங்கினார்கள்; (எ - று.)

'மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்றாற் போல, பேரச்சங்கொண்ட அரக்கர்களுக்குத் தமது கச்சும் வாளுமே அச்சத்திற்குக் காரணமாயின; அதனோடு பிறர்மேல் தைத்து நின்ற அம்புகளைக்கண்டு அவை தம்மேலும் தைக்குமோ என்ற சங்கை யைத் தரவே அவ்வழியே யோடுதலையுந் தவிர்ந்தன ரென்பதாம். தொடர்தல் கச்சுக்கும், ஈர்தல் வாளுக்குமாகக் கொண்டு முறைநிர னிறைப் பொருள்கோளாக்குக. தச்சு - போலி. பி - ம்:—[1]ஈர்ப்பன. [2]கொண்டாம். [3]உருவித். பல ஏட்டுப்பிரதிகளில் "மண்டியோடினர்" என்ற அடுத்த பாடலுக்குப்பின் இச்செய்யுளிருக்க, இதனோடு திரிசிராவதைப்படலம் முடிகின்றது; இதற்குமேல் தூடணன்வதைப் படலம். (506)

140. மண்டி யோடினர் சிலர்நெடுங் கடகரி [1]வயிற்றில்
புண்டி றந்தமா முழையிடை வாளொடும் புகுவார்
தொண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவநீ யெய்மைக்
[2]கண்டி லேனெனப் புகலெனக் கைதலைக் [3]கொள்வார்.

(இ - ள்.) மண்டி ஓடினர் சிலர்-விசைகொண்டு ஓடிய சில அரக் கர்கள், நெடு கட கரி வயிற்றில்-பெரிய மதயானைகளின் வயிற்றில், புண் திறந்த - (இராமபாணத்தாலுண்டான) விரணங்கள் வாய் விட்ட, மா முழையிடை-பெரியகுகைகளில், வாளொடுஉம் புகுவார்-(கையிலேந்திய) வாட்படையுடனே நுழைந்துசெல்பவர்களாய்,— தொண்டை நீங்கிய கவந்தத்தை-(அருகில் நின்ற) தொண்டையறு பட்ட உடற்குறையை(நோக்கி), 'துணைவ-நண்பனே! நீ—, எம்மை—, கண்டிலேன் என புகல் - பார்த்திலே னென்று சொல்', என-என்று வேண்டி, கைதலை கொள்வார் - (தங்கள்) கைகளைத் தலைமேற் கொண்டு (அக்கவந்தத்தை) நமஸ்கரிப்பார்கள்; (எ-று.)

இராமபாணத்துக்குப் பயந்து மலைக்குகையில்ஓடியொளித்து உயிர்பிழைக்கக்கருதிச் செல்பவர் இடையில் பெரியயானையின் வயிற்றில் விரணப்பட்டதனாலாகிய பெருந்துளையைக் கண்டு அத னையே மலைக்குகையென்றுமயங்கி அதனுள்ளே யொளிக்கச் சென்

ரார்கள்; அங்ஙனஞ்செல்லுகையில், அருகில்நின்ற தலையற்ற உடற்குறையை நோக்கி, 'இராமன் எம்மைத் தேடிவந்தால் நீ எங்களைக் கண்டிலே னென்று சொல்' என்று வேண்டிக் கைகூப்பி வணங்கின ரென்றவாறு: இதனால், கண்ணும் வாயும் இல்லாமையால் அவைகள் கண்டிலேமெனப்புகலலாமென்று கருதினரே யன்றி, கவந்தத்துக்குக் காணுந் தன்மையும் பேசுந் தன்மையும் இல்லை யென்ற இயல்பை அச்சமிகுதியாலாகிய மதிமயக்கத்தால் அறிந்தில ரென்பது போதரும். 'வாளோடும் புகுவார்' என்றதால், தமக்கு ஏதேனும் ஏதம் ஒருகால் விளையின் ஆவிபோக்கிக் கொள்ளலாம் என்ற நசையின ரென்பது பெறப்படும். பி - ம்:—[1]வயிற்றுப். [2]கண்டிலேமெனக்கழறெனக். [3]கொண்டார். (507)

## 141.—ஓடுகின்ற அரக்கர்களை விலக்கித் தேற்றித் தூடணன் கூறத்தொடங்குதல்.

அனைய ராகிய வரக்கரை [1]யாண்டொழிற் கமைந்த
வினைய நீங்கிய மனித்தரை வெருவன்மி [2]னென்னு
நினையு [3]நானுமக் குரைப்பது முண்டென நின்றே
துனையும் வாம்பரித் தேரினன் றூடணன் சொன்னான்.

(இ - ள்.) அனையர் ஆகிய அரக்கரை - அத்தன்மையராய் அஞ்சியோடுகிற இராக்கதர்களை (நோக்கி),—துனையும் வாம் பரி தேரினன் தூடணன்-விரைந்து தாவிச்செல்லுங் குதிரைகள் பூண்ட தேரின்மேலேறியவனான தூடணன்,—'ஆண் தொழிற்கு அமைந்த வினையம் நீங்கிய மனித்தரை - பராக்கிரமத்தொழிற்குப் பொருந்திய தந்திரமில்லாத இம்மனிதர்களுக்கு, வெருவன்மின் - (நீங்கள்) அஞ்சவேண்டா, என்னு - என்று, நினையும் நான் - ஆராயுந்தன்மையுள்ள நான், உமக்கு உரைப்பதுஉம் உண்டு-உங்களுக்குச் சொல்லவேண்டிய விஷயமும்உள்ளது', என - என்று, நின்று சொன்னான் - நிலைநின்று கூறினான்; (எ - று.)

தூடணன் அரக்கரை என்னு எனச் சொன்னான் என்க. தங்களைப்போல மாயையால் வஞ்சகபோர்செய்யாமல் கபடமின்றித் தருமயுத்தஞ்செய்தலையே இராமலட்சுமணர்கட்கு ஒருகுறையாக்கி, 'ஆண்டொழிற்கமைந்த வினைய நீங்கிய மனித்தர்' என்றான். இலட்சுமணனும் சமயம்நேரின் போர்க்கு வரக்கூடு மென்று மனித்தரெனப் பன்மையாற் கூறுகின்றான். மனித்தர் - விரித்தல். இனி, [1]ஆண்டொழிற்கமைந்த வினையநீங்கிய மனத்தரை என்ற பாடத்தைக் கொண்டு - வீரத்திற்குஏற்ற செயலை நினைப்பது நீங்கிய மனத்தரான அரக்கரை என்று உரைத்தல், மிகப்பொருந்தும். 'உரைபபதும் உண்டு' என்று தொடங்கி அவன்சொன்ன வார்த்தைகளை, அடுத்த ஆறுகவிகளிற் காண்க.வாம் = வாவும். பி-ம்:—[2]என்ன. [3]நானென்று நிரப்புவதுண்டெனநின்றான். இச்செய்யுள்முதல் தூடணன்வதைப்படலம் என்று சிலபிரதியில். (508)

**142.—இதுமுதல் ஆறுகவிகள் - தூடணன் அரக்கர்க்குத் தைரியங்கூறுதலைத் தெரிவிக்கும்.**

வச்சை யா[1]மெனும் பயமனத் துண்டென வாழும்
கொச்சை மாந்தரைக் கோல்வளை மகளிருங் கூசார்
நிச்ச யம்மெனுங் [2]கவசந்தா னிலை[3] நிற்ப தன்றி
அச்ச மென்னுமீ தாருயிர்க் கருந்துணை யாமோ.

ஏழு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வச்சை ஆம் எனும் - பழிப்புக்குக் காரணமா மென்று சொல்லப்படுகிற, பயம்-அச்சம், மனத்து உண்டு என -(தங்கள்) மனத்திலே உள்ளதாக, வாழும்-உயிர்வாழ்கிற, கொச்சை மாந்தரை - இழிவையுடைய ஆடவர்களுக்கு, கோல் வளை மகளிர்உம் - அழகிய வளையல்களை யணிந்த மாதர்களும், கூசார்-அஞ்சமாட்டார்கள்; (அன்றியும்), நிச்சயம் எனும் - மனத்துணிவு என்கிற, கவசம் தான்- கவசமே, நிலை நிற்பது அன்றி-(போரில் உயிரைப் பாதுகாத்து) நிற்கக்கூடியதல்லாமல், அச்சம் என்னும் ஈது-பயமென்கிற இக்குணம், ஆர் உயிர்க்கு அரு துணை ஆம்ஓ-அரிய உயிருக்கு அருமையான காக்குந் துணை யாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ-று.)

பழிப்புக்குக்காரணமான பயத்தை மனத்துக்கொண்டு நாமும் பிழைத்திருக்கிறோமென்று சொல்லியவண்ணம் தாழ்மையுற்றிருக்கும் ஆடவர்களிடத்து மகளிருங் கூசாது அலட்சியங் கொள்வார்கள்: ஆகையால், அவ்வாறான அச்சத்தைவிட்டு மனத்திடங்கொள்வதே உயிர்க்குக் கவசம்போல அரணாகுமென்பதாம். இந்தத்தூடணன் போரில் மாற்றவர்பாலும் இப்போது அரக்கர் படையிடத்தும் அச்சம் என்ற பண்பை ஒருபொருள்போலக் கண்கூடாகப் பார்த்தலால், 'அச்சமென்னும் ஈது' என்கிறான்.

உயிர்தப்புவதற்கு ஒருசார் உபாயமாக இருநெறியுண்டு: மாற்றார்க்கு அஞ்சி அவர்க்கு அகப்படாமல் ஓட்டம்பிடித்தலால் உயிர் தப்புவது ஒருவகை: மாற்றார்க்கு அஞ்சாது முன்னின்று பொருது அவரைவென்று மேம்படுவது மற்றொருவகை: இந்த இருவகையிலும் ஒருகால் எதிரி கையிற் சிக்கி உயிர் போமாறு நேர்ந்தாலும் நேரலாம். ஆகவே, அஞ்சுதல் அஞ்சாமை என்ற இரண்டனுள் உயிர்தப்புவதற்கு அஞ்சாமையென்பது ஒருகால் அருந் துணை யாவதன்றி, அச்சமென்பது காக்க வல்ல சிறந்த துணையாக ஒருபோதும் ஆகாதென்கிறான். இங்கு மாந்தரென்பது - ஆடவரென்ற பொருளில்வந்ததென்க. இனி, அரக்கரைக் கண்டு அஞ்சிப் பழிப்படைபவரான கீழ்மையுள்ள மனிதர்களுக்கு அரக்கமாதர்களும் அஞ்சார்; அங்ஙனமாக, ஆடவராகிய நீங்கள் அஞ்சுவதுஎன்னே! என்பது, முன்னிரண்டடியின் கருத்துஎனக் கொள்வதுமுண்டு. வசையென்பது, எதுகைநோக்கி வச்சையென விரிந்தது. இராமாயணசாரமுடையார் "வச்சை - உலோபம். ஆம் - போலும். வச்சை ஆமெனும் பயம் - ('உத்தமகுணங்கள்கோடி உலோபத்தால் அழியும்மாதோ' என்றவாறு, தன்னையுடையவன் உயர்குணங்கள் எவ்வளவாயிருந்

தாலும் அவ்வளவையும் கெடுத்துவிடும் இழிகுணமான) உலோப குணம் ஒன்றே(எல்லா வகையாலும் தன்னை)ஒக்குமென்று சொல்லப் பட்ட பயம் என்று கூறியுள்ளார். மற்றொருவர் "வச்சை-பெண்பிள்ளை, யாம் எனும் - நாங்கள் என்கிற" என்று கூறினர். இவ்வுரையில், வச்சை-வத்ஸா என்ற வடசொல்லின் திரிபு.

கோல்-கோல மென்பதன் விகாரம்: உம்-இழிவுசிறப்பு. கவசம் - பகைவர்படைக்கலங்களால் உடம்புஊறடையாதபடி பாதுகாப்பதாத லால், அங்ஙனம் பாதுகாக்கும் போர்த்துணிவைக் கவசமாக உருவகப் படுத்தினன். ஆருயிர் - இன்றியமையாமையால் எவ்வகையாலும் ஓம்பப்படும் உயிர். அருந்துணை-கிடைத்தற்கரியதுணை. "கூற்று டன்று மேல்வரினுங் கூடியெதிர்நிற்கும், ஆற்றலதுவே படை" என்ற திருக்குறளினாலும், மனவலிமை இன்றியமையாச் சிறப்பின தாதல் அறிக. பி-ம்:—[1]எனப். [2]கவசத்தால். [3]நிற்குமன்றேல். (509)

143. பூவ ராவுமேற் [1]புரந்தரன் றன்னொடு பொன்ரு
மூவ ரோடு[2]தா முன்னின்று முட்டிய முனையில்
ஏவ ரோடின ரிராக்கதர் நுமக்கிடைந் தோடுந்
தேவ ரோடுகற் றறிந்[3]துளி ராமெனத் திகைத்தீர்.

(இ - ள்.) பூ அராவு வேல்-பொலிவுபெற்றதும் கூர்மையாக மிக அராவப்பட்டதுமான வேலாயுதத்தையுடைய, புரந்தரன் தன்னொடு- தேவேந்திரனுடனும், பொன்ரு மூவரோடு-அழிவில்லாத திரிமூர்த்தி களுடனும், முன் நின்று முட்டிய - முன்பு எதிர்நின்று தாக்கிய, முனையில்-போரில், ஏவர் இராக்கதர் தாம் ஓடினர்-எந்த அரக்கர்தாம் அஞ்சியோடினர்? [எவருமில்லை யென்றபடி]; நுமக்கு இடைந்து ஓடும் தேவரோடு-(முன்பெல்லாம்) உங்களுக்கு அஞ்சியோடிய தேவர்களிடத் தில், கற்று அறிந்துளிர் ஆம்-(புறங்காட்டி அஞ்சியோடுதலைப் பின்பு) பயின்று அறிந்தீர் போலும், என-என்றுசொல்லும்படி, திகைத்தீர்- (இப்பொழுது) அஞ்சி மதிமயங்கினீர்கள்; (எ - று.)

'தேவராசனை இந்திரனோடும், முத்தொழில் புரியும் முதற் கடவுளரான திரிமூர்த்திகளோடும் நேர்ந்த போர்களில் எதிலும் அரக்கரெவரும் அஞ்சியோடின தில்லையே; அப்படியிருக்க, உங்களுக்கு எதிரில் பலமுறை அஞ்சியோடின தேவர்களைப் பார்த்துப்பார்த்து நீங்கள் அஞ்சிப் புறங்காட்டும் அத்தொழிலைக் கற்றுக்கொண்டீர் களோ?' என்றான். இதனால், இவனதுசெருக்கு நன்குவிளங்கும். 'பூவராவுவேற்புரந்தரன்' என்றும், 'பொன்ருமூவர்' என்றும் அடைமொழிகொடுத்துக் கூறினதனால், அழிவில்லாத வச்சிரா யுதத்தையுடைய இந்திரனுக்கும் அழிவில்லாமையையுடைய மும் மூர்த்திகளுக்கும் என்றும் அஞ்சாத உங்களுக்கு, எளிய மனிதரைக் கண்டு ஓடுதல் இயற்கைக்குணமாகாது செயற்கைக் குணமேயாம் என்றான். தேவரோடு-தேவரிடத்தில்: வேற்றுமை மயக்கம்: இந்தச் சந்தர்ப்பத்தில் இப்படி வருதலை "வெருவரும்படி பலகலை விதங்களும் வீடுமனுடன் கற்றார்" என்பது முதலிய இடங்களிலுங் காணலாம். (இம்மரபு, தெலுங்கிலும் உண்டு.) பி - ம்:—[1]புரந்தரனோடுதான். [2]தான். [3]உளிரோமனக். (510)

144. இங்கொர் மானிடற் கித்தனை வீரர்க ளிடைந்தீர்
உங்கை வாளொடு [1]போய்விழுந் தூர்[2]புக லுற்றீர்
கொங்கை மார்பிடைக் [3]குளிப்புறக் [4]களிப்புற்றுங்கொழுங்கண்
நங்கை மார்களைப் புல்லுதி ரோநல நுகர்வீர்.

(இ - ள்.) இங்கு ஒர் மானிடற்கு இத்தனை வீரர்கள் இடைந்தீர்- இங்கே ஒரு தனிப்பட்ட மனிதனுக்கு நீங்கள் இத்தனைஎண்ணிறந்த வீரராயிருந்தும் பின்னிட்டு ஓடலுற்றீர்; ('புறங்கொடுத்து ஓடு வார்க்கு, வாட்படை எற்றுக்கு?' என்று சொல்லிக் கண்டவர் ஏளன மாகச் சிரிக்க), உம் கை வாளொடு போய்-உங்கள் கையிலுள்ள வாட் படையுடனே சென்று, விழுந்து-ஒருவர்மேலொருவர் முட்டிவிழுந்து கொண்டு, ஊர் புகல் உற்றீர் - (விரைந்து) ஊரிற் புக்கு ஒளிக்கத் தொடங்கியுள்ளீர்களே! (அங்ஙன் ஒளித்ததன்றி ஒளித்த இடத்தில் தானே வெட்கமின்றி), களிப்பு உற்று - களிப்புக்கொண்டு, கொங்கை மார்பிடை குளிப்புற-(நும் மனைவிமாரின்) தனங்கள் (நும்) மார்பிலே அழுந்தும்படி, உம் கொழு கண் நங்கைமார்களை - மதர்த்த கண்களை யுடைய உங்கள் மனைவிமார்களை, புல்லுதிர் நலம் நுகர்வீர்ஓ - தழுவி இன்பமனுபவிப்பதுஞ் செய்வீர்களோ? (எ - று.)

இத்தனை வீரர்களாயிருந்தும், கைப்படைக்கலத்தை யிழவா திருந்தும், ஒருமனிதனுக்கு அஞ்சி யோடி யொளிக்கலுற்று ஆண் மையிழந்த நீங்கள் நாணமின்றி எங்ஙனம் உங்கள்மகளிரைச்சேர்வீ ரென இகழ்ந்தனன். அன்றியும், இதில் உங்கள் ஆண்மை எதிரியின் முன் நிலைநின்று பொருது வெல்லுதற்கு அமையாமல் மெல்லியலா ரான மகளிரை அணைத்தல்மாத்திரத்துக்கே அமைந்தது போலு மென்றமையுந் தோன்றும்; "வரைத்தடம்புயம் வளர்த்தது மகளிர் போர்பொரவோ" என்றது, இங்குக் கருதத்தக்கது. இந்தச் சந்தர்ப் பத்தில், 'வீரர்கள்' என்றது, இகழ்ச்சி; அன்றி, முன்புபல போர்களில் இந்திரன்முதலியோர்முன்னும் பின்னிடாதிருந்த நிலையைப்பற்றிக் கூறினதாகவுமாம். கைப்படைக்கலத்தை யிழப்பின் ஒருகால் பின் னிடைதலும் ஆம்; அதனை யிழவாமலேபின்னிடைதல் மிக்கஇழிவா மென்பதை விளக்குவான், 'உங்கைவாளொடு போய்' என்றான். புல்லு திர் - முற்றெச்சம். பி - ம்:—[1]புகழ், புகல். [2]புகவிரைந்தீர். [3]குழிப்புற, குறிப்புற. [4]களிப்புறுங். (511)

145. செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிநுறப் பாய்ந்த
கொம்பு காட்டுதி ரோதட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதி ரோகுல மங்கையர்க் கம்மா.

(இ - ள்.) செம்பு காட்டிய கண் இணை - (சினத்தால் மிகச் சிவந்து) செம்பின் நிறத்தை வெளிக்காட்டிய கண்களிரண்டும், பால் என தெளிந்தீர் - (அச்சத்தையடைந்து அச்சினத்தையிழந்ததனால்) பால்போல (வெளுத்துத்) தெளிந்திருக்கப் பெற்றுள்ளீர்: குலம் மங்கையர்க்கு - நற்குலத்திற்பிறந்த உங்கள் மங்கைமார்க்கு, வெம்பு காட்டிடை நுழைதொறும் - கொடிய காடுகளினிடையிலே (நீங்கள்) நுழைந்துசெல்லும் பொழுதெல்லாம், வெரிந் உற பாய்ந்த - (உங்கள்)

முதுகிலே நன்றாகப்பட்டுத்தாக்கிய, கொம்பு காட்டுதிர் ஓ - மரக் கொம்புகளாலாகும் புண்ணைக் காட்டுவீர்களோ? (அன்றி), தட மார்பிடை குளித்த அம்பு காட்டுதிர்ஓ-பெரிய மார்பிலே தைத்த அம்புகளா லாகும் விரணத்தைக் காட்டுவீர்களோ? (யாதுசெய்வீர்) (எ-று.) —அம்மா என்றது - பரிதாபத்தை விளக்கும்.

போர்க்குப் பயணப்பட்டுவந்த நீங்கள் மீண்டுசென்று உங்கள் வெற்றியை எதிர்நோக்கும் மனைவிமார்க்கு அப்போரில் மார்பிற்பட்ட சிறந்தபுண்ணைக் காட்டி மகிழ்வித்தலன்றோ சிறப்பு? எதிரிக்கு அஞ்சி அடர்ந்த வனத்தில் நுழைந்தோடுகையில் பின்புறத்திலே மரக் கொம்புபட்ட புண்ணைக் காட்டின் இகழ்ச்சிக்கு இடனுமன்றோ? என்கிறான். 'விழுப்புண் - முகத்தினும்மார்பினும்பட்டபுண்' என்ற பரிமேலழகருரையாலும், புறங்கொடாத போரில் பகைவர் படைக் கலத்தாற் புண்படுதற்கு மார்பு சிறந்த இலக்காதல் அறிக. புதுப் புனல் வெள்ளம்போல உள்ளங்கவர்ந்தெழுந்து ஓங்கும் சினக் காலத்துக் கண்கள் செக்கச்செவேரென்று ஆவதும், அவ்வெள்ளத் தின் வடிவுகாலத்துப்போலச் சினம் தணியுங்காலத்தில் அச்செந் நிறம்மாறித் தெளிவதும் பற்றி 'செம்பு காட்டிய கண் பாலெனத் தெளிந்தீர்' என்கிறான்: இதில் போர்த்திறம் அழிந்ததோடு நில்லாது அதற்குக் காரணமான சினத்தையுஞ் சிறிதுங்கொள்ளா தொழிந்த குறை பெறப்படும். செம்பு காட்டிய - செம்புருக்கை யொத்த. (512)

146. ஏக்க மிங்கிதன் மேலு[1]முண் டோவிகன் மனிதன்
ஆக்கும் வெஞ்சமத் தாண்மையவ் வமரர்க்கு [2]மரிதாத்
தாக்க ரும்புயத்[3]துங்குலத் தலைமகன் றங்கை
மூக்கொ டன்றியும்[4]முதுகொடும் போம்[5]பழி முயன்றீர்.

(இ - ள்.) இகல் மனிதன் - பகைமையையுடைய இந்த மனிதனொருவன், ஆக்கும் - செய்கிற, வெம் சமத்து ஆண்மை - கொடிய போர்த்திறமை, அ அமரர்க்குஉம் அரிது ஆ - (இந்திரன் முதலிய) அத்தேவர்கள் பலர்க்கும் இல்லாததென்று சொல்லும்படி,—தாக்கு அருபுயத்து - (எவராலும்) எதிர்த்துத்தாக்க வொண்ணாத தோள் வலிமையையுடைய, உம் குலம் தலைமகன் - உங்கள் குலத்துக்குத் தலைவனான இராவணனது, தங்கை-தங்கையாகிய சூர்ப்பணகையின், மூக்கொடு அன்றி - மூக்கு அறுபட்டுப் போனதனால் வந்த பழிப்பு மாத்திரத்தோடு நில்லாமல், உம் முதுகொடுஉம் போம் பழி முயன்றீர்-நீங்கள் முதுகுகாட்டிச்செல்வதனாலுமாகும் பழிப்பையும் விளைக்கத்தொடங்கிவிட்டீர்கள்; இங்கு இதன் மேல்உம் ஏக்கம் உண்டுஓ - இங்கு நிகழ்ந்த இதற்கு மேலும் ஓர் இரங்கத் தக்கசெயல் உண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

சிறந்த தேவர் பலரெதிரிற் பின்னிடாத நீங்கள் இத்தனி மனிதனெதிரிற் பின்னிடுதலால், இம்மனிதனுக்கு உள்ள போர்ப் பேராண்மை தேவர்களுக்கும் இல்லை யென்னும்படி யாகிறது என்பது, இரண்டாமடியின கருத்து. உங்கள் குலத்தலைவனது தங்கை அடைந்த பரிபவத்தை நீங்கள் போர்செய்து பகையழித்தலால் ஒழிக்க

வேண்டுவதாயிருக்க, அதுசெய்யாமல் அவ்வவமானத்தோடு நீங்கள் புறங்கொடுத்தோடுதலாலாகும் அவமானத்தையும் விளைக்கலுற்றீர் களே யென்பது, பின்னிரண்டடியின் கருத்து. ஏக்கம் - ஏக்கத்தை யுண்டாக்குஞ்செயலைக் காட்டிற்று: விசனகரமான செய்தி யென்க. உம் - இழிவுசிறப்பு. அமரர்க்கும், உம் - உயர்வுசிறப்பு. முதுகொடும், உம்-இறந்தது தழுவிய எச்சம். அரிது என்பதில், அருமை-இன்மை மேல்நின்றது. [2]அரிதாதாக்கரும் என்ற இயல்பான பாடத்துக்கு - இத்தனிமனிதன் செய்யும் போர்த்திறம் தேவர்களுக்கும் இல்லா ததா? என்று பொருள். சமம் - ஸமரம்; வடசொல். பி - ம்:—
[1]உண்டே. [2]அரிதால். [3]நும். [4]முதலொடும். [5]படி. (513)

147. ஆர வாழ்க்கையின் வணிகரா யமைதிரோ வயில்வேல்
வீரவாட்[1]கொழு வெனமடுத் துழுதிரோ[2]வெறிப்போர்த்
தீர வாழ்க்கையிற் [3]றேவரைச் செருவிடைப் பறித்த
வீர வாட்கையி ரெங்ஙனம் வாழ்திரோ விளம்பீர்.

(இ - ள்.) வெறி போர் - வீராவேசங்கொண்டு செய்தபோரில், தீரம் வாழ்க்கையின் - தைரியத்தோடுகூடிய வாழ்வினால், தேவரை - தேவர்களிடத்தினின்று, செருவிடை - போரிலே, பறித்த-பறித்துக் கொண்ட, வீரம் வாள்-வலிமையையுடைய வாட்படையை யேந்திய, கையினர்-கையையுடையவர்களே! (இங்குப் போரில் தோற்றோடுத லால் க்ஷத்திரியதருமத்தை யிழந்த நீங்கள் இனி), ஆரம் வாழ்க்கை யின் வணிகர் ஆய் அமைதிரோ - முத்துமுதலிய பண்டங்களை விற்று வாழும் (அந்தக்ஷத்திரியரினும் தாழ்ந்த) வணிகச்சாதியினராய் அமை வீர்களோ? (அன்றி), அயில் வேல் வீரம் வாள் கொழு என மடுத்து உழுதிரோ - (அந்தவணிகருக்கும் அடுத்தசாதியினரான உழவராகி) கூர்மையையுடைய வேலாயுதத்தையும் வலிமையையுடைய வாளா யுதத்தையும் உழுபடையாகக்கொண்டு விளைநிலத்திலே ஊன்ற வைத்து உழுது வாழ்வீர்களோ? விளம்பீர்-சொல்லுங்கள்; (எ - று.)

இப்படித் தோற்றோடி வெட்கங்கெட்ட உங்களுக்குப் போர் வீரராய்வாழ வகையில்லை; இனி நீங்கள் வாணிகவாழ்க்கைக்கு உரிய வைசியராகவோ, உழுதுண்டுவாழும் வேளாளராகவோ, வாழ்வதே அமைவது என்கிறான். இதனால், தோற்றோடும் உங்கள் படைக்கலங்கள் இனிப் போர்க்கருவியாகா என்கிறான். 'வீரவாட் கையி ரெங்ஙனம் வாழ்திரோ' என்றதனால், நீங்கள் உங்கள் சாதித் தருமத்தைக் கைவிட்டு இழிந்தசாதித்தொழிலை ஏற்று உயிர் வாழத் தொடங்கினாலும் நீங்கள் கையிற் படைகொண்டிருத்தல் அங்ஙனம் வாழ்வதற்கு அமைவதாகாதே யென்பது தோன்றும். 'ஆரவாழ்க்கையின் வணிகராய்' என்றதனால், போரில் முன் னிடாத உங்கள்மார்பில் அணிந்துள்ள முத்தாரம்முதலியன பராக்கிரமச்செயலுக்கு விளக்கமாகாமல் இனிவாணிகஞ்செய்தற்கு உரிய பொருள்களாகவே அமையு மென்பது தோன்றும். ஆரம் - ஹாரம்; இது, மற்றைய இரத்தினவணிகளுக்கும் உபலக்ஷணம். இனி, [1]கொடு வேன்மடுத்து என்ற பாடத்துக்கு - வேலி யென்ற கழனிப்பெயர் வேல் என விகாரப்பட்டதென்பர். வாழ்க்கையின்

'ஆர் என்று எடுத்து-உயிர்வாழ்க்கை அமர்ந்திருக்க என்றும், அயில்வேல் வீரவாட்கொடு வேன் மடுத்து உழுதிரோஎன்பதற்கு-போருக்கு முன் உரியதாயிருந்து இப்போது அதற்கு ஆகாமற்போய் விட்ட வேலையும் வாளையும் கொழுவாகக்கொண்டு அவைகளைக் கருவேலமரக்கலப்பைக்குத்திகளுட் புகுத்தி மாட்டிப் பகைவர் ஊனை உழுத கைகளால் வெறும்மண்ணை உழுவீர்களோ? எவ்வாறுவாழ்வீர்களோ சொல்லுங்கள்? என்றுஉரைப்பர் இராமாயணசாரமுடையார். இனி, 'அயில்வீரவாட்கொடு வேல்மடுத்து உழுதிரோ-சிறு வேலையும் வீரவாளையும் (கொழுவாகக்)கொண்டு (நீண்ட) வேலிலே மாட்டிக் கலப்பையாக்கி அவற்றைக்கொண்டு உழுவீர்களோ என்றும் ஒருவருரை. கையிர்-விளி. ஓ-ஐயம். பி-ம்:—[2]வெல்போர்த், வெறிபோர். [3]தெவ்வரை. (514)

## 148.—ஓடும் அரக்கரைக் குறித்துக் கூறிய தூடணன் தன்சேனையோடு பொரத்தொடங்க, ஸ்ரீராமன் அவனுடன் பொரச்செல்லல்.

என்று தானுந்தன் னெறிகடற் சேனையு மிறைநீர்
நின்று காண்டிரென் னெடுஞ்[1]சிலை வலியென நேராச்
சென்று தாக்கினன் றேவரு மருள்கொண்டு திகைத்தார்
நன்று காத்தியென் றிராமனு மெதிர்செல நடந்தான்.

(இ - ள்)—என்று - என்றுசொல்லி,—'நீர் - நீங்கள், இறை-சிறிதுபொழுது, நின்று - ஓடாதுநின்று, என் நெடு சிலை வலி - எனது நீண்ட வில்லின் வலிமையை, காண்டிர் - காண்பீராக,' என-என்றுஞ்சொல்லி, தானஉம் தன்எறிகடல்சேனைஉம்-தானும் தனது அலையெறியுங்கடல்போற் பரந்த சேனையுமாக, நேர் ஆ சென்று தாக்கினன் - (தூடணன் இராமனுக்கு) எதிராக எதிர்த்துச்சென்று போர்செய்தான்; (அவ்வுக்கிரத்தைக்கண்டு), தேவர்உம் மருள் கொண்டு திகைத்தார்-தேவர்களும் மயக்கமடைந்து பிரமித்தார்கள்; (அப்பொழுது), இராமனும்—, நன்று காத்தி என்று-நன்றாக (உன் சேனையைக்) காத்துக்கொள்வா யென்றுசொல்லி, எதிர் செல நடந்தான்-(அவனுக்கு) எதிராக நடந்துசென்றான்; (எ-று.)

நன்று காத்தி என்றது-தனது பராக்கிரமத்தை விளக்கும் வீரவாதத்தின்பாற் படும். தானும் தன் சேனையும் தாக்கினன்-உயர்திணையும் அஃறிணையும் விரவிவந்து சிறப்பினால் உயர்திணையொருமைமுடிபையே பெற்றுவந்த திணைவழுவமைதி; [நன்-பொது-27.] பி - ம்:—[1]செருநிலை. (515)

இந்தப்பாடலின்பின் சிலபிரதியில் ஒருபாடல்காணப்படுவது வருமாறு:—

நடந்து தன்னிரு கரத்தினி னலம்பெறுஞ் சிலைவாய்த்
தொடர்ந்த நாணொலி யெழுப்பினன் றொகைப்படு மண்டம்
இடிந்த தென்னநின் றதிர்ந்ததங் கிறைவனு மிமைப்பின்
மிடைந்த வெஞ்சர மழைவிடு தாரையின் விதைத்தான்.

149.—இனித் தூடணனது சேனை அழிதலை ஆறுகவிகள் கூறும்.

ஊட றுப்புண்ட மொய்படைக் கையொடு முயர்ந்த
கோட றுப்புண்ட குஞ்சரங் [1]கொடிஞ்சொடு கொடியின்
காட றுப்புண்ட [2]காலிய றேர்கதிர்ச் சாலி
சூட றுப்புண்ட வெனக்கழுத் தறுப்புண்ட துரகம்.

(இ - ள்.)—(இராமபாணங்களால்), கை-(வீரர்களின்) கைகள், மொய் படையொடும் - வலியப்பிடித்த ஆயுதங்களுடனே, ஊடு அறுப்புண்ட-இடையிலே துணிபட்டன; குஞ்சரம்-யானைகள், உயர்ந்த கோடு அறுப்புண்ட - ஓங்கிவளர்ந்த தந்தங்கள் துணிபடப் பெற்றன; கால் இயல் தேர்-காற்றுபபோல விரைந்துசெல்லுந் தேர்கள், கொடிஞ்சொடு-கொடிஞ்சியென்னும் உறுப்புடனே, கொடியின் காடு-கொடிகளின் தொகுதியும், அறுப்புண்ட-துணிபடப் பெற்றன; துரகம்-குதிரைகள், கதிர் சாலி சூடு அறுப்புண்ட என-கதிர்களையுடைய செந்நெற் பயிர்கள் தலைபபுறம் அறுக்கப்பட்டனபோல, கழுத்து அறுப்புண்ட-கழுத்தறுபட்டன; (எ - று.)

முதல்வாக்கியத்தில் பதாதியினழிவையும், இரண்டாம் வாக்கியத்தில் யானையினழிவையும், மூன்றும்வாக்கியத்தில் தேரினழிவையும், நான்காம் வாக்கியத்தில் குதிரையினழிவையும் ஆக நால்வகைபபடைகளினழிவைக் கூறினர். இனி, குஞ்சரம் - யானைகள், ஊடு அறுப்புண்ட-இடையிலறுபட்ட, மொய் படை கையொடும்-வலிய (தண்டென்னும்) ஆயுதத்தைக்கொண்ட துதிக்கையுடனே, உயர்ந்த கோடு அறுப்புண்ட-வளர்ந்த தந்தமும் அறுபட்டன என்று உரைப்பாரும் உளர். "புரவிமுகஞ் செய்து செந்நெலோங்கு விளைகழனி" என்றபடி கதிர்முதிர்ச்சியால் தலைசாய்ந்த செந்நெற்பயிரும் குதிரையும் வடிவில் ஒத்தலால், கழுத்தறுப்புண்ட குதிரைகளுக்கு முடியறுப்புண்ட சாலிப்பயிர்கள் உவமையாம். உண்ட என வந்த ஐந்தனுள், நான்காவது - பெயர்; மற்றவை-முற்று. படைக்கையொடும் என்றவிடத்து, கைபபடையொடும் என உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. கொடிஞ்சொடு = கொடிஞ்சியொடு. கொடிஞ்சி-தேர்ச்சிகரம்: அன்றி, கொடிஞ்சி யென்பது-தாமரைமலரின்வடிவமாகச்செய்து தேரின்முன்னிடத்து வைக்கப்படுவதோருறுப்பெனவும்படும். 'கொடிஞ்சு' என உகரவீறுன பதமுண்டெனக்கொள்ளுதலுமொன்று. பி - ம்:—[1]கொடுஞ்சொடு. [2]காலியல்வயத். (516)

150. துருவி யோடின வுயிர்நிலை சுடுசரந் துரந்த
[1]கருவி யோடின கச்சையுங் கவசமுங் கழல
அருவி யோடின வென'வழி குருதியா [2]றெழுக
உருவி யோடின கேடகத் தட்டொடு முடலம்.

(இ - ள்.) துரந்த-(இராமபிரானாற்) செலுத்தப்பட்ட, சுடு சரம் - வெவ்விய அம்புகளாகிய, கருவி - படைக்கலங்களிற் சில, உயிர் நிலை துருவிஓடின - (அரக்கருடம்பில்) உயிர்நின்றஇடங்களைத் தேடிக்

கொண்டு விரைந்துசென்றன; (மற்றுஞ்சில அம்புகள்), கச்சைஉம் கவசம்உம் கழல - (அரக்கர்களுடைய) இடைக்கச்சும் உடற்கவசமும் விலகும்படி, ஓடின-விரைந்துபாய்ந்தன; (வேறுசில அம்புகள்), அழி குருதி ஆறு அருவி ஓடின என ஒழுக-(அவர்களுடல்) சிதைந்ததனு லாகியஇரத்தநதிகள் மலையருவிகளாக ஓடினபோல இடையறாது பெருகும்படி, கேடகம் தட்டொடுஉம்-(அவர்களுடைய கையிற்பிடித்த) கேடகமென்னுந் தட்டையும், உடலம் - அவர்களுடம்பையும், உருவி ஓடின-முற்றுந்துளைத்து அப்பாற் சென்றன; (எ - று.)

இராமபாணங்களின் செய்கையை இதுவும் அடுத்த செய்யுளும் கூறும். 'சுடுசரந்துரந்த கருவி' என்பது, மூன்றுவாக்கியத்துக்கும் எழுவாயாக இயைந்து முதனிலைத்தீவகத்தின்பாற்படும். கருவி - ஆயுதப்பொதுப்பெயர். பி-ம்:—[1] கருவியோடுவன். [2] இழி. [3] அலைப்ப.

151. ஆய்ந்த கங்கபத் திரங்கள்புக் [1] கரக்கர தாவி
[2] தோய்ந்த தோய்விலாப் பிறைமுகச் சரஞ்சிரந் துமித்த
காய்ந்த வெஞ்சர நிருதர்தங் கவசமார் புருவப்
பாய்ந்த வஞ்சக ரிதயமும் பிளந்தன பல்லம்.

(இ - ள்.) ஆய்ந்த - (இராமபிரானால்) ஆராய்ந்து எடுத்து விடப் பட்ட, கங்கபத்திரங்கள்-(சில)அம்புகள், புக்கு-(உடம்பினுள்) சென்று, அரக்கரது ஆவி தோய்ந்த - இராக்கதர்களது மார்பிலே அழுந்தின; பிறைமுகம் சரம்-(இராமன் எய்த)அர்த்த சந்திரபாணங்கள், தோய்வு இலா - (அரக்கருடம்பினுட்சென்று) அழுந்திவிடுதலில்லாமல், சிரம் துமித்த - அவர்கள் தலைகளைத் துணித்தன: காய்ந்த வெம் சரம் - (இராமனெய்த) மிகக்கொடிய (சில) பாணங்கள், நிருதர்தம் கவசம் மார்பு உருவ-அரக்கர்களது கவசத்தையணிந்தமார்பு ஊடுருவும்படி, பாய்ந்த-நுழைந்தன; பல்லம்-(வேறுசில) அம்புகள், வஞ்சகர் இதயம் உம் பிளந்தன-வஞ்சனையையுடைய அரக்கர்களது நெஞ்சையும் பிளந்திட்டன; (எ - று.)

அம்பென்ற ஒருபொருளைக் குறிக்கிற கங்கபத்திரம், சரம், பல்லம் என்ற பலசொற்கள் வந்ததனால், பொருட்பின்வருநிலையணி. இனி, கங்கபத்திரம், பிறைமுகச்சரம், சரம், பல்லம் என்பன-அம்பின் வகைக ளென்றலும் ஒன்று. அரக்கர் நிருதர் வஞ்சகர் என்ற ஒருபொருட் பன்மொழிகள் வந்ததும், பொருட்பின்வருநிலையணியின்பாற் படும். இனி, இப்பாட்டின் முன்னிரண்டடிகளுக்கு - சிலஅம்புகள் உயிர் நிலையில் தோய்கையில் சிலஅம்புகள் மேல் நோக்காய்த் தலையைத் துமித்தன என்றும், பின்னிரண்டடிகளுக்கு-சிலஅம்புகள் மார்பை யுருவிப்பாய்கையில் சில அம்புகள் நெஞ்சைப்பிளந்தன என்றும் கருத்துப்பட உரைத்தலும் ஒன்று. கங்கபத்ரம் - வடமொழிப்பெயர்; கழுகின் இறகையுடையதென்று காரணப்பொருளது. பிறைமுகச் சரம் - பிறைச்சந்திரன்போல நுனிவடிவம் அமையப்பெற்ற அம்பு. காய்ந்த வெம்-ஒருபொருட்பன்மொழி. இனி, காய்ந்த என்பதற்கு - வடித்த என்றும், சினந்த என்றும், கோபித்துஎய்யப்பட்ட என்றும் பொருள்கூறவும் அமையும். இதயம் = ஹ்ருதயம். பி - ம்:—[1] அரக்கர் தம்மார்பில். [2] தோய்ந்து.

152. தூடணன் விடு[1]சுடுசரம் யாவையுந் [2]துணிய
மாடு நின்றவர் வழங்கிய படைகளு [3]மாற
ஆடல் [4]கொண்டன னளப்பரும் பெருவலி யரக்கர்
கூடி நின்றவக் குரைகடல் வறள்படக் குறைத்தான்.

(இ - ள்.) தூடணன் விடு சுடு சரம் யாவைஉம் துணிய - தூஷணன் எய்த வெவ்விய அம்புகளெல்லாந் துணிபடவும், மாடு நின்றவர் வழங்கிய படைகள்உம் மாற - அவனருகில் நின்ற அரக்கர்கள் பிரயோகித்த ஆயுதங்களும் ஒழியவும், ஆடல் கொண்டனன்- போர்செய்யுந் திருவிளையாடலைக் கொண்டவனாய், (இராமன்), அளப்பு அரு பெரு வலி அரக்கர் கூடிநின்ற அ குரைகடல் வறள் பட குறைத்தான்-அளவிடுதற்கரிய பெரிய வலிமையையுடைய இராக்கதர்கள் திரண்டுநின்ற அந்த ஒலிக்கிற சேனாசமுத்திரம் வற்றிப்போம்படி அழித்தான்; (எ-று.)

இராமபிரான் அலட்சியமாகவே அரக்கர்சேனைக்கடலை யழித்தமை கூறுவது, இது. மிகக்கொடிய அரக்கர்சேனையைத் தான் தனியாகவே, விளையாட்டாக எளிதில் அழித்தா னென்பார், 'ஆடல் கொண்டனன் குறைத்தான்' என்றார். இனி, ஆடல் கொண்டனன் - திருவவதாரத்துக்கு ஏற்ப மனிதனாகி நடித்தல் கொண்டவனாகி எனினுமாம். பி - ம்:—[1]சரமவையாவையுந். [2]துணித்து, துணியா. [3]மாற்றி, மாற்றா. [4]கொண்டன. (519)

153. ஆர்த்தெ ழுந்தனர் வானவ ரருவரை மரத்தோடு
ஈர்த்தெ ழுந்தன குருதியின் பெருநதி யிராமன்
தூர்த்த செஞ்சரந் திசைதொறுந் திசைதொறுந் [1]தொடர்ந்து
போர்த்த வெஞ்சினத் தரக்கரைப் புரட்டின புவியில்.

(இ - ள்.) (அதுகண்டு), வானவர் - தேவர்கள், ஆர்த்து எழுந்தனர்-(மகிழ்ச்சியால்) ஆரவாரித்துக்கொண்டுகிளர்ந்தார்கள்: குருதியின் பெரு நதி - பெரிய இரத்தயாறுகள், அரு வரை மரத்தோடு ஈர்த்து எழுந்தன - அழித்தற்கரிய மலைகளையும் மரங்களையும் இழுத்துக்கொண்டுசென்றன; இராமன் தூர்த்த செம் சரம்-இராமபிரான் எய்துநிறைத்த செவ்விய அம்புகள், திசைதொறுஉம் திசைதொறுஉம் தொடர்ந்து - எல்லாத்திக்குக்களிலுந் தொடர்ந்து சென்று, போர்த்த வெம் சினத்து அரக்கரை - (அத்திக்குக்களைத் தமது திரட்சியால்) மறைத்த கொடுங்கோபமுடைய இராக்கதர்களை, புவியில் புரட்டின-தரையிற் புரளும்படி செய்தன; (எ-று.)

செஞ்சரம் - வளைவில்லாத நேரிய அம்பு; பகைவிரத்தந் தோய்ந்து நுனிசிவந்த அம்பு: துஷ்டநிக்கிரகஞ்செய்து நன்மைபுரியும் அம்பு. பி - ம்:—[1]தொடர்ந்த. (520)

154. தோன்று மால்வரைத் தொகையெனத்[1]துவன்றிய நிணச்சேறு
ஆன்ற பாழ்வயிற் றலகையைப் புகல்வதெ னமர்வேட்டு
ஊன்றி னாரெலா[2]முலந்தன ரொல்லை[3]யி லொழிந்தார்
கான்ற [4]வின்னுயிர் காலனுங் [5]கவர்ந்துமெய்ம் மறந்தான்.

(இ - ள்.) அமர் வேட்டு ஊன்றினர் எலாம் - போரை விரும்பி நிலைநின்ற அரக்கர்களெல்லோரும், ஒல்லையில் - விரைவில், உலந்தனர் ஒழிந்தனர் - அழிந்தொழிந்தார்கள்: காலன்உம் - யமனும், கான்ற இன்உயிர்-(அவர்களுடம்பினின்று) வெளியெழுந்த இனிய உயிரை, கவர்ந்து - எடுத்துச்சென்று, மெய் மறந்தான் - (மிக்கசோர்வினால்) உடலம் பரவசப்பட்டான்; தோன்றும் மால் வரை தொகை என துவன்றிய-உயர்ந்து காணப்படுகிற பெரிய மலைகளின் தொகுதிபோல நெருங்கிய, நிணம்-(அந்த அரக்கர்களுடைய) கொழுப்பின், சேறு-, ஆன்ற-நிறைந்த, பாழ் வயிறு - பாழ்த்த வயிற்றையுடைய, அலகை யை-பேய்களைப்பற்றி, புகல்வது என்-சொல்லவேண்டுவது என்ன?

எதிர்த்த அரக்கரெல்லோரும் அழிந்தார்கள்; உயிர்க்கொலை யையே தனது தொழிலாகவுடைய யமனும் அவர்களுயிரை இடை விடாது மிகுதியாகக் கவர்ந்துசெல்லும் வருத்தத்தினாலாகிய சோர் வால் உடல் சோர்ந்தான் என்க. அவ்வாறு இறந்த மிகப்பல அரக்கர் திரளின் நிணம் மால்வரையென நெருங்கித்தோன்ற, அந்த நிணச் சேற்றை யெல்லாம் அலகைகள் உண்டுவிட்டன என்ற பொருளைச் சொல்லி, அதனால், அங்ஙனம் அளவின்றியிறந்த அவர்களின் நிணத்தை நிரம்பவுண்டு உடல் பருத்த பேய்க்கணம் மிகப்பல என்ப தைப்பற்றிச் சொல்ல வேண்டுவதில்லையென்ற மற்றொருபொருளை எளிதில் தோன்றவைத்தார்: இது, தொடர்நிலைச்செய்யுட்பொருட் பேறணி. வரைத்தொகை, பேய்க்கணத்துக்கு உவமமுமாம்: அப் போது, துவன்றிய அலகையென இயையும். பாழ் வயிறு - ஊனைத் தின்று ஊனைப்பெருக்குங் கொடுவயிறு. அலகை - சாதிப்பெயர். பி - ம்:—[1]தோன்றிய சேற்று. [2]உலந்தனர். [3]வாய்மடிந்தார். [4]அவ் வுயிர். [5]வலித்துமெய்கவன்றான். (521)

**155.—இதுமுதல் மூன்றுகவிகள்-அப்போது தூடணன் தேரைக் கடிதோட்டிப் பிணக்குவியலை அரிதிற்கடந்துவருதலைத் தெரிவிக்கும்.**

களிறு தேர்பரி கடுத்தவர் முடித்[1]தலை கவந்தம்
ஒளிறு பல்படைத் தங்குலத் தரக்கர்த முடலம்
வெளிறு சேர்[2] நிணம் பிறங்கிய வடுக்கலின் [3]மீதாக்
குளிறு தேர்கடி தோட்டினன் றூடணன் கொதித்தான்.

(இ - ள்.) (அப்பொழுது), தூடணன்—, கொதித்தான்-கோபங் கொண்டவனாய்,—களிறு-யானைகளும், தேர்-தேர்களும், பரி-குதிரை களும், கடுத்தவர் - கோபித்த இராக்கதவீரர்களுடைய, முடி தலை - கிரீடமணிந்த தலைகளும், கவந்தம் - (அவர்களுடைய) உடற்குறை களும், ஒளிறு-விளங்குகிற, பல் படை-பலவகை யாயுதங்களையுடைய, தம் குலத்து அரக்கர் தம் - தங்கள் குலத்தில் தோன்றிய சேனைத் தலைவர்களாகிய சிறந்த இராக்கதர்களது, உடலம் - உடம்புகளும், வெளிறு சேர் நிணம் - வெண்ணிறம் பொருந்திய (அவர்களுடைய) கொழுப்பும், (என்னும் இவை), பிறங்கிய - உயர்ந்து குவிந்ததனா லாகிய, அடுக்கலின் மீது ஆ-மலைகளின் மேலாக, குளிறு தேர் கடிது

ஓட்டினன் - ஆரவாரஞ்செய்கிற (தனது) தேரை விரைவிற் செலுத்தினுன்; (எ - று.)

நால்வகைச்சேனைகளோடு அரக்கரின் கவந்தம்உடல்என்பனவும் அவர்களின் நிணங்களும் மலைபோன்றிருக்க, அம்மலைகளின் மீது தன் தேரைத் தூடணன் செலுத்தினனென்பதாம். கடுத்தவர் என்றது-யானை குதிரை தேர்களின்மீது உள்ளவரும், பதாதிகளுமான வீரர்களை. தம் குலம் எனப்பன்மையாற் கூறினது, கரனையுந் திரசிரனையும் கூட்டி. உடலம்என்றது-தலையோடுகூடிய உடம்புகளை. அடுக்கல் - கற்களை அடுக்கினுற்போல இருப்பது. பி - ம்:—[1]தலைக். [2]பிணம். [3]மீதிற். (522)

156. அறங்[1]கொ ளாதவ ராக்கைக ளடுக்கிய வடுக்கல்
[2]பிறங்கி நீண்டன கணிப்பில பெருங்கடு விசையாற்
கறங்கு போன்றுள தாயினும் பிணப்பெருங்[3]காட்டில்
இறங்கு மேறுமத் தேர்பட்ட தியாதென வுரைப்பாம்.

(இ - ள்.) அறம் கொளாதவர் - தருமத்தைக்கைக்கொள்ளாத அரக்கர்களுடைய, ஆக்கைகள்-உடம்புகள், அடுக்கிய - (ஒன்றன்மேலொன்ருகக்) குவிந்ததனு லாகிய, அடுக்கல் - மலைகள், பிறங்கி நீண்டன - உயர்ந்து நீண்டுள்ளவை, கணிப்பு இல - எண்ணிக்கை யில்லாதனவாம்; (ஆதலால்), பெரு கடு விசையால் கறங்கு போன்று உளது ஆயின்உம் - மிகவும் அதிகமான வேகத்தால் காற்ருடிபோன்றுள்ளதாஞலும், பிணம் பெரு காட்டில்-அந்தப் பெரிய பிணக்குவியல்களில், இறங்கும் ஏறும்-இறங்கியேறுகிற, அ தேர் - அந்த(த்தூடணனது) இரதம், பட்டது-அடைந்த இடர்நிலையை, யாது என உரைப்பாம் - (நாம்) என்னவென்று சொல்லுவோம்? (எ - று.)

தூடணனதுதேர் எண்ணிக்கையற்ற மலைபோன்ற பிணப்பெருங்குவியலில் ஏறி யிறங்குதலால் இடறி மிக்க பாடுபட்டதென்க. விரைந்து செல்லுதலில் தேர்க்குக் காற்ருடி உவமம். பி - ம்:— [1]கொள்ளாதனவரக்கர்கள். [2]பிறங்க. [3]கட்டத்து. (523)

157. அரிதி [1]னெய்தின னையைந்து கொய்யுளைப் [2]பரியால்
உருளு மாழிய தொருதனித் தேரின [3]னுலகத்து
[4]இருளை நீக்கிய விந்துவிற் பொலிகின்ற விராமன்
தெருளும் வார்கணைக் கூற்றெதி ராவிசென் றென்ன.

(இ - ள்.)—(தூடணன்)—கொய் - கத்தரிக்கப்பட்ட, உளை - பிடரிமயிரையுடைய, ஐ ஐந்து பரியால் - இருபத்தைந்து குதிரைகளைப் பூட்டியதால், உருளும் ஆழியது-(எளிதில்) உருளுஞ் சக்கரமுடையதான, ஒரு தனி தேரினன் - ஒப்பில்லாத தனிப்பட்ட தேரையுடையவனுய்,—கூற்று எதிர் - யமனுக்கு எதிரிலே, ஆவி சென்று என்ன - உயிர் வலியச் சென்ருற்போல,—உலகத்து - பூமியிலுள்ள, இருளை - இருட்டை, நீக்கிய - ஒழிக்கின்ற, இந்துவின்-சந்திரன் போல, பொலிகின்ற-விளங்குகிற, இராமன்-இராமனது, தெருளும் வார் கணை (எதிர்)-தெளிவாகவிளங்குகிற நீண்ட அம்புக்கு எதிரில், அரிதின் எய்தினன்-வெகுசிரமப்பட்டு வந்து சேர்ந்தான்; (எ - று.)

யமனுக்குஎதிரே அவனாற்பறிக்கப்படுதற்கு உரியஆவி வந்து நின்றாற்போல, இராமசந்திரன்கணைக்கு எதிரே ஐயைந்துபரிகள் பூட்டிய ஒருதனித்தேரினனாகிய தூடணன் அரிதினெய்தினனென்பதாம். இராமனுக்குச் சந்திரனுவமை, குளிர்ச்சியைத்தந்து உயிர்களை மகிழ்வித்தற்கு. குறித்தஇலக்கைத்தவறாது அழித்தல்பற்றி இராமபாணத்துக்குக் கூற்றுவன் ஒப்பாவன். தூடணன் சென்ற செலவு இராமபாணத்தால் இவன் உடனே யழிதற்குக் காரணமாதலால், 'கூற்றெதி ராவிசென்றென்ன' என்றது. எதிர் என்பது, மீண்டும் கணைக்கு என்பதனோடும் கூட்டப்பட்டது. ஐயைந்து-ஐந்தினாற்பெருக்கியஐந்து: பண்புத்தொகை. (ஐவைந்து என்பது - ஐந்து வீதம் என்று பொருள்படும்.) பி-ம்:—[1]எய்தின, எய்திய. [2]பரிமா. [3]மேலுலகத்து, மேகத்து, வேகத்து. [4]இருளு நீங்கிய. (524)

## 158.—இதுமுதல் நான்குகவிகள் - தூடணன் இராமபிரானோடு பொருது தலையிழத்தலைக் கூறும்.

சென்ற தேரையுஞ் சிலையுடை மலையெனத் தேர்மேல்
நின்ற தூடணன் றன்னையு [1]நோக்கிய நிமலன்
நன்று நன்றுநின் னிலையென [2]வருளிறை நயந்தான்
என்ற காலத்தவ் வெய்யவன் பகழிமூன் றெய்தான்.

(இ - ள்.) சென்ற தேரைஉம் - (அங்கனம்எதிரில்) வந்த தேரையும், சிலை உடை மலை என - வில்லை யேந்தியதொரு மலைபோல, தேர்மேல் நின்ற - அத்தேரின்மீது (வில்லேந்தி) நின்ற, தூடணன் தன்னை உம்-தூஷணனையும், நோக்கிய-பார்த்த, நிமலன்-குற்றமற்றவனான ஸ்ரீராமன்,—நின்நிலை நன்று நன்று என-'உனது உறுதி நிலைமை மிக நன்றாயிருந்தது' என்று, அருள் - கருணையோடு, இறை நயந்தான்-(அவனைச்) சிறிதுமதித்தான்; என்ற காலத்து - ஆகிய அச்சமயத்தில், அ வெய்யவன் - அந்தக்கொடிய தூடணன், பகழி மூன்று எய்தான்-மூன்று அம்புகளைத் தொடுத்தான்; (எ - று.)

தேரின்மீது வில்லேந்தியவனாகித் தூடணன்வந்துநிற்க, அவனதுவீரத்திறனை இராமன்கொண்டாடா நிற்கையில், அந்தத்தூடணன் இராமபிரான்மீது மூன்றுகணைகளை விடுத்தனனென்க. சிலையுடைமலை - தூடணனுக்கு இல்பொருளுவமம். மேகம்படிந்திருத்தலால் இந்திரவில்லும் உடன்படியப்பெற்ற மலை யென்று உள்பொருளுவமமுமாம். நிமலன் - கருமத்தொடர்பு அற்றவன்; அடியார்களது கருமங்களை அழிப்பவன். நன்று நன்று - அடுக்கு, உவகை பற்றியது. அருளிறைஎன்பதற்கு-கருணைக்கடவுளென்று பொருள் கூறி, அதனை நிமலன் என்ற பெயர்க்கு விசேடணமாக்கினும் அமையும். பி-ம்:—[1]நெடியவனோக்கி. [2]அருளுரை. (525)

159. தூர வட்டவெண் டிசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார வெட்டினோ டிரண்டினி லொன்றுபார் புரக்கப்
பேர விட்டவ [1]னுதலணி யோடையிற் [2]பிறழும்
வீர [3]பட்டத்திற் பட்டன விண்ணவர் வெருவ.

(இ - ள்.)—தூரம்-நெடுந்தூரம் நீண்டனவும், வட்டம்-வட்ட வடிவமாக அமைந்தனவுமாகிய, எண் திசைகளை - எட்டுத்திக்குக் களையும், தனிதனிசுமக்கும் - தனித்தனியேசுமக்கின்ற, பாரம்-சுமை யையுடைய, எட்டிேேடு - அஷ்டதிக்கஜங்களோடுசேர்ந்த, இரண்டி னில்-(பூமியைச்சுமக்கிற ஆதிசேஷன் ஆதிகூர்மம்என்ற) இரண்ட னுள், ஒன்று-ஒன்ருகிய ஆதிசேஷனை [ஆதிசேஷாமிசமான பாது கையை], பார் புரக்க - பூமியை அரசாளும்படி, பேர விட்டவன் - (அயோத்திக்குத்) திருப்பியனுப்பியவனுன ஸ்ரீராமனது, நுதல் - நெற்றியில், அணி-அணிந்துள்ள, ஓடையின்பிறழும் வீரபட்டத்தில்- (யானையின்) நெற்றிப்பட்டம்போல விளங்குகிற வீரபட்டிகையில், விண்ணவர் வெருவ - தேவர்களும் அஞ்சும்படி, பட்டன - (அந்த மூன்று அம்புகளும்) தாக்கின; (எ - று.)

இராமபிரானது வீரபட்டிகையில் தூடணன்கணைகள் பட்டன எனக. ஸ்ரீராமனது நெற்றிப்பட்டத்துக்கு யானையின்நெற்றிப்பட் டத்தை உவமைகூறியதனுல், இராமன் யானைபோல்வா னென்பது தும் விளங்கும். எட்டுத்திக்குக்களிலும் எட்டுயானைகளும் நடுவில் ஆதிசேஷனும் அதன்கீழ் ஆதிகூர்மமுமாக இவை பூமியின்கீழி ருந்து அதனைத் தாங்குகின்றன வென்பது, நூற்கொள்கை. எம் பெருமானது திருவடிநிலை ஆதிசேஷனது வடிவமென்பதை, "சென்ருற்குடையாம் இருந்தாற் சிங்காதனமாம், நின்ருல் மரவடி யாம்......திருமாற்கு அரவு" என்பதனுல் அறிக. இராமன் வனவா சஞ்சென்று சித்திரகூடத்தில்வசிக்கையில் அயோத்தியினின்று வந்து பரதன் இராமனை மீண்டு ஊர்சேர்ந்து முடிசூடி அரசாளும் படி மிகவும் வேண்ட, அப்பெருமான் அதற்கு உடன்படாமல் தனது பாதுகையைப் பரதனுக்குக் கொடுத்துச் சமாதானஞ் சொல்லி யனுப்பிவிட, அப்பரதாழ்வான் அத்திருவடிநிலையைத் திருவயோத் திக்குக் கொணர்ந்து சிங்காதனத்தில் எழுந்தருளப் பண்ணி அதற்கு முடிசூட்டி அதனையே அரசனுகப்பாவித்துத் தான் அதற்குக் கீழ்ப் படிந்து இராமன்மீண்டுவருமளவும் இராசாங்ககாரியம்பார்த்துவந்தன னுதலால், 'ஒன்றுபார்புரக்கப்பேரவிட்டவன்' என்றது. இனி எண் திசைகளைத் தனித்தனி சுமக்கும் பாரவெட்டினேடு இரண்டினி னென்று பார்புரக்கப்பேரவிட்டவன் - எட்டுத் திக்குக்களையுந் தாங்கு கிற திக்கஜங்களோடு ஒப்ப உலகத்தைத் தாங்குகிற [பாதுகாக்கிற] தனது திவ்வியாயுதங்களாகிய சங்கசக்கரங்களில் ஒன்று [ஒன்ற னமிசமான பரத னென்றபடி] பூமியையாளுமாறு தாம் விலகிவிட்ட இராமபிரானென்று உரைத்தலுமுண்டு. பரதசத்துருக்கனர் சங்க சக்கராமிசமாதலை "வளையொடு திகிரியும் வடவை தீதர, விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும், இளைஞர்க ளெனவடி பரவ வேகி நாம், வளைமதிலயோத்தியில் வருது மென்றனன்" என்ற திருவவதாரப் படலச் செய்யுளால் உணர்க. வீரபட்டம் - வெற்றிபெற்ற வீரர் அதற்கு அறிகுறியாக நெற்றியி லணியும் பொற்றகடு. எட்டு, இரண்டு - எண்ணலளவையாகுபெயர்கள். பி-ம்:—[1] கரிநுதல். [2] பிறங் கும். [3] பட்டிகை. (526)

160. எய்த காலமும் வலியு[1]நன் றெனநினைந் திராமன்
செய்த சேயொளி முறுவலன் கடுங்கணை தெரிந்தான்
நொய்தி னங்கவ னெறிற்பரித் தேர்பட நூறிக்
[2]கையின் வெஞ்சிலை யறுத்தொளிர் கவசமுங் கடிந்தான்.

(இ - ள்.) 'எய்த - (இவ்வரக்கன்) அம்பெய்த, காலமும்—, வலி உம்-(இவனது) வலிமையும், நன்று-நல்லன', என-என்று, நினைந்து-எண்ணி, இராமன்—, செய்த சேய் ஒளி முறுவலன் - அழகிய ஒளியையுடைய புன்சிரிப்புச் செய்தவனாய், கடு கணை தெரிந்தான் - கொடிய பாணங்களை ஆராய்ந்து தொடுத்து, (அவற்றால்), அங்கு - அப்பொழுது, நொய்தின்-விரைவாக, அவன்-அந்தத் தூடணனது, நொறில் பரி தேர்-விரைந்துசெல்லுங் குதிரைகள் பூட்டிய தேரை, பட-அழியும்படி, நூறி-சிதைத்து, கையின் வெம் சிலை அறுத்து-அவன் கையிலிருந்த கொடிய வில்லையுந் துணித்து, ஒளிர் கவசம்உம் கடிந்தான்-விளங்குகிற கவசத்தையும் அழித்தான்; (எ-று.)

இராமன் தூடணன்செயலைப் பாராட்டியவண்ணம் கடுங்கணை தெரிந்துஎய்து அந்தத்தூடணனது தேரையும் சிலையையும் நூறியொழித்துக் கவசத்தையும் கடிந்தனனென்பதாம். தூடணனெய்த அம்புகள் தனதுவீரபட்டத்திற் பட்டமைபற்றி, எய்த காலமும் வலியும் நல்லன என இவனை மதித்தவாறு. சேயொளியென்பதில், செம்மை - அழகின்மேலது: இனி, சிவந்தவாயினுள்ளாகச்செய்யும் சிறுசிரிப்பு, 'சேயொளிமுறுவல்' எனப்பட்டதென்றலு மொன்று. செய்த முறுவலன் = முறுவல்செய்தவன்; விகுதி பிரித்துக்கூட்டல். நொறில் - உரிச்சொல். பி - ம் :—[1]நல்லென. [2]கையில். (527)

161. தேவ ரார்த்தெழ முனிவர்க டிசைதொறுஞ் சிலம்பும்
ஓவில் வாழ்த்தொலி [1]கார்க்கடன் முழக்கென வோங்கக்
[2]காவ டாவிது வல்லையே னீயெனக் கணையொன்று
ஏவி னானவ னெயிறுடை நெடுந்தலை யிழந்தான்.

(இ - ள்.) தேவர் ஆர்த்து எழ - தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரித்துக் கிளரவும்,—முனிவர்கள் திசைதொறுஉம் சிலம்பும் - இருடிகள் எல்லாத்திக்குக்களிலும் நின்று ஆரவாரித்துக்கூறுகிற, ஓவு இல் வாழ்த்து ஒலி-ஒழிவில்லாத ஆசீர்வாதத்தின் சத்தம், கார் கடல் முழக்கு என ஓங்க-கரியகடலின் ஆரவாரம்போல மிக்கு விளங்கவும்,—நீ வல்லை ஏல் இது கா அடா என-'நீ வல்லவனாவையானால் இந்த அம்பைக் காத்துக்கொள்ளடா' என்று வீரவாதங்கூறி,—கணை ஒன்று ஏவினான்-(இராமன்)ஓர் அம்பைத் தொடுத்தான்; (அதனால்), அவன்-அத்தூஷணன், எயிறு உடை நெடுதலை இழந்தான் - கோரதந்தங்களையுடைய பெரிய தலையை யிழந்தான்; (எ - று.)

தேவர்கள் ஆர்க்கவும் முனிவர்கள் வாழ்த்தவும், இராமபிரான் தூடணனை நோக்கி, 'அடா! வல்லமையுடையாயானால் இதைத் தடுப்பாய்' என்று ஓரம்பை எய்ய, அவன் தலையிழந்தானென்பதாம். முழக்கை, கார் கடல் இரண்டோடும் கூட்டவுமாம். [1]காற்கடன்

முழக்கு என்ற பாடத்திற்கு-நாற்றிசையிலும் நின்று நான்கு வேதங் களின் மந்திரங்களைக்கொண்டு ஆசிகூறும் பேரொலிக்கு நாற்கடல் முழக்கு உவமையென்க. பி-ம்:—[2]காவெடா. சிலபிரதிகளில் தூடணன் வதைப்படலம் இதனோடு முடிய, மேல் கரன்வதைப்படலம் தொடங்கு கின்றது. (528)

வேறு.

162.—இனி, இருபத்துநான்குகவிகளால், கரன் தனது சேனையுடன் வந்து போர்செய்தலும் அழிதலும் கூறுகிறார்.

தம்பிதலை யற்றபடி யுந்தய ரதன்சேய்
அம்புபடை யைத்துணி படுத்தது மறிந்தான்
வெம்புபடை விற்கைவிச யக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய [1]குலக்[2]கரி கடுப்பான்.

(இ - ள்.) கொம்பு - தந்தங்கள், தலை கட்டிய - முகத்தினிடத் தில் உறுதியாயிருக்கப்பெற்ற, குலம் கரி - சிறந்தசாதியில் தோன் றிய திக்குயானைகளை, கடுப்பான் - ஒப்பவனாகிய, வெம்பு படை வில் கை விசயம் கரன் - உக்கிரங்கொண்ட பலவகையாயுதங்களையும் வில்லையும் ஏந்திய கைகளையும் வெற்றியையுமுடைய கரன்,—தம்பி தலை அற்ற படிஉம்-(தனது) தம்பியான தூடணன் (இராமபாணத் தால்) தலை துணிபட்ட விதத்தையும், தயரதன் சேய் அம்பு - தசரதனது குமாரனான இராமனது பாணம், படையை-இராக்கத சேனையை, துணிபடுத்ததுஉம் - துண்டுபடுத்தியதையும், அறிந் தான் - அறிந்து, வெகுண்டான்-கோபித்தான்; (எ-று.)

இராமபிரானால் தூடணன் சிரமற்றதையும், அரக்கச்சேனை துண்டுபட்டதையும் அறிந்து, கரன் வெகுண்டானென்க. கரனுக்கு உவமையாகக்கூறிய குலக்கரியை 'கொம்புதலைகட்டிய' என விசேடித் ததனால், கரனது முகத்தில் வெளிப்பட்டுக்காணப்படுகிறகோரதந் தங்கள் யானைத்தந்தம்போல்வன என்பது விளங்கும். இனி, கொம்பு தலைகட்டிய - கொம்பினை முகத்தினிடத்துச் சேதிக்கப்பெற்ற, கரி யோடு ஒப்பானாகிவெகுண்டான என்றல் சிறக்கும்: தந்தம்சேதிக்கப் பெற்ற யானை வெகுளிமிகுமென்பதனை "சீவகசாமி திண்டோள், வரிக்கச்சிற் பிணிக்கப்பட்டான் மன்னனாலென்னக்கேட்டே, தருக் குடைவேழம்வாளார் ஞாட்பினுட்டலைமை சான்ற, மருப்புடனிழந்த தொத்தார் மன்னுயிர்த்தோழன்மாரே," "தந்தம்பறியுண்டெதிர் சீறிய தந்தியென்ன" என்ற இடங்களிலும் காண்க. இவ்வுரைக்குக் கட்டியஎன்பது - வேரோடுபிடுங்குதலென்று பொருளுள்ள கள் ளென்னும் வினைப்பகுதியினடியாகப் பிறந்த இறந்தகாலப் பெய ரெச்சமென்க. பி - ம்:—[1]கொலை. [2]கரியொடொப்பான், கரியொ டார்ப்ப.

இதுமுதல் 13 - கவிகள்-கீழ்ப்படலத்து 31-ஆங்-கவிபோன்ற கலிவிருத்தங்கள், (529)

163. அந்தகனு முட்கிட வரக்கர்கட லோடும்
சிந்துரம் வயப்[1]புரவி [2]தேர்திசை [3]பரப்பி
இந்துவை வளைக்குமெழி லிக்குல மெனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான்.

(இ - ள்.)—(கோபங்கொண்ட கரன்), அந்தகன்உம் உட்கிட -யமனும் அஞ்சும்படி, அரக்கர் கடலோடுஉம் - இராக்கதர்கூட்டத்துடனே, சிந்துரம்-யானைகளையும், வய புரவி - வலிய குதிரைகளையும், தேர் - தேர்களையும், திசை பரப்பி - எல்லாத்திக்குக்களிலும் பரவிவரச்செய்து,—இந்துவை வளைக்கும் எழிலி குலம் என-சந்திரனைச் சூழ்கிற மேகங்களின் கூட்டம்போல, தான் வந்து—, வரி வில் கை மதம் யானையை வளைத்தான்-கட்டமைந்த வில்லையேந்திய கையையுடைய மதயானையைப்போன்ற இராமபிரானைச் சூழ்ந்து கொண்டான்; (எ - று.)

கரன் இராமபிரானைச் சதுரங்கசேனைகளையுங் கொண்டு வளைத்தானென்பதாம். சந்திரன்-குளிர்ந்த அழகிய இராமபிரானுக்கும், மேகக்கூட்டம்-கரிய பெரிய அரக்கர்தொகுதிக்கும் உவமை. ஸிந்துரம்-வடசொல். எழிலி-எழுச்சியையுடையது. கடல், யானை-உவமையாகுபெயர்கள். பி - ம்:—[1]கரிகள். [2]தேர்மிசை. [3]பரப்ப. (530)

164. அடங்கலில் கொடுந்தொழி லரக்கரவ் வனந்தன்
படங்[1]கிழி தரப்[2]படி தனிற்பல விதப்போர்
கடங்கலுழ் [3]தடங்களிறு தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும் வெங்கணை துரந்தான்.

(இ - ள்.)—அடங்கல் இல் - அடங்குதலில்லாமல் மேன்மேல் வளர்கிற, கொடு தொழில் - தீச்செயல்களையுடைய, அரக்கர் - இராக்கதர்கள், அ அனந்தன் படம் கிழிதர - அந்த ஆதிசேஷனது படம் கிழிபடும்படி, படிதனில்-பூமியில், கடம் கலுழ் தட களிறு-மதநீர் பொழிகிற பெரியயானைகளையும், தேர் - தேர்களையும், பரி-குதிரைகளையும், கடாவி - மிகுதியாகச்செலுத்தி, பல விதம் போர் தொடங்கினர் - பலவகைப்பட்ட போரைச் செய்யத் தொடங்கினார்கள்; நெடு தகைஉம் - பெருமைக்குணமுள்ள இராமபிரானும், வெம் கணை துரந்தான் - கொடிய அம்புகளை விரைந்து எய்தான்; (எ-று.)

அரக்கர் அடங்காமல் சேனைகளோடு மீண்டும் போர்தொடங்க, இராமபிரானும் கடுங்கணை துரந்தானென்பதாம். மிகப்பல அரக்கர் இராமபிரானால் அழிந்ததைப் பிரதியட்சமாகக் கண்டும் தாம் அடங்காமல் போர்க்கு எழுந்தமைபற்றி, 'அடங்கலில் கொடுந்தொழிலரக்கர்' என்றது. 'அவ்வனந்தன் படங்கிழிதர' என்றது, ஓரிடத்தே ஒருங்கே திரண்ட பாரமிகுதிபற்றி. அவ்வனந்தன்—கீழிருந்து நிலவுலகத்தைத் தாங்கும் ஆதிசேஷனென்றபடி. கடம்-கன்னம்: வடசொல்: மதநீர்க்கு இடவாகுபெயர். நெடுந்தகை - பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]கிழிவுற. [2]படிபடப், படிப்படப். [3]கருங். (531)

165. துடித்தன் கடக்கரி துடித்தன பரித்தேர்
துடித்தன முடித்தலை துடித்தன தொடித்தோள்
துடித்தன மணிக்குடர் துடித்தன தசைத்தோல்
துடித்தன கழற்றுணை துடித்தன விடத்தோள்.

(இ - ள்.)—(இராமபாணங்களில்), கடம் கரி-மதயானைகள், துடித்தன - பதைதத்துவிழுந்தன; பரி தேர் - குதிரைகள்பூண்ட தேர்கள், துடித்தன-துள்ளிக்கீழ்விழுந்தன; முடி தலை-கிரீடத்தை யணிந்த தலைகள், துடித்தன-பதறிவிழுந்தன; தொடி தோள் - தொடியென்னும் வளையையணிந்த தோள்கள், துடித்தன—; மணி குடர் - சிறந்தகுடல்கள், துடித்தன-; தசை தோல் - தசையோடு சம்பந்தப்பட்ட தோல்கள், துடித்தன-; கழல் துணை - இரண்டுகால் களும், துடித்தன—; (அப்பொழுது பலஅரக்கர்க்கும்), இடம் தோள் துடித்தன-இடப்புறத்துத்தோள்கள் துடித்தன; (எ - று.)

தொடி-வீரவளை. தசை - சதை. ஆடவர்க்கு இடத்தோள் துடித்தல், தீநிமித்தம். தேருக்குத் துடித்தல் - முறிந்துவிழுதல். சொற்பொருட்பின்வருநிலையணி. (532)

166. வாளின்வனம் வேலின்வனம் [1]வார்சிலை வனந்திண்
தோளின்வன [2]மென்றிவை துவன்றி நிருதப்பேர்
ஆளின்வன நின்றதனை யம்பின்வன மென்னுங்
கோளின்[3]வன வன்குழுவி னிற்குறை படுத்தான்.

(இ-ள்.) வாளின் வனம்-வாட்படைகளின் தொகுதியும், வேலின் வனம்-வேற்படைகளின் தொகுதியும், வார் சிலை வனம் - நீண்ட விற் படைகளின் தொகுதியும், திண் தோளின் வனம்-வலிய தோள்களின் தொகுதியும், என்ற இவை-என்ற இவைகள், துவன்றி - நெருங்கப் பெற்று, நிருதர் பேர் ஆளின் வனம்நின்றதனை-அரக்கராகிய பெரிய ஆட்களின் தொகுதி எதிர்நின்றதை, (இராமன்), அம்பின் வனம் என்னும்-(தனது) பாணங்களின் தொகுதியென்கிற, கோளின் வனம் வல் குழுவினில-கொலைத்தொழிலையுடைய அழகிய வலிய கூட்டத் தால், குறைபடுத்தான்-துணித்திட்டான்; (எ-று.)

வாள்முதலிய படைக்கலங்களோடு எதிர்நின்ற நிருதரின் தொகுதியை இராமபிரான் தன்கணைத்தொகுதியால் துணித்திட்டா னென்பதாம். வனம் என்றது, அடர்ந்த வலிய தொகுதியை. என்றி வை - தொகுத்தல். பி - ம்:—[1]வண்சிலைவனந்தன். [2]அன்னவை. [3]மழுவின்குழுவிடைக், வனமழைக்குழுவினிற். (533)

167. தானுருவு கொண்ட[1]தரு மந்தெரி சரந்தான்
மீனுருவு மேருவை [2]விலங்குருவு மேலாம்
வானுருவு மண்ணுருவும் வாளுருவி வந்தார்
ஊனுருவு மென்னுமி துணர்த்தவு முரித்தோ.

(இ-ள்.) தான் உருவு கொண்ட தருமம்-தருமந்தானே ஒருபுருட வடிவங்கொண்டாற் போன்ற இராமமூர்த்தி, தெரி - ஆராய்ந்து எடுத்துஎய்த, சரம்-அம்பு, தான்—, மீன்உருவும்-நட்சத்திரங்களையும்

உருவிச்செல்லும்; மேருவை விலங்க உருவும் - மகாமேருமலையையும் குறுக்காகஉருவிச்செல்லும்; மேல்ஆம் வான் உருவும் - மிகஉயரத்தி லுள்ள மேலுலகத்தையும் உருவிச்செல்லும்:மண்உருவும்-பூமியையும் உருவிச்செல்லும்; (என்றால்), வாள் உருவி வந்தார் ஊன் உருவும் என்னும் இது-வாட்படைகளை உறை கழித்தெடுத்துவந்த அரக்கர் களது உடம்பை ஊடுருவிச்செல்லு மென்பது, உணர்த்தஉம் உரித்துஓ - கூறுதற்கும் உரியதோ? (எ-று.)

நட்சத்திரம் முதலியவற்றைத் தடையற முழுதுந் துளைத்துச் செல்லவல்ல கூரிய விசையுள்ள இராமபாணம் அரக்கருடலைத் துளைத்ததென்பது தானே விளங்குமென்று சாதித்தது - தொடர் நிலைச்செய்யுட்பொருட்பேறணி. தானுருவுகொண்ட தருமம் - தரும மூர்த்தியாகிய இராமன். மீன்-விண்மீன். விலங்குருவு - தொகுத்தல். பி - ம்:—[1] தருமன். [2] விரைந்து. (534)

168. அன்றிடை வளைந்தவர் குலங்களொ டடங்கச்
சென்றுலை வுறும்படி தெரிந்துகணை [1] சிந்த
மன்றிடை நலிந்துவலி யோர்களெளி யோரைக்
[2] கொன்றனர் நுகர்ந்தபொரு ளிற்கடிது [3] கொன்ற.

(இ - ள்.) அன்றிடை - அப்பொழுதில், வளைந்தவர் - (தன்னைச்) சூழ்ந்த அரக்கர்கள், குலங்களொடு - (தந்தமது) கூட்டங்களுடனே, அடங்க-எல்லோரும், உலைவு சென்று உறும்படி - அழிந்துபோம்படி, கணை தெரிந்து சிந்த - (இராமன்) அம்புகளை ஆராய்ந்தெடுத்துப் பிர யோகிக்க, (அந்த அம்புகள்), வலியோர்கள்—, எளியோரை—, மன் றிடை-வெளியிடத்திலே, நலிந்து கொன்றனர் - வருத்திக்கொன்று, நுகர்ந்த பொருளின்-(அவர்களிடத்தினின்று கவர்ந்த தாம்) அனு பவித்த செல்வம் (அவரை விரைவில்எளிதில் அழித்தல்) போல, கடிது கொன்ற-விரைவாகக்கொன்றன; (எ - று.)

வலியார் எளியாரைத் துன்புறுத்திக் கவர்ந்த பொருள், அக் கவர்ந்தாரை வமிசநாசப்படுத்துமென்க. பின்னிரண்டடிகளிற் கூறிய உவமை, கடிது குலத்தோடு கொல்லுதல் மாத்திரத்துக்கு வந்தது. நலிந்துகொல்லுதற்கு எளிய இடமாதல்பற்றி, மனறை யெடுத்துக் கூறினர். இந்நூலாசிரியர் உவமை முதலிய அணிகள் மூலமாகவும் கற்போர்க்கு நல்லறிவு புகட்டுவ ரென்பது, அறியத்தக்கது. மன் றிடை, இடை-ஏழனுருபு. பி-ம்:—[1] சிந்தா. [2] கொன்றனன், கொன்றன. [3] கொன்றான். (535)

169. கடுங்கர னெனப்பெயர் படைத்தகழல்வீரன்
அடங்கலு மரக்கரழி வுற்றிட வழன்றான்
ஒடுங்கலி னிணக்குருதி [1] யோதமதி னுள்ளான்
நெடுங்கடலின் மந்தர மெனத்தமிய னின்றான்.

(இ - ள்.) அரக்கர் அடங்கலும் அழிவு உற்றிட - இராக்கத ரெல் லோரும் அழிவடைய, அழன்றான்-கோபங்கொண்டவனாய், ஒடுங்கல் இல்-குறைதலில்லாமல் (மேன்மேல் அதிகப்படுகிற), நிணம் குருதி

ஓதமதின் - கொழுப்போடுகூடிய இரத்தவெள்ளத்தினிடையிலே, உள்ளான்-உள்ளவனான, கடு கரன் என பெயர் படைத்த - கொடிய கரனென்று பேர்பெற்ற, கழல்வீரன் - வீரக்கழலையுடைய வீரன்,— நெடு கடலில் மந்தரம் என-பெரிய கடலினிடையில் மந்தரமலைபோல, தமியன் நின்றான்-தனித்தவனாய் நின்றான்; (எ-று.)

அரக்கரடங்கலும் அழிவு எய்திட நிணக்குருதியோதத் திடையே நிற்கும் கரன், பாற்கடலைக்கடைகையில் அதனிடையில் நின்ற மந்தரகிரியென்னும் மத்துப்போன்றானென்க. பி - ம்:—[1] ஓத மதன். (536)

170. செங்கணெரி சிந்தவரி விற்பகழி சிந்தப்
பொங்குகுரு திப்புணரி யுட்புகையு நெஞ்சன்
கங்கமொடு காகமிடை யக்கடலி னோடும்
வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான்.

(இ - ள்.)—புகையும் நெஞ்சன் - கோபாக்கினிமூளும் மனமுடைய அந்தக் கரன்,—செம் கண் எரி சிந்த - சிவந்தகண்கள் தீப்பொறியைச் சொரிய, வரி வில் பகழி சிந்த - கட்டமைந்த வில் அம்புகளைச் சொரிய,—பொங்கு குருதி புணரியுள் - மிகுகிற இரத்தக் கடலிலே,—கங்கமொடு காகம் மிடைய-கழுகுகளும் காக்கைகளும் நெருங்க,—கடலின் ஓடும் வங்கம் எனல் ஆயது ஒரு தேரின்மிசை-கடலிலே விரைந்துசெல்லுகிற மரக்கலமென்று உவமை சொல்லத்தக்கதொரு தேரின்மேல், வந்தான்—; (எ - று.)

கங்கமொடு காகம் - பிணந்தின்ன வந்தவை: இது, கரன் வருகையில் நிகழ்ந்த தீநிமித்தமுமாம். இடைய எனப்பிரித்து, வருகிற விசையாற் கழுகுகளும் காக்கைகளும் விலக என்றுமாம். (537)

171. செறுத்திறுதி யிற்புவனி தீயவெழு தீயின்
மறத்தின்வயி ரத்தொருவன் வந்தணுகு முந்தைக்
கறுத்தமணி கண்டர்கட வுட்சிலை கரத்தால்
இறுத்தவனும் வெங்கணை தெரிந்தன னெதிர்ந்தான்.

(இ-ள்.)—இறுதியில் - கற்பாந்தகாலத்திலே, புவனி தீய - உலகம் எரியும்படி, செறுத்து எழு - உக்கிரங்கொண்டு மேற்கிளர்கிற, தீயின் - ஊழித்தீபோன்ற, மறத்தின் வயிரத்து ஒருவன் - கொடுமையையும் பகைமையையுமுடைய தனித்தவனான அக்கரன், வந்து அணுகும் முந்தை - வந்து நெருங்கும்முன்னே,—கறுத்த மணி கண்டர் கடவுள் சிலை கரத்தால் இறுத்தவன்உம் - (நஞ்சுஉண்டதனால்) கருநிறங்கொண்ட நீலமணிபோலுங் கழுத்தையுடைய சிவபிரானது தெய்வத்தன்மையுள்ள வில்லை (ச் சீதாவிவாகத்தின் பொருட்டுக்) கையால் ஒடித்திட்ட இராமபிரானும், வெம் கணை தெரிந்தனன் எதிர்ந்தான் - கொடிய அம்புகளை ஆராய்ந்தெடுத்து எதிர்சென்றனன்; (எ - று.)

கரன் வரும்முன்னமே கோதண்டராமன் கடுங்கணை தெரிந்து கொண்டு எதிர்ந்தனனென்க. புவனி = புவநம்: ஈறுதிரிந்தது. சிவ பிரான் தந்த வில் சனகமகாராஜாவினுல் சீதாவிவாகத்துக்கு ஒரு பந்தயமாக வைக்கப்பட்டிருந்த தென்பதும், அதனை இராமபிரான் எடுத்து வளைக்கலுறுங்கால் முந்தியே ஹரிஹரயுத்த காலத்திற் சிறிது இறுபட்டிருந்த அவ்வில் நன்குமுறிந்திட்ட தென்பதும், பால காண்டத்திற் பிரசித்தம். (538)

172. [1]தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை யரக்கர்பதி[2]யெய்தான்
[1]தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை யிராமனு மறுத்தான்.

(இ - ள்.) தீ உருவ - நெருப்புப்போன்ற கொடியவடிவ முடைய வையும், கால் விசைய - காற்றுப்போல் வேகமுள்ளவையும், செவ்வி யன - மற்றையெல்லாவிலக்கணங்களும் அமைந்தவையுமான, வெம் வாய் வடி கணை ஆயிரம் - கொடிய வாயையும் கூர்மையையுமுடைய ஆயிரம் அம்புகளை, அரக்கர் பதி எய்தான் - இராக்கதர் தலைவனுன கரன் (இராமன்மேல்) தொடுத்தான்; தீ உருவ கால் விசைய செவ்வி யன வெம் வாய் ஆயிரம் வடி கணை - அத்தன்மையனவான ஆயிரம் பாணங்களால், (அவற்றை), இராமன்உம் அறுத்தான் - இராமபிரா னும் துணித்தான்; (எ - று.)

கரன் வரும்போதே ஆயிரம்வடிக்கணை யெய்ய, இராமனும் அத் துணைக்கணைகளால் அவற்றை யறுத்தா னென்க. உருவ - பலவின் பாற் குறிப்புவினையாலணையும் பெயர்: உரு-பகுதி. பி - ம்:—[1]தீயுருவு. [2]செய்தான். (539)

173. ஊழியெரி யிற்கொடிய பாய்பகழி யொன்பான்
ஏழுல கினுக்குமொரு நாயகனு மெய்தான்
சூழ்சுடர் வடிக்கணை யவற்றெதிர் [1]தொடுத்தே
ஆழிவரி விற்கரனு மன்னவை யறுத்தான்.

(இ - ள்.) ஏழ் உலகினுக்குஉம் ஒரு நாயகன்உம் - ஏழுவகைப் பட்ட உலகங்களுக்கெல்லாம் ஏகநாயகனுன ஸ்ரீராமனும்,—ஊழி எரியின் கொடிய-கற்பாந்தகாலத்து உலகழிக்குந் தீயைக் காட்டிலும் கொடுமையுடையனவாய், பாய் - ஊடுருவிச்செல்லவல்ல, பகழி ஒன் பான் - ஒன்பது பாணங்களை, எய்தான் - (கரன் மேல்) தொடுத்தான்; ஆழி வரி வில் கரன்உம் - சக்கராகாரமாக வளைத்த கட்டமைந்த வில்லையுடைய கரனும், சுடர் சூழ் வடி கணை - அக்கினிச்சுவாலை சூழ்ந்த கூரிய (ஒன்பது) அம்புகளை, அவற்று எதிர் தொடுத்து - அந்த அம்புகளுக்கு எதிராகச்செலுத்தி, அன்னவை அறுத்தான் - அந்த அம்புகளைத் துணித்தான்; (எ - று.)

ஆழி-கடல்எனக் கொண்டால், கரனுக்கு உவமையாம். பி - ம்:—[1]தொடுத்தான். (540)

174. [1]கள்ளவினை மாயவமர் கல்வியின் விளைத்தான்
வள்ளலுரு வைப்பகழி மாரியின் மறைத்தான்
உள்ளமுலை வுற்றமர ரோடின ரொளித்தார்
வெள்ளெயி [2]றிதழ்பிறழ வீரனும் வெகுண்டான்.

(இ - ள்.) (பின்பு கரன்), கல்வியின் - (தான் அறிந்த) வித்தையினால், கள்ளம் மாயம் வினை அமர் - வஞ்சனையோடு மாயத்தொழிலைக்கொண்ட போரை, விளைத்தான் - உண்டாக்கி, பகழி மாரியின் - (தான் தொடுத்த) அம்புமழையால், வள்ளல் உருவை மறைத்தான்-இராமபிரானது திருமேனியை மறையச்செய்தான்; (அதுகண்டு), அமரர் - தேவர்கள், உள்ளம் உலைவுற்று - மனம்நடுக்கமடைந்து, ஓடினர் ஒளித்தார்-ஓடியொளித்துக் கொண்டார்கள்; வெள் எயிறு இதழ் பிறழ-வெண்மையான பற்களை மூடுகின்ற உதடு மாறித் தோன்ற [பற்களால் உதட்டைக் கடித்தவண்ணம்], வீரன்உம்-மகா வீரனான ஸ்ரீராமனும், வெகுண்டான்-கோபங்கொண்டான்; (எ-று.)

அமரரும் அஞ்சுமாறு கரன மாயப்போரால் இராமபிரான் திருமேனியைச் சரமழையால் மறையச்செய்தா னென்பதாம். கல்வியென்றது, மந்திரபலத்தை. கள்ளம் மாயவினை அமர் - தனது உண்மையுரு மறைந்தும் வெவ்வேறு பலவுருவங்கொண்டும் நின்று பற்பல வகையாகச் செய்யும் போர். பி-ம்:—[1]கள்ளவமர் மாயவினை. [2]இதழ்ப் பிறழ, இதழ்ப்பவள. (541)

வேறு.

175. முடிப்பெ னின்றொரு மொய்கணை யா[1]லெனாத்
தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினான்
பிடித்த திண்சிலை பேரகல் வானிடை
இடிப்பி னோசை படக்கடி திற்றதே.

(இ - ள்.) 'இன்று-இப்பொழுது, ஒரு மொய் கணையால் - ஏவிய அம்பு ஒன்றினாலே, முடிப்பென் - (இவனைத்) தொலைப்பேன்,' எனா - என்று திருவுள்ளத்திற்கொண்டு, (ஸ்ரீராமன்), நின்று தொடுத்து - நிலைநின்று (ஓரம்பை வில்லில்) நிறுத்தி, உயர் தோள் உற வாங்கினான் - உயர்ந்த (தனது) தோளை யளாவும்படி (வில் நாணியை) வலிய இழுத்தான்; (அப்போது), பிடித்த திண் சிலை - (இராமன்) கையிற் பிடித்திருந்த வலிய வில்லானது, பேர் அகல் வானிடை இடிப்பின் - அகன்ற பெரிய வானத்திலுண்டாகும் இடி முழக்கம்போன்ற, ஓசை பட-ஓசையுண்டாம்படி, கடிது இற்றது-விரைவாக ஒடிந்தது; (எ-று.)

இவனை முடிப்பேனென்று இராமபிரான் கணைதொடுத்து வில்லை வளைக்கையில் பேரொலிபட அச்சிலை யிற்ற தென்பதாம். பேர் இடிப்பென இயைத்தலும் ஒன்று. இடிப்பினோசைபட என்பதற்கு - இடியினோசையடங்க என்று உரைத்தலு முண்டு. பி - ம்:—[1]எனத்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் 18 - கவிகள் - ஏழ்ப்படலத்தின் 72 - ஆம் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (542)

176. வெற்றி கூறிய வானவர் வீரன்வில்
இற்ற போது துணுக்கமுற் றேங்கினர்
[1]மற்றோர் வெஞ்சிலை யின்மை மனக்கொளா
அற்ற தாலெம் வலியென வஞ்சினர்.

(இ - ள்.)—வெற்றி கூறிய வானவர் - (இராமபிரானது) சயத்தைச் சொல்லிக்கொண்டிருந்த தேவர்கள்,—வீரன் வில் இற்ற போது - இராமபிரானது வில் ஒடிந்தபொழுது,—மற்ற ஓர் வெம் சிலை இன்மை மனம் கொளா - (அப்பெருமானுக்கு) வேறொரு கொடிய வில் இல்லாமையை மனத்திலேகொண்டு,—எம் வலி அற்றது என அஞ்சினர்-'எமதுவலிமை யொழிந்தது' என்று அச்சங்கொண்டவர்களாய், துணுக்கம் உற்று ஏங்கினர் - நடுக்கமடைந்து வருந்தினார்கள்; (எ - று.)—ஆல் - அசை.

மற்றொருவெஞ்சிலையின்மை மனக்கொளா - சேமவில்லொன்று துணையில்லாமையைக் கருதி. அரக்கரையழித்துத் தம்மைப் பாதுகாத்தற்பொருட்டு அவதரித்த இராமமூர்த்தியின் வில் போரிடையில் ஒடிந்திட்டதனால், இராமன் வலிமைகுறைய, அதனால் அரக்கர் அழிவின்றிச் செழித்திடுதல் தங்கள் வலிமையை யழித்தற்குக் காரண மாவதனால், 'எம்வலி யற்றது' என்று தேவர்கள் அஞ்சினார்கள். பி-ம் :—[1]மற்று. (543)

177. என்னு மாத்திரத் தேந்திய கார்முகஞ்
சின்ன மென்றுந் தனிமையுஞ் சிந்தியான்
மன்னர் மன்னவன் செம்மன் மரபினாற்
பின்னு றத்தன் பெருங்கர நீட்டினான்.

(இ - ள்.)—என்னும் மாத்திரத்து-ஆகிய இவ்வளவில் [வில் ஒடிந்தமாத்திரத்தில்],—மன்னர் மன்னவன் செம்மல் - அரசர்களுக்கு அரசனான தசரதசக்கரவர்த்தியின் குமாரனாகிய ஸ்ரீராமன், ஏந்திய கார்முகம் சின்னம் என்றுஉம் - (தான்) கைப்பிடித்த வில் ஒடிபட்ட தென்பதையும், தனிமைஉம் - (தான்) தனித்திருக்குந் தன்மையையும், சிந்தியான் - கருதிக்கவலைப்படாதவனாய், மரபினால்- பழையசங்கேதத்தின்படி, தன் பெரு கரம் பின் உற நீட்டினான் - தனது பெரிய கையைப் பின்னேசெல்ல நீட்டினான்; (எ - று.)

சிந்தம் - வடசொல். தனிமை-வில்லாகிய துணையொன்றும் அற்றமை. இராமபிரான் முன்பு பரசுராமனிடத்தினின்று தான் பெற்ற விஷ்ணுதனுசைப் பரசுராமனை வென்றவுடனே வருணனிடத்திற் கொடுத்து அதனை நன்றாகப்பாதுகாத்து வைத்திருக்கும்படியும், உரியசமயத்திற் கொண்டுவந்து கொடுக்கும்படியும் கட்டளையிட்டிருந்தன னாதலின், அக்குறிப்பால், வில் இற்றது குறித்துச் சிந்தை கொள்ளாமல் அவ்வில்லின்வரவுக்காகப் பின்னே கைந் நீட்டின னென்பார், 'மரபினாற் பின்னுறத் தன்பெருங்கர நீட்டினான்' என்றார். (544)

178. கண்டு நின்று கருத்துணர்ந் தானென
அண்டர் நாதன் றடக்கையி னத்துணை

பண்டு போர்மழு வாளியைப் பண்பினாற்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

(இ - ள்.)—வருணன்-(வானத்தில்வந்து போர் நோக்கிநின்ற) வருணதேவன், கண்டு நின்று - (இராமன் பின்னே கையை நீட்டியதைப்) பார்த்து நின்று, கருத்து உணர்ந்தான் என - (அப்பெருமானது) திருவுள்ளத்தை அறிந்தவனாகி, பண்டு போர் மழு வாளியை பண்பினால் கொண்ட வில்லை-முன்பு போருக்குவந்த பரசுராமனிடத்தினின்று (ஸ்ரீராமன்) உரிமையாற் கொண்ட விஷ்ணுதனுசை, அது ஆணை-அச்சமயத்தில், அண்டர் நாதன் தட கையின கொடுத்தனன் - தேவர்களுக்குத்தலைவனை அவ்விராமமூர்த்தியின் பெரிய கையிலே கொடுத்திட்டான்; (எ-று.)

கருத்துணர்ந்தானென—எனவென்பது - ஒப்பில்போலி. மழு ஆளி-மழுவையாள்பவன்; மழு வாளி எனின், மழுவாகிய படைக்கலத்தையுடையவன் என்க. வாள்-ஆயுதம்: இ - பெயர்விகுதி. மழுவாளியை = மழுவாளியினிடத்து: வேற்றுமைமயக்கம்.

வில்லின்வரலாறு:—முன்னர் விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டுவிற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக்கொண்டனர்; பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுட் சிறந்தது இன்னதென்பதை அறிதற்கு விரும்பிய தேவர்களின் வேண்டுகோளால் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட்டான்: அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக்கொண்டு பொருகையில், சிவபிரானது வில் சிறிது முறிபட்டது: அவ்வாறு இற்ற வில்லைச் சிவபெருமான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வமிசபரம்பரையாய் ஜநகமகாராசனளவும் வந்து, அவனால் சீதாவிவாகத்துக்கு ஒருகந்யாசுல்கமாக நியமிக்கப்பட்டது. அது இராமபிரானால் எடுத்துமுறிக்கப்பட்டது: இதுநிற்க! இருத வலிய வில்லை விஷ்ணு ருசிகமுனிவனிடங்கொடுத்துச் சென்றான். அது அவன்குமாரனை சமதக்கினியினிடத்தும், அவன் குமாரனை பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது; ஸ்ரீராமன் சீதாகல்யாணத்திற்காகச் சிவதனுசை முறித்தமைகேட்டுச் சினங்கொண்டு வந்த க்ஷத்திரிய குலாந்தகனை பரசுராமன் ‘இற்றவில்லை இறுத்தது, ஒரு பெருமையன்று: இந்தவில்லை ஒடி, பார்ப்போம்’ என்று சொல்லித் தன்கையிற் கொணர்ந்த அந்த விஷ்ணுதனுசை இராமன்கையிற் கொடுத்தான். இராமன் அதனைவாங்கி எளிதில் வளைத்து நாணேற்றி அம்பு தொடுககலுற்று ‘இதற்கு இலக்கு என்?’ என வினவினான். வணக்கத்தோடு பரசுராமன் கூறியபடி அவனது தபோபலத்தை அம்பினாற் சிதைத்து அவனை வெற்றிகொண்டான். அவ்வில்லை அஙகுவந்து தன்னைக் கொண்டாடிய தேவர்களுள் வருணனிடத்திற் கொடுத்து அதனைச் சேமித்து வைத்திருக்கச் சொன்னான்; அதனை அந்த வருணன் பாதுகாத்து வைத்திருந்து இராமன் வனவாசம்புக்குத் தண்டகாரணியத்தில் அகத்தியராச்சிரமத்துக்கு எழுந்தருளினபொழுது அகத்தியமுனிவர்மூலமாக அவ் வெம்பிரானுக்குச் சேர்ப்பிக்க, மீண்டும் இராமன் வருணனிடத்திலே

கொடுத்து உரியசமயத்திற் கொணர்ந்து கொடுக்கும்படி கூறியருளி ஞன். அங்ஙனமே அதனை வருணன் இப்பொழுது கொண்டுவந்து சமர்ப்பித்தன னென அறிக. (545)

179. கொடுத்த வில்லையக் கொண்ட னிறத்தினன்
எடுத்து வாங்கி வலங்கொண் டிடக்கையிற்
பிடித்த போது நெறிபிழைத் தார்க்கெலாந்
[1]துடித்த வாலிடக் [2]கண்ணொடுந் தோள்களே.

(இ-ள்.)—கொடுத்த வில்லை-(வருணன்) கொடுத்த அந்த வில்லை, அ கொண்டல் நிறத்தினன்-நீர்கொண்ட மேகம் போன்ற கருநிறத் தையுடைய அந்த ஸ்ரீராமன், எடுத்து-ஏந்தி, வலம்கொண்டு வாங்கி-வலக்கையால் வளைத்து, இடக் கையில் பிடித்தபோது-இடக்கையிற் பிடித்த பொழுது,—நெறி பிழைத்தார்க்கு எலாம்-தருமவழிதப்பிய அரக்கரெல்லோர்க்கும், இடம் கண்ணொடு உம் (இடம்) தோள்கள் துடித்த-இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தன; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

இராமன் பெற்ற அவ்வில்லை வளைக்கையில் அரக்கர்க்கு இடந் துடித்தது. ஆடவர்க்கு இடந்துடித்தல், தீநிமித்தம். கொண்டல்-தொழிலாகுபெயர். வலம்=வலக்கை. இனி, வலம் கொண்டு வாங்கி எடுத்து-வலக்கையால் வாங்கியெடுத்து எனினும் அமையும்; அன்றி, வலம் கொண்டு வாங்கி-வலிமை கொண்டு வளைத்து என்ற லும் ஒன்று. பி - ம்:—[1]துடித்ததாம். [2]கண்ணொடு தோளுமே. (546)

180. [1]ஏற்றி நாணிமை யாமு னெடுத்தது
கூற்றி னுருங் [2]குனிக்கக் குனித்தெதிர்
ஆற்றி னைவ னாழியந் தேர்சரம்
நூற்றி னுண் பொடிபட நூறினன்.

(இ - ள்.)—(இவ்வாறு), இமையா முன் - கண்ணிமைப் பொழு தினுள்ளே, அது-அவ்வில்லை, எடுத்து-ஏந்தி, கூற்றினூர்உம் குனிக்க குனித்து-யமனும் அஞ்சும்படி வளைத்து, நாண் ஏற்றி-நாணியைப் பூட்டி, சரம் நூற்றினால்-நூறு பாணங்களால், எதிர் ஆற்றினன் அவன் ஆழி அம் தேர்-எதிர்த்தல் செய்தவனை அந்த அரக்கனது (வலிய) சக்கரம்பூண்ட அழகிய தேரை, நுண்பொடி பட நூறினன்-நுண்ணிய பொடிகளாம்படி அழித்தான்; (எ-று.)

எதிர்ந்த கரனது தேரை இராமபிரான் நூறு சரங்களால் நூறினனென்றவாறு. கூற்றினர், இன் - சாரியை; ஆர்-உயர்வு விளக்கும் பலர்பால்விகுதி. நூறுதல் - நூறுதுண்டாக்குதலுமாம். பி - ம்:—[1]ஏற்றினன். [2]குனிக்க. (547)

181. எந்தி ரத்தடந் தே[1]ரிழந் தானிழந்து
அந்த ரத்திடை யார்த்[2]தெழுந் தம்பெலாஞ்
சுந்த ரத்தனி வில்லிதன் றேனுறும்
மந்த ரத்தின் மழையின் வழங்கினன்.

(இ-ள்.)—(கரன்), எந்திரம் தட தேர் இழந்தான்-(வலிய) சக்க ரம் பூண்ட பெரிய(தனது)இரதம் இழக்கப்பெற்றான்; இழந்து-(அங்ஙனம் தேரை) இழந்ததனால், ஆர்த்து அந்தரத்திடை எழுந்து-ஆரவாரஞ்செய்துகொண்டு ஆகாயத்திலே கிளம்பி, சுந்தரம் தனி வில்லிதன் தோள் எனும் மந்தரத்தின்-அழகிய ஒப்பற்ற வில்லை யுடைய இராமனது புயமென்கிற மந்தரமலையின் மீது, மழையின்-மழைபொழிந்தாற்போல, அம்பு எலாம் வழங்கினான்-(தனது) அம்பு களையெல்லாம் சொரிந்தான்; (எ - று.)

தேரை இழந்த கரன் வானில் ஆர்த்தெழுந்து இராமனதுதோள் மீது மழைபோல அம்பை வழங்கினா னென்க. பாணங்கள் சிறிதும் இராமனது தோளுக்கு அழிவுண்டாக்காமையை 'மந்தரத்தின் மழை யின்' என்ற உவமைவிளக்கும். மந்தரம் பாற்கடலைக் கலக்கியமை போல இராமன்தோள் அரக்கர்சேனைக்கடலைக் கலக்குவதென்பார், 'தோளெனும் மந்தரத்தின்' என்றார். எந்திரத்தேர்-யந்திரம்போல விரைந்து செல்லுந் தேருமாம். பி - ம்:—[1] அழிந்தான். [2] எழும். ()

182. தாங்கி நின்ற [1] தயரத ராமனும்
தூங்கு தூணி யிடைச்சுடு செஞ்சரம்
வாங்கு கின்ற [2] வலக்கையை வாளியால்
வீங்கு [3] தோளொடு [4] பார்மிசை வீழ்த்தினான்.

(இ - ள்.)—தாங்கி நின்ற-(தனது எதிரம்புகளால் கரனம்பு களைத் தன்மேல் விழாதபடி) தடுத்து நின்ற, தயரத ராமன்உம் - தசரதசக்கரவர்த்தியின் திருமகனான ஸ்ரீராமனும்,—தூங்கு தூணி யிடை சுடு செம் சரம் வாங்குகின்ற -(தோளில்) கட்டப்பட்ட அம்ப றாத்தூணியினின்றுவெவ்விய சிவந்த அம்புகளையெடுத்துவிடுகிற, வலம்கையை-(கரனுடைய)வலக்கையை, வீங்கு தோளொடு-பருத்த தோளுடனே, வாளியால் பார்மிசை வீழ்த்தினான்-ஓரம்பால் நிலத் தில் அற்றுவிழச்செய்தான்; (எ - று.)

இராமபிரானும் கரனது கணைவாங்கும் வலக்கரத்தை வாளி யால் தோளொடும் வீழ்த்தினா னென்பதாம். பி - ம்:—[1] தச. [2] வலக் கையொர். [3] தோளொடும். [4] பாரிடை. (549)

183. வலக்கை வீழ்தலு மற்றைக்கை யால்வெற்றி
உலக்கை வானத் துருமென [1] வோச்சினான்
இலக்கு வற்குமுன் வந்த விராமனும்
விலக்கி னானொரு வெங்கதிர் வாளியால்.

(இ - ள்.)—வலக்கை வீழ்தலும்-(தனது) வலக்கை துணிபட்டு விழுந்தவுடனே, (கரன்), மற்றை கையால்-இடக்கையினால், வெற்றி உலக்கை-வெற்றியைத்தரவல்லதோ ருலக்கையை, வானத்து உரும் என-மேகத்தின் இடியைப்போல, ஓச்சினான்-உயர எடுத்து (இராமன் மேல்) வீசினான்; (அதனை), இலக்குவற்கு முன்வந்த இராமன்உம்-லக்ஷ்மணனுக்குமுன்னே வந்த இராமனும், ஒரு வெம் கதிர் வாளி யால்-கொடிய ஒளியுள்ள அம்பொன்றினால், விலக்கினான்—; (எ-று.)

வலக்கையிழந்த கரன் இடக்கையால் உலக்கையை யோச்சினு னென்க. 'இலக்குவற்குமுனவந்த இராமன்' என்ற தொடர்-இரட்டுற மொழிதலென்னும் உத்தியால் லக்ஷ்மணனுக்கு முன்னே பிறந்த வனுன இராம னென்ற பொருளோடு, போர்க்கோலங்கொண்டு போர்க்கெழுந்த லக்ஷ்மணனைத் தடுத்து அவனுக்குமுன்னே வந்த இராமன் என்ற பொருளையுங் கொடுக்கும். பி - ம்:—[1]வீசினுன். (550)

184. விராவ ருங்கடு வெள்ளெயி றிற்றபின்
அராவ ழன்ற [1]தனையதன் றாற்றலான்
மராம ரங்கையில் வாங்கிவந் தெய்தினுன்
இராம னங்கொர் தனிக்கணை யேவினுன்.

(இ - ள்.)—விரர்வரும்-பொருந்தியுள்ள, கடு-விஷத்தையுடைய, வெள் எயிறு-வெள்ளிய (தனது)பறகள், இற்ற பின்-முறிபட்ட பின்பு, அரா-நாகப்பாம்பு, அழன்றது-சீறியதை, அனைய-ஒத்த, தன் ஆற்றலான்-தனது வல்லமையினுல், (கரன்),மராமரம் கையில் வாங்கி வநது எய்தினுன்-ஒருமராமரத்தைக் கையிலே எடுத்துக்கொண்டு (இராமனருகில் வந்து) நெருங்கினுன்: இராமன் —, அங்கு-அப் பொழுது, ஒர் தனி கணைஏவினுன்-ஒப்பற்ற ஓரம்பை (அவன்மேற்) செலுததினுன்; (எ-று.)

வலக்கையும் உலக்கையும் ஒழிந்தபின்பும் கரன் சீறிவந்த வல்ல மைக்கு, விஷப்பறகள் முறிந்தபின்பு நாகப்பாம்பு சீறுதலை உவமை கூறினுர். விராவரும்-ஒருசொல்: இனி, விராவ அரு எனப் பிரித்து, அருகில் நெருங்க வொண்ணுத, கடு-விஷ மெனினுமாம். ஆற்றலான் என்பதை மூன்றனுருபேற்ற பெயராகக்கொள்ளாமல், பெயர்ப்பகுபத மாக்கொண்டு, வல்லமையுடையனுன கரன் மரம் தன்கையில் வாங்கி எனக் கூட்டி உரைப்பினுமாம். பி - ம் :—[1]அனையதொராற்றலான்.

185. வர[1]ம ரக்கன் படைத்தலின் [2]மாயையின்
உரமு டைத்தன்மை யாலுல கேழையும்
பர[3]மு ருக்கிய பாவத்தி னுல்வலக்
கரமெ னக்கரன் கண்டமுற் றுனரோ.

(இ-ள்.)—வரம் படைத்தலின் - வரங்கள் பெற்றுள்ளமையா லும், மாயையின்-மாயையையுடைமையாலும், உரம் உடை தன்மை யால் - தேகபலத்தையுடைய தன்மையாலும், அரக்கன்-இராக்கத ராசனுன இராவணன், உலகுஏழைஉம்-ஏழுலகத்து உயிர்களையும், பரம் முருக்கிய-மிகுதியாக அழித்ததனுலான, பாவத்தினுல்-தீவினை யால், கரன்—, வலக்கரம் என கண்டம் உற்முன் - (கீழ்த் தனது) வலக்கை யறுபட்டாற்போல (இப்பொழுது தனது) கழுத்து அறு பட்டான்; (எ-று.)—அரோ-ஈற்றசை.

மிகப்பெரிய சேனைக்குத் தலைவனுய் அதிகபலபராக்கிரமசாலி யாய் இராவணனுக்குத் தம்பிமுறையாய் நின்ற கரன் அழிந்தது அவ்விராவணனது மிக்கவருத்தத்துக்கும் வலிமைக்குறைவுக்கும் காரணமாதலைக் கொண்டு, வரபலமாயாபலதேகபலங்களால் இரா

வணன் எல்லாவுலகத்தையும் நலிந்த தீவினையாற் கரன் அழிந்தா னென்றார். இனி, அரக்கனென்பது கரனையே யாக்கி யுரைப்பாரு முளர். கவி, சமத்காரத்தால், வேறுஉவமை தேடாது கண்டமற்ற தற்குக் கையற்றதையே உவமைகூறினார். வலக்கரமெனக் கரன் கண்டமுற்றானென்ற தொடர் - கரன் கண்டமுற்றது இராவண னுக்கு வலக்கை கண்டம் உற்றாற்போலு மென்ற பொருளையும் தரும். பி - ம்:—[1]அரக்கர். [2]வாய்மையின். [3]உறுத்திய.

கரன் எறிந்த பெருமரத்தை இராமன் துண்டமாக்கியபின் பெருஞ்சீற்றத்துடன் அவ்வரக்கனதுஉடலமெங்கும் ஆயிரக்கணக் கான கணைகளினாற்பொத்தினனாக, அவன் இராமனை எதிர்த்தோடி ஆயுதங்களை யெடுத்தெறியவும் பாணங்களைத்தொடுத்து விடவும் அவகாசமில்லாதபடி யணுகி வரவே, இராமன் தன் வில்லில் பாணத்தைத் தொடுத்து விடுதற்கும் அந்தக் கரனது உடலினின்று வெளிவரும் இரத்தம் தன்மீது தெறிக்காதிருத்தற்குமாகச் சிறிது காலைப் பின்வாங்கி அகஸ்தியர் மூலமாகத் தேவேந்திரன் கொடுத் திருந்த கணையைத் தொடுத்துவிட, அக்கணை அந்தக் கரன்மார்பில் பொத்துண்ண, இந்திரனது வச்சிராயுதத்தாலடியுண்ட விருத்திரா சுரன்போல் அந்தக் கரன் தரையில் வீழ்ந்திட்டான் என்று ஸ்ரீவான் மீகி கூறியுள்ளார். (552)

## 186.—தேவர்கள் மகிழ்ச்சியைக் காட்ட, ஸ்ரீராமன் விளக்கமுற்றிருத்தல்.

ஆர்த்தெ ழுந்தன ராடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர் வானவர் தூய்மலர்
தீர்த்த னும்பொலிந் தான்கதி ரோன்றிசை
போர்த்த மென்பனி போக்கிய [1]தென்னவே.

(இ-ள்.) (அப்பொழுது), வானவர்-தேவர்கள், ஆர்த்து எழுந் தனர்-ஆரவாரஞ்செய்து எழுந்து, ஆடினர் பாடினர்-கூத்தாடிப்பாடி, தூய் மலர் தூர்த்து அமைந்தனர் - பரிசுத்தமான கற்பகமலர்களை (இராமன்மேல்) நிறையச்சொரிந்து பொருந்தினார்கள்; தீர்த்தன்உம்- பரிசுத்தமூர்த்தியான இராமனும்,— திசை போர்த்த-எல்லாத்திக்குக் களையும் மறைத்த, மெல் பனி-மென்மையான பனியை, கதிரோன் - சூரியன், போக்கியது என்ன-நீக்கி விளங்கியமைபோல, பொலிந்தான் - (பகையழித்து) விளங்கினான்; (எ - று.)

சூரியன் கவிந்த பனியைப் போக்குதல்போல, இராமன் சூழ்ந்த அரக்கர்தொகுதியை எளிதில் விரைவில் அழித்தா னென்க. அமைந் தனர்-திருப்திப்பட்டார்க ளென்றுமாம். பி-ம்:—[1]போலவே. (553)

## 187.—முனிவர்சூழ, இராமன் சீதையுள்ள இடத்துச் சேர்தல்.

முனிவர் வந்து முறைமுறை மொய்ப்புற
இனிய சிந்தை யிராமனு மேகினான்
அனிக வெஞ்சமத் தாருயிர் போகத்தான்
தனியி ருந்த வுடலன்ன தையல்பால்.

(இ - ள்.) முனிவர்-இருடிகள்பலர், முறை முறை வந்து - மேன் மேல்வந்து, மொய்ப்புற-நெருங்கிச்சூழ,-இனிய சிந்தை இராமன்உம்-நல்ல திருவுள்ளத்தையுடைய ஸ்ரீராமனும், அனிகம் வெம் சமத்து-(அரக்கரின்) சேனைகளோடுசெய்யுங் கொடிய போரில், ஆர் உயிர் போக-(தனது) அரிய உயிர் நீங்கிச்செல்ல, தான் தனி இருந்த உடல் அன்ன தையல்பால்-தான் தனியேயிருந்த உடம்பை யொத்த சீதா தேவியினிடத்து, ஏகினன்-சென்றான்; (எ - று.)

இராமன் அரக்கரோடு போர்செய்தற்குப் பிரிந்துசெல்லத் தான் பர்ணசாலையில் தனியே யிருந்த சீதைக்கு, உயிர்போகத் தனித்திருந்த உடம்பை உவமை கூறினார்; இதனால், பிராணநாயகனான இராமபிரானிடம் ஜாநகிப்பிராட்டி வைத்திருந்த அன்புமிகுதி விளங்கும்: அன்றியும், இவ்வுவமை, பிராணநாயகனைப் பிரிந்ததுமுதல் சீதை 'இவனுக்கு என்னாகுமோ?' என்று கவலையாற் பொலிவிழந்திருந்தமையையும் புலப்படுத்தும். அனிகம் = அநீகம். (554)

## 188.—இலட்சுமணனும் சீதையும் ஆனந்தக்கண்ணீருடன் ஸ்ரீராமன் திருவடிகளில் வணங்குதல்.

**விண்ணி னீங்கிய [1]வெய்யவர் மேனியில்**
**புண்ணி னீரும் பொடிகளும் போயுக**
**அண்ணல் வீரனைத் தம்பியு மன்னமும்**
**கண்ணி னீரினிற் பாதங் கழுவினார்.**

(இ-ள்.) விண்ணில் நீங்கிய - (போரில் இறந்து) வீரசுவர்க்கம் போய்ச் சேர்ந்த, வெய்யவர்-கொடிய அரக்கர்களது, மேனியின் - உடம்பினின்று சொரிந்த, புண்ணின் நீர்உம்-இரத்தமும், பொடிகள் உம்-(அப்போர்க்களத்தேயுள்ள) தூசிகளும், போய்உக - நீங்கிவிடும் படி,—அண்ணல் வீரனை - பெருமையிற்சிறந்த வீரனான ஸ்ரீராமனை,— தம்பிஉம் அன்னம்உம்-இலக்குமணனும் சீதையும், கண்ணின் நீரினில் பாதம் கழுவினார் - (தங்கள்) கண்களின்நீரினால் திருவடிகளைக் கழுவினார்கள்; (எ - று.)

இராமன் மீண்டுவருகையில் லக்ஷ்மணனும் சீதையும் அப்பிரானது திருவடிகளில் விழுந்து வணங்கும்பொழுது அவர்கள் கண்களினின்று பெருகிய ஆனந்தக்கண்ணீர் அத்திருவடிகளில் வழிந்தமை, அரக்கரது இரத்தமும் போர்க்களப்புழுதியும் அத்திருவடிகளிற் பட்டிருந்தவற்றை நீர்கொண்டு கழுவுதல்போலுமென்றவாறு: தற்குறிப்பேற்றவணி. நீர் கொண்டுபாதங்கழுவுதல் - பாத்தியஞ்சமர்ப்பித்தல். அன்னம்-உவமவாகுபெயராம். பி-ம்:—[1]வெய்யவன். (555)

## 189.—வானவரேத்த இராமபிரான் வீற்றிருத்தல்.

**மூத்த மொன்றின் முடிந்தவர் [1]மொய்புணீர்**
**நீத்த மோடி நெடுந்திசை நேருறக்**
**கோத்த வேலைக் குரலென வானவர்**
**ஏத்த வீர னினிதிருந் தானரோ.**

(இ - ள்.) மூத்தம் ஒன்றில் - ஒருமுகூர்த்தகாலத்திலே, முடிந்தவர்-இறந்த அந்த அரக்கர்களது, மொய் புண் நீர் நீத்தம்-மிக்க இரத்தவெள்ளம், ஓடி—, நெடு திசை நேர் உற-நீண்ட திக்குக்களினெல்லையிற் சேர்ந்திட,—வீரன்-ஸ்ரீராமன், கோத்த வேலை குரல் என வானவர் ஏத்த-கோத்தாற்போன்ற [அலைகள் ஒழுங்குபடப்பெற்ற] கடலினது முழக்கம்போலத் தேவர்கள் துதிசெய்து ஆரவாரிக்க, இனிது இருந்தான்-இனிமையாக இருந்தான்; (எ - று.)

தேவர்கள் துதித்தலா லெழுமொலி கடலொலித்தல்போலு மென்க. வானவரேத்தொலிக்கு, முடிந்த அரக்கரின்புண்ணீர்நீத்தம் ஓடிக்கோத்த வேலையின்குரலை உவமைகூறினுரென்றலும் ஒன்று. மூத்தம் = முஹூர்த்தம்: அது-இரண்டு நாழிகைப்பொழுது. அரோ-ஈற்றசை. பி - ம்:—[1]மொய்ம். (556)

## 190.—சூர்ப்பணகை கரனுடலைத் தழுவிப் புரளுதல்.

இங்கு நின்ற துரைத்து மிராவணன்
தங்கை தன்கை வயிறு தகர்த்தனள்
கங்கு லன்ன கரனைத் தழீஇநெடும்
பொங்கு வெங்குரு திப்புரண் டாளரோ.

(இ - ள்.)—இங்கு - இவ்விடத்தில், நின்றது - (சொல்லாமல்) மிச்சமாய் நின்ற செய்தியை, உரைத்தும்-இனிச்சொல்வோம்: இராவணன் தங்கை-சூர்ப்பணகை, தன் கை வயிறு தகர்த்தனள்-தனது கைகளால் வயிற்றில் அடித்துக்கொண்டு, கங்குல் அன்ன கரனை தழீஇ-(நிறத்தால்) இருளையொத்த கரனைத் தழுவி, நெடு பொங்கு வெம் குருதி புரண்டாள்-நெடுந்தூரம்பரந்த மிக்கெழுகிற வெவ்விய இரத்தவெள்ளத்திலே விழுந்து புரண்டாள்; (எ - று.)

'இங்குநின்றதுரைத்தும்' என்றது, கவிக்கூற்று. இங்குக் கரன் என்றது, அவனது உயிர்நீத்த உடலை. கீழ் இராமபிரான் செய்தியைக் கூறியதனால், இங்கு என்றது-அரக்கரிடத்தைக் குறித்தது. அரோ-ஈற்றசை. (557)

## 191.—சூர்ப்பணகை புலம்பிப்போதல்.

ஆக்கி னேன்மனத் தாசையவ் வாசையென்
மூக்கி னேடு முடிய முடிந்திலேன்
வாக்கி னுலுங்கள் வாழ்வையு நாளையும்
போக்கி னேன்கொடி யேனென்று போயினுள்.

(இ - ள்.) 'மனத்து-(என்) மனத்திலே, ஆசை ஆக்கினேன்-(இராமன் விஷயமான) காதலை விளைத்தேன்; அ ஆசை - அந்த ஆசை, என் மூக்கினேடு முடிய-எனது மூக்கறுபட்டமாத்திரத்தோடு ஒழிய, முடிந்திலேன்-(அவ்வளவில்) இறந்திடாத நான், வாக்கினுல்-(எனது) வாய்மொழியால், உங்கள் வாழ்வைஉம் நாளைஉம் போக்கினேன்-உங்களுடைய வாழ்க்கையையும் ஆயுள்நாளையும் ஒழித்தேன்; கொடியேன் - (ஆதலின்) மிகவுங்கொடுமையுடையேன்,' என்று - என்றுசொல்லிக்கொண்டு, போயினுள்-சென்றுள்; (எ - று.)

'நான் இராமலக்குமணரிடம் ஆசைவைத்தேன்: அந்த ஆசை என்னுடைய மூக்கு ஆகியவற்றைப் போக்கிற்று: அதனால், நாண முற்று என்னுயிரைப் போக்கிக்கொள்ள வேண்டியதாக இருக்க, அங்ஙன் இறந்திடாமல், 'எமர்காள்! இராமலக்குமணருயிரைப் போக்குங்கள்' என்று உங்களையேவி, உங்கள் செல்வவாழ்க்கையையும் உயிர்வாழ்க்கையையும் ஒழிக்கக் காரணமானேன்: ஆகையால், யான் கொடியேன்' என்று தன்னை நொந்தவண்ணம் சூர்ப்பணகை செல்லலானா ளென்பதாம். (558)

## 192.—சூர்ப்பணகை விரைவில் இலங்கைசேர்தல்.

அலங்கல் வேற்கை யரக்கரை யாசறக்
குலங்கள் வேரறுப் பான்[1] குறித் தாளுயிர்
[2] கலங்கு சூறைவன் போர்நெடுங் காலென
இலங்கை மாநகர் நொய்திற்சென் றெய்தினாள்.

(இ - ள்.)—அலங்கல் வேல் கை அரக்கரை -வெற்றி மாலையைத் தரித்த வேற்படையை யேந்திய கையையுடைய (இலங்கைநகரத்து) அரக்கர்களையும், குலங்கள் ஆசு அற வேர் அறுப்பான்-குலங்கள் அடியோடு ஒழியுமாறு வேரறுக்கும்பொருட்டு, குறித்தாள்-எண்ணினவளாய்,—(சூர்ப்பணகை),—உயிர் கலங்கு வல் போர் சூறை கால் என-(உலகத்து) உயிர்கள் கலங்கியழிதற்குக் காரணமான வலிய தாக்குதலைச்செய்கின்ற சுழல் பெருங்காற்றுப்போல, நொய்தின் சென்று இலங்கை மா நகர் எய்தினாள்-விரைவிற்சென்று பெரிய இலங்காபுரியை யடைந்தாள்;) (எ - று.)

சூர்ப்பணகை இலங்கைக்குப் போய்ச் சீதையைத் தான் கவரத் தொடங்கியதுமுதல் கரன்முதலியோர் சேனையோடும் மாண்டமை யீறான செய்தியைக் கூறுதல்—உடனே இராவணன் எழுந்துவந்து சீதையை யெடுத்துப் போதற்கும், அது இராவணாதி ராக்கத நாசத்துக்குங் காரணமாகுதல்பற்றி, இவள்சென்று செய்தி கூறக் கருதுதலை மற்றை யரக்கரையும் அடியோடு அழிக்கக் கருதியதாக வருணனை வகையாற் கற்பித்து 'அரக்கரை யாசறக் குலங்கள் வேரறுப்பான் குறித்தாள்' என்றார்: தற்குறிப்பேற்றவணி. பிம்:—[1] குறித்தாழ்கடல். [2] கலங்குறைத்தெழுகாலெனக்காலிற்போய், கலங்குறைத்தனபோனெடுங்காலென. (559)

இப்படலத்து வெளியாகும் பொருள்கள்:—

பெரியகொடும்பகைவர் எத்தனைபேர் ஒருங்கே பற்பலபோர்க் கருவிகளுடன்வந்து எதிர்ப்பினும் அவர்களையெல்லாம் ஒரு பொருள் செய்யாமல் மிகஇலேசாக எண்ணி ஒருதுணைவேண்டாமல் தாமே யெதிர்த்துச்சென்று பொருது எளிதில் விரைவிற் கொன்று வென்றொழிக்கும் பேராற்றலையுடைய மகாவீரன் இராமபிரா னென்பதும், தண்டகாரணியவாசிகளான முனிவர்களுக்கு அபயமளித்து வாக்குத்தத்தஞ் செய்த இராக்கத சங்காரத்தை நிறைவேற்றுதலில் இராமபிரான் கொண்ட பேரூக்கமும், வினைவலியும் தன்வலியும் மாற்றான்வலியும் துணைவலியும் சீர்

தூக்கிப்பாராது மானத்தையே முக்கியமாகக்கொண்டு பகையை அலட்சியஞ்செய்து எதிர்த்தவர் எதிரியால் நாகத்தின் முன் எலிக் குழாம்போல எளிதில் அழிவ ரென்பதும், தாமாகச் சிறிதும் ஆராய்த லின்றிப் பெண்பாலார்சொல்லைக் கேட்டு நடத்தல் பெருங்கேடுதரு மென்பதும், "உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா, உடன்பிறந்தே கொல்லும் வியாதி" என்றவாறு காலம் கொடியதா யிருக்கையில் உடன்பிறந்த உறவினரே கொடுந்தீங்குக்குக் காரண மாவ ரென்பதும், விதி கொடியதாயிருக்கையில் அதற்கு அறிகுறி யாகத் தீநிமித்தமும் பாராட்டப்படாது செருக்கே மிக்கிருக்கு மென்ப தும், துணைவீரராயிருப்பார் தமது தலைவனுக்கு முன்னே தாம் பகையை எதிர்த்துச்செல்லுங்கடமையைச் செலுத்தற்கு உரியவராவ ரென்பதும், எத்துணை வல்லார்க்கும் ஒருசமயத்தில் சிறிது இடை யூறு உண்டாவது உலகவியல்பே யெனபதும், அங்ஙனம் உண்டாகும் இடையூற்றுக்கு அறிவுடையார் சிறிதும் மனங்கலங்கா ரென்பதும், அங்ஙனம் மனங்கலங்காதார்க்குத் தெய்வகதியால் உடனே நன்மை நேரு மென்பதும் முதலியன.

கரன் முதலியோரின் முற்பிறப்பு:—யாஜ்ஞவல்கியருடைய குமாரர் களும் லோகப்பிரசித்திபெற்றவருமாகிய சந்திரகாந்தன் மகாமேதன் விஜயன் என்ற மூன்று பிராமணசிரேஷ்டர்களும் அவர்களுடைய சிஷ்யர்கள் பதினாலாயிரவரும் சிவசாபத்தால் கரன் தூஷணன் திரிசிரன் முதலிய அரக்கர்களாகப்பிறந்து இராமனாகிய திருமாலாற் கொல்லப்பட்டுச் சாபவிமோசன மடைந்தன ரென்று வேறு சில பழைய நூல்களால் தெரிகிறது.

இப்படலத்துக்குப் பயன்:—ஸ்ரீராமபிரான் கரன் முதலியோரை வென்ற வரலாற்றைக் கேட்பவர் அவ்விராமனருளால் தீவினையி னின்று நீங்குவார்கள்; குலத்தை விருத்திசெய்து புகழை வளர்க்கத் தக்க புதல்வரைப் பெறுவார்கள்; அவர்கட்குச் சிறைத்துன்பமும் கடன்தொல்லையும் ஒழியும் என்று ஸ்காந்தபுராணத்திற் சொல்லப் பட்டிருக்கிறது.

கரன்வதைப்படலம் முற்றிற்று.

---

# 7 - ஆவது மாரீசன்வதைப்படலம்.

மாரீசனது வதையைப்பற்றிக் கூறும் பாகமென்று பொருள். மாரீசன்-மிக்கமாயையில்வல்ல ஓரரக்கன்; சர்ச்சரனென்னும் யட்ச னது புத்திரனை சுகேதுவின் மகளாகிய தாடகைக்கும், சுந்தனென்ற இயக்கர்தலைவனுக்கும் குமாரன்; சுபாகுவின் உடன் பிறந்தவன். சிலபிரதிகளில் முதல் 169 - செய்யுள்கள் *சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம் என்றும், அதற்குப்பிறகு மாரீசன்வதைப்படலம் என்றும் காண்கின்றன.

---

* சூர்ப்பநகி சூட்சிப் படலம் என்று பிரதிபேதம்.

இந்த மாரீசனது தந்தையான சுந்தன் செருக்கினால் அகஸ்திய முனிவனது ஆச்சிரமஞ் சேர்ந்து அவன்மேல் மரங்களை வீசி மற்றும் பலவாறு தீங்குசெய்து, அம்முனிவனுடைய கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானான். பின்பு தாயான தாடகை சுபாகுமாரீசர் என்ற தன் மைந்தரிருவருடன் அம்முனிவனை யெதிர்க்கவே, அவனது சாபத்தால் மூவரும் அரக்கராயினர். பின்னர் சுபாகுமாரீசர் தாடகையுடன் இராவணனது தாயின் தந்தையான சுமாலியென்ற பழைய அரக்கனை யடுத்து 'உனக்கு நாங்கள் மக்கள் முறையாவோம்' என்று உறவுபூண்டு அதனால் இராவணனோடு மாமன்முறைமைபெற்று முனிவர்களுக்குத் தீங்குசெய்து திரிந்துகொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில் விசுவாமித்திரமுனிவன் தனதுயாகத்தைப் பாதுகாத்தற்பொருட்டுத் தசரதசக்கரவர்த்தியினிடமிருந்து ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அழைத்துச் செல்லும் வழியிடையே தாடகை வந்து எதிர்த்து இராமனாற்கொல்லப்பட்டு இறந்தபின், விசுவாமித்திரன் தொடங்கிய யாகத்தைச் சுபாகுமாரீசர்கள் மற்றும் பலஅரக்கருடன் வந்து அழிக்கத் தொடங்கினர்: அப்பொழுது, இராமபிரான், பல அம்புகளால் அரக்கரைக்கொன்று ஓரஸ்திரத்தால் சுபாகுவை வதைத்து மற்றோரஸ்திரத்தால் மாரீசனைக் கடலிலே தள்ளிவிட்டான். இங்ஙனம் தப்பிப்பிழைத்த இவன் சிலகாலம் கடற்கரையில் தவஞ்செய்து கொண்டிருந்து பின்பு இராமன் தண்டகாரணியம் புகுந்தபொழுது பழையவைரத்தால் வேறுஇரண்டு அரக்கருடன் மான்வேடம் பூண்டு இராமனைத் தன்கொம்புகளால் முட்டிக்கொல்லக் கருதி நெருங்கினான்; நெருங்குகையில், இராமனெய்த அம்புகளால் கூட வந்த அரக்கர் இறக்க, இந்த மாரீசன் தான்மாத்திரம் தப்பியோடி யுய்ந்து இலங்கை சேர்ந்து தவவேடம் பூண்டிருந்தான்.

சூர்ப்பணகையால் இராமலட்சுமணரிடத்துப் பெருஞ்சினமும் சீதாதேவியினிடத்துப் பெருங்காதலும் மூட்டப்பட்ட இராவணன் தான் சீதையை வஞ்சனையாகக் கவர்ந்துவருதற்குத் துணையாக வரவேண்டுமென்று அந்தமாரீசனை வேண்டினான். இராமனாற்றலை இருமுறையுணர்ந்த இவன் பலவாறுதடுத்தான். தடுத்தும் அவன் கேளாமல் மிக்ககோபங்கொண்டான். அதற்கு அஞ்சி மாரீசன் மாயையாற் பொன்மானுருவங்கொண்டு சீதையினெதிற் சென்று உலாவ, அச்சீதை அதனைப் பிடித்துத்தரும்படி இராமனை வேண்டினாள். இலக்குமணன் 'இது பொய்ம்மான்' என்று உண்மை கூறித் தடுக்கவும், கேளாமல் மீண்டும் பிராட்டி நிர்ப்பந்திக்கவே, இராமன் அதனைப் பிடித்தற்குத் தொடர்ந்துசென்றான். அப்போது அது அவன் கையிலகப்படாமல் ஓட்டங்காட்டி அவனை நெடுந்தூரங் கொண்டுவந்து விட்டது. அப்போது இராமன் அதனை மாயமானென்று துணிந்து அதன்மேல் அம்பெய்ய, மாரீசன் அம்பு பட்டதும் தன் மெய்வடிவங்கொண்டு 'ஹா ஸீதா! லக்ஷ்மணா!' என்று இராமன்குரலாற் சத்தமிட்டு விழுந்து இறந்தான். இராமபிரான் தனது குரல்போல இவன் கூறிய சொற்களைக் கேட்டலால் சானகி வருந்துவளாதலின் யாதுநேருமோ என்று கவலைப்பட்டுக்கொண்டே

சிறிதுந் தாமதியாமல் விரைவாக மீண்டுவருவானாயின னென்பது, இப்படலத்தின் கதைச்சுருக்கம்.

## 1.—கவிக்கூற்று: இராவணன் கொலுவீற்றிருக்கும் நிலையை வருணிப்போமெனல்.

[1] இரைக்குநெடுங் கடலரக்க ரிறந்ததனை மறந்தனள்[2]போ ரிராமன் றுங்க, வரைப்புயத்தி னிடைக்கிடந்த பேராசை மனங்கவற்ற வாற்ரு ளாகித், திரைப்பரவைப் பேரகழித் திண்ணகரிற் கடிதோடிச் சீதை தன்மை, உரைப்பெனெனச் சூர்ப்பணகை வரவிருந்தா னிருந்தபரி சுரைத்து மன்னே.

(இ - ள்.) சூர்ப்பணகை—,—இரைக்கும் நெடுங் கடல் அரக்கர் இறந்ததனை மறந்தனள்-ஆரவாரஞ்செய்கிற பெரியகடல்போற் பரந்த (கரன் முதலிய) இராக்கதர்கள் இறந்தொழிந்த செய்தியை மறந்தாளாகி, போர் இராமன் துங்கம் வரை புயத்தினிடை கிடந்த பேர் ஆசை மனம் கவற்ற - போரில்வல்ல இராமனது உயர்ந்த மலைகள் போன்ற தோள்களினிடத்து(த் தான் கொண்ட) மிக்க ஆசை (தன்) மனத்தை வருத்துதலால், ஆற்ருள் ஆகி - (அத்துன்பத்தைப்) பொருதவளாய்,—திரை பரவை பேர் அகழி - அலைகளையுடைய கடலையே பெரிய அகழியாகவுடைய, திண் நகரில் - வலிய இலங்கையில், கடிது ஓடி - விரைவாக ஓடிச்சென்று சேர்ந்து, சீதை தன்மை உரைப்பென் என - சீதையினதுவடிவழகினியல்பை (இராவணனுக்குக்) கூறுவேனென்று கருதி, வர-வருகையில், இருந்தான் இருந்த பரிசு - அங்குள்ளவனான இராவணன் (சபையில்) வீற்றிருந்த நிலைமையை, உரைத்தும் - சொல்வோம்; (எ - று.)—அதனை அடுத்த 22 - கவிகளிற் காண்க. மன் ஓ - ஈற்றசைகள்.

உடன்பிறந்த முறையில்நின்ற கரன்முதலிய வலியபெரிய அரக்கர் பலர் ஒருங்குஇறக்கவும் அதனாலாகியசோகம் மேலிடாமல் இராமனழகில் தான் ஈடுபட்டதனாலான வேட்கைநோயே விஞ்சி அக்காமவேதனைமிகுதியைப் பொறுக்கமாட்டாமல், அவனைச் சேர்தற்கு யாது உபாயஞ் செய்யலாமென்ற கவலையையே கொண்டு தன்னை அவன் உபேட்சித்துப் பரிபவப்படுத்தியதையும் மறந்து 'ஒப்புயர் வில்லாத சௌந்தரியமுடைய சீதை உடனிருத்தலால் அவளுள்ளவளவும் என்னை இவன் விரும்பாறுதலின், எங்ஙனமேனும் அவளை அவனைவிட்டு அகற்றிவிடின் பின்பு இவன் என்னை மணக்கக்கூடும்' என்னும் எண்ணங் கொண்டிருந்தனள் சூர்ப்பணகை யென்பதை முன்னிரண்டடிகளில் விளக்கினார். அங்ஙனம் எண்ணிய சூர்ப்பணகை இலங்கை நோக்கி நடந்தாள்: அப்போது இராவணன் அரசுவீற்றிருந்தான்; அக்காட்சியை இனிக் கூறுவோமென்கிறார். ரரண் நிலவரண் மலையரண் காட்டரண்என இயற்கையுஞ் செயற்கையுமான நால்வகையரண்களுள் எப்பொழுதும் வற்றுதலீரையுடைய பெரிய கடலை கடத்தற்கு அரிய நீரரணாக இலங்கைக்கு இயல்பில் வாய்ந்துள்ள காவற்சிறப்பை விளக்குவார், 'திரைப்பரவைப் பேரகழித் திண்ணகர்' என்றார்: திண் என்ற அடைமொழி, மலையரண் மதிலரண் சேனைக்காவல்

முதலியவையும் அங்கர்க்கு வலியனவாய் அமைந்துள்ள சிறப்பைத் தெரிவிக்கும்.

இனி, [1] இரைக்குநெடும் பணையரக்கர் என்ற பாடத்திற்கு - வீர வாதஞ்செய்கிற உயர்ந்துபருத்த அரக்க ரென்னலாம். தோளுக்கு மலையுவமை - உயர்ந்த பெரிய தோற்றத்துக்கும், ஆயுதங்களால் அழித்தற்கு அரிய வலிமைக்கும். பி-ம்:—[1] இரைத்த, இறைத்த. [2] போல்.

இதுமுதல் ஐந்து கவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (560)

## 2-—இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - குளகம்: இராவணன் அரசுவீற்றிருத்தற் சிறப்பைக் கூறும்.

நிலையிலா வுலகினிடை [1] நிற்பனவு நடப்பனவு நெறியி னீந்த, மலரின்மே ஞன்முகற்கும் வகுப்[2]பரிது [3] நுனிப்பதொரு வரம்[4]பி லாற்றல், உலைவிலா வகை[5]யுழந்த தருமமென [6] நினைந்தவெலா முதவுந் தச்சன், புலனெலாந் [7] தெரிப்பதொரு புனைமணி[8]மண் டபமதனிற் பொலிய மன்னோ.

(இ - ள்.) நிலை இலா - நிலையில்லாததான, உலகினிடை - உலகத்தில், நிற்பனஉம்-(இடம்விட்டுப் பெயராது) நிலைநிற்பனவான தாவரப்பொருள்களையும், நடப்பனஉம் - (இடம்விட்டுப்) பெயர்வன வான ஜங்கமப்பொருள்களையும், நெறியின் ஈந்த-ஒழுங்காகப்படைத்த, மலரின்மேல் நான்முகற்குஉம் - (திருமாலினது) திருநாபித்தாமரை மலரின்மேலுள்ள பிரமனுக்கும், வகுப்பு அரிது - படைக்கமுடியாத தும்,—நுனிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல்-நுட்பமாக அறிகிற ஒப்பில்லாத அளவற்ற வல்லமையால், உலைவு இலா வகை உழந்த தருமம் என-(தனக்கும் பிறர்க்கும்) தீங்கில்லாத விதத்திலே முயன்று செய்த தருமம் போல, நினைந்த எலாம் உதவும் - நினைத்த பொருள் களை யெல்லாம் நினைத்தபடியே உண்டாக்கவல்ல, தச்சன் - (விசுவகர் மாவென்னும்) தெய்வத் தச்சனது, புலன் எலாம் - சிற்பநூலறிவு முழுவதையும், தெரிப்பது-காட்டுவதுமான, ஒரு-ஒப்பற்ற, புனை மணி மண்டபமதனில் - அழகிய இரத்தினங்களாற் செய்யப்பட்ட சபா மண்டபத்திலே,—பொலிய - (அம்மண்டபம் தான் வீற்றிருத்தலால்) அழகுபெறும்படி,—(எ - று.)—இக் கவியில் 'மண்டபமதனில்,' 'பொலிய' என்றவையும் அடுத்த இருபது கவிகளில் வரும் வினையெச் சங்களும் இருபத்துமூன்றாங் கவியில் வருகிற 'இருந்தனன்' என்ற வினைமுற்றைக்கொண்டு முடியும்.

நான்முகற்கும் வகுப்பரிது, தச்சன்புலனெலாந் தெரிப்பது என்ற இரண்டும் மண்டபத்துக்கு அடைமொழி. உலகங்களையும் அவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் படைத்த பிரமனு லும் இப்படிப்பட்டதொரு மண்டபத்தைப் படைக்கமுடியாதென் றும், முறைபிறழாது செய்யப்பட்ட அறம் வேண்டியபயன்களை

வேண்டியபடியே தருவதுபோலத் தனது படைத்தல்தொழிலாற்ற லால் வேண்டியபொருள்களை வேண்டியபடியே படைக்கவல்ல விசுவ கர்மாவினது சிற்பநூல்தேர்ச்சியைத் தெரிவிக்கும்படி மிகவும் அற் புதமான வேலைத்திறம் அமைந்ததென்றுங் கூறி, மண்டபத்தின் மாட்சிமையை வெளியிட்டபடி. 'தச்சன் புலனெலாந் தெரிப்பது' என்பதற்கு - விசுவகர்மன் தனது புத்திவிசேஷங்களையெல்லாங் காட்டுமாறு செய்ததென்று உரைத்தலு மொன்று. தச்சன் என்பதற்கு-அசுரத்தச்சனாகிய மய னென்று உரைப்பாருமுளர்; அது பொருந்தாது: ஏனெனில்,—சுகேசனென்னும் அரக்கனது புத்திரர்க ளான சுமாலி முதலிய மூவர் பிரமனிடம் வரம்பெற்றபின் தேவசிற்பி யான விசுவகர்மனை யழைத்து 'எங்களுக்கு ஓரிருப்பிடம் சிறப்பாக அமைக்கவேண்டும்' என்ன, அவன் 'தென்கடலில் திரிகூடமலைச் சார்பில் சுவேலமலையின் சிகரமொன்றில் நிருமிக்கப்பட்ட இலங்கை யையே உங்களுக்கு இடமாகக் கொள்ளுங்கள்' என்று சொல்ல, அங்ஙனமே அவர்கள் இலங்கையில் வசித்தன ரென்றும், பிற்காலத் தில் அதுவே குபேரனுக்கும் அதன்பின் இராவணாதியர்க்கும் 'இட மாயிற் றென்றும் உத்தரஸ்ரீராமாயணம் கூறுகின்றமை காண்க. மிகச்சிறந்த அம்மண்டபத்தில் வீற்றிருத்தலால் இராவணனுக்கு உண்டாகிற பொலிவோடு, இராவணன் வீற்றிருத்தலால் அம்மண்ட பத்துக்கு உண்டாகிற பொலிவும், 'புனைமணி மண்டபதனிற் பொலிய' என்ற தொடராற் பெறப்படும்.

நிற்பன-அசரம்; மரம் மலை முதலியன. நடப்பன-சரம்: தேவர் மனிதர் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன என்பன. அடை மொழிகொடாது மலரெனக்கூறி, அதனால், மலர்களுட் சிறந்த தாமரையைக்குறித்தல், கவிமரபு. நுனிப்பது என்பது - ஆற்ற லுக்கு அடைமொழி; நுனித்தல்-அதிசூட்சுமமாக அறிதல். ஆற்ற (லா)ல் என்பது 'உதவும்' என்ற பெயரெச்சத்தோடு இயையும். உலைவிலாவகையுழந்த தருமம்-தம்தமது வருணாச்சிரமங்களுக்கு ஏற்பச் செய்த அற மென்க. தருமம்-இம்மை மறுமை வீடென்னும் மூன்றையுந் தருவ தாதலை, "சிறப்பீனுஞ் செல்வமுமீனுமறத்தினூஉ ங்கு, ஆக்க மெவனோ வுயிர்க்கு', என்ற திருக்குறளினாலும் அறிக. நினைந்த-பெயர்; பெயரெச்சமுமாம். பி - ம்:—[1] நின்றனவுந்திரிந் தனவும். [2] அரிய. [3] நுனிப்பதரு. [4] இலாத. [5] இழைத்த. [6] நினைந்தது. [7] தெரிந்தது. [8] மண்டபத்தினிழற். (561)

3. [1]வண்டலங்கு நுதற்றிசைய வயக்களிற்றின் மருப்பொடிய வடர்த்த பொற்றோள், விண்டலங்க ளூறவீங்கி யோங்குதய மால்வரை யின் விளங்க மீதில், குண்டலங்கள் குலவரையை வலம்வருவா னிரவி[2]கொழுங் கதிர்சூழ் கற்றை, மண்டலங்கள் பன்னிரண்டு நாலை ந்தாய்ப் [3]பொலிந்தவென வயங்க மன்னோ.

(இ- ள்.)—வண்டு அலங்கு நுதல்-வண்டு மொய்க்கின்ற நெற்றி யைக்கொண்டனவும், திசைய - திக்குக்களிலுள்ளனவுமான, வய களிற்றின்-வலிய (திக்கு) யானைகளின், மருப்புஒடிய-தந்தங்களும் முறியும்படி, அடர்த்த-வலிமையோடுதாக்கிய, பொன்தோள்-அழகிய

தோள்கள், விண் தலங்கள் உற வீங்கி-ஆகாயத்தினிடங்களையளாவும்படி பருத்து (உயர்ந்து), ஓங்கு மால் உதயம் வரையின்-உயர்ந்த பெரிய உதயபருவதம்போல, விளங்க-பிரகாசிக்கவும்,—மீதில் குண்டலங்கள்-அத்தோள்களின்மேல் (தொங்குகிற காதின்) குண்டலங்கள் (இருபதும்), கொழு கதிர் கற்றை சூழ்-செழுமையான கிரணங்களின் தொகுதி சூழப்பெற்ற, இரவி மண்டலங்கள் பன்னிரண்டுஉம்-சூரியமண்டலங்கள் பன்னிரண்டும், குலம் வரையை வலம் வருவான்-(எல்லாமலைகளினுஞ்) சிறந்ததான மேருவைச் சூழ, நால் ஐந்து ஆய் பொலிந்த என - இருபதாய் விளங்கியனபோல, வயங்க-பிரகாசிக்கவும்,—(எ - று.)

ஒவ்வொருதோளும் உதயபருவதம்போல விளங்க என்பது, முன்னிரண்டு அடியின் பொருள்; உவமையணி. பின்னிரண்டு அடிகளில் இராவணனது நெடியபெரியவடிவத்துக்கு மகாமேருகிரியையும், அவனது குண்டலங்களுக்குச் சூரியமண்டலங்களையும் உவமை கூறுபவராய், துவாதசாதித்தர் [பன்னிருவர்சூரியர்] இருபது வடிவங்கொண்டு மேருமலையைச் சூழ்தற்பொருட்டு நின்றாற்போலும் என வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி.

இராவணன் திக்குவிசயஞ்செய்த காலத்தில் ஐராவதம் முதலிய திக்கஜங்களை யெதிர்த்தபொழுது அவை சினங்கொண்டு இவன் தோளில் தந்தங்களால் தாக்குகையில் மிக்கவலிமையுடைய இவன் தோள்களை ஊறுபடுத்தமாட்டாமல் அவை நுனி ஒடிந்திட்டன வென்றும், பின்பு இராவணனும் போரில் அவற்றின் தந்தங்களை நன்றாக ஒடித்திட்டா னென்றும் உணர்க. கன்னத்தினின்று பெருகிய மதநீரைப்பருகுமாறு வண்டுகள் களிற்றின்நுதலில் அசைந்து மொய்க்குமென்க. திசைக்களிறு-ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன; இவற்றைக்கிழக்கு முதலாக முறையேகொள்க. இவை ஆண்யானைகளாதலால், களிறெனப்பட்டன. 'விண்டலங்களுற வீங்கி' என்றதன் குறிப்பால், அவன் தோள்வலிமையால் இந்திரன் முதலியவிண்ணுலகத்தவரை வென்ற சிறப்பும் தோன்றும்.

துவாதசாதித்தர்-தாதா, இந்திரன், அரியமா, மித்திரன், வருணன், அம்சுமான், பர்ஜந்யன், பகன், விவஸ்வாந், பூஷா, விஷ்ணு, துவஷ்டாஎனக் காண்க; இதற்கு வெவ்வேறுவகைகூறலுமுண்டு: ஒவ்வொருமாதத்துக்கு ஒவ்வொருவராகச் சூரியர் பன்னிருவராவர். குலவரையை வலம்வருவான் இரவி எனப்பிரித்து, மேருமலையை வலம்படச் சூழ்கிற வானத்திற் சஞ்சரிக்குஞ் சூரியனெனினும் அமையும். சந்திரனும் அக்கினியுமாகிய மற்றைச் சுடர்களுக்குக் கொடுத்துவாங்குந் தன்மையனவாய் நெடுந்தூரத்தும் மிக விளங்கும் ஆயிரங்கிரணமாதலால், 'கொழுங்கதிர்க்கற்றை' எனப்பட்டன.

உதயவரை - சூரியன் முதலிய சுடர்கள் உதிக்கும் மலை. பொற்றோள் என்பதற்கு - பொன்னணியணிந்த தோளென்றும் பொருள்

கொள்ளலாம்; பொன் - கருவியாகுபெயர். உதயமலையை யெடுத்துக் கூறினது, உதயகாலத்தில் விளங்கும் அம்மலை, இயற்கையாலும் அணிகலமணிதலாகிய செயற்கையாலும் ஒளிபெற்ற தோளுக்கு ஒப்பாகுதலால். இராவணனுக்கு முகம் பத்து ஆதலால் குண்டலம் இருபதாயின. பி - ம்:—[1]பண்டலங்கு திசைக்களிற்றின் பணைமருப் பிணிணையொடியப்படர்ந்த, பண்டலங்கள்...படர்ந்த. [2]கொடுங். [3]பொலிந்ததெனை. சிலபிரதிகளில் இந்தச்செய்யுள் "வாளுலா" (5) என்ற பாடலின்பின் காணப்படுகின்றது. (562)

4. புலியினதளுடையானும் பொன்னுடை புனைந்தானும் பூவி னானும், நலியும்வலத் தாரல்லர் தேவரினிங் கியாவரினி நாட்ட லாவார், மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றி மாதர், வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க மன்னோ.

(இ - ள்.) தேவரின் - தேவர்களுள், புலியின் அதள் உடையான்உம் - புலியின் தோலை உடுக்கும் ஆடையாகவுடைய சிவபிரானும், பொன் ஆடை புனைந்தான்உம் - பொன்மயமான பீதாம்பரத்தைத் தரித்த திருமாலும், பூவினான்உம் - தாமரைமலரில்தோன்றிய பிரமனும், நலியும் வலத்தார் அல்லர் - (இராவணனை) வருந்தச் செய்யும் வலிமையுடையவரல்லர்: (என்றால்), இங்கு-இவ்வுலகத்தில், இனி யாவர் நாட்டல் ஆவார் - வேறுஎவர் (இராவணனை வெல்பவராகக்) குறித்தற்குஉரியவர்? [எவருமில்லை யென்றபடி]; (இங்ஙனம் எவரும் அவனை வணங்கச்செய்பவர் இல்லாததனால்), - மெலியும் இடை - மெல்லியதாய் ஒசிகிற இடையையும், தடிக்கும் முலை - மேன்மேற் பூரிக்கிற தனங்களையும், வேய் இள தோள் - இளமூங்கில் போன்ற இளமைவிளங்குந் தோள்களையும், சேய் அரி கண் - சிவந்த (உத்தம லட்சணமான) ரேகைகளையுடைய கண்களையும், வென்றி - (யாவரையும்) வெல்லுந்தன்மையையுமுடைய, மாதர் - மகளிரது, வலிய நெடு புலவியின்உம் - தணித்தற்குஅரிய நீண்ட ஊடலிலும், வணங்காத - தாழாத, மகுடம் நிரை - கிரீடங்களின் வரிசை, வயங்க - விளங்கவும்,—(எ-று.)

இராவணன் வணங்காமுடியனென்பதை விளக்குதற்கு ஏற்ற காரணங்காட்டுவார், முன்னிரண்டடியில் திரிமூர்த்திகளும் அவனை வெல்லும் ஆற்றலிலராதலின் வேறெவரும் வெல்வாரில்லை யெனக் கூறினார். மிகவல்லவரான திரிமூர்த்திகளும் அவனை வெல்லமாட்டாமைக்குக் காரணம், அவனது வரபலம்; ஆனது பற்றியே, திருமாலும் மனிதனாகப்பிறந்தே அவனை வெல்ல வேண்டிற்று. அவனது வணங்காமுடியனாந்தன்மையி னுறுதியை விளக்குதற்கு, மகளிர் நெடும்பொழுது ஊடியகாலத்தில் அதனைத் தணித்தற்கும் இவன் வணங்கானென்று பின்னிரண்டடிகளிற் குறித்தார். ஆகவே, பிணங்கிய மகளிரும் இவனதுபெருமைக்கு அஞ்சி இவன் சொல்லுக்கு இணங்குவரே யன்றி இவன் தம்மை வணங்கப் பாராரென்க. புலவியாவது - ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும் பொருட்டு ஒருவர்மீது ஒருவர் சினத்தல். இங்கே

'நெடும்புலவி' என்றது, அவ்வூடலின் முதிர்ந்த நிலையை; அன்றி, அளவறிந்து கொள்ளாது நீளவிடுதலையன்று. இன்சொல் முதலிய வேறுஉபாயங்களால் தணிக்கக்கூடிய நிலையைக்கடந்து காலில்விழுத லாகிய ஒருபாயத்தினாலேயே தணிக்கக்கூடிய நிலையை யடைந்த பெரும்புலவியென்பதும், "தப்பினேனென்றடி சேர்தலுமுண்டு" என்றும், "மனைவியுயர்வுங் கிழவோன் பணிவும், நினையுங்காலை புலவி யுளுரிய" என்றும் கூறியபடி அப்புலவிக்காலத்தில் எவரையும் வசப்படுத்தும் இயல்பினதான வணக்கத்தை ஆடவர் கொள்ளுதல் இயல்பு என்பதும், அச் சிறப்புவிதியுமின்றி வணங்காமுடியனாய் நிற்பவன் இராவணனென்பதும், 'வலிய' என்றதனாலும், உயர்வு சிறப்பும்மையினாலும் நன்குவிளங்கும். இங்ஙனங்கூறியதனால், வணக்கத்தினாலேயே சாதிக்கக்கூடிய காரியத்தையும் இராவணன் வேறுஉபாயங்களாற் சாதிக்குந் திறமுடையா னென்பது தொனிக்கும்.மேல் இரணியன் வதைப்படலத்தும் இரணியனைப்பற்றிக் கூறும் போது, "என், வாளினைத் தொழுவதல்லால் வணங்குதல் மகளி ரூடல் நாளினுமுளதோ" என்று வருகின்றது.

மூன்றுமடியில் 'மெலியும்', தடிக்கும்' என மாறுபட்டசொற்கள் வந்தது-தொடைமுரணின்பாற்படும். மெலியும் இடை - மற்றையவ யவம் பருக்கப்பருக்கத் தான் சிறுக்கும் இடை யென்க. 'வென்றி மாதர்' என்றது, ஆடவரை அழகினால் அடிமையாக்கிக்கொள்பவ ரென்றபடி.

புலித்தோலுடுத்த கதை:—ஒருகாலத்திற் பரமசிவன் தன்னை மதியாத தாருகவனத்து முனிவர்களது கருவத்தைப் பங்கஞ்செய்ய வும் அவர்கள் மனைவிமாரின் கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தான் ஒருவிடசங்கமத்திருவுருவங்கொண்டு அவரில்லந்தோறுஞ் சென்று பிக்ஷாடனஞ்செய்த தன்னை நோக்கிக் காதல் கொண்ட அம் முனிபத்தினியரது கற்புநிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்தனர்: அவ்வோமத்தீயினின்றும் எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றையும் அவ்வோமத் தீயையும் சிவனைக்கொன்றுவரும்படி அம்முனிவர்கள் ஏவினர்; சிவ பெருமான், தன்மேற் பொங்கிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனது கணங்களாகவுங் கொண்டு மானைக் கையில் ஏந்தி, புலியைத்தோலையுரித்து உடுத்து, முயலகனை முதுகிற் காலா லூன்றி, வெண்தலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து, நெருப்பை ஒருகையிலேந்தி, இங்ஙனமே அவற்றையெல்லாம் பய னிலவாகச் செய்துவிட்டன னென்பதாம். (563)

**5.** வாளுலா முழு[1]மணிகள் வயங்கொளியின் றொகைவழங்க வயிரக் குன்றத், தோளெலாம் படிசுமந்த விடவரவின் படநிரையிற் றோன்ற வான்ற, நாளெலாம் புடைதயங்க நாமநீ[2]ரிலங்கையிற்றுன் [3]வாரி யிட்ட, கோளெலாங் கிடந்த நெடுஞ் சிறை[4]யன்ன நிறையாரங் குலவ மன்னோ.

(இ - ள்.) வாள் உலாம் - ஒளிவீசப்பெற்ற, முழு மணிகள் - (ஆபரணங்களிலுள்ள) பெரிய இரத்தினங்கள், வயங்கு ஒளியின் தொகை-விளங்குகிறஒளியின்தொகுதியை, வழங்க-மிகுதியாக வீசா நிற்கவும்,—வயிரம் குன்றம் தோள் எலாம் - வச்சிரமயமான மலை போன்ற தோள்கள்யாவும், படி சுமந்த விடம் அரவின் - பூமியைத் தாங்குகிற விஷத்தையுடைய சர்ப்பராசனுன ஆதிசேஷனுடைய, படம் நிரையின் - படங்களின்வரிசைபோல, தோன்ற - விளங்கவும்,— ஆன்ற நாள் எலாம்-சிறப்பமைந்த நக்ஷத்திரங்கள் யாவும், புடை தயங்க-பக்கங்களிலே விளங்கும்படி, நாம நீர் இலங்கையில் - அச்சத்தைத் தருகின்ற கடல்நீரால் சூழப்பட்ட இலங்காபுரியிலே, தான் வாரி இட்ட-(அவ்விராவணன்) தான் தொகுதியாகக் கொணர்ந்து அடைத்து வைத்த, கோள் எலாம்-கிரகங்களெல்லாம், கிடந்த-தங்கியிருந்த, நெடு சிறை-பெரிய சிறைச்சாலையை, அன்ன - ஒத்த, நிறை ஆரம்-நிறைந்த இரத்தினமாலை, குலவ-விளங்கவும்,—(எ - று.)

முன்னிரண்டு அடிகளில், கொடிய ராக்ஷசராசனுன இராவணனுக்குக் கடுமையுள்ள நாகராசனுன ஆதிசேஷனையும், அவனது பரந்தபெரிய பலதோள்களுக்கு இவனது அகன்ற படங்களையும், தோள்களில் அணிந்த இரத்தினங்களுக்குப் படங்களிலுள்ள மாணிக்கங்களையும் ஒப்புக்கூறினர். மூன்றாஞ்செய்யுளின் முன்னிரண்டடி குண்டலவருணனைக்கு அங்கமாகத் தோள் வருணிப்பும், இந்த ஐந்தாஞ்செய்யுளின் முன்னிரண்டடி - ஆரமணிந்ததற்கு அங்கமாக வந்த புயவருணிப்பும் ஆகிய வேறுபாடுஉடைமையால் கூறியதுகூற லென்னும் குற்றமாகாது. பின்னிரண்டு அடிகளில், நக்ஷத்திரங்கள் பக்கங்களிற்பொருந்த நவக்கிரகங்களை இராவணன் பிடித்துக்கட்டிக் காவலில்வைத்த சிறைச்சாலை, இராவணன் அணிந்ததாய் இடையிடையே நவரத்தினங்களும் அமைக்கப் பெற்று முத்துக்களாற் செய்யப்பட்ட உறுதியுள்ளதான வடத்துக்கு ஒப்புக்கூறப்பட்டதெனக் காண்க; தற்குறிப்பேற்றவணி. இராவணன் திக்குவிசய காலத்தில் தேவர்களைவென்று அவர்களிற் பலரைச் சிறையிலிட்டனனென்பது பிரசித்தமாதலால், 'நாளெலாம்புடைதயங்க நாம நீரிலங்கையில்தான் வாரியிட்ட கோளெலாங் கிடந்த நெடுஞ்சிறை' எனப்பட்டது. முழுமணி-உத்தமவிலக்கணம் நிறைந்த இரத்தினம்; ஒளி நிரம்பிய இரத்தினம். மிக்கஉறுதிக்கு வயிரக்குன்றத்தை உவமை கூறினர். கோள்-சூரியன் முதலிய ஒன்பது கிரகங்கள். பி - ம்:—[1]மதியின். [2]இலங்கையின்கண். [3]நலங்காட்டக். [4]அனைய. (564)

வேறு.

6. ஆய்வரு பெருவலி யரக்க ராதியோர்
நாயகர் நளிர்மணி மகுட நண்ணலால்
தேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து செஞ்சுடர்
ஆய்மணிப் பொலன்கழ லடிநின் ஞர்ப்பவே.

(இ-ள்.) செம் சுடர்-சிவந்த ஒளியையுடைய, ஆய் மணி - சிறந்த இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற, பொலன் கழல் - பொன்னினாலாகிய வீரக்கழல்,— ஆய்வு அரு - (இவ்வளவினதென்று) ஆராய்வதற்கு

அருமையான, பெரு வலி-மிக்கவலிமையையுடைய, அரக்கர் ஆதியோர் - இராக்கதர் முதலானவர்களுடைய, நாயகர் - தலைவர்களின, நளிர் மணி மகுடம்-பெருமையையுடைய இரத்தின கிரீடங்கள், நண்ணலால் - (அவர்கள் வந்து வணங்கும்பொழுதெல்லாம் தன்மேல் வந்து) பொருந்தப்பெறுதலால், தேய்வு உற தேய்வுஉற - தேய்வடையுந் தோறும், பெயர்ந்து-வேறுபட்டு [புதிய ஒளிமிகப்பெற்று என்றபடி], அடி நின்று ஆர்ப்ப-(தனது) பாதத்திலே பொருந்திஒலிக்கவும்,—

இந்த ஆறுங்கவிமுதல் 11-ஆங் கவிவரையில் பதினெண் தேவ கணங்களுட் சேர்ந்த பல்வகையார் அவன்சபையிற் பணிவு கொண்டு நிற்றலைக் கூறுகிறார். இக்கவியை "கோவுடை நெடு மணி மகுட கோடியாற், சேவடியடைந்த பொற்கழலுந் தேயுமால்" எனக் கீழ் அரசியற்படலத்தில் வந்ததனோடு ஒப்பிடுக. 'ஆய்வரும் பெருவலி யரக்கர்' என்ற தொடர், அகத்தியப்படலத்தும் வந்துள்ளது. ஆதி யோர் என்றது, அசுரர் யக்ஷர் அமரர் முதலியோரை. தேய்வுறத் தேய்வுற - அடுக்கு, தொறுப்பொருளது. ஆய் மணி - இரத்தின சாதியுள் தெரிந்தெடுத்த இரத்தினம்; (திருக்குறளில் 'ஆய்மயில்' என்பதற்கு-பரிமேலழகர் இங்ஙனமே உரைகூறியுள்ளார்.) இரத்தின சாஸ்திரத்தின்படி குற்றமற்றுச் சிறந்த இரத்தினமெனக.

இதுமுதல் எட்டுக்கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (565)

7. மூவகை யுலகினு முதல்வர் முந்தையோர்
ஓவல ருதவிய பரிசி னோங்கல்போல்
தேவரு மவுணரு முதலி னோர்திசை
தூவிய நறுமலர்க் குப்பை துன்னவே.

(இ - ள்.) மூ வகை உலகின்உம் - மூன்றுஉலகங்களிலும், முதல்வர் - தலைவர்களாகவுள்ளவர்கள், முந்தையோர் - முற்பட்டு வந்தவர்களாய், ஓவலர் உதவிய - ஒழியாதுகொண்டுசெலுத்திய, பரிசின் - காணிக்கைகளின், ஓங்கல்போல் - குவியல்போல,—தேவர் உம் அவுணர்உம் முதலினோர் - தேவர்களும் அசுரர்களும் முத லானவர்கள், திசை தூவிய - எல்லாத்திக்குக்களிலுமிருந்து மேற் சொரிந்த, நறு மலர் குப்பை-மணமுள்ள மலர்களின் குவியல்கள், துன்ன-நெருங்கிநிறையவும்,—(எ - று.)

தேவர்களும் அசுரர்களும் வாழ்த்துக்கூறி இராவணன்மேற் சொரிந்த மலர்மழைக்கு, எல்லாவுலகிலுமுள்ள அரசர்கள் அவன் முன்கொண்டு வந்து காணிக்கையாகச்செலுத்தும் பொன்மலர் மழையை [பொருட்குவியலை] ஒப்புக்கூறினர். இனி, முன்னிரண்டு அடிக்கு வேறு உரைத்தல் சிறப்பன்று. (566)

8. இன்னபோ திவ்வழி நோக்கு மென்பதை
உன்னலர் கரதலஞ் சுமந்த வுச்சியர்
மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்கள்
துன்னினர் முறைமுறை துறையிற் சுற்றவே.

(இ - ள்.)—மின் அவிர்-மின்னல்போல ஒளிவிளங்குகிற, மணி முடி-இரத்தினகிரீடத்தையுடைய, விஞ்சை வேந்தர்கள்-வித்தியா தரராசர்கள்,—இன்ன போது இ வழி நோக்கும் என்பதை-இன்ன சமயத்தில் இப்பக்கத்தில் [தங்களை] (இராவணன்) பார்ப்பானென் பதை, உன்னலர்-அறியாதவர்களாய், கரதலம் சுமந்த உச்சியர் [உச்சி சுமந்த கரதலத்தர்]-(எப்பொழுதும் தங்கள்) தலைமேற்கூப்பி வைத்த கைகளையுடையவர்களாய், துன்னினர்-சமீபித்து, முறை முறை-வரிசைவரிசையாக, துறையில்-சபாமண்டபத்தினிடங்களிலே, சுற்ற-சூழ்ந்து நிற்கவும்,— (எ - று.)

தாங்கள் வணங்குதலை இராவணன் பார்த்தல்மாத்திரத்தையே தாங்கள் பெறும் பெரும்பேறாகக்கருதிவித்தியாதரராசர்கள் அவனு டைய சபையில் அவன்முன்பே வந்து இடந்தோறும் நின்று 'எந்தக் கண்ணால் எப்பொழுது நம்மை அவன் பார்ப்பானோ'? என்று கருதி யும், 'நாம் சற்றுப்பராமுகமாக இருக்குஞ் சமயத்து அவ்விராவணன் நாம் இருக்கும் பக்கத்தைப்பார்த்தால் அப்போது நாம் வணக்கஞ் செய்யாதிருந்தால் நம்கதி யாதாகுமோ?' என்று அஞ்சியும் வித்தி யாதரர் எப்பொழுதும் சிரமேல் அஞ்சலிபந்தஞ்செய்தபடியே நிற் பார்க ளென்க. நினைத்தல் என்ற பொருளதான உன்னல் என்பது 'அறிதல்' என்ற பொருளில் வந்தது. (567)

9. மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினும்
தங்களை யாமெனத் தாழுஞ் சென்னியர்
அங்கையு முள்ளமுங் குவிந்த வாக்கையர்
சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே.

(இ - ள்.)—மங்கையர் திறத்து - (குற்றேவல்) மகளிரைக் குறித்து, ஒரு மாற்றம் கூறின்உம் - யாதாயினும் ஒருகட்டளை மொழியை (இராவணன் அலட்சியமாக)க் கூறினாலும், தங்களை ஆம் என - (அது) தங்களைக்குறித்துக் கூறியதாமென்று கருதி, தாழும் சென்னியர்-வணங்குகிற தலையையுடையவர்களும், அங்கை உம் உள்ளம்உம் - அங்கங்களும் மனமும், குவிந்த-குவியப் பெற்ற, ஆக்கையர்-உடம்பையுடையவர்களுமாய்,—சிங்கம் ஏறு என திறல் சித்தர்-ஆண்சிங்கம்போல (மிக்க) பலபராக்கிரமமுடைய சித்தவர சர்கள், சேர-(அருகில்வந்து) திரண்டு நிற்கவும்,—

கீழ் 'விஞ்சைவேந்தர்' என வந்ததனால், அந்த இனம்பற்றி, சித்தர் என்பதற்கு -சித்தவேந்தர் எனப் பொருள் கொள்ளப்பட் டது. சித்தர் சிரம் இராவணனுக்கு வழக்கமாகத் தாழுமது என்பது தோன்ற, தாழுஞ்சென்னியர் என்றது. மகாபலசாலிகளான சித்த வரசர்கள் ஏவல்மகளிர்போலாகி வணக்கவொடுக்கத்தோடு இரா வணனுக்கு அமைந்து திரண்டு நிற்க வென்க. உள்ளங்குவிதல்-பயபக்தி விசுவாசங்களால் மனம் அடங்கல்.

முன்னிரண்டு அடிக்குச் சாதுரியமாகக் கூறப்படுவதொரு பொருள் வருமாறு:—மகளிரை முன்னிலைப்படுத்தி அழைக்கத் தொடங்கிய இராவணன் 'அடி!' என விளித்தனனாயினும், சித்தர்

கள் அடிக்கும்பொருட்டு அவன் 'அடி' என்று ஒருவனுக்குக் கட்டளை யிட்டதாகக் கருதி, அஞ்சி, அங்ஙனம் அவன் அடிக்கச் சொல்லா திருக்கும்பொருட்டுச் சரணாகதிசெய்பவராவ ரென்பது. மகடூஉவிளி யிடைச்சொல்லாக அவன் 'அடி' எனக் கூறியதை, இவர்கள் தமக்கு இயல்பாகவுள்ள அச்சத்தால் ஒருமையேவல்வினையாகக் கொண்டன ரென்க. (568)

10. அன்னவ னமைச்சரை நோக்கி யாண்டொரு
நன்மொழி பகரினு நடுங்குஞ் சிந்தையர்
என்னைகொல் பணியென விறைஞ்சு கின்றனர்
கின்னரர் பெரும்பயங் கிடந்த [1]நெஞ்சினர்.

(இ - ள்.)—அன்னவன்-அவ்விராவணன், அமைச்சரைநோக்கி-(தனது) மந்திரிகளைப் பார்த்து, ஆண்டு-அவ்விடத்து, ஒரு நல் மொழி பகரினும் - ஏதேனும் ஒருநல்வார்த்தையை(இரகசியமாக)ச் சொன்னாலும், நடுங்கும் சிந்தையர் - (தங்களைத் தண்டிப்பதற்கு ஏதோ கூறினனென்று) கலங்கும் மனமுடையவர்களாய், பெரு பயம் கிடந்த நெஞ்சினர்-மிக்க அச்சம் நீங்காது தங்கிய மனத்தை யுடையவர்களாகி, பணி என்னைகொல் என-அவன்கட்டளையாதோ வென்று, கின்னரர்-கின்னரவேந்தர், இறைஞ்சுகின்றனர் - வணங் கவும்;—(எ - று.)

'இறைஞ்சுகின்றனர்' — முற்றெச்சம்: இறைஞ்சுகின்றவராய் எனப்பொருள்கொண்டு, "சேர"(9) "சூழ" (11) எனக்கூட்டிப் பொருள் கொள்ளவுமாம். கின்னரர் குதிரைமுகமும் மனிதவுடலுமுடைய ராய் கின்னரமென்னும் வாத்தியத்தைக் கைக்கொண்டு இசைபாடித் திரியும் ஒருதேவசாதியார். பி-ம்:—[1]நெஞ்சினர். (569)

11. [1]பிரகர நெடுந்திசைப் பெருந்தண் டேந்திய
கரதலத் தண்ணலைக் கண்ணி னோக்கிய
நரகின ராமென நடுங்கு நாவினர்
[2]உரகர்க டம்மன முலைந்து சூழவே.

(இ-ள்.) பிரகரம்-(பாவஞ்செய்தவர்களைத்) தண்டித்தற்கு உரிய, நெடு திசை-பெரிய (தெற்குத்) திக்குக்குத் தலைவனை, பெரு தண்டு ஏந்திய கரதலத்து-பெரிய காலதண்டத்தை யேந்திய கையையுடைய, அண்ணலை-பெருமையையுடைய யமனை, கண்ணின் நோக்கிய - கண் ணெதிரிலே கண்ட, நரகினர் என - நரகவாசிகள் (பாவிகள்) போல, நடுங்கும் நாவினர்-(இராவணனைக் கண்டமாத்திரத்தில்) வாய்குளறு பவராய் [தடுமாறும் பேச்சுக்களையுடையவராய்], தம் மனம் உலைந்து-தங்களுடைய மனம் சோர்ந்து, உரகர்கள்-நாகராசர்கள், சூழ-சூழ்ந்து நிற்கவும்,—(எ - று.)

தென் திசைத்தலைவனைக் கொடியதண்டனைசெய்வதிற் கண் ணோட்டமில்லாத யமனைத் தென்திசையையாளுகிற கொடியவனை இராவணனுக்கு உவமைகூறினார். ப்ரஹரமென்ற வடசொல்-அடித்த லென்று பொருள்படும்; இங்கே, இலக்கணையாய்த் தண்டனைக்கு வந்தது. பாவிகள் தண்டனைப்படுந் திசை யெனவே, யமனுக்குரிய

தென்திசை யாயிற்று. தருமத்தைக் காக்கும்பொருட்டே அதினின்று தவறுபவர்களை முறைப்படி தண்டிப்பவனுதலால், யமனை 'அண்ணல்' என்று சிறப்பித்துக் கூறினர். உரகர் - படமும் வாலுமுடையராய் மனிதவடிவமுந் தெய்வப்பிறப்புமானதொரு சர்ப்ப சாதியார். இராவணன் சபையில் வந்துள்ள உரகர்களுக்கு நரகினரை உவமைகூறியதனால், அவன் சபை நரகம்போலக் கொடியதாயுள்ள தென்பது தொனிக்கும். ஆம்-அசை. பி- ம் :—[1] பிரிதரநெடுந்திசை. [2] உரகருந். (570)

12. திசையுறு கரிகளைச் [1] செற்றுத் தேவனும்
வசையுறக் கைலையை மறித்து [2] வானெலாம்
[3] அசையுறப் [4] புரந்தர னடர்த்த தோள்களின்
இசையினைத் தும்புரு விசையி னேத்தவே.

(இ-ள்.) திசை உறு கரிகளை-திக்குக்களிற் பொருந்திய யானைகளை [திக்கஜங்களை], செற்று-வலியடக்கிவென்று, தேவன்உம் வசை உற-மகாதேவனான சிவபிரானும் பழிப்படையும்படி, கைலையை மறித்து - கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்து, வான் எலாம் அசையுற - விண்ணுலகத்தாரெல்லாரும் நடுங்கும்படி, புரந்தரன் அடர்த்த - இந்திரனை நெருக்கிப்போர்செய்த, தோள்களின் - (இருபது) புயங்களினது, இசையினை-புகழை, தும்புரு - தும்புருவென்னுங் கந்தருவன், இசையின் ஏத்த - (வீணையின்) கானத்தோடு எடுத்துப்புகழவும்,—

இந்த 12, 13 ஆஞ் செய்யுட்களால், தேவமுனிவரான தும்புரு நாரதர் உபசரித்தமை கூறப்படுகின்றது. இராவணனது திக்கு விசயத்தையும் வெள்ளிவெற்பெடுத்த வெற்றியையும் புரந்தரனை யடர்த்த கொற்றத்தையும் இசையோடிசைத்துத் தும்புருவென்னுங் கந்தருவன் ஏத்துகின்றானென்க.

கைலையை யெடுத்த வரலாறு:—இராவணன் திக்குவிஜயஞ் செய்கையிற் குபேரனோடு எதிர்த்துப் பொருது அவனை வென்று அவனது புஷ்பகவிமானத்தைப் பறித்து அதன்மேலேறிக்கொண்டு கைலாசமலைக்குமேலாக ஆகாசமார்க்கத்திலேவிரைந்து மீண்டு வரலானான்; வருகையில், அம்மலையின் மகிமையால் விமானந் தடைப்பட்டுநிற்க, அதற்குக் காரணம் இன்னதென்று அறியாது திகைத்தான்: அப்போது, நந்தி எதிரில்வந்து 'சிவபிரானுக்குத் தங்குமிடமான திருக்கயிலாயத்தின் பெருமை இது' என்று சொல்லவும், கேளாமல் தசமுகன், 'எனது பிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடு பறித்து எடுத்து அப்பால் எறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வேன்' என்று கூறி விமானத்தினின்று இறங்கித் தனது இருபது கைகளையும் அம்மலையின் கீழ்க் கொடுத்து அதனைப் பெயர்த்து அசைத்தனன் என்பதாம்.

தும்புரு - நாரதன்போல் இசைபாடுதலிற் சிறந்தவனும், கந்தருவர்களுக்குக் குருவுமான ஒரு முனிவன். இவனது வீணை கலாவதி யென்று பெயர் பெறும். அசையுற-அசைய; உறு-துணைவினை.

பி-ம்:[1] —செயித்துத்தேவரும். [2]வாழ்வெலாம். [3]நசையுறப். [4]புரந்தர னடர்ந்த, புரந்தனநடந்த. (571)

13. சேணுயர் நெறிமுறை திறம்ப [1]லின்றியே
பாணிகள் பணிசெயப் பழுதில் [2]பண்ணிடை
வீணையி னரம்பிடை [3]விளைத்த தேமறை
வாணியி ஞரதன் செவியின் வார்க்கவே.

(இ-ள்.)—சேண் உயர்-மேலுலகத்திலே வழங்குவதாய்ச் சிறந்த, நெறி முறை-சங்கீதமார்க்கத்துக்குஉரிய விதியினொழுங்கு, திறம்பல் இன்றி-தவறுதலில்லாமல், பாணிகள்-கைகள், பணி செய-(இசைத் தானங்களிற் சென்று)உரியதொழில் செய்ய, வீணையின் நரம்பிடை விளைத்த-வீணையினது நரம்புகளிலே உண்டாக்கிய [தடவி வாசித்து எழுப்பிய], பழுது இல் பண்ணிடை-குற்றமில்லாத இராகத்தில், (அமைத்து), தேம் மறை - இனியவேதத்தை, நாரதன்-நாரதமகா முனிவன், வாணியின்-சரசுவதிபோல, செவியின் வார்க்க - காதுகளிலே செலுத்தவும்,—(எ - று.)

இராவணன் கேட்டுமகிழும்படி தேவமுனிவனான நாரதன் சிறந்ததேவகான முறைமைப்படி கைகளால் யாழ்நரம்பை வருடி இசையெழுப்பி அவ்யாழின்சக்குஒப்பச் சாமகீதம்பாடலானனென்க. நாரதனுக்கு இசைபாடற்சிறப்பிற் சரசுவதியை உவமை கூறினார்; அதன்குறிப்பால், அவளும் இராவணனுக்குப் பணிசெய்யுந்தன்மைய ளென்பது தொனிக்கும். எல்லாவேதங்களுள்ளும் சாமவேதம் சிறத்தலாலும், அது கடவுளின் சொரூபமாயும் கடவுளுக்கு மிகப் பிரியமானதாயு முள்ளதனாலும், செவிக்கினிய ஸ்வரங்களுடன் அமைதலாலும், 'தேமறை' எனப்பட்டது. இனி, தேமறை-காந்தருவ வேத மெனப்படுகிற சங்கீதமேயாகவுமாம். வார்க்க என்ற வினைக்கு ஏற்ப, வேதத்தைத் தேனாகக்கொள்க. இனி, தேன் மறை எனப் பிரித்து, மறை தேன் என மொழிமாற்றி, வேதமாகிய தேனை யென்றலும் ஒன்று. நாரதன் என்ற வடமொழிப்பெயர்-ஆத்துமஞானத்தை உபதேசிப்பவ னென்றும், மனிதர்களுக்கு உள்ள ஒற்றுமையைக் கெடுப்பவனென்றும் காரணப்பொருள்படும்: நரன்-ஆத்மா, அதற்கு உரிய ஞானம்-நாரம், த-கொடுத்தல்; அல்லது நார்-மனிதர், அவர் சம்பந்தமான ஒற்றுமை-நாரம், த-கெடுத்தல்; இவர், பிரமனது மனத்தினின்று தோன்றிய குமாரர். இவரது வீணை, மகதீ. சரசுவதியின் வீணை, கச்சபீ. பி - ம்:—[1]அன்றியே. [2]பண்ணடை, பண்ணிறை. [3]விளைந்த. (572)

வேறு.

14. மேகமென் றுருத்தி[1]கொண்டு விண்ணவர் தருவும் விஞ்சை
நாகமுஞ் சுரந்த [2]தீந்தேம் புனலொடு மளாவி நவ்வித்
தோகையர் துகிலிற் [3]றேயு மென்பதோர் துணுக்கத் தோடுஞ்
சீகர மகர வேலைக் காவலன் சிந்த மன்றே.

(இ - ள்.)—மகரம் வேலை காவலன்-சுறுமீன்களையுடைய கடலுக்குத் தலைவனான வருணன்,—விண்ணவர் தருஉம் - தேவர்களுடைய கற்பகவிருட்சங்களின் மலர்களும், விஞ்சை நாகம்உம்-வித்தியாதரலோகத்திலுள்ள சிறந்த மரங்களின் மலர்களும், சுரந்த-சொரிந்த, தீம் தேன்-இனிமையான தேனை, புனலொடுஉம் அளாவி-நல்லநீருடன் கலந்து, (அதனை), மேகம் என் துருத்தி கொண்டு-மேகமென்கிற வீசுகுழலி லெடுத்துக்கொண்டு, நவ்வி தோகையர் துகில் தோயும் என்பது ஓர் துணுக்கத்தோடுஉம் - (சபையிலுள்ள இராவணனைச் சார்ந்த) மானும் மயிலும் போன்ற மகளிரது ஆடையிற் படியுமென்ற ஓர் அச்சத்துடனே, சீகரம் சிந்த-சிறு திவலைகளாகச் சிந்தவும்,—(எ-று.) மன் ஓ-ஈற்றசைகள்.

இந்த 14 - ஆஞ்செய்யுள்முதல் ஆறுகவிகளில் நீர்க்கடவுள் முதலியோர் நீர்தெளித்தல் முதலிய பணிவிடை பூண்டொழுகுதல் கூறப்படுகின்றது. வேலைக்காவலன் அளாவிக் கொண்டு துணுக்கத்தோடு சீகரம் சிந்தினான் என்க. மெல் துருத்தி யெனப்பிரித்தும் உரைக்கலாம். விஞ்சையென்பது - மாயவித்தையைத் தரிப்பவரான வித்தியாதரர்களுடைய உலகத்துக்கு இருமடியாகுபெயராம். தரு, நாகம், என்றவை - முதலாகுபெயராய், இங்கு மலரைக் குறித்தன. தேன் + புனல் = தேம்புனல். மகரம்-கடலில் வாழ்வதொரு மீன் சாதி. நாகம் என்பதற்கு-சுரபுன்னைமர மென்று உரைப்பாருமுளர். பி-ம்:— [1]வீக்கி. [2]தீந்தேனறும்புனலோடளாவித். [3]தோய்க்கும்.

இதுவும், அடுத்தகவியும் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (573)

15. நறைமலர்த் தாதுந் தேனு [1]நளிநெடு மகுட கோடி
முறைமுறை யறையச் சிந்தி முரிந்துகு மணியு முத்தும்
தறையிடை யுகாத முன்னந் தாங்கினன் றழுவி வாங்கித்
துறைதொறுந் தொடர்ந்து நின்று சமீரணன் றுடைப்ப மன்னோ.

(இ - ள்.)—சமீரணன் - வாயுதேவன்,—நறை மலர் - நறுமணமுள்ள பூக்களினின்று சிந்துகிற, தாதுஉம்-மகரந்தப்பொடிகளையும், தேன்உம்-தேனையும், நளி நெடு மகுட கோடி-(அங்கு வந்துள்ள அரசர்களுடைய) பெரியநீண்ட கிரீடங்களின் கூட்டங்கள், முறை முறை அறைய-(நெருக்கத்தால்) ஒன்றோடொன்று தாக்குதலாலே, முரிந்து சிந்தி உகு-பின்னப்பட்டுச் சிதறிச்சிந்துகிற, மணிஉம்-இரத்தினங்களையும், முத்துஉம்-முத்துக்களையும், தறையிடை உகாத முன்னம்-தரையிலே சிந்துதற்கு முன்னமே, தழுவி தாங்கினன் வாங்கி-ஆங்காங்குச் சென்று ஏந்தி யெடுத்து, துறை தொறுஉம் தொடர்ந்து நின்று-(தேவர்முதலியோர் வந்து கூடிய அம்மண்டபத்தின்) ஒவ்வோரிடத்திலும் (அவரவர்களைத்) தொடர்ந்து சென்று நின்று, துடைப்ப-(அவ்விடங்களைச்) சுத்தி செய்து கொண்டிருக்கவும்,—எ - று.)—மன், ஓ-ஈற்றசைகள்.

சமீரணன் மலர்த்தாதும் மலர்த்தேனும் மகுடகோடி உகுமணியும் முத்தும் தழுவித் தாங்கினன் வாங்கித் தொடர்ந்துநின்று துடைப்பனென்க. இக் கவியால், அவ்விராவண சபையில் அகற்றத் தக்க குப்பையாய் நிற்பன மலர்த்தாது முதலியனவே யென்பது விளங்கும். நறை - நறுமை; 'ஐ' விகுதி. மணி-இங்கே, முத்து ஒழிந்த மற்றைய இரத்தினங்கள். பி-ம்:—[1]நளிர். (574)

## வே று.

16. மின்னுடை வேத்திரக் கையர் மெய்புகத்
[1]துன்னெடுங் கஞ்சுகத் துகிலர் [2]சோர்விலர்
பொன்னொடு [3]வெள்ளியும் புரந்த ராதியர்க்கு
இன்னியன் முறைமுறை யிருக்கை யீயவே.

(இ - ள்.)—பொன்னொடு -( தேவகுருவான) பிருகஸ்பதியும், வெள்ளிஉம்-(அசுரகுருவான) சுக்கிரனும்,—மின் உடை வேத்திரம் கையர் - மின்னல்போன்ற ஒளியையுடைய பொற்பிரம்பையேந்திய கையையுடையவர்களும், மெய் புக துன்-உடம்பு முழுவதும் உட்புகும்படி அமைந்த, நெடு கஞ்சுகம் துகிலர்-நீண்ட ஆடையாலாகிய பெருஞ்சட்டையைத் தரித்தவர்களும், சோர்வு இலர் - (தொழில் செய்தலில்) தளர்ச்சியில்லாதவர்களுமாய், புரந்தர ஆதியர்க்கு- இந்திரன் முதலியோர்க்கு, முறைமுறை-(அவரவர்க்குத்) தக்க முறைப்படி, இருக்கை-ஆசனங்களை, இன் இயல்-இனிய தன்மையோடு, ஈய-கொடுக்கவும்,—(எ-று.)

பிருகஸ்பதியும் சுக்கிரனும் இராவணனுக்குச் சேவகர்களாய் அமர்ந்து அவன் கட்டளைப்படி அவன் சபைக்குவரும் இந்திரன் முதலானோர்க்கு அவரவர்க்குத்தக்கபடி உபசாரத்தோடு ஆசனங் கொடுப்பரென்க. அவர்கள் கொண்ட வேலைக்கு ஏற்பக் கையிற் பிரம்பையும் உடம்பில் முழுச்சட்டையையும் தொழிலிற் சோர்வின்மையையுந் தரித்ததனை, முன்னிரண்டடிகளில் விளக்கினார். தேவகுருவான பிருகஸ்பதியோடு ஒப்ப அசுரகுருவான சுக்கிரனையும் கூறினதனால், கண்டகனான இராவணன்தேவர்களைப்போலவே அசுரர்களையும் பகைத்து வென்று அவர்கள் திறத்திலுங் கொடியனாய் நடந்துவந்தன னென்பது வெளியாம். இந்திரனால் ஆசனந்தந்து உபசரிக்கப்படுபவர், இந்திராதியர்க்கு ஆசனமளிக்கும்படியாயினது, இராவணனது கடக்கலாகாக்கட்டளையினாலென்க.நெடுங் கஞ்சுகம்- நிலையங்கி: மெய்ப்பையெனவும்படும். பொன், வெள்ளி என்பன- அவர்க்கு, நிறம்பற்றிவந்த பெயர்கள். வெள்ளி-வெண்ணிறமுடையவன். 'மின்னுடைவேத்திரம்' எனவே, பொற்பிரம்பாயிற்று. பி-ம்:—[1]துன்னிடு. [2]சோர்விலாப். [3]வெள்ளியிற்.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள்-இப்படலத்தின் ஆறாங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (575)

17. சூலமே முதலிய துறந்து [1]சுற்றிய
சேலையாற் செய்யவாய் புதைத்துச் செங்கையன்

தோலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாம்
காலன்வந் திசைக்கு [2]நாட் கடிகை கூறவே.

(இ-ள்,)—காலன்-காலத்தையறிந்து நடக்குங் கடவுளான யமன்,—சூலம்வ முதலிய துறந்து-சூலம் முதலிய (தனக்கு உரிய) ஆயுதங்களை விட்டிட்டு, சுற்றியசேலையால் செய்ய வாய் புதைத்து-சுற்றியுள்ள ஆடையைக்கொண்டு (தன்னுடைய) சிவந்தவாயை மூடிக்கொண்டு, செம் கையன்-செவ்விய கையையுடையவனாகி,—தோல் உடை நெடு பணை துவைக்கும் தோறு எலாம்-தோற்போர்வையையுடைய பெரிய பேரிகைவாத்தியங்கள் அடிக்கப்படுஞ் சமயங்களிலெல்லாம், வந்து-சித்தனாய்வந்து, இசைக்கும்-சொல்லுதற்குஉரிய, நாள் கடிகை-நாளின் நாழிகைக்கணக்கை, கூற-சொல்லவும்,—

நாழிகைமுரசம் அறையவேண்டிய சமயங்களிலெல்லாம் தவறாமல் யமன் அச்சத்தால் ஆயுதங்களை அகற்றிவிட்டு ஆடையால் தன் வாயைப் புதைத்துக்கொண்டு வெகுமரியாதையோடு வந்து காலத்தைச் சரியாகக் கணக்கிட்டுச் சொல்லுதலாகிய தனது குற்றேவல் தொழிலை ஒழுங்காக நடத்துவனென்க. 'அடக்கமென்பது-உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம்: அவை-பணிந்தமொழியும் தணிந்தநடையும் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயின' என்ற நச்சினார்க்கினியருரைவாக்கியம், இங்கு அறியத் தக்கது. 'முதலிய' என்றதனால், கால தண்டமும் காலபாசமும் பெறப்படும். [1]சுற்றியசேலையாற் சிறிய வாய்புதைத்துச் செங்கையின் என்ற பாடத்துக்கு - அரையிற்சுற்றிய உத்தரீயத்துடன் செங்கையினால் (தன்னுடைய) சிறியவாயைப் புதைத்தென்க. இங்கு 'சிறியவாய்' என்றது, பணிந்தமொழியைக் காட்டுதற்கு. வாயைக்கூறியது மூக்கிற்கும் உபலட்சணம். தன்னுடைய மூச்சுக்காற்றுப் பெரியோர்மேற் படாதிருக்கவேணுமென்ற கருத்தினால் வாயையும் மூக்கையுஞ் சேர்த்துஆடையாற் சுற்றுதல் மரபு. படைக்கலமேந்துதல் தண்டனை செய்தல்என்ற இவைநீங்கியகைகளை யுடையானென்பார் 'செங்கையன்' என்றார். [2]நாள் கடிகை கூற என்ற பாடத்துக்கு, நாளின்நிலையையும் நாழிகையின் கணக்கையும் கூற வென்று உரைக்க. பி-ம்:— [1]சுற்றிய...புதைத்த. (576)

18. நயங்கிளர் நானநெய் யளாவி நந்தலில்
வியங்கருப் பூரமென் பஞ்சின் மீக்கொளீஇக்
கயங்களின் மரைமலர்க் காடு பூத்தென
வயங்கெரிக் [1]கடவுளும் விளக்க மாட்டவே.

(இ - ள்.)—வயங்கு எரி கடவுள்உம்-விளங்குகிற அக்கினிதேவனும், நயம் கிளர் நானம் நெய் அளாவி-நன்மை மிக்க [சிறந்த]நறுமணத்தையுடைய நெய்யை(த் தகழியிற்) சேர்த்து, நந்தல் இல்-குறைவில்லாத [மிக்க], வியம் - சிறந்த, கருப்பூரம்-கருப்பூரத்திலும், மெல் பஞ்சின்-மென்மையான பஞ்சுத் திரியிலும், மீ கொளீஇ-மேலே பற்றவைத்து, கயங்களின் மரை மலர் காடு பூத்து என-குளங்களில் செந்தாமரைமலர்த்தொகுதி மலர்ந்தாற் போல, விளக்கம் மாட்ட-விளக்குக்களை யேற்றவும்,—(எ - று.)

இராவணனுக்கு அக்கினிதேவன் விளக்கு ஏற்றும் பணியைச் செய்கின்றானென்க. நானம்நெய் என்பதற்கு-கஸ்தூரி கலந்தநெய் யென்று உரைப்பாருமுளர். மரை = தாமரை; முதற்குறை. விளக்கம்-விளங்கச்செய்வது: அம்-கருத்தாப்பொருள்விகுதி. கயம்-சபைக்கும், செந்தாமரைமலர்க்காடு - விளக்கின்தொகுதிக்கும் உவமை. உம்-இறந்தது தழுவிய எச்சம். பி - ம்:—[1]கடவுடீ. (577)

19. அதிசய [1]மளிப்பதற்[2]கருள றிந்துநற்
புதிதலர் கற்பகத் தருவும் பொய்யிலாக்
கதிர்நெடு மணிகளுங் கறவை யான்களும்
நிதிகளு முறைமுறை நின்று நீட்டவே.

(இ - ள்.)—நல் - சிறந்த, புதிது அலர் - (எப்பொழுதும்) புதுமையாக மலருந் தன்மையுள்ள, கற்பகம் தருஉம் - கற்பக விருக்ஷங்களும், பொய் இலா கதிர் நெடு மணிகள்உம் - தவறாத [உண்மையான] ஒளிகளையுடைய சிறந்த (சிந்தாமணி முதலிய) தேவரத்தினங்களும், கறவை ஆன்கள்உம் - கறக்குந் தன்மையனவான (காமதேநு முதலிய) பசுக்களும், நிதிகள்உம் - (சங்கநிதி முதலிய) நிதிகளும்,—அதிசயம் அளிப்பதற்கு - (இராவணன் மனத்துக்கு) வியப்பை யுண்டாக்கும்பொருட்டு, அருள் அறிந்து-(அவன்) கருணைசெய்யுஞ் சமயமறிந்து, முறைமுறை நின்று நீட்ட - வரிசைவரிசையாய் நின்று (தங்கள் தன்மையை முன்னிட்டுக்) காண்பிக்கவும்,—(எ - று.)

இதனால், கற்பகம் முதலிய தேவர்செல்வங்கள் பணிசெய்தல் கூறப்படுகின்றது. ஜாலவித்தை செய்வோர்பலர் ஒருபிரபுவை யடுத்து அவன்மனத்தை மகிழ்விக்கும்பொருட்டுச் சமயம் அறிந்து ஒவ்வொருவராய்வந்து முன்நின்று தந்தமதுதிறமையின்படி பல பொருள்களை உண்டாக்கிக் காட்டும் இயல்புபோல, வேண்டின பொருள்களை வேண்டினபடியெல்லாம் உண்டாக்குந் தன்மையுள்ள கல்பகவிருக்ஷம் காமதேநு சிந்தாமணி நவநிதி முதலிய தேவர் செல்வங்கள் இராவணனையடுத்துத் தம்திறத்தில் அவனுக்குக் கொண்டாட்டத்தை யுண்டாக்கும்பொருட்டு அவன் கருணைகொள்ளுஞ் சமயம் அறிந்து ஒவ்வொன்றாய் வந்து முன் நின்று தந்தமது திறமையை வெளியிட்டுக்கொண்டு தலைகாட்டினவென்க. இனி, 'அதிசயமளிப்பதற்கு நீட்ட' என்பதற்கு - அவன் சபையில் வருபவர்களுடைய பலவகைத்திறமைகளைக் கண்டு வியந்து அவர்களுக்குப் பரிசுகொடுக்கும்பொருட்டு என்றுபொருள் கொண்டு, அதறகாகக் கல்பகவிருக்ஷம் முதலியன தந்தமக்கு இயன்ற பொருள்களைச் சமயமறிந்து கொடுத்துவர என்று உரைத்தலு முண்டு; கற்பகவிருக்ஷம் முதலியன இராவணனெதிரில் நின்றுகொண்டு, அவன் யாரிடத்தில் அருள் கொண்டு எவர்க்கு எப்பொழுது என்னபொருள் கொடுக்கச் சொல்லிக் குறிப்பாகவேனும் வெளிப்படையாகவேனும் கட்டளையிடுவானோ என்று எதிர்பார்த்து அக்கட்டளைப்படி அந்தந்தப்பொருள்களை உண்டாக்கிக் கொடுத்துக்கொண்டிருக்க என்பது கருத்தாம். கற்பகதரு - ஸந்தாநம் மந்தாரம் பாரிஜாதம்

கல்பகம் அரிசந்தனம் என ஐந்தாம். தேவமணிகள் - சிந்தாமணியும், சூளாமணியும் எனப்படும். கறவையான் - "மறவியொன்றுனுமின்றி மனத்ததே சுரக்கும்பால, கறவையிற் கறக்குந் தம்மாற் காமுறப்பட்டவெல்லாம்" என்ற சிந்தாமணியின்படி மனத்தில் நினைத்த பொருள்களை யெல்லாம் தருந் தன்மையுள்ள காமதேனுவென்க. காமதேனு போலவே அதன் கன்றான நந்தினி முதலிய சந்ததியிலுள்ளனவும், வேண்டிய வேண்டியாங்கு ஈயுந் திறத்தன வாதலால், 'ஆன்கள்' எனப் பன்மையாற் கூறினர். நிதிகள்-சங்கம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என ஒன்பதாம். பி - ம்:—[1] அளிப்பவர்க்கு. [2] அருளிற்றந்ததாற். (578)

20. குண்டல முதலிய குலங்கொள் பேரணி
மண்டிய பேரொளி [1]வயங்க வீசலால்
உண்டுகொ லிரவினி யுலக மேழினும்
எண்டிசை மருங்கினு மிருளின் றென்னவே.

(இ-ள்.) குண்டலம் முதலிய-குண்டலம் முதலான, குலம் கொள் பேர் அணி-சிறப்பைக்கொண்ட பெரிய ஆபரணங்கள், மண்டிய பேர் ஒளி-அடர்ந்த மிக்க ஒளியை, வயங்க வீசலால்-(எங்கும்) விளங்கும்படி வீசுதலால்—'இனி—, உலகம் ஏழின்உம்-எழுவகைலோகங்களிலும், இரவுஉண்டுகொல் - இராத்திரியென்பது ஒன்று உண்டோ? எண் திசை மருங்கின்உம் இருள் இன்று - எட்டுத்திக்குப்பக்கங்களிலும் இருள் இல்லையே!' என்ன - என்று (காண்பவர்) சொல்லும்படியாகவும்,—(எ - று.)

இராவணன் அணிந்துள்ள குண்டலம் முதலிய சிறந்த அணிகள் பேரொளி வீசுதலால், சூரியன் வேண்டாதபடி அனேக சூரியர் போல அவ்விராவணன் விளங்குவா னென்பதாம். குலம் என்பது-மேன்மையையுணர்த்திற்று; 'குலகிரி' என்றவிடத்துப் போல. உலகமேழ் - பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மேலேழும், அதலம் விதலம் சுதலம் தராதலம் ரஸாதலம் மகாதலம் பாதாளம் என்ற கீழேழும். பி-ம்:—[1] வயங்கி. (579)

21. கங்கையே முதலிய [1]கடவுட் கன்னியர்
கொங்கைகள் சுமந்திடை கொடியி னொல்கிடச்
செங்கையி னரிசியும் மலருஞ் சிந்தினர்
மங்கல முறை[2]முறை கூறி வாழ்த்தவே.

(இ - ள்.) கங்கைஏ முதலிய கடவுள் கன்னியர் - கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களுக்கு உரிய தேவதைகளாகிய மகளிர், கொங்கைகள் சுமந்து - பருத்த தனங்களைச் சுமத்தலால், இடை - (தங்கள் மெல்லிய) இடை, கொடியின் ஒல்கிட - கொடிபோலத் துவளும்படி, (அருகில்வந்து), செம் கையின் அரிசிஉம் மலர்உம் சிந்தினர்-சிவந்த தங்கள் கைகளால் அட்சதைகளையும் மலர்களையும் (இராவணன்மேல்) தூவி, முறை முறை-அடிக்கடி, மங்கலம் கூறி வாழ்த்த - மங்கள வாக்கியங்களைச் சொல்லி வாழ்த்தவும்,—(எ - று.)

கங்கைமுதலிய கடவுட்கன்னியர் கொடியின் இடைஒல்கிட வந்து அரிசியும் மலருஞ் சிந்தி முறைமுறை மங்களவாக்கியங்களைச் சொல்லி வாழ்த்தினரென்க. [1]தீர்த்தகன்னியர் என்றபாடத்துக்கு - நதிகளுக்குஉரிய பெண்தெய்வங்கள் என்க. பி - ம்:—[2]மொழி. (580)

22. ஊருவிற் றேன்றிய [1]வுருப்ப சிப்பெயர்க்
[2]காரிகை யார்முதற் கலாப மஞ்ஞைபோல்
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியின்
நாரிய ரருநட நடிப்ப நோக்கியே.

(இ-ள்.) ஊருவின் தோன்றிய-(நாராயணமுனிவனது) தொடையினின்று பிறந்த, உருப்பசி பெயர்-ஊர்வசியென்று பெயர்கொண்ட, காரிகையார்-அழகுடையாளை, முதல்-தொடக்கமான, நாரியர்-பெண்கள், கலாபம் மஞ்ஞைபோல் - தோகையையுடைய மயில்கள்போல,— வார் விசி கருவியோர் வகுத்தபாணியின் - தோற்கயிற்றாற்கட்டப்பட்ட இசைக்கருவிகளை யுடையவர்கள் வகைப்படுத்தி அமைத்த தாளவொழுங்கிற்கு ஏற்ப,—அருநடம் நடிப்ப-அருமையான நடனத்தை ஆட, நோக்கி - (அதனைப்) பார்த்துக்கொண்டும்,—(எ-று.)

இந்திரன்முன் நடித்தற்குஉரிய உருப்பசி முதலிய தேவமாதர் அவனைவென்ற இராவணன்முன் மயில்கள் ஆடுவதுபோலத் தாளவொற்று முறைபிறழாமற் கூத்தாட இவ்விராவணன் பார்த்திருக்கின்றன னென்க. பாணியினாரியர் என்பதை, பாணியின் ஆரியர் எனப்பிரிப்பினுமாம்: ஆரியர் - வடநூலார்: அவர்க்கு உரிய நடனம் ஆரியக்கூத்து. இது பல வகைக்கூத்துக்களுள் ஒன்றும்: இதனை 'இருவகைக்கூத்தாவன - வசைக்கூத்து, புகழ்க்கூத்து; வேத்தியல், பொதுவியல்; வரிக்கூத்து, வரிச்சாந்திக் கூத்து; சாந்திக்கூத்து, விநோதக் கூத்து; ஆரியம், தமிழ்; இயல்புக் கூத்து, தேசிக்கூத்து எனப்பலவகைய; இவை விரிந்தநூல்களிற் காண்க' என்ற சிலப்பதிகாரத்து அடியார்க்குநல்லாருரையால் அறிக. வடநூலாராற் சிறப்பித்துக் கூறப்பட்ட இந்த ஆரியக் கூத்தினது உயர்வு தோன்ற, அதற்கு 'அரு' என்ற அடைமொழி கொடுத்தார். ஆர்யபாஷைக்கு உரிய தேவமாதராதலால், ஊர்வசிமுதலியோர் ஆரியக்கூத்தை ஆடின ரென்க. ஆரியக்கூத்தெனினும், பாவைக்கூத்தெனினும் ஒக்கு மென்பர் ஒருசாரார்; அது. அசுரர்மோகிக்கும்படி திருமகள் ஆடிய கூத்தாம். உருப்பசி = ஊர்வசீ. காரிகையார் - ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி.

'வார்விசிக்கருவியோர்' என்றது, மத்தளக்காரரை. பாணியென்பது, தாளமென்றவாறு; "கொட்டும் அசையுந் தூக்கும் அளவும், ஒட்டப் புணர்ப்பது பாணி யாகும்" என்று ராகலின். மஞ்ஞை-பெயர்த்திரிசொல். மயில் ஆடுங்காலத்துத் தோகையை விரித்து ஆடும் இயல்பு தோன்ற, 'கலாபமஞ்ஞை' என்றார். ஊரு - வடசொல். [1]உயிர்பெய்ஓவியம் என்ற பாடத்துக்கு - உயிர் அமைக்கப்பட்டதொரு சித்திரப்பாவைபோல், அழகியவளான ஊர்வசி என்னும் தேவமாதென்க. ஊர்வசியென்ற பெயர்-தொடையினின்று பிறந்தவ

ளென்று பொருள்படும். விஷ்ணுவின் அமிசமாய்க் குருவும் சிஷ்யனு மாகத் திருவவதரித்த நாராயணன் நரன் என்ற முனிவர்கள் பதரி காச்சிரமத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கையில், இந்திரனேவலால் அப்ஸரஸ்ஸ்திரீகள் பலர் அங்குவந்து தங்களுடைய மேனிமினுக்கினு லும் ஆடல்பாடலாதி விநோதங்களாலும் அவர்களுடைய தவத் துக்கு இடையூறு செய்யத்தொடங்க, அதனாற் சிறிதுங் கலங்காத அவர்களுள் நாராயணமுனிவர் அம் மகளிரை அவமானப்படுத்தக்கரு தித் தமது தொடையினின்று ஒரு கட்டழகியைச் சங்கற்பத்தால் உண்டாக்க, அவளுடைய ஒப்புயர்வற்ற சௌந்தரியத்தை நோக்கி அத்தேவமாதர்கள் மிக வெள்கி அவளையே தங்களுக்குத்தலைவியாகக் கொண்டு அவளுடன் தமது உலகஞ் சென்றன ரென்பது வரலாறு; அவளே ஊர்வசி. பி-ம்:—[1]காரிணிற் செருக்கிய. (581)

23. இருந்தன [1]னுலகங்க ளிரண்டு மொன்றுந்தன்
அருந்தவ முடைமையி னளவி லாற்றலிற்
பொருந்திய விராவணன் புருவக் கார்முகக்
கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே.

(இ - ள்.) உலகங்கள் இரண்டுஉம் ஒன்றுஉம் - மூன்று உல கங்களும், தன் அரு தவம் உடைமையின் - (பிறராற்செய்தற்கு) அரிய தவத்தைத் தான் செய்துள்ளதனால், அளவு இல் ஆற்றலில் பொருந்திய - (தனது) வரம்பில்லாத வலிமையின்கீழ்ப் பொருந்தப் பெற்ற, இராவணன்—,—புருவம் கார்முகம்-புருவங்களாகிய விற்களை யுடைய, கரு தட கண்ணியர் - கரியபெரிய கண்களைக் கொண்ட அநேகமாதர்களுடைய, கண்ணின் வெள்ளத்து-கண்களின் பார்வை மிகுதியிலே, இருந்தனன் - இருந்தான்; (எ - று.)

தனது அரியதவத்தாலடைந்த வரம்பிலாற்றலால் தன்கீழ் மூவுலகும் அடங்கிநிற்கப்பெற்ற இராவணன், பலமாதர்களும் தன் னையே காண இருந்தனனென்பதாம். இராவணனைச் சார்ந்து சூழ்ந் துள்ள மகளிர் மிகப்பல ரென்பதும், அவர்களுடைய கண்களின் பரப்பும், அவற்றின் இடைவிடாத பார்வையும், அப்பார்வை இரா வணனை வசப்படுத்துந் தன்மையும், 'கண்ணின் வெள்ளத்து' என்ப தனால் விளங்கும். இவர்கள், இராவணனுக்கு அந்தரங்கமான மகளிர். இராவணன் கோகர்ணச்சிரமத்தில் வெகுசிரமப்பட்டு அரியபெரிய தவஞ் செய்யத்தொடங்கி ஆயிரம்வருஷத்துக்கு ஒருமுறை ஒவ் வொன்றாகத் தனது பத்துத்தலைகளுள் ஒன்பது தலைகளையும் ஓமஞ் செய்து தவம் முடித்துப் பிரமனிடத்தினின்று பெருவரம்பெற்ற மகா பலத்தால் அனைவரையும் வென்று மூவுலகத்தையும் அடக்கியாளு தல் தோன்ற, 'உலகங்களிரண்டுமொன்றும் தன் அருந்தவமுடை மையின் அளவிலாற்றலிற் பொருந்திய இராவணன்' என்றார்.

புருவத்தை வில்லென்றதற்கு ஏற்ப, கண்ணை அம்பாகக் கருதுக. வில்லினாற்பொருது வீரரை வெல்லுதல்போலத் தங்கள் புருவத்தி னழகால் தாக்கி ஆடவரை வசப்படுத்துவ ரென்பது தோன்ற, 'புரு வக்கார்முகம்' என்ற அடைமொழி மகளிர்க்குக் கொடுக்கப்பட்டது.

வெள்ளத்து இருந்தனன் எனச் செய்யுளின் இறுதிமொழி முதல் மொழியோடு பொருளிற் பொருந்தியது, பூட்டுவிற்பொருள்கோள்; "எழுவா யிறுதி நிலைமொழி தம்முள், பொருள் நோக்குடையது பூட்டுவில்லாகும்."

இனி, குளகமாகநடந்த இருபத்திரண்டு செய்யுள்களுக்கும் முடிபுவருமாறு:— (8) விஞ்சைவேந்தர்கள்சுற்ற, (9) சித்தர் சேர, (10) கின்னரர் இறைஞ்சுகின்றனராக, (11) உரகர்கள் சூழ, (12) தும்புரு ஏத்த, (13) நாரதன் வார்க்க, (14) வேலைக்காவலன் சிந்த, (15) சமீரணன் துடைப்ப, (16) பொன்னொடு வெள்ளியும் இருக்கையீய, (17) காலன் நாட்கடிகைகூற, (18) எரிக்கடவுளும் விளக்கம்மாட்ட, (19) கற்பகதருமுதலியன நீட்ட, (20) என்ன, (21) கடவுட்கன்னியர் வாழ்த்த, (22) ஊருவிற்றோன்றிய காரிகை யார் முதல் நாரியர் நடிப்ப, நோக்கி,-(23) இராவணன், (3) தோள் விளங்க, குண்டலங்கள் வயங்க, (4) மகுடநிரை வயங்க, (5) தோ ளெலாம் தோன்ற, ஆரம்குலவ, (6) கழல் ஆர்ப்ப, (7) மலர்க்குப்பை துன்ன, (2) மண்டபமதனில், பொலிய, (23) வெள்ளத்து இருந்த னன் என ஒருவாக்கியமாக்கி, 'சுற்ற' என்பது முதலிய செயவெ னெச்சங்களையெல்லாம் வினைச்செவ்வெண்ணாக வைத்து அவற்றின் இறுதியில் எண்ணும்மை விரித்துப் பொருளுரைக்க. பி - ம்:— [1]உலகமீரேழுமெய்திய. (582)

## 24.—இதுவும் வருங்கவியும்-குளகம்: சூர்ப்பணகை இராவணனரண்மனையின் வடகோபுரவாயிலில் வருதலைத் தெரிவிக்கும்.

தங்கையு மவ்வழித் தலையிற் றாங்கிய
செங்கையள் சோரியின் றாரை [1]சேந்திழி
கொங்கையண் [2]மூக்கிலள் குழையில் [3]காதிலள்
மங்குலி னொலிபடத் திறந்த வாயினள்.

(இ - ள்.)—தங்கைஉம் - (அவ்விராவணனது) தங்கையான சூர்ப்பணகையும், அ வழி-அவ்விடத்தில் [அப்பொழுது], தலையில் தாங்கிய செம் கையள்-தலைமேல்வைத்துக்கொண்ட சிவந்த கைகளை யுடையவளும், சோரியின் தாரை சேந்து இழி - இரத்தப்பெருக்கு செந்நிறமாய்ப் பெருகப்பெற்ற, கொங்கையள்-தனங்களை யுடைய வளும், மூக்கிலள்-மூக்கற்றவளும், குழை இல் காதிலள் - குழை யெனனும் ஆபரண மில்லாத காதும் அறுபட்டவளும், மங்குலின் ஒலி பட திறந்த வாயினள் - மேகமுழக்கம்போன்ற முழக்க முண் டாம்படி திறந்த வாயையுடையவளும்,—(எ - று.)

தலையில் கையை வைத்துக்கொண்டும், கொங்கையில் இரத்த தாரை பெருகப்பெற்றும், காதும்மூக்கும் அறுபட்டும் இவ்வாறான கோலத்தோடு பேரிடிபோன்று பேரொலிதோன்றுமாறு வாயைத் திறந்துகொண்டு வந்தனள் சூர்ப்பணகை யென்க. தங்கையும் என்ற உம்மை-கதைத்தொடர்ச்சியை விளக்குவதாய் இறந்தது தழுவிய எச்சமாம். தலைமேற் கைவைத்தல், சோகக்குறி. 'சோரியின் தாரை சேந்திழி' என்பதை, கொங்கை மூக்கு காது என்ற மூன்றுக்கும்

கூட்டுதலுமாம்; "மூக்குங் காதும் வெம் முரண் முலைக்கண்களும் முறையாற், போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல்விட்டான்" என்று சூர்ப்பணகைப்படலத்திற் கூறியதை யறிக. 'குழையில்காது' என்றது, மாங்கலியக்குறிகளுள் ஒன்றான காதணியை யிழந்திருந்த தன்மையைக் காட்டும். 'செங்கை' என்றது-மிகக்கரிய விகாரரூப முடைய அவளது கைகளின் இயற்கைச்செம்மையைக் காட்டவந்த தன்றிப் பெருகுகிற இரத்தத்தைத் துடைத்துத் துடைத்துக் கைகள் சிவந்துள்ள தன்மையைக் காட்டவந்ததெனஅறிக. 'மங்குலி னொலிபட' என்பதற்கு-மேகமுழக்கமும் கெடவென்று உரைப்பினும் அமையும். சேந்து-தெரிநிலைவினையெச்சம்; சே-பகுதி; சிவந்து என்ப தன் மரூஉ எனினுமாம். பி - ம்:—[1]சேர்ந்திழி. [2]மூக்கினள். [3]காதினள். (583)

25. [1]முடையுடை வாயிலின் முறையிட் [2]டார்த்தெழு
கடையுகக் கடலொலி [3]காட்டிக் காந்துவாள்
குடதிசை செக்கரிற் சேந்த கூந்தலாள்
வடதிசை வாயிலின் வந்து தோன்றினாள்.

(இ - ள்.)—முடை உடை வாயிலின்-முடைநாற்றத்தையுடைய (தன்) வாயினால், முறையிட்டு ஆர்த்து-(தன்) குறையை யெடுத்து உரக்கக்கூறி, யுகம் கடை எழு கடல் ஒலி காட்டி-யுகாந்த காலத்தில் வரம்புமீறிப் பொங்கிவருகின்ற கடலின் இரைச்சலைப்போன்ற இரைச்சலைச் செய்துகொண்டு, காந்துவாள் - மனந்தவிப்பவளும், குடதிசை செக்கரின் சேந்த கூந்தலாள் - மேற்குத்திசையிற் காணப் படுகிற அந்திச்செவ்வானம் போலச் சிவந்து தோன்றுகிற விரிந்த கூந்தலையுடையவளுமாய், வடதிசை வாயிலின் வந்து தோன்றினாள்-(இராவணனரண்மனையின்) வடக்குப்பக்கத்து வாசலில் வந்து காணப் பட்டாள்; (எ - று.)

தண்டகாரணியத்தினின்று புறப்பட்ட சூர்ப்பணகை தன் குறையைக்கூறி முறையிட்டுமனந்தவித்துத்தலைவிரிகோலத்தோடு இராவணனது அரண்மனையின் வடக்குவாசலில் வந்து சேர்ந்தன ளென்பதாம். இலங்கைக்கு வடக்கிலுள்ள தண்டகாரணியத்தி னின்று வருபவ ளாதலால், வடக்கு வாயிலில் வந்தனளென்க. "இலங்கைமாநகர் நொய்திற்சென்றெய்தினாள்" எனக் கீழ்ப்படலத் தின் இறுதியில் வந்ததனோடு இதற்குத் தொடர்ச்சி யுணர்க. சூர்ப்பணகைப்படலத்தில் "விரிந்தாய கூந்தலாள்" என்றும், கரன் வதைப்படலத்தில் "சொரிந்தசோரியள் கூந்தலள்" என்றும் கூறிய படி இலக்குமணன் தனது தலைமயிரைப் பற்றியதுமுதல் அவள் தலைவிரிகோலமாகவே யிருந்ததன்மையை மூன்றாம் அடி காட்டும். தசையைத்தின்னும் வாய ளென்பார் 'முடையுடைவாய்' என்றார். [1]முடிமிடை வாயிலின் என்ற பாடத்திற்கு-பல அரசர்களுடைய கிரீடங்கள் நெருங்கிய (இராவணனது) அரண்மனை வாயிலில் என் றும், சிகரங்கள் நெருங்கிய கோபுரவாயிலில் என்றும் உரைகூறலாம். கடையுகம் - முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை. பி - ம்:—[1]முடையுடைவாயினள். [2]ஆர்கலி. [3]காட்ட. (584)

**26.—இதுமுதல் பத்தொன்பது கவிகளில் அவளது நிலையைக் கண்டு அரக்கர் துயருறுதலைக் கூறுகிறார்.**

தோன்றலுந் தொன்னக ரரக்கர் தோகையர்
ஏன்றெதிர் வயிறலைத் திரங்கி [1]யேங்கினர்
மூன்றுல குடையவன் றங்கை மூக்கிலள்
தான்றனி [2]யவள்வரத் தரிக்க வல்லரோ.

(இ - ள்.) தோன்றலும் - (இவ்வாறு சூர்ப்பணகை) வந்து காணப்பட்டவளவிலே,—தொல் நகர் - பழைய அந்த இலங்காபுரியிலுள்ள, அரக்கர் தோகையர்-ராக்ஷஸஸ்திரீகள், ஏன்று - எதிர்கொண்டுசென்று, எதிர்-அவளெதிரிலே, வயிறு அலைத்து-வயிற்றில் அடித்துக்கொண்டு, இரங்கி-சோகித்து, ஏங்கினர் - அழுதார்கள்; மூன்று உலகு உடையவன் தங்கை - மூன்று உலகங்களையுந் தன்னுடையனவாகப்பெற்ற இராவணனது தங்கை, மூக்கு இலள் - மூக்கு அற்றவளாய், தனியவள்வர - (துணையொருவருமில்லாமல்) தனித்தவளாய் வர, தரிக்க வல்லர்ஓ-(கண்டு) சகிக்க மாட்டுவர்களோ? (எ-று.) —தான்-அசை; உயர்வு சிறப்புமாம்.

மூன்றுலகுடையவன் தங்கை மூக்கற்றுமுறையிட்ட வண்ணம் தனியளாய்வருதல் கண்டு, அரக்கர்தோகையர் அன்னையேன்று வயிறலைத்து அழுங்கினரென்க. முன்னிரண்டடியிற்கூறிய பொருளைப் பின்னிரண்டடியிற் கூறிய பொருள் சமர்த்தித்து நிற்றலால், இது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள் சமர்த்தியாமையால், இது வேற்றுப்பொருள் வைப்பணியாகாது. மூக்கு - மற்றை அறுபட்ட உறுப்புக்களுக்கும் உபலட்சணம். 'தனியவள்வரத் தரிக்கவல்லரோ' என்றதனால், தாதியர் தோழியர் செவிலியர் முதலிய பலவகைவிபவத்தோடும் கூடி அவள் வரக்கூடியவளேயன்றித் தனித்துவரத் தக்கவளல்ல ளென்பது விளங்கும்; "உலகமூன்று மாள்பவன் தங்கையாயின்,..., தமியை நீ வருதற்கொத்த தன்மையென் தையல்" என்று இராமன் சூர்ப்பணகையை வினவியதிலும் இக்கருத்து நிகழ்ந்தவாறு காண்க. தோன்றலும்-இறந்தகால வினையெச்சம். தோகையர்-மயில்போலுஞ் சாயலுடையவர். பி - ம்:—[1]தாங்கினர். [2]இவள். (585)

27. பொருக்கென நோக்கினர் புகல்வ தோர்கிலர்
அரக்கரு மிரைத்தன ரசனி யாமெனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்துக் கண்களை
நெருப்பெழ விழித்துவாய் மடித்து நிற்கின்றார்.

(இ - ள்.) அரக்கர்உம் - (அந்நகரிலுள்ள) ராக்ஷசர்களும், பொருக்கென நோக்கினர்-(சூர்ப்பணகையைத்) திடீரென்று பார்த்தவர்களாய், புகல்வது ஓர்கிலர்-சொல்வது இன்னதென்று அறியாமல் [ஒன்றுஞ் சொல்லத் தெரியாதவர்களாய்த் திகைத்து], அசனி ஆம் என இரைத்தனர் - இடிமுழக்கம்போலக் கதறிப் பேரொலிசெய்து, கரத்தொடு கரங்களை புடைத்து-கைகளோடு கைகளை அறைந்துகொண்டு,

கண்களை நெருப்பு எழ விழித்து - தீப்பொறி பறக்க(ப் பெருங்கோபத்தோடு) கண்விழித்துப்பார்த்து, வாய் மடித்து - வாயை மடித்துக் கொண்டு [உதட்டைக் கடித்துக்கொண்டு], நிற்கின்றார் - நிற்பவரானார்கள்; (எ-று.)

கீழ்க்கவியில் சூர்ப்பணகையைக் கண்ட அரக்கியரது நிலைமையைக் கூறி, இக்கவியில் அவளைக்கண்ட அரக்கரது நிலைமையைக் கூறினார். கரத்தொடு கரங்களைப்புடைத்து அசனியாமென இரைத்தனர் எனமாற்றி, கைகளோடு கைகளை அறைந்து அதனால் இடியென்று சொல்லும்படி பேரொலிசெய்தவர்களா யென்று உரைத்தலு மொன்று. (586)

28. இந்திரன் [1]மேலதோ வுலக மீன்றபேர்
அந்தணன் [1]மேலதோ வாழி யானதோ
சந்திர மௌலிபாற் [2]றங்கு மேகொலோ
அந்தர [3]மிதுவென வழல்கின் றார்சிலர்.

(இ-ள்.)—சிலர்-சில அரக்கர்கள்,—'இது அந்தரம்-இத்தீமை, இந்திரன்மேலதுஓ-தேவேந்திரனிடத்ததோ? உலகம் ஈன்ற பேர் அந்தணன் மேலதுஓ - உலகத்தைப்படைத்த பெருமையையுடைய பிரமனிடத்ததோ? ஆழியானதுஓ - சக்கராயுதத்தையுடைய திருமாலினிடத்ததோ? சந்திர மௌலிபால் தங்கும் கொல்ஓ - சந்திரனைத் தரித்த முடியையுடைய சிவனிடத்தில் பொருந்துவதோ?' என்று - என்றுசொல்லி,—அழல்கின்றார் - மனங்கொதிக்கின்றவரானார்கள்;

இங்குக் குறித்த இந்திரன் முதலிய நால்வரன்றிப் பிறரெவரும் இராவணனுக்குச் சிறு தீங்குஞ்செய்யவல்லரல்ல ரென்ற துணிவினால் இங்ஙனம் கருதுவாராயினர். அந்தரம்-சூர்ப்பணகையை மூக்கு முதலியன அறுத்துத் தனியே துரத்துதல்; அடுத்த கவியில் 'இது' என்பதும் அது. சந்திரமௌலி-வேற்றுமைத்தொகையன்மொழி. ஆழியான் என்பதற்கு-கடலிற்பள்ளிகொள்பவ னென்றும், கடல்போலுங் கருநிறமுடையா னென்றும் பொருள் கொள்ளலாம். பிரமன் முதலியமூவரை உலகமீன்ற பேரந்தணன், ஆழியான், சந்திரமௌலி என்ற சொற்களாற் குறித்தது-அவரவரது ஆற்றலைக் காட்டுதற்கென்க, இந்திரனென்ற பெயரும்-மிக்கஐசுவரியமுடைய னென்னுங் காரணப்பொருள் தருவதாதலால், அவனது சிறப்பைப் புலப்படுத்துவதாம். பி-ம்:—[1]பாலதோ. [2]தங்குமேகொலிவ். [3]என்று நின்று. (587)

29. [1]செப்புறற் குரியவர் தெவ்வர் யாருளர்
முப்புறத் துலகமு மடங்க மூடிய
இப்புறத் தண்டத்தோர்க் [2]கியைவ தன்றிது
அப்புறத் [3]தண்டத்தோ ராமென் றார்சிலர்.

(இ-ள்.)—சிலர்—,—'செப்புறற்கு உரியவர் தெவ்வர் யார் உளர்-இவ்வண்டத்தில் இன்னாரென்றுசொல்லப்படுதற்கு உரியவரான

பகைவர் (இராவணனுக்கு) எவர் இருக்கின்றனர்? [எவருமில்லை]; (ஆதலால்), முப்புறத்து உலகம்உம் அடங்க மூடிய இப்புறத்து அண்டத்தோர்க்கு இது இயைவது அன்று - மூன்றுவகையுலகங் களையும் உள்ளடங்கும்படி கவிந்துள்ள இவ்வண்டகோளத்திலுள் ளார்க்கு இங்ஙனஞ்செய்தல் சாத்தியமன்று; (ஆதலின், மற்று இது செய்தவர்), அப்புறத்து அண்டத்தோர் ஆம்-வேறு அண்டத்தில் உள்ளவராதல்கூடும்,' என்றார்-என்றுசொன்னார்கள்; (எ-று.)

அப்புறத்தண்டம்-பகிரண்டம், வெளியண்டம். ஆம் என்றது- இடைச்சொல் தன்மைப்பட்டு, ஊகித்தற்பொருளில் வந்தது; அசை யெனினுமாம்.பி-ம்:—[1]செப்புதற்குரியன. [2]இசைவது. [3]அண்டத் தோரார். சிலபிரதிகளில் "போரிலான் (31) என்றபாடல் இங்கு இருக்க, அதன்பின் "செப்புறற்கு" என்ற இப்பாடல் உள்ளது. ()

30\. என்னையே யிராவணன் றங்கை யென்றபின்
அன்னையே யென்றடி வணங்க லன்றியே
உன்னவே யொண்ணுமோ வொருவ ராலிவள்
தன்னையே யரிந்தன டானென் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—,—'என்னை ஏ-(இது) என்ன ஆச்சரியம்! இராவ ணன் தங்கை என்ற பின் - இராவணனுடைய தங்கையென்று சொன்னபின்பு, அன்னையே என்று அடி வணங்கல் அன்றி ஏ - (யாவரும்) 'எமதுதாயே!' என்று சொல்லி (வந்து இவளுடைய) பாதங்களில் விழுந்து நமஸ்கரிப்பதே யல்லாமல், ஒருவரால்-(எவரா யினும்) ஒருத்தரால், உன்ன ஏ ஒண்ணும்ஓ - (இவளுக்குத் தீங்கு செய்ய) நினைத்தற்காயினுங் கூடுமோ? [கூடாதென்றபடி]; (ஆத லால்), இவள் தன்னை ஏ தான் அரிந்தனள் - இச்சூர்ப்பணகை தன்னைத்தானே (மூக்கு முதலியன) அறுத்துக்கொண்டவளாதல் வேண்டும்,' என்றார்-என்று சொன்னார்கள்; (எ-று.)

இராவணன் தங்கை யென்றபின் - இவள் இராவணனது தங்கை யாதலால் என்றபடி. 'உன்னவே' என்ற இழிவுசிறப்பு ஏகாரத்தால், வாயாற் சொல்லுதற்கும் தொழிலாற்செய்தற்கும் ஆகா தென்பது நன்குவிளங்கும். (589)

31\. போரிலான் புரந்தர னேவல் [1]பூண்டனன்
ஆருலா நேமியா னாற்ற றோற்றுப்போய்
நீரினா [2]னெருப்பினான் பொருப்பி னானினி
யார்கொலா மீதென வறைகின் றார்சிலர்.

(இ - ள்.)—சிலர்—,—'புரந்தரன்-தேவேந்திரன், போர் இலான்- (இராவணனோடு) போர்செய்யமாட்டாதவனாய், ஏவல் பூண்டனன்- (இவனுக்குக்) குற்றேவல்செய்தலை மேற்கொண்டிருக்கிறான்; ஆர் உலாம் நேமியான் - ஆரங்கள்விளங்குகிற சக்கராயுதத்தையுடைய திருமால், ஆற்றல் தோற்றுப்போய் - வலிமையிழந்து சென்று, நீரினான்-கடலில் வாழ்பவனானான்; நெருப்பினான்-நெருப்பைக் கையி லேந்தியவனான சிவன், பொருப்பினான்-(இவனுக்கு அஞ்சி) மலையில் வாழ்பவனானான்; (ஆகவே), ஈது இனி யார் கொல்-இது (செய்தவர்)

வேறு யாவரோ?' என-என்று, அறைகின்றார் - சொல்லுகின்றவ ரானார்; (எ - று.)—ஆம்-அசை.

இந்திரன் போரில்தோற்று இராவணனுக்கு ஏவல்பூண்டமை பிரசித்தம். திருமாலும் சிவனும் இராவணனை எதிர்த்துத் தோற்று வலிமையொடுங்கின ரென்று சரித்திரமில்லையாயினும் அவர்கள் இவனை யாதொன்றும் ஊறுபடுத்தாமல், ஆங்காங்கு அமைந்திருத்தலையே கொண்டு, இராவணனுக்கு அஞ்சிக் கடலி லும் மலையிலும் புக்கு ஒளித்து வாழ்வதாக, அரக்கர்கள், செருக் கினால் கற்பித்துக்கூறினார்கள். மற்றைய பகைவர்களையெல்லாம் எளிதில் அழிக்கவல்லதாய்க் கையிலுள்ள சக்கரமும், நெருப்பும் இவனை யாதொன்றுஞ்செய்யமாட்டா வென்பதைப் புலப்படுத்தற்கு, அவர்களைச் சிறப்பிப்பார்போல 'ஆருலாநேமியான்,' 'நெருப்பினான்' என்றனர். 'ஆற்றல் தோற்றுப்போய்' என்பதை, 'நெருப்பினான் பொருப்பினான்' என்ற இடத்தும் கூட்டுக. சிவபிரான்கையில்நெருப்பு- தாருகவனத்து முனிவர்கள் அப்பிரானைக் கொல்லுமாறு அவன் மேற் செலுத்திய ஓமத்தீ; அன்றி, நெருப்பினான்-நெருப்புக்கண்ணை நெற்றியிலுடையா னென்றும், அனற்பிழம்பு வடிவானவ னென் றும், தீப்போலச் செந்நிறமுடையா னென்றும், காலாக்கினி ருத்திர மூர்த்தி யென்றும் கொள்ளவும் இடமுண்டு. இது செய்தவர் யாரென்னும் பொருளில், 'ஈதுயார்' என்றது, ஒருவகைச் சொல் விழுக்காடு. நான்காம்அடி முதலில் 'ஆர்' என்றும் பிரிக்கலாம். பி - ம்:—[1] பூண்டவன். [2] நெருப்பனான். (590)

32. சொற்பிறந் தார்க்கிது துணிய வொண்ணுமே
இற்பிறந் தார்தமக் [1] கியைவ செய்திலள்
கற்பிறந் தாளெனக் கரன்கொ லாமிவள்
[2] பொற்பறை யாக்கினன் [3] புகன்றென் றார்சிலர்.

(இ - ள்.—'சொல் பிறந்தார்க்கு-புகழ்பெற(உயர்குடியிற்)பிறந்த மகளிர்க்கு, இது-இச்செயல் [கற்பு அழிதல்], துணிய ஒண்ணுமே- துணிந்து செய்யக்கூடியதோ? [அன்று என்றபடி]; (ஆதலால்),இல் பிறந்தார் தமக்கு இயைவ செய்திலள் இவள் கற்பு இறந்தாள் என புகன்று -'நற்குடியிற் பிறந்தவர்க்குப் பொருந்திய செய்கைகளைச் செய்யாமல் இவள் கற்புநிலைகடந்தாள்' என்று கோபித்துச்சொல்லி, கரன்—, பொற்பு அறை ஆக்கினன் கொல் ஆம் - அழகு அழிந்தவ ளாகச் செய்தான்போலும்,' என்றார் சிலர் - என்று சில அரக்கர் சொன்னார்கள்; (எ - று.)

உயர்குடிப்பிறந்தார்க்குக் கற்பழிதல் பெருங்குற்ற மாதலால் இவள் ஒருகால் கற்பழிந்தவளாக, அதுகண்டு இவளுடன் பிறந்த வனான கரன் தானே இவளை வெறுத்துப் பழித்து இவளுடைய முக்கியமான சிலவுறுப்புக்களையறுத்து இவளழகைக் குலைத்திட்ட வனாதல் கூடும் என்று சிலர் ஊகித்துக்கூறினார்களென்க. பிறர் இவளை இங்ஙனஞ்செய்யமுடியாதாதலின், இவளுக்குப்பாதுகாவ லாக ஜநஸ்தாநத்தில் இராவணனாற் பெருஞ்சேனையோடு நியமித்து வைக்கப்பட்ட கரனென்ற இராக்கதவீரனே இதுசெய்தனனோ எனக்

கொண்டனர். செய்யுளாதலின், 'இது' எனச் சுட்டுப்பெயர் முன் வந்தது; [நன். பொது. 43.] ஒண்ணுமே, ஏ-எதிர்மறை, இனி முதல டிக்கு-புகழுண்டாகப்பெற்றார்க்கு இங்ஙனஞ் செய்தல் இயலுமோ வென்று உரைத்து, எத்துணைவல்லார்க்கும், இவளை இங்ஙனம் பரி பவப்படுத்தமுடியாதென்று கருத்துக்கொள்வாரும் உளர். இன் னும், இன்னவரென்று குறிப்பிட்டுச்சொல்லத்தக்கவர்க்கு இது செய்யக்கூடுமோ என்று பதவுரைகூறி, உலகத்தில் இது எவர்க் குஞ் செய்யக்கூடியதன்று என்று கருத்துக்கொள்ளுதலும் ஒன்று. பி - ம்:—[1] இசைவ. [2] பொற்பிறந்தாக்கினன், பொற்பிறந்தானென, பொற்பிறந்தாளெனப். [3] புகல்கின்றார். (591)

38. தத்துறு [1]சிந்தையர் தளருந் தேவரிற்
பித்துற [2]வல்லரே பிழைப்பில் சூழ்ச்சியார்
முத்திறத் துலகையு முடிக்க வெண்ணுவார்
இத்திறம் [3]புணர்த்தன ரெங்கின் றார்சிலர்.

(இ - ள்.) 'தத்து உறு சிந்தையர் - தடுமாற்றம் பொருந்திய மனமுடையவர்களாய், தளரும் - சோர்வடைகிற, தேவரில்-தேவர் களுள், வல்லரே - வல்லமையுடைய சிலர்தாம், பித்து உற - பைத் தியம் மிகுதலால், பிழைப்பு இல் சூழ்ச்சியார் - (தாம்) பிழைத்து வாழ்வதற்கு இடமில்லாத ஆலோசனையைக் கொண்டவர்களாய், மு திறத்து உலகைஉம் முடிக்க எண்ணுவார் - (தம்மை மாத்திரமே யன்றி) மூவகைப்பட்ட உலகங்களையும் ஒழிக்கக்கருதியவர்களாய், இ திறம் புணர்த்தனர்-இங்ஙனஞ்செய்தவராதல்கூடும்,' என்கின்றார் சிலர் - என்று சிலர் சொல்பவரானார்கள்; (எ - று.)

தேவர்கள் இராவணனுக்குப் பயந்து பலவிதமான மனச்சஞ் சலத்தை யடையும்பொழுது, அவர்களில் திறமையுள்ள சிலர் அச்சஞ் சலத்தால் மிக்க பித்துக்கொண்டு அதனால் அறிவுதடுமாறி நல்ல ஆலோசனையையும் நல்லதொழிலையும்விட்டுத் தங்கள் வல்லமையைத் தீயவழியிற் செலுத்துபவராய்த் தமக்கும் தமது செயல்காரணமாக உலகங்களுக்கும் உடனே அழிவுநேருமே என்பதையுங் கருதாமல், தாமும் உலகங்களும் அழிந்திடுமாறு இங்ஙனம் அவனது தங்கை யான இவளுக்குத் தீங்குஇழைத்திருக்கலாமென்று சிலர் ஊகித் தார்களென்க. இதில், பைத்தியம்பிடித்தாலன்றி இப்படி எவரும் செய்யாரென்பதும், இப்படிச் செய்தாரை இராவணன் சினந்து அழியாது விடானென்பதும், அக்கோபாவேச மிகுதியால் எல்லா வுலகங்களையுமே அவன் அழித்திடக்கூடுமென்பதும் தோன்றும். வல்லரே, ஏ - உயர்வுசிறப்போடு, பிரிநிலை.

இனி, இக்கவிக்கு - தடுமாற்றம் பொருந்திய மனமுடையவர்க ளாய்ச் சோர்வடைந்திருக்கிறதேவர்களில் (யாராவது இவளுக்குத் தீங்கு செய்யும்படியான) பித்தகுணத்தை அடையமாட்டுவரோ? [மாட்டார்]; ஆதலின், தவறுதலில்லாத ஆலோசனை யுடையவர் களும் மூன்று உலகத்தையும் அழிக்கக் கருதும் வல்லமையுடையவர் களுமாகிய பிறர் சிலரே இவ்வாறு செய்தனர்போலும்என்றும்,

தேவர்களில் தாம் பிழைக்கும் உபாயமற்றவர்களாய்ப் பித்தத்தை யுடையவர் உண்டோ? [இல்லை]; மூன்று உலகத்தையும் அழிக்க நினைக்கின்றவர்கள் தாம் இவ்வாறு செய்தனர் என்றும் உரைப்பாரு முளர். இவ்வுரைகளுக்கு, ஏ-எதிர்மறை. அன்றியும், மனந் தடுமாறிச் சோர்கிற தேவர்கள்போல மயக்க மடையாதவர்களும் ஆலோசனை தவருதவர்களும் அரியபெரிய தொழில் செய்யும் நோக்கமுடையவர்களுமானவர்களே இக்காரியஞ் செய்தார்கள் என்று உரைத்தலும் உண்டு; இப்பொருளுக்கு, பித்து உற அல்லர் எனப்பிரித்து, தேற்றேகாரத்தை 'எண்ணுவார்' என்பதனோடு கூட்டவேண்டும். பி - ம்:—[1]சிந்தையாய்த். [2]வல்லரேல். [3]புணர்த்தவர். (592)

34\. இனியொரு கற்பமுண் [1]டென்னி னன்றியே
வனைகழல் [2]வயங்குவாள் வீரர் வல்லரோ
[3]பனிவருங் கானிடைப் பழிப்பி னோன்புடை
[4]முனிவர்தம் வெகுளியின் [5]முடிபென் றூர்சிலர்.

(இ - ள்.) 'இனி ஒரு கற்பம் உண்டு என்னின் அன்றிஏ-இனி வேறொருகற்பகாலம் உண்டாயினு லன்றி [இக்கற்பகாலத்தில்], வனை கழல் வயங்கு வாள் வீரர் வல்லர்ஓ - தரித்த வீரக்கழலையும் விளங்குகிற ஆயுதத்தையுமுடைய வீரர்கள் (இத்தொழில் செய்ய) வல்லமையுடையவர்களோ? [அல்ல ரென்றபடி]; (ஆதலால், இனி), பனி வரும் கானிடை - அச்சமுண்டாதற்கு இடமான காட்டில், பழிப்பு இல் நோன்பு உடை - குற்றமில்லாத தவவொழுக்கத்தையுடைய, முனிவர் தம் - இருடிகளது, வெகுளியின் - கோபத்தின், முடிபு-பயனேயாம்,' என்றூர் சிலர் - என்றுசிலர்சொன்னூர்கள்; (எ-று.)

கற்பம் = கல்பம்: வடசொல்: காலத்தின் ஒரு பேரெல்லை; பிரமனது ஆயுட்காலம். இனி, மற்றொரு கற்பத்தில் எவரேனும் உண்டாயினால் எங்ஙனமாமோ? அறியோம்; இக்கற்பத்தில் எத்துணைச் சிறந்தவீரரும் இராவணனை யெதிர்க்கவல்லா ரில்லை; ஆதலால், இது ஆற்றலாற் பெரியரான வீரரெவரும் செய்ததன்று; தவத்தாற் பெரியரான முனிவர் கோபித்துச் சபித்ததனாலாகியதே என்றன ரென்க. முனிவர்கள் நிறைமொழிமாந்தரானதாலும் "குணமென்னுங் குன்றேறி நின்றூர் வெகுளி, கணமேயுங்காத்த லரிது" ஆதலாலும், ஐந்தவித்தாராற்றல் அளவிட வொண்ணு தாதலாலும், அவர்களில் எவரேனும் சாபத்தால் இங்ஙனஞ் செய்திருக்கலாமென்று கொண்டார்கள். இராவணனது நீடித்த ஆயுளுடைமையைக் காட்டும்பொருட்டு, கற்பத்தை யெடுத்துக் கூறினூர். நோன்பு - விரத அனுட்டானம். தவத்துக்குப் பழிப்பு - கூடாவொழுக்கம் முதலியன. பி-ம்:—[1]என்னில். [2]வழங்கு. [3]பனிவரு. [4]முனிவரர். [5]முடிவு. (593)

35\. கரையறு திருநகர்க் கருங்க ணங்கைமார்
நிரைவளைத் [1]தளிர்க்கர நெரித்து நோக்கினர்
பிரையுறு பாலென நிலையிற் பின்றிய
உரையின ரொருவர்மு னொருவ [2]ரோடினர்.

(இ - ள்.) கரை அறு திரு நகர் - எல்லையற்ற செல்வத்தை யுடைய அவ்விலங்காபுரியிலுள்ள, கரு கண் நங்கைமார் - கரிய கண்களையுடைய இராக்கத மகளிர், நோக்கினர் - (சூர்ப்பணகையின் நிலையைப்) பார்த்தவர்களாய், நிரை வளை தளிர் கரம் நெரித்து - (விசனமிகுதியால் இன்னதுசெய்வதென்று அறியாமல்) வரிசைப் பட்ட [பல] வளையல்களை யணிந்த தளிர்போல மெல்லிய தங்கள் கைகளை நெரித்துக்கொண்டு, பிரை உறு பால் என - பிரையிடப் பெற்ற பால்போல், நிலையின் பின்றிய - (தமது இயற்கை) நிலைமை யினின்று தடுமாறிய, உரையினர் - வார்த்தையையுடையவர்களாய், ஒருவர் முன் ஒருவர் ஓடினர் - ஒருத்தருக்குமுன் ஒருத்தராய் ஓடி வந்தார்கள்; (எ - று.)

பெருநகரமான இலங்கைநகரத்து அரக்கியர் சூர்ப்பணகையின் நிலையை யறிந்து கைகளை நெரித்த வண்ணம் தம்நிலை மாறுபட்டுத் தடுமாற்றப் பேச்சுடனே ஒருவர்முன்னொருவர் ஓடி வரலானார்களென் பதாம். பிரையுறுதல்-பால் இயல்புமாறும்படி சிறிதுமோர்சேர்க்கப் பெறுதல். பி - ம்:—[1] தளிர்க்கைகள். [2] முந்தினர். (594)

36. முழவினில் வீணையின் [1]முரனல் யாழினில்
தழுவிய குழலினிற் சங்கிற் றாரையில்
எழுகுர லின்றியே யென்று மில்லதோர்
அழுகுரல் பிறந்ததவ் விலங்கைக் கன்றரோ.

(இ - ள்.) முழவினில்-மத்தளத்தினின்றும், வீணையில்-வீணையி னின்றும், முரல் - இனிது இசைக்கின்ற, நல் யாழினில் - சிறந்த யாழினின்றும், தழுவிய குழலினில் - (எல்லாப்பிராணிகளையும்) தன் வசமாகச் செய்கின்ற புள்ளாங்குழலினின்றும், சங்கில் - சங்கவாத்தி யத்தினின்றும், தாரையில் - எக்காளத்தினின்றும், எழு - (நாள் தோறும்) உண்டாகிற, குரல் - மங்கலத்தொனி, இன்றியே - இல்லா மலே, என்றுஉம் இல்லதுஓர் அழு குரல் - (இதுவரையில்) எந்நாளும் இல்லாததோர் அழுகைச்சத்தமானது, அன்று - அப்பொழுது, அ இலங்கைக்கு - அந்த இலங்காபுரியில், பிறந்தது - உண்டாயிற்று; (எ - று.)—அரோ - ஈற்றசை.

அவ்வூரில் எப்பொழுதும் ஆங்காங்கு உல்லாசமாக மத்தளம் முதலிய பலவகை மங்களவாத்தியங்களை முழக்கியெழுப்பும் இசை யொலி யாவும் அப்பொழுது அடங்க, ஒருநாளுமில்லாத புதிய அழு குர லொன்றே மிக்கதென்பதாம். வீணையும் யாழும் வேறு வேறு இசைக்கருவிப்பெயராக வழங்குதலும் உண்டு. எழுகுரல் - ஸ ரி க ம ப த நி என்னும் ஏழுஸ்வரங்களின் வடிவமானதொனி யென்றுங் கூறுவாரும் உளர். பி - ம்:—[1] முரளி. (595)

37. கள்ளுடை வள்ளமுங் களித்த தும்பியும்
உள்ளமு மொருவழிக் கிடக்க வோடினார்
வெள்ளமு நாணுற விரிந்த கண்ணினார்
தள்ளுறு மருங்கினர் தழீஇக்கொண் டேகினார்.

(இ - ள்.) வெள்ளம்உம் - கடலும், நாண் உற - (பரப்பில் ஒப்பாகாது) வெட்கமடையும்படி, விரிந்த - விசாலமாகவுள்ள, கண்ணினூர் - கண்களையுடைய இராக்கதமகளிர்,—கள் உடை வள்ளம்உம்-மதுவையுடைய கிண்ணங்களும், களித்த தும்பிஉம் - (அம்மதுவையுண்டதனூற்) களிப்புற்ற வண்டுகளும், உள்ளம்உம் - (அம்மதுவினிடத்து விருப்பமுடைய தமது) மனமும், ஒருவழி கிடக்க - ஒருபக்கத்திலேயிருக்க, ஓடினூர் - ஓடிவந்து, தள்ளுறும் மருங்கினர் - (அங்ஙனம் ஓடிவருகையில் உண்டான சிரமத்தால்) துவண்ட இடையையுடையவர்களாய், தழீஇ கொண்டு ஏகினூர்-(ஒருவரை யொருவர்) ஆதாரமாகத் தழுவிக்கொண்டு செல்பவரானூர்கள்; (எ-று.)

நிரம்பக் குடித்துக் களிமயக்கங் கொண்ட வண்டுகள் நீங்காது மொய்க்கப்பெற்ற கள்ளைச் சில இராக்கதமாதர்கள் மிக்க விருப்பத்தோடு உண்டுகொண்டிருக்கையில், சூர்ப்பணகையின் கதறுதலைச் செவியுற்றதனூல், அதனை அங்ஙனமே விட்டு வெகுவிரைவாக ஓடிவருகையில் தமது இடை வருந்தவும் ஒருவரையொருவர் ஆதாரமாகப் பற்றிக்கொண்டே விரைந்து வருவாராயின ரென்க. இதில், அவர்களுக்கு மதுவை விட்டுச்செல்ல மனம்வராமையும், சூர்ப்பணகைக்கு நேர்ந்த துன்பத்தை விசாரியாமலிருப்பதற்கு இயலாமையும், அங்ஙனம் விசாரிப்பதிலுள்ள ஊக்கத்தால் தமது உடல்மெலிவையும் பொருள் செய்யாமையும் தோன்றும். 'களித்த தும்பி' என்றதன் குறிப்பால், அவர்களுள்ளம் மதுபானஞ் செய்து களித்தில தென்பது தோன்றும். மூன்றுமடி - "கடலினும் பெரிய கண்கள்" என்றவாறு அவர்களுடைய கண்களின் பரப்பை உயர்வுநவிற்சி வகையால் வருணித்தவாறும்.

இனி இக்கவிக்கு, தள்ளுறு மருங்கினர்-இயற்கை மெலிவாலும் மற்றையவயவங்களின் பாரத்தாலும் இருமருங்குஞ் சாயும் இடையையுடைய அரக்கர்மகளிர். கள்வைத்த கலமும் அதில் களிப்போடு மொய்த்துள்ள ஈக்களும் அதையுண்டு களித்த மனமும் ஓரிடத்தில் தங்க, அரக்கமகளிர் யாற்றுவெள்ளமும் வெள்கத் துயரநீர்பெருகப் பெற்ற கண்களையுடையவர்களாய், சூர்ப்பணகையைத் தழுவிக்கொண்டு சென்றூர்க ளென்று பொருள்கூறுதலு முண்டு. இப்பொருளில், 'களித்த' என்பதை, உள்ளத்துக்குங் கூட்டுக. துன்புற்றவரைத் தழுவித் தேற்றுதல் இயல்பே. (596)

38. நாந்தக [1]வுழவரை நாட்டுந் தண்டத்தர்
காந்திய மனத்தினர் புலவி கைம்மிகச்
சேந்த[2]க ணதிகமுஞ் சிவந்து நீருக
வேந்தனுக் கிளையவ டாளின் வீழ்ந்தனர்.

(இ - ள்.) (மற்றுஞ்சில மகளிர்),—நாந்தகம் உழவரை - வாளுழவரான (தங்கள்) கணவரிடத்து, நாட்டும் தண்டத்தர் - நிலைநிறுத்துந் தண்டனையுடையவர்களும், காந்திய மனத்தினர் - (அவர்கள்பால்) வெதும்பிய மனத்தையுடையவர்களுமாய், புலவி கைம் மிக - ஊடல் மிகவும் அதிகப்பட, சேந்த-(கோபத்தாற்) சிவந்துள்ள, கண்-(தங்கள்) கண்கள், அதிகம்உம் சிவந்து - மிகவுஞ் சிவக்கப்பெற்று, நீர் உக -

நீரைச் சிந்த,—வேந்தனுக்கு இளையவள் தாளின்-(தங்களுக்கு) அரசனாகிய இராவணனது தங்கையான சூர்ப்பணகையின் பாதங்களில், வீழ்ந்தனர்—; (எ - று.)

சிலமகளிர் தமதுகணவரோடு கூடும்பொழுது அக்கூடலின்பம் சிறத்தற் பொருட்டு ஊடல் கொள்ளலுற்று, தங்கள் பக்கல் அன்பின்மை செய்தனராகச் சிலபிழைகளை அக்கணவர்மேலேற்றி மனத்தாபப்பட்டுக் கோபத்தாற் கண்சிவக்க அவ்வூடலை முதிரச் செய்து அவர்களைத் தாம் தண்டிக்கும்படி நின்ற நிலையில், சூர்ப்பணகையின் கதறலைக் கேட்டு அதனால் மனம்மாறி, அந்தப் பிரணய கலகத்தை அப்படியே விட்டு, கண்கலங்கி நீர்சொரிய ஓடி வந்து அவள்காலில் விழுந்தன ரென்க. நாந்தகவுழவர்-வாளாகிய கலப்பையைக் கொண்டு பகைவ ருடலாகியநிலத்தை யுழுது போராகிய பயிரைச் செய்து வெற்றியாகியவிளைவைப் பெறுபவ ரென்க. உழவரை - உருபுமயக்கம். கைம்மிக-எல்லைமிக. பி - ம்:—[1] உழவர் மேனாட்டுந், உழவன்மேனடு, உழவன்மேனடுந். [2] தண்மதிமுகனு. ( )

39\. பொற்றலை மரகதப் பூக [1]நோவுறச்
சுற்றிய மணி[1]வடந் [3]தூங்கு லூசலின்
முற்றிய [4]வாடலின் [5]முனிவுற் றேங்கினார்
சிற்றிடை [6]யலமரத் தெருவு சேர்கின்றார்.

(இ - ள்.)—(மற்றும் சில இராக்கதஸ்திரீகள்), பொன் தலை - பொன்னிறமான முதிர்ந்த காய்களை மேலிடத்திலுடைய, மரகதம் பூகம்-பச்சையிரத்தினநிறமான பாக்குமரங்களில், நோவுற-வருந்தும்படி, சுற்றிய-கட்டப்பட்ட,மணி வடம்-நவரத்தினங்களிழைத்த வடங்களிலே, தூங்கும்-தொங்குகிற, ஊசலின்-ஊஞ்சலிலிருந்து, (சூர்ப்பணகையின் கதறலைக்கேட்டலும்), முற்றிய ஆடலின்-மிகுதியாக ஆடுதலில், முனிவுஉற்று - வெறுப்புக்கொண்டு, ஏங்கினார்-விசனமுற்றவர்களாய், சிறு இடை அலமர-நுண்ணிய (தங்கள்) இடை துவண்டு வருந்த, தெருவு சேர்கின்றார்-தெருவில் வந்து சேர்பவரானார்கள்; (எ - று.)

சிங்காரப்பூஞ்சோலையிற் பொன்னிறமான பழுக்காய்க்குலைகளையுடைய பசியபாக்குமரங்களிலே பொருந்தக் கட்டப்பட்டுள்ள இரத்தினம் பதித்த பொன்வடங்களில் மாட்டப்பட்ட ஊசலில் உட்கார்ந்து உல்லாசமாக விசையுடன் ஆடிநின்ற சிலமகளிர், சூர்ப்பணகையின் கதறலைக் கேட்டவுடன் அவ்வூஞ்சலாட்டத்தை வெறுத்தொழிந்து அவளை விசாரித்தற்காகத் தமது மெல்லிய மேனி வருந்தச் சோகத்தோடு தெருவிற்கு வந்தார்க ளென்க. மரத்திற்கும் உயிருண்டென்ற கொள்கைபற்றி 'பூகநோவுற' என்றது. 'பொற்றலை மரகதப்பூகம்' என்பதற்கு-பொன்னினாலே மேலிடமும், மரகதரத்தினத்தினாலே மற்றையதுமாக அமைக்கப்பட்ட செயற்கைப் பாக்குமர மென்றுரு முளர். பி-ம்:—[1]நோவுற. [2]வடத். [3]தூங்கல். [4]பாடலை அல்லது ஆடலை. [5]முனிவுற்றேகினர். [6]அலம்வர. (598)

40. எழுவென மலேயென [1]வேந்து தோள்களைத்
[2]தழுவிய வளைத்தளிர் [3]நெகிழத் தாமரை
முழுமுகத் திருகயன் முத்தி ஞலிகள்
[4]பொழிதரச் சில[5]ருளம் பொருமி [6]விம்முவார்.

(இ - ள்.)—சிலர்-சிலமகளிர்,—எழு என-தூண்போலவும், மலே என-மலேபோலவும், ஏந்து-வளர்ந்துள்ள, தோள்களே - (தமதுகணவரது) புயங்களே, தழுவிய-கட்டியமைத்த[ஆலிங்கனஞ் செய்த], வளே தளிர்-வளேயல்களேயணிந்த தளிர்போன்ற(தங்கள்) கைகள், நெகிழ-நெகிழ்ச்சியடையவும்,—தாமரை முழு முகத்து - தாமரைமலர் போன்ற அழகுநிறைந்த முகத்திலுள்ள, இரு கயல்-இரண்டுகயல் மீன்போன்ற கண்கள், முத்தின் ஆலிகள் பொழிதர-முத்துக்கள் போன்ற நீர்த்துளிகளேச் சிந்தவும், உளம் பொருமி விம்முவார்-மனம் வருந்தி அழுபவராஞர்கள்; (எ - று.)

சிலமகளிர் கணவர்தோள்களே அன்போடு ஆலிங்கனஞ் செய்கையிற் சூர்ப்பணகையின் கதறலேக் கேட்டு அவ்வளவில் கணவரைத் தழுவி யணேத்த கைகளே நெகிழவிட்டுக் கண்கள் நீர் சொரிய மிகப் புலம்புவாராயின ரென்க. இங்ஙனங் கூறியதனல், இராக்கத மகளிர்க்குத் தங்களரசன் தங்கையான சூர்ப்பணகையினிடத்து உள்ள மரியாதையும் அச்சமும் தோன்றும். தளிர்-கைக்கும், கயல்-கண்ணுக்கும் உவமவாகுபெயர்; வளே, முகத்து என்ற அடைமொழிகள், தளிர் கயல் என்றவற்றின் பொருளே விளக்க வந்தன; இவை, பிறகுறிப்பின்பாற்படும். 'முழுமுகத்து இருகயல்' என்பதற்கு-முகம் முழுதும் பரவியுள்ள இரு கண்களென்று பொருள்கொள்வாரும் உளர். பி-ம்:—[1]எழுந்த. [2]தழுவி. [3]நெகிழ்ந்த. [4]பொலிதர. [5]உளர் [6]விம்மிஞர். (599)

வேறு.

41. நெய்ந்நிலேய வேலரச [1]னேருநரை யில்லான்
இந்நிலே யுணர்ந்தபொழு தெந்நிலேய னென்னு
மைந்நிலே நெடுங்கண் மழை வா[2]னிலேய தாகப்
பொய்ந்நிலே மருங்கினர் புலம்பினர் புரண்டார்.

(இ - ள்.)—'நேருநரை இல்லான்-(தன்னே) எதிர்ப்பவர் எவரையும் பெறுதவஞன், நெய் நிலேய வேல் அரசன்-(பகைவரது)நிணம் தோயப்பெறற வேலாயுதத்தையுடைய (நமது) அரசஞன இராவணன், இ நிலே உணர்ந்த பொழுது - (தன் தங்கையான சூர்ப்பணகைக்கு நேர்ந்த) இந்தநிலேமையை அறியும்பொழுது, எ நிலேயன்-எந்த நிலேமையையுடையவஞவனே?' என்னு-என்று சொல்லிக் கொண்டு,—பொய்நிலே மருங்கினர் - பொய்யாகியநிலேமையுள்ள இடையையுடைய சில இராக்கதமகளிர், மை நிலே நெடு கண் மழை வான் நிலேயது ஆக-மையிடப்பெற்ற நீண்ட (தங்கள்) கண்கள் (சொரியும் நீர்பபெருக்கு) மேகத்தின் மழையின் தன்மையை யுடையதாம்படி, புலம்பினர் புரண்டார் - அழுது கீழ் விழுந்து புரண்டார்கள்; (எ - று.)

'நமது அரசன் எவருமெதிர்ப்பவரில்லாத தனிவீரனன்றோ? அப்படிப்பட்டவன் இப்படி ஓர் எதிரி நேர்ந்ததை அறிந்தால் எவ்வளவுகோபங்கொண்டு அவனை யாதுசெய்யமாட்டான்?' என்று சொல்லிக்கொண்டு சிலமகளிர் கண்களினின்று தாரைதாரையாக நீர்பெருக அழுதுபுரண்டன ரென்க. உத்தமவிலக்கணத்தின்படி இடை மிகச்சிறுத்துள்ள தென்பதைக் கவிகள் உயர்வுநவிற்சி யாக இடையில்லை யென்று வருணித்தல் இயல்பு: ஆதலால், பொய்த்தோற்றமுடைய இடையையுடையவரென்றார். பகைவர் நிணம், அவரையழித்தற்கு அவருடம்பில் வேல் தைத்தபோது அதில்ஒட்டியதென்க. இனி, நெய்ந்நிலைய வேல் - (பளபளப்பு முதலிய வற்றிற்காக) நெய் நிலையாகநிற்றலையுடைய [நெய்தடவிய] வேல் எனினுமாம். மைந் நிலை என்பதற்கு - கரிய வடிவமுடைய என்றும் உரைக்கலாம். நேருநரை - தன்னையொப்பாரை என்றுமாம். பி - ம்:— [1]நேருணகை. [2]நிலையவாக, நிலையமாக.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - பெரும்பாலும் நான்காஞ்சீ ரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (600)

42. மனந்தலை வருங் [1]கனவி னின்சுவை மறந்தார்
கனந்தலை வருங்குழல் [2]சரிந்து [3]கலை சோர
நனந்தலைய கொங்கைக டதும்பிட நடந்தார்
[4]அனந்தரிள மங்கைய ரழுங்கியயர் கின்றார்.

(இ - ள்.) அனந்தர் - நித்திரைசெய்துகொண்டிருந்த, இள மங்கையர் - இளமைப்பருவமுடைய (சில) இராக்கதமகளிர்,—(சூர்ப் பணகையின் கதறல் கேட்டதனால்), மனம் தலை வரும் கனவின் இன் சுவை மறந்தார் - மனத்தினிடத்தே தோன்றிய கனவிலே உண்டாகிற இனிய இன்பத்தையும் மறந்தவர்களாய்,—கனம் தலை வரும் குழல் சரிந்து - மேகத்தின் தன்மை முக்கியமாக அமையப் பெற்ற (தங்கள்) கூந்தல் நிலைகுலையப்பெற்று, கலை சோர - ஆடை நெகிழ்ந்திடவும், நனம் தலைய கொங்கைகள் ததும்பிட - அகன்ற இடத்தையுடைய தனங்கள் அசையவும், நடந்தார்-வெளிச்சென்று, அழுங்கி அயர்கின்றார்-மனம்வருந்திச் சோர்கின்றவரானார்கள்;

சிலமகளிர் நித்திரையில் கணவரோடு தாம் கூடிக்குலாவுவதாகக் கனவு கண்டுகொண்டு ஆனந்தமுற்றிருந்தபொழுது, இவள்கதறலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் துயில்விழித்து அக்கனவின்பத்தை மறந்தொழிந்து தாம் நின்றநிலையின்படியே கூந்தல்அவிழ ஆடை நெகிழப் பருத்தகொங்கைகுலுங்க வெளிவந்து மிகச்சோகிப்பவராயின ரென்க. மனந்தலை-மனத்தலை யென்பதன் மெலித்தல். இன் சுவை-சிருங்காரம்; இது - ஒன்பதுசுவைகளுள் முதலது. கநம் - வடசொல். அனந்த ரெனினும், அனந்தலெனினும் ஒக்கும்: இறுதிப் போலி- அனந்தர் என்பதற்கு - கட்குடிமயக்க மென்றும், மனந்தலை வரும் என்பதற்கு-(தங்கள்) மனத்தில் முதன்மையாக நினைக்கப்பட்டு வருகிற என்றும், கனம் தலைவரும் என்பதற்கு-நிறைவாகத் தலையி

லுள்ள என்றும் உரைப்பாரு முளர். பி - ம்:—[1]கணவரின். [2]ஒசிந்து. [3]கடை. [4]அனந்தல். (601)

43. அங்கையி னரன்கயிலை கொண்டதிற லையன்
தங்கைநிலை யிங்கிதுகொ லென்று தளர்கின்றார்
கொங்கையிணை செங்கையின் மலைந்துகுலை கோதை
மங்கையர்க ணங்கை[1]யடி வந்துவிழு கின்றார்.

(இ-ள்.) குலை கோதை மங்கையர்கள்-(செய்தியறிந்து) அவிழ்ந்த கூந்தலை யுடையரான (சில) அரக்கமகளிர்,—'அரன் - சிவபிரானது, கயிலை-கைலாசகிரியை, அம் கையின் கொண்ட- (தனது) அகங்கையி லெடுத்த, திறல்-வல்லமையுடைய, ஐயன்- (நமது) அரசனான இராவணனது, தங்கை-தங்கையான சூர்ப்பணகையினுடைய, நிலை-நிலைமை, இங்கு இது கொல்-இப்பொழுது இங்ஙனமாயிற்றோ?' என்று-என்று சொல்லி, தளர்கின்றார் - வருந்துகின்றவர்களாய்,—கொங்கை இணை செம் கையின் மலைந்து-(தமது) இரண்டு தனங்களையுஞ் சிவந்த(தமது) கைகளால் மோதிக்கொண்டு, நங்கை-அந்தச்சூர்ப்பணகையின், அடி-பாதங்களிலே, வந்து விழுகின்றார்-வந்து விழுகின்றவரானார்கள்;

'நம்மரசனுடைய தங்கைநிலை இவ்வாறாயிற்றோ!' என்று சில மங்கையர் கதறியவண்ணம் மார்பிலடித்துக்கொண்டு, சென்று கொண்டிருக்கும் அந்தச்சூர்ப்பணகையின் அடிகளில் விழுந்தார்க ளென்பதாம். பி-ம்:—[1]எதிர். (602)

44. இலங்கையில் விலங்குமிவை யெய்தலில வென்றும்
வலங்கையி லிலங்குமயின் மன்னனுள னென்று
நலங்கையி லகன்றதுகொ னம்மினென நைந்தார்
[1]கலங்கலி னலங்கணிணை வாரிகலுழ் கின்றார்.

(இ-ள்.) 'வலம்-வலியதாய், கையில் இலங்கும்-கையிலே விளங்குகிற, அயில்-வேற்படையுடைய, மன்னன்-(நமது) அரசனாகிய இராவணன், உளன் என்று-உள்ளானென்றகாரணத்தால், இலங்கையில் - இலங்கை நகரத்தில், விலங்குஉம் - மிருகங்களுங்கூட, என்றுஉம் - எப்பொழுதும், இவை எய்தல்இல - இப்படிப்பட்ட துன்பங்களை அடைதலில்லை: (அப்படியிருக்க இப்பொழுது),நலம்-நன்மை, நம்மின் கையில் அகன்றதுகொல்-நம்மிடத்தினின்று கைவிட்டு நீங்கியதோ?' என-என்றுசொல்லி, நைந்தார்-வருந்தினவர்களாய், (சில அரக்க மாதர்), நல் அம் கண் இணை-மிக அழகிய (தங்கள்) கண்களிரண்டும், கலங்கலின்-கலங்கல் நீர்போல, வாரி கலுழ்கின்றார்-நீர்பெருகப் பெற்றவரானார்கள்; (எ - று.)

'நமது அரசனாணையால் விலங்குகளும் யாவராலும் யாதொரு தீங்கும் அடையாது நிற்கையில் அரசன் தங்கைக்கு இது நேர்ந்ததை நோக்குமிடத்து, அரக்கர்களைவிட்டு நன்மை நீங்கியதெனத் தோன்றுகின்றது' என்று சிலமகளிர் வருந்திக் கண்ணீருகுப்பாரா யினரென்க. இனி கலங்கலின் - மனங்கலங்குதலால் என்றுமாம். வலம் = பலம். இனி, வலங்கையில் என எடுத்து, வலக்கையில்என்று உரைப்பாரு முளர். அயில் மற்றையாயுதங்களுக்கும் உபலக்ஷணம்.

இராவணனுக்கு மயன் தன்மகளான மண்டோதரியை மணஞ் செய்துகொடுத்தபொழுது அவனுக்கு அதியற்புதமானதும், தவத்தினால் தான் வரமாகப்பெற்றதும், பகைவர்மீது பட்டால் வீண்படாததுமான ஒரு சிறந்த வேலாயுதத்தையும் கொடுக்க, அதனை இராவணன் மரியாதையோடுபெற்றனனென வரலாறு உள்ளதனால், அவன் 'வலங்கையிலிலங்கும் அயில் மன்னன்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டனனெனக்கொள்ளலாம். பி - ம்:—[1]கலங் கயினலங், கலங்கலினிலங், கலிங்கலில்கருங். (603)

## 45 —சூர்ப்பணகை இராவணனடியில் விழுந்து புரளுதல்.

என்றினைய வன்றுய ரிலங்கைநக ரெய்த
நின்றவ ரிருந்தவரொ டோடுநெறி தேடக்
[1]குன்றினடி வந்து [2]படி கொண்டலென மன்னன்
[3]பொன்றிணி கருங்கழல் விழுந்தனள் புரண்டாள்.

(இ - ள்.) என்று இனைய வல் துயர் - இத்தன்மையதான கொடிய துன்பத்தை, இலங்கை நகர் எய்த - இலங்காபுரியிலுள்ளார் அனைவரும் அடையும்படியாகவும், நின்றவர் இருந்தவரொடு ஓடும் நெறி தேட-(அவ்விராவணனது சபையில்) நின்றவர்களும் உட்கார்ந் திருந்தவர்களும் (திடுக்கிட்டு) ஓடிப்போகும்வழியை நாடும்படியாக வும், (சூர்ப்பணகை), குன்றின் அடி வந்து படி கொண்டல் என-மலை யின் அடிவாரத்திலே வந்து படிகிற மேகம்போல, மன்னன் பொன் திணி கரு கழல் விழுந்தனள் புரண்டாள் - இராக்கதராசனான இரா வணனது பொன்மயமாயமைந்த பெரிய வீரக்கழலையணிந்த பாதத் தில் விழுந்து புரண்டாள்; (எ - று.)

கீழ்க்கூறியவாறு இலங்கைமாநகரத்தவர் பெருந்துயரடைய, அந்தச்சபையில்நின்றவரும் இருந்தவரும் 'இப்போது இராவணன் பெருஞ்சீற்றம் கொள்வானாதலால் அதனால் நமக்கும் என்ன விளையு மோ?' என்று அஞ்சி ஓடும் நெறியைத் தேட, சூர்ப்பணகை மலையி னடிவாரத்துப் படியும் மேகம்போல இராவணன் பாதங்களில் விழுந் தாளென்க. குன்று-இராவணனுக்கும், அதன் அடி-இராவணனடிக் கும், கருமேகம் - சூர்ப்பணகைக்கும் உவமையாம். பொன்திணி கருங் கழல் - பாதத்துக்கு, அன்மொழித்தொகை. பி - ம்:—[1]குன்றினிடை. [2]படர். [3]பொன்றனிதருங்கழல், பொன்றிணிபொலங்கழல். (604)

## 46 —இதுமுதல் மூன்றுகவிகள் - அப்பொழுது உலகத்திலுண்டான குழப்பத்தைக் கூறும்.

[1]மூடின திருட் [2]படலை மூவுலகு முற்றச்
சேடனும் வெருக்கொடு சிரக்குவை நெளித்தான்
ஆடின குலக்கிரி யருக்கனு மயிர்த்தான்
ஓடின திசைக்கரிக ளும்பரு மொளித்தார்.

(இ - ள்.) மூ உலகும் முற்ற - மூன்றுஉலகங்களிலும் முழு தும், இருள் படலை மூடினது - இருளின்தொகுதி மூடிக்கொண்டது; சேடனும் - (கீழிருந்து பூமியைத்தாங்குகிற) ஆதிசேஷனும், வெரு

கொடு - அச்சங்கொண்டு, சிரம் குவை நெளித்தான் - (தனது) தலைகளின் கூட்டத்தை நெளித்தான்; குலம் கிரி - குலபருவதங்களும், ஆடின - அசைவுகொண்டன; அருக்கன்உம் - சூரியனும், அயிர்த்தான் - ஒளிமழுங்கினான்; திசை கரிகள் - திக்கஜங்களும், ஓடின - (தமது இடம் விட்டுப் பெயர்ந்து) ஓடலுற்றன; உம்பர்உம் - தேவர்களும், ஒளித்தார் - (அஞ்சி) ஒளித்துக்கொள்பவராயினர்; (எ - று.)

முதல்வாக்கியத்தால் - சந்திரன் நக்ஷத்திரம் அக்கினி முதலிய சுடர்கள்யாவும் இராவணன் கோபத்துக்கு அஞ்சி மறைந்திட்டனவென்றும், இரண்டாம் வாக்கியத்தால் - இராவணன் சினந்து நிலத்திற் காலூன்றியெழத்தொடங்கியதாலாகிய அதிர்ச்சி சேடனும் சிரம்நெளியுமாறு மிக்கதென்றும், மூன்றும் வாக்கியத்தால்-அந்த அதிர்ச்சியால் குலகிரிகளும் ஆடினவென்றும், நான்காம் வாக்கியத்தால் - சூரியன் அஸ்தமித்தானென்றும், மற்றைய இரண்டு வாக்கியங்களால் - விலங்குகளோடு தேவர்களோடு வாசியற அச்சங்கொண்டனரென்றும் கூறினர். அயிர்த்தான் என்பதற்கு - இது என்னோ என்று சங்கித்துத் திகைத்தானென்று பொருள்கொள்ளலாம். குலகிரிகள் - கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதநம் என்பன. சேஷன் என்ற வடசொல்- (பிரளயகாலத்திலும் அழிவில்லாமல்) மிச்சமாய் நிற்பவனென்று காரணப்பொருள்படும். ஆயிரந்தலைகளாதலால், 'சிரக்குவை' என்றார். படலை - படலமென்ற வடசொல் ஈறுதிரிந்தது. பி - ம்:—[1]மூடியது. [2]படலம். (605)

47. விரிந்த வலயங்கண் [1]மிடை தோள்படர மீதிட்டு
எரிந்த நயனங்க [2]ளெயிறின்புற [3]மெரிப்ப
நெரிந்த புருவங்களிடை நெற்றியினை முற்றத்
திரிந்த புவனங்கள்வினை தேவரு [4]மயிர்த்தார்.

(இ - ள்.) விரிந்த - ஒளிவீசுகிற, வலயங்கள் - வளைகள், மிடை - நெருங்கப்பெற்ற, தோள் - (இராவணனுடைய) தோள்கள், படர - (கோபாவேசத்தால்) உயரஎழவும்,—நயனங்கள் - (அவனுடைய) கண்கள், மீது இட்டு எரிந்த - (கோபமிகுதியால் நெருப்பு) மிகுதியாகப் பொங்கப்பெறவும்,—எயிறின் புறம் - பற்களின் வெளி, எரிப்ப-(வாயினின்று எழும் கோபாக்கினியால்) சுவாலைவீசவும்,—நெரிந்த புருவங்கள் - கோபத்தால் நெறித்த புருவங்கள், இடை நெற்றியினை முற்ற - (மேலேறி) நடுநெற்றியைச் சேரவும்,—(அக்கோபநிலையைக்கண்டு), புவனங்கள் திரிந்த - உலகங்களெல்லாம் நிலைமாறிச் சுழலலுற்றன; தேவர்உம் - தேவர்களும், வினை அயிர்த்தார் - இன்ன தொழில் செய்வதென்று அறியாமல் திகைத்தார்கள்; (எ - று.)

தோள்மீப்படர்தலும், நயனங்கள் எரிதலும், எயிற்றின்புறம் நெருப்புச் சுவாலை வீசுதலும், புருவம் நெரிந்து நடுநெற்றியிற் சேர்தலும்-சினக்குறிகள்: இங்ஙன் இராவணனிடத்துச் சினக்குறி தோன்றவே, புவனங்கள் நிலைதிரியத் தேவரும் அயிர்ப்பாராயினரென்க. எரிந்த-எரிந்தனவாக; பலவின்பால் முற்றெச்சம். [4]அயர்த்

தார் என்ற பாடத்துக்கு - தொழில்மறந்துசோர்ந்தன ரென்க. ஓசையின்பம்நோக்கி 'எயிற்றின்' எனத் தன்னொற்றிரட்டவில்லை. பி-ம்:—[1]மிகு. [2]எயிறன். [3]இமைப்ப, எறிப்ப. (606)

48. தென்றிசை நமன்றனொடு தேவர்குல மெல்லாம்
இன்[1]றிறுதி வந்தது நமக்கென [2]விருந்த
நின்[3]றுட னடுங்கி யுயிர்விம்மி நிலை[4]நில்லாது
ஒன்றுமுரை யாட[5]லில ரும்பரினொ டிம்பர்.

(இ - ள்.) தென் திசை நமன் தனொடு - தெற்குத்திக்குப் பாலகனை யமனுடன், தேவர் குலம் எல்லாம் - தேவர்களுடைய வகைகள் யாவும், இன்று நமக்கு இறுதி வந்தது என இருந்த - இப்பொழுது நமக்கு நாசம்நேர்ந்துவிட்டதென்று கருதி ஒடுங்கி நின்றன; உம்பரினொடு-மேலுலகத்தவர்களும், இம்பர்-இவ்வுலகத்தவர்களும், நின்று உடல் நடுங்கி - திகைத்துநின்று (அச்சத்தால் தமது) உடல் நடுக்கங் கொண்டு, உயிர் விம்மி - பெருமூச்செறிந்து, நிலை நில்லாது-ஒருநிலையில் நிற்கமுடியாமல், ஒன்றும் உரையாடல் இலர் - யாதொன்றும் பேசுதலின்றி (மௌனமாய்) நின்றார்கள்; (எ - று.)

இராவணனது பெருஞ்சீற்றத்தைக்கண்டு, யமன் முதலிய பெருந்தேவர் நமக்கு இன்றே யிறுதி வந்திட்டதென்று நடுநடுங்க, மற்றை உம்பரும் இம்பரும் உடல் நடுங்கப் பெருமூச்செறிந்த வண்ணம் பெரு மௌனங்கொண்டன ரென்பதாம். வந்தது - தெளிவும் விரைவுங்காட்டும் காலவழுமைதி. பி - ம்:—[1]உறுதி. [2]இருந்தார். [3]உயிர்நடுங்கியுடல், உடனடுங்கவுயிர். [4]நில்லார், இல்லாது. [5]இலது. (607)

## 49.—இராவணன் சூர்ப்பணகையை 'இது செய்தவர் யார்?' என்றல்.

மடித்தபில வாய்கடொறும் வந்துபுகை முந்தத்
துடித்த [1]தொடர் மீசைகள் [2]சுறுக்கொள வுயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்[3]கனல மேகத்து
இடித்தவுரு மொத்துரறி யாவர்செய லென்றான்.

(இ- ள்.)—மடித்த - (கோபத்தால்) உதடுமடிக்கப்பட்ட, பிலம் வாய்கள் தொறும் - பிலத்துவாரம்போல (ஆழ்ந்து அகன்று நீண்டுள்ள தனது) பத்து வாய்களிலும், புகை வந்து முந்த-(கோபாக்கினியின்) புகை எழுந்து வெளிச்செல்லவும்,—துடித்த தொடர் மீசைகள்-(படபடவென்று) துடித்த (நெடுந்தூரமளவும்) தொடர்ச்சியுள்ள மீசைமயிர்கள், சுறு கொள - தீப்பற்றும்படி, உயிர்ப்ப-(கோபாக்கினியோடு) பெருமூச்சு வெளிப்படவும்,—கடித்த - (கோபத்தால்) கடிக்கப்பட்ட, கதிர் வாள் எயிறு-கூர்மையும் ஒளியுமுள்ள பற்கள், மின் கனல-மின்னல்போன்ற ஒளியை வெளிவிடவும்,—மேகத்து இடித்த உரும் ஒத்து உராறி-மேகத்தினின்றும் இடித்த

இடியைப்போலப் பேரொலிசெய்து, யாவர் செயல் என்றான்-'இது யாருடைய செய்கை?' என்று வினவினான்; (எ - று.)

பெருஞ்சினங்கொண்டு 'இது யாவர் செயல்?' என்று பேரொலிபட வினவினானென்பதாம். 'வாயிற் புகை முந்த, மீசைகள் சுறுக்கொளவுயிர்ப்ப' என்ற இவை - சினத்தை விளக்க வந்த உயர்வுநவிற்சி. பிலம் - கீழறை: மலைக்குகையுமாம். மேலிட மென்று பொருளுள்ள மிசை யென்பது மீசையென விகாரப்பட்ட தென்றும், அது ஆகுபெயராய் வாயின்மேலுள்ள மயிரைக் குறிக்கு மென்றுங் கூறுவர். பி - ம் :—[1]சுடர். [2]சுருக். [3]கனல. (608)

## 50.—சூர்ப்பணகை விடை கூறுதல்.

கானிடை யடைந்துபுவி காவல்புரி கின்றார்
மீனுடை நெடுங்கொடியி னோ[1]னனையர் [2]மேல்கீழ்
ஊனுடை யுடம்புடைமை யோருவமை [3]யொவ்வா
மானிடர் தடிந்தனர்கள் வாளுருவி யென்றாள்.

(இ - ள்.) 'புவி காவல் புரிகின்றார் - பூமியைப் பாதுகாக்கின்றவர்களும், மீன் உடை நெடு கொடியினோன் அனையர்-மீன்வடிவத்தையுடைய உயர்ந்த கொடியையுடைய மன்மதன் போன்றவர்களும், மேல் கீழ் - விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலுமுள்ள, ஊன் உடை உடம்பு உடைமையோர்-தசையையுடைய உடம்புடையவர்கள் (எவரும்), உவமை ஒவ்வா - (தமக்கு) ஒப்பாகப் பெறாதவர்களுமாகிய, மானிடர்-மனிதர்கள் (இருவர்), கானிடை அடைந்து -(நான் இருந்த) காட்டில் வந்து, வாள் உருவி தடிந்தனர்கள்-வாளாயுதத்தை உருவியெடுத்து (எனது உறுப்புக்களை) அறுத்திட்டார்கள்', என்றாள் - என்று சொன்னாள், (சூர்ப்பணகை); (எ - று.)

தனக்குத் தீங்கு செய்தவர்களை இன்னாரென்று எடுத்துக் கூறுமிடத்தும் அவர்களுடைய அழகைப் பாராட்டிக்கூறுதற்குக் காரணம், இவள் அவர்களிடத்துக்கொண்டுள்ள மிக்கவேட்கை சிறிதும் நீங்கப் பெறாமையாலாகும்; கீழ்க் கரனுடன் கூறுமிடத்தும் "மன்மதன் மேனியர்" என்றமை காண்க: அடுத்த 52, 53 - ஆங் கவிகளும் நோக்கத்தக்கன. இருவரிடத்தும் இவள் ஒருங்கிகராகக் காதல் கொண்டதனால், இருவரைப்பற்றியும் ஒருங்கிகராக எடுத்துக்கூறுகிறாள். தன்னைத் தடிந்ததற்கு இராமனை ஏவுதற் கருத்தாவும் இலக்குமணனை இயற்றுதற்கருத்தாவுமாகக்கொண்டு, 'மானிடர் தடிந்தனர்கள்' எனப் பன்மையாற்கூறினாள். பிராகிருத சரீரமுடையவர் எவரும் அவர்களுக்கு ஒப்பாகமாட்டார் என்பது, மூன்றாமடியின் கருத்து. 'புவிகாவல் புரிகின்றார்' என்றது-க்ஷத்திரியரென்பதையும், அல்லோரைக்கடிந்து நல்லோரைக் காப்பவரென்பதையும், சக்கரவர்த்தி குமாரர்களென்பதையும் காட்டும். 'கானிடையடைந்து புவிகாவல் புரிகின்றார்' என்றே யெடுத்து, வனவாசம்வந்து பூமியைப் பரிபாலிப்பவரென்று கொள்ளவும் இடமுண்டு. பி - ம்:—[1]முதல. [2]கீழ்மேல். [3]இல்லா. (609)

## 51.—இராவணன் கோபித்து 'நடந்ததை விவரமாகக் கூறு' எனல்.

செய்தனர்கண் மானிட ரெனத்திசை யனைத்தும்
எய்தநகை வந்ததெரி சிந்தினக ணெல்லாம்
நொய்தவர் வலித்தொழி னுவன்ற [1]மொழி யொன்றோ
பொய்தவிர் பயத்தையொழி [2]புக்கபுக லென்றான்.

(இ - ள்.) மானிடர் செய்தனர்கள் என - (இவ்வாறு) மனிதர்கள் செய்தார்களென்று (சூர்ப்பணகை) சொன்னவளவிலே, (இராவணனுக்கு), திசை அனைத்துஉம் எய்த நகை வந்தது - எல்லாத் திக்குக்களிலும் (ஓசை) செல்லும்படி சிரிப்பு உண்டாயிற்று; கண் எல்லாம் எரி சிந்தின - (அவனுடைய) கண்கள் யாவும் நெருப்புப் பொறியை உமிழ்ந்தன; (இங்ஙனம் அலட்சியமும் சினமும் அடைந்து தங்கையைநோக்கி), 'அவர் வலி தொழில் - அம் மனிதர்களுடைய வல்லமைச்செயல், நொய்து - அற்பமான தன்றோ? (ஆதலால்), நுவன்ற மொழி ஒன்றுஓ - (நீ) சொன்ன வார்த்தை உண்மையான தொரு வார்த்தை தானோ? பொய் தவிர் - பொய்கூறுவதை விட்டிடு; பயத்தை ஒழி - அச்சத்தை நீக்கு: புக்க புகல் - நடந்த செய்திகளை (உள்ளபடி) சொல்', என்றான் - என்று வினவினான்; (எ - று.)

மனிதர்கள் தன்னை மானபங்கஞ் செய்தார்க ளென்று சூர்ப்பணகை சொன்ன வார்த்தையைக் கேட்டவளவிலே, இராவணன், உலகமுழுவதும் பெருமுழக்க முண்டாம்படி அலட்சியமாகப் பெருஞ் சிரிப்புச்சிரித்துக் கண்கள் தீயுமிழப்பெருங்கோபங்கொண்டு 'மனிதர்கள் அற்பபலமுடையவராயிற்றே; ஆதலால், அவர்கள் இங்ஙனஞ் செய்ய இயலாதே; ஆனதுபற்றி, நீ சொன்னவார்த்தை நம்பத்தக்க தொன்றன்று; பொய்யாகக் கற்பித்துக் கூறுகின்றனைபோலும்; அன்றி, ஏதேனும் அச்சத்தால் வாய்குழறி ஒன்றுக்கு ஒன்றாகச் சொல்லுகின்றாயோ? அப்படிப்பட்ட பொய்யையும் அச்சத்தையும் விட்டு நிகழ்ந்த செய்திகளைநிகழ்ந்தபடி உண்மையாகச்சொல்' என்று சூர்ப்பணகையைப் பார்த்துக் கூறின னென்பதாம். 'செய்தனர்கள் மானிடர்' என்பது, தொடர்ச்சியை விளக்கக் கூறிய அநுவாதம்.

பி-ம்:—[1]பொருள். [2]உற்ற. *(610)*

## 52.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்: சூர்ப்பணகையின் விவரமானவிடை.

மன்மதனை யொப்பர் மணிமேனி வடமேரு
தன் [1]னெழி லழிப்பர் திரடோளின்வலி தன்னால்
என்னதனை யிப்பொழு [2]திசைப்ப துலகேழின்
நன்மத னழிப்பரொ ரிமைப்பினனி [3]வில்லான்.

(இ - ள்.) (நான் சொன்ன மனிதர்கள்), மணி மேனி - அழகிய (தங்கள்)வடிவத்தால், மன்மதனை ஒப்பர்-மன்மதனைப்போல்வார்கள்; திரள் தோளின் வலிதன்னால் - திரண்ட தோள்களின் வலிமையால், வட மேருதன் எழில் அழிப்பர் - வடக்கிலுள்ள மகா மேருமலையின்

வளர்ச்சியைக் கீழ்ப்படுத்துவார்கள்; வில்லான் - (தாங்கள் கைக் கொண்ட) வில்லின வலிமையால், ஓர் இமைப்பின் - ஒருமாத்திரைப் பொழுதிலே, நனி - மிகுதியாக, உலகு ஏழின் நல்ல மதன் அழிப்பர் - ஏழுலோகங்களிலுமுள்ள அனைவருடைய நல்ல வலிமையையும் அழிக்கவல்லார்கள்; அதனை - அவர்கள் தன்மையை, இப்பொழுது இசைப்பது என் - இப்பொழுது சொல்வது எவ்வாறு? [சொல்லி முடித்தற்கு அரிதென்றபடி]; (எ-று.)

அவர்களுடைய அழகும், இயற்கை வலிமையும், செயற்கை வலிமையும் இதிற் கூறப்பட்டன. அவர்களழகில் தான் மிகுதியாக ஈடுபட்டதனால், மீண்டும், கூறியதுகூறலாக, முதலில், 'மன்மதனை யொப்பர்' என்றாள்; அன்றி, அழகில் மன்மதன்போலிருப்பினும் ஆற்றலிற் சிறந்தவரென்று காட்டுதற்கு அதனை யெடுத்துக் கூறினளுமாம். இங்கே, மன்மதனென்றது, சிவபிரானா லெரிக்கப்பட்டு அநங்கனாதற்கு முன் அங்கத்தோடு கூடியிருந்த நிலைமையை யுடையவனை யென்க. மதன்-மதம். இமைப்பு-மனிதர் இயல்பாக ஒருகாற் கண் இமைத்தற்கு வேண்டும் பொழுது; தொழிலாகுபெயர். பி - ம்:— [1]மதன். [2]உரைப்பது. [3]வில்லால். (611)

53. வந்தனை முனித்தலைவர் பாலுடையர் வானத்து
இந்துவின் முகத்த ரெறிநீரி லெழுநாளக்
கந்தமல ரைப்பொருவு கண்ணர் கழல்கையர்
அந்தமி றவத்தொழில ராரவரை யொப்பார்.

(இ - ள்.)—(மற்றும் அவர்கள்), முனி தலைவர்பால் வந்தனை உடையர் - சிறந்த முனிவர்கள்பக்கல் வணக்க முடையவர்கள்; வானத்து இந்துவின் முகத்தர்-ஆகாயத்திலே விளங்குகிற சந்திரன் போன்ற முகமுடையவர்கள்: எறி நீரில்-(அலைகளை) வீசுகின்ற நீரிலே, எழு-தோன்றுகிற, நாளம் - (உட்டுளையுள்ள) தண்டோடு கூடிய, கந்தம் மலரை-நறுமணத்தையுடைய தாமரைமலரை, பொருவு-ஒத்த, கண்ணர்-கண்களையுடையவர்கள்; கழல் கையர் - (அப்படிப்பட்ட) பாதங்களையுங் கைகளையுமுடையவர்கள்; அந்தம்இல் தவம் தொழிலர் - எல்லையில்லாத தவத்துக்கு உரிய தொழிலையுடையவர்கள்; அவரை ஒப்பார் ஆர்-அவர்களுக்கு ஒப்பானவர் (உலகத்தில்) எவர் உளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

'முனித்தலைவர்பால் வந்தனை யுடையர்' என்றதனால் அவர்கள் பிறரெவரையும் வணங்கா ரென்பது கூறினாளாம். முகத்துக்குச் சந்திர னுவமை - குளிர்ந்தஒளியுடன் காண்பவர்மனத்தை மகிழ்வித்தலிலென்க. 'மலரைப்பொருவு' என்ற அடைமொழியை, கழல்கைகளுக்குங் கூட்டுக; "கைவண்ணந்தாமரைவாய் கமலம் போலும் கண்ணிணையு மரவிந்த மடியு மஃதே" என்று தலைவி வார்த்தையாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்தவாறும் அறிக. நீரினின்று பறிக்கப்பட்டு வாடியதாகாமல் அங்குத் தோன்றி மலர்ந்தபடியே காம்புடனுள்ள தாமரைமல ரென்றற்கு 'நீரிலெழு நாள மலர்' எனப்பட்டது. உபமானமாகிய மலருக்கு 'கந்தம்' என்ற அடை

கொடுத்தது, உபமேயமாகிய ஸர்வகந்தனை எம்பெருமானுடைய திருவவயவங்களின் திவ்வியபரிமளத்தைத் தெரிவிக்கும். 'அந்தமில் தவத்தொழிலர்' - தவத்திற்குத் தேவையான நித்தியக்கடன் முதலியவற்றைத் தவறாது புரிபவர்: இனி, (முனிவர்கள்) வரம்பின்றிச் செய்யுந் தவத்துக்கு உதவுந் தொழிலுடையாரென்றும் உரைக்கலாம். அவர்கட்கு ஒப்பார் இல்லை யெனவே, உயர்வார் இல்லாமை அருத்தாபத்தியாற் பெறப்படும். (612)

54. வற்கலையர் வார்கழலர் மார்பினணி நூலர்
விற்கலையர் [1]வேதமுறை நாவர் [2]தளிர் மெய்யர்
உற்கலைய ருன்னையொர் [3]துகட்டுணையு முன்னார்
[4]சொற்கலை யெனத்தொலைவி றூணிகள் சுமந்தார்.

(இ -ள்.)—(இன்னும் அவர்கள்), வற்கலையர் - மரவுரியாடை தரித்தவர்கள்; வார் கழலர்-நீண்ட வீரக்கழலையுடையவர்கள்; மார்பின் அணி நூலர்-மார்பிலே தரித்த அழகிய முப்புரி நூலை யுடையவர்கள்: வில் கலையர்-வில் வித்தையில் வல்லவர்கள்; வேதம் உறை நாவர்-வேதங்கள் வசிக்கின்ற நாவினையுடையவர்கள்: தளிர் மெய்யர்-தளிர் போன்ற மேனியையுடையவர்கள்: உற்கு அலையர் - உனக்கு அஞ்சாதவர்கள்; உன்னை ஓர் துகள் துணை உம் உன்னார்.- உன்னை ஒருசிறுபொடியளவாகவும் மதியாதவர்கள்; சொல்கலை என-சொற்களின் வடிவமாகவுள்ள சாஸ்திரங்களைப்போல, தொலைவு இல் தூணிகள் சுமந்தார்-அழிவில்லாத அம்பறாத்தூணிகளைத் தாங்கினவர்கள்; (எ - று.)

'வற்கலையர்' என்றது, அவர்கட்கு மரவுரியுடையும் ஓர் அழகாயிருந்தது என்று பாராட்டிக் கூறியவாறு. [1]வேதமுரைநாவர் என்ற பாடத்துக்கு-வேதங்களைக் கூறும்நாவையுடையவ ரென்க; திருமங்கையாழ்வார் பாசுரத்திலும் "இவர் வாயினல்வேதமோதும் வேதியர்" என்பது தலைவி வார்த்தையாத லுணர்க. வேதமுறை நாவர்-வேதங்களை ஓதியுணர்ந்தவ ரென்றவாறு: கரன்முதலிய அளவிறந்த அரக்கர்களை ஒருசிறிதுபொழுதில் அழித்ததனால் 'வில்வித்தையில் தேர்ந்தவர்கள்' என்றாள். 'உற்கு அலையர்', 'உன்னையொர்துகள் துணையு முன்னார்' என்பன, அவர்கள் சொல்லாலும், செயலாலும் அறிந்தன; "வல்லையாகின், வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர் முதலினர் நீ மிடலோ ரென்று, குறித்தாரை யாவரையுங் கொணருதியே னின்னெதிரே கோறும்" என்று இராமபிரான் கூறியதனை யுணர்க. செயல்-தன்னைப் பங்கஞ்செய்ததும், கரன் முதலியோரை வதைத்ததும். கரனுடன் கூறுமிடத்தும் "ஒன்று நோக்கலருன்வலி" என்றாள். "சொற்கலையெனத் தொலைவில் தூணிகள் சுமந்தார்' என்றது-சொற்கள் நிறைந்த சாஸ்திரங்களை மனத்தில் தரித்திருப்பதுபோல அம்புகள் நிறைந்த தூணிகளைத் தோளில் தரித்தவர்க ளென்றவாறு; எடுக்கஎடுக்க அம்புகள் குறைதலில்லாத அட்சயதூணீர மென்பதைக் காட்டுதற்கு 'தொலைவுஇல் தூணி' என்றாள்; அதற்கு, பயிலபயிலச் சொற்கள் குறைதலில்லாத கலையோடு உவமம் பொருந்துமாறுஉணர்க. இனி, நான்கா

மடிக்கு-தநுர்வேதமுறைமைப்படி அம்பருத்தூணி தரித்தவரென்று உரைத்தலுமொன்று. வற்கலை-வல்கலா. விற்கலை-தநுர்வேதம். கலை-கலா என்ற வடசொல் திரிந்தது. உற்கு-உனக்கு; அகரச் சாரியை தொக்கது. அலையர்-அலையா ரென்பதன் குறுக்கல்; அன்றி, எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்ட தென்றலும் இலக்கணநடைக்குப் பொருந்தும். துகள்துணையும்-உம் - இழிவுசிறப்பு. தூணி = தூணீரம். பி-ம்:—[2]நனி. [3]துகட்டனையும். [4]சொற்கலை வென. (613)

55. ஆறு[1]புல னஞ்சின மரக்கரை யெனச்சென்று
ஏறுநெறி யந்தண ரியம்ப வுலகெல்லாம்
[2]வேறுமெனு நுங்கள்குலம் வேரொடு மடங்கக்
கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார்.

(இ - ள்.)—ஏறும் நெறி அந்தணர்-உயர்ந்த ஒழுக்கத்தை யுடைய முனிவர்கள், சென்று - (அம்மனிதர்களிடத்தில்) வந்து, 'ஆறு புலன்-தவவொழுக்கத்தால் தணிந்துள்ள (எங்கள்) புலன்களெல்லாவற்றாலும், அரக்கரை அஞ்சினம்-இராக்கதர்க்குப் பயந்துளளோம்,' என இயம்ப-என்று சொல்லி(த் தங்கள் குறைகளை) முறையிட, (அம்மனிதர்கள்), உலகு எல்லாம் வேறும் எனும் நுங்கள் குலம்-எல்லாவுலகங்களையும் வென்றிடுவோமென்று சொல்லுகிற உங்களுடைய [அரக்கர்களுடைய] வமிசத்தை, வேரொடுஉம் அடங்க கோறும்என-அடியோடு அழியும்படி கொன்றிடுவோம் என்று, முந்தை ஒரு சூளுறவு கொண்டார்-முன்பு ஒரு சபதத்தைச் செய்துள்ளவர்கள்; (எ - று.)

இராமலக்ஷ்மணர் தண்டகாரணியத்தில் வந்தபோது அவ்வனத்தில் வாழும் வாலகில்யர் முதலிய முனிவர்கள் அவர்களை எதிர்கொண்டு மிக்க களிப்போடு உபசரித்து "இரக்கமென்றொரு பொருளிலாத நெஞ்சின, ரரக்கரென்றுளர் சில ரறத்தினீங்கினார்" என்று தொடங்கி இராக்கதருடைய உபத்திரவங்களை யெடுத்துச் சொல்லி "அருளுடை வீர நின்னபயம் யாம்" என்று சரணமடைய அவர்களுக்குப் பெருமான் அபயமளித்து "ஆரறத்திடை நின்றிலரவர், வேரறுப்பென்" என்று தாம் இராக்கதசங்காரஞ்செய்வதாகப் பிரதிஜ்ஞை கூறியமையை, அகத்தியப்படலத்திற் காணலாம். அதனை, இவள் (கீழ்ச் சூர்ப்பணகைப்படலத்தில்) "வேதியரும்மாதவரும் வேண்டநீண்டு, கரையளித்தற்கரியபடைக் கடலரக்கர் குலந்தொலைத்துக்கண்டாய் பண்டை, வரையளித்த குலமாட நகர்புகுவே மிவைதெரிய மனக்கொள்" என்று இராமன் கூறியதனால் அறிந்தாள்.

மெய்வாய் கண்மூக்குச்செவி யென்னும் ஐம்பொறிகளாலும் அவர்களுக்கு அஞ்சுவோமென்பார், 'புலனஞ்சினம்' என்றார். பொறியைப் புலனென்றது, உபசாரவழக்கின்பாற்படும். நாங்கள் ஐம்புலன்களை அடக்கிப் பொறுமையை மேற்கொண்டிருத்தலால் சாபங்கொடுத்து அவர்களைக்கொல்லலாகா தென்பதைக்குறிப்பிப்

பார், 'ஆறுபுலன்' என்றார்; இந்நுட்பம் "வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம், பூண்டுள ராயினும் பொறையினாற்றலான், மூண்டெழுவெகுளியை முதலினீங்கினார், ராண்டுறை யரக்கராலலைப் புண்டாரரோ" என்ற அகத்தியப்படலத்துச்செய்யுளால் விளங்கும். ஆறுபுலன் - வினைத்தொகை: இனி, இதனை எண்ணுப்பெயராகக் கொண்டு, பண்புத்தொகையாக்கி, அறுவகை யுணர்வினாலும் அஞ்சினோ மென்றலும் ஒன்று; "மக்கள் தாமே யாறறி வுயிரே" என்ற தொல்காப்பியத்தால், மக்களெனப்படுவார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோ ரறிவு முடையராத லுணர்க. "அச்சக் கிளவிக்கு ஐந்து மிரண்டும், எச்சமிலவே பொருள் வயினான" என்ற தொல்காப்பியங்கொண்டு 'அரக்கரை யஞ்சினம்' என்றது வழா நிலையாதலறியப்படும்.

ஏறுநெறி - சன்மார்க்கம். ஏறுநெறியந்தணர் - முத்தியுலகிற்கு ஏறும் ஞானமார்க்கமுடையாருமாம்; தாம் மூழ்கியுள்ள துன்பக் கடலினின்று கரையேறும் வழியை நாடுபவருமாம்; "பிறவி வெந் துயர்ப், பெருஞ்சிறை வீடுபெற்றனைய பெற்றியார்" என்றும், "அரக்க ரென் கடலிடை யாழ்கின்றாரொரு, மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினார்" என்றும் அகத்தியப்படலத்தில் வந்தமை யுணர்க. அந்தணரென்ற காரணவிடுகுறிப்பெயர் - முனிவர்க்கே சிறத்தல், "அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்,செந்தண்மை பூண் டொழுக லான்" என்ற திருக்குறளினாலும் அமையும்; இப்படி மிக்க தண்மைபூண்டு ஒழுகியதனாலேயே அவர்கள் தாம் நேரில் அரக்கரை அழியாராயின ரென்பதை நன்குவிளக்குதற்கு, இங்கு 'அந்தணர்' என்ற பெயராற் குறித்தார்போலும். வேரொடும் மடங்க என்று பிரிப் பினுமாம். வேறும் கோறும் என்ற தன்மைப்பன்மைமுற்றுக்களில், வெல், கொல்-பகுதிகள். முந்தையென்றது, 'இயம்ப' என்பதனோடுஞ் சேரும். குலம் வேரொடு மடங்குதல்-வம்சநாசமாதல். பி-ம்:—[1]மனம். [2]வேறுமெனினுங்கள். "மாரருளர்" என்ற அடுத்த பாடலுக்குப்பின் இப்பாடல் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (614)

56. மாரருள ரேயிருவ ரோ[1]ருலகின் வாழ்வார்
வீர[2]ருள ரேயவரின் [3]வில்லதனின் வல்லார்
ஆரொருவ ரன்னவரை யொப்பவர்க ளையா
ஓரொருவ ரே[4]யிறைவர் மூவரையு மொப்பார்.

(இ - ள்.) ஐயா - ஐயனே! ஓர் உலகின் வாழ்வார் இருவர் மாரர் உளர்ஏ - ஓருலகத்தில்தானே வாழ்கிற இரண்டுமன்மதர்கள் இருக்கிறார்களா? வில் அதனின் அவரின் வல்லார் வீரர் உளர்ஏ - வில்வித்தையில் அம்மனிதர்களைப்பார்க்கிலும் வல்லவர்களாகிய வீரர்கள் இருக்கிறார்களா? [இல்லை யென்றபடி]; அன்னவரை ஒப்பவர்கள் ஒருவர் ஆர் - அவர்களுக்குச்சமானமாகும்ஒருவர் ஆர்? [எவருமில்லை யென்றபடி]; ஓர் ஒருவர்ஏ இறைவர் மூவரைஉம் ஒப்பார் - அவர்களில் ஒவ்வொருவருமே எப்பொருட்குந் தலைவரான திரிமூர்த்திகளையும் ஒப்பார்கள்; (எ-று.)

முதலடியால், ஒருங்கே அநங்கராகவன்றி அங்கமுடையவராய் ஒருலகில் இரண்டுமன்மதர் உளராயின் அவர்கட்கு ஒருபடியாக இராமலட்சுமணர் ஒப்பாவரென்றாள். அவர்களைப்போன்ற வில்லாளிகளில்லையென்பது, இரண்டாம்அடியின் பொருள். கீழே அவர்களை நேர்பவராகிய இருவரில்லையென்று கூறியது போல வன்றி, இருவர்க்கும் தனித்தனியே ஒப்பாவார் ஒருவரேனும் உண்டோ எனின்?—அதுவும் இல்லையென்பது 'ஆரொருவரன்னவரையொப்பவர்கள்' என்பதன் பொருள். திரிமூர்த்திகளுஞ் சேர்ந்து அவர்களில் ஒருவர்க்கு ஒப்பானால் ஆவரேயன்றி, ஒவ்வொருமூர்த்தியும் தனியே ஒப்பாதற்கு இயலாரென்பது, ஈற்றடியின் கருத்து. சூர்ப்பணகை தான் பரிபவப்பட்ட நிலையில் உயர் நிலையிலிருக்கும் தமையனை இராவணனை அண்ணா எனவிளித்தல் அடாது என்று 'ஐயா' என விளித்தாளென்றேனும், தான் கூறுவதைக் கூர்ந்து கவனிக்கவேணுமென்ற கருத்தினால் இவ்வாறு விளித்தாளென்றேனும் கொள்வர். இனி, தந்தையோடொப்பான் தமையன் என்ற முறைப்படி இப்போது அவனைத் தந்தைபோல மதிப்புக்கொண்டு கூறுகின்றாளெனினுமாம். மாரனென்ற வடமொழிப்பெயர் - (ஆடவரையும் மகளிரையும் ஆசைநோயால்) மரணவேதனைப் படுத்துபவனென்று பொருள்படும். பி - ம் :—[1]உயிரின். [2]உளரோவவரின். [3]வில்லின்வலி. [4]முதல்வர். (615)

57. தராவலய நேமியுழ வன்றயர தப்பேர்ப்
பராவரு நலத்தொருவன் மைந்தர்பழி யில்லார்
விராவரு வனத்தவன் விளம்ப வுறைகின்றார்
இராமனு மிலக்குவனு மென்பர்பெய ரென்றாள்.

(இ - ள்.) (அவர்கள்), தரா வலயம் நேமி உழவன் - பூமண்டலம் முழுவதிலும் (தனது) ஆஜ்ஞாசக்கரத்தைச்செலுத்தியவனான, தயரதன் பேர்-தசரதனென்னும பெயரையுடைய, பராவு அரு நலத்து - புகழ்தற்கரிய நன்மையையுடைய, ஒருவன்-ஓர் அரசனது, மைந்தர்-குமாரர்கள்: பழி இல்லார் - ஒருபழிப்பும் இல்லாதவர்கள்: அவன் விளம்ப - (தந்தையான) அத்தசரதன் சொன்னதனால், விராவு அரு வனத்து-சேர்தற்கு அரிய காட்டில், உறைகின்றார்-வசிக்கின்றார்கள்; பெயர் இராமன்உம் இலக்குவன்உம் என்பர்-இராமலக்ஷ்மணரென்று பெயர் கூறப்படுவார்கள், என்றாள் - என்றுசொன்னாள், (சூர்ப்பணகை); (எ- று.)

இங்ஙன் பங்கப்படுத்தினவர் இன்னாரென்பதையும், அவர் வனத்திலுறையக் காரணத்தையும், இதனால் சூர்ப்பணகை தெரிவிக்கின்றாள். தன்னைப் பங்கஞ்செய்தவர்களைக் குறித்துச் சினத்தோடு கூறுமிடத்தும் 'பழியில்லார்' என்றாள், தனது வேட்கை மிகுதியால்: அன்றியும், வைரங்கொண்டு கூறுவார்க்கும் குற்றங் குறிக்க வொண்ணாதபடி இராமலட்சுமணர்களிடமிருந்த நற்குண நிறைவும் விளங்கும். இனி, பழி என்பதற்கு - எதிரிகட்கு அஞ்சுதலென்றும் தந்தையின் கட்டளைப்படி நடவாமை யென்றும்கொள்ளலாம். கைகேயிக்குத் தயரதன் முன்பு கொடுத்த இரண்டு வரங்களைத்

தவறமாட்டாது சத்தியத்துக்குக் கட்டுப்பட்டிருக்கும் நிலையில் அவன் கட்டளையாகச் சிறியதாயான கைகேயி கூறியதையே இங்கு 'அவன் விளம்ப' எனக் குறித்தது. (616)

## 58.—இதுமுதல் நான்குகவிகள் - இராவணன் தன்னை வெறுத்தலைத் தெரிவிக்கும்

மருந்தனைய தங்கைமணி நாசிவடி வாளால்
அரிந்தவரு மானிட [1]ரரிந்து முயிர் [2]வாழ்வார்
விருந்தனைய வாளொடும் விழித்திறையும் [3]வெள்காது
இருந்தன னிராவணனு மின்னுயிர்கொ டின்னும்.

ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) மருந்து அனைய தங்கை - அமிருதத்தை யொத்த (அரிய) தங்கையான சூர்ப்பணகையினது, மணி நாசி - அழகிய மூக்கை, வடி வாளால் அரிந்தவர்உம் - கூரியவாளினால் அறுத்தவர்களும், மானிடர் - (மிகஎளியவரான) மனிதர்களாம்; (அவர்கள்), அரிந்துஉம் - (அங்ஙனம்) அறுத்தபின்பும், உயிர் வாழ்வார் - உயிர் பிழைத்திருப்பார்களாம்; இன்னும் - இங்கனமானபின்பும், இராவணனும்—, இறைஉம் வெள்காது - சிறிதும் வெட்கப்படாமல், விருந்து அனைய வாளொடுஉம் - புதுமையின் வடிவம்போன்ற வாளாயுதத்துடனே, விழித்து - கண்விழித்துப்பார்த்துக்கொண்டு, இன் உயிர் கொடு இருந்தனன்-இனிய உயிரை வைத்துக்கொண்டு இருந்தனனும்; (எ - று.)

தான் உயிரோடு கையும் படையுமாகக் கண்விழித்துக்கொண்டிருக்கையிலேயே இங்ஙனம் நேர்ந்திட்டதைக் குறித்து மிக வியந்து, இங்ஙனஞ் செய்தவர்களைக் கொல்லாது மானங்கெட்டு உயிர்வாழ்தலினும் இறத்தலே எனக்கு மேலாம் என்று வெறுத்துக் கூறுகிறான் இராவணன். தனதுபெருமிதம் தோன்றத் தன்னைப் பிறன்போலப் படர்க்கையாக நிறுத்தி, 'இருந்தன னிராவணனும்' என்றான்; இது, தன்மைக்குப் படர்க்கைவந்த இடவழுவமைதி. 'மருந்தனைய தங்கை' என்றதனால், வேறு தங்கையில்லாத அவனுக்கு அந்தத் தங்கையினிடமுள்ள மிக்க அன்பும் அருமைப்பாடும் தோன்றும். நாசி = நாஸிகா: வடசொல். 'விருந்தனைய வாள்' என்றதனால், தனது வாட்படையின் மேன்மையை விளக்கியவாறு: அதன் உயர்வு, மேல் 60-ஆங் கவியிற் கூறப்படும். இயல்பாகப் பலகண்களைக்கொண்டு விழித்தலை, யாதொன்றுஞ் செய்ய அறியாது திகைத்துவிழித்தல்போலக் குறித்து, 'விழித்து' என்றானென்னலாம்; இவனுக்கு மனிதர்களிடத்திலுள்ள அவமதிப்புக்கருத்து, இவன் பிரமனிடம் வரங்கேட்டுப் பெற்றபொழுது மனிதர்களை ஒரு பொருளாகக் குறியாமையாலும் வெளியாம்; அதனால், 'மானிடரரிந்தும் உயிர்வாழ்வார்' என்று எளிதுபடக் கூறினான். பி - ம்:—[1] அறிந்தும். [2]வாழ்வான். [3]வெள்கா. (617)

59. கொற்றமது முற்றிவலி யாலரசு கொண்டேன்
உற்றபயன் மற்றிது [1]கொலாமுரை யிறந்தேன்
முற்றவுல கத்துமுதல் வீரர்முடி யெல்லாம்
அற்ற[2]பொழு தத்திது பொருந்துமென லாமே.

(இ - ள்.) கொற்றம் அது முற்றி-(எங்கும்) வெற்றியே நிறைந்து, வலியால் - (எனது) வல்லமையால், அரசு கொண்டேன் - ஆளுகையைப் பெற்ற நான், உற்ற - அடைந்த, பயன் - பலன், இதுகொல் - இதுவோ? உரை இறந்தேன் - புகழ் (இதனால்) ஒழியப்பெற்றேன்; முற்ற உலகத்து முதல் வீரர் முடி எல்லாம் அற்ற பொழுதத்து - உலக முழுவதிலுமுள்ள சிறந்த வீரர்களுடைய தலைகள் யாவும் அறுபட்டாலும், இது பொருந்தும் எனல் ஆம்ஏ - இப்படியிழந்த மானம் மறுபடி வந்து கிடைக்குமென்று சொல்லமுடியுமோ? (எ - று.)—மற்று - வினைமாற்று. ஆம் - அசை.

முதலடியால், இராவணன் தனது பல பராக்கிரமங்களின் சிறப்பைப் பாராட்டிக்கூறி, இரண்டாமடியால் தனக்கு நேர்ந்த இழிதகவுக்கு இரங்குகிறான். எனக்கு நேர்ந்த இழிதகவுகாரணமாக யான் அளவிறந்த கோபங்கொண்டு உலக முழுவதையும் அழித்திட்டாலும் போன மானம் வருமோ என்பது, பின்னிரண்டடியின் கருத்து. உலகத்தில் எத்துணை வல்லாரது தலையும் அறுபடினும் அறுபடலாம்; சூர்ப்பணகையின் மூக்கு அறுபடுதலாகிய இது நேரலாமோ? என்று பொருள் கொள்ளினும் இழுக்காது. சிறந்த பல வீரர்களது தலைகளை யறுத்துப்பெற்ற புகழை இவளுறுப்பு அறுபட்ட ஒரு பழிப்பு அழிக்குமே யென வெறுத்தான். தனது பெருமிதமும் பிறரனைவரது எளிமையுந் தோன்ற, 'அறுத்த பொழுது' எனச் செயலைத் தன் மேலாக்காமல் 'அற்றபொழுது' என முடிமேலேற்றிக் கூறினான். 'இது' என்றது - சுரபேதத்தால், 'இதுவோ?' என வினாப் பொருள் தந்தது. [1]ஒல்காமுறையிறந்தேன்' என்ற பாடத்துக்கு - தவறாத ஆணையைச் செலுத்தினேன் என்று பொருள். ஈற்று ஏகாரம் - வினா. பி - ம் :—[1]ஒல்காருரை. [2]பொழுதிற்றது, பொழுதிற்றிது. (618)

60. மூளுமுள தாயபழி யென்வயின் முடித்தோர்
ஆளு [1]முள வாமவர தாருயிரு முண்டாம்
வாளுமுள தோதவிட முண்டவன் வழங்கும்
நாளுமுள தோளுமுள நானுமுளெ னன்றே.

(இ-ள்.) மூளும் - புதிதாக நேர்வதும், உளது ஆய - (என்றும்) நிலைத்திருப்பதுமான, பழி-அவமானத்தை, என்வயின் முடித்தோர் - என்பக்கல் செய்து முடித்தவர்களான, ஆள்உம் - மனிதர்களும், உள ஆம்-இருக்கின்றனராம்; அவரது ஆர் உயிர்உம்-அவர்களுடைய அருமையான உயிரும், உண்டு ஆம் - (இன்னும்) அழியாதிருக்கிறதாம்; வாள்உம் உளது-(என்கையில்) வாளாயுதமும் இருக்கின்றது; ஓதம் விடம் உண்டவன் வழங்கும் - (பாற்) கடலில் தோன்றிய விஷத்தை அமுதுசெய்த சிவபிரான் கொடுத்த, நாள்உம் - (எனது

நெடிய) ஆயுள் நாள்களும், உள-இருக்கின்றன; தோள்உம்-தோள்களும், உள - இருக்கின்றன; நான்உம் உளென் அன்றோ - நானும் இருக்கின்றேனன்றோ? (எ - று.)

என்றும் அழியாது நிலைத்து நிற்பதாகிய நிந்தை தனக்கு நூதநமாக நேரும்படியான தீச்செயலைச் சிறிதும் அச்சமின்றிச் செய்தவர்கள் அழியாது நிற்கத் தான் சிறந்த பல உபகரணங்களோடு கூடி உயிர்வாழ்தலைக் குறித்து வெறுக்கின்றான். 'ஓதவிடமுண்டவன் வழங்கும்' என்ற அடைமொழியை, மத்திமதீபமாக 'வாள்' என்பதனோடுங் கூட்டுக. 'வாளும் உளது' என்றது முதலியன, அவையிருந்தும் பயன்படாமையை விளக்கக் கூறியன. முடித்தோர் ஆளும் உளவாம் - கோபித்து இழித்துக்கூறுதல் பற்றிவந்த திணைவழுவமைதி; [நன் - பொது 28]. ஓதஎன எடுத்து வினையெச்சமாக்கி, அதற்கு - தேவர்கள் குறைகூற என்றும், யாவரும் புகழ்ந்து கூற என்றும் உரைத்தலும் பொருந்தும். பி - ம்:—
[1] உளதாமவர்தம். (619)

61. [1]பொத்துற வுடற்பழி புகுந்ததென நாணித்
தத்துறுவ தென்னைமன னேதளர லம்மா
எத்துய ருனக்குள தினிப்பழி சுமக்கப்
பத்துள தலைப்பகுதி தோள்கள்பல வன்றே.

(இ-ள்.)—மனனே-மனமே! உடல்-உடம்பில், பொத்துஉற - தைக்கும்படி, பழி புகுந்தது-பழி நேர்ந்துவிட்டதே, என-என்று, நாணி-வெட்கப்பட்டு, தத்துறுவது - (நீ) தவித்துத்தடுமாறுவது, என்னை-என்? இனி தளரல்-இனிமேல் (நீ) வருந்தாதே; பழி சுமக்க-அப்பழியைச் சுமப்பதற்கு, பத்து தலை பகுதி உள-(எனது) பத்துத் தலைவருக்கம் இருக்கின்றன; (அன்றியும்), தோள்கள் பல-(அவற்றிலும்) பலவான தோள்களும் (இருக்கின்றன); (ஆதலால்), உனக்கு எ துயர் உளது - உனக்கு(ப்பழிசுமத்தலாலாகிய) வருத்தம் எது இருக்கின்றது? [இல்லையேயென்றபடி]; (எ - று.)

இது, இராவணன் தன்மனத்தை முன்னிலைப்படுத்திக் கூறியது. [1]புத்துறவுறப் பழிபுகுந்தது என்ற பாடத்துக்கு-இதுவரையிலுந் தனக்கு யாதொரு பழிப்பும் நேராமையை வெளியிட்டானென்க. 'சுமக்க' என்ற வினையின் ஆற்றலால், இப்பழியை இவன் பெருஞ்சுமையாகக் கருதியமை புலனும். இப்பழியை அலட்சியஞ் செய்யாமல் பெரிய தலைப்பாரமாகக் கொண்டு தோள்வலிமையால் தீர்த்திடுவேன்; நீ வருந்தாதே என்று இராவணன் தன்மனத்தை முன்னிலைப்படுத்தி நெஞ்சொடு கிளத்தலாகக்கூறித் தைரியப்படுத்தினுனென, அவனது பெருமிதத்தை வெளியிட்டவாறு. தோள்கள இருபதாதலின், 'பல' என்றான். தத்துறுவது - அலைவது. அம்மா-வியப்பிடைச்சொல்; இனி, இதற்கு - யான்சொல்வதைக் கேளென்று பொருள் கொள்ளலுமாம்: "அம்ம கேட்பிக்கும்" என்ற தொல்காப்பியத்தின்படி யான் கூறுகின்றதனைக் கேள் என்று பொருள்பட்டு உரையசையாய் நிற்கும் 'அம்ம' என்னும் இடைச்

சொல், "உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்" என்பதனால், நீண்டு "அம்மவென னு மசைச்சொல் நீட்டம், அம்முறைப் பெய ரொடு சிவணுதாயினும், விளியொடு கொள்பதெளியுமோரே" என்ப தனால் விளியோடு கூடிநின்ற தென்று உணர்க; [நன்-உயிர்-17, உரையையுங் காண்க.] அன்று, ஏ-ஈற்றசை. (620)

## 62.—'கரன்முதலியோர் அவர்களைக் கொன்றிலரோ?' என்று இராவணன் வினவல்.

என்றுரை செயாநகை செயாவெரி விழிப்பான்
வன்றுணை யிலாவிருவர் மானிடரை வாளாற்
[1]கொன்றிலர்க ளாநெடிய குன்றுடைய கானின்
நின்றகர னேமுதலி னோர்நிருத ரென்றான்.

(இ - ள்.)—என்று உரைசெயா-என்று சொல்லி, நகை செயா -சிரித்து, எரி விழிப்பான்-தீப்புறப்படக் கண்விழிப்பவனான இரா வணன், (சூர்ப்பணகையை நோக்கி), 'நெடிய குன்று உடைய கானில் நின்ற கரனே முதலினோர் நிருதர்-உயர்ந்த மலைகளையுடைய தண்டகாரணியத்தில் நிலைபெற்றுள்ள கரன் முதலியோராகிய அரக் கர்கள், வல் துணை இலா இருவர் மானிடரை-வலிய துணை யாதொன் றும்பெறாத அந்த இரண்டுமனிதர்களை, வாளால் கொன்றிலர்கள் ஆ-ஆயுதங்களாற் கொன்றாரில்லையோ?' என்றான் - என்று வினவினான்; (எ - று.)

கீழ்ச் சூர்ப்பணகை இராமலட்சுமணர்களைப் பற்றியே யன்றி அவர்கள் துணைவலிமையைப்பற்றி யாதொன்றுங் கூறாமையால் அவர்கள் துணைவலியில்லாரென்று அறிந்து, 'வன்துணையிலா விருவர் மானிடர்' என்றுசொல்லி, 'உனக்குத்துணையாயமைத்த கரனமுதலியோர் அம்மானிடரைக் கொன்றிலரோ!' என்று வின வினன். வாள் என்றது-ஆயுதப்பொதுவாய் நின்றது; (சிறப்புப் பெயர் பொதுப்பொருளையும் பொதுப்பெயர் சிறப்புப்பொருளையும் உணர்த்துவது, ஒருவகைப் பாஷைநடை.) இங்குக் கூறிய நகை, இகழ்ச்சிகாரணமாகப் பிறந்தது; வீரத்தெழுந்த வெகுளிநகையும் எள்ளல்நகையுள் அடங்கும். பி-ம்:—[1]கொன்றிலர்களால். (621)

வேறு.

## 63.—அதற்குச் சூர்ப்பணகை விடை கூறத்தொடங்கல்.

அற்றவ னுரைத்த லோடு [1]மழுதிழி யருவிக் கண்ணள்
எற்றிய வயிற்றள் பாரி னிடைவிழுந் தேங்கு கின்றாள்
சுற்றமுந் தொலைந்த [2]தைய நொய்தெனச் சுமந்த கையள்
உற்றது தெரியும் வண்ண மொருவகை யுரைக்க லுற்றாள்.

(இ - ள்.)—அற்று -அவ்வார்த்தையை [அவ்வாறு என்றபடி], அவன் உரைத்தலோடும்-இராவணன் சொன்னவளவிலே, [சூர்ப் பணகை), அழுது இழி அருவி கண்ணள்-அழுதலாற் பெருகுகிற மலையருவிபோல் இடையறாத நீர்ப்பெருக்கையுடைய கண்களையுடை

யவளும், எற்றிய வயிற்றள்-(கைகளால்) மோதப்பட்ட வயிற்றை யுடையவளும், பாரினிடை விழுந்து ஏங்குகின்றாள் - தரையிலே விழுந்து அழுகின்றவளுமாய், (அவனை நோக்கி), 'ஐய-ஐயனே! சுற்றம்உம்-அந்தப் பந்துவர்க்கமும், நொய்து-விரைவிலே அல்லது எளிதாக, தொலைந்தது-(அவர்களால்) அழிந்து போய்விட்டது', என-என்று தொகுத்துக்கூறி, சுமந்த கையள்-தலைமேற் கொண்ட கையையுடையவளாய், உற்றது - (கரன்முதலிய அவர்களுக்கு) நேர்ந்த அழிவை, தெரியும் வண்ணம் - (இராவணனுக்குத்) தெரியும்படி, ஒரு வகை உரைக்கல் உற்றாள் - ஒருவாறு வகுத்துக் கூறத் தொடங்கினாள்; (எ-று.)—அதனை, அடுத்தகவியிற்காண்க.

இராவணன் வினவியவுடனே சூர்ப்பணகை கண்ணீர் சோர வயிற்றிலடித்துக்கொண்டு தரையில் விழுந்து புரண்டு அழுது தலைமேற் கைவைத்துக்கொண்டு செய்தி கூறலாயின ளென்பதாம்: தன்மைநவிற்சியணி. அருவி - கண்ணீர்த்தாரைக்கு உவமையாகு பெயர். அழுது - காரணப்பொருளதான அழ என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு. பி - ம் :—[1] அழுதழுது. [2] ஐயாவென்றனள், ஐயநொய்தன.

இதுமுதல் இருபத்தேழு கவிகள்-இப்படலத்தின் பதினான்காங் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தங்கள். (622)

## 64.—சூர்ப்பணகை செய்திகூறல்.

சொல்லென்றென் வாயிற் கேட்டார் தொடர்ந்தெழு சேனை யோடும்
கல்லென்ற வொலியிற் [1]சென்றார் கரன்முதற் காளை வீரர்
எல்லொன்று கமலச் செங்க ணிராமனென் [2]றிசைத்த [3]வேந்தல்
வில்லொன்றிற் கடிகை [4]மூன்றி [5]லேறினர் விண்ணி லென்றாள்.

(இ - ள்.) கரன் முதல் காளை வீரர் - கரன்முதலிய இளவெருது போன்ற வலியவீரர்கள்,—சொல் என்று - (உனக்கு நேர்ந்த இடையூற்றைச்) சொல்லென்று (என்னை நோக்கிச்) சொல்லி, என் வாயில் கேட்டார் - (உடனே நான் சொல்ல) எனது வார்த்தையாற் (செய்தியைக்) கேட்டறிந்தவர்களாய், (உடனே), தொடர்ந்து எழு சேனையோடுஉம் - (விடாது) பின்தொடர்ந்து புறப்பட்டசேனைகளுடனே, கல்லென்ற ஒலியின் சென்றார் - கல்லென்ற ஆரவாரத்தோடு (பார்க்கச்) சென்றவர்களாய், எல்ஒன்று கமலம் செங்கண் இராமன் என்று இசைத்த ஏந்தல் வில் ஒன்றின் - சூரியகிரணம் படப்பெற்ற [நன்கு மலர்ந்த] செந்தாமரைமலர்போன்ற சிவந்தகண்களையுடைய இராமனென்று பெயர்பெற்ற பெருமையிற்சிறந்தவனது ஒப்பற்ற தனி வில்லால், கடிகை மூன்றில்-மூன்று நாழிகைக்குள்ளே, விண்ணில் ஏறினர்-(இறந்து) வீரசுவர்க்க மடைந்தார்கள், என்றாள் - என்று சொன்னாள்; (எ-று.)

நடந்தசெய்தியையெல்லாம் கூறுபவள் 'கேட்டார்: சேனையோடுஞ் சென்றார்: விண்ணிலேறினார்' என்று இவ்வளவு மாத்திரத்தையே கூறி, அவர்கள் போர்செய்தன ரென்பதைக் கூறாதது,

சிறிதுபொழுதே நடந்த அப்போர் சுத்தவீரனான இராமனது முன்னிலையில் சிறப்புறுமையைக் காட்டும். அவர்கள் தங்கள்கடமையிற் சிறிதுந் தவறாமல் வெகுவிரைவாகத் தொழில்செய்து முடிந்த வகையைப பரக்கக்கூறினாள். வாய் - சொல்லுக்குக் கருவியாகு பெயர். தொடர்ந்து எழு - ஒன்றன்பின்ஒன்றாக நெடுந்தூரம் தொடர்ச்சிப்பட்டெழுந்த எனினுமாம். மூன்றாமடியினால், புண்டரீகாக்ஷனை இராமனது கண்ணழகிலே இவள் ஈடுபட்டமை தோன்றும். எல் ஒனறு கமலம் - ஒளிபொருந்திய தாமரை யென்றலும் ஒன்று. 'வில்லொன்று' என்றதனால், அவன் அசகாயசூர னென்பது தோன்றும். கடிகை - இருபத்துநான்கு நிமிடங் கொண்ட நேரம். போரிற் பின்னிடாது பகைவரால் இறந்தவர் வீரசுவர்க்கமடைவரென்பது நூற்கொள்கை யாதலால், 'விண்ணி லேறினர்' என்றாள். 'சொல்லென்று என்வாயிற் கேட்டார்' என்பது, சொல்லென்ற ஒரு சொல்லை என்வாயாற் கேட்டமாத்திரத்திலென்னுங் கருத்துப்படவும் நிற்கும். பி - ம்:—[1]சென்ற. [2]இயைந்த. [3]வேந்தன். [4]ஒன்றில். [5]ஏற்றினன். (623)

## 65.—அதுகேட்டு இராவணன் சோகமும் கோபமும் ஒருங்கு அடைதல்.

தாருடைத் தானை யோடுந் தம்பியர் தமியன் செய்த
போரிடை மடிந்தா ரென்ற வுரைசெவி புகாத முன்னம்
காரிடை யுருமின் மாரி கனலொடு பிறக்கு மாபோல்
நீரொடு நெருப்புக் கான்ற [1]நிறைநெடுங் கண்க ளெல்லாம்.

(இ - ள்.) 'தமியன் செய்த போரிடை - தனித்தவனாய் இராமன் செய்த யுத்தத்திலே, தம்பியர் - (தனது) தம்பிமார் [கரன் முதலியோர்], தாருடை தானையோடும் - போர்மாலையையுடைய சேனையுடனே, மடிந்தார்-இறந்தார்கள்,' என்ற—, உரை-வார்த்தை, செவி புகாத முன்னம் - (இராவணனது) காதுகளில் நுழையாத முன்பு [கேட்டமாத்திரத்திலேயென்றபடி],—காரிடை - மேகத்திலே, மாரி - மழை, உருமின் கனலொடு - இடிவடிவமான நெருப்புடனே, பிறக்கும் ஆ போல்-தோன்றும் விதம் போல, நிறை நெடு கண்கள் எல்லாம் - நிறைந்த பெரிய (அவனுடைய) கண்கள் யாவும், நீரொடு நெருப்பு கான்ற-நீரையும் நெருப்பையும் வெளிச்சொரிந்தன; (எ-று.)

இராமபிரான் தனிப்படச்செய்த போரில் தம்பியர் மடிந்தார் என்ற சொல் செவியிற்புகுமுன், அவன் கண்களினின்று சோகத்தால் நீர்சொரிய, கோபத்தால் தீயெழுந்தது என்பதாம். கரிய இராவணன் கண்களுக்கு மேகமும், அவற்றின் நீர்த்தாரைக்கு மழைப்பெருக்கும், நெருப்பெழுச்சிக்கு இடிவீழ்ச்சியும் உவமையெனக்காண்க. தார்-இங்கே, போருக்குஉரிய தும்பைப்பூமாலை; இனி, வெற்றிமாலையுமாம். தமியன்-தனிவில்லாளி. 'புகாத முன்னம்' என்றது விரைவுகாட்டும். உருமின், இன் - சாரியை; மின்என எடுத்து மின்னலென்று உரைத்து, இடி மின்னல் நெருப்பு என்னும் மூன்றையும் விழித்தீக்கு உவமையாக வுரைப்பாருமுளர். கண்கள் பலவாதலின், 'நிறை' என்ற

அடைமொழி கொடுக்கப்பட்டது. [1]நிரை என்ற பாடத்துக்கு, வரிசையான என்க. (624)

## 66.—இராவணன் சூர்ப்பணகையை 'நீ அவருக்குச் செய்த குற்றம் என்?' என வினவல்.

ஆயிடை யெழுந்த சீற்றத் தழுந்திய [1]துன்ப மாழித்
தீயிடை யுகுக்கு நெய்யிற் சீற்றத்திற் கூற்றஞ் செய்ய
நீயிடை யிழைத்த குற்ற [2]மென்னைகொ னின்னை யின்னே
வாயிடை யிதழு மூக்கும் [3]வலிந்தவர் கொய்ய வென்றான்.

(இ-ள்.)—ஆயிடை-அவ்விடத்தில் [அப்பொழுது], எழுந்த - உண்டாகிமிக்க, சீற்றத்து-கோபத்திலே, அழுந்திய-உள்ளடங்கிய, துன்பம்-துயரமானது, ஆழி தீயிடை உகுக்கும் நெய்யின்-கடலிடையிலுள்ள தீயில் [படபாமுகாக்கினியில்] சொரியப்பட்ட நெய் போல, சீற்றத்திற்கு ஊற்றம் செய்ய-கோபத்துக்கு வலிமையைச் செய்ய, (இராவணன் சூர்ப்பணகையைநோக்கி), 'அவர்-அம்மனிதர்கள், நின்னை-உன்னை, இன்னே-இவ்வாறு, வாயிடை இதழ்உம் மூக்குஉம் வலிந்து கொய்ய-காதின் மேலிடத்தையும் மூக்கையும் வலிய அறுக்குமாறு, நீ இடை இழைத்த குற்றம்-நீ அவர்களிடத்திற்செய்த பிழை, என்னை கொல்-யாதோ'? என்றான் - என்று வினவினான்; (எ - று.)

தீயில் நெய்யைச்சொரிந்தால் அந்நெய் அத்தீக்குள் அடங்கி விட்டதாயினும் உள்ளிருந்தபடியே அத்தீக்கு நல்ல ஆதாரமாய் நின்று அதனை மிகுதியாக வளர்த்து விசேஷமாகச் சொலிக்கச் செய்தல் போல, அவனுக்கு உண்டான சினத்திலே யடங்கிய சோகம் அச்சினத்தை வளர்ப்பதாய் அதனை மேன்மேல் மிகுவிக்கும் என்பது, முன்னிரண்டடியின் கருத்து; உவமையணி. சீற்றத்து அழுந்திய துன்பம்-இப்படலத்து முதற்கவியிற் கூறியபடி தங்கைக்குக் காமத்திலே சோகம் அடங்கினாற்போல, இங்கே தமையனுக்குச் சினத்திலே சோகம் அடங்கியதென்க. ஊற்றம்-ஊன்றுகோல்; ஆதாரம் என்றபடி. நின்னை இதழும் மூக்கும் கொய்ய-இரண்டுசெயப்படுபொருள் வந்த வினை. இன்னே-இடைச்சொல்; இப்பொழுதே யெனினுமாம். வலிந்து - வலிமைகொண்டு என்றுமாம்.

ஓசைஉட்புகும் வழி யாதலால், 'வாய்' என்றது, செவிக்குக் காரணக்குறியாயிற்று. துவார மென்ற பொருளை யுணர்த்தும் 'வாய்' என்ற பொதுப்பெயர்-சிறப்பாய், இங்கு, நவத்துவாரங்களிற் சேர்ந்த காதை யுணர்த்தியதென்னலாம். "மெய் வாய் கண் மூக்குச் செவி யெனப்பேர்பெற்ற, ஐவாய வேட்கையவா" என்ற இடத்தில் பஞ்சஇந்திரியங்களையும் பொதுப்பட 'வாய்' என்ற சொல்லாற் குறித்தவாறு முணர்க. ஒருபொறி மற்றொருபொறியாகக் கூறப்பட்ட உபசாரவழக் கென்றலுமாம். செவியை வாய் என்றதற்கு ஏற்ப, செவியின் மேற்பகுதியை இதழெனக் குறித்தார். பி - ம்:—
[1]துன்பமாறித். [2]என்னவர். [3]வலிந்தனர். (625)

## 67.—அதற்குச் சூர்ப்பணகை கூறும் விடை

என்வயி னுற்ற குற்றம் யாவர்க்கு [1]மெழுதொ ணாத
[2]தன்மைய னிராம னோடுந் தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் [3]மருங்குல் கொண்டாள் [4]வேய்வயின் மென்றோள் [கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள் பொருட்டினாற் புகுந்த தென்றாள்.

(இ - ள்.)—என்வயின் உற்ற குற்றம்-என்னிடத்திற் பொருந்திய பிழை, (யாதெனின்),—தாமரை தவிர-(தனக்கு இருப்பிடமான) செந்தாமரை மலரை விட்டு,யாவர்க்குஉம் எழுத ஒணாத தன்மையன் இராமனோடுஉம்-எத்துணைவல்லார்க்கும் (சித்திரத்தில்) எழுதமுடியாத வடிவழகுடையவனான அவ்விராமனுடனே, போந்தாள்-வந்தவளும், மின்வயின் மருங்குல் கொண்டாள்-மின்னலினிடத்து இடையைப்பெற்றவளும், வேய்வயின் மெல் தோள் கொண்டாள்-மூங்கிலினிடத்து மெல்லிய தோளைப் பெற்றவளும், பொன்வயின் மேனி கொண்டாள்-பொன்னினிடத்து (த் தனது) உடம்பின் நிறத்தைப் பெற்றவளுமான ஒருத்தியின், பொருட்டினால்-நிமித்தமாக, புகுந்தது-நேர்ந்தது, என்றாள்-என்று சொன்னாள்; (எ - று.)

நான் உனக்கு நன்மை செய்யவேணு மென்றே கருதினேன். என்னிடம் குற்றம் நேர்ந்தது எப்படியெனில்,—அந்த ராமனுடன் ஒருகட்டழகி வந்துள்ளாளே, அவள் காரணமாக நேர்ந்ததாம் என்று சுருக்கமாகக் கூறினாள்; மேல் பதின்மூன்று கவிகளில் விவரமாகக் கூறுவள். 'தாமரை தவிர-தாமரை ஆசனமாக இருக்கும் பேற்றை யிழக்க' (இராமனோடு) போந்தாள் என்க. இதனால் திருமகள் போல்வா ளென்று கூறியவாறும். 'மின்வயின் மருங்குல் கொண்டாள்' என்பதற்கு-மின்னல்போன்ற இடையை யுடையவளென்றும், 'வேய்வயின் மென்தோள் கொண்டாள்' என்பதற்கு-இளமூங்கில் போலுந் தோளுடையவளென்றும், 'பொன்வயின் மேனிகொண்டாள்' என்பதற்கு-பொன்போன்ற நிறங் கொண்டவளென்றும் கருத்து. வேறுவாய்பாட்டாற் கூறப்பட்டிருப்பினும் இது உவமையணியேயாம். தான் இராமனது திருமேனியழகில் ஈடுபட்டதனால், 'யாவர்க்கு மெழுதொணாத தன்மையன்' என்றாள்: திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்காரும் தலைவிகூற்றாக "எழுதவரிய பெருமான்" என்றமைகாண்க. "எழுதரிய திருமேனி" என்றார், குலமுறைகிளத்து படலத்தும் (செ. 20); மேல் வாலியும் "ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாய்" என்கிறான். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவும் அழித்து அழித்து எழுதக்கூடிய சித்திரத்தில் இயற்கையினும் சிறப்பாக வடிவம் எழுதக்கூடும்: அதிலும் எழுதவொண்ணாததென அழகின் மிகுதியை யெடுத்துக்காட்டியவாறு. 'பொன்வயின் மேனி கொண்டாள்' என்பதற்கு-பொன்மயமாய் வடிவமமையப் பெற்றவ ளென்றுங் கருத்துக்கொள்ளலாம். 'மின்வயின் மருங்குல் கொண்டாள், வேய்வயின்மென்தோள் கொண்டாள், பொன்வயின் மேனிகொண்டாள்' என்ற சொற்போக்கால், அவளுக்கு ஒவ்வொருதிறத்தில் ஒவ்வொன்று உவமையானால் ஆகுமேயன்றி

ஒருபொருளும் முற்றுவமையாகாதென்ற கருத்துப் போதரும்; மின்னல்முதலியவற்றிலிருந்து சாரமான ஒவ்வொரு பொருளையே கொண்டுள்ளா ளென்றலுமாம். 'புகுந்தது' என்பதற்கு - அருகிற் சென்றது என்று உரைப்பாருமுளர். எழுதொணாத-தொகுத்தல். பி - ம் :—[1] எழுதவொண்ணுத். [2] தன்மையள். [3] மருங்கு. [4] வேயி னின். (626)

## 68.—இராவணன் 'அவள் யார்?' என்ன, சூர்ப்பணகை விரித்துக் கூறலுறல்.

ஆரவ [1] ளென்ன லோடு மரக்கியு மைய [1] வாழித்
தேரவ ளல்குல் கொங்கை செம்பொன்செய் குலிகச் செப்புப்
பாரவள் பாதந் தீண்டப் பாக்கியம் படைத்த தம்மா
பேரவள் சீதை யென்று வடிவெலாம் பேச லுற்றாள்.

(இ - ள்.) (அதுகேட்டு இராவணன்), அவள் ஆர் என்ன லோடும் - அந்தப்பெண் யாரென்று வினவியவளவிலே, அரக்கிஉம் - சூர்ப்பணகையும், 'ஐய - ஐயனே! அவள் அல்குல் - அவளுடைய அல்குலானது, ஆழி தேர் - சக்கரம் பூட்டப்படும் தேர்போலும்; கொங்கை-(அவளுடைய) தனங்கள், செம் பொன்செய் குலிகம் செப்பு- சிவந்த அழகைச்செய்கிற குங்கிலியத்தாலாகிய செப்புப் போலும்: பார்-பூமி, அவள் பாதம் தீண்ட பாக்கியம் படைத்தது-அவளுடைய திருவடி பரிசிக்கும்படி நல்வினைப்பயன் பெற்றது; அம்மா - ஆச்சரி யம்: அவள் பேர் சீதை - அவளுடைய பெயர் சீதை யென்பதாம்,' என்று - என்று சொல்லி, வடிவுஎலாம் பேசல் உற்றாள் - (அப் பிராட்டியினது) வடிவழகையெல்லாம் சொல்லத்தொடங்கினாள்; (எ - று.)—அதனை, அடுத்த பன்னிரண்டு கவிகளிற்காண்க.

கீழ்க்கவி - தொகையும், இக்கவி - வகையும், அடுத்த கவிகள் - விரியுமென அறிக. இராவணனுக்குச் சீதையினிடத்துமோகமுண் டாகுமாறு காதல் மூட்டும் முக்கியமான அவயவங்களை இதிற் கூறு கிறாள்; மேல் அவ்விராவணனுடைய மோகத்தை வளர்க்குமாறு சீதையை வருணிப்பாள். "குலிகச் செப்பெனக்கொம்மை வருமுலை" எனச் சிந்தாமணியிலும் குலிகச்செப்புக் கொங்கைக்கு உவமை கூறப் பட்டவாறு உணர்க. குலிகம் - இங்குலிக மென்பதன் விகாரமென்ப. இனி, செம்பொன் செய்செப்பு, குலிகம் செய்செப்பு எனக்கூட்டி - செம்பொன்னினாலும் குலிகத்தாலும் செய்த செப்புப்போலும் கொங்கை என்றுமாம். பொன்னும், குலிகமும், நிறம்பற்றி யெடுக்கப் பட்டன என்க. 'பாரவள் பாதந்தீண்டப்பாக்கியம்படைத்தது' என் பது - அவளுடைய அடி படப்பெறுதலும் பாருக்குப் பெரும்பேறே எனற பொருளை யுணர்த்துவதோடு, அவள் கால் நிலந்தோயாத இயல்பையுடைய தேவமாது போல்வாளென்ற கருத்தையுந் தொனிப் பிக்கும். அம்மா-வியப்பிடைச்சொல்; அவளுடைய மேனியின் கட்டழகை வியந்து கூறியவாறு. ஐய - அழகிய என்றுமாம். பி-ம்:—[1] என்ற லோடும். [2] ஆழ்ந்துதேரவடிரண்ட. (627)

69.—இதுமுதல் பன்னிரண்டு கவிகள் - சூர்ப்பணகை பலவாற்றாற் சீதையை வருணித்தலைக் கூறும்.

காமர [1]முரலும் பாடல் கள்ளெனக் கனிந்த வின்சொல்
தேமலர் [2]நிரந்த கூந்தற் றேவர்க்கு மணங்கா மென்னத்
தாமரை யிருந்த [3]தையல் [4]சேடியாந் தரமு மல்லள்
யாமுரை [5]வழங்க லென்ப தேழைமைப் பால [6]தன்றே.

*இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - குளகம்.*

(இ - ள்.) *காமரம் முரலும் பாடல் - காமரமென்னும் பண்ணின் வடிவமாக இனிது ஒலிக்கிற இசைப்பாட்டையும், கள் என கனிந்த இன் சொல் - தேன்போல் சுவைநிறைந்த இனிய சொல்லையும், தே மலர் நிரந்த கூந்தல் - தேனையுடைய மலர்கள் நிறைந்த கூந்தலையு முடையாள் (அவள்): தேவர்க்கு உம் - தேவமாதர்களுக்கும், அணங்கு ஆம் - கொண்டாடத்தக்கதொரு தேவமாதாம், என்ன - என்று சொல்லும்படி, தாமரை இருந்த - செந்தாமரை மலரில் வீற்றிருக்கிற, தையல் - அழகிய வடிவமுடைய திருமகள், சேடி ஆம் தரம் உம் அல்லள் - (அவளுக்கு) ஏவல்செய்யும் மகளாதற்குந் தகுதியுடையவளாகாள்;(என்றால்),—யாம் உரை வழங்கல் என்பது-நாம்(அவளுடைய வடிவழகை) எடுத்துச்சொல்வோ மென்பது, ஏழைமை பாலது அன்றே - அறிவின்மையின்பாற்படுவதன்றோ? (எ - று.)—அன்றே-தேற்றம்.*

*சாதாரணமாகத்தேவமாதர் மானுடமாதரினும் அழகியவரென்பர்; அத்தேவமாதர் யாவர்க்கும் தலைவியாய் அழகிற் சிறப்பவள் திருமகள்: அத்திருமகளும் அவளுக்குத்தாதியாக இருக்கவும்தகுதியுடையவளல்லள் என்றால், நான் அவளழகை எப்படிச்சொல்லி முடிப்பேன்? என்று அந்தச்சீதையின்கட்டழகின் கூறற்கருமையை விளக்குகிறாள்; ஆயினும், இயன்றவளவு சொல்வே னென்றவாறு. சீதையினழகைக் கருதுந்தோறும் அதன்சிறப்பு தனக்கு மிக்குத் தோன்றுகின்றதென்பது தொனிக்க, 'திருஇங்குவருவாள் கொல்லோ' என்ற சூர்ப்பணகை, ''தாமரை தவிரப்போந்தாள்'' என்று சற்றுமுன் சீதையைத் திருமகளே யாகக் கூறி, இங்கு அத்திருமகளை "சேடியாந்தரமுமல்லள்" என்கின்ற நயம் காண்க. இங்குக் கூறப்படுஞ் சீதைவருணனையாகிய பிரபந்தத்துக்கு இது அவையடக்கமாய் அமைந்தது; அங்ஙனமாகவே, யாம் எனக் கவிகளுக்குரிய இயற்கைத்தனித்தன்மைப்பன்மையாற் கூறினாள். எவராலுஞ் சொல்லலாகா தென்பதுபட 'யாம்' என உளப்பாட்டுத்தனமைப் பன்மை கூறினளுமாம். காமரம்-தேவகானத்துள் ஒருபண் விசேடம். கள்ளெனக்கனிந்த இன்சொல்-நாவுக்கு இனிமைதரும் தேன்போலச் செவிக்கு இனிமை விளைக்குஞ் சொல்லென்க; மதுபானஞ்செய்யுந் தன்மையுடைய அரக்கியாதலின், இனிமைக்குக் கள்ளை யெடுத்துக் கூறினளென்றலும் உண்டு. இனி, முதலடிக்கு - வண்டுகள்பாடும் இசைப்பாட்டும் தேனும்போல மிகஇனிய சொல்லென்று பொருள் கூறுவாரு முளர்; காமரம் - வண்டு. பாடல் இன்சொல் கூந்தல்*

என்பன தேவர்க்கு அடையாகும்: 'தாமரையிருந்த தையல்' என்பதற்கு அடையாக்குதலும் ஆம். 'தேவர்' என்றது - இங்கே, பெண்பாற்பன்மையாய் நின்றது. பி - ம்:—[1]பழுத்த. [2]நிறைந்த, செறிந்த. [3]நங்கை. [4]சேடியர். [5]வழங்கும். [6]அன்றோ. (628)

70. மஞ்சொக்கு மளக வோதி மழையொக்கும் [1]வடித்த கூந்தல்
பஞ்சொக்கு மடிகள் செய்ய பவளத்தின் விரல்க [2]ளைய
அஞ்சொற்க ளமுதி னள்ளிக் கொண்டவள் வதன மைதீர்
கஞ்சத்தி னளவிற் றேனுங் கடலினும் பெரிய கண்கள்.

(இ - ள்.) அம் சொற்கள் - அழகிய வார்த்தைகளை, அமுதின் அள்ளிக்கொண்டவள் - அமிருதத்திலிருந்து முகந்தெடுத்துக் கொண்டவளான அம்மங்கையினது, அளகம் ஓதி - முடிக்கப்பட்ட கூந்தல், மஞ்சு ஒக்கும்-மேகத்தைப்போலும்: வடித்த கூந்தல்-வார்ந்துதாழவிடப்பட்ட கூந்தல், மழை ஒக்கும்-(பொழிதற்குக் காலிறங்கிய) மேகம் போலும்; அடிகள்-பாதங்கள், பஞ்சு ஒக்கும்-செம்பஞ்சுபோலும்: விரல்கள் —, செய்ய பவளத்தின் - சிவந்த பவழம் போல, ஐய-அழகியன: வதனம்-முகம், மை தீர் கஞ்சத்தின் அளவிற்று ஏன்உம் - குற்றமற்ற தாமரைமலரின் அளவையுடையதாயிருந்தாலும், கண்கள்—, கடலின்உம் பெரிய - கடலைக்காட்டிலும் பெரியனவாம்; (எ - று.)

'கடலினும் பெரிய கண்கள்' என்றது-உயர்வுநவிற்சியணியும், மற்றவை-உவமையணியுமாம். கண்கள் பெரியனவாயிருத்தல், உத்தமலக்ஷணம். 'அஞ்சொற்க ளமுதி னள்ளிக் கொண்டவள்' என்றது, சொல்லினிமையை விளக்க. அவள் சொற்கள் அமுதம் ஒக்கும் என்றபடி. அளகம்-பெண்களின் ஐவகையாக முடிக்கப்படும் கூந்தல் வகையில் ஒன்று: அளகவோதி-அளகமாகவுள்ள ஓதியென்க. ஓதி-பெண்மயிர். சேற்றிலுண்டாதலும், சூரியனைக் கண்டவளவிலே மலர்தலும், அவனைக் காணாதவிடத்துக் குவிதலும், பனிமழைகளுக்கு அழிதலும், காலம் செல்லச்செல்ல நறுமணம் ஒழிதலும், அடியில் முள்ளுடைமையும் முதலிய பல குறைகள் தாமரைக்கு உள்ளன வாதலால், அவையனைத்தும் இல்லாதவொரு தாமரையே அவள்முகத்துக்கு ஈடாகு மென்றற்கு, மைதீர்கஞ்சம் என்றாள்; உபமானமேபிடித்துச் சீர்திருத்திக்கொண்டு வரவேண்டிற்று, உபமேயத்தினுடைய வைலக்ஷண்யம். கஞ்சத்தினளவிற்றேனும்-முகம் தாமரைபோலச் சிறிய தாயிருப்பினும் என்றபடி. கண்கள் இருக்குமிடம் சிறியதாயினும் வியாபிக்குமிடம் மிகப்பெரிது என்ற கருத்துத் தொனிக்க, இவ்வாறு கூறினளென்ப: "வண்டிசைக்குங் கூந்தல் மதர்விழிகள் சென்றுலவ, எண்டிசைக்கும் போதாதிடம்" என்றதை மேற்கோளாகக்கொள்வர்: "கருதிமாதிரமனைத்தையுமளக்கின்ற கண்ணாள்" என்று காட்சிப்படலத்து வருவதும் ஒருசார் காணத்தக்கது பி-ம்:—[1]வடிந்த. [2]ஆன, ஒக்கும். (629)

71. ஈசனூர் கண்ணின் வெந்தா னென்னு[1]மி திழுதைச் [2]சொல்லிவ்
வாசநா ருேதி யாளைக் கண்டனன் [3]வல்வ லாற்ருன்

பேசலாந் தகைமைத் [4]தல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையா லழிந்து [5]தேய்ந்தா னனங்கனவ் வுருவ மம்மா.

(இ- ள்.)—'அனங்கன்-மன்மதன், ஈசனார் கண்ணின் வெந்தான்- சிவபிரானது நெற்றிக்கண்ணினால் எரிக்கப்பட்டுத் தீந்தொழிந்தான்,' என்னும் இது-என்றுசொல்லும் இது, இழுதை சொல்-பொய்ம்மொழியேயாம்:(பின்னை யென்னவெனின்),—இ வாசம் நாறு ஓதியாளை-இயற்கைநறுமணம் வீசுகிற கூந்தலையுடைய இச் சீதையை, கண்டனன்-பார்த்து, வவ்வல் ஆற்றான்-கவர்ந்து செல்ல முடியாதவனாகி,—பேசல் ஆம் தகைமைத்து அல்லா பெரு பிணி பிணிப்ப-சொல்லிமுடிக்குந் தன்மையதல்லாத மிக்க (காம) நோய் வருத்த, நீண்ட ஆசையால்-(இவள் பக்கல்) மிகுதியாகக்கொண்ட ஆசையினாலே, அ உருவம் அழிந்து தேய்ந்தான்-அழகிய தனது வடிவம் மெலிந்து அழியப்பெற்றான்; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்; சீதையின் அழகுமிகுதியை வியந்தது.

மன்மதன் அநங்கனானதற்குக் காரணம், சிவபிரானது நெற்றிக் கண்ணின் நெருப்புக்கு இரையானதன்று; இவளழகில் ஈடுபட்டு இவளைக் கவர்ந்துசென்று நுகரமுடியாமல் மிக்க காமநோ யுற்ற அதனாலே உடம்பு மெலிந்தொழிந்தவற்றால்தான் என்றாள். இங்ஙனம் உண்மையான தன்மையை நீக்கி மற்றொருதன்மையை யேற்றிக் கூறியது, ஒழிப்பணியாம்; வடநூலார் அபநுதியலங்காரமென்பர்: ''சிறப்பினும் பொருளினுங்குணத்தினு முண்மை, மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதியாகும்'' என இதனிலக்கணங்காண்க. யாவர்க்கும் வேட்கையைவிளைப்பவனும் யாவராலும் விரும்பப்படுபவனுமான மன்மதனும் இவளுடையபெருங்கட்டழகைக்காமுற்று இவளைப் பெறும் பாக்கியமின்றி வருந்தியொழிந்திட்டா னென வருணித்த வாறு. இதில, இவள் மன்மதன்மனைவியான ரதீதேவியினும் மேலான கட்டழகி யென்பதும், இவளாற் காதலிக்கப்பட்ட இராமபிரான் மன்மதனினும் மேலான திவ்வியசுந்தரமூர்த்தி யென்பதும் தொனிக்கும். [5]வல்லவாற்றாற் பேசலாந் தகைமைத்தல்லாப் பெரும்பிணி என்ற பாடத்திற்கு-எவ்வளவு வல்லமைத்திறத்தினாலும் கூறலாகாதபடி வரம்புகடந்த வேதனை யென்க.

முன்னொருகாலத்திற் கைலாசகிரியிற் சிவபிரான், சனகர் முதலிய நால்வர்க்கு யோகநிலையை உணர்த்துதலினிமித்தம் தான் யோகனாசெய்துகொண்டிருக்கையில், தேவர்களேவலால் தன்மீது மலரம்புகளை யெய்து தனதுதவத்தைக் கெடுக்க முயன்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன் நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து சாம்பலாய்ப்போம்படி செய்தன னென்பது கதை. "திங்கள் மேவுஞ் சடைத் தேவன்மேல் மாரவேள், இங்கு நின் றெய்யவும் எரிதரும நுதல்விழிப், பொங்கு கோபஞ் சுடப் பூளை வீயன்னதன், அங்கம்வெந் தன்றுதொட்டநங்கனேயாயினான்" என்ற பாலகாண்டச்செய்யுளையுங் காண்க. அநங்கன்-வடசொல்; ந+ அங்க+அன், ந-எதிர்மறைகுறிப்பது, அங்கம்-உடம்பு, அன்-விகுதி:

அங்க மில்லாதவ னென்று பொருள். பி - ம்:—[1]ஈது. [2]சொல்லால். [3]வல்லவற்றால். [4]அல்லால். [5]வெந்தான். (630)

72. தெவ்வுல கத்துங் காண்டி சிரத்தினிற் பணத்தி னோர்கள்
அவ்வுல கத்துங் காண்டி யலைகட லுலகிற் காண்டி
வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்
[1]இவ்வுல கத்தா ளங்கம் யாவர்க்கு மெழுதொ ணாதாள்.

(இ - ள்.) வெம் உலை உற்ற - வெவ்விய (கொல்லனது) உலைக் களத்தில் வடிக்கப்பட்ட, வேலை-வேற்படையையும், வாளினை - வாட் படையையும், வென்ற-வெற்றிகொண்ட, கண்ணாள் - கண்களையுடைய இவள், இ உலகத்தாள் - இந்த உலகத்திலேயுள்ளவளாயினும், யாவர்க்குஉம் அங்கம் எழுத ஒணாதாள் - யாவர்க்கும் (சித்திரத்தில்) தீட்டமுடியாத வடிவமுடையவள்; (இம்மாதுபோன்ற கட்டழகுடைய மாதரை), தெவ் உலகத்துஉம் - (உனக்குப்) பகைவர்களாகவுள்ள தேவர்களுடைய லோகத்திலும், காண்டி - (தேடிப்)பார்: சிரத்தினில் பணத்தினோர்கள் - தலையிற் படத்தையுடையவர்களாகிய நாகர் களுடைய, அ உலகத்துஉம்-அந்தப்பாதாளலோகத்திலும், காண்டி-பார்: அலை கடல் உலகில் - அலைவீசப்பெற்ற கடலினாற் சூழப்பட்ட பூலோகத்திலும், காண்டி-பார்; எங்கும் இப்படிப்பட்டவளொருத்தி கிடைக்கமாட்டாள் என்றபடி]; (எ-று.)

"இருதிறத்தார்க்குஞ் செய்த வரம்பிவ ரிருவர்" என்ற சூர்ப்ப ணகை, அங்ஙன் கூறியதற்கு ஏற்ப, "யாவர்க்கும் எழுதொணாத் தன்மையன்" என்று இராமனைக் கூறி, 'யாவர்க்கும் எழுதொணா தாள்" என்று சீதையைக் கூறுவது மிகவும் பொருத்தமாதலறிக. [1]எவ்வுலகத்தாள் என்று பாடங்கொண்டு, இவள் எந்த உலகத்து மாதோ என்று உரைத்தலு மொன்று; தேவமாதுக்கும் நாக கன் னிகைக்கும் மானுடமகளுக்கும் இத்தன்மைய அழகு கண்டதில்லை யென்பது கருத்து. முன்னிரண்டடியால், இராவணனது சஞ்சாரம் எவ்வுலகத்துந் தடைப்படாத தென்பது தொனிப்பதை யுணர்க. வேல் வடிவமும் வாள்வடிவமுமாக உருக்கிரும்பு உலையிலுறுவது பற்றி, 'உலையுற்ற வேலை வாளினை' என்றது. வேலை வாளினை வென்ற கண்ணாள் - கூர்மையிலும், பளபளப்பிலும், வேதனையை விளைத்து ஆடவரை வருத்துதலிலும், வேற்படை வாட்படைகளினும் மேம் பட்ட கண்ணிணையுடையாளென்றபடி. இனி, வென்ற என்பதை உவமவுருபாகவுங் கொள்ளலாம். தெவ்-பண்பாகுபெயர். (631)

73. தோளையே சொல்லு கேனோ சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ [1]வல்லவை வழுத்து கேனோ
மீளவுந் [2]திகைப்ப தல்லாற் றனித்தனி விளம்ப லாற்றேன்
நாளையே காண்டி யன்றே நானுனக் குரைப்ப தென்னோ.

(இ-ள்.) தோளை ஏ சொல்லுகேன் ஓ-(அவளுடைய) தோளழகை யே எடுத்துச்சொல்லுவேனோ? சுடர் முகத்து உலவுகின்ற வாளை ஏ சொல்லுகேன்ஓ-ஒளியையுடைய அவள்முகத்திலே பிறழ்கிற வாள் போன்ற கண்களின் அழகையே எடுத்துச் சொல்வேனோ? வல்லவை

வழுத்துகேன்ஓ - மற்றும் சொல்லக்கூடிய அவயவங்களை எடுத்துச் சொல்வேனே? மீளஉம் திகைப்பது அல்லால் தனித்தனி விளம்பல் ஆற்றேன் - (வருணித்துச்சொல்லத் தொடங்குந்தோறும்) மறுபடி மறுபடி (என் மனம்) திகைத்திடுகின்றதே யல்லாமல் (அவளுடைய அவயவங்களினழகைத்) தனித்தனியே யெடுத்துச்சொல்ல வல்லே னல்லேன்: நாளை காண்டி அன்றே - (நீ) நாளைக்கே (அவளை நேரிற்) பார்த்திடுவாயன்றோ? (ஆதலால்), நான் உனக்கு உரைப்பது என்ஓ- நான் உனக்குச் சொல்லவேண்டுவ தென்ன? [ஒன்றுமில்லை]: (எ-று.)

நான் அந்தச் சீதையின் உறுப்பழகை எடுத்துச்சொல்லத் தொடங்கும்போது தோள்கள் முதலில்வந்து என் கண்ணெதிரே நிற்கின்றன: அவற்றை வருணித்துச்சொல்வோ மென்னும்போது கண்ணழகு சிறந்து தோன்றுகின்றது: அவற்றை வருணிக்கலா மென்று நினைக்கையில் அவளுடைய மற்றையுறுப்புக்கள் ஒன்றன் பின் ஒன்றாகச் சிறந்து சிறந்து தோன்றுகின்றன: இப்படித் தோன்றுவதனால் எதைச் சொல்வோமென்று முதலில் திகைத்து அங்ஙன் மீண்டும்மீண்டும் திகைத்துத் திகைத்துப் போவதன்றி, ஒன்றனழகைச்சொல்லி மற்றொன்றினழகைச் சொல்லச்செல்வே னென்று உறுதிகொண்டு நிற்கவல்லேனல்லேன்; நான் சொல்வதன் உண்மை நாளைக்கு நீ நேரிற் காணும்போது உனக்குத்தானே தெரிய வரும்: நான் சொல்லவேண்டுவதில்லை யென்றவாறு. இனி, பிரதி யட்சமாகப் பார்த்தாற் பார்த்ததேயன்றி வருணித்துச் சொல்லி யுணர்த்தற்கு முடியாதது அவளழகு என்றவாறுமாம். இங்ஙனம் ஒருபெண்தானே பிராட்டியின் சௌந்தரியத்தைக் குறித்துத் திகைப்பதாகக் கூறுவதனால், அவளுடைய திவ்விய சௌந்தரியா திசயம் மிக்குவிளங்கும். 'மீளவும் திகைப்பது' என்றது - முந்தி அவளைத் தான் நேரிற்கண்டபொழுது திகைத்ததைக்குறித்ததுவு மாம். "திருவிங்கு வருவாள் கொல்லோவென்றகந்திகைத்து நின்றாள்", "கண் பிறபொருளிற் செல்லா கருத்தெனின்அஃதே கண்ட, பெண் பிறந்தேனுக்கென்றா லென்படும் பிறருக் கென்றாள்" என்று சூர்ப்ப ணகைப்படலத்திற் கூறியவாற்றால், முன் அவள் திகைத்தமை அறிக. வல்லவை-சொல்ல வல்லவை; இனி, அல்லவையென எடுத்து, மற்றையவயவங்களை யென்றலும் நன்றாம். தான் அவளழகை இவ்வளவு[2]எடுத்துக்கூறியமாத்திரத்தால் காமுகனான இராவணன் அவளிடங்காதல்கொண்டு உடனே அவளை நாடிச்சென்றிடுவா னென்ற நிச்சயத்தால், 'நாளையே காண்டியன்றே' என்கிறாள்;பாம்பின் கால் பாம்பறியு மாதலின். அன்றே - தேற்றம். பி - ம்:—[1] அல்குலை. [2] தகைப்பது. (632)

74. வில்லொக்கு நுதலென் றாலும் வேலொக்கும் விழியென் றாலும், பல்லொக்கு முத்தென் றாலும் பவளத்தை யிதழென் றாலுஞ், சொல்லொக்கும் பொருளொவ் [1]வாதாற் சொல்லலா முவமை யுண்டோ, நெல்லொக்கும் புல்லென் றாலும் நேருரைத் தாக [2]வற்றே.

(இ - ள்.) நெல் புல் ஒக்கும் என்றால்உம்-நெல் புல்லை யொத்திருக்குமென்று சொன்னாலும், (சொல்மாத்திரத்தால் ஒப்

புக்கூறியதாமேயன்றி), நேர் உரைத்து ஆக வற்றுவ - (அது உண்மையில்) உவமை கூறியதாகவல்லதோ? [உவமைகூறியதாக மாட்டாதன்றே:] (அதுபோல), நுதல் - (அவளுடைய) புருவம், வில் ஒக்கும்-வில்லைப்போலும், என்றாலும்-என்று சொன்னாலும், விழி-கண், வேல் ஒக்கும்-வேலைப்போலும், என்றால்உம்—, பல்—, முத்து ஒக்கும்-முத்தைப்போலும், என்றாலும்—, இதழ் - (அவளுடைய) அதரம், பவளத்தை (ஒக்கும்) என்றாலும் - பவழத்தைப் போலுமென்று சொன்னாலும், சொல்ஒக்கும் - சொல்நிலைமாத்திரம் ஒத்திருக்குமேயன்றி, பொருள் ஒவ்வாது-பொருளமைதி தகுதிப் பட்டிருக்கமாட்டாது; ஆல்-ஆதலால், சொல்லல் ஆம் உவமை உண்டுஓ-உவமையாக அவளவயவங்கட்கு எடுத்துச்சொல்லுதற்கு ஏற்ற பொருள் (உலகத்தில்) உள்ளதோ? [இல்லையென்றபடி].

எப்பொழுதும் உபமேயப்பொருளினும் உபமானப்பொருள் சிறந்திருக்க வேண்டுமென்பது அலங்கார நூலார் துணிபு, அதற்கு மாறாக, நெல் புல்லையொக்குமென்று இழிந்தபொருளை உவமையாக்கின், அது எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களின் பொருத்தமாகிய வாக்கியத்தின் அமைதிக்கு ஒத்து உவமை கூறியதுபோலத் தோன்றுமாயினும் பொருளமைதிக்கு ஒவ்வாதன்றோ! அதுபோலவே, 'வில்நுதலொக்கும்' என்பது முதலியனவும் சொல்லொக்கும் பொருள் ஒவ்வா என்பது கருத்து. நுதல்-நெற்றியுமாம். இனிமிகச்சிறந்ததான நெல்லும் மிகஎளியதான புல்லும் சமமென்று சொன்னாலும், அவை இனமாதலின், ஒருகால் பொருந்துமென்னலாம்; அவளுடைய புருவமும் வில்லும், கண்ணும் வேலும், பல்லும் முத்தும், இதழும் பவளமும் ஒருநிகரென்றால் சிறிதும் பொருந்தாது எனினுமாம்: நெல்லுக்கும் புல்லுக்கும் உயர்வுதாழ்வுகளில் எவ்வளவு வேறுபாடு உண்டோ, அவ்வளவினும் மிக்கவேறுபாடு உண்டு, அவளுடைய புருவம் முதலிய உபமேயப் பொருள்களுக்கும், வில் முதலிய உபமானபொருள்களுக்கும் என்பது தாற்பரியம். "உன்னை ...........பொன்னைக் கரியொத்தபோதுமொவ்வார்" என்றதனோடு ஒப்பிட்டுக் கருத்து உணர்க. இங்குக்காட்டிய இருவகைப் பொருளில் முதல் கருத்தில், வற்றே, ஏ-எதிர்மறை: இரண்டாவது கருத்தில், ஏ-தேற்றம்.

சூர்ப்பணகை சீதையைப் பாதாதிகேசவருணனை யாகவோ கேசாதிபாத வருணனையாகவோ வருணிக்காமல், இராவணனுக்கு எப்படி எப்படிக் கூறினால் மோகம் மிகுமோ, அவ்வவ்வாறு கூறுபவளாய் அந்தச் சீதையினுடைய அழகைச் சிறப்பித்தலால், கூந்தல் கண் தோள் இடை முதலியவற்றைப் பலமுறை பலபடியாகக் கூறுகின்றாளென்க: இங்ஙன் ஒருகருத்தைக்கொண்டு கூறின் கூறியது கூறலென்னும் குற்றமாகாது: "கூறியது கூறினுங் குற்றமில்லை, வேறொரு பொருளை விளக்குமாயின்" என்பது சூத்திரம். முந்திய செய்யுளில் 'நான் உனக்கு உரைப்பதென்னே' என்றவள் சீதையின் அவயவச்சிறப்பை இச்செய்யுளிற் கூறுவது முரண்படக்கூறுவதாகாதோ எனின்,—'நானேயே காண்டி' என்றுகூறிச் சூழ்ச்சியாக இராவணனுடைய மோகத்தை உச்சநிலையை யடையச் செய்தாளாத

லால், அந்தச்சீதையின் அங்க இலக்கணங்களையறிய அவா இராவண னுக்கேஉண்டாகவே, அதனை நிரப்புபவளாகி, வேண்டுவதில்லை யென்ற உறுப்புக்களையும் பற்றிக் கூறலாறு ளென்ப. ஆல் - ஆதலால் என்பதன் விகாரம். பி - ம்:—[1]வாவால். [2]வற்றே. (633)

75\. இந்திரன் சசியைப் பெற்ற னிருமூன்று வதனத் தோன்றன்
தந்தையு முமையைப் பெற்றான் றாமரைச் செங்க ணானுஞ்
செந்திரு மகளைப் பெற்றான் சீதையைப் [1]பெற்றாய் நீயும்
அந்தரம் [2]பார்க்கி னன்மை யவர்க்கிலை யுனக்கே யையா.

(இ - ள்.) ஐயா - ஐயனே! இந்திரன் - தேவேந்திரன், சசியை- இந்திராணியை, பெற்றான் - (தனக்கு உரியவளாக) அடைந்தான்; இரு மூன்று வதனத்தோன்தன் தந்தைஉம் - ஆறுமுகங்களை யுடைய குமாரக்கடவுளினது தந்தையான சிவபிரானும், உமையை - பார்வதியை, பெற்றான்-(தனக்கு உரியவளாக)அடைந்தான்; தாமரை செம் கணான்உம் - செந்தாமரை மலர்போலுஞ் சிவந்த கண்களை யுடையனான திருமாலும், செம் திரு மகளை-செந்நிறமுடைய [அல்லது அழகிய] இலக்குமியை, பெற்றான் - (தனக்கு உரியவளாக) அடைந் தான்; (அவ்வாறே), நீயும்—, சீதையை—, பெற்றாய் - (உனக்கு உரிய வளாக) அடைந்தாய்: (நீவிரெல்லீரும் இங்ஙனம் அடைந்த பெண்க ளால் உயர்வுபெற்றீர்கள்:) அம் தரம் பார்க்கின்-(உங்களுள்) அழகிய உயர்வு (யாருக்கென்று) ஆராய்ந்து பார்ப்பின், அவர்க்கு - (அழகிற் குறைந்த பெண்களையடைந்த) அந்த இந்திராதியர்கட்கு, நன்மை - உயர்வுமிகுதி, இல்லை—; உனக்குஏ - உனக்கே, (அழகிற் சிறந்த பெண்ணைப்பெற்ற மேன்மை உள்ளது); (எ - று.)

இந்திராணி முதலியோரினும் சீதை மிகச்சிறப்புடையவளாத லின், அவர்களைப்பெற்ற இந்திரன்முதலியோரினும் மூவுலகத்திலும் பெறுதற்கரிய இவளை நீ பெற்றதனால் உனக்கே மேன்மை யென்ப தாம். வடமொழியில் 'தரம்' என்று ஒருவிகுதி யுண்டு: அது சிறந் தது என்ற பொருளில் வரும்: அச்சொல் உலகவழக்கிலும் பயில் கின்றது: அதுவே இங்கு 'அம்' என்ற அடைமொழியைப்பெற்று 'அந் தரம்' என வந்தது. நன்மை என்றதும், உலகவழக்கில் 'நல்ல மழை, நல்ல வெயில்' என்ற இடத்திற்போல மிகுதி என்ற பொரு ளில் வந்ததென்ப. இனி, நலம் நன்மை யென்றும் உரைத்தலும் ஒன்று: சிறந்த இலக்கணமுடைய மங்கையை உரிமையாகப்பெற்ற வன் அதனாலான பாக்கியவிசேஷத்தால் சகலஐசுவரியங்களையும் பெறுவனென்பது நூற்கொள்கை யாதலால், 'நன்மை உனக்கே' என்றாளென்க: "திருமகளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி, இருநில மகட்குஞ் செம்பொன்நேமிக்கு மிறைவனாகும்" என்ற சிந்தாமணி இங்கு நோக்கத்தக்கது. அன்றி, அந்தரம் - பேதம், தார தம்யம்: இங்கே, குறைவு என்ற பொருளில் வந்த தெனக்கொண்டு, பார்க்கின் அந்தரம் அவர்க்கு - ஆராயின் குறைவு அவர்கட்கேஎன்று மாம். "நானையே காண்டி" என்று அவனுக்குச் சீதையினிடம் சூர்ப் பணகை ஆசையை யெழுப்பியதுபோல், இப்போது "சீதையைப் பெற் றாய்" என்று அவளை அடையும் ஆசையையும் எழுப்புகிறாள்: நீ சீதை

யைப் பெறுதல் திண்ணம் என்றவாறு: நன்மையவர்க்கிலே உனக்கே என்ற சூர்ப்பணகையின் வார்த்தை - 'நன்மை அவர்களுக்கு, இல்லை உனக்கு' என்று பொருள்கொள்ள இடந்தந்து, இராவணனுக்குச் சீதையைப்பெற முயலுதலால்நேருந் தீங்குக்குச் சூசகமாகும் அமங்கல மொழியாக அவள்வாயில் வந்ததென்று கொள்ளுதல், சம்பிரதாயம். இருமூன்று வதனம் - பண்புத்தொகைப் பன்மொழித் தொடர். பி - ம்:—[1] பெற்ருல். [2] அவர்க்கே. (164)

76. பாகத்தி லொருவன் வைத்தான் பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தி லொருவன் வைத்தா னந்தண ஞவின் வைத்தான்
[1]மேகத்தின் பிறந்த மின்னை வென்றநுண் ணிடையி னுளை
மாகத்தோள் வீர பெற்ருலெங்ஙனம் வைத்து வாழ்தி.

(இ - ள்.) மா கம் தோள் வீர - பெரிய வானத்தை யளாவி ஓங்கியுள்ள தோள்களையுடைய வீரனே! ஒருவன் பாகத்தில் வைத்தான் - (திரிமூர்த்திகளுள்) ஒருவன் [சிவன்] (தன்மனைவியான உமையைத் தனது) இடப் பக்கத்தில் வைத்துக்கொண்டான்; ஒருவன் - [விஷ்ணு],பங்கயத்து இருந்த பொன்னை - செந்தாமரை மலரில் தங்குகிற இலக்குமியை, ஆகத்தில் வைத்தான் - (தனது) மார்பில் வைத்துக்கொண்டான்; அந்தணன்— [பிரமன்], நாவில் வைத்தான்- (தன்மனைவியான சரசுவதியைத் தனது) நாக்கில் வைத்துக் கொண்டுள்ளான்; நீயும்—, மேகத்தில் பிறந்த மின்னை வென்ற நுண் இடையினுளை - மேகத்தில் தோன்றுகிற மின்னலை வென்றிட்ட நுண்ணிய இடையையுடைய சீதையை, பெற்ருல்—, எங்ஙனம் வைத்து வாழ்தி - எவ்விடத்தில் வைத்துக்கொண்டு வாழ்வாய்? (எ - று.)

அவள் தலைமேல் வைத்துக்கொள்ளத்தக்கவளென்பது, உட்கோள். 'எங்ஙனம் வைத்து வாழ்தி' என்பது, நீ எப்படி அவளை வைத்துக்கொண்டு வாழ்வாய்? [வாழமாட்டாய்] என்று அநிஷ்டமாகப் பொருள்படும்படி அமைந்துள்ளதை அறிக. 'மேகத்திற்பிறந்த மின்னைவென்ற நுண்ணிடை'என்ற பெயரை அடையடுத்த சினையாகு பெயராகக் கொள்ளுதல் இலக்கண நடைக்கு ஒத்ததாம். [1]மேகத்தின் மின்னை முன்னே என்ற பாடத்திற்கு, 'முன்னே'என்றதன் குறிப்பால், கரிய திருநிறமுடைய இராமபிரானைத் தழுவியுள்ளபொழுது இவள் காளமேகத்தைச் சார்ந்த மின்னல் போன்றுள்ளாளென்பது தோன்றும். மாகம் - மஹாகம் என்ற வடசொல்லின் திரிபு. இப்படலத்தின் மூன்ருங் கவியில் "பொற்ருேள் விண்டலங்களுற வீங்கி" என்றதனோடு 'மாகத் தோள்' என்றதை ஒப்பிடுக. பி - ம்:—[1]மேகத்தின் மின்னைவென்ற நுண்ணிடையிவளை நீயும்,மேகத்தின் மின்னை முன்னை வென்ற நுண்ணிடையே நீயும். (635)

77. பிள்ளைபோற் [1]பேச்சி னுளைப் பெற்றபின் பிழைக்க லாற்ருய்
கொள்ளைபோ கின்ற செல்வ மவளுக்கே கொடுத்தி யைய
வள்ளலே யுனக்கு நல்லேன் மற்றுநின் மனையில் வாழுங்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங் கேடுசூழ் கின்றே னன்றே.

(இ - ள்.) ஐய - ஐயனே! வள்ளலே - வரையாது அருளுந் தன்மையை யுடையவனே! பிள்ளைபோல் பேச்சினளை - இளங் குழந்தை போல மழலைச்சொல்லாக இனிது பேசும் பேச்சுக்களை யுடைய சீதையை, பெற்ற பின் - அடைந்தபின்பு, பிழைக்கல் ஆற்றாய் - (அவள் இஷ்டத்துக்குத்) தவறுசெய்யமாட்டாய்; கொள்ளை போகின்ற செல்வம் - மிகவும் அதிகமாய்க்கிடக்கிற [அல்லது பலராலுங் கொள்ளை யடித்துக் கொண்டுபோகப்படுகிற] (உனது) செல்வத்தை, அவளுக்கு ஏ கொடுத்தி - (நீ) அவளுக்கே கொடுப்பாய்; (இங்ஙனம் நீ ஆகும்படி தூண்டுதலால்), உனக்கு நல்லேன் - உனக்கு (நான்) நல்லவளாகின்றேன்; மற்று—, நின் மனையில் வாழும் கிள்ளை போல் மொழியார்க்கு எல்லாம் - உனது வீட்டில் வாழ்கிற கிளிமொழிபோலும் இன்மொழியையுடைய மகளிர் [மனைவிமார்] யாவர்க்கும், கேடு சூழ்கின்றேன் அன்றே - தீங்குசெய்கின்றேனன்றோ; (எ-று.)—அன்றே - தேற்றம்.

இப்பொழுது உனதுமனைவியர்பலராலுங் கொள்ளைகொள்ளையாக அநுபவிக்கப்படுகிற செல்வங்களையெல்லாம் இனி நீ அவர்க்குக் கொடாமல் சீதைக்கேகொடுத்துப் பயன்பெற்றதாக்கி மகிழ்ச்சியடையும்படி உன்னைத் தூண்டுதலால், யான் உனக்கு நல்லது தேடுபவளாய், உன்மனைவிமார்க்குத் தீங்குவிளைக்கின்றே னென்றன ளென்பதாம். ஆசைப்பட்டவர்யாவரும் தடையின்றித் தாமே யெடுத்துக் கொள்ளும்படி கட்டளையிட்டுக் காவலின்றிப் பொருட்சாலைகளைத் திறந்துவைத்திருத்தலின் பலராலும் கொள்ளை கொண்டு போகப் படுகிற செல்வ மென்பது, 'கொள்ளைபோகின்ற செல்வம்' என்பதன் கருத்தாம். இப்படிப்பட்ட வள்ளன்மை யுடைமைபற்றியே, வள்ளலே யென விளித்தாள்; மேல் "இராமனைத் தருதி யென்பால்" என்று தான் ஒன்றை வேண்டுகிறாளாதலால் அதன்பொருட்டு வள்ளலே யென விளித்தாளுமாம். அன்றியும், 'சிறந்த பெண்மணியான சீதைக்குப் பயன்படாமல் பிறர்க்குப் பயன்படுஞ் செல்வமெல்லாம் கொள்ளை போகின்ற செல்வம்' என்று கூறினாளுமாம். 'மனையில் வாழுங் கிள்ளைபோல் மொழியார்' எனவே, மனைவிய ரென்றதாயிற்று; அவர்களாவார் - மண்டோதரி முதலியோர். பிள்ளை - பிள்ளையின் பேச்சுக்கு ஆகுபெயர். மற்று - வினைமாற்று.

இக்கவியில், முதல்வாக்கியம் - சீதையைப்பெற்றபின் நீ பிழைக்க மாட்டாய் இறந்தொழிவா யென்றும், இரண்டாவது வாக்கியம் - பகைவராற் கொள்ளையடித்துக் கொண்டுபோகப்படுஞ்செல்வத்தை அவளுக்கே ஒப்பித்து விடுவாயென்றும், இறுதிவாக்கியம் - உன் மனைவியர்க்கெல்லாம் யான் தீமைவிளைவிப்பவளாகிறே னென்றும் அசுபமாகப்பொருள்படும்படி அமைந்துள்ள வாற்றை யறிக. இங்கு மூன்று செய்யுள்களில் அசுபமான ஒரு பொருளும் தோன்றும்படி கவி கருதியே அமைத்தன ரென்பது உணர்க. பி - ம்:—[1] பேசுவாளை.

78. தேர்தந்த வல்குற் சீதை தேவர்த முலகி லிம்பர்
வார்தந்த [1]கொங்கை மாதர் வயிறுதந் தாளு மல்லள்
தார்தந்த கமலத் தாளைத் தருக்கினர் கடையச் சங்கம்
[2]நீர்தந்த வவளை வெல்வா ளிலந்தந்து நிரம்பிற் றன்றே.

(இ-ள்.)—தேர் தந்த அல்குல் சீதை-தேர்போன்ற அல்குலை யுடைய அச்சீதை, தேவர்தம் உலகின்-தேவலோகத்திலும், இம்பர்-இவ்வுலகத்திலுமுள்ள, வார் தந்த கொங்கை மாதர்-கச்சிட்ட தனத்தையுடைய மகளிரது, வயிறு-வயிற்றினால், தந்தாள்உம் அல்லள்-பெறப்பட்டவளுமல்லள்; (மற்று அவளதுதோற்றம் எங்ஙன மெனின்,—) சங்கம் நீர்-சங்குபோல வெண்ணிறமுடைய பாற்கட லானது, தருக்கினர் கடைய - செருக்கையுடைய தேவாசுரர்கள் கடைந்ததால், தார் தந்த கமலத்தாளை-(மலர்ந்த) செந்தாமரைமலரில் வாழ்கிற திருமகளை, தந்த(து)-கொடுத்தது; அவளை-அத்திருமகளை, வெல்வான்-வெல்லும்பொருட்டு, நிலம்-பூமி, தந்து நிரம்பிற்று - (இச்சீதையை) உண்டாக்கி நிறைவடைந்தது; (எ-று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்.

உலகத்துமகளிர்போலச் சீதை ஒரு பெண்ணின் வயிற்றினின்று பிறந்தவளல்லள்; பூமிதேவியிடத்தினின்று தானே தோன்றியவ ளென்று சீதையின் அயோநிஜத்துவமாகிய மேன்மையை யெடுத்துக்கூறுவாள், கடல் கடைந்தகாலத்தில் அது மிக அழகிய திருமகளைத்தர, அவளைவெல்லும்பொருட்டு, நிலம், திருவுக்குந் திருவாகிய செல்வியாகும் இச்சீதையை உண்டாக்கித் தந்து மேன்மைபெற்றது என வருணனைவகையாற் கூறினாள்; தற்குறிப்பேற்றவணி. தார்-பூ. இனி, இப்பெயர்-இலக்கணையால், மலர்ச்சியாகிய அதன் தொழிலை யுணர்த்திற்றுமாம். அன்றி, 'தார் தந்த கமலத்தாள்' என்பதற்கு - மாலைதரப்பெற்ற திருமகளென்றும், (திருமாலுக்கு) மணமாலைசூட்டிய திருமகளென்றும் பொருள் கொள்ளலாம். "வருணன் வைசயந்திமாலை வழங்கினன்" "அருவிலை முத்தின்கோவை யளித்தனள் வாக்கின் செல்வி", "தேனமர்நீலமாலை செழுந்தளிர்க்கரத்தி னேந்தி, வானவர்தொழுது வாழ்த்த வரன்தனை நோக்கினாளால்," "அலங்கல் சூட்டியருமறை முதலிமார்பின்" என்ற பாகவதத்தால், பாற்கடலில் திருமகள் தோன்றுகையில் அவளுக்குச் சமுத்திர ராசன் ஒரு திவ்வியமாலையையும் சரசுவதி முத்துமாலையையும் சமர்ப்பித்ததனையும், அவள் நீலமாலையைத் திருமாலுக்குச் சூட்டியதையும் அறிக.

முதலடியில், தந்த - உவமவுருபு: இரண்டாமடியில் தந்த - பூண்ட: மூன்றாமடியில் தந்த-பூத்த. சங்கநீர்-உவமைத்தொகை; இனி, சங்குகளையுடைய நீரென்றும், சங்கநிதியையுண்டாக்கிய நீரென்றும் பொருள் கொள்ளலாம். பி - ம்:—[1]கொங்கையார்தம், முலையினார்தம். [2]நீர்தந்ததனை. (637)

79. [1]மீன்கொண்ட கொடியி னார்க்கு [2]விழாப்பரிந் துலக மேத்தத்
தேன்[3]கொண்ட நறுமென் கூந்தற் சிற்றிடைச் சீதை யென்னும்
மான் [3]கொண் டுண்டாட நீயுன் வாள்வலி யுலகங்காண [பால்.
யான் [3]கொண்டுண் டாடும் வண்ண மிராமனைத் தருதி யென்

(இ-ள்.)—மீன் கொண்ட கொடியினார்க்கு - மீனைக்கொடியிலே யுடையவனான காமனுக்கு, விழா-மகிழ்ச்சி, பரிந்து - மிகுதலால், உலகம்-நிலவுலகத்தவர்கள், ஏத்த-புகழும்படி,—தேன் கொண்ட

நறு மெல் கூந்தல் - வண்டுகள் (தமக்கு இடமாகக்) கொண்டுபயி லப்பெற்ற நறுமணமுள்ள மெல்லிய கூந்தலையும், சிறு இடை-சிறிய இடையையுமுடைய, சீதை என்னும் மான்-சீதையென்னும் பெண்ணை, நீ—, கொண்டு - (மனைவியாகக்) கொண்டு, உண்டாட- (அவளுடன்) கலந்து இன்பம் நுகர,—உன் வாள் வலி உலகம் காண-உனது ஆயுதபலத்தை உலகத்தார் காணும்படி, யான் கொண்டு உண்டாடும் வண்ணம் இராமனை என்பால் தருதி-நான் (துணையாகக்) கொண்டு இன்பம் நுகரும்படி இராமனை (என்னிடம்) கொடுத்திடு; (எ - று.)

உனது வலிமையால் நீ சீதையையும் இராமனையும் கைவசப் படுத்திச் சீதையை உனக்கு உரியவளாக்கிக்கொண்டு இராமனை எனக்கு உரியவனுக்கு என வேண்டினாள். இவள் இராமனிடத்துக் கொண்ட வேட்கைமிகுதியை அவன் தன்னைப் பங்கப்படுத்தின பின்பும் ஒழியாமையால், உடன்பிறந்தவன் முன்னிலையிற் சொல்வ தும் தவிர்வதும் உணராது தன்மனத்தினுட்கிடந்த கருத்தைப் புலப்படுத்தி இங்ஙனங் கூறினளென்க. சீதை கட்டழகியாயிருத் தலால், அவளால் மன்மதனுக்கு மகிழ்ச்சி மிகுமென்க. [1]மீன் கொண்டோடும் வேலை மேகலை யுலகம் என்ற பாடத்திற்கு-மீனைத் தன்னிடத்துக்கொண்டு அலைவீசுகிற கடலை மேகலாபரணமாகக் கொண்ட உலகமென்க. பூமியைச் சூழ்ந்துள்ள கடலை, பூமியாகிய பெண் அணியும் இடையணி யென்றல், மரபு; வடநூலாரும் 'அப்தி மேகலா' என்று பூமிக்கு ஒருபெயர் கூறுவர். மான்-உவமவாகு பெயர். ஏத்தக் கொண்டு என இயையும். பி - ம்:—[2]விழாப்பல. [3]கொண்டோடும். (638)

80. தருவது விதியே யென்றாற் றவம்பெரி துடைய ரேனும்
வருவது வருநா ளன்றி வந்துகை கூட வற்றோ
ஒருபது முகமுங் கண்ணு முருவமு மார்புந் தோள்கள்
இருபதும் படைத்த செல்வ மெய்துவ தினிநீ யெந்தாய்.

(இ - ள்.)—எந்தாய் - எனது ஐயனே! தருவது - (எவர்க்கும் எவற்றையும்) கொடுப்பது, விதிஏ-ஊழ்வினையே: என்றால்-ஆயின், பெரிது தவம் உடையர் ஏன்உம்-மிக்க தவமுடையராயிருந்தாலும், (அவர்களுக்கும்), வருவது வரும் நாள் அன்றி வந்து கைகூட வற்றுஓ-வரவேண்டுவதொரு பொருள் வருதற்குரிய காலத்திலல் லாமல் முன்னரேவந்து கைகூடவல்லதோ? [அன்று என்றபடி]: ஒருபது முகம்உம்-பத்துமுகங்களையும், இருபது கண்உம் தோள்கள் உம்-இருபது கண்களையுந் தோள்களையும், உருவம்உம் - அழகிய உருவத்தையும், மார்புஉம் - (வலிய) மார்பையும், படைத்த - (நீ) அடைந்ததனுலாகிய, செல்வம்-சிறப்பை, நீ எய்துவது-நீ அடைவது, இனி - இனிமேல்தான்; (எ - று.)

முற்பிறப்பிற்செய்த நல்வினையின் பயனால் நேர்தற்குரிய நன்மையும், எத்துணைப்பெருமுயற்சி செய்தபோதிலும், வருதற் குரியகாலத்திலன்றி முந்திவாராதாம்; ஆதலின், நீ மிக்க நல்லூழை

யுடையவனும் ஒப்புயர்வற்ற வடிவமைதியோடுங்கூடிப்பெருந்தவஞ் செய்தனையாயினும் உனது அவயவச்சிறப்பு வீண்படாதபடி உனக்குப்பெருநன்மை நேர்வது சீதையைப்பெறப்போகிற இனியே என்று கூறினாள். இதற்குமுன் நீபெற்ற இன்பமெல்லாம் ஓரின்பமன்று; சீதையைப் பெற்றபின் நீ அடையும் இன்பமே இன்பம் எனபது, பின்னிரண்டடியில் விளங்கும். வரம்பில்லாத அழகுடைய சீதையின் நலத்தை நுகர்தற்கு ஒருமுகம் இருகண் இருதோள்போதா ஆதலின், உனக்கு அமைந்துள்ள பத்துமுகம் இருபதுகண் இருபது தோள்முதலியன அவளை நுகர்ந்தாலே பயன்பெற்றனவாமெனறாள். "சிறுகாபெருகாமுறைபிழந்து வாரா, உறுகாலத்து ஊற்றாகா ஆமிடத்தே யாகும்" ஆதலால், 'தருவது விதியே யென்றால் தவம் பெரிதுடையரேனும் வருவது வருநாளன்றி வந்து கைகூடவற்றோ' என்கிறாள். (639)

## 81.—சூர்ப்பணகை 'இவளை யெடுக்கையில் இவ்வாறு அங்கபங்கப்பட்டேன்' என்றல்.

[1]அன்னவ டன்னை யுன்பா லுய்ப்பலென் [2]றணுக லுற்ற
என்னையவ் விராமன் றம்பி யிடைபுகுந் திலங்கு வாளால்
முன்னைமூக் கரிந்து விட்டான் முடிந்ததென் வாழ்வு முன்னின்
சொன்னபி னுயிரை நீப்பான் றுணிந்தனெ னென்னச் சொன்னாள்.

(இ - ள்.)—அன்னவள் தன்னை - அத்தன்மையுடையவளான சீதையை, உன்பால் உய்ப்பல் என்று-உன்னிடத்திற் கொண்டு சேர்ப்பேனென்று கருதி, அணுகல் உற்ற-சமீபித்த, என்னை—, அ இராமன் தம்பி - அந்த இராமனுடைய தம்பியான இலக்குவன், இடை புகுந்து-நடுவிலே வந்து அடுத்து,—இலங்கு வாளால்-விளங்குகிற வாட்படையால், முன்னை-முதலில், மூக்கு அரிந்து விட்டான்-(எனது) மூக்கை யறுத்துவிட்டான்; (அதனையறுத்த பொழுதே), என் வாழ்வு முடிந்தது-எனது வாழ்க்கை முடிந்து போய் விட்டது; (ஆயினும்), நின்முன் சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனென்-(அச்செய்தியை) உனது முன்னிலையிற் சொன்ன பின்பு (என்) உயிரைவிட்டிடலாம் என்று துணிவுகொண்டு இங்கு வந்தேன், என்ன-என்று, சொன்னாள்—, (சூர்ப்பணகை); (எ-று.)

இராவணனுக்குத் தன்னிடத்தில் துரபிப்பிராய முண்டாகாமல் நல்ல எண்ணமே மிகுதற்பொருட்டும், இராமலக்குமணர்களிடத்திற் கோபமுண்டாதற் பொருட்டும், இங்ஙனம் பொய்யாகக் காரணங்கற்பித்துக் கூறினாள். கீழ்க் கரனுடன் கூறுமிடத்தும் "கண்டு நோக்கருங் காரிகையாடனைக், கொண்டுபோவ லிலங்கையர்கோக்கென, விண்டுமேல் விழுந்தேனை வெகுண்டவர், துண்டமாக்கினர் மூக்கெனச் சொல்லினாள்" என்றமை காண்க. 'முன்னை மூக்கு' என்பதற்கு-சிறந்தமூக் கென்றும், முற்பட்டுத்தோன்றும் உறுப்பாகிய மூக்கென்றும். 'முன்னின்' என்பதற்கு-ஆலோசிக்குமிடத்து என்றும், 'என்வாழ்வும் முடிந்தது' என எடுத்து - மூக்கு அறுபட்டபோதே எனது வாழ்க்கையும் அழிந்தது என்றும்

உரைத்து, உன்னின் என்பதற்கு-உன்னிடத்தில் என்றும் உரைப் பாரு முளர். பி -ம்:—[1] இன்னவடன்னே. [2] எடுக்கல். (640)

## 82.—அதுகேட்டு இராவணன் மிக்க காமமடைதல்.

கோபமு மறனு மானக் கொதிப்புமென் றினைய வெல்லாம்
பாபநின் றிடத்து [1] நில்லாத் தன்மம்போற் பற்று விட்ட
தீபமொன் ருென்றை யுற்ரு லென்னலாஞ் செயலிற் புக்க
[2] தாபமுங் காம நோயு மாருயிர் [3] கலந்த வன்றே.

(இ - ள்.)—பாபம் நின்ற இடத்து-தீவினை நிலைத்த இடத்தில், நில்லா-நிற்கமாட்டாத, தன்மம் போல்-தர்மம் போல, கோபம்உம் மறன்உம் மானம் கொதிப்புஉம் என்ற இனைய எல்லாம் - கோபமும் வீரமும் மானத்தாலாகிய மனக்கொதிப்பும் என்ற இவை யாவும், பற்றுவிட்ட-(காமம் மிக்க இராவணன் மனத்தில்) தொடர்பு ஒழிந் தன [நிலைப்படாவாயின]; தீபம் ஒன்று ஒன்றை உற்ருல் என்னல் ஆம்செயலின்-ஒருதீபம் மற்ருெரு தீபத்தையடைந்தாற் போன்ற தென்று சொல்லத்தக்க தன்மையாக, புக்க-வந்து புகுந்த, காம நோயும்—, தாபம்உம்-(அதனுலாகிய) தவிப்பும், ஆர் உயிர் கலந்த-(அவனுடைய) அரிய உயிரிற் சேர்ந்திட்டன; (எ - று.)

சூர்ப்பணகை உறுப்பறுபட்ட செய்தியை யுணர்ந்தவுடன் அவனுக்கு உண்டான சீற்றம் வீரம் மனக்கொதிப்பு என்றவை யாவும், சூர்ப்பணகை சீதைவிஷயத்தில் உண்டாக்கிய காமநோய் புகுந்ததும் ஒழிந்திட்டன: பின்பு ஒன்றினின்று ஒன்று பற்றிப் பின்பு இரண்டுமாய் எரிகிற தீபங்கள்போல, காமமும் அதனுலான தாபமும் மிக்கு அவன்மனத்தோடு உயிரையும் வருத்தத்தொடங் கின என்பதாம். வீரரசமும் ரௌத்திரரசமும் சிருங்காரரசத்திஞல் அடங்கிப்போன தன்மையை வெளியிட்டார். காமம் - சிற்றின்ப விருப்பம்; அதனை நோ யென்ருர், வேதனை விளைத்தலால். மான மாவது-எப்பொழுதும் தம் நிலையினின்று தாழாமையும், ஊழ்வினை யால்தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். அன்றே - தேற் றம். பி - ம்:—[1] நில்லாப்பெற்றிபோற். [2] காமமுநோயு மொன்ருயு யிருடன், காமமுநோயு மொன்ருயுயிரொடும். [3] கலந்ததன்றே. (641)

## 83.—இதுமுதல் ஐந்து கவிகள்-இராவணனது காமவேதனையைக் கூறும்.

கரனையு மறந்தான் றங்கை மூக்கினைக் கடிந்து [1] நின்ருன்
உரனையு மறந்தா னுற்ற பழியையு மறந்தான் வெற்றி
அரனையுங் கொண்ட காம னம்பினுன் [2] முன்பு பெற்ற
வரனையு மறந்தான் கேட்ட மங்கையை மறந்தி லாதான்.

(இ - ள்.)—(அப்பொழுது), — கேட்ட மங்கையை மறந்திலா தான்-(சூர்ப்பணகை சொல்லத் தான்) கேட்டுணர்ந்தசீதையாகிய பெண்ணை மாத்திரம் மறவாதவனுன இராவணன்,—அரனை உம் வெற்றிகொண்ட காமன் அம்பினுல்-சிவபிரானையுஞ் சயித்த மன்

மதனதுபர்ணத்தால்,—கரனேஉம் மறந்தான் - (தம்பியாகிய) கரன் (இராமனால்) இறந்து போனதையும் மறந்திட்டான்; தங்கை மூக் கினை கடிந்து நின்றான் உரனேஉம் மறந்தான் - தங்கையினது மூக்கை யறுத்துநின்ற வீரனுடைய வலிமையையும் மறந்துவிட் டான்; உற்ற பழியைஉம் மறந்தான் - (அதனால் தனக்கு) நேர்ந்த பழிப்பையும் மறந்தொழிந்தான்; முன்பு பெற்ற வரனேஉம் மறந் தான் - முன்பு (தான்) பெற்றுள்ள சிறந்தவரபலத்தையும் மறந்து போனான்; (எ - று.)

காமனம்பினால் மறந்தா னென்று இயையும். சீதையாகிய ஒரு பொருளையொழிய மற்றவையனைத்தையும் காமத்தால் மறந்தனன் இராவணனென்பதாம். (சூர்ப்பணகை இராமனிடத்துக்கிடந்த பேராசை மனங்கவற்றக் கரனுள்ளிட்ட அரக்கரிறந்ததனை மறந்த னள் என்று இப்படலத்து முதலிற் கூறியதைக் கருதுக.) மன்மதன் சிவபிரானது தவத்துக்கு இடையூறு செய்யத்தொடங்கி அப்பிரா னால் எரிக்கப்பட்ட போதிலும், அப்பெருமான் பார்வதியை மணஞ் செய்யும்படியும், மற்றும் அவளைத் தனது உடம்பில் ஒருபகுதி யிலே இடங்கொடுத்து வைத்திடும்படியும் செய்தமைபற்றி, 'வெற்றி யரனையுங் கொண்ட காமன்' என்றார். அவனுடைய அம்பு - தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலமலர் என்பன. இவற்றின் குணம் - முறையே சிந்தை, நிறவேறுபாடு, வெறுப்பு, படுக்கை, மரணவேதனை என்பனவற்றை விளைத்தலாம். இனி மூக்கினைக் கடிந்து நின்றான் என்று எடுத்து - அந்த இராமன் தம்பியாலறுக்கப்பட்ட தன் தங்கையின் மூக்கைப்பற்றிய மானத்தை யும் தன் மனத்தினின்று ஓட்டிவிட்டானென்றும்,, உரனையும் மறந் தான் என்று தனியே யெடுத்து - 'தம்பியருயிரையும் மானம் போகுமாறு தங்கையின் மூக்கையும் பறித்தவரை என் உரத்தினா லொழிப்பேன்' என்றதையும் மறந்தான் என்றும் பொருளுரைப்பர்: இப்பொருள் பாட்டின் போக்கிற்கு ஒத்திருக்கவில்லை. பெற்றவரனை யும் மறந்தான் என்றது—அருந்தவத்தால் பெருவரம் பெற்ற தன் மேன்மையை யுணர்ந்து தம்பியருயிரையும் தங்கையின் மூக்கையும் பறித்தோரை ஒழிக்காவிடின் இழுக்காம் என்பதையும் கருதாது மறந்திட்டா னென்றபடி. 'முன்பு பெற்ற வரனையும் மறந்தான்' என்பதற்கு - முன்பு தான் பெற்ற சாபத்தையும் மறந்தா னென்று உரைப்பாருமுளர்; வேதவதியும் அரம்பையும் முதலிய சிலர் இரா வணனை 'இனி நீ ஒருத்தியை வலியக்கற்பழிக்கத் தொடங்கின் அழிந்திடுவாய்' என்று சபித்துள்ளாராதலால், அதனையும் மறந்து சீதையை வலியக் கைக்கொள்ளக் கருதின னென்றவாறு: சீதையை வலியக் கைப்பற்றக்கருதியதாக வாராமையால் அதுவும் பொருந்தாது. உரன், வரன் - போலி. கேட்ட மங்கை - கேட்கப்பட்ட மங்கை; செய் வினை செயப்பாட்டுவினைப் பொருளது. பி - ம்:—[1]நின்றார். [2]முன் னைப். (642)

84. சிற்றிடைச் சீதை யென்னு நாமமுஞ் சிந்தை தானும்
உற்றிரண் டொன்றாய் நின்றா லொன்றொழித் தொன்றை யுன்ன

மற்றொரு மனமு முண்டோ மறக்கலாம் வழிமற் றியாதோ
[1]கற்றனர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ.

(இ - ள்.) சிறு இடை சீதை என்னும் நாமம்உம் - சிறிய இடையையுடைய சீதை யென்கிற பெயரும், சிந்தைதான்உம் - (இவனது) மனமும், இரண்டு - (ஆகிய இரண்டு பொருள்களைக் காட்டவல்ல) சொற்களிரண்டும், ஒன்று ஆய் உற்று நின்றால் - ஒற்றுமைப்பட்டுப் பொருந்தியிருந்தால், (அந்த சிந்தை), ஒன்று ஒழித்து - (தான் ஒற்றுமைப்பட்டுள்ள) ஒருபொருளாகியசீதையை நீக்கி, ஒன்றை உன்ன - மற்றொருபொருளை நினைப்பதற்கு, மற்று ஒரு மனம்உம் உண்டுஓ - வேறொருமனமும் உள்ளதோ? [இல்லை யென்றபடி]; (ஆதலால்), மறக்கல் ஆம் வழி மற்று யாதுஓ - (அவளை) மறக்கத்தக்க வழி வேறுஎதுவோ? [எதுவுமில்லை யென்றபடி]; கற்றனர் - படித்தவர்களுக்கும், ஞானம் - தத்துவஞானம், இன்று ஏல் - இல்லையானால், காமத்தை கடக்கல் ஆம்ஓ - (அவர்களால்) காமத்தை வெல்லமுடியுமோ? [முடியாதென்றபடி]; (எ - று.)

சீதையென்ற பெயராற் குறிக்கப்படும் பொருளும் இராவணன் சிந்தை கருதும் பொருளும்ஒன்றாகிவிட்டதனால், அந்தஇராவணன் மனத்துக் கரணமறத்தல் முதலியன நேர்பட்டதென, கீழ்ச்செய்யுளிற் கூறிய பொருளைச் சமர்த்திக்க வந்தது, இச்செய்யுள். சிந்தையென்ற சொல்லும் சீதை யென்றசொல்லும் பெயரளவினால் மிக்கவேறுபாடு இன்றி, எழுத்துக்கள் ஒற்றுமைப்பட்டிருத்தலால் அவ்விரண்டனுள் ஒன்றாகிய சிந்தையென்ற பொருள் மற்றொரு பொருளாகிய சீதை யென்றஇடத்து லயித்துவிட்டது என்பது முதலிரண்டடியின்பொருளாகலாம். ("சிதாயாஶ் சிந்தாயாஶ்சைவ, பிந்துமாத்ரம் விசேஷத:— சிதாதஹதி நிர் ஜீவம், சிந்தா ஜீவந்த மப்யஹோ" என்ற வடமொழிச் சுலோகம் நினைவுக்கு வருகின்றது.) இனி, சிற்றிடைச் சீதையென்னும் நாமமும் - கீழ் 79 - ஆம்பாட்டில் "சிற்றிடைச் சீதையென்னும் மான்" என்று சூர்ப்பணகை சொல்லவே அந்த நாமமும், அதனால் அவளிடை மேற்சென்ற சிந்தைதானும் என்றுகூறி, இடைபுணர்ச்சிக் குறிப்பைக் காட்டுதலின், சிந்தையும் அவ்விடைமேற் சென்று இரண்டும் ஒன்றாயின என்பாருமுளர். உள்ளது ஒரு சிந்தை [மனம்]; அதுவோ சீதையென்ற பெயரோடு ஒற்றுமையடைந்துவிட்டது; இப்படி அது லயப்பட்டிருக்கையில் வேறு பொருளை நினைக்க வேறு சிந்தை [மனம்] இல்லையாதலால், அவன் சீதையை யொழிய மற்றை யெல்லாவற்றையும் மறக்கும்படியாயிற்று: சிந்தை சீதையோடு ஒற்றுமைப்பட்டிருப்பினும் அச்சீதையைமறந்துவிடலாகாதோவெனின்,—எவ்வளவு கற்றவர்க்கும் தத்துவஞானமில்லையாயின் காமத்தை வெல்லமுடியாதாதலால், அவன் மிகவுங் கற்றவனாயினும் மெய்யுணர்வு இலனாதலால், தான் காமித்த அவளை மறக்கமாட்டாதவனாயினன் என்பது கருத்து. ஈற்றடி - பொதுப் பொருளாய்நின்று, இராவணன் சீதையை மறந்திடாமையாகிய சிறப்புப்பொருளை நன்கு விளக்குதலால், வேற்றுப்பொருள்வைப் பணி. ஞானமாவது - முத்திநிலையையும், மற்றைப் பிரபஞ்சநிலைகளையும் ஐயந்திரிபுகளின்றி உள்ளபடியறிதல். இப்பாட்டின் ஈற்

றடியை, பாலகாண்டத்தில் "பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்" என்றதனோடு ஒப்பிடுக. கற்றாரேனும் மனத்துமெய்யுணர்வு தோன்றாதாயின் காமத்தைக் கடக்க முடியாது என்று மனத்தத்துவத்தை விளக்கினார்: கம்பர் "மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்ப தொன்றேயன்றோ" எனவும், "இன்பமுந்துன்பந்தானும் உள்ளத்தோடியைந்தவன்றே" எனவும் இங்ஙனெல்லாம் மனவியல்பை நுணித்தறிந்தமையைக் காட்டுவர். பி - ம்:—[1]கற்றறி. (643)

85. மயிலுடைச் சாய லாளை வஞ்சியா முன்ன நீண்ட
எயிலுடை யிலங்கை[1]வேந்த னிதயமாஞ் சிறையில் வைத்தான்
அயிலுடை யரக்க னுள்ள மவ்வழி மெல்ல மெல்ல
வெயிலுடை நாளி லுற்ற வெண்ணெய்போல் வெதும்பிற் றன்றே.

(இ - ள்.) மயில் உடை சாயலாளை - மயிலின் சாயல்போன்ற சாயலையுடைய சீதையை, நீண்ட எயில் உடை இலங்கை வேந்தன் - உயர்ந்தமதிற்காவலையுடைய இலங்கைக்குத் தலைவனான இராவணன், வஞ்சியா முன்னம் - வஞ்சித்துக்கவர்ந்துபோதற்கு முன்னமே, இதயம் ஆம் சிறையில் வைத்தான் - (தனது) மனமாகிய சிறைச்சாலையினிடத்தே அடக்கிவைத்தான்; (அதனால்), அயில் உடை அரக்கன் உள்ளம் - வேற்படையையுடைய இராவணனது மனம், அ வழி - அப்பொழுது [அல்லது அவ்விடத்து], வெயில் உடைநாளில் உற்ற வெண்ணெய் போல் - வெயிலையுடையபொழுதிற் பொருந்திய வெண்ணெய்போல, மெல்ல மெல்ல வெதும்பிற்று - படிப்படியாய் வெப்பங்கொண்டு உருகிற்று; (எ - று.)—அன்றே-ஈற்றசை.

வஞ்சியாமுன்னம் - வஞ்சித்து எடுத்துச்சென்று இலங்கையில் அசோகவனத்திற் சிறைவைத்தற்கு முந்தியே என்றபடி. பின் நிகழ்வதை முன்னே குறித்துச் சொல்லுதலும் கம்பரியல்பு. இதயமாஞ் சிறையில் வைத்தான் - தன்மனத்தில் நீங்காமற்கொண்டான் என்றபடி. வெயிலுடை நாளிலுற்ற வெண்ணெய் - நல்லவெயிலில் வைக்கப்பட்ட வெண்ணெய் என்றபடி. "சாயல் மென்மை' என்ற தொல்காப்பியத்தால், சாய லென்பது - மென்மைப்பொருளையுணர்த்துவதோர் உரிச்சொல் என்றும், அது ஐம்பொறியால் நுகரப்படும் ஐவகைமென்மைக்கும் பொதுவா மென்றும் உணர்க. 'மயிலுடைச் சாயலாள்' என்றவிடத்து, சாயல் - ஒளியாற் பிறந்த மென்மை. இதயம் - ஹ்ருதயம். பி - ம்:—[1]நாதன். (644)

86. விதியது வலியி னானு மேலுள [1]வினைவி னானும்
பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தி னானும்
[2]கதியுறு பொறியின் வெய்ய காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே.

(இ - ள்.) விதியது வலியினான்உம் - ஊழ்வினையினுடைய வலிமையாலும், மேல் உள வினைவினான்உம் - இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களாலும், பதி உறு கேடு வந்து - அவ்விலங்கை நகரம் அடையவேண்டிய தீமைவந்து, குறுகிய பயத்தினான்உம் -

சமீபித்துள்ள தன் பயனாலும்,—வெய்ய காமம் நோய் - கொடியகாம நோயானது, கல்வி நோக்கா மதியிலி மறைய செய்த தீமைபோல் - வித்தையை உணராத அறிவிலா னொருவன் பிறர்காணாதிருக்கு மாறு மறைவாகச்செய்த பொல்லாங்கு போல, கதி உறு பொறியின் - (புலன் நுகர்தலில்) வேகம்பொருந்திய (இராவணனுடைய) இந்திரியங்களிலே, வளர்ந்தது - வளர்ந்திட்டது; (எ - று.)— அன்றே - ஈற்றசை.

கல்விஞானமில்லாத பேதை தீவினையை மறைவாகச் செய்தாலும் அது மறைபடாமல் தெய்வத்தால் அறியப்பட்டுப் புலனாய் விடுதல் போல, இராவணனது காமநோய் முதலில் மனத்தில் நிலைத்ததாயினும் பின்பு பஞ்ச இந்திரியங்களிலும் பரவி வெளிப் படலாயிற்று என்பது, பின்னிரண்டடியின் கருத்து. இப்படி அவனுக்குக் கொடியகாமம் வளர்ந்ததற்குக் காரணத்தை, முன் னிரண்டடியால் விளக்கினர். விதி - இருவினைப்பயன் செய்த உயிரையே சென்று அடையும் நியதி. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்" என்றதனால், ஊழின் தவறுதவலிமையை யறிக. மேலுளவிளைவு - தேவர்களுடைய பிரார்த்தனையின்படியும், எம்பெருமானுடைய சங்கற்பத்தின்படியும், வேதவதியின் சாபத்தின்படியும், அநரண்யனது சாபத்தின் படியும் சீதையைக் கவர்ந்ததன் நிமித்தம் இராவணன் இராமனால் அழியவேண்டியமை. பதியுறு கேடு வந்து குறுகிய பயம் - (நந்தியினது சாபத்தின்படி வானரரால்) இலங்கையழியவேண்டியமை. 'கதியுறுபொறியின்' என்பதற்கு-வேகம்பொருந்திய யந்திரம்போல' என்று உரைப்பாருமுளர். கல்விகற்று அதன் அறிவால் விதி விலக்குகளை நோக்குத லில்லாதவனே தீவினைசெய்தல் பெரும் பான்மை யென்பது பட, 'கல்விநோக்கா மதியிலிமறையச்செய்த தீமை' என்றார். பி-ம்:—[1]வினையினாலும். [2]கதியது. (645)

87. பொன்மய மான நங்கை மனம்புக[1]ப் புன்மை பூண்ட
தன்மையோ வரக்கன் றன்னை யயர்த்ததோர் தகைமை யாலோ
மன்மதன் வாளி தூவி நலிவதோர் வலத்த னானன்
வன்மையை மாற்று மாற்றல் காமத்தே [2]வதிந்த தன்றே.

(இ - ள்.)—பொன் மயம் ஆனநங்கை-(மிக்கவொளியால்) பொன் மயமானவள்போலுள்ளசீதை, மனம் புக-(தன்) மனத்திலே புகுந்ததனால், புன்மை பூண்ட தன்மையோ - (அவ்விராவணன் தான்) சிறுமையடைந்திட்டதனாலோ? (அன்றி), அரக்கன்-அவவிராவணன் தான், அயர்ந்தது ஓர் தகைமையாலோ - தன்னை(த் தான்) மறந்ததொரு தன்மையினாலோ, மன்மதன் வாளி தூவி நலிவது ஓர் வலத்தன் ஆனான்-மன்மதன் அம்புகளை மேலெய்து (அவ்விராவணனை) வருத்தத்தக்க வல்லமையுடையவனாயினான்: வன்மையை மாற்றும் ஆற்றல் - எல்லாவல்லமையையும் நீக்கிவிடும்படியான திறமை, காமத்தே வதிந்தது அன்றே - காமத்தினிடத்திலே பொருந்தியதன்றோ? (எ - று.)

பலவகை வலிமைகளையும் மிகுதியாகப் பெற்றுள்ள இராவணனை மன்மதன் எளிய மலரம்புகளால் நலியுந் திறத்தவனானதற்கும், எல்லாத்தேவர்களும் இராவணனால் அச்சுறுத்தப்பட்டு ஒடுங்கிக்கிடக்கையில் காமதேவன் அவனை வருத்துபவனானதற்கும் காரணங் கூறுபவராய், 'பொன்மயமான ஒருமங்கையை விரும்பிய காரணத்தால் அவன் சிறுமைப்பட்டதனாலோ, அவளையே நினைத்தலால் அவன் தன்னை மறந்திட்டதனாலோ, மன்மதன் அவனை வருத்தினான்' என்றார். இராவணன் இங்ஙனம் வலியொடுங்கினானென்ற சிறப்புப்பொருளை உலகத்தில் எத்திறத்தோருடைய எத்துணைவலிமையையும் அழிக்கத்தக்க ஆற்றல் காமத்தினிடத்திலே குடிகொண்டதன்றேஎன்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியது, வேற்றுப்பொருள்வைப்பணியாம். பி-ம்:—[1]மடமை. [2]வருத்தது. (646)

## 88.—உடனே இராவணன் சபையைவிட்டுத் தன்மனையினுள்ளே செல்லுதல்.

எழுந்தன னிருக்கை நின்றாண் டேழுல கத்து ளோரும்
மொழிந்தன ராசி யோசை முழங்கின சங்க மெங்கும்
பொழிந்தன பூவின் மாரி போயினர் [1]புறத்தோ ரெல்லாம்
[2]அழிந்தழி சிந்தை யோடு மாடகக் கோயில் புக்கான்.

(இ - ள்.)—ஆண்டு - அப்பொழுது, இருக்கைநின்று எழுந்தனன் - (இராவணன் தான் வீற்றிருந்த) சிங்காசனத்தைவிட்டு எழுந்திருந்தான்; (அப்பொழுது), ஏழ் உலகத்து உளோர்உம்-ஏழுலோகங்களி லுள்ளவர்களும், ஆசி மொழிந்தனர் - வாழ்த்துக் கூறினார்கள்; சங்கம் - சங்கவாத்தியங்கள், எங்குஉம்-எவ்விடத்திலும், ஓசை முழங்கின - பேரொலியுண்டாக ஒலித்தன; பூவின்மாரி - மலர் மழைகள், பொழிந்தன - (அவன்மேற்) சொரிந்தன; புறத்தோர் எல்லாம் - பக்கங்களிலுள்ளார் யாவரும், போயினர் - விலகிச்சென்றார்கள்; (இராவணனும்), அழிந்து அழி சிந்தையோடுஉம் - மேல்மேலழிகிற மனத்துடனே, ஆடகம் கோயில் புக்கான் - பொன்மயமான (தனது) மாளிகையினுட்புகுந்தான்; (எ-று.)

பலஅரசர்கள் முதலியோர் கூடியுள்ள சபையிலே தனதுகாமநோய் வெளிப்படுதல் தனது இறைமைக்குணங்களுக்கு இழுக்காமென்று கருதியதால், இக்காமநோயைத் தணித்தற்காகவும், சீதையைப் பெறுதற்குச் செய்யவேண்டிய முயற்சியைக் குறித்துத் தனியே ஆலோசித்தற்காகவும், இராவணன் உடனே சபையை நீங்கி மாளிகை சென்றுசேர்ந்தானென்க.

'புறத்தோரெல்லாம் போயினர்' என்பதற்கு - வெளியிலிருந்து வந்தவரெல்லோரும் தத்தமிடத்துக்குச் சென்றார்களென்றும் உரைக்கலாம். எல்லாம் என்பது - இருதிணைக்கும் பொது. ஆடகம் - ஹாடகம் என்ற வடசொல்லின் திரிபு: இது, நால்வகைப் பொன்களி லொன்று; மற்றவை - கிளிச்சிறை, ஜாதரூபம், ஜாம்பூநதம் என்பன. பி-ம்:—[1]புகுந்தோரெல்லாம். [2]அழிந்திழி. (647)

## 89. —இனி ஆறுகவிகள் - இராவணனது காமநோய்முதிர்ச்சி கூறும்.

பூவினால் வேய்ந்து செய்த பொங்குபே ரமளிப் [1]பாங்கர்த்
தேவிமார் [2]குழுவு [3]நீங்கச் சேர்ந்தனன் சேர்த லோடும்
நாவிநா றோதி நவ்வி நயனமுங் [4]குயமும் புக்குப்
[5]பாவியாக் கொடுத்த வெம்மை பயப்பயப் [6]பரந்த தன்றே.

(இ-ள்.)—(தனதுமாளிகைக்குச் சென்றவுடன் இராவணன்), தேவிமார் குழுஉம் நீங்க-(தன்) மனைவிமாரது கூட்டமும் தன்னைச் சேர்தலில்லாதபடியாக, (தனியே), பூவினால்வேய்ந்துசெய்தபொங்கு பேர் அமளிப்பாங்கர்-மலர்களாலமைத்துச் செய்யப்பட்ட விளங்குகிற பெரிய படுக்கையினிடத்தில், சேர்ந்தனன்-சேர்ந்தான்: சேர்தலோடும்-(அங்ஙனம்) சேர்ந்தவுடனே, நாவி நாறு ஓதி நவ்வி - கஸ்தூரிப்புழுகு வாசனை வீசப்பெற்ற கூந்தலையுடைய மான்பேடுபோன்ற சீதையின், நயனம்உம் - கண்களும், குயம்உம்-தனங்களும், பாவியா-(அவனால்) இடைவிடாது நினைக்கப்பட்டு, புக்கு-(அவன்மனத்தினுட்) புகுந்து, கொடுத்த-(அவனுக்குத்) தந்த, வெம்மை-தாபமானது, பய பய பரந்தது - வரவர அதிகப்பட்டது; (எ-று.)

தனது காமதாபம் பிறர்க்குப் புலனாகக்கூடாதென்ற நோக்கத்தோடு இராவணன் சென்றபொழுது வழக்கப்படி தன்னைத் தொடர்ந்து வந்த தன் மனைவியர்களையெல்லாம் தான் சீதையினிடத்துப் புதிதாகக்கொண்ட மோகத்தின் மிகுதியால் உபேட்சித்து அவர்கள் உடன்வரவேண்டாமென்று விலக்கி அவர்கள் சேர்க்கையொழிந்து தனியே தாபந்தீர்தற்பொருட்டு மலர்களைப் பரப்பி அடுக்கியமைக்கப்பட்ட படுக்கையைச் சேர்ந்தான்; அங்ஙனம் தனிமைப்பட்டவுடன் இயல்பாகக் காமதாபம் விஞ்சிய வகையைப் பின்னிரண்டடிகளில் விளக்குகிறார்; இவன் தனிப்பட்டவுடன் சீதையின் கண்களையும் தனங்களையும் இடைவிடாது சிந்திக்கச்சிந்திக்க அவை இவன் மனத்திலூன்றித் தாபத்தை விளைத்து அதனை வரவர மிகுவித்தன வென்க. [5]பாவியாள் கொடுத்த என்று பாடமோதி, தீச்செயலுடையவளான சூர்ப்பணகையால் மூட்டப்பட்ட என்று உரைப்பாருமுளர். 'நாவிநாறோதி,' என்பதைச் சீதைக்கு அன்மொழித்தொகையாக்கி, நவ்விநயனம்-மான்விழிபோன்ற விழி யென்றலுமொன்று. பி-ம்:—[1]கொங்கைத். [2]வெள்ளம். [3]நீங்கிச். [4]மனமும். [5]பாவியால். [6]பயந்ததன்றே. (648)

### வேறு.

90. நூக்க லாக லாத காத னூறு நூறு [1]கோடியாப்
[2]பூக்க வாச வாடை வீசு சீத நீர்பொ திந்தமென்
சேக்கை வீக ரிந்து திக்க யங்க [3]ளெட்டும் வென்றதோள்
ஆக்கை [4]தீய வுள்ள நைய வாவி வேவ தாயினான்.

(இ - ள்.) — நூக்கல் ஆகலாத-தள்ளிவிலக்கமுடியாத, காதல் -காமவாசையானது, நூறு நூறு கோடி ஆ பூக்க-மிகப்பலமடங்

காக வளர, (அதனால்), வாசம் வாடை வீசு சீதம் நீர் - நறுமணமுடைய இளங்காற்றால் வீசப்பட்ட குளிர்ந்தபனிநீர், பொதிந்த - பொருந்தப்பெற்ற, மெல் சேக்கை வீ - மெல்லிய படுக்கையாகவமைந்துள்ள மலர்கள், கரிந்து - கருகி, திக் கயங்கள் எட்டும் வென்ற தோள் ஆக்கை தீய - எட்டுத்திக்குயானைகளையுஞ்சயித்த தோள்களையுடைய (தனது) தேகம் தீந்துபோகவும், உள்ளம் நைய - மனம் அழுங்கவும், ஆவி வேவது ஆயினான் - (இராவணன் தனது) உயிரும் தவிக்கும்படியானான்; (எ-று.)

நூக்கலாகலாத என்ற அடைமொழி, காமத்தினது விலக்குதற்கரிய இயல்பை விளக்கும். நூறுநூறுகோடி என்றது - அளவிறந்தமையைக் குறித்தது. இராவணனுக்கு அஞ்சி வாயுதேவன் மந்தகதியாக வந்து அவனுக்கு உபசாரமாக அவனது மலர்ப்படுக்கையின்மேற் குளிர்ந்த பனிநீரைத் தெளிக்கிற தன்மை, 'வாசவாடைவீசு சீதநீர்பொதிந்த மென்சேக்கை' என்றதனால் வெளியாம். அப்படிச் செயற்கைக்குளிர்ச்சி பெற்று இயற்கையிலும் தேனினாற் குளிர்ந்துள்ள மலர்களும் அவனுடம்பு பட்டமாத்திரத்தில் அதன் காமதாபத்தாற் கருகின என்க. 'தோள் ஆக்கை' என்பதற்கு- தோளும் மற்றவுடம்பும் என்றும் பொருள் கொள்வர். வடதிசைக் காற்றையுணர்த்தும் வாடையென்ற சிறப்புப்பெயர்-இங்கே பொதுப்பெயர்த் தன்மைப்பட்டுக் காற்றுமாத்திரத்தை யுணர்த்திற்றென்க; இனி, வாடையென்பது-வடக்கிற்செல்வதெனத் தென்றலுக்கு ஒரு ஏதுப்பெயருமாம். பி-ம்:—[1]கோடியாய். [2]பூக்கள். [3]எட்டை. [4]தேய.

இதுமுதல் ஆறுகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று விளச்சீரும், மற்றையாறும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள்; இப்படிப்பட்டவற்றைச் சந்த விருத்தமென்பது சந்தப்போலியாயிருத்தல் மாத்திரத்தைக் கொண்டே; குழிப்புக்கு ஒத்துவருவனவே, சந்தவிருத்தமென்றற்குப் பொருத்தமுடையன; இனி, இவற்றை, முதலாறு சீர்களையும் மூன்று பெருஞ்சீர்களாகப்பிரித்துக் கலிவிருத்தமென்ன வேண்டுமென்பது, ஒருசாரார் கொள்கை.

[பாலகாண்டத்தில் கார்முகப்படலத்தில் பிராட்டியின் காமவேதனையை வருணித்த விடத்தும், நைடதத்தில் கைக்கிளைப் படலத்தில் தமயந்தியின் காமவேதனையை வருணித்தவிடத்தும் இவ்வகைவிருத்தமே உபயோகிக்கப் பட்டுள்ளமை ஊன்றியுணர்தற்பாலது.] (649)

91. தாது கொண்ட சீத மேவு சாந்து சந்த மென்றளிர்ப்
போது கொண்[1]டடுத்த போது பொங்கு தீம ருந்தினால்
வேது கொண்ட தென்ன மேனிவெந்து [2]லைந்து விம்முதீ
ஊது வன்று ருத்தி போலு யிர்த்து யிர்த்து யங்கினான்.

(இ - ள்.) சீதம் மேவு - குளிர்ச்சி பொருந்திய, சாந்து-சந்தனத்தையும், சந்தம் மெல் தளிர் - அழகிய மென்மையான இளந்தளிர்களையும், தாது கொண்ட போது - மகரந்தப்பொடிகளைக் கொண்ட

மலர்களையும், கொண்டு - எடுத்துக்கொண்டு, அடுத்தபோது - (அகப்பரிவாரமகளிர் சைத்தியோபசாரஞ் செய்தற்குச்) சமீபித்த பொழுது, (இராவணன்), பொங்கு தீ மருந்தினல் வேதுகொண்டது என்ன - மிகுகிற நெருப்பாகிய மருந்தைக்கொண்டு வேது பிடித்தாற் போல, மேனி வெந்து உலைந்து - உடம்பு தாபமடையப் பெற்று வருந்தி, விம்மு தீ ஊது வல் துருத்தி போல் - எழுந்து சொலிக்குந் தன்மையதான நெருப்பை யூதுகிற வலிய துருத்திபோல, உயிர்த்து உயிர்த்து - உஷ்ணமாக மேன்மேற் பெருமூச்சுவிட்டு, உயங்கினன்- சோர்ந்தான்; (எ - று.)

இயல்பிற் குளிர்ச்சிதரும் பொருள்கள் யாவும் காமநோயுற்றார்க்கு அத்தாபத்தை யடக்கமாட்டாமையோடு அதனை மிகுவிக்குந் தன்மையனவு மாகுதலால், சீதளோபசாரமாக எடுத்த சந்தனம் முதலியவற்றால் வேதுகொண்டாற்போல அதிகதாபமுற்றன னென்றார். சிலவகைநோய்கள் நீங்குதற்பொருட்டு அனலைக் கொண்டு வேதுபிடிப்பது வைத்தியமுறைகளு ளொன்றாதலால் 'பொங்கு தீமருந்து' என்றார். வேது-வெய்து; வெம்மையென்னும் பண்படியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். விம்மு என்பதைத் துருத்திக்கு அடைமொழியாக்கி, (காற்று உட்புகுதலால்) பூரித்துப் பருக்குந் தன்மையுள்ள என்றும் உரைக்கலாம். துருத்தி உவமை, அதிகதாபத்தோடு பெருங்காற்றை வெளிவிடுதற் கென்க. பி - ம்:—[1]அவித்த. [2]வெந்து. (650)

92. தாவி யாது [1]தீதெ னாது தைய லாளை மெய்யுறப்
பாவி யாத போதி லாத பாவி மாழை பானல்வேல்
காவி யான கண்ணி மேனி காண மூளு மாசையால்
ஆவி சால நொந்து நொந்த ழுங்கு வானு மாயினன்.

(இ - ள்.)—தாவியாது - (சபலமான மனத்தை) ஒருநிலைப் படுத்தமாட்டாமலும், தீது எனாது-(பிறன்மனைநயத்தல்) தீயசெயலென்று கருதாமலும், தையலாளை மெய் உற பாவியாத போது இலாத - அழகிய சீதையை(த் தன்) மனத்திலே பொருந்தநினைத்தல் செய்யாத சமயமில்லாத [எப்பொழுதும் மனத்தில் இடைவிடாது சிந்திக்கிற], பாவி-பாவத்தையுடையவனை இராவணன், —மாழை பானல் வேல் காவி ஆன கண்ணி-மாவடு கருநெய்தல் மலர் வேலாயுதம் நீலோற்பலமலர் என்னும் இவை போன்ற கண்களையுடைய சீதையினது, மேனி - உடம்பை, காண - பார்ப்பதற்கு, மூளும் - மேல்மேலெழுகிற, ஆசையால் - ஆசையினால், ஆவி சால நொந்து நொந்து - உயிர் மிகவும் வருந்தி, அழுங்குவானும் ஆயினன் - துன்பப்படுபவனுமாயினன்; (எ-று.)

கருங்குவளை, நீலோற்பலம், கருநெய்தல் என்பவை-ஒருபொருள் குறித்தபன்மொழியாக வழங்கு மாயினும் இம்மூவகையும் ஒன்றோடொன்று சிறிதுவேறுபாடுள்ள நீர்ப்பூக்களின் சாதிபேதமாக வழங்குதலும் உண்டாதலின், பானல் காவி என்ற இரண்டையும் ஒருங்கே கூறினர்; பாலகாண்டத்தில் "படர்பூங்குவளை நாண் மலரோ நீலோற்பலமோ பானலோ" என்றமை காண்க. மாம்

பிஞ்சினுட்பிளவு, கண்ணுக்கு வடிவில் உவமை. யாது ஈது எனுது தாவி என்று எடுத்து, யாது ஈங்கு நேர்வதோ என்று அஞ்சாமல் விருப்பத்தைச் செலுத்தி என்றும், தாவு யாது ஈது (யாது) எனுது என்று எடுத்து - (இதனால் வரும்) பழிப்பு எதுவோ? பாவமெது வோ? என்று ஆராயாமலும் என்றும் உரைப்பாருமுளர். இரண்டாவது உரைக்கு, தா-குற்றம்: உரிச்சொல்: உ-சாரியை. பிரதானமான அகத்துறுப்பாதலால், மனம் 'மெய்' எனப்பட்டது. 'மெய்யுறப்பாவியாத போதிலாத' என்பதற்கு - உடம்பைத் தழுவும்படி [ஆலிங்கனஞ்செய்யும்படி] கருதாத சமய மில்லாத என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1] தீயெனுது. (651)

93. பரங்கி டந்த மாதி ரஞ்[1]சு மந்த பாழி யானையின்
கரங்கி டந்த கொம்பொ டிந்[2]திரங்க வென்ற [3]காவலன்
மரங்கு டைந்த தும்பி போல நங்கன் [4]வாளி வந்துவந்து
உரங்[5]குடைந்து நொந்துநொந் துளைந்துளைந் தொதுங்கினுன்.

(இ - ள்.) பரம் கிடந்த - பாரந்தங்கிய, மாதிரம் - திக்குக்களை, சுமந்த - தாங்கிய, பாழி - வலிமையையுடைய, யானையின் - யானைகளின் [திக்கஜங்களினுடைய], கரம் - துதிக்கையினிடத்து, கிடந்த - பொருந்திய, கொம்பு - தந்தங்கள், ஒடிந்து - ஒடிய, (அதனால்), இரங்க - (அவ்யானைகள்) வருந்தும்படி, வென்ற - (அவற்றைச்) சயித்திட்ட, காவலன் - அரசனுகிய இராவணன்,—மரம் குடைந்த தும்பி போல் - மரத்தைக்குடைகிற வண்டுபோல, அநங்கன் வாளி வந்து வந்து உரம் குடைந்து - மன்மதபாணங்கள் மேன்மேல்வந்து (தனது) மார்பைத் துளைக்க (அதனால்), நொந்து நொந்து - மிகவுங் காமநோயுற்று, உளைந்து உளைந்து - மிகவும் வருந்தி, ஒதுங்கினுன் - ஒடுங்கினுன்; (எ - று.)

மிகப்பெரிய வலிய வடிவமுடைய பல திக்குயானைகளின் வலிய தந்தங்களை எளிதில் முறித்திட்ட வல்லமைசாலி உருவமில்லாதவனுன மன்மதனொருவனது மெல்லிய மலரம்புகளுக்கு ஆற்றுமல் மிகவும் வருந்தின னென்பதாம். தும்பி - மன்மதபாணத்துக்கும், மரம் - வலிய இராவணன் மார்புக்கும் உவமையாய்நின்றது. ஒடிந்து, குடைந்து - செயவெனெச்சத்தின் திரிபு. பரம் - வடசொல். பி-ம்:—[1]பரித்த. [2]அடங்க. [3]காவலான். [4]பாணம். [5]குடைந்துருங்க. (652)

94. கொன்றை துன்று கோதையோ டொர்கொம்பு வந்தெ னெஞ்
சிடை
நின்ற[1]துண்டு கண்ட தென்ற ழிந்த ழுங்கு நீர்மையான்
மன்ற றங்க லங்கன் மாரன் வாளி போல மல்லிகைத்
தென்றல் வந்தெ திர்ந்த போது சீறு வானு மாயினுன்.

(இ-ள்.) 'கொன்றை துன்று - கொன்றைக்காயை யொத்த, கோதையோடு - கூந்தலுடனே, ஒர் கொம்பு - ஒருபூங்கொம்பு [ஒரு மங்கை], என் நெஞ்சிடை வந்து நின்றது - என்மனத்தினிடத்தில் வந்து தங்கிவிட்டது: கண்டது உண்டு - (அதனை நான்) பார்த்தது உண்டு,' என்று - என்றுசொல்லிக்கொண்டு, அழிந்து - உறுதிநிலை

கெட்டு, அழுங்கும் - வருந்துகிற, நீர்மையான்-தன்மையுடையவனான இராவணன்,—மன்றல் தங்கு - வாசனைபொருந்திய, அலங்கல் - பூமாலையைத்தரித்த, மாரன் - மன்மதனுடைய, வாளி போல - அம்பு போல, மல்லிகை தென்றல் வந்து எதிர்ந்த போது - மல்லிகைப் பூவின் மணத்தோடுகூடிய தென்றற்காற்று வந்து தாக்கிய பொது, சீறுவான்உம் ஆயினான் - (அதன்மேற்) கோபிப்பவனு மானான்; (எ - று.)

யாவர்க்கும் குளிர்ச்சியையும் இன்பத்தையும் விளைக்கின்ற தென்றற்காற்று காமநோயுற்ற இராவணனுக்கு மன்மதபாணம் போலவே தாபத்தையும் துன்பத்தையும் விளைத்து மிகவும் வருத்தவே, அவ்விராவணன் அக்காற்றுமயமான வாயுதேவன்மேற் கோபிப்பவனாயினனென்பதாம். 'கொன்றை துன்று கோதையோடு' என்பதற்கு - கொன்றைக்காய்போன்ற கூந்தலிற் பொருந்திய புஷ்பசரத்துடனே என்று உரைப்பாரு முளர்; இவ்வுரைக்கு, கொன்றை - உவமவாகுபெயர்; அன்றி, சரக்கொன்றைமலர் சூடப் பட்டு நிறைந்த கூந்தலுடனே என்றும், சரக்கொன்றைமலர் களால் தொடுக்கப்பட்டு நிறைந்த மாலையுடனே என்றும் உரைத்தலு முண்டு. கொன்றை என்னும் மரத்தின் பெயர்—அதன்காயையும், மலரையும் குறிக்கும்பொழுது, முதலாகுபெயராம். கூந்தற்குக் கொன்றைக்காய் உவமைகூறப்படுதலை, "கொண்டலுங் கூந்தற்பனை யுங் கொன்றைக்காயு மிருளுந், தண்டலையுங் கார்மணலுஞ் சைவல மும் - வண்டினமும், தண்குழலை யொப்பாம்" என்ற உபமானசங்கிர கத்தாலு மறிக. "கொன்றையம் பூங்குழலாள்" என்ற சிலப்பதிகார மும், 'கொன்றைப் பழம்போலுங் குழலையுடையவள், "கொன்றைப் பழக்குழற்கோதையர்" என்றார் வளையாபதியிலும்' என்ற அதன் உரையும் இங்கு உணரத்தக்கன. கொம்பு - உவமையாகுபெயர். பி - ம்:—[1] ஊடு. (653)

## 95.—இராவணன் மாளிகையைவிட்டு ஒருசோலையை யடைதல்.

> அன்ன காலை யங்கு நின்றெ ழுந்த ழுங்கு சிந்தையான்
> இன்ன வாறு செய்வெ னென்றொ [1]ரெண்ணி லாதி ரங்குவான்
> பன்னு கோடி தீப மாலை டாலை யாழ்ப ழித்தசொற்
> பொன்ன னாரெ டுக்க வங்கொர் சோலை யூடு போயினான்.

(இ - ள்.) அழுங்கு சிந்தையான் - (இவ்வாறு) வருந்திய மனத்தையுடையவனான இராவணன், அன்ன காலை - அப்பொழுது, அங்குநின்று எழுந்து - அவ்விடத்தினின்று புறப்பட்டு, இன்ன ஆறு செய்வென் என்று ஓர் எண் இலாது - இன்னவிதம் செய்வே னென்று எண்ணும் ஓர் எண்ணமில்லாமல், இரங்குவான்-துன்பப் படுபவனாகி, பாலை யாழ் பழித்த சொல் பொன் அனார் - பாலையாழின் இசையைப் பழித்த சொற்களையுடைய திருமகள்போன்ற அழகிய மாதர்பலர், பன்னு கோடி தீபம் மாலை எடுக்க - சிறப்பித்துச் சொல்லத்தக்க மிகப்பல விளக்குகளை வரிசையாக முன்னே எடுத்துச்செல்ல, அங்கு ஓர் சோலையூடு போயினான் - அவ்விடத்தில் ஒரு சோலையினிடத்துச் சென்றான்; (எ-று.)

என்னபரிகாரம் செய்தால் இத்தாபம் தணியுமென்று சிந்திக்கையில் குளிர்ந்த சோலையினிடத்துச் சென்றால் தணியலா மெனக் கருதி இராவணன் அங்குச்செல்பவனானனென்க. அவ்விராவணனுடன் சென்ற மகளிரது சொல்லின் மிக்க இனிமைக்குமுன் யாழினினிமை மிகுந்ததாழ்வையடையு மென்பது 'யாழ்பழித்த சொல்' என்பதன் கருத்து. பொன்னனார்-ஒளி, நிறம், மேன்மை, அழகு இவற்றால் பொன்போன்றவ ரெனினுமாம். பாலையாழ்-பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்ற நால்வகைப் பண்களுள் பாலை என்னும் பண்ணுக்குச் சிறந்த யாழ். அப்பண்-குரல் குரலாகப் பெற்ற செம்பாலையுள் பிறப்பது; இப்பாலையாழின் மாட்சியை இசை நூலால் அறிக; சிலப்பதிகாரவுரையிலுங் காணலாம். எண் - முதனிலைத் தொழிற்பெயர். பி-ம்:—[1]எண்ணிலான். (654)

வேறு.

## 96.—அந்தச் சோலையின் வருணனை.

மாணிக்கம் பனசம் வாழை மரகதம் வயிரந் தேமா
ஆணிப்பொன் வேங்கை கோங்க மரவிந்த ராகம் பூகஞ்
[1]சேணுற்ற நீலஞ் சாலங் குருவிந்தந் [2]தென்னம் வெள்ளி
[3]பாணித்தண் பளிங்கு நாகம் பாடலம் பவள மன்றே.

(இ - ள்,)—(அச்சோலையில்), பனசம்-பலாமரங்கள், மாணிக்கம்-மாணிக்கமயமாகவும், வாழை - வாழைமரங்கள், மரகதம் - மரகத ரத்தினமயமாகவும், தேமா-தேன்மாமரங்கள், வயிரம்-வயிரத்தின் மயமாகவும், வேங்கை-வேங்கைமரங்கள், ஆணி பொன் - சிறந்த சாதிப்பொன் மயமாகவும், கோங்கம் - கோங்குமரங்கள், அரவிந்த ராகம் - பதுமராக ரத்தினமயமாகவும், பூகம் - பாக்குமரங்கள், சேண் உற்ற நீலம்-நெடுந்தூரம் ஒளியைச் செலுத்தும் நீலரத்தினமயமாகவும், சாலம்-ஆச்சாமரங்கள், குருவிந்தம்-குருவிந்த ரத்தினமயமாகவும், தென்னம்-தென்னமரங்கள், வெள்ளி - வெள்ளிமயமாகவும், நாகம்-புன்னைமரங்கள், பாணி தண் பளிங்கு-நீரோட்டமுள்ள ஸ்படிக ரத்தின மயமாகவும், பாடலம்-பாதிரி மரங்கள், பவளம் - பவழமயமாவும், (இருந்தன); (எ - று).—மன், ஓ-ஈற்றசை.

சந்தர்ப்பத்துக்கு ஏற்ப வினைமுற்று வருவித்து முடிக்கப்பட்டது. அங்குஉள்ள மரங்கள்யாவும் இரத்தினமயமாகவும் பொன்மயமாகவும் வெள்ளிமயமாகவு மிருந்தன என்பதாம். மாணிக்கம் - செந்நிறமுடைய ஒருரத்தினம். மரகதம் - பச்சைரத்தினம். ஆணிப்பொன் - மாற்றுயர்ந்த பொன். கோங்கம், அம் - சாரியை. அரவிந்த ராகம் என்ற பெயர்-தாமரை மலர்போலச் செந்நிறமுடைய தெனப் பொருள்படும். தென்னம் - தென்னை. பி - ம்:—[1]சேணுய்க்கும். [2]தெங்கு. [3]பாணித்தென்.

இதுமுதற் பதினேழு கவிகள் - இப்படலத்தின் பதினான்காங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (655)

### 97.—இராவணன் அங்கு ஒருமண்டபத்தில் ஒருபடுக்கையிற் சேர்தல்.

வானுற நிவந்த செங்கேழ் மணிமரந் துவன்றி வான
மீனொடு மலர்க டம்மில் வேற்றுமை தெரித றேற்றுத்
தேனுகு சோலை நாப்பட் செம்பொன்மண் டபத்து [1]ளாங்கோர்
பானிற வமளி சேர்ந்தான் பையுளுற் றுயங்கி நைவான்.

(இ - ள்.)—வான் உற நிவந்த - ஆகாயத்தையளாவவளர்ந்த, செம் - அழகிய, கேழ் - ஒளியுள்ள, மணி மரம்- இரத்தினமயமான விருட்சங்கள், துவன்றி-நெருங்கப்பெற்று, வானம்மீனொடு மலர்கள் தம்மில் வேற்றுமை தெரிதல் தேற்று - ஆகாயத்தில் விளங்குகிற நக்ஷத்திரங்களுக்கும் (அம்மரங்களின்) மலர்களுக்கும் ஒன்றற் கொன்று வேறுபாடு அறியமுடியாத, தேன் உகு சோலை - தேனைச் சொரிகிற அந்தச்சோலையின், நாப்பண்-நடுவிலுள்ள, செம் பொன் மண்டபத்துள் - சிவந்த பொன்மயமான மண்டபத்தி லிருக்கிற, ஓர் பால் நிறம் அமளி - பால்போன்ற வெண்ணிறமுடைய ஒரு படுக்கையில், சேர்ந்தான்-சேர்ந்து, (இராவணன்), பையுள் உற்று - (காம) நோய் மிக்கு, உயங்கி - வருந்தி, நைவான்-தளர்பவனானான்; (எ - று.)—ஆங்கு-அசை.

ஆகாயத்தை அளாவி ஓங்கி வளர்ந்துள்ள மரங்களின் மலர்கள் - வானத்தில் விளங்கும் நக்ஷத்திரங்கள் போன்றன என்பது, முன்னிரண்டடியின் கருத்து; உவமையணி. இராவணன் மலர்ச் சோலையைச் சார்ந்து ஆங்குள்ள ஒருமண்டபத்தில் எப்போது வந்தாலும் படுக்குமாறு இனிது அமைந்த படுக்கையைச்சேர்ந்து காமநோய்மிக்கு நைவானாயினனென்பதாம். பி-ம்:—[1] ஆண்டோர், ஆண்டோள். (656)

### 98—அங்குப் பறவைகள் யாவும் இராவணனுக்கு அஞ்சி மௌனமா யிருத்தல்.

கனிகளின் மலரின் வந்த கள்ளுண்டு [1]களிகொ ளன்னம்
வனிதையர் மழலை யின்சொற் கிள்ளையுங் குயிலும் வண்டும்
இனியன மிழற்று கின்ற யாவையு [2]மிலங்கை வேந்தன்
முனியுமென் [3]றவிந்த வாய மூங்கையர் போன்ற வன்றே.

(இ - ள்.)—கனிகளின் - பழங்களினின்றும், மலரின் - பூக்களினின்றும், வந்த - வெளிப்பட்ட, கள் - மதுவை, உண்டு-குடித்து, களி கொள் அன்னம் - மிக்க களிப்புக்கொண்ட பறவைகளும், வனிதையர் - மகளிரது, மழலை இன்சொல் - மழலைச்சொற்போல இனிய சொற்களையுடைய, கிள்ளைஉம் - கிளிகளும், குயில்உம் - குயில்களும், வண்டுஉம் - வண்டுகளும், இனியன மிழற்றுகின்ற யாவைஉம் - இனிமையான சொற்களைச் சொல்வனவான (நாகணவாய்ப் பறவை முதலிய மற்றும்) எல்லாப் பறவைகளும்,—இலங்கை வேந்தன் முனியும் என்று அவிந்த வாய - இலங்கை நகரத்துக்குத் தலைவனான இராவணன் சினப்பானென்று பேச்சொழிந்த வாயை

யுடையவையாய், மூங்கையர் போன்ற - ஊமைகள் போலிருந்தன; (எ - று.)— அன்றே-ஈற்றசை.

பழங்களின் ரஸத்தையும் பூக்களின் தேனையும் உண்டு மது பானஞ்செய்தாற் போலக் களிக்குந்தன்மையனவும் இனியகுரலை யுடையனவுமான பறவைகள் யாவும் அப்பொழுது இராவண னிடத்து அச்சத்தாற் குரலடங்கிக் கிடந்தன என்பதாம். இனிய சொல்லென்றற்கு, 'மழலை' என்றார். அன்றியும், 'மழலை எக்காலத் திற்குங் கூறுப' என்ற நச்சினார்க்கினியருரைவாக்கியமும் நோக் கத்தக்கது. "கிள்ளைபோல் மொழியார்" என்றாற்போலப் பெரும் பாலும் உபமானமாகச் சொல்லப்படுகிற கிளிமொழியை உபமேய மாகவும் மாறுபடக் கூறியது, எதிர்நிலையணி. பி - ம்:—[1] களிகளன்ன. [2] இலங்கு. [3] அமைந்த. (657)

## 99.—இராவணனுக்கு அஞ்சிப் பனிக்காலம் நீங்க வேனிற்காலம் வருதல்.

பருவத்தால் வாடை [1]தந்த பசும்பனி [2]யநங்கன் வாளி
உருவிப்புக் கொளித்த புண்ணிற் குளித்தலு [3]மூலைந்து விம்மி
இருதுத்தான் யாத டாவென் றியம்பினு னியம்ப லோடும்
வெருவிப்போய்ச்[4]சிசிர நீங்கி வேனில்வந் திறுத்த தன்றே.

(இ - ள்.) பருவத்தால் - அந்தப் பின்பனிக்காலத்துக்குஉரிய இயல்பின்படி, வாடை தந்த - வடதிசைக்காற்றுத்தந்த, பசு பனி- குளிர்ந்த பனியானது, அநங்கன் வாளி உருவி புக்கு ஒளித்த புண் ணில் - மன்மதபாணம் ஊடுருவித் தைத்துச்சென்று மறைந்ததனு லான புண்ணில், குளித்தலும் - தாக்கினவுடனே, உலைந்து விம்மி - (இராவணன்) வருந்திக்கலங்கி, இருது தான் யாது அடா என்று இயம்பினன் - (இப்பொழுதுநடக்கும்) பருவந்தான் எது அடாஎன்று கூறினான்; இயம்பலோடுஉம் - (அங்ஙனம்) கூறியவளவில், சிசிரம் - பின்பனிக்காலமானது, வெருவி போய்நீங்கி - அஞ்சிச்சென்று நீங்க, வேனில் வந்து இறுத்தது - (அடுத்த பருவமாகிய) வேனிற்காலம் வந்து சேர்ந்தது; (எ - று.)— அன்றே-ஈற்றசை.

காமவேதனையாலான தாபத்தைக் காலவியல்பாகிய தாபமோ எனக்கருதிச் சினத்தோடு இராவணன் காலம் எதுவென்று வினு வியமாத்திரத்தில், அப்பொழுதுள்ள பின்பனிப்பருவம் 'தனக்கு யாது நேருமோ?' என்று அஞ்சி விலக, அடுத்த பருவம் வந்த தென்பதாம். என்றும்மாறுபடாத முறைமையையுடைய காலத்தை யும் மாற்றுவிக்குங் கொடிய ஆணையையுடையான் இராவணனென் பது, இதில் தொனிக்கும். மேல் 101, 102 - ஆங் கவிகளிலும் இங்ஙனமே காண்க. ருது என்ற வடசொல் இருது வெனத் திரிந் தது; அது வசந்தருது [இளவேனிற்பருவம்], க்ரீஷ்மருது [முது வேனிற்பருவம்], வர்ஷருது [கார்ப்பருவம்], சரத்ருது [கூதிர்ப்பரு வம்], ஹேமந்தருது [முன்பனிப்பருவம்], சிசிரருது [பின்பனிப்பரு வம்] என ஆறுவகைப்படும். இவை முறையே சித்திரைமுதலாக இவ்விரண்டுமாதம் ஒவ்வொன்றும். 'வேனில்' என்றது - இங்கே

இளவேனில் முதுவேனில் என்ற இரண்டையும் காட்டும். பி - ம்:— [1]வந்த. [2]அநங்கபாணம். [3]உளைந்து. [4]சீதம். (658)

## 100.—அப்பருவத்தும் இராவணனது தாபம் தணிவுபெறுமை.

வன்பணை மரமுந் [1]தீய மலைகளுங் குளிர வாழும்
மென்பனி யெரிந்த தென்றல் வேனிலை விளம்ப லாமோ
அன்பெனும் விடமுண் டாரை யாற்றலா மருந்து முண்டோ
இன்பமுந் துன்பந் தானு முள்ளத்தோ [2]டியைந்த வன்றே.

(இ - ள்.) வல் பணை மரம்உம் - வலிய கிளைகளையுடைய பச்சை மரங்களும், (தீய) - தீய்ந்துபோகவும், தீய மலைகள்உம்-காட்டுத்தீயை யுடைய மலைகளும், குளிர - குளிர்ச்சியையடையவும், வாழும்-தங்கிய, மெல் பனி - மெல்லிய (சிசிரகாலத்துப்) பனிதானே, எரிந்தது என்றால் - (இராவணனுக்கு) வெப்பங் கொண்டதாகத் தோன்றிற்றென்று சொன்னால், வேனிலை விளம்பல் ஆம்ஓ - (இயல்பில்வெப்பமுடைய வசந்தகாலத்து) வெயிலைக்குறித்துச் சொல்லவேண்டுமோ? [வேண்டுவுதில்லை யென்றபடி]; அன்பு எனும் விடம் உண்டாரை-காமமாகிய விஷத்தை உட்கொண்டவர்களை, ஆற்றல் ஆம் மருந்து உம் - நோய்தணிக்கத்தக்கதொரு மருந்தும், உண்டுஓ - உள்ளதோ? [இல்லை யென்றபடி]; இன்பம்உம் துன்பம்தான்உம் - இன்பம் துன்பம் என்ற இரண்டு நிலைகளும், (புறத்தேயுள்ள நிலையோடு பொருந்தாமல்), உள்ளத்தோடு இயைந்த அன்றே - (அவரவரது) மனநிலையோடு பொருந்தியவையன்றோ? (எ-று.)

முன்னிருந்த பனிக்காலத்தினும்மிகுதியாக இவ்வெயிற்காலம் இராவணனுக்குச் சந்தாபகரமாயிற்று என்க. 'எல்லாப்பொருள்களுக்கும் மிக்ககுளிர்ச்சியைச்செய்யும் இயல்பினதான பனியே அவனுக்கு எரிந்த தென்றால், எல்லாப்பொருள்களுக்கும் தாபத்தைத் தரும் வெயில் அவனுக்குத் தாபத்தை அதிகப்படுத்துமென்பது கூறாமலே விளங்குமன்றோ?' என்பது, முன்னிரண்டடியின் கருத்து: இந்த அடிகளில்-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி காண்க. அவனுக்கு இயல்பில் வரவரத் தாபம்மிகுதலையே பனிக்காலத்தினும் வெயிற்காலம் தாபத்தைமிகுவிப்பதாகக் குறித்தார். காலம் முதலியன சிலர்க்கு இன்பந்தருவனவாகவும், சிலர்க்குத் துன்பந்தருவனவாகவுந் தோன்றுவது அவரவர் மனத்தின் நிலைமைக்கு ஏற்றதாயுள்ளதனால், அந்தமனம் திருந்தினாலன்றி எதுவும் இன்பந்தருவதாகா தென்பதும், வேட்கைநோய் விஞ்சினார்க்குக் காலம் இடம்மாறுதல் முதலியன அந்நோய்க்கு ஒரு பரிகாரமாகமாட்டா என்பதும் பின்னிரண்டடியின்கருத்து. இவற்றிற்கூறிய பொதுப்பொருள், பின்பனிப்பருவத்தினும் வேனிற்பருவம் அவனுக்கு மிக்க தாபத்தைத் தந்ததென்ற சிறப்புப்பொருளை விளக்கியது-வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். அன்பை விஷமென்றது, அதனை யுட்கொண்டவரை அது தவறாது மிகவருத்துதலால். ஈற்றடி மூன்றாமடியைச் சமர்த்தித்தது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி: இச்செய்யுளில் எள்ளும் பச்சரிசியும்போல மூன்றணிகள் சேர்ந்து வந்தது - சேர்வையணியாகும்.

தீயஎன்பது - மரமுந் தீயஎன்று இயைந்து தெரிநிலை வினையெச்சமாகவந்ததன்றி, தீயமலைகள் என்றுகுறிப்புப்பெயரெச்சமாய் மலைக்கு அடைமொழியாகவும் அமைந்த நயம் பாராட்டத்தக்கது. பனிக்காலத்து மரங்கள் தீய்ந்தனபோல இலையெல்லாம் கொட்டிக் கருகித் தோன்றுதலால், மரமுந்தீய என்றதென்பர். மென்பனிக் காலத்தின் தன்மையை முதலடியால் விளக்கினர். பி - ம்:—[1]யாவும், தீயும். [2]இயைந்தது. (659)

## 101.—உடனே அவன் சரற்காலத்தைக் கொணரக் கட்டளையிடுதல்.

மாதிரத் திறுதி காறுந் தன்மனத் தெழுந்த மையல்
வேதனை வெப்பஞ் செய்ய வேனிலும் [1]வெதுப்புங் காலை
[2]யாதிதிங் கிதனின் முன்னைச் [3]சிசிரநன் [4]றிதனை நீக்கிக்
கூதிராம் பருவந் தன்னைக் கொணருதிர் விரைவி னென்றான்.

(இ - ள்.) தன் மனத்து எழுந்த மையல் வேதனை - அவன் மனத்திலுண்டாகி வளர்ந்த காமநோய், மாதிரத்து இறுதி காறு உம் - திக்குக்களின் முடிவெல்லை வரையினும், வெப்பம் செய்ய - தாபத்தைச் செய்யும்படி, வேனில்உம் - (இளவேனில் முதுவேனில் என்று இருவகைப்பட்ட) வேனிற் காலமும், வெதுப்பும் காலை - (அவனை) எரிக்கத்தொடங்கியபொழுது,—(அவன்),—'இங்கு இது யாது - இப்பொழுதுவந்த இது என்ன பருவம்? முன்னை சிசிரம் இதனின் நன்று - முந்தியிருந்த பின்பனிக்காலமே இக்காலத்தினும் நல்லதாயிருந்தது; (இனி), இதனைநீக்கி - இக்காலத்தை விலக்கி, கூதிர் ஆம் பருவந்தன்னை - (ஐப்பசி கார்த்திகை மாதங்களாகிய) கூதிர்ப்பருவத்தை, விரைவின் கொணருதிர் - விரைவிற் கொண்டு வாருங்கள்,' என்றான் - என்று (தனது குற்றேவலாளரை நோக்கிக்) கட்டளையிட்டான்; (எ - று.)

வேனிற்காலத்தை வெறுத்த இராவணன், பிரிந்தார்க்குக் கார்ப்பருவம் வருத்தத்தை விளைக்குமென்பது நன்கு உணர்ந்த பொருளாதலால் அந்தக்கார்ப்பருவத்தையும் தவிர்த்துக் கூதிர்ப் பருவத்தைக் கொணருதிரென்றானென்க. வசந்தகாலம் காமோத்தீபகமாகி, வெப்பந்தருதலாலும் இளவேனிலே தாபந் தருவதாயின் முதுவேனில் தாபந்தருமென்பது தானே பெறப்படுமாதலாலும் இரண்டையும் வேனில் என்று ஒன்றாக்கி, 'இதனின் முன்னைச்சிசிரம் நன்று' என்றான். மையல்வேதனை - மோகத்துன்பம். அவனது உடலிலுண்டானதாபம் சுற்றிலும் நெடுந்தூரமளவும் வீசித் தபிக்க என்பது, 'மாதிரத்திறுதி காறும் தன்மனத்தெழுந்தமையல் வேதனை வெப்பஞ்செய்ய' என்பதன் கருத்து. பி - ம்:—[1]வெதும்பும். [2]யாதும். [3]சீதம். [4]எளிதினீக்கி. (660)

## 102.—அதுவும் தபிக்கவே, அவன் எல்லாப்பருவத்தையும் ஒழிக்கவெனல்.

கூதிர்வந் [1]தடைந்த காலைக்[2] கொதித்தன குவவுத் திண்டோள்
சீதமுஞ் சுடுமோ முன்னைச் [3]சிசிரமே காணி தென்றான்

ஆதியா யஞ்சு மன்றே யருளல [4]தியற்ற வென்ன
யாதுமிங் [5]கிருது வாகா தியாவையு மகற்று மென்றான்.

(இ - ள்.) கூதிர் வந்து அடைந்த காலை - (அவன் இட்ட கட்டளையின்படி ஏவலாளரால் கொணரப்பட்டுக்) கூதிர்ப்பருவம் வந்து சேர்ந்தபொழுது, குவவு திண் தோள்-திரட்சியையுடைய வலிய (அவனது) தோள்கள், கொதித்தன - (முன்னினும் அதிகமாகக்) கொதிப்புற்றன; (அது கண்டு அவன்), 'சீதம்உம் சுடும்ஓ-குளிர்ச்சிக் காலமான கூதிர்ப்பருவமும் தாபந்தரவல்லதோ? [தாபந்தரமாட்டா தென்றபடி]; (ஆதலால்), இது-இக்காலம், முன்னைசிசிரம்ஏ காண் - முதலிலிருந்த பின்பனிக்காலமேதான்,' என்றான்-என்று சொன்னான்: (அதற்கு ஏவலாளர்கள்), 'ஆதியாய் - (எங்கள்) தலைவனே! அருள் அலது இயற்ற - (நினது) கட்டளையல்லாததைச் செய்ய, அஞ்சும் அன்றே-(எங்கள் மனம்) அஞ்சுமன்றோ?' என்ன - என்று சொல்ல, (பின்பு இராவணன்), 'இங்கு யாதுஉம் இருது ஆகாது - இப்பொழுது யாதொருபருவமும் வேண்டுவதில்லை: யாவைஉம் அகற்றும்-எல்லாப்பருவங்களையும் விலக்கி விடுங்கள்,' என்றான்—;

இராவணன் கட்டளைப்படியே கூதிர்ப்பருவம் வந்ததாக அதுவும் வெப்பத்தை யுண்டாக்கவே, 'கூதிர்ப்பருவமும் சுடுமோ? இது முன்னைய சிசிரமே' என்று இராவணன் கூற, ஏவலாளர் 'சுவாமி! உமது ஆணை தப்பி நடப்போமோ? நீர் அருளிய மொழியின்படியே கூதிர்ப்பருவத்தையே கொணர்ந்தோம்' என்று அச்சத்தோடு அவ் வேவலாளர் கூற, 'இப்போது எனக்கு எந்த இருதுவும் இனிய தாகாது: ஆதலால், எல்லாருதுக்களையும் இங்குநின்று விலக்கி விடுங்கள்' என்றானென்பதாம். அஞ்சும் என்பதற்கு - அஞ்சுவோ மென்று பொருள்கொள்ளலாம்; அப்பொழுது, 'அஞ்சுதும்' என்பதன் விகாரம். பி - ம்:—[1]அடுத்த. [2]கொதித்தனன். [3]சீதமே. [4]இயற்றல். [5]இருதுமாகா. (661)

## 103.—இருதுவொன்றுமில்லாத அந்தக்கால நிலைமையின் வருணனை.

என்னலு மிருது வெல்லா [1]மேகின யாவுந் [2]தத்தம்
பன்னரும் பருவஞ் செய்யா [3]யோகிபோற் பற்று நீத்த
பின்னரு முலக மெல்லாம் பிணிமுதற் பாசம் வீசித்
துன்னருந் [4]தவத்தி னெய்துந் துறக்கம்போற் றேன்றிற் றன்றே.

(இ-ள்.) என்னலும்-என்று(இராவணன்) கட்டளையிட்டவுடனே, இருது எல்லாம்-எல்லா ருதுக்களும், பன்ன அரு தம் தம் பருவம் யாஉம் செய்யா-வருணித்துச்சொல்லுதற்கரிய தந்தமது காலத்துக்கு ஏற்ற செயல்களெவற்றையுஞ் செய்யாமல், யோகிபோல் பற்று நீத்த-யோகப்பயிற்சிசெய்பவன்போல (இப்பிரபஞ்ச) சம்பந்தத்தை விட்டவையாய், ஏகின - விலகிச்சென்றன; பின்னர்உம் - பின்பு, உலகம் எல்லாம்-இவ்வுலகமுழுவதும், துன்ன அருந் தவத்தின் - அடைதற்கரிய தவத்தைச் செய்துமுடித்தபயனால், பிணி முதல் பாசம் வீசி - நோய்முதலிய கருமபந்தங்களை முற்றும் ஒழித்து, எய்தும்-அடையப்

படுகிற, துறக்கம் போல் - முத்தியுலகம் போல, தோன்றிற்று - (கால நிலை மாறுபடாது) தோன்றியது; (எ-று.)—அன்றே-தேற்றம்.

நிமிஷம் நாழிகை நாள் மாதம் ருது வருஷம் முதலிய காலபரிணமம் முத்தியுலகத்தி லில்லாமையை "சிறுகாலையிலா நிலையோ திரியா, குறுகாநெடுகா குணம் வேறுபடா, உறுகால் கிளர் பூதமெலா முகினும், மறுகாநெறி" என்று கீழ்க்கூறியதனாலும் உணர்க. இராவணனது கட்டளையால் எல்லாப் பருவங்களும் நீங்கிவிடவே, அப்பொழுது நிலவுலகம், காலபரிணமமில்லாத முத்தியுலகம் போன்ற தென்பதாம். இராவணன்கட்டளைக்கு அஞ்சி இலங்கையை மாத்திரமே யன்றிப் பூலோகம் முழுவதையும் பருவங்கள்விட்டொழிந்தன வென்பது தோன்ற, 'உலகமெல்லாம்' என்றார்; இதில், 'எல்லாம்' என்றது, பொருளின்பன்மை குறியாமல் ஒருபொருளின் பலவிடங் குறித்து நின்றதனால், 'தோன்றிற்று' என்ற ஒருமைமுற்றைக் கொண்டது; இதனை 'எஞ்சாமைப்பொருளதாய் வருவதோர் உரிச்சொல்' என்பாரும் உளர். உயிரைப்பந்தப்படுத்துதலால், கருமத்தொடர்பு 'பாசம்' எனப்பட்டது. பாசம் - கயிறு. 'பிணிமுதல் பாசம் வீசி' என்பதற்கு-உயிரைப்பந்தப்படுத்துவதும் எல்லாக் கருமங்களுக்கும் மூலகாரணமாவதுமான இவ்வுலகத்து ஆசையை அறத்தொலைத்து என்றும் பொருள்கொள்ளலாம். யோகி-வடசொல்; இயமம் நியமம் முதலிய பல அங்கங்களுடன் தவஞ்செய்பவன். அவன் பொருட்பற்று ஒழியுமாறுபோல ருதுக்கள் தொழிற்பற்று அற்றன வென்க. துறக்கம்-சுவர்க்கமுமாம். பி - ம்:— [1]ஏகலும். [2]தந்தம். [3]யோகியின். [4]தவத்திற்றோன்றும். (662)

## 104.—எல்லாப் பருவமும் ஒழிந்தும் அவனது தாபம் ஒழியாமை.

கூலத்தா ருலக மெல்லாங் குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க
நீலத்தா ரரக்கன் மேனி நெய்யின்றி யெரிந்த தன்றே
காலத்தால் வருவ தொன்றோ காமத்தாற் கனலு வெந்தீச்
சீலத்தா [1]லவிப்ப தன்றிச் செய்யத்தா னுவ துண்டே.

(இ-ள்.) கூலத்து ஆர் உலகம் எல்லாம் - (சுற்றிலும்) கடற்கரையமையப்பெற்றுள்ள நிலவுலகம் முழுவதும், குளிர்ப்பொடு வெதுப்பு உம் நீங்க-குளிர்ச்சியும் வெப்பமும் நீங்கப்பெறவும், நீலத்து ஆர் அரக்கன் மேனி-நீலநிறமாகப் பொருந்திய இராவணனுடைய உடம்பு, நெய் இன்றி எரிந்தது - நெய்யில்லாமலே எரிந்திட்டது; காலத்தால் வருவதுஒன்றுஓ-காலசம்பந்தத்தினால் மாத்திரம் ஆவதொரு காரியமுண்டோ? [இல்லை யென்றபடி]; காமத்தால் கனலும் வெம்தீ-காமத்தினால் (உடலில்) மூண்டெரிகிற கொடிய தீ, சீலத்தால் அவிப்பது அன்றி - நல்லொழுக்கவமைதியால் தணிக்கலாமேயல்லாமல், செய்ய ஆவது தான் உண்டுஓ-(அதற்கு வேறுபரிகாரம்) செய்யக்கூடியதும் உண்டோ? [இல்லையென்றபடி]; (எ-று.)—அன்றே-தேற்றம்.

உலகத்தில் எல்லா இருதுக்களும் ஒருங்கே ஒழிந்ததனால் உலக முழுவதும் குளிர்ச்சியுந்தாபமுமில்லாது சமநிலைப்பட்டது; இராவண

னுடம்போ அங்ஙனமாகாமல் நெய்யின்றி ஒருநெருப்பு மேன்மேற் பற்றியெரிந்தாற்போல மிகத்தவித்தது என்பது, முன்னிரண்டடியின் கருத்து. நெருப்பு எரிதற்கு நெய் ஒருபகரணமாதல்போல, உடம்பு எரிதற்குச் சில பருவகாலம் ஓருபகரணமாம்; அதன் சம்பந்தமில்லா திருக்கையிலே இவனுடம்பு எரிந்ததுபற்றி, நெய்யின்றி யெரிந்த தென்றார்: நெய்யின்றி எரிந்தது என்ற தொடரில் காரணமின்றிக் காரியம் தோன்றியதாகக் கூறும் விபாவனையணிகாண்க. காமதாபம் ஐம்பொறியடக்கத்தால் தணியவேண்டுமேயன்றி, வேறுவகையால் தணியுமியல்பின தன்றாதலால், காலம் நீங்கினமாத்திரத்தில் அது அடங்கிற்றன்று என்பது இறுதிவாக்கியத்தின் கருத்து. இப் பொதுப்பொருள் முன்னிரண்டடிச் சிறப்புப்பொருளைச் சமர்த்தித்தது - வேற்றுப்பொருள்வைப்பணி. காலத்தால் வருவது ஒன்றே என்ப தற்கு-இராவணன்மேனி வெம்புறுவது காலத்தினால் விளைந்தவொரு செயலோ? [அன்று] என்றுமாம்: இப்பொருளில், முன்னிரண் டடியை இந்த வாக்கியம் சமர்த்திக்கவந்தது - தொடர்நிலைச்செய்யுட் குறியணியாம். நீலத்தார் என்பதை, நீலம் தார் எனப்பிரித்து, தார் அரக்கன்-வெற்றிமாலையையுடைய இராவணனது, நீலம்-நீலநிறமான உடம்பு என்று உரைப்பாருமுளர். நீலத்தார்-நீலோற்பலமலர் மாலையு மாம். பி-ம்:—[1] அவிவது. (663)

## 105.—என்ன செய்தும் தாபந்தணியப்பெறாத இராவணன் 'சந்திரனைக் கொணர்க' என்றல்.

நாரமுண் டெழுந்த மேகந் தாமரை வளைய [1]நான
சாரமுண் டிருந்த சீதச் [2]சந்தனந் தளிர்மென் றாதோடு
ஆர[3]முண் டெரிந்த சிந்தை யயர்கின்றா னயனின் றாரை
ஈரமுண் [4]டென்ப வோடி யிந்துவைக் [5]கொணர்மி னென்றான்.

(இ - ள்.) நாரம் உண்டு எழுந்த மேகம்-நீரை நிரம்பவுட்கொண்டு வெளியெழுந்த மேகங்களும், தாமரை வளையம் - (இளைய) தாமரையி னுட்சுருள்களும், நானம் சாரம் உண்டு இருந்த - கஸ்தூரியின் சாரம் தன்னிடங் கலக்கக் கொண்டுள்ள, சீதம் சந்தனம்-குளிர்ந்த கலவைச் சந்தனக்குழம்பும், தளிர்-இளந்தளிர்களும், மெல் தாதோடு-மெல்லிய பூந்தாதுகளும், ஆரம்-முத்துக்களும், (என்னும் இவைகளை), உண்டு-(தனது) உடம்பின்மேற் பொருந்தப்பெற்று, (அதனால்), எரிந்த - உடல்வேவப் பெற்று, சிந்தை அயர்கின்றான் - மனந்தளர்கின்ற வனான இராவணன், அயல் நின்றாரை-பக்கத்தில் நின்ற பரிசனங்களை (நோக்கி), 'ஈரம் உண்டு என்ப-(சந்திரனுக்குக்) குளிர்ச்சியுண்டென்று சொல்வார்கள்:(ஆதலால்), ஓடி இந்துவை கொணர்மின்-ஓடிப்போய்ச் சந்திரனைக் கொண்டுவாருங்கள்,' என்றான் - என்று கட்டளை யிட்டான்; (எ-று.)

நீர்கொண்ட காளமேகம் முதலிய சீதளப்பொருள்கள் பல வற்றை ஏவலாளர் இராவணனுடம்பின்மேற் கொண்டுசேர்த்து அவனுக்கு மிக்க சைத்தியோபசாரத்தைச் செய்யவும், அவனது தாபந்தணியாமல் இக்குளிர்ச்சிப்பொருள்களின் சம்பந்தத்தால்

அத்தாபம் மேன்மேல் அதிகப்பட்டுக் கொண்டேயிருக்க, அவன் அப்பொழுதுகுற்றேவலாளரைநோக்கி, 'சந்திரனுக்குமிக்ககுளிர்ச்சி யுண்டென்று யாவருங் கூறுவராதலின் எனது தாபம் தணிதற் பொருட்டு அவனைப் பிடித்துவாருங்கள்' என்று கட்டளையிட்டன னென்பதாம். இந்து-வடசொல்; இது, தனது சீதகிரணங்களால் நனைப்பதென்று காரணப்பொருள்படுவ தாதலின், சந்தர்ப்பத் துக்குஏற்ப இப்பெயராற் குறித்தார். உண்ணல் என்பது பொது வினையாகவும் வழங்குதலால், முதலடியில், உண்டு என்றது - பருகி யென்றபொருளில் வந்தது. [2]சந்தனத்தளிர் என்ற பாடமோதி - சந்தனக்குழம்பில் தோய்த்தெடுக்கப்பட்ட தளிரென்று உரைப்பாரு முளர். தாது - மகரந்தப்பொடியும், மலரிதழுமாம். ஆரம் என்பதற்கு- பூமாலையென்றும் உரைப்பர். 'ஈரம் உண்டென்ப' என்று பராமுக மாகக் கூறியதனால், சந்திரன் இவன்பக்கல் அச்சத்தால் தனது தன்மை முழுவதையும் என்றும் இவன்முன்னிலையில் காட்டிற்றில னென்பதும், இவன் இதுவரையிற் சந்திரனது குளிர்ச்சியைப் பொருள்செய்யாமையும், இத்தனைப் பொருள்களால் தணியாத தாபம் எளிய அவனால் தணிவதென்பது துணிபன்றாயினும் உலகத்தார் அவனைச் சீதகிரணனென்று சிறப்பித்துக் கூறலால் அவன் தன் மையையும் பார்த்திடுவோம் என்று கருதியமையும் தோன்றும்; இன்னும் அதனால், இராவணனிடத்துள்ள அச்சத்தால் அக்கா லத்தில் சந்திரனும் தாபங்கொண்டிருந்தா னென்பது தொனிக்கு மாறும் அறிக. வளையம் - இளங்கொழுந்து. பி-ம்:—[1]நாஞ. [3]உண்டிருந்துஞ். [4]என்பரோடி. [5]கொணரும். (664)

## 106.—ஏவலாளர் சந்திரனை யழைக்க அவன் வந்துசேருதல்.

வெஞ்சினத் தரக்க னாண்ட வியனகர் மீது [1]போக
[2]நெஞ்சினி னொதுங்கு கின்ற நிறைமதி யோனை [3]நோக்கி
அஞ்சலை வருதி நின்னை யழைத்தன னரச னென்னச்
சஞ்சலந் துறந்து தானச் சந்திர னுதிக்க லுற்றான்.

(இ - ள்.) வெம் சினத்து - கொடியகோபத்தையுடைய, அரக்கன் - இராக்கதனான இராவணன், ஆண்ட - அரசாளுதற்கிடமான, வியல் நகர்மீது - பெரிய அவ்விலங்காநகரியின்மேல், போக - போவதற்கு, நெஞ்சினின் - (அஞ்சுகின்ற) மனத்தோடு, ஒதுங்குகின்ற-(ஒருபுறத்தே) விலகிச்செல்லுகிற, நிறை மதியோனை நோக்கி - பூர்ணசந்திரனைப் பார்த்து, (அவ்வேவலாளர்கள்), 'அஞ்சலை- பயப்படாதே: வருதி - வருவாயாக: அரசன் நின்னை அழைத்தனன்- (நமது) அரசன் உன்னை யழைத்திட்டான்', என்ன - என்றுசொல்ல, அச்சந்திரன்—, சஞ்சலம் துறந்து - மனத்தடுமாற்றந் தீர்ந்து, உதிக்கல் உற்றான்-(அவ்விலங்கைநகரத்தில்) தோன்றுபவனானான்;

நிறைமதியோன்-பதினாறுகலைகளும் நிறையப்பெற்ற சந்திரன். இதுவரையிலுஞ் சந்திரன் இராவணனிடத்துள்ள அச்சத்தால் இலங்கைக்கு நேராக உயரத்திற்செல்லாமல் ஒருபுறமாக ஒதுங்கியே சென்றுவந்தன னென்பதை முதலிரண்டடிகளில் விளக்கினார்: அன்றி, இராவணன் காமதாபங்கொண்டிருந்ததை யறிந்த

அப்போது ஒதுங்கிச்சென்ருனெனினுமாம். சந்திரன் என்ற பெயர் - உலகத்தை மகிழ்விப்பவனென்று அவயவப்பொருள்படும். (665)
பி-ம்:—[1]போதும். [2]நெஞ்சிலன். [3]நேடி.

## 107.—சந்திரோதய வருணனை: சந்திரன் இராவணனை வருத்துதல்.

அயிருறக் கலந்த நன்னீ ராழிநின் ருழி [1]யிந்து
செயிருறச் [2]சேதித் தாண்டோர் தேய்வுவந் துற்ற[3]போது
வயிரமுற் [4]றுடைந்த [5]செற்ருேர் [6]வலியவர்ச் செல்லு மாபோல்
உயிர்தெறக் கால னென்பா னொத்தன னுதயஞ் செய்தான்.

(இ - ள்.) வயிரம் உற்று - பகைமைகொண்டு, உடைந்த-(தம்மினும் வலிய பகைவருக்குத்) தோற்ற, செற்ருேர் - (மனத்திற்) சீற்றமுள்ளவர்,—ஆண்டு - (தாம் தோற்ற) அப்பகைவரிடத்தில், ஓர் தேய்வு வந்து உற்றபோது - ஒரு மெலிவுவந்துநேர்ந்த சமயத்தில்,—செயிர் உற சேதித்து-தீமையுண்டாக (அவரை) இமிசித்து, வலியவர் செல்லும்ஆ போல் - வலியரான அவரை (வருத்துதற்பொருட்டு அவரை) நோக்கிவருவதுபோல,—உயிர் தெற காலன் என்பான் ஒத்தனன் - (இராவணனுடைய) உயிரை அழித்தற்கு யமனையொத்தவனாய்,—ஆழி இந்து-வட்டவடிவமான சந்திரன்,— அயிர்உற கலந்த நல் நீர் ஆழி நின்று-நுண்மணல்கள் மிகப்பொருந்தின மிக்க நீரையுடைய கடலினின்று, உதயம் செய்தான்-வெளித்தோன்றினன்; (எ - று,)

பகைவன் தம்மினும் வலியனாயிருக்கையில் அவனுக்குத் தோற்றவர்கள் பின்பு ஒருசமயத்தில் அவனைத் தாம் அழித்திட வேண்டுமென்று மனத்திற் கறுக்கொண்டுசென்று அத்தணியாக் கோபத்தோடு அஞ்சிப் பதுங்கிக் காலம் பார்த்திருந்து பின்னர் எப்பொழுதேனும் அவனுக்கு ஒரு பெருந்தீங்கு வந்து நேருஞ் சமயத்தில் அவனையழித்தற்காக அவனை நோக்கி மீண்டுவரும் இயல் பின்படி, முன்பு திக்குவிசயகாலத்தில் இராவணனுக்குத் தோற்று அஞ்சி யொடுங்கிச்சென்ற சந்திரன் அவனுக்குச் சீதையின் மீதெழுந்த காதலாற் பெரிய சஞ்சலம் நேர்ந்த சமயத்தை நோக்கி அவனை யழித்தற்பொருட்டு முன்பு தான் மறைந்து நின்ற கடலினின்று தன் வடிவமுழுவதும் வெளித்தோன்ற மீண்டு வந்தாற்போன்று உதித்தன னென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. சந்திரனுக்கு யமனை உவமைகூறியது, மிக்ககொடுமை விளைத்துத் தவருது அழித்திடவல்ல ஆற்றலுக்கென்க. சந்திரன் காமோத்தீபகப் பொருள்களுள் ஒன்ருதலால், இராவணனது ஒருதலைக்காமத்தை மிகுவித்து அவனைத் தவிக்கச் செய்தல்பற்றி, இங்ஙனங்கூறினர்; அடுத்த மூன்று கவிகளுக்கும் இது கொள்க. "நன்று பெரிதாகும்" என்ற தொல்காப்பியத்தை நோக்கி 'நன்னீர்' என்பதற்கு-மிக்க நீரென்று பொருள் கொள்ளப்பட்டது. காலன் - காலத்தை அறுதி

யிடுபவன். பி - ம்:—[1]நீத்துச். [2]கலந்தது, கலந்த. [3]போழ்தின். [4]உடைந்து. [5]சென்றோர். [6]வலியவற். (666)

## 108.—இதுவும் அது.

பராவருங் கதிர்க ளெங்கும் பரப்பிமீப் படர்ந்து வானில்
தராதலத் தெவரும் [1]பேணு வவனையே சலிக்கு நீரால்
அராவணை துயிலு மண்ணல் காலமோர்ந் தற்ற நோக்கி
இராவண னுயிர்மே லுய்த்த திகிரியு மென்ன லானான்.

(இ - ள்.) (அச்சந்திரன்),—பராவு அரு - புகழ்தற்கு அரிய [மிக வும் அதிகமான சிறப்பையுடைய], கதிர்கள் - (தனது) கிரணங்களை, எங்குஉம் பரப்பி - எவ்விடத்தும் பரவச்செய்துகொண்டு, மீ படர்ந்து- மேலே சென்று, வானில் தராதலத்து எவர்உம் பேணு அவனை ஏ - விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் யாவராலும் விரும்பப் படாத அவ்விராவணனையே, சலிக்கும் - வருத்துகிற, நீரால்- தன்மை யால்,—அரா அணை துயிலும் அண்ணல் - ஆதிசேஷனாகிய படுக்கை யிற் பள்ளிகொள்ளுந் தலைவனான திருமால், காலம் ஓர்ந்து - சமயம் பார்த்து, அற்றம் நோக்கி இராவணன் உயிர்மேல் உய்த்த - அழி தலைக்கருதி இராவணனது உயிரின்மேற் செலுத்திய, திகிரி-சக்கரா யுதம், என்னல்உம் - என்று சொல்லுதற்கும், ஆனான் - தக்க வனானான்; (எ - று)

கடலினின்று வெளித்தோன்றி இலங்கைநகர்க்கு வந்து இராவண னுக்கு மரணவேதனையை விளைக்கிற வட்டவடிவுள்ள சந்திரனை, கடலில் யோகநித்திரை செய்யுங் கடவுளாற் செலுத்தப்பட்டு இரா வணனை யழிக்கவருகிற வட்டவடிவுள்ள சக்கரமென்று குறித்தல் ஏற்குமாறு அறிக; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. சந்திரன் அப் போது மிக்கஒளியோடு விளங்கி இராவணனுக்கு அதிகதாபம் விளைப் பவனானா னென்பது விளங்க, இந்தத் தற்குறிப்பேற்றம் வந்தது. உலகத்து உயிர்கட்கெல்லாம் தனது குளிர்ந்தகிரணங்களால் தண்மையையே தந்து இராவணனொருவனுக்கே மிக்க வெம்மையைச் செய்கிற சந்திரனை, திருமாலுக்கு ஆபரணவரிசையிலும் ஆயுத வரிசையிலுமாக இரண்டிலும் அமைந்து அடியார்க்கெல்லாம் மிக்க அழகியதாய்த் தோன்றி அருள்செய்து கொடியாரையே அழிக்கிற திருவாழியாகக் குறித்த நயம் உய்த்துணரற் பாலது; இக்கருத்து 'அவனையே சலிக்கும்' என்ற பிரிநிலை யேகாரத்தாற் பெறப்படும். 'வானில் தராதலத்து எவரும்பேணு' என்ற அடைமொழி, அவனது அளவிறந்த கொடுமையை விளக்கிற்று. 'காலமோர்ந்து அற்ற நோக்கி' என்பதற்கு - (அவனையழித்தற்கு உரிய) காலத்தை யெதிர் பார்த்துக் கொண்டிருந்து (அவனுக்கு இப்பொழுது சீதையின்மீது கொண்ட காதல்காரணமாக நேர்ந்த துன்பத்தாலாகிய) மெலிவை உய்த்துநோக்கி யென்றும் பொருள்கூறலாம். உயிர்மேல் - உயிராகிய இலக்கின்மே லென்க. அற்றம் - 'அறு' என்ற பகுதியினடியாப் பிறந்தது; அழிவு மெலிவு என்ற பொருள்களைக் காட்டும். பி - ம்:—[1]பேண. (667)

## 109.—நிலாத்தோற்றம் இராவணனுக்கு மிக்க வெப்பம் விளைத்தல்.

அருகுறு பாலின் வேலை யமுதெலா மளைந்து வாரிப்
[1]பருகினன் பரந்து பாய்ந்த நிலாச்சுடர்ப் பனிமென் கற்றை
நெரியுறு புருவச் செங்க ணரக்கற்கு நெருப்பி னுப்பண்
உருகிய வெள்ளி யள்ளி வீசினு லொத்த தன்றே.

(இ - ள்.) அருகு உறு - (தனது) அருகிற் பொருந்திய, பாலின் வேலை - பாற்கடலிலுள்ள, அமுது எலாம் - அமிருதம் முழுவதையும், அளைந்து வாரி பருகினன் பரந்து பாய்ந்த - (சந்திரன்) துழாவி மிகுதியாக எடுத்துக் குடித்துப் பரவிப்பாய்தலாலுற்ற, நிலா சுடர் பனி மெல் கற்றை - நிலவாகிய ஒளியினது குளிர்ந்த மெல்லிய தொகுதியானது,—நெரியுறு புருவம் செம் கண் அரக்கற்கு - (எப்பொழுதுங் கோபத்தால்) நெரித்த புருவங்களையும் (அதனுற்) சிவந்த கண்களையுமுடைய இராவணனுக்கு, நெருப்பின் நாப்பண் உருகிய வெள்ளி அள்ளி வீசினல் ஒத்தது - தீநடுவே (வைக்கப்பட்டதனுல்) உருகிய வெள்ளியினுருக்கைக் கைகளால் நிரம்பஎடுத்து இறைத்தாற் போன்றது; (எ - று.)—அன்றே - தேற்றம்: ஈற்றசையுமாம்.

உலகத்துக்கெல்லாந் தண்மையைச் செய்கின்ற சந்திரனது வெண்ணிறமான அமிருதகிரணம் இராவணனுக்குக் காமநோயை மிகுவித்து மிக்க வெம்மை செய்தல்பற்றி, அது பாவுதற்கு, மிகச் சுடுகின்ற வெள்ளியுருக்கை வீசுதலை ஒக்குமென்று குறித்தார், திருப்பாற்கடல் கடைந்த காலத்து அதனினின்று தோன்றிய சந்திரன் அப்பொழுது அக்கடலினின்று தன்னேடுந் தோன்றிய அமிருதத்தை மிகுதியாகப் பருகி அவ்வமிருதத்தையே குளிர்ந்த தனது நில வொளியாக வெளிவிடுகின்றனன்போலு மென்பது, முன்னிரண்டடியின் கருத்து: இதுவும் தற்குறிப்பேற்றமே. 'அருகுறு' என்ற அடைமொழி, அமுதத்துக்கும் பாற்கடலுக்கும் பொருந்தும். பி-ம்:—[1]பருகின பரந்துவாய்ந்த. (668)

## 110.—இதுவும் அது.

[1]மின்னிலந் [2]திரிந்த தன்ன விழுநிலா மிதிலை சூழ்ந்த
செந்நெலங் கழனி [3]நாடன் றிருமகள் செவ்வி கேளா
நன்னலந் தொலைந்து சோரு மரக்கனை நாளுந் தோலாத்
துன்னல ஞெருவன் பெற்ற புகழெனச் சுட்ட தன்றே.

(இ - ள்.) மின் நிலம் திரிந்தது அன்ன - மின்னல் நிலவுலகத்திலே உலாவியது போன்ற, விழு நிலா - சிறந்த சந்திரகிரணமானது,—மிதிலை சூழ்ந்த - மிதிலாநகரத்தைச் சூழ்ந்த, செந்நெல் அம் கழனி நாடன் - செந்நெற்பயிருள்ள அழகிய கழனிகளையுடைய விதேகதேசத்து அரசனுன சனகமகாராசனது, திரு மகள் - அழகிய குமாரியான சீதாபிராட்டியின், செவ்வி - வடிவழகை, கேளா - (சூர்ப்பணகையின் சொல்லாற்) கேட்டறிந்து, (அவளிடங்கொண்ட காத

லால்), நல் நலம் தொலைந்து சோரும்-(தனது) மிக்க ஆற்றலொழிந்து தளர்கிற, அரக்கனை-இராக்கதனான இராவணனை, நாளும் தோலா-எந்நாளும் தோல்வியடையாத, துன்னலன் ஒருவன் - ஒருபகைவன், பெற்ற - அடைந்த, புகழ் என சுட்டது - கீர்த்தி வருத்துவதுபோல வருத்திற்று; (எ-று.)—அன்றே - தேற்றம்: ஈற்றசையுமாம்.

என்றுந் தோல்வியடையாது வெற்றியுற்ற பகைவனது புகழ் ஒருவனுக்கு வருத்தந் தருதல்போல, சந்திரனது நிலா இராவண னுக்குத் துன்பம் விளைத்த தென்பதாம்: உவமையணி. 'நாளுந் தோலாத் துன்னலனொருவன்' என்றது, இராமபிரானை யெனக் கொள்ளினும் அமையும். 'மின்னிலந்திரிந்ததன்ன' என்றது, இல் பொருளுவமை: [1]மின்னலந்திரிந்ததன்ன' என்று பாடமோதி, மின்னல் தனது நல்ல செந்நிறம்மாறி வெண்ணிறமாய் விளங்கி னாற்போன்ற என்று உரைத்தலும் ஒன்று. விழு=விழுமம். விழு நிலா என்பதை வினைத்தொகையாக, (சந்திரனிடத்தினின்று) கீழ் விழுகிற நிலவென்றலு மொன்று. [2]நாடன் றிருமகன் செவ்வி கேளா என்ற பாடம்-சனகராசனது செல்வமான சீதையின் கணவ னாகிய இராமனது சிறப்பைக் கேட்டு, தனது நல்லமகிழச்சி நீங்கித் தளர்கிற இராவணனை யென்று பொருள்படும். புகழை வெண் ணிறமுடைய தென வருணித்தல் கவிமரபாதலால், அது, நில விற்கு உவமை கூறப்பட்டது. பி - ம்:—[1]மின்னெலாம். [2]திகழுஞ் சோதி. (669)

## 111.—இராவணன் ஏவலாளரை நோக்கி 'சூரியனை ஏன் கொணர்ந்தீர்?' எனல்.

கருங்கழற் கால னஞ்சுங் காவலன் [1]கறுத்து நோக்கித்
தருங்கதிர்ச் சீத யாக்கைச் சந்திரற் றருதி ரென்ன
முருங்கிய [2]தணலின் மூரி விடத்தினை [3]முகக்குஞ் சீற்றத்து
அருங்கதி ரருக்கன் றன்னை யாரழைத் தீர்க ளென்றான்.

(இ - ள்.)—கரு கழல் காலன் அஞ்சும் காவலன் - பெருமை பொருந்திய வீரக்கழலை யணிந்த யமனும் அஞ்சும்படியான அரச னாகிய இராவணன், கறுத்து நோக்கி - (தனது குற்றேவலாளரைக்) கோபித்து நோக்கி, 'தரும் - (இனிதாகக்) கொடுக்கிற, கதிர் - கிர ணங்களையுடைய, சீதம் யாக்கை - குளிர்ந்த உடம்பையுடைய, சந்திரன் - சந்திரனை, தருதிர் - அழைத்துக்கொண்டு வாருங்கள்,' என்ன - என்று (யான்) சொல்ல, முருங்கிய தணலின் - (யாவும்) அழியும்படியான கொடுநெருப்புடனே, மூரி விடத்தினை - வலிய விஷத்தையும், முகக்கும் - மொண்டுகொண்டுள்ள, சீற்றத்து அரு கதிர் அருக்கன் தன்னை - கோபத்தையும் பொறுத்தற்கரிய (உஷ்ண) கிரணங்களையுமுடைய சூரியனை, யார் அழைத்தீர்கள் - (உம்மில்) எவர் அழைத்து வந்தவர்?' என்றான் - என்று வின வினான்; (எ-று.)

தமக்கு மிக்கவெப்பந்தருதல்பற்றிச் சந்திரனையே சூரியனாக நினைத்து இராவணன் இங்ஙனம் வினவினான். அழைத்தீர்கள் -

இன்னுரென்று அறியாமையின், பன்மையாற் கூறப்பட்டது.
பி - ம்:—[1]கருத்து. [2]கனலின், கனலே. [3]மொய்க்குஞ். (670)

## 112.—அதற்கு அவர்கள் 'இவன் சந்திரனே' என்றல்.

அவ்வழிச் சிலத ரஞ்சி யாதியா யருளில் லாரை
இவ்வழித் தருது மென்ப தியம்பலா மியல்பிற் றன்றால்
செவ்வழிக் கதிரோ னென்றுந் தேரின்மே லன்றி வாரான்
வெவ்வழித் தெனினுந் திங்கள் விமானத்தின் மேல தென்றார்.

(இ - ள்.)—அ வழி - (இராவணன் இங்ஙனம்கூறிய) அப்பொழுது, சிலதர் - ஏவலாளர்கள், அஞ்சி - பயந்து, 'ஆதியாய் - தலைவனே! அருள் இல்லாரை - (உன்னுற்) கட்டளையிடப்படாதவரை, இ வழி - இவ்விடத்து, தருதும் - (நாங்கள்) அழைத்துக்கொண்டு வருவோம், என்பது-என்ற இவ்வார்த்தை, இயம்பல் ஆம் இயல் பிற்று அன்று - சொல்லத்தக்க தன்மையுடையதன்று; செவ்வழி கதிரோன் - சிவந்ததன்மையுள்ள கிரணங்களையுடைய சூரியன், என்றும் - எப்பொழுதும், தேரின்மேல் அன்றி வாரான்-தேரின்மேலேயே வருவான்; திங்கள் - சந்திரன், வெம் வழித்து எனின்உம் - (உனக்கு) வெவ்விய தன்மையதாயினும், விமானத்தின்மேலது - விமானத்தின்மேலே யிருக்கிறது', என்றார் - என்று சொன்னார்கள்; (எ - று.)—ஆல்-அசை.

உன் கட்டளைக்குச் சிறிது மாறுகவும் நாங்கள் நடக்கமாட்டோமென்பது, முன்னிரண்டடியின் கருத்து. சூரியன் தேரிலேறிச் சஞ்சரித்தலும், சந்திரன் விமானத்திலேறிச் சஞ்சரித்தலும் ஆகிய வேறுபாட்டியற்கையை யெடுத்துக்காட்டி, இவன் விமானத்திலேறியுள்ளதனுல், சூரியனல்லன்; சந்திரனே யென்று விளக்கினார்களென்க. செவ்வழியென்ற அடைமொழி கொடுத்ததும், சந்திரனோடு சூரியனுக்கு உள்ள வேற்றுமையை விளக்குவதாம். பின்னிரண்டடியிற் கூறியது, ஓர் நூற்கொள்கை. 'அருளில்லாரை' என்பதற்கு-உனது அருளைப் பெருதவரை யென்றும், தண்ணளியில்லாதாரை யென்றும் உரைப்பினும் அமையும். (671)

வேறு.

## 113.—இராவணன், சந்திரனென்று அறிந்து அவனை வெறுக்கத்தொடங்கல்.

பணந்தா ழல்குற் [1]பனிமொழியார்க் கன்பு [2]பட்டார் படுங்காமக், குணந்தான் முன்ன மறியாதான் கொதியா நின்றான் மதியாலே, தணந்தா மரையின் றனிப்பகைஞ னென்னுந் தன்மை யொருதானே, உணர்ந்தா னுணர்வுற் றவன்மேலிட் டுயிர்[3]தந் துய்க்க வுரை [4]செய்வான்.

(இ-ள்) பணம் - பாம்பின்படத்தை, தாழ் - ஒத்த, அல்குல்-அல்குலையும், பனி மொழியார்க்கு - குளிர்ந்த சொற்களையுமுடைய மகளிர்க்காக, அன்பு பட்டார்-ஆசைப்பட்டவர்கள், படும் -

அடைகிற, காமம் - காமநோயினது, குணம்-தன்மையை, முன்னம் தான் அறியாதான்-(இதற்கு)முன்பு ஒருகாலும் தான் அனுபவித்தறியாதவனும், மதியால் கொதியாநின்றான்-(இப்பொழுது) சந்திரனால் தவிக்கின்றவனுமான இராவணன், தண் அம் தாமரையின் தனி பகைஞன்-குளிர்ந்த அழகிய தாமரைக்கு ஒப்பற்றபகைவனான சந்திரனே (இவன்), என்னும் தன்மை-என்கிற உண்மையியல்பை, ஒருதானே உணர்ந்தான் - தனிப்பட்டவனான தானே [பிறர் சொல்லாமலே] யறிந்தான்; உணர்வுற்று - (அங்ஙனம்) அறிந்து, உயிர் தந்து உய்க்க - (தனது) உயிரைக் கொணர்ந்துகொடுத்து உதவுதற்காக, அவன் மேல் இட்டு உரை செய்வான் - அச்சந்திரன் மேல் வைத்து(ச் சிலசொற்களை)க் கூறுபவனானான்; (எ - று.)— அவற்றை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

இராவணன் இதுவரையிலும் தான் விரும்பிய மகளிரையெல்லாம் தடையில்லாமல் அடைந்து நுகர்ந்துவந்தன னாதலால், காமத்தாலாகும் வருத்தத்தைச் சிறிதும் அனுபவித்தறியாதவனென்பது, 'பணந்தாழல்குற் பணிமொழியார்க் கன்புபட்டார் படுங் காமக்குணந் தான்முன்னமறியாதான்' என்பதன் கருத்து. 'மதியாலே கொதியாநின்றான்'என்பதற்கு-குளிர்ந்த சந்திரனால் மகிழ்ச்சியுறவேண்டியிருக்க அதற்குமாறாகத் தனது அறிவின் தடுமாற்றத்தினால் தாபம்மிக்கு வருந்துபவ னென்று கருத்துக்காண்க. தனக்கு வெப்பம்விளைத்தலை நோக்கிச் சந்திரனைச் சூரியனென்று முதலிற் கருதிய இராவணன், ஏவலாளர் (கீழ்க்கவியிற்) கூறிய அடையாளத்தால் மாத்திரமேயன்றி இவனைக் கண்டவளவிலே தாமரைகள் குவிகிற இயல்பைத் தானே பிரதியட்சமாகக் கண்டதனாலும் இவன் சூரியனல்லன் சந்திரனே யென்று சுயமாக அறிந்தா னென்பது விளங்க, 'தணந்தாமரையின் தனிப்பகைஞ னென்னுந்தன்மை யொருதானே யுணர்ந்தான்' என்றார். தணம் - தொகுத்தல். 'அவன்மேலிட்டு உரைசெய்வான்' என்பது, அவனை நோக்கிக் கூறுவானென்றவாறு. 'உயிர்தந்து உய்க்க' என்பதற்கு-பெருமூச்சுவாங்க என்றும் உரைக்கலாம். பி-ம்:— [1]பணி. [2]பட்ட. [3]காத்துய்க்க, உய்த்ததுன்பம். [4]செய்தான். (672)

இதுமுதல் ஆறுகவிகள் - மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்.

## 114.—இதுவும் அடுத்த கவியும்-சந்திரனைப்பழித்தலைத் தெரிவிப்பன.

தேயா நின்றாய் மெய்வெளுத்தா யுள்ளங் கறுத்தாய் நிலைதிரிந்து
காயா நின்றா யொருநீயுங் கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயா நின்ற மலர்வாளி [1]பறியா நின்றா [2]ரின்மையால்
ஓயா நின்றே னுயிர்காத்தற் குரியார் [3]யாவ ருடுபதியே.

(இ-ள்.) உடு பதியே-நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனே! (நீ), (மெய்) தேயாநின்றாய்-உடம்புமெலிகின்றாய்; மெய் வெளுத்தாய்-உடல் வெண்மைப்பட்டாய்: உள்ளம் கறுத்தாய் - மனங்கருகினாய்

[நடுவிடத்திற் களங்கமடைந்தாய்]: நிலை திரிந்து காயாநின்றாய் - (உனது தண்ணிய) இயற்கை நிலைமை மாறித் தபிக்கிறாய்; ஒரு நீ உம்-தனியனான நீயும், (என்னைப்போலவே), கண்டார் சொல்ல கேட்டாய் ஓ - (சீதையின் அழகைக்) கண்டவர்கள் (அதனையெடுத்துச்) சொல்லக் கேட்டு அவளிடங் காதல்கொண்டாயோ? பாயாநின்ற - (தடையில்லாமல் எனது உடம்பினுள்ளே) தைத்துச் செல்கிற, மலர் வாளி-(மன்மதனது) மலரம்புகளை, பறியாநின்றார்-பிடுங்கியெடுத்துப் பாதுகாக்கின்றவர், இன்மையால் - (எவரும்) இல்லாமையால், ஓயாநின்றேன் :- வலியொடுங்குகிற என்னுடைய, உயிர் - உயிரை, காத்தற்கு—, உரியார் - உரியவர், யாவர் - இனி எவரோ? [எவருமிலர் என்றபடி]; (எ-று.)

தண்கதிரோனான உன்னைக்கொண்டு எனதுதாபந் தணிந்துகொள்ளலா மென்று கருதி உன்னை அழைத்தேன்; நீயும் என் போல வெப்பங்கொண்டிருத்தலால் இனி யாரால் என்வெப்பத்தைத் தணித்துக்கொண்டு உய்வே னென்பது, இச்செய்யுளின் தாற்பரியம். சந்திரனே! நீ என்னைப்போல உடல் தேய்ந்தும் உடல் வெளுத்தும் அகம் கருகியும் இயற்கைமாறி உடல் சுட்டு முள்ள தன்மையை நோக்கின், நீயும் என்போலச் சீதையின் அழகைக் கண்டவர் சொல்லக் கேட்டு அவளிடம் வேட்கைகொண்டனைபோலும் என்பது, முன்னிரண்டடியின் கருத்து. என்னால் விரும்பப்பட்டவர் வந்து என்னைக்கூடி எனது வேட்கைநோய்வருத்தத்தை நீக்காமையா லென்பது, மூன்றாமடியின் கருத்து.

"நைவாய வெம்மேபோல் நாண்மதியே நீயிந்நாள், மைவானிருளகற்றாய் மாழாந்து தேம்புதியால், ஐவா யரவணைமேலாழிப் பெருமானார், மெய்வாசகங் கேட்டுன் மெய்ந்நீர்மை தோற்றாயே" என்றதனோடு இதனை ஒப்பிடுக. மெய்என்பது-மத்திமதீபமாய், முன்நின்ற 'தேயாநின்றாய்' என்றதனோடும், பின்நிற்கும் 'வெளுத்தாய்' என்பதனோடும் தொடர்ந்தது. மெய்தேயாநின்றாய்; மெய்வெளுத்தாய், உள்ளங்கறுத்தாய் - சினைவினை முதலொடுசார்த்திச் சொல்லப்பட்டது. மெய்தேய்தல் முதலியன - காமநோயுற்றார்படும் அவத்தைகள். உள்ளங்கறுத்தாய் என்பதிற் சிலேடை காண்க. 'ஒருநீ' என்றது, கதியாய்நின்று காப்பாரற்ற நீ யென்றவாறு. 'நீயும்' என்ற உம்மையால், என்னைப்போல என்பது பெறப்பட்டது. நேரிற்கண்டவளான சூர்ப்பணகை சொல்லத் தான் கேட்டமை பற்றி, 'நீயுங் கண்டார்சொல்லக் கேட்டாயோ' என்றான். நக்ஷத்திரங்கள் யாவும் சந்திரனுக்கு மனைவிய ரென்பது புராணநூற்கொள்கை யாதலால், அவனுக்கு, உடுபதியென்று பெயராயிற்று. பி-ம்:—[1] பறிக்க, பரியா. [2] இல்லையால். [3] ஆரே. (673)

115. ஆற்றா ராகிற் றம்மைக்கொண் டடங்கா ரோவென் றாருயிர்க்குக், கூற்றாய் நின்ற குலச்சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத், தோற்றா யதனா னகங்கரிந்தாய் மெலிந்தாய் வெதும்பத் தொடங்கினாய், மாற்றார் செல்வங் கண்டழிந்தால் வெற்றி யாக வற்றாமோ.

(இ-ள்.) என் ஆர் உயிர்க்கு கூற்று ஆய் நின்ற-எனது அருமை யான உயிருக்கு யமனாய்நின்ற, குலம் சனகி - சிறந்த சீதையினது, குவளை மலர்ந்த தாமரைக்கு - இரண்டுகருங்குவளைமலர்கள் மலரப் பெற்ற ஒருதாமரைபோன்ற முகத்துக்கு, தோற்றாய் - (நீ) தோல்வி யடைந்தாய்: அதனான்-ஆதலால், அகம் கரிந்தாய்-உள்ளங்கருகினாய்; மெலிந்தாய் - (உடல்) மெலிவடைந்தாய்; வெதும்ப தொடங்கினாய்-வெப்பமடையத் தொடங்கிவிட்டாய்; மாற்றார் செல்வம் கண்டு-பகைவருடைய செல்வத்தைப்பார்த்து, அழிந்தால்-(இவ்வாறு) அழிவுற்றால், வெற்றி ஆக வற்று ஆம்ஓ-சயம்உண்டாக வல்லதாகுமோ? ஆற்றார் ஆகின்-(தாம் பகைவெல்ல) வல்லமையில்லாராயின், தம்மைகொண்டு அடங்கார்ஓ - (அறிவுடையார்) தமது அறிவைக்கொண்டு தம்மிலே தாம் அடங்கி விடாரோ? (எ - று.)

சந்திரனிடத்துஉள்ள தேய்தல் முதலிய பண்புகளை அவன் தான் சீதை விஷயமாகக் கொண்ட காதலால் நேர்ந்தனவென்று (கீழ்க்கவியிற்) கற்பித்துக்கூறியவன், இங்கு அதனைவிட்டு, அந்தச் சந்திரன் தனக்குப்பகையான ஒருதாமரைக்குத் தோற்றதனால் நேர்ந்தவையென்று கற்பித்துக்கூறுகிறான். குவளையைத் தன்னிடத்துக்கொண்ட தாமரைக்குத் திங்கள் தோற்றவாறு எங்ஙனெனின்?—குவளையையலர்த்தித் தாமரையைக் குவித்தல் திங்களின் இயல்பு: இந்தச் சானகியின் முகத்தாமரை குவளையைத் தன்னிடையிற் கொண்டதனால் தாமரையைக் குவித்தால் தான் அலர்த்த வேண்டிய குவளையும் குவியும்; குவளையை யலர்த்த வேண்டின் தான் குவிக்கவேண்டிய தாமரையும் அலரும்: இங்ஙன் தான் செய்யவேண்டிய செயலை இந்தச் சானகியின் குவளையலர்ந்த தாமரையிடத்துச்செய்ய இயலாமையாலாகு மென்பர் ஒருசாரார். உன்னினுஞ் சிறந்த சீதையின் முகத்தாமரையை வெல்லும் ஆற்றல் இல்லாமையால் அதற்குத் தோற்ற நீ உனது அறிவையே கொண்டு உன்னை நீயே சாந்தப்படுத்திக்கொண்டு அமைந்திருத்தல் அழகேயன்றி அழுக்காறுகொண்டு அகங்கரிந்து புறம்மெலிந்து தவித்தலாற் பயனென்னே! இங்ஙனம் அழுக்காறுமிக்க மாத்திரத்தால் அதனைவெல்லும்வல்லமை உனக்கு வந்துவிடுமோ? என்று பழித்தவாறு. முகத்தினிடையேயுள்ள கண்கள் தாமரையிடையிலுள்ள குவளைபோலுமென்று கூறப்படுவதனை "தாமரைப் போதிற்பூத்த தண்ணறுங்குவளைப்பூப்போற், காமருமுகத்திற் பூத்த கருமழைத்தடங்கண்," "இனமலர்க் குவளைப்பொற்பூ, விழைதரு கமலவட்டத்திடைவிராய்ப் பூத்ததுபோல்" என்ற இடங்களிலுங் காண்க. 'என்னாருயிர்க்குக் கூற்றாய்நின்ற குலச்சனகி' என்றது, தனக்கு மரணகாரணமானவள் சீதையே யென்று, பின் நிகழும் நிகழ்ச்சிக்கு அறிகுறியாக முன்னர் அவன்வாயில்வந்த அமங்கல மொழியாகுமாற்றை ஊன்றியுணர்க. சனகி = ஜாநகி. குவளை யென்றது, உவமவாகுபெயராய், கண்களை யுணர்த்தும். இக் கவியில் 'அகங்கரிந்தாய்' என்பது - சிலேடை. மாற்றார்-மனம் மாறுபடுதலையுடையவர். (674)

## 116.—இராவணன் சூரியனையும் பகலையும் வரவழைத்தல்.

என்னப் பன்னி யிட[1]ருறுவா னிரவோ டிவனைக் கொண்டகற்றி
முன்னைப் பகலும் பகலோனும் வருக வென்றான் மொழியாமுன்
உன்னற் கரிய வுடுபதியு மிரவு [2]மொழிந்த வொருநொடியிற்
பன்னற் கரிய பகலவனும் வந்து பகலும் [3]பரந்தவால்.

(இ - ள்.)—என்ன பன்னி - என்று பலவாறுசொல்லி, இடர் உறுவான் - துன்பம் அனுபவிப்பவனான இராவணன், (ஏவலாளரை நோக்கி), 'இரவோடு இவனை கொண்டு அகற்றி - இராப்பொழுதையும் இச்சந்திரனையும் கொண்டு நீக்கிவிட்டு, முன்னை பகல்உம் பகலோன்உம் வருக - அதற்குமுன்பிருந்த பகற்பொழுதையும் அதற்கு உரியவனான சூரியனையுமே (நீங்கள்) வருவிப்பீராக,' என்றான் - என்று கூறினான்; மொழியாமுன் - (அவ்வாறு) சொல்லும் முன்னமே, உன்னற்கு அரிய உடுபதிஉம் இரவுஉம் ஒழிந்த - நினைத்தற்கும் வேண்டாத [மிகவெறுக்கப்பட்ட] சந்திரனும் இராத்திரியும் நீங்கின; ஒரு நொடியில்-(உடனே) ஒருநொடிப்பொழுதிலே, பன்னற்கு அரிய பகலவன் உம்-புகழ்ந்து பேசுதற்கு அரிய [மிக்கசிறப்பையுடைய] சூரியனும், பகல்உம் - பகற்பொழுதும், வந்து பரந்த - வந்து பரவின; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

வருக வென்ற தன்வினை வருவிக்கவெனப் பிறவினைப் பொருளது: இனி அகற்றி யென்னும் எச்சத்தை அகற்றவெனத் திரிப்பினுமாம்: இவ்வாறு ஏதேனும் ஒன்றைத்திரித்தால்தான் 'இரவோடு இவனைக் கொண்டகற்றி முன்னைப் பகலும் பகலோனும் வருக' என்ற முடிபு இலக்கணநடைக்கு ஒத்ததாம். பி - ம்:— [1]உழவா. [2]ஒளித்தது. [3]பரந்ததால். (675)

## 117.—இதுமுதற் பதின்மூன்று கவிகள் - அவ்வுதயகால வருணனை.

இருக்கின் [1]மொழியா ரெரிமுகத்தி னீந்த நெய்யி [2]னவிர் செம்பொன்
உருக்கி யனைய கதிர்பாய வனல்போல் [3]விரிந்த துயர்கமலம்
அருக்க னெய்த [4]வமைந்தடங்கி [5]வாழா வடாத பொருளெய்திச்
செருக்கி யிடையே திருவிழந்த சிறியோர் போன்ற சேதாம்பல்.

(இ - ள்.) இருக்கின் மொழியார் - வேதமந்திரங்களையுணர்ந்த அந்தணர்கள், எரிமுகத்தின்-அக்கினிமுகத்திலே, ஈந்த-சொரிந்த, நெய்யின்-நெய்யினால், அனல் போல் - அந்நெருப்பு (வளர்தல்) போல, அவிர் செம்பொன் உருக்கி அனைய - விளங்குகிற செம்பொன்னை உருக்கினாற் போன்ற, கதிர்-சிவந்த சூரியகிரணங்கள், பாய-மேற்படுதலால், உயர் கமலம் விரிந்தது-சிறந்த செந்தாமரை மலர்ந்தது; சேதுஆம்பல் - செவ்வாம்பல்மலர்கள், — அருக்கன் எய்த-சூரியன் வருதலால், அமைந்து அடங்கி - அடங்கியொடுங்கி, வாழா-வாழ்வுபெறாமல்,—அடாத பொருள் எய்தி-(தாம் அடைதற்குத்) தகாத [உயர்ந்த] பொருளை யடைந்து, செருக்கி-(அதனாற்)

செருக்குற்று, இடையேதிருஇழந்த - மத்தியிலே அப்பொருளை யிழந்து விட்ட, சிறியோர் போன்ற-அற்பர்களை யொத்தன; (எ-று.)

இராப்பொழுதுடன் சந்திரன்வரப் பெற்றதனால் மிக்கவிளக்க மடைந்த ஆம்பல்கள் இராவணன்கட்டளையால் அப்பொழுதுடன் சந்திரன் விரைவில் நீங்கியதனால் அவ்வொளியை இடையிலே யிழந்ததற்கு, சிறிது செய்து விட்ட நல்லூழ்ப்பயனால் தமது தகுதிக்கு மேம்பட்ட செல்வத்தை யடைந்து அதனால் மிக்க செருக்குற்ற அற்பர்கள் அந்நல்லூழ் விரைவி லொழியவே அச் செல்வத்தையிழந்து ஒடுங்குதலை உவமை கூறினார். 'இருக்கின் மொழியார்' என்றது - யாகஞ்செய்விப்போரான ருத்விக்குகளை. அவர்கள் வேதமந்திரங்களைச்சொல்லி நெருப்பில் நெய் சொரிதல்-சூரியகிரணம் பாய்தற்கும், அந்நெய்யால் யாககுண்டத்துஓமாக்கினி வளர்ந்துவிளங்குதல்-நீர்நிலையில் தாமரைமலர்ந்து விளங்குதற்கும் உவமை. இருக்கு-இங்கு, வேதமந்திரம். தேவர்களெல்லாம், தம் தமக்குக் கொடுக்கும் அவிசு ஆகியஉணவை அக்கினியேமுகமாகப் பெறுகின்றனரென்ற வேதக்கருத்தைக்கொண்டு 'எரிமுகத்தின்' என்றார். பொருளெய்தியதனாற் செருக்கியமைபற்றி, 'சிறியோர்' எனப்பட்டனர். சேதாம்பல்-பண்புத்தொகை; பண்புப்பெயர், ஈறு போய் ஆதிநீண்டு முன்னின்ற மெய் திரிந்தது. 'அமைந்தடங்கி வாழா' என்பதற்கு - குணவமைதி கொண்டு அடக்கமுடையராய் வாழாமல் என்று பொருளுரைத்து, அதனை செருக்கி என்பதனோடு கூட்டுதலு மொன்று. பி - ம்:—[1]மொழியால், மொழியான். [2]எரி, நேர். [3]விரிந்த. [4]அவிந்து. [5]வாளாது. (676)

118. நாணி நின்ற வொளிமழுங்கி நடுங்கா நின்ற வுடம்பின னாய்ச், சேணி னின்று புறஞ்சாய்ந்து கங்குற் றாரம் பின்செல்லப், பூணின் வெய்யோ னொருதிசையே [1]புகுதப் போவான் புகழ் வேந்தர், ஆணை செல்ல நிலை[2]யழிந்த [3]வரசர் போன்றா னல்லாண்டான்.

(இ - ள்.)—பூணின் வெய்யோன்-(உலகத்துக்கு) ஓர் ஆபரணம் போல அலங்காரமாய்விளங்குகிற சூரியன், ஒரு திசைஏ புகுத-ஒரு திக்கிலே [கிழக்கிலே] வந்து சேர்ந்ததனால், நாணி-(அவன்முன்னே நிற்க) வெள்கி, நின்ற ஒளிமழுங்கி - (தன்னிடத்து) உள்ள ஒளி மழுங்கப்பெற்று, நடுங்காநின்ற உடம்பினன் ஆய் - தடுமாற்ற மடைந்த உடம்பையுடையவனாய், சேணினின்று புறம் சாய்ந்து-நடு வானத்தினின்று ஒருபக்கமாகச் சாய்தலுற்று, கங்குல்தாரம் பின் செல்ல-இரவாகிய (தன்) மனைவி (தன்) பின்னேவர, போவான்-அப் பாற் செல்பவனான, அல் ஆண்டான்-இரவுக்குத் தலைவனான சந் திரன்,—புகழ் வேந்தர்-கீர்த்தியையுடையசிறந்த அரசரது, ஆணை - கட்டளை, செல்ல-தடையின்றிவர, (அதனால்), நிலை அழிந்த-(தமது) நிலைமை கெட்டு ஓடிய, அரசர் போன்றான்-அரசரை யொத்தான்;

'அல்லாண்டான்' என்றதனால், இரவில் வானத்தை அரசாண் டவன் பகலில் அவ்வாட்சியை யிழந்தா னென்றவாறு. நாணம் அடைதலும், ஒளிமழுங்குதலும், உடம்புநடுங்குதலும் ஒரு புறத்தே

சாய்தலும், தன்மனைவி தன்பின்னேவர நாட்டைவிட்டொழிதலும் ஆகியபொதுத்தன்மை, சந்திரனுக்கும் தோல்வியடைந்துசெல்லும் அரசர்க்கும் பொருந்துமாறு காண்க. சூரியனைப் புகழ்வேந்தராக வும், அவனதுகிரணத்தை அவரது ஆட்சியாகவும், சந்திரனை நிலை யழிந்த அரசராகவும், அவன் வானத்தைவிட்டு அகலுதலை நாட்டை விட்டு விலகுதலாகவுங் கொள்க. ஆணை - இங்கே, வெற்றியுமாம். சந்திரன் இரவுக்குத் தலைவனாதலின், அவனுக்கு 'அல்லாண்டான்' என ஒருபெயர் கூறினர்; (வடநூலார் அவனை 'நிசாபதி' என்ற பெயராற் குறித்தலுங் காண்க.) இரவை மனைவியாகக் கூறினதற் கும் இதுவே காரணம். இராவணனுடைய கட்டளைப்படி இரவோடு சந்திரனும் ஒழிந்தமையை 'கங்குல் தாரம் பின்செல்லப் போவான்' என்றதனால் விளக்கினர். தாரம்-தாரா: என்ற வடசொல் ஈறுதிரிந் தது. உவமையணி. பி-ம்:—[1]போதப். [2]இழந்த. [3]அமைச்சன். (677)

வேறு.

119. மணந்தபே ரன்பரை மலரின் சேக்கையுள்
[1]புணர்ந்தவ ரிடையொரு வெகுளி பொங்கலால்
**கணங்குழை மகளிர்கள் கங்கு னீங்கிட
உணர்ந்திலர் கனவினு மூட றீர்த்திலர்.**

(இ - ள்.)—மலர் இன் சேக்கையுள்-பூக்களைக்கொண்டு பரப்பப் பட்ட இனிய படுக்கையினிடத்திலே, மணந்த பேர் அன்பரை புணர்ந்தவர் - (தம்மைக்) கலியாணஞ்செய்துகொண்ட மிக்க அன் பையுடைய கணவரைத் தழுவிக் கூடியவர்களாகிய, கணம் குழை மகளிர்கள்-பலவாய்த்திரண்ட குழை யென்னுங் காதணியையுடைய (அவ்விலங்கைநகரத்து இராக்கத) மகளிர்கள், இடை ஒரு வெகுளி பொங்கலால்-(தங்கள்) கூடலினிடையே(தங்கணவர் மீது தமக்கு) ஒருசினம் மிக்கதனால், (ஊடல்கொண்டவர்களாய்),—கங்குல் நீங்கிட- இராப்பொழுது (இடையிலே) நீங்கியிட,உணர்ந்திலர்-(அதனை )அறி யாதவர்களாகி, கனவின்உம் ஊடல் தீர்ந்திலர்-(தாம் கொண்ட ஊடலைக்) கனவிலும் நீங்கினாரில்லை [சிறிதும் ஊடல் தணிந்திலர் என்றபடி]: (எ - று.)

இராப்பொழுது நடந்துவருகையில் நாழிகைமுடியச் செல்வ தற்குமுன்னே இடையிலே இராவணனேவலால் திடீரென்று சூரி யோதயமாயிற்றன்றோ? அங்ஙனம் எதிர்பாராது வெகுவிரைவில் நேர்ந்த பகல்தொடக்கத்திலே அந்நகரத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகள், இதுமுதற் பதினொருகவிகளிற் பலவாறு காட்டப்படுகின்றன.

சிலராட்சச ஸ்திரீகள் மலர்ப்படுக்கையிலே தமது பிராணநாய கரோடு கூடியிருந்தபொழுது அக்கூடலின்பஞ் சிறத்தற்பொருட்டு அக்கொழுநரிடத்து ஏதோ ஒருகுற்றத்தை யேற்றி அதுகாரணமாக அவரோடு பிணங்கினின்றார்கள்; அக்கணவர் வணங்கி இன்சொற் சொல்லி அப்புலவியைத் தீர்க்க முயலுதற்கும், அதனால் மகளிர் அந்த ஊடலை ஒழிதற்கும் வேண்டியதான பொழுது இல்லாதபடி திடீரென்று பொழுது விடிந்து விட்டது; அங்ஙனம் விடிந்தபின்பும்,

அம்மகளிர் தமதுகாமமோகத்தால் பொழுதுவிடிந்ததை யுணராமற் கலவியின்பம் மிகுதற்கு வேண்டுமளவு புலவியைக்கொண்டே நின்றார்க ளென்பதாம். அவர்கள் மிகச்சிறிதும் ஊடலொழிந்தில ரென்பதை நன்கு காட்டும்பொருட்டு, 'கனவினும் ஊடல் தீர்ந்திலர்' என்றார். இங்ஙனம் விரைவில் இரவுநீங்குவதை உணர்ந்திருப்பா ராயின் உடனே ஊடல்தீர்ந்து கூடியிருப்ப ரென்க. இக்கவியில் 'உணர்ந்திலர்' என்பதுபோலவே, மேல் 122 - ஆங் கவியில் ''உணர்ந்தில' என்பதும் பொருள்படுமாறு உணர்க. பி-ம்:—[1]புணர்ந்திலர்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - இப்படலத்தின் ஆறுங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (678)

120. தள்ளுறு முயிரினர் தலைவர் [1]நீங்கலால்
நள்ளிர விடையுறு நடுக்க [1]நீங்கலர்
[2]கொள்ளையி னலர்தரு குவளை நாண்மலர்
கள் [3]ளுகு வனவெனக் கலுழுங் கண்ணினர்.

(இ - ள்,) (அந்நகரத்து மகளிர் சிலர்),—நள் இரவிடை - நடு இராத்திரியிலே, தலைவர் நீங்கலால் - தம்கணவர் (தம்மைவிட்டு) நீங்கியதனால், தள்ளுறும் உயிரினர்-(உடம்பைவிட்டு) நீங்கவிருக்கும் உயிரையுடையவர்களாய், உறு நடுக்கம் நீங்கலர்-(பிரிவாற்றாமையால்) நேர்ந்த மிக்கநடுக்கம் நீங்காதவர்களாய், கொள்ளையின் அலர்தரு நாள் குவளை மலர்-செழிப்பாக மலர்ந்த புதிய கருங்குவளை மலர், கள் உகுவன என-தேனைச் சிந்துவனபோல, கலுழும் - அழுகைநீர் சிந்துகிற, கண்ணினர்-கண்களையுடையவரானார்கள்; (எ-று.)

மகளிர் கொழுநரோடு கூடியிருந்த கூடல்தொடக்கத்திலே எதிர்பாராது திடீரென்று பொழுது புலர்ந்திட்டது; அதனையறிந்து ஆடவர்கள் தாம் உதயகாலத்தில் இராசசமுகத்துக்குச் செல்ல வேண்டிய கடமையில் தவறாமைப்பொருட்டுப் படுக்கை விட்டு எழுந்து சென்றனர்: அங்ஙனம் வெகுவிரைவில் பிராண நாயகர் பிரிந்ததனாலான துன்பத்தை ஆற்றமாட்டாதவராய் அம்மகளிர்கள் மரணவேதனையை யடைந்து உள்ளமும் உடம்பும் நடுங்கப் பொழுது விடிந்த பின்பும் கண்ணீர்சிந்தி அழுதபடியே யிருந்தார்களென்பதாம். அவர்களின் கண்களுக்குக் குவளையும் கண்ணீருக்குத்தேனும் உவமை. கொள்ளையின் - மிகுதியாக எனினுமாம். பி - ம் :—[1]நீங்கினார். [2]கொள்ளையிலரக்கருங், கொள்ளையினலர்க்கருங். [3]உகுவனமெனக். சில பிரதிகளில், "அணைமலர்" என்ற அடுத்த செய்யுளின்பின் இச் செய்யு ளுள்ளது. (679)

121. அணைமலர்ச் சேக்கையு [1]ளாட றீர்ந்தனர்
பணைகளைத் தழுவிய பவள வல்லிபோல்
இணைமலர்க் கைகளி னிறுக வின்னுயிர்த்
துணைவரைத் தழுவினர் துயில்கின் றார்சிலர்.

(இ-ள்.) சிலர் - சிலமகளிர்கள்,—அணை மலர் சேக்கையுள்-பஞ்சு மெத்தையையும் மலர்ப்பள்ளியையுமுடைய சயனத்திலே, ஆடல் தீர்ந்தனர் - காமலீலைகளைச் செய்துமுடித்தவர்களாய்,—பணைகளை தழுவிய பவளவல்லி போல்-பருத்தமரக் கிளைகளைத் தழுவிப்படர்ந்த பவழக்கொடிபோல, இன் உயிர் துணைவரை இணைமலர் கைகளின் இறுக தழுவினர்-(தமது) இனிய பிராணநாயகரை மலர்போல் மெல்லிய (தமது) இரண்டு கைகளாலும் அழுந்தக் கட்டியணைத்துக் கொண்டு, துயில்கின்றார்-(பொழுது விடிந்த பின்பும் உணராமல்) தூங்கிக்கொண்டிருந்தார்கள்; (எ-று.)

வைகறையிலே துயிலெழு மியல்புள்ள மகளிர்கள் இரவில் சிற்றின்ப விளையாடல்கள் முடிந்து துயில்கொண்டவளவிலே பொழுது புலர்ந்ததனால் அதனையுணராமல் பின்னும் கணவரை ஆலிங்கனஞ்செய்தபடியே தூங்கிக் கொண்டிருந்தன ரென்பதாம். அரக்கர்புயங்களுக்கு மரக்கிளைகளும், அம்மகளிர்கைகளுக்குப் பவழக் கொடியும் உவமை; அன்றி, அரக்கர்க்கு மரக்கிளையும், அம்மகளிர்க்குப் பவழக்கொடியும் உவமை யெனினுமாம். உயிர்த்துணைவர் - உயிர் போன்ற துணைவரென உவமைத்தொகை. பி-ம்:—[1]கூடல். (680)

122\. அளியினங் [1]கடந்தொறு மார்ப்ப வாய்கதிர்
ஒளிபட [2]வுணர்ந்தில வுறங்கு கின்றன
தெளிவில வின்றுயில் [3]விளையுஞ் சேக்கையுட்
[4]களிகளை நிகர்த்தன களி[5] நல் யானையே.

(இ-ள்.) அளி இனம் - வண்டின்கூட்டங்கள், கடம் தொறும் - (தமது) கன்னங்களிலெல்லாம், ஆர்ப்ப - மொய்த்து ஆரவாரஞ் செய்யவும், ஆய் கதிர் ஒளிபட - சிறந்த சூரியனது காந்தி [வெயில்] (தம்மேற்)படவும், உணர்ந்தில உறங்குகின்றன-(பொழுதுவிடிந்ததை) அறியாதவையாய்த் தூங்குகின்றனவான, களி நல் யானை - சிறந்த மதயானைகள்,—இன் துயில் விளையும் சேக்கையுள் - இனிமையான தூக்கம் நிகழ்தற்குரிய [மெத்தென்ற] படுக்கையிலே, தெளிவு இல - தெளிவில்லாமல் உறங்கிக்கிடக்கிற, களிகளை நிகர்த்தன-கட்குடித்த் சனங்களை யொத்தன; (எ-று.)

மிகுதியாகக் கள்ளைக்குடித்த சனங்கள் அதனாலான மிக்க மயக்கத்தால் எத்துணையாரவாரத்தையும் உணராமல் பொழுது வேறுபாட்டையும் அறியாமல் உறங்கிக்கிடத்தல்போல, மிக்கமதங் கொண்ட யானைகள் வண்டுகளினாரவாரத்தாலும் வெயில் மீது எறித் தலாலும் கண்விழியாமல் தூங்கிக்கொண்டிருந்தன என்பதாம்; இதற்குக்காரணம், சடக்கெனப் பொழுதுவிடிந்தமை. மதசலம் பாய்தற்குரிய இடமாதலால், கன்னத்தில் மொய்த்தன, அந்நீர்பருக வந்த வண்டுக ளென்க. இழிவுபற்றி, 'தெளிவில களிகள்' என அஃறிணையாற் கூறினார். கதிர் - சூரியனுக்குச் சினையாகுபெயர். ஆய்கதிர் என்பதை, அடையடுத்தவாகுபெய ரென்னலாம்: வினைத் தொகையன்மொழியெனினும் இழுக்காது. களிகள் துயிலெழாமைக்கு, அக்கட்குடியின்மேல் வேறுகாரணமுங் காட்டுவாராய், 'இன்துயில் விளையுஞ் சேக்கையுள்' என்றார்: இனி, இதனை யானைகளுக்குச் சேர்ப்

பினும் பொருந்தும். வண்டுகள் வாய்ப்பக்கங்களில்மொய்த்தல், குடியர்க்குங் கொள்ளலாம். பி-ம்:—[1] தடங். [2] உணர்கில. [3] விளைக்குஞ். [4] களியரை. [5] நலன்னமே. (681)

123. விரிந்துறை [1] துறைதொறும் விளக்கம் யாவையும்
[2] எரிந்திழு தஃகல [3] வொளியி ழந்தன
அருந்துறை நிரம்பிய வுயிரி னன்பரைப்
பிரிந்துறை தருங்குலப் பேதை மாரினே.

(இ - ள்.) அரு துறை நிரம்பிய - அரிய கலவித்துறையில் தேர்ந்த, உயிரின் அன்பரை - (தமது) உயிர்போன்ற கொழுநரை, பிரிந்து—, உறைதரும் - வசிக்கிற, குலம் பேதைமாரின் - குலமாதர் போல,—விரிந்து உறை துறை தொறுஉம் - விசாலமாயிருக்கிற (அந்நகரத்துமாளிகைகளின்) இடந்தோறுமுள்ள, விளக்கம் யாவை உம் - விளக்குக்களெல்லாம், எரிந்து இழுது அஃகல - எரிந்து நெய் குறையாதனவாய், ஒளி இழந்தன - (தமது) காந்தியை இழந்து நின்றன; (எ - று.)

இராப்பொழுது முழுவதும் இடைவிடாது நன்ருய் எரிதற்கு வேண்டிய அளவு நெய் நிரம்பச்சொரியப்பட்டுள்ள அந்நகரத்துத் தீபங்கள் யாவும் இடைப்பொழுதிலேயே சூரியன் உதித்ததனுல் நெய் குறையாமலிருக்கையிலேயே ஒளியிழந்தன: அவற்றிற்கு, தமது பிராணநாயகரைப் பிரிந்து வசிக்கிற குலமகளிர் வேட்கை நிறைவேரு மல் ஒளியிழத்தலை உவமைகூறினுர். எரிதற்கு வேண்டிய உபகரண மான நெய் குறைதல் நிகழாதிருக்கையிலும் விளக்குகள் இங்கு ஒளி யிழத்தற்கு வேண்டிய பகல்வந்ததனுல் ஒளியை யிழத்தலாகிய காரி யம் நேர்ந்ததாகக் கூறியது - காரணம் விலக்கிக் காரியம் புலப்படுத் திய விபாவனையணியாம்: "உலகறிகாரணமொழித்தொன்றுரைப் புழி, வேருெரு காரணமியல்பு குறிப்பின், வெளிப்பட வுரைப்பது விபா வனையாகும்" என்ருர், தண்டியாசிரியர்: இதனை, காரணவாராய்ச்சி யணியென்பர் அணியியலுடையார். மூன்ருமடியில் 'அருந்துறை' என்றது, அகப்பொருள் துறைகளை. பி - ம்:—[1] உறை. [2] எரிந்திழுதஃகலர், எரிந்துறகிழற்றலின். [3] ஒளியிழந்தவால். (682)

124. புனைந்தித ழுரிஞ்சுறு பொழுது [1] புல்லியும்
வனைந்தில வைகறை மலரு மாமலர்
நனந்தலை யமளியிற் றுயிலு நங்கைமார்
அனந்தரி னெடுங்கணோ டொத்த வாமரோ.

(இ - ள்.) வைகறை மலரும் மா மலர் - விடியற்காலத்திலே மலரும் இயல்பினவான சிறந்த (தாமரைமுதலிய) பூக்கள்,—புனைந்து இதழ் உரிஞ்சுறு பொழுது - அழகியனவாய் இதழ்கள்விரிதற்குக் காரணமான சூரியோதயகாலம், புல்லிஉம் - நேர்ந்தும், வனைந்தில - (மலர்ந்து) அழகுசெய்யாதனவாய்,—நனம் தலை அமளியில் துயிலும் நங்கைமார் - அகன்ற இடத்தையுடைய படுக்கையிலே தூங்குகிற மகளிரது, அனந்தரின் நெடுங் கணோடு - நித்திரையையுடைய நீண்ட கண்களுடன், ஒத்த - ஒத்திருந்தன; (எ - று.)—ஆம் - அசை; அரோ - ஈற்றசை.

இயல்பில் விடியற்காலத்திலே மலர்தற்குரிய தாமரைமுதலிய மலர்கள் நள்ளிரவிலே செயற்கையாற் பொழுதுபுலர்ந்தமைபற்றி மலர்ந்தனவில்லை; அவற்றுக்கு, அப்பொழுது சூரியோதயமான பின்பும் துயிலுணராத அந்நகரத்து மகளிரது மூடிய கண்களை உவமை கூறினர். பொழுது புல்லியும் வைகறைமலரும் மலர் வனைந்திலஎன்ற இதுவும் - காரணம் தோன்றியும் காரியம் நிகழாததாகிய விபாவனை யணி வகையாம். பி - ம்:—[1]புக்ககம். (683)

125. இச்சையிற் றுயில்வதற் கியாவர் கண்களும்
நிச்சயம் பகலுந்த மிமைக [1]ணீக்கல
பிச்சையு மிடுதுமென் றுணர்வு [2]பேணலா
வச்சையர் நெடுமனை [3]வாயி லானவே.

(இ - ள்.) இச்சையில் துயில்வதற்கு - (தம்தமது) விருப்பத்தின்படி தூங்குதலால், யாவர் கண்கள்உம் - (அந்நகரத்தில்) அனைவோருடைய விழிகளும், பகல்உம் தம் இமைகள் நீக்கல-பகற்பொழுதான பின்பும் தமது இமைகளை விழியாதுநின்றன; நிச்சயம் - இது உண்மையே: (அக்கண்கள்), பிச்சை இடுதும் என்ற உணர்வுஉம் பேணலா - (இரப்பவர்க்குப்) பிச்சையிடுவோமென்ற எண்ணமுங் கொள்ளாத, வச்சையர் - உலோபிகளுடைய, நெடு மனை வாயில் ஆன - பெரிய மாளிகைகளின் தலைவாயில் போன்றன; (எ - று.)

யாசகர்க்குப் பிச்சையிடவிருப்பமில்லாத உலோபிகள் பகலிலும் தம் வீட்டுவாயிற்கதவை யடைத்திருத்தல் இயல்பு: அங்ஙனம் கதவு திறவாத வாயில்கள்போல அப்பொழுது அந்நகரத்தவரனைவரது கண்களும் பகற்பொழுதான பின்பும் இமைதிறவா திருந்தன என்பதாம். உவமையணி. பிச்சையும் என்ற உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது: அது, இழிவுசிறப்புப் பொருளது: மிக்க பொருள் செலவு செய்து பெரிய தானங்கள் செய்வோ மென்று கருதாமையையே யன்றிச் சிறிதுசிறிது பொருட்செலவு செய்து பிச்சையிடுதற்குக் கருதாமையையுமுடைய மகாலோபிகளென்க. துயில்வதற்கு - நான்கனுருபு, மூன்றனுருபின் பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். பகலும், உம்மை-இழிவுசிறப்பு. நெடுமனையென்றதனால், மிக்க செல்வமுடையவராயிருந்தே உலோபஞ்செய்பவ ரென்பது விளங்கும். வாயில் - இல்வாய்: இலக்கணப்போலி. ஆன - உவமவுருபு. பி- ம்:—[1]நீக்கலர். [2]பேணலர் என்று ஒருசாரார் படிப்பர். [3]வாயின்மானவே.

126. [1]நஞ்சுறு பிரிவினை நாளி னீளமோர்
தஞ்சுற விடுவதோர் தயாவு தாங்கலால்
வெஞ்சிறை நீங்கிய வினையி னரென
நெஞ்சுறக் களித்தன நேமிப் புள்ளெலாம்.

(இ - ள்.) —நாளின் நீளம் - பகற்பொழுதின் நீட்சி, ஓர் தஞ்சு உற - ஓர் ஆதாரமாக (நின்று), நஞ்சுஉறு பிரிவினை விடுவது - விடத்தையொத்த (தமது) பிரிவை நீக்குவதாகிய, ஓர் தயாவு-ஒரு தயையை, தாங்கலால்-(தாம்) பெற்றதனால்,—நேமி புள் எலாம்-சக்கரவாகப் பறவைகள்யாவும், வெம் சிறை நீங்கிய வினையினர் என -

கொடிய சிறைச்சாலையினின்று விடுபட்ட குற்றவாளிகள்போல, நெஞ்சு உற களித்தன-மனம் மிகவுங்களிக்கப் பெற்றன; (எ - று.)

குற்றஞ்செய்து சிறைப்பட்டு வருந்துகிறவர்கள் அச்சிறையிலிருத்தற்கு வரையலறயாக நியமிக்கப்பட்ட காலத்தின் இடையிலே தற்செயலாகநேர்ந்த ஏதேனும் ஒரு காரணத்தாற்சிறைவிடுபட்டால் மகிழ்வுறுதல்போல, நாள்தோறுமுள்ள வழக்கப்படிஇராப்பொழுதின் நாழி முப்பதும் ஒன்றையொன்று பிரிந்து வருந்தும் நிலைமையை யடைந்த சக்கரவாகப்பறவைகள் அவ்விரவின் இடையிலே எதிர்பாராமல் நேர்ந்த பகல்வரவால் பிரிவுத்துயரொழிந்து களிப்புற்றன என்றவாறு. ஆணும்பெண்ணுமாகிய சக்கரவாகப் பறவைகள் இரவில் ஒன்றையொன்று பிரிந்துவருந்துதலும், பகலில் ஒன்றோடொன்று கூடிக்குலாவி மகிழ்தலும் இயல்பு. 'நஞ்சுறு பிரிவு' என, பிரிவுத்துன்பத்தின் கொடுமையை விளக்கியபடி. இத்தொடர்க்கு - நைந்துறுகின்றபிரிவு என்று உரைப்பினுமாம். விடுவது-விடுப்பது: தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது. [1]நஞ்சுறு பிரிவினிஞளினீள மோர்ந், தஞ்சுற நடுவதோரயர்வுந் தாங்கலால் என்ற பாடத்துக்கு-நேமிப்புள்ளெலாம், நஞ்சுறு பிரிவினின்று அஞ்சுதலாலேற்பட்ட ஓரயர்வு தாங்குதலோடு நடுவதான நாளின் நீளமோர்ந்து சிறையினீங்கிய வினையிஞரெனக் களித்தன என்க. ( )

127. நாண்மதிக் கல்லது நடுவ ணெய்திய
ஆணையிற் [1]றிறக்கலா வலரிற் பாய்வன
மாண்வினைப் பயன்படா மாந்தர் வாயில்சேர்
பாணரிற் றளர்ந்தன [2]பாடற் றும்பியே.

(இ - ள்.)—நாள் மதிக்கு அல்லது-புதிய [உதித்த] சந்திரனுக்கல்லாமல், நடுவண் எய்திய ஆணையின்-இடையிலே நேர்ந்த (யாவருடைய) கட்டளையிஞலும், திறக்கலா-(இதழ்) விரியாத, அலரில்-மலர்களில், பாய்வன-விரைந்து பாய்வனவான, பாடல் தும்பி-இசைப்பாட்டையுடைய வண்டுகள்,—மாண் வினை பயன் படா-மாட்சிமையுடைய தொழில்களில் தேர்தலில்லாத, மாந்தர்-மனிதர்களுடைய, வாயில்-வீட்டுவாயில்களில், சேர்-(சென்று) சேர்ந்த, பாணரின் - பாணர்கள்போல, தளர்ந்தன - (உள்ளேநுழைய இடம்பெறுது) சோர்ந்தன; (எ - று.)

இரவில் சந்திரனைக் கண்டவளவிலே மலர்ந்து அவனைக் காணுதவளவிலே குவியும் இயல்பினவான ஆம்பல்முதலிய சில மலர்கள் அந்நள்ளிரவில் சந்திரன் விளங்கியபொழுது மலர்ந்துள்ளனவென்று கருதி அவற்றில் தாம் மொய்த்து உட்சென்று தேன் பருகிக் களிக்கலாமென்ற அவாவோடு இன்னிசை பாடிக்கொண்டு விரைந்துவந்த வண்டுகள், அவ்வளவிலே திடீரென்று சந்திரன் நீங்கச் சூரியனுதித்ததஞல் அம்மலர்கள் நன்கு இதழ் மூடியமை பற்றி உட்சென்று பயன்கொள்ள இடம்பெறுவாயின. அவற்றிற்கு, சங்கீதத்தின் இனிமையை யுணர்ந்துகேட்டு மகிழ்ந்து பரிசு அளிக்குந் தன்மைய ரல்லாத மந்தபுத்தியையுடைய அரஸிகஜநங்களின் வீட்டுவாயிலில் ஆவலோடு இன்னிசை பாடிக்கொண்டு

சென்றுசேர்ந்து உள்ளேபுக இடம்பெறாத சங்கீதபாடகர்களை உவமைகூறினர். பாணர்-இசைபாடிப்புகழ்வோர்: பாண் - பாட்டு. 'நடுவணெய்திய வாளையிற்றிறக்கலா' என்பதற்கு - இடையில்நேர்ந்த இராவணனாணையாலும் இதழ் நெகிழாத என்று உரைப்பினும் அமையும். ஊடிய மனைவியரோடு கணவரைச்சேர்ப்பிக்கும் வாயிலரான பாணர் தமதுபாண்வினை மாட்சிப்படாத மாந்தரின் வாயிலிற்றுவளுதல்போல வண்டுகள் தளர்ந்தன என்று பின்னடிகட்கு உரை கூறலாம். பி-ம்:—[1]நீக்கலா. [2]பாடிறும்பியே. (686)

128. அருமணிச் சாளர மதனி னூடுபுக்கு
எரிகதி ரின்றுயி லெழுப்பி [1]யேற்றவும்
மருளொடு தெருளுறு [2]நிலையர் மங்கையர்
தெருளுற மெய்ப்பொரு [3]டெளிந்தி லாரினே.

(இ - ள்.)—எரி கதிர்-வெம்மையாய் விளங்குகிற சூரியகிரணங்கள், அரு மணி சாளரம் அதனினூடு புக்கு - பெறுதற்கரிய இரத்தினங்களாலாகிய பலகணிகளின் வழியாய் உள்ளே நுழைந்து, இன் துயில் எழுப்பி ஏற்றஉம் - இனியதூக்கத்தினின்று எழச்செய்து உணர்த்தவும், மங்கையர்-மகளிர், தெருள் உற மெய்பொருள் தெளிந்திலாரின் - உண்மைப்பொருளைத் தெளிவாக அறியாதவர்கள்போல, மருளொடு தெருள் உறு நிலையர் - மயக்கமும் தெளிவும் ஒருங்கே பொருந்திய நிலைமையை யுடையவரானார்கள்;

சாளரவழியாய் வெயில் உட்சென்றுஉறைத்தலால் பொழுது விடிந்ததென்று தெரிந்தும் தூக்கந்தெளிதற்கு வேண்டிய நாழிகை கழிந்திடாமையால் அந்நகரத்து மகளிர்கள் இடையிலேசற்று விழித்தலும் மீண்டும் சற்றுத் துயிலுதலுமாக நன்கு விழிப்புறாது கிடந்தனர். அவர்களுக்கு, பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதவையங்களாலன்றி உண்மையா லுணர்தலாகிய தத்துவ ஞானத்தின் தேர்ச்சியையடையாதவர்கள் மறுபிறப்பு இருவினைப் பயன் கடவுள் முதலியவற்றின் உண்மையில் தெளிதலும் மயங்குதலுமாய் அடிக்கடி மாறுபடுதலை உவமை கூறினர். பி-ம்:—[1]எய்தவும். [4]நிலைமை. [3]தெரிந்திலாரினே. (687)

129. ஏவலின் வன்மையை யெண்ண [1]றேற்றலர்
நாவல ரியற்றிய [2]நாளி னூமநூல்
[3]காவலி னினிதுணர் கணித மாக்களும்
கூவுறு கோழியுந் துயில்வு கொண்டவே.

(இ - ள்.) ஏவலின் வன்மையை-(இராவணனது) கட்டளையின் வலிமையை, எண்ணல் தேற்றலர் - ஆலோசித்தலால் அறியாதவர்களான, நாவலர்-பண்டிதர்கள், இயற்றிய - செய்த, நாமம் - பிரசித்தி பெற்ற, நாளின் நூல்-நாட்களைப்பற்றிச் சொல்லுகிற சோதிட சாத்திரங்களை, காவலின்-பாதுகாப்போடு [சோர்வின்றிக் கருத்தூன்றுதலோடு], இனிது உணர்-நன்றாக உணர்ந்த, கணிதம் மாக்கள்உம் - கணக்கில் தேர்ந்தவர்களும், (துயில்வு கொண்டனர்) - தூக்கங்

கொண்டிருந்தார்கள்; கூவுறு கோழிஉம் - (வைகறையிற்) கூவுந்தன்மையனவான கோழிகளும், துயில்வு கொண்ட - தூக்கங்கொண்டிருந்தன; (எ - று.)

கிரகங்கள் நட்சத்திரங்கள் இவற்றின் சஞ்சாரம் முதலியவற்றைக்கொண்டு கணக்கிட்டு நாள்களின் காலவரையறைப் பகுதிகளை முந்தியே நன்கு ஆராய்ந்து உணரவல்ல சோதிட வித்துவான்களும், இப்படி ராக்ஷசராசஞன இராவணனது கட்டளையால் இலங்கையில் இரவினிடையிலே திடீரென்று பகல்நேர்தலை முந்தியறியாமையால் தாம் இயற்றிய சோதிட நூல்களில் இதைக்குறித்து யாதும் எழுதிவைத்தாரில்லை; ஆகவே, அந்நூல்களைக் கருத்தோடு முற்றக்கற்றுத் தேர்ந்த அவ்வூர்ச் சோதிடசாஸ்திரிகள் பொழுதுவிடிந்தபின்பும் இரவென்றே உறங்கிக்கிடந்தார்கள்; இயல்பாகப் பொழுதுபுலர்கையிற் கூவுந்தன்மையனவான கோழிகளும் எதிர்பாராதுநேர்ந்த சூரியோதய காலத்தை யறிந்து கூவிற்றில வென்பதாம். நாவலர் - நாவின்தொழிலான செய்யுளியற்றல் சொற்பொழிவு போதனை என்பவற்றில் வல்லவர். கணிதமாக்கள்-காலக்கணக்கர். 'துயில்வுகொண்ட' என்ற முற்று, 'கணிதமாக்கள்' என்ற எழுவாய்க்கு ஏற்றபடி உயர்திணையாக மாற்றிக் கூட்டப்பட்டது. கூவுறு, உறு - துணைவினை. தேற்றலர் = தேறலர்; தன்வினைப் பொருளில் வந்த பிறவினை. முதலடி - நாவலர்க்கு அடைமொழி; கணிதமாக்களுக்கு அடைமொழியாக்கினும் அமையும். பி - ம்:—[1]தேற்றலா. [2]நாழிநாமநூல். [3]காவலர் நுனித்துணர். (688)

## 130.—இராவணன் அப்பொழுது சூரியனைச் சந்திர னென்றல்.

இனையன வுலகினி னிகழு [1]மெல்லையில்
கனைகழ லரக்கனுங் கண்ணி னோக்கினன்
நினைவுறு மனத்தையு நெருப்பிற் றீய்க்குமால்
அனையவத் திங்களே யாகுமா லென்றான்.

(இ - ள்.)—இனையன - இப்படிப்பட்ட தன்மைகள், உலகினில் நிகழும் எல்லையில் - உலகத்தில் நடக்குமளவிலே, கனை கழல் அரக்கன்உம் - ஒலிக்கிற வீரக்கழலையுடைய இராவணனும், கண்ணின் நோக்கினன் - (அச்சூரியனைக்) கண்களாற் பார்த்து,—'(இவன்), நினைவுறு மனத்தைஉம் நெருப்பின் தீய்க்கும் - (தன்னை) நினைக்கிற மனத்தையும் நெருப்புப்போல எரிக்கிறான்; ஆல் - ஆதலால், அனைய அ திங்களே ஆகும் - முன்னே எதிரில்வந்து எரித்த அச்சந்திரனே யாவன்,' என்றான் - என்று (ஏவலாளரை நோக்கிக்) கூறினன்; (எ-று.)

மூன்றாமடியினால், சூரியன் தனதுகிரணத்துக்கு இலக்காகிற உடம்பை மிகச்சுடுதல் நன்கு பெறப்படும். பி - ம்:—[1]எல்லையில். (689)

## 131.—ஏவலர் சிலர் 'இவன் சூரியனே' என்று உணர்த்தல்.

திங்களோ வன்றிது [1]செல்வ செங்கதிர்
பொங்குளைப் பச்சையம் புரவித் [2]தேரதால்
வெங்கதிர் சுடுவதே யன்றி மெய்யுறத்
தங்குதண் கதிர்சுடத் தகாதென் றூர்சிலர்.

(இ - ள்.)—(இராவணன் இங்ஙனம் கூறியபொழுது), சிலர் - (அருகிலிருந்த) சிலபரிசனங்கள், (அவனை நோக்கி), 'செல்வ - எல்லாச்செல்வமு முடையவனே!—இது—, திங்கள் ஓ அன்று - சந்திரனன்று; செம் கதிர் - சிவந்தகிரணங்களையுடைய சூரியனே; பொங்கு உளை - உயரவளர்ந்துவிளங்குகிற பிடரிமயிரையுடைய, பச்சை அம் புரவி - அழகிய பச்சைக்குதிரைகள் பூண்ட, தேரது - தேரையுடையது (பார்); (அன்றியும்), வெம் கதிர் - உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியன், மெய்உற சுடுவது ஏ அன்றி - உடம்பிலுறைக்கும்படி சுடுவதேயல்லாமல், தங்கு தண் கதிர் - நிலைபெற்ற குளிர்ச்சிபொருந்திய கிரணங்களுள்ள சந்திரன், சுட தகாது-சுடத் தக்கதன்று', என்றூர் - என்று (இயற்கையை யெடுத்துச்) சொன்னூர்கள்; (எ - று)—ஆல் - ஈற்றசை.

முந்திவந்த சந்திரன் சுடவில்லை. இப்பொழுது வந்த இவனே சுடுகின்றனன்: ஆதலால், இவன் சூரியனே யென்று ரென்க. பச்சை-பண்புப்பெயர். சூரியன் தேர்க்குதிரை பசுமைநிறமுடையதென்பது நூற்கொள்கை. பி-ம்:—[1]செல்வச். [2]தேர்கொலாம். (690)

வேறு.

## 132.—இராவணன் 'சூரியனையும் கடலொலியையும் விலக்கி இளம்பிறையைக் கொணர்க' என்றல்.

நீலச் சிகரக் கிரியன்னவ னின்ற வெய்யோன்
ஆலத்தினும் வெய்ய னகற்றி யரற்று கின்ற
வேலைக் குரலைத் தவிர்கென்று விலக்கி மேலை
மாலைப் பிறைப்பிள்ளையைக் கூவுதிர் வல்லை யென்றூன்.

(இ-ள்.)—நீலம் சிகரம் கிரி அன்னவன் - சிகரங்களையுடைய நீலமலை போன்ற இராவணன், (ஏவலாளரை நோக்கி), 'நின்ற வெய்யோன் - எதிர் நின்ற இச்சூரியன், ஆலத்தின்உம் வெய்யன்- விஷத்திலுங் கொடியவன்: (ஆதலால், இவனை), அகற்றி - நீக்கி விட்டு, அரற்றுகின்ற வேலை குரலை - ஆரவாரிக்கிற கடலி னொலியையும், தவிர்க என்று விலக்கி - ஒழிகவென்று தடுத்துவிட்டு, மாலை மேலை பிறை பிள்ளையை - மாலைப்பொழுதில் மேற்குத்திக்கில் தோன்றுகின்ற இளம்பிறைச்சந்திரனை, வல்லை கூவுதிர் - விரைவில் அழையுங்கள்,' என்றூன்-என்று கட்டளையிட்டான்; (எ-று.)

பருத்து ஓங்கிய வடிவமும் பெரிய தலைகளும் தோள்களும் கருமை நிறமும் உடைமைபற்றி, 'நீலச்சிகரக்கிரியன்னவன்' என்றூர். கடலொலி காமோத்தீபகப் பொருள்களு ளொன்றுதலால், அதனை

யும் விலக்கச் சொன்னான். 'மாலைப்பிறைப்பிள்ளையைக் கூவுதிர் - மாலைப்பொழுதுடனே இளம்பிறையைக் கூப்பிடுங்க ளென்றவாறு; 116-ஆம் கவியில் "பகலும் பகலோனும் வருக" என்றாற்போலக் கொள்க.

இதுமுதல் முப்பது கவிகள் - மாச்சீர்களும் மாங்கனிச்சீரும் விளச்சீரும் விரவிவந்த நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத் துறைகள். (691)

## 133 —உடனே இளம்பிறை தோன்றுதல்.

சொன்னா னிருதர்க்கிறை யம்மொழி சொல்ல லோடும்
[1]அந்நாளி னிரம்பிய வம்மதி யாண்டொர் [2]வேலை
[3]முந்நாளி னிளம்பிறை யாகி முளைத்த தென்றால்
[4]எந்நாளு மருந்தவ மன்றி யியற்ற லாமோ.

(இ-ள்.) நிருதர்க்கு இறை - அரக்கர்க்கு அரசனான இராவணன், சொன்னான்-(இங்ஙனம்) கூறினான்: அ மொழி சொல்லலோடும்-அவ் வார்த்தையைக் கூறியவளவிலே,—அ நாளில் நிரம்பிய அ மதி - அன்றைய தினத்திலே (சிறிதுபொழுதுக்குமுன் பதினாறுகலைகளும்) நிறைந்துகாணப்பட்ட அந்தப் பூர்ணசந்திரன், ஆண்டு - அப் பொழுது, ஓர் வேலை-ஒருபுறத்திலே, முந்நாளின் இளம் பிறை ஆகி முளைத்தது - மூன்றாம் பிறைச்சந்திரனாகமாறித் தோன்றிற்று: என்றால்—, எ நாள் உம் அரு தவம் அன்றி இயற்றல் ஆம்ஓ - எக் காலத்திலும் அருமையான தவமேயன்றி வேறொன்று செய்யத் தக்கதோ? (எ - று.)

இராவணன் முன்பு பலகாலம் வருந்திச்செய்த அரியபெரிய தவத்தின் பயனாகப் பெற்ற வரத்தின்பலத்தால் அவன்கட்டளைப் படி பூர்ணசந்திரன் உடனே இளம்பிறையாக மாறித்தோன்றிய தென்பது கருத்து. "வேண்டியவேண்டியாங்கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப் படும்" என்ற திருக்குறள், இக்கவியின் நான்கா மடிக்கு மேற்கோளாகத் தக்கது. பௌர்ணமீ திதியிற் போலப் பூர்ணமாய்விளங்கிய சந்திரன் உடனே மூன்றாம்பிறையாக மாறிய அற்புதக் காட்சியின் அருமையைப் பாராட்டிக்கூறியவாறு, இது. 'முந்நாள்' என்றது, அமாவாசைக்கு மூன்றாநாளான துவிதீயையை; அதிலேயே மூன்று கலையுள்ள பிறை காணப்படுவது. 'சொன்னா னிருதர்க்கிறை' என்றது, கீழ்க்கவியிற் கூறியதன் அநுவாதம். வேலை - எல்லை. ஓர்வேலை யென்பதற்கு-மேல் கடலின்மீது என்று உரைத்தலு மொன்று. நான்காமடி-கவிக்கூற்றாய், தவப்பெருமையை உலகத்துக்கு உணர்த்தும். பி - ம்:—[1]அன்னாளின். [2]சீலம். [3]முன்னாளின். [4]என்னாளும். (692)

## 134.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராவணன் பிறையைப் பழித்தலைக் கூறும்.

குடபாலின் முளைத்தது கண்ட குணங்க டையோன்
வடவாவன லன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின்

விடவா ளெயிறன்றெனி னென்னை [1]வெகுண்டு மாலை
அடவா ளுருவிக்கொடு தோன்றிய தாகு மன்றே.

நான்குகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) குட பாலில் முளைத்தது கண்ட - மேற்குத்திக்கில் தோன்றிய அப்பிறைச்சந்திரனைப் பார்த்த, குணங்கள் தீயோன் - தீக்குணங்களையுடையவனான இராவணன், (கூறுவான்:—) (இது), வடவா அனல்-படபா முகாக்கினியாகும்; அன்று எனில் - அங்ஙன மன்றாயின், மண் பிடர் வைத்த பாம்பின் - பூமியைப் பிடரியின் மேற்கொண்டு சுமக்கிற ஆதிசேஷனது, விடம் வாள் எயிறு - விஷ முள்ள கூறிய பல்லாம்; அன்று எனின் - அங்ஙனமுமன்றானால், மாலை - மாலைப்பொழுது, என்னை வெகுண்டு - என்னைக்கோபித்து, அட - கொல்வதற்காக, வாள் உருவிக்கொடு தோன்றியது ஆகும் - உடைவாளை உருவியெடுத்துக்கொண்டு எதிரில்வந்து தோன்றிய தாம்; (எ - று.)

தனக்கு மிக்கவெப்பம் விளைத்து மிகக்கொடிதா யிருத்தல் பற்றி, பிறைச்சந்திரனிடத்து அத்தன்மையை மறுத்து வடவாவனல் முதல் இங்ஙனம் சிலவகையாக விகற்பித்துக் கூறினான்: இது அபநுதியணிவகையிற் சேர்ந்தது. பிறையின் வளைந்தவடிவிற்கு ஒப்பாதற்பொருட்டு, வாள் என்றதற்கு-உடைவாளென்று உரைக்கப் பட்டது. வடவா வனல் - படபாநலம் என்ற வடசொற்றொடரின் திரிபு: கடலிடையில் ஒருபெண்குதிரையின் முகத்தினின்று வெளித் தோன்றுவதா யமைந்துள்ள தீ; இது, கடல்நீரை மழைவெள்ளம் முதலியவற்றால் மிகாதபடி உறிஞ்சுகிறப்பது: பிரளயகாலத்தில் கடலி னின்று வெளியெழுந்து உலகத்தை யெரித்தழிப்பது. படபா-பெண் குதிரை. மாலை வாளுருவிக்கொடு தோன்றியதாகும் - மாலை உருவிக் கொடுதோன்றியவாளாகும். பால்-பக்கம். முளைத்தது-பெயர். குணங் கள் தீயோன்-குணக்கேடன். 'குணங்கள் தீயோன்' என்பதற்கு வினை முற்றும், 'வடவாவனல்' என்பது முதலியவற்றுக்கு எழுவாயும் வருவிக்கப்பட்டன. பி-ம்: —[1]வெகுண்ட. (693)

135. தாதுண் சடிலத்தலை வைத்தது தண்ட ரங்கம்
மோதுங் [1]கடலிற் கிடைமுந்து பிறந்த போதே
ஓதுங் கடுவைத்தன் மிடற்றி னொளித்த தக்கோன்
ஈதுங் கடுவாமென வெண்ணிய வெண்ண மன்றே.

(இ - ள்.) தண் - குளிர்ச்சியான, தரங்கம் மோதும் - அலைகளை வீசுகிற, கடலிற்கு இடை - திருப்பாற்கடலின் நடுவினின்று, முந்து - முன்பு [கடைந்தகாலத்தில்], பிறந்த போதுஏ-தோன்றின பொழுதே, ஓதும் கடுவை தன் மிடற்றின் ஒளித்த தக்கோன் - (யாவராலுங் கொடியதென்று) சொல்லப்படுகிற நஞ்சத்தைத் தன் கண்டத்தில் மறைத்துவைத்த பெரியோனான சிவபிரான், தாது உண் சடிலம் தலை வைத்தது - (சூடிய கொன்றைமலர்களின்) மகரந்தப் பொடிகளைக் கொண்ட சடாபாரத்தையுடைய (தனது) முடியில் (உடனே பிறையை யும்) வைத்துக் கொண்டதற்குக்காரணம், ஈது உம் கடு ஆம் என

எண்ணிய எண்ணம் அன்றுஏ - இதுவும் விஷமாகுமென்று கருதிய கருத்தன்றோ? (எ - று.)

திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் அதனினின்று கொடிய ஹாலாஹலவிஷம் பிறைச்சந்திரன் முதலிய பலபொருள்கள் தோன்றியபொழுது அவ்விஷத்தைத் தேவர்கள் வேண்டுகோளால் தன் கண்டத்தினுள் மறைத்து வைத்துக்கொண்ட சிவபிரான் உடனே பிறைச்சந்திரனையும் தனதுசடாமகுடத்தில் வைத்துக் கொண்ட காரணம், இதுவும் ஒருவகைவிஷமாமென்று அப்பெருமான் எண்ணிய எண்ணமாதல்வேண்டு மென்றான். இதனால், தன்னை மிக வருத்துவதாகிய பிறை விஷத்தன்மையுடையதென்பதைக் காரணங்கொண்டு சாதித்தான். இது தற்காலத்திற் குளிர்ந்ததுபோலத் தோன்றுதலின் இதனையெடுத்துத் தரித்துக்கொள்ளும்படி தேவர்கள் வேண்டிற்றிலராயினும், இது பிறகாலத்தில் விஷம்போலவே கொடியதா மென்று கருதின னென்பது, 'ஓதுங்கடு,' 'ஈதுங்கடுவா மென வெண்ணியவெண்ணம்' என்றவற்றில் விளங்கும்: இது, தற்குறிப்பேற்றவணியின்பாற்படும்; அபநுதி யெனவுமாம். பி - ர்:— [1]கடலிற்பட. (694)

136. உரு[1]மொக்க [2]வுலைந்துயிர் நுங்கிய திங்க ளோடித்
திருமிச் சிறு[3]மின் பிறைதீமை [4]குறைந்த தில்லை
கருமைக் கறைநெஞ்சினி னஞ்சு கலந்த பாம்பின்
பெருமைச் சிறுமைக்கொரு பெற்றி குறைந்த துண்டோ.

(இ - ள்.) உரும் ஒக்க - இடிபோல [மிகக் கொடிதாக], உலைந்து- சஞ்சரித்து [எதிர்வந்து], உயிர் நுங்கிய - (எனது) உயிரை விழுங்கிய, திங்களோடு - பூர்ணசந்திரனைக்காட்டிலும், திருமி சிறு-திருமபி [தனதுபெரிய வடிவம் வேறுபட்டுச்] சிறுத்துவந்த, மின் இ பிறை - மின்னல்போல விளங்குகிற இந்த இளம்பிறையினிடத்தில், தீமை குறைந்ததுஇல்லை - கொடுமை சிறிதுங் குறையவில்லை; கருமை கறை நெஞ்சினின் - கொடிய கோபமுள்ள மனத்தையுடைய, நஞ்சு கலந்த பாம்பின் - விஷப்பாம்பினது, பெருமை - பெரிய உருவத்தைக்காட்டிலும், சிறுமைக்கு - சிறிய உருவத்துக்கு, ஒரு பெற்றி குறைந்தது உண்டுஓ - (கொடுமைக்) குணம் ஒரு சிறிதாயினும் குறைதலுளதோ? [இல்லையன்றோ?] (எ - று.)

பெரும்பாம்பினிடத்தும் பாம்புக்குட்டியினிடத்தும் விஷம் ஒரு தன்மையதாகவே யிருத்தல்போல, முன்புவந்த நிறைமதி யிடத்தும் இப்பொழுது வந்த குறைமதியிடத்தும் என்னைச் சுடுந்தன்மை ஒரே விதமாகவே யுள்ளது என்றவாறு; எடுத்துக்காட்டுவமையணி. வடிவின்பெருமைக்கு ஏற்பக்கடுமைமிகுதலும், அதன் சிறுமைக்குஏற்பக் கடுமை குறைதலுமின்றி இரண்டிலும் கடுமை ஒருபடித்தாயிருத்தற்குத் திருஷ்டாந்தங் காட்டினான். திருமி என்ற இறந்தகால வினையெச்சத்தில், திரும் - பகுதி; திரும்பி யென்பதன் விகாரமென்றலும் உண்டு. சிறு - பண்படி வினைத்தன்மைப்பட்டு, வினைத்தொகையாய் நின்றது. ''கறுப்புஞ்சிவப்பும் வெகுளிப் பொருள'' என்றதை ஆதாரமாகக் கொண்டு, கறை யென்பதற்குக் கோபமென்று உரைக்கப்பட்

டது. மூன்றுமடிக்கு - கரிய அஞ்ஞானவிருளையுடைய் மனம்போலக் கரியவிஷம் உள்ளே பொருந்தப்பெற்ற பாம்புஎன்று உரைகொள்ளினும் அமையும்: அப்பொழுது, நெஞ்சினின் என்பதில், இன்-சாரியையும், பின்புள்ள இன் - ஒப்புப்பொருளில்வந்த ஐந்தனுருபுமாம். நெஞ்சினில் என்றும் எடுக்கலாம். பி - ம்:—[1]ஒத்த. [2]வலத்துயிர். [3]மென். [4]குறைத்தது. (695)

## 137.—இராவணன் பிறையை விலக்கி இருளைத் தருக என்றல்.

கன்னக் கனியும்மிரு டன்னையுங் காண்டு மன்றே
முன்னைக் கதிர்நன்றித கற்றுதிர் [1]முன்பு சான்ற
என்னைச் [2]சுடுமென்னினிவ் [3]வேழுல கத்தும் வாழ்வோர்
பின்னைச் சில [4]ருய்வரென் றங்கொரு பேச்சு முண்டோ.

(இ - ள்.) கன்னக்கனியும் இருள் தன்னைஉம் - மிகவும் முதிர்ந்துள்ள இருளின் தன்மையையும், (எப்படிப்பட்டதென்று), காண்டும் - பார்ப்போம்; முன்னை கதிர் நன்று - (இப்பிறையினும்) முன்பு வந்த சூரியனேகுளிர்ந்தது; இது முன்பு அகற்றுதிர் - இப்பிறையை விரைவாக நீக்கிவிடுங்கள்; சான்ற என்னை சுடும் என்னின் - (பலபராக்கிரமங்களில்) மேம்பட்ட என்னையே (இது) வருத்துவதென்றால், பின்னை - மற்று, இ ஏழ் உலகத்துஉம் வாழ்வோர் சிலர் உய்வர் என்று ஒரு பேச்சுஉம்உண்டுஒ - இந்த ஏழுலகங்களிலும் வாழ்பவர்களிற் சிலர் (இதற்குத்) தப்பிப்பிழைப்பார்களென்று ஒரு வார்த்தையும் உள்ளதாமோ? [ஆகாதென்றபடி]; (எ-று.)—என்றான் இராவணனென்று முடிக்க.

பலபராக்கிரமங்களில்மிக்க என்னையே இப்பிறை சுடுமாயின் ஏழுலகத்து வாழ்வாரை இது சுட்டொழித்திடுமென்பதற்கு மாற்றுப் பேச்சு உண்டோ? ஆகவே, இதனை அகற்றுமி னென்றனன், இராவணனென்க. இச் செய்யுள்-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. 'இருள் தன்னையுங் காண்டும்' என்றதனால், இருளை வருவிக்கும்படி கட்டளை கூறியவாறு. கன்னக்கனியும் என்பதை, 'சின்னஞ்சிறுத்த, பென்னம்பெருத்த, கன்னங்கறுத்த, செக்கச்சிவந்த, பண்ணப்பணைத்த' என்பனபோலக் கொள்க; கனிதலின் மிகுதியைக் காட்டும். கனியும்மிருள், மகரவொற்று - விரித்தல். பி - ம்:—[1]மொய்ம்பு. [2]சுடுமேயெனில். [3]ஏழுலகத்தில். [4]வாழ்வர். (696)

## 138.—இதுவும், அடுத்த கவியும் - அந்தகாரவருணனை.

ஆண்டப் பிறைநீங்கலு மெய்திய தந்த காரம்
தீண்டற் [1]கெளிதாய்ப் பல [2]தேய்ப்பன [3]தேய்க்க லாகி
வேண்டிற் [4]கரபத்திரத் தீர்த்து விழுத்த லாகிக்
காண்டற் [5]கினிதாய்ப் பலகந்து திரட்ட லாகி.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது (அல்லது இராவணன் கட்டளையிட்டபடி), அ பிறை - அந்த இளஞ்சந்திரன், நீங்கலும் - நீங்கியவுடனே [அத்தமித்தவுடன்], (பிறை மறையும்வரை தான் மறைந்திருந்த), அந்தகாரம் - இருளானது,-தீண்டற்குஎளிது ஆய்-

தொட்டுணரக் கூடியதாய், பல தேய்ப்பன தேய்க்கல் ஆகி-தேய்க்கப்படுதற்குரிய பல பொருள்களையும் (தன்னிடத்திலே) தேய்த்துக் கொள்ளத்தக்கதாய் [கற்போல வலிதாய்], வேண்டில் கரபத்திரத்து ஈர்த்து விழுத்தல் ஆகி - விருப்பமுண்டானால் (மரம்போல) வாளினால் அறுத்துத் தள்ளுதற்குரியதாய், காண்டற்கு இனிது ஆய்-பார்த்தற்கு இனியதாய், பல கந்துதிரட்டல் ஆகி-பல தூண்களாகத் திரட்டிவைக்கும்படியானதாய், எய்தியது-வந்து சேர்ந்தது;

மிகுதியாகவந்த இருள் கெட்டியான பொருள்போல மிகத் திண்ணியதாயிருந்த தென்பதை, பின் மூன்று அடிகளில் சிலவகையாக விளக்கிக் காட்டினார். அந்தகாரம், கரபத்ரம் - வடசொற்கள். கந்து-ஸ்கந்தம். திரட்டல்-கடைச்சல்பிடித்தல், திரண்டவடிவமாக அமைத்தல். பி-ம்:—[1] அரிதாய்ப். [2] தேய்ப்பினும். [3] தேய்க்கலாகா, தேய்தலாகி. [4] கரபத்திரபத்தியினீர்ந்து வீழ்த்துக். [5] அருஞ்சேனுயர். (697)

189. முருடீர்ந் துருட்டற் கெளி[1]தென்பதென் முற்றுமுற்றிப்
பொரு[2]ளீங்கில் கேள்விச் சுடர்புக்கு வழங்க லின்றிக்
குருடீங்கி தென்னக் குறிக்[3]கொண்டுகண் ணோட்டங் குன்றி
அருடீர்ந்த நெஞ்சிற் கரிதென்பதவ் வந்த காரம்.

(இ-ள்.) (அவ்விருள்), முருடு ஈர்ந்து-மரக்கட்டையை அறுப்பது போல அறுத்து, உருட்டற்கு எளிது என்பது என் - தூண்போலத் திரட்டுவதற்கு எளிதாயிருந்த தென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுவது என்னே? [அத்தன்மை சொல்லாமலே விளங்கும் என்றபடி]: (அன்றியும்), பொருள் முற்றுஉம் முற்றி - பொருள்வளம் மிகவும் முதிர்ந்து, தீங்கு இல் கேள்வி சுடர் - குற்றமில்லாத நூற்கேள்வியாகிய ஒளி, புக்கு-உட்புகுந்து,வழங்கல்-விளக்குதலை, இன்றி-பெறுதலில்லாது, ஈங்கு-இவ்வுலகத்தில், (குருடென்று கூறப்படுவது குருடு அன்று),இது குருடு என்ன - இந்த மனக்குருடே குருடாமென்று சொல்லப்பட, குறிக்கொண்டு - இலக்காகி, கண்ணோட்டம் குன்றி - தாட்சிணிய மென்ற குணம் (இருக்கவேண்டிய நிலையிற்)குறைவுபட்டு, அருள் தீர்ந்த-அருள் நீங்கிய, நெஞ்சின் - மனத்தைக்காட்டிலும், அ அந்தகாரம்-அவ்விருள், கரிது என்பது-கரியதென்று சொல்லப்படுவதாம்; (எ-று.)

கீழ்க்கவியில் "தீண்டற்கெளிதாய்" என்பது முதல் மூன்று அடிகளால், பிளந்து தள்ளுதற்கும் தூண்போலத் திரட்டுதற்கும் கூடியதாயிருந்தது, அத்திண்ணிய இருளென்றார். அவ்வாறு அந்தகாரத்தின் திண்ணிய நிலையை மாத்திரம் கூறினால் போதாதென்று முருடீர்ந்துருட்டற்கெளிதென்பதென் என்று முதல்வாக்கியத்திற் கூறி, அந்த அந்தகாரத்தின் கரிய தன்மையை மற்றையடிகளால் விளக்குபவராகி, குற்றமற்ற நல்ல நூற்கேள்வி சிறிதும் உட்புகாமையால் ஞானவொளிபெறாமல் அஞ்ஞானவிருளே நிறைந்து அதனால் அகக்குருடென்று சொல்லப்பட்டு, அருள் முதலிய நற்குணமில்லாமல், தன்னோடு பயின்றாரை அன்போடு காணும் விருப்பத்தையும் உடையதாகாது, இக்கொடுமையிற் பல காலம் பயின்று வைரம்

பற்றிய கீழ்மக்கள் மனத்தினும் கரியதாயிருந்தது அவ்விருள் எனப் பிந்தினவாக்கியத்திற்கூறினர். 'அருள் தீர்ந்த நெஞ்சிற்கரிதென்ப தவ்வந்தகாரம்' என்றவிடத்து, "புறங்குன்றி கண்டனைய ரேனு மகங் குன்றி, மூக்கிற் கரியா ருடைத்து" என்ற திருக்குறளும், "யாழின் மொழிமங்கை பங்கன் சிற்றம்பல மாதரியாக், கூழின்மலி மனம் போன்றிருளாநின்ற கோகிலமே" என்ற திருக்கோவையாரும் நினைக்கத்தக்கன. கீழ்மக்கள் மனத்திற்குக் கருமை - அறியாமை அல்லது தீயசிந்தனையாகிய களங்கத்தையுடைமையென்றும், இருளுக்குக் கருமை-கறுத்த நிறமென்றுங் கொள்க. இந்த அந்தகார வருணனை, ஆங்கிலத்தில் "Palpable Darkness" என்று ஜான் மில்டன் மகாகவி கூறியதனினும் மிகவும் பாராட்டுமாறு அமைந் துள்ளதென்ப.

குற்றமற்ற நல்ல நூற்கேள்வி ஞானவொளியைப் பரவச் செய்வ தாதலால், அது, சுடரெனப்பட்டது. தாட்சிணியம், பிறர் மேற்கண் சென்றவிடத்து நிகழ்வ தாதலால், கண்ணோட்ட மென்னும் பெயர தாயிற்று. 'முற்று முற்றி' முதலாக உபமானத்துக்குக் கொடுத்த அடைமொழிகளை உபமேயத்துக்கும் கொண்டால், அவ்விருள் எங்கும் நிறைந்து மிகத்திண்ணிதாயிருத்தலும், விளக்கொளி முதலி யன கொண்டு விலக்கப்படாமையும், குருட்டுத் தன்மையையுடைமை யும், கண்பார்வை செல்லுதற்கு இடங் கொடாமையும், கொடுமையை யுடைமையும் ஆகிய அதன்தன்மை பெறப்படும். என்பது - என்னட் படுவது; செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. 'நெஞ்சிற் கரிது' என்பதற்கு - அப்படிப்பட்ட நெஞ்சைப்போலக் கரியது என் பாருமுளர். அந்தகாரத்தைவருணிக்கும் இக்கவிகளில் "அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க், கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்— உள்ளம், புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள், இதையமே போன்ற திரா" என்ற புகழேந்தியார் வாக்கு நினைவு கூர்தற்கு உரியது. இனி, முதலடிக்கு - முரட்டுத்தன்மை பிளந்து தள்ளி யொழித்தற்கு எளியதோ? [அன்று]: அப்படிப்பட்ட முரட்டுத் தன்மையில் மிகவும் முதிர்ந்து என்று உரைத்து, அவ்வடி முழுவதையும் நெஞ்சிற்கு அடைமொழியாக்கி யுரைப்பினும் ஒரு வாறு பொருந்தும். ஈங்கு - அசையுமாம். பி - ம்:—[1] என்பது. [2] தீர்ந்த ஞானச். [3] கொண்ட. (698)

## 140.— இதுவும் அடுத்த கவியும் - இராவணன் இருளைப் பழித்தல்.

விள்ளாது செறிந்திடை மேலுற [1]வீங்கி யெங்கும்
[2]நள்ளா விருள் வந்தகன் ஞாலம் விழுங்க லோடும்
[3]எள்ளா துலகியாவையும் யாவரும் [4]வீயு [5]மென்பது
உள்ளா துமிழ்ந்தான் விடமுண்ட வொருத்த னென்றான்.

(இ - ள்.) விள்ளாது - (தன்னிற்) பிரிவுபடாமல், இடை செறிந்து - பூமியினிடத்திலேபொருந்தி, மேல்உற வீங்கி - ஆகாயத் தையளாவ வளர்ந்து, எங்கும் நள்ளா - எவ்விடத்திலும் பற்றுக் கொள்ளாத, இருள்—, வந்து—, அகல் ஞாலம் - பரந்த உலக

முழுவதையும், விழுங்கலேர்டும் - விழுங்கியவளவிலே,—(இராவணன்),—'விடம் உண்ட ஒருத்தன் - விஷத்தை முன்பு உட்கொண்ட சிவபிரான், எள்ளாது - இகழாமலும், உலகு யாவைஉம் யாவர்உம் வீயும் என்பது உள்ளாது - (இதனால்) உலகம் எல்லா வஃறிணைப் பொருள்களும் எல்லா வுயர்திணைப்பொருள்களும் அழியப்பெறும் என்பதை நினையாமலும், உமிழ்ந்தான்-(அவ்விஷத்தை)வெளி யுமிழ்ந்திட்டனன்', என்றான்-என்று கூறினான்; (எ - று.)

முன்னிரண்டடி - கவிக்கூற்று; பின்னிரண்டடி - இராவணன் வார்த்தை: 'சிவபிரான் தனது ஆற்றலால் தான் உண்ட விஷத்தின் கொடுமையைப் பாராட்டாமலும், அதனை நாம் வெளிப்படுத்தினால் அதனால் உலகத்து அனைத்துப் பொருளும் அழியுமென்று எண்ணாமலும், அந்தோ! அதனை வெளியுமிழ்ந்தானே: அதுவே இங்ஙனம் மிகக்கொடியதாய் எங்கும் பரவியது போலும்' என்றானென்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. 'எங்கும் நள்ளா' என்பதன் கருத்து - யாதோரிடத்தையும் விட்டிடாத என்பதாம். எள்ளாது-இவ்விஷத்தினது மிக்க கொடுந்தன்மையை மனங்கொள்ளாமல் என்றபடி. [2]நள்ளாதிருளந்தகன் என்ற பாடத்திற்கு - கரிய இருள் உலக முழுவதையும் விழுங்கியதாக வருணித்தாரென்க; உருவகவணி. இடை - பூமி. பி-ம்:—[1]ஓங்கி. [3]எள்ளா. [4]வீவது. [5]என்ப. (699)

141. வேலைத் தலைவந் தொருவன்வலி யால்வி ழுங்கும்
ஆலத்தி னடங்குவ தன்றி தறிந்து ணர்ந்தேன்
ஞாலத்தொடு விண்முதல் யாவையு நாவி னக்குங்
[1]காலக் கனல்கார் விடமுண்டு கறுத்த தன்றே.

இது முதல் ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) இது—, வேலைத்தலை - (பாற்) கடலினிடத்தினின்று, வந்து-தோன்றி, ஒருவன் வலியால் விழுங்கும்- (சிவபிரானாகிய) ஒருவனால் (தனது) வலிமைகொண்டு விழுங்கப்பட்ட, ஆலத்தின் - விஷத்திலே, அடங்குவது அன்று-சேர்ந்ததன்று; அறிந்து உணர்ந்தேன்- நன்றாய் அறிந்துகொண்டேன்; (மற்று இது யாதென்றால்),—ஞாலத்தொடு-பூமியும், விண்-ஆகாயமும், முதல்-முதலிய, யாவைஉம்-எல்லா இடங்களையும், நாவின் நக்கும் - (தனது) நாவினால் நக்கியெரிக்குந் தன்மையுள்ள, காலம் கனல்-ஊழிக்காலத்துத்தீ, கார் விடம் உண்டு கறுத்தது - கரியவிஷத்தை யுண்டு அதனாற் கருநிறமடைந்ததாகும்; (எ-று.)—அன்றே-ஈற்றசை; தேற்றமுமாம்.

இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. இருள் மிகப்பெரிய உலகங்களை யெல்லாம் உட்கொண்டு பரவி கொடுமை விளைத்தல்பற்றி, அதனை, அவ்வுலகங்களுளொன்றான பூமியின் ஒருசாருள்ள பாற்கடலினின்று ஒருகால் தோன்றி உடனே சிவபிரானால் எளிதில் விழுங்கப்பட்ட விஷத்தின்பாற் படும் அளவினதன்று என்றான். அதன் மிக்க கொடுமையை விளக்குதற்குக் காலாக்கினியென்று கூறுபவனாய், அக்கினி செந்நிறமுடையதன்றோ என்று எழும் வினாவுக்கு இடங் கொடாமைப்பொருட்டு, 'கார்விட முண்டு கறுத்

தது' என்முன். கனலுக்கு நாவென்பது, சுவாலையையாம்; அக்கினிக்கு உள்ள ஏழுசுவாலைகள், 'எழு நா' எனப்படும். நாவில் நக்குதல் - சுவாலையாற் பரிசித்தல். அறிந்து உணர்ந்தேன் - ஒரு பொருட்பன்மொழி: ஊன்றிப் பார்த்துத் தெரிந்துகொண்டேனென்று பொருள் கூறலுமாம். பி-ம்:—[1]காலக்கடல். (700)

## 142.—இது முதல் ஐந்து கவிகள்-இராவணன் சீதையை உருவெளித் தோற்றத்திலே கண்டு கூறும் வார்த்தை.

> அம்பும் மனலுந் [1]நுழையாக் கன[2]வந்த காரத்து
> உம்பர் மழைகொண் டயலொப் பரிதாய துப்பின்
> கொம்பர் குரும்பைக் குலங்கொண்டது திங்க டாங்கி
> வெம்புந் தமியேன்முன் விளக்கெனத் தோன்று மன்றே.

(இ - ள்.) அம்புஉம் அனல்உம் நுழையா-பாணமும் அக்கினியும் உள்ளே சென்று பிளந்தொழிக்கமுடியாத, கனம் அந்தகாரத்து - திணிந்த இவ்விருளில், வெம்பும் தமியேன முன் - (காமத்தால்) தவிக்கிற துணையற்ற எனது எதிரிலே, அயல் ஒப்பு அரிது ஆய துப்பின் கொம்பர் - (தனக்குத்தானே ஒப்பாதலன்றி) வேறு ஒப்பு இல்லாததாகிய ஒரு பவழக்கொம்பானது, உம்பர் மழை கொண்டு - (தன்) மீது காளமேகத்தைத் தாங்கி, குரும்பை குலம் கொண்டது - தெங்கினிளங்காயின் இரட்டையைக் கொண்டதாய், திங்கள் தாங்கி- ஒரு சந்திரனையுந் தரித்துக்கொண்டு, விளக்கு என தோன்றும் - விளக்குப்போல விளங்குகின்றது; (எ-று.)—அன்றே-ஈற்றசை.

மனத்தில் இடைவிடாது நினைக்கப்பட்ட பொருள் அந்தப் பாவனையின் மிகுதியால் கண்ணுக்கு எதிரிற் காணப்பட்டாற் போலத் தோன்றுதல், இயல்பு. சூர்ப்பணகையால் வருணித்துச் சொல்லப்பட்ட சீதையின் வடிவத்தை இடைவிடாது சிந்தித்து நின்ற இராவணன் அவ்வடிவத்தைக் கட்புலனுகக்கண்டு அதன் தன்மையை உபமானமுகத்தாற் கூறுகிறான். பவழக்கொம்பென்றது-சீதையின் சிவந்த நிறமுள்ள மேனியையும், காளமேக மென்றது - கரியகூந்தலையும், குரும்பைக்குலமென்றது - கொங்கைகளையும், திங்களென்றது - முகமண்டலத்தையும், விளக்கென்றது - அவ்வுருவத்தின் திவ்வியகாந்தியையு மெனக் காண்க. உபமானப் பொருளால் உபமேயப்பொருளைப் பெறவைத்ததனால், இது உருவகவுயர்வுநவிற்சியணியாம். மழை - உருவுவமை. துப்பின்கொம்பர் - உருவுவமையோடு, வடிவுவமை. குரும்பைக்குலம் - வடிவுவமை. திங்கள் - மெய்யுவமையோடு பயனுவமை. விளக்கு - வினையுவமை. அயல் - அருகிலே, தோன்றும் என்றலும் ஒன்று. கொம்பு - கொடி. அம்பு-நீர் எனினுமாம். சிலபிரதிகளில் இச்செய்யுள் "மருளூடு" என்ற அடுத்த செய்யுளின் பின் உள்ளது. பி-ம்:—[1]நுழையாக்கையின். [2]அந்தகாரந்தும்பு மழை. (701)

**143.** [1]மருளூடு வந்த மயக்கோமதி மற்று முண்டோ
[2]தெருளாதி தென்னோ திணிமையிழைத் தாலு மொவ்வா
[3]இருளூ டிருகுண்டலங்[4]கொண்டு மிருண்ட நீலச்
சுருளோடும் வந்தோர் சுடர்மாமதி தோன்று மன்றே.

(இ - ள்.) மருளொடு வந்த மயக்குஓ - (காம) மோகத்தால் (எனக்கு) நேர்ந்த மயக்கந்தானோ? (அன்றி), மதி மற்றுஉம் உண்டு ஓ - (எனது) அறிவுதான் (பிறிது எக்காரணத்தாலேனும்) வேறு யிற்றோ? தெருளாதுஇது என் ஓ - ஐயமறத்தெரிந்துகொள்ளுதற்கு அரிதாகிய இத்தோற்றம் யாதோ? திணிமை இழைத்தால்உம் ஒவ்வா - செறிந்த மையைக் குழைத்தாலும் ஒப்பாகமாட்டாத, இருளொடு - இப்பேரிருளிலே, ஓர் சுடர் மாமதி - ஒளிநிறைந்த பெரிய ஒரு பூர்ணசந்திரன், இருகுண்டலம் கொண்டுஉம் - இரண்டுகுண்டலங்களை அணிந்துகொண்டும், இருண்ட நீலம் சுருளோடுஉம் - மிகக் கறுத்த கூந்தலோடும், வந்து தோன்றும் - (என்னெதிரில்) வந்து காணப்படுகின்றது; (எ-று.)—அன்றே - ஈற்றசை.

அவ்வாறு உருவெளித்தோற்றமாகப் பெண்ணுருவைக் கண்ட இராவணன் 'காமமோகத்தால் வந்தமயக்கமோ? என்மதியே வேறுபட்டதோ? இறுகிய மையைவிட இருண்ட இவ்விருளில் இருகுண்டலமும் இருண்ட நீலச்சுருளும் பெற்றுச் சுடர்மாமதி தோன்றுகின்றதே! இதுஎன்?' என்றுஎன்னெனக. மதிமற்றுமுண்டோ என்பதற்கு-வேறு ஒருவகைச்சந்திரன்தான் உலகத்திலுள்ளதோ என்று உரைப்பினும் அமையும். சுருள் - பெண்மயிர்; நுனிசுருண்டுள்ளதெனக் காரணப்பொருள்படும். 'சுடர்மாமதி' என்றது - சீதை முகமண்டலத்தை. பி-ம்:—[1] மருளோடு. [2] தெருளாம், தெருளோம். [3] இருளோடு. [4] கொண்ட. (702)

144. புடைகொண்டெழு கொங்கையு மல்குலும் புல்கி நிற்கும்
இடைகண்டில மல்ல தெல்லா வுருவுந் தெரிந்தாம்
விடநுங்கிய கண்ணுடை யாரிவர் [1] மெல்ல மெல்ல
மடமங்கைய ராயென் மனத்தவ ராயி னரே.

(இ - ள்.) புடை கொண்டு எழு - பக்கங்களில் பரவிப் பூரித்து வளர்ந்தெழுகிற, கொங்கைஉம் - தனங்களையும், அல்குல்உம் - அல்குலையும், புல்கி - சார்ந்து, நிற்கும் - (இடையில்) நிற்கிற, இடை - இடையென்னும் உறுப்பை, கண்டிலம் அல்லது - (யாம்) பார்த்திலோமே யல்லாமல், எல்லா உருஉம் தெரிந்தாம் - மற்றையவயவங்களெல்லாவற்றையும் பார்த்தறிந்தோம்; விடம்நுங்கிய கண் உடையார் இவர் - விஷத்தை யுட்கொண்டகண்களையுடையவரான இவர், மெல்ல மெல்ல—, மட மங்கையர் ஆய் - ஓர் இளமாதராய், என் மனத்தவர் ஆயினர் - என் மனத்திலுள்ளவரானார்; (எ - று.)

பருத்த தனங்களையும் அல்குலையுங் கொண்டு நிற்கிற இடையென்னும் உறுப்பைமாத்திரங் கண்டிலோமே யன்றி, மற்றை யுருவம் முழுவதையுங் கண்டோமென்று முதலிரண்டடிகளால் உரைத்தவாறும்; இவ்வுரைக்கு, இடைகாணாமை - கட்புலனாகாத அதன் நுண்மையா லென்க. 'கொங்கையு மல்குலும் புல்கிநிற்கும்' என்ற அடைமொழி மேலும் கீழுமுள்ள அவயவங்களைக்கொண்டு நடுவுறுப்பாகிய இடைஉண்டென்று ஊகிக்கப்படுமென்ற கருத்

தைப் புலப்படுத்தும். இனி, காணப்பட்டவுருவம் சேலை யுடுத்திருந்தமை பற்றி, 'புடைகொண்டெழுகொங்கையு மல்குலும்புல்கிநிற்குமிடைகண்டில மல்லது எல்லாவுருவுந்தெரிந்தாம்' என்றானெனினுமாம்: சிற்சில உறுப்புக்களே முன்பு வெளித்தோன்றினமையைக் கீழ்இரண்டுகவிகளிற்கூறி, முழுவடிவமுந்தோன்றியதை இங்குக் கூறுகின்றானாதலின், 'மெல்ல மெல்ல மடமங்கையராய்' என்றான்: 'என்மனத்தவராயினரே' என்றது—காணப்பட்ட வடிவம் என் மனத்தில் ஊன்றிப்பதிந்திட்ட தென்றபொருளோடு சூர்ப்பணகை சொன்ன அடையாளங்களின்படி யான் மனத்திற் பாவித்தவாறேயுள்ளதென்ற கருத்தையுங்கொள்ளும். அப்பெண் வடிவினிடத்தில் தான் கொண்ட மிக்க ஆதரத்தால், 'கண்ணுடையாரிவர் மங்கையராய் மனத்தவராயினர்,' என உயர்வுப் பன்மையாற் கூறினான். 'விடநுங்கிய கண்ணுடையார்' என்றதனால்-கண்கள் கறுத்த விழியை யுடைமையையும், தன்னை நோக்கினழகாற் காமவேதனைக்கு உள்ளாக்கியமையையுங் குறித்தவாறு. 'விடநுங்கிய கண்' என்பதற்கு - விஷத்தையொத்த கண்ணென்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]மெள்ள மெள்ள. (703)

**145.** பண்டே யுலகேழினு முள்ள படைக்க ணாரைக்
கண்டே [1]னிவர்[2]போல்வதொர் பெண்ணுருக் கண்டி லேனால்
உண்டேயெனின் வேறினி யெங்கை [3]யுணர்த்தி நின்ற
வண்டேறு கோதை [4]மடவாரிவ ராகு மன்றே.

(இ - ள்.) பண்டுஏ - முன்னமே [பலகாலமாக], உலகுஏழின்உம் உள்ள படைக்கணாரை - ஏழுலகங்களிலுமுள்ள மகளிரனைவரையும், கண்டேன் - பார்த்துள்ளேன்: (அவர்களுள்ளே), இவர் போல்வது ஓர் பெண் உரு கண்டிலேன் - இவரதுவடிவம்போன்றதொரு பெண் வடிவத்தைப் பார்த்தேனில்லை; இனி வேறு உண்டுஏ எனின் - (உலகத்துப் பெண்வடிவனைத்தினும்) வேறுபட்டதொரு பெண்வடிவம் இதோ உள்ளதே யென்றால், எங்கை உணர்த்திநின்ற - என் தங்கையான சூர்ப்பணகை (எனக்குத்) தெரிவித்த, வண்டு ஏறு கோதை மடவார் - வண்டுகள்மொய்த்த கூந்தலையுடைய இளமங்கையர், இவர் - இவரே; (எ - று.)—ஆல், ஆகும் - அசை; அன்றே-தேற்றம்.

இப்போது காணப்படும் இந்தப்பெண்ணுருவைப்போல யான் சஞ்சாரஞ்செய்த ஏழுலகங்களிலும் எந்தப் பெண்ணுருவையும் இதுவரையும் கண்டிலேன்; ஆதலால், இந்தவடிவம் என் தங்கை தெரிவித்த மங்கைவடிவமே என்று இராவணன் கருதினானென்க. படைக்கணார்-வேல் வாள் அம்பு என்ற ஆயுதங்கள்போலக் கூரிய கண்களையுடையவர். 'வண்டேறு' என்ற அடைமொழி, கூந்தலின் மணத்தையுணர்த்தும். எங்குந்தடையின்றிச் சஞ்சரிக்கும் ஆற்றலுடையவனாதலின், 'உலகேழினுமுள்ள படைக்கணாரைக் கண்டேன்' என்றான். பி - ம்:—[1]இது. [2]போலொரு. [3]உணர்த்துகின்ற. [4]மடவாளிவளாகு மன்றே.
(704)

## 146.—இராவணன் ஏவலாளரை நோக்கி 'சூர்ப்பணகையை யழைக்க' எனல்.

பூண்டிப் பிணியா னுறுகின்றது தான்[1]பொ ருதாள்
தேண்டிக்கொடு வந்தனள் செய்வதொர் மாறு முண்டோ
காண்டற் கினியாளுரு கண்டவட் கேட்கு மாற்றால்
ஈண்டிப் பொழுதே விரைந்தெங்கையைக் கூவு கென்றான்.

(இ - ள்.) (என்று இங்ஙன்கூறிய இராவணன்),—'யான் - நான், இ பிணி - இப்படிப்பட்ட காமநோயை, பூண்டு - கொண்டு, உறுகின்றது - அடைகிற துன்பத்தைக்குறித்து, (அச்சீதை), தான் பொருதாள் - (தான்) தாங்காதவளாய், தேண்டி கொடு வந்தனள் - (இந்நோயைத் தணித்தற்கு என்னைத்) தேடிக்கொண்டு (இங்கு) வந்திட்டாள்; செய்வது ஒர் மாறுஉம் உண்டு ஓ - (இங்ஙனம் அவள் செய்த உபகாரத்துக்கு ஈடாகச்) செய்யத்தக்கதொரு பிரதியுபகாரமும் உள்ளதோ? [எதுவுமில்லையென்றபடி]; காண்டற்கு இனியாள் - பார்த்தற்கு இனியவளான அச்சீதையினது, உரு - உருவத்தை, கண்டவள் - கட்புலனாகப்பார்த்த சூர்ப்பணகையை, கேட்கும் ஆற்றால் - (இவ்வுருவம் அச்சீதைதானோ என்று யான்) கேட்டு ஐயந் தீரும்படி, இப்பொழுதுஏ விரைந்து எங்கையை ஈண்டு கூவுக - இப்பொழுதே விரைவாக என் தங்கையை [சூர்ப்பணகையை] இங்கே கூப்பிடுங்கள்,' என்றான் - என்று (ஏவலாளரை நோக்கி இராவணன்) கட்டளையிட்டான்; (எ - று.)

உருவெளித்தோற்றத்துச் சீதை காணப்படுவதைத் தான் காமப்பிணியால் வருந்துதலை யாற்றாது அவள் வந்திட்டதாகக் கருதிக் கூறுகின்றான் இராவணனென்க. அவ்வடிவத்தைச் சீதையென்றே ஒருசார் துணிந்தவன், நன்கு துணிதற் பொருட்டு, பிரதியக்ஷமாகக்கண்ட சூர்ப்பணகையை வருவித்து அவளால் உண்மையுணரத்தொடங்குகிறான். கண்டவட்கேட்கும் - இரண்டாம் வேற்றுமைத்தொகையில் உயர்திணைப் பெயரீற்றுமெய் வலிவரத் திரிந்தது. பி-ம்:—[1]பொருதான். (705)

## 147.—சூர்ப்பணகை இராவணனிடத்து வருதல்.

என்றா னெனலுங் கடிதேகினர் கூவு மெல்லை
வன்றா ணிருதக்குலம் வேரற மாய்த்தல் [1]செய்வாள்
ஒன்றாத காமக் கனலுட்டெற லோடு நாசி
பொன்றாழ் குழை[2]தன்னொடும் போக்கினள் போய்ப்பு குந்தாள்.

(இ - ள்.) என்றான்எனலும் - இங்ஙனம் (இராவணன்) கட்டளையிட்டானென்றவுடனே, (ஏவலாளர்கள்), கடிது ஏகினர் கூவும் எல்லை - விரைவாகச்சென்று கூப்பிடுமளவிலே,—வல் தாள் நிருதர் குலம் வேர் அற மாய்த்தல் செய்வாள் - வலியமுயற்சியையுடைய அரக்கர்கள் குலங்களை வேரோடு அறும்படி அழிக்க இருப்பவளும், நாசி பொன் தாழ் குழை தன்னொடுஉம் போக்கினள் - மூக்கையும் பொன்னினாலாகிய தொங்குகிற குழையென்னும் அணியையுடைய காதையும் இழந்தவளுமான சூர்ப்பணகை, ஒன்றாத காமம்

கனல் உள் தெறலோடு - பொருந்தாத காமாக்கினி (தன்) மனத்தைச் சுடுதலுடனே, போய் புகுந்தாள் - (இராவணனிருக்குமிடத்தில்) வந்து சேர்ந்தாள்; (எ - று.)

ஒன்றுத காமம் - இராமன் விஷயமாகக் கொண்ட தகுதியல்லாத ஒருதலைக்காமம். அதனைக்கனலென்றது, சேர்ந்த இடத்தை எரித்து அழித்தலால். தெறலோடும் போக்கினளென இயைந்து, காமக்கனல் உள்ளத்தை வருத்தியவுடனே அதனால் மூக்கையும், காதையு மிழந்தவள் என்று பொருள்படும். என்றுன் என்றது, கீழ்க்கவியிற் கூறியதன் அனுவாதம். வல் தாள் - வலிய கால் களுமாம். 'பொன்தாழ்குழை' - அன்மொழித்தொகையாய், காதையுணர்த்திற்று. அமங்கலத்தன்மை தோன்றக் கரிக்காலைவைத்தாளென்பார் 'மாய்த்தல்செய்வாள் குழைபோக்கினள்போய்ப்புகுந்தாள்' என்றுர். பி - ம்:—[1]செய்வான். [2]கொங்கைகள். (706)

## 148.—இராவணன் சூர்ப்பணகையை நோக்கி 'இவள் சீதைதானு?' என வினவல்.

பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் புகுந்தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வாளவ னேருற [1]நோக்கி [2]நங்காய்
மைந்நின்ற வாட்கண் மயினின்றென வந்தென் முன்னர்
இந்நின்றவ ளாங்கொ லியம்பிய சீதை யென்றுன்.

(இ - ள்.) நெய் நின்ற கூர் வாளவன் - (பகைவரது) நிணந்தோய்ந்து நின்ற கூரிய வாளாயுதத்தையுடைய இராவணன், புகுந்தாளை பொய்நின்றநெஞ்சின்கொடியாளை - (அங்குவந்து) சேர்ந்தவளான பொய்நிலைத்த மனத்தையுடைய கொடியவளாகியசூர்ப்பணகையை, நேர்உறநோக்கி - நேராகப்பார்த்து, 'நங்காய்-மகளிரிற் சிறந்தவளே! மை நின்ற வாள் கண் மயில் நின்று என என் முன்னர் வந்து இ நின்றவள் ஆம்கொல் - மை தீட்டப்பட்ட வாள்போலுங் கண்களையுடைய ஒரு மயில் வந்து நின்றுற்போல என்முன்னிலையிலே இதோவந்து நின்ற இவள்தானு, இயம்பிய-(நீ) சொன்ன, சீதை-சீதையென்பவள்', என்றுன்-என்று வினவினுன்; (எ -று.)

மயில்உவமை, சாயலுக்கு; நடைக்கு மென்பர். நெய்ந்நின்ற - நெய்பூசப் பெற்ற எனினுமாம். பி-ம்:—[1]நோக்கு. [2]நங்கை. (707)

## 149.—அவள், தனது உருவெளித்தோற்றத்தின்படி இராம னென்றல்.

செந்தா மரைக்கண்ணொடுஞ் செங்கனி வாயி னேடுஞ்
சந்தார் தடந்தோ ளொடுந் தாழ்தடக் கைக ளோடும்
அந்தா ரகலத்தொடு மஞ்சனக் குன்ற மென்ன
வந்தா னிவனுகுமவ் வல்வி லிராம னென்ருள்.

(இ-ள்.) 'செம் தாமரை கண்ணொடுஉம்-செந்தாமரைமலர்போன்ற கண்களுடனும், செம் கனி வாயினேடுஉம் - சிவந்த கொவ்வைப்பழம் போன்ற வாயினுடனும், சந்து ஆர் தட தோளொடுஉம் - அழகு

நிறைந்த பெரிய தோள்களுடனும்,தாழ் தட கைகளோடுஉம்-உத்தம விலக்கணத்தின்படி (முழந்தாளளவுந்) தொங்குகிற பெரிய கைகளுட னும், அம் தார் அகலத்தொடுஉம்- அழகிய மாலையையணிந்த மார்பி னுடனும், அஞ்சனம் குன்றம் என்ன-ஒரு மைம்மலைபோல, வந்தான்-வந்தவனுகிய, இவன்—,அ வல் வில் இராமன் ஆகும் - வலிய வில்லை யுடைய அந்த இராமனுவன்,' என்ருள்-என்று சொன்னுள், (சூர்ப்ப ணகை); (எ - று.)

இராவணன் சீதையை இடைவிடாது சிந்தித்தலால் அவள் வடிவை உருவெளித்தோற்றத்திலே கண்டாற்போல, சூர்ப்பணகை இராமனைத் தான் இடைவிடாது சிந்தித்தலால் அவன் வடிவைத் தனது உருவெளித்தோற்றத்திலே கண்டனளாதலால், இங்ஙனங் கூறினளென்க. மனத்தின்பாவனைப்படி ஒருவர்க்குக் கட்புலனுகும் வடிவை, மனத்தில் வேறுவிதமான பாவனையை யுடைய பிறர் காண இயலாமை கருதற்பாலது. இராமனிடம் தான்கொண்ட காதல் கைம்மிகுதலால், தனது தமையன் முன்னிலையிலே சொல்வன தவிர் வன அறியாது, அப்பெருமா னழகைத் தான் ஈடுபட்டபடி வருணித்துக்கூறுகின்ருள். இங்ஙன் இராவணசூர்ப்பணகையரின் காதலை நாடகங்களிற்போலக் கம்பர் விசித்திரப்பட அமைத்துக் கூறியது, இரசிகர்களாற் பாராட்டுதற்கு உரியது. இங்ஙன்விசித்திரப் படக்கூறுவதுபற்றியே, இதனை ஒருசாரார் கம்ப நாடகம் என்கின்ற னர். சந்து ஆர் - சந்தனக்குழம்பு பூசப்பெற்ற என்றலுமொன்று. ()

## 150.—இராவணன் சூர்ப்பணகையை நோக்கி 'நமது காட்சி மாறுபடுவது ஏன்? என்றல்.

பெண்பா லுருநானிது கண்டது பேதை நீயீண்டு
எண்பாலு மிலாததொ ராணுரு வென்றி யென்னே
கண்பா லுறுமாயை கவற்றுதல் கற்ற [1] நம்மை
மண்பா லவரேகொல் விளைப்பவர் மாயை யென்ருன்.

(இ - ள்.) 'நான் கண்டது இது - நான் பார்த்த இவ்வுருவம், பெண்பால் உரு - பெண்வடிவமாயிருக்கிறது: பேதை - பேதைமைக் குணமுடையவளே! நீ—, ஈண்டு - இப்பொழுது [இவ்விடத்தில்], எண்பால்உம் இலாதது ஓர் ஆண் உரு என்றி-நினைவிலும் இல்லாத தாகிய ஒரு ஆண்வடிவ மென்ருய்; என்ஏ - (இதற்குக்காரணம்) யாதோ? கண்பால் உறு மாயை கவற்றுதல் கற்ற நம்மை - கண் ணெதிரே மிக்க மாயச்செயலால்(பிறரை)மயக்குதலைப் பயின்ற நமக்கு, மண்பாலவர்ஏகொல் மாயை விளைப்பவர் - மண்ணுலகத்தவரான மனிதர்களா மாயைசெய்பவர்?' என்ருன்-என்றுசொன்னுன், (இரா வணன்); (எ-று.)

'நான் கண்டது பெண்ணுரு: அதுகுறித்து நான் வினவுகையில், ஆணுருவைக் காண்பதாகக் கூறுகிருய்: மாயையில் வல்ல நம்மை இம்மண்ணுலகத்தாரே இங்கன் திகைக்கும்படி மாயை விளைக்கின் ருரே! இது என்னே!' என்றனன்,இராவண னென்க.பெண்பால், பால் - பகுப்பு. தான் கண்டதற்கு மாருகக் கூறுதல்பற்றி, அவளைப் பேதை

யென விளித்தான், அன்றியும், கண்டதைக் கண்டபடியே கூறுங் கபடமில்லாத்தன்மையுடையவளே யென்றவாறுமாம். பேதை - பண் பாகுபெயர்; அண்மை விளி. 'எண்பாலுமிலாதது' என்பதற்கு-எட்டுத் திக்கிலுமில்லாத தென்று உரைத்தலும் பொருந்தும்; பால் - பக்கம். என்றி-இடைச்சொல்லடியாப்பிறந்த முன்னிலையொருமை யிறந்தகால முற்று. என்னேயென்றது - என்ன ஆச்சரியமென வியந்து கூறியவாறுமாம்: மாயைத்தோற்றம் கட்புலனுக்குங் காட்சியளவினதே யாகுதலால், 'கண்பாலுறுமாயை' எனப்பட்டது. கவற்றுதல் - பலவேறுவகைத் தோற்றம்விளைத்தல். மண்பாலவரே, ஏ - இழிவு சிறப்பு. பி - ம்:—[1] எம்மை. (709)

## 151.—சூர்ப்பணகை இராவணனை நோக்கி 'நீ கண்ட பெண்ணுரு உருவெளித்தோற்றமே' என்றல்.

ஊன்றும் முணர்வப் புறமொன்றினு மோட லின்றி
[1] ஆன்றும் முளதாநெடி தாசை கனற்ற நின்றாய்க்கு
ஏன்றுன் னெதிரே விழிநோக்கு மிடங்க டோறும்
தோன்றும் மனையாளிது [2] தொன்னெறித் தாகு மென்றாள்.

(இ-ள்.) 'ஊன்றும் உணர்வு-(சீதையினழகிலே) ஊன்றிப் பதிந்த அறிவு, அப்புறம் ஒன்றின்உம் ஓடல் இன்றி -வேறு ஒரு விஷயத்தி னிடத்துஞ்செல்லுதலில்லாமல், ஆன்றுஉம்உளதுஆம் நெடிது ஆசை கனற்ற-மிகவும் உண்டான பெரியகாமத்தீச் சுட, நின்றாய்க்கு- நின்ற உனக்கு, உன் எதிரே விழி ஏன்று நோக்கும் இடங்கள் தோறுஉம் - உனது எதிரிலே கண்கள் பொருந்திப் பார்க்கிற இடங்களிலெல்லாம், அனையாள் தோன்றும் - அச்சீதை காணப்படு வாள்: இது-இவ்வாறு(காமுகர்க்குக்)காணப்படுதல், தொல் நெறித்து ஆகும்-பழமையான வழக்கமேயாம்,' என்றாள் - என்று சொன்னாள், (சூர்ப்பணகை); (எ-று.)

நீ வேட்கைமிக்கவனாகி அவளே நினைவாக இருத்தலால், நீ காணுமிடமெல்லாம் அந்தச்சீதையை உருவெளித்தோற்றத்திற் காண்கிறாய்: இது இயல்பே என்றனள், சூர்ப்பணகை யென்க. இராவணனுக்கு உற்சாகத்தை மூட்டும்பொருட்டு, 'தோன்றும் மனை யாள்' என்றதாகவும் கொள்ளலாம். ஆன்றும் - மிக்கும்; இதற்கு, மிகவும் என எச்சத்திரிபாக உரைக்கப்பட்டது: இதில், ஆன் அல் லது ஆல் - பகுதி. 'கனற்ற' என்ற வினையை நோக்கி, ஆசை, தீ யெனப்பட்டது. பி - ம்:—[1] சான்றும்முளதானெடிதாசைதகைந்து. [2] தொன்னெறி. (710)

## 152.—'யான் கண்டது உருவெளித்தோற்றமே யாகுக; நீ இராமனைக் கண்டது என்னே?' என்று இராவணன் வினவ, அவள் ஏற்ற விடைகூறல்.

அன்னா ளதுகூற வரக்கனு மன்ன தாக
நின்னாலை விராமனைக் காண்குறு [1] நீரெ னென்றான்
எந்நாளவ னென்னை யித்தீர்வரு மின்னல் செய்தான்
அந்நாண் முதல்யானு மயர்த்தில னாகு மென்றாள்.

(இ - ள்.) அன்னாள் - அச்சூர்ப்பணகை, அது கூற - அவ்வாறு சொல்ல,—அரக்கன்உம் - இராவணனும், - (அவளை நோக்கி),—'அன்னது ஆக - அவ்வாறேயாகுக; நின்னால் அ இராமனை காண்குறும் நீர் என் - உன்னால் அந்த இராமன் காணப்படுந்தன்மை யாது காரணம்பற்றியது?' என்றான் - என்று வினாவினான்; (அதற்கு அவள்),—'எ நாள் அவன் என்னை இ தீர்வு அரும் இன்னல் செய்தான் - எந்நாளில் அவ்விராமன் எனக்கு நீக்க முடியாத இத்தீமையைச் செய்தானோ, அ நாள் முதல் - அந்த நாள் முதலாக, யான்உம் அயர்த்திலன் - நானும் (அவனை) மறந்திலேன்,' என்றாள் - என்று சொன்னாள்; (எ-று.)

'இத் தீர்வருமின்னல்' என்றது, செத்தாலன்றித்தீராததுமுக்கு முதலியன அறுபட்டதை. இராவணன் 'யான் சீதையைக் கண்டது உருவெளித்தோற்றமேயாகுக; நீ இராமனைக் கண்டது என்னோ!' என்ன, சூர்ப்பணகை தான் இராமனிடங்கொண்ட காதலை இராவணனிடங் கூறாமல் வேறுகாரணங்கூறி மறைத்தாளென்க. அன்றி, இன்னதென்று குறிப்பிடாமல் 'இத்தீர்வரு மின்னல்' எனச் சுட்டுமாத்திரத்தாற் கூறியதற்கு, உறுப்பறுத்தலை வெளிப்படைப் பொருளாகவும், வேட்கை விளைத்தலை உள்ளுறை பொருளாகவுங் கொள்ளுதலும் தகுதியாம். இராமனை யென்பதில், ஐ - அசை. 'அவ்விராமன்' என்பது, 'அவிராமன்' எனத்தொக்கது, ஓசையின்பநோக்கி. பி-ம்:—[1]நீர்மையென்றான். (711)

## 153.—சீதையைக் கவர்ந்துவருமாறு சூர்ப்பணகை இராவணனுக்குக் கூறுதல்.

ஆமாம தடுக்குமெ னாக்கையொ டாவி நைய
வேமால் வினையேற்கினி யென்விடி வாகு மென்னக்
கோமா னுலகுக்கொரு நீகுறை கின்ற தென்னே
பூமாண் குழலாடனை வவ்வுதி போதி யென்றாள்.

(இ - ள்.) 'ஆம்ஆம் - உண்மைதான்; அது அடுக்கும் - (நீ சொல்லும்) அத்தன்மை பொருந்தும்: என் ஆக்கையொடு ஆவி நைய வேம் - (இப்பொழுது) எனக்கு உடம்பும் உயிரும் மெலியும்படி தவிக்கின்றன; மால் வினையேற்கு - (இங்ஙனம் வருந்தும்படி) வேட்கைச்செயலையுடைய எனக்கு, இனி விடிவு என் ஆகும் - இனி இவ்வருத்தந்தீரும்வகை யாதோ?' என்ன - என்று (இராவணன்) வினவ,—(சூர்ப்பணகை),—'உலகுக்கு ஒரு கோமான் நீ - உலக முழுவதுக்கும் தனித்தலைவனான நீ, குறைகின்றது என்ஏ - (இப்படி) சிறுமைப்படுவானேன்? (இப்பொழுதே நீ), பூ மாண் குழலாள்தனை வவ்வுதி - மலர்சூடிய மாட்சிமைப்பட்ட கூந்தலையுடையளான சீதையை யெடுத்து வருவாய்: போதி - செல்வாய்,' என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

சூர்ப்பணகை கூறியதை உடன்பட்டு, இராவணன், 'என் நோய்க்குமருந்துஎன்னோ?' என்ன, 'மூவுலகத்துக்கும் கோமானான நீ குறைகின்றதென்? அப்பூங்குழலாளைப்போய் வவ்வுதி' என்றாள்.

'மால்வினையேற்கு' என்றது, பெரிய தீவினையையுடைய எனக்கு எனத் தன்னைத்தானே வெறுத்துக் கூறியதுமாம். கூந்தலுக்கு மாட்சி - மென்மை, கருமை, நெய்ப்பு, நீட்சி, இயற்கைநறுமணம் இவற்றையுடைமை. (712)

## 154.—இராவணன் காமநோயால் மரணாவத்தைப்படுதல்.

என்றா ளகன்றா ளவரக்கனு மீட ழிந்தான்
ஒன்றானு [1]முணர்ந்தில னாவி [2]யுலைந்து சோர்ந்தான்
நின்றாரு நடுங்கினர் நின்றுள நாளி னாலே
பொன்றா துளனாயின [3]னத்துணை போலு மன்றே.

(இ-ள்.) என்றாள் - என்று சொன்ன சூர்ப்பணகை, அகன்றாள் - விலகிச்சென்றாள்; அ அரக்கன்உம் - அந்த இராவணனும், ஈடு அழிந்தான் - வலிமை யொழிந்து, ஒன்று ஆன்உம் உணர்ந்திலன் - ஒன்றையேனும் உணராதவனாய் [சிறிது அறிவும் அற்றவனாய்], ஆவி உலைந்து சோர்ந்தான் - உயிர் நிலைகுலைந்து தளரப்பெற்றான் [மூர்ச்சை போனான்]; நின்றார்உம் நடுங்கினர் - (அதுகண்டு) அருகில் நின்றவர்களும் நடுங்கினார்கள்; (அப்பொழுது அவன்), நின்று உள நாளினால்ஏ - (கழிந்ததுபோகக் கழிய வேண்டியதாய்) எஞ்சியுள்ள ஆயுள்நாளின்வலிமையொன்றினாலே, பொன்றாது உளன் ஆயினன அ துணை - இறவாது பிழைத்திருந்தானத்தனை; (எ - று)—போலும் - ஒப்பில்போலி; உரையசைப்பொருளதாய் நின்றது: வாக்கியாலங்கார மென்பர், வடநூலார். அன்றே-தேற்றம்; ஈற்றசையுமாம்.

இவனுயிர் போய்விடும் என்று பிறர் கருதுமாறு இராவணன் அத்துணைக் காமநோய் கொண்டா னென்பதாம். அவரக்கன் - தொகுத்தல். அரக்கன் ஈடு ஆழிந்தான், ஆவிசோர்ந்தான் - திணைவழுவமைதி. ஒன்றானுமுணர்ந்திலன் - யாதொருவகையாலுந் தெளிவடையாதவனாய எனினுமாம். பி - ம்:—[1]உணர்ந்திலனாகி. [2]உலர்ந்து. [3]இத்தலை, அத்தனை. (713)

## 155.—இராவணன் தனது வெப்பந் தீர்தற்பொருட்டுச் சந்திரகாந்தமண்டபஞ்செய்யச் சொல்லல்.

இறந்தார் [1]பிறந்தாரென வின்னுயிர் பெற்ற மன்னன்
மறந்தா னுணர்ந்தா [2]னவண் மாடுநின் றாரை நோக்கிக்
கறந் தாலென நீர்தரு சந்திர [3]காந்தத் தாலோர்
சிறந்தார் மணிமண்டபஞ் செய்கெனச் செப்பு கென்றான்.

(இ - ள்.) இறந்தார் பிறந்தார் என - இறந்தவர் (மீண்டும்) உயிர்பெற்றெழுந்தாற்போல, இன் உயிர் பெற்ற-(மீண்டும்) இனிய உயிரைப்பெற்றெழுந்த, மன்னன் - அரக்கர்தலைவனான இராவணன், மறம் தான் உணர்ந்தான்-(தனது)ஆற்றலைத் தான் கருதியவனாய், அவண் மாடு நின்றாரை நோக்கி - அவ்விடத்தில் அருகில்நின்ற ஏவலாளரைப் பார்த்து,—'கறந்தால் என நீர் தரு - கறந்தாற் போல [தாரைதாரையாக] நீரை வெளிச்சொரிகிற, சந்திரகாந்தத்

தால் - சந்திரகாந்தக்கற்களாலே, சிறந்து ஆர் மணி ஓர் மண்டபம் செய்க - சிறப்படைந்து பொருந்தும் அழகிய ஒருமண்டபத்தைச் செய்யவேண்டும், என - என்று, செப்புக - (சிற்பிக்கு நீங்கள்) கூறுவீராக,' என்றான் - என்று கட்டளை யிட்டான்; (எ - று.)

இராவணன் 'சந்திரகாந்தக்கல்லைக் கொண்டு ஒருசிறந்த மண்டபம் அமைக்குமாறு சொல்லுக' என்று ஏவலாளர்க்குப் பணித்தனனென்க. 'இறந்தார் பிறந்தாரென வின்னுயிர்பெற்ற மன்னன்' என்ற இடத்து, 'பிழைத்தது புநர்ஜந்மம்' என்ற வழக்கை யுணர்க. 'மறந்தான் உணர்ந்தான்' என்றது, இங்ஙனம் பெரிய கட்டளையிடுதற்கு ஏற்ற ஊக்க முண்டானதைக் காட்டும்; இனி, மறந்தான் உணர்ந்தான் என்பதற்கு - மீண்டும் தன்னை மறந்து [மதிமயங்கிப்] பின்பு தெளிந்து என வுரைத்தலும் அமையும். சந்திரகாந்தம் - சந்திரனொளியைக் கண்டவளவிலே நீரை யுமிழ்வதோர் இரத்தினம். பி - ம்:—[1]பிறந்தாலென. [2]அவன். [3]காந்தத்தாலே. (714)

## 156.—தெய்வத்தச்சன் சந்திரகாந்தமண்டப மியற்றல்.

வந்தா னெடுவா னுறை தச்சன் மனத்து ணர்ந்தான்
சிந்தா வினையன்றியுஞ் செய்[1]வினை யானுஞ் செய்தான்
அந்தாம நெடுந்தறி யாயிரத் தா[2]ல மைந்த
சந்தார் மணிமண்டபந் தாமரை யோனு நாண.

(இ - ள்.) நெடு வான் உறை தச்சன்-பெரிய மேலுலகத்திலே வசிக்கிற தேவசிற்பியான விசுவகர்மன், மனத்து உணர்ந்தான் - (இராவணன் கட்டளையை) மனத்திலறிந்து, வந்தான் - (உடனே அருகில்) வந்து, அம் தாமம் நெடு தறி ஆயிரத்தால் அமைந்த சந்து ஆர் மணி மண்டபம்-அழகியஒளியையுடைய நீண்ட ஆயிரந் தூண்களைக்கொண்டு அமைந்த அழகுமிக்க சந்திரகாந்தக்கல் மயமான மண்டபத்தை, தாமரையோன்உம் நாண - (படைத்தல் தொழிற்கடவுளான) பிரமனும்(கண்டு) வெட்கமடையும்படி, சிந்தா வினை அன்றிஉம் செய் வினையான்உம் செய்தான் - மனத்தின் தொழிலினால்மாத்திரமல்லாமல் கைத்தொழிலாலும்செய்து முடித்தான்; (எ-று.)

சிந்தாவினை-மனத்தால் நினைத்தவளவில் நிருமித்தல். தெய்வத் தன்மையுள்ள சிற்பியான விசுவகர்மன் வேண்டிய இடங்களை வேண்டியபடி நினைத்தமாத்திரத்து நிருமிக்கும் வல்லமைபெற்றவன்: அப்படிப்பட்ட வல்லமையுடைய அவன் இராவணன் கட்டளைக்கு அஞ்சி அதனைத் தலைமேற் கொள்வானாய் மெய்வருந்தக் கைத்தொழில்செய்தும் அம்மண்டபவேலையை முடித்தானென்பது இரண்டாமடியின் கருத்து. இராவணன்கட்டளையை அவ்வேவலர் வந்து தெரிவித்தற்குமுன்னமே அதனைத்தனதுதெய்வத்தன்மையாலறிந்தமாத்திரத்தில் அச்சத்தோடுவிரைந்துவந்தனனென்பது, முதலடியால்விளங்கும். தறியாயிரத்தாலமைந்த மண்டபம் - ஆயிரக் கால்மண்டபம். நெடுவான்-நெடுந்தூரத்தில் [உயரத்தில்] இருக்கும்

விண்ணுலகமெனினுமாம். சிந்தாவினை யென்பதில், சிந்தா என்ற வடசொல் ஈறுதிரியாது நின்றது. இனி, சிந்தா என்பதை ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரச்சமாகக் கொண்டு, சிந்தா வினை - குறைவற்ற வேலையை, மனத்து உணர்ந்தான்: அன்றியும - அல்லாமலும் என்று உரைப்பாரு முளர். தாமம்-ஒழுங்குமாம். பி - ம்:— [1]வினையாலும், [2]அமைத்தான. (715)

## 157.—இதுவும் அது.

காந்தம் [1]மமுதின்றுளி கால்வன கால மீனின்
வேந்தன் னொளியன்றியு மேலொடு கீழ்வி ரித்தான்
பூந்தென்றல் புகுந்துறை சாளர மும்பு னைந்தான்
ஏந்தும் மணிக்கற்பகச் சீதளக் காவி ழைத்தான்.

(இ - ள்.) காலம் மீனின் வேந்தன் ஒளி அன்றிஉம் - காலத்தைத் தெரிவிப்பனவான நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனது பிரகாசத்தை வேண்டாமலும், அமுதின் துளி கால்வன - அமிருதம்போலினிய நீரின் துளிகளை வெளியுமிழ்வனவான, காந்தம்-சந்திரகாந்தக்கற்களை, மேலொடு கீழ் விரித்தான் - (அம்மண்டபத்தின்) மேலும் கீழும் பரப்பினான்; பூ தென்றல் புகுந்து உறை சாளரம்உம் புனைந்தான் - மலர்களின் பரிமளத்தையுடைய தென்றற்காற்று நுழைந்து உலாவத்தக்க பலகணிகளையும் அழகாக அமைத்தான்; ஏந்தும் - (வேண்டுவார்க்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தற்குச் சித்தமாக) ஏந்தியுள்ள, மணி-அழகிய, கற்பகம் - கற்பகவிருக்ஷங்களாகிய, சீதளம்-குளிர்ந்த, கா - சோலையொன்றையும், இழைத்தான் - (அம்மண்டபத்தைச்சுற்றிலும்) நிருமித்தான் (விசுவகர்மன்); (எ - று.)

சந்திரனொளி தம்மேலே படுதலில்லாத பொழுதிலும் நீர் சொரியும் இயல்பினவான சந்திரகாந்தக்கற்களென அவற்றின் சிறப்பை விளக்கியபடி. மீன் - விண்மீன். வானத்தில் சாதாரணமாக அளவின்றிக் காணப்படுந் தாரகைகளை யன்றி, தமது உதய அஸ்தமந சஞ்சாரங்களாற் காலவரையறையைப் புலப்படுத்துகிற அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களைக் குறித்தற்கு 'காலமீன்' எனப்பட்டது. தக்ஷமுனிவனது குமாரிகளாகிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் சந்திரன் மணஞ்செய்துகொண்டனனென்பது புராண வரலாறாதலால், 'காலமீனின்வேந்தன்' என்றார்: இனி, காலமீன் என்பதற்கு-இருட்பொழுதாகிய அக்காலத்துக்கு உரிய நக்ஷத்திரங்களென்றுமாம். பி - ம்:—[1]அமிர்தின். (716)

## 158.—இராவணன் மண்டபங்காண வருதல்.

[1]ஆணிக்கமை பொற்கை மணிச்சுட ரார்வி ளக்கம்
சேணுற் றிருள்[2]சீப்பவத் தெய்வ மடந்தை மார்கள்
பூணிற் பொலிவார் புடையேந்திடப் பொங்கு தோளான்
மாணிக்க மானத்திடை மண்டபங் காண வந்தான்.

(இ - ள்.) பூணின் பொலிவார் - (அணிந்துள்ள) ஆபரணங்களுடனே விளங்குபவராகிய, அ தெய்வம் மடந்தைமார்கள் - அந்தத் தேவமாதர்கள், சேண் உற்ற இருள் சீப்ப - வானத்தையளாவிப் பரந்த இருளை ஒழிக்கும்பொருட்டு, ஆணிக்கு அமை பொன் கை - உரையாணிக்குஏற்ற [மாற்றுயர்ந்த] பொன்னினாலாகிய ஆபரணங்களை யணிந்த (தங்கள்) கைகளிலே, சுடர் ஆர் மணி விளக்கம் - ஒளி நிறைந்த இரத்தின தீபங்களை, புடை - பக்கங்களில், ஏந்திட - ஏந்தி நிற்க, பொங்கு தோளான் - மிகுதியாய் [இருபதாய்] விளங்குகிற தோள்களையுடையவனான இராவணன்,—மாணிக்கம் மானத்திடை - மாணிக்கமயமான ஒரு விமானத்தில் (ஏறி), மண்டபம் காணவந்தான் - அம்மண்டபத்தைப் பார்த்தற்கு வந்தான்; (எ-று.)

தெய்வமகளிர்பலர் இருபக்கத்தும் மணிவிளக்கேந்தி அவற்றால் இருளையகற்றிவழிகாட்ட, இராவணன் மாணிக்கவிமானத்தின்மேல் மண்டபங்காண வந்தனனென்பதாம். ஆணிக்கு அமை பொன் - ஆணிப்பொன். பொன் - அணிகலத்துக்குக் கருவியாகுபெயர். உற்றிருள்-விகாரம்; அன்றி, சேண் உற்று - நெடுந்தூரமளவும் ஒளியாற் சென்று, இருள் சீப்ப - இருளையொழிக்க எனினும் அமையும். அகரச் சுட்டு-பிரசித்தியைக்காட்டிற்று. மானம்-விமாநம். பி - ம்:—[1] ஆணிக் கனகச்சுடராயிரமார், ஆணிக்கமை பொற்றகட்டின் மணிச்சுடரார். [2]சீப்பன. (717)

## 159.—இராவணனது பரிசாரகப்பெண்களின் முகவொளி.

அல்லாயிர கோடி யடுக்கிய [1]தொத்த தேனும்
நல்லார் [2]முகமா நளிர்வானில [3]வீன்ற நாமப்
பல்லாயிர கோடி பனிச்சுட ரீன்ற திங்கள்
எல்லா [4]முடனா யிருளோடி யிரிந்த தன்றே.

(இ-ள்.) (அந்த இருட்பொழுது), ஆயிரகோடி அல் அடுக்கியது ஒத்தது ஏன்உம் - ஆயிரங்கோடி இராத்திரிகளை அடுக்கி வைத்தது போன்றிருந்ததாயினும்,—நல்லார் முகம் ஆம் - (அவ்விராவணனுடன் வந்த) அழகிய மகளிர்களுடைய முகங்களாகிய, நளிர் வால்நிலவுஈன்ற - குளிர்ந்த வெள்ளியநிலவைவெளிப்படுத்துவனவும், நாமம் - பெருமை பெற்றனவும், பனி சுடர் ஈன்ற - குளிர்ந்த ஒளியைத் தருவனவுமான, பல் ஆயிரகோடி திங்கள் எல்லாம்-அநேகவாயிரங்கோடிசந்திரமண்டலங்களெல்லாம், உடன் ஆய் - ஒருங்கு சேர்ந்ததனால்,—இருள் ஓடி இரிந்தது-இருட்டு முன் நிற்கமாட்டாமல் சிதறியோடி நிலைகெட்டது; (எ-று.)—அன்றே-ஈற்றசை.

"திங்கள் திருமுகத்துச்சேயிழையார்" என்றபடி இராவணனைச் சார்ந்த மகளிர்களின் முகங்கள் பூர்ணசந்திரர்கள்போல விளங்கியதனால், அவற்றினொளியால் இருள ஒழிந்தது என வருணித்தபடி: தொடர்புயர்வுநவிற்சியணி. இருளின் திண்மையைக் காட்டுதற்கு, 'அல்லாயிரகோடி யடுக்கியதொத்தது' என்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]ஒத்ததானும். [2]முகமாய். [3]இன்றி. [4]உடனா.

### 160.—அம்மண்டபத்தைச் சூழ்ந்த சோலையிலுள்ள கற்பகவிருட்சங்களின் ஒளிவிசேடம்.

பொற்புற்றன மாமணி யொன்பதும் பூவி னின்ற
கற்பத் தருவின் கதிர்நாணிழற் கற்றை நாற
விற்பற் றழியப் பகலாக்கிய தால ருக்கன்
நிற்பத் [1]தெளிகின்றது நீள்சுடர் மேன்மை யன்றே.

(இ - ள்.) பொற்பு உற்றன - அழகு பொருந்தியனவான, மா மணி ஒன்பதுஉம்-சிறந்த நவரத்தினங்களும், பூவின் நின்ற-(தம்மில்) மலர்களாய் அமையப்பெற்றுநின்ற, கற்பத் தருவின் - கற்பகமரங்களினது, கதிர் நாண் நிழல் கற்றை - சூரியனும் வெள்கும்படியான ஒளியின்தொகுதி, நாற - வெளித்தோன்ற, (அவ்வொளி), அல் பற்று அழிய பகல் ஆக்கியது - இருளின் தொடர்ச்சி நீங்கும்படி பகற்பொழுதாக்கி விட்டது; அருக்கன் நிற்ப - சூரியன் உதித்து நிற்குமளவிலே, தெளிகின்றது-(இருள் நீங்கி) விளக்கமடைவது, நீள் சுடர் மேன்மைஅன்றே-(அவனது) நீண்ட கிரணங்களின் மேன்மையினாலன்றோ? (எ - று.)

சூரியன் உதித்து நின்றவளவிலே அவனதுநெடுந்தூரத்துஞ் செல்லுந் தன்மையனவான ஆயிரங்கிரணங்களின் மாட்சிமையால் இருள் ஒழிந்து எவ்விடமும் விளக்கமடைகின்றதன்றோ? அவ்வாறே அங்கு விசுவகருமனால் நிருமிக்கப்பட்ட கல்பக விருக்ஷங்கள் விசேஷகாந்தியையுடையனவாயிருந்தமையால் அவற்றினொளி பரவுமளவிலே எங்கும் இருளொழிந்து விளங்கிற்றென்பது கருத்து; முதல்வாக்கியத்தை இரண்டாம் வாக்கியம் சமர்த்தித்து நின்றது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். 'அருக்கனிற்பத் தெளிகின்றது நீள்சுடர் மேன்மையன்றோ?' என்று சூரியனது இயற்கையைத் தெரிவிக்கிற வாக்கியம், எப்படிப்பட்ட இருளையும் ஒழிக்கும் வல்லமை மேலான ஒளிக்கு உண்டு என்ற பொதுப் பொருளை விளக்குதற்குக் கூறியவாறும். சூரியனும் நாணமடையுமாறு அத்துணைமிக்க ஒளி கற்பகவிருட்சத்துக்குஉண்டுஎன்பதை ஜைநநூலில் 'சோதிரங்க மென்னுங் கற்பகவிருக்ஷம் சந்திராதித்தரொளியினை யடக்கும் ஒளியினைக் கொடுக்கும்' எனக் கூறியமை கொண்டும் அறிக. "பொற்பே பொலிவு" என்பது தொல்காப்பியம். மணி ஒன்பது - கோமேதகம், நீலம், பவழம், புஷ்யராகம், மரதகம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. கற்பதரு என்ற வடமொழித்திரிபு, எதுகைநோக்கி, கற்பத்தருவென வலிமிக்கது.
பி-ம்:—[1]தெரிக்கின்றது. (719)

### 161.—இராவணன் மண்டபத்தினுட் புகுதல்.

ஊறோசை முதற்பொறி யாவையு மொன்றி னொன்று
தேறா நிலையுற்றதொர் [1]சிந்தையன் செய்கை யோரான்
வேறாய பிறப்பிடை வேட்கை [2]விசித்த தீர்ப்ப
மாறோ ருட[3]லுற்றென மண்டபம் வந்து புக்கான்.

(இ - ள்.) ஊறு-பரிசமும், ஓசை - சப்தமும், முதல் - முதலிய, பொறி யாவைஉம் - புலன்களெல்லாம், ஒன்றின் ஒன்று தேரு - ஒன்றுபோலவே மற்றதுந் தெளிவடையாத, நிலை - நிலைமையை, உற்றது-அடைந்ததான,ஓர்சிந்தையன்-தனிமனத்தையுடையவனும், செய்கைஓரான் - செய்யவேண்டுவது இன்னதென்று அறியாதவனுமாகிய இராவணன்,—வேட்கை விசித்தது ஈர்ப்ப - ஆசை வலியப்பிடித்ததாகி இழுக்க, வேறு ஆய பிறப்பிடை - அடுத்த பிறவியிலே, மாறு ஓர் உடல் உற்று என-(ஓருயிர்) மற்றோருடலை யடைந்தாற்போல, மண்டபம் வந்து புக்கான்-அந்தமண்டபத்தில் வந்து புகுந்தான்; (எ - று.)

மரணவேதனையால் ஐம்புலவுணர்ச்சி யொழிந்து செய்வதறியாத உயிர் அச்சமயத்து அடுத்த ஊழ்வினையால் தோன்றிய அவாவின் வசப்பட்டு அவ்வுடம்பினின்று வேறொரு பிறப்பை யடைதல் போல, காமவேதனையால் ஐம்புலவுணர்ச்சியொழிந்து செய்வதறியாத இராவணன் ஆசை வயத்தனாய்த் தான் இருந்த இடத்தினின்று சந்திரகாந்தமண்டபஞ்சென்று சேர்ந்தனன் என்பதாம். ஒரு பிறப்பின் இறுதியில் உயிர் உடம்பைவிட்டு நீங்குஞ் சமயத்து யாதொன்றை விரும்பிற்றோ, அவ்வடிவமாக அவ்வுயிர் அடுத்தபிறப்பெடுக்கு மென்பது, நூற்கொள்கை; 'அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்ற திருக்குறளி னுரையில் பரிமேலழகர் 'உடம்பு நீங்கிப்போங் காலத்து அடுத்த வினையும், அதுகாட்டுங் கதிநிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துஉதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லும்' என உரைத்தது உணரத்தக்கது. முதலிரண்டடிகளுள், 'வேட்கை விசித்த தீர்ப்ப' என்றது—உபமானமாகிய உயிருக்கும், உபமேயமாகிய இராவணனுக்கும்பொருந்தும். முன்னிரண்டடியால், இராவணன் காமமோகத்தால் நெட்டுயிர்ப்போடுற்ற பிணமாய் அயர்ந்து நின்றன னென விளங்கும். இராவணனுக்கு 'வேட்கை' என்றது, சந்திரகாந்த மண்டபத்திற் சென்று சேர்ந்தால் தனது தாபந்தணியு மென்ற கருத்து.

முதலடியில், புலன், பொறியெனப்பட்டது: இது ஒருவகை உபசாரவழக்கு. 'ஊறோசைமுதற் பொறிகள்'—ஊறு, ஓசை, நாற்றம், சுவை, ஒளியென்பன; இவை - முறையே, மெய், செவி, மூக்கு, வாய், கண் என்னும் பொறிகளின் புலனும். ஐம்புலன்களுள் ஒன்றேனும் சிறிதும் தெளிவுபெறாது மயங்கிக்கிடந்தமையை நன்குவிளக்குதற்கு, 'ஒன்றினொன்று தேறாநிலை' எனப்பட்டது. 'ஓர்சிந்தை' என்றதனால், அப்பொழுது இராவணனது மனம் யாதோராதாரவையும் பெறாதுநின்றமையும், சீதைபக்கலுண்டான மோகமொன்றிலேயே அழுந்தியிட்டமையும் வெளியாம். 'விசித்தது ஈர்ப்ப' என்றது, வினைவசத்தாலுளதாகும் வேட்கை விலக்கவொண்ணாதென்ற தன்மையை விளக்கும். பி-ம்:—[1] சிந்தையின். [2] விரிந்தது. [3] புக்கென. ( )

வேறு.

## 162.—இராவணன் அங்குப் பூம்பள்ளியை யடைதல்.

தண்டலி றவஞ்செய் வோர்[1]கள் [2]வேண்டிய தரவே நல்கும்
மண்டல மகர வேலை யமுதொடும் வந்த தென்னப்
[3]பண்டரு சுரும்பு சேரும் பசுமர முயிர்த்த பைம்பொன்
[4]தண்டளிர் மலரிற் செய்த சீதளச் சேக்கை [5]சார்ந்தான்.

(இ - ள்.) தண்டல் ,இல்-கெடுதலில்லாத, தவம் - தவத்தை, செய்வோர்கள்-செய்து மேற்கதியடைந்த தேவர்கள், வேண்டிய - விரும்பியபொருள்களை, தர-(அவர்களுக்குக்) கொடுக்கும்படி, நல்கும்-அன்புகொண்ட, மண்டலம் மகரம்வேலை - வட்டவடிவமானதும் சுறுமீன்கள் சஞ்சரிக்கப்பெற்றதுமான பாற்கடல், அமுதொடுஉம் வந்தது என்ன-தேவாமிருதத்துடனே இங்குவந்ததுபோலவுள்ள, பண் தரு சுரும்பு சேரும்-இசைப்பாட்டைப்பாடுகிற வண்டுகள் சேர்ந்து மொய்க்கப்பெற்ற, பசுமரம் உயிர்த்த பைம்பொன் தண் தளிர்-பசியமரங்களால் தரப்பட்ட பசிய பொன்னிறமான குளிர்ந்த தளிர்களாலும், மலரின்-மலர்களாலும், செய்த-அமைக்கப்பட்ட, சீதளம் சேக்கை-குளிர்ச்சியான படுக்கையை, சார்ந்தான்-(இராவணன்) அடைந்தான்; (எ-று.)

இராவணன் அந்தச்சந்திரகாந்தமண்டபத்திலே தளிர்களாலும் மலர்களாலும் அமைக்கப்பெற்ற படுக்கையைச் சார்ந்தானென்பதாம். அமிருதத்தோடுவந்த பாற்கடலை அந்தமலர்ப் படுக்கைக்கு உவமை கூறினது, சுத்தமாய்ப்பரந்து மிக்க குளிர்ச்சியைத் தந்து இனியதாகவல்ல தன்மைக்கென்க. திருப் பாற்கடல் கடைந்தகாலத்தில் அக்கடல் தேவர்கள் விரும்பிய செல் வங்களான கற்பகவிருக்ஷம் காமதேநு சிந்தாமணி முதலிய சுவர்க்க லோகத்து ஐசுவரியங்களைத் தன்னிடத்தினின்று வெளிப்படுத்திக் கொடுத்தமைபற்றி, 'தவஞ்செய்வோர்கள் வேண்டிய தரவே நல்கும் வேலை' எனப்பட்டது. ஈகைக்கு அன்பு இன்றியமையாக்காரண மாதலின், அதனையுடைமை தோன்ற, 'தரவே நல்கும்' என்றார். 'தவஞ்செய்வோர்' என்றது, தேவர்கட்கு ஒரு ஏதுப்பெயர். 'தவஞ்செய்தோர்கள் வேண்டியதறவேநல்கும்' எனப்பாடமிருப்பின் நலம். வேண்டியவர்க்கு வேண்டிய பயன்களைத் தவறுமல் அளிக்குந் தன்மையதாதலால், தவத்துக்கு 'தண்டலில்' என்ற அடைமொழி கொடுத்தது. தவம் அப்பெற்றியதாதலை "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப்படும்" என்ற திருக்குறளினும் அறிக. சுரும்புக்குப் பண் என்றது, ரீங்கார வொலியை.

பி - ம்:—[1]தாம். [2]வேண்டியதாயின், வேண்டினதான, வேண்டிய தான. [3]பண்டருஞ். [4]தெண். [5]சேர்ந்தான்.

இதுமுதல் ஒன்பது கவிகள் - இப்படலத்தின் 14-ஆங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (721)

## 163.—அங்குத் தென்றற்காற்று வீசுதல்.

நேரிழை மகளிர் கூந்த னிறைநறை வாச நீந்தி
வேரியஞ் சரளச் சோலே வேனிலான் விருந்து செய்ய
ஆர்கலி யழுவந் தந்த [1]வமிழ்தென வொருவ ராவி
தீரினு முதவற் கொத்த தென்றல்வந் திறுத்த தன்றே.

(இ - ள்.) ஒருவர் ஆவி தீரின்உம் உதவற்கு ஒத்த தென்றல் - ஒருவரது உயிர் (உடம்பைவிட்டு) நீங்குவதாயினும் (அவ்வுயிரை அங்ஙனம் நீங்காதபடி பாதுகாத்துத்) தரத்தக்க [மிக இனிய] தென்றற்காற்றுனது,—நேர் இழை மகளிர் கூந்தல் - அழகிய ஆபரணங்களையணிந்த மாதர்களது கூந்தலில், நிறை - நிறைந்துள்ள, நறை வாசம் - தேனோடுகூடிய நறுமணத்தில், நீந்தி-படிந்து,—வேரி அம் சரளம் சோலே - நறுமணத்தையுடைய அழகிய இனிய சோலேயிலே, வேனிலான் விருந்து செய்ய - மன்மதனுக்கு விருந்துபசாரஞ் செய்யும்பொருட்டு, ஆர்கலி அழுவம் தந்த - நிறைந்த ஓசையையுடைய கடல் உண்டாக்கித்தந்த, அமிழ்து என - அமிருதம்போல, வந்துஇறுத்தது - வந்துசேர்ந்தது; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

காமமொன்றொழிய வேறுகாரணங்களால் எவ்வளவுதாபத்தையடைந்து மிகவருந்தினும் அத்தாபம் முழுவதையும் எளிதிற் போக்கி இனிமைசெய்ய வல்லதாம்படி மிகக்குளிர்ந்ததாயுள்ள தென்றற்காற்றென்பார், 'ஒருவராவி தீரினு முதவற் கொத்த தென்றல்' என்றார். முதலடியால், அவ்விளங்காற்று மகளிர் கூந்தலிற் சூடிய மலர்களின் தேனேயும் வாசனையையும் கொணர்ந்ததோடு அந்தக் குழலிலுள்ள இயற்கை நறுமணத்தையும் கொணர்தல் தோன்றும். அத்தென்றல் காமக்கடவுளான மன்மதனுக்கு மிக விருப்பமான தாதலின், அதனைச் சோலேயில் மன்மதனுக்கு விருந்துணவளிக்கக் கடல்தந்த அமிருதம் போலு மென்றார். தன்மைத் தற்குறிப்பேற்றவணி. இனி, இதற்கு - அச்சோலேயினிடத்து மன்மதன் (இராவணனுக்கு) விருந்துசெய்தற்பொருட்டுக் கடலினின்று கொணர்ந்த அமிருதம்போல என்று உரைப்பாருமுளர். வேரி-தேனுமாம். 'ஆர்கலியழுவந்தந்த வமிழ்தென' என்பதற்கு - கடலினாற் சூழப்பட்ட நிலவுலகப்பரப்புச் சித்தஞ்செய்துதந்த அமிருதம்போல என்றலுமொன்று. பி - ம்:—[1]மருந்தென. (722)

## 164.—அத்தென்றலுக்கு இராவணன் வருந்துதல்.

சாளரத் தூடு வந்து தவழ்தலுந் தரித்த றேற்றான்
நீளரத் தங்கள் [1]சிந்தி நெருப்புக நோக்குங் [2]கண்ணன்
வாழ்மனே புகுந்த தாண்டோர் மாசுணம் வரக்கண் டன்ன
கோளுறக் கொதித்து விம்மி யுழையரைக் கூவிச் சொன்னான்.

(இ - ள்.) நீள் அரத்தங்கள் சிந்தி - மிக்க இரத்தத்துளிகளைச் சொரிந்து, நெருப்பு உக - (அவற்றோடு) நெருப்புப்பொறிகளும் சிதறும்படி, நோக்கும் - சினந்து பார்க்கிற, கண்ணன் - கண்களை

யுடையவனான இராவணன்,—சாளரத்து ஊடு வந்து தவழ்தலும் - (அத்தென்றல்) பலகணிவழியாய் (உள்ளே) வந்து மெல்லென உலாவியவளவிலே, தரித்தல் தேற்றான் - (அதனைப்) பொறுக்க மாட்டாதவனாய், வாழ் மனை புகுந்தது ஓர் மாசுணம் வர கண்டு அன்ன-(தான்)வாழும் விட்டிற்குள் பெரிய மலைப்பாம்பு நுழைந்து வர (அதனை)க் கண்டாற்போன்ற, கோள்உற - கொடுமைபொருந்த, ஆண்டு கொதித்து விம்மி - அப்பொழுது கொதிப்புற்றுக்கலங்கி, உழையரை கூவி சொன்னான் - (தனது) அருகிலுள்ள பரிசனங்களை யழைத்து ஒன்றுசொல்பவனானான்; (எ-று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

சாளரத்தின் வழியாகத் தென்றல் வீசுதலும், இராவணன் கண்களால் இரத்தஞ் சிந்தி நெருப்புகக் கொடுமைகொண்டு கொதிப்புற்று உழையரை நோக்கி ஒன்று சொல்பவனானனென்க. மாசுணம் - மலைப்பாம்பு. தென்றல் - பொதியமலையில் தோன்றி வருவதென்று சொல்லப்படுதற்கேற்ப, அதற்கு மலைப்பாம்பு உவமைகூறப்பட்டது. அரத்தம் - ரக்தம். பி - ம்:—[1]சிந்த. [2]நீரான்.

## 165.—இராவணன் வாயில்காவலரை யழைத்துவரச் சொல்லுதல்.

கூவலி னுயிர்த்த சின்னீ ருலகினைக் குப்புற் றென்னத்
தேவரி னொருவ னென்னை யின்னலுஞ் [1]செயத்தக் கானோ
ஏவலி னன்றி [2]த்தென்ற [3]லெவ்வழி யெய்திற் றென்னாக்
காவலி னுழையர் தம்மைக் கொணருதிர் கடிதி னென்றான்.

(இ - ள்.) 'கூவலின் - (ஒரு) கிணற்றிலே, உயிர்த்த-தோன்றிய, சில்நீர் - சிறிது நீரானது, உலகினை குப்புற்று என்ன - உலகத்தை முழுத்தினாற்போல, தேவரின் ஒருவன் - தேவர்களில் ஒருவனான வாயு, என்னை இன்னல்உம் செய தக்கான் ஓ - என்னைத் துன்பமுஞ் செய்யத்தக்கவனாவனோ! ஏவலின் அன்று - (எனது) கட்டளையினா லல்லாமல், இ தென்றல் - இந்தத் தென்றற் காற்றானது, எ வழி - எப்படி, எய்திற்று - (இங்கு இப்பொழுது) சேர்ந்தது?' என்னா - என்று சொல்லி,—காவலின் உழையர் தம்மை கொணருதிர் கடிதின் என்றான்-காவல்தொழில் செய்யும் பரிசனங்களை விரைவில் அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று (தனது அருகிலுள்ள ஏவலாளரை நோக்கி இராவணன்) சொன்னான்; (எ-று.)

வாயில்காவலரை அழைக்கச்சொன்னது, தனது அனுமதியின்றி வாயுவை உள்ளேவிட்ட குற்றத்தைப்பற்றி விசாரித்தற் கென்க. கூவல் = கூபம்; வடசொல். உயிர்த்தல்-வெளிப்படுதல், ஊறுதல். சின்னீர் என்பதில், சில் என்பது-சிறுமைப்பண்பை யுணர்த்திற்று. தனது மிக்க பெருமையும் வாயுவினது மிக்க சிறுமையுந் தோன்ற, 'கிணற்றுநீர் உலகத்தை முழுக்கடித்தாற் போல ஒருதேவன் என்னை வருத்துபவனானான்' என உவமை கூறினான். முதலடி - இல்பொருளுவமை. இன்னலும், உம்மை - இறந்தது தழுவிய எச்சமாகி, அச்சமின்றி எனது எதிரில் அரு

இல் வந்ததல்லாமல் துன்பமுஞ் செய்யத்தக்கவனுயினு னென்று பொருள்படும். குப்புறுதல்-கவிந்துகொள்ளுதல். பி - ம்:—[1]செய் யத்தக்கான். [2]வந்திங்கு. [3] இவ்வழி, இவ்வழல். (724)

## 166.—அழைத்து வரப்பெற்ற வாயில்காவலர் இராவணனுக்குச் சமாதானங் கூறல்.

அவ்வழி யுழைய ரோடி யாண்[1]டவர்க் கொணர்த லோடும்
வெவ்வழி [2]யமைந்த செங்கண் வெருவுற நோக்கி வெய்யோன்
செவ்வழி [3]தென்ற லோற்குத் [4]திருத்தினீர் நீர்கொ லென்ன
இவ்வழி யிருந்த காலைத் தடையவற் கில்லை [5]யென்றார்.

(இ - ள்.) அ வழி - அப்பொழுது, உழையர்-ஏவலாளர்கள், ஓடி-விரைந்துசென்று, ஆண்டு அவர் கொணர்தலோடும் - அவ் விடத்து வாயில்காவல் செய்துநின்றவரை அழைத்துக்கொண்டு வந்தவுடனே,—வெய்யோன் - கொடியவனுன இராவணன், வெம் வழி அமைந்த செம் கண் - கொடுமையான தன்மையமைந்த சிவந்த கண்களால், வெருவுஉற நோக்கி-அச்சமுண்டாம்படி பார்த்து,— தென்றலோற்கு நீர்கொல் செவ்வழி திருத்தினீர் என்ன - 'தென்றல் வடிவமாக வந்த வாயுதேவனுக்கு நீரோ நேரே வழி விட்டீர்?' என்று வினவ,—இ வழி இருந்த காலை-'(நீவிர்) இவ்விடத்திலிருந்த பொழுது, அவற்கு தடை இல்லை-அவனுக்குத் தடையில்லையே', என்றார்-என்பது கூறினர்; (எ-று.)

'இவ்வழியிருந்தகாலைத் தடையவற்கில்லை' என்றது, பழைய வழக்கத்தை யெடுத்துக்கூறியது; இங்ஙனங் கூறியதன்கருத்து:- நீவிர் சிங்காரத்தோட்டங்களில் வந்திருக்கிறபொழுது 'தென்றற் காற்றுக்குத் தடைசெய்யவேண்டா: அவன் அஞ்சாமல் தடையின்றி உள்ளே வந்திடுக' என்று முன்பு எங்களுக்குக் கட்டளையிட்டிருந்த லால், இப்பொழுதும் அவனைத் தடைசெய்யாமல் இங்கு விட்டிட் டோ மென்பது. இனி, இதற்கு-காற்று உள்ளே நுழைந்து வருதற்கு இந்தப் பலகணிவழியிருக்கும்போது வாயில்காவலரான யாம் அவனுக்குத் தடைசெய்யக் கூடியதில்லையே யென்று கருத்துக் கொள்ளலுமாம். காலை=காலம். பி ம்:—[1]அவற்கொணர்தலோடும். அவர்க்குரைக்கவந்தார், அவர்க்குணர்த்தலோடும். [2]அரக்கர்கோ மான். [3]தென்றற்காறு, தென்றலார்க்குத். [4]திருத்தினீரென்கொல், திருத்தினை நீகொல். [5]என்றான்.

பலஏட்டுப்பிரதிகளில் இங்கே ஒருசெய்யுள் காணப்படுவது வரு மாறு:—

வேண்டிய [1]நினைந்து செய்வான் விண்ணவர் [2]வருவ தென்றால்
மாண்டது போலுங் [3]கொள்கை யானுடை வன்மை வல்லை
[4]தேண்டிநீர் திசைகடோறுஞ் சேணுற விசையிற்[5]செல்குற்று
ஈண்டிவன் றன்னைப் பற்றி யிருஞ்சிறை யிடுதி ரென்றான்.

பி - ம்:—[1]நினைத்துச். [2]வருவர். [3]என்னையென்னுடைவலி நீரிப்போ. [4]தேண்டியே. [5]சென்று வல்லே. (725)

## 167.—இராவணன் ஏவலரை நோக்கி 'மந்திரிகளை யழைக்க' எனல்.

காற்றினேன் றன்னை வாளா முனிதலிற் கண்ட தில்லை
[1]கூற்றுவந் தென்னை யின்னே குறுகுமாற் குறித்த வாற்றால்
வேற்றருங் கருங்கட் சீதை மெய்யருள் புனையே னென்றால்
ஆற்றலா லடுத்த தெண்ணு மமைச்சரைக் கொணர்தி ரென்றான்.

(இ - ள்.) காற்றினேன் தன்னை-வாயுதேவனை, வாளா முனிதலின்-வீணாக (நான்) கோபிப்பதனால், கண்டது இல்லை - வரும் பயன் யாதும் இல்லை; குறித்த ஆற்றால் - (நான்) கருதியபடி, வேல் தரும் கரு கண் சீதை மெய் அருள் புனையேன் என்றால்-வேலாயுதம் போன்ற [நீண்டகூரிய] கரியகண்களையுடைய சீதையினது உண்மையான கருணையைப் பெறுதல் செய்யேனாயின், கூற்று இன்னே வந்து என்னை குறுகும்-யமன் இப்பொழுதே வந்து என்னைக் கிட்டுவான்; (ஆதலால், அதன்பொருட்டு), ஆற்றலால் அடுத்தது எண்ணும் அமைச்சரை கொணர்திர்-(தமது)கல்வியறிவின் வல்லமையால் தக்க காரியத்தை ஆலோசிக்கவல்ல மந்திரிகளை அழைத்துவாருங்கள், என்றான்-என்று (இராவணன் ஏவலாளர்க்குக்) கட்டளையிட்டான்; (எ-று.)—ஆல்-அசை.

இனி வெவ்வேறு செயலில் முயல்வதிற் பயனில்லை; வேற் கண்ணாளின் அருளைப் பெறும் நெறியை நினைக்கத்தக்க மந்திரிமாரையழைத்து வருக என்று ஏவலர்க்குக் கட்டளையிட்டானென்பதாம். தன் மனத்தின்படி உருவெளித்தோற்றத்தில் சீதையினது பொய்யருளைப் பெற்றமை பயன்படாமையால், 'மெய்யருள்' என்றான். மெய்யருள் - மனத்தோடு பொருந்திய அருள்; மெய்யையும் அருளையும் என்றலும் ஒன்று. ஆற்றல்-புத்திபலம். குறித்த வாற்றால் என்பதற்கு - யமன்தான் கருதியபடி யென்றுஉரைத்து, அதனை 'குறுகும்' என்பதனோடு இயைத்தலும் ஒன்று. குறுகும் - கொல்லவரும் என்றபடி. வேல்தரும், தரும் - உவமவுருபு. பி - ம்:—[1]கூற்றும். (726)

## 168.—ஏவலர் அழைக்க, அமைச்சர் விரைந்து வருதல்.

ஏவின சிலத ரோடி யேயெனு [1]மளவி லெங்கும்
கூவினர் கூவ லோடுங் குறுகினர் கொடித்[2]திண் டேரர்
[3]மாவினர் [4]சிவிகை மேலர் [5]மும்மதக் [6]களிற்றர் வையத்
தேவரும் வானந் தன்னிற் [7]றேவருஞ் சிந்தை சிந்த.

(இ - ள்.) ஏவின சிலதர் - (இவ்வாறு இராவணனால்) கட்டளையிடப்பட்ட ஏவலாளர்கள், ஏ எனும் அளவில் - ஏயென்னுமளவில் [மிகவிரைவில்], எங்கும் ஓடி - பலவிடங்களிலும்ஓடிச்சென்று, கூவினர் - (மந்திரிகளை) அழைத்தார்கள்; கூவலோடும்—(அங்ஙனம்) அழைத்தவுடனே, (அவர்கள்), கொடி திண் தேரர் - கொடி கட்டிய வலியதேரிலேறினவர்களும், மாவினர் - குதிரைமேலேறினவர்களும், சிவிகைமேலர் - தண்டிகையிலேறினவர்களும், மும்மதம் களிற்றர் -

மூவகைமதத்தையுடைய ஆண்யானைமேலேறினவர்களுமாய், வையம் தேவர்உம் - நிலவுலகத்துத் தேவர்களான முனிவர்களும், வானந் தன்னில் தேவர்உம்-வானுலகத்திலுள்ள தேவர்களும், சிந்தைசிந்த - மனங்குலையும்படி, குறுகினர்-(இராவணனிடம்) வந்து சேர்ந்தார்கள்;

ஏவலாளர் விரைந்து சென்று மந்திரிமாரை அழைத்தலும், அன்னார் தேர் முதலிய வாகனங்களிலேறிக்கொண்டு வந்து இராவணனைக் குறுகினரென்பதாம். 'முனிவர்க்குந் தேவர்க்குமென்ன கேடு சூழ்தற்கு இவர்கள் இராவணனிடம் செல்லலாயிற்றோ?' என்னும் அச்சத்தால் அம்முனிவர்களும் தேவர்களும் மனமழிந்தனரென்க. 'ஏயெனுமளவில்' என்றது, ஒருசொல் விழுக்காடு: மேலுலகத்தில் தேவர்போலப் பூலோகத்தில் அந்தணர்சிறப்புறுதலால், அவர்கட்கு 'வையத்தேவர்'என்று ஒருபெயராயிற்று; "மேலாத் தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்" என்ற ஆழ்வாரருளிச் செயலுங் காண்க. பி-ம்:—[1] துணையின். [2] திண்டேர்மேல். [3] மாவினிற். [4] சிவிகைதன்மேல். [5] மழை. [6] களிற்றின்மீதில். [7] திசைதொறும். (727)

## 169.—மந்திரிகளுடன் ஆலோசித்து இராவணன் மாரீசனிடஞ் செல்லுதல்.

வந்த [1]மந் திரிய ரோடு [2]மாசற மனத்தி னெண்ணிச்
சிந்தையி [3]னினைந்த செய்யுஞ் செய்கையன் றெளிவி னெஞ்சன்
அந்தரஞ் செல்வ தாண்டோர் விமானத்தி லாரு மின்றி
இந்திய[4]மடக்கி நின்ற மாரீச னிருக்கை சேர்ந்தான்.

(இ - ள்.) சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன் - மனத்தில் நினைத்தசெயல்களைத் தடையில்லாமற்) செய்து முடிக்குந் தொழிலையுடையவனும், தெளிவு இல் நெஞ்சன் - (இவ்விஷயத்தில் இன்னது செய்யவேண்டுமென்னுந்) துணிவு பிறவாத மனமுடையவனுமான இராவணன், வந்த மந்திரியரோடு - (கீழ்க்கூறியபடி) வந்தமந்திரிகளுடனே (கலந்து), மாசு அற-குற்றமில்லாதபடி, மனத்தின் எண்ணி - மனத்திலே ஆலோசித்து,—ஆண்டு-அப்பொழுதே, அந்தரம் செல்வது ஓர் விமானத்தில் - ஆகாயமார்க்கத்திற் பறந்து செல்லுந்தன்மையதான விமானமொன்றன்மேல் (ஏறி), ஆர்உம் இன்றி-வேறொருவரும் உடன்இல்லாமல் [தான் ஒன்றியாக], இந்தியம் அடக்கி நின்ற மாரீசன் இருக்கைசேர்ந்தான் - (பஞ்ச) இந்திரியங்களையும் அடக்கிக்கொண்டு (தவநிலையில்) நின்ற மாரீசனுடைய இருப்பிடத்தை யடைந்தான்; (எ - று.)

இராவணன் மந்திரிமாரோடு ஆலோசித்துப் பின்பு ஒரு விமானத்தின்மேலேறித் தவஞ்செய்து கொண்டிருந்த மாரீசனிருக்கையை யடைந்தானென்பதாம். மாசு அற - மந்திரிகளுடன் ஆலோசியாமல் தானே மனம்போனபடி செய்தனனென்ற பழிப்புக்கு இடமில்லாதபடி, அல்லது, ஐயந்திரிபுகளாகிய குற்றமில்லாமல் துணிவு பிறக்க எனினுமாம். நினைந்த - பெயர். 'சிந்தையினினைந்த செய்யுஞ் செய்கையன்' என்றது-இராவணனது இயல்பாகவுள்ள ஆற்றலையும், 'தெளிவினெஞ்சன்' என்றது-தற்காலத்தில் அவனுக்குக் காமமோகத்

தால்நேர்ந்த கலக்கத்தையுங் காட்டும். சிந்தையி னினைந்த செய்யுஞ் செய்கையன் - மனத்தையடக்கும் ஆற்றலில்லாமல் அதுபோனபடி நடப்பவனுமாம். ஆருமின்றிச் சேர்ந்தா னென இயையும்; ஆருமின்றி இந்தியமடக்கி நின்றனன்று இயைத்து, யாரும் உடனில்லாமல் தனியே தவஞ்செய்துநின்ற என்றுங் கொள்ளலாம்: தவத்துக்கு ஏகாந்தம் இனிது. இந்தியம் = இந்திரியம். இந்தச்செய்யுளினீற்றில் சூர்ப்பணகை சூட்சிப்படலம் முற்றும் என்று சிலபிரதிகளில் எழுதப் பெற்று, மேல் மாரீசன்வதைப்படலம் தொடங்குகின்றது. பி - ம்:—[1]மந்திரிகளோடு, மந்திரிகளோது. [2]வசனமுமனத்தினெண்ணு. [3]நினைந்து. [4]அடங்கநின்ற., (728)

## 170 —மாரீசன் இராவணனை எதிர்கொண்டு உபசரித்தல்.

இருந்தமா ரீச[1]னந்த விராவண னெய்த லோடும்
பொருந்திய [2]பயத்தன் சிந்தை பொருமுற்று வெருவு கின்றான்
கருந்தட [3]மலையன் னானை யெதிர்கொண்டு கடன்கள் யாவும்
திருந்திய செய்து செவ்வித் திருமுக நோக்கிச் செப்பும்.

(இ - ள்.) அந்த இராவணன் எய்தலோடும் - அவ்விராவணன் வந்தவளவிலே,—இருந்த மாரீசன் - அங்கிருந்த மாரீசனானவன், பொருந்திய பயத்தன் - அச்சமடைந்தவனும், சிந்தை பொருமுற்றுவெருவுகின்றான் - மனந்திடுக்கிட்டுக்கலங்குகின்றவனுமாய்,- கருதடமலைஅன்னானை - கரியபெரியமலைபோன்ற அவ்விராவணனை, எதிர்கொண்டு - எதிர்சென்றழைத்து, கடன்கள் யாவும் திருந்திய செய்து-(அவனுக்குச் செய்யவேண்டிய) கடமைகளாகிய உபசாரங்களையெல்லாம் செவ்வையாகச்செய்து, செவ்வி திரு முகம் நோக்கி- அழகுள்ள (அவ்விராவணனது) முகத்தைப் பார்த்து, செப்பும்- (சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ-று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

இரண்டாமடியினால், அரக்கர்தாமும் அஞ்சும்படியான இராவணனது கொடுமை விளங்கும்; அன்றியும், எப்பொழுதும் எல்லாப் பரிவாரங்களோடும் செல்லுந்தன்மையனான இராவணன் தனியே தனதுஇடத்துக்கு வந்தமை நோக்கி, மாரீசன், 'இவனுக்கு என்ன நேர்ந்ததோ!' என்று மனங்கலங்கியவனாயினா னென்க. கருந்தடமலை- வடிவோடு வலிமைக்கு உவமை. செவ்வி-பொலிவு. பி-ம்:—[1]வந்த. [2]பயத்தின். [3]மலையினானை. (729)

வேறு.

## 171.—மாரீசன் இராவணனை 'நீ வந்த காரியம் என்?' எனல்.

[1]சந்த மலர்த்தண் கற்பக நீழற் றலைவற்கும்
அந்தக னுக்கு மஞ்ச வடுக்கு மரசாள்வாய்
இந்த வனத்தென் னின்ன விருக்கைக் கெளியோரின்
வந்த கருத்தென் சொல்லுதி யென்றான் மருள்கின்றான்.

(இ-ள்.) மருள்கின்றான் - (தன்னிடம் இவன் வந்த காரணம் யாதோ வென்று) மயங்குகின்றவனான மாரீசன்,—(இராவணனை

நோக்கி), 'சந்தம்-அழகிய, மலர்-பூக்களையுடைய, தண் - குளிர்ச்சியான, கற்பகம்-கற்பகவிருட்சங்களின், நீழல்-நிழலில் வீற்றிருந்து அரசாளுகிற, தலைவற்குஉம்-(தேவர்) தலைவனான இந்திரனுக்கும், அந்தகனுக்குஉம்-யமனுக்கும், அஞ்ச-அச்சஞ்செய்யும்படி, அடுக்கும்-பொருந்திய, அரசு-அரசாட்சியை,ஆள்வாய்-நடத்துபவனே! (நீ இப்பொழுது), இந்த வனத்து-இந்தக்காட்டில், இன்னல்-துன்பந்தருவதான, என் இருக்கைக்கு-எனது இருப்பிடத்துக்கு, எளியோரின் வந்த-எளியவர்கள்போல(ப் பரிவாரமின்றித் தனியே) வந்த, கருத்து -நோக்கம், என்-என்ன? சொல்லுதி-சொல்வாய்.' என்றான்-என்று வினவினான்; (எ-று.)

மாரீசன் இராவணனை நோக்கி, அங்குவந்ததன் நோக்கத்தை வினவினானென்க. இந்திரனையும் யமனையும் எடுத்துச்சொன்னது தேவராசனும் அழித்தல்தொழில் நிகழ்த்துபவனு மாதலினென்க; உம்மைகள் - எண்ணுப்பொருளோடு உயர்வு சிறப்புப்பொருள்பட நின்றன. ஆள்வாய்-விளி; ஆளுகிற நீ யெனினுமாம். இன்ன லிருக்கையென்றது - தழைக்குடிசை[பர்ணசாலை]யை. இந்திரன் கற்பகச்சோலைநிழலிலிருந்து அரசுசெய்தலை, கீழ்ப்பாலகாண்டத்தில் "இன்றளிர்க்கற்பக நறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்கை யிழந்து" என்றதனாலும் அறிக. பி-ம்:—[1]கந்த மலர்.

இதுமுதற் பதினேழு கவிகள்-பெரும்பாலும் மூன்றாவது விளச்சீரும் ஐந்தாவது மாங்காய்ச்சீரும் மற்றையவை மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (730)

## 172.—இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்:-இராவணன் கூறும் விடை.

[1]ஆன தனைத்து மாவி தரித்தே னயர்கின்றேன்
போனது பொற்பு மேன்மையு மற்றென் புகழோடும்
யான துனக்கின் றெங்ங னுரைக்கே [2]னினிதென்னா
வான வருக்கு [3]நாண தடுக்கும் வசை [4]மன்னோ.

(இ - ள்.) ஆனதனைத்துஉம்-(என்னால்) இயன்ற வளவும் (பிரயாசப்பட்டு), ஆவி தரித்தேன்-உயிரைத் தாங்கிக்கொண்டிருந்தேன்: அயர்கின்றேன்-(இப்பொழுது அதுவும் அரியதாம்படி) தளர்கிறேன்; என்-எனது, பொற்புஉம் - பொலிவும், மேன்மைஉம்-பெருமையும், புகழோடுஉம்-கீர்த்தியுடனே, அற்று போனது-ஒழிந்து போய்விட்டது; அது-அங்ஙனமாதற்குக் காரணமாய் நேர்ந்தசெயலை, யான் உனக்கு இன்று எங்ஙன் இனிது உரைக்கேன்-நான் உனக்கு இப்பொழுது எவ்வாறு நன்கு கூறுவேன்? என்னா-என்று சொல்லி, —அது - அச்செயல், வானவருக்குஉம் நாண் அடுக்கும் வசை மன்னோ-தேவர்களுக்கும் (நாம்)இலச்சைப் படும்படியான பழிப்பை விளைப்பதன்றோ? (எ - று.)

இதுமுதல் நான்குகவிகள் குளக மாதலால், இக்கவியின் மூன்றாமடியில் 'என்னா' என்ற இறந்தகால வினையெச்சம், 175 -

ஆங் கவியில் வரும் "என்ருன்" என்ற முற்றைக் கொண்டு முடியும்.

இதனால், கூறுவதற்குங் கூசுமாறு தனக்கு வசை நேர்ந் துளது என்கிருன், இராவணன். பொற்பும் மேன்மையும்போனது-ஒருமைப்பன்மைமயக்கம்: தனித்தனிபோன தென்க. மற்று என எடுத்து, அசை யெனினுமாம். மற்று என் என எடுத்து, இன்னும் போகவேண்டுவது யாது உளது? ஒன்றுமில்லையே யென்னுங் கருத்துப்பட வுரைப்பினும் அமையும்; அன்றியும், பொற்பும் போனது: மேன்மையும் புகழோடு அற்றென் [அற்றனென்] என எடுத்துப்பொருள்கொள்ளுதலும் ஒன்று: இவ்வுரைக்கு, அற்றென் என்பது அற்றேன் என்பதன் விகாரமெனினுமாம். மூன்ருமடியால்-வாயினுற் கூறற்குங்கூடாத கொடுமையுடையது அதுஎன்றவாறு. இனிது உரைக்கேன் - நன்ருக விவரித்துக்கூறுவேன் என்றபடி. என்ன என்பதை என் நா எனப் பிரித்து, எனது நாவினுல் எவ்வாறு கூறுவேன் என்பாரும் உளர். வானவருக்கும் - நமக்குமுன் நாணமடைகின்றவர்களுக்கும் என்றவாறு. வானவருக்கும் நாண் அடுக்கும் வசை - நமக்கு அஞ்சித் தலைசாய்த்திருக்கிற தேவர்களுக்கும் நாம் அஞ்சித் தலை சாய்க்கும்படியான நாணத்தை யுண்டாக்குகிற அபகீர்த்தி யாகுமென்க. அது என்பதனுற் சுட்டப்படுபொருளை மேற்கவியில் விளக்குவன். அது வசையையுண்டாக்குவது என்ன வேண்டிய இடத்து, அது வசை என்றது-காரணத்தைக் காரியமாகக்கூறிய உபசாரவழக்கு. தனைத்து— தனை —அளவு; அதன்மேல் து - சாரியை, த்-சந்தி. ஆனது அனைத்தும்எனப் பிரித்து, எனக்கு எல்லாம் ஆய்விட்டது என்று உரைப்பர் ஒருசாரார்: அதற்குக் கருத்து - எல்லா நன்மைகளும் போயின என்றும், எல்லாத்தீமைகளும் நேர்ந்தன என்றுமாம். [1]ஆனை தனக்கும் ஆவிதரித்தேன் என்ற பாடத்துக்கு - திக்கஜங்களுக்கும் பின்னிடாது உயிர்தாங்கி நின்ற யான், இப்பொழுது இங்ஙனந் தளர்கிறேன் என உரை கொள்வர். பி- ம்:—[2]இனியென்ன, இனிதின்ன. [3]நாணம். [4]அம்மா.

173. வன்மை தரித்தோர் மானுடர் மற்றங் கவர்வாளால்
நின்மரு கிக்கு நாசி யிழக்கு நிலை [1]நேர்ந்தார்
என்மர புக்கு நின்மர புக்கு மிதன்மேலோர்
புன்மை தெரிப்பின் வேறினி யெற்றே புகல்வேலோய்.

(இ - ள்,) வேலோய் - வேலாயுதத்தையுடையவனே! மானுடர்-மனிதர்கள், வன்மை தரித்தோர் - வலிமைபூண்டார்கள்; மற்று - மேலும், அவர் - அவர்கள், வாளால் - (தமது) வாளினுல், நின் மருகிக்கு நாசி இழக்கும் நிலை - உனது மருமகளான சூர்ப்பணகைக்கு மூக்கையிழந்துவிடும்படியான நிலைமையை, நேர்ந்தார் - செய்தார்கள்; தெரிப்பின் - ஆராய்ந்து கூறுமிடத்து, என் மரபுக்கு உம் - எனது வமிசத்துக்கும், நின் மரபுக்கு உம் - உனதுவமிசத்துக்கும், இதன் மேல் ஓர் புன்மை - இதனினும் மேலான ஓரிழிவு, இனி வேறு எற்றுவ - இனி வேறு என்ன இருக்கிறது? புகல் - சொல்வாய்; (எ- று.)—அங்கு - அசை: ஜநஸ்தானத்திலென்றுமாம்.

தனக்கு நேர்ந்த வசையை இதனால் விவரித்துக் கூறுகின்றான். இயற்கையில் வலிமையில்லாத மானுடர் புதிதாக வலிமையுடையரா யினர்: அதனோடு உன்மருகியது மூக்கையறுக்கும் நிலைமையையும் அடைந்தார்களென்பது, முன்னிரண்டடிகளின் கருத்து. மாரீசன் இராவணனுக்கு மாமன்முறைமை பூண்டவனாதலால், சூர்ப்பண கையை 'நின்மருகி' என்றான். மருகி - இங்கே, உடன்பிறந்தவளது மகள்: ஆகவே, 'நின் மரபு' என்றது - தாய் மரபையும், 'என்மரபு' என்றது - தந்தைமரபையுமாம். தாடகை புத்திரர்களான சுபாகுமாரீ சர்கள் இராவணனது மாதாமகனான சுமாலியை யடுத்து அவனுக்கு மக்கள்முறைமைபூண்டு அதனால் இராவணனுக்கு மாமன்முறைமை யமைந்தன ரென்பது அறிக. எற்று - எ.து. வினாவடிக் குறிப்பு முற்று. பி - ம்:—[1]நேர்ந்தால், வந்தால். [2]உண்டோபுகல், ஒன்றோ புகழ். (732)

174. திருகு [1]சினத்தார் முதிர மலைந்தார் சிறியோர்நாள்
[2]பருகின னென்றால் [3]வென்றி நலத்திற் பழியன்றோ
[4]இருகை சுமந்தா னினிதி னிருந்தா னிகல்வேலுன்
மருக ருலந்தா ரொருவன் மலைந்தான் வரிவில்லால்.

(இ - ள்.) 'ஒருவன் - ஒருமனிதன், வரி வில்லால் - கட்டமைந்த வில்லைக்கொண்டு, மலைந்தான் - பொருதானாய், திருகு சினத்தார் - (சூர்ப்பணகை மூக்கறுபட்டமையை யறிந்து) முதிர்ந்த கோபங் கொண்டவர்களாய், முதிர மலைந்தார் - மிகுதியாகப் போர்செய்த வர்களான, சிறியோர் - (எனது) தம்பிமாரின் [கரன் முதலியோரின்], நாள் - ஆயுள்நாளை, பருகினன் - ஒழித்திட்டான்,' என்றால்—, வென்றி நலத்தில் பழி அன்றுஓ - (இதுவரையிலும்) வெற்றியே கொண்ட (நமது) மிக்க பெருமைக்குப் பழிப்பன்றோ? இகல் வேல் உன் மருகர் உலந்தார் - வலியவேலாயுதத்தையுடைய உனது மரு மக்கள் இவ்வாறு அழிந்தார்கள்; (அங்ஙனம் அழியும்படிவிட்டு அதற்கு நாம் யாதொருபரிகாரமுஞ்செய்ய முயலாமையால்), இரு கை சுமந்தான் இனிதின் இருந்தான் - (அந்த மனிதனோ) இரண்டு கைகளை வேலையில்லாதே தாங்கிச் சுகமாக இருக்கிறான்; (இது என்னே!) (எ - று.)

கீழ்ச்சூர்ப்பணகையை அங்கபங்கஞ்செய்ததைக்கூறிய இராவ ணன், இதனால், கரன் முதலியோரை இராமன் வதைத்ததை மாரீச னிடம் தெரிவிக்கின்றான். [4]இருகை சுமந்தா யினிதினிருந்தாய் என்ற பாடத்திற்கு - தமது சுற்றத்தார்க்குத் தீங்குசெய்த பகை வர்க்கு எதிர்செய்யாத கைகள் இருந்தும் பயனில்லை; அவை வீண்பாரம் மாத்திரமே யென்று கருத்துக் கூறுக: இனி, இத் தொடர்க்கு - இரண்டு கைகளையுந் தலைமேற்கொண்டு இனிய தவ நிலையில் இருந்தாய் என்று உரைப்பாருமுளர். கரன், தூஷணன், திரிசிரஸ் என்பவர் இராவணனுக்குத் தம்பிமுறைமை யுடையவ ராதலால், சிறியோ ரென்றும், உன்மருக ரென்றும் குறிக்கப்பட் டனர். நாள் பருகுதல் - ஆயுளையொழித்தல்: உண்ணாதது உண் பதுபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. 'வென்றிநலத்தில் பழி

யன்றே' என்பதற்கு - வெற்றிகொண்ட அவர்களுடைய நன்மையால் நமக்குப் பழியன்றோ என்றலும் ஒன்று. பி - ம்:—[1]சினத்தான். [2]பருகினர். [3]வென்ற நலத்தின். (733)

175. வெப்பழி யாதென் [1]னெஞ்ச [2]முலந்தேன் விளிகின்றேன்
[3]ஒப்பழி வென்றே போர்[4]செய லொல்லே னுடன்வாழுந்
துப்பழி செவ்வாய் வஞ்சியை வெளவத் துணைகொண்டிட்டு
இப்பழி [5]நின்னாற் றீரிய வந்தே னிவணென்றான்.

(இ - ள்.) வெப்பு அழியாது - (கீழ்க்கூறியவற்றா லுண்டான) கொதிப்புத்தணியாமல், என் நெஞ்சம் உலந்தேன் - (எனது) மனம் அழியப்பெற்றேன்; விளிகின்றேன் - மரணவேதனைப்படுகிறேன்; (ஆயினும்), ஒப்பு அழிவு என்றுஏ போர் செயல் ஒல்லேன் - (மனிதர்கள்) எனக்கு ஈடில்லையென்ற காரணத்தால் (அவர்களோடு) போர் செய்தற்கு உடன்படுகிறேனில்லை; (மற்று), உடன் வாழும் - அவர்களுடன் வாழ்கிற, துப்பு அழி செம் வாய் வஞ்சியை - பவழமும் ஒப்பாகாமற் கெடும்படியான சிவந்த வாயையுடைய வஞ்சிக் கொடிபோன்ற மெல்லிய பெண்ணை, வெளவ - எடுத்துக்கொண்டு வருதற்கு, துணை கொண்டிட்டு - (உன்னைத்) துணையாகக்கொண்டு, இ பழி நின்னால் தீரிய - இந்தப்பழிப்பை உன்னால் தீர்த்துக்கொள்ள, இவண் வந்தேன் - இவ்விடத்து வந்தேன், என்றான் - என்று (இராவணன் மாரீசனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

மானிடரால் விளைந்த பழியைத் தீர்க்கும்வழி அவருடன் வாழும் அழகிய நங்கையைக் கவர்வதேயென்று அறுதியிட்டு, அதன்பொருட்டு உன்னைத் துணையாகக்கொள்ளவே நான் இங்கு வந்ததென்று, இராவணன் தான் வந்த காரணத்தைத் தெரிவிக்கலானா னென்க. விளிகின்றேன் என்றது, அமங்களமாக வாயில் வந்ததுமாம். 'ஒப்பு அழிவு என்று' என்றது - எளியவர்களான மனிதர்களைச் சமமாகக்கொண்டு எதிர்த்துப் போர்செய்தல் புகழுக்குக் கேடாமென்று எண்ணி யென்க. 'துப்பழி' என்பதில், அழிதல்-தோற்றல்; உவமவுருபுமாம். இப்பழி தீர்த்தல்-பழிக்குப் பழிவாங்குதல்; என்னுடன்பிறந்த மகளை அவர்கள் மானபங்கஞ் செய்ததற்கு ஈடாக அவர்களுடன் வாழும் மகளைக் கவர்தல்மூலமாக அம்மானிடர்க்கு மானபங்கஞ்செய்தல். வஞ்சி - உவமவாகுபெயர். தீரிய - செய்யிய வென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இவ்வினையெச்சம், இங்கே தீர்க்க எனப்பிறவினைப்பொருளது. பி - ம்:[1]—நெஞ்சும். [2]உலர்ந்தேன். [3]ஒப்பிலரென்றே, ஒப்பிலரானோர். [4]செய. [5]நின்னில். (734)

## 176.—அதுகேட்ட மாரீசன் உடன்படாது மறுத்துக் கூறத் தொடங்குதல்.

இச்சொ லனைத்துஞ் சொல்லி யரக்க னெரிகின்ற
கிச்சி [1]னுருக்கிட் டுய்த்தன னென்னக் [2]கிளராமுன்
சிச்சி யெனத்தன் மெய்ச்செவி பொத்தித் [3]தெருமந்தான்
அச்ச மகற்றிச் செற்ற மனத்தோ டறைகின்றான்.

(இ - ள்.) எரிகின்ற கிச்சின்-எரிகிற நெருப்பிலே, உருக்கு இட்டு-இரும்பைப் போகட்டு(க் காய்ச்சி), உய்த்தனன் என்ன - (அதனைச்)செலுத்தினாற்போல, அரக்கன்-இராவணன், இ சொல் அனைத்துஉம் சொல்லி-இப்படிப்பட்ட சொற்களையெல்லாம் கூறி, கிளரா முன் - தூண்டாதமுன்னே [தூண்டியவுடனே யென்றபடி], (மாரீசன்), சிச்சி என தன் மெய் செவி பொத்தி-சீச்சீயென்று கூறித் தனது உடம்பிலுள்ள காதுகளை மூடிக்கொண்டு, தெருமந்தான்-மனஞ்சுழன்று, (பின்பு), அச்சம் அகற்றி - பயத்தை நீக்கி, செற்றம் மனத்தோடு - கோபங்கொண்ட மனத்துடனே, அறைகின்றான்-(சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை அடுத்த பதினொருகவிகளிற் காண்க.

இருப்புநாராசத்தை நெருப்பிலிட்டுக் காய்ச்சி அதனைக் காதினுள்ளே செலுத்தினாற்போல மிகவருத்தந்தரும்படி இராவணன் இவ்வார்த்தைகள் பலவற்றையுங் கூறி மாரீசன்மனத்தைக் கிண்டியெழுப்ப, இராவணன்சொல்லைக் கேட்கப்பிடியாமையால் மாரீசன் தன் செவிகளைக்கைகளாற் பொத்தித் தெருமந்து அவ்விராவணனிடத்து அச்சமின்றிச் சினத்தோடு சில கூறலானானென்க. கிச்சு-க்ருசாநு என்ற வடசொல்லின் திரிபென்பர். உருக்கு-உருகுந்தன்மையதென்பது பற்றிய காரணக்குறி. 170-ஆங் கவியில் "பொருந்திய பயத்தன் சிந்தைபொருமுற்றுவெருவுகின்றான்" என்றதை நோக்கி, இங்கு 'அச்சமகற்றிச் செற்றமனத்தோடறைகின்றான்' என்றார். பி-ம்:—[1] அரக்கிட்டு. [2] கிளர்வான்முன். [3] தெருண்மைந்தன். (735)

## 177.—இதுமுதற் பதினொரு கவிகள் ஒரு தொடர்: மாரீசன் எதிர்மறுத்துக் கூறும் வார்த்தை.

மன்னா நீ [1] நின் வாழ்வை முடித்தாய் மதியற்றாய்
உன்னா [2] லன்றீ தூழ்வினை யென்றே யுணர்கின்றேன்
[3] இன்னா வேனு மியானி துரைப்ப னிதமென்னாச்
சொன்னா னன்றே யன்னவ னுக்குத் துணிவெல்லாம்.

(இ - ள்.) 'மன்னா - அரசனே! நீ நின் வாழ்வை முடித்தாய் - நீ உனது வாழ்க்கையை முடித்துவிட்டாய்; மதி அற்றாய் - அறிவு கெட்டாய்; ஈது - இது, உன்னால் அன்று-உன்னாலே யுண்டானதன்று; ஊழ்வினை என்றுஏ உணர்கின்றேன் - விதிப்பயனால் விளைந்ததென்றே எண்ணுகிறேன்; இன்னா(து) ஏன்உம் - (நான்) சொல்வது உனக்கு இனிதாகத் தோன்றாதாயினும், இது இதம்-இந்தநன்மையைத்தருஞ்சொல்லை, (உனக்கு), யான்உரைப்பன்-நான் கூறுவேன்', என்னா-என்று சொல்லி, (மாரீசன்), அன்னவனுக்கு-அவ்விராவணனுக்கு, துணிவு எல்லாம்-உறுதிதரும் இதமொழிகள் பலவற்றையும், சொன்னான் - கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை அடுத்த பத்துக்கவிகளிற்கூறுகிறான். அன்றே - தேற்றம்.

இராவணன் கொண்ட கருத்தைக் கண்டித்து மாரீசன் அவனுக்கு இதமொழி கூறலானான் என்க. "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில், தீமைபுரிந்தொழுகுவார்" என்றபடி பிறர் மனைவியை விரும்புவோர் அறம்பொருளின்பங்களாகிய பயனைச் சிறிதும் அடையமாட்டாமல், பலவகைத்தீமையையே யடைதலால் 'நின்வாழ்வை முடித்தாய்' என்றும், "எனைத்துணைய ராயினு மென்னாந்தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்றபடி பிறனில்விழைவோர் காமமயக்கத்தால் தம்பிழையைச் சிறிதும் அறியாமல் எல்லாப் பெருமையையும் இழத்தலால் 'மதியற்றாய்' என்றுங் கூறினான். 'உன்னால் அன்று' என்றது, சகல வேதசாஸ்திரங்களின் பொருளை நன்கு உணர்ந்த புத்திமானான நீ கருதும் இயல்பினதன்று இது என்றபடி. [3]'இன்னாநெஞ்சனேனுமுரைப்ப லிதம்' என்ற பாடத்திற்கு-நான் (முன்பு) தீயசிந்தை யுடையவனாயிருந்தாலும் (இப்பொழுது) நல்லன கூறுவேனென்றும், நீ சொல்லும் வார்த்தையைக் கேட்டு நான் வருத்தங் கொண்டுள்ளேனாயினும் உனக்கு நன்மையைக் கூறுவேனென்றும் பொருளாம். துணிவு-உறுதிதருவனவற்றிற்குக் காரியவாகுபெயர். இனி, துணிவு என்பதற்கு-சான்றோர் துணிந்து செய்யத் தக்கதெனக் கொண்ட நல்விஷய மென்றும், தனது நிச்சயமென்றும் பொருள் கொள்ளலாம். முடித்தாய்-விரைவுந் தெளிவும் பற்றிய காலவழுவமைதி. ஹிதம்-வடசொல். பி-ம்:—[1]உன். [2]அன்றிது. (736)

178. அற்ற கரத்தோ டுன்றலை[1]நீயே யனன்முன்னில்
பற்றினை யுய்த்தாய் பற்பல காலம் பசிகூர
உற்றுயி ருள்ளே தேய வுலந்தாய் [2]பினையன்றோ
[3]பெற்றனை செல்வம் [4]பின்ன திகழ்ந்தாற் பெறலாமோ.

(இ-ள்.) அற்ற-(வாள்கொண்டு) அறுக்கப்பட்ட, உன்கரத்தோடு தலை-உனது கைகளையும் தலைகளையும், அனல் முன்னில் - வேள்வித் தீயினிடத்தில், நீயே—, பற்றினை உய்த்தாய் - கொண்டு செலுத்தி [வேள்விசெய்தும்], பல்பலகாலம் - மிகப்பல காலம், பசிகூர உற்று - பசிமிகும்படி பொருந்தி, உயிர் உள்ள தேய உலந்தாய் - உயிர் உடலினுள்ளே வாடும்படி வருந்தித் தவஞ்செய்தாய்: பினை அன்றோ-அதன் பின்பு அல்லவா, செல்வம் பெற்றனை- மிக்கபாக்கியத்தைப் பெற்றாய்; அது-அந்தப்பாக்கியத்தை, பின் - பின்பு, இகழ்ந்தால் - அலட்சியஞ் செய்து இழந்துவிட்டால், பெறல் ஆம்ஓ - மீண்டும் அடைய முடியுமோ? (எ - று.)

எவ்வளவோ வருத்தப்பட்டு அருந்தவஞ்செய்து நீ பெற்ற இப்பெருஞ்செல்வத்தைப் பிறனில்விழைதலால் எளிதில் இழக்கலாகாது என்று உறுதிகூறுகிறான் மாரீசனென்பதாம். நீயேபற்றினையுய்த்தாய் - அறுபட்ட கைகளையும் தலையையும் அறுபடாத கைகளாற் பிடித்துப் போகட்டாயென்றபடி. இராவணன் தவஞ் செய்தற்பொருட்டுக் கோகர்ணாச்சிரமஞ் சேர்ந்து அங்கு ஓராயிரம் வருஷகாலம் உபவாசமிருந்து தவம்புரிதலும், அதன்முடிவில் தனது தலையொன்றையும் கைகளிரண்டையும் அறுத்து அக்கினியில் ஓமஞ்

செய்தலுமாக இப்படி ஒன்பதினுயிரம் வருடத்தில் ஒன்பது தலைகளை யும் பதினெட்டுக் கைகளையும் அறுத்து அனலிலிட்டபின் ஆயிர வருஷகாலம் பட்டினியிருந்து அப்பால் மிச்சமாய் நின்ற ஒரு தலையை யும் இருகைகளையுந் துணிக்கத் தொடங்கிய வளவில், பிரமதேவன் அவனுக்குப் பிரதியட்சமாய், அறுபட்ட தலைகளெல்லாம் மீண்டும் முளைத்திடும்படி வரங்கொடுத்து, மற்றும் அவன் வேண்டிய வரங்க ளெல்லாவற்றையும் தந்தருளினனென வரலாறு அறிக. பி - ம்:—[1] தீயேயனன் முன்றில். [2] உழை. [3] பெற்றன. [4] பின்னும். (737)

179. திறத்[1]திற ஞலோ செய்தவ முற்றித் திருவுற்ருய்
மறத்திற ஞலோ[2] சொல்லுதி சொல்லாய் மறைவல்லோய்
அறத்திற ஞலே யெய்தினை யன்ருே வதுநீயும்
புறத்திற ஞலே [3]பின்னு மிழக்கப் புகுவாயோ.

(இ - ள்.) சொல் ஆய் மறை வல்லோய்-சொற்களை ஆராய்தற்கு உரிய வேதங்களில் வல்லவனே! திறம் திறனல்ஓ - மேலான தரும மார்க்கத்தினுலோ, (அன்றி), மறம் திறனல்ஓ-அதருமவழியினுலோ, (நீ), செய் தவம் முற்றி திரு உற்ருய் - செய்தற்குரியதவத்தைச் செய்து முடித்து மேலான பாக்கியத்தை யடைந்தாய்? சொல்லுதி - சொல்வாய்: அறம் திறனல்ஏ எய்தினை அன்ருே- தரும மார்க்கத் தினுலேயே (நீ செல்வத்தை) அடைந்தாயன்ருே? அது-அச்செல்வத் தை, நீயும்—, புறம் திறனல்ஏ பின்உம் இழக்க புகுவாய்ஓ - (அந்தத் தருமத்தினும்) வேறுபட்டதான அதருமவழியால் மீட்டும் இழந்து விடத் தொடங்குவாயோ? (எ-று.)

நீ அடைந்த பயன் அறநெறியினு லென்றே உனக்குத் தெரியு மாகையால், அந்நெறி தவறின் அப்பயனுந் தவறுமென உணர்ந்து, அந்நெறி தவருது நிற்பா யென்பான், இவ்வாறுகூறுகிருன். இராவணன் வேதங்களையெல்லாம் ஓதியுணர்ந்து அவற்றிற் சில ஒழுங்குகளையுஞ் செய்துள்ளானென்பது பிரசித்தம்; ஆனதுபற்றி, 'சொல்லாய் மறை வல்லோய்' என விளிக்கப்பட்டான். நீயும் என்ற உயர்வுசிறப்பும்மையும், அப்படிப்பட்ட அறிவுடைமையையே காட்டும். பி - ம்:—[1] திறனுலே. [2] கொல்லுதிகொல்லாம், கொல்லுதிகொல்லாய். [3] இன்னும். (738)

180. நாரங் கொண்டார் நாடு [1]கவர்ந்தார் [2]நடையல்லா
வாரங் கொண்டார் மற்[3]ருெரு வர்க்காய் மனைவாழுந்
தாரங் கொண்டா ரென்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய் கண்டக ருய்ந்தா ரெவரையா.

(இ-ள்.) நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார்-(தம்மிடத்து) அன்பு கொண்டுள்ளாரது நாட்டைக் கவர்ந்துகொண்டவரும், நடை அல்லா வாரம் கொண்டார்-நீதிநெறிக்கு ஒத்ததல்லாத குடியிறைப்பொருளை வலியவாங்கியவரும், மற்று ஒருவர்க்கு ஆய் மனை வாழும் தாரம் கொண்டார்-வேருெருவர்க்கு உரிமையாய் அவர் வீட்டில் வாழ்கிற மனையாளைத் தம்வசப்படுத்திக் கொண்டவரும், என்ற இவர் தம்மை- என்ற இவர்களை, தருமம் தான் ஈரும் - தருமதேவதை தானே

அறுத்து அழிக்கும்; கண்டாய்-(இதனை நீ) .அறிவாய்; ஐயா-ஐயனே! கண்டகர் உய்ந்தார் எவர்-துஷ்டர்களுள் (தீமையடையாமல்)பிழைத்த வர் யார்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

பிறன்மனை விழைபவர் அறக்கடவுளால்தவருமல் தண்டிக்கப் படுவ ரென்பதைக் கூறுவான் அவர்க்கு இனமானவர்களையும் எடுத்துக்காட்டினான். இங்ஙனம் கூறவேண்டிய பொருளோடு கூற வேண்டியன அல்லாத பொருள்களையும் சேர்த்து ஒரு பொதுத் தன்மை கொடுத்து 'தருமந்தாவீரும்' என்று கூறியது - ஒப்புமைக் கூட்டவணி. "நாரங்கொண்டார் நாடுகவர்ந்தார்" என்றது - நம்பிக் கைத் துரோகமாகத் தம்மிடத்து அன்பு செய்தாரது நாட்டைக் கொள்ளைகொண்டவர் என்றவாறு. நடையல்லா வாரம் கொள் ளுதல் - ஆறிலொருகடமைக்கு அதிகம் வாங்குதல்; இனி, இத் தொடர்க்கு-நியாயவழிக்கு மாருகப்பக்ஷபாதங்கொண்டவர் என்று உரைப்பாருமுளர். கண்டகர்-முட்போன்றவர்: பிறர்க்கு உபத்திரவஞ் செய்பவரென்றபடி. கண்டாய் - தேற்றம். ஐயா வென்றது, அன்பு பற்றியவிளி. பி - ம்:—[1] துறந்தார். [2] நடுவில்லா. [3] ஒருவற்காய். (739)

181. அந்தர முற்ற னகலிகை பொற்பா லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெத்தனை யோர்தா [1] மிழிபுற்றார்
செந்திரு வொப்பா ரெத்தனை யோர்நின் றிருவுண்பார்
மந்திர மற்றா ருற்ற துரைத்தாய் மதியற்றாய்.

(இ - ள்.) அந்தரம் உற்றான் - சுவர்க்கலோகத்தை(த் தனது) உரிமையாக அடைந்துள்ளவனான இந்திரன், அகலிகை பொற்பால் அழிவு உற்றான் - அகலியையினது அழகினால் தீமையடைந்தான்; இந்திரன் ஒப்பார் எத்தனையோர்தாம் - அவ்விந்திரன் போன்றவர் மற்றும் எவ்வளவுபேர்கள், இழிபு உற்றார்-(பிறர்மனைவிரும்புதலால்) இழிவையடைந்தவர்கள்? செம் திரு ஒப்பார் எத்தனையோர் நின் திரு உண்பார் - செந்நிறமுடைய இலக்குமியையொக்கும் அழகிய மகளிர் எவ்வளவுபேர்கள் உனது அழகை அனுபவிப்பவர்கள்? (அப்படியிருக்க), மந்திரம் அற்றார் உற்றது உரைத்தாய் - ஆலோசனையில்லாதவர்கள் கூறுதற்கு ஏற்றவார்த்தையை (நீ) கூறினாய்; (ஆதலால்), மதி அற்றாய் - அறிவுகெட்டாய்; (எ - று.)

முதலடி - பிறன்தாரத்தை நச்சியதனால் இந்திரன்பெற்ற இழி நிலையைக்கூறியது. இரண்டாமடி, தன்மித்திரனான சிவபிரானது மனைவி பார்வதியைக் கண்டதனால் 'ஏகாட்சி பிங்களன்' என்று பேராகும்படி குற்சிதஉடம்பைப் பெற்ற குபேரன் முதலியோரைக் கருதிக் கூறியது. மூன்றாமடி - உன்கருத்துக்கு ஒத்து உன்னுடன் இருந்து இன்பநுகரும் மகளிர் பலர் இருக்கின்றனரே; அங்ஙன மிருக் கவும், நீ திருப்திகொள்ளாமல் இங்ஙனம் மேன்மேல் வீணாசை கொள்ளுதல் பெருங்குற்றமன்றோ என்று கூறியது.

அகலிகை - கௌதமமுனிவனது மனைவி; சநகமகாராசாவுக்குப் புரோகிதனாகிய சதாநந்தமுனிவனதுதாய். பிரமதேவன்முன்காலத் தில் ரூபத்திலும் குரலிலும் வேறுபாடில்லாமல் ஒருபடிப்பட்டவே பிர

ஜைகளைப் படைத்துவந்தான்: பின்பு, ஒருவர்க்கொருவர் வேற்றுமை யின்றியிருப்பது நலமன்றுஎனக்கருதி,முன் படைத்த பிரஜைகளுக்கு அந்தந்த அங்கங்களிலுள்ள சிறப்பையெல்லாம் எடுத்து அதைக் கொண்டு அழகு மிகுந்த பெண்ணொருத்தியைப்படைத்து, அவளுக்கு அஹல்யையென்று பெயரிட்டான். ஏனெனில்,—ஹலம் என்றால் விரூபம், அதாவது - கண்ணுக்கு இனியாதது: அதனாலுண்டா னது - ஹல்யம், அதாவது - அழகின்மை; அது அல்லாதவளாத லின் அஹல்யா என்று காரணப்பெயர் தந்தனன். அப்பொழுது இந்திரன் இம்மேலான பெண்ணுக்குத் தக்க கொழுநன் மேலான தானேயன்றி வேறில்லை யென்று செருக்குற்றிருந்தான்; இங்ஙனம் இந்திரன் பிரமனது கருத்திற்கு மாறாக எண்ணிச் செருக்குற்றிருந் தனனாதலால், படைத்தற்கடவுள் அவளை அவனுக்குக் கொடாமற் கௌதம முனிவனிடங்கொடுத்து 'இவளைப் பாதுகாத்துவருக' எனக் கட்டளையிட்டான்; அவ்வாறே அம்முனிவன் வெகுகாலம் பாதுகாத் துப் பின்பு பிதாமகக்கடவுளிடங் கொணர்ந்துவிட்டான்; கௌத மனது மனஞ் சபலப்படாம லிருந்தையும், அவனது தவநிட்டையை யுங் கண்டு, நான்முகக்கடவுள் உகந்து அம்முனிவனுக்கே அவளை மனைவியாக்கினன்; இந்திரனோ பொறாமை கொண்டு வேற்றுருவத் தால் அவளைக் கற்பழிக்கக் கருதினன்: இவ்வாறு பலநாளாய்ப் பெருங்காதல் கொண்டிருந்த தேவேந்திரன் ஒருநாள் நடுராத்திரியில் கௌதமனாச்சிரமத்துக்கு அருகே வந்து பொழுதுவிடியுங்காலத்துக் கோழிகூவுவதுபோலக் கூவ,அதுகேட்ட முனிவன் சந்தியாகாலஞ் சமீ பித்துவிட்டதெனக் கருதி யெழுந்து காலைக்கடன் கழிக்கும்பொருட்டு நீர்நிலைநோக்கிப் புறப்பட்டுச்செல்ல, அப்பொழுது இதுவேசமய மென்று இந்திரன் அம்முனிவனுருக்கொண்டு ஆச்சிரமத்துட்சென்று இவளோடு கலக்கையில், இவளும் 'தன்கணவனல்லன், இந்திரன்' என்று உணர்ந்தும் விலக்காமல் உடன்பட்டிருக்க, அதனை ஞானக் கண்ணா லறிந்து உடனே மீண்டுவந்த அம்முனிவன் அவளைக் கருங் கல் வடிவமாம்படியும், இந்திரனை உடம்புமுழுவதிலும் ஆயிரம் பெண் குறி யடையும்படியுஞ் சபித்து, உடனே அவர்கள் அஞ்சிநடுங்கிப் பல வாறு வேண்டிக்கொண்டதற்கு இரங்கி, முறையே, 'ஸ்ரீராமனது திரு வடிப்பொடிபடுங்காலத்து இக்கல்வடிவம்நீங்கித்தன்னுருவம் பெறுக' என்றும், 'அப்பெண்குறிகள் பிறர்க்குக் கண்களாகப் புலப்படுக' என் றும் அவர்களுக்கு அநுக்கிரகிக்க,அவ்வாறே கல்லுருவமாய்க் கிடந்த அகலியை, ஸ்ரீராமலக்ஷ்மணர்விசுவாமித்திரனோடு மிதிலைக்குச்செல் லும்போது ஸ்ரீராமனது திருவடித்துகள் பட்டமாத்திரத்தில் சாபம் நீங்கி இயற்கையுருவமடைந்தாளென்பது, முதலடியின் கதை. கௌத மன் இந்திரனை ஆண்குறியிழக்கும்படியும், அகலியையை அரூபியாகி உணவில்லாமற் பலநாள்சாம்பலிலே கிடக்கும்படியுஞ் சபித்தன னென்றும், இந்திரனைப் பகைவன் கையிலே அகப்பட்டுப்பேரவமான மடையும்படி சபித்தனனென்றும், இன்னும் சிறிதுவேறுபடுத்தியும் இவ்வரலாறு நூல்களிற் கூறப்படும். பி - ம்:—[1] இயல்பற்றார். *(740)*

182. [1]செய்தா யேனுந் தீவினை யோடும் பழியல்லால்
எய்தா [2]தெய்தா தெய்தி னிராம னுலகீன்றான்

வைதா லன்ன வாளிகள் கொண்[3]டும் வழியோடும்
கொய்தா னன்றே கொற்ற முடித்துன் குழுவெல்லாம்.

(இ - ள்.) செய்தாய் என்உம் - (நீ உன் எண்ணப்படி முயற்சி) செய்தாயானாலும், தீ வினையோடுஉம் பழி அல்லால் - (உனக்குப்) பாவமும் பழியும் வருமேயல்லாமல், எய்தாது எய்தாது - (உன் எண்ணம்) கைகூடாது கைகூடாது; எய்தின் - (ஒருகால் உன் எண்ணம்) கைகூடுவதாயின்,—உலகு ஈன்றான் இராமன் - எல்லா வுலகங்களை யும் படைத்தவனான இராமன், வைதால் அன்னவாளிகள் கொண்டு- (முனிவர்கள்) சபித்தாற்போன்ற கொடிய அம்புகளைக்கொண்டு, வழி யோடுஉம்-(உனது) சந்ததியுடனே, உன் குழு எல்லாம் - உன் கூட் டத்தையெல்லாம், உம் கொற்றம் முடித்து கொண்டு - உங்களுடைய வலிமையைப் போக்கி, கொய்தான் அன்றே - நிச்சயமாகத் துணித் திடுவானன்றோ? (எ - று.)

இராமபிரானது மனைவியை நீ கவரமுயன்றாயாயின் 'தீவினை யோடும் பழியல்லால் எய்தாது' என்றான். இருமையையும் இழப்பா யென்றபடி; மறுமைக்குப் பாவமும், இம்மைக்குப் பழியும் தீமை தருவன. நீ ஒருவன் செய்யுந் தீச்செயலால் உன்னைச் சார்ந் தார் யாவரும் பெருந்தீமையடையநேரு மென்பது, பின்னிரண்டடி யினால் விளக்கப்பட்டது. சீதை உனக்கு உரிமையாகா ளென்பது, 'எய்தாது எய்தாது' என்றதன் கருத்து; அடுக்கு - துணிவை விளக்கும். பிரமரூபியாய் நின்று உலகங்களைப் படைத்தல்செய் யுந் திருமாலின் அவதாரம் இராமனென்ற உண்மையை, 'இராம னுலகீன்றான்' என்றதனால் விளக்கினான். "அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன்றார நச்சுவார்ச்சேரா - பிறன்றாரம், நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவமென்று, அச்சத்தோ டிந்நாற் பொருள்" என்ற நாலடிச்செய்யுள், இக்கவியின் முதலடிக்கு மேற் கோளாகற்பாலது. வைதாலன்ன வாளிகள் - முனிவர்சாபம் தீப் பயன் விளைத்தலில் தவறாமைபோல, தவறாது கொடுமை விளைக் கும் அம்புகளென்றபடி; "சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம்" எனப் பாலகாண்டத்தில் தாடகைவதைப்படலத்திலும் வந்தமை காண்க. அன்றே - தேற்றம். கொய்தான் - துணிவுபற்றி, எதிர் காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது. பி-ம்:—[1]செய்தால். [2]எய்தானென்னில். [3]உன். (741)

183. [1]என்றா லென்னே [2]யெண்ணலை யேநீ கரனென்பான்
நின்றானைக்கு மேலுள னென்னு நிலையம்மா
[3]தன்றானைக்குற் றாரொடு மாளத் தனுவொன்றால்
கொன்றான் முற்றுங் கொல்ல மனத்திற் குறிகொண்டான்.

(இ - ள்.) என்றால் - இவ்வாறு (நீதி) சொன்னாலும், என் ஏ நீ எண்ணலைஏ - ஏனோ நீ (சிறிதும் அதனைக்) கருதுகின்றாயில் லையே; அம்மா - அந்தோ! நின் தானைக்கு மேல் உளன் என்னும் நிலை - உனது சேனைக்குத் தலைவனாகவுள்ளவ னென்னும் நிலைமை யையுடைய, கரன் என்பான் - கரனென்பவன், தன் தானைக்கு உற்றா ரொடு மாள - தனது சேனையிற் பொருந்தினவர்களுடனே இறக்கும்படி

தனு ஒன்றால் கொன்றான் - ஒரு வில்லைக்கொண்டே கொன்ற வனான இராமன், முற்றும் கொல்லமனத்தில் குறிகொண்டான் - (அரக்கர்குலம்) முழுவதையும் கொல்லுதற்கு மனத்திற் கருதிய வனானான்; (எ - று.)

வேறொருவருந் துணையில்லாமல் தானொருவனாகவே கரன்முதலி யோரைத் தானையோடும் தனிவில்லாளியாய்க்கொன்ற இராமன் மற்றும் அரக்கர்குலத்தை வேரோடறுக்கக் கருதியுள்ளான்: இந் நிலையில் நான் எத்துணை நீதி சொன்னாலும் அதனைக் கருதுகின்றா யில்லையே என்று இராவணன் செயலுக்கு மாரீசன் வருந்துகிறா னென்றவாறு. என்னே, அம்மா என்ற இடைச்சொற்கள்-இரங் கற்பாடு. மூன்றாமடியில், தானைக்கு - உருபுமயக்கம். பி-ம்—[1]என் றான். [2]எண்ணலையோ. [3]தன்றானைத்திண்டேரொடும். (742)

184. [1]வெய்யோர் யாரே வீர விராதன் றுணைவெய்யோர்
[2]ஐயோ போனா னம்பொடு மும்பர்க் கவனென்றால்
உய்வார் யாரே [3]நம்மி னெனக்கொண் டுணர்தோறும்
நையா நின்றே னீயி துரைத்து நலிவாயோ.

(இ-ள்.) வெய்யோர்-கொடியவர்களுள், வீர விராதன் துணை வெய்யோர்-வீரத்தன்மையுள்ள விராதனவ்வளவு கொடியவர்,யாரே- யாவர் உளர்? [எவருமில ரென்றபடி]; அவன்-அவ்விராதன், அம் பொடும் - (இராமனது)அம்பினால், ஐயோ உம்பர்க்கு போனான்- (இறந்து) மேலுலகத்திற்குப் போய்விட்டான், என்றால்—, நம்மின் உய்வார் யாரே-நமக்குள் [அரக்கர்களில்] (இராமனம்புக்குத் தப்பிப்) பிழைப்பவர் எவரோ? [எவருமில்லை யென்றபடி], என கொண்டு உணர்தோறும்-என்று மனத்திற்கொண்டு ஆலோசிக்கும் பொழு தெல்லாம், நையாநின்றேன் - மனந்தளர்கிறேன்; (அங்ஙனமிருக்கை யில்), நீ இது உரைத்து நலிவாய் ஓ-நீ இவ்வார்த்தையைச் சொல்லி (மேலும்) வருத்துவாயோ? (எ - று.)

'வெய்யோனான விராதனையே இராமபிரான் கொன்றானே! அப்படிப்பட்ட இராமனோடு பகைத்து உயிர்மிஞ்சுவார் யாவரே? எவருமில்லை: இதையெண்ணியே நைகின்றேன். அங்ஙனமிருக் கையில், அவன்மனைவியைக் கவரத் துணைபுரிவாயென்று சொல் லிப் பின்னும் வருத்துகின்றாயே!' என்றனன் மாரீசனென்க. வீர வென்றது, இராவணனை நோக்கிய விளியாகவுமாம். ராமலக்ஷ்மணர் கள் விராதனை வாள்கொண்டு தோள் துணித்தாராதலால், 'அம்பு' என்றது - ஆயுதமென்றமாத்திரமாய், இங்கேவாளைக்குறித்தது என்னலாம். நலிவாய் என்றது - இங்கு, பிறவினைப் பொருள் தந்தது; அன்றி, இங்ஙனஞ் சொல்லிக் கெடுவாயோ எனத் தன் வினையாக் கொள்ளுதலும் ஒன்று. பி - ம்:—[1]வெய்யார். [2]ஐயா. [3]நம்மில்வரக். (743)

185. மாண்டார் மாண்டார் நீயினி மாள்வார் தொழில்செய்ய
வேண்டா வேண்டா [1]செய்திடி லுய்வான் விதியுண்டோ

ஆண்டா ராண்டா ரெத்தனை [2]யென்கோ வறநோனார்
ஈண்டா ரீண்டார் நின்றவ ரெல்லா மிலரன்றே.

(இ - ள்.) மாண்டார் மாண்டார்-இறந்தவர்கள் இறந்தார்கள்; இனி—, மாள்வார் தொழில் நீ செய்ய வேண்டா வேண்டா-இறப்ப வர்கள் செய்தற்கு உரிய தொழிலை நீ செய்யவேண்டாம் செய்ய வேண்டாம்; செய்திடில்-செய்தால், உய்வான் விதி உண்டு ஓ-பிழைத் தற்கு நல்லூழ் உளதாமோ? [ஆகாது]; ஆண்டார் ஆண்டார் எத்தனை என்குஒ-(உலகத்தில் ஒருவர்பின் ஒருவராய்) அரசாண்ட வர்கள் எவ்வளவு பேரென்று சொல்வேன்! [சொல்ல முடியாதென்ற படி]; (அவர்களுள்ளும்), அறம் நோனார் - தருமத்தை அனுட்டி யாதவர், ஈண்டார்-விருத்தியடையமாட்டார்; (அன்றியும்), ஈண்டு ஆர் நின்றவர்-இவ்வுலகத்தில் எவர்தாம் (அழிவடையாது) நிலைத் தவர்? எல்லாம் இலர் அன்றே-அனைவரும் இல்லையாகின்றவரே யன்றே? (எ-று.)

நீ தீவினையால் மாள்பவரின் தொழிலைச் செய்யவேண்டா: செய்யின் உய்யும் நல்லூழ் உளதாகுமோ? ஆகாது: உலகத்தை யாண்டவர் பல அரசர்: அவர்யாவரும் இறந்தே போனார்: ஆகவே ஆக்கத்தையுண்டாக்கும் அறத்தை மேற்கொள்ளுதலே மேம்படு தற்கு நெறியென்றவாறு. 'ஈண்டு ஆர் நின்றவர்? எல்லாம்இலரன் றே' என்றது - யாக்கைநிலையாமையையும், 'அறம்நோனார் ஈண்டார்' என்பது - தருமந் தவறினவர் ஆக்கமடையாரென்பதையுங்காட்டும். மாண்டார் மாண்டார் என்பதற்கு-மாட்சிமைப்பட்டவர்களும் (தீவினை செய்ததனால்) இறந்தார்களென்று உரைப்பினுமாம். "வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந்து, ஆழ்ந்தாரென் றல்லா லன்றுமுத லின்றிறுதியா, வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்ப ரென்பதில்லை" என்றார், சடகோபரும். பி - ம்:—[1]செய்கெனின். [2]என்கேனறனளார். (744)

186. எம்பிக் கும்மென் னன்னை தனக்கு மிறுதிக்கோர்
அம்புய்க் கும்போர் வில்லி தனக்கு மயனிற்குந்
தம்பிக் கும்[1]மென் னாண்மை தவிர்ந்தே [2]தளர்வுற்றே
கம்பிக் கும்மென் னெஞ்சவ னென்றே கவல்கின்றேன்.

(இ - ள்.) எம்பிக்குஉம்-எனது தம்பியான சுபாகுவுக்கும், என் அன்னை தனக்குஉம் - எனது தாயான தாடகைக்கும், இறுதிக்கு - மரணமுண்டாகும்படி, ஓர் அம்பு உய்க்கும் - ஒப்பற்ற அம்பைச் செலுத்திய, போர் வில்லிதனக்குஉம்-போருக்குரிய வில்வீரனான இராமனுக்கும், அயல் நிற்கும்-அவனருகில் (எப்பொழுதும்) நிற்கிற, தம்பிக்குஉம் - (அவனது) தம்பியான இலக்குமணனுக்கும், என் ஆண்மை தவிர்ந்து - எனது பராக்கிரமம் அழிந்து, தளர்வுற்று - தளர்ச்சியடைந்து, என் நெஞ்சு கம்பிக்கும்-என்மனம் நடுங்குகின்றது; (ஆதலால்), அவன் என்றுஏ - அத்தன்மையனை இராமனென்ற காரணத்தாலே, கவல்கின்றேன்-கவலைப்படுகின்றேன்; (எ-று.)

இராமனென்பான், எம்பியையும் என் அன்னையையும் ஓரம் பினால் மாய்த்தவன்; அவனுக்கு அயலில்நிற்கும் அவன் தம்பி அவனோடொத்த ஆண்மையுள்ளான்; இவ்விருவர்திறத்து என் னுண்மைதவிர்ந்து என்னெஞ்சம்தளர்வுற்றுநடுங்குமென்கின்றான், மாரீச னென்க. எம்பிக்குமென், தம்பிக்குமென், கம்பிக்குமென்— மகரவொற்று-விரித்தல். பி-ம்:—[1]நம். [2]சயநிற்கும். (745)

187. நின்றுஞ் சென்றும் [1]வாழ்வன யாவு நிலையாவால்
பொன்றும்[2]மென்னும் மெய்ம்மை [3]யுணர்ந்தாம் புலையாடற்கு
ஒன்றும் முன்னா யென்னுரை கொள்ளா யுயர்செல்வத்து
என்றும் மென்றும் வைகுதி யையா வினியென்றான்.

(இ - ள்.) நின்றுஉம் - (அசையாமல்) நின்றும், சென்றுஉம் - (அசைந்து) சென்றும், வாழ்வன யாஉம் - வாழ்பவையாகிய சராசரப் பொருள்களெல்லாம், நிலையா - நிலைபெறுதவையாய், பொன்றும் - அழிந்திடும், என்னும்-என்கிற, மெய்ம்மை-உண்மையான இயல்பை, உணர்ந்தாம் - பிரதியட்சமாக அறிந்துளோம்; (ஆதலால்), இனி—, ஐயா—! (நீ), புலை ஆடற்கு ஒன்றுஉம் உன்னாய்-இழிவானதொழில் செய்தற்குச் சிறிதும எண்ணங்கொள்ளாமல், என் உரை கொள்ளாய் - எனது வார்த்தையை அங்கீகரித்து, உயர் செல்வத்து என்றுஉம் என்றுஉம் வைகுதி-சிறந்த செல்வத்திலே நிலைத்து எவ்வெக்காலத் தும் வாழ்வாய், என்றான் - என்று (மாரீசன் இராவணனை நோக்கிக்) கூறினான்; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

உலகத்துள்ள சராசரப்பொருள் யாவும் நிலையாதனவாய் அழிவுறும்: ஆதலால், நிலையற்ற இவ்வுலகப்பொருளை நச்சித் தாழ் வடையாமல் நன்னெறியைக் கடைப்பிடித்து உள்ளவளவும் உயர் செல்வத்து இனிது வாழ்ந்திடுவாயாக என்றனன் மாரீச னென்க. நின்றுவாழ்வன - நிலைத்திணைப்பொருள்கள்; சென்றுவாழ்வன - இயங்குதிணைப்பொருள்கள். புலையாடலென்றது, சீதையைக் கவர் தலை. புலை - ஆகுபெயராய், புன்றொழிலின்மேல் நின்றது. பி - ம்:— [1]வாழ்பவை. [2]என்றும். [3]உணர்ந்தோய். (746)

வேறு.

## 188.—அதுகேட்டு இராவணன் மாரீசன்மேற் கோபித்தல்.

கங்கைசடை வைத்தவ னொடுங்கயிலை வெற்போர்
அங்கையி னெடுத்தவென [1]தாண்டொழின் மணித்தோள்
இங்கொர்மனி தற்[2]கெளிய வென்றனை யெனத்தன்
வெங்கணெரி யப்புருவ மீதுற [3]விடைத்தான்.

(இ - ள்.) 'கங்கைசடைவைத்தவனொடுஉம் - கங்காநதியை(த் தனது) சடையில் தரித்தவனான சிவபிரானுடனே, கயிலை வெற்பு - கைலாசகிரியை, ஓர் அம் கையின் எடுத்த-ஒரு உள்ளங்கையினா லெடுத்த, எனது-என்னுடைய, ஆண் தொழில் மணி தோள் - பராக்கிரமச் செயலையுடைய அழகிய தோள்கள், இங்கு ஓர் மனிதற்கு எளிய-இப்பொழுது ஒரு மனிதனுக்கு இளைப்பனவாகும், என்றனை -

என்று சொன்னாய்,' என - என்று (மாரீசனைநோக்கிக்) கூறி,-தன் வெம் கண் எரிய - தனது கொடிய கண்கள் (தீப்போல்) எரியவும், புருவம் மீது உற-புருவங்கள் (நெறித்து) நெற்றியின்மேற் செல்லவும், விடைத்தான்-பெருங்கோபங் கொண்டான்; (எ-று.)

'சிவபெருமானதுகயிலைவெற்பையும் அங்கையாலெடுத்தஎன் னாண்மை, இங்குச் சிறுமானிடர்க்கு எளியதாமென்றாயே!' என்று தன்னிருகண்ணிலும் சீற்றத்தீப் பொங்கப் புருவம் நெற்றிமீதேற இராவணன் சினந்தன னென்பதாம். 'கங்கைசடைவைத்தவன்' என்றது - சிவபிரானது ஆற்றலைக் குறிக்கும். பி - ம்:—[1] ஆடெழில். [2] எளியை. [3] விழித்தான்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள்-இப்படலத்தின் 41 - ஆங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (747)

## 189.—இதுவும் அது.

நிகழ்ந்ததை நினைந்திலெயெ னெஞ்சினிலை யஞ்சாது
இகழ்ந்தனை யெனக்கிளைய நங்கைமுக மெங்கும்
[1] அகழ்ந் தனைய தொப்புற வமைத்தவரை யையயா
புகழ்ந்தனை தனிப்பிழை பொறுத்தனெனி தென்றான்.

(இ - ள்.) 'ஐயா—! நிகழ்ந்தை நினைந்திலை - நடந்த காரியத்தை (நீ) நினைத்தாயில்லை; அஞ்சாது என் நெஞ்சின் நிலை இகழ்ந்தனை - அச்சமில்லாமல் எனது மனத்தின் உறுதிநிலையை இழித்துப்பேசி னாய்; எனக்கு இளைய நங்கை முகம் எங்குஉம் - எனக்கு இளைய பெண்ணாகிய [தங்கையாகிய] சூர்ப்பணகையினுடைய முகம் முழு வதும், அகழ்ந்து அனையது ஒப்பு உற - தோண்டினாற் போலாம்படி, அமைத்தவரை - செய்தவர்களை, புகழ்ந்தனை - புகழ்ந்துபேசினாய்: தனிபிழை இது பொறுத்தனென் - இந்த ஒப்பற்ற (பெருங்) குற்றத் தைப் பொறுத்தேன்,' என்றான் - என்று (மாரீசனைநோக்கி இராவணன்) கூறினான்; (எ-று.)

என்மனநிலையையிகழ்வதும என் தங்கையை முகபங்கஞ்செய்த மாற்றாரைப் புகழ்வதுஞ் செய்தாய்: இப்பெரும்பிழைகளைப் பொறுத்தே னென்றான் இராவணனென்க. சாதியொருமையாய், பிழைகளை 'இது' என்று தொகுத்துக் கூறுகிறான். பி - ம்:— [1] அகழ்ந்தவரை. (748)

## 190.—இதுமுதல் ஏழு கவிகள்-மாரீசன் மீண்டும் உறுதிமொழி கூறல்.

தன்னைமுனி வுற்றதறு கட்டகவி லோனைப்
பின்னைமுனி வுற்றிடு மெனத்தவிர்தல் பேணாது
உன்னை [1]முனி வுற்றுனகு லத்தைமுனி வுற்றாய்
என்னைமுனி வுற்றிலயி [2] தென்னென விசைத்தான்.

(இ - ள்.) தன்னை முனிவுற்ற - தன்னைக்கோபித்த, தறுகண் - அஞ்சாமையையுடைய, தகவு இலோனை - நடுவுநிலைமையில்லாத

இராவணனை, பின்னை முனிவுற்றிடும் என தவிர்தல் பேணாது - மீண்டும் (தன்னைக்) கோபித்திடுவானென்றெண்ணி (அவனுக்கு உறுதி கூறுதல்) விட்டொழிதற்கு விரும்பாமல்,—(மாரீசன் இராவணனை நோக்கி),—'உன்னை முனிவுற்று - (நீ) உன்னைக்கோபித்து, உனகுலத்தை முனிவுற்றாய் - உன்னுடைய குலத்தைக் கோபித்தாய்; (அல்லாமல்), என்னை முனிவுற்றிலை - என்னைக் கோபித்தாயில்லை: இது என் - இது என்ன காரணம்?' என இசைத்தான் - என்று சொன்னான்; (எ - று.)

அரசர்கோபங்கொண்டகாலத்தும், அமைச்சர் அவர்கருத்துக்கு மாறாகக்கூறின் நம்மைநலிவரே என்று எண்ணி அஞ்சி அவர்க்கு நீதி போதித்தலை விட்டிடாமல், பின்னும இடித்திடித்துக் கட்டுரைகூற வேண்டுமென்ற முறைமையில் மாரீசன் தவறாது நின்று,'நீகொண்ட கோபம் எனக்குஒரு தீங்குந்தாராமல் உனக்கும் உன்குலத்துக்குந் தீங்குதருவதாகவே முடியும்' என்று இவ்வாறு கூறினானென்க. உன குலத்தை முனிவுற்றாய் என்றது - உன்குலத்துக்கே நாசம்விளைக்கு மென்ற கருத்தினாலாம். 'உன' என்பதிலுள்ள அகரம் - ஆறனுருபு. பி-ம்:—[1] முனிவுற்றனை. [2] இன்று. (749)

191. எடுத்தமலை யேநினையி னீசனிகல் வில்லாய்
வடித்த[1]மலை யேயிது வலித்தியென வாரிப்
பிடித்தமலை நாணிடை [2]பிடித்தொருவன் மேனாள்
ஒடித்தமலை [3]யும்பர் முக டுற்றமலை யன்றோ.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எடுத்த மலைஐ நினையின் - கைலாயகிரியைப் பெயர்த் தெடுத்ததையே (நீ) ஒருபெருமையாக மதித்தால்,—'ஈசன் இகல் வில் ஆய் வடித்த மலைஐ இது - சிவபிரான் வலியவில்லாய்வளைத்த மலையேயாகும் இதனை, வலித்தி - வளைத்திடுவாய்', என - என்று (சனகமகாராசன்) சொல்ல, ஒருவன் - ஒப்பற்ற இராமன், மேல் நாள்- முன்னொரு பொழுதில், வாரி பிடித்த மலை - எளிதாகக்கையால் எடுத் துப்பிடித்தமலைபோன்றதும், நாண் இடை பிடித்து ஒடித்த மலை - நாணியின் இடையிலே பற்றியிழுத்து (வளைக்கத்தொடங்கி) ஒடித்த மலைபோன்றதுமான வில், உம்பர் முகடு உற்ற மலை அன்றுஒ - ஆகாயமுகட்டை அளாவியுள்ளதான மேருமலையேயன்றோ? (எ - று.)

கீழ் இராவணன் "கங்கைசடைவைத்தவனெடுங் கயிலை வெற்பு ஓரங்கையினெடுத்தவென தாண்டொழின் மணித்தோள்" என்று தான் கைலைமலையைப் பெயர்த்தெடுத்ததைக் குறித்துப் பெருமை பாராட்டியதனால், 'நீ எடுத்தது, கைலைமலை: இராமனொடித்தது மேருமலை: அந்தக் கைலைமலையினும் இந்த மேருமலை எவ்வளவு ஏற்ற மானது என்பதனை ஆய்ந்துபார்' என்கின்றான், மாரீசனென்க. சிவபிரான் திரிபுரசங்காரஞ் செய்தகாலத்தில் அப்பிரானுக்கு மேருமலை வில்லாயிருந்ததன்மை, பிரசித்தம். சிவபிரான் வில்லை இராமன் ஒடித்ததனால், அதனை 'ஒடித்த மலை' என்கின்றான். சிவ பிரான் வில் என்ற காரணத்தால், மேருவையும் கந்யாசுல்கமாக ஏற்

படுத்திய சிவதனுசையும் ஒற்றுமை நயம்படக்கூறியது; பிடித்த மலை, ஒடித்தமலையென்றவற்றில், மலை - உவமவாகுபெயர்; பெருமையும் வலிமையும் பற்றிய உவமை. பி-ம்:—[1]மலைநீ. [2]பிணித்து. [3]அண்டமுகடு. (750)

192. யாது[1]மறி யாயுரைகொ ளாயிக லிராமன்
கோதைபுனை யாமுனுயிர் கொள்ளைபடு மன்றே
பேதை[2]மதி யாலிஃதொர் பெண்ணுருவ [3]மென்றாய்
சீதையுரு வோநிருதர் தீவினை[4]ய [5]தன்றோ.

(இ - ள்.) யாதும் அறியாய் - (இராமனது ஆற்றல் முதலியவற்றைக் குறித்து நீ தானாகச்) சிறிதும் அறியாய்; உரைகொளாய் - (நான் சொன்ன) வார்த்தையைக்கேட்டு அதன்படி நடத்தலுஞ் செய்யாய்; இகல் இராமன் கோதை புனையா முன்-வலிமையுடைய அவ்விராமன் (போருக்குஉரிய தும்பைப்) பூமாலையைத் தரிக்கு முன்னே [போர் தொடங்குமளவிலே], உயிர் கொள்ளைபடும்அன்றே - பகைவருயிர் மிகுதியாக வேண்டியபடி கவரப் படுமன்றோ? பேதை மதியால்-மூடபுத்தியால், இஃது ஓர் பெண் உருவம் என்றாய்-(சீதையை) இது ஒருமானுடப்பெண்ணின்வடிவ மென்று கொண்டாய்;(அது),சீதைஉருஓ-சீதையினதுவடிவமோ? [அன்று] நிருதர் தீவினையது அன்றோ - அரக்கர்கள்செய்த பாவத்தின் வடிவமான தன்றோ! (எ - று.)

'யாதுமறியா யுரைகொளாய்' என்றதனால், தானாகவும் அறியாமை சொன்னாலுங்கேளாமை என்ற இரண்டு குறைகளுண்மையை எடுத்துக் காட்டினான். 'கோதை புனையாமுன்' என்பதற்கு-(வில்லில்) நாணியைப் பூட்டுதற்குமுன் என்றும், முன்கைத்தோற்சட்டை தரித்தற்குமுன் என்றும்பொருள்கொள்ளலாம். சீதையினிடத்து அத்தன்மையை மறுத்து நிருதர் தீவினையென்று வேறொரு தன்மையை யேற்றிக் கூறியது - அபநுதியணியாம். அரக்கரின் அழிவுக்கு அது காரணமாகு மென்பான், 'நிருதர் தீவினைய தன்றோ?' என்றான். சீதையுருவோ என்ற ஓகாரம்-தெரிநிலையுமாம். பி-ம்:— [1]அறியாது. [2]உருவோவிது. [3]அன்றே. [4]இது. [5]அன்றே. (751)

193. உஞ்சுபிழை[?]யாயுறவி னோடுமென [1]வுன்னா
நெஞ்சுபறை போதுமது நீ நினைய கில்லாய்
அஞ்சுமென தாருயி ரறிந் தருகு நின்றார்
நஞ்சுநுகர் வாரையிது நன்றெனலு நன்றோ.

(இ - ள்.) '(நீ சீதையைக் கவர்ந்தால்), உறவினோடும் உஞ்சு பிழையாய்-(உன்) சுற்றத்தாருடனே (நீயும்) தப்பிப்பிழைக்கமாட்டாய்', என உன்னா-என்று எண்ணி, நெஞ்சு பறை போதும்-(எனது) மனம் பறைகொட்டுவதுபோலத் துடிக்கின்றது; எனது ஆர் உயிர் அஞ்சும்-எனது அரியஉயிரும் அஞ்சுகின்றது; அது நீ நினையகில்லாய்-அத்தன்மையை நீ எண்ணுகிறாயில்லை; நஞ்சு நுகர்வாரை - (அறியாமல்) விஷத்தை யுண்பவர்களை, அறிந்து அருகு நின்றார் - அறிந்து அவர்பக்கத்தில் நின்றவர்கள், இது நன்று எனலும்-இச்

செய்கை நல்லது என்று உடன்பட்டுக் கூறுதலும், நன்றுஓ- நல்லதோ? (எ - று.)

'அருகுநின்ருர் அறிந்தும் நஞ்சு நுகர்வாரை இது நன்றென லும் நன்ருே' என்ற உபமானவாக்கியம், ஆராய்ச்சியில்லாமல் தீச் செயல் செய்யத்தொடங்குகிற உன்னை அது தீச்செயலென்று அறிந்துஉனது அருகில்நிற்பவனை நான் இச்செயல்நல்லதென்று. உடன்பட்டுக்கூறுவது சரியோ? என்ற உபமேயப்பொருளை விளக்கு தலால், பிறிதுமொழிதலென்னும் அலங்காரம். உஞ்சு = உய்ந்து; போலி. உறவு-தொழிலாகுபெயர். நன்றெனலும், உம்-இழிவுசிறப்பு. பி - ம்:—[1]உன்னைய். (752)

194. ஈசன் [1]முத லாகவிமை யோருலகு மற்றைத்
தேச முதன் முற்றுமொ ரிமைப்பினுயிர் [2]தின்னக்
கோசிக [3]னளித்தகட வுட்படை கொதிப்போடு
ஆசில கணிப்பில விராமனரு [4]ணிற்ப.

(இ - ள்.) ஈசன் முதல் ஆக இமையோர் உலகும் - சிவபிரான் முதலாகத் தேவர்களுடைய உலகங்களையும், மற்றை தேசம் முதல் முற்றும்-மற்றை நாடுகள் முதலிய எல்லாவற்றையும், ஓர் இமைப் பின் உயிர் தின்ன-ஒருமாத்திரைப் பொழுதிலே உயிர் குடிப்பதற்கு, —கொதிப்போடு-(எப்பொழுதும்) உக்கிரமான தன்மையோடு (கூடி), ஆசு இல-(தோல்வியாகிய) குற்றமில்லாதனவாகிய, கடவுள் படை- தெய்வத்தன்மையுள்ள அஸ்திரங்கள், கணிப்பு இல-அளவிறந்தவை, —கோசிகன் அளித்த-விசுவாமித்திரமுனிவனுற் கொடுக்கப்பட்டன வாய், இராமன் அருள் நிற்ப-இராமனது கட்டளைநெறியிலே நிற் கின்றன; (எ-று.)

இராமன் தாடகையைக் கொன்றவுடனே தேவர்கள் மகிழ்ச்சி யோடு வந்து கட்டளையிட்டபடி விசுவாமித்திரமாமுனி அப்பெரு மானுக்குப் பற்பல திவ்வியாஸ்திரங்களை உபதேசித்துக்கொடுக்க, அவையாவும் மிக்கமகிழ்ச்சியுடனே இராமனிடம் வந்து அவன் கட்டளையின்படி நடக்கச் சித்தமாய் நின்றன என்பதை, கீழ்ப் பால காண்டத்தில் வேள்விப்படலத்திற் காண்க. 'மற்றைத் தேச முதல் முற்றும்' என்றது-பூமியையும் பாதாளத்தையுங் குறிக்கும். நிற்ப - முற்று. கோசிகன் = கௌசிகன்: குசிகனது குலத்திற் பிறந்தவனென்று பொருள்படும். குசனே குசிகனெனவும் வழங் கப்படுவன். 'அருள்' என்னுங் காரணம், அதன் காரியமாகிய கட்டளையின்மேல் நின்றது. பி - ம்:—[1]முதன்மற்றும். [2]தின்ப. [3]அமைத்த. [4]நிற்க. (753)

195. ஆயிரம டற்கையுடை யானைமழு வாளால்
ஏயெனு [1]முரைக்குளுயிர் செற்றவேதி ரில்லோன்
மேயவிறன் முற்றுவரி வெஞ்சிலையி னேடும்
[2]தாயவன் வலித்[3]தகைமை யாமுறு தகைத்தோ.

(இ - ள்.) அடல் ஆயிரம் கை உடையானை - வலிமையை யுடைய ஆயிரங்கைகளையுடையவனை கார்த்தவீரியார்ச்சுனனை, மழு

வாளால் - கோடாலிப்படையால், ஏ எனும் உரைக்குள் - ஏயென்று கூறும் மாத்திரைப்பொழுதினுள்ளே [மிகவிரைவிலே], உயிர் செற்ற-உயிரழித்த, எதிர் இல்லோன் - ஒப்பில்லாதவனான பரசுராமனிடத்தில், மேய - பொருந்திய, விறல் முற்று - வலிமைமுழுவதையும், வரி வெம் சிலையினோடும் - கட்டமைந்த கொடிய (அவனது) வில்லினுடனே, தாயவன் - (தனக்கு) உரிமையாகக் கவர்ந்துகொண்ட இராமனது, வலி தகைமை-வலிமையின் தன்மை, யாம் உறு தகைத்துஓ - நாம் அடையுந் தன்மையதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

உன்னை வென்றவனை வென்ற ஆற்றலுடையான் இராமனென, இராவணனுக்கு மாரீசன் எடுத்துக்காட்டினான். சந்திரவமிசத்துப் பிறந்த அரசனும் பல பராக்கிரமங்களிற் சிறந்தவனும் ஆயிரந் தோள்களையுடையவனும் இராவணனை ஒருகால் வென்றிட்டவனுமான கார்த்தவீரியார்ச்சுனன் சமதக்கினிமுனிவனதுஓமதேனுவைக் கவர்ந்ததுகாரணமாக அம்முனிவனதுகுமாரனான பரசுராமன் அக்கார்த்தவீரியார்ச்சுனனைத் தனதுகோடாலிப் படையால் ஆயிரந் தோள்களையுந் துணித்துக் கொன்றிட்டன னென்பது, முன்னிரண்டடியிற் குறித்த கதை. அப்படிப்பட்ட ஆற்றலுடைய பரசுராமன், சீதாகலியாணத்தின்பின் தசரதசக்கரவர்த்தி தனது குமாரர்களுடன் மிதிலையினின்று மீண்டுவருகையில், வலியச்சென்று இராமபிரானையெதிர்த்துத்தன்கையிலுள்ள வில்லை அவன்கையிற் கொடுத்து, 'நீ சிவபிரானது சொத்தை வில்லை யொடித்ததற்குச் செருக்குக் கொள்ளாதே;வலிய இந்தத் திருமாலின் தநுசை வளை: பார்ப்போம்'என்ன, உடனே இராமன் அதனை வளைத்து அம்புதொடுத்து, அவன் வேண்டியபடி அவனதுதவமகிமைமுழுவதையும் அந்த அம்புக்கு இலக்காக்கிவிடவே, பரசுராமன், கர்வபங்கப்பட்டு மீண்டனனென்ற வரலாறு, கீழ்ப்பாலகண்டத்தின இறுதியிற் கூறப்பட்டது. மழுவாள் - மழுவாகிய வாள் என இருபெயரொட்டு; வாள் - இங்கே, ஆயுதமென்னு மாத்திரமாய் நின்றது. இச்செய்யுள் அச்சிட்டபிரதியொன்றிற் காணப்படவில்லை. பி - ம்:—[1] இமைப்பின். [2] தாயகன். [3] தகையை. (754)

196. வேதனைசெய் காமவிட மேலிட மெலிந்தாய்
தீதுரைசெய் தாயினைய செய்கை சிதைவன்றோ
மாதுலனு மாய்மரபின் முந்தையுற வந்தேன்
ஈதுரை செய்தே[1]னிதனை யெந்தைதவிர் கென்றான்.

(இ - ள்.) வேதனை செய் - துன்பத்தைச் செய்கிற, காமம் விடம்-காமமாகிய விஷமானது, மேலிட - அதிகப்பட, மெலிந்தாய் - (நீ) வாட்டமுற்றாய்; (ஆதலால்), தீது உரை செய்தாய்-கொடிய இவ் வார்த்தையைக் கூறினாய்: இனைய செய்கை - இத்தன்மையதான காரியம், சிதைவு அன்றுஓ-அழிவுக்குக்காரணமன்றோ? மாதுலன்உம் ஆய்-(உனக்கு) மாமன்முறை பூண்டவனுமாய், மரபில் முந்தை உற வந்தேன்-(உனது) குலத்தில் முற்படத் தோன்றியவனுமான நான், ஈது உரை செய்தேன்-இந்த உறுதிமொழியைக் கூறினேன்: எந்தை

இதனை தவிர்க - அப்பா! இத்தீத் தொழிலை நீ விட்டிடுவாயாக, என்றான்-என்று (மாரீசன் இராவணனுக்கு) அறிவு கூறினான்;

'காமவேதனை மேலிடவே, உனது பேராற்றலையே பெரிதாக மதித்தும் தங்கையை அங்கபங்கஞ் செய்தவர்களைப் புகழ்ந்தா யென்று என்னைச் சீறிப் பின்னர்ப் பொறுத்தேனென்றும் இவ்வாறு எதிரிகளின் நிலையைக் கருதாது இராமபிரான் மனைவியைக் கவர்வேனென்று தீயவுரை புகன்றாய்: இது உன் அழிவுக்கே காரணமாம்: நான் உன்மரபில் முந்தையுறவந்து மாதுலனுமாக இருத்தலால், உனக்கு இச்சகமாகப் பேசாமல் இந்த உறுதிமொழியைப் புகன்றேன்: இந்தத்தீத்தொழிலை விட்டிடுக' என்றுமாரீசன் இராவணனுக்கு அறிவு கூறினனென்பதாம். முந்தையுற - பிராயம் முதிர என்றபடி. இராவணன் கருதிய தீச்செயலை வாயினாற்கூறுதற்குங் கூசுவான்போன்று 'இதனை' எனக் குறித்தொழிந்தான். மாதுலன் - வடசொல்; மாதாவினுடன் பிறந்தவன். பி-ம்:—[1] அதனை. (755)

## 197.—இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்: இராவணன் மாரீசனைச் சினந்து கூறுவன.

என்னவுரை [1]யத்தனையு [2]மெத்தனையு மெண்ணச்
சொன்னவனை [3]யேசின வரக்கர்பதி சொன்னான்
அன்னையுயிர் செற்றவனை யஞ்சியுறை கின்றாய்
உன்னையொரு வற்கொருவ னென்[4]றுணர்கை நன்றோ.

(இ - ள்.) என்ன உரை-என்று சொன்ன, அத்தனைஉம் - (தன் வார்த்தைகளை) எல்லாம், எத்தனைஉம் எண்ண சொன்னவனை - எவ்வளவாயினும் [சிறிதாயினும்] ஆலோசித்துப் பார்க்கும்படி சொன்னவனான மாரீசனை, ஏசின - (மனத்தினால்) இகழ்ந்த, அரக்கர் பதி-ராக்ஷசராசனான இராவணன், சொன்னான் - சொல்பவனானான்:— அன்னை உயிர் செற்றவனை அஞ்சி உறைகின்றாய் - (உனது) தாயான தாடகையின் உயிரைக்கொன்ற அவ்விராமனுக்கு அஞ்சிவாழ்கிறாய்; உன்னை ஒருவற்கு ஒருவன் என்று உணர்கை நன்றுஓ-உன்னை ஒரு ஆண்மகனாக மதித்தற்குத்தக்க ஒருவனென்று நினைத்தல் தகுதியோ? [அன்று என்றபடி]: (எ-று.)

நான்சொல்லியவற்றை ஆராய்வாயென்று அறிவுறுத்திய மாரீசனைநோக்கி, இராவணன் ஏசி, 'உன் தாயைக் கொன்றவனென்று மாற்றானுக்கு அஞ்சியுறைகின்றாய்: தன் தாயைக்கொன்றவனுக்கு மாறுசெய்யக் கருதாமல் மானங்கெட்டு வாழ்கின்றாயே! உன்னை ஓராண்மையுள்ளவனாக நினைத்தலும் தகுதியன்று' என்றானென்க. அத்தனையும் - அவ்வளவையும். [2] எத்தனையு மெண்ணிச் சொன்னவனை என்ற பாடத்துக்கு - எவ்வளவோ ஆலோசித்துக் கூறினவனை யென்று பொருள். 'ஒருவற்கு ஒருவனென்று உணர்கை' என்பதற்கு - ஒருவனுக்கு உதவி செய்யக்கூடிய ஒருவனென்று மதித்தலென உரைப்பினும் அமையும்; இதற்கு - அறிவு வீரம் பெருமை முதலிய தனித்தனிப் பொருந்தியவரில் ஒருவனென்று நினைத்தலென உரைப்பாருமுளர். சொன்னவனையே சினவு

அரக்கர்பதி யென யெடுத்து - இங்ஙனம் தனக்கு உறுதிமொழி கூறினவனையே கோபித்த இராவணன் என்று உரைக்கவும் இட முண்டு. பி-ம்:—[1] இத்தனையும். [3]வைகடல். [4]உணர்தல். சிலபிரதியில் 'உன்னை யுறவுக்கொருவனென் றுணரலாமோ' என்று நான்காமடி. ()

198. திக்கய மொளிப்பநிலை தேவர்கெட வானம்
[1]புக்கவ ரிருக்கைபுகை வித்துலகம் யாவும்
சக்கர நடத்துமெனை யோதயர தன்றன்
மக்க[2]ணலி கிற்பரிது [3]நன்றுவலி யன்றோ.

(இ-ள்.) திக் கயம் ஒளிப்ப - திக்குயானைகள் அஞ்சி யொளித்துக் கொள்ளவும், தேவர் நிலை கெட - தேவர்கள் நிலையழியும்படியும், வானம் புக்கவர் இருக்கை புகைவித்து - மேலுலகத்தைத் தமது இடமாகக் கொண்ட தேவர்களுடைய இருப்பிடங்களை(க் கொளுத்தி)ப் புகையும் படி செய்து, உலகம் யாவும் சக்கரம் நடத்தும் - எல்லாவுலகங்களி லும் (தடையின்றி) ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்துகிற, எனை ஓ - என்னையா, தயரதன் தன் மக்கள் நலிகிற்பர் - (மனிதராசனான) தசர தனது பிள்ளைகள் வருத்தும் ஆற்றலுடையவர்? இது நன்று வலி அன்றோ - இது நல்ல வல்லமை யன்றோ? (எ - று.)

'திக்கயங்கள் நிலைகெட்டோடி யொளிப்பவும் தேவர்களை நிலை யழியும்படி சிறையிட்டும் தேவலோகத்தை நெருப்புக்கு இலக்காக் கியும் இங்ஙன் எல்லாவுலகத்தும் செங்கோல்செலுத்துகிற என் னையா உலகத்துச் சாமானிய அரசனான தசரதனுடைய மக்கள் வெல்லுந்தரமுடையோர்? இது சால அழகிது' என்று பரிகாச மாகக் கூறினான் இராவணனென்க. திக்கயம் = திக்கஜம். ஆஜ்ஞை யைச் சக்கரமென்றல், கவிசமயம். பி - ம்:—[1] புக்கயன். [2] நலிகிற்பதிது. [3]நன்றுன்மதி. (757)

199. மூவுல கினுக்குமொரு நாயக முடித்தேன்
மேவலர் கிடைக்கினிதன் மேலினிய துண்டோ
ஏவல்செய கிற்றியென தாணைவழி யெண்ணிக்
காவல்செ யமைச்சர்கட னீகடவ துண்டோ.

(இ - ள்.) மூ உலகினுக்குஉம் ஒரு நாயகம் முடித்தேன் - (கீழ் நடு மேல் என்ற) மூவிடத்து உலகங்களுக்கும் தனியரசாட்சியைச் சூடினேன்; (அப்படிப்பட்ட எனக்கு இப்பொழுது), மேவலர் கிடைக்கின் - பகைவர்கள் கிடைத்தால், இதன்மேல் இனியது உண்டு ஓ - இதற்குமேல் மகிழ்ச்சிதருவது வேறும் உளதோ? [இல்லையென்றபடி]; எனது ஆணை வழி எண்ணி - எனது கட்டளை யின் தன்மையை ஆலோசித்து, ஏவல் செயகிற்றி - (நான்) ஏவிய தொழிலை (நீ) செய்யக்கடவாய்: காவல் செய் அமைச்சர்கடன் - (அரசனுக்குப்) பாதுகாவல் செய்யும் மந்திரிகளது கடமையை [அரச னேவினதைச் செய்தலை], நீ கடவது உண்டு ஓ - நீ கடக்க லாமோ? (எ - று.)

மூவுலகாட்சியையும் பெற்றுள்ளேன்: அங்ஙன்மேம்பாடுற்றுத் தெவ்வர் கிடையாமையால் தினவுதின்னும் தோள்களையுடைய

எனக்கு எதிரிகள் கிடைப்பதனினும் இனியது யாது? நீ என்கட்டளையைக் கருதி என் ஏவல்வழி நடக்கவேண்டியவனேயன்றி எனக்கு ஆலோசனைகூறத்தக்கவனல்லை: மந்திரிகளின்கடமையை நீ கடத்தல் தகாது என்றவாறு. நான்காமடிக்கு - அரசனைப் பாதுகாவல்செய்தற்குரிய மந்திரிகள் செய்யவேண்டிய கடமையை நீ செய்யக்கடவது உளதோ? என்று உரைப்பாருமுளர். ஒருநாயகம் - ஏகாதிபத்தியம். முடித்தல் - தரித்தல்: அல்லது நிறைவேற்றுதல். ஏவல்-ஏவப்பட்ட காரியத்துக்குத் தொழிலாகு பெயர். (758)

200. மறுத்தனை யெனப்பெறினு நின்னைவடி வாளால்
[1]ஒறுத்தென மனக்குறை முடிப்பதொழி கல்லேன்
[2]வெறுப்பன கிளத்தலுறு மித்தொழிலை விட்டென்
குறிப்பின்வழி நிற்றியுயிர் கொண்டுழலி னென்றான்.

(இ - ள்.) மறுத்தனை என பெறின்உம் - (நீ எனது ஏவல்வழி நில்லாமல் அதனை) மறுத்துவிட்டாயாயினும், நின்னை வடி வாளால் ஒறுத்து - உன்னைக் கூரிய வாளினால் வெட்டித் தண்டித்துவிட்டு, என மனம் குறை முடிப்பது - என்மனத்துக்கு இசைந்தகாரியத்தை நிறைவேற்றுதலை, ஒழிகல்லேன் - (நான்) தவிரமாட்டேன்; (ஆதலால்), உயிர்கொண்டுஉழலின்-(நீ) உயிரை வைத்துக்கொண்டு வாழவேண்டுமானால், வெறுப்பன கிளத்தல்உறும் இ தொழிலைவிட்டு - (நான்) வெறுக்கத்தக்க சொற்களைச் சொல்லுகிற இச்செய்கையை விட்டு, என் குறிப்பின் வழி நிற்றி - எனது எண்ணத்தின்படி நிற்பாய், என்றான் - என்று (மாரீசனை நோக்கி இராவணன்) கூறினான்; (எ - று.)

நீ பிடிவாதமாக என்னேவலைச் செய்யமாட்டே னென்றாயெனினும், நான் உன்னை என்வாளால் இப்போதே வெட்டிவீழ்த்தி என் மனக்குறையை முடிப்பேன்; நீ உயிரோடு இருக்க விரும்பினால் என் ஏவலை மறுக்காது என் குறிப்பின்வழியே நடப்பா யென்றனன் இராவண னென்க. என மனக்குறை முடிப்பது - சீதையைக் கவர்வது. உழலுதல் - திரிதல்; புடைபெயர்தல். நீ மறுப்பதில் யாது பயனுமில்லை யென்பதை நன்றாக எடுத்துக் கூறினான். பி - ம்:— [1]ஒறுத்து மனமுற்றது. [2]வெறுத்தன. (759)

வேறு.

## 201.—அவ்வளவில் மாரீசன் ஆய்ந்து அடங்குதல்.

அரக்கனஃ துரைத்த லோடு மறிந்தன னடங்கி நெஞ்சம்
தருக்கினர் [1]கெடுவ ரன்றே தத்துவ நிலையிற் றன்றே
[2]செருக்கினிற் றீர்து மென்பார் [3]தம்மினூர் செருக்க ரென்னா
உருக்கிய [4]செம்பி னூற்ற நீரென வுரைக்க லுற்றான்.

(இ - ள்.) அரக்கன் அஃது உரைத்தலோடும் - இராக்கதராசனான இராவணன் அவ்வாறு கூறியவளவிலே,—(மாரீசன்), 'நெஞ்சம் தருக்கினர் அன்றுஏ கெடுவர்-மனத்திற் செருக்குக்கொண்டவர்கள் அப்பொழுதே அழிந்திடுவார்கள்; தத்துவம்

நிலை இற்று அன்றோ-உண்மைநிலைமை இத்தன்மையதன்றோ? தம்மின் ஆர் செருக்கர்-தமக்குள்ளே நிறைந்த காமக்களிப்புடைய வர்கள், செருக்கினில் தீர்தும் என்பார் - அக்களிப்பினால் (யாம்) அழிந்திடுவே மென்றுந் துணிவார்கள்,' என்ன-என்று கருதி, அறிந் தனன்-(இவன்கட்டளைப்படி நடவாவிட்டால் தனக்குக் கேடுவரு மென்பதை) அறிந்து, உருக்கிய செம்பின் உற்ற நீர் என அடங்கி - உருக்கிய செம்பில் வார்க்கப்பட்ட நீர் (அதனுள்ளே கொதித்து அடங்குதல்) போல(த் தான் உள்ளே கொதிப்புற்று) அடங்கி, உரைக்கல் உற்றான்-(சில) சொல்லத் தொடங்கினான்; (எ - று)— அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

இராவணன் அவ்வாறு சொல்ல, மாரீசன், தன்மனத்துள்ளே 'தருக்கினார் கெடுதல் திண்ணம்: மற்றும் காமக்களிப்புக் கொண் டவர் அதனால் அழிதல் திண்ணம்' என்று கருதி, மனங்கொதித்துச் சில கூறலானா னென்பதாம். உருக்கிய செம்பின் உற்ற நீரென உரைக்கலுற்றான் என்றே இயைத்து, உருக்கிய செம்பில் நீரைத் தெளித்தாற்போல வெம்மைகொண்ட இராவணனுக்குத் தண்மை யாக மாரீசன் கூறத்தொடங்கினா னென்று பொருள்கொள்ளுதலும் தகுதியாம். கெடுவரன்றே யென்பதற்கு - கெடுவரன்றோ என்று உரைத்து, அன்றே யென்பதைத் தேற்றமாகக் கொள்ளினுமாம். பி-ம்:-[1] கெடுவரென்றல். [2] செருக்கினர்த். [3] தம்மிலோர். [4] செம்பொன்.

இதுமுதல் ஒன்பது கவிகள் - இப்படலத்தின் 14-ஆங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (760)

## 202.—மாரீசன் இராவணனுக்கு இரங்கிக்கூறும் வார்த்தை.

**உன்வயி னுறுதி நோக்கி யுண்மையி னுணர்த்தி னேன்மற்று**
**என்வயி [1]னிறுதி நோக்கி யச்சத்தா லிசைத்தே னல்லேன்**
**நன்மையுந் தீமை யன்றோ நாசம்வந் துற்ற போது**
**புன்மையி [2]னின்ற நீராய் செய்வது புகறி யென்றான்.**

(இ - ள்.) உன்வயின் உறுதி நோக்கி - உன்பக்கல் நன்மை யைக் கருதி, உண்மையின் உணர்த்தினேன் - உண்மையாகத் தெரி வித்தேனேயன்றி, என்வயின் இறுதி நோக்கி அச்சத்தால் இசைத் தேன் அல்லேன்-எனக்கு வருவதொரு தீமையைக் கருதி அதற்கு அஞ்சி அதனாற் கூறினேனல்லேன்; நாசம் வந்து உற்றபோது நன்மைஉம் தீமை அன்றோ - கேடு வந்து சமீபித்த காலத்தில் நல்லதும் தீயதாகத் தோன்றுமன்றோ? (அதுநிற்க), புன்மையின் நின்ற நீராய் - அற்ப விஷயத்திற் பொருந்திய குணத்தையுடை யவனே! செய்வது புகறி - (நான்) செய்யவேண்டுவதைச் சொல் வாய், என்றான் - என்று (மாரீசன் இராவணனை நோக்கிக்) கூறி னான்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

உண்மையின் உணர்த்தினேன்-உள்ளபடி கூறினேன் என்ற படி. 'நாசம் வந்துற்றபோது நன்மையுந் தீமையன்றோ' என்ற விடத்து "விநாச காலே விபரீதபுத்தி:" என்ற பழமொழியை உணர்க. பி - ம்:—[1] உறுதி. [2] உற்ற. (761)

## 203.—இராவணன் மாரீசனை நோக்கி 'சீதையைத் தருக' என்றல்.

என்றலு மெழுந்து புல்லி யேறிய வெகுளி [1]நீங்கிக்
குன்றெனக் குவிந்த தோளாய் மாரவேள் கொதிக்கு மம்பாற்
[2]பொன்றலி னிராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ
தென்றலைப் [3]பகையைச் செய்த சீதையைத் தருதி யென்றான்.

(இ - ள்.) என்றலும்-என்று (மாரீசன்) கூறியவுடனே, (இராவணன்), எழுந்து புல்லி - எழுந்து (அவனைத்) தழுவிக்கொண்டு, ஏறிய வெகுளி நீங்கி - (அவன் பக்கல்) மிகுதியாகக்கொண்ட கோபந் தணிந்து, (அவனை நோக்கி), 'குன்று என குவிந்த தோளாய் - மலைபோல (வலியதாய் ஓங்கி)க் குவிந்துள்ள தோள்களையுடையவனே! மாரன் வேள் கொதிக்கும் அம்பால் பொன்றலின் - (இங்கு இருந்து) மன்மதனது உக்கிரங்கொண்ட அம்புகளினால் இறத்தலினும், இராமன் அம்பால் பொன்றலே - (அங்குச் சென்று நீ சொன்னபடி) இராமனது அம்பினால் இறப்பதே, புகழ் உண்டு அன்றோ-கீர்த்தியுள்ளதன்றோ? (ஆதலால்), தென்றலை பகையை செய்த சீதையை தருதி - தென்றறகாற்றைவெய்யதாய் (என்னை) வருத்துமாறு செய்த சீதையை (எனக்குத்) தருவிப்பாய்,' என்றான்-என்று சொன்னான்; (எ - று.)

மாரீசனுரைக்கும் ஒருசார் இணங்கினான்போன்று இராவணன் பேசுகின்றான். எதற்கும் அஞ்சாத இராவணன் மன்மதபாணமொன்றுக்கு அஞ்சினனென்ற தன்மையும், போரிற் பகைவரால் இறத்தல் புகழ் தருவதென்ற தன்மையும் இதில் வெளியாம். மாரீசனாற் காரியங்கொள்ளவேண்டுதலின், அவனை 'குன்றெனக் குவிந்த தோளாய்' எனப்புகழ்ந்ததோடு, 'தருதி' என ஏவ்போன் வினை கொடுத்துங் கூறினான். 'இராமனம்பாற் பொன்றலே புகழுண்டன்றோ' என்றவிடத்து, பின்வருமதை முற்கூட்டிச் சொல்லும் கவித்திறங் காண்க. மாரவேள் - இருபெயரொட்டு. பி - ம்:—[1]நீக்கிக். [2]பொன்றலில். [3]பகைமை, பகைக்கச், பகையாச். (762)

## 204.—மாரீசன் 'அதற்குயான் செய்யவேண்டுவது என்?' எனல்.

ஆண்டையா னனைய கூற வரக்கரோ ரிருவ ரோடும்
பூண்டவென் மானந் தீரத் [1]தவவனம் புக்க போழ்தில்
தூண்டிய சரங்கள் பாயத் துணைவர்பட் டுருள வஞ்சி [ருன்.
மீண்டயான் சென்று செய்யும் வினையென்கொல் விளம்பு கென்

(இ - ள்.) ஆண்டையான்-அந்நிலையனாகிய இராவணன், அனைய கூற - அத்தன்மையனவான வார்த்தைகளைச் சொன்னவளவிலே, (கேட்ட மாரீசன்),—'பூண்ட என் மானம் தீர-(என் தாயைக் கொன்ற காரணத்தால்) யான் இராமனிடங் கொண்ட வைரம் ஒழியும் பொருட்டு, அரக்கர் ஓர் இருவரோடுஉம்-இரண்டு அரக்கர்களுடனே, தவ வனம் புக்க போழ்தில் - (முனிவர்கள்) தவத்தைச் செய்கிற காட்

டிற் புகுந்தகாலத்தில்,— தூண்டிய சரங்கள் பாய - (இராமன்) எய்த அம்புகள் (தம்மேற்) பாய்ந்ததனால், துணைவர் பட்டு உருள - (என்னுடன் வந்த அரக்கர்) இருவரும் இறந்து விழுந்து புரள, அஞ்சி மீண்ட - பயந்துதிரும்பிவந்துவிட்ட, யான் - நான், சென்று செய்யும் - (இப்பொழுது மீண்டும்) போய்ச் செய்யத்தக்க, வினை - தொழில், என்கொல் - யாதோ? விளம்புக-கூறுவாயாக,' என்றான்-என்று சொன்னான்; (எ - று.)

'ஒருமுறைக்கு இருமுறை அடிபட்டு இராமசரத்தின் மகிமையையறிந்துள்ளேன்: இங்ஙன் அஞ்சி மீண்ட யான் இப்போது செய்தற்கு உரியது என்?' என இராவணனை மாரீசன் வினாவினனென்க. இங்குக் குறித்த வரலாறு, விசுவாமித்திரனது வேள்வியைக் காக்கையில் நிகழ்ந்ததன்று: அவ்வரலாறு, கீழ் "எம்பிக்கும் மென்னன்னை தனக்கும் மிறுதிக்கோ, ரம்புய்க்கும்போர்வில்லி" என்றதனாற் கூறப்பட்டது.

இங்குக் குறித்த செய்தி யாதெனின்?—தன் தாயையும் தம்பியையும் கொன்று தன்மேலும் அம்பு செலுத்தித் துரத்திய காரணத்தால் இராமனிடம் பகைகொண்ட மாரீசன், பின்பு இராமன் தண்டகாரணியத்தில் பஞ்சவடியாச்சிரமத்தில் எழுந்தருளியிருந்த போது, இரண்டு அரக்கர்களுடன் மான்வேடம்பூண்டு அத்தண்டக வனஞ்சேர்ந்து முனிவர்கள் ஓமஞ்செய்யுமிடங்களையும் நீராடுமிடங்களையுங் கிட்டி அவர்களை வருத்திக் கொன்று தின்றுகொண்டு வருகையில், இலக்குமணனுடனும் சீதையுடனும் தவவேடங்கொண்டிருந்த இராமனைக் கண்டு, இவன் இப்பொழுது தவவேடம்பூண்டிருத்தலால் தன்னைக் கொல்லான்என்றுகருதி அருகிலோடிவந்து தனது கூரியகொம்புகளினால் இராமனை முட்டிக்கொந்திக் கொலை செய்யமுயலுமளவில், அப்பெருமான் சினங்கொண்டு சரங்களைத் தொடுத்துவிட்டதனால் இவனுடன் வந்த இரண்டு அரக்கரும் அம்பு பட்டுத் தலையறுப்புண்ண, இவன் தான்மாத்திரம் தப்பியோடியொளித்துத் தவவேடம்பூண்டனனென்ற வரலாறும். மேல் 212 - ஆங் கவியில் "முக்காலின் முடிந்திடுவான்" என வருவதுங் காண்க. இவ்வரலாறு, வால்மீகிராமாயணத்தில் பரக்கக்கூறப்பட்டுள்ளது. இக்கவியில் 'துணைவர்' என்றது - துணையாய் உடன்வந்தவரென்னும் பொருளது. பூண்ட என்மானம் தீர - பழிக்குப்பழிவாங்க என்றபடி: இதற்கு - யான் கொண்டுள்ள அகங்காரம் நீங்க என்று பொருளுரைத்து, இதனை 'அஞ்சிமீண்ட' என்பதனோடு இயைப்பாருமுளர்; மானம் - அவமானம் அகங்காரம் என்று இருபொருளது. 'அஞ்சி மீண்டயான் சென்று செய்யும் வினையென்கொல்' என்றதில், ஒரு வினையும் என்னால் பயனுறச் செய்யமுடியாது என்ற தொனிப் பொருள் காண்க. பி - ம்:—[1] தண்டகம் புக்ககாலைத். (763)

## 205.—இராவணன் 'சீதையை வஞ்சித்துக் கவரவேண்டும்' எனல்.

[1] ஆயவ னனைய கூற வரக்கர்கோ னைய நொய்துன்
தாயையா ருயிருண் டானை [2] யான்கொலச் சமைந்து நின்றேன்

போயையா புணர்ப்ப [3]தென்னே யென்பது பொருந்திற் [4]றன்றே
மாயையால் வஞ்சித் தன்றே வௌவுத லவளை யென்றான்.

(இ - ள்.) ஆயவன் அனைய கூற - மாரீசன் அவ்வார்த்தை களைச் சொல்ல,—அரக்கர் கோன் - ராக்ஷசராசனான இராவணன், 'ஐய - ஐயனே! உன் தாயை நொய்து ஆர் உயிர் உண்டானை - உனது தாயான தாடகையை எளிதிலே அரியஉயிரை உண்டவ னான இராமனை, கொல-கொல்லுதற்கு, யான் சமைந்து நின்றேன்-நான் சித்தனாயிருக்கிறேன்; ஐயா போய் புணர்ப்பது என்னே என்பது - 'ஐயனே! போய்ச் செய்யவேண்டுவது என்ன?' என்று (நீ உடன்பட்டுக்)கேட்பது, பொருந்திற்று அன்றே-தகுதியேயாம்; மாயையால் அவளை வஞ்சித்து வௌவுதல் அன்றே - மாயை யினால் அச்சீதையைவஞ்சித்துக் கவர்தலன்றே (செய்யத்தக்கது), என்றான்-என்றுசொன்னான்;(எ-று.)—இரண்டடித்தும் 'அன்றே'. என்பது - தேற்றம்.

'மாயையால் அவளை வஞ்சித்து வௌவுதல்' என்பதற்கு - நீ மாயையால் அவளை வஞ்சிக்க யான் அவளைக் கவர்தல் என்று மேல்வருங் கதைநிகழ்ச்சியை நோக்கிப் பொருள் விரித்துக் கொள்ள லாம்; 'அஞ்சி ஓடிவிட்ட என்னால் இப்போது செய்யத்தக்கது யாது?' என்றுவினவியதற்கு, இராவணன் கூறும்விடை இது என்க. நொய்து - விரைவிலே யென்றுமாம். நொய்து கொல எனக் கூட்டுதலும் ஒன்று. மூன்றும்அடி - மாரீசனது வினாவை இரா வணன் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டமை காட்டக் கூறியது.
பி - ம்:—[1]ஆயதாங்கு. [2]கொல்லயான். [3]என்னை. [4]என்றான். (764)

## 206.—மாரீசன் 'போரில்வென்று சீதையைக் கொள்ளுதலே சிறப்பு' எனல்.

புறத்தினி யுரைப்ப தென்னே புரவலன் றேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித் தெய்துதல் சிறுமைத் தாகும்
அறத்துள தொக்கு மன்றே யமர்த்தலை வென்று கொண்டுன்
மறத்துறை வளர்த்தி [1]மன்ன வென்னமா ரீசன் சொன்னான்.

(இ - ள்.) மன்ன - அரசனே! இனி புறத்து உரைப்பது என்னே - இனி வேறாகச் சொல்லவேண்டுவது யாதுஉளது? புரவலன் தேவிதன்னை - காத்தல்தொழிலில் வல்லவனான இரா மனது மனைவியை, திறத்துழி அன்றி - (உனது) வலிமையி னாலல்லாமல், வஞ்சித்து எய்துதல்-வஞ்சனை செய்து பெறுவது, சிறுமைத்து ஆகும் - (உன்பெருமைக்குத்) தாழ்வையுண்டாக்குவ தாம்; (ஆதலால்), அமர்த்தலை - போரிலே, வென்று-(இராமனைச்) சயித்து, கொண்டு - (சீதையைக்) கைக்கொண்டு, உன் மறம் துறை வளர்த்தி - உனது வீரச்செயலை வளர்ப்பாயாக; அறத்து உளது ஒக்கும் அன்றே - (அங்ஙனஞ் செய்தல்) நீதிசாத்திரத்தி லுள்ள கொள்கைக்கு ஒத்திருக்குமன்றோ? என்ன - என்று, மாரீசன் சொன்னான்-மாரீசன் (இராவணனை நோக்கிக்) கூறினான்; (எ-று.)

வஞ்சனையால் இராமனுடைய தேவியைக் கொள்ளுதல் உன் பெருமைக்கு இழுக்காம்: ஒருவனைப் போரில் வென்று அவனுடைமையைக் கொள்ளுதல் நீதிக்கும் ஒத்ததாம்; அன்றியும் போர்வெற்றியால் ஒருமகளைக் கொண்டு மணந்திடுவாயாயின் மறநிலையின்பத்தின்பாற் படினும் படலாம் என்றவாறு. 'அறத்துளதொக்குமன்றே, மறத்துறை வளர்த்தி' என்றவற்றால் இராமனைப் போரில்வென்று சீதையைக் கொள்ளின், அது உன்பராக்கிரமச் செயலை விளக்கும்; அன்றியும், அறம் போலவும் புறனுக்குத் தோன்றும் என்று கூறியவாறு. 'புறத்து உரைப்பது என்னே' என்பதற்கு - உன்முன்னிலையிலன்றிப் புறத்திலே கூறவேண்டுவதில்லை யென்று உரைப்பாருமுளர். புரவலன்-அரசர் குலத்தான்; சக்கரவர்த்திகுமாரன். திறத்துழி - உருபு மயக்கம். அறம்-தருமத்தையுணர்த்தும் நூலுக்குக் காரியவாகுபெயர். பி - ம்:—[1] மன்னே. (765)

## 207.—அது தகுதியன்றென்று இராவணன் காரணங்காட்டடல்.

ஆனவ னுரைக்க நக்க வரக்கர்கோ னவரை வெல்லத்
தானையும் வேண்டு மோவென் றடக்கைவா டக்க தன்றே
ஏனைய ரிறக்கிற் றானுந் [1]தமியளா யிறக்கு மன்றே
மானவ ளாத லாலே மாயையின் வலித்து மென்றான்.

(இ - ள்.) ஆனவன் - (தனக்கு) வேண்டியவனான மாரீசன், உரைக்க - (இவ்வாறு) சொல்ல, நக்க - (அதுகேட்டுச்) சிரித்த, அரக்கர் கோன் - இராவணன்,—'அவரை வெல்ல - அந்த மனிதர்களை வெல்லுதற்கு, தானைஉம் வேண்டும்ஓ - சேனையும்(துணை வர) வேண்டுமோ? என் தடகை வாள் தக்கது அன்றே - எனது பெரிய கையிலுள்ள வாளொன்றே (அவர்களைக் கொல்லப்) போதுமானதன்றோ? (ஆயினும்), ஏனையர் இறக்கில் - தன்னுடனுள்ளவரான இராமலட்சுமணர்கள் இறந்துவிட்டால், மானவள் தான்உம் - மானுடமகளாகிய அச்சீதையும், தமியள் ஆம் - தனித்திருக்க வேண்டியவளாய், (அக்காரணத்தால்), இறக்கும் அன்றே - இறந்திடுவளன்றோ; ஆதலால் - ஆகையினாலே [அங்ஙனம் இறவாமைப் பொருட்டு என்றபடி], மாயையின் வலித்தும் - மாயையால் (வஞ்சனை செய்து அவளைக்) கைப்பற்றுவோம்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

மானவள் என்றது - மானவன் என்றதன் பெண்பாலாய் நின்றது; இனி, மானவ ளென்பதற்கு - மானத்தை யுடையவளென்றும், மான்போன்ற அவ ளென்றும் பொருள்கொள்ளுதல் தகுதியாம். இராவணன் தான் சிவபிரானிடத்தினின்று சிறந்ததொரு வாளாயுதத்தை வரமாகப் பெற்றிருத்தலால், அதன் சிறப்பைக் கருதி 'தடக்கைவாள் தக்கதன்றே' என்றானென்க. 'மானவளாதலாலே மாயையின் வலித்தும்' என்றது, மானை வஞ்சனையாற் கவர்தல்போல மான்போன்றவளை வஞ்சனையாற் கவர்வோமென்றவாறுமாம். அன்றேயிறக்குமென மொழிமாற்றி, அப்பொழுதே இறப்பளென்றலு மொன்று. பி- ம்:—[1] தமியளும். (766)

## 208.—மாரீசன் சிந்தைப்படுதல்.

தேவியைத் தீண்டா முன்ன மிவன்றலை சரத்திற் சிந்திப்
[1]போம்வகை புணர்ப்ப னென்று புந்தியாற் புகல்கின் றேற்கும்
[2]ஆம்வகை யாயிற் றில்லை யார்விதி [3]விளைவை யோர்வார்
[4]ஏவிய [5]செய்வ தல்லா லில்லை[6]வே றொன்றெ னெண்ணா.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) தேவியை தீண்டா முன்னம் - இராமன் மனைவியான சீதையை (இவன் நெருங்கி)த் தொடுதற்குமுன்னமே, இவன் தலை சரத்தின் சிந்தி போம் வகை புணர்ப்பன் - இவனுடைய தலைகள் (இராம) பாணத்தாற் சிதறிப்போகும்படி செய்விப்பேன், என்று-என் றெண்ணி, புந்தியால் புகல்கின்றேற்கு உம் - தந்திரமாகச்சொல்லுகிற எனக்கும், ஆம் வகை ஆயிற்று இல்லை - பிழைக்கத்தக்கவழி உண்டாகவில்லை: விதி விளைவை ஓர்வார் யார் - ஊழ்வினைப்பயனை அறிவார் ஆர்? [எவருமில்லை யென்றபடி]; (இனி), ஏவிய செய்வது அல்லால் - (இவன்) ஏவிய தொழிலை (நாம்) செய்வதேயல்லாமல், வேறு ஒன்று இல்லை - வேறொருவிதமில்லை, என்று எண்ணா - என்று கருதி, (எ - று.)—"என்னமாமாயம் யானிங்கியற்றுவது இயம்புகென்றான்" என அடுத்த கவியோடு முடியும்.

சீதையை வஞ்சனையாற் கவர்தல் தகுதியன்று; போர்செய்து இராமலட்சுமணரை வென்றபின் கொள்ளுதலே தகுதி யென்று மாரீசன் கூறினது, அங்ஙனம் இராவணன் போர்தொடங்குவனாயின் இராமபாணத்தால் அழிந்திடுவான்; தான் உயிர்பிழைத்திடலாம் என்ற கருத்தினாலென இதனால் விளங்கும். 'இராமனை எதிர்க்கச் சொல்லிய என்சூழ்ச்சி வீணாயிற்று: எனக்கு இறுதிக்காலம் கிட்டியது. இவன் ஏவியதைச் செய்வதன்றி வேறொன்றும் செய்தற்கு இல்லை' என்று மாரீசன் தீர்மானித்தன னென்பதாம். புந்தி - புத்தி என்ற வடசொல்லின் விகாரம். உம்மை - சிறப்பும்மை. புணர்ப்பன் - தன்மைமுற்று: படர்க்கையாக, இராமன் புணர்ப்ப னெனக் கூறுவாருமுளர். பி - ம்:—[1]போவது. [2]ஆவதீதல்லது. [3]வினையை வெல்வார். [4]ஏவது. [5]செய்தல். [6]வேறெண்ணதென்னா. (767)

## 209.—மாரீசன் மாயமானாதற்கு உடன்படுதல்.

என்னமா மாயம் [1]யானிங் கியற்றுவ தியம்பு[2]கென்றான்
பொன்னின்[3]மா னாகிப் புக்குப் பொன்னைமால் புணர்த்து கென்ன
அன்னது செய்வெ னென்னா மாரீச னமைந்து போனான்
மின்னுவே லரக்கர் கோனும் வேறொரு நெறியிற் போனான்.

(இ - ள்.) 'இங்கு - இப்போது, யான் இயற்றுவது என்ன மா மாயம் - நான் செய்யவேண்டிய பெரியமாயை யாது? இயம்புக - சொல்வாயாக,' என்றான்-என்று (மாரீசன்) வினவினான்; (அதற்கு இராவணன்), 'பொன்னின் மான் ஆகி புக்கு பொன்னை மால்புணர்த்துக என்ன - (மாயையால் நீ) ஒரு பொன்மானாகி (அவர்கள் இருக்குமிடத்துக்கு)ச்சென்று சீதைக்கு ஆசையை மூட்டுவாயாக'

என்று சொல்ல,—மாரீசன்—, அன்னது செய்வென் என்னு அமைந்து போனான்-அதனைச்செய்வேனென்று சம்மதித்துச்சென் ருன்: மின்னும் வேல் அரக்கர் கோன்உம் வேறு ஒரு நெறியின் போனான் - விளங்குகிற வேற்படையையுடைய் இராவணனும் வேறொருவழியாற் சென்றான்; (எ-று.)

'இராவணனேவியதைச் செய்வதே யான் செய்யவேண்டிய செயல்' என்று உறுதியிட்ட மாரீசன் இராவணனை நோக்கி, 'நான் என்ன மாயம் செய்வது?' என்று வினவ, இராவணன் 'சீதை பொன்னாதலின் அவளைப் பொன்மய மானாய் மயக்குக' எனக் கூறினான். மாரீசன் அப்படியே செய்கிறேன் என்று விடை பெற்றுச் செல்ல, இராவணனும் வேறுவழியே சென்றனனென்ப தாம். "பொன்னொத்த மானொன்று" என்பது பெரியார் பாசுரம். பொன்-பொன்னிறமானவள்; பொன்போல் அருமையானவள்: திருமகளின் அம்சமானவள். இயம்புகென்றான், புணர்த்து கென்ன-தொகுத்தல். பி-ம்:—[1]யான்மற்று. [2]என்ன. [3]மானாகப் புக்கப். (768)

வேறு.

## 210. இது - கவிக்கூற்று.

மேனா [1]ளவன்வில் வலிகண் டமையால்
தானா க[2]வமைந் துசமைந் திலனால்
மானா குதியென் றவன்[3]வாய் மொழியால்
போனான் மனமுஞ் செயலும் புகல்வாம்.

(இ - ள்.) மேல் நாள் - முன்னாளில், அவன் வில் வலி கண்டமையால் - அவ்விராமபிரானது வில்லின் வலிமையை (ஒருமுறைக்கு இருமுறை) அறிந்துள்ளதனால், தான் ஆக அமைந்து சமைந்திலன்- (மாரீசன்) தானாக (மாயை செய்தற்கு) இயைந்து மான்வடிவமாயி னில்லை; மான் ஆகுதி என்றவன் வாய் மொழியால் போனான் - மான்வடிவங்கொள்வா யென்று கட்டளையிட்ட இராவணனது வாயினின்று வந்த வார்த்தையைக் கடக்கமாட்டாமையால் (அங்ஙனஞ் செய்தற்குச்) சென்ற மாரீசனது, மனம்உம் செயல்உம்- மனத்தின் நிலைமையையும் செய்கையையும், புகல்வாம்-இனிக் கூறு வோம்; (எ-று.)—அடுத்த கவியில் சிந்தையின் நிலையும், அதற்கு அடுத்த கவிகளில் செயலும் முறையே கூறப்படுதல் காண்க. ஆல் - ஈற்றசை.

'நீ மானாகுக' என்று இராவணன் சொல்ல, பின்னர் அந்த மாரீசனது மனநிலையையும் செயலையும் இனிச் சொல்வோமென் கின்றனர். மனம் - அதன் நிலைமைக்கு ஆகுபெயர். 'வாய்மொழி' என்றவிடத்து 'வாய்' என வேண்டாதுகூறினார், தீயசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் இழிபுமுடித்தற்கு. பி-ம்:— [1]அவர். [2]நினைந்து. [3]வாள்வலியால்.

இதுமுதல் பதினாறு கவிகள் - பெரும்பாலும் நாற்சீரும் மாச்சீராகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். அன்றி, சிந்தடி நான்குகொண்ட வஞ்சிவிருத்தமாகக் கொள்ளினும் இழுக்காது. ()

## 211.—மாரீசனது மனநிலை.

வெஞ்[1]சுற் றநினைந் துகும்வீ ரரைவேறு
அஞ்சுற் றுமறுக் குறுமாழ் குழிநீர்
[2]நஞ்சுற் றுழிமீ னினடுக் குறுவான்
நெஞ்சுற் றதொர்பெற் றிநினைப் பரிதால்.

(இ - ள்.) (இராவணன் கட்டளையால் மாயைசெய்தற்கு உடன் பட்டுச் சென்ற மாரீசனது மனமானது தான் இறந்துபடுவது திண்ணமென்று கருதுதலால்),வெம் சுற்றம்நினைந்து உகும்-(தனது) விருப்பத்துக்கு இடமான சுற்றத்தாரை (இனிக் காணப்பெறேனே என்று அவரை) நினைந்து வருந்தும்: வேறு-மற்றும், வீரரை அஞ்சுற்று மறுக்கு உறும்-சுத்தவீரர்களான இராமலட்சுமணர்கள் (தவறுமற் கொன்றிடுவரேஎன்று) அவர்களுக்கு அஞ்சிச் சுழற்சி யடையும்; ஆழ் குழி நீர் நஞ்சு உற்ற உழி மீனின் நடுக்கு உறுவான் - ஆழ்ந்த பள்ளத்திலுள்ள நீர் விஷத்தன்மையை யடைந்தபோது (அதிற்பொருந்திய) மீன் (தான் அந்நீரை நீங்கினாலும் நீங்காவிட்டாலும் இறப்பது திண்ணமென்று) நடுங்குவதுபோல நடுங்குதலுற்ற அந்த மாரீசனது, நெஞ்சு உற்றது ஓர் பெற்றி - மனம் அடைந்த தொருநிலைமை, நினைப்பு அரிது - இத்தன்மைத் தென்று நினைக்கவும் முடியாது; (எ - று.)

மனத்தினால் நினைத்தற்கும் முடியா தெனவே, வாயினாற் சொல்ல முடியாதென்பது தானே விளங்கும். வெம்மை யென்பது- உரிச்சொல்லாய் விருப்ப மென்னும் பொருளையும் உணர்த்தும்: "வெம்மை வேண்டல்". 'வெம்சுற்ற நினைந்துகும்' என்றது - அன்புள்ள தன் சுற்றத்தாரான அரக்கர் பலரை விட்டுத் தான் இப்பொழுது சென்று அழிய வேண்டிய தன்மையைக் கருதி நெகிழுமென்று கருத்துப்படுவதோடு, தனது தாயும் தம்பியும் முதலிய அன்புள்ள சுற்றத்தார் முன்பு இராமனாலிறந்ததைச் சிந்தித்து நிலைகுலையு மென்றும் கருத்துப்படும். மறுக்கு - மறுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். குழிநீர் நஞ்சுற்றுழி மீனின் நடுக்குறும்-குழிமீன் தான் வாழும் நீரில் நஞ்சு கலப்பின் அதில் தங்கவும் மாட்டாமல் நீங்கவும் மாட்டாமல் தவிப்பதுபோலத் தவிப்பான் என்றுமாம். குழிநீர்க்கு 'ஆழ்' என்ற அடைமொழி, அதைவிட்டு வெளியேசெல்லுதல் முடியாதென்பதனைக் காட்ட என்ப. பி-ம்:—[1]சுற்றமறுத்துகும். [2]நஞ்சுற்றுறுமீனினடுக்குறுமால்.

## 212.—மாரீசன் இராமனுள்ள இடத்தை யடைதல்.

அக்கா லமும்வேள் வியினன் றிவனோடு
எக்கா லுநலிந் துமொரீ றுபெருன்

முக்கா லின்முடிந் திடுவான் முயல்வான்
புக்கா னவிரா கவன்வை குபுனம்.

(இ - ள்.) வேள்வியின் அன்று - (விசுவாமித்திரன்) யாகம் நடந்த அந்நாளிலும், அ காலம்உம் - (தண்டகாரணியத்தில் மானைகச் சென்ற) அக்காலத்திலும், இவனோடு-இவ்விராமபிரானால், நலிந்தும் - வருத்தமடைந்தும், எ காலும்-(இவ்விரண்டுசமயங்களில்) எச்சமயத் திலும், ஓர் ஈறு பெறுன்-ஓர் அழிவையடையாதவனான மாரீசன், முக்காலின் முடிந்திடுவான் முயல்வான் - மூன்றும்முறையாகிய இப் பொழுது இறந்திட உடன்பட்டவனாய், அ இராகவன் வைகு புனம் புக்கான் - ரகுகுலத்தில் திருவவதரித்தவனான அவ்விராமபிரான் வசிக்கிற வனத்திற் பிரவேசித்தான்; (எ - று.)

இந்த மூன்றும்முறை தானே இராமனுள்ள இடந்தேடிச்செல் வதனால் 'முக்காலின் முடிந்திடுவான் முயல்வான்' என்றது. 'வேள்வியி னன்று' என்பது பின்னும், 'அக்காலமும்' என்றது முன்னுமாக முறைபிறழ வைக்கப்பட்டது, செய்யுளாதலின். 'வேள்வியினன்று' என்பதன்பின் எண்ணும்மை விகாரத்தால் தொக்கு நின்றது. இவ னோடு என்பதில், ஓடு- ஆலுருபின் பொருளதாய் நின்றது. 'இவனோடு நலிந்தும்' என்பதற்கு-இவ்விராமனை வருத்தத்தொடங்கியு மென்றும் பொருள்கொள்ளலாம். (771)

## 213.—மாரீசன் பொன்மானுருவங்கொண்டு சீதைக்கு எதிரே வரல்.

தன்மா னமிலா தயங் கொளிசால்
மின்வா னமுமண் ணும்[1]விளங் குவதோர்
பொன்மா னுருவங் கொடுபோ யினனால்
நன்மா னனையா டனைநா டுறுவான்.

(இ - ள்.) மானம் இலாத - ஒப்பில்லாத, தய்ங்கு ஒளி சால் - விளங்குகிற ஒளிமிக்க, தன் மின் - மின்னல்போன்ற தனது உட லொளியால், வானம்உம் மண்உம் விளங்குவது - விண்ணுலகமும் மண்ணுலகமும் விளங்கும்படியான, ஓர் பொன் மான் உருவம் - ஒரு பொன்மானினுருவத்தை, கொடு - (மாயையினால்) கொண்டு, (மாரீ சன்), நல் மான் அனையாள்தனை நாடுறுவான் - சிறந்த மான் போன்றவளான சீதை தன்னைப்பார்த்து விரும்புமாறு, போயி னன் - (அவளுடைய அருகில் எதிரிற்) சென்றான்; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

நல்ல மான்போன்ற அச்சீதை தன்னை விரும்பும்பொருட்டு மாயையாலாகிய பொன்மான்வடிவங்கொண்டு போனானென ஒரு வகைச்சமத்காரந் தோன்றக் கூறினார். முன் இரண்டு அடி - பொன் மானின் தேககாந்திச் சிறப்பைக் கூறியது. முதலடியில், மானம் = ஸமானம். மின் - உவமவாகுபெயர்: இனி, 'சால் மின் வானம்' என எடுத்து - பெருமைபொருந்திய மின்னலைக்கொண்ட வானமும் மண்ணும் தன்தயங்கொளியால் விளங்குவது என்று உரைப்பினு மாம். பி-ம்:—[1]விளங்கொளிசேர். (772)

## 214.—அந்த மானை. மான்கள்பலவுந் தொடர்தல்.

கலைமான் முதலா யினகண் டவெலாம்
[1] அலைமா னுறுமா சையின்வந் தனவால்
[2] நிலையா மனவஞ் சனைநே யமிலா
விலைமா தர்கண்யா ரும்விழுந் தெனவே.

(இ - ள்.) நிலையா மனம் - (எவரிடத்தும்) பற்றுதலில்லாத மனத்தையும், வஞ்சனை - வஞ்சனையையுமுடைய, நேயம் இலா விலை மாதர்கண் - உள்ளன்பில்லாத வேசையர்பக்கல், யார்உம் விழுந்து என-காமுகரெல்லோரும் மயங்கிவிழுந்தாற்போல,—கலை மான் முதல் ஆயின கண்ட எலாம்-கலைமான் முதலிய மானினங்களில்(அப்பொன் மானைப்) பார்த்தவை யாவும், அலை மானுறும் ஆசையின் - கடலை யொத்த [மிகவும் அதிகமான] ஆசையுடனே, வந்தன - (அப்பொன் மானைத் தொடர்ந்து) வந்தன; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

விலைமகளிரதுவஞ்சனையை அறியாமல் அவர்கள்மேனிமினுக் கையே நோக்கி அவர்களிடத்துச் சாதாரணசனங்கள்பலரும் கண்ட வளவில் ஆசைவைத்துச் சேர்தல்போல, அந்தப்பொன்மானினது மாயையை அறியாமல் அதன் உடம்பின்விளக்கத்தையேநோக்கி மான்கள்பலவும் அதனைக் கண்டமாத்திரத்தில் மிக்கஆசைப்பெருக் கத்துடன் தொடர்ந்தன என்பதாம்; உவமையணி. தம்மிடத்து ஆசைகொள்ளும் ஆடவரிடத்து விலைமாதர் தாம்ஆசைகொள்ளா மைபோலத் தன்னிடத்தில் ஆசைகொள்ளும் பிறமான்களிடத்து அப்பொன்மான் ஆசைகொள்ளாமையின், இவ்வுவமை மிகப்பொருந் தும். விலைமாதர் நெஞ்சம் பொன்னின் மீதே நாட்டங்கொள்ளுதல் போல, அந்தமாயமான் பொன்னின் [இலக்குமியின்] அமிசமான சீதாபிராட்டியின்மேல் நாட்டங்கொள்ளுதலால், உவமையேற்குமென் பர் ஒருசாரார். இக்கவியால், அந்தமாயமானினது விரும்பப்படுந் தன்மை கூறப்பட்டது. இரண்டாமடிக்கு - (அவ்வனத்திலே) சஞ்ச ரிக்கிற அம்மானிடத்து மிக்கஆசையோடு வந்தனஎன்றும் பொருள் கொள்ளலாம். மூன்றும் அடியில், நிலைஆம் மனம் வஞ்சனை யென எடுத்து, எப்போதும் நீங்காது நிலைபெற்ற மனவஞ்சனையையுடைய எனப் பொருள் கொள்ளினுமாம். விலைமாதர் - தமதுமெய்யின்பத் தைப் பொருட்கு விலைப்படுத்தும் மகளிர். விழுதல் - இங்கே, விரும் பித்தொடர்தல். கண்ட கலைமான் முதலாயின எலாம் என்று கூட்டிப் பொருளுரைப்பினுமாம். பி - ம்:—[1] அலைவான். [2] நிலையா மென. (773)

## 215.—அப்பொழுது சீதை மலர்கொய்து வருதல்.

பொய்யா மெனவோ துபுறஞ் சொலினால்
நையா விடைநோ வநடந் தனளால்
[1] வைதே விதன்வால் வளைமென் கையெனும்
கொய்யா [2] மலரான் மலர்[3] கொய் குறுவாள்.

(இ - ள்.) வைதேவி - சீதாபிராட்டி,—தன் - தனது, வால் வளை மெல் கை எனும் - சுத்தமானவளையல்களை யணிந்த மெல்லிய கைகளாகிய, கொய்யா மலரால்-பறிக்கப்படாத தாமரை மலர்களால், மலர் கொய்குறுவாள் - (அவ்வனத்திலுள்ள) பூக்களைப் பறித்துக்கொண்டு வருபவளாய், — பொய் ஆம் என புறம் ஓது சொலின்றல்-(இவளுக்கு இடையுண்டென்பது) பொய்யேயாமென்று அயலார் கூறுதற்கு ஏற்ப, இடை நையா நோவ - (தனது) இடை மெலிந்து வருந்த, நடந்தனள் - நடந்துவந்தாள்; (எ - று.)—ஆல் ஈற்றசை.

உத்தமவிலக்கணத்தின்படி மிகச்சிறுத்து நுண்ணியதாயுள்ள இடை மெல்லியலாகிய அவள் மலர்கொய்து நடந்துவருகிற இளைப் பினால் மிகமெலிந்துவருந்துமளவில், இவளுக்கு இடை இல்லை யென்று கண்டார் கூறுங்கூற்றுத் தகுதியெனத் தோன்று மென்பது, முன்னிரண்டடியின் போக்கு. புறம்-புறத்தார்க்கு ஆகு பெயர். வைதேவி=வைதேஹீ: விதேகராசனது குலத்து மகள். விதேஹனென்பது ஜநககுலத்தலைவனை அரசனது பெயர். அவன் ஒருகால் வசிஷ்டன்சாபத்தால் தேஹத்தை யிழந்தமைபற்றி, விதேஹனெனப் பெயர்பெற்றான். வால் - வெண்மையும், ஒண்மையு மாம். 'கையெனுங் கொய்யாமலர்' — 'பாயாவேங்கை,' 'பறவாக் கொக்கு' என்றாற்போலப் பிறகுறிப்பு. கொய்யாமலரால் மலர் கொய்வாளென ஒருவகைச் சமத்காரந் தோன்றக்கூறினர். பி-ம்:— [1]வைதேகி. [2]மலராலலர். [3]கொய்துறுவாள். (774)

## 216.—சீதை மாயமானைக் காணுதல்.

உண்டா கியகே டுடையார் [1]துயிலா
எண்டா னு[2]மியைந் தியையா வுருவம்
கண்டா ரெனலாம் வகைகண் டனளால்
பண்டா ருமுரு விடர்பா டுறுவாள்.

(இ - ள்.) உண்டாகிய கேடு உடையார் - (விரைவில்) தீங்கு நேரும்படியான நிலைமையை யடைந்தவர்கள், துயிலா - நித்திரை கொண்டு [துயில்கையில்], எண் தான் உம் இயைந்து இயையா உருவம் கண்டார் எனல் ஆம் வகை - (ஒருபொழுதும்) மனத்தில் தோன்றி யமைதலுமில்லாத [விபரீதத்] தோற்றத்தைக் கனாக் கண்டாற்போல,—பண்டு ஆர் உம் உறு இடர் பாடு உறுவாள்- முன்பு எவரும் அடையாத துன்பம் அருகில் நெருங்கப்பெற்றவ ளானசீதை, கண்டனள்-(அந்தமாயமானைப்) பார்த்தாள்; (எ - று.)

விநாசகாலம் சமீபிக்கப்பெற்றவர் அதற்கு முற்குறியாக, இது வரையில் ஒருநாளும் மனத்தில் நினைத்துப் பார்த்துமிராத விபரீதக் காட்சியைத் தூக்கத்திற் கனவிற்காண்பதுபோல, மிக்க துன்பத்தை உடனே அடையவேண்டியவளான சீதை அதற்கு முன்நிகழ்ச்சியாகப் பொய்ம்மானின் தோற்றத்தைப் பார்த்தனளென்பதாம்; உவமை யணி. துயிலா என்பதைத் துயிலாமலே என்று எதிர்மறைவினை யெச்சமாகக் கொண்டு, "மரணகாலம் சமீபித்தவர் பொன்மயமான

பாதபங்களைக்காண்பர்" என்பதுஒரு நூற்கொள்கை யாதலால். துயிலாமலே 'எண்டானு மியைந்தியையாவுருவம் [பொன்மயமான பாதபவுருவம்] கண்டாரெனலாம் வகை' என்றுகூறல்ஏற்கும்: ஸ்ரீவான்மீகத்தில் இராவணனைச் சீதை கடிந்து பேசும்போது "மந்த பாக்கியத்தை யுடையாய்! பொன்மயமான மரங்களைப் பார்க்கிறாய்" என்று கூறியதாக வுள்ளது. உபமானத்தில் 'எண்டானுமியைந் தியையாவுருவம்' என்றதனால், உபமேயமாகிய இம்மான்வடிவம் இதுவரையில் என்றும் மனத்தில் நினைத்துப் பார்க்கவும்படாத அதிசயக் காட்சியுடையதெனத் தோன்றும். உண்டாகிய கேடுடையார் - உளதாகிய போகூழையுடையவர். பி - ம்:—[1] துயில்வாய். [2] இலாதியையா. (775)

## 217.—சீதை அந்த மானினிடத்து விருப்பங்கொள்ளல்.

காணு விதுகை தவமென் றுணராள்
பேணு தநலங் கொடுபே ணினளால்
[1]வாணு ளவ்விரா வணன்மா ளுதலால்
வீணு ளினறம் புவிமே வுதலால்.

(இ - ள்.) அ இராவணன் வாழ் நாள் மாளுதலால் - அந்த இராவணன் ஆயுளொழிதலாலும், வீழ் நாளின் அறம் புவி மேவுதலால் - (அவன்) இறந்து விழுந்தவளவில் தருமம் பூமியிற் பொருந்தி நிலைபெறவேண்டுதலாலும்,—(சீதை), காணு-(அந்தமானைக்) கண்டு, இது கைதவம் என்று உணராள்-இது வஞ்சனை வடிவமென்று அறியாதவளாய், பேணுத நலம் கொடு பேணினள் - விரும்பத்தகாத (அதன்) அழகையே (காரணமாகக்) கொண்டு (அதனை) விரும்பினாள்; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

சீதை மாயமானிடத்து விருப்பங்கொள்ளுதல் - அவளைத் தனிப்படுத்தி இராவணன் எடுத்துப்போய் அதுகாரணமாக இராமபிரானாற் கொல்லப்பட்டு அழிதற்கும், மிக்ககொடியோனான அவனது அழிவு-உலகத்தில் தருமம் நிலைநிற்றற்கும் காரணமாகு மென்க. காணு இது-எந்நாளினும் காணப்பட்டிராத இம்மானுருவமெனினும் அமையும். 'பேணுத நலங் கொடு' என்பதற்கு - பாராட்டத்தகாத ஆசைகொண்டு என்றுமாம். வாணுள், வீணுள்-வாழ்நாள், வீழ்நாள் என்பவற்றின் மரூஉ. பி - ம்:—[1] வாணுளை. (776)

## 218.—அதனைப்பிடித்துத் தரச்சொல்லும்பொருட்டுச் சீதை இராமபிரானிடம் வருதல்.

நெற்றிப் [1]பிறையாண் முன[2]நின் றிடலும்
முற்றிப் பொழிகா தலின்முந் துறுவாள்
பற்றித் [3]தருகென் பெனெனப் பதையா
வெற்றிச் சிலைவீ ரனைமே வினளால்.

(இ - ள்.) நெற்றி பிறையாள் முனம் - இளஞ்சந்திரன்போன்ற நெற்றியையுடைய சீதையின் எதிரிலே, நின்றிடலும் - (அந்தமான் சென்று) நின்ற வளவிலே,—(அவள்), முற்றி பொழி காதலின் முந்

துறுவாள் - நிறைந்து மேல்வழிகிற ஆசைப்பெருக்கில் மிகுபவளாய், பற்றி தருக என்பென் என - (இதனைப்) பிடித்துக்கொடுக்க வேண்டுமென்று சொல்வேனென்று கருதி, பதையா - மிக விரைந்து, வெற்றி சிலை வீரனை மேவினள் - சயத்தைத்தருகிற வில்லையுடைய வீரனாகிய ஸ்ரீராமனை யடைந்தாள்; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

நெற்றிப்பிறை - முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை. பி - ம்:—[1]பிறையாளிறை. [2]நின்றிலடல். [3]தருகென்பது. (777)

## 219.—அந்தமானைக்குறித்துச் சீதை இராமனிடம் பிரஸ்தாபித்தல்.

ஆணிப் பொனினா கியதாய் கதிரால்
சேணிற் சுடர்கின்றது [1]திண் செவிகால்
மாணிக் கமயத் தொருமா னுளதால்
காணத் தகுமென் றனள்கை தொழுவாள்.

(இ-ள்.) கை தொழுவாள்-(சீதை இராமனைக்) கைகூப்பி வணங்குபவளாய்,—'ஆணி பொனின் ஆகியது - மாற்றுயர்ந்த பொன்னினாலானதும், ஆய் கதிரால் சேணில் சுடர்கின்றது - சிறந்த ஒளியினால் நெடுந்தூரமளவும் விளங்குகின்றதும், திண் செவி கால் - வலிய காதுகளும் கால்களும், மாணிக்க மயத்து - மாணிக்கரத்தினமயமாயிருக்கப்பெற்றதுமாகிய, ஒரு மான் - மானொன்று, உளது - வந்துள்ளது: காண தகும் - (மிக்க அழகுடைமையால் அது) பார்க்கத்தக்கதாம்,' என்றனள் - என்று சொன்னாள்; (எ-று.)

சேணில் - வானத்திலெனினுமாம். திண்செவி-நெறித்த காது. காது நெறித்தல், மருண்ட மானின் இயற்கை. ஆல் - ஈற்றசை. பி - ம்:—[1]கண். (778)

## 220.—இராமன் அதனைப் பார்க்க விரும்புதல்.

இம்மா னிநிலத் தினிலில் லையெனா
எம்மா [1]னிதனைச் சிறிதெண் ணல்செயான்
செம்மா னவள்சொற் கொடுதே மலரோன்
அம்மா னுமருத் தியனா யினனால்.

(இ - ள்.) இ மான் இ நிலத்தினில் இல்லை எனா - இப்படிப்பட்ட மான் இந்தவுலகத்தில் இல்லையேயென்று, இதனை-இவ்விஷயத்தை, சிறிது எண்ணல் செயான் - சிறிதும் ஆராய்ச்சி செய்யாதவனாய், எம்மான் - எமது தலைவனும், தேன்மலரோன் அம்மான்உம் - தேனையுடையதாமரைமலரில் தோன்றியவனான பிரமனது தந்தையாகிய திருமாலின் அவதாரமுமானஸ்ரீராமனும்,—செம் மான் அவள் சொல் கொடு - செவ்விய மான்போன்ற அச்சீதையினது சொல்மாத்திரத்தையே கொண்டு, அருத்தியன் ஆயினன் - (அந்தமானினிடத்து) ஆசையுள்ளவனானான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இயங்குதிணைப்பொருள் நிலைத்திணைபபொருள் ஆகிய எல்லா வற்றையும் படைக்கிற பிரமனைப் படைத்த தந்தையானவனும், தையல்சொற் கேட்டு அவள் விருப்பங்கொண்ட பொருளினிடத்துத் தானும் ஆராயாது விருப்பங்கொண்டன னென்றார். முன்னிரண் டடியால், சிறிதேனும் ஆலோசனை செய்திருந்தால் அதன் உண்மை நிலையை யுணர்தலால் அதனை விரும்பா னென்பது தோன்றும். செம்மானவள் என்றது, மருண்ட பார்வையையுடையவளாதலின்: காணப்பட்ட பொருளின் உண்மையியல்பை உணரவல்லவ ளல்லாதவ ளென்றவாறு. இனி, தே மலர் என்றே எடுத்து-தெய்வத்தன்மை யுள்ள மலருமாம். இங்கே, மலர் - திருமாலின் உந்தித்தாமரை. தேமலரோ னம்மானும் என்ற உம்மை-உயர்வுசிறப்போடு இறந்தது தழுவிய எச்சம். பி-ம்:—[1] இதெனச். (779)

## 221.—அப்பொழுது இலக்குமணன் ஒன்றுகூறத்தொடங்கல்.

ஆண்டங் கிளையோ னுரையா டினனால்
வேண்டும் மெனலால் [1] விழைவன் றி [2] தெனுன்
பூண்டுஞ் சுபொலங் கொடியோ யதுநாம்
[3] காண்டும் மெனும்வள் ளல்கருத் துணர்வான்.

(இ - ள்.) வேண்டும் எனலால்-(இது எனக்கு) வேண்டு மென்று (தன்மனைவி) கூறுதலால், இது விழைவு அன்று எனுன் - இது விரும்பத்தக்கதன்று என்று மறுத்துரையாதவனாகி, (அவளை நோக்கி), 'பூண் துஞ்சு பொலம் கொடியோய் - ஆபரணங்கள் தங்கிய பொற்கொடிபோன்றவளே! அது நாம் காண்டும் - அந்த மானை நாம் போய்ப்பார்ப்போம்', எனும் - என்று கூறுகிற, வள்ளல் - வரையா தருளுந் தன்மையனான இராமபிரானது, கருத்து - எண்ணத்தை, உணர்வான்-அறிபவனாய், இளையோன்-தம்பியான இலக்குமணன்,— ஆண்டு அங்கு உரையாடினன் - அப்பொழுது அவ்விடத்தில் ஒரு வார்த்தை சொல்பவனானான்; (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க. ஆல்-ஈற்றசை.

தனது உதாரணகுணத்தால் இங்ஙனஞ் சீதை சொன்னபடி விரும்பினனென்பது தோன்ற, 'வள்ளல்' என்றார். 'வள்ளல் கருத்து உணர்வான் என்பதற்கு - இத்தன்மையான இராமனது திருவுள்ளத்தை யறிந்து என்றும், இராமனது மனப்போக்கின் நிலையை அறியும்பொருட்டு என்றுங் கருத்துக்கொள்ளலாம். பிராட்டியினது திருமேனி பொன்னிறத்தோடு மெல்லியதாய் ஒல்கியொசியுந்தன்மைய தாதலால், 'பொலங்கொடியோய்' என விளிக்கப்பட்டாள். 'அங்கு' என்பது - அசையுமாம். ஆண் தங்கு இளையோன் எனப்பிரித்து, ஆண்மை நிலைபெற்றுள்ள இலக்கு மண னென்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1] விளைவு. [2] எனுப். [3] காண்டும்மென. (780)

## 222.—இலக்குமணன்வார்த்தை: அந்தமானை மாயையென்றல்.

காயங் கனகம் மணிகால் செவிவால்
பாயும் முருவோ டிதுபண் பெனலால்

மாயம் மெனலன் றிமனக் கொளவே
ஏயும் மிறை [1]மெய் யலவென் றனனால்.

(இ - ள்.) 'கனகம் காயம் - பொன்னிறமான உடம்பும், மணி கால் செவி வால்-மாணிக்கமயமான கால்களும்காதுகளும்வாலும், பாயும் உருவோடு - பாய்கிற வடிவத்தோடுங் கூடிய, இது - இத் தன்மை, பண்பு - (அந்தமானின்) இயல்பு, எனலால் - என்று (பிராட்டி) கூறுதலால், மாயம் எனல் - (இதனை) மாயைவடிவ மென்று எண்ணுக: அன்றி - அவ்வாறல்லாமல், மனம்கொள - (வேறுவகையாக) மனத்திற்கொள்ளுதற்கு [எண்ணுதற்கு], ஏயும் இறை - பொருந்திய தலைவனே! மெய் அல - (இது) மெய்ம்மையான தன்று,' என்றனன் - என்று (இலக்குமணன்) கூறினான்; (எ - று.) —ஆல் - அசை.

இங்கு வாலும் உடன்கூறப்பட்டதனால், கீழ் 219 - ஆங் கவியில் "திண் செவிகால்" என்றது, வாலுக்கும் உபலட்சணமென்று கொள்ளத்தக்கது. எனல் - வியங்கோள். பி-ம்:—[1]ஐயுறவென்றனனால், ஐயுறவென்றளவே. (781)

## 223.—இதுவும், அடுத்த கவியும் - இராமன் அதனை மறுத்துக் கூறுதல்.

நில்லா வுலகின் னிலைநேர் மையினால்
வல்லா ருமுணர்ந் திலர்மன் னுயிர்தாம்
பல்லா யிரகோ டிபரந் துளவால்
இல்லா தனவில் லையிளங் குமரா.

மூன்று கவிகள்—குளகம்.

(இ - ள்.) இள குமரா - இளமையுடைய தம்பி!, நேர்மையினால்-ஒழுங்கான அறிவினால், வல்லார்உம்-(பலவற்றையும் அறிய) வல்லவர்களும், நில்லா உலகின் நிலை - (ஒருநிலையில்) நில்லாத உலகத்தின் நிலைமையை, உணர்ந்திலர் - (முற்றும்) அறிந்தாரில்லை; மன் உயிர்தாம் - (உலகத்தில்) நிலைபெற்ற பிராணிகள் தாம், பல்ஆயிர கோடி பரந்துள - அநேகம் ஆயிரங்கோடிவகையாகப்பரவியுள்ளன; ஆல் -ஆதலால், இல்லாதன இல்லை-(இன்ன அங்க இலக்கணத்தையுடைய பிராணிகள் உலகத்தில்) இல்லாதவை என்று சொல்லக்கூடியன எவையும் இல்லை; (எ - று.)

உலகத்து அற்புதமாகப் பல அபூர்வப்பொருள் தோன்றலாம் என்பது, இறுதியடிக்குக் கருத்து. மேல் 225-இல், மொய் யுயிர்என வருவதனால் இல்லாதன என்பதற்கு - இல்லாத காரணங்கள் எனப் பொதுவாகக் கூறுது, இல்லாதபிராணிகள் என்றலே தகுதி. 'இளங் குமரா!-மிக்க இளமையையுடையவனே!' என்று விளித்தது-நீ என்னினும் இளையவனாதலால் புதுப்புது அனுபவம் என்னினும் உனக்குக் குறைந்துள்ளது என்ற கருத்தினதென்ப. உலகின்னிலை - விரித்தல். 'நேர்மையினால்வல்லார்' என்றது, விசேஷஞானிகளை.

'மன்னுயிர்தாம்' என்பதில், தாம் என்பது - கட்டுரைச் சுவைபட நின்றது; வாக்கியாலங்கார மென்பர் வடநூலார். ஆல்-விகாரம். ()

224. என்னென் று[1] நினைத் ததிழைத் [2]துளநம்
கன்னங் களின்வே றுளகா ணுதுமால்
பொன்னின் [3]னெளிமே னிபொருந் தியவேழ்
அன்னங் கள்பிறந் ததறிந் திலையோ.

(இ - ள்.) உளம் இழைத்து என் என்று நினைத்தது-(உனது) மனம்ஆராய்ந்து என்னவென்று கருதிற்று! நம் கன்னங்களின் - நமது காதுகளிலே, வேறு உள காணுதும்-வெவ்வேறு வகையா யுள்ள பொருள்களைக் கேட்டறிகிறோம்; பொன்னின் ஒளி மேனி பொருந்திய ஏழ் அன்னங்கள் பிறந்தது அறிந்திலை ஓ - பொன்மய மாய்விளங்குகிற வடிவம்பொருந்திய ஏழு அன்னப் பறவைகள் தோன்றியதை நீ அறிந்தாயில்லையோ? (எ - று.)—ஆல்-ஈற்றசை.

பரத்துவாசமுனிவனது புத்திரர்களான ஏழுபேர் மாநசசர சின் கரையில் யோகாப்பியாசஞ்செய்கையில் ஒழுக்கக்குறைவினால் வழுவி அவ்யோகம் கைகூடப்பெறாமல் மரணமடைந்து அடுத்த பிறப்பில் குருக்ஷேத்ரத்தில் கௌசிகமுனிவனது குமாரர்களாய்த் தோன்றித் தந்தையிறந்தபின் கார்க்கமுனிவனுக்குச் சிஷ்யர்க ளாய் அவனுடைய ஓமதேனுவைப் பாதுகாத்துவருகையில், பசி யால் வருந்தி அப்பசுவைக் கொன்றுதின்னப் புகுமளவில், தம்மி லொருவன் கூறிய ஆலோசனையின்படி அப்பசுவைக்கொன்று பிதிருதேவதைகளுக்குச் சிராத்தஞ் செய்து சேஷத்தைத் தாம் உண்டனர்: அவர்கள் குருவின்பசுவைக் கொன்ற தோஷத்தால் சில இழிபிறப்புக்களையும், பிதிரு சிராத்தஞ்செய்த புண்ணியத் தால் அப்பிறப்புக்களில் பூர்வஜந்மஞானத்தையும் நல்லொழுக்கத் தையும் முடிவில் யோகம் கைகூடி உயர்கதிபுகுதலையும் அடைவா ராகி, தசார்ணதேசத்தில் ஏழு வேடர்களாயும், காலஞ்சரகிரியில்ஏழு மிருகங்களாயும், சரத்வீபத்தில், ஏழு சக்கரவாகபட்சிகளாயும், மா நசசரசில் பத்மகர்ப்பம் அரவிந்தாக்ஷம் க்ஷீரகர்ப்பம் சுலோசநம் குரு பிந்து சுபிந்து ஹைமகர்ப்பம் எனப் பெயர்பெற்றுப் பொன்னிற மாய்விளங்கும் ஏழு அன்னப்பறவைகளாயும், காம்பிலியதேசத் தில் ஏழுசிறந்த மனிதர்களாயும் முறையேபிறந்து, ஒவ்வொரு பிறப்பிலும் முற்பிறப்புணர்ச்சியையும் விரதாநுஷ்டாநத்தையும் யோகசிந்தனையையும் விடாது நின்று, முடிவில் யோகசித்தியை யடைந்து முத்திபெற்றன ரென்ற வரலாறு இங்குக் கொள்ளத் தக்கது.

இங்கே'காணுதும்' என்பது - கேட்டுள்ளோமென்ற பொருளது; இது, ஒருபுலனை மற்றொருபுலனுக்கக்கூறிய உபசாரவழக்கு; "நாற்றங் கேட்டலுந்தின்னநயப்பது" என்றாற்போல. பி - ம்:—[1]நினைந்தது. [2]உளதாம். [3]குளிர். (783)

## 225.—அவ்வளவிற் சீதை 'அதுபோய்விடுமே' என வருந்தல்.

முறையும் முடிவும் மிலேமொய் யுயிரென்று
இறைவன் னிளேயா ஞெடியம் பினஞல்
பறையுந் துணேயன் னதுபன் னெறிபோய்
மறையும் மெனவே ழைவருந் தினளால்.

(இ - ள்.) 'மொய் உயிர்-(உலகத்தில்) நிறைந்துள்ள பிராணி களுக்கு, முறைஉம்-(இப்படித்தான் இருக்கவேண்டு மென்னும்) முறைமையும், முடிவுஉம் - (இவ்வளவுதான் இருக்கவேண்டுமென னும்) எல்லேயும், இலே - இல்லே,' என்று—, இறைவன் - (எல்லா வுயிர்க்குந்) தலேவஞன இராமன், இளேயாஞெடு - தம்பியான இலக்குமணனுடனே, இயம்பினன்-கூறிஞன்; பறையும் துணே - (அங்ஙனம்) கூறுமளவில், 'அன்னது-அந்தமான், பல் நெறி போய் மறையும்-பலவழிகளிற்போய் மறைந்திடுமே,' என-என்று, ஏழை வருந்தினள்-(பெண்களுக்கு இயல்பான) பேதைமைக் குணத்தை யுடைய பிராட்டி வருந்திஞள்; (எ - று.)

'நீங்கள் பேச்சை நிகழ்த்திக் கொண்டு இருக்குமளவிற்குள் அம் மான் சென்றிடுமே!' என்று சீதை வருந்தினளென்க. 'மொய்யுயிர் முறையும் முடிவுமிலே' என்றது - உலகத்திற் பற்பலவகையாய் அளவிறந்துள்ள சீவகோடிகளுள் இப்படியுமொன்று இருத்தல்கூடு மென்றற்குக் கூறியது. இறைவன்-சக்கரவர்த்தி குமாரனுமாம்; இச்சொல்லுக்கு - எல்லாப்பொருள்களிலுந் தங்குகிறவனென்ற பொருளும் உண்டு. மாயமான் காரணமாக மேல் மிக்க வருத்த மடைதல்பற்றி, இங்குச் சீதையை 'ஏழை' எனக் குறித்தார்: "நுண்ணுணர்வின்மை வறுமை" என்பது காண்க. (784)

வேறு.

## 226.—இராமன் சென்று அந்த மானேக் காணுதல்.

**அனேயவள் கருத்தை யுன்ஞ வஞ்சனக் குன்ற மன்ஞன்**
**புனேயிழை காட்ட தென்று போயினுன் பொருத சிந்தைக்**
**கனேகழற் றம்பி பின்பு சென்றனன் கடக்க வொண்ஞ**
**வினேயென வந்து நின்ற மானெதிர் விழித்த தன்றே.**

(இ - ள்.) அனேயவள் கருத்தை உன்ஞ-அங்ஙனம் வருந்திய சீதையின் மனநிலேயைத் திருவுள்ளத்திற்கொண்டு, அஞ்சனம் குன்றம் அன்ஞன்-மைம்மலேபோன்ற இராமபிரான், புனே இழை அது காட்டு என்று-தரித்த ஆபரணங்களேயுடையவளே! அந்த மானேக் காட்டுவாய் என்று சொல்லி, போயினன்-(அவள்பின்னே) சென்ருன்; பொருத சிந்தை-(அத்தொழிலேப் பார்த்துப்) பொருத மனத்தையுடைய, கனே கழல் தம்பி-ஒலிக்கிற வீரக்கழலேயுடைய இலக்குமணனும், பின்பு சென்றனன் - (அவர்களின்) பின்னே தொடர்ந்துசென்ருன்; (அப்பொழுது), கடக்க ஒண்ஞ வினே என - (எவராலும்) விலக்கமுடியாத ஊழ்வினேப்பயன்போல, வந்துநின்ற—,

மான் - அப்பொன்மானானது, எதிர் விழித்தது-எதிரிலே காணப் பட்டது; (எ-று.)—அன்றே - ஈற்றசை.

முன்செய்துநின்ற வினை தவறாமல் வந்து தன்பயனை விளைத்தல்போல மாயமான் வந்து தன்பயனான தீங்கை விளைக்கு மென்பார், இங்ஙனங் கூறினார். புனையிழை - வினைத்தொகையன் மொழி; அண்மைவிளி, மகடூஉமுன்னிலை. விழித்தது-மான் எதிரில் நின்று இவர்களை மருண்டுபார்த்தது என உரைத்தலும் பொருந்தும்.

இதுமுதல் பத்தொன்பது கவிகள்-இப்படலத்தின் 14-ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (785)

## 227.—ஸ்ரீராமன் அந்தமானைக் கொண்டாடுதலும், அதன் மூலகாரணமும்.

நோக்கிய மானை நோக்கி [1]நுதியிழை [2]மதியி னொன்றும்
[3]தூக்கில னன்றி தென்றா [4]னதன்பொருள் சொல்ல லாகும்
சேக்கையி னரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த
பாக்கிய முடைமை யன்றோ வன்னது பழுது போமோ.

(இ - ள்.) நோக்கிய மானை நோக்கி - எதிரிலே காணப்பட்ட அந்தமானைப் பார்த்து, (ஸ்ரீராமன்), நுதி இழை மதியின் ஒன்றும் தூக்கிலன் - நுண்ணிதாக ஆராய்ச்சிசெய்யவல்ல (தனது) முற் றுணர்வினால் ஒன்றையும் ஆலோசியாதவனாய், 'இது நன்று - இந்த மான் நன்றாயுள்ளது,' என்றான் - என்று பாராட்டினான்; அதன் பொருள் - (ஸர்வஜ்ஞனான இராமன்) அவ்வாறு (திரிபுணர்ச்சி கொண்டு மாறுபடக்) கூறியதன் காரணம், சொல்லல் ஆகும்-சொல் லப்படும்—(என்னெனின்), சேக்கையின் அரவு நீங்கி பிறந்தது - (திருப்பாற்கடலில்) நாகசயனத்தைவிட்டு(த் திருமால் இங்கு இராம னாக)த்திருவவதரித்தமை, தேவர் செய்த பாக்கியம் உடைமை அன்றோ - தேவர்கள்செய்த பாக்கியத்தை யுடைமையாலன்றோ? அன்னது பழுது போமோ - அந்தப்பாக்கியம் வீண்படுமோ? [படா தென்றபடி]; (எ - று.)

தேவர்கள் செய்த நல்வினைப்பயனால் அவர்கள் வேண்டிக் கொண்டபடிதிருமால் அவர்கட்குப் பகைவரான இராவணாதியரைச் சங்கரித்தற்கு இராமனாகத் தோன்றினனாதலின், அவர்கள் தவப் பயன்பழுதுபடாதபடி அரக்கர்களைக் கொல்லுதற்கு மூலகாரண மாகப் பிராட்டியைப்பிரியவேண்டி இங்ஙனம் ஆராயாதுமேல்நோக் காகக் கூறினனென்பது கருத்து. நோக்கிய - செயப்பாட்டுவினைப் பொருளில்வந்த செய்வினை; அன்றி, தம்மை நன்றாகப்பார்த்த மானைத் தான்பார்த்து என்றுமாம். ஆழ்ந்து நோக்கின் எப்படிப் பட்ட மறைபொருளையும் உள்ளது உள்ளபடி ஐயந்திரிபற நன்கு அறியவல்ல மதியென்பார் 'நுதியிழை மதி' என்றார். நுதி-நுட்பம். இனி, நுதியிழை யென்பதற்கு - நுட்பமாக வேலைசெய்யப்பட்ட ஆபரணங்களையுடையவளேயென்றுபொருளுரைப்பினுமாம். 'நன்று

இது' என்றது-இந்தமான் மாயமான் அன்று: நல்லமானே யென்ற வாறு. சேக்கையினரவு - படுக்கையாகிய ஆதிசேஷன். அன்னது - அத்திருவவதார மெனினுமாம். பி - ம்:—[1] நுதியுடை. [2] மதியால். [3] தூக்கலன். [4] அறன், தன். (786)

**228.-இரண்டு கவிகள்-ஒருதொடர். இராமன் இலக்குமணனுக்கு அந்தமானின் அழகை யெடுத்துக் காட்டலைத் தெரிவிக்கும்.**

என்னொக்கு மென்ன லாகு [1]மிளையவ விதனை நோக்காய்
தன்னொக்கு [2]முவமை யல்லாற் றனையொக்கு முவமை யுண்டோ
பன்னக்க தரள மொக்கும் பசும்புன்மேற் படரு மென்னா
மின்னொக்குஞ் செம்பொன் மேனி வெள்ளியின் விளங்கும் புள்ளி.

(இ - ள்.) இளையவ - தம்பி! இதனை நோக்காய் - இந்தமானை உற்றுப்பார்த்திடுவாய்; என் ஒக்கும் என்னல் ஆகும் - (இதற்கு) எந்தப்பொருள் ஒப்பாகுமென்று சொல்லக்கூடும்? உவமை தன் ஒக்கும் அல்லால் - தனக்குத்தானே உவமையாகப் பொருந்துமல் லாமல், தனை ஒக்கும் உவமை உண்டோ - இந்த மானுக்கு ஒப்பாகும் வேறு உவமைப்பொருள் உள்ளதோ? [இல்லையென்றபடி], பல் நக்க தரளம் ஒக்கும் - (இதன்) பற்கள் ஒளிவீசுகிற முத்துக்களைப் போன்றுள்ளன; பசு புல் மேல் படரும் மெல் நா - பசிய புல்லின்மீது செல்லுகிற (இதனது) மென்மையான நாக்கு, மின் ஒக்கும் - மின்னலைப் போன்றுள்ளது; மேனி செம் பொன் - இதன் உடம்பு செம் பொன்மயமானதாம்; புள்ளி வெள்ளியின் விளங்கும் - (இதனுடம்பி லுள்ள) புள்ளிகள் வெள்ளிபோல விளங்குகின்றன; (எ-று.)

'இதனை நோக்காய்' என்பதற்கு - எதிர்மறையாக, இதனை நீ ஊன்றிப் பார்க்கின்றாயில்லை யென்றும் பொருள் கொள்ளலாம். (இவ் வாய்பாட்டுச்சொல் உடன்பாடு எதிர்மறை இரண்டுக்கும் பொது வாதலை "செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல், செய்யென் கிளவி யாகிடனுடைத்தே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தின் உரைகொண்டும் உணர்க.) என் - எவன் என்ற வினாச்சொல்லின் விகாரம். பின்னிரண்டடியிற்கூறிய உவமை, தனித்தனி ஒவ்வோ ருறுப்பை நோக்கிய தாதலின், முன்னிரண்டடியில் இம்மான் வடிவ முழுவதுக்கும் ஓருவமையில்லையென்று கூறியதனோடு மாறுகொளக் கூறியதாக ஆகாது. என்னொக்கு மென்னலாகும் இளையவ - என்னை யொப்பவனென்றுசொல்லுதற்குஏற்ற தம்பியே! என்பாருமுளர். பி - ம்:—[1] இளவலே. [2] என்பது. (787)

229. வரிசிலை மறைவ லோனே மானிதன் வடிவை யுற்ற
அரிவையர் மைந்தர் யாரே யாதரங் கூர்கி லாதார்
உருகிய மனத்த வாகி யூர்வன பறப்ப யாவும்
விரிசுடர் [1]விளக்கங் கண்ட விட்டில்போல் வீழ்வ காணாய்.

(இ-ள்.) வரி சிலை மறை வலோனே-கட்டமைந்த வில்லின் வேதத் தில் வல்லவனே! மான் இதன் வடிவை - இந்த மானின்வடிவழகை, உற்ற-உற்றுப்பார்த்த, அரிவையர்மைந்தர்-மகளிரிலும் ஆடவரிலும்,

ஆதரம் கூர்கிலாதார் யாரே - (இதனிடத்து) ஆசைமிகாதவர் எவர் தாம்? [எவருமில்லை யென்றபடி]; ஊர்வன - ஊர்ந்து செல்வனவும், பறப்ப - பறந்துசெல்வனவுமாகிய, யாஉம் - எல்லாப்பிராணிகளும், (இதனைக்கண்டு), உருகிய மனத்த ஆகி - (ஆசையால்) உருகின மனத்தை யுடையவையாய், விரி சுடர் விளக்கம் கண்ட விட்டில் போல் - பரவிய ஒளியையுடைய விளக்கைப்பார்த்த விட்டிற்பறவை (அவ் விளக்கில் வீழுந்தன்மை) போல, வீழ்வ-(இதன்மேல்) வந்து விழுவன; காணாய் - (இதனை நீ) பாராய்; (எ - று.)—என்றான், இராமபிரான் என்க.

'மானிதன் வடிவை யுற்ற அரிவையர் மைந்தர் யாரே ஆதரங் கூர்கிலாதார்' என்றது, ஜாநகியும் தானும் இதன்பக்கல் அன்பு கூர்ந்தது குற்றமன்றென்று குறிப்பித்தற்குப் போலும். எழு வகைப் பிறப்பினுள் காட்சிப்புலனில்லாத தாவரம் ஒழிய மற்றை ஆறுவகையில் மேலுலகத்தவரான தேவர்களையும், அருகிலில்லாதன வான நீர்வாழுயிர்களையும் கூறுதுவிட்டு, ஓரினமாகியவிலங் கினிடத்து விலங்கு அன்புவைத்தல் இயல்பேயாமென அதனையுங் குறியாதொழித்து, மனிதர்கள் ஆசைவைத்தலை முந்தின வாக்கியத் தால் தெரிவித்து, மற்றைப் பறவைகளும் ஊர்வனவும் ஆசை கொள்ளுதலைப் பிந்தினவாக்கியத்தா லெடுத்துக்கூறினர். விட்டில் - விளக்குப்பூச்சி. சிலை மறைவலோய் என்பதற்கு - வில்தொழிலிலும் வேதங்களிலுந்தேர்ந்தவனே யென்றும் உரைக்கலாம்; "உவள்தரு மறையினொ டொழிவறு கலையும், தவள்மதி புனையரனிகர்முனி தரவே," "ஊனுறு படைபல சிலையொடு பயிலா, வானவர் தனிமுதல் கிளையொடு வளர" எனக் கீழ்ப் பாலகாண்டத்தில் வந்துள்ளமை யுணர்க. உற்ற-கண்ணுற்ற. இங்கே அரிவையர் பருவப்பெயராகாமல் மகளிரென்ற மாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபதுமுதல் இருபத்தைந்தளவு மென்பர். ஊர்வன, பறப்ப-பெயர். வீழ்வ - மிகுதியாகத் தொடர்வன என்றபடி: மிகவிரும்புதலை 'மேல்விழுதல்' என்னும் வழக்கு, இங்கு உணரற்பாலது. பி - ம்:—[1]விளக்குக்கண்ட விட்டிலின். (788)

## 230.—இலக்குமணன் அந்தமானைப்பற்றிப் பராமுகமாகக் கூறல்.

ஆரிய னனைய கூற வன்னது தன்னை நோக்கிச்
சீரிய தன்றி தென்று சிந்தையிற் [1]றெளிந்த தம்பி
காரிய மென்னை யீண்டுக் கண்டது கனக[2] மானல்
வேரியந் தெரியல் வீர மீள்வதே [3]மேன்மை யென்றான்.

(இ - ள்.) ஆரியன் - யாவராலும் மேன்மைசெய்யத்தக்கவனான ஸ்ரீராமன், அனைய கூற - அவ்வார்த்தைகளைச் சொல்ல, அன்னது தன்னை நோக்கி - அந்தமானைப் பார்த்து, இது சீரியது அன்று என்று சிந்தையில் தெளிந்த - இது உத்தமமான மான் அன்று [மாயமான்] என்று மனத்தில் நன்குயறிந்த, தம்பி - இலக்குமணன், —'வேரி அம் தெரியல் வீர - வாசனையையும் அழகையுமுடைய

மாலையை யணிந்த வீரனே! ஈண்டு கண்டது கனகம் ஆனல் - இவ்விடத்தில் காணப்பட்ட மான் பொன்மயமானதானலும், காரியம் என்னை-(அதனல் நமக்கு) ஆகவேண்டியது என்ன? [ஒன்றுமில்லை]; (ஆகையால்), மீள்வதுஏ மேன்மை - (நாம் நமது இடத்துத்) திரும்பிச்செல்வதே மேலானகாரியம்,' என்ருன் - என்று சொன்னன்;

சீரியதன்று - நன்மை விளைப்பதன்று; மாயையாலமைந்தது என்றபடி. கனகம் மானல் எனப்பிரித்து, இங்கு நாம்கண்ட பொன் மானினுற் பயனென்னேயென்று உரைப்பாருமுளர். வேரி - தேனுமாம். தெரியல் - விளங்குவது. பி - ம்:—[1]தெரிந்த. [2]மானேல். [3]கருமம். (789)

## 231.—சீதை இராமனை அதைப்பிடித்துத் தரும்படி வேண்டுதல்.

அற்றவன் பகரா முன்ன மநகனை யழகி [1]யாளும்
கொற்றவன் மைந்த [2]மற்றைக் குழைவுடை யுழையை வல்லைப்
பற்றினை தருதி யாயிற் பதியிடை யவதி யெய்தப்
பெற்றுழி யினிதுண்டாடப் பெறற்கருந்[3]தகைமைத் தென்ருள்.

(இ - ள்.) அற்று அவன் பகரா முன்னம் - அத்தன்மையான வார்த்தையை இலக்குமணன் சொல்லாத முன்னே [சொல்லுமளவிலே யென்றபடி], அழகியாள்உம் - கட்டழகியான சீதையும், அநகனை - குற்றமற்றவனை இராமபிரானைப் பார்த்து, 'கொற்றவன் மைந்த - சக்கரவர்த்தி திருமகனே! குழைவு உடை உழையை - (காண்பவர் மனத்துக்கு) உருக்கந் தரவல்ல தன்மையையுடைய இந்த மானை, வல்லை பற்றினை தருதி ஆயின் - விரைவிற் பிடித்துக் கொடுப்பாயானல், அவதி எய்த பெற்றுழி - (வனவாசஞ் செய்யவேண்டிய பதினன்கு வருடங்களின்) முடிவெல்லை நேர்ந்தகாலத்தில், பதியிடை- (நமது) அயோத்தியாபட்டணத்தில், இனிது உண்டாட - இனிமையாக விளையாடுதற்கு, பெறற்கு அரு தகைமைத்து - (இது) பெறுதற்கரிய தன்மையையுடைய பொருளாம்,' என்ருள் - என்று சொன்னள்? (எ - று.)

இதனை இப்பொழுது நீ பிடித்து எனக்குக் கொடுத்தால், பின்பு நாம் வனவாசம் முடிந்து நகர்செல்லும்போது அங்கு இனிது விளையாடுதற்கு இது உதவும்; அவ்விடத்தில் இப்படிப்பட்டது கிடைப்பது அரிது என்று கூறினளென்பதாம். 'காரியமென்னையீண்டுக் கண்டது கனகமானல்' என்று இலக்குமணன் கூறியதற்குச் சீதை கூறும் இப்பேச்சு உத்தரமாக அமைவது காண்க. அழகியாள்-அழகியான் என்பதன் பெண்பால்: இ - சாரியை. ந + அகம் + அன் = அநகன்; ந-எதிர்மறை குறிப்பது; அகம் - தோஷம். அநகனென்றபெயர்-தன் இயல்பினலும் தனக்குச் சரீரமாகவுள்ள சராசரங்களின் தொடர்பினலும் தீவினைப்பற்றில்லாதவனென்னும் பொருளைத் தரும். மனைவி கணவனைப் பெயர் குறித்து விளியாமல் 'ஆர்யபுத்ர' என விளிக்கும் வடநூல் முறைமைக்கு ஏற்ப 'கொற்றவன் மைந்த' என விளித்தபடி. குழைவு உடை உழை - நம்மிடத்து அன்புகாட்டும் மானெனவும் அமையும். மற்று, ஐ-அசை: வினைமாற்றுமாம். வல்லை-

இடைச்சொல்: வல்லமையையுடையையா யென்று பொருள்கொள் ளின், முன்னிலை யொருமைக்குறிப்புமுற்றெச்சமாம். உண்டாட்டு - மகளிர் உண்ட பின் போதுபோக்காக நிகழ்த்தும் விளையாட்டு; விளையாட்டுப் பொதுவுமாம். பதியிடை - நமது தங்குமிடத்திலே, அவதி எய்த பெற்றுழி-(நான் அயோத்தியில் விட்டுவந்த கிளி முத லியவற்றை நினைத்தலால்) வருத்தமடையப் பெறுங்காலத்தில், இனிது உண்டாட - சந்தோஷமாக விளையாட, பெறற்கு அரு தகை மைத்து-பெறுதற்கரிய தன்மையுடையது இது என்று உரை கூறு வாரு முளர். அவதியென்பதற்கு முடிவெல்லையென்ற பொருளல்லது வருத்தமடையப் பெறுங்காலம் என்ற பொருள் செய்யுள்வழக்கில் வந்துள்ளதா என்பது, ஆராய்தற்கு உரியது. 'பி - ம்:—[1] ஆதிக். [2] மற்றிக். [3] தகைத்தது. (790)

## 232.—இராமன் அதனைப் பிடிக்கஉடன்பட, இலக்குமணன் தடுத்துக் கூறல்.

ஐயநுண் மருங்கு னங்கை யஃதுரை செய்ய வையன்
[1]செய்வெனென்றமையநோக்கித்தெளிவுடைச்[2]செம்மல்செப்பும்
வெய்யவல் லரக்கர் வஞ்சம் விரும்பினர் [3]வினையிற் செய்த
கைதவ மானென் றண்ணல் காணுதி கடையி னென்றான்.

(இ - ள்.) ஐயம் நுண் மருங்குல் நங்கை - (உண்டோ இல்லையோ என்கிற)சந்தேகத்தை விளைக்கிற நுண்ணிய இடையையுடைய பெண் மணியான சீதை, அஃது உரைசெய்ய - அவ்வார்த்தையைக் கூறிய வளவில், ஐயன்-இராமன், செய்வென் என்று அமைய - (அங்ஙனமே) பிடித்தல்செய்வே னென்று இசைய,—நோக்கி- (அதனைப்) பார்த்து, தெளிவு உடை செம்மல் - (இது மாயமானென்று) தெளிதலையுடைய இலக்குமணன், செப்பும் - சொல்வான்: (என்னவென்றெனில்),— 'அண்ணல்-அண்ணு! வெய்ய வல் அரக்கர்-கொடிய வலிய இராக்கதர் கள், வஞ்சம் விரும்பினர்-வஞ்சனை செய்ய விரும்பி, வினையின் செய்த- தந்திரத்தாற்செய்த, கைதவம் மான் என்று - மாயமான் இது வென்று, கடையின் காணுதி-முடிவில் காண்பாய்,' என்றான்-என்று சொன்னான்; (எ-று.)

இது, மாயமானென்பது முடிவில் தெரியுமென்றனன் இலக்கு மணனென்க. செம்மல், அண்ணல் - ஆண்பாற் சிறப்புப்பெயர்கள். பி-ம்:—[1] செய்வது. [2] தம்பிசொல்லும். [3] வினையின்செய்கை. (791)

## 233 —இராமன் 'இதனைப் பிடிக்கத்தொடங்குதலிற் குற்றமில்லை' எனல்.

மாயமேன் [1]மடியு மன்றே வாளியின் மடிந்த போது
காய்சினத் தவரைக் கொன்று கடன்கழித் தோமு [2]மாதும்
தூயதேற் பற்றிக் கோடுஞ் சொல்லிய விரண்டி [3]னென்று
தீயதே யுரைத்தி யென்றான் றேவரை யிடுக்கண் டீர்ப்பான்.

(இ - ள்.) 'மாயம் ஏல் - (இது நீ சொல்லுகிறபடி) மாயமானகு மானல், அன்றுஏ வாளியின் மடியும் - அப்பொழுதே (எனது)

அம்பினால் (எய்யப்பட்டு) இறந்திடும்; மடிந்த போது - (அங்ஙனம்) இறந்தபோது, காய் சினத்தவரை கொன்று கடன் கழித்தோம்உம் ஆதும் - கொதிக்கிற கோபத்தையுடைய அரக்கரைக்கொன்று (நமது) கடமையைத் தீர்த்தவருமாவோம்; (அன்றி), தூயது ஏல் - (நான் நினைக்கிறபடி) நல்லதன்மையுடையதானால், பற்றிக்கோடும் - பிடித்துக்கொள்வோம்: சொல்லிய இரண்டின் - கீழ்ச் சொன்ன இரண்டுவகையுள், ஒன்று தீயதுஏ-ஏதேனும் ஒன்று தீயதோ? உரைத்தி - சொல்வாய்,' என்றான் - என்றுசொன்னான்: (யாவனெனில்),—தேவரை இடுக்கண் தீர்ப்பான் - தேவர்களைத் துன்பத்தினின்று நீக்கப் பிறந்தவனான இராமன்; (எ - று.)

மாயமானாயிருப்பினும் உண்மைமானாக இருப்பினும் இருவகையிலும் இந்த மானைப் பிடிக்க முயல்வதில் தீங்கில்லையென்பதை இராமபிரான் இதனால் நிரூபித்துக் காட்டுகின்றனனென்க. தேவர்கட்குத் தீங்குசெய்பவர்களான இராவணாதியரை அழிக்க அவதரித்தவனாதலால், அதன்பொருட்டு, இங்ஙனம் இலக்குமணனுடைய வார்த்தையை மறுத்துக்கூறினனென்பார், 'என்றான் தேவரை யிடுக்கண் தீர்ப்பான்' என்றார். கடன்கழித்தல் - அரக்கர்களையழிப்பதாகத் தண்டகாரணியவாசிகளான முனிவர்கட்கு வாக்குத்தத்தஞ்செய்ததை நிறைவேற்றுதல். கடன் கழித்தோமும் என்ற உம்மை-எதிரது தழுவியஎச்சம்; ஆக்கவும்மையின்பாற் படுத்தினுமாம். அன்றே - தேற்றமுமாம். பி - ம்:—[1]மடிவாம். [2]ஆகும். [3]ஒன்றும். (792)

## 234.—இலக்குமணன் 'ஆராய்ச்சியின்றி வேட்டையாடச் செல்லல் தகுதியன்று' எனல்.

பின்னின்ற [1]ரிணைய ரென்று முணர்கிலம் பிடித்த மாயம்
என்[2]னென்றுந் தெளித றேற்றும் யாவதீ தென்று மோராம்
முன்[3]னின்றார் முறையி னின்றார் முனிந்துள [4]வேட்ட முற்றல்
பொன்னின்ற வயிரத் தோளாய் புகழுடைத் தாமன் றென்றான்.

(இ - ள்.) 'பொன் நின்ற - அழகு நிலைபெற்ற, வயிரம் தோளாய்- வச்சிரத்தினம்போலுறுதியாகவுள்ள தோள்களை யுடையவனே! பின் நின்றார் இணையர் என்றும் உணர்கிலம் - (இந்த மானை முன்னே ஏவிவிட்டுப்) பின்னே நின்றவர்கள் இத்தன்மைய ரென்றும் அறிகிறோமில்லை; பிடித்த மாயம் என் என்றுஉம் தெளிதல் தேற்றும் - (அவர்கள்) கொண்ட மாயை எத்தன்மைத்தென்று நிச்சயித்து அறிந்தோமுமில்லை; ஈது யாவது என்றுஉம் ஓராம் - இந்த மான் யாதென்றும் அறிந்தோ மில்லை; (அன்றியும்), முறையில் நின்றார் - நீதிவழுவாது நின்றவர்களான, முன்நின்றார்-முன்னுள்ள பெரியோர்களால், முனிந்து உள - வெறுத்து விலக்கப்பட்டுள்ள, வேட்டம் - வேட்டையை, முற்றல் - ஆடுதல், புகழ் உடைத்து அன்று ஆம் - கீர்த்திதருவதன்றாம்', என்றான் - என்று கூறினான், (இலக்குமணன்); (எ - று.)

'முன் நின்றார்' என்பதற்கு - முதன்மையாய் நின்ற முனிவர்களென்றும், 'பொன்நின்ற' என்பதற்கு - வீரலக்ஷ்மி தங்கப்பெற்று

நின்ற என்றும் பொருள் கொள்ளலாம். வேட்டையாடுதல் புகழுடையதன் றென்று கூறியது, தமது தந்தையான தசரதர் இலக்கின் தன்மையை ஆராயாமல் ஒருமுனிகுமாரனை யானை யென்றெண்ணி அம்பெய்து கொன்று அதனால் கொடிய சாபம் பெற்ற வரலாற்றையும், மற்றும் இதுபோன்ற பிறவரலாறுகளையும் உட்கொண்டு என்பர். மக்கட்கு இடையூற்றை விளைவிக்கும் கொடுவிலங்குகளை வேட்டையாடிப் பாதுகாப்பது அரசர்க்கு உரியது: சாதுவான விலங்குகளைக் கொல்லும் வேட்டம் 'வ்யஸநம்' என்று விலக்கப்படு மென்ப: ஆகவே, வேட்டையாடுதல் ஒரோவழியன்றி எப்பொழுதுஞ் செய்தற்பாற்றன்று என்பது, நூல் துணிபு. ஆதலால், இதனைப் பிடிக்கச் செல்லுதல் தக்கதன்று என்று விலக்கியவாறு. இனி, முன்னின்றார் முறையினின்றார்-முதற் குலத்தாரான அந்தணரது ஒழுக்கத்தைப் பூண்டு நின்றவர், முனிந்துள - வெறுத்துள்ள, வேட்டம் - வேட்டையை, முற்றல் - ஆடுதல், புகழுடையது அன்று எனஉரைப்பாருமுளர். தேற்றும்=தேரும்; பிறவினை தன்வினைப் பொருளது. பி - ம்:—[1]எனையர். [2]என்றுதெரிதல். [3]நின்ற. [4]வேட்டை. (793)

## 235.—இராமன் அதனை மறுத்துக்கூறல்.

பகையுடை யரக்க ரென்றும் பலரென்றும் பயிலு மாயம்
மிகையுடைத் தென்றும் பூண்ட விரதத்தை விடுது [1]மென்றல்
நகையுடைத் தாகு மன்றே யாதலி [2]னன்றீ தென்னத்
தகையுடைத் தம்பிக் கந்நாட் சதுமுகன் றாதை சொன்னான்.

(இ - ள்.) 'பகை உடை அரக்கர் என்றுஉம்-(எவரிடத்தும்) பகைத்தன்மையையுடைய இராக்கதர்களென்ற காரணத்தாலும், பலர் என்றுஉம் - (அவர்கள்) அநேகரென்ற காரணத்தாலும், பயிலும் மாயம் மிகை உடைத்து என்றுஉம்-(அவர்கள்) செய்யும் மாயை மிகுதியையுடையதென்ற காரணத்தாலும், பூண்ட விரதத்தை விடுதும் என்றல் - (அவர்களைக் கொல்வதாக நாம்) மேற்கொண்டவிரதத்தைவிட்டிடுவோமென்று எண்ணுதல், நகை உடைத்து ஆகும் அன்றுஏ-(இகழ்ந்து) சிரிக்கத்தக்கதன்மையையுடையதாமன்றோ? ஆதலின் - ஆகையால், ஈது நன்று-(இதனைப் பிடிக்கச்செல்லும்) இச்செயல் நல்லது,' என்ன - என்று, தகை உடை தம்பிக்கு - தகுதியுடைய தம்பியான இலக்குவனுக்கு, அ நாள் - அப்பொழுது, சதுமுகன்தாதை - பிரமனது தந்தையான இராமபிரான், சொன்னான்—; (எ-று.)

அரக்கரைக் கொல்வோமென்று கொண்ட கொள்கையைக் கைவிடுதல் பிறர் எள்ளி நகையாடற்கு ஏதுவாமாதலால், இந்த மாயமானைப் பிடிக்கச் சேறலே தகுதி யென்றனன் இராமபிரானென்க. இராமபிரானைத் திருமாலின் திருவவதாரமென்றற்குச் சதுமுகன்றாதை யென்றது. எல்லாப்பிராணிகளையும் படைத்த பிரமனுக்குத் தந்தையானவ னென்று கூறினது, அவற்றின் இயற்கையை உள்ளபடி அறியவல்லவ னென்றற்கு. பி - ம்:—[1]என்றால். [2]நலமேயென்னத், நன்றீதென்னத், நலமேதென்னத், நலனேயென்னத். ()

## 236.—இலக்குமணன் 'நான் சென்று பிடித்துக்கொண்டு வருவேன்' எனல்.

அடுத்தவு மெண்ணிச் செய்த லண்ணலே யமைதி யன்றே
[1]விடுத்திதன் பின்னின் றார்கள் பலருள ரெனினும் வில்லால்
தொடுத்தவெம் பகழி தூவித் தொடர்ந்தனென் விரைந்து சென்று
படுக்குவெ னதுவன் றாயிற் பற்றினென் கொணர்வெ னென்றான்.

*(இ - ள்.) 'அண்ணலே - அண்ணா! அடுத்தஉம் - தகுதியான காரியங்களையும், எண்ணி செய்தல் - முன்பு ஆலோசித்துப் பின்பு செய்வது, அமைதி அன்றோ - ஏற்றதன்றோ? (அதுநிற்க), விடுத்து இதன்பின் நின்றார்கள்-(இந்த மாயமானை முந்திச்) செலுத்தி இதன் பின்னே நின்ற பகைவர்கள், பலர் உளர் எனின்உம்-அநேகர் உள்ளாராயினும், வில்லால் தொடுத்த வெம் பகழி தூவி-(என் கையிலுள்ள) வில்லினால் தொடுக்கப்படுங் கொடிய அம்புகளை மிகுதியாகச் செலுத்திக்கொண்டு, தொடர்ந்தனென் - தொடர்ந்து, விரைந்து சென்று-விரைவாகப்போய், படுக்குவென்-(அவர்களையுமுள்பட நான்) கொல்வேன்; அது அன்று ஆயின் - அங்ஙனம் மாயமானன்றாகில், பற்றினென் கொணர்வென்-பிடித்துக்கொண்டு வருவேன்', என்றான் - என்று (இலக்குமணன்) கூறினான்; (எ-று.)*

*அதுவன்றாயின் - நிசமான மானாயிருந்தால். பி - ம்:—[1]விடுத்ததன்.* (795)

## 237.—சீதை இராமனை நோக்கி 'நீ பிடித்துத் தருவாயல்லைபோலும்' என்றல்.

ஆயிடை யன்ன மன்னா ளமுதுகுத் தனைய செய்ய
வாயிடை மழலை யின்சொற் [1]கிளியினிற் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி நல்கலை போலு மென்னாச்
சேயரிக் குவளை முத்தஞ் சிந்துபு [2]சீறிப் போனாள்.

*(இ - ள்.) அ இடை - அச்சமயத்தில், அன்னம் அன்னாள் - (நடையில்) அன்னப்பேடைபோன்றவளான சீதை, மாழ்கி - வருந்தி, அமுது உகுத்து அனைய-அமிருதத்தைச் சிந்தினாற்போன்றனவான, செய்ய வாயிடை மழலை இன்சொல்-சிவந்த (தனது) வாயினின்று வரும் இனிய மழலைச்சொற்களை, கிளியினில் குழறி-கிளி கொஞ்சுவது போலக் கொச்சையாகக் கூறுவாளாகி, 'நாயக - நாத! நீயே பற்றி நல்கலைபோலும் - நீயே (இதனைப்) பிடித்து (எனக்குக்) கொடுக்க மாட்டாய்போலும்,' என்னா - என்று சொல்லி,—சேய் அரி குவளை முத்தம் சிந்துபு - (உத்தம விலக்கணமாகிய) சிவந்த இரேகைகளையுடைய நீலோற்பலமலர்கள்போன்ற (தன்) கண்களினின்று முத்துப் போன்ற நீர்த்துளிகளைச் சிந்தி, சீறி - வெகுளிகொண்டு, போனாள் - (விலகிப் பர்ணசாலையை நோக்கிச்) சென்றாள்; (எ-று.)*

*முதன்முதற்கொண்டு தன்கருத்துக்கு மாறுபடச் சொல்லி வருவதால், சீதை, இலக்குமணனிடத்து அவநம்பிக்கையால் 'நீயே*

பற்றித் தர்ராயோ?' என்று இராமபிரானை நோக்கிக்கூறிக் கண்ணீ ருகுத்தாளாய், கோபத்தாலும் சோகத்தாலும் அங்குநிற்கக் கால் தரிக்காமல் பிணங்கிச்சென்றன ளென்க. குவளை, முத்தம்-உவமவாகு பெயர்கள். பி-ம்:—[1] கிளியினும். [2] சிதறி. (796)

## 238.—உடனே இராமன் மானைப் பிடிப்பதற்குச் செல்லத் தொடங்கல்.

போனவள் புலவி நோக்கிப் புரவலன் பொலன்கொ டாராய்
மானிது நானே பற்றி வல்லையின் [1]வருவெ னன்றே
கானியன் மயிலன் னாளைக் காத்தனை யிருத்தி யென்னா
வேனகு சரமும் வில்லும் வாங்கினன் விரைய லுற்றான்.

(இ-ள்.) போனவள் புலவி நோக்கி-(அங்ஙனஞ்) சென்ற சீதையி னது பிணக்கைப் பார்த்து,-புரவலன்-காத்தற்றொழிலில் வல்லவனான ஸ்ரீராமன்,-(இலக்குமணனைநோக்கி), 'பொலன் கொள் தாராய்-அழகு கொண்ட மாலையை யணிந்தவனே! மான் இது நான்ஏ பற்றி வல்லை யின் வருவென் - இந்த மானை நானே (போய்ப்) பிடித்துக்கொண்டு விரைவில் மீளுவேன்; (அதுவரையில்), கான் இயல் மயில் அன்னாளை-வனத்திற் பொருந்திய மயில் போன்றவளான சீதையை, காத்தனை இருத்தி-காத்துக்கொண்டிருப்பாய்,' என்னா - என்று சொல்லி, வேல் நகு சரம்உம் வில்உம் வாங்கினன்- வேல்போற் கூறிய அம்புகளையும் வில்லையும் எடுத்துக்கொண்டு, விரையல் உற்றான் - விரைந்து செல்லத் தொடங்கினான்; (எ-று.)—அன்றே-ஈற்றசை.

சீதையின் புலவிபோக்க, இராமபிரான் தானே மானை நோக்கிச் செல்லலாயின னென்க. பொலன் கொள்தாராய் என்பதற்கு - பொன்மயமான ஆரத்தை யணிந்தவனே யென்றும் பொருள் கொள்ளலாம். தன் இயல்பு குன்றாத மயிலென்பார், 'கானியல் மயில்' என்றார். மயில் அன்னாள் - மயில் போலுஞ் சாயலை யுடையாள்; காளமேகத்தைக் கண்டுகளிக்கும் மயில்போல, இராமபிரானது நீலமேனியைக் கண்டு களிப்பவ ளென்றுங் கொள்க. நகு - உவமவுருபு. இரண்டாமடியிறுதியில், நன்றேயெனப் பிரித்து, 'காத்தனையிருத்தி' என்பதனோடு இயைத்து உரைத்தலும் தகும். 'வாங்கினன்' என்ற சொல்லினாற்றலால், இலக்குமணன் எடுத்துக் கொடுக்க இராமன் கொண்டன னென்பது தோன்றும். பி - ம்:—[1] வருவனின்றே, வருவனீயிக். (797)

## 239.—அங்ஙனமே இலக்குமணன் சீதையைக் காத்துநிற்றல்.

முன்னமு மகவாய் வந்த [1]மூவரி னொருவன் போனான்
அன்னமா ரீசனென்றே யயிர்த்தனெ [2]னிதனை யையா
இன்னமுங் காண்டி வாழி யேகென விருகை கூப்பிப்
பொன்னனாள் புக்க சாலை காத்தனன் புறத்து[3] நின்றான்.

(இ - ள்.) 'முன்னம்உம் - முன்பும், மகம்வாய் வந்த மூவரின் - (விசுவாமித்திர மாமுனிவனது) யாகசந்தர்ப்பத்தில் வந்த (தாடகையும் சுபாகுமாரீசருமாகிய) மூன்று அரக்கருள், ஒருவன்—, போனான் -

(இறவாமல் தள்ளுண்டு) சென்றான்; அன்ன மாரீசன் என்று ஐயு - அந்த மாரீசன்தானென்று, இதனை - இந்த மானைக் குறித்து, அயிர்த்தனென் - சந்தேகிக்கிறேன்; ஐயா - ஐயனே! இன்னம்உம் காண்டி - பின்பு (நீ உண்மை) காண்பாய்; ஏகு - செல்வாய்; வாழி - வாழ்வாயாக,' என - என்றுசொல்லி, இரு கை கூப்பி - இரண்டு கைகளையுங் கூப்பித்தொழுது, (இலக்குமணன்), பொன் அனாள் புக்க சாலை - திருமகள் போன்றவளான சீதை புகுந்த பர்ணசாலையை, புறத்து நின்றான் காத்தனன் - வெளியில் நின்றவனாகிக் காவல்செய் திருந்தான்; (எ - று.)

செல்லுமிடத்தில் அரக்கரால் யாதொருதுன்பமும் தமையனுக்கு நேரிடாதிருக்கவேண்டுமென்று கருதி, 'வாழி' என்றான். சிறியோர் பெரியோரை வாழ்த்துவது தகுதியோவெனின்,—வரம்புகடந்த பொங்கும் பரிவையுடைய பக்தர்கள் அப்படிப்பட்ட அன்பினால் அங்ஙனம் வாழ்த்துதல் மரபாமென்க. பொன் அனாள் - பொன்னின் நிற மானவளுமாம். முன்னமும் என்ற உம்மையை எதிரதுதழுவிய எச்ச வும்மையாக்கி, அது, பின்பு தண்டகாரணியத்தில் மான்வடிவமாய் வந்த மூன்று அரக்கருள் ஒருவன் தப்பியுய்ந்து சென்றதனைக் குறிப்ப தெனக் கொள்க. மகம்-வடசொல். 'இன்னமும் காண்டி' என்பதற்கு- இன்னமும் ஆலோசிப்பாயென்றும் பொருள்கொள்ளலாம். முந்தின பொருளில், உம்மை-அசையும், காண்டியென்பது-முன்னிலைமுற்றும்; இப்பொருளில் உம்மை - இறந்தது தழுவிய எச்சமும், காண்டியென் பது - ஏவல்முற்றுமாம். பி - ம்:—[1]மூரிவேல். [2]இவனை. [3]நின்றே. ()

## 240.—இராமன் மானைத் தொடர்தல்.

மந்திரத் திளையோன் சொன்ன வாய்மொழி [1]மனத்துக் கொள்ளான்
சந்திரற் குவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய் முறுவலன் சிகரச் செவ்விச்
சுந்தரத் தோளி னனம் மானினைத் தொடர லுற்றான்.

(இ - ள்.) சிகரம் செவ்வி சுந்தரம் தோளினன் - மலைச்சிகரம் போன்ற இயல்பையுடைய அழகிய தோள்களையுடைய இராமன், மந்திரத்து இளையோன் சொன்ன - ஆலோசனையுள்ள தம்பியான லக்ஷ்மணன் சொன்ன, வாய்மொழி - உண்மையான வார்த்தைகளை, மனத்து கொள்ளான் - மனத்தி லேற்றுக்கொள்ளாதவனாய், சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கி - பூர்ணசந்திரனுக்கு உபமானமாதற்கு அமைந்த திருமுகமண்டலத்தையுடைய சீதையினது புலவியைக் கருதி, சிந்துரம் பவளம் செம் வாய் முறுவலன் - சிந்தூரமும் பவழமும் போலச் சிவந்த வாயிற் கொண்ட புன் சிரிப்புடையவனாய், அ மானினை தொடரல் உற்றான் - அந்த மானைத் தொடர்ந்து செல்லலானான்; (எ - று.)

அவன் மாரீசனென்று அயிர்க்கின்றேனென்று இலட்சுமணன் சொன்னதையும் கேளாமல், ஸ்ரீராமன், சீதையின்புலவியை நோக்கித் தானே அம்மானைத் தொடரலானானென்பதாம். வாய்மொழி - வாய்மையாகிய மொழி: பண்புத்தொகை: பண்புப்பெயர் ஈறுபோயிற்று: இனி, வாயின்மொழியென வேற்றுமைத்தொகையாகக் கொள்ளு

தலும் ஒன்று. உபமேயத்தினும் உபமானம் சிறந்திருக்க வேண்டு மென்ற அலங்காரநூலார் கொள்கையின்படி சந்திரனினும் பல மடங்கு சிறந்தது பிராட்டியின் திருமுகமென்பார், 'சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள்' என்றார். சலம் - கோபம். செவ்வி - பருத்து உயர்ந்த தோற்றமும், படைக்கலங்களால் அழித்தற்கு அரிய வலிமை யும். பி - ம்:—[1]மனத்துட். (799)

## 241.—அந்த மான் மிக்க விரைவாயோடுதல்

மிதித்தது மெல்ல மெல்ல வெறித்தது வெருவி மீதில்
குதித்தது செவியை நீட்டி[1]க் குரபத முரத்தைக் கூட்டி
உதித்தெழு மூதை யுள்ள மென்றிவை யுருவச் செல்லும்
கதிக்கொரு கல்வி வேறே [2]காட்டிய தொத்த தன்றே.

(இ - ள்.) (அந்த மாயமானனது), மெல்ல மெல்ல மிதித்தது - (முதலில்) மெள்ள மெள்ள (நிலத்தில்) அடிவைத்துநடந்து நின்று, (பின்பு), வெருவி வெறித்தது - மருண்டு ஆவேசங் கொண்டதாய், செவியை நீட்டி - காதுகளை நெறிப்புற நீட்டிக் கொண்டு, குரபதம் உரத்தை கூட்டி - குளப்படிகளை மார்பிற் சேர்த்துக்கொண்டு, மீதில் குதித்தது - மேலெழும்பிக் குதித்ததாய்,—உதித்து எழும் ஊதை - தோன்றிவீசுகிற காற்றும், உள்ளம்-மனமும், என்ற இவை—, உருவ செல்லும் கதிக்கு-(தடையின்றி) நேராக விரைந்து செல்லும் நடைக்கு, வேறு ஒரு கல்வி - புதிய ஒரு வகையை, காட்டியது ஒத்தது - தான் காட்டிக் கற்பித்துக் கொடுக்கலுற்றாற் போன்றது; (எ - று.)— அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்; அப்பொழுதே யெனினுமாம்.

வாயுவேக மனோவேகங்களைக் காட்டிலும் வேகமாய் ஓடிற்று அந்த மானென்பது, கருத்து. காற்று விரைந்துசெல்லுந் தன்மை பிரசித்தம். மனம் நினைத்தவளவில் எவ்வளவு தூரத்திலுள்ள பொருளினிடத்துஞ் சென்று சேர்தலால், அது மிக்கவிரைவுள்ள தெனப்படும். அவ்விரண்டுக்கும் புதிய ஒருவேககதியைத் தான் காட்டிக் கற்பிப்பதுபோன்றிருந்த தென, மானின் மிக்கவிசையை வருணித்தவாறு. ஒவ்வொரு கதிவேறுபாட்டுக்கும் ஏற்ப ஒவ் வொரு வகையைப் புதுமையாகக் காட்டுவதுபோல் தோன்றியது அம் மானின் செலவு எனவுமாம். முன்னிரண்டடி - தன்மைநவிற்சி யணியும், பின்னிரண்டடி - தற்குறிப்பேற்றவணியுமாம். குரபதம்- வடசொல்; குளம்புகளையுடைய கால். என்றிவை - விகாரம். பி-ம:— [1]குரப்பதவுரத்தை. [2]காட்டுவது. (800)

## 242.—இராமன் மிக்க விசையோடு அந்த மானைத் தொடர்தல்

[1]நீட்டினு னுலக மூன்று நின்றெடுத் தளந்த பாதம்
மீட்டு[2]நா முரைத்தற் கம்மா வேறுமோ ரண்ட முண்டோ
ஓட்டினன் [3]றொடர்ந்த தன்னை யொழிவற நிறைந்த தன்மை
காட்டினு னன்றி யன்றக் கடுமையார் கணிக்கற் பாலார்.

(இ - ள்.) (இராமன் அந்த மானைத் தொடர்தற்பொருட்டு), உலகம் மூன்றும் அளந்த பாதம் - (முன்பு திரிவிக்கிரமாவதாரத்

தில்) மூன்று உலகங்களையும் அளந்த (தனது) திருவடிகளை, நின்று எடுத்து நீட்டினன் - எடுத்துநின்று நீளவைத்தான்; மீட்டும் நாம் உரைத்தற்கு வேறும் ஓர் அண்டம்உண்டோ-(அத்திருவடிகளுக்கு) எட்டாததாய் நாம் சொல்வதற்கு வேறோர் அண்டமும் இருக்கிறதோ? ஓட்டினன் - (அப்படிப்பட்ட பாதங்களைக் கொண்டு அந்த மானைத்) துரத்தினன்: (அங்ஙனந்துரத்திய அப்பெருமான்), தொடர்ந்த தன்னை-மானைத் தொடர்ந்துசென்ற தனது, ஒழிவு அற நிறைந்த தன்மை - இடையீடில்லாமல் (எங்கும்) நிறைந்திருக்குந் தன்மையை, காட்டினன் அன்றி - வெளியிட்டானென்பதல்லாமல், அன்று அ கடுமை கணிக்கல்பாலார் யார் - அப்பொழுதைய அவ்வேகத்தை மதிக்கவல்லவர் யாவர்உளர்? (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்; இராமனது திருவடிகளின் மிகநீளுந்தன்மையை அதிசயித்தவாறு.

திருமாலின் திருவவதாரமாகிய இராமபிரான், முன்பு வாமனாவதாரத்தில் மகாபலியின் செருக்கை யடக்கும்பொருட்டு நீட்டி உலகத்தை யளந்தவையும், இவ்வண்டத்தினுள்ளே யன்றிப் பகிரண்டங்களிலும் வியாபித்துச் செல்ல வல்லவையுமாகிய தமது திருவடிகளை விசையாக நீட்டிவைத்து, அந்தமான் செல்லுமிடமெல்லாம் அதனைத் தொடர்ந்துசென்றான்; அங்ஙனஞ்சென்ற தன்மையால், அப்பரமன், சிறிதிடமும் எஞ்சாதவாறு எங்கும் தான் நிறைந்திருக்குந் தன்மையை வெளியிட்டாற்போன்றனன்; அவ்வேகம், எவராலும் நினைக்கவும் முடியாதது என்பதாம். 'நின்று எடுத்து அளந்த பாதம்' என்பதற்கு - முன்பு வாமனாய்நின்று உடனே திரிவிக்கிரமரூபத்தை யெடுத்து அளந்த திருவடிகளென்றும், தான் நின்றவிடத்திலே நின்று எடுத்து அளந்த திருவடிகளென்றும் உரைக்கலாம். தன்னை - உருபுமயக்கம். தனது சர்வவியாபித்துவத்தைக் காட்டினனென்றது, தற்குறிப்பேற்றம். பி - ம்:—[1]நீட்டினல். [2]தானீட்டற்கு, நானுரைத்தற்கு. [3]தொடர்ந்த தென்னை. (801)

## 243.—அந்த மான் ஓடும் வகை.

குன்றிடை யிவரு மேகக் குழுவிடைக் குதிக்குங் கூடச்
சென்றிடி னகலுந் [1]தாழிற் றீண்டலாந் [2]தகைமைத் தாகும்
நின்றதே போல நீங்கு நிதிவழி நேய நீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனமெனப் [3]போயிற் றம்மா.

(இ - ள்.) (அந்த மான்), குன்றிடை இவரும் - மலையில் ஏறும்; மேகம் குழுவிடைகுதிக்கும் - மேகக்கூட்டத்தினிடத்தில் துள்ளிப் பாயும்; கூட சென்றிடின் அகலும்-விடாது உடன்தொடர்ந்துசென்றால் வெகுதூரம் விலகிஓடிவிடும்; தாழின்-(தொடர்ந்து செல்லுதற்குத்) தாமதித்தால், தீண்டல் ஆம் தகைமைத்து ஆகும் - (அருகில்நெருங்கித்) தொடக்கூடிய தன்மையுடையதாம்; நின்றதேபோல நீங்கும்-(மீண்டுந்தொடர்ந்துசென்றால்) நின்றாற்போல ஓடிப்போய் விடும்; (இங்ஙனஞ்செய்துகொண்டு), நிதிவழி நேயம் நீட்டும் மன்றல் அம் கோதை மாதர் மனம்என-(ஆடவரிடத்தன்றி அவர்தரும்)

பொருளினிடத்தே ஆசையை மிகுதியாகச்செய்பவர்களான மண முள்ள அழகிய கூந்தலையுடைய விலைமகளிரதுமனம்போல, போ யிற்று - (ஒருவழிநில்லாது கண்டவிடங்களி லெல்லாஞ்) சென்றது; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

'நின்றதேபோலநீங்கும்' என்றதுவரையில் தன்மைநவிற்சியணி யும், 'கோதைமாதர்மனமெனப்போயிற்று' என்றது-உவமையணியு மாம். 'நின்றதே போல நீங்கும்' என்பதை நிதிக்கு அடைமொழி யாக்கினுமாம். 'நிதி வழி நேயம் நீட்டும்' என்பதற்கு-கொடுக்கும் பொருளளவுக்கு ஏற்ப அன்பளவைப் பெருக்கிக்காட்டுகிற என்றும் பொருள்கொள்ளலாம். பி-ம்:—[1] தாளில். [2] தகைத்ததாகும். [3] போய தம்மான். (802)

## 244.—இராமன் அதனை மாயமானென்று கருதுதல்.

காயம்[1]வே றாகிச் செய்யுங் கருமம்வே [2]றாகிற் றன்றே
ஏயுமே யென்னின் முன்ன மெண்ணமே யிளவற் குண்டே
[3]ஆயுமே லுறுதல் [4]செல்லா மரக்கரா னவர்கள் செய்த
[5]மாயமே யாய தேநான் வருந்திய தென்றான் வள்ளல்.

(இ - ள்.) 'காயம் வேறு ஆகி - (இந்தமானின்) வடிவம் வேறாகி, செய்யும் கருமம் வேறு ஆகிற்று அன்றே-இது செய்கிற செயல் வேறாயிற்றன்றோ? என்னின் முன்னம் - எனக்குமுன்னே, இளவற்கு உண்டு எண்ணமே - என் தம்பிக்கு [லக்ஷ்மணனுக்கு] உண்டான (இது வஞ்சனை யென்ற) எண்ணம், ஏயும்-பொருத்த முடையதே; ஆயும் ஏல் - (நமதுமனம் இதனை) ஆராய்ந்திருக்கு மானால், உறுதல் செல்லாம்-(நாம் இப்படி) வந்திருக்கமாட்டோம்; நான் வருந்தியது - (இப்படி) நான் வருத்தமடையக்காரணம், அரக்கர் ஆனவர்கள் செய்த மாயமே ஆயதுவே - இராக்கதர்கள் செய்த மாயையே யாயிற்றே,' என்றான் - என்று திருவுள்ளத்திற் கொண்டான், வள்ளல் - வரையாது அருளுந் தன்மையனான இராமபிரான்; (எ - று.)

வடிவம் இயற்கைபோலவும் சாதுபோலவுந் தோன்றித் தொழில் செயற்கையும் அசாதுவுமாயிற்று என்பது, முதலடியின் கருத்து: என்றது-வடிவம் விரும்பத்தக்கதாக அமைந்ததுபோல் இந்தமானின் செயல் எதுவும் விரும்பத்தக்கதாக அமையாமல் வஞ்சனையானதென்று வெறுக்கத்தக்கதாக அமைந்துள்ளதென்ற வாறு. இளவல் - இளமையுடையான்: 'ஆயுமே லுறுதல் செல் லாம்' என்பதற்கு - (நமது மனம்) ஆராய்ச்சியுள்ளதாகுமானால் இனி நாம் இதனைப் பின்தொடர்தல் செய்வோமல்லோம் என்றும் பொருள்கொள்ளலாம். 'செல்லாம்' என்றதைநோக்கி, 'என்னின்'' 'நான்' என்றவை-பன்மையொருமைமயக்கமாம். [3] ஆயுமே லுறுதல் செல்லா வரக்கர் என்று பாடமோதி, ஆயுள் இனிமேற்பொருந்து தலில்லாத [விரைவில் அழிவடையப்போகிற] அரக்கர்க ளென்று உரைப்பாரு முளர். மானைத் தொடர்ந்து வருதலாற் சீதையைப் பிரிந்து தான் வருந்தியாயினும் அரக்கரையொழித்துத்தேவரைக்

காத்து உதவுபவனுதலால், இராமனை 'வள்ளல்' என்றார். ஆயதே யென்ற ஏகாரம்-இரக்கம். மற்றை ஏகாரங்கள்-தேற்றம். பி - ம்:— [1]வேறுக. [2]ஆயிற்று. [3]ஆயுமே, ஆயுமெய். [4]செல்லாதாதலா லரக்கர். [5]மாயமானுகுமென்ன, மாயமேமானுமென்ன, மாயமேயனு யமே நான், மாயமேயாயதேநாம். (803)

## வேறு.

### 245.—இராமபிரானது மனப்போக்கையறிந்து மாரீசன் தப்பியோடி உய்ய முயலுதல்.

பற்று வானினி யல்லன் பகழியால்
செற்று வானிற் [1]செலுத்தலுற் றனென
மற்ற மாய வரக்கன் மனக்கொளா
உற்ற வேகத்தி னும்பரி னோங்கினன்.

(இ - ள்.) 'இனி பற்றுவான் அல்லன் - இனி (என்னை இராமன்) பிடிக்க முயல்பவனல்லன்; பகழியால் செற்று வானில் செலுத்தல் உற்றான் - (தனது) அம்பினால் (என்னைக்) கொன்று மேலுலகிற்செலுத்தக் கருதினன்,' என-என்று, மனம் கொளா-மனத்திற்கொண்டு [எண்ணி], மற்று-பின்பு, அ மாயம் அரக்கன்-மாயையையுடைய அவ்விராக்கதன் [மாரீசன்], உற்ற வேகத்தின் உம்பரின் ஓங்கினன்-மிக்க வேகத்துடன் வானத்தில் உயர எழும்பினன்; (எ-று.)

இனி, இவன் என்னைப் பிடிக்க முயலாது மடிக்க முயல்வானென் பதைக் கருதி, அவன் இலக்குக்குத் தப்பவேணுமென்று மிக்க வேகத்துடன் வானத்தில் அந்த மானுன மாரீசன் உயரவெழும்பின னென்க. பி - ம்:—[1]செலுத்துவனென்பதை.

இதுமுதல் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதற் சீரொன்று மாச்சீரும், மற்றமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (804)

### 246.—இராமன் அம்பு தொடுத்தல்.

அக்க ணத்தினி லையனும் வெய்யதன்
சக்க ரத்திற் றகைவரி தாயதொர்
செக்கர் மேனிப் பகழி செலுத்தினன்
புக்க தேயம்புக் கின்னுயிர் போக்கென.

(இ-ள்.) அ கணத்தினில்-அந்த க்ஷணத்திலே, ஐயன்உம் - இராமபிரானும், தன் வெய்ய சக்கரத்தின்-(திருமாலாகிய) தனது (பகைவர்க்குக்) கொடிய சக்கராயுதம்போல, தகைவு அரிது ஆயது-தடுக்கமுடியாததான, ஓர் செக்கர் மேனி பகழி - சிவந்த வடிவமுடைய அம்பொன்றை, புக்க தேயம் புக்கு இன் உயிர் போக்கு என - '(இந்த மான்) செல்லுமிடத்தில் (நீ) விடாது தொடர்ந்து

சென்று (இதனது) இனிய உயிரை நீக்கிவிடுவாய்' என்று கட்டளை யிட்டு, செலுத்தினன்-பிரயோகித்தான்; (எ-று.)

தப்பியோடி உய்ய முயலும் மாரீசனை இலக்காக்கி, 'இவனு யிரைப் போக்கு' என்று தகைவதற்கு அரிய பகழியைச் செலுத் தினன் என்பதாம். (805)

## 247.—மாரீசன் கதறிக்கொண்டு விழுந்து இறத்தல்.

நெட்டி லைச்சரம் வஞ்சனை நெஞ்சுறப்
பட்ட தப்பொழு தேபகு வாயினால்
அட்ட திக்கினு மப்புற மும்புக
விட்ட ழைத்[1]தொரு குன்றென வீழ்ந்தனன்.

(இ - ள்.) நெடு இலை சரம்-நீண்ட கூரிய இலைவடிவாயுள்ள அந்தப் பாணமானது, வஞ்சனை நெஞ்சு உற பட்டது-வஞ்சனையை யுடைய (மாரீசனது) இதயத்திலே பொருந்தத் தைத்தது; அப் பொழுதே—, (மாரீசன்), பகு வாயினால் - பிளவுபெற்ற (தனது) வாயினால், அட்ட திக்கின்உம் அப்புறம்உம் புக-எட்டுத் திக்குக்களி லும் (அவற்றிற்கு) அப்பாலும் ஒலிசெல்லும்படி, விட்டு அழைத்து - (ஹா ஸீதே! லக்ஷ்மணா! என்று உரக்கக் குரலை) வெளிவிட்டுக் கூப்பிட்டு, ஒரு குன்று என வீழ்ந்தனன்-ஒருமலைபோல(த் தனது இயற்கைப் பெருவடிவத்தோடு) விழுந்தான்; (எ - று.)

தனது குரலைவிட்டு இராமன் குரலைக்கொண்டு, அவன் தனக் குத் தீங்கு நேர்ந்தவிடத்து மனைவியையும் தம்பியையுங் கூப்பிடுமாறு போல அவர்களைப் பேர் சொல்லிக் கூப்பிட்டு அரற்றிக்கொண்டு விழுந்தன னென்பதாம். இங்ஙனம் கூவினது, இலக்குமணன் சீதையைப் பாதுகாவல் செய்வதை விட்டுப்பிரிந்து இங்கு வந்திடும் பொருட் டென்க. இராமனிடம் தனக்குப் பழமையாயுள்ள பகையைத் தீர்த்துக்கொள்ளுதற்கு இது செய்தான். 'வஞ்சனை' என்பதை - வஞ்சனது என உருபுமயக்கமாகக்கொண்டு, வஞ்சகனாகிய மாரீச னுடைய என உரைப்பினுமாம். [1]உறுகுன்று என்ற பாடத்துக்கு - பெரிய மலை யென்க. மாரீசன் இயல்பிற் பெருவடிவமுடையா னாதலின், மலைபோல விழுந்தன னென்றார்; அவனை "ஸுமஹாகாய:" எனக் கூறியுள்ளார், வால்மீகி பகவானும். 'பகுவாய்' என்ற சொல் லின் ஆற்றலால், இராமன் அந்த மானின் பின்னே செலுத்திய அம்பு அதனுடம்பில் ஊடுருவி வாயளவுந் துளைத்துக்கொண்டு வந்து அதனைப் பிளந்த தென்னலாம். (806)

## 248 —அதுகண்டு இராமன் இலக்குமணனைக் குறித்துக் கொண்டாடுதல்.

வெய்ய வன்ற னுருவொடு வீழ்தலும்
செய்ய தன்றெனச் செப்பிய தம்பியை
ஐயன் வல்லனென் றுருயிர் [1]வல்லனன்
உய்ய [2]வந்தவன் வல்லனென் றுன்னினான்.

(இ-ள்.) வெய்யவன்-கொடியவனாகிய மாரீசன், தன் உருவொடு வீழ்தலும்-தனது நிசரூபத்துடனே கீழேவிழுந்த வளவிலே,—(இராமன்),—செய்யது அன்று என செப்பிய தம்பியை-'(இந்தமான்) நல்லதன்று' என்று (முன்பு தெரிந்து) சொன்ன (தனது) தம்பியைக் குறித்து,—'ஐயன் வல்லன்-என்னப்பன் வல்லவன்! என் ஆர் உயிர் வல்லன்-எனது அரிய உயிர்போன்றவன் வல்லவன்!! நான் உய்ய வந்தவன் வல்லன் - நான் வாழ்ந்திடும்படி (என்பின்) பிறந்தவன் வல்லவன்!!!' என்று—, உன்னினான்-எண்ணினான்; (எ-று.)

இங்ஙனம் 'வல்லன்' எனப் பலமுறை கூறினது, அவ்வல்லமையைக் குறித்து உண்டான வியப்பினாலென்க. உயிர்போன்றவனை 'உயிர்' என்றது-உபசாரவழக்கு; எனது உயிர்நிலை யாகுபவனென்றவாறு. 'உயிர்' என்றது, சொல்லால் அஃறிணையாயினும் பொருளால் உயர்திணை யாதலால், 'வல்லன்' என்ற உயர்திணை முற்றைக் கொண்டது. பின்வரும் அபாயத்தை முன்பு உணர்ந்து தெரிவித்து அவ்வபாயத்தை யடையாதபடி தடுத்ததனால், 'உய்ய வந்தவன்' என்றார். மாயையினாலேனும் வேறுவகைச் சக்தியினாலேனும் மாறுவடிவங்கொண்டவர் இறக்கையில் அச்செயற்கைவடிவமொழிந்து இயற்கைவடிவத்தையே அடைதல், இயல்பு. செய்யது - குறிப்புவினையாலணையும் பெயர்: செம்மை - பகுதி. தம்பியை 'ஐயன்' என்றது-அன்பு பற்றிய மரபுவழுவமைதி. ஐயன், ஆருயிர், உய்ய வந்தவன் என்பன - ஒருபொருள்மேல்வந்த பலபெயர்கள்: [நன் - பொது-46]: இவை. தனித்தனி வினைகொடுத்துக் கூறப்பட்டன; [நன்-பொது-41] பி- ம்:—[1]வல்லன்யான். [2]வந்தனன். (807)

## 249.—இறந்துவிழுந்த வடிவத்தைப் பார்த்து இராமன் மாரீசனென்று அறிதல்.

ஆசை நீளத் தரற்றினன் வீழ்ந்தவந்
நீசன் மேனியை நின்றுட னோக்கினான்
மாசின் மாதவன் வேள்வியின் வந்தமா
ரீச னேயிவ னென்பதுந் தேறினான்.

(இ - ள்.) ஆசை நீளத்து அரற்றினன் - திக்கு எவ்வளவு நீளமுள்ளதோ அதுவரையிலும் (குரல்கேட்கும்படி) கதறிக்கொண்டு, வீழ்ந்த-விழுந்த, அ நீசன் மேனியை - கீழ்மகனான அந்த மாரீசனது தேகத்தை, உடன் நின்று நோக்கினான் - உடனே (அருகிற்சென்று) நின்று பார்த்து, (ஸ்ரீராமன்), மாசு இல் மா தவன் வேள்வியின் வந்தமாரீசனே இவன்என்பதுஉம்தேறினான் - குற்றமில்லாத பெருந் தவமுடைய விசுவாமித்திரமுனிவன் யாகஞ்செய்த காலத்தில் அங்கு வந்த மாரீசனேயாவன் இவ்வரக்கன் என்பதையுந் தெரிந்துகொண்டான்; (எ - று.)

மான்வடிவத்தை அரக்கன்மாயை யென்று கீழ் ஊகித்துணர்ந்தவன் இப்பொழுது அம்மாயையைச் செய்த அரக்கன் மாரீசனென்று நிச்சயமாக அறிந்தனனென்க. ஆசை - ஆசா; வடசொல். ஆசை

நீளத்து வீழ்ந்த என இயைத்து, திசையெல்லையையளாவிப் பெரு வடிவோடு வீழ்ந்த எனினுமாம். (808)

## 250. – இவன் குரலரல் சீதை வருந்துவளே யென்று இராமன் சிந்தைகொள்ளுதல்.

[1]உழைத்த வாளி [2]யுரம்புகப் புல்லியோன்
இழைத்த மாயையி னென் [3]குர லாலிசைத்து
அழைத்த துண்டது கேட்டயர் வெய்துமான்
மழைக்க [4]ணேழையென் றுள்ளம் வருந்தினுன்.

(இ - ள்.) 'உழைத்த வாளி - வருத்துந்தன்மையதான அம்பு, உரம் புக - (தன்) மார்பில் நுழைந்தவளவிலே, புல்லியோன் - அற்பகுணமுடையவனுகிய அவ்வரக்கன், இழைத்த மாயையின் - (தன்னிடம்) பொருந்திய மாயையால், என் குரலால் இசைத்து அழைத்தது உண்டு - எனதுகுரல்போன்ற குரல்கொண்டு (சீதையையும் லக்ஷ்மணனையும்) கூவி அழைத்த தன்மை உண்டன்றோ? அது கேட்டு - அக்கூக்குரலைக் கேட்டு, மழை கண் ஏழை - மழை போலக் குளிர்ந்த கண்களையுடையவளும் (மகளிர்க்கு இயல்பான) பேதைமையையுடையவளுமான சீதை, அயர்வு எய்தும் ஆல்-வருத்த மடைவளே! என்று-என்று கருதி, உள்ளம் வருந்தினுன்-(இராமன்) மனம்வருந்தினுன்; (எ - று.)

'மழைக்கணேழை' என்றதனுல், மழைபோலக் கண்ணீர் சொரிந்து வருந்துவளே யென்றவாறுமாம். "தழைத்த பொன்முலைத் தடங்கடந் தருவி போய்த்தாழப், புழைத்தபோல நீர்நிரந்தரம்பொழி கின்ற பொலிவா, லிழைக்கு நுண்ணியமருங்குலா ளிணைநெடுங் கண்கள், மழைக்க ணென்பது காரணக்குறியென வகுத்தாள்" என வரும சுந்தரகாண்டச்செய்யுள் இங்கு நோக்கற்பாலது. 'ஏழை' என் றூர், உண்மையுணராது மாயமானிடத்து ஆசை கொண்டமைபற்றி. பி - ம்:—[1]புழைத்த. [2]புரம். [3]குரல்போ லெடுத்து. [4]மங்கை. (809)

## 251.—இலக்குமணன் சீதைக்குத் தேறுதல்சொல்லக்கூடு மென்று இராமன் கருதல்.

மாற்ற [1]மின்னது மாயமா ரீசனென் று
ஏற்ற முன்னுணர்ந் தா[2]னெனி னென்னுடை
ஆற்ற றேரு மறிவின னுதலால்
தேற்று மாலிளை யோனெனத் தேறினுன்.

(இ - ள்.) இளையோன் - தம்பி [லக்ஷ்மணன்], ஏற்ற முன் - எதிர் வந்த முன்னே [கண்டவளவிலே யென்றபடி], மாயம் மாரீசன் என்று உணர்ந்தான் எனின் - மாயையையுடைய மாரீச னென்று (இந்த மானைக்குறித்து) அறிந்தானுதலால்,—(இப்போதும்), என்னுடை ஆற்றல் தேரும் அறிவினன் ஆதலால் - எனது வலிமையை அறியும் அறிவை யுடையவ னுகையால், இன்னது மாற்றம் தேற்றும்-இந்தக் கூக்குரல்வார்த்தையைக் குறித்து (ச் சீதை வருந்ாதபடி அவளை)த்

தேற்றுவான், என - என்று எண்ணி, தேறினுன் - (இராமன் ஒருவாறு) மனந்தேறுதலை யடைந்தான்; (எ - று.)

இந்த மாயமானைக் கண்டபோது, முன்னரே இலக்குமணன் உண்மையுணர்ந்து கூறினு னுதலால் இந்த மாயமானின் குரலைக் கேட்டுக் கலங்காது சீதையைத் தேற்றுவானென்று ஸ்ரீராமன் தேறுதலடைந்தானென்க. 'எனின்' என்ற சொல் - ஆதலால் என்னுங் கருத்தில் வந்தது. பி - ம்:—[1]என்னது, என்னிது [2]இருந்தானெனது, அது காலையின். (810)

## 252.—இராமன் சிந்தையோடு திரும்புதல்.

[1]மாள்வ தேபொரு ளாகவந் தானலன்
சூழ்வ தோர்பொரு ளுண்டிவன் சொல்லினுல்
[2]மூள்வ தேத மதுமுடி யாமுனம்
மீள்வ தேநல னென்றவன் மீண்டனன்.

(இ - ள்.) மாள்வதுஏ பொருள் ஆக வந்தான் அலன் - (இவன் இவ்விடத்து) இறந்துபோதலையே ஒருபயனுகக் கொண்டு வந்திருக்க மாட்டான்; சூழ்வது ஓர் பொருள் உண்டு - (வஞ்சனையாக) ஆலோசித்துத் தந்திரமாகச்செய்வதொரு காரியம் இருத்தல் வேண்டும்: இவன் சொல்லினுல் ஏதம் மூள்வது - இவன் (கூக்குரலிட்ட) வார்த்தையால் தீமை உண்டாகக்கூடும்; அது முடியா முனம் - அத்தீமை உண்டாகிவிடுதற்கு முன்னமே, மீள்வதுஏ - திரும்பிப் பர்ணசாலை சேர்வதே, நலன் - நன்மைதருவது, என்று - என்று நினைத்துக் கொண்டு, அவன்-இராமபிரான், மீண்டனன்-திரும்பிவருபவனுனன்;

இவன் சொல்லினுல் சூழ்வது ஓர் பொருள் உண்டு என இயைத்து, இவன் தன்சொல்லினுல் வஞ்சிப்பதொரு காரியமுள்ளது என்றும், இவன் நமது குரல்கொண்டு சொன்னதனுல் ஆலோசிக்க வேண்டியதொரு காரியம் உள்ளதுஎன்றும் பொருள் கொள்ளலாம். பி - ம்:—[1]மாள்வதோர் தொழிலாக. [2]தாழ்வதே யெனிற்றையல் வருந்துமால். சிலபிரதிகளில் அடுத்தசெய்யுளோடு இப்படலம் முடிகின்றது. (811)

எதிர்பாராது நேர்ந்த சோகத்தையும் கோபத்தையும் மறந்து தீவழியொழுகச்செய்யும் இயல்பினது காமமென்பதும், மற்றும் அக்காமநோய்தான் "நீருட், குளிப்பினுங்காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்றபடி எவ்வாற்ருனுந் தணித்தற்கரிதென்பதும், வேண்டியவேண்டியாங் கெய்துவிப்பதான தவத்தைச் செய்து வரம் பெற்றவர் காலத்தையும் மாற்றவல்லவரென்பதும், இயல்பிற்கொடியவர்களும் ஒருமுறைக்கு இருமுறை ஊறுபட்டாற்பெரியோரின் சிறப்பை உணர்ந்து அதனைத் தாம் பிறர்க்கு வற்புறுத்திக் கூறவும் வல்லராவரென்பதும், அங்ஙனம் அனுபவமுடையார் சொல்லவுங்கேளாதார் கேடுகாலங்கிட்டியவரென்பதும், கடவுளும் அவரைச்சார்ந்தவர்களும் அவதார விசேஷங்களில் தம் நிலைமையை மறந்தும் அவ்வவற்றிற்கேற்ற குணஞ்செயல்களை மேற்

கொண்டுநிற்ப ரென்பதும், "நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்றபடி மகளிர் எத்துணைத்திறமுடையராயினும் அவர்க்கு அறிவு தடுமாறு மென்பதும், இல்லறத்தில் வாழும் ஆடவர்க்குக் காதலியர் சொல்லைக் கடத்தல் அரிது என்பதும், அங்ஙனம் தையல் சொற்கேட்டு ஒழுகியவர் அத்தையலுடன் தாமும் துயருறுவரென்பதும், எவ்வளவு ஆற்றலுடையாரும் தமது துணைவர் சொற்கேட்டு ஒழுகாராயின் துன்பமடைவ ரென்பதும் முதலியன இப்படலத்தில் வெளியாம்.

மாரீசன் வதைப் படலம் முற்றிற்று.

---

# 8-ஆவது சடாயு வுயிர்நீத்த படலம்.

இராவணன் பிராட்டியைக் களவுசெய்து எடுத்துச் செல்லுகையில் சடாயுவென்னுங் கழுகரசு அவனை மறித்துப் போர்செய்து சிதைத்துப் பின்பு தன் உயிரைவிடுத்த செய்தியைக் கூறும் பாகமென்க. சடாயு இராவணனோடு எதிர்த்துச் செய்யும் போரில் அடிபட்டு இறகொடிந்து வீழ்ந்தவுடனே இறந்திடாமல் இராமலட்சுமணர்க்குச் செய்தியை அறிவித்தபின்னரே இறக்கக்கருதிச் சிறிதுபொழுது அரிதின் உயிர்தாங்கியிருந்து அச்செய்தியை அவர்கட்குக் கூறிய பின்னரே உயிரைவிடுதலால், இப்பகுதிக்கு 'சடாயுவுயிர்நீத்த படலம்' என்று பெயரிட்டார். (விராதன் வதைப்படலம், சரபங்கர்பிறப்புநீங்கு படலம், கரன் வதைப்படலம், மாரீசன் வதைப் படலம், சடாயு வுயிர்நீத்தபடலம், சவரிபிறப்பு நீங்குபடலம் என இவ்வாறு நூலாசிரியர் படலங்களுக்குத் தக்கவாறு பெயர்நாட்டும் நயம் நன்கு மதிக்கற்பாற்று.) இப்படலத்துக்குப் பெயர், சடாயு மோட்சப் படலம் என்று சில பிரதிகளிற் காணப்படுவதும் பொருத்தமுடையதே. சில பிரதிகளில் சடாயு வதைப் படலம் என்று இப்படலத்துக்குப் பெயர் காண்கின்றது.

இப்படலத்தின் கதைச் சுருக்கம்:—இராமன் குரலாற் கதறிய மாரீசனது குரலைக் கேட்டவுடனே அவ்வரக்கனது வஞ்சனையையுணர்ந்த இலக்குமணன் வாளா இருந்தான். அவ்வுண்மை உணராமல், சீதை, இராமனுக்கு அபாயம் நேர்ந்ததென்றே கருதிப் புரண்டழுது அது தீர்த்தற்பொருட்டுத் தன்னைவிட்டுச்செல்லாத இலக்குமணன்மேற் குறைகூறினாள். இலக்குமணன் இராமனது பல பராக்கிரமங்களை யெடுத்துக்கூறி உண்மையுணர்த்தவும், கேளாமல், சானகி, இலக்குமணனைப் பலவாறுபழித்து நெருப்பில் விழத்தொடங்கினாள். தொடங்கவும், அதனைத் தடுத்து இளையபெருமாள் விடைபெற்று 'இவர்க்குஎன்னாகுமோ?' என்று சங்கித்துக்கொண்டே இராமபிரானுள்ள இடம் சென்றார்.

சீதை தனித்து நின்ற சமயம்பார்த்து இராவணன் சந்நியாசி வடிவங்கொண்டு வர, அவனை, ஒருமுனிவ னென்றே கருதியத

ஞல் அப்பிராட்டி உபசரித்துப் பிறகு ஒருவரையொருவர் விசாரிக்கையில் அவனோடு பேச்சு நிகழ்த்திய சீதை, அரக்கர்களையும் அவர் தலைவனை இராவணனையும் குறித்து இழித்துப் பேசினாள். பேசலும், அவன், பெருஞ்சினங்கொண்டு மாயவேடந் துறந்து உண்மையுருவத்தோடு நின்ருன். பிறகு உடன்பாடில்லாத பெண்ணைத் தொட்டால் இறுதியுண்டாமென்று தனக்குச் சாபமிருத்தலால், அவன் யோசனைதூரம் நிலத்தைப்பேர்த்து அதனுடன் பிராட்டியாரைத் தேரின்மேல் வைத்துச் செல்லலானான். செல்லுமளவிலே, அவள் கூக்குரலிட்டதைக் கேட்டுச் சடாயு ஓடிவந்து எதிர்த்துப் பெரும்போர்செய்து அவ்விராவணனது துவசம் குண்டலம் கிரீடம் கவசம் வில் சாரதி தேர்க்குதிரைகள் தேர் அம்பருத்தூணி முதலியவற்றைச் சிதைத்தான். இறுதியில் சடாயு அவன்எறிந்த தெய்வவாளினால் சிறை துணிப்புண்டு வீழ்ந்தான். அரக்கன் சீதையைக் கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்தில் சிம்சுபாமரத்தின் கீழ்க் கொடிய பல அரக்கியர் காவல்செய்ய அவர்நடுவிற் சிறைவைத்திட்டான். இது நிற்க.

தமையனாரை நாடிச்சென்ற இளையபெருமாள், 'அரக்கன் கதறிய குரல் கேட்டலால் சீதைக்கு என்னுகுமோ?' என்று விரைந்து வருகிற இராமனைக் கண்டு, தான்வந்ததன் காரணத்தைக் கூறினான். கூறியவுடன், இருவரும், விரைவாய்வந்து பர்ணசாலையை யடைந்து நோக்குதலும், சானகியைக் காணாமல் மனங்கலங்கிச் சீதையைத் தேடலாயினர். தேடிச் செல்லும் வழியில் முறிந்துகீழ்விழுந்துகிடந்த கொடி வில் கவசம் முதலியவற்றை நோக்கிக்கொண்டு செல்லுகையில், சடாயு விழுந்து கிடக்கக்கண்டனர். கண்டதும், இராமன் சோகங்கொண்டு விழுந்துபுலம்ப, குற்றுயிருடன் விழுந்துகிடந்தஅவன், நடந்தசெய்தியை ஒருவாறு கூறி முடிவில் உயிர்நீத்துப் பரமபதமடைந்தான். இராமபிரான் மிகவும்சோகித்து இலக்குமணனால் தேற்றப்பட்டுச்சடாயுவுக்குச் சரமகைங்கரியஞ்செய்து முடித்து நின்றவளவிலே சூரியாஸ்தமனமாயிற்று என்பது.

### 1.—கவிக்கூற்று: பிராட்டியின் செய்தியைக் கூறத் தொடங்குவேமென்றல்.

சங்க டுத்த தனிக்கடன் மேனியாற்கு
அங்க டுத்த நிலைமை யறைந்தனம்
கொங்க டுத்த மலர்க்குழற் கொம்பனாட்கு
இங்க டுத்த தகைமை யியம்புவாம்.

(இ - ள்.) சங்கு அடுத்த-சங்குகள் பொருந்திய, தனி - ஒப்பற்ற, கடல்-கடல்போன்ற [நீல நிறமான], மேனியாற்கு - திருமேனியையுடைய இராமபிரானுக்கு, அங்கு - அவ்விடத்தில் [மாரீசனைப் பின்தொடர்ந்து சென்ற இடத்தில்], அடுத்த - நேர்ந்த, நிலைமை - தன்மையை, அறைந்தனம் - (கீழ்க்) கூறினோம்; கொங்கு அடுத்த - நறுமணம் பொருந்திய, மலர் - பூக்களைச்சூடிய, குழல் - கூந்தலையுடைய, கொம்பு அனாட்கு - பூங்கொம்புபோன்ற சீதாதேவிக்கு,

இங்கு - இவ்விடத்தில் [பர்ணசாலையில்], அடுத்த - நேர்ந்த, தகைமை-தன்மையை, இயம்புவாம் - (இனிச்) சொல்லுவோம்; (எ-று.)—என்று இங்ஙனம் படலத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறு.

'சங்கு அடுத்த' என்றது - கடலுக்கு, இயற்கையடைமொழி; அன்றி, கழுத்துக்குச் சங்கத்தை உவமை கூறுதற்பொருட்டு மேனிக்குப் போலியானகடலுக்கு 'சங்கடுத்த' என்ற விசேடணங் கொடுத்தன ரென்றலும் ஒன்று: இனி, 'சங்கடுத்த' என்றதை மேனியானுக்கு அடைமொழியாக்கி, திருமாலுக்குஉரிய பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கத்தின் அமிசமான பரதன் தனக்கு அடுத்த தம்பியாகப்பிறக்கப்பெற்ற என்று உரைப்பாரும் உளர்; அவ்வுரைக்கு, பரதனுக்குத் தமையனாயிருத்தற் கேற்றதகுதியை யுடையவன் இராமனென்பது கருத்து. "எண்ணரிய குணத்தாலுமெழிலாலு மிவ்விருந்த வள்ளலேயனையான்" என்ற இடத்தும் இக்கருத்துத் தோன்றும். அன்றி, திருக்கையிற் சங்கத்தையேந்தியுள்ள திருமாலுக்கு உரிய அடைமொழி, அப்பிரானது திருவவதார விசேஷமான இராமனுக்குக் கொடுக்கப்பட்டதெனினும் இழுக்காது. குழற்கொம்பனாள்-இல்பொருளுவமை. (812)

## 2—இதுவும், அடுத்தகவியும் - மாயமானின் கூக்குரல்கேட்ட பிராட்டி வருந்தியது கூறும்.

**எயி[1]ற லைத்து முழைதிறந் தேங்கிய**
**[2]செயிர்த லைக்கொண்ட சொற்செவி சேர்தலும்**
**குயிற லத்திடை யுற்றதோர் கொள்கையாள்**
**வயிற லைத்து விழுந்து மயங்கினாள்.**

(இ - ள்.) எயிறு அலைத்து - பற்களைக்கடித்துக்கொண்டு, முழை திறந்து - மலைக்குகை போன்ற (தன்) வாயைத் திறந்து, ஏங்கிய - (மாரீசன்) அழுதுகூக்குரலிட்ட, செயிர் தலைக்கொண்ட சொல் - துன்பத்தை மேற்கொண்ட வார்த்தை, செவி சேர்தலும்- (தனது) காதிற் பட்டவளவிலே,—(சீதை), குயில் தலத்திடை உற்றது ஓர் கொள்கையாள் - ஒரு குயில் (மரத்தினின்று தவறித்) தரையில் விழுந்திட்டாற் போன்ற தன்மையை யுடையவளாய், வயிறு அலைத்து விழுந்து மயங்கினாள் - வயிற்றிலடித்துக்கொண்டு (நிலத்திலே) விழுந்து மயக்கமுற்றாள்; (எ - று.)

மாரீசன் இறக்கையில் 'ஹாஸீதே! லக்ஷ்மணா!' என்று இராமன் குரலால் உரக்கக்கதறிய குரலைக் கேட்டு, சீதை, இராமபிரான் தானே அபாயமுற்று அரற்றியதாகக் கருதி வருத்தமுற்றனளென்க. முழை - உவமவாகுபெயர். 'செயிர் தலைக்கொண்ட சொல்' என்றது - அவன் மரணவேதனையோடு கூறிய சொல் என்ற பொருளோடு, மேற் பிராட்டிக்கும் பெருமானுக்கும் பிரிவுத்துயரமுண்டாக்குதலைப் பொருந்திய சொல் என்ற பொருளையு முடையது.

செயிர் - வயிரம்: மனத்துப் பகைமை என்றுமாம். பி - ம்:— [1] அலைத்த. [2] செயிறலை. (813)

3. பிடித்து நல்கிவ் வுழையெனப் பேதையேன்
முடித்த னென்முதல் வாழ்வென மொய்[1] குழல்
கொடிப் படிந்த தெனநெடுங் கோளரா
இடிக்[2] குடைந்த தெனப்புரண் டேங்கினுள்.

(இ - ள்.) கொடி படிந்தது என - ஒருபூங்கொடி (கொள்கொம்பையிழந்து) தரையில் விழுந்ததுபோலவும், நெடு கோள் அரா இடிக்கு உடைந்தது என - நீட்சியையும் வலிமையையுமுடைய பாம்பு இடிமுழக்கங்கேட்டு நிலைகுலைந்தது போலவும், மொய் குழல் - அடர்ந்த கூந்தலையுடைய சீதை, புரண்டு-(தரையிலே) புரளலுற்று, —இ உழை பிடித்து நல்கு என - 'இந்த மானைப் பற்றிக்கொடு' என்று வேண்டியதனுல், பேதையேன் - அறிவிலியாகிய யான், முதல் வாழ்வு - (எனது) முதன்மையாகிய வாழ்க்கையை, முடித்தனென் - போக்கிக்கொண்டேன்', என-என்று கூறி, ஏங்கினுள்-அழுதாள்; (எ - று.)

கொழுநனேடு கூடி வாழும் வாழ்க்கையினும் சிறப்புடைய வேறு வாழ்வு குலமகளிர்க்கு இன்ருதலால், அத்தலைமைவிளங்க, 'முதல் வாழ்வு' எனப்பட்டது. இனி, வாழ்வு முதல் முடித்தனென் என மொழிமாற்றி, எனது மங்கலவாழ்க்கையை அடியோடே தொலைத்துவிட்டேனென்றதாகப் பொருள் கூறினும் அமையும். "நுணலுந் தன்வாயாற் கெடும்" என்ருற்போலத் தன் வாய்மொழியால் தனக்குப் பெருங்கேடு விளைத்துக்கொண்டமைபற்றி, 'பேதையேன்' என்று தன்னைத் தானே வெறுத்துக்கூறினுள். தலைவிரிகோலமாய் அழுதனளென்பது போதர, இங்கு 'மொய் குழல்'என்றனரென்பர். கொடிய கூக்குரலைக்கேட்டுச் சீதை மிகவருந்துதற்கு, இடியோசைகேட்டு நாகம் நிலைகுலைதலை உவமை கூறினுர். மொய்குழல்-வினைத்தொகையன்மொழி. உவமையணி. பி - ம்:— [1] அழல். [2] இடைந்தது. (814)

### 4.—சீதை இலக்குமணனை வெறுத்துக் கூறல்.

குற்றம் [1]வீந்த குணத்தினெங் கோமகன்
மற்றை வாளரக் கன்புரி மாயையால்
இற்று [2]வீழ்ந்தன னென்னவு மென்னயல்
நிற்றியோ விளையோ யொருநீ யென்ருள்.

(இ - ள்.) 'குற்றம் வீந்த குணத்தின்-குற்றமில்லாத திருக்கலியாண குணங்களையுடைய, எம் கோமகன் - எமது தலைவன், மற்றை வாள் அரக்கன் புரி மாயையால் - எதிரியாகவந்த கொடிய இராக்கதன் செய்த மாயையினுல், இற்று வீழ்ந்தனன் - அபாயமடைந்து விழுந்தான், என்னஉம்-என்று (அவன்கூக் குரலால்) அறிந்தபின்பும், (கவலைகொண்டு பரிகாரந்தேடாமல்), இளையோய்

ஒரு நீ என் அயல் நிற்றிஓ - (அப்பெருமானது) தம்பியாய் அவனோடு ஒற்றுமையுடைய நீ எனது அருகிலேயே நிற்கக்கடவையோ?' என்றாள்-என்று சொன்னாள்; (எ - று.)

"ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்னும்படி இராமனிருந்த காலத்திலெல்லாம் அவனோடு ஒற்றுமைபூண்டு நின்ற நீ யென்பதும், நாடுதுறந்து காடுபுகுந்தவிடத்து நீ ஒருவனொழிய வேறு துணையாய்வந்தவ ரில்லாமையால் அவனுக்கு அபாயம் நேர்ந்த விடத்து அதனையறிந்து தடுத்தற்குரிய நீ யென்பதும், வேறு துணையெவரும் வேண்டாதபடி அஸஹாயசூரனாய்ப் பகைவெல் லும் ஆற்றலையுடைய தனிவீரனான நீ யென்பதும், 'ஒருநீ' என்ற தில் தோன்றும். இப்படிப்பட்ட நீ நமது தலைவனான அவனது கூக்குரலைக் கேட்டவுடனே யான் வருத்தமுற்றாற்போலவே வருத்த முற்று உடனே விரைந்து அவன் சென்றவிடத்துச் சென்று அவனுக்கு நேர்ந்த நிலைமையை உணர்ந்து அத்துயரத்தைப் பரிகரித்தற்கு முயல்வதன்றோ தகுதி? அங்ஙனஞ்செய்யாது கணவனையிழந்து தனியே பரிதவிக்கிற என்னைவிட்டு நீங்காது எனது அருகிலேயே நின்றுகொண்டிருத்தல் தகுதியோ? என்றன ளென்க.

தமையன் இப்படிப்பட்ட அவஸ்தையை யடைந்து உன்னைத் துணைவேண்டிக் கூப்பிடவும் தம்பியான நீ அவனைநோக்கிச் செல் லாமல் என்னருகிலேயே நிற்கிறாய்; ஆதலால், அவனுக்குத் தீங்கு நேர்தல் உனக்குச் சம்மதம்போலும்; நீ பங்காளியாதலால் உள்ளத் திற் பகைமைபூண்டு வெளிக்கு வேண்டியவன் போலக்காட்டி அயோத்தியினின்று தனியே தொடர்ந்து வந்ததெல்லாம் இங்ஙனங் கேடு சூழ்தற்கேயோ? அல்லாக்கால், இராமன் அழிகையில் அவனைக் காக்கக் கருதாமற் கவலையற்று என்னைக் காத்துநிற்றல் யாதுபயன் கருதியது? எனது தலைமகனுக்கு அபாயம் நேர்ந்தவிடத்து என்னைப் பெண்டாளக் கருதியே நீ உன்மனையாளை அயோத்தியில் விட்டுத் தனியே தொடர்ந்து வந்தாய்: நான் உன்னை ஒருபொருளாக மதியேன்; இனி ஒரு கணமும் என்முன் நில்லாதே போ; உன்னொரு வனை நம்பி உனது பாதுகாவலிலே வைக்கப்பட்டுள்ள நான் யாது செய்யக்கடவேன்! என்றாற்போல வால்மீகிராமாயணத்தில் விரித்துக் கூறப்பட்ட விஷயங்களெல்லாம் இங்கு 'இற்று வீழ்ந்தன னென்னவு மென்னயல், நிற்றியோ வினையோய் ஒருநீ' என்ற ஒரு சிறு தொடரில் அடங்கி நிற்கிற அமைதி கருதத்தக்கது. இப்படிப்பட்ட ஆழ்பொரு ளுடைமை பற்றியே, கம்பராமாயணச் செய்யுளை 'கம்பசூத்திரம்' என்பர், அறிவுடையோர். 'குற்றம்வீந்த குணத்தி னெங்கோமகன்' என்று இராமனைக் கூறினதனால், இலக்குமணனை 'நீ குற்றம்நிறைந்த வன், குணக்கேடன், அற்பமனிதன்' என்று பழித்தவாறும். 'வாளரக் கன்' என்றது, போர்வல்லா னென்பதைக் காட்டும். மற்றை யென்றது - சுட்டியதற்கு இனமாதலால், அவ்வரக்கன குற்றம்நிறைந்த குணக் கேட னென்றதைக் காட்டும். பி - ம்:—[1] வீய்ந்த. [2] வீந்தனன். (815)

வே று.

5.—இனி ஏழு கவிகள் - இலக்குமணன் சீதைக்குத் தேறுதல்கூறலைத் தெரிவிக்கும்.

எண்மையா ருலகினி லிராமற் கேற்றமோர்
திண்மையா ருள[1]ரெனச் செப்பற் பாலிரோ
பெண்மையா லுரைசெயப் பெறுதி ராலென
உண்மையா னனையவட் குணரக் கூறினான்.

(இ - ள்.) 'எண்மை ஆர் உலகினில்-எளிமைபொருந்திய உலகத்திலே, இராமற்கு-இராமனினும், ஏற்றம் - மேம்படுதலையுடைய, ஓர் திண்மையார் உளர் - ஒப்பற்ற வலிமையுடையாரொருவ ருள்ளார், என-என்று, செப்பல் பாலிரோ-சொல்லக் கடவீரோ? பெண்மையால் உரை செய பெறுதிர் - (அங்ஙனஞ் சிறந்த இராமனுக்கு ஓரரக்கனால் அழிவு நேர்ந்ததென்று உமது) பெண்தன்மையினாலேயே சொல்லத் தலைப்பட்டீர்', என - என்று, உண்மையான்-உண்மையை யுணர்ந்த இலக்குமணன், அனையவட்கு - அச்சீதைக்கு, உணர கூறினான் - தெரியச் சொல்பவனானான்; (எ-று.)—இதன் விவரம், அடுத்த ஆறு கவிகளில் விளங்கும்.

உலக முழுவதும் இராமனுக்கு எளியதே யென்பது பட, 'எண்மையாருலகு' என்றான். திண்மையார் - பலசாலி. "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே", 'பெண்புத்தி பின்புத்தி' என்ப வாதலால், 'பெண்மையா லுரைசெயப் பெறுதிர்' என்றான். பெண்மையால் - அவனது பேராண்மையை யுணராமையால் என்றபடி. இவ்விடத்து வால்மீகிராமாயணத்தில் 'தகுதியல்லாத வார்த்தையைக் கூறுதல், உலகத்தில் மகளிர்க்கு இயற்கை யாதலால், வியக்கத்தக்கதன்று; அவர்கள் சஞ்சலமான சித்தத்தையும் கொடிய எண்ணத்தையு முடையராய் தருமத்தைக் கைவிட்டுப் பிறர்க்குப் பேதஞ்செய்யுந் தன்மையர்' என்றது உணரத்தக்கது. சீதையும் இராமனும் போல மயங்காமல், இலக்குமணன், பொன்மான் வந்தபொழுதே தொடங்கி அதன் வஞ்சனையை உள்ளபடி உணர்ந்துவந்த சிறப்புத்தோன்ற, அவனுக்கு இங்கு 'உண்மையான்' என்று ஒரு பெயர் கூறினார். உண்மையான்-உண்மை கூறுபவனுமாம். இங்கு வால்மீகிராமாயணத்தில் இலக்குமணனை "ஸத்யவாதிநம்" என்றும் "ந்யாயவாதீ" என்றும் கூறியுள்ளது. இனி, உண்மையால் கூறினான் என மூன்றும் வேற்றுமையாகக் கொண்டு, உண்மையான உறுதிமொழிகளாற் கூறினா னென்றலும் ஒன்று. பி - ம்:—[1]எனல் செப்பற்பாலதோ.

இதுமுதல் 48 - கவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் 6 - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (816)

6. [1]ஏழுமே கடலுல கேழு [2]மேழுமே
சூழுமேழ் மலை[3]யவை தொடர்ந்த சூழல்வாய்
வாழுமே யையர்சிறு வலிக்கு வாளமர்
தாழுமே யிராகவன் றனிமை தையலீர்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தையலீர்-பெண்மைக்குணம் நிறைந்துள்ளவரே! கடல் ஏழ்உம்-ஏழுகடல்களும், உலகு ஏழ்உம் ஏழ்உம் - பதினான்கு உலகங்களும், சூழும் ஏழ் மலை - (உலகத்திற்) சூழ்ந்து பொருந்திய ஏழுகுல பருவதங்களும், அவை - (ஆகிய) அவற்றை, தொடர்ந்த - பற்றிய, சூழல்வாய்-இடங்களில், வாழும்-வசிக்கிற, ஏழையர்-அற்பர்களுடைய, சிறு வலிக்கு - அற்பபலத்துக்கு, இராகவன் தனிமை - ரகுகுல வீரனான இராமபிரானது தனித்தன்மை, வாள் அமர்-கொடிய போரிலே, தாழும்ஏ-குறையுமோ? (எ-று.)

அண்டகோளத்தில் கடல்களிலும் மலைகளிலும் மற்றையிடங்களிலும் எங்கும் வாழும் பிராணிகளெல்லாம் துணைவேண்டாச் சூரனான இராமனது ஆற்றலுக்கு முன் மிகவும் எளியனவேயாதலால், துணையின்றித் தனியேசென்ற அவன், போரிற் சிறிதும் தாழ்வடையான் என்பதாம். "கூட்டொருவரையும்வேண்டாக் கொற்றவ" என்றான், வாலி பின்னரும். திக்குவிசயஞ்செய்து பேர்பெற்ற இரகுவினது குலத்தவனென்ற பொருளுள்ள இராகவனென்ற பேர்குறித்துச் சொற்றதும், வெற்றியைக் காட்டுதற்கே. கடல்கள் உலகங்கள் மலைகள் என்பவற்றின் வலிமைக்கும், அவைபொருந்திய அண்டத்தில் வாழ்பவரது வலிமைக்கும் இராகவன் தனிமை அமரில் தாழாது என்னும் பொருள்பட இக்கவிக்கு உரை கூறுவாருமுளர். முதலடியில் உம்மைகள் - முற்றுப்பொருளன. ஏகாரங்கள் - எண்ணுப்பொருளன. தாழுமே என்ற ஏகாரம் - எதிர்மறை. பி - ம்:—[1] ஏழுமேழ். [2] ஏழுமேற். [3] இவை. (817)

7. பாரெனப் [1] புனலெனப் பவனம் வான்கனல்
[2] பேரெனைத் தவையவன் முனியிற் பேருமால்
காரெனக் கரியவக் கமலக் கண்ணனை
யாரெனக் கருதியிவ் விடரி[3] னாழ்கின்றீர்.

(இ - ள்.) பார் என - பூமியும், புனல் என - சலமும், பவனம் (என) - காற்றும், வான் (என) - வானமும், கனல் (என) - அக்கினியும், (ஆகிய), பேர் - பேரைக்கொண்டவை, எனைத்து - எவ்வளவு உண்டோ, அவை - அவையனைத்தும், அவன் - அவ்விராமன், முனியின் - கோபித்தவளவில், பேரும் - நிலைகுலையும்; ஆல் - ஆதலால், கார் என கரிய அ கமலம் கண்ணனை - மேகம்போலக் கரியதிருநிறமுடைய செந்தாமரைக்கண்ணனான அப்பிரானை, யார் என கருதி - யாரென்று நினைத்து, இ இடரின் ஆழ்கின்றீர் - இந்தத் துன்பக் கடலில் அழுந்துகின்றீர்? (எ - று.)

எல்லாம்வல்லனான திருமாலென்று உணராது ஒருமனிதனென்றுகொண்டுமயங்கலாகாதென்றவாறு. 'ஆழ்கின்றீர்' என்ற வினையை நோக்கி, இடர், கடலெனப்பட்டது. முன்னிரண்டடியால், எம்பெருமான் எல்லாவற்றையும் அடக்கியாளுந்தன்மையன் என்பது உணர்த்தப்பட்டது. அளவிறந்த ஒப்பற்ற ஆற்றலையுடைய ஐம்பெரும்பூதங்களும் நிலைகுலையலாம்படியான பேராற்றலுடையானுக்

கும் அப்பஞ்சபூதமயமான உடலையுடையதோர் உயிரால் ஊறு வரக் கடவதொன்றோ? என்றவாறு. முதலடியில்வந்த 'என' என்னும் இடைச்சொற்கள் - எண்ணுப்பொருளன. மூன்றாமடியில், உவம வுருபு: நான்காமடியில், செயவெனெச்சம். [1]கனலெனப்புனலெனப் பகாப் பேரெனத் திசையென என்றபாடத்தில், பகாஎன்றது - இடை விடாமல், பேர் - சஞ்சரிப்பது என்ற பொருளைத் தந்து, பகாப்பேர் என்ற தொடர் - வாயுவுக்கு ஒருகாரணக்குறியாம்; ஸதாகதி, பவநன் முதலிய வடமொழிப் பெயர்கள் இப்பொருளன. பகாப்பேரென்ற விடத்து 'பகர்பேர்' என்றுபடிப்பின் - மற்றுஞ்சொல்லப்படுகிறபேர்; அதாவது-இங்குக் கூறப்படாத காற்று என்க. பி-ம்:—[2]பேரனைத்து. [3]மூழ்கினீர். (818)

8. இடைந்து[1]போய் நிசிசரற் கிராம னெவ்வம்வந்து
அடைந்தபோ [2]தழைக்குமே யழைக்கு மாமெனின்
மிடைந்தபே ரண்டங்கண் மேல கீழன
உடைந்து[3]போ மயன்முத லுயிருந் தீயுமால்.

(இ - ள்.) இராமன்—,—நிசிசரற்கு இடைந்து போய் - (ஓர்) அரக்கனுக்கு(த்தான்) வலியொடுங்கிப்போய், எவ்வம் வந்து அடைந்தபோது - (தனக்குத்) துன்பம் வந்து சேர்ந்தபொழுது, அழைக்குமே - (பிறரைத் துணைவிரும்பிக்) கூப்பிடுவனோ? [மாட்டான் என்றபடி]: அழைக்கும் ஆம் எனின்-அங்ஙனங்கூப்பிட நேருமானால், மிடைந்தபேர் அண்டங்கள் - நெருங்கிய பெரிய அண்டங்களெல்லாம், மேல கீழன - மேல்கீழனவாய் [தலைகீழாய்], உடைந்துபோம் -அழிந்து போம்: அயன்முதல் உயிர்உம் - பிரமன் முதலிய சீவராசிகளும், தீயும் - தீய்ந்துபோம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

உடலினுள் உயிர்போல எல்லாப்பொருளினுள்ளும் அந்தராத்மா வாகி எழுந்தருளியிருக்கிற பரமாத்மாவாய் ஜகச்சரீரகனுயுள்ள அப் பிரானுக்கு அபாயம் நேர்ந்தால், அவனுக்குச் சரீரமாகவுள்ள அண்ட கோடிகளுக்கும் சீவகோடிகளுக்கும் அபாயம் நேர்ந்திடுமே: இஃது இல்லாமை காண்டலால், அஃதும் இன்றென்பது அநுமானப்பிரமா ணங்கொண்டு அறியற்பாற்றென்க: என்றது, அவனுக்குத் துன்பம் நேர்ந்திலதென்பதை வற்புறுத்திக் காட்டியவாறு. இடைந்து போய் - பின்னிடைந்து தோற்றுப்போய் எனினும் அமையும். பி - ம்:—[1]போம். [2]அழைக்குமோவழைக்குமால். [3]போய். (819)

9. மாற்றமென் பகர்வது மண்ணும் வானமும்
போற்றவன் றிரபுர மெரித்த புங்கவன்
ஏற்றிநின் றெய்தவில் [1]லிறுத்த வெம்பிரான்
ஆற்றலின் [2]மேலுமோ ராற்ற [3]லுண்மையோ.

(இ - ள்.) பகர்வது மாற்றம் என் - (மற்றும் அவனது ஆற்ற லைக்குறித்து யான்) சொல்லவேண்டிய வார்த்தை யாதுளது? மண்உம் வானம்உம் போற்ற-மண்ணுலகத்தாரும் விண்ணுலகத் தாரும் கொண்டாட, வல் திரிபுரம் எரித்த புங்கவன்-வலிய முப்பு ரத்தை யெரித்த சிவபிரான், ஏற்றி நின்று-நாணேற்றி நின்று,

எய்த-அம்பெய்தற்குக் கருவியான, வில்-(அவனது) வில்லை, (உமது விவாககாலத்தில்), இறுத்த-முறித்திட்ட, எம்பிரான் ஆற்றலின் மேல்உம்-நமது தலைவனான இராமனது வல்லமையைக் காட்டிலும் மேலாக, ஓர் ஆற்றல் உண்மைஓ-ஒரு வலிமை உளதோ? [இல்லை யென்றபடி]; (எ-று.)

இராமனது வலிமையினும் மிக்கதொரு வலிமை உள்ளதென்றல் உண்மையாகுமோ? ஆகாது என்றும் ஈற்றடிக்குப் பொருள் கொள்ளலாம். சிவபிரான் கைக்கொண்டு நாணேற்றிப் பகைவென்ற வலிய படைக்கலம் ராமன்வலிமைக்கு ஆற்றாமல் முறிந்திட்டதென, இராமனது ஆற்றலை எடுத்துக் காட்டியவாறும். இப்படிப்பட்ட ஆற்றலை நீர் கண்கூடாகக் கண்டுள்ளீராதலால் உமக்கு நான் ஒன்றுங்கூறவேண்டுவதில்லை யென்பதுபட 'மாற்றமென் பகர்வது' என முதலிற் கூறினான். மாற்றம் என் பகர்வது-லோகப்பிரசித்தமான அதனைப்பற்றி யாதொன்றுஞ் சொல்லவேண்டுவதில்லை: ஏதேனும் சொல்லின் மிகையா மென்றபடி. புங்கவன் - புருஷசிரேஷ்டன்; அல்லது, ரிஷபத்தையுடையவன். பி - ம்:—[1] இற்றது. [2] அமைவது, வருவது. [3] இன்மையால். (820)

10. காவல னீண்டுநீர் கருதிற் றெய்துமேல்
மூவகை யுலகமு முடியு முந்துள
தேவரு முனிவரு முதல செவ்வியோர்
ஏவரும் [1]வீவர்நல் லறமு மெஞ்சுமால்.

(இ-ள்.) காவலன் - (உலகமுழுவதையும்) பாதுகாத்தலில் வல்லவனான இராமன், ஈண்டு-இப்பொழுது [அல்லது இவ்விடத்தில்], நீர் கருதிற்று எய்தும் ஏல் - நீர் எண்ணினதை அடைவனானால், மூ வகை உலகம்உம் முடியும் - மூன்றுலோகங்களும் அழியும்; முந்து உள தேவர்உம் முனிவர்உம் முதல செவ்வியோர் ஏவர் உம் வீவர்-முதன்மைப்பட்ட தேவர்களும் முனிவர்களும் முதலிய சிறப்புப்பெற்றோர் யாவரும் இறந்தொழிவர்; நல் அறம்உம் எஞ்சும்-சிறந்த தருமமும் அழிந்ததாம்; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

உலகம்முதலியன உள்ளனவாதல் இராமனொருவன் உளனாதல் பற்றியே யென்பது, இக்கவியிற் போதரும். மூவகையுலகமும் முடிதல் முதலியவற்றைக் காணாமையால், இராமன் அபாயமடையாமையைத் தெற்றென உணரலாமென்பது கருத்து. உலகமெல்லாம் காக்கும்வல்லமையுள்ளவன் தற்காத்தலில் வல்லமையில்லவனாகானென்பதுதோன்ற 'காவலன்' என்றான். "கோமகன் இற்று வீழ்ந்தனன்" என்று பிராட்டியார் கருதிச்சொன்னதைத் தான் தன்வாயால் மீண்டும் கூறவுங் கூசுவானாகி 'நீர் கருதிற்று எய்துமேல்' என்று கூறினான். 'முந்து' எனத் தனியே எடுத்து 'முடியும்' என்பது முதலிய முற்றுக்களோடு கூட்டினும் அமையும். காவலன் ஈண்டும் என எடுத்து, காத்தற்றொழிற்கு உரியவனான இராமன் யாதொரு தீங்குமின்றி விரைவில் வந்து சேர்வன் என்று பொருள் கூறுவாருமுளர். பி-ம்:—[1] வீந்துளார். (821)

11. பரக்கவென் பகர்வது பகழி பண்ணவன்
துரக்க[1]வந் ததுபடத் தொலைந்து சோர்கின்ற
அரக்கனவ் வுரையெடுத் தரற்றி னைதற்கு
இரக்கமுற் றிரங்கலி ரிருத்தி ரீண்டென்றான்.

(இ - ள்.) பரக்க பகர்வது என்-விரிவாகச்சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது? பண்ணவன்-பெருமையுடையவனான இராமன், அங்கு-(மாயமானாகிய அரக்கனைத் தொடர்ந்துசென்ற) அவ்விடத்தில், பகழி துரக்க - அம்பை எய்ய, வந்த அது பட - வந்த அந்த அம்பு பட்டதனால், தொலைந்து சோர்கின்ற-வலி தொலைந்து அழிகிற, அரக்கன் - அவ்விராக்கதன், அ உரை எடுத்து அரற்றினான் - (இராமன்வார்த்தைபோன்ற) அவ்வார்த்தையை(த் தீய சிந்தனையாற்) குரலெடுத்துக் கூவினான்; அதற்கு இரக்கம் உற்று இரங்கலிர்-அதற்காகப் பரிதாபமடைந்து புலம்பாமல், ஈண்டு இருத்திர்-இவ்விடத்தில் [இப்பொழுது] கவலையற்று இருப்பீர், என்றான்-என்று (சீதையை நோக்கி இலக்குமணன்] கூறினான்; (எ - று.)

இராமபிரானுடைய அம்புபட்டு இறக்கும் அரக்கன் மரிக்கும் போது அரற்றிய வஞ்சகக்குரலே நம் செவிப்பட்டது: ஆதலால் அதற்காக இரக்கங்கொள்ளாது ஈண்டுஇருத்திரென்று சீதைக்கு இலக்குமணன் தேறுதல் கூறினனென்க. 'தொலைந்துசோர்கின்ற, என்பதைச் சோர்ந்து தொலைகின்ற என விகுதி பிரித்துக்கூட்டியுரைப்பாரும் உளர். பி - ம்:—[1] அங்கது. (822)

## 12.—சீதை இலக்குமணனை மீளவும் பழித்தல்.

என்றவ[1]னியம்பலு[2]மெழுந்த சீற்றத்தள்
கொன்றன வின்னலள் கொதிக்கு முள்ளத்தள்
நின்றநின் னிலையிது நெறியிற் றன்றென
வன்றறு கண்ணினள் [3]வயிர்த்துக் [4]கூறுவாள்.

(இ - ள்.) என்று அவன் இயம்பலும்-என்று அந்த இலக்குமணன் கூறியவளவிலே, (சீதை), எழுந்த சீற்றத்தள் - பொங்கித் தோன்றிய கோபத்தையுடையவளும், கொன்று அன இன்னலள் - (தன்னைக்) கொன்றாலொத்த துன்பத்தை யுடையவளும், கொதிக்கும் உள்ளத்தள் - பதைபதைக்கிற மனத்தையுடையவளும், வல் தறுகண்ணினள் - கொடியதறுகண்மையையுடையவளுமாய், (அவனை நோக்கி), நின்ற நின் நிலை இது நெறியிற்று அன்று என - '(பெருமானை நாடிச்செல்லாமற் கவலையற்று இங்கு) நிற்கிற உனது இந்நிலைமை நீதிமுறைமையுடையதன்று' என்று, வயிர்த்து கூறுவாள்-பலகைமைபாராட்டிச் சொல்லுபவளாயினாள்; (எ-று.)—அதனை அடுத்தகவியிற் காண்க.

இலக்குமணனுரையைக் கேட்டதும், சீதை சீற்றமெழ, கொன்றாற்போன்ற இன்னலுடனே உள்ளங்கொதித்து, 'நீ நின்ற இந்நிலை நன்றன்று' என்று வயிரங்கொண்டு அவ்விலக்குமணனை நோக்கிக் கூறினளென்பதாம். கொன்றன இன்னல் - மரணவேதனை

போன்ற வேதனை. நெறி - சன்மார்க்கம். தறுகண்மை - தாட்சிணியம் பாராட்டாத குரூரத்தன்மை. பி - ம்:—[1]உரைத்தலும். [2]எடுத்த. [3]வலிந்து. [4]கூறினள். (823)

## 13.—சீதை 'நெருப்பில் விழுந்து இறப்பேன்' என்றல்.

ஒருபகல் பழகினா ருயிரை யீவரால்
பெருமக[1] னுலைவுறு பெற்றி கேட்டிநீ
வெருவலை நின்றனை வேறென் யானினி
எரியிடை [2]வீழ்ந்துயி ரிறப்பெ னீண்டெனா.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'ஒரு பகல் பழகினார் - ஒருநாள் பழகினவர்களும், உயிரை ஈவர்-(தமது அன்பர்க்குத்துன்பம்நேர்ந்தவிடத்து அதற்காகத் தமது) உயிரையும் இழப்பார்கள்; (அங்ஙனம் இருக்க), நீ-(உடன்பிறந்து நெடுநாள் பழகினவனான) நீ, பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும்-உனதுதமையன் அழிவடைகிற தன்மையைச் செவியுற்றும், வெருவலை நின்றனை - அஞ்சாமல் நின்று கொண்டிருக்கிறாய்; வேறு என்-(எனக்கு) வேறுகதி யாது உளது? இனி - இப்பொழுது, யான்—, எரியிடை வீழ்ந்து ஈண்டு உயிர் இறப்பென் - நெருப்பில்விழுந்து இங்கு உயிரை மாய்த்துக்கொள்வேன்,' எனா - என்றுசொல்லி,—(எ - று.)—"காட்டெரிதொடர்கின்றுடனை" என அடுத்த கவியோடு தொடரும்.

எம்கோனோடு ஒருபகல்பழகினாரும் அவனுக்காகத்தம்முயிரையீவர்: நீ அவன் உலைவுறுவதைக்கேட்டும் வெருவாது நின்றனை; வேறுவகையின்மையால் எரியிடை என்னுயிருகுப்பேனென்றனளென்பதாம். ஒருநாள் இராமன்முகத்திலேவிழித்த வேடர்பரிகரம் இலக்குமணன்குகனுள்பட அதிசங்கைபண்ணிற்று என்று பெரியோர் அருளிச்செய்வது ஈண்டு ஒருசார் நினைவுகூர்க. பெருமகன் - மூத்தவன். ஈண்டு-உன்முன்னிலையில். பி - ம்:—[1]உலைவுற்ற. [2]கடிதுபுக்கிறப்பன். (824)

## 14.—இலக்குமணன் சீதையை வணங்கி விலக்குதல்.

தாமரை வனத்திடைத் தாவு மன்னம்போல்
தூமவெங் காட்டெரி தொடர்கின் றுடனைச்
சேமவிற் குமரனும் விலக்கிச் [1]சீறடிப்
பூமுக நெடுநிலம் புல்லிச் சொல்லுமால்.

(இ - ள்.) தாமரை வனத்திடை தாவும் அன்னம் போல் - செந்தாமரை மலர்க்காட்டில் தாவிச்செல்லுகிற அன்னப்பறவை போல, தூமம் வெம் காடுஎரி - புகையோடுகூடிய வெவ்விய காட்டுத்தீயில், தொடர்கின்றாள் தனை - பாயத் தொடங்குகிற சீதையை, சேமம் வில் குமரன்உம் - பாதுகாவற்குஉரிய வில்லையேந்திய இளமகனான இலக்குமணனும், விலக்கி - தடுத்து, சிறு அடி பூ முகம் நெடு நிலம் புல்லி - (அவளுடைய) சிறியதிருவடிகளாகிய தாமரை

மலர்களுக்கு நேராகப் பெரியபூமியில் விழுந்து [சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து], சொல்லும்-சொல்லுவான்; (எ - று.)—அச்சொல்லை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

சிவந்த காட்டுத்தீக்கு உவமை யாதலால், தாமரை, செந்தாமரைமலரெனக் கொள்ளப்பட்டது. உபமேயத்தில் தூமத்தைக் கூறியதற்கு ஏற்ப, உபமானத்தில், கரியவண்டுகள் பறத்தல் கொள்க. கணவனுக்கு ஓர்ஊறுபாடுற்றவிடத்துக் கற்புடைப் பெண்டிர் தீயையும் தாமரைமலர்ப்பொய்கையையும்ஒருநிகராகவே மதிப்பரென்ற கருத்தும் முதலடிஉவமையால் பெறப்படுதல் காண்க. சேமம் - க்ஷேமம். "நுதலடிநுசுப்பென மூவழிச் சிறுகி" என்றபடி மகளிர்க்குக் கால்சிறுத்திருத்தல் உத்தமவிலக்கண மாதலால், 'சீறடி' என்றார். ஆல் - ஈற்றசை. பி-ம்:—[1]சீரடி. (825)

## 15.—இலக்குமணன் செல்லஉடன்பட்டுக் கூறுந் துணிவுரை.

துஞ்சுவ தென்னை நீர் [1]சொற்ற சொல்லையான்
அஞ்சுவென் மறுக்கிலெ னவலந் [2]தீர்ந்தினி
[3]இஞ்சிரு [4]மடியனே னேகு கின்றனென்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) துஞ்சுவது என்னை - (நீர்) இறக்கவேண்டுவது என்ன? நீர் சொற்ற சொல்லை யான் அஞ்சுவென் - நீர் சொன்ன வார்த்தைக்கு நான் அஞ்சுகிறேன்; மறுக்கிலென் - (உமது கட்டளையை) மறுக்கமாட்டேன்; அவலம் தீர்ந்து இனி இஞ்சு இரும் - துன்பமொழிந்து இப்பொழுது இவ்விடத்தில் இருப்பீர்; அடியனேன் ஏகுகின்றனென் - அடியேன் செல்லுகிறேன்; வெம் சினம் விதியினை வெல்ல வல்லம்ஓ - கடுங்கோபமுள்ள ஊழ் வினையை வெல்ல வல்லமையுடையோமோ (நாம்?) [அல்லோம் என்றபடி]; (எ - று.)

அங்ஙனம் தீயிற் பாயச் சீதைசெல்கையில், சீதையைநோக்கி "நீர் இறப்பானேன்? நீர் சொல்லியபடி யான்செல்வதனால், உமக்கு அபாயம் நேருமென்று அஞ்சினேனே யன்றி, நும் கட்டளையைக் கடக்கக்கருதினேனல்லேன்: நீர் இங்குத்தானே இரும்: அடியனேன் ஏகுகின்றனென்; விதியை வெல்லவல்லார் யார்?" என்றானென்க. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" என்றபடி எவ்வாற்றானும் விலக்கவொண்ணாத வலிய வினைப்பயனாக வருவது வருக என்பது, ஈற்றடியின் கருத்து. 'வெஞ்சினம்' என்ற அடைமொழியால், விதியென்றது - இங்கே தீவினைப்பயனை உணர்த்தும். அஞ்சுவென் என எதிர்காலத்தாற் கூறியதனால், நினைக்குந்தோறும் உமதுமொழி அச்சத்தைத் தருவது என்றவாறு. துஞ்சுவது - மங்கலவழக்கு. இங்கு என்பது, இஞ்சு எனத் திரிந்தது; எதுகைநோக்கியதோர் போலி வழக்கு. பி - ம்:—[1]சொன்ன. [2]தீர்ந்திரும். [3]எஞ்சினேன். [4]அடியனே. (826)

## 16.—இலக்குமணன் விடை பெறுதல்.

போகின்றே னடியனேன் பொருந்தி வந்துகேடு
ஆகின்ற தரசன்ற ஞணை நீர்மறுத்து
[1]ஏகென்றி ரிருக்கின்றிர் [2]தமியி ரென்றுபின்
வேகின்ற சிந்தையான் [3]விடைகொண் டேகிஞன்.

(இ - ள்.) அடியனேன் போகின்றேன் - அடியேன் (இதோ) செல்லுகிறேன்; பொருந்தி வந்து கேடு ஆகின்றது - இசைந்து வந்து கெடுதி உண்டாகப்போகிறது: நீர் அரசன்தன் ஆணை மறுத்து ஏகு என்றிர் - நமது பெருமானது கட்டளையைக் கடந்து போவென்று நீர் (என்னைச்) சொல்லுகிறீர்; தமியிர் இருக்கின்றிர் - தனியே இருக்கிறீர், என்று - என்றுசொல்லி, பின் - பின்பு, வேகின்ற சிந்தையான் - தவிக்கிற மனமுடையவனாய், (இலக்குமணன்), விடைகொண்டு ஏகினன் - விடைபெற்றுக்கொண்டு சென்றான்; (எ - று.)

அரசன்தன் ஆணை மறுத்து நீர் ஏகு என்றிர் - நுமக்குப் பாதுகாவலாக இராமனால் நியமிக்கப்பட்டுள்ள என்னை அப்பாதுகாவலொழிந்து விலகிச் செல்லும்படி நியமிக்கிறீர். இலக்குமணன் உண்மையுணருந்தன்மைய னாதலால், 'பொருந்திவந்து கேடு ஆகின்றது' என்று வேகின்றசிந்தையனானான்; அன்றியும், இதற்கு, சீதைசொன்னசொல்லும் ஓர்காரணம். விரைவுந்துணிவும் பற்றி, 'ஆகின்றது' என நிகழ்காலத்தாற் கூறினான். பி - ம்:— [1]ஏகென்றிருக்கின்றீர். [2]தமியள், தமியர். [3]விடைகொண்டேனென. (827)

## 17.—அப்பொழுது இலக்குமணன் அடைந்த சிந்தை.

இருப்பனே லெரியிடை யிறப்ப ராலிவர்
பொருப்பனை யானிடைப் போவெ னேயெனின்
அருப்பமில் கேடுவந் தடையு மாருயிர்
[1]விருப்பனேற் கென்செய லென்று விம்மினன்.

(இ - ள்.) 'இருப்பன்ஏல்-(நான் செல்லாமல் இங்கே) இருப்பேனானால், இவர் எரியிடை இறப்பர்-இவர் நெருப்பில் விழுந்து இறப்பார்; பொருப்பு அனையானிடை போவென்ஏ எனின்-மலைபோன்ற இராமனிடஞ்செல்வேனேயானால், அருப்பம் இல் கேடு வந்து அடையும் - பாதுகாவலில்லாத தீங்கு வந்துநேரும்; ஆர் உயிர் விருப்பனேற்கு என் செயல் - அரிய உயிரினிடத்து விருப்பத்தையுடைய எனக்குச் செய்யலாவது யாது?' என்று விம்மினன் - என்று எண்ணி ஏங்கினன்; (எ - று.)—ஆல் - அசை.

'நான் செல்லாது இங்குத்தானே இருந்தால், இவள் எரியிடையிறப்பள்; ஏகினால், இவளுக்குப் பெருங்கேடு நேரும்' என இங்ஙனம் எண்ணி இருதலைக்கொள்ளியிடைப்பட்ட எறும்புபோல இருபுறத்துள் ஒன்றிலும் துணிந்துசெல்லமாட்டாமல், துயருறுதலினும் உயிர்துறத்தல் நன்றாயினும் அதனிடத்து ஆசையால் அங்ஙனம் உயிரைமாய்த்துக்கொள்ளா திருக்கிறேன் எனத் தன்னைத்தான்

வெறுத்து ஏங்கினனென்பதாம். அருப்பம் இல் கேடு-தடையில்லாத கெடுதி; அருப்பம் - அரண்; இனி, எளியகேடென்றும் பொருள்கொள்ளலாம்; அருப்பம்-அருமை. அருப்பம் என்பதை அல்பம் என்ற வடசொல்லின் திரிபாகக்கொண்டு, அற்பமல்லாத பெருங்கேடு என்றலும் ஒன்று. சலியாமை பெருமை முதலியன பற்றி, இராமனுக்கு மலை உவமை. பி - ம்:—[1]விருப்பனே. (828)

## 18.—இலக்குமணன் ஒருவாறு துணிதல்.

அறந்தனு [1]லழிவில தாகி னாக்கலாம்
இறந்துபா டிவர்க்குறு [2]மிதனி னிவ்வழி
துறந்துபோ மிதனையே துணிவென் றொல்வினைப்
பிறந்துபோந் திதுபடும் பேதை யேனென.

இதுவும், வருங் கவியும் - குளகம்.

(இ - ள்.) 'அறந்தனால் ஆகின் அழிவு இலது ஆக்கல்ஆம்-தருமத்தினால் இயலுமானால் தீங்கு நேராதபடி செய்யலாம்; தொல் வினை பிறந்து போந்து-பழைய வினையின்பயனால் சன்மமெடுத்து இங்குவந்து, இது படும்-இந்த அவஸ்தையைப்படுகிற, பேதையேன் - அறிவிலியான நான், இவர்க்கு—, இறந்துபாடு உறும் இதனின் - இறந்துபடுத லுண்டாதற்குக் காரணமாகிற இதனினும் [இங்கு நிற்றலினும்], இ வழி துறந்துபோம் இதனைஏ - இந்தஇடத்தைவிட்டு நீங்கிச்செல்லும் இச்செயலையே, (செய்ய), துணிவென் - துணிவேன்,' என - என்று கருதி,—(எ - று.)—"என்று அறிவித்து ஏகினான்" என வருங் கவியோடு தொடர்ந்து முடியும்.

தருமம் காப்பிற் காக்க: இவர்க்கு இறந்துபாடு உண்டாக இங்கு நான் நிற்றலினும், இவ்விடத்தைவிட்டுச் செல்வதே துணிபு என்று கருதினான், இலக்குமணனென்க. இந்தச் சங்கடத்தினின்று மீளுதற்கு யாதோரறிவுந் தோன்றாமையால், 'பேதையேன்' என்று தன்னை வெறுத்தான். பி - ம்:—[1]அழிவிலாதாகல். [2]இருக்கின். ()

## 19.—'சடாயு பாதுகாக்கும்' என்றுசொல்லி இலக்குமணன் செல்லல்.

போவது [1]புரிவல்யான் புகுந்த துண்டெனின்
காவல்செ யெருவையின் றலைவன் கண்ணுறும்
ஆவது காக்குமென் [2]றறிவித் தவ்வழித்
தேவர்செய் தவத்தினாற் செம்ம லேகினான்.

(இ - ள்.) 'யான் போவது புரிவல் - நான் செல்லுவேன்; புகுந்தது உண்டுஎனின் - (ஏதேனும் தீங்கு) நேர்ந்தது உண்டானால், காவல் செய் எருவையின் தலைவன் கண்ணுறும் ஆவது காக்கும் - (நமக்குக்) காவலைச் செய்கின்ற கழுகரசனான சடாயு பார்த்துத் தன்னாலியன்றவளவு பாதுகாப்பன்', என்று அறிவித்து-என்று சீதையை நோக்கிச் சொல்லி, செம்மல் - பெருமையிற் சிறந்தவனான இலக்குமணன், தேவர் செய் தவத்தினால்-தேவர்கள் செய்த

தவத்தினாலே, அ வழி ஏகினன் - (இராமன் மானைத் தொடர்ந்து சென்ற) அந்தவழியாகச் சென்றிட்டான்; (எ - று.)

கவன்றுகொண்டே விடைகொண்டு ஏகலுற்ற இலக்குமணன் 'யான் போகின்றேன்: ஏதேனும் தீங்கு நேரின், சடாயுகாப்பன்' என்று சீதைக்குத் தெரிவித்துச்சென்றன னென்க. கீழ்ச் சடாயு காண்படலத்தில் ''நீவிரு நன்னுதல் தானு மிக்காட்டில் வைகுதிர் காக்குவென்யான்'' என்று கூறிய சடாயு இவர்களைப் பஞ்சவடியாச்சிரமங் கொண்டுசேர்த்து அருகில் நின்று இவர்க்குப் பாது காவல்செய்து வருகையால், 'காவல்செயெருவையின் தலைவன் கண்ணுறும் ஆவது காக்கும்' என்றான். இலக்குமணன் சீதையைத் தனியே இருத்திச் செல்லுதலென்பது இராவணன் வந்து அவளைக் கவர்ந்துசென்று அதுகாரணமாக இராமபாணத்தால் வேரோடு அழியத் தேவர்கள் துன்பம் நீங்கி இன்பமுறுதற்குக் காரண மாகுதலால், 'தேவர்செய் தவத்தினாற் செம்மலேகினன்' என்றார். போவதுபுரிதல் - போதலைச்செய்தல். பி - ம்:—[1] புரிவனன். [2] அறிவுற்று. (830)

20 — உடனே இராவணன் சந்நியாசிவேடங்கொண்டு சீதையிடத்து வருவதை இதுமுதல் நான்குகவிகளிற் கூறுகிறார்.

இளையவ னேகலு [1]மிறவு பார்க்கின்ற
வளையெயிற் றிராவணன் வஞ்ச முற்றுவான்
முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத்
தளையரி [2]தவத்தவர் வடிவுந் தாங்கினன்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) இளையவன் ஏகலும்-இலக்குமணன் சென்றவளவிலே,— இறவு பார்க்கின்ற - (அவன்) நீங்கிச்செல்லுதலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற, வளை எயிறு இராவணன்-வளைந்த கோரதந்தங்களையுடைய இராவணன், வஞ்சம் முற்றுவான் - (தான் செய்யக்கருதி வந்த) வஞ்சனையைச் செய்துமுடிக்கும் பொருட்டு,—வரி முளை தண்டு ஒரு மூன்றும் - கட்டமைந்த மூங்கில் தண்டு ஒரு மூன்றையும் [திரிதண்டத்தையும்], முப் பகை தளை அரி தவத்தவர் வடிவும் - (காமம் வெகுளி மயக்க மென்னும்)மூன்று உட்பகையாகிய பந்தத்தை யறுத்த தவத்தையுடைய முனிவர்களது வடிவத்தையும் [சந்நியாசி வேஷத்தையும்], தாங்கினன்-தரித்தவனாய்,—(எ-று.)—''சூழல்வாய் நணுகினன்'' என மேல் 23-ஆம் கவியோடு முடியும்; ஆகவே, அது வரையில் ஒரு தொடராம்.

இலக்குமணன் தன் பாதுகாத்தல்தொழிலை விட்டு நீங்கிச் செல்வதை யெதிர்பார்த்திருந்த இராவணன், தான் கருதிய வஞ்சகச் செயலை நிறைவேற்றச் சந்நியாசிவேடம் பூண்டன னென்க. ''நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங் காலை யந்தணர்க் குரிய'' என்றதனால், சந்நியாசிகளுக்குத் திரிதண்டம் உரியதாதல் உணர்க.

துறவிகள் முக்கோல்பிடித்தல்முப்பகையையும் வென்றமைக்கு ஓர் அறிகுறியாகுமென்பதுபட 'முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத்தளையரி தவத்தவர் வடிவம்' என ஒருங்கு நிறுத்திக் கூறினர். முப்பகை-மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்பன வுமாம். 'தவத்தவர்வடிவுந்தாங்கினன்' என்றதனால், காஷாய வஸ்திரந்தரித்தல், கையிற் கமண்டலமேந்துதல் முதலியன பெறப் படும். பி - ம்:—[1] இதவு. [2] தவத்தர்தம்வடிவம். (831)

21. ஊணில னாமென [1]வுலர்ந்த மேனியன்
சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையன்
பாணியி [2]னடத்திடைப் படிக்கின் றானென
வீணையி னிசைபட வேதம் பாடுவான்.

(இ - ள்.) ஊண் இலன் ஆம் என உலர்ந்த மேனியன் - உண வொழிந்தவன்போல வற்றிய உடம்பையுடையவனும், சேண் நெறி வந்தது ஓர் வருத்தம் செய்கையன்-நெடுந்தூரம் வழிநடந்து வந்த தனாலாகியது போன்றதொரு மிக்கவருத்தத்தின் தோற்றத்தை யுடையவனும், நடத்திடை பாணியின் படிக்கின்றான் என - நடனம் நிகழுமிடத்தில் தாளத்தோடு (இசைப்பாட்டைப்) பொருந்திப் பாடுபவன்போல, வீணையின் இசைபட வேதம் பாடுவான் - வீணா காநம்போன்ற இனிய இசை யெழும்படி சாமகாநஞ்செய்பவனுமாய்,— (எ - று.)—சூழல்வாய் நணுகினான் என்க.

இராவணன் வற்றிய உடம்பும் வருத்தத்தோற்றமுமுடைய னாய்ச் சாமகானஞ் செய்த வண்ணம் அங்கு அணுகினானென்க. கூத்தாடுகையில் தாளவடைவோடு இன்னிசை பாடுதல், இவன் அடைவுபட வேதம்பாடுதற்கு உவமை. பாணியென்னுங் கையின் பெயர்-அது கொண்டு ஒத்தறுத்து இடப்படும் தாளத்தின்மேல் நின்றது; கருவியாகுபெயர். இவன் குதித்து நடந்து வருதலை அடுத்த கவியிற் கூறுகின்றா ராதலால், அதற்கு ஏற்ப, உவமையில் 'நடத்திடை' என்றார். காநத்திற்குச் சிறந்தது சாமமாதலால், இங்கு வேதம் - சாமமெனக் கொள்ளப்பட்டது. வீணையின் இசைபட என்ப தற்கு - வீணையிசையும் ஒப்பாகாது கீழ்ப்படும்படி யென்று பொருள் கொள்ளலும் ஒன்று. பாணியின் என்பதற்கு - பாட்டினை யென்று உரைப்பர் ஒருசாரார். பி-ம்:—[1] உலந்த. [2] அளந்திசை, உழந்திடைப். ()

22. [1]பூப்பொதி யவிழ்ந்தன நடையன் பூதலந்
தீப்[2]பொதிந் தாமென மிதிக்குஞ் [3]செய்கையன்
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்
மூப்பெனும் பருவமு முனிய முற்றினன்.

(இ - ள்.) பூ பொதி அவிழ்ந்து அன நடையன் - மலரின் இதழ் (மெல்ல மெல்ல) விரிந்தாற்போன்ற (மெத்தென்ற) நடையை யுடையவனும், பூ தலம் தீ பொதிந்து ஆம்என - பூமியில் நெருப்புச் சிதறியிருந்தால் அவ்விடத்துச் செல்லுதல்போல, மிதிக்கும் செய்கை யன் - நன்குபதியாதபடி கால் வைக்குஞ் செய்கையுடையவனும், காப்பு அரு நடுக்கு உறும் - தடுக்கவொண்ணாத நடுக்கம் மிக்க,

காலன் - கால்களையுடையவனும், கையினன் - (அப்படிப்பட்ட) கைகளையுடையவனும், மூப்பு எனும் பருவம்உம் முனிய முற்றினன்- முதுமையென்னும் பருவந்தானும் வெறுக்கும்படி மிக முதிர்ந்தவனுமாய்,—(எ - று.)—சூழல்வாய் நணுகினுனென்க.

பூப்பொதியவிழ்ந்தன நடை - அரும்புபூவாக அவிழுந்தருணத்தில் மெல்ல விரிதலால் இதழ்கள் இடம் பெயர்ந்தாற்போன்ற தாமத நடை என்றார், ஒருவர். இனி, மலர்களின் தொகுதிசிந்தினாற் போல ஒன்றற் கொன்று அணுகப் பல அடியிட்டு நடக்கும் நடையென்றாரும் உளர். முன்னிரண்டடியிற் கூறிய குறுநடையும், குந்திமிதித்துச் செல்லுதலும் - அந்தணர்க்கு உரிய இயல்பு. தொல்காப்பியப் பொருளதிகார வுரையில், 'தன்மையென்பது - சாதித்தன்மை: அவையாவன - பார்ப்பாராயின் குந்திமிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும், அரசராயின் எடுத்த கழுத்தோடும் அடுத்த மார்போடும் நடந்துசேறலும், இடையராயின் கோற்கையும் கொடுமடியுடையும் விளித்த வீளையும் வெண்பல்லுமாகித் தோன்றலும் என்று இன்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க' என உரைத்ததுங் காண்க. இங்ஙனம் மிதித்துத்தாவி மெல்லென நடத்தற்குக்காரணம், தரையில் ஊரும்எறும்பு முதலிய சிற்றுயிர்கள் காலிடைப்பட்டு இறக்கலாகா தென்ற கருத்தும், வழியில் ஏதேனும் அசுத்தம் இருப்பின் அது காலிற் படலாகா தென்ற நோக்கமு மென்க. பொதிந்து என்பதைப் பொதிந்தது என்பதன் விகாரமாகவும் கொள்ளலாம். பின்னிரண்டடியிற் கூறப்பட்டது, மூப்புத்தன்மை. 'காப்பருநடுக்குறும்' என்ற அடைமொழியைக் கைக்குங் கூட்டுக. மூப்பும் - தனது முற்றிய மூப்பைக் காண்பவர் தன்னை வெறுக்க என்பதே யன்றி அம்மூப்புத்தானும் தன்னை வெறுக்க என்னும் பொருளைத் தருதலால், உம்மை-இறந்தது தழுவிய எச்சம். [1]பூப்பொதிய விழ்ந்தன குடையன் என்ற பாடத்துக்கு - தாமரைமலர் கட்டவிழ்ந்தாற்போன்ற குடையையுடையவனென்க; குடையும் ஒருசார் துறவிகட்கு உரியது: "எறித்தருகதிர் தாங்கி யேந்திய குடை நீழ லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்" என்ற கலித்தொகையையுங் காண்க; ஸ்ரீவால்மீகி பகவானும், 'சத்ரீ' என இராவணசந்நியாசிக்குக் குடையுடைமை கூறியுள்ளார். பி - ம்:—[2]பொதிந்தாலென. [3]சிந்தையான். (833)

23. தாமரைக் [1]கண்ணொடேர் தவத்தின் மாலையன்
ஆமையி னிருக்கையன் வளைந்த வாக்கையன்
நாமநூன் மார்பின னணுகி னனரோ
தூமனத் தருந்ததி யிருந்த சூழல்வாய்.

(இ - ள்.) தாமரை கண்ணொடு - தாமரைமணிகளால் (ஆகிய), ஏர் தவத்தின் மாலையன் - அழகிய தவத்துக்கு உரிய மாலையைத் தரித்தவனும், ஆமையின் இருக்கையன் - யாமைமணையை யுடன் கொண்டு உள்ளவனும், வளைந்த ஆக்கையன் - கூனிவளைந்த உடம்பையுடையவனும், நாமம் நூல் மார்பினன் - பெருமைபொருந்திய

முப்புரிநூலைத்தரித்த மார்பையுடையவனுமாய், தூ மனத்து அருந்ததி இருந்த சூழல்வாய் - பரிசுத்தமான மனத்தையுடைய அருந்ததிபோன்ற கற்பினையுடையளான சீதாதேவி இருந்தபர்ண சாலையினிடத்து, நணுகினன் - சமீபித்தான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

'நளிநாக்ஷம்' என்ற வடசொல்லின் மொழிபெயர்ப்பாக 'தாமரைக்கண்' என்றார்; (நளிநம் - தாமரை, அக்ஷம்-கண், மணி.) தாமரைக்கண்ணொடு என்பதில், 'ஒடு' உருபு-கருவிப்பொருளது; "ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்" என்றஇடத்துப்போல. தவத்தின் மாலை-ஜபமாலையுமாம். இனி, முதலடிக்கு - தாமரைமணிமாலையோடு மற்றும உயர்ந்த தவத்துக்கு உரிய துளசிமணிமாலை முதலியவற்றையும் உடையவனென்று உரைகொள்ளுதலும் ஒன்று. "நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை யந்தணர்க் குரிய" என்றதனால், மணையும் முந்நூலும் கூறப்பட்டன. அச்சூத்திரவுரையில் 'யாமைமணை' எனஉரைத்தது இங்குஉணரத்தக்கது; அது, ஆமையின் வடிவமமையச் செய்யப்பட்ட பீடம்; வடமொழியில் கூர்மாஸநமெனப்படும்; இனி, 'ஆமையினிருக்கையன்'-"ஒருமையுளாமைபோலைந்தடக்கல்' என்ற குறளின் கருத்துப்பற்றி ஆமை தனது தலையொன்றுங் கால்நான்குமாகிய ஐந்து உறுப்புக்களையும் இடர்புகுதாமல் அடக்கிக்கொள்ளுதல்போல, ஐம்பொறிகளையும் பாவம்புகுதாமல் அடக்கிய தோற்றத்தைக் காட்டியவ னென்றலும் ஒன்று. அருந்ததி - வசிஷ்டர் மனைவி; இப்பெயர் - இங்கு உவமையாகுபெயராய்ச் சீதையைக் குறித்தது.

இருபதாங்கவியில் திரிதண்டமும், இக்கவியில் தாமரைமணிமாலையும் உபவீதமும் கூறியதனால் இவற்றையுடைய வைஷ்ணவ சந்யாசிவேஷத்தைக்கொண்டு வந்தனனென்பது விளங்கும். வால்மீகிராமாயணத்தில் குடுமியுடைமையையுங் கூறியுள்ளார். தருமத்தையே பிரதானமாகவுடைய ஜநகரது குலத்துமகளான சீதைக்கு நம்பிக்கையுண்டாக்கும்பொருட்டு அவள் மதிக்கத்தக்க துறவி வேடத்தையே கொண்டன னென்பர் ஆன்றோர். பி - ம்:—[1]மணிதுழாய் தரித்த, கண்ணுசேர்தவத்தின். (834)

## 24.—இராவணன் பர்ணசாலை வாயிலில் வந்து 'இதில் உள்ளார் யார்?' என்றல்.

தோமறு சாலையின் வாயி லுன்னினன்
நாமுதல் குழறிட நடுங்கு சொல்லினன்
[1]யாவிரிவ் விருக்கையு ளிருந்து ளீரென்றான்
தேவரும் மருள் [2]கொளத் [3]தெரிந்த மேனியான்.

(இ - ள்.) தேவர்உம் மருள் கொள தெரிந்த மேனியான் - (தன்னைக் காண்கிற) தேவர்களும் மயங்கும்படி விளங்குகிற சந்யாசி வடிவத்தைக் கொண்டவனான இராவணன், தோம் அறு சாலையின்

வாயில் துன்னினன் - குற்றமற்ற அப்பர்ணசாலையின் வாயிலிற் சேர்ந்தவனாய், நா முதல் குழறிட நடுங்கு சொல்லினன் - நாக்கு அடியோடு குளறுதலாலே தடுமாறுகிற சொற்களினால், இ இருக்கையுள் இருந்துளீர் யாவிர் என்றான்-'இந்தப் பர்ணசாலைக்குள் இருக்கின்றவர் யார்?' என்று வினவினான்; (எ - று.)

அத்தழைக்குடிசையின் வாயிலில் வந்து நின்று, 'யார் இதனுள்ளே இருக்கிறவர்?' என்றுகேட்டனனென்பதாம். நாக்குழறச் சொல்தடுமாறுதற்குக்காரணம், முற்றிய மூப்பு. தோம் - தோஷம். [3] திரிந்தமேனியான் என்று பாடமாயின், (மாயையால்) மாறுபட்ட உருவத்தையுடையானெனப் பொருள்படும். பி - ம்: — [1] யாவர். [2] தர. (835)

## 25.—அச்சொற்கேட்டுச் சீதை இராவணமுனியை எதிர்கொள்ளுதல்.

தோகையு [1] மிவ்வழித் தோமில் சிந்தனை
[2] சேகறு நோன்பின ரென்னுஞ் [3] சிந்தையாள்
பாகியல் [4] கிளவியாள் பவளக் கொம்பர் [5] போன்று
ஏகுமி னீண்டென வெதிர்வந் தெய்தினாள்.

(இ - ள்.) தோகைஉம் - (சாயலிலும் நடையிலும்) மயில் போன்ற சீதையும்,—'இ வழி - இவ்விடத்துவந்த, தோம்இல் சிந்தனை சேகு அறு நோன்பினர் - குற்றமற்ற மனத்தையும் குற்றமற்ற தவவிரதத்தையுமுடைய முனிவர் (இவர்), என்னும்-என்று எண்ணிய, சிந்தையாள் - மனத்தையுடையவளாய், பாகு இயல் கிளவியாள் - கருப்பஞ்சாற்றுப்பாகுபோன்ற (இனிய) சொற்களையுடையவளாய் [இன்சொற்களால்], ஈண்டு ஏகுமின் என - (வந்த முனிவனைநோக்கி) 'இங்குவாரும்' என்றுசொல்லிக்கொண்டு, பவளம் கொம்பர் போன்று எதிர் வந்து எய்தினாள் - பவழக்கொடி போன்று அவனெதிரில் வந்து சேர்ந்தாள்; (எ-று.)

[2] சேகுறு நோன்பினர் என்று பாடமாயின், வயிரத்தன்மை பூண்ட [மிக்க உறுதியைக் கொண்ட] விரதாநுட்டான முடையவரென்க. நோன்பினர், ஏகுமின் - உயர்வுப்பன்மை. இயல் - உவமவுருபு. கொம்பர் - இறுதிப்போலி. இராவணனை உண்மைச் சந்நியாசியென்று நினைந்து சீதை 'ஈங்கு வருக' என்று எதிர்கொண்டனளென்க. பி-ம்:—[1] அவ்வழி. [3] சிந்தையால். [4] கிளவியோர். [5] போல். (836)

## 26.—அப்பொழுது இராவணன் சீதையைப் பார்த்தல்.

வெற்பிடை மதமென [1] வியர்க்கும் மேனியன்
[2] அற்பினற் றிரைபுர ளாசை வேலையன்
[3] பொற்பினுக் கணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக் கரசியைக் கண்ணி னோக்கினான்.

(இ - ள்.) வெற்பிடை மதம் என வியர்க்கும் மேனியன் - யானையினிடத்து மதசலம்பெருகுவதுபோல வேர்வையொழுகும் உடம்பையுடையவனும், அற்பின் நல் திரை புரள் ஆசை வேலையன் - அன்பாகிய பெரிய அலைகள் புரளப்பெற்ற ஆசையாகிய கடலிலமிழ்ந்தவனுமாய், (இராவணன்), பொற்பினுக்கு அணியினை - அழகுக்கு அழகாயுள்ளவளும், புகழின் சேக்கையை -கீர்த்திக்குத் தங்குமிடமாயுள்ளவளும், கற்பினுக்கு அரசியை - பதிவிரதாதருமத்துக்குத் தலைவியாயுள்ளவளுமான சீதையை, கண்ணின் நோக்கினன் - (தனது) கண்களாற் பார்த்தான் [பிரதியட்சமாய் எதிரிற் கண்டனனென்றபடி], (எ - று.)

முன்பு அபிரதியட்சமாகக் கருத்தினால் நோக்கியதனினும், உருவெளித் தோற்றத்திலும் கனவிலும் கண்ட பொய்க்காட்சியினும் வேறுபாடு விளங்க 'கண்ணினோக்கினன்' என்க. இனி, கண்கள் படைத்தபயன் பெறுமாறு பிராட்டியைத் தரிசித்தனனென்று கருத்துக்கொள்ளினுமாம். முன்னிரண்டடி - அவனது காமதாபத்தைக் காட்டும்: இவளழகுக்கு மேம்பட்டதோரழகு இல்லையாதலின், 'பொற்பினுக்குஅணி' என்றார். தனது கற்பை எப்பொழுதும் சிறிதும் அழியாதபடி பாதுகாத்துக்கொண்டு அதனால் தான் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும் புகழைத்தரும் தன்மையளென்பது, 'புகழின்சேக்கையை,' 'கற்பினுக்கரசியை' என்ற தொடர்களால் விளங்கும். வெற்பு-யானைக்கு, உவமவாகுபெயர். அன்பு-அற்பு. "நன்று பெரிதாகும்" என்ற தொல்காப்பியத்தை நோக்கி, 'நல்திரை' என்பதற்கு-பெரிய அலையென்று உரைக்கப்பட்டது. ஆசைக்கு அன்பு அங்கமாதலால், அவற்றை முறையே கடலும் அலையுமாக உருவகப்படுத்தினர். பி - ம்:—[1]வேர்க்கும். [2]அற்பினில். [3]பொற்பினது. (837)

27.—சீதையைக் கண்டவளவிலே இராவணன் வேட்கைநோய் விஞ்சிப் படும் அவத்தையை இதுமுதல் ஆறுகவிகளில் பலவாற்றாற் கூறுகிறார்.

> [1]தூங்கலில் குயில்கெழு சொல்லி [2]னும்பரின்
> ஓங்கிய வழகினா ளுருவங் காண்டலும்
> ஏங்கினன் மனநிலை யாதென் றுன்னுவாம்
> வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே.

(இ - ள்.) தூங்கல் இல் - சோர்தலில்லாத, குயில் கெழு - குயில்போல் விளங்குகிற, சொல்லின்-சொல்லோடு, உம்பரின் ஓங்கிய அழகினாள் - தேவலோகத்துமாதர்களினுஞ்சிறந்த அழகுடையளான் சீதையினது, உருவம்-வடிவத்தை, காண்டலும் - பார்த்தவுடனே, ஏங்கினன் - ஏக்கமுற்ற இராவணனது, மனம் நிலை - மனத்தின் நிலைமையை, யாது என்று உன்னுவாம் - எத்தன்மைத்தென்று எண்ணுவோம்? வீரம் தோள்கள் - (அவனது) வலிய புயங்கள், வீங்கின - (அவளைக் கண்டதனாலாகிய ஆனந்தத்தால்

முதலிற்) பூரித்தன; மெலிந்தன - (அவளைப்பெருமையாலாகிய வருத்தத்தால் உடனே) இளைப்புற்றன; (எ-று.)

இப்படிமிக்க காதற்களிப்பையும் விரகவேதனையையும் ஒருங்கே கொண்ட இராவணன் மனத்தினது சஞ்சலத்தன்மை எண்ணுதற்கும் அரியதென்பது, இதன் கருத்து. [1] தூங்கலினுருவினைச் சொல்லின் என்ற பாடத்துக்கு, தூங்கலின்-(மாயமான கூக்குரலைக் கேட்ட விசனத்தால்) வாடுதலையுடைய, உருவினை - வடிவத்தின் தன்மையை, சொல்லின் - சொல்லுமிடத்து என்க: விசனமடைந்திருக்குஞ் சமயத்தில் சீதை தேவமாதரினும் மேம்பட்டஅழகுடையளாயிருந்தாளென்றும், அப்பொழுதே அவள் வடிவத்தைக்கண்டவளவிலேஇராவணன் ஏக்கமுற்றானென்றுங் கூறியதனால், விசனமுறாத காலத்தும் மகிழ்ச்சியுறுங்காலத்தும்உள்ள சீதையின் வடிவழகின் சிறப்பு ஒப்புயர்வற்றதென்பது தானே விளங்கும்; மேல் முப்பத்திரண்டாஞ் செய்யுளின் முன்னிரண்டடிகளும் இங்கு நோக்கத்தக்கன. [1] தூங்கலிலுருவினை என்ற பாடத்துக்கு - (அழகிற் சிறிதும்) சோர்வில்லாத மேனியையென்று உரைப்பர். உம்பர் - இடவாகுபெயர். பி - ம்:—[1] தூங்கலினுருகெழு. [2] உம்பரும். (838)

28. புனமயிற் [1] சாயற னெழிலிற் பூநறைச்
சுனைமடுத் துண்டிசை முரலுந் தும்பியின்
இனமெனக் களித்துள தென்ப தென்னவன்
மனமெனக் [2] களித்தது கண்ணின் மாலையே.

(இ - ள்.) (அவன்) கண்ணின் மாலை-(சீதையைக்கண்ட) அவ்விராவணனது கண்களின் வரிசை,—புனம் மயில் சாயல்தன் எழிலின்-வனத்தில் (தன்விருப்பப்படியுள்ள) மயிலினது சாயல்போன்ற சாயலையுடைய அவளது அழகினால், பூ நறை சுனை மடுத்து உண்டு இசை முரலும் தும்பியின் இனம் என களித்து உளது - மலர்களிலுள்ள தேனின் ஊற்றினிடத்து இறங்கி அதனை நிரம்பப்பருகி இசைபாடுகிற வண்டின் கூட்டம்போலக் களிப்படைந்தது, என்பது-என்று சொல்வது, என் - என்ன சிறப்பு? அவன் மனம் என களித்தது - அவனதுமனம் களிப்புற்றதுபோலவே(கண்வரிசையும்) களிப்புற்றது; (எ - று.)

அப்பொழுது இராவணன் அடைந்த மகிழ்ச்சிக்களிப்பில் அவன் கண்ணுக்கு அவன்மனத்தை உவமைகூறினாற் கூறலாமேயன்றி மற்றெதுவும் உவமைகூறத்தக்க தன்றென்பது இதன் கருத்து. தன் இயல்பு குன்றாத மயிலென்பார், 'புனமயில்' என்றார். மயிற்சாயல் - உவமைத்தொகையன்மொழி. 'நறைச்சுனை' என்றதனால், தேனின் மிகுதி தோன்றும்; இனி, சுனைப்பூ என மொழி மாற்றி, சுனைகளிலுள்ள நீர்ப்பூக்களென்று உரைபபாருமுளர். பிராட்டியாகிய பூவின் அழகாகிய தேனைப்பருகி வண்டினம்போலக் கண்கள்பலவும் களித்தனவென்க. இராவணன் மூப்புமிக்க துறவி வேடம்பூண்ட இந்நிலையில், இருபதுகண்கள் வெளிக்குப்புலப்படாவிடினும், அவனது தானைஉருவில் இருபதுகண்கள் களிப்புறுமென்று, 'களித்ததுகண்ணின் மாலை' என்றது. பி - ம்:—[1] சாயலின், சாயர்தம். [2] களித்தன. (839)

29. சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்திவண்
மேயவண் மணிநிற மேனி காணுதற்கு
ஏயுமே யிருபதிங் கிமைப்பி னாட்டங்கள்
ஆயிர மில்லையென் [1]றவல மெய்தினான்.

(இ - ள்.) 'சேய் இதழ் தாமரை சேக்கை தீர்ந்து - சிவந்த இதழ்களையுடைய செந்தாமரை மலராகிய தங்குமிடத்தை விட்டு, இவண் மேயவள் - இவ்விடத்துவந்துள்ள திருமகளாகிய சீதையினது, மணி நிறம் மேனி - இரத்தினகாந்தியையுடைய திருமேனியழகை, காணுதற்கு - பார்த்தற்கு, இங்கு இருபது (நாட்டங்கள்) ஏயுமே - எனக்குள்ள இருபதுகண்கள் போதுமோ? இமைப்பு இல் நாட்டங்கள் ஆயிரம் இல்லை - (எனக்கு) இமையாத கண்கள் ஆயிரம் இல்லையே', என்று-என்று எண்ணி, அவலம்எய்தினான்-துன்பத்தையடைந்தான், (இராவணன்); (எ-று.)

"உமையா ளொக்கு மங்கைய ருச்சிக் கரம்வைக்குங், கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணா, ரிமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணே, லமையாதென்றா ரந்தரவானத் தவரெல்லாம்" என்று பாலகாண்டத்தில் வந்த செய்யுள் இங்குக் காணத்தக்கது. வேதத்திற்கூறியுள்ளபடி ஆயிரங்கண்ணனான புருஷோத்தமனே பிராட்டியழகை முற்றுங் காண்டற்கு உரியா னென்பது இதனாற் போதரும். 'சேயிதழ்த்தாமரைச் சேக்கை தீர்ந்திவண் மேயவள்'— ஸ்ரீவால்மீகிபகவானும் "பத்மஹீநாமிவச்ரியம்" என்று கூறியுள்ளார். மணிநிறமேனி.- மாணிக்கமென்னும் இரத்தினம் போலச் செந்நிறமுடைய வடிவுமுமாம். ஏகாரம் - எதிர்மறை. "கண்ணுளார் நுங்காதலரொழிக காம மீங்கென" என்ற சிந்தாமணியில் 'ஈங்கு' என்பது - தன்மையிடத்தை யுணர்த்தினாற்போல, இச்செய்யுளில் 'இங்கு' என்பது - தன்மையிடத்தையுணர்த்திற்று; ஆகவே, என்னிடத்து என்று பொருளாம்: நச்சினார்க்கினியர் அச்சிந்தாமணியுரையில் 'ஈங்குத் தன்மையையுணர்த்துதல் "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறினும்' என்றதும், "செலவினும் வரவினும்" என்ற தொல்காப்பியச்சூத்திரவுரையில் 'ஈங்கு முதலியன - தன்மைக்கண்ணும், ஆங்குமுதலியன - படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன' என்றதும் அறியற்பாலன. பி - ம்:—[1] அல்லல். (840)

30. அரைகடை யிட்டமுக் கோடி யாயுவும்
[1]புரைதபு தவத்தின்யான் படைத்த போதுமே
நிரைவளை [2]முன்கையி னிறைந்த [3]நங்கைதன்
கரையறு நன்னலக் கடற்கென் றுன்னினான்.

(இ - ள்.) நிரை வளை முன் கையில் நிறைந்த - வரிசையாக வளையல்கள் முன்னங்கையில் நிரம்பியுள்ள, நங்கைதன் - (இந்தப்)பெண்ணரசியினது, கரை அறு நல் நலம் கடற்கு - கரையில்லாத சிறந்த இன்பமாகிய கடலில் முற்றும் திளைத்தாடுதற்கு, புரைதபு தவத்தின் யான் படைத்த - குற்றமற்ற தவத்தையுடைமையால் நான் பெற்ற, அரை கடை இட்ட முக்கோடி ஆயுஉம் போதுமே - மூன்றரைக்கோடி

யாயுளும் போதுமா? [போதாதன்றே], என்று உன்னினன்-என்று எண்ணினன்; (எ - று.)

அரைகடையிட்ட முக்கோடி - அரையென்னும்எண்ணைக்கடையில் சேர்க்கப்பெற்ற மூன்றுகோடி யென்க. இராவணன் கைலாயம் பெயர்த்தெடுத்த காலத்தில் சிவபிரானருளால் மூன்றரைக் கோடி ஆயுளைப் பெற்றனனென்பது பிரசித்தம். அதற்குக்காரணமான நல்வினையை 'புரைதபு தவம்' என்று பாராட்டிக் கூறினன்.

இவளது இன்பக்கடலை நுகர எனது மூன்றரைக்கோடி ஆயுளும் அமையுமா? [அமையாது] என்று பின்வருந் தீங்குக்குச் சூசகமாகும் அமங்கலப்பொருள் இராவணன் வார்த்தையில் அமைந்ததென்ப. இனி இராவணனது ஆயுள் அரைக்கோடியிலேயே முடிதல் காண்க. சிவபிரான் முதலில் மூன்றரைக்கோடி கொடுத்ததை உடனே திருமால் அரைக்கோடியாம்படி சூழ்ச்சி செய்திட்டன னென்பது ஐதிகியம். பி - ம்:—[1]பரை. [2]முன்கையிங்நின்ற. [3]நங்கையின். (841)

31\. தேவரு மவுணருந் தேவி மாரொடும்
கூவல்செய் தொழிலினர் குடிமை செய்திட
மூவுல கமுமிவர் முறையி னாளயான்
[1]ஏவல்செய் துய்குவெ னினியென் [2]றுன்னினன்.

(இ - ள்.) இனி—, தேவர்உம் - தேவர்களும், அவுணர்உம் - அசுரர்களும், தேவிமாரொடுஉம் - (தங்கள் தங்கள்) மனைவியருடனே, கூவல் செய் தொழிலினர் - (வேண்டியபொழுதெல்லாம்) அழைத்துக் கூறப்படும் குற்றேவல் தொழில்களைச் செய்யும் வேலைக்காரர்களாய், குடிமை செய்திட - குடியடிமை செய்யும்படி [குலத்தோடு அடிமைபூணுமாறு], மூ உலகம்உம் - மூன்று லோகங்களையும், இவர் முறையின் ஆள - இந்தப் பெண்ணரசியார் நீதியாக அரசாள, யான் ஏவல் செய்து உய்குவென் - நான் (இவர்க்குக்) குற்றேவல் செய்து வாழ்வேன், என்று உன்னினன்-என்றுங் கருதினன்; (எ - று.)

இவரைத் தனது தானத்தில் அரசியாராக்கி இவர்க்குத்தான் அடிமைபூணுதலே தனது பிறவிப்பய னென்று எண்ணின னென்க. குடிமை - பரம்பரையாகச்செய்யும் அடிமை. இவர் - உயர்வுப்பன்மை. பி-ம்:—[1]ஏவலின்வைகுவென். [2]எண்ணினன். (842)

32\. உளைவுறு துயர்முகத் தொளியி தாமெனின்
முளையெயி றிலங்கிடு முறுவ லென்படும்
தளையவிழ் குழலிவட் கண்டு தந்த[1]வென்
இளையவட் களிப்பெனென் னரசென் றெண்ணினன்.

(இ - ள்.) உளைவுஉறு-வருத்தம் மிக்க, துயர்-துக்கம்நேர்ந்த சமயத்திலுள்ள, முகத்து ஒளி-முகத்தின் பிரகாசமே, இது ஆம் எனின் - இத்துணைச் சிறப்பினதாயிருக்குமென்றால், முளை எயிறு இலங்கிடும்-(மகிழ்ச்சிநேர்ந்த காலத்துச்) சிறிது வெளித்தோன்றுகிற பற்கள்விளங்கப்பெற்ற, முறுவல்-புன்னகைசெய்யும் அழகு,

என்படும்-எத்தன்மைத்தாமோ? தளை அவிழ் குழல் இவள்-(சூடப் பட்ட மலரரும்புகள்) கட்டவிழ்ந்து மலர்தற்கு இடமான கூந்தலை யுடைய இவளை (நாடி), கண்டு தந்த-கண்டு (எனக்குக்) காட்டிக் கொடுத்த, என் இளையவட்கு-என் தங்கையான சூர்ப்பணகைக்கு, என் அரசு அளிப்பென் - எனது அரசாட்சியைக் கொடுப்பேன், என்று எண்ணினன்-என்றும் நினைத்தான்; (எ - று.)

கீழ், சீதைக்கு அரசாட்சியைக் கொடுத்துத் தான் அடிமை பூணுதலையே பேருகக் கருதியவன், உடனே அக்கருத்துமாறி, அச்சீதையின் தன்மையை என்தங்கை அறிந்து வந்து எனக்குக் கூறிய உபகாரத்துக்குப் பிரதியுபகாரமாக என்னரசை அவளுக் குக் கொடுத்தல்வேண்டுமென்று எண்ணினனென்பதாம். முன்னி ரண்டடியில் பொருளைப் பாராட்டியது, தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி யாம். இராமனுக்கு வருத்தம் நேர்ந்ததாக அறிந் ததனு லாகிய சோகத்தால் சீதை குழல்சோரநின்றன ளென்பது பட 'தளையவிழ்குழல்' என்றதாகவுங் கொள்ளலாம். தளையவிழ் குழல் இவண் கண்டு எனப்பிரித்து,இம்மங்கையை இவ்விடத்துக் கண்டு எனினும் அமையும்; இவ்வுரைக்கு, தளையவிழ்குழல் என் பது - அன்மொழித்தொகையாய், சீதையைக் குறிக்கும். சீதை யைத் தான்பெறுதல் நிச்சயமென்ற துணிவினுல் 'தந்த' என்ருன். பி - ம்:—[1] அவ். (843)

## 33.—துறவிவடிவுகொண்ட இராவணனுக்குச் சீதை வருக வென்று உபசாரமொழி கூறல்.

**ஆண்டையா னனையன வுன்னி யாசைமேன்**
**மூண்டெழு சிந்தனை முறையி லோன்றனைக்**
**காண்டலுங் கண்ணினீர் துடைத்த கற்பினுள்**
**ஈண்டெழுந் தருளுமென் [1]றினைய கூறினுள்.**

(இ - ள்.) ஆண்டையான் - அவ்விடத்தில் வந்தவனுகி, அனையன உன்னி - அத்தன்மையான விஷயங்களை நினைத்து, ஆசைமேல் மூண்டு எழு சிந்தனை - ஆசை மேன்மேல் அதிகப்பட் டுக்கிளரும் மனத்தையுடைய, முறை இலோன் தனை - முறைகேட ஞன இராவணனை, காண்டலும் - பார்த்தவுடனே, கண்ணின் நீர் துடைத்த கற்பினுள் - (தன்) கண்ணீரைத் துடைத்துக்கொண்ட பெருங் கற்பினளான சீதை, (அவனை நோக்கி), 'ஈண்டு எழுந்தரு ளும் என்று - இங்கே எழுந்தருளுக' என்று, இனைய கூறினுள் - இத்தன்மையவான வார்த்தைகளைச் சொன்னுள்; (எ - று.)

முறையிலோனை, கற்பினுள், அவன் கருத்து உணராமையால் சிறந்த ஒருமுனிவ னென்றெண்ணி, இயல்பில் உபசரிக்கலுற்றன ளென்க. கற்பினுள்மேல் அவன் ஆசைகொள்ளுதல் தகாதென் பதும், அத்துராசை சிறிதும்பயனுரு தென்பதும் விளங்க, 'முறை யிலோன்' என்றும், 'கற்பினுள்' என்றும் கூறினுர். பி - ம்:— [1] இனிய. (844)

## 34.—சீதை தந்த ஆசனத்தில் அம்முனிவன் வீற்றிருத்தல்.

[1]ஏத்தின [2]ளெய்தலு மிருத்தி ரீண்டென
வேத்திரத் தாசனம் [3]விதியி னல்கினள்
மாத்திரி தண்டயல் [4]வைத்த வஞ்சனும்
பூத்தொடர் சாலையி னிருந்த போழ்தினே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) ஏத்தினள் - (இவ்வாறு) முகமன்கூறிய சீதை, எய்தலும் - (அவன் அருகில்) வந்தவளவிலே, ஈண்டு இருத்திர் என - 'இதில் வீற்றிருக்க' என்றுசொல்லி, வேத்திரத்து ஆசனம்- பிரம்பினாற் செய்யப்பட்டதோர் ஆசனத்தை, விதியின் நல்கினள் - முறைப்படி கொடுத்தாள்; (கொடுக்க), மா திரிதண்டு அயல் வைத்த- பெருமைபொருந்திய திரிதண்டத்தை (த் தான் வீற்றிருக்குமிடத் துக்கு)ப் பக்கத்திலே வைத்த, வஞ்சன்உம்-கபடசந்நியாசியான இராவணனும், பூ தொடர் சாலையின் - அழகு பொருந்திய அப்பர்ண சாலையில், இருந்த போழ்தின்-வீற்றிருந்த சமயத்திலே,—(எ-று.)— "மலைகளும் மரங்களும் நடுங்கின" என வருங் கவியோடு முடியும்.

வேத்திராசனம், முனிவர்க்குஉரியது. விதி - துறவியை உப சரிக்கும் முறை. 'ஆசனம் விதியினல்கினள்' எனவே, அர்க்கியம் பாத்தியம் ஆசமநீயம் முதலியவற்றையுங் கொடுத்தமை பெறப் படும். வஞ்சன் - பொய்வேடத்தான். பூத்தொடர்சாலை-பூமாலை கள் அலங்காரமாகத் தொங்கவிடப்பெற்ற சாலையுமாம். பி - ம்:— [1]ஏத்தினள். [2]ஏத்தலும். [3]விருப்பின். [4]வைத்து. (845)

## 35.—அப்பொழுது சராசரங்கள் அஞ்சிநடுங்கல்.

நடுங்கின மலைகளு மரனு நாவவிந்து
அடங்கின பறவையும் விலங்கு மஞ்சின
படங்குறைந் [1]தொதுங்கின பாம்பும் பாதகக்
கடுந்தொழி லரக்கனைக் காணுங் கண்ணினே.

(இ - ள்.) மலைகள்உம் மரன்உம் நடுங்கின - (அப்பொழுது) மலை களும் மரங்களும் நடுக்கமுற்றன; பாதகம் கடு தொழில் அரக்கனை காணும் கண்ணின் - பாவத்துக்குக்காரணமான கொடிய செய்கையை யுடைய அவ்விராக்கதனைக் காணுங் கண்களினால் [கண்ட பொழுது], பறவைஉம் நா அவிந்து அடங்கின- (பலவாறுகூவுந் தன்மையவான) பக்ஷிகளும் (தமது) நாக்கு அடங்கி ஒடுங்கின; விலங்குஉம் அஞ்சின - மிருகங்களும் அச்சமுற்றன; பாம்புஉம் - நாகங்களும், படம் குறைந்து ஒதுங்கின - படமொடுங்கிப் பதுங்கின; (எ - று.)

மலைகள்முதலியவை இவனது கொடுமையை உள்ளபடி உணர்ந்த தனால் இங்ஙனம் குழப்பமடைந்தன வென்க. துஷ்ட ஜந்து வான பாம்பும் படங்குறைந்து ஒதுங்கின வென்றதனால், இராவணன் அதனினுங் கொடியானென்பது பெறப்படும். இனி,

இவ்வ உற்பாதமெனக் கொள்ளலும் ஒன்று. பி - ம்—[1] ஒடுங்கின. (846)

## 36.—அம்முனி சீதையைநோக்கி இப்பர்ணசாலைக்கு உரியவர் யார்? என்றல்.

இருந்தவன் யாவதிவ் விருக்கை யீங்குறை
[2]யிருந்தவர் [2]யாவர்நீர் யாரை யென்றலும்
விருந்தின ரிவ்வழி விரகி லாரெனாப்
பெருந்தடங் கண்ணவள் பேசன் மேயினாள்.

(இ - ள்.) இருந்தவன் - (வேத்திராசனத்தில்) வீற்றிருந்த அவ் விராவணன், 'இ இருக்கை யாவது - இந்த இருப்பிடம் யாது? ஈங்கு உறை இரு தவர் யாவர் - இவ்விடத்துவசிக்கிற பெரிய தவத்தை யுடைய முனிவர் யார்? நீர் யாரை - நீர் யார்?' என்றலும் - என்று வினாவியவளவிலே,—பெரு தட கண்ணவள் - மிகப்பெரிய கண்களை யுடைய சீதை, இ வழி விருந்தினர் விரகு இலார் எனா - (இவர்) இவ் விடத்துக்குப் புதியவர், கபடமில்லாதவர்' என்று எண்ணி, பேசல் மேயினாள் - விடைகூறத் தொடங்கினாள்; (எ - று.)

'பெருந்தடங்கண்ணவள் பேசல் மேயினாள்' என்றதனால், அவனை முனிவனென்று கருதியதனால் அவனைக் காண நாணித் தலைவணங்கியில்லாது அவனை நோக்கிப் பேசினாளென்பது பெறப்படுமென்ப. இருந்தவன் - இறந்தகால வினையாலணையும் பெயர். இருந்தவர்-பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி. யாரை யென்பதில், ஐ - சாரியை. விரகிலார் என்பதற்கு - (நம்மை) அறியாதவரென்றும் பொருள்கொள்ளலாம்; விரகு - அறிவு. "விருந்தின ரிவ்வழி விரவிலாரென" என்ற பாடத்துக்கு, (இப்பொழுது) அதிதியாய்வந்த இவர் (முன்புஒருபொழுதும் இங்கு) வந்தில்லாதவர் என்று எண்ணி யென்று உரைக்க. பி - ம்:—[1] அருந்தவன், இருந்தவன். [2] யாவனீ, யாவனீர். (847)

## 37.—அதற்குச் சீதை விடைகூறல்.

தயரதன் றொல்[1]குலத் தலைவன் றம்பியோடு
உயர்குலத் தன்னைசொ லுச்சி யேந்தினான்
அயர்[2]வில திவ்வழி யுறையு மன்னவன்
பெயரினைத் தெரிகுதிர் பெருமையீ ரென்றாள்.

(இ - ள்.) 'பெருமையீர் - பெருமையுள்ளவரே! தயரதன் தொல் குலம் தலைவன் - தசரதசக்கரவர்த்தியினது பழமையான குலத்துக்குத் தலைவராயுள்ளவர், உயர் குலத்து அன்னை சொல் உச்சி ஏந்தினான் - உயர்ந்தகுலத்திற் பிறந்த (தனது) தாயினது வார்த்தையைத் தலைமேற்கொண்டு, தம்பியோடு - (தம்) தம்பி யுடனே, அயர்வு இலது இ வழி உறையும் - வருத்தமின்றி இவ் விடத்து இனிதுவசிக்கிறார்; அன்னவன் பெயரினை தெரிகுதிர் - அவருடைய பெயரை அறிவீர்', என்றாள் - என்று சொன்னாள், (பிராட்டி); (எ - று.)

கணவன் பெயரைக் கூறலாகா தென்பது முறைமை யாதலால், 'அன்னவன் பெயரினைத் தெரிகுதிர்' என்றாள்: 'அன்னவன் பெயரினைத் தெரிகுதிர் பெருமையீர்' என்றது, தாசரதியின் பெயர், முனிவர் கூட்டத்தில் பிரசித்தமாய்த் தெரியு மென்ற கருத்தாலு மாம். உயர்குலத்து அன்னைசொல் உச்சியேந்துதல்-சிறந்த கேகய குலத்திற் பிறந்த மாற்றாந்தாயான கைகேயியின் கட்டளையைத் தலை மேற்கொண்டு நன்குமதித்தல். தங்களை நாடு துறந்து காடு செல்லும் படி செய்தவளை 'உயர்குலத்து அன்னை' என்று சிறப்பித்துச் சொன்னதனால், சீதையினது மிக்க நற்குணம் புலப்படும். பெருமை - தவமகிமை. பி - ம்:—[1]குலத்தனையன். [2]இலன். (848)

## 38.—அம்முனிவன் சீதையை 'நீர் யார்மகள்?' என்றல்.

> கேட்டனென் கண்டிலென் கெழுவு கங்கைநீர்
> நாட்டிடை யொருமுறை நண்ணி னேன்மலர்
> வாட்டடங் கண்ணினீர் [1]யாவர் மாமகள்
> காட்டிடை யரும்பகல் கழிக்கின் றீரென்றான்.

(இ - ள்.) 'கேட்டனென் - (நீர் சொன்ன செய்தியைக்) கேட் டுள்ளேன்; கண்டிலென் - (அவர்களை நான்) கண்டேனில்லை: கெழுவு கங்கை நீர் நாட்டிடை ஒருமுறை நண்ணினேன் - நிறைந்த கங்கை யாற்றின் நீர் பாயப்பெற்ற கோசல நாட்டிற்கு ஒருமுறை சென்றுள் ளேன்; காட்டிடை அரு பகல் கழிக்கின்றீர் - வனத்திலே கழித்தற் கரிய நாட்களைக் கழிக்கின்ற, மலர் வாள் தடகண்ணினீர்-கருங்குவளை மலரையும் வாட்படையையும்போன்ற பெரியகண்களையுடைய நீர், யாவர் மா மகள் - யாருடைய திருமகள்?' என்றான் - என்று வினவி னான்; (எ-று.)

இனிய நகரத்திற் பலவகை இன்பநுகர்வோடு கழித்தற்குரிய இளமைப் பருவத்தைக் கொடிய இவ்வனத்திற் கழிக்கின்றீரே! இது தகுதியோ? என்பது தோன்ற, 'காட்டிடை யரும் பகல் கழிக்கின்றீர்' என்றதாகக் கொள்ளலாம். கோசல நாட்டின் எல்லை, கங்காநதி வரையிலும் போலும். முன்பு இராவணன் திக்கு விஜயஞ் செய்த காலத்தில் அயோத்திமாநகர் சேர்ந்து அங்கு அப்பொழுது அரசாண்ட சூரியகுலத்து அரசனான அநரணியனைப் போரிற்புடைத்து வீழ்த்திப் பரிகசித்து, அவன் குலத்துப் பிறக்கும் இராமனாற் கொல்லப்படும்படி சாபம்பெற்று மீண்டன னென்றவரலாற்றை உத்தரகாண்டத்திற் காணலாம். கண்ணின் நீர் எனப் பிரித்து, கண்களையுடைய நீரென்று பொருள் கொள்ளினுமாம். நீர் யாவர் மாமகள்-இடவழுவமைதி. பி-ம்:—[1]யாவன். (849)

## 39.—அதற்குச் சீதை விடைகூறல்.

> அனகமா நெறிபட ரடிக ளும்மலால்
> நினைவதோர் தெய்வம்வே றிலாத நெஞ்சினன்
> [1]சனகன்மா மகள்பெயர் சனகி காகுத்தன்
> மனைவியா னென்றனண் மறுவில் கற்பினாள்.

(இ-ள்.) 'அனகம் மா் நெறிபடர் அடிகள் - குற்றமில்லாத சிறந்த சன்மார்க்கத்தில் ஒழுகுகிற முனிவரே! நும் அலால் நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன் - (முனிவர்களாகிய) உங்களையே யல்லது வேறொரு தெய்வத்தை நினைத்தலில்லாத மனத்தையுடையவனாகிய, சனகன்-சநக மகாராசனது, மா மகள்-மூத்தமகளாவேன், (யான்); பெயர் சனகி - (என்) பெயர் ஜாநகி யென்பது; காகுத்தன் மனைவி யான் - நான் காகுத்தனது மனையாள்', என்றனள-என்று மறுமொழி சொன்னாள், மறு இல் கற்பினாள்-குற்றமில்லாத பதிவிரதா தருமத்தை யுடையளான சீதை;

சனகன் பரமஞானிகளான முனிவர்களிடத்துத் தெய்வபக்தி யுள்ளவனாதலாலும், சீதை இராவணனை முனிவனென்றே கருதியதனாலும், 'நும்மலால் நினைவதோர் தெய்வம் வேறிலாத நெஞ்சினன்' என்றாள். 'மாமகள்' என்றது, இளையமகளான ஊர்மிளையை விலக்குதற்கு. சநகனது மகளென்னும் பொருள்பற்றித் தத்திதாந்தமாக வந்த ஜாநகியென்ற வடசொல், சனகியென விகாரப்பட்டது. காகுத்ஸ்தன் - வடசொல்; ககுத்ஸ்தனென்னும் அரசனது மரபில் தோன்றியவன்; இங்கும் பிராட்டி கொழுநனைப் பெயராற்குறியாது காகுத்தனென வமிசநாமத்தாற் குறித்தமை காண்க. காகுத்தனென்ற திருநாமம், இந்திரனை வாகனமாகக் கொண்டு சென்று அசுரரையழித்து அமரரையளித்த அரசனது மரபினனென்ற சிறப்பை விளக்கும். ந + அகம் = அநகம்: வடமொழிப்புணர்ச்சி. அநகம் ஆம் நெறி யென்றும் பிரிக்கலாம்.
பி - ம்:—[1] சனகன் மாமடமகள். (850)

## 40.—சீதை இராவணசந்நியாசியை வினவல்.

அவ்வழி யணையன வுரைத்த வாயிழை
வெவ்வழி வருந்தினிர் விளைந்த மூப்பினிர்
இவ்வழி யிருவினை கடக்க வெண்ணினிர்
எவ்வழி நின்று[1]மிங் கெய்தி னீரென்றாள்.

(இ - ள்.) அ வழி அனையன உரைத்த - அவ்விடத்து [அப்பொழுது] அவ்வார்த்தைகளைச் சொன்ன, ஆய் இழை - ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையுடையளான சீதை, (அந்தஇராவணசந்நியாசியை நோக்கி), 'விளைந்த மூப்பினிர் - முதிர்ந்த முதுமைப்பருவத்தை யுடையவரும், இரு வினை கடக்க எண்ணினிர் - (நல்வினை தீவினை யென்னும்) இருவகை வினைகளையும் வெல்லநினைத்தவரும் ஆகிய நீர், வெம் வழி வருந்தினிர் - வெவ்விய காட்டுவழியில் நடந்து வருத்தமுற்று, இ வழி-இப்பொழுது, எ வழிநின்றும் இங்கு எய்தினீர்-எவ்விடத்தினின்றும் இவ்விடத்துக்கு வந்தீர்?' என்றாள்-என்று வினவினாள்; (எ - று.)

'மிகவும் மூப்புடையவரும் இருவினை கடக்கத் தவநெறியைக் கைக்கொண்டவருமாகிய நீர், இந்த வெவ்விய காட்டு நெறிக்கு எவ்விடத்தினின்று வருகிறீர்?' என்று சீதை வினவினளென்க. 'வெவ்வழி வருந்தினிர்' என்பதற்கு-கடிய தவவொழுக்கத்தால்

இளைப்புற்றீரென்றும், 'இவ்வழி இருவினை கடக்க வெண்ணினிர்' என்பதற்கு - இத்துறவற வழியால் கருமங்களை யொழிக்கக் கருதினீரென்றும் உரைப்பினும் அமையும். "இருள்சே ரிருவினையுஞ் சேரா" என்ற திருக்குறளும், 'நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் 'இருவினையுஞ் சேரா' என்று கூறினார்' என்ற அதன் உரையும், 'இருவினை கடக்கவெண்ணினிர்' என்றவிடத்து உணரற்பாலன. ஆயிழை-வினைத்தொகையன்மொழி. பி - ம்:—[1] இன்று. (851)

## 41.—இதுமுதற் பத்துக் கவிகள் - அதற்கு அவன் கூறும் விடை.

> இந்திரற் கிந்திர னெழுத லாகலாச்
> சுந்தர னான்முகன் மரபிற் றோன்றினான்
> அந்தரத் தோடுமெவ் வுலகு மாள்கின்றான்
> மந்திரத் தருமறை வைகு நாவினான்.

(இ - ள்.) இந்திரற்கு இந்திரன் - (தேவர்கள் தலைவனான) இந்திரனுக்கும் மேற்பட்ட தலைவனும், எழுதல் ஆகலா சுந்தரன் - (சித்திரத்தில்) எழுதுதற்குங் கூடாத அழகியவனும், நான்முகன் மரபில் தோன்றினான்-பிரமனது குலத்திற் பிறந்தவனும், அந்தரத்தோடு உம் எ உலகு உம் ஆள்கின்றான்-மேலுலகத்துடனே எல்லாவுலகங்களையும் ஆளுகின்றவனும், மந்திரத்து அருமறை வைகும் நாவினான் - மந்திரங்களோடு கூடிய அருமையான வேதங்கள் தங்கிய நாவையுடையவனுமாய், (ஒருவன் உளன்); (எ-று.)

'இந்திரற்கு இந்திரன்' என்றதில், போகாதி அனுபவங்களில் இந்திரனினும் மேம்பட்டவனென்ற கருத்தும் விளங்கும். செல்வ நுகர்ச்சியும், பேரழகும், உயர்குடிப்பிறப்பும், அரசாட்சிச் சிறப்பும், கல்விப்பெருமையும் முறையே கூறப்பட்டன. அடுத்த செய்யுள்களுக்கும் இங்ஙனமே கண்டுகொள்க. செல்வமும் அழகும் மகளிர் மனத்தைக் கவர்தலிற் சிறந்தன என்று அவற்றை முதலிற் கூறி, அரக்கனென்று இகழ்ந்திடாமைப் பொருட்டுக் குலப்பெருமையை அதன்பின் கூறி, நாடு துறந்து காடு புகுந்து திரியும் கொழுநனிடம் வெறுப்படையவேணுமென்ற கருத்தால் சகலலோகஸாம்ராச்சியத்தை அதன்பின் கூறி, இத்தனை சிறப்போடு கல்விச்சிறப்பு முடையானென்பான் இறுதியில் அதனையுங் கூறினான். பிரமகுமாரரான புலஸ்தியரது புத்திரனான விச்சிரவசின் மகன் இராவணனென அறிக. அந்தரமென்ற வானத்தின் பெயர் - அங்குள்ள உலகத்துக்கு இடவாகுபெயராம். (852)

> 42\. ஈசனாண் டிருந்தபே ரிலங்கு மால்வரை
> ஊசிவே ரொடும்பறித் [1]தெடுக்கு மூற்றத்தான்
> ஆசைகள் சுமந்த[2]பே ரளவில் யானைகள்
> பூசல்செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான்.

(இ - ள்.) ஈசன்-சிவபிரான், இருந்த-எழுந்தருளியுள்ள, பேர் இலங்கு மால் வரை - பேர் பிரசித்தமான பெரிய கைலாசகிரியை,

ஆண்டு-அக்காலத்தில் [முன்புஒருபொழுது], ஊசிவேரொடுஉம் பிரதானமான வேருடனே [அடியோடு], பறித்து எடுக்கும் பெயர்த்து எடுத்த, ஊற்றத்தான்-வலிமையையுடையான்; ஆசைகள் சுமந்த-திக்குக்களைத் தாங்கிக்கொண்டிருக்கிற, பேர் அளவு இல் யானைகள் - பெருமையில் அளவில்லாத யானைகளினுடைய, பூசல் செய் மருப்பினை - தாக்கிப் பெரும்போர் செய்த தந்தங்களை, பொடிசெய்-துகளாகச்செய்த, தோளினன் - தோள்களையுடையவன், (அவன்); (எ-று.)

இக்கவியில் அவனது பேராற்றல் விளங்கும். ஈசன் ஆண்டிருந்த என எடுத்து, சிவபிரான் ஆட்சிகொண்டுள்ள எனினும் அமையும். ஊசிவேர்-நுண்ணிதாய்க் கீழூன்றியுள்ள தலைமைவேர். ஆசைகள் சுமந்த யானை - திக்கஜம். பி-ம்:—[1]உருட்டும். [2]பேரமரி யானைகள். (853)

43. நிற்பவர் கடைத்தலை [1]நிறைந்து [2]தேவரே
சொற்பகு மற்றவன் பெருமை சொல்லுங்காற்
கற்பக முதலிய நிதியங் [3]கையன
[4]பொற்பக மானநீ ரிலங்கைப் பொன்னகர்.

(இ-ள்) கடைத்தலை நிறைந்து நிற்பவர் - (அவனது) தலைவாயிலில் (ஏவல்செய்தற்குத்) திரண்டு காத்துநிற்பவர், தேவரே - தேவர்களே; மற்று அவன் பெருமை சொல்லுங்கால் - மற்றும் அவனது பெருமையைச் சொல்லப்புகுமிடத்து, சொல் பகும் - சொற்கள் (ஆற்றலின்றி) வலிகுறையும்; கற்பகம்முதலிய நிதியம்- கற்பகவிருக்ஷம் முதலிய தேவலோகத்து ஐசுவரியங்களெல்லாம், கையன-(அவனுக்கு) வசப்பட்டுள்ளன; பொற்பு அகம் - (அவனது) அழகியஉறைவிடம், மானம் நீர் இலங்கை பொன் நகர் - பெருமையையுடைய கடனீர் சூழ்ந்த பொன்மயமான இலங்காபுரி; (எ - று.)

தேவர்களினும் மேம்பட்டவன் அவனென்பதும், அவன் பெருமை கூறற்கரிதென்பதும், அவனது தெய்விகச் செல்வமும் அவனது நகரின் பாதுகாப்பும் இதில் வெளியாம். அவன்பெருமையைச் சொல்லுதற்குச் சொற்கள் போதாவாதலால் அவை பின்னிடும் என்பது, இரண்டாமடியின்கருத்து. ஆன நீர் என்றும் எடுக்கலாம்; மிக்கநீ ரென்னும் பொருளது. பி-ம்:—[1]நிறைந்த. [2]தேவரைச். [3]காமர்சூழ். [4]பொற்பகமானந்தேர், பொற்பதிமான நீர், பொற்பதிவிமானந்தேர். (854)

44. [1]ஏனைய திலோத்தமை முதல வேழையர்
வானகந் துறந்துவந் தவன்றன் மாட்சியால்
ஊனமி லடைப்பைகால் வருட லொண்செருப்பு
ஆனவை முதற்றொழி லவர தாகுமே.

(இ-ள்.) அவன் தன் மாட்சியால் - அவனது ஆட்சிப் பெருமையால், வானகம் துறந்து வந்து-(தமது இருப்பிடமான) சுவர்க்கலோகத்தைவிட்டு வந்து, (அவனுக்கு), ஊனம்இல் அடைப்பை -

குறைபாடில்லாத அடைப்பையை (ஏந்துதலும்), கால் வருடல் - கால்பிடித்தலும், ஒள் செருப்பு ஆனவை-ஒள்ளிய செருப்பு (இடுத லும்), முதல்-முதலிய, தொழில் ஊழியங்கள், ஏல் நகை திலோத் தமை முதல ஏழையர் அவரது ஆகும் - அழகமைந்த புன்சிரிப்பை யுடைய திலோத்தமை முதலிய தேவமாதர்களுடையனவாம்;(எ-று.)

அழகு முதலியவற்றிற் சிறந்த திலோத்தமை முதலிய தேவ மாதர்களையெல்லாம் குற்றேவல் கொள்ளுந் தரத்தவனென அவன் சிறப்பை யெடுத்துக்கூறியவாறு. மேனகையென்ற பெயர் மோனைப் பொருத்தம் நோக்கி ஏனகையெனத் திரிந்ததென்னலுமாம். பிரம தேவன் தான் பலநாளாகப் படைத்த பல மகளிரது தேகசௌந் தரியத்தினின்று எள்ளளவு எள்ளளவாகச் சாரத்தை யெடுத்துத் திரட்டி ஒருபெண்ணைப் படைக்க, அந்தச் சிறந்த பெண்ணுக்குத் திலோத்தமையென்பது காரணப்பெயராயிற்று; திலம் - எள், உத்தமை - மேலானவள். 'ஊனமில்' என்ற அடைமொழியால் அடைப்பையை யேந்தல் முதலியவற்றை இவர்கள் தமக்கு ஓர் குறையாகக் கொள்ளாது பெருமையாகக் கொள்கின்றன ரென்பதும், இக் குற்றேவல் செய்யுஞ்சிறப்பு மற்றையோர்க்குப் பெறுதற்கரியது என்பதும் தோன்றும். 'முதலவேழையர்' என்றது - உருப்பசி, அரம்பை முதலியோரையும், 'முதல்தொழில்' என்றது - உடைவாள தாங்கல் சாமரைவீசுதல் முதலியவற்றையும் உணர்த்தும்; "உருப்பசி யுடைவா ளெடுத்தனள் தொடரமேனகை வெள்ளடையுதவச், செருப் பினைத்தாங்கித் திலோத்தமை செல்ல வரம்பையர் குழாம் புடை சுற்ற" எனச் சுந்தரகாண்டத்து வருஞ் செய்யுள் ஈண்டுக் கருதத் தக்கது.

ஏழையரென்பது - மகளிர்க்கு இயல்பைவிளக்கும் ஒருபெயர்; இனி, அவர்நிலைமையை நோக்கி இரங்கியதாகவுங் கொள்ளலாம். அடைப்பை, செருப்பு என்ற பெயர்களின்பின் ஏந்துதல் இடுதல் என்ற ஏற்ற வினைகள் வருவிக்கப்பட்டன. 'அவரது' என்று ஒருமை யாற் கூறினது பன்மையொருமை மயக்கத்தின் பாற்படும்; தனித் தனி அவரதென்க: 'அவரவாகும்' என்று பன்மையாகப் பாடமோது வாரும் உளர். வந்து என்ற வினையெச்சம்-ஏந்துதல், வருடல், இடு தல் என்ற தொழிற்பெயர்களைக்கொள்ளும். பி - ம்:—[1]மேனகை. இதுவும் அடுத்த செய்யுளும் பலபிரதிகளிற் காணப்படவில்லை. (855)

45. சந்திர னிரவியென் பவர்க டாமவன்
சிந்தனை வழிநிலை திரிவர் தேசுடை
இந்திரன் முதலிய வமர ரீண்டவன்
கந்தடு கோயிலின் காவ லாளரே.

(இ - ள்.) சந்திரன் இரவி என்பவர்கள் - சந்திரசூரியரென்று சிறப்பித்துச் சொல்லப்படுபவர்கள்,அவன் சிந்தனை வழி நிலை திரிவர் - (தங்கள் இயற்கை நிலைமை மாறி) அவனது நினைப்பின்படியே சஞ்சரிப்பார்கள்; தேசு உடை இந்திரன் முதலிய அமரர் - திவ்விய காந்தியையுடைய இந்திராதி தேவர்கள், ஈண்டு அவன் கம் தடு கோயி லின் காவலாளர் - இவ்வுலகத்தில் அவனது மேகத்தைத்தடுக்கிற

[மிகவுயர்ந்த] அரண்மனையின் காவலாட்களாயிருக்கிறார்கள்; (எ-று.) —தாம் - அசை; தேற்றமும், உயர்வு சிறப்புமாம். ஈற்றேகாரம் - தேற்றம்.

கந்தடு கோயில் என்பதற்கு - விண்ணுலகத்தாரை (உள்நுழைய வொட்டாது) தடுக்கிற இராசமாளிகையென்று உரைப்பாருமுளர். கந்து அடு கோயில் எனப்பிரித்து, யானைகட்டுந்தறிகள் பொருந்திய அரண்மனை யென்றும், (மதயானைகள்) கட்டுத்தறியை முறிக்கப் பெற்ற அரண்மனையென்றும் உரைத்தலும் உண்டு. தேசு உடை என்பதற்கு-தமக்கு இயல்பாகவுள்ள ஒளி குன்றிய என்று உரைப்பர் ஒருசாரார். (856)

46. பொன்னக ரத்தினும் பொலங்கொ ணாகர்தம்
தொன்னக ரத்தினுந் தொடர்ந்த மாநிலத்து
எந்நக ரத்தினு மினிய வீண்டவன்
நன்னக ரத்தன நவையி லாதன.

(இ - ள்.) பொன் நகரத்தின்உம் - பொன்மயமான சுவர்க்க லோகத்தைக்காட்டிலும், பொலம் கொள் நாகர்தம் தொல் நகரத்தின்உம் - அழகுகொண்ட நாகசாதியாரது பழமையான (பாதாள லோகத்திலுள்ள போகவதி யென்னும்) நகரத்தைக் காட்டிலும், தொடர்ந்த மா நிலத்து எ நகரத்தின்உம் - (அவ்வுலகங்களால் மேலும் கீழும்) தொடரப்பட்ட பெரிய பூலோகத்திலுள்ள எல்லா நகரங்களைக் காட்டிலும், இனிய - அழகிய, ஈண்டு அவன் நல்நகரத்தன - இவ்வுலகத்திலுள்ள அவனது சிறந்த இலங்காபுரியிலுள்ள பொருள்களெல்லாம், நவை இலாதன - யாதொரு குற்றமுமில்லாதன; (எ - று.)

மூவுலகத்திலுள்ள குற்றமற்ற இனிய பொருள்கள் யாவும் இப்பொழுது அவனது இலங்கைநகரத்தில் உள்ளனவென்றும், அவனது இலங்காபுரியிலுள்ள குற்றமற்ற பொருள்கள் மூன்று உலகங்களிலுமுள்ள பொருள்களெல்லாவற்றினும் இனிமையானவை யென்றும் கருத்து நிகழ இச்செய்யுளுக்குப் பதவுரை கூறலுமாம். (857)

47. தாளுடை மலருளான் றந்த வந்தமில்
நாளுடை வாழ்க்கைய ணரி பாகத்தன்
வாளுடைத் தடக்கையன் வாரி வைத்தவெங்
கோளுடைச் சிறையினன் குணங்கண் [1]மேன்மையான்.

(இ - ள்.) தாள் உடை மலர் உளான் தந்த - நாளத்தையுடைய தாமரைமலரில் வாழ்கிற பிரமதேவன் கொடுத்த, அந்தம் இல் நாள் உடை வாழ்க்கையன்-அழிவில்லாத ஆயுள்நாளோடு கூடிய வாழ்வை யுடையவன்; நாரி பாகத்தன் வாள் உடை தட கையன் - மனைவியை இடப்பாகத்திற்கொண்ட சிவபிரான்கொடுத்த வாட்படையை யேந்திய பெரிய கையையுடையவன்; வாரி வைத்த வெம் கோள் உடை

சிறையினன்-ஒருங்குபிடித்துவைத்த வெவ்விய கிரகங்களைக்கொண்ட சிறைச்சாலையையுடையவன்; குணங்கள் மேன்மையான் - எல்லாக் குணங்களாலும் மேன்மையையுடையவன், (அவன்); (எ-று)

மலருளான் தந்த வாழ்க்கை யென இயையும். இராவணன் இளமையில் அரிய பெரிய தவவேள்விகள் புரிந்து எளியமனித ரொருவரொழிய மற்றையெந்தப் பிராணிகளாலும் தான் அழிவு படாத வரத்தைப் பிரமனிடம் பெற்றன னென்பதையும், கைலை யைப் பெயர்த்தெடுத்த காலத்தில் சாமவேத கீதம் பாடிச் சிவ பிரானை மகிழ்வித்து அப்பெருமானிடத்தினின்று சந்திரஹாஸ மென்னும் வாளைப் பெற்றன னென்பதையும், திக்குவிசயகாலத் தில் சூரியசந்திராதியர் பலரைச் சிறைவைத்துப் பேர்பெற்றன னென்பதையும் உத்தரகாண்டத்திற் பரக்கக்காணலாம். கீழ் மாரீசன் வதைப்படலத்தில் "ஆன்ற, நாளெலாம் புடைதயங்க நாமநீரிலங்கை யிற்றூன் வாரியிட்ட, கோளெலாங்கிடந்த நெடுஞ்சிறை" என்றது காண்க. கோளுக்கு வெம்மை-தமது சஞ்சாரத்தால் அனைத்துயிர்க் கும் ஊழ்வினைப்பயனை நுகர்வித்தல்: இனி, வெம்மையைச் சிறைக்குக் கூட்டினுமாம். பி - ம்:—[1]மேயினன். (858)

48. வெம்மைதீ ரொழுக்கினன் விரிந்த கேள்வியன்
செம்மையோன் மன்மதன் [1]திகைக்குஞ் செவ்வியன்
[2]எம்மையோ ரனைவரு [3]மிறைவ ரென்றெணும்
மும்மையோர் பெருமையு முற்றும் பெற்றியான்.

(இ - ள்.) (மற்றும் அவன்),—வெம்மை தீர் ஒழுக்கினன் - கொடுமையில்லாத நல்லொழுக்கமுடையவன்; விரிந்த கேள்வியன் - பரந்த நூற்கேள்வியையுடையவன்; செம்மையோன் - நடுவுநிலைமை யுள்ளவன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன் - காமனுங் கண்டு மதி தடுமாறும்படியான காளைப்பருவமுடையவன்; எம்மையோர் அனைவர்உம்-எவ்வுலகத்தி லுள்ளாரும், இறைவர் என்றுஎணும் - (தம்தமக்குத்) தலைவரென்று எண்ணப்பெற்ற, மும்மையோர் - திரிமூர்த்திகளுடைய, பெருமைஉம்-மகிமை முழுவதும், முற்றும் - நிறைந்த, பெற்றியான்-தன்மையை யுடையவன்; (எ-று.)

மன்மத னென்பதில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால்தொக் கது. செம்மை - சற்குணமும், செவ்வி - கட்டழகுமாம். எம்மை யோர் என்பதில், 'மை' விகுதி - இடப்பொருளது: இம்மை அம்மை உம்மை மறுமை என்றவற்றிற்போல. மும்மையோர் - மூவர், இதில், மை - பகுதிப்பொருள்விகுதி. நான்காம் அடி - திரிமூர்த்திகளின் பெருமையும் ஒழியும்படியான பெருமையையுடையவனென்றும் பொருள்படும். பி - ம்:—[1]திசைக்கும். [2]எம்மனோர். [3]இறைவரே யெனும். (859)

49. அனைத்துல கினுமழ கமைந்த நங்கையர்
எனைப்பல ரவன்றன தருளி னிச்சையோர்
[1]நினைத்தவ ருருகவு முதவ நேர்கிலன்
மனக்கினி யாளொரு [2]மாதர் நாடுவான்.

(இ - ள்.) அனைத்துஉலகின்உம் - எல்லாவுலகங்களிலுமுள்ள, அழகு அமைந்த நங்கையர் - அழகமைந்த மாதர்கள், எனை பலர்-மிகப்பலர், அவன் தனது அருளின் இச்சையோர் - அவனது அருளைப் பெறுதலில்விருப்பமுள்ளவர்கள்; அவர் - அம்மாதர்கள், நினைத்து-(எப்பொழுதும் அவனையே) சிந்தித்து, உருகஉம்-உருகுவதைக் கண்டும், உதவ நேர்கிலன் - (அவர்கட்குத் தனது இன்பத்தைக்) கொடுக்க உடன்படாதவனாய், (அவன்), மனக்கு இனியாள் ஒரு மாதர் நாடுவான் - (தன்) மனத்துக்கு இனியவளாகிய ஒரு மங்கையைத் தேடிக்கொண்டிருக்கிறான்; (எ-று.)

எனைப்பலர்-எத்தனையோ பலர். காதல் என்ற பொருளுள்ள மாதர் என்ற உரிச்சொல் - ஆகுபெயராய், விருப்பத்துக்கு உரிய மகளின்மேல் நின்றது; ஆகவே, மாதர் என்ற பெயர் - ஒருமை பன்மை இரண்டிலும் வழங்குமென்க. இனி, ஈற்றடிக்கு - தன்மனத்துக்கு இனியவளான ஒரு பெண்ணினது காதலைத் தான் விரும்புவான் என்று பொருள்கொள்ளினும் அமையும். பி - ம்:—[1] நினைத்தனர். [2] மாதை. (860)

50. ஆண்டையா னரசுவீற் றிருந்த வந்நகர்
வேண்டியான் சிலபக [1] லுறைய வேண்டினேன்
[2] நீண்டனெ னிருந்தவற் பிரிந்த நெஞ்சினேன்
மீண்டனெ னென்றனன் வினைய [3] முன்னுவான்.

(இ - ள்.) ஆண்டையான் - அத்தன்மையனாகிய அவன், அரசு வீற்றிருந்த - அரசாட்சி செய்துகொண்டு மிக்கசிறப்புற்றிருக்கப் பெற்ற, அ நகர்-அந்த இலங்காநகரத்தை, வேண்டி-விரும்பி, யான்-நான், சில பகல் உறைய வேண்டினேன் - சிலகாலம் (அவ்விடத்தில்) வசிக்கவிரும்பினவனாய், நீண்டனென் இருந்து-(அங்கு) நெடுங்காலம் இருந்து, (பின்பு), அவன் பிரிந்த நெஞ்சினேன்-அவனைப் பிரிந்த மனமுடையவனாய், மீண்டனென் - இங்குவந்தேன், என்றனன்-என்று சொன்னான்; (யாவனெனில்), — வினையம் உன்னுவான் - (சீதையைக் கொள்ளுதற்கேற்ற) தந்திரத்தைக் கருதுபவனான இராவண சந்நியாசி; (எ - று.)

'நீர் எங்குநின்று வருகிறீர்?' என்று பிராட்டி கேட்ட வினாவிற்கு விடைகூறுபவன், அவள்மனத்தை மாறுபடுத்தக் கருதி, தனது சிறப்பைப் பிறன்கூறுமாறுபோலப் பலவாற்றால் விரித்துக்கூறி, தன்னூர் இன்னதென்றும் தன்பெயர் இன்னதென்றும் வெளிப்படையாகக்கூறாது, 'இலங்கையினின்றுவந்தேன்' என்றனனென்க: குணங்கள் மேன்மையானான அவனைப்பிரிந்த பிரிவு என் நெஞ்சைக் கவற்றுகின்றதென்பான் 'அவற்பிரிந்த நெஞ்சினேன்' என்றான்; தான் இப்போது இராவணவுருவத்தைக்கொள்ளாது துறவிவேடத்தை மேற்கொண்டிருத்தலால், இவ்வாறு கூறினானென்றும் கொள்க. வினையம் - வஞ்சனைச்சூழ்ச்சி. முன்னுவான் எனப் பதம் பிரிப்பினும் இப்பொருளேபடும். 'மீண்டனென்' என்றதனால், முன் இத்தண்டகாரணியமே தனக்கு இட மென்று நினைக்கக்கூறினானுமாம். [2] நீண்டனெனிருந்தவர்ப் பிரிந்தநெஞ்சினேன் என்ற பாடம்,

இலங்கையிற் சிலகாலம் வசிக்க விரும்பிச்சென்றிருந்த யான் பெருந் தவமுடைய (இத்தண்டகாரணியவாசிகளான) முனிவர்களை நெடுங் காலம் பிரிந்ததனாலாகிய சிந்தையை யுடையவனாய் மீண்டு இங்கு வந்தேனென்று பொருள்பட்டுச் சிறப்பதை உணர்க. பி - ம்:—[1]உறைதன்மேவினேன். [2]நீண்டநாளிறையவர்ப்பிரியநெஞ்சிலேன், நீண்டனெனிருந்தவற்பிரிய நெஞ்சிலேன்,நீண்டநாளிருந்தவர்ப் பிரிய நெஞ்சிலேன். [3]முற்றுவான். (861)

## 51.—அம்முனியை நோக்கிச் சீதை 'நீவிர் அரக்கரூரில் வாழ்வானேன்?' என்றல்.

வேதமும் வேதிய ருருளும் வெஃகலாச்
[1]சேதனை மன்னுயிர் தின்னுந் தீவினைப்
பாதக வரக்கர்தம் பதியின் வைகுதற்கு
ஏதுவென் னுடலமு மிகையென் றெண்ணுவீர்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உடலம்உம் மிகை என்று எண்ணுவீர் - (முற்றத் துறத்தலால்) உடம்பையும் மிகுதியென்று நினைக்குந் தன்மையுள் ளவரே! வேதம்உம் வேதியர் அருள்உம் வெஃகலா-வேதங்களையும் அவ்வேதங்கட்குஉரிய அந்தணர்களது கருணையையும் விரும்பா மல், சேதனை மன் உயிர் தின்னும்-உணர்ச்சியுடைய மிக்க பிராணி களைத் தின்னுகிற, தீவினை-கொடிய செய்கையையுடைய, பாதகம் அரக்கர்தம்-பாவிகளான இராக்கதர்களது, பதியின் - ஊரில், வைகுதற்கு-(நீர்) தங்குதற்கு, ஏது என்-காரணம் என்ன? (எ - று.)

சீதை, மாதவர்வாழும் வனத்து வாழாமல் பாதகவரக்கரிருக் கும் பதியில் ஏன் இருந்தீரென வினவினளென்க: எல்லாப்பொரு ளின்கண்ணும்பற்றற்றுப் பிறப்பை யொழித்து முத்தியைப்பெறு தலையே பிறவியெடுத்ததன் பயனென்று உணர்ந்து அதனை மேற் கொண்ட முனிவர்கள் அம்முத்திபெறும்முயற்சிக்குக்கருவியாய்த் தம்உயிர்க்கு ஆதாரமாய்நின்ற உடம்பையும் அதன் இழிவும் துன் பத்தொடர்பும் நோக்கிப் பாரமென்று கருதி வெறுத்தல் இயல்பு ஆதலால், 'உடலமும் மிகையென்றெண்ணுவீர்' என விளித்தாள். மிகை - அதிகப்படியானது. இங்கு, "மற்றுந் தொடர்ப்பாடெவன் கொல் பிறப்பறுக்க, லுற்றார்க் குடம்பும் மிகை" என்ற திருக்குற ளும், 'இவ்வுடம்புகளால் துன்பம் இடையறுது வருதலையுணர்ந்து இவற்றுனைய கட்டினை இறைப்பொழுதும் பொறுது வீட்டின் கண்ணே விரைதலின், 'உடம்பும் மிகை' என்றார். இன்பதுன்பங் களான் உயிரோடு ஒற்றுமை யெய்துதலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும்; இதனுன், அகப்பற்று விடுதல் கூறப்பட்டது' என்ற அதன் விசேடவுரையும் உணர்தற்கு உரியன. 'உடலமும் மிகையென்றெண்ணுவீர்' என்றதனால், மற்றும் இயைபில்லன வற்றின் தொடர்பை மிகையென்றெண்ணுதல் தானே பெறப்படும். உயிர்-உடம்புக்கு இலக்கணை. 'சேதனை மன்னுயிர் தின்னும்' என்றது, அரக்கர்கள் உணர்விற்குறைபட்ட விலங்குகளையேயன்றி அதில் மேம்

பட்ட மனிதர்களையும் உணர்வில் மேம்பட்ட முனிவர்களையும் இன்னும் இயல்பின ரென்பதைக் காட்டும். பி - ம்:—[1]சேதனமன், சேதனரின். (862)

52. வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்
[1]புனற்றிரு நாட்டிடைப் புனித ரூர்புக
[2]நினைக்கிலி ரறநெறி நினைக்கி லாதவர்
இனத்திடை வைகினி ரென்செய்தீ ரென்ருள்.

(இ - ள்) வனத்திடை - காட்டிலே, மாதவர் மருங்கு - மிக்க தவமுடைய முனிவர்கள் பக்கலிலே, வைகலிர் - தங்காதொழிந்தீர்; புனல் திருநாட்டிடை-நீர்வளமுள்ள சிறந்த நாடுகளிலேயுள்ள, புனிதர் ஊர்-பரிசுத்தகுணமுள்ள நல்லவர்களுடைய ஊரிலே, புக - செல்ல, நினைக்கிலிர் - எண்ணுகின்றீரில்லை; அறம் நெறி நினைக்கிலாதவர் இனத்திடை வைகினிர்-தருமமார்க்கத்தை நினைத்தலுஞ் செய்யாத அரக்கர்களுடைய கூட்டத்தின் நடுவிலே தங்கினீர்; என் செய்தீர் - யாது செய்தீர்? என்ருள்-என்று (பிராட்டி இராவண சந்நியாசியை) வினவினுள்; (எ-று.)

'என்செய்தீர்' என்றது-யாதுபயன் கருதி யாதுதொழில் செய்தீரென்ற வினுப்பொருளோடு, நீவிர்செய்தது மிக்க அநீதி யென்பதையும் காட்டும். பி - ம்:—[1]புனத்திரு. [2]நினைத்திலிர். (863)

வேறு.

## 53.—அதற்கு அம்முனிவன் விடைகூறுதல்.

**மங்கையஃ துரைத்தல் கேட்ட வரம்பிலான் [1]மறுவிற் றீர்ந்தாள்**
**வெங்கண்வா ளரக்க [2]ரென்ன வெருவுவாள் மெய்ம்மை [3]நோக்கித்**
**திங்கள்வாண் [4]முகத்தி னுயத் [5]தேவரிற் றீய ரல்லர்**
**எங்கள்போ லியர்க்கு நல்லார் நிருதரே போலு மென்ருன்.**

(இ - ள்.) மங்கை அஃது உரைத்தல் - இளம்பருவமுடைய பெண்ணிற் சிறந்த சீதாதேவி அவ்வார்த்தை சொல்லுதலை,கேட்ட—, வரம்பு இலான் - வரம்புகடந்தொழுகுபவனுன இராவண முனிவன்,—மறுவில் தீர்ந்தாள் - குற்றங்களினின்றுநீங்கினவளும், 'வெம் கண் வாள் அரக்கர் - கொடிய கண்களையும் வாட்படையையுமுடைய இராக்கதர்கள்', என்ன - என்றுசொல்ல, வெருவுவாள் - (அரக்கர்க்கு) அஞ்சுபவளுமானசீதையின், மெய்ம்மைநோக்கி - உண்மைத் தன்மையைப்பார்த்து, 'திங்கள் வாள் முகத்தினுய்-சந்திரன் போன்ற ஒள்ளியமுகத்தையுடையவளே! நிருதர் - இராக்கதர், அ தேவரின் தீயர் அல்லர் - அந்தத்தேவர்கள் போலக் கொடியவர்களல்லர்; எங்கள் போலியர்க்கு நல்லார்ஏ போலும் - (மற்றும்) எங்கள்போல்வார்க்கு நல்லவரேயாவர்', என்ருன் - என்று சொன்னுன்; (எ - று.)

'தேவரிற்றீயரல்லர்' என்பது - தேவர்களைக்காட்டிலுந் தீயவரல்ல ரென்றும் பொருள்படும். [5]'தேவரிற்றீயரன்னர்' என்ற பாடத்துக்கு - தேவர்கள்விஷயத்திற் கொடியவர் அவ்வரக்கரென்க.

'எங்கள் போலியர்க்கு நல்லார் நிருதரே போலும்' என்றது, மற்றை யோர்திறத்து அவர்கள் கொடியவராயினும் சாதுக்களான எங்கள் திறத்தில் நல்லோராயநிற்பரென்றவெளிப் படைப்பொருளேயும்,எங்களுக்கு அரக்கரே நல்லவ ரென்ற உள்ளுறை பொருளேயு முடையதாம். போலும் - ஒப்பில்போலி; உரையசை. வெங்கண் - கொடியதன்மையுமாம். [1]மறுவிற்றீர்ந்தார், வெங்கண் வாளரக்கரென்ன வெருவலம் மெய்ம்மைநோக்கின்' என்ற பாடத்துக்கு - வெங்கண்வாளரக்கர், மறுவில் தீர்ந்தார் - குற்றங்களில் மிக்கவர், என்ன - என்றுஎண்ணி, வெருவலம் - (அவர்க்கு) அஞ்சமாட்டோம்; மெய்ம்மை நோக்கின், எங்கள்போலியர்க்கு நல்லார் நிருதரே போலும்; (அவர்கள்) தேவரிற் றீயரல்லர் என்று உரைப்பர்: அன்றி, மறுவிற்றீர்ந்தார் என்ற பாடத்திற்கே, வெங்கண் வாளரக்கர், மறுவில்தீர்ந்தார் - குற்றங்கள் நீங்கியவர் என்ற காரணத்தால், வெருவலம் என்று உரைத்தலுமுண்டு. பி-ம்:—[2]என்று வெருவுவர். [3]நோக்கின். [4]முகத்தினுளே. [5]தேவரிற்றீயரன்றே.

இதுமுதல் இருபது கவிகள் - கீழ்ப்படலத்து 14 - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (864)

### 54.—சீதை, 'தீயவரைச் சேர்ந்தவரும் தீயவரே' எனல்.

**சேயிழை யன்ன சொல்லத் தீயவர்ச் சேர்தல் செய்தார்**
**தூயவ ரல்லர் சொல்லிற் றொன்னெறி [1]தொடர்ந்தோ ரென்றாள்**
**மாயவல் லரக்கர் வல்லர் [2]வேண்டுரு வரிக்க வென்பது**
**ஆயவ ளறித றேற்றா ளாதலி னயலொன் றெண்ணாள்.**

(இ - ள்.) அன்ன சொல்ல - அப்படிப்பட்ட சொற்களை (அவ்வரக்கமுனி) கூற, சேய் இழை ஆயவள் - செவ்விய ஆபரணங்களையுடைய சீதையாகிய அவள், மாயம் வல் அரக்கர் வேண்டு உரு வரிக்க வல்லர் என்பது அறிதல் தேற்றாள் ஆதலின் - மாயையுடைய கொடிய இராக்கதர்கள் (தாம்) வேண்டிய வடிவத்தை (அம்மாயையாற்) கொள்ளவல்லவ ரென்பதை(த் தான்) அறியாளாதலால், அயல் ஒன்று எண்ணாள் - வேறாக ஒன்றுங்கருதாதவளாய், 'தீயவர் சேர்தல் செய்தார் தூயவர் அல்லர் - கொடியவரை நட்புச் செய்தவர்கள் தூய்மையுடையவராகார்: சொல்லின்-சொல்லுமிடத்து, தொல் நெறி தொடர்ந்தோர் - பழைய (அத்தீ) நெறியில் தொடர்புடையவரேயாவர்', என்றாள் - என்றுசொன்னாள்; (எ - று.)

அரக்கன் இங்ஙனம் தான் வல்ல மாயையால் முனிவடிவங் கொண்டு வந்துளா னென்று அறியாமல் அவனை மெய்ம்முனிவனென்று கருதி அவனிடத்து யாதொருசங்கையுங்கொண்டிலளாதலின், சீதை, தீயவரைச்சேர்ந்தோர் அத்தீநெறியை மேற்கொள்பவராவரே யென்றனளென்பதாம். தொன்னெறி தொடர்ந்தோர் - தொன்றுதொட்டு வருகிற நல்லொழுக்கவழியைக் கொண்ட முனிவர்களுள், தீயவரைச் சேர்ந்தவர் தூயவரல்லர் என்று உரைகொள்ளினும் அமையும்: அன்றி, தூயவர் தொன்னெறிதொடர்ந்தோர் தீயவர்ச் சேர்தல் செய்தார் அல்லர் என்று இயைத்து

உரைப்பினுமாம். "தீயகந்த முள்ளதொன்றைச் சேர்ந்திருப்ப தொன்றற்குத், தீயகந்தமேறுந் திறமதுபோல்—தீய, குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக், குணமதுவேயாஞ் செறிவு கொண்டு", "மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு, மினந் தூய்மை தூவா வரும்" என்பன காண்க. சேயிழை - பண்புத் தொகையன்மொழி. பி - ம்:—[1]தொடர்ந்தசொல்லான். [2]என்பதை மறுவொன்றில்லாள். (865)

## 55.—அதற்கு இராவணன் கூறும் சமாதானம்.

அயிர்த்தன ளாகு மென்றோ ரையுற வகத்துக் கொண்டான்
பெயர்த்தது துடைக்க வெண்ணிப் பிறிதுறப் [1]பேச லுற்றான்
[2]மயக்கறு முலக மூன்றின் வாழ்பவர்க் கனைய வல்லோர்
இயற்கையிற் [3]றிரியி னல்லா லியற்றலா நெறி [4]யென் னென்றான்.

(இ - ள்.) (இராவணன்), அயிர்த்தனள் ஆகும் என்று ஓர் ஐயுறவு அகத்து கொண்டான் - (கீழ்ச் சீதை சொன்னவார்த்தையால் அவள் தன்னைச்) சங்கித்தனளென்று ஒருசந்தேகத்தைத் தன்மனத்திற்கொண்டு, அது பெயர்த்து துடைக்க எண்ணி-அச் சந்தேகத்தைத் தீர்த்தொழிக்கக் கருதி, பிறிது உற பேசல்உற்றான் - வேறொருவகையாகப் பேசத்தொடங்கினவனாய்,— 'மயக்கு அறும் உலகம் மூன்றின் வாழ்பவர்க்கு-தடுமாற்றமில்லாதமூன்று உலகங்களிலும் வாழ்பவர்கட்கெல்லாம், அனைய வல்லோர் இயற்கையின் திரியின் அல்லால் - வல்லமையுடைய அவ்வரக்கர்களது இயல்போடு தழுவி நடந்தா லல்லாமல், இயற்றல் ஆம்நெறி என் - (அதனினும் வேறாகச்) செய்யத்தக்கநல்வழி என்ன இருக்கிறது? என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

முன்பு 'எங்கட்குநல்லவர் அரக்கரே' என்றவன், அதனால் தன்னிடத்துச் சீதை சங்கைகொண்டன ளென்று கருதி அதனை யொழிக்கும்பொருட்டு, 'மிகவலிய அவ்வரக்கரைத் தழுவி நடத்தலேயொழிய எவ்வுலகத்தார்க்கும் வேறு தப்பும்வழி யில்லை'என்று, முன்பு தான் சொன்னதற்குச் சிறிது வேறுபாடாகக் கூறினனென்க. ஐயுறவு - தொகுத்தல். பின்னிரண்டடிகட்கு வேறு வகையுரைப்பது சிறவாது. [2]'மயக்கரும்' என்னும் பாடத்துக்கும் பொருள் இதுவே. பி- ம்:—[1]உரைக்கல். [3]நிற்பது. [4]ஏது. (866)

## 56.—சீதை, 'இனி இராமனால் அரக்கர் அழிய உலகு இன்புறும்' எனல்.

திறந்தெரி வஞ்ச னச்சொற் செப்பலுஞ் செப்ப மிக்காள்
[1]அறந்தரு வள்ள லீண்டிங் கருந்தவ முயலு நாளுள்
மறந்தலை திரிந்த வாழ்க்கை யரக்கர்தம் [2]வருக்கத் தோடும்
இறந்தனர் முடிவர் பின்ன ரிடரிலை யுலக மென்றாள்.

(இ - ள்.) திறம் தெரி வஞ்சன்-(அவளது) மனநிலையை ஊகித்தறியும் வஞ்சகனான அவ்விராவணன், அ சொல் செப்பலும்-அவ் வார்த்தையைக் கூறியவளவிலே, - செப்பம் மிக்காள் - நன்மைக்

குணம்மிக்கவளான பிராட்டி, 'அறம் தரு வள்ளல் - தருமத்தை வளர்க்குந்தன்மையுள்ள வரையாதருள்பவனுன சக்கரவர்த்தித் திருமகன், ஈண்டு இங்கு அரு தவம் முயலும் நாளுள் - இவ்விடத்தில் இப்பொழுது அரியதவத்தைச் செய்கின்ற நாள்களிலே, மறம் தலை திரிந்த வாழ்க்கை அரக்கர் தம் வருக்கத்தோடும் இறந்தனர் முடிவர்-பாவவழியிற் சஞ்சரிக்கிற வாழ்க்கையையுடைய இராக்கதர்கள் தங்கள்குலத்துடனே மாண்டொழிவார்கள்: பின்னர்-பின்பு, உலகம் - உலகத்துக்கு, இடர் இலை - துன்பமில்லை,' என்றுள்-என்று சொன்னுள்; (எ - று.)

நல்லோரைக்காத்து அல்லோரைக்கடிந்து அறத்தை நிலைநிறுத்தும்பொருட்டே திருவவதரித்த மூர்த்தியாதலால், 'அறந் தருவள்ளல்' எனப்பட்டான்; அவ்வள்ளல் இங்குத் தவம்முயலு நாளில் அரக்கரை வர்க்கத்தோடும் ஒழித்து விடுவானுதலால் இனி உலகுக்கு இடரில்லையென்றுளென்க. தருதல் - வளர்த்தலென்னும் பொருளதாதலை "தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்" என்ற விடத்துங் காண்க. மறத்தலையெனற்பாலது, மறந்தலையென மெலிந்தது. செப்பம்—செம்மை: கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை. பி-ம்:—[1] அறைந்தனள். [2] வருக்கத்தோடு பிறந்தவர் முடிவர்பின்னை. (867)

## 57.—அதற்கு இராவணன் 'மனிதர் அரக்கரைக் கொல்ல வல்லரோ?' எனல்.

[1] மானவ ளுரைத்த லோடு மானிட ரரக்கர் தம்மை
மீனென மிளிருங் கண்ணுய் வேரற வெல்வ ரென்னின்
யானையி னினத்தை யெல்லா மிளமுயல் கொல்லும் பின்னுங்
கூனுகிர் மடங்க [2] லேற்றைக் குருளைமான் கொல்லு மென்றுன்.

(இ- ள்.) மான் அவள் - மான்போன்ற அச்சீதை, உரைத்தலோடும் - (இவ்வாறு) சொன்னவுடனே, (இராவண சந்நியாசி அவளைநோக்கி), 'மீன் என மிளிரும் கண்ணுய் - கயல்மீன்போலப் பிறழ்ந்து விளங்குகிற கண்களையுடையவளே! மானிடர் - மனிதர்கள், அரக்கர் தம்மை-இராக்கதர்களை, வேர் அற வெல்வர் என்னின்- அடியோடு அழியும்படி கொன்று வெல்வார்களென்றால், யானையின் இனத்தை எல்லாம் இள முயல் கொல்லும் - யானைக்கூட்டங்களையெல்லாம் ஒரு சிறுமுயல் கொன்றுவிடும்; பின்உம் - மற்றும், கூன் உகிர் மடங்கல் ஏற்றை குருளை மான் கொல்லும் - வளைந்த நகங்களையுடைய ஆண்சிங்கங்களை ஒரு மான்குட்டி கொன்றுவிடும்', என்றுன் - என்று சொன்னுன்; (எ - று.)

என்றது, யானையை முயலும், சிங்கத்தை மானும் கொல்லுதல் நிகழாச் செயலாவதுபோல, அரக்கரை மனிதர் கொல்லுதலும் என்றும் நிகழாது என்பதாம்: இங்ஙனங் கூறுவது அணியியலில் பொய்த்தற்குறிப்பணி யெனப்படும்: சீதைக்கு, மான் மருண்ட பார்வையில் மாத்திரமே யன்றி வனத்திலிருத்தலாலும் இங்கு உவமையாம். மானவள் - உவமத்தொகைநிலைத்தொடர்; இனி, தனி

மொழியாகக்கொண்டு, மானத்தைப் பாதுகாக்கும் நோக்கமுடையவளென்றும் பொருள்கொள்ளலாம்; அன்றி மானமென்றது - ஊடலில் நிகழுங் கோபமுமாம்; இக்காரணத்தால் வடமொழியில் பெண்களுக்கு 'மாநிநீ' என்று ஒருசிறப்புப்பெயர் வழங்குதல் காண்க. அன்றி, மானவனென்று மனிதனுக்குப் பெயருண்மையால், அதன் பெண்பாலாகக்கொண்டு, மானுடமாது என்று உரைத்தலுமொன்று. பால காண்டத்தில் "மானவமற்றுங் கேளாய்" என்றவிடத்தில் இராமனை மானவனென்றதுங் காண்க. 'மீனென மிளிருங் கண்ணாய்' என்று விளித்தது, அவளுடைய கண்ணின் நோக்கழகில் தான் ஈடுபட்ட தன்மையைப் புலப்படுத்தியவாறு. பி - ம்:—[1] ஆனவள். [2] ஏற்றின் குழுவை. (868)

## 58.—அதற்குச் சீதை 'விராதன் கரன் முதலியோரை இராமன் கொன்றதை நீர் அறியீரோ?' எனல்.

**மின்றிரண் டனைய பங்கி விராதனும் வெகுளி [1] பொங்கக்**
**கன்றிய மனத்து வென்றிக் கரன்முதற் கணக்கி லோரும்**
**பொன்றிய பூச லொன்றுங் கேட்டிலிர் போலு மென்றாள்**
**அன் [2] றவற் கடுத்த துன்னி மழைக்கணீ [3] ரருவி சோர்வாள்.**

(இ - ள்.) 'மின் திரண்டு அனைய - மின்னல் திரண்டாற்போல விளங்குகின்ற, பங்கி - செம்பட்டமயிரையுடைய, விராதன்உம் - விராதனென்னும் அரக்கனும், வெகுளி பொங்க கன்றிய மனத்து - (சூர்ப்பணகையின் பரிபவத்தைக்கண்டு) கோபம் அதிகப்படத் தவித்த மனத்தையுடைய, வென்றி - வெற்றியுள்ள, கரன்முதல் கணக்கு இலோர்உம் - கரன்முதலாகிய அளவிறந்த அரக்கர்களும், பொன்றிய - (இராமபிரானால்) இறந்தொழிந்த, பூசல் ஒன்றுஉம் - போர்ச்செய்தியைப்பற்றி ஒருசிறிதும, கேட்டிலிர்போலும் - (நீர்) கேள்விப்பட்டீரில்லைபோலும்,' என்றாள் - என்றுசொன்னாள்: (இங்ஙனம் சொல்லும்பொழுது அப்பிராட்டி), அன்று அவற்கு அடுத்தது உன்னி - அக்காலங்களில் அவ்விராமனுக்கு (அவ்வரக்கர்களால்) நேர்ந்த இடையூறுகளைச் சிந்தித்து, மழை கண்நீர் அருவி சோர்வாள் - மழைப்பெருக்குப்போல(த் தனது) கண்களினின்று நீர்ப்பெருக்கைச் சொரிபவளானாள்; (எ - று.)

விராதனும் கரன்முதலியோரும் அழிவடைந்த செய்தியைக் கூறும்பொழுது, அவர்களால் முதலிலுண்டான இடையூறுகளைக் கருதிக் கண்ணீர்பெருக்கியது, பெண்களுக்கு இயற்கைக்குணமாகிய மடப்பத்தினாலென்க. இனி, அன்று அவற்கு அடுத்தது உன்னி என்பதற்கு - மான்பின் சென்ற அன்றைத்தினத்தில் அவ்விராமபிரானுக்கு நேர்ந்த துன்பத்தை நினைத்து என்று உரைத்து, அன்றைக்கு மானைத்தொடர்ந்து சென்றவிடத்து இராமனுக்குப் பிராணபாயம்நேர்ந்ததென்று சங்கித்துள்ளாளாதலால் அதுபற்றிக் கண்ணீர்சொரிந்தன ளென்றல் சிறவாது. பி - ம்:—[1] பொங்கி. [2] அவர்க்கு. [3] ஆலி. (869)

## 59.—மற்றும் சீதை, 'அரக்கரனைவரும் விரைவில் அழிவர்' எனல்.

வாளரி வள்ள [1]றன்ஞ லிலங்கைமா நிருத ரெல்லாம்
கேளொடு [2]மறியு மாறும் வானவர் கிளரு மாறும்
நாளையே காண்டி ரன்றே நவையிலீ ருணர்கி லீரோ
மீளருந் தருமந் தன்னை வெல்லுமோ பாவ மென்ருள்.

(இ - ள்.) 'வாள் அரி வள்ளல்தன்ஞல் - ஒளியையுடைய சிங்கம் போன்ற இராமபிரானுல், இலங்கை மாநிருதர் எல்லாம் - இலங்கையிலுள்ள பெரிய அரக்கர்கள் யாவரும், கேளொடு மறியும்ஆறுஉம் - உறவினத்துடனே அழியும் விதத்தையும், வானவர் கிளரும் ஆறுஉம் - (அதனுல்) தேவர்கள் உயர்வடையும் விதத்தையும், நாளை காண்டிர் அன்றே - நாளைக்கே பார்ப்பீரன்றே! மீள் அரு தருமந் தன்னை - நீங்குதற்கு அரியதான தருமத்தை, பாவம் வெல்லும்ஓ - பாவம் வென்றுவிடுமோ? நவை இலீர் - குற்றமற்ற முனிவராகிய நீர், (இதனை), உணர்கிலீர்ஓ - அறியீரோ?' என்ருள் - என்றுஞ் சொன்ஞள், (சீதை); (எ -று.)

இனி, 'விரைவில்தானே அரக்க ரொழிந்திட, வானவர் கிளர்ச்சி பெறுவர்: முனிவராகியநீர், இச்செயலை அறியகில்லீரோ?' என்று சீதை விஞவின ளென்க, 'தருமந்தன்னை வெல்லுமோ பாவம்' என்றது - பாவிகளாகிய அரக்கர் நல்லொழுக்கமுடைய முனிவர் முதலியோரை வெல்லும் ஆற்றலுடையராக என்றும் இரார் என்றவாறு; தருமசொரூபியான ஸ்ரீராமனைப் பாவிகளாகிய அரக்கர் வெல்லமாட்டார் என்றவாறுமாம். ஈற்றடியிற் கூறிய பொதுப்பொருள் முதல் மூன்றடிகளிற் கூறிய சிறப்புப்பொருளைச் சமர்த்தித்தது - வேற்றுப்பொருள்வைப்பணி. 'நாளையே' என்றது, விரைவுதோன்ற. அன்றே - தேற்றம். கீழ அம்முனிவன் "மயக்கறு மூலக மூன்றின் வாழ்பவர்க் கனைய வல்லோர், இயற்கையிற் றிரியி னல்லா லியற்றலாம் நெறியென்" என்றதைக் கண்டித்துக் கூறுவாள், 'நவையிலீருணர்கிலீரோ' என்ருள். 'வெல்லுமோ தீவினை யறத்தைமெய்ம்மையால்,' "தீமை நன்மையைத் தீர்த்த லொல்லாது" என மேல் சுந்தரகாண்டத்தும் வருவன ஒப்புக் காண்க. பி - ம்:—[1]சொன்ன மான் கணம் நிருதரன்ஞர், சொன்ன வாஞயரரக்க ராஞேர். [2]மடியுமாறும். (870)

## 60.—அதுகேட்டு இராவணன் கோபங்கொள்ளுதல்.

[1]தேனிடை யமுத ளாய வன்னமென் [2]சிலசொன் மாலை
தாஞடைச் செவிக ளூடு [3]தவழுறத் தளிர்த்து வீங்கும்
ஊஞடை யுடம்பி ஞஞு முருகெழு மான மூன்ற
மானிடர் வலிய ரென்ற மாற்றத்தாற் சீற்றம் வைத்தான்.

(இ - ள்.) தேனிடை அமுது அளாய அன்ன - தேனிலே அமிருதங் கலந்தவற்றைப் போன்ற, மெல் - மென்மையான, சில சொல் மாலை-(சீதையினது) சில சொற்களின் வரிசை, தான்உடை

செவிகளூடு தவழுற - தான் உடைய [தன்னுடைய] காதுகளிலே நுழைய, (அதனால்), தளிர்த்து வீங்கும் - புளகித்துப் பூரிக்கின்ற, ஊன் உடை உடம்பினன்உம் - தசைக்கொழுப்பு மிக்க உடம்பை யுடையவனான இராவணனும், மானிடர் வலியர் என்ற மாற்றத்தால் - 'மனிதர் [ராமலக்ஷ்மணர்] (அரக்கரினும்) ஆற்றலுடையவர்' என்று (அவள்) சொன்ன வார்த்தையால், உருகெழு மானம் ஊன்ற - அச்சம்மிகுதற்குக் காரணமான அபிமானம் மேலிட, சீற்றம் வைத்தான் - (அவ்விடயத்தில் மனத்திற்) கோபங்கொண்டான்; (எ-று.)

சீதையினிடத்துக் காதல்கொண்ட இராவணன், அவளுடைய வாயினின்று வெளிப்படும் மிக இனியசொற்கள் சிலவற்றைக் கேட்டு ஆனந்திக்கக் கருதியவனாய் அவளோடு பேச்சு நிகழ்த்தி அப்பொழுது அவள்பேசிய பேச்சுக்களைக் கேட்டுக் களிப்புற்று அதனால் உடல் மயிர்க்கூச்செறிந்து உடல் பூரிப்புக்கொள்ளும் நிலையினனாயினும், மானத்தில் நோக்குடையவனாதலால், அவள் 'அரக்கரினும் மனிதர்வலியர்' என்று சொன்ன சொல்லைக் கேட்டவளவிலே, தன் மானத்திற் கருத்துஊன்றியதனால் உட்குக்கொள்ளுமாறு சீதாபிராட்டியிடம் பெருஞ் சீற்றங்கொண்டனனென்பதாம். பி - ம்:— [1]தேனுடன். [2]சின்சொன்மாலை. [3]தவழ்வுற. (871)

## 61.—இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: இராவணனது கோபவார்த்தை.

சீறின னுரைசெய் வானச் [1]சிலைவலிப் புல்லி யோர்கட்கு
ஈறொரு மனிதன் செய்தா னென்றெடுத் தியம்பி னாயேல்
தேறுதி நாளை யேயவ் விருபது [2]திண்டோள் வாடை
வீறிய பொழுது பூளை வீயென வீவ னன்றே.

(இ - ள்.) சீறினன் - (இவ்வாறு அபிமானத்தாற்) கோபங்கொண்டவனான இராவணமுனிவன், உரைசெய்வான்-சொல்வான்:— அ சிலை வலி புல்லியோர்கட்கு - வில்வலிமையில் அற்பராகிய (விராதன்முதலிய) அவ்வரக்கர்களுக்கு, ஒருமனிதன் - ஒரு மனிதனான இராமன், ஈறு செய்தான் - அழிவைச்செய்தான், என்று எடுத்து இயம்பினாய் ஏல்-என்று எடுத்துச் சிறப்பித்துச் சொல்லினையாயின், நாளைஏ தேறுதி-(அதன்முடிவை) நாளைக்கே (நீ கண்டு) தெளிவாய்; அ இருபது திண்தோள் வாடை - (அவ்விராவணனது) வலிய இருபதுதோள்களின்காற்று, வீறியபொழுது-வீசியடிக்கும்பொழுது, பூளை வீ என - பூளைப்பூப்போல, வீவன் அன்றே - (நீ சொன்ன அம் மனிதன்) மிக எளிதில் அழிந்திடுவானன்றோ? (எ-று.)

விராதன் முதலிய அரக்கர் வில்வலியில்லாதவர்: அவர்களை யழித்தது ஒருபெருமையாகாது; இராவணனுக்கு உள்ள இருபது தோள்களின் காற்று மிகவும் விரைந்து வீசும்போதே நீ கூறும் இராமன் வலியொடுங்கி மிகஎளிதி லழிந்திடுவதை நாளை நீயே கண்கூடாகக் காண்பா யென்றனன் அவ்விராவணனென்க. பூளை - ஓர்

செடி; இலவம்பஞ்சுமரம். அன்றே - தேற்றம். பி - ம்:—[1]சிறுவலி, தெறுவலி. [2]திரடோள். (872)

62. மேருவைப் பறிக்க வேண்டின் விண்ணினை யிடிக்க வேண்டின்
நீரினைக் கலக்க வேண்டி னெருப்பினை யவிக்க வேண்டின்
பாரினை [1]யெடுக்க வேண்டிற் [2]பலவினை சிலசொல் [3]லேழாய்
யாரெனக் கருதிச் சொன்ன யிராவணற் [4]கரிதென் னென்றான்.

(இ - ள்.) சில சொல் ஏழாய் - (மனத்தில் தோன்றுகிறபடி) சிலசொற்களைக்கூறுகிற பேதைமையுடைய பெண்ணே! மேருவை பறிக்க வேண்டின் - மகாமேருகிரியைப் பெயர்த்தெடுக்க விரும்பினாலும், விண்ணினை இடிக்கவேண்டின்-அண்டகோளத்தின் மேல் முகட்டை இடிக்க விரும்பினாலும், நெருப்பினை அவிக்கவேண்டின்- (அக்கடலிடையிலுள்ள) வடவாமுகாக்கினியை அவித்துவிட விரும்பினாலும், பாரினை எடுக்க வேண்டின் - பூமிமுழுதையும் ஒரு சேரத் தூக்கியெடுக்க விரும்பினாலும், பல வினை - இவ்வகையான பல பெருந்தொழில்களுள், இராவணற்கு அரிது என் - இராவணனுக்கு முடியாத காரியம் எது? (அங்ஙனமாக), யார் என கருதி சொன்னாய்- (அவனை) யாரென்று நினைத்து எளிமைப்படக்கூறினாய், என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

'இருபது தோள்படைத்தவனான இராவணன் மேருவைப் பறித்தல் விண்ணினையிடித்தல் முதலிய அரும்பெருஞ் செயலையும் செய்யும் பேராற்றலுடையவன்: அங்ஙனிருக்க அவனைப்பற்றி எளிமைப்படச் சொன்னாயே: இதுஎன்?' என்றனன், அவ்விராவண சந்நியாசியென்க. பலவினை சிலசொல் என்று எடுத்து, அவ்வகையான பல காரியங்களும் இராவணனுக்குச் சில சொல்லளவிலே நிகழுமென்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும்; இனி, இவ்வகையான பலகாரியங்களிற் சிலவற்றைச்சொல்: அவற்றில் இராவணனுக்கு அரியது யாது? என்றலும் ஒன்று. பி-ம்:—[1]இடக்க. [2]பல சிலவினை. [3]ஏழை. [4]அந்தோ. (873)

## 63 —அதற்குச் சீதையின் தக்க சமாதான வார்த்தை.

அரண்டரு திரடோள் சால வுளவெனி னாற்ற லுண்டோ
கரண்டநீ ரிலங்கை வேந்தைச் சிறைவைத்த கழற்கால் வீரன்
திரண்டதோள் [1]வனத்தை யெல்லாஞ் சிறியதோர் பருவந் தன்னில்
இரண்டுதோ ளொருவ னன்றோ மழுவினா லெறிந்தா னென்றாள்.

(இ - ள்.) அரண் தரு - பாதுகாவலைச் செய்கிற, திரள் தோள் - திரண்டதோள்கள், சால உள - மிகுதியாக உள்ளன, எனின் - என்றால், ஆற்றல் உண்டோ - (அதனால்) ஒருவல்லமை உண்டோ? கரண்டம் நீர் இலங்கை வேந்தை - நீர்க்காக்கைகள் வாழப்பெற்ற கடலின்நீர் சூழ்ந்த இலங்காபுரியின் அரசனான இராவணனை, சிறை வைத்த - சிறைச்சாலையில் வைத்த, கழல் கால் வீரன் - வீரக்கழலையணிந்த காலையுடைய வீரனான கார்த்த வீரியார்ச்சுனனது, திரண்ட தோள் வனத்தை எல்லாம் - பல

வாய்த்திரண்ட [பருத்த] தோள்களாகிய காடுமுழுவதையும், இரண்டு தோள் ஒருவன் - இரண்டு தோள்களையேயுடைய ஒரு மனிதனாகிய பரசுராமன், சிறியது ஓர் பருவந்தன்னில்-(தனது) சிறுபிராயத்திலே, மழுவினால் எறிந்தான் அன்றோ - கோடாலிப் படையால் துணித்திட்டானன்றோ? என்றாள் - என்றுசொன்னாள்; (எ - று.)

இருபது தோளுடைமைமாத்திரத்தால், இரண்டு தோள்களையுடைய தசரதராமனினும் இராவணன் வலியவனாகான். இராவணனது அவ்விருபது தோள்களையும்பிடித்துக்கட்டி அவனைச் சிறையிலிட்டான் கார்த்தவீரியார்ச்சுனன்: அந்தக்கார்த்தவீரியனது ஆயிரந்தோள்களையும் கோடாலியினால் துணித்துத்தள்ளிய பரசுராமன் இரண்டுதோள்களையுடையனே யென்றனளென்பதாம். கீழ் அவன் 'அவ்விருபதுதிண்தோள்வாடை வீறியபொழுது' என்று சிறப்பித்துக் கூறியதைக் கண்டித்தவாறு இது. "மறிக்குங் கயற்கண்ணி பங்காளன் வாழ்வெள்ளிமால்வரையைப், பறிக்குங்கபடன் பணைப்புயமோ அவன்பைங்கடகனு, செறிக்கும் புயஞ்செற்ற ஆயிரந் திண்புயமோ அவற்றைத், தறிக்குந்திறமழுவோ அரங்கா சயத்தாருடைத்தே" என்ற திருவரங்கத்துமாலைச் செய்யுள் இங்கு நினைவுக்கு வருகின்றது.

'மெய்சென்று தாக்கும் வியன்கோலடி தன்மேற், கைசென்று தாங்குங்கடிது" என்றபடி கை உடலை விரைந்துபாதுகாத்தலால், 'அரண்தரு திரள்தோள்' எனப்பட்டது. கரண்டம் - காரண்டவ மென்ற வடசொல் திரிபு. 'தோள்வனம்' - தோளின் தொகுதி: "தாமரைக்காடு" என்றாற்போல. பி-ம்:—[1]வலத்தை.

இராவணன் திக்குவிசயஞ்செய்து வருகிறபொழுது கார்த்தவீரியார்ச்சுனனது மாகிஷ்மதிநகரத்திற்குச்சென்று போர்செய்ய முயன்றான்: முயலுகையில், அங்குள்ளார் 'எங்களரசன் தனக்கு உரிய மாதர்களுடனே போய் நருமதையாற்றில் ஜலக்கிரீடை செய்கின்றான்' என்றனர்: அதனால், அங்கிருந்து நருமதையாற்றைச் சேர்ந்து இராவணன் அதில் நீராடிக் கரையில் மணலில் சிவலிங்கத்தை அமைத்துப் பிரதிஷ்டைசெய்து பூசிக்கும்பொழுது, அந்த யாற்றில்மேற்கே இறங்கியுள்ள கார்த்த வீரியார்ச்சுனன் தனதுநீர் விளையாட்டுக்கு அந்நீர்ப்பெருக்குப் போதாதென்றகருத்தால் அந்நீரைத் தனதுஆயிரங்கைகளுள் ஐந்நூற்றினால் தடுத்து நீரை மிகுவித்து மற்றை ஐந்நூறுகைகளைக்கொண்டு பலவகைவிளையாட்டுக்கள் நிகழ்த்தினான். அதனால் எதிர்வெள்ளமாகப்பொங்கி வருகிற நீர்ப்பெருக்குத் தனதுசிவலிங்கத்தை நிலைகுலையச் செய்ய அதனால் கோபங்கொண்டு இராக்கதசேனையுடனே சென்று அர்ச்சுனனை எதிர்த்துப் போர் செய்கையில், அவன் தனது ஆயிரங்கைகளுள் இருபதினால் இராவணனது இருபதுகைகளைப் பற்றி மற்றைய கைகளால் அவனைப் பலவாறுவருத்திக் கொண்டுபோய்ச் சிறையில் வைத்திட்டான். அதனை விபீஷணனால் அறிந்த அவன் பாட்டனாராகிய புலஸ்தியமுனிவர் கார்த்தவீரியார்ச்சுனனிடம் வந்து வேண்டி அவனுக்கு 'ராவணஜித்' என்ற ஒரு பெரும்பெயரைக் கொடுத்து, இராவணனைச் சிறைவிடுவித்துச் சென்றன ரென்பதும், இவ்வருச்

சுனன் ஒருகாலத்தில் சேனையுடனே வனத்திற்சென்று வேட்டை யாடிப் பரசுராமனது தந்தையான சமதக்கினி முனிவரது ஆச்சிர மத்தை அடைந்து அவரனுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில் அவரிடமிருந்த ஓமதேனு அவருக்குப் பலவளங்களையும் எளிதிற் சுரந்தளித்தமை கண்டு அதனிடம் ஆசைகொண்டு அப் பசுவை அவரனுமதியில்லாமல் வலியக் கவர்ந்துபோக, அதனை யறிந்த அப்பார்க்கவராமர் பெருங்கோபங்கொண்டு ஆயுதங்களுடனே சென்று அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனுடன் போர்செய்து அவனைப் பதினொரு அக்ஷௌஹிணிசேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந் தோள்களையும் தலையையும் தமது கோடாலிப்படையால் வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டா ரென்பதும், இங்குக் குறித்த வரலாறுகள். (874)

## 64.—இராவணன் பெருங்கோபங்கொண்டு மாயத்துறவிவேடத்தை விடுத்தல்.

[1]என்றவ ளுரைத்த லோடு மெரிந்தன நயனந் திக்கில்
சென்றன திரடோள் வானந் தீண்டின மகுடந் திண்கை
ஒன்றொடொன் றடித்த மேகத் துருமென [2]வெயிற்றி னொளி
மென்றன வெகுளி பொங்க விட்டது மாய வேடம்.

(இ - ள்.) என்று—, அவள் - அந்தப் பிராட்டி, உரைத்தலோ டும் - சொன்னவளவிலே, நயனம் - (இராவணனுடைய) கண்கள், எரிந்தன - (கோபத்தால்) தீஎழப்பெற்றன; திரள் தோள் - (இயல் பாகவே) திரண்டதோள்கள், திக்கில்சென்றன - (கோபாவேசத்தாற் புடைபருத்துத்) திக்குக்களை அளாவிவளர்ந்துசென்றன; மகுடம்- முடிகள், வானம் தீண்டின - (கோபத்தோடு எழுந்ததனால்) மேலுல கத்தைத் தொட்டன; திண் கை - வலிய கைகள், ஒன்றொடு ஒன்று அடித்த - ஒன்றோடொன்று அறைந்தன; எயிற்றின் ஒளி-பல்வரிசை கள், மேகத்து உரும்என மேகத்தினின்று உண்டாகும் இடிமுழக் கம் போல(ப் பேரொலியுண்டாக), மென்றன - கடித்தன; வெகுளி பொங்க-(இவ்வாறு) கோபம்மிக்குத் தன் வசமிழக்கவே, மாயவேடம் விட்டது - (அவன்) மாயையாற்கொண்டிருந்த முனிவேடம் (அவனை) விட்டு நீங்கிற்று; (எ - று.)

திடீரெனத்தோன்றிய பெருஞ் சீற்றத்தால் அவனது செயற்கை நிலை மாற இயற்கையான இராவணவடிவமே வந்துவிட்டதென்றபடி. சினத்தின்மெய்ப்பாடுகள் இங்குநன்கு கூறப்பட்டிருத்தல் காண்க. ஒளி - ஒழுங்கு. பி - ம்:—[1]என்றிவள். [2]எயிறுதம்மின். (875)

## 65.—சீதை சங்கிக்குமளவில் அவன் தன் உருவங்காட்டல்.

இருவினை துறந்த மேலோ [1]ரல்லன்கொ லிவனென் றெண்ணி
அரிவையு மைய [2]மெய்தா வாரிவன் ருனென் றென்றும்
தெரிவரு [3]நிலைய னாகத் தீவிடத் தரவந் தானே
உருகெழு சீற்றம் பொங்கிப் பணாவிரித் துயர்ந்த தொத்தான்.

(இ-ள்.) அரிவைஉம்-(அத்துறவி வேடந் துறந்ததைக்கண்ட) சீதாபிராட்டியும், 'இவன்—, இருவினை துறந்த மேலோர் அல்லன் கொல் - (நல்வினை தீவினை யென) இருவகைப்பட்ட வினைகளை ஒழித்த மேன்மையையுடைய சந்நியாசிகளில் சேர்ந்தானல்லன்போலும்,' என்று எண்ணி - என்று நினைத்து, ஐயம் எய்தா - சந்தேகத்தை யடைந்து, இவன் தான் ஆர் என்று - 'இவன் யாவன்?' என்று சங்கித்து, ஒன்றுஉம் தெரிவு அரு நிலையள் ஆக - சிறிதும் அறிய மாட்டாத நிலைமையையுடையவளாக,—(அவ்வளவில் இராவணன்), தீ விடத்து அரவம் தானே உரு கெழு சீற்றம் பொங்கி பணம் விரித்து உயர்ந்தது ஒத்தான்-கொடிய விஷத்தையுடைய ஒருசர்ப்பந் தானே தாபம்மிக்ககோபம் அதிகப்பட்டுப் படத்தைவிரித்துக் கொண்டு மேலெழுந்ததைப்போன்றான்; (எ -று.)

நடந்த நிகழ்ச்சியால், அந்தஇராவண சந்நியாசியைக் குறித்து 'இவன்உண்மைச்சந்நியாசியல்லன்போலும்: ஆயின், யாராகஇருக்கலாம்?' என்று ஐயங்கொண்டு, இன்னானென்று தெரியமாட்டாது திகைப்புக்கொண்டிருக்கையில், பலதலைகளையுடையபாம்பொன்று சீறித் தனதுபடங்களை விரித்துக்கொண்டு நிமிர்ந்துநின்றாற்போல, இராவணன் கோபித்துத் தனது பத்துத்தலைகளையும்இருபதுகைகளையும் பரப்பி வெளிக்காட்டிக் கொண்டு எழுந்து எதிர்நின்றனன் என்பதாம். கீழ் 23-ஆங் கவியில் "ஆமையினிருக்கையன்" என்றதனால், தனதுபத்துத்தலைகளையும் இருபதுகைகளையும் வேண்டியபடி அடக்கி வந்தமை கூறியவர், இங்கு அவற்றை வெளிப்படுத்தியமை கூறினார். பி - ம்:—[1] அல்லர்கொலிவர். [2] எய்தியாவர்தாமென்றென்று. [3] நிலையதாக. (876)

## 66.—அப்பொழுது சீதை அஞ்சிநடு நடுங்கிய நிலைமை.

**ஆற்றவெந் துயரத் தன்னா ளாண்டுற்ற வலக்க [1]ணோக்கின்**
**ஏற்றமென் னினைக்க லாகு [2]மெதிரெடுத் தியம்ப லாகும்**
**மாற்றமொன் றில்லை செய்யும் வினையில்லை [3]வரிக்க லாகாக்**
**கூற்றம்வந் துற்ற காலத் துயிரெனக் குலைவு கொண்டாள்.**

(இ - ள்.) ஆற்ற வெம் துயரத்து அன்னாள் - (இராமன் அபாயமுற்றானோ என்ற சிந்தனையால் முன்னமே) மிகவுங்கொடிய துன்பத்தையுடையளான அச் சீதாபிராட்டி, ஆண்டு உற்ற- (அதன் மேலும்) அப்பொழுது (சந்நியாசி இராவணனாகமாறியதனால்) அடைந்த, அலக்கண்-துன்பத்தைக்குறித்து, நோக்கின் - கருதினால், ஏற்றம் என் நினைக்கல் ஆகும்-(அதனினும்)அதிகமாக வேறு எந்தத் துன்பத்தை எண்ண முடியும்? [எதையும் எண்ணமுடியாது]; அதற்கு எதிர் (என்)எடுத்து இயம்பல் ஆகும்-அந்தத் துன்பத்திற்கு ஒப்பாகத்தான் எதைச்சொல்ல முடியும்? [எதுவும் இல்லை]: (அங்கன் கொடியஇராவணனைக் கண்டு பிரமித்திட்டதனால்), மாற்றம் ஒன்று இல்லை-(அவனெதிரிலே நின்று தைரியத்தோடு எடுத்துச்சொல்லத் தக்கதொரு)வார்த்தையும் (சீதைக்கு) இல்லை; செய்யும் வினை இல்லை- (அவனைவிட்டுத்தப்பிப் போதற்காகச்) செய்யத்தக்கதொரு செயலுமில்லையாயிற்று; (இங்ஙனம் பரிகாரமில்லாமல்), வரிக்கல் ஆகா

கூற்றம் வந்து உற்ற காலத்து உயிர் என குலைவு கொண்டாள்-கட்டு முடியாத [தடுக்கவொண்ணாத] யமன் வந்துசேர்ந்தபொழுது உயிர் நடுங்குதல்போல நடுக்கமடைந்தாள்; (எ - று.)

இதனைக்காட்டிலும் விஞ்சினதோ ஒத்ததோ இல்லாதபெருந் துன்பத்தினால் திகைப்புக்கொண்டு எதிர்நின்றுபேசமுடியாமலும் தப்பிப்போக வழியில்லாமலும் யமனைக் கண்ட உயிர்போல மிக அஞ்சி நிலைகுலைந்தனள் சீதையென்பதாம். அலக்கண் - சஞ்சலமான கண்; துன்பமுண்டாம்பொழுது கண்கலங்குதலால், அலக்கண் என்று துன்பத்திற்குப் பெயராயிற்று: இது, காரியத்தின் பெயர் காரணத்தின்மேல் நின்ற இலக்கணை. வரிக்கலாகாக் கூற்றம் என்பதற்கு - பிராணிகளின் ஆயுளிறுதியில் அவ்வுயிர்களைத் தான் கட்டுவதன்றித் தான் கட்டப்படாத கூற்றம்என்றும், விரும்பத்தகாத கூற்றம் என்றும் பொருள் கூறுவர். பி - ம்:—[1]நோக்கி. [2]பிறிது. [3]மதிக்கல். (877)

## 67.—இராவணன் சீதையை வெருட்டிப் பேசுதல்.

விண்ணவ ரேவல் செய்ய [1]வென்றவென் வீரம் பாராய்
மண்ணிடைப் [2]புழுவின் வாழு மானிடர் வலிய ரென்றாய்
பெண்ணெனப் பிழைத்தா [3]யன்றே லுன்னையான் பிசைந்து தின்ன
எண்ணுவெ னெண்ணிற் பின்னை யென்னுயி ரிழப்பெ [4]னென்றான்.

(இ - ள்.) 'விண்ணவர் - தேவர்கள், ஏவல் செய்ய - (எனக்குக்) குற்றேவல் தொழில்களைச்செய்யும்படி, வென்ற - (அவர்களைச்) சயித்துள்ள, என்-எனது, வீரம் - வல்லமையை, பாராய்-கருதாமல், மண்ணிடை புழுவின் வாழும்-பூமியில் புழுக்கள்போல (மிகவும் எளியராய்) வாழ்கிற, மானிடர்-மனிதர்களை, வலியர் என்றாய்-(என்னினும்) வலிமையுடையவர்களென்றுசொன்னாய்; (இங்ஙனஞ் சொன்ன நீ), பெண் என பிழைத்தாய்-பெண்பாலாதலால்உயிர் பிழைத்தாய்; அன்று ஏல்-அங்ஙனம் அன்றாயின், உன்னை—, யான்—, பிசைந்து தின்ன எண்ணுவென்-பிசைந்துதின்ன நினைப்பேன்; எண்ணில் - அங்ஙனம் எண்ணினால், பின்னை என் உயிர் இழப்பென்-பின்பு எனதுஉயிரை இழந்துவிடுவேன்,' என்றான் - என்று (அப்போது இராவணன்) சொன்னான்; (எ - று.)

தேவர்களுமுட்பட அனைவரையும் வென்ற எனது பலபராக்கிரமங்களை ஒருபொருள்செய்யாமல் அற்பராகிய மனிதர்களை என்னை வெல்லும் வல்லமையுடையா ரென்று சிறப்பித்துக்கூறி என்னை நிந்தித்த நீ ஒரு பெண்ணாதலினால் 'பெண்கொலை பெரும்பாவம்' என்ற கொள்கைபற்றி உன்னை நான் கொல்லாதொழிந்தேன்; அன்றியும், உன்னை நான் பிசைந்து தின்பேனாயின், நீ இறக்கவே, உன்னிடத்து மிக்ககாதல் கொண்டுள்ள எனதுஉயிரும் நீங்கிவிடுமென்பதுபற்றியும், அவ்வாறுசெய்யக் கருதினேனில்லை யென்றனன் எனபதாம். என்னுயிர் என்று சீதையையே இராவணன் கூறினனெனக்கொள்வர் ஒருசாரார். ஏவல் - ஏவப்படுங் காரியங்களுக்குத் தொழிலாகுபெயர். பாராய் - உடன்பாடாக, பார்ப்பாயாக என்றும் பொருள் கூறலாம். 'எண்ணில் பின்னை என்உயிர்

இழப்பென்' என்றதை, இனி இராவணனுக்கு வரும் தீங்குக்கு ஏற்ப அவன்வாயில்வந்த அமங்களவார்த்தை யெனவுங்கொள்ளலாம். பி - ர்:—[1]வென்றதன். [2]புழுவில். [3]அல்லே. [4]என்று. (878)

## 68.—உடனே இராவணன் அவளைச் சமாதானப்படுத்தித் தன்கருத்தைப் புலப்படுத்தல்.

குலைவுற லன்ன முன்னம் யாரையுங் கும்பி டாவென்
தலைமிசை மகுட மென்னத் தனித்தனி யினிது தாங்கி
அலகில்பூ [1]ணமரர் மாத ரடி[2]யிணை யேவல் செய்ய
உலக[3]மீ ரேழு மாளுஞ் செல்வத்து ளுறைதி யென்றான்.

(இ - ள்.) 'அன்னம் - அன்னப்பறவைபோன்றவளே! குலைவு உறல் - நடுக்கமடையவேண்டா; முன்னம் யாரைஉம் கும்பிடா - (இதற்குமுன்) எவரையும் வணங்காத, என் - எனது, தலைமிசை - தலைகளின்மேலே, மகுடம் என்ன - கிரீடங்களைத் தாங்குதல்போல, தனித்தனி - தனித்தனியே [ஒவ்வொருதலையிலுமாக], இனிது தாங்கி -(உன்னைக்) களிப்போடு நான் எடுத்துத் தூக்கிவைத்துக் கொண்டுகொண்டாட, அலகுஇல் பூண் அமரர்மாதர் - அளவில்லாத ஆபரணங்களையுடைய தேவமாதர்கள், அடி இணை ஏவல் செய்ய -(உனது)உபயபாதங்களின்கீழ்நின்று (உனக்குக்) குற்றேவல் தொழில்களைச் செய்ய, உலகம் ஈர் ஏழுஉம் ஆளும் செல்வத்துள் உறைதி - பதினான்கு உலகங்களையும் பாதுகாக்கிற (எனது) அரசாட்சிச்செல்வத்தில் தலைமைபூண்டுவாழ்வாய்', என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

நான் உன்னை என்தலைமீதுகொண்டு கொண்டாடும்படி எனக்கு உரியவளாவாய்என்றவாறு. அன்னம்-உவமையாகுபெயர். தாங்கியென்பதற்கு, உனது அடிகளையென்று செயப்படுபொருள் வருவித்தலுமாம். தாங்கி-தாங்க. பி-ம்:—[1]அரம்பை. [2]முறை. [3]ஓர். (879)

## 69.—அதுகேட்டவுடனே சீதை இராவணனை நிந்தித்தல்.

செவிகளைத் தளிர்க்கை யாலே சிக்குறச் சேமஞ் செய்தாள்
[1]கவினும்வெஞ் சிலைக்கை வென்றிக் காகுத்தன் கற்பி னேனைப்
புவியிடை யொழுக்க [2]நோக்காப் பொங்கெரிப் புனித ரீயும்
அவியைநாய் வேட்ட தென்ன வென்சொன யரக்க வென்னு.

இரண்டுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகேட்ட பிராட்டி),—செவிகளை - (தனது) காதுகளை, தளிர் கையால் - தளிர்போல் மெல்லிய (தன்) கைகளாலே, சிக்குற சேமம் செய்தாள் - அழுந்த மூடிக்கொண்டு, (அவனை நோக்கி), 'அரக்க - இராக்கதனே! கவினும் - அழகிய, வெம் சிலை கை - கொடியவில்லையேந்திய கையையும், வென்றி - வெற்றியையுமுடைய, காகுத்தன் - இராமபிரான் திறத்தே, கற்பினேனை - கற்பு நிலைமையையுடையளான [அவன் மனைவியாகிய] என்னை, புவியிடை ஒழுக்கம் நோக்கா - உலகத்தில் உயர்ந்தோர்க்குஉரிய ஒழுக்கத்தைக் கருதி,

பொங்குஎரி-வளர்ந்தெரியும் வைதிகாக்கினியிலே, புனிதர்-பரிசுத்தரானமுனிவர்கள், ஈயும்-(தேவர்களின்பொருட்டு) இடும், அவியை - அவிர்ப்பாகத்தை, நாய் வேட்டது என்ன-நாய் விரும்பினாற்போல, (விரும்பி), என் சொனாய்- என்னவார்த்தை சொன்னாய்?' என்னா - என்றுசொல்லி, - (எ-று.)—"என்றாள்" என அடுத்த கவியோடு முடியும்.

சீதாபிராட்டி நாராசம் புகுவதுபோன்ற அப்படிப்பட்ட இராவணன் கூறிய தீச்சொல்லைக் கேட்டு ஆற்றவொண்ணாமையால் காதுகளைக் கைகளால் உறுதியாகப் பொத்திக்கொண்டாளாய், 'தேவர்க்குஉரிய அவிசை நாய் விரும்பினாற்போலக் காகுத்தன் தேவியை விரும்பி அடாத வார்த்தையைக் கூறினாயே?' என்று ஏசினளென்பதாம். எம்பெருமானது கையிலுள்ள வில்முதலிய படைக்கலங்கள் அன்போடுநோக்கும் அடியார்களுக்கு ஆபரணங்கள்போலத் தோன்றி அழகியனவாயிருத்தலையும், பகைமையோடு நோக்கும் எதிரிகளுக்கு ஆயுதங்களாகவே தோன்றி அச்சஞ்செய்தலையும் ஒருங்கே உடைமையால், 'கவினும் வெஞ் சிலை' எனப்பட்டது. நோக்கா என்பதை ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சமாகக் கொண்டு, உலகத்து உயர்ந்தோர்க்கு உரிய ஒழுக்கத்தை நோக்காமல், 'என்சொனாய்' என முடிப்பினும் அமையும்: அவி - ஹவிஸ்: வடசொல்: மந்திரபூர்வமாக அக்கினியில் ஓமஞ்செய்யப்படும் நெய் முதலிய தேவருணவு. என் சொனாய் அரக்க-மிகவுந்தகுதியற்ற வார்த்தையைக் கூறினாயே! கொடிய அரக்கர்குலத்தானாதலின் இங்ஙனங் கூறினாய்போலும் என்றவாரும். கவினும் - எதிர்காலப் பெயரெச்சம். பி-ம்:—[1]கவியையுங்கடக்கும். [2]நோக்காய். (880)

## 70 —சீதை இராவணனை அதட்டிப்பேசுதல்.

புன்னுனை நீரி [1]னொய்தாப் போதலே புரிந்து நின்ற
[2]இன்னுயி ரிழத்த லஞ்சி யிற்பிறப் [3]பழித [4]லுண்டே
மின்னுயிர்த் துருமிற் சீறும் [5]வெங்கணை விரவா முன்னம்
உன்னுயிர்க் குறுதி [6]நோக்கி னொளித்தியா லோடி யென்றாள்.

(இ - ள்.) (மற்றும்), 'புல்நுனை நீரின் - புல்லின்நுனியில் தங்கியிருக்கிற நீர்த் துளிபோல, நொய்து ஆ போதல்ஏ-எளிதாக விரைவில் ஒழிதலையே, புரிந்துநின்ற-இயல்பாகக்கொண்டு நின்ற, இன் உயிர் - இனிய (எனது) உயிரை, இழத்தல் - இழந்துவிடுதற்கு, அஞ்சி - பயப்பட்டு, இல்பிறப்பு அழிதல் - உயர்ந்தகுலத்திற்பிறந்ததற்குஏற்ற ஒழுக்கத்தை (யான்) இழத்தல், உண்டுஏ- உளதாமோ? [ஆகாதென்றபடி]: மின் உயிர்த்து - மின்னல் போன்ற ஒளியை வீசிக்கொண்டு, உருமின் சீறும் - இடிபோல உக்கிரமாய்ச் சீறுந்தன்மையுள்ள, வெம் கணை-வெவ்விய இராம பாணம், விரவா முன்னம் - (வந்து உன்மேற்) படுதற்கு முன்னமே, உன் உயிர்க்கு உறுதி நோக்கின் ஓடி ஒளித்தி - உனது உயிருக்கு உறுதியை [நிலைபேற்றை] ஆலோசிப்பாயாயின் ஓடி யொளித்துக் கொள்வாய்,' என்றாள் - என்று சொன்னாள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'உன் கருத்துக்கு யான் உடன்படேனாயின் நீ என்னைக்கொன்றிடுவாய்' என்பதற்கு அஞ்சி யான் எனது கற்புநிலைகுலையேன்; என்கணவனார் இப்போதுவந்திடுவார்: வந்திட்டால், அவருடைய வெங்கணைகள் சீறி உன்னை யுயிரழிக்கும்: அங்ஙன் நிகழாதமுன், உன்னுயிர்க்கு உறுதிநோக்கினையாயின் ஓடியொளிப்பாயென்பதாம். புன்னுனைநீரின் நொய்தாப்போதலே புரிந்துநின்ற இன்னுயிர் - "புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை யென்றெண்ணி" என்றார், நாலடியாரிலும். எவர்க்கும் உயிரினும் இனியது வேறு இன்றாதலால், 'இன்னுயிர்' எனப்பட்டது. எனவே, உயிர்க்கு இனிமை, இயற்கையடைமொழியென்க. இற்பிறப்பு - கற்பொழுக்கத்துக்கு இலக்கணை. உண்டே, ஏ-எதிர்மறை. பி-ம்:—[1]நொய்தாய். [2]என். [3]அழித்தல். [4]உண்டோ. [5]வெஞ்சரம். [6]நோக்கியொளித்தியாலொல்லை. (881)

## 71.—'உன்கணவனம்பு என்னை யாதுஞ் செய்யமாட்டாது' என்று இராவணன் கூறுதல்.

என்றவ ளுரைக்க நின்ற விரக்கமி [1]லரக்க ரேந்தல்
உன்றுணைக் கணவ [2]னம்போ வுயர்திசை சுமந்த வோங்கல்
[3]வன்றிறன் மருப்பி னாற்றன் மடித்தவென் மார்பின் வந்தால்
குன்றிடைத் தொடுத்து விட்ட பூங்கணை கொல்ல தென்றான்.

(இ - ள்.) என்று—, அவள்-அச்சீதாபிராட்டி, உரைக்க-சொல்ல, நின்ற - கேட்டுநின்ற, இரக்கம் இல் அரக்கர் ஏந்தல்-இரக்கமில்லாத இராக்கதர்தலைவனான இராவணன், 'உன் துணை கணவன் எய்த அம்புஓ - உனக்குத்துணையாகிய கணவனான இராமன் எய்யும் அம்போ என்றால், திசை சுமந்த உயர் ஓங்கல் - திக்குகளைச் சுமந்து நிற்கிற உயர்ந்தயானைகளின் [திக்கஜங்களின்], வல் திறல் மருப்பின் ஆற்றல் - மிகவும் உறுதியான தந்தங்களின் வலிமையை, மடித்த - ஒழியச்செய்த, என் மார்பின் - எனது மார்பினிடத்து, வந்தால்- (பாய) வந்தால், அது - அந்த அம்பானது, குன்றிடை தொடுத்து விட்ட பூ கணைகொல்-மலையின்மேல் எய்து விடப்பட்ட மலரம்பேயாம்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

ஒருமலரை அம்பாகக்கொண்டு மலையின்மேல் எய்தால் அதனால் மலைக்கு ஒருசிறிதும் ஊறுபாடு உண்டாகாதவாறுபோல, இராமபாணத்தால் மிகவலிய என்மார்பில் ஒருசிறிதும் ஊறுபாடு உண்டாகாது என்றபடி. தன்மார்பின் மிக்கவலிமையை விளக்குதற்கு, திக்குயானைகளின் தந்தத்தை வலிகெடுத்த மார்பென்றான்; என்றது, இவன் திக்குவிசயஞ்செய்த காலத்தில் திக்குயானைகள் இவனை எதிர்த்துத் தமது வலிய கூரியதந்தங்களைக்கொண்டு இவன்மார்பில் தாக்கியபொழுது அத்தந்தங்கள் இவன்மார்பைப் பிளந்து அதனுட்சென்று ஊறுபடுத்தமாட்டாமல் ஒடிபட்ட தன்மையை எடுத்துக் காட்டியவாறாம். 'உன்துணைக்கணவன்' என்றது, உனக்குத்துணையான கணவன்; அதாவது - உன்னைப் போலப் பெண்தன்மையுடையான் என்று ஓரிகழ்ச்சிப்பொருளைத்

தொனிப்பிக்கும். அம்போ, ஓ - தெரிநிலை. ஓங்கல் - உயர்ச்சியை யுடைய மலை: அதுபோன்ற யானைக்கு உவமையாகுபெயர். கொல் - அசைநிலை. பி-ம்—[1]அரக்கனெய்த. [2]அம்பவ். [3]வன்றிறை. (882)

## 72.—இராவணன் மீண்டும் இன்சொற்கூறிச் சீதையை வணங்குதல்.

அணங்கினுக் [1]கணங்க ஞய்நின் ஞசைநோ [2]யகத்துப் பொங்க
உணங்கிய வுடம்பி னேனுக் குயிரினை யுதவி யும்பர்க்
கணங்குழை மகளிர்க் [3]கில்லாப் பெரும்பதங் கைக்கொ ளென்ஞ
வணங்கின னுலகந் தாங்கு மலையினும் வலிய தோளான்.

(இ - ள்.) 'அணங்கினுக்கு அணங்கு அஞய் - திருமகளுக்கும் ஒரு திருமகள்போலச் சிறந்தவளே! நின் ஆசை நோய் அகத்து பொங்க - உன்னிடத்தேகொண்ட காமமாகிய நோய் என்மனத்தில் மிகுதலால், உணங்கிய உடம்பினேனுக்கு - வாடிய உடம்பையுடைய எனக்கு, உயிரினை உதவி - உயிரைக்கொடுத்து [காமவேதனையால் நான் இறவாதபடி என்விருப்பத்தைநிறைவேற்றி], உம்பர் கணம் குழை மகளிர்க்கு இல்லா - மேலுலகத்திலுள்ள பலவாய்த்திரண்ட குழை யென்னுங் காதணியையுடைய தேவமாதரனைவர்க்கும் கிடைக்கமாட்டாத, பெரு பதம் - மேலான பதவியை, கைக்கொள் - பெறுவாய்,' என்ஞ - என்று சொல்லி, வணங்கினன் - (பிராட்டியின் திருவடிகளில் விழுந்து) நமஸ்கரித்தான்: (யாவனெனில்), உலகம் தாங்கும் மலையின்உம் வலிய தோளான் - நிலவுலகத்தைத் தாங்குகிற மலையைக்காட்டிலும் வலிமையையுடைய தோள்களை யுடையவஞன இராவணன்; (எ - று.)

நான் உன் காதல்நோயால் மிகவும் வாடியுள்ளேன்: என் னுயிரைத்தந்து தேவமாதர்க்கும் அரிய பதவியைக் கொள்வா யென்று சொல்லித் தன்வேண்டுகோள் தோன்றச் சீதாபிராட்டியின் தாளில் வீழ்ந்தனன் இராவணனென்க. இங்கு ஒன்றைக் கொடுத்து ஒன்றைப் பெறுதலாகிய மாற்றலணியிருத்தல்காண்க. 'அணங்கினுக்கு அணங்கஞய்' - அழகு, உத்தமவிலக்கணம், இன்ப நலம் முதலியவற்றில் திருமகளினும் மிகவும் மேலானவளே யென்றபடி: இனி, மிக அழகிய மோகினியென்னும் பெண்தெய்வத்துக்கும் அழகுமிகுதியால் மோகத்தை விளைப்பவளேயென்றும், தேவ மாதர்க்கும் மேம்பட்ட ஒருதேவமாது போன்றவளே யென்றும் பொருள்கொள்ளலாம். 'உம்பர்க்கணங்குழைமகளிர்க் கில்லாப் பெரும்பதம்' என்றது - எல்லாத்தேவர்களையும் வென்று திரிலோகாதிபத்தியத்தைக் கைக்கொண்ட தனக்கு உரியவளாதலை. பி - ம்:—[1]அணங்கஞளே. [2]அகத்துட். [3]எல்லாம். (883)

வேறு.

## 73.—அப்பொழுது பிராட்டி அலறிக்கதறல்.

[1]தறைவா யவன்வந் தடிதா ழுதலும்
கறைவாள் படவா விகலங் கினள்போல்

இறைவா விளையோ யெனவேங் கினளால்
[2]பொறைதா னுருவா னதொர்பொற் புடையாள்.

(இ - ள்.) அவன் வந்து தறைவாய் அடி தாழுதலும் - அவ் விராவணன் (அருகில்) வந்து தரையில்விழுந்து (சீதையின்) பாதங் களில் வணங்கிய வளவிலே, பொறை தான் உரு ஆனது ஓர் பொற்பு உடையாள் - பொறுமையென்பதே உருவுபடைத்திருப்ப தான ஒப்பற்ற அழகையுடைய சீதை,—கறை வாள்பட ஆவி கலங்கினள் போல் - (இரத்தந்தோய்ந்த) கறையையுடைய வாளா யுதம் (தன்மேற்) படுதலால் உயிர் நிலைகுலையப்பெற்றவள்போல, (நடுநடுங்கி), இறைவா இளையோய் என ஏங்கினள் - 'எனது தலை வனே; அவனதுதம்பியே! என்று விளித்துப் பரிதாபமாகக் கூவி னள்; (எ - று.)

இராவணன் காதல்கொண்டு தன் தாளில் விழுந்து வேண்டு தலைக்கண்டு, சீதாபிராட்டி, வாளால் வெட்டுண்டுமாள்பவள்போல மனங்கலங்கி, 'இறையோனே! இளையோனே!' என்று கூவி ஏங்கின ளென்பதாம். பொறை - (உயிரைப்) பொறுப்பது: எனவே, உடம் பாயிற்று: இனி, மிக்க பொறுமையையுடையளாதல்பற்றி, பிராட் டிக்கு 'பொறை' என்று ஒருபெயர் கூறினரெனக் கொள்ளுதலும் ஒன்று. ஆல் - ஈற்றசை. [2]பொறைதானுயிர் போவதுபோற் புகல்வாள் என்ற பாடத்துக்கு, பொறை தான் உயிர் போவது போல்-உடல் உயிர்நீங்கப்பெற்றாற்போல (மிக்கவேதனையுற்று), புகல் வாள் - மற்றும் புலம்பிக்கூறுபவளானாள் என்க. பி - ம்:— [1]தறைவாயிடை.

இதுமுதல் ஒன்பதுகவிகள்-கீழ்ப்படலத்தின் 210-ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (884)

## 74.—இராவணன் சீதையைத் தரையுடனே பெயர்த்தெடுத்தல்.

ஆண்டா [1]யிடைதீ யவனா யிழையைத்
[2]தீண்டா லெனுமே லுரைசிந் தை[3]செயாத்
தூண்டா னெனலா முயர்தோள் வலியாற்
கீண்டா னில[4]மோ சனை[5]கீழ்ப் புடையே.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, ஆயிடை-அவ்விடத்தில், தீயவன்-கொடியவனான அவ்விராவணன், ஆயிழையை தீண்டால் எனும்மேல் உரை சிந்தை செயா-பெண்ணைத்தொடாதேயென்று (முன்பு தனக்கு) நேர்ந்துள்ள சாபவார்த்தையை நினைத்து, தூண் தான் எனல் ஆம் உயர் தோள் வலியால் - தூண்களே யென்று (உவமை) சொல்லத்தக்க உயர்ந்த (தனது) தோள்களின் வலிமை யினால், நிலம் கீழ் புடை ஓசனை கீண்டான் - (சீதையிருந்த ஆச் சிரமத்தின்) இடத்தைக் கீழ்ப்புறத்தில் ஒருயோசனை தூரம்பேர்த் தெடுத்தான்; (எ - று.)

இங்குக்குறித்த சாபம் - இராவணன் திக்குவிசயஞ்செய்கையில் தேவலோகத்துக்குச் செல்லபுறப்பட்டுக் குபேரனது அளகாபுரியினருகிற் செல்லுகையில், குபேரன்மகனான நளகூபரனைநோக்கிச் செல்லும் அவனது காமக்கிழத்தியான அரம்பையைக் கண்டு காமுற்று அவளை வலியப்பிடித்துக் கற்பழித்தவளவிலே, அவள் வருந்திச் சினந்து இராவணனை நோக்கி 'இனி, நீ எந்தமகளிரையேனும் அவருடன்பாடின்றி வலியத்தீண்டின் அவர்களதுகற்பின் கனலால் எரிந்தழிவாய்' என்று வைதது மன்றி, அச்செய்தியை அறிந்த நளகூபரனும் 'இனி இராவணன் ஒருவருக்குஉரிய மாதரை வலியத்தீண்டுவானாயின், தலைவெடித்து இறக்கக்கடவன்' என்று சபித்தமை. புஞ்சிகஸ்தலையின் சாபமெனினுமாம். யோசனை காதம் என்பன - ஒருபொருளன என்பர்; காதத்தினும் யோசனை பேரளவினதென்றலும் உண்டு. நான்காம் அடியினால், ஒருயோசனை அகலமும் ஆழமும் படப்பெயர்த்தனனெனக் கொள்ளலாம். தீண்டால் - எதிர்மறையொருமையேவல்; இதில், ஆல் - விகுதி. சாபம்-மனமில்லாத மாதரை வலியக் கறபழித்தலாகாதென்பதற்கே யாதலால், தீண்டியே தன்னிடத்துக்கொண்டானென்பர், வால்மீகிபகவான். நிலத்தோடு பெயர்த்துச் சீதையைக்கொண்டதாகச் சிலநூல்களிலுள்ளது. பி - ம்:—[1] ஆசுறு. [2] தீண்டானயன் மேலுரை, தீண்டானயன்முன்னுரை. [3] செய்வான். [4] யோசனை. [5] கீழொடுமேல். (885)

## 75.—இராவணன் சீதையைத் தரையோடு எடுத்துத் தேரில் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாக எழுதல்.

கொண்டா னுயர்தேர் [1]மிசைகோல் வளையாள்
கண்டா டனதா ருயிர்கண் டிலளால்
மண்டா [2]னுறுமின் னின்மயங் கினளால்
விண்டான் [3]வழியா வெழுவான் விரைவான்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) உயர் தேர்மிசை கொண்டான்-(அங்ஙனம் பெயர்த்தெடுத்த நிலத்தை) உயர்ந்த தனது தேரின்மேல் வைத்துக் கொண்டான்;(அச்செயலை), கோல் வளையாள் கண்டாள் - அழகிய வளையல்களையணிந்த பிராட்டி பார்த்து,தனது ஆர் உயிர் கண்டிலள் - தனது அரிய உயிரை (உடம்பிலிருக்க)க் காணாதவளாய் [உயிர் நிலைகுலையப்பெற்று என்றபடி], மண் உறு மின்னின் மயங்கினள் - (தனக்கு உரிய இடமான மேகத்தை விட்டுத்) தரையில் விழுந்ததொரு மின்னற்கொடிபோலத் துவண்டு கலங்கினாள்; (அப்பொழுது இராவணன்),விண் வழி ஆ விரைவான் எழுவான் - ஆகாயமார்க்கமாக விரைவிற்கிளம்பிச் செல்லக் கருதியவனாய்,—(எ - று.)— "விடுதேர்என" என்று அடுத்த கவியோடுதொடரும். 'ஆல்' இரண்டும்-ஈற்றசை. 'தான்' இரண்டும்-அசை.

'தனது ஆருயிர் கண்டிலள்' என்பதற்கு-தன்து அருமையான பிராணநாயகனாகிய இராமபிரானை வரக்கண்டிலாதவளாய்

என்று பொருள்கூறல் ஏற்கும். மண்உறுமின்-இல்பொருளுவமை. பி-ம்:—[1] அது. [2] உரு. [3] வழியாய். (886)

### 76.—பிராட்டி சோகித்துப் புலம்பலுறல்.

விடுதே ரெனவெங் கனல்வெந் தழியுங்
கொடிபோற் புரள்வாள் குலைவா ளயர்வாள்
துடியா விழுவா டுயரா [1] லெழுவாள்
[2] கடிதா வறனே யிதுகா வெனுமால்.

(இ - ள்.) தேர் விடு என - 'தேரைச்செலுத்து' (என்று (இராவணன் தனது தேர்ப்பாகனை நோக்கிக்) கூற, (அதுகேட்ட வளவிலே சீதை), வெம் கனல் வெந்து அழியும் கொடிபோல் - வெவ்வியநெருப்பில்வீழ்ந்து வெந்துஅழிகிற பூங்கொடிபோல, புரள் வாள் - விழுந்துபுரளுவாள்; குலைவாள் - நிலைகுலைந்து நடுங்குவாள்; அயர்வாள் - சோர்வடைவாள்; துயரால் துடியா விழுவாள் - துன் பத்தால் துடித்துவிழுவாள்; எழுவாள் - மீண்டும் எழுந்திருப்பாள்; 'அறனே-தருமதேவதையே ! இது - இத்துன்பத்தினின்றும், கடிது ஆ கா - விரைவாக (என்னைப்) பாதுகாப்பாயாக,' எனும் - என்று சொல்லி வேண்டுவாள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. பி - ம்:—[1] அழு வாள். [2] கடியா, கடியாய், கடியாம். (887)

### 77.—இதுமுதல் ஐந்துகவிகள் - சீதை பலபொருள்களை நோக்கி இரங்கிக்கூறும் மொழிகள்.

மலையே மரனே மயிலே குயிலே
கலையே பிணையே களிறே பிடியே
நிலையா வுயிரே [1] நிலைநேடி னர்போய்
உலையா வலியா ருழைநீ ருரையீர்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மலையே - மலைகளே! மரனே - மரங்களே! மயிலே- மயில்களே! குயிலே - குயில்களே! கலையே - ஆண்மான்களே! பிணையே - பெண்மான்களே! களிறே - ஆண்யானைகளே! பிடியே - பெண்யானைகளே! நிலையா உயிரே - ஒருநிலைகொள்ளாது நிலைகுலை கிற எனது உயிரே! நீர் - நீங்கள், நிலைநேடினர் போய்-(எனது கண வனர்) இருக்கும் இடத்தை நாடிச்சென்று, உலையா வலியாருழை - அழியாத வலிமையையுடைய அவரிடத்தில், உரையீர் - (இச்செய் தியைச்) சொல்லுங்கள்; (எ - று.)

இங்ஙனம் தலைவி தலைவனைப் பிரிந்த துயராற் கேளாதவற்றைக் கேட்பனபோலவும், உணராதவற்றை உணர்வனபோலவும், உரையாத வற்றை உரைப்பனபோலவுங் கூறுதற்கு விதி, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் "உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல், மறுத்துரைப்பதுபோல் நெஞ்சமொடு புணர்த்துஞ், சொல்லாமரபி னவற்றொடு கெழீஇச், செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கியும், அவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியும்......இருவர்க்குமுரிய பாற

ளவி", "ஞாயிறு திங்கள் அறிவே நாணே, கடலே கானல் விலங்கே மரனே, புலம்புறு பொழுதே புள்ளேநெஞ்சே, யவையலபிறவும் நுதலிய நெறியாற், சொல்லுந போலவுங் கேட்குந போலவும், சொல்லியாங்கமையு மென்மனார் புலவர்" என்றவற்றில் அடங்கும்; இவ்வாறு வருவன பிறவற்றுக்கும் இது கொள்க.

[1] நிலை தேறினர் போய் என்ற பாடத்திற்கு-நிலைமையை அறிந்து சென்று என்றும் பொருள்கொள்ளலாம். 'நேடினர்' என்றதுபோல, தேறினர் என்பதும்-முன்னிலைக்குப் படர்க்கைவந்த இடவழுவமைதியாம். எத்துணை வலிய பகைவரையும் எளிதில் அழிக்கும் ஆற்றலுடையாரென்பாள், 'உலையாவலியார்' என்றாள்; இது உயர்வுப் பன்மை: இலக்குமணனை உளப்படுத்திய பன்மையெனக் கொள்ளினுமாம். "இரலையும் கலையும் புல்வாய்க்கு உரிய", "புல்வாய் நவ்வி உழையே கவரி, சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே", "வேழக்கு உரித்தே விதந்து களிறென்றல்", "பிடியென் பெண்பெயர் யானை மேற்றே" என்பன, தொல்காப்பியம். (888)

78. செஞ்சே வகனார் நிலைநீர் தெரிவீர்
மஞ்சே பொழிலே வனதே வதைகாள்
அஞ்சே லெனநல் குதிரே லடியேன்
உஞ்சா லதுதா னிழிபோ வுரையீர்.

(இ - ள்.) மஞ்சே - மேகங்களே! பொழிலே - சோலைகளே! வனதேவதைகாள் - காட்டில் உறையுந் தெய்வங்களே! செம் சேவகனார் நிலை - நல்லவீரத்தன்மையையுடைய எனதுகணவனாருள்ள இடத்தை, நீர் தெரிவீர் - நீங்கள் அறிவீர்கள்: (ஆதலால்), அஞ்சேல் என நல்குதிர் ஏல் - பயப்படாதே என்று (எனக்கு) அபய வார்த்தைகூறி (எனது நிலைமையை அவர்க்குக்கூறி)யருள்வீராயின், அடியேன் உஞ்சால் அதுதான்இழிபுஓஉரையீர் - (அவர்க்கு) அடியவளாகியநான் (பிழைப்பேன், அங்ஙனம்) பிழைத்தால்அது (உங்கட்குக்) குறைபாடாமோ? [ஆகாது, புகழ்தரு மன்றோ?] சொல்லுங்கள்; (எ - று.)

ஓங்கிய இடத்தில் இருத்தலால் மஞ்சும், ஓங்கியிருத்தலால் பொழிலும், செல்லும்வனத்திலிருந்து நிகழ்வன அறியும் வல்லமையுடைமையால் வனதேவதையும் சேவகனார்நிலை அறியுமென்று அவற்றைவினவுகின்றாள். 'நீர் என்கணவனாருள்ள இடத்தை அறிவீர்களாதலால், அஞ்சேலென்று அபயமளித்து எனக்கு அவ்விடத்தைத் தெரிவித்தால்' என்று முதல் மூன்றடிகட்குஉரைகூறினுமாம். நிலை-நிலைமையுமாம். உரையீர்-எனக்குநேர்ந்ததை அவரிடம் கூறுங்க ளெனினுமாம். உஞ்சால் = உய்ந்தால்: போலி. (889)

79. [1] நிருதா தியர்வே ரற[2] நீன் முகில்போல்
சரதா ரைகள்[3] வீ சினிர்சார் கிலிரோ
வரதா விளையோய் மறுவே துமிலாப்
பரதா விளையோய் பழிபூ ணுதிரோ.

(இ - ள்.) வரதா - (வேண்டியவர்க்கு வேண்டிய வரங்களைத் தந்தருளும் ரகுநாதனே! இளையோய் - (அவனை அநுசரிக்கும்) தம்பியான இட்சுமணனே! நிருத ஆதியர் வேர் அற - அரக்கர் முதலிய கொடியோர்கள் நிர்மூலமாம்படி, நீல் முகில் போல்-கரிய மேகம் போல, சர தாரைகள் வீசினிர் - அம்புமழையைச் சொரிந்து கொண்டு, சார்கிலிர்ஓ - (இங்கு வந்து) சேரமாட்டீர்களா? மறு ஏதுஉம் இலா பரதா - குற்றம்யாதுமில்லாத பரதனே! இளையோய் - (அவனை அநுசரிக்கும்) தம்பியான சத்ருக்நனே! பழி பூணுதிர்ஓ - (நீங்கள் இங்குவந்து இந்த ஆபத்துக்கு உதவாமல் நாட்டில் வசித்தலால்) பழியையடைவீர்களோ? (எ-று.)

"வரத னுதித்திட மற்றைய வொளியை" என்றும், "வரதனு மிளவலுமென மருவினரே" என்றும் பாலகாண்டத்தில் இராம பிரானை வரதனென்ற திருநாமத்தாற் குறித்தமை காண்க. தனது தாயாகிய கைகேயி இராமனைவனம்புகுவித்துத் தனக்குத்தந்த அரசாட்சியை அவள் கருத்தின்படி ஏற்றுக்கொள்ளுதலைத் தவிர்ந்து தவவேடங்கொண்டு வனம்புகுந்து தமையனுரையடைந்து அரசு கொள்ளும்படி பலவாறுவேண்டி அவர் அதற்கு உடன்படாது இட்ட கட்டளையினால் மீள்வானாகி அவர் திருவடிநிலையைவேண்டிப் பெற்று முடியிலேந்திச் சென்று இராமபிரானையின்றி அயோத்தி சேரவிரும்பாமல் நந்திக்கிராமஞ்சேர்ந்து அங்கு அப்பாதுகைக்குப் பட்டாபிஷேகஞ்செய்து அதன்கீழ்நின்று தான் இராசாங்ககாரியம் பார்க்கும் களங்கமற்ற உயர்ந்த ஒழுக்கத்தையுடைய னாதலால், பரதனை 'மறுவேதுமிலா' என்ற அடைமொழி கொடுத்து விளித்தாள். இந்த அடைமொழியைச் சத்ருக்நனுக்குங் கூட்டலாம்; அவனுக்கு மறுவேதுமில்லாமை - பாகவதசேஷத்வம்; அதாவது - எம்பெருமானுக்கு நேரே அடிமைபூணுதலினும் மேம்பட அவனுக்கு அடியவனான பரதனுக்கு அடிமைபூண்டமை: வால்மீகி ராமாயணத்தில் சத்ருக்நனுக்கு 'அநக:' என்ற அடைமொழி கொடுத்தவிடத்து, இங்ஙனங்கருத்துரைப்பர், பெரியோர். பி - ம்:—[1]நிருதாதியர். [2]நீள், நீர். [3]வீசினர். (890)

80. கோதா வரியே குளிர்வாய் குழைவாய்
மாதா வனையாய் மனனே தெளிவாய்
ஓதா துணர்வா ருழையோ டினைபோய்
நீதான் வினையே னிலைசொல் லலையோ.

(இ - ள்.) கோதாவரியே - கோதாவரிநதியே! குளிர்வாய்-(இயல்பிற்) குளிர்ந்திருக்கிறாய்; குழைவாய் - (இயல்பில்) உள்நெகிழ்ச்சியுடையாய்; (ஆதலால்), மாதா அனையாய் - (உயிர்கட்கெல்லாம்) தாய்போன்றுள்ளாய்; மனன்ஏ தெளிவாய்-அகம் தெளிந்துள்ளாய்; நீ தான் - (இப்படிப்பட்ட நற்குண நற்செய்கைகளையுடைய) நீயாவது, ஓதாது உணர்வாருழை ஓடினை போய் - சொல்லாமலே (அனைத்தையும்) அறியுந் தன்மையரான [வரம்பிலா வறிவையுடைய] எனது கணவனுரிடத்துஓடிச்சென்று, வினையேன் நிலை சொல்லலைஓ - (இப்

பெருந் துன்பமனுபவித்தற்குக் காரணமான) தீவினையையுடைய எனது நிலைமையைச் சொல்லமாட்டாரயோ? (எ - று.)

பலவகைப் பறவைகள் மரங்கள் ப்ரஸ்ரவணகிரி கோதாவரி நதி முதலியவற்றை நோக்கி இராவணன் சீதையைக்கவர்ந்துசெல்லுகிருனென்று விரைவாகச் சொல்லுங்கள் என்று சொல்லிச் சீதைசரணம் புக்காளென்பர், ஸ்ரீவால்மீகிபகவான். 'மனன்' என்றது, இங்கு, உள்ளிடம் என்றமாத்திரமாய்நின்றது. இனி, மனனே ஓதாது தெளிவு ஆய் உணர்வாருழை என்று எடுத்து, என்மனக் கருத்தைச் சொல்லாமலே தெளிவாக அறியும் எனது நாயகரிடம் என்றுஉரைத்தலும் பொருந்தும். "இங்கிதஜ்ஞாஸ்து கோஸலா:" என்றபடி கோசலதேயத்தவர் குறிப்பறிதலிற் சிறந்தவராதலால், அவர்கட்குத் தலைவரான இராமபிரான் 'ஓதாதுணர்வார்' எனப்பட்டான். இத்தொடர், வேதம் முதலிய எல்லா நூல்களையும் எவரும் ஓதுவிக்கவேண்டிய அவசியமில்லாமல் தாமே இயல்பில் அறியும் முற்றுணர்வுடையாரென்றும் பொருள்படும். *(891)*

81. முந்துஞ் சுனைகாண் [1]முழைவா ழரிகாள்
இந்தந் நிலனேடு மெடுத்த கைந்நால்
ஐந்துந் தலைபத் துமலைந் [2]துலையச்
சிந்தும் படிகண் டு[3]சிரித் திடுவீர்.

(இ - ள்.) முந்தும் - (என்) எதிரிற்காணப்படுகிற, சுனைகாள் - மலைச்சுனைகளே! முழை வாழ் அரிகாள் - மலைக்குகைகளில் வாழ்கிற சிங்கங்களே! இந்த நிலனேடுஉம் எடுத்த - இந்தத்தரையுடனே (என்னைப்) பெயர்த்தெடுத்த, கை நால் ஐந்துஉம்-(இவனது) இருபது கைகளும், தலை பத்துஉம் - (தூக்கிய) பத்துத்தலைகளும், அலைந்து உலைய சிந்தும்படி கண்டு - (எனதுநிலைமையை நீங்கள் ஸ்ரீராமனுக்குத் தெரிவித்து அந்நாயகன்வந்து எய்யும் அம்புகளால்) வருந்தியழியச் சிதறும்படிசெய்து, சிரித்திடுவீர் - (அதனைக் கண்டு) மகிழ்ச்சிச்சிரிப்புக் கொள்வீராக; (எ - று.)

சீதாபிராட்டி, பின்னும் பித்துப்பிடித்தவள்போல் 'சுனைகாள்! அரிகாள்! நீங்கள் சென்று எங்நிலையைத்தெரிவியுங்கள்: தெரிவித்தால் என்கணவனூர்வந்து என்னைக்கவர்ந்த மாபாவியின் இருபது கைகளோடு பத்துத்தலைகளையும் கொத்தாக அறுத்துத்தள்ளுவர்: அதுகண்டு மகிழ்வீர்' என்கிருள் என்க. '[1]முழைவாளரிகாள்' என்ற பாடத்துக்கு - குகையிலுள்ள ஒளியையுடைய சிங்கங்களே யென்க. சிரித்திடுவீர் - இகழ்ச்சிச்சிரிப்புக் கொள்வீரென்றுமாம். பி - ம்:— [2]உலையாய். [3]சிரிக்கிலிரோ. *(892)*

வே று.

## 82.—இராவணன் சீதைவார்த்தையைப் பரிகசித்தல்.

என்றின்ன பலவும் பன்னி யிரியலுற் றரற்று வாளைப் [ளைக்
பொன்[1]றுன்னு புணர்மென் கொங்கைப் பொலங்[2]குழை போரி லென்
[3]கொன்றுன்னை மீட்பர் [4]கொல்லம் மானிடர் [5]கொள்க வென்று
வன்றிண்கை யெறிந்து நக்கான் வாழ்க்கைநாள் வறிது [6]வீழ்வான்.

(இ - ள்.) என்று இன்ன பலஉம் பன்னி - என்று இத்தன்மை யனவான பலவார்த்தைகளையுஞ் சொல்லி, இரியல் உற்று அரற்றுவாளை - (தன்னிடத்திலின்று) மீளக் கருதிக் கூறுபவளான சீதையை நோக்கி,—வாழ்க்கை நாள் வறிது வீழ்வான் - (தனது) வாழ்நாள் வீணே அழியப்பெறுபவனான இராவணன்,—'பொன் துன்னு - பொன்னினாலாகிய அணிகலங்கள் நிறைந்த, புணர் மெல் கொங்கை - நெருங்கிய மென்மையான தனங்களையும், பொலம் குழை - பொன்னினாலாகிய குழையென்னுங்காதணியையு முடையவளே! அ மானிடர் - (நீ குறிக்கும்) அந்தமனிதர்கள், போரில் என்னை கொன்று—, உன்னை மீட்பர்கொல் - உன்னை மீட்டுக் கொள்ளவல்லரோ? கொள்க - (வல்லராயின்) கொள்வாராக,' என்னா-என்றுசொல்லி, வல் திண் கை எறிந்து நக்கான்-மிக வலிய (தனது) கைகளை (ஒன்றோடொன்று) அறைந்து பெருஞ்சிரிப்புச் சிரித்தான்;

சீதையைக் கவர்ந்துசெல்லும்இராவணன் 'நீசொல்லும் அம் மானிடர், போரில் என்னைவென்று உன்னை மீட்கவல்லரோ? வல்லராயின் கொள்க' என்று தன் திண்ணிய கையை யெறிந்து நக்கனனென்க. "விநாசகாலே விபரீதபுத்தி:" என்றபடி கேடுகாலங் கிட்டியதனாலே இப்படிப்பட்ட தீச்செயலைச் செய்தனனென்பார், 'வன்திண்கையெறிந்து நக்கான் வாழ்க்கைநாள் வறிதுவீழ்வான்' என்றார். சீதையைக் காமுற்ற காதல் கைகூடாமல் விரைவில் இறந்தொழிதலையே அதன்பயனாகப் பெறுபவனென்பது, 'வாழ்க்கைநாள் வறிதுவீழ்வான்' என்பதன் கருத்து. பொன்துன்னு என்பதற்கு - பொன்னிறமான சுணங்கு பரவிய என்றுமாம். பி-ம்:—[1] துன்னும். [2]குழாய். [3]வென்று. [4]கொல்லாம். [5]கொள்கை. [6]வீழ்ப்பான்.

இதுமுதல் ஏழுகவிகள் - கீழ்ப்படலத்தின் பதினான்காங்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (893)

## 83.—சீதை இராவணனை நோக்கி 'நீ வல்லவனாயின் தேரைச் செலுத்தாதே' என்றல்.

வாக்கினா லன்னான் சொல்ல மாயையால் வஞ்ச மானொன்று
ஆக்கினா யாக்கி [1]யுன்னை யாருயி ருண்ணுங் கூற்றைப்
போக்கினாய் புகுந்து கொண்டு போகின்றாய் பொருது நின்னைக்
காக்குமா காண்டி யாயிற் கடவலுன் றேரை யென்றாள்.

(இ - ள்.) அன்னான் - அவ்விராவணன், வாக்கினால் - (தனது) வாயால், சொல்ல - (இவ்வகை நிந்தைமொழிகளைக்) கூற,—(பிராட்டி அவனை நோக்கி), 'மாயையால் - மாயையினால், வஞ்சம் மான் ஒன்று ஆக்கினாய்-ஒரு பொய்ம்மானைக் கற்பித்தாய்; ஆக்கி - (அங்ஙனம் அதனை) உண்டாக்கி, (அதனைக்கொண்டு), உன்னை ஆர் உயிர் உண்ணும் கூற்றை போக்கினாய்-உனது அருமையான உயிரைக் கவர்ந்தொழிக்கும் யமன்போலும் இராமபிரானை (இவ்விடத்தை விட்டு)ப் போகச்செய்தாய்; புகுந்து - (அவ்வாறுசெய்து அவரில்லாதசமயத்தில்) இங்கு வந்து, கொண்டு போகின்றாய் - (கள்ளன்

போல என்னைக்) கவர்ந்துகொண்டு செல்லுகின்றாய்; பொருது நின்னை காக்கும் ஆ காண்டி ஆயின் - (அவரோடு) போர்செய்து உன்னைப்பாதுகாத்துக்கொள்ளும் வகையை அறிவாயானால், உன் தேரை கடவல்-உனதுதேரைச் செலுத்தாதே,' என்றாள் - என்று சொன்னாள்; (எ-று.)

இராவணன் தன் கணவனை இழித்துக் கூறவே, சீதை, 'அடா! வஞ்சகமாக மாயமானை யேவி, உன்னுயிர்க்குக் கூற்றுவனை என்னுயிரைப் பிரித்துப் பின்பு கள்வன்போற் புக்கு என்னைக் கவர்ந்துபோகின்றாய்: நீ வீரனாகி எதிர்நின்று பொருது உன்னுயிரைக் கொண்டுபோகவல்லையானால் தேரை யோட்டிக்கொண்டு ஓடாதே, நில்' என்றாள் என்க. பி - ம்:—[1]பின்னுன். (894)

## 84.—மற்றும் சீதை இராவணனை நோக்கி 'நீ அச்சத்தாலேயே வஞ்சனை செய்தாய்' என்றல்.

மீட்டுமொன் றுரைசெய் வா[1]ணீ வீரனேல் விரைவின் மற்றுன்
[2]கூட்டரா மரக்கர் தம்மைக் கொன்றுங்கை [3]கொங்கை மூக்கும்
வாட்டினர் வனத்தி லுள்ளார் மானிட ரென்ற வார்த்தை
கேட்டுமிம் மாயஞ் செய்த தச்சத்தின் கிளர்ச்சி யன்றே.

(இ - ள்.) மீட்டும் ஒன்று உரை செய்வாள் - மறுபடியும் ஒரு வார்த்தை (சீதை) சொல்வாளானாள்; 'நீ வீரன் ஏல் - நீ சுத்த வீரனானால்,—உன் கூட்டம் ஆம் அரக்கர் தம்மை - உன்னுடைய கூட்டத்தாராகிய இராக்கதர்களை, விரைவின் கொன்று - சிறிது பொழுதிலேகொன்று, உங்கைகொங்கைமூக்குஉம் வாட்டினர்-உன் தங்கையினது கொங்கையையும் மூக்கையும் அறுத்தவர்களாகிய, மானிடர்-மனிதர்கள், வனத்தில் உள்ளார் - காட்டிலிருக்கிறார்கள், என்ற வார்த்தை - என்ற செய்தியை, கேட்டுஉம் - (நீ) கேள்வியுற்றும், இ மாயம் செய்தது - (அவர்களை எதிர்த்துப்பொருது பழி தீர்க்க முயலாமல்) இந்த வஞ்சனையைச் செய்தது, அச்சத்தின் கிளர்ச்சி அன்றே - (உனக்கு அவர்களிடத்து உள்ள) பயத்தின் மிகுதியினாலன்றோ?' (எ - று.)—என்றாள் என்க.

'உன்னினத்தாரைக் கொன்றும், உன்தங்கையைப் பரிபவப் படுத்தியும் நின்ற மானிடவீரர், இந்த வனத்தில்தான் உளர்' என்று அறிந்தும், அவர்களிடத்து வீரத்தைக்காட்டாது வஞ்சகவுருக் கொண்டு திருடன்போற் பதுங்கிச் செல்லுகிற நீயோ வீரன்? உன்னைப்போல் பயங்கொள்ளியுளரோ?' என்றனள் சீதை யென்க. 'உன்கூட்டராமரக்கர்' என்றது, தாடகைமுதல் கரன் இறுதியாக வுள்ளா ரனைவரையுங் குறிக்கும். பி - ம்:—[1]நீவீரனே. [2]கூட்டமாம். [3]முலையும். (895)

## 85.—'மனிதரோடு பொருதல் இழிவன்றோ?' என்று இராவணன் கூறல்.

மொழிதரு மளவி னங்கை கேளிது முரணில் [1]யாக்கை
இழிதரு மனித ரோடே யான்செரு [2]வேற்ப லென்றால்

விழிதரு நெற்றி யான்றன் வெள்ளிவெற் பெடுத்த தோட்குப்
பழிதரு மதனிற் சாலப் [3]பயன்றரும் வஞ்ச மென்றான்.

(இ - ள்.) மொழி தரும் அளவில் - (இவ்வாறு சீதை) சொன்னவளவிலே, (இராவணன் அவளைநோக்கி), 'நங்கை-பெண்களிற் சிறந்தவளே! இதுகேள் - (யான்சொல்லும்) இவ்வார்த்தையை நீ கவனித்துக்கேட்பாயாக: முரண் இல் யாக்கை - வலிமையில்லாத உடம்பையுடைய, இழி தரு மனிதரோடே - இழிவான மனிதர்களுடனே, யான் செரு ஏற்பல் என்றால்-நான் எதிர்த்துப் போர் செய்வேனானால், (அச்செயல்), விழி தரு நெற்றியான்தன் வெள்ளி வெற்பு எடுத்த தோட்கு - (நெருப்புக்) கண்பொருந்திய நெற்றியையுடைய சிவபிரானது வெள்ளிமலையைப் பெயர்த்தெடுத்த (மிக வலிய என்னுடைய) தோள்களுக்கு, பழி தரும் - பழிப்பைத்தருமன்றோ? அதனில் - அவ்வாறு போரையேற்றுப் பழிப்பைப்பெறுவதைக்காட்டிலும், வஞ்சம் - வஞ்சனையே, சால பயன் தரும் - மிகவும் புகழாகிய பயனைத் தரும்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

என்கூட்டத்தாரைக் கொன்று என்தங்கையையும் மானபங்கஞ் செய்த அம்மனிதர்களை யான் எதிர்த்துப் பொருது அழிக்கத் தொடங்காமல் அவர்கட்கு இவ்வாறுவஞ்சனையால் தீங்குசெய்யத் தொடங்கிய காரணம் - நீ சொல்லுகிறபடி அவர்களிடத்து எனக்கு அச்ச மன்று: வலியற்ற மிகவும்எளிய அம்மனிதர்களை எதிராகக் கருதி யான் போர் தொடங்கினால் வெள்ளிவெற்பையும் எடுக்குமாறு மிக்குள்ள எனது தோள்வலிமைக்கு நிந்தையுண்டாகுமென்பதுபற்றியே என்பதாம். வஞ்சனைதான் எனக்குப் பழிவிளைக்காமலே அவர்கட்குத் தீங்கு விளைத்தற்கு ஏற்றதென்பான் 'சாலப் பயன்தரும் வஞ்சம்' என்றான். பி - ம்:—[1]ஆக்கை. [2]ஏற்பன், எதிர்ப்பன். [3]பயின்றரு. (896)

## 86.—சீதை இராவணனை நிந்தித்தல்.

பாவையு மதனைக் கேளாத் தங்குலப் பகைஞர் தம்பால்
[1]போவது குற்றம் வாளிற் பொருவது நாணம் போலாம்
ஆவது கற்பி னாரை வஞ்சிக்கு மாற்ற லேயாம்
ஏவமென் பழிதா [2]னென்னே யிரக்கமி லரக்கர்க் கென்றாள்.

(இ - ள்.) பாவைஉம் - சித்திரப்பதுமைபோல் அழகியவளும் கண்மணிப்பாவைபோல அருமையானவளுமான பிராட்டியும், அதனை கேளா - அவ்வார்த்தையைக்கேட்டு, (இராவணனைநோக்கி), 'தம் குலம் பகைஞர் தம்பால் போவது குற்றம் - தமது குலத்துக்குப் பகைவர்களாகவுள்ளவர்களிடத்தில் (போருக்குச்) செல்வது குற்றமும், வாளின் பொருவதுநாணம்போலாம் - (அவர்களுடனே) வாளினால் போர்செய்வது வெட்கமும் ஆகும்போலும்; கற்பினாரை வஞ்சிக்கும் ஆற்றலே - பதிவிரதாதருமமுடைய மாதரை வஞ்சனை செய்கின்ற வல்லமையே, ஆவது ஆம் - (குற்றமும் நாணமும் விளைக்காமல் நல்லது) ஆகும்போலும்; இரக்கம் இல் அரக்கர்க்கு - இரக்கமில்லாத

பாவிகளான இராக்கதர்க்கு, ஏவம் என் - குற்றந்தான் யாது? பழி தான் என்னே - பழிதான் யாது?' என்றாள் - என்று சொன்னாள்;

'தன்குலத்தவரைக் களைந்த பகைவரை யெதிர்ப்பது குற்றம்: அப்படிப்பட்டவரோடு போர்க்களத்திற் பொருவது வெட்கம்: கற்புடையாரை வஞ்சகத்தால் கவர்வதுவல்லமை: இரக்கமற்ற அரக்கர்க்குப் பாவம்என்? பழி தான் என்?' என்று சீதை பரிகசித்தன ளென்பதாம். மூன்றாமடிக்கு - வஞ்சனையே செய்துமுடித்தற்கு ஆவதாம் என்றும் பொருள்கொள்ளலாம். பாவை-உவமையாகுபெயர். ஏவம்-எவ்வமென்பதன் விகாரம். பி - ம்:—[1]போவதும். [2]என்னே. (897)

## 87.—இதுமுதல் ஆறுகவிகள் - குளகம்: அச்சமயத்தில் சடாயு வந்து எதிர்தலைக் கூறும்.

என்னுமவ் வேலை யின்க ணெங்கடா போவ [1]தெங்கே
நின்னிலென் றிடித்த சொல்ல னெருப்பிடைப் பரப்புங் கண்ணன்
மின்னென விளங்கும் வீரத் துண்டத்தன் மேரு வென்னும்
பொன்னெடுங் குன்றம் வானின் வருவதே போலு மெய்யான்.

(இ - ள்.) என்னும் அ வேலையின்கண் - என்று (இங்ஙன் சீதை) சொல்லுகிற அச்சமயத்திலே, 'எங்கு அடா போவது எங்கே - அடா நீ போகிறது எங்கே? எங்கே? நில் நில் - நில்லு நில்லு,' என்று—, இடித்த-இடிமுழக்கம்போல உரத்தகுரலாக அதட்டிக்கூறிய, சொல்லன் - சொற்களையுடையவனும், நெருப்பு இடை பரப்பும் கண்ணன் - கோபாக்கினியைத்தம்மிடத்திலே பரவச் செய்கிற கண்களையுடையவனும், மின் என விளங்கும் வீரம் துண்டத்தன் - மின்னல்போல ஒளிவீசி விளங்குகிற வலியமூக்கை யுடையவனும், மேரு என்னும் பொன் நெடு குன்றம் வானின்வருவதுஏ போலும் மெய்யான் - மேருவென்னும் பொன்மயமான பெரியமலை வானத்திற் பறந்துவந்தாற் போலும் பெரிய உடம்பின் தோற்றத்தையுடையவனுமாய்,—(எ-று.) —''எருவையின் மன்னன் வந்தனன்'' என மேல் 92 - ஆங் கவியில் முடியும்; அடுத்தநான்கு செய்யுள்களில் வரும் எச்சங்களுக்கும் அதுவே முடிக்குஞ்சொல்.

சீதை இராவணனை ஏளனமாகப் பேசுகையில், இராவணன் சீதையை யெடுத்துப் போவதைக் கண்ட சடாயு அருகு வந்து, 'அடே! நீ எங்கே போகிறாய்? நில்' என்று அதட்டிய வண்ணம் தடுக்கலானானென்க. ஈற்றடி - தற்குறிப்பேற்றவணி. [1]என்று. (898)

88. பாழிவன் கிரிக ளெல்லாம் பறித்தெழுந் தொன்றோ டொன்று
பூழியி னுதிர விண்ணிற் [1]புடையுறக் கிளர்ந்து பொங்கி
ஆழியு முலகு மொன்று யழிதர முழுதும் வீசும்
ஊழிவெங் காற்றி தென்ன [2]விருசிறை யூதை மோத.

(இ - ள்.) பாழி வல் கிரிகள் எல்லாம் - பெரியவலியமலைகள் யாவும், பறித்து எழுந்து - நிலைபெயர்க்கப்பட்டு மேலெழுந்து, ஒன்றோடு ஒன்று பூழியின் உதிர-ஒன்றுடன் ஒன்று தாக்குண்டு புழுதி போலப் பொடியாய்ச் சிந்தும்படியாகவும், விண்ணில் புடை உற

கிளர்ந்து பொங்கி - ஆகாயத்தினிடத்திலே அளாவிமோத (க் கடல்) பொங்கியெழுந்து (அதனால்), ஆழிஉம் உலகுஉம் ஒன்று ஆய் அழிதர - கடலும் உலகமும் ஒன்றுபட்டதாய் அழியும்படியாகவும், முழுதும் வீசும் - உலகமுழுவதிலும் வீசுகிற, ஊழி வெம் காற்று - கொடியபிரளயகாலத்துப் பிரசண்டமாருதம், இது என்ன - இது வென்றுசொல்லும்படி, இரு சிறை ஊதை மோத - (தனது) இரண்டு சிறகுகள அடித்தலா லாகுங் காற்று வீசவும்,—(எ-று.)—"எருவை யின் மன்னன் வந்தனன்" (92) என்க.

சடாயு இராவணனை எதிர்தர வருகையில் அவனுடைய இரு சிறைக்காற்று ஊழிக்காற்றுப் போன்ற தென்றவாறு. ஊழிக் காலத்தில் உலகமெங்கும் வீசும் பெருங் கொடுங்காற்றினால் மலை கள் நிலைபெயர்ந்து ஒன்றோடொன்று தாக்கிச் சிந்திப் பொடிபட, கடல் மேலெழுந்து பொங்க அதனுள்ளே பூமிமுதலிய உலகங்கள் அகப்பட்டு அழியும் என்பது, ஒருசார் நூற்கொள்கை. பி - ம்:— [1]புடைத்துகக், புடைத்துறக். [2]இருஞ். (899)

வேறு.

89\. [1]சாகைவன் றலையொடு மரமுந் [2]தாழமேல்
மேகமும் விண்ணின்மீச் செல்ல மீமிசை
மாகவெங் கலுழனும் வருகின் றானென
நாகமும் படமொளித் தொதுங்கி நையவே.

(இ - ள்.) (தன்சிறகு வீசுங் காற்றினால்),—மரம்உம் - மரங்களும், சாகை வல் தலையொடு தாழ - கிளைகளோடும் வலியதலைப் புறத் தோடும் பூமியிற் படியவும்,—மேல் மேகம்உம் - மேலிடத்திலுள்ள மேகங்களும், விண்ணின் மீ செல்ல-வானத்தில் மேன்மேல் ஒதுங்கிப் போய்விடவும், மீ மிசை மாகம் வெம் கலுழன் ஆம் வருகின்றான் என - மிகவும் உயர்வான ஆகாசமார்க்கத்தில் உக்கிரமூர்த்தியான கருட பகவான் தான் வருகின்றா னென்று எண்ணி, நாகம்உம் படம் ஒளித்து ஒதுங்கி நைய - சர்ப்பங்களும் படங்களை ஒடுக்கிக்கொண்டு பதுங்கி வருந்தவும்,—(எ-று.)—'வந்தனன்' (92) என்க.

சடாயு தன்சிறகு பெருங்காற்றுவீச வருகையில் கிளைகளோடும் உச்சிப்பகுதியோடும் மரங்களும் தாழவும், வானத்துச் செல்லும் மேகம் பின்னும் மீச்செல்லவும், கருடன் வருகின்றானென்று நாகம் படமொளித்து ஒதுங்கிநையவும் வந்தனன் என்பதாம்.கருடன் என்ப தற்கு-சிறகுகளாற் பறப்பவ னென்றும், நாகம் என்பதற்கு-மரத் திலும் மலையிலும் வசிப்பதென்றும் காரணப்பொருள் கூறுவர் வட நூலார். பி - ம்:—[1]சாகைவென் றலையொடு. [2]தாழவன், தாழ்வன.

இதுமுதல் நான்கு கவிகள் - கீழ்ப்படலத்தின் 6 - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (900)

90\. [1]யானையும் யாளியு முதல யாவையும்
[2]கானெடு மரத்தொடு தூறு கல்லிவை

[3]மேனிறைந் திருசிறை வீச்சி னேறலால்
வானமுங் [4]கானமு மாறு கொள்ளவே.

(இ - ள்.) யானைஉம் யாளிஉம் முதல யாவைஉம் - யானைகளும் யாளிகளும் முதலிய எல்லாமிருகங்களும், மரத்தொடு தூறு கல் இவை - மரங்களும் புதர்களும் கற்களும் ஆகிய இவைகளும், கானொடு-அக்காட்டினுடனே, இரு சிறை வீச்சின் மேல் நிறைந்து ஏறலால் - (தனது) இரண்டுசிறகுகள் வீசுங் காற்றின்வேகத்தால் நிலைபெயர்ந்துமேலேறிவானத்தில்நிரம்புதலால், வானம்உம் கானம் உம் மாறு கொள்ள-ஆகாயமும் காட்டினிடமும்(ஒன்றுமற்றொன்றாக) மாறுடவும்,—(எ - று.)

காட்டிலுள்ள மரம் புதர் கல் விலங்கு முதலிய எல்லாப் பொருள் களும் சிறகின்காற்றால் மேலெழுந்து வானஞ்சேர்ந்து நிறைந்து வானத்தை வெற்றிடமில்லாதபடி செய்தலாலும், அப்பொழுது காடு உள்ள இடம் வானம்போல வெற்றிடமாகுதலாலும், வானம் வனமாகவும், வனம் வானமாகவும் மாறியிட்டனஎன்க. முதல - குறிப்புப் பெயரெச்சம். பி-ம்:—[1]ஆனையுமாளியும். [2]கானெடு, கானொரு. [3]மேனிமிர்ந்திருசிறைவிசையினெற்றலால். [4]கானமுமாறுகொண்டவே, கானகமென்னலாயவே. (901)

91. உத்தமன் றேவியை [1]யுலகொ டோங்குதேர்
வைத்தனை யேகுவ தெங்கு வானிேனாடு
இத்தனை [2]திசையையு மறைப்பெ னீண்டெனாப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினான்.

(இ-ள்.) 'உத்தமன் தேவியை-யாவரினும் மேலானவனான இராமனது மனைவியை,உலகொடு-உலகத்தோடொப்ப, ஓங்கு-உயர்ந்துள்ள, தேர்-தேரிலே, வைத்தனை-வைத்துக்கொண்டவனாய், ஏகுவது எங்கு-(நீ) எங்குப் போகமுடியும்? வானினோடு இத்தனை திசையைஉம் ஈண்டு மறைப்பென் - ஆகாயத்துடன் மற்றைய திக்குக்களையெல்லாம் இப் பொழுது மறைத்துவிடுவேன்,' எனா-என்றுசொல்லி, பத்திரம் சிறைகளை விரிக்கும்-பாதுகாப்பைச் செய்தற்கு உரிய (தனது) சிறகுகளைப் பரப்புகிற, பண்பினான்-உயர்குணத்தையுடையவனுமாய்,—(எ-று.)

உலகங்கள் ஒன்றன்மீதொன்றாக ஓங்கிநிற்பதுபோல, தேரும் ஒன்றன்மீதொன்றாகப்பலஉறுப்புக்கொண்டு ஓங்கிநிற்றலால் 'உலகொடோங்குதேர்' என்றது. இனி, உலகொடு - நிலத்துடனே எடுத்து என்பாருமுளர். "தீண்டுற்றிலனென்றுணர்சிந்தையினான், மூண்டுற்றெழுவெங்கதமுற்றிலன்" என்று 93 - ஆஞ்செய்யுளில்வருதலால், முதலிற் சீதையைத் தூக்கிக்கொண்டு செல்வதைத் தடுத்து, போர்க்குக் கிட்டுகையில் சீதையைத்தீண்டிற்றிலன் என்பதை யுணர்ந்தானென்றலே பொருத்தம். உத்தமன் - புருஷோத்தமன். பண்பு - சமயத்துக்குத்தக்கபடி அறிந்து நடத்தல்; "பண்பெனப் படுவது பாடுஅறிந்துஒழுகல்" என்பது, கலித்தொகை. பண்பினான் - முற்றெச்சம். பி - ம்:—[1]உலங்கொடு. [2]திசையும் யானென்கின்றானெனப். (902)

92. வந்தன னெருவையின் மன்னன் மாண்பிலான்
எந்திரத் தேர்[1]செல வொழிக்கு மெண்ணினன்
[2]சிந்துரக் கால்சிரஞ் செக்கர் சூடிய
கந்தரக் கைலையை நிகர்க்குங் காட்சியான்.

(இ - ள்.) மாண்பு இலான் - நற்குணநற்செய்கையில்லாதவனை இராவணனது, எந்திரம்தேர் - யந்திரசக்தியையுடைய தேர், செலவு-செல்லுதலை, ஒழிக்கும் - தடுக்கும் [தடுக்கவேண்டுமென்ற], எண்ணினன் - கருத்தையுடையவனும், சிந்துரம் கால் சிரம் - சிந்தூரம்போல மிகச்சிவந்த கால்களையும் தலையையும், செக்கர் சூடிய கந்தரம்-செவ்வானத்தின் நிறத்தைக்கொண்ட கழுத்தையுமுடையனாகி, கைலையை-கைலாசகிரியை, நிகர்க்கும் - ஒக்கின்ற, காட்சியான் - (பெரிய வெண்ணிறமான உடம்பின்) தோற்றத்தையுடையவனுமாய், எருவையின் மன்னன்-கழுகுகளுக்கு அரசனாகியசடாயு, வந்தனன்-(அங்கு எதிரில்) வந்துசேர்ந்தான்; (எ-று.)

வேண்டியபடி வானத்திற் பறந்துசெல்லவல்ல தேரென்பார், 'எந்திரத்தேர்' என்றார்; இனி, எந்திரம் என்பதற்கு-சக்கரமென்று உரைப்பாரும் உளர். கழுகுக்குக் கால்களும் தலையும் மிகச் சிவந்தும், கழுத்துச்சிறிது சிவப்புக்கொண்டும், உடம்புமிகவெளுத்தும் இருத்தல் இயல்பாதலால், சிந்துரக் கால்சிரஞ்செக்கர்சூடிய கந்தரக்கைலையை உவமை கூறினார்; இது, இல்பொருளுவமை. கந்தரம்-தலையைத்தரிப்பது எனக் காரணப்பொருள்படும் வடசொல். கைலை-வடசொல்திரிபு.

87-ஆங் கவிமுதல் இதுவரையில் ஒருதொடராகவந்த ஆறு கவிகளுக்கும் அடியில்வருமாறு முடிபுகாணலாம்:—(87) என்னும் வேலையின் கண், — துண்டத்தனும் (92) காட்சியானும் ஆகிய எருவைமன்னன் எண்ணினனும் (87) சொல்லனும் கண்ணனும் மெய்யானுமாய், (88) இருசிறைஊதை மோத அதனால் (89) தாழ, செல்ல, நைய, (90) மாறுகொள்ள, (91) பண்பினனாய் (92) வந்தனன் என்க. பி - ம்:—[1]செலாதொழிக்குமீட்டினன், செலாது*** ஈட்டினல். [2]சிந்தொடுமதிச்சடைக்செக்கர்சூழ்களக் கந்தரன். (903)

வேறு.

### 93.—சடாயு சீதைக்கு அபயங்கூறல்.

ஆண்டுற் றவணங் கினையஞ் சலெனாத்
தீண்டுற் றிலனென் றுணர்சிந் தையினன்
மூண்டுற் றெழுவெங் கதமுற் றிலனன்
மீண்டுற் றுரையா டலைமே வினனால்.

(இ - ள்.) ஆண்டு உற்று - (இவ்வாறு சடாயு) அப்பொழுது அவ்விடத்தில்வந்து,—அ அணங்கினை - பெண்ணிற்சிறந்தவளான அச்சீதாபிராட்டியை (நோக்கி), அஞ்சல் எனா-பயப்படாதே யென்று தைரியஞ்சொல்லி,—தீண்டுற்றிலன் என்று உணர் சிந்தையினன் - (இராவணன் அவளைத்) தொட்டானில்லையென்று அறிந்த மனத்

தையுடையவனாய், மூண்டு உற்று எழு வெம் கதம் முற்றிலன் - மூண்டுபொங்கியெழுந்த உக்கிரமான கோபத்தை முதிரச்செய்யாதவனாகி [கோபத்தைச் சிறிது அடக்கிக்கொண்டு], மீண்டு உற்று உரை ஆடலை மேவினன்-மறுபடியும் (இராவணனை) நோக்கி (ச்சில வார்த்தைகளை) ச்சொல்லத்தொடங்கினான்; (எ - று.)— அதனை, அடுத்த ஒன்பது கவிகளிற் காண்க.

அவ்வணங்கினையென்பது அ வணங்கினை யெனத் தொக்கது, செய்யுளோசையின்பத்தின்பொருட்டு. உற்றிலன் எனப் பதம் பிரித்தல் மோனைத்தொடைக்குப் பொருந்தாது. கீழ் 'எங்கடா போவது,' 'நில்நில்,' 'உத்தமன் தேவியை...மறைப்பென் ஈண்டு' என்று சிலசொற்கள் சொன்னமைபற்றி 'மீண்டுஉற்று உரையாடலை மேவினன்' என்றார். 'ஆல்' இரண்டும்-அசை.

இதுமுதற் பன்னிரண்டுகவிகள்-கீழ்ப்படலத்தின் 210-ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (904)

### 94.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - சடாயு இராவணனை நோக்கிக் கூறுங் கோபவார்த்தைகள்.

**கெட்டாய் கிளையோ டுநின்வாழ் வையெலாஞ்**
**சுட்டா யிது[1]வென் னதொடங் கினைநீ**
**பட்டா யெனவே கொடுபத் தினியை**
**[2]விட்டே குதியால் விளிகின் றிலையால்.**

பதினான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீ—, கெட்டாய்-கெட்டுப்போனாய்: கிளையோடு நின் வாழ்வை எலாம் சுட்டாய் - உனது உறவினத்துடனே உனது வாழ்க்கைமுழுவதையும் எரித்தொழித்தாய்; இது என்னதொடங்கினை - இத்தன்மையதான தகுதியில்லாச்செயலை ஏன் செய்யத் தொடங்கினாய்? பட்டாய் எனவே கொடு - (நீ) இறந்தா யென்றே எண்ணிக்கொண்டு, பத்தினியை விட்டு ஏகுதி-(இராமபிரானது) மனைவியான பதிவிரதையாகிய சீதாபிராட்டியைவிட்டுச் செல்வாய்: (அங்ஙனம் விட்டுச்செல்வையாயின்), விளிகின்றிலை - இறக்கமாட்டாய்; (எ-று.)—ஆல் இரண்டும் - ஈற்றசை.

'கெட்டாய்' என்றது, தீக்குணந் தீச்செயலை அடைந்தாயென்றபடி. உனது இச்செயலால் உனது பந்துவர்க்கமும்செல்வவாழ்க்கையும் வாழ்நாளும் தவறாமல்விரைவில் அழிந்தொழியுமென்பான், 'கிளையோடு நின்வாழ்வையெலாஞ் சுட்டாய்' என்றான். 'சுட்டாய்' என்றது, விரைவும் நிச்சயமும் பற்றி எதிர்காலம் இறந்தகாலமாய் வந்த காலவழுவமைதி; 'பட்டாய்' என்பதும் இது. பட்டாய் எனவே கொடு-நீ சீதையைவிட்டுச் செல்லாவிட்டால் தவறாது விரைவில் அழிவதாகவே எண்ணிக்கொண்டு என்றபடி. பத்நீ-வடசொல்; அக்கினிசாக்ஷியாய் விவாகஞ் செய்துகொள்ளப்பட்ட மனைவி. 'விளிகின்றிலை' என்றது, இராமனால் அழியாய் என்றும்,

உன்னை நான் கொல்லாது விடுவேன் என்றுங்கூறியவாறு. பி-ம்:—[1]என்னை. [2]விட்டாலுனையான் விளிகின்றிலனுல். (905)

95. பேதாய் பிழைசெய் தனைபே ருலகின்
மாதா வனையா ளை[1]மனக் கொடுநீ
யாதாக [2]நினைத் தனை[3]யெண் ணமிலாய்
ஆதா ரநினக் கினியா ருளரோ.

(இ - ள்) பேதாய் - அறிவில்லாதவனே! பிழை செய்தனை - (நீ) தவறு செய்துவிட்டாய்; பேர் உலகின் மாதா அனையாளை - பெரிய உலகத்து உயிர்கட்கெல்லாம் தாய்போன்றவளான சீதா பிராட்டியை, நீ—, யாது ஆக மனம் கொடு நினைத்தனை - என்ன வென்று மனத்தில் நினைத்துக்கொண்டாய்? எண்ணம் இலாய் - ஆலோசனையில்லாதவனே! இனி நினக்கு ஆதாரம் யார் உளர்ஓ - இப்படி இராமன் விஷயத்திற் பேரபராதஞ்செய்தபின்பு உனக்குப் பற்றுக்கோடாவார் எவர்உளரோ? [எவருமில்லை]; (எ - று.)

உலகின்மாதா - லோகமாதா. உலகத்திலுள்ள எல்லாவுயிர் களினிடத்தும் மிக்க அன்புடையவளும், உலகமுழுவதுக்கும் மூல காரணமான திருமாலின் மனைவியாகிய இலக்குமியினது திருவவ தாரமும், திருமாலின் திருவவதாரமாகிய இராமனுக்குமனையாளும் ஆதலால், சீதை 'பேருலகின்மாதாவனையாள்' எனப்பட்டாள். மனக்கொடு = மனத்துக்கொடு; அத்துச்சாரியை தொக்கது. உல கத்தில் வேறுஎவரேனும் கோபித்தால் இராமபிரானிடத்துச் சரண் புகுந்து பிழைத்து உய்தல் கூடும்; சகலலோகநாயகனான அவ்விராம பிரானது கோபத்தின் பயனைத் தடுத்துப் பாதுகாக்கவல்லா ரெவரும் இல்லை யாதலால், அவன் திறத்தில் பெரிய அபராதத்தைச்செய்த நீ யாரைத் துணைக்கொண்டு பிழைத்திடுவாய்? எவரும் உனக்குத் தஞ்சமில்லாமல் இறந்தேவிடுவாய் என்பார், 'ஆதாரம் நினக்கு இனி யார்உளரோ?' என்றான். அன்றியும், குற்றமுடையோர்மேல் எம் பெருமான் கோபங்கொள்ளுங்கால் புருஷகாரமாய் நின்று இன்சொற் கூறித் தணிவுண்டாக்கி அக்குற்றத்தைப் பொறுப்பிக்கவல்ல பிராட்டிதிறத்திலே அபராதஞ்செய்தனை யாதலால் 'உனக்கு இனி ஆதாரம் யாருளர்?' என்றதாகவுங் கொள்ளலாம். இனியார் உளரோ என்றும் எடுக்கலாம். பி - ம்:—[1]மனத்தொடு. [2]நினைந் தனை. [3]ஏகலடா, ஏகலெடா. (906)

96. உய்யா மன்மலைந் துமரா [1]ருயிரை
மெய்யா கவிரா மன்விருந் திடவே
கையா ரமுகந் துகொடந் தகனர்
ஐயா புதிதுண் டதறிந் திலையோ.

(இ - ள்.) உமர் - உன் இனத்தாராகிய அரக்கர்கள், உய்யாமல் - தப்பிப்பிழைக்கமுடியாதபடி, இராமன்—, மலைந்து - போர் செய்து, ஆர்உயிரை - (அவர்களுடைய) அருமையான உயிரை, மெய் ஆக விருந்து இட - உண்மையாக விருந்துணவாக அளிக்க, அந்தகனார் - யமதருமராசாவானவர், கை ஆர முகந்து கொடு -

கைந்நிறைய வாரியெடுத்துக்கொண்டு, புதிது உண்டது-புதுமை யாக விருந்துண்டதை, ஐயா - (அவ்வரக்கர்க்குத்) தலைவனே! அறிந்திலை - நீ அறிந்தாயில்லையோ? (எ - று.)

அறிந்திருந்தனையாயின், உனதுஉயிர் ஒழியுமாறு இங்ஙனம் நீ இராமன்விஷயத்திற் பிழைசெய்திருக்கமாட்டா யென்ருனென்ற வாறு. அளவிறந்த பலஅரக்கர்கள் ஒருமனிதனால் எளிதில் அழி வடைந்தன ரென்பது கேட்டவர் எளிதில் நம்பத்தகாதவிஷய மென்ற கருத்தால், அதனை வற்புறுத்தும்பொருட்டு, 'மெய்யாக விருந்திட' என்ருன். வெகுகாலமாய் அரக்கருயிரைத் தொலைக்க முடியாமல் அவர்கட்கு அஞ்சி இனித்தொலைக்குஞ் சமயம் எப் பொழுது வாய்க்குமோ என்று எண்ணி எதிர்பார்த்திருந்த யமன் இராமனுதவியால் அவர்களுயிரை எடுத்துச்சென்றமையை இங்ஙனங் கூறினன். அந்தகனர் - உயர்வுப்பன்மை: கொடுமை விளக்கும். பி-ம்:—[1] உயிர்தான். (907)

97. கொடுவெங் கரிகொல் லியவந் ததன்மேல்
விடுமுண் டைகடா வவிரும் பினையே
அடுமென் பதுணர்ந் திலையா யினும்வன்
கடுவுண் டுயிரின் னிலை[1]கா ணுதியோ.

(இ - ள்.) கொடு வெம் கரி கொல்லிய வந்ததன்மேல் - (உன் னைக்) கொல்லுதற்குவந்ததாகிய கொடியகோபங்கொண்ட யானை யின்மீது, விடும் உண்டை கடாவ விரும்பினை - எடுத்துவீசும் மண்ணுண்டையைச் செலுத்த விரும்பினையே! அடும் என்பது உணர்ந்திலை ஆயின்உம் - கொல்லுமென்பதை அறியாயாயினும், வல் கடு உண்டு-கொடியவிஷத்தை உண்டு, (அதன்பின்), உயிரின் நிலை காணுதி - உயிரினது நிலைத்திருத்தலைக் காண்பையோ? [காணமாட்டாய் என்றபடி]; (எ - று.)

தன்மீது கறுக்கொண்டு கொல்லவந்த யானையின்மேல் ஒருவன் மண்ணுண்டையை யெடுத்து வீசினல், அது அவ்யானைக்கு யாதோருறுபாடுஞ் செய்யமாட்டாமல் அதன்கோபத்தை மிகுவித் தலாகிய பயனையே விளைக்குமாறுபோல, அரக்கர்தலைவனை உன் மீது கோபங்கொண்டு உன்னைக்கொல்லவந்த இராமபிரானுக்கு நீ இந்தத்துரோகத்தைச் செய்தது அப்பெருமானுக்குத் தீங்காய் முடியாமல் உன்மீது கோபம்மிகுதற்கே காரணமாய்விளையுமென் பான், 'கொடுவெங்கரிகொல்லியவந்ததன்மேல்விடுமுண்டை கடாவ விரும்பினையே' என்ருன்; ப்ரஸ்துதத்தில் அப்ரஸ்துதப்பொருளை ஏற்றிக்கூறியதனல், இது - லேசாலங்கார மெனப்படும். உண்டை =உருண்டை. 'இது கொடிய விஷம்; இதனை உண்டால் இது நம்மைக்கொல்லும்' என்று ஒருவன் அறியானயினும், அவன் கொடு விடத்தை உண்டால் பின்பு பிழைத்தல் இயலாதவாறுபோல, பிராட்டியைக் கவர்தல் உனது அழிவுக்குக்காரணமாமென்பதை நீ அறியாயாயினும் அதனைச் செய்தனையாதலால் உயிர்பிழைக்க மாட்டாய் என்பது, பின்னிரண்டடியின் கருத்து. உயிரின் நிலை -

உயிர் உடம்பைவிட்டுப்பிரியாதுநிற்றல். ஏகாரம் - இரக்கத்தோடு தேற்றம். ஓகாரம் - எதிர்மறை. பி - ம்:—[1]காணுதியால். (908)

98. எல்லா வுலகங் களுமிந் திரனும்
அல்லா தவர்மூ வருமந் தகனும்
புல்வாய் புலி[1] கண் டது[2] போல் வரலால்
[3]வில்லா ளனை[4]வெல் லு[5]மிடுக் கினரோ.

(இ - ள்.) எல்லா உலகங்கள்உம் - மூவுலகங்களிலும் உள்ளார் அனைவரும், இந்திரன்உம்-(திரிலோகாதிபதியான) தேவேந்திரனும், அல்லாதவர் மூவர்உம் - இவர்களையொழிந்தவராகிய [இவர்களினும்மேம்பட்ட]திரிமூர்த்திகளும், அந்தகன்உம்- பிராணிகளை யழித்தலையேநிகழ்த்துபவனான யமனும்,—புல்வாய் புலி கண்டதுபோல் வர் அலால் - (இராமலக்ஷ்மணர்களைக் கண்டவளவில்) மான்கள் புலியைக்கண்டாற்போ லாவரே யன்றி, வில்ஆளனை வெல்லும் மிடுக்கினர்ஓ-மிகச்சிறந்த வில்வீரனாகிய அவ்விராமபிரானை வெல்லுதற்குஉரிய வல்லமையுடையரோ? [அல்லர் என்றபடி]; (எ - று.)

"உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே" என்பதுபற்றி, 'எல்லா வுலகங்களும்' என்பதற்கு-உலகத்துப் பெரியோரெல்லோருமென்றும் பொருள் கொள்ளலாம். மூவர் - தொகைக்குறிப்பு; பிரம விஷ்ணு ருத்திரர். அந்தகன்-அழிவுசெய்பவன். புல்வாய் - புல்லைத் தின்னும் வாயையுடையது; வேற்றுமைத்தொகையன்மொழி: மானுக்குக் காரணவிடுகுறி. போல் வரலால் என்று பதம் பிரித்து உரைத்தல் சிறவாது. பி - ம்:—[1]கண்டன. [2]போல்வது. [3]வில்லாளரை. [4]வெல்ல. [5]மிடுக்குளரோ. (909)

99. இம்மைக் குறவோ டுமிறந் தழியும்
வெம்மைத் தொழி[1]லிங் கிதன்[2]மே லிலையால்
அம்மைக் கருமா நரகந் தருமால்
எம்மைக் கிதமா கவிதெண் ணினைநீ.

(இ - ள்.) இம்மைக்கு - இப்பிறப்பில் [இவ்வுலகத்திலே], உறவோடுஉம் இறந்து அழியும் வெம்மை தொழில் - சுற்றத்தாருடனே இறந்தொழிதற்குக் காரணமான கொடிய செய்கை, இங்கு இதன் மேல் இலை - இப்பொழுது இங்கு (நீ செய்த) இச்செயலினும் அதிகமானது வேறொன்றுமில்லை; (அன்றியும் நீ செய்த இச்செயல்), அம்மைக்கு - வருபிறப்பிலும் [இறந்தபின்வரும் நிலையில் என்றபடி], அரு மா நரகம் தரும் - மீளுதற்கு அரிய பெரியநரகத்தைத் தரும்: ஆல்-ஆதலால், இது - இச்செயலை, நீ—, எம்மைக்கு இதம் ஆக எண்ணினை-எப்பிறவிக்கு நன்மைதருவதாக நினைத்தாய்?(எ-று.)

இம்மைக்கு, அம்மைக்கு - உருபுமயக்கம். சீதையைக்கவர்ந்த இச்செயலால், இம்மையில் நீ என்னுலாயினும் ராமலக்ஷ்மணராலாயினும் சுற்றத்தோடு இறந்துதொலைவாய்; அன்றியும், கற்புடைமாதரை வலியக்கவர்ந்த தீவினையால், மறுவுலகத்திலும் நரகத்துன்பம் நுகர்வாய்; ஆதலின், நீ எண்ணிச்செய்த செயல் இருமை

யிலும் நன்மையை விளைக்காமல் தீமையையே விளைத்திடுமென்ப தாம். 'ஆல்' முதலது-தேற்றம். பி - ம்:—[1] இங்கிது. [2]மேம்படுதியால். ()

100. முத்தே வரின்மூ லமுதற் பொருளாம்
அத்தே வரிம்மா னிடரா தலினால்
எத்தே வரொடெண் ணுவ[1]தெண் ணமிலாப்
பித்தே றினை[2]யா தல்பிழைத் தனையால்.

(இ - ள்.) இமானிடர் - இந்த மனிதர்கள் [ராமலக்ஷ்மணர்], முத் தேவரின் மூலம் முதல் பொருள் ஆம் அ தேவர் ஆதலினால்-திரி மூர்த்திகளுள் மற்றை யிருமூர்த்திகளுக்கும் ஆதிகாரணமான தலைமைப்பொருளாகிய அந்த ஸ்ரீமகாவிஷ்ணுவின் அமிசமானவராதலால், எ தேவரொடு எண்ணுவது - (இவர்களை) எந்தத் தேவர்களோடு சமமாக நினைப்பது? எண்ணம் இலா பித்து ஏறினை ஆதல் - ஆலோசித்தற்கு இயலாத பைத்தியம் மிக்காயாதலால், (நீ), பிழைத்தனை - இக்குற்றஞ்செய்தாய்; (எ - று.)-ஆல்-ஈற்றசை.

முத்தேவரின்மூலமுதற்பொருளாம் அத்தேவர் - "முதலாவார் மூவரே அம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர்வண்ணன்" என்றார், பொய்கையாழ்வாரும். 'எத்தேவரொடு எண்ணுவது' என்றது, இவர்கள் எல்லாத்தேவர்களினும் மிகச்சிறந்தவரென்றபடி; சாதாரணதேவர்களுக்கு நீ செய்த பல பெரும்பிழைகள்போலத் தேவாதிதேவரான இவர்க்குச் செய்த பிழை வீண்போகாது என்பான், இங்ஙனங்கூறினான். பித்து - காமமயக்கம். ஆதல்-ஆதலால்; மூன்றும்வேற்றுமைத்தொகை. [1]எண்ணமிலாய் என்ற பாடத்துக்கு - ஆலோசனையில்லாதவனே! என்று பொருள். பி - ம்:—[2]ஆக, ஆகல். (911)

101. புரம்பற் றியபோர் விடையோ னருளால்
வரம்பெற் றவுமற் றுளவிஞ் சைகளும்
உரம்பெற் றன[1]வா வன[2]வுண் மையினோன்
சரம்பற் றியசா பம்விடுந் தனையே.

(இ - ள்.) புரம் பற்றிய - திரிபுரங்கள் தீப்பற்றியழிதற்குக் காரணமான, போர் - போரைச்செய்த, விடையோன் - விருஷபவாகனத்தையுடைய சிவபிரானது, அருளால்-கருணையினால், பெற்ற - (நீ) பெற்றனவாகிய, வரமும் - வரங்களும், மற்று உள விஞ்சைகளும் - மற்றும் (நீ) கொண்டுள்ள (மாயை முதலிய) வித்தைகளும், உண்மையினோன் சாபம் பற்றிய சரம் விடும் தனை உரம் பெற்றன ஆவன-என்றும் அழியாப்பொருளாகவுள்ள இராமபிரானு வில்லில்தொடுத்த அம்பைஎய்யும்வரையிலுமே வலிமைபெற்றன வாவன; (எ - று.)

அப்பெருமான் அம்பெய்தவளவிலே, உனது வரபலமும், மாயா பலமும், மந்திரசக்தியும், மற்றும் அனைத்தும் வலியழிந்திடுமென்பதாம். உண்மையினோன்-வாய்மையையுடையானென்றுமாம். வ்ருஷம், வித்யா என்ற வடசொற்கள் - விடை, விஞ்சை எனத் திரிந்தன. "மூவ்வகையுலகும் ஆள மூன்றரைக்கோடியாண்டும், எவ்வகைப்

படையும் வெல்லும் சந்திரவாளும்தான்'' என்ற உத்தரகாண்டச் செய்யுளால், இராவணன் சிவபிரானிடம் பெற்ற வரங்களை அறிக. பி - ம்—[1] ஆயினும். [2] உண்மையினோர். (912)

102. வானாள் பவன்மைந் தன் [1]வளைத் தவிலான்
தானே வரினின்று தடுப் பரிதால்
நானே [2]யவணுய்ப் பெனிந்நன் னுதலைப்
போநீ கடிதென்று புகன் றிடலும்.

(இ - ள்.) வான் ஆள்பவன் மைந்தன் - (முன்பு நிலவுலகத்தை ஆண்டு இப்பொழுது) மேலுலகம்புக்கு அங்கு இன்புறுபவனாகிய தசரதசக்கரவர்த்தியினது குமாரனான ஸ்ரீராமன், வளைத்த விலான் - வளைத்தவில்லையுடையவனாய், தானே வரின் - நேரிலே வந்துவிட்டால், நின்று தடுப்பு அரிது - (அவனால் உனக்கு நேரும் தீங்கை) எதிர் நின்று தடுத்தல் முடியாது; இ நல் நுதலை நானே அவண் உய்ப்பென் - அழகியநெற்றியையுடையவளான இம்மாதை நானே (முன் இருந்த) அவ்விடத்திற் கொண்டுசேர்ப்பேன்; நீ கடிது போ - நீ விரைவாக ஓடிப்போய்விடு, என்று புகன்றிடலும் - என்று (சடாயு இராவணனை நோக்கிச்) சொன்னவளவிலே,—(எ - று,)—'கேட்டான்' என அடுத்தகவியோடு தொடரும்.

வானாள்பவன்மைந்தன் - சக்கரவர்த்தித்திருமகன்; இது, பரம்பரையால் வந்த ஏற்றத்தை விளக்கும். இராமனிடத்தில் தனக்கு அன்புமிகுதற்குக் காரணம், தனது நண்பனாயிருந்து விண்ணுலகடைந்த தசரதசக்கரவர்த்தியின் குமாரனென்ற தொடர்பு ஆதலால், அதுதோன்ற 'வானாள்பவன் மைந்தன்' என்றான். மாயமானைத்தொடர்ந்து சென்றபொழுது வில்லுங்கையுமாகச் சென்றமைபற்றி, 'வளைத்தவிலான்' என்றான்; 'அவண்' என்றது, பஞ்சவடியாச்சிரமத்தை. 'இனி, 'அவணுய்ப்பென்' என்பதற்கு-இராமனிருக்கிற விடத்திற் சேர்ப்பேனென்றும் பொருள் கொள்ளலாம். நன்னுதல் - பண்புத்தொகையன்மொழி. அரக்கரனைவரையுந் தொலைப்பதாக முனிவர்க்கு உறுதிமொழிகூறி அதற்கென்று விற்பிடித்துள்ள இராமன் வந்துவிட்டால் உன்னால் தப்பியுய்ய முடியாது; அன்றி, உன்னைத் தப்பிஉய்யும்படி செய்வித்தலும் எவர்க்கும் அரிதாம்; ஆனதுபற்றி, நீ நேரில் இராமனிடத்துச் சீதையை ஒப்பிக்கவேண்டுமென்று கருதவேண்டா: என்வசத்தில் ஒப்பித்துவிட்டு உய்ந்து ஓடிபோ: நான் அவளை உரியபடி கொண்டுசேர்த்திடுவேன் என்பான், இங்ஙனங்கூறினான். அச்சுறுத்தி அதட்டிக் கூறும் வார்த்தை, அவனது அநுகூலத்திற்காகக்கூறுவதுபோல இங்ஙனங் கூறப்பட்டதென்க. பி - ம்:— [1]வளைந்த. [2] இவன். (913)

## 103.—இதுவும், அடுத்த கவியும் - இராவணன் மறுத்துக் கூறும் வார்த்தைகள்.

கேட்டா னிருதர்க் கிறைகேழ் கிளர்தன்
வாட்டா ரைநெருப் புகவாய் மடியா

ஓட்டா யினிநீ யுரைசெய் குநரைக்
காட்டாய் கடிதென் று[1]கனன் றுரையா.

(இ - ள்.) கேட்டான்-(இவ்வாறு சடாயு சொன்ன வார்த்தைகளைக்) கேட்டவனாகிய, நிருதர்க்கு இறை அரக்கர்கட்கு அரசனாகிய இராவணன், கேழ் கிளர் தன் வாள் தாரை நெருப்பு உக-ஒளி விளங்குகிற தனதுகொடிய கண்விழிகளினின்று நெருப்புச் சிந்த, வாய் மடியா-(கோபத்தால்) வாயைமடித்துக்கொண்டு, (சடாயுவை நோக்கி), 'ஓட்டாய்-(மேல்மேல்வார்த்தைகளை) ஓடவிடாதே; இனி-இப்பொழுது, நீ உரைசெய்குநரை கடிதுகாட்டாய்-நீ சொல்லுகின்றவர்களை விரைவில் (எனக்குக்) காட்டுவாய்', என்று கனன்று உரையா - என்று கோபித்துச்சொல்லி,— (எ - று.)—'உரையா' என்பது, மேல் 105 - ஆங் கவியில் 'என்னும்மளவில்', என்பதைக் கொள்ளும்.

வாள்-கொடுமைக்கு இலக்கணை. தாரை-கண்ணின் கருவிழி; தாரா என்ற வடசொல்லின் திரிபு. வாய்மடியா-உதட்டைக் கடித்துக்கொண்டு. ஓட்டாய் - எதிர்மறையொருமையேவல். காட்டாய் - உடன்பாட்டு ஒருமையேவல். ஓட்டாய் என்பதை உடன்பாடாகக் கொண்டு, என்தேரை ஓடவிடுவா யென்று பொருள்கொண்டு, தேரைத்தடுக்காதே யென்று கருத்துக்கூறுதலும்ஒன்று. இனி, ஓட்டாய் என்பதை, ஓட்டையென்பதன்விளியாகக்கொண்டு, அறிவில்லாதவனே! அல்லது வலியற்றவனே! என்று விளியாக்கிப் பொருள்படுத்தவும் இடமுண்டு. பி - ம்:—[1]கதழ்ந்துரையா, கதழ்ந்திடலும். (914)

104. வரும்[1]புண் டரம்வா ளி[2]யின்மார் புருவிப்
பெரும்புண் டிறவா வகைபே ருதிநீ
இரும்புண் ட[3]நிர்மீள் கினு[4]மென் னுழையில்
கரும்புண் டசொன்மீள் கிலள்கா ணுதியால்.

(இ - ள்.) வரும் புண்டரம் - எதிர்த்துவருகிற கழுகே! வாளியின் - (எனது)அம்பினால், மார்பு உருவி பெரு புண் திறவா வகை - (உனது) மார்பு முழுதும் துளைபட்டுப் பெரியபுண்ணாக விரிந்து போகாதபடி, நீ—, பேருதி - அப்பாற்செல்வாயாக: இரும்பு உண்ட நிர் மீள்கினும்-காய்ந்தஇரும்பு உட்கொண்ட நீர் (ஒருகால்) மீண்டு வெளிப்படுமாயினும், என் உழையில் கரும்பு உண்ட சொல் மீள்கிலள்- என்னிடத்திலிருக்கிறவளான கருப்பஞ்சாற்றையொத்த இன்சொற்களையுடைய இப்பெண் மீண்டுசெல்ல மாட்டாள்; காணுதி - (இதனை) அறிந்துகொள்; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

புண்டரம் - அண்மைவிளி. புண்டரமென்பது - கழுகின் பெயராதலை "இருந்த புண்டரமே கங்கம் எருவையே பவணையோடு, கருஞ்சிறை யுவணமைந்தும் கழுகென்ப சகுந்தமும் பேர்" என்ற நிகண்டினாலும் அறிக. நீர் என்பது நிர் எனக் குறுக்கல்விகாரமாயிற்று: செய்யுளோசையின்பொருட்டு. பழுக்கப்பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீரை வார்த்தால் அதுசென்று லயப்பட்டுமீண்டும்

வெளிப்படாது; இது மீளாமைக்கு உவமைகூறப்படுதலை, "நீர விரும்புண்ட நீரதுபோல வென்னுருயிரை, யாரப்பருகவெனக்காரா வமுதானாயே" என்ற திருவாய்மொழியிலும், "பாதங்களென்னுயிரைத், நீரவிரும்புண்ட நீராக்குமாறு உள்ளஞ் சேர்ந்தனவே" என்ற திருவேங்கடத்தந்தாதியிலுங் காண்க. கரும்பு - சாற்றுக்கு ஆகுபெயர். உண்ட - உவமவுருபு. கரும்பு உண்ட - கருப்பஞ்சாற்றின் தன்மையையுட்கொண்ட என்றலுமாம். கரும்புண்டசொல்-அடையடுத்தசினையாகுபெயர்; இதனை அன்மொழித்தொகையாக் கொள்ளலாகாது; ஐவகைத்தொகைகளுள் ஒன்றன்மேல் தோன்றாமையால். பி-ம்:—[1] புண்டரவாளி. [2] உன். [3] நீர். [4] என்னுழையிக். (915)

வேறு.

**105.—இதுவும் அடுத்த கவியும் - அதுகேட்டுச் சீதை மிகவும் வருந்த, சடாயு அவட்கு உறுதிகூறலைத் தெரிவிக்கும்**

என்னும் மளவிற் பயமுன்னி னிரட்டி யெய்த
அன்னம் மயர்கின்றது நோக்கி [1]யரக்கன் யாக்கை
சின்னம் முறுமிப் பொழுதே சிலையேந்தி [2]நங்கண்
மன்னன் மகன்வந் திலனென் றுவருந் தலன்னை.

(இ - ள்.) என்னும் அளவில் - என்று (இராவணன்) சொன்னவளவிலே, அன்னம் - அன்னப்பறவைபோன்ற சீதாபிராட்டி, பயம் முன்னின் இரட்டி எய்த - முன்னினும் இருமடங்காக அச்சமுண்டாக, அயர்கின்றது - வருந்துகின்றதை, நோக்கி-(சடாயு) பார்த்து, (அவளை நோக்கி), 'அன்னை - தாயே! அரக்கன் யாக்கை-இந்த இராக்கதனது உடம்பு, இப்பொழுதே—, சின்னம் உறும்-பலதுண்டுகளாதலை (என்னால்) அடையும்; நங்கள் மன்னன் மகன்-நமது தலைவனை தசரதசக்கரவர்த்தியினது குமாரன் (ஸ்ரீராமன்], சிலை ஏந்தி வந்திலன் - வில்லைக் கையிலேந்திக்கொண்டு வந்தானில்லையே, என்று-என்ற காரணத்தால், வருந்தல் - வருந்தாதே'; (எ-று.)

'என்வசப்பட்ட இவளை உன்னால் விடுவிக்கமுடியாது' என இராவணன் அழுத்தமாகக் கூறுதலும், அச்சம் முன்னிலும் இரட்டிப்பாக மிகுந்து சீதை வருந்த, அதைப் பார்த்து, 'அரக்கனுடல் விரைவிற் கண்டதுண்டமாகும்: சக்கரவர்த்தித் திருமகனார் சிலையேந்தி வரவில்லையே என்று வருந்தாதே' என்று தேறுதல் கூறினன் சடாயுவென்பதாம். சீதையை உளப்படுத்தி, 'நங்கள்' எனப்பட்டது; முன்னிலையுளப்பாட்டுத் தன்மைப்பன்மை. அன்னை-அண்மைவிளி; அன்பினாலும், மரியாதையினாலும், அன்னையென விளித்தான். பி - ம்:—[1] அரக்கனுக்கை. [2] எங்கள்.

இதுமுதல் இருபத்தாறு கவிகள் - கீழ்ப்படலத்தின் 132-ஆங் கவி போன்ற கலிநிலைத்துறைகள். (916)

106. முத்துக் கனபோன் முகத்தாலி முலைக்கண் [1]வீழத்
[2]தத்துற் றயரே றலைதால பலத்தி னேலும்

கொத்தொப் பனகொண் டிவன்கொண் டனவென்ற வாசை
பத்திற்கு மின்றே பலியீவது பார்த்தி யென்றான்.

(இ - ள்.) 'முத்து உக்கனபோல் - முத்துக்கள்சிந்தினபோல, முகத்து ஆலி மூலைக்கண் வீழ - முகத்தினின்று [கண்களிலிருந்து] சிந்துகிற நீர்த்துளிகள் கொங்கைகளிலே விழும்படி, தத்து உற்று அயரேல்-துடிப்பு அடைந்து தளர்வுறுதே; தாலபலத்தின் ஏலும் கொத்து ஒப்பன - பனம்பழங்களின் நிறைந்த ஒரு கொத்தைப்போல் வனவாகிய, தலை கொண்டு - (இவனது பத்துத்) தலைகளைக் கொண்டு, இவன் கொண்டன என்ற ஆசை பத்திற்குஉம் - இவன் (வென்று) வசப்படுத்திக்கொண்டவையென்று சொன்ன பத்துத் திக்குக்களுக்கும், இன்று பலி ஈவது-இப்பொழுதே (நான்) பலியாகக் கொடுத்தலை, பார்த்தி - பார்ப்பாயாக', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

மற்றும், சடாயு, 'கண்ணீரை முத்துக்கனபோலச் சிந்தி யழாதே: பனம்பழங்களின் கொத்துப்போல் ஒருநிரையாக அடர்ந்துள்ள இவனது பத்துத்தலைகளையும் நான் அறுத்து,இவனால் முன்பு வெல்லப்பட்டனவான பத்துத்திக்குக்களுக்கும் இன்று பலி கொடுக்கிறேன், பார்' என்றனனென்பதாம். இராவணன் தலைக்குப் பனங்காய்க்கொத்து உவமைகூறப்படுதலை "குலைகொண்ட வீரைந் தலையான்", "இலங்கையார்கோனைப், பானுநேர்சரத்தாற் பனங்கனி போலப் பருமுடியுதிர" என்ற இடங்களிலுங் காண்க. முகம்-இங்கே மூலைக் கண்ணுக்கு இலக்கணை. தாலபலம் - வடமொழித் தொடர். கொண்டன வென்ற எனப் பதம்பிரித்து, வென்றுகொண்டனவான என்று உரை கூறினுமாம். ஆசை - திக்கு. ஆசை பத்து-எட்டுத் திக்குக்களோடு மேலும் கீழும். பலி - தேவர்க்குஇடும் உணவு. பி-ம்:—[1]வீழ்ந்து. [2]தத்தத்தலையிங்கிவை. (917)

## 107.—இதுமுதல் இருபத்திரண்டு கவிகள்-சடாயுவுக்கும் இராவணனுக்கும் நடந்த போரைக் கூறும்.

இடிப்பொத்த முழக்கி னிருஞ்சிறை வீசி யெற்றி
முடிப்பத் திகளைப் படியிட்டு முழங்கு துண்டம்
கடிப்பக் கடிதுற்றவன் காண்டகு நீண்ட வீணைக்
கொடிப்பற்றி யொடித்துயர் வானவ ராசி கொண்டான்.

(இ - ள்.) முடி பத்திகளை - (இராவணனது) தலைவரிசையை, படி இட்டு-கீழேதள்ளி, முழங்கு துண்டம் கடிப்ப - (அவற்றை)ப் பேரொலிசெய்கிற (தனது) மூக்கினால் கடிப்பதற்காக, இடிப்பு ஒத்த முழக்கின் இரு சிறைவீசிஎற்றி-இடிமுழக்கத்தைப்போன்ற பேரொலி யுண்டாம்படி பெரிய (தனது) சிறகுகளை வீசியடித்துக்கொண்டு, கடிது உற்றவன்-விரைவாக ஓடிவந்தவனான சடாயு,—காண்தகு நீண்ட வீணை கொடி பற்றி ஒடித்து - பார்த்தற்குத் தகுதியான [அழகிய] நீண்ட வீணையின் வடிவத்தை யெழுதிய (அவ்விராவணனது) தேர்க்கொடியைப் பிடித்துஒடித்து, உயர் வானவர் ஆசி

கொண்டான் - (அதனால்மகிழ்ச்சியுற்றுச்) சிறந்த தேவர்கள் (தன்னை வாழ்த்திக்கூறும்) வாழ்த்துக்களைப்பெற்றான்; (எ - று.)

இராவணன் தலைவரிசைகளைப் புவியில் தள்ளித் தன் மூக்காற் கொத்தக் கருதியவனாய், அந்தச் சடாயு, இடிபோன்ற முழக்கமுண்டாகத் தன் சிறகுகளை வீசியடித்துக் கொண்டு விரைந்து வந்து, முதலில் அந்த இராவணனது வீணைக்கொடியைப் பற்றி ஒடித்தான்: அந்தத் திறனைக் கண்டு வானவர் அந்தச் சடாயுவுக்கு வாழ்த்துக் கூறினரென்றவாறு. இச்செய்யுளால், இராவணனுக்கு வீணைக் கொடியென்று தெரிகிறது; மேல் 167-ஆம் செய்யுளில் "பாகவீணையின் கொடியொன்று கிடந்தது பார்மேல்" என வருதலுங் காண்க. இராவணன் சங்கீதத்தில் தேர்ந்தவனாதலால், அதற்கு அறிகுறியாக, சிறந்த இசைக்கருவியான வீணையின் வடிவைக் கொடியிற் கொண்டனன்போலும். இராவணனது துவசம் மனிதன்தலைவடிவமெழுதப்பட்டதென்று கூறியுள்ளார், ஸ்ரீவால்மீகிபகவான். (918)

108. அக்காலை யரக்க [1]னரக்குருக் கன்ன கண்ணன்
எக்காலமு மின்னதொ ரீடழி வுற்றி லாதான்
நக்கா னுலகேழு நடுங்கிட நாக மன்ன
கைக்கார் முகத்தோடு கடைப்புரு வங்கு னித்தான்.

(இ - ள்.) எ காலம்உம் - முன்பு எந்தக்காலத்திலும், இன்னது ஓர் ஈடு அழிவு - இத்தன்மையானதொரு பெருமைக்கேட்டை, உற்றிலாதான் - அடைந்திராதவனாகிய, அரக்கன்-இராவணன், அ காலை- (இங்ஙனங் கொடி ஒடிபட்ட) அப்பொழுது, அரக்கு உருக்கு அன்ன கண்ணன் - உருக்கிய அரக்கைப்போன்ற [கோபத்தால் மிகச்சிவந்த] கண்களையுடையவனாய், நக்கான் - (கோபத்தாற்) பெருஞ்சிரிப்புச் சிரித்து [வீராட்டகாசம்பண்ணி], உலகு ஏழ்உம் நடுங்கிட - ஏழுலகங்களும் நடுங்கும்படி, நாகம் அன்ன கை கார்முகத்தோடு கடைப்புருவம் குனித்தான் - மலைபோன்ற (தன்) கைவில்லையும் (தன்) புருவங்களின் நுனியையும் வளைத்தான்; (எ - று.)

ஒருபோதும் இங்ஙனம் ஈடழியாத இராவணன், தன் கண்கள் அரக்குருக்கையொத்து நிற்க, கோபத்தாற் புருவத்தை நெறித்துக் கொண்டு உலகேழும் நடுங்கும்வண்ணம் பேரொலி படைத்த வீரச் சிரிப்புடனே கையில் வில்லையேந்தி வளைத்தனனென்பதாம்: ஈற்றடி- உடனவிற்சியணி; இங்கு, புருவவளைவும் வில்வளைவும் ஒன்றுக்கு ஒன்று உபமானமாகுந் தன்மை தொனிக்கும். உலகேழும் நடுங்கிட நக்கான் என்றும் இயைக்கலாம். நாகம் - அசையாதது. பி - ம்:—
[1] உருக்கரக்கு. (919)

109. சண்டப் பிறைவா ளெயிற்றான் சரதாரை மாரி
மண்டச் சிறகா லடித்தான் சிலவள்ளு கிரால்
கண்டப் படுத்தான் சிலகாலனுங் காண வுட்குந்
துண்டப் படையாற் சிலதுண்ட துண்டங்கள் கண்டான்.

(இ - ள்.) பிறை - பிறைச்சந்திரன்போலவளைவாக விளங்குகிற, வாள் - ஒளியையுடைய, சண்டம் எயிற்றுன் - உக்கிரமான வக்கிரதந் தங்களையுடையவனான இராவணனது [இராவணன் பெய்த], சர தாரை மாரி - அம்புகளின் வரிசையாகிய மழைப் பெருக்கு, மண்ட - (தன்மீது) மிகுதியாய் நெருங்கிவர, (அதுகண்டு சடாயு), சில-(அவற் றுள்) சில அம்புகளை, சிறகால் அடித்தான் - (தன்) சிறகுகளினால் அடித்துத் தள்ளினன்; சில-சில அம்புகளை, வள் உகிரால்-கூரிய (தனது) கால்நகங்களால், கண்டப்படுத்தான் - துண்டுபடுத்தினன்; சில-சில அம்புகளை, காலன்உம் காண உட்கும் துண்டம் படையால்- யமனும் பார்த்தற்கு அஞ்சும்படியான (தனது) மூக்காகிய ஆயுதத் தால், துண்ட துண்டங்கள் கண்டான் - சின்னபின்னமாக்கினன்;

இராவணன் சடாயுவை இலக்காகக்கொண்டு சரமாரிபொழிய, அதுகண்டசடாயு, அவற்றுள் சிலவற்றைத் தன் சிறகாலடித்தும், சிலவற்றைக் கூர்நகங்களினால் கண்டப்படுத்தும், சிலவற்றைத் தன் கூரலகால் துண்டமாக்கியும் அந்த அம்புகளையெல்லாம் சின்ன பின்ன மாக்கினனென்பதாம். செய்யுளோசையின்பத்துக்காக, உகி ரென்பது உகீரென நீட்டல் விகாரமடைந்தது. (920)

110. மீட்டும் மனுகா நெடுவெங்க [1]ணநந்த நாகம்
வாட்டுங் கலுழன் னெனவன்றலைப் பத்தின் மீதும்
நீட்டுந் நெடுமூக் கெனுநேமியன் சேம விற்கால்
கோட்டும் மளவின் மணிக்குண்டலங் கொண்டெ ழுந்தான்.

(இ - ள்.) நெடு வெம் கண்-பெரிய கொடிய கண்களையுடைய, அநந்தம் நாகம் - அளவிறந்த பலபாம்புகளை, வாட்டும் - ஒருங்கே வருத்துகின்ற, கலுழன்என-கருடன்போல, வல் தலை பத்தின்மீது உம்நீட்டும்-(இராவணனது) வலியபத்துத்தலைகளின் மேலும் நீட்டு கிற, நெடுமூக்கு எனும் நேமியன்-நீண்ட (தன்) மூக்காகிய சக்கரா யுதத்தையுடையவனாய், சேமம் வில் கால் கோட்டும் அளவில் - (தனக்குப்) பாதுகாவலாகவுள்ள (சிறந்த) வில்லின் தண்டத்தை (இராவணன்)வளைக்குமளவிலே, மீட்டும்அணுகா-மீண்டும் (சடாயு) அவனருகில் நெருங்கி, மணிகுண்டலம் கொண்டு எழுந்தான்-(அவன் காதுகளில் அணிந்துள்ள) இரத்தின குண்டலங்களைப் பறித்துக் கொண்டு கிளம்பினன்; (எ-று.)

இராவணன்எய்த பல அம்புகளைச் சிறகுகளினாலும் நகங்களி னாலும் மூக்கினாலும் அழித்திட்ட சடாயு, பின்பு அவன் ஒருகால் வில்வளைக்கும்பொழுதிற்குள்ளே அவனருகில்வந்து அவனது காதின் குண்டலங்களைப் பறித்துக்கொண்டு சென்றனனென்பதாம். பல பாம்புகள் ஒருங்கே அழியுமாறு கருடன்வந்தாற்போல, இரா வணனது பத்துத்தலைகளின்மேலும் தனது கூரியமூக்கை நீட்டிக் கொண்டு வந்தனனென்க. 'நெடுவெங்கணநந்தநாகம்' என்பதற்கு- அளவில்லாத பலகண்களையுடைய பாம்பென்று உரைத்து, பல தலைப்பாம்பு என்று கருத்துக்கொள்வாரும் உளர். கீழ் 107-ஆங் கவியில் "கடிதுற்றவன் வீணைக் கொடிப்பற்றி யொடித்து ஆசி கொண்டான்" என்றதை நோக்கி, 'மீட்டும் அணுகா' என்றார்.

கலுழன்- வடசொற்றிரிபு. சேமவில்-உற்ற காலத்து உதவுமாறு துணையாகக் கொள்ளும்வில். பி - ம்:—[1] அநந்தனுகம். (921)

111. எழுந்தான் றடமார்பினி லேழிரெ டேழு வாளி
அழுந்தாது கழன்றிட[1]ப் பெய்தெடுத் தார்த்த ரக்கன்
பொழிந்தான் [2]புகர்வாளிகண் மீளவும் போர்ச்ச டாயு
விழுந்தா னென[3]வஞ்சினர் விண்ணவர் வெய்து யிர்த்தார்.

(இ - ள்.) (அவ்வளவிலே), அரக்கன்-இராவணன்,- ஆர்த்து - ஆரவாரஞ்செய்துகொண்டு, எழுந்தான் தட மார்பினில் - (தனது குண்டலங்களைப் பறித்துக்கொண்டு) மேலெழுந்த சடாயுவினது பரந்த மார்பிலே, ஏழிரெடு ஏழு வாளி - பதினான்கு பாணங்கள், பெய்து எடுத்த - எடுத்துப் பெய்தவை, அழுந்தாது கழன்றிட - பதிந்துநின்றிடாமல் அப்பாற்செல்லவே, - மீளவும் - மறுபடியும், புகர் வாளிகள் - ஒளியுள்ள பல அம்புகளை, போர் சடாயு விழுந்தான் என-போர்செய்த சடாயு விழுந்திட்டானென்று கருதுமாறு, பொழிந்தான் - சொரிந்தான்; (அதனால்), விண்ணவர் - தேவர்கள், அஞ்சினர்-அச்சமடைந்து, வெய்து உயிர்த்தார் - வெப்பமாகப் பெருமூச்சு விட்டார்கள்; (எ-று.)

முதலில் அரக்க னெய்திட்ட பதினாலுஅம்புகள் சடாயுவின் மார்பிலூன்றாது சென்றிடவே, இராவணன் மீண்டும் சடாயு விழுந்திட்டா னென்னுமாறு புகர்வாளிகள் பொழிந்தன னென்பதாம். தவறாமல்விழுவா னென்ற கருத்தில் 'விழுந்தான்' என்றது, தெளிவு பற்றிய காலவழுவமைதி. ஏழிரெடேழு-ஏழோடுகூடிய ஏழு. எடுத்தார்த்த-பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். பி - ம்:— [1]எய்து. [2]சரமாரிகள். [3]விண்ணவரஞ்சினர். (922)

112. புண்ணிற் புதுநீர் [1]பொலியப்பொழி புள்ளின் வேந்தன்
மண்ணிற் கரனேமுத லோருதி ரத்தின் வாரி
[2]கண்ணிக் கடலென்று [3]நுகர்ந்தது கான்று மீள
விண்ணிற் பொலிகின்றதொர் வெண்ணிற மேக [4]மொத்தான்.

(இ - ள்.) புண்ணின்-(தன் உடம்பில் அம்புகள்பட்டதனாலாகிய) புண்களினின்று, புதுநீர் - புதுமையான இரத்தத்தை, பொலிய பொழி-மிகுதியாகச்சொரிகிற, புள்ளின் வேந்தன் - (கழுகென்னும்) பறவைகளுக்கு அரசனாகிய (வெண்ணிறமுடைய) சடாயு,—மண்ணில் கரன்ஏ முதலோர் உதிரத்தின்வாரி - தரையிற் பெருகிய கரன் முதலிய அரக்கர்களுடைய இரத்தவெள்ளத்தை, கடல் என்று கண்ணிநுகர்ந்தது - கடலென்றுகருதி(த்தான்) பருகியதான, ஓர் மேகம்-ஒருமேகமானது, மீள கான்று-(அங்ஙனம் தான் உட்கொண்ட நீரைப்) பின்பு வெளிச்சொரிந்து, விண்ணின் வெள்நிறம் பொலிகின்றது-வானத்தில் வெண்ணிறமாய் விளங்குகின்றதை, ஒத்தான் - ஒத்திருத்தான்; (எ - று.)

கடலின்நீரை முகந்து உட்கொண்டு வானத்தில் எழுந்து அதனை மழை நீராகச் சொரிந்து வெண்ணிறமாய் விளங்குதல், மேகத்தின் இயல்பு. இறந்தாரது இரத்தத்தைப் பருகும் இயல்புள்ள

கழுகரசாகிய சடாயு இப்பொழுது தன்உடம்பிற் புண்களினின்று இரத்தத்தைச் சொரிந்து வானத்தில் வெண்ணிறமாய் விளங்குதற்கு, தரையிற்பெருகிய கரன்முதலியோரது இரத்தவெள்ளத்தைக் கடலென்று கருதிப் பருகியதான ஒரு மேகம் பின்பு அதனை மழையாக வெளிச்சொரிந்து வானத்தில் வெண்ணிறமாய் விளங்குதலை யொக்குமென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. புதுநீர் - புதியசெந்நீர்; இதுவரையிலும் ஒருபொழுதும் சடாயு புண்பட்டுக் குருதிசொரிந்ததில்லையென்பது விளங்க, 'புதுநீர்' என்கிறார்; அன்றியும், புது வெள்ளம் செந்நிறமாயிருத்தல் பற்றிச் செந்நீரைப் புதுநீர் என்றுருமாம். [2]கண்ணிற்கடலென்ற பாடத்திற்கு - கண்ணிற்காணும் பெரிய தோற்றத்தாற் கடலென்று கருதியென்று உரைக்கலாம். இனி, கண்ணின், கண்- பெருமை, இன்-சாரியையுமாம். பி - ம்:—[1]பொழியப் பொலி. [2]கண்ணீர்க். [3]கவர்ந்தது. [4]என்ன. (923)

113\. ஒத்தா னுடனே யுயிர்த்தா னுருத்தா னவன்றோள்
பத்தோடு பத்தின் னெடும்பத்தியிற் றத்தி மூக்கால்
கொத்தா நகத்தாற் குடையாச் சிறையாற் புடையா
முத்தார மார்பிற் கவசத்தையு மூட்ட றுத்தான்.

(இ - ள்.) ஒத்தான் - (கீழ்க்கூறிய) ஒப்புமைபெற்றவனான சடாயு,—உடனே-, உயிர்த்தான் உருத்தான் - பெருமூச்சு எறிந்து கோபித்து,—அவன் தோள் பத்தோடு பத்தின் நெடு பத்தியில் - அவ்விராவணனுடைய இருபதுதோள்களின் நீண்டவரிசையிலே, தத்தி - பாய்ந்து, மூக்கால் கொத்தா - மூக்கினாற்கொத்தியும், நகத்தால் குடையா - கால்நகங்களினாற் குடைந்தும், சிறையால்புடையா - சிறகுகளினால் அடித்தும், முத்துஆரம் மார்பின் கவசத்தைஉம் மூட்டு அறுத்தான் - முத்துமாலையையணிந்த மார்பில் தரித்துள்ள அவன் கவசத்தையும் பொருத்துவாய் அறும்படி செய்தான்;

சடாயு தத்திக் கொத்த நகத்தாற்குடைந்து சிறையாற் புடைத்து அவ்விராவணனது கவசத்தையும் மூட்டு அறுத்தான் என்க: கவசத்தை மூட்டறுத்தல் - கவசத்தின் பூட்டுகளைத் துணித்தல். (924)

114\. அறுத்தானை யரக்கனு மைம்பதொ டைம்ப தம்பு
செறித்தான் றடமார்பிற் செறித்தலுந் தேவ ரஞ்சி
வெறித்தார் வெறியாமு னிராவணன் வில்லைப் பல்லாற்
பறித்தான் பறவைக்கிறை விண்ணவர் பண்ணை [1]யார்ப்ப.

(இ - ள்.) அறுத்தானை - (அவ்வாறு கவசத்தை) மூட்டறுத்த சடாயுவை, அரக்கனஉம் - இராவணனும், ஐம்பதொடு ஐம்பது அம்பு தடமார்பில் செறித்தான் - நூறுபாணங்களைப் பரந்த மார்பிலே அழுந்தச்செய்தான், செறித்தலும் - (அங்ஙனம் இராவணன் நூறுபாணங்களைச் சடாயுவின்மார்பிற்) பதியச்செய்தவளவிலே, தேவர்-தேவர்கள், அஞ்சி வெறித்தார் - (இந்த அம்புகளினால் சடாயுவுக்கு என்ன ஆகுமோ என்று) பயப்பட்டுத்திகைத்தார்கள்: வெறியாமுன் - (அங்ஙனம்) திகைத்தற்குமுன்பே [உடனே விரை

வில் என்றபடி], பறவைக்கு இறை - பறவைகளுக்கு அரசனாகிய அச்சடாயு, விண்ணவர்பண்ணை ஆர்ப்ப - அத்தேவர்களுடையகூட்டம் ஆரவாரிக்கும்படி, இராவணன் வில்லை பல்லால் பறித்தான் - இராவணனுடைய வில்லை(த்தனது) பற்களினாற் கடித்துப்பிடுங்கினான்; (எ-று.)

கவசத்தைமுட்டறுத்த சடாயுவை இராவணன் அம்புகொண்டு தடமார்பிற் செறித்தலும், தேவரஞ்சி வெறித்தார்: உடனே சடாயு அவ் வில்லைத் தேவரார்ப்பப் பறித்தானென்பதாம்: தங்கட்குத் தலைவனாய்த் தங்கள் பகைவரைத் தொலைத்துத் தங்களைப் பாதுகாத்தற்காகவே திருவவதரித்த திருமாலாகிய இராமபிரானுக்கு உற்றுழியுதவவந்த சடாயுவின் துயர்க்குத் தாம் துயருறுதலும், அச்சடாயுவின் வெற்றிக்குத் தாம் மகிழ்தலும் தேவர்கட்கு இயல்பாயின. 'விண்ணவர் பண்ணையார்ப்ப' என்பதற்கு - தேவர்களுடைய துந்துபிவாத்தியம் ஆரவாரிக்க என்று பொருளுரைப்பாருமுளர்: அப்பொழுது, வாச்சியப்பெயராகிய பணையென்பது பண்ணையென விரித்தலென வேண்டும். பி-ம்:—[1] ஆர்க்க. (925)

115. எல்லிட்ட வெள்ளிக் கயிலைப் [1]பொருப் பீச னோடு
மல்லிட்ட தோளா லெடுத்தான்சிலை வாயின் வாங்கி
வில்லிட் டுயர்ந்த நெடுமேக மெனப்பொ லிந்தான்
சொல்லிட் டவன்றோள்வலி யாருளர் சொல்ல வல்லார்..

(இ - ள்.) எல்இட்ட - ஒளிபொருந்திய, வெள்ளி கயிலை பொருப்பு - வெள்ளிமயமான கைலாசமலையை, ஈசனோடு-(அதற்குத்) தலைவனை சிவபிரானுடனே, மல் இட்ட தோளால் எடுத்தான் - வலிமைமிக்க (தன்) தோள்களால் எடுத்தவனை இராவணனது, சிலை - வில்லை, வாயின் வாங்கி - வாயினாற் பறித்துக் கௌவிக்கொண்டு, (சடாயு), வில் இட்டு உயர்ந்த நெடு மேகம் என பொலிந்தான் - இந்திரவில்லைத் தோற்றுவித்துக்கொண்டு வானத்திலெழுந்த பெரியமேகம்போல விளங்கினான்; அவன் தோள்வலி சொல் இட்டு சொல்ல வல்லார் யார் உளர் - அச்சடாயுவினது புயபலத்தைச் சொற்களைக்கொண்டு சொல்லவல்லவர் எவர் உள்ளார்?

இராவணன் வில்லைத் தன்வாயலகாற் கவ்வியவண்ணம் இந்திரவில்லைக்கொண்டு வானத்து ஓங்கிய மேகம்போலப் பொலியும் அந்தச் சடாயு எவராலுஞ் சொல்ல முடியாத வலிமையுடையான் என்பதாம். இங்கே 'தோள்வலி' என்றது - உடல் வலிமையென்றபடி. சிறப்புப்பெயர், பொதுப்பொருளை உணர்த்திற்று. பி-ம்:—[1] கிரி. (926)

116. மீளா நிறத்தாயிரங் கண்ணவன் விண்ணி னோட
வாளா [1]லறுத்தான் சிலைவாயிடை நின்றும் வாங்கித்
தாளா லிறுத்தான் றழல்வண் ணன் றடக்கை வில்லைத்
தோளா லிறுத்தான் றுணைத்தாதைத னம்பிற் றோழன்.

(இ - ள்.) மீளா நிறத்து - திரும்பாத மார்பையுடைய [என்றும் எவர்க்கும் புறங்கொடாத என்றபடி], ஆயிரம் கண்ணவன் -

ஆயிரங்கண்களையுடையவனான தேவேந்திரன், விண்ணின் ஓட - வானத்தில் தோற்றோடும்படி, வாளால் அறுத்தான் - ஆயுதங் கொண்டு (திக்குவிசயகாலத்தில்அவனை) வருத்தியவனான இராவணனது, சிலை - வில்லை, வாயிடைநின்றும் வாங்கி - (தன்) வாயினின்றுவாங்கி, தாளால் இறுத்தான்-கால்களால் ஒடித்திட்டான்: (யாவனெனில்),—தழல் வண்ணன் - நெருப்புப்போலுஞ் செந்நிறமுடைய சிவபிரானது, தட கை-பெரிய கையிலிருந்ததாகி (க் கந்யாசுல்கமான), வில்லை - சிவதனுசை, தோளால் இறுத்தான்-(சீதா கலியாணகாலத்தில் சநகமகாராசன் சொன்னபடி தனது) தோள் வலிமையால் ஒடித்திட்டவனான இராமபிரானுக்கு, துணை-உதவி செய்யவந்தவனும், தாதைதன் அன்பின் தோழன்-அவன்தந்தையான தசரதசக்கரவர்த்தியினது அன்புள்ள தோழனுமான சடாயு;

இராவணன்வில்லை வாயாற் கவ்விய சடாயு அவ்வாயினின்று அவ்வில்லை வாங்கித் தாளாலிறுத்தானென்க. சிவன்வில்லைக் கையாலொடித்தவனது தந்தையின் தோழன், இந்திரனை வென்றவனது வில்லைக் காலாலொடித்தானென்று ஒருசமத்காரந்தோன்றக் கூறினார். பி-ம்:—[1]ஒறுத்தான். (927)

117. [1]ஞாலம் படுப்பான்றனை தாற்றலுக் கேற்ற நல்வில்
மூலம் மொடிப்புண்டது கண்டு முனிந்த நெஞ்சன்
ஆலம் மிடற்றான்புர மட்டதொ ரம்பு போலும்
சூலம் [2]மெடுத்தா னெறிந்தான்மறந் தோற்றி லாதான்.

(இ - ள்.) ஞாலம் படுப்பான் - உலகத்துக்கு அழிவுசெய்பவனான இராவணன், தனது ஆற்றலுக்கு ஏற்ற நல் வில் - தனது வலிமைக்குத் தக்கதான சிறந்த அந்தவில், மூலம் ஒடிப்புண்டது - (சடாயுவினால்) அடியோடு ஒடிக்கப்பட்டதை, கண்டு - பார்த்து, முனிந்த நெஞ்சன்-கோபித்தமனத்தையுடையவனாகி, மறம் தோற்றிலாதான் - பகைவெல்லும்வீரத்திற் சோர்வுறாதவனாய், ஆலம் மிடற்றான் புரம் அட்டது ஓர் அம்பு போலும் சூலம் எடுத்தான் எறிந்தான் - விஷத்தையுண்ட கண்டத்தையுடையவனான சிவபிரான் திரிபுரத்தை அழித்த(திருமால்வடிவமான) ஒப்பற்றதோர் அம்பைப் போன்ற சூலாயுதத்தை யெடுத்து(ச் சடாயுவின்மேல்) எறிந்தான்; (எ - று.)

இராவணன் தனதுவில் மாற்றானாற்பற்றி ஒடிக்கப்பட்டது கண்டு சோர்வுகொள்ளாது முனிவுகொண்டு, திரிபுராந்தகனது கணை போன்ற சூலமொன்றையெடுத்து அந்தச்சடாயுவின்மீது எறிந்தனனென்பதாம். [1]ஞாலம்மெடுப்பான் என்றபாடத்துக்கு - உலகத்தைப்பெயர்த்தெடுக்கவல்ல இராவணனென்க; கீழ் 62 - ஆங் கவியில் "பாரினை யெடுக்க வேண்டின் பலவினை சிலசொல் ஏழாய்" என வந்தது காண்க. திரிபுரசங்காரகாலத்தில் திருமால் சிவபிரானுக்கு அம்பாய் நின்று உதவி அப்புரத்தை அழித்ததை, "குழனிறவண்ண நின்கூறுகொண்ட, தழனிறவண்ணன் நண்ணார் நகரம், விழுநனிமலைசிலை வளைவுசெய்தங்கு, அழனிறவம்பது வானவனே" என்ற பெரியாரருளிச்செயலாலும் அறிக. மூலம்மொடிப்

புண்டது, ஆலம்மிடற்றன், சூலம்மெடுத்தான் என்றவற்றில், மகரவொற்று - விரித்தல். பி-ம்:—[1] ஞாலம்மடுப்பான். [2] எடுத்தார்த்து. (928)

118. ஆற்றா னிவனென் [1]றுணராதியென் னாற்றல் காணென்று
ஏற்றா னெருவைக்கிறை முத்தலை [2]யெஃக மார்பின்
மேற்றா னிதுசெய்பவர் யாரென விண்ணு ளோர்கள்
தோற்றாது நின்றார்தம தோள்புடை கொட்டி யார்த்தார்.

(இ - ள்.) எருவைக்கு இறை-கழுகுகளுக்கு அரசனான சடாயு,— 'இவன் ஆற்றான் என்று உணராதி - இவன் (இச்சூலத்திற்கு எதிர்நிற்க) வல்லமையில்லாதவனென்று எண்ணாதே: என் ஆற்றல் காண் - எனது வலிமையையப் பார்', என்று - என்று சொல்லி, முத் தலை எஃகம் - மூன்றுதலைகளையுடைய அச்சூலாயுதத்தை, மார்பின்மேல் ஏற்றான்-(தனது) மார்பின்மேல் ஏற்றுக்கொண்டான்; (அவ்வளவில்), விண் உளோர்கள் - (அதனைக்கண்ட) வானத்திலுள்ள தேவர்கள், இது செய்பவர் யார் என - இவ்வாறு பகைவனெறிந்த வலியசூலத்தை மார்பில் வலிய ஏற்றுக்கொள்பவர் (சடாயுவைத் தவிர) வேறு எவர்? [எவருமில்லை] என்று எண்ணி, தோற்றாது நின்றார் - (இராவணனிடத்து அச்சத்தால் தங்களுடம்பு) வெளித்தோன்றாதபடி மறைந்துநின்று, தம தோள் புடை கொட்டி ஆர்த்தார் - (களிப்பினால்) தங்கள் தோள்களைத் தட்டி ஆரவாரஞ் செய்தார்கள்; (எ - று.)—தான் - அசை.

'இவன் இந்தச்சூலாயுதத்துக்கு ஆற்றானென்று எண்ணாதே: என்வல்லமையைக்காண்' என்றுசொல்லி, சடாயு அந்த முத்தலை வேலை யேற்க, 'இவ்வருஞ்செயலைச் செய்பவன் சடாயுவே' என்று சொல்லித் தேவர் மறைந்துநின்று தம்தோள்களைக் கொட்டியார்த்தாரென்பதாம். பி - ம்:—[1] உணராதென். [2] எஃகை. (929)

119. பொன்னோக்கியர் தம்புல னோக்கிய புன்க ணோரும்
இன்னோக்கிய ரில்வழி யெய்திய நல்வி ருந்தும்
தன்னோக்கிய நெஞ்சுடை [1]யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமு மாமென மீண்ட தவ்வேல்.

(இ - ள்.) பொன் நோக்கியர் தம் - பொருளினிடத்தே கருத்துடையவர்களாகிய விலைமாதர்களுடைய, புலன் - ஐம்புலவின்பத்தை, நோக்கிய - கருதி யாசைப்பட்ட, புன்கணோர் உம் - வறுமையையுடையவர்களும்,— இன் நோக்கியர் இல் வழி - இனியபார்வையையுடைய [நற்குணநற்செய்கையுள்ள] மகளிர் இல்லாத இடத்தில், எய்திய - சென்றடைந்த, நல் விருந்து உம் - நல்ல விருந்தினர்களும்,— தன் நோக்கிய நெஞ்சு உடை - தன்னையே [ஆத்மசொரூபத்தையே] கருதிய மனத்தையுடைய, யோகியர் தம்மை - யோகத்தேர்ச்சியையுடைய முனிவர்களை, சார்ந்த - அடைந்த, மெல் நோக்கியர் நோக்கம் உம் - மென்மையான பார்வையையுடைய அழகியமாதர்களுடைய ஆசைநோக்கும், ஆம் என - ஒப்பாமென்றுசொல்லும்படி, அ வேல் - (சடாயு மார்பில் ஏற்றுக்கொண்ட) அந்தமுத்தலைவேலானது, மீண்

டது - (அவன்மார்பைத் துளைபடுத்த மாட்டாமல் தாக்கித்) திரும்பி விட்டது; (எ - று.)

சுவரிலெறிந்த பந்து மீண்டிடுதல்போலச் சடாயுவின் மார்பிலெறிந்த வேல் உள்புகமாட்டாது மீண்டமைக்கு இச்செய்யுளில் மூன்று உவமைகள் கூறப்படுகின்றன: முத்தலைவேலாதலின், மூன்று உவமைகள் போலும். (1) "அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார்" என்றபடி ஆடவரை அன்புபற்றி விரும்பாமல் பொருள்பற்றியே விரும்புந்தன்மையரான வேசையரது ஐம்புலவின்பத்தை விரும்பிப் பொருளுடையார் சென்றால் பொருள்கொடுத்துத் தம்விருப்பத்தைமுடிக்க இயலும்; அன்றி, பொருளில்லாத வறியவர்கள் விரும்பி அவ்வேசையர் வீட்டுக்குச் சென்றால் உள் நுழையவும் இடம்பெறாமல் மீள்வர். (2) "பெருந்தடங்கட் பிறைநுதலார்க்கெலாம், பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால், வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும், விருந்து மன்றி விளைவன யாவையே" என்றவாறு நற்குண நற்செயல்கட்கு ஏற்பக் கல்வியறிவோடு செல்வமுமுடைய மகளிருள்ள வீட்டிற்கு விருந்தினர் சென்றால் அவர் அம்மகளிரது கொழுநரான ஆடவர்களால் உரியபடி உபசரிக்கப்படுவர்; அத்தன்மைய மனைவியரில்லாத மனைக்கு விருந்தினர்சென்றால் அங்கு உள்நுழையவும் இடம்பெறாமல் விருந்தினர் வறிதே மீளுவர். (3) அழகியகண்ணின் நோக்கத்தையுடையமாதர்கள் தமது குறிப்பு நோக்கைச் சாதாரணசனங்களின்மேற் செலுத்தினால் அந்நோக்குத் தடையின்றிச்சென்று அவர்களுள்ளத்தில் ஊன்றி அவர்க்குத் தம்மிடத்துவிருப்பத்தை விளைத்து அவர்களைவசீகரித்தற்கு வல்லதாம்: அந்நோக்கந்தானே ஆன்மசொரூபத்திலேயே கருத்தை யூன்றியவரான யோகியர்மேற் செலுத்தப்பட்டால் அவர்களுள்ளத்தில் ஊன்றி அவர்கட்கு வேட்கையை விளைத்துப் பயன் பெறமாட்டாது: ஆகவே, பொன்னோக்கியர்தம்புலன் நோக்கிய புன்கணோரும், இன்னோக்கியரில்லா இல்வழிச் சென்ற விருந்தும், யோகியரைச்சார்ந்த மென்னோக்கியரின் காதல்நோக்கும் போல, அவ்வேல் சடாயுவின் மார்பைத் துளைத்து ஊடுருவமாட்டாமல் மீண்டது என்க: பயனுவமை.

(1) பொன் நோக்கியர்-தம்மைக்கருதிவரும் ஆடவர் இளைஞரோ கிழவரோ, அழகுடையவரோ அவலட்சணமுடையவரோ என்று பாராமல் பொன்னையே [பொருளையே] முக்கியமாகக் கருதுபவர்: நோக்குதல் - பார்த்தல். காமமாவது - ஒருகாலத்து ஒருபொருளால் ஐம்புலனும் நுகர்தற்சிறப்புடைத்தான இன்பமாதலால், அதனைக் கருதுதல், 'புலனோக்குதல்' எனப்பட்டது. புன்கண் - துன்பம்; துன்ப முண்டாம்பொழுது கண்கள் மலர்ச்சியின்றி வாட்டமடைதலால், புன்கண் என்று துன்பத்திற்குப் பெயராயிற்று; புன்கண் - வாடிய கண்: இக்காரியப்பெயர் காரணமாகிய வறுமையின்மேல் நின்றது. புன்கண் - வறுமையென்னும் பொருளில் வருதலை "புலனுழுதுண்மார் புன்கணஞ்சி" என்ற புறநானூற்றிலுங் காண்க. பொருளின்மை துன்பத்துள் துன்ப மாதலால், வறியவர், 'புன்கணோர்' எனப்பட்டனர்.

(2) நல்விருந்து - "மோப்பக்குழையும் அனிச்சம் முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" என்றபடி இன்முகமும் இன்சொல்லும் உபசாரமும் இல்லாவிடின் வாடிநீங்கும் மெல்லியல்பினரான விருந்தினர். இரண்டாமடியில், இல் நோக்கியர் எனப்பிரித்து, இல் நோக்கியர் - (தமது கருத்தின் வழியே தமதுமனையாள் ஒழுகுதலில்லாமல்) மனையாளின்முகத்தைப் பார்த்து அவள்கருத்தின்படியே தாம் நடப்பவரான பெண்வழிச்செல்வாரது மனையின்கட் சென்ற விருந்தினர் உபசாரம் பெறாது மீளுதல்போல என்று பொருள் கொள்ளினும் அமையும்; திருக்குறளில் பெண்வழிச்சேரலென்ற அதிகாரத்தில் "இல்லாளை யஞ்சுவான் அஞ்சும் மற்றுஎஞ்ஞான்றும், நல்லார்க்கு நல்லசெயல்," "நட்டார் குறைமுடியார் நன்றாற்றாரநன்னுதலாள், பெட்டாங் கொழுகுபவர்" என்றவற்றால், பெண்வழிச்செல்வார் தாம் விரும்பியபடி பொருள்கொண்டு விருந்தோம்புதல் முதலிய அறஞ்செய்யமாட்டாமையை அறிக: "இல்லாளை யஞ்சி விருந்தின் முகங் கொன்றநெஞ்சிற், புல்லாளன்" என்றார், சிந்தாமணியிலும்; இப்பொருளில், 'இல்நோக்கியர்' என்பதில், இல் - இல்லாள்; இல் என்ற மனையின்பெயர் - இடவாகுபெயராய், அதில் வாழும் மனையாளைக் குறித்தது: இல்வழி என்பதில், இல் - மனை, வழி - ஏழனுருபு. இனி, (விருந்தினரைக் கண்ட போது முகமலர்ச்சியோடு) இனிய பார்வையுடையாராகக் கணவன்மனைவியர் என்ற இருவரும் இல்லாத வீட்டினிடத்தேஎன்று, இன்னோக்கியரில்வழியென்பதற்குப் பொருள் கூறுவாருமுளர்: வேறாகாத அன்புடையிருவர் கூடியல்லது விருந்தோம்புதல்செய்யப்படாமையின், இன்னோக்கியரில்வழி யெய்திய நல்விருந்து பயன்பெறாது மீளுமென்க.

இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரதியாகாரம் தாரணை தியானம் சமாதி என்ற யோகத்தின் அங்கம் எட்டனுள் ஈற்றதாகிய சமாதியின் இலக்கணம் ஆன்மாவாகிய தன்னைத்தான் காணுதலாதலால், அவ்வங்கங்களிற் குறைவில்லாத யோகிய ரென்பதுபட, 'தன்னோக்கிய நெஞ்சுடை யோகியர்' என்றார். யோகியர் - யோகமுடையவர், தன்னோக்கிய யோகியர் - வழூவமைதி. 'தன்னோக்கிய நெஞ்சுடை' என்ற அடைமொழியால், பொறியுணர்வெல்லாம் புலத்தின்வழாமல் ஒருவழிப்படுத்து மனத்தினை ஒருவழி நிறுத்தி, நிறுத்திய அம்மனம் நிலைதிரியாமல் குறித்தபொருளோடு கொளுத்திய யோகியர் பொய் கொலை களவே காமம் பொருள்நசை இவ்வகை யைந்தும் அடக்கியவ ராதலால், பிறர் தம்விஷயமாகக் குறிப்பு நோக்கங் கொள்ளுதலைத் தாம் நோக்குதலுஞ் செய்யா ரென்பது விளங்கும். [1]யோகியர்தன்மைசார்ந்த என்னும் பாடத்துக்கு, யோகியரது தன்மை பொருந்திய மகளிரது நோக்கம்போல என்று உரைத்து யோகியர் பரம்பொருளினிடத்தே யன்றிப் பிறபொருளினிடத்திற் கருத்தைச் செலுத்தாதவாறுபோல, தம்கணவனிடத்தே யன்றிப் பிறரிடத்துத் தம் கருத்தைச் செலுத்தாத கற்புடைய மகளிரது நோக்கம் பிறரை எதிர்ப்பட்டவழி அவர்மேற் செல்லாமல் மீளுதல்போல வேல் மீண்டதென்று கருத்துக் கொள்ளுதலும் ஒன்று. (930)

120. வேகம்முடன் வேலிழந் தான்படை வேறெ டாமுன்
மாகம் மறையும்படி நீண்ட வயங்கு மான்றேர்ப்
பாகன் றலையைப் பறித்துப் படர்[1]கற்பி னுள்பால்
மோகம் படைத்தா [2]னுளைவெய்த முகத்தெ றிந்தான்.

(இ-ள்.) வேல் இழந்தான் - (இவ்வாறு) சூலத்தைப் பய னின்றி இழந்தவனான இராவணன், வேகம்முடன்-விரைவுடனே, வேறு படை எடா முன் - வேறு ஆயுதத்தை எடுக்காமுன்னமே [எடுத்தற்குமுன்பே], (சடாயு), மாகம் மறையும்படிநீண்ட வயங்கு மான் தேர் பாகன் தலையை பறித்து - பெரிய வானமும் மறையும்படி உயர்ந்துள்ளதும் விளங்குகிற குதிரைகள் பூட்டியதுமான (அவ்வி ராவணனது) தேரைச்செலுத்துகிற சாரதியினுடைய தலையைக் கொய்து, படர் கற்பினுள்பால் மோகம் படைத்தான் உளைவு எய்த முகத்து எறிந்தான் - மிக்க பதிவிரதாதருமமுடையவளான சீதா பிராட்டியினிடத்து ஆசைமயக்கத்தை யடைந்தவனான இராவணன் வருத்தமடையும்படி அவன் முகத்தின்மேல் (அத்தலையை வீசி) எறிந்தான்; (எ-று.)

வேலைத்தோற்ற இராவணன் வேறுபடையை எடுக்குமுன்னர்ச் சடாயு அவ்விராவணனுடைய தேர்ப்பாகன் தலையைப்பறித்து அவ்விராவணன் வருந்தும்படி அவன் முகத்தி லெறிந்தானென்பதாம். வேகம்முடன், மாகம்மறையும்படி என்றவற்றில், மகர வொற்று-விரித்தல். 'மான்' என்ற விலங்கின்பொதுப்பெயர் சிறப் பாய்க் குதிரையின்மேல் நின்றது. பி - ம்:—[1]கற்பினுள்மேல். [2]தொலைவெய்த. (931)

121. [1]எறிந்தா னதுநோக்கி யிராவண னெஞ்சி னுற்றல்
அறிந்தான் முனிந்தாண்டதொ ராடகத் தண்டு வாங்கிப்
பொறிந்தாங் கெரியின்சிகை பொங்கி யெழப்பு டைத்தான்
மறிந்தா னெருவைக்கிறை மால்வரை போல மண்மேல்.

(இ-ள்.) எறிந்தான் - (தனது தேர்ப்பாகனது தலையைப் பறித்துத் தன்முகத்தில்) எறிந்த அச்சடாயுவினது, அது - அச் செயலை, நோக்கி - பார்த்து, இராவணன்—, (அதனால்), நெஞ்சின ஆற்றல் அறிந்தான் - (அவனது) மனத்தின்வலிமையை [உறுதி யான தைரியத்தை] அறிந்து, முனிந்து - கோபங்கொண்டு, ஆண் டது ஓர் ஆடகம் தண்டு வாங்கி-(முன் பலபோர்களில் தான்) கைக் கொண்டுபயின்று வெற்றிபெற்றதாகிய பொன்மயமான ஒரு கதா யுதத்தை எடுத்து, பொறிந்து ஆங்கு எரியின் சிகைபொங்கி எழ - நெருப்புப்பொறி பறந்தாற்போல அக்கினிச்சுவாலை மிக்கு எழும்படி, புடைத்தான்-(அத்தண்டினால் சடாயுவைத்) தாக்கினான்; (அவ்வள விலே), எருவைக்கு இறை - கழுகுகளுக்கு அரசனாகிய சடாயு, மண் மேல் - தரையின்மேல், மால் வரை போல - பெரிய மலை (விழுந்தாற்) போல, மறிந்தான்-விழுந்தான்; (எ - று.)

இராவணன் அங்ஙன் தன்முகத்தின்மீது தேர்ப்பாகன் தலையை யெறிந்த சடாயுவின் திட்பமான தைரியத்தை யறிந்து பெருஞ்

சினங்கொண்டு ஓர் பொற்றண்டால் எரியின்சுவாலைபொங்கியெழு மாறு அந்தக் கழுகரசைப் புடைக்க, அன்னான் ஓர் பெரிய மலை போலப் புவியில் விழுந்தானென்பதாம். எறிந்தான், ஆண்டது - பெயர்கள். பி - ம்:—[1] எறிந்தான்றன்னை. (932)

122. மண்மேல் விழுந்தான் விழலோடும் வயங்கு மான்றேர்
கண்மே லொளியுந் [1]தொடராவகை தான்க டாவி
விண்மே லெழுந்தா னெழமெல்லிய லாளும் வெந்தீப்
புண்மே னுழையத் துடிக்கின்றனள் போற்பு ரண்டாள்.

(இ - ள்.) மண்மேல் விழுந்தான் - (இங்ஙனம் தண்டாயுதத்தால் அடிபட்டுச் சடாயு) தரையில் விழுந்தான்; விழலோடும்-(அங்ஙனம்) விழுந்தவளவிலே, (இராவணன்), வயங்கு மான்தேர் - சிறப்புற்று விளங்குகிற குதிரைகள்பூட்டிய தனது தேரை, கண்மேல் ஒளியும் தொடரா வகை - (நெடுந்தூரமளவும் விரைந்துசெல்லுந் தன்மையுள்ள) கண்களின் பார்வையும் பின்பற்றிச்செல்லவொண்ணாதபடி, கடாவி - மிக்க விரைவாகச் செலுத்திக்கொண்டு, விண் மேல் எழுந்தான்-வானத்திற் கிளம்பினான்; எழ-(அங்ஙனம்தேரை விரைவில் நடத்தி ஆகாயமார்க்கமாகப்) புறப்பட்டவளவிலே, மெல் இயலாள் உம்-மென்மையான தன்மையையுடையளான சீதாபிராட்டியும், வெம் தீ புண்மேல் நுழைய துடிக்கின்றனள்போல்-புண்ணில் வெவ்விய நெருப்பு நுழைந்ததனால் துடிக்கின்றவள்போல (த் துன்பத்தின்மேல் மிக்க துன்பமுற்று), புரண்டாள் - விழுந்து புரளலுற்றாள்; (எ-று.)

சடாயு புவிமேல்விழுந்திடவே, பாகனில்லாத தேரைக் கண் பார்வையும் தொடர்ந்துவர முடியாதவாறு இராவணன் தானே வெகு விரைவாகச் செலுத்தி வானத்து எழுந்தான்; அங்ஙன் வானத்தி லெழவே, சீதாபிராட்டி புண்ணில் தீ நுழைந்தாற்போலத் துடித்துப் புரண்டா ளென்பதாம். தான் - அசை. பி - ம்:— [1]தொடராவிசையில். (933)

123. கொழுந்தே யனையாள் குழைந்தேங்கிய கொள்கை கண்டான்
அழுந்தே லவலத்திடை யஞ்சலை [1]யன்ன மென்று
எழுந்தா னுயிர்த்தா னடவெங் கினிப்போவ தென்று
விழுந்தா னவன்றேர்மிசை விண்ணவர் பண்ணை யார்ப்ப.

(இ - ள்) கொழுந்தே அனையாள் - இளந்தளிரையேயொத்த [மிக்க மென்மையையுடைய] சீதை, குழைந்து ஏங்கிய - வாடிவருந்திய, கொள்கை-செய்கையை, கண்டான்-பார்த்து, (சடாயு), 'அன்னம்-அன்னப்பறவை போன்றவளே! அவலத்திடை அழுந்தேல் - துன்பத்தில்முழுகவேண்டா: அஞ்சலை-அஞ்சாதிரு,' என்று-என்று (சீதையை நோக்கிச்) சொல்லி, உயிர்த்தான் எழுந்தான் - பெருமூச்சு விட்டுக்கொண்டு எழுந்து, அட எங்கு இனி போவது என்று- 'அடா! இனி நீ தப்பிப் போவது எங்கு?' என்று (இராவணனை நோக்கிக்) கூறி, அவன் தேர்மிசை - அவனுடைய தேரின்மேல்,

விண்ணவர் பண்ணை ஆர்ப்ப விழுந்தான்-தேவர்களுடைய கூட்டம் (மகிழ்ச்சியால்) ஆரவாரிக்கும்படி பாய்ந்தான்; (எ-று.)

அந்தச் சீதையின் செயலைக் கண்ட சடாயு, தன் நோவைப் பொருட்படுத்தாமல் 'துன்பத்தில் அழுந்தேல்: அஞ்சாதே' என்று சீதையை நோக்கிக் கூறியவண்ணம் பறந்துவந்து இராவணனைக் கிட்டி 'அட! இனி நீ தப்பிப்போவது எங்கு?' என்று அவ்விராவணன் தேர்மிசைப்பாய்ந்தான்; அதுகண்டு விண்ணவரின் கூட்டம் ஆரவாரித்த தென்பதாம். [1]அன்னை என்ற பாடத்துக்கு-அம்மா! என்று அன்புபற்றி விளித்ததாகக் கொள்க. பண்ணை-மகளிர் கூட்டம்; இச்சிறப்புப்பெயர், இங்குப் பொதுப்பொருளின் மேல் நிற்பதாய், கூட்டமென்ற மாத்திரையாயிற்று; இனி, 'விண்ணவர் பண்ணையார்ப்ப' என்பதற்கு-தேவதுந்துபி முழங்க என்று உரைப்பாரும் உளர். பண்ணை = பணை. (934)

124. பாய்ந்தா னவன்பன் மணித்தண்டு பறித்தெ றிந்தான்
ஏய்ந்தார் கதித்தேர்ப் பரியெட்டிேெ டெட்டு மெஞ்சித்
தீந்தா சற[1]வீசியத் திண்டிறற் றுண்ட வாளால்
காய்ந்தான் கவர்ந்தானுயிர் காலனுங் கைவி திர்த்தான்.

(இ-ள்.) பாய்ந்தான் - (அங்ஙனம் இராவணனதுதேரின் மேற்) பாய்ந்த சடாயு,—அவன்-அவ்விராவணனுடைய, பல் மணி தண்டு - பலஇரத்தினங்கள் பதிக்கப்பெற்ற (பொன்னாலாகிய முற்கூறிய) தண்டாயுதத்தை, பறித்து எறிந்தான்-பிடுங்கி அப்பால் எறிந்துவிட்டு,—ஏய்ந்து ஆர் கதி-பொருந்தியமைந்த வேகத்தை யுடைய, தேர் பரி எட்டிெெனாடு எட்டுஉம்-(அவனது) தேரிற்பூட்டிய பதினாறுகுதிரைகளும், எஞ்சி தீந்து ஆசற-ஒடுங்கி அழிந்தொழியும்படி, திண் திறல் அ துண்டம் வாளால் காய்ந்தான் வீசி மிக்க வலிமையுடைய அந்த(த்தனது) மூக்காகிய வாளினாற் கோபங் கொண்டு வீசி, உயிர் கவர்ந்தான் - (அக்குதிரைகளின்) உயிரைக் கவர்ந்திட்டான்; (அதுகண்டு), காலன்உம் கைவிதிர்த்தான் - யமனும் (அஞ்சிக்) கைந்நடுக்கமுற்றான்; (எ - று.)

அங்ஙனம் பாய்ந்த சடாயு இனித் தாக்காதபடி தன்னைமுன்னர்த்தாக்கிய தண்டாயுதத்தைப் பறித்தெறிந்து, சினந்து அவ்விராவணன் செல்வதற்கு இடையூறுண்டாக அவனுடையதேர்க் குதிரைகள் பதினாறையும் தனது துண்டவாளாற் காலனும் கை விதிர்க்க உயிர்கவர்ந்தானென்பதாம்: சடாயு பரிகளினுயிரைக்கவர்ந்தது கண்டு யமன் கைந்நடுங்கிய காரணம்-பிராணிகளின் உடலினின்று உயிரைப் பிரிப்பதைத் தொழிலாகவுடைய தான் இக்குதிரைகளின் உயிரைக் கவர்ந்ததாகக் கருதித் தன்மீது இராவணன் சினங்கொண்டு தன்னைத் தண்டிப்பானோ என்ற அச்சம்: அன்றி தன்னாலாகாத செயலைச் சடாயு செய்த தன்மையைநோக்கிக் கொண்ட அதிசயமுமாம். துண்டவாளால் காய்ந்து வீசிஉயிர் கவர்தல் - வாள்போற்கூரிய மூக்கினாற் குத்திக்கொல்லுதல். ஆசறுதல் - முடிதல்; ஆசறு - ஒருசொல். பி-ம்:—[1]வீசியதிண் டிறல். (935)

125. திண்டே ரழித்தாங்கவன் றிண்புறஞ் சேர்ந்த தூணி
விண்டான் மறைப்பச் செறிகின்றன வில்லி லாமை
மண்டா ரமர்தான் வழங்காமையின் வச்சை மாக்கள்
பண்டார மொக்கின்றன [1]வள்ளுகி ராற்ப றித்தான்.

(இ - ள்.) திண் தேர் அழித்து - (பின்பு சடாயு இராவண னது) வலிய தேரைச் சிதைத்து, ஆங்கு - அதன்பின்பு,—வில் இலாமை - (அவன் கையில்) வில் இல்லாமைபற்றி, மண்டு ஆர் அமர் தான் வழங்காமையின்-கொடிய அருமையான போருக்குத் தான் உதவாமையால், வச்சை மாக்கள் பண்டாரம் ஒக்கின்றன - உலோபிகளுடைய பொக்கசத்தை ஒக்கின்றவையும், விண் தான் மறைப்ப செறிகின்றன - ஆகாயத்தை மறைக்கும்படி உயர்ந்து பொருந்தியுள்ளவையுமாகிய, அவன் திண் புறம் சேர்ந்த தூணி - அவனதுவலிய தோள்களின்புறத்திலே கட்டப்பட்டுள்ள அம்பறுத்தூணிகளை, வள் உகிரால் பறித்தான் - கூரிய கால்நகங்களாற் பிடுங்கியெறிந்தான்; (எ - று.)

சடாயு, பின்னும் அவ்விராவணனுடைய தேரை யழித்து அவன் முதுகுபுறத்துக்கட்டியுள்ள தூணீரத்தையும் வள்ளுகிராற் பறித்தெறிந்தா னென்பதாம். வண்மைக்குணமில்லாத லோபி களுடைய திரவியசாலை ஈதற்கும் நுகர்தற்கும் பொருள் எடுக்கப் படாமல் வாளாகிடத்தல்போல, வில் இல்லாமைபற்றிப் போரின் பொருட்டு அம்புஎடுக்கப்படாது வாளாகிடக்கின்றமைபற்றி, அத் தூணீரத்துக்கு வச்சைமாக்களின் பண்டாரத்தை உவமை கூறி னார். "உடாஅது முண்ணாதுந் தம்முடம்புசெற்றுங், கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது, வைத்தீட்டினாரிழப்பர் வான் றோய்மலைநாட,வுய்த்தீட்டுந் தேனீக் கரி" என்றபடி உலோபிகள் செல்வம் இழக்கப்படுதல்போல, இத்தூணீரங்களும் இழக்கப்பட்டன வென்பதுங் காண்க. மாக்களெனப்படுவார் - பகுத்துணர்வில் லாமல் ஐம்பொறியுணர்வுமாத்திரத்தையேயுடைய விலங்குபோன்ற ஒருசார் மானிடராதலின், உலோபிகளது இழிவு தோன்ற, 'வச்சை மாக்கள்' என்றார். பண்டாரம் - வடசொல். விண்டான், தான் - அசை. பி - ம்:—[1]பல்லுகிராற். (936)

126. [1]மாச்சிச்சிரம் பாய்ந்தவன் மார்பினுந் தோள்கண் மேலும்
ஓச்சிச் சிறகாற் புடைத்தான் [2]கடித்தா னுலையா
[3]மூச்சிற் றவிரா வணனும் முடி [4]சாய்ந் திருந்தான்
போச்சித் தனைபோ லுநின்றாற் றலெனப் புகன்றான்.

(இ - ள்.) (பின்னும் சடாயு), அவன் மார்பின்உம் தோள்கள் மேல்உம் - அவ்விராவணனுடைய மார்பின்மேலும் தோள்களின் மேலும், மா சிச்சிரம் பாய்ந்து - மிக்கவிநோதமாகப் பாய்ந்து, சிற கால் ஓச்சி புடைத்தான்-(தன்) சிறகுகளினால் விசையாக எறிந்து அடித்து, கடித்தான் - வாயினாற் கடித்தான்: (அவ்வளவிலே), உலையா-வலியொடுங்கி, மூச்சு இற்ற - உயிர்ப்பு ஒழிந்த [மூர்ச்சை யடைந்த என்றபடி], இராவணனும்—, முடி சாய்ந்து இருந்தான் -

தலைசாய்ந்திருந்தான்; (அதுகண்டு சடாயு அவனைநோக்கி), 'இத்தனைபோலும் - இவ்வளவுதானா! நின் ஆற்றல்-உனது வல்லமை, போச்சு - போய்விட்டது,' என புகன்றான் - என்று இழித்துக் கூறினான்; (எ - று.)

புட்டிலைப் பறித்தெறிந்ததோடு நில்லாமல், சடாயு அவன் மார்பிலும் தோளின்மேலும் பாய்ந்து தன் சிறகால் ஓச்சிப்புடைத்து அலகாற்கடித்தான்; இராவணன் அந்தமாற்றான் செயலைத் தாங்க மாட்டாது மூச்சிற்று முடிசாய்ந்திருக்க, மெலிந்து வீழ்ந்தவனை மீண்டும் உடனே தாக்குதல் முறையன்று என்று கருதி, தாக்குதலைத்தவிர்த்து சடாயு 'இவ்வளவுதானா உனது வலிமை!' என்று இழித்துக்கூறினா னென்பதாம். மாச்சிச்சிரம் - மகாசித்ரம்; சித்ர மென்ற வடசொல்லின் திரிபாகிய சித்திர மென்பது எதுகைநோக்கி, (பித்து-பிச்சு, வைத்த - வைச்ச என்றாற்போல) சிச்சிரமெனத் தகர சகரப்போலி யேற்றது; (வில்லிபுத்தூரார் பாரதத்தில் அத்திர மென்பது அச்சிரமென விகாரப்பட்டுவருதலுங் காண்க.) ஆகவே, மாச்சிச்சிரமென்பதற்கு - காண்பவர் மிகஅதிசயிக்கும்படி யென்று கருத்தாம். 'மாச்சிச்சிரம்பாய்ந்து' என்பதற்கு-பெரிய சிச்சிலிக் குருவிபோலப் பாய்ந்து என்று பொருள்கூறுதலும் பொருந்தும். இ சிரம் பாய்ந்து மாச்சு என்று எடுத்து - இந்த (இராவணனது) தலைகளின்மேற் பாய்ந்து (அவற்றை) அடித்து என்பர் ஒருசாரார்; அவ்வுரைக்கு, மாச்சு-மாய்த்து என்பதன் மரூஉ. [3]மூச்சித்த என்று பாடமோதி, மூர்ச்சித்த என்பதன் விகாரமென்றலும் ஒன்று. பி - ம்:—[1]மாச்சிச் சிரல்பாய்ந்தெனமார்பினுந் தோளின்மேலும், மாச்சித்திரம் பெறப்பாய்ந்தவன் மார்பினுந் தோளின்மேலும். [2]உலையாவிழுந்து. [4]சாய்த்து. (937)

127. அவ்வே லையினே முனிந்தான் முனிந்தாற்ற [1]லன்ன
வெவ்வே லரக்கன் விடலாம்படை வேறு காணான்
இவ்வே லையினே யிவனின்னுயி [2]ருண்பெ னென்னாச்
செவ்வே பிழையா நெடுவாளுறை தீர்த்தெ றிந்தான்.

(இ - ள்.) அ வேலையினே - அச்சமயத்திலே, ஆற்றல் அன்ன வெம்வேல் அரக்கன் - வலிமையின்வடிவத்தையேபோன்ற கொடிய வேற்படையையுடைய இராவணன், முனிந்தான் - கோபங்கொண்டான்; முனிந்து - கோபித்து, விடல் ஆம் படை வேறு காணான் - (அச்சடாயுவின்மேல்) பிரயோகித்தற்குஏற்ற ஆயுதம்வேறொன்றைக் காணாதவனாய்,—இ வேலையினே இவன் இன் உயிர் உண்பென் என்னா-இப்பொழுதே இவனது இனிய உயிரைக் கவர்வேனென்று கருதி, பிழையா நெடு வாள் - (பகைவரைக்கொல்லுதலில்) தவறாத நீண்ட தனது (சந்திரகாசமென்னும்) வாளாயுதத்தை, உறை தீர்த்து-உறையினின்று எடுத்து, செவ்வே எறிந்தான் - (அதுகொண்டு) நன்றாக [விசையாக] வீசினான்; (எ - று.)

இராவணன் அப்போது வெகுண்டு, கைவிடுபடையான அம்பும் சூலமும்வீண்பட்டதன்றிக் கைவிடாப்படையான தண்டாயுதமும்

ஒழிந்ததுகண்டு, வேறுபடையைக் காணாது, 'இப்போது இதனால் இவனைக் கொல்வேன்' என்று கருதி, சிவபிரானளித்ததும் தவறாது உயிரைக்கொல்லவல்லதுமான சந்திரகாசமென்னும் வாட்படையை உறையினின்றும் எடுத்து அந்தச்சடாயுவின்மீது எறிந்தானென்பதாம். ஆற்றலன்ன - வலிமையே ஒருவடிவுகொண்டுவந்தாற் போன்ற என்றபடி; இது, அரக்கனுக்கு அடைமொழி; வேலுக்கு அடைமொழியாக்கினும் அமையும். 'ஆற்றலன்ன வெவ்வேலரக்கன்' என்பதற்கு—தனதுவலிமைக்கு ஏற்ற கொடியதொரு வேற்படையையுடைய இராவண னென்றலும் ஒன்று. அப்படிப்பட்ட வேல், இராவணனுக்கு மாமனாராகிய மயன் மந்தோதரியின் விவாககாலத்திற் கொடுத்தது. 'ஆற்றலன்ன' என்பதை 'படை' என்பதற்கு அடைமொழியாக்கி, அச்சடாயுவின் வலிமையை அழித்தற்கு ஏற்ற வேறோராயுதத்தைக் காணாதவனாய் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். இங்குக்கூறிய வாள், கைலாசம் பெயர்த்தெடுத்தபொழுது இராவணனுக்குச் சிவபிரான் அளித்தது. உறை தீர்த்து - உறைகழற்றி. பி - ம்:—[1]என்ன. [2]உண்பல். (938)

128. வலியின் றலைதோற்றிலன் மாற்றருந் தெய்வ வாளால்
நலியுந் தலை[1]யென்றது வன்றியும் வாழ்க்கை நாளும்
மெலியுங் கடைசென்றுள தாகலின் விண்ணின் வேந்தன்
[2]குலிசம் மெறியச் சிறையற்றதொர் குன்றின் வீழ்ந்தான்.

(இ - ள்.) மாற்று அரு - (எவராலும்) தடுக்கவொண்ணாத, தெய்வம் வாளால் - தெய்வத்தன்மையுள்ள (அந்தச்சிவபிரானது) வாட்படையால், தலைநலியும்-(யாவர்)தலையும் தவறாதழியும், என்றது அன்றிஉம் - என்ற அதன்சிறப்பு மல்லாமல், வாழ்க்கை நாள்உம் மெலியும் கடை சென்று உளது ஆகலின் - தனது ஆயுள்நாளும் குறைவுபடுகிற முடிவை அடைந்துள்ள தாதலால்,—வலியின் தலை தோற்றிலன் - (தனது) வலிமையில் தோல்விபெறாதவனாகிய அச்சடாயு, விண்ணின் வேந்தன் குலிசம் எறிய சிறை அற்றது ஓர் குன்றின் - தேவராசனான இந்திரன் வச்சிராயுதத்தை வீச அதனாற் சிறகற்று விழுவதொரு மலைபோல, வீழ்ந்தான் - (சிறகு அறுபட்டுக்) கீழ் விழுந்தான்; (எ - று.)

மிக்கவலிமையையுடையமலை முன்பு இந்திரனது வச்சிராயுதம் பட்டவளவிலே சிறகு அறுபட்டு விழுந்தாற்போல, தோலா வலிமையுடைய சடாயு இராவணனது வாள்பட்டவளவிலே சிறகு அறுபட்டுத் தரையில் விழுந்திட்டான்; அங்ஙனம் விழுந்ததற்குக் காரணம், தடுக்கவொண்ணாத அந்தச்சிவபிரானது வாள் தன்னால் எறியப்படும் எப்பொருளையும் தவறாமல் அழிக்குந் தரத்ததுஎன்ற அதன்மகிமைமாத்திரமே யன்று; சடாயுவினது வாழ்நாள் முடியும் நிலைமையை அடைந்துள்ளமையுமாம் என்பது, இதன் கருத்து; இங்ஙனங்கூறியது, சடாயுவின் மிக்கவலிமையைச் சிறப்பித்தற்கு. குலிசம்மெறிய—மகரவொற்று, விரித்தல். [2]குலியம் என்ற பாடத்துக்கு வடசொல் விகார மென்க. பி - ம்:—[1]என்றஃது, அன்றிது.

## 129.—இதுமுதல் எட்டுக் கவிகள் - சடாயு விழுந்ததைக் கண்ட பிராட்டி பட்டதுயரத்தைக் கூறும்.

விரிந்தார் சிறைகீழுற வீழ்ந்தனன் மண்ணின் விண்ணோர்
இரிந்தா ரிழந்தா டுணையென்ன முனிக்க ணங்கள்
பரிந்தார் படர்விண்டுவி னாட்டவர் பைம்பொன் மாரி
சொரிந்தா ரதுநோக்கிய சீதை [1] துளக்க முற்றாள்.

(இ - ள்.) விரிந்த ஆர் சிறை - விரிவாகப்பொருந்திய இறகுகள், கீழ்உற-கீழே கிடக்கும்படி, மண்ணின் வீழ்ந்தனன்-(சடாயு) தரையில் விழுந்தான்; (விழுந்தவளவிலே), விண்ணோர்-தேவர்கள், இரிந்தார் - அஞ்சிஓடினார்கள்; முனி கணங்கள் - முனிவர்கூட்டத்தார், துணை இழந்தாள் என்ன - (பிராட்டி) துணையையிழந்தா ளென்ற காரணத்தால், படர் பரிந்தார்-துன்பப்பட்டு இரங்கினார்கள்; விண்டுவின் நாட்டவர் - ஸ்ரீமகாவிஷ்ணுவின் நாடாகிய ஸ்ரீவைகுண்டத்தி லுள்ளவர்கள், பைம்பொன் மாரி சொரிந்தார் - பசும்பொன்மயமான புஷ்பவர்ஷத்தைச் (சடாயுவின்மேற்) சொரிந்தார்கள; அது நோக்கிய சீதை துளக்கம் உற்றாள் - (சடாயு விழுந்திட்ட) அச்செயலைக்கண்ட சீதை (உள்ளமும் உடலும்) நடுக்கமடைந்தாள்; (எ - று.)

சிறந்த பாகவதோத்தமனாகிய சடாயுவைப் பரமபதத்துக்கு அழைத்துப்போதற்காக எதிர்கொண்டுவந்த அவ்விஷ்ணுலோகத்தார் 'உவப்பினால் அவன்மீது பொன்மயமான கற்பகப்பூமாரி சொரிந்தன ரென்க. படர்-துன்பம். விண்டு-விஷ்ணுஎன்ற வடசொல்லின்சிதைவு. விண்டுவின்நாட்டவர் -நித்தியசூரிகள். பி-ம்:— [1] துணுக்கம். (940)

130. வெள்கும் மரக்கன் னெடுவிண்புக வார்த்து மிக்கான்
தொள்கின் றலையெய்திய மானெனச் சோர்ந்து நைவாள்
உள்கும் [1] முயிர்க்கும் முயங்கும்மொரு சார்பு காணாள்
கொள்கொம் பொடியக் கொடிவீழ்ந்தது போற்கு லைந்தாள்.

(இ - ள்.) வெள்கும் அரக்கன் - (கீழ்ச் சடாயுவின் ஆற்றலுக்கு இளைத்ததனால்) வெட்கமடைந்த இராவணன், (அச்சடாயு ஒழிந்தவளவிலே), நெடுவிண்புக ஆர்த்து மிக்கான்-பெரியவானத்திலே (தனது ஒலி) செல்லும்படி ஆரவாரஞ்செய்து பெருமிதம் பாராட்டினான்; தொள்கின்தலை எய்திய மான் என சோர்ந்து நைவாள் - வலையிலகப்பட்ட மான்போலத் தளர்ந்துவருந்துபவளான சீதை, உள்கும்-(இனி யாதுசெய்வதென்று) சிந்திப்பாள்; உயிர்க்கும் - பெருமூச்சுவிடுவாள்; உயங்கும் - மயங்குவாள்; ஒரு சார்பு காணாள் - யாதோர் ஆதரவையுங் காணாதவளாய், கொள் கொம்பு ஒடிய கொடி வீழ்ந்ததுபோல் குலைந்தாள் - ஆதாரமாகப் பற்றிய கொம்பு ஒடிந்துபோகக் கொடி நிலைகுலைந்து விழுந்தது போல(ச் சடாயுவின் துணைமையை இழந்ததனால்) கீழ்விழுந்து நிலைகுலைந்தாள்; (எ - று.)

முன்பு சடாயுவின் ஆற்றலுக்குத் தோற்ற அரக்கன், வாட்படையால் சடாயு விண்புகவே பேரொலிபட ஆர்த்தான்: வலையினிடத்

துப்பட்ட மான்போல அரக்கனிடத்து அகப்பட்டுமையும் சானகி அப்போது, தனக்கு ஆதாரமாக இருந்த கொழுகொம்பு முறிந்து விழத் தானும் விழுங் கொடிபோலச் சடாயு சாய்ந்துவிழத் தானும் உயங்கிப் பெருமூச்செறிந்து பற்றுக்கோடு ஒன்றையும் காணாது குலைந்து தரையில்வீழ்ந்து புரண்டாளென்பதாம். வெள்கும் அரக்கன் நெடுவிண்புக ஆர்த்து மிக்கான்-சடாயுவின் ஆற்றலுக்குத் தான் இளைத்ததனால் நாணங்கொண்டு தலைகவிழ்ந்த இராவணன் அச்சடாயு விழுந்தவளவிலே நாணந்தீர்ந்து தலைநிமிர்ந்து ஆகாயமெங்கும் முழங்கும்படி பேராரவாரஞ்செய்தன னென்க. தொள்கின் தலை, தலை-ஏழனுருபு; இன்-சாரியை. சார்பு - சாருமிடம்: தஞ்சம்: பற்றுக்கோடு. வெள்கும்மரக்கன்னெடு, உள்கும் முயிர்க்கும் முயங்கும்மொருவிரித்தல். பி - ம்:—[1] மயங்கும் முயிர்க்கும். (941)

வேறு.

**181.** வன்றுணை [1]யுளனென வந்த மன்னனும்
பொன்றின னெனக்கினிப் புகலெ னென்கின்றாள்
இன்றுணை பிரிந்[2]திரிந் தின்ன லெய்திய
அன்றிலம் பெடையென வரற்றி னாளரோ.

(இ - ள்.) வல் துணை உளன் என - வலிய துணையாக இருக்கிறானென்று (யாவரும்) கருதும்படி, வந்த - வந்துஎதிர்த்த, மன்னனும் - கழுகரசனாகிய சடாயுவும், பொன்றினன் - அழிந்தான்; எனக்கு இனி புகல் என் - எனக்கு இனிக் கதியாது? என்கின்றாள் - என்று சிந்திக்கின்றவளாய்,—இன் துணை பிரிந்து இரிந்து இன்னல் எய்திய அன்றில் அம் பெடை என - இனிய (தனது) துணையாகிய சேவலைப் பிரிந்துநீங்கி வருத்தமுற்ற அழகிய அன்றிற் பேடைபோல, அரற்றினாள் - கதறினாள்;(எ - று.)—அரோ - ஈற்றசை.

'வலியதுணையென வந்து அபயந் தந்த கழுகரசனும் இறந்திட்டான்: இனி எனக்குப் புகல் என்?' என்று கூறுபவளாகிச் சீதை, சேவலைப் பிரிந்து விலகி வருத்தமுற்ற அன்றிற்பேடை தனது சேவலின்வரவுக்காகக் கத்திக் கூவுதல்போலத் தனது கணவனை விளித்துக்கதறின ளென்க. அன்றில்-வடமொழியில் க்ரௌஞ்ச மெனப்படும் ஒருவகைப்பறவை: எப்பொழுதும் ஆணும் பெண்ணும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் உடனுறைதலும், எப்பொழுதேனும் பிரிந்தால் ஒன்றையொன்று இரண்டு மூன்று தரம் கத்திக்கூவியழைத்து அதற்குள் தன்துணையைக் கூடாவிடின் இறந்துபடுதலும் இதன் இயல்பு என்ப. புகல் - சரணம்புகுமிடம்; தொழிலாகுபெயர். அன்றிலம் பேடை, அம் - சாரியையுமாம். பேடை - பெண்மைப்பெயர். 'வன்துணையுளனென வந்த' என்பதற்கு - வலியதுணையாக வுள்ளேனென்று சொல்லிக்கொண்டு வந்த என்றும் உரைகூறலாம். உளன் என்பது - தன்மை யொருமைக்கு வருதலை, "உளனு வென்னுயிரையுண்டு" எனக்கலித்தொகையிலுங் காண்க. பி - ம்:—[1] உளென். [2] இருந்து.

இதுமுதல் இருபது கவிகள் - கீழ்ப்படலத்தின் ஆறுங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (942)

132. பின்னவ னுரையினை மறுத்துப் பேதையேன்
அன்னவன் றனைக்கடி தகற்றி னேன்பொரு
மன்னவன் சிறையற மயங்கி னேன்விதி
இன்னமு மெவ்வினை யியற்று மோவெனா.

(இ - ள்.) பேதையேன் - அறிவில்லாதவளான நான், பின்னவன் உரையினை மறுத்து - (இராமபிரானது) திருத்தம்பியாகிய இலக்குமணன்சொன்னவார்த்தையைத் தடுத்து, அன்னவன்தனை கடிது அகற்றினேன் - அவ்விலக்குமணனை விரைவில் (என்னை விட்டு) நீங்கும்படிசெய்தேன்: பொருமன்னவன் சிறை அற-(என்னைப் பாதுகாத்தற்காக வந்து) போர்செய்த கழுகரசனாகிய சடாயு (இப்பொழுது) சிறகு அறுபட்டதனால், மயங்கினேன் - (இனி வேறு துணையில்லையே யென்று) திகைப்புற்றேன்; விதி - (எனது) ஊழ் வினையானது, இன்னமும் எ வினை இயற்றும்ஓ - இன்னமும் எந்தக் கொடுஞ் செயலைச் செய்யுமோ? எனா-என்று கூறி,—(எ-று.)— "ஏங்கினாள்" என அடுத்த கவியோடு தொடரும்.

'இளையோன் வற்புறுத்துச் சொல்லவும் அவன் சொல்லை மறுத்து அவனை விரைவில் நீங்கச்செய்தேன்; எனக்குப் புகலாய் வந்த கழுகரசனும் சிறையறவே மயங்கினேன்: விதி இன்னும் என்ன செய்விக்குமோ?' என்று சீதை வருந்தினாளென்பதாம்; இது, கழிவிரக்கம். பின்னவன்-பின்பிறந்தவன். இச்செய்யுள் சிலபிரதிகளிவில்லை. (943)

133. அல்லலுற் றேனைவந் தஞ்ச லென்ற[1]விந்
நல்லவன் [2]றோற்பதே நரகன் [3]வெல்வதே
வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
இல்லையோ வறமென விரங்கி யேங்கினாள்.

(இ - ள்.) அல்லல் உற்றேனை - துன்பமடைந்த என்னை, வந்து அஞ்சல் என்ற - அருகில்வந்து 'அஞ்சாதே' என்று கூறிய, இ நல்லவன்-நற்குண நற்செய்கை யுடையவனான இச்சடாயு, தோற்பதுஏ - தோல்வியடைவதா? நரகன் - (பாவஞ் செய்தலால்) நரகத்தையடைதற்கு உரியவனான இராவணன், வெல்வதுஏ - சயித்துவிடுவதா? வெல்வதுஉம் பாவம்ஓ - பாவந்தானோ வெற்றி பெறுவது? வேதம் பொய்க்கும்ஓ - (தருமமே சயமென்று கூறுகிற) வேதமும் பொய்யாய்விடுமோ? அறம் இல்லைஓ - தருமம் இல்லையாயிற்றோ? என-என்று சொல்லி, இரங்கி-சோகித்து, ஏங்கினாள் - புலம்பினாள்; (எ - று.)

'எனக்கு அபயமளித்துப் பாதுகாக்கவந்த இந்தநல்லோன் தோற்பதே! நரகத்திற்குஉரியபாவி வெல்வதே! 'அறம் வெல்லும், பாவந்தோற்கும்' என்ற வேதவாக்கும்பொய்க்குமோ? என்திறத்து அறமும் இல்லையோ?' என்று சீதை ஏங்கினளென்பதாம். ஏகாரங்களும், ஓகாரங்களும்-வினாவகையால், தகுதியன்றென்ற கருத்தை விளக்கும். பி - ம்:—[1]விண். [2]தோற்பதோ. [3]வெல்வதோ. (944)

134. நாணிலே னுரைகொடு நடந்த நம்பிமீர்
நீணிலை யறநெறி நின்று ளோர்க்கெலாம்
ஆணியை யுந்தையர்க் கமைந்த [1]வன்பனைக்
காணிய வம்மெனக் கலங்கி விம்மினாள்.

(இ - ள்.) நாண் இலேன் உரை கொடு - வெட்கமில்லாதவளான என்னுடைய வார்த்தையினால், நடந்த - (என்னைவிட்டுப் பிரிந்து) சென்ற, நம்பிமீர் - சிறந்த ஆண்மக்களே! நீள் நிலை அறம் நெறி நின்றுளோர்க்கு எலாம் ஆணியை - அழிவில்லாது நீண்ட நிலைபேற்றையுடைய தருமமார்க்கத்திலே நிற்கிறவர்களுக்கெல்லாம் உரையாணிபோன்றவனும், உந்தையர்க்கு அமைந்த அன்பனை - உங்கள் தந்தைமார்க்குப் பொருந்திய நண்பனுமான சடாயுவை, காணிய - காண்பதற்கு, வம் - வாருங்கள், என - என்று சொல்லி, கலங்கி விம்மினாள் - கலக்கமுற்று அழுதாள்; (எ - று.)

'என்வார்த்தைகொண்டு பிரிந்துசென்ற நம்பிமீர்! உமது தந்தையார் நண்பனைக் காணவம்மின்' என்று கலக்கமுற்று அழுதனள் சீதை என்பதாம். தகாதகாரியத்தில் முயலும்படி இராமனைத் தான் தூண்டியதுமன்றி இலக்குமணனையும் தன்னைப்பிரிந்து செல்லும்படி தகுதியில்லாது ஏவியதனால், 'நாணிலேன்' என்று தன்னைத் தானே பழித்துக்கொண்டாள். நாணுவது - செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல்; இலச்சை. பொன்னின் மாற்று இன்னதென ஐயந்திரிபற நன்கு விளக்கும் உரையாணிப்பொன்போல, தருமமார்க்கத்தில் நடப்பவர் தன்மை இன்னதென்பதைத் தான் நடந்துகாட்டியதனால் நன்கு விளக்கும் சடாயுவென்பாள், 'அறநெறிநின்றுளோர்க்கெலாம் ஆணி' என்றாள். கொடு - விகாரம். வம் - வாரும் அல்லது வம்மின் என்பதன் விகாரம்.
பி - ம்:—[1]நண்பனை. (945)

135. கற்பழி யாமையென் கடமை யாயினும்
பொற்பழி யாவலம் பொருந்தும் போர்வலான்
விற்பழி யுண்டது வினையி னேன்வந்த
இற்பழி யுண்டதென் றிரங்கி யேங்கினாள்.

(இ - ள்.) கற்பு அழியாமை - பதிவிரதாதருமம் அழியாமலிருத்தல், என் கடமை ஆயின் உம்-எனது கடமையே யானாலும்,—பொற்பு அழியா வலம் பொருந்தும் - பொலிவுகெடாத வலிமை பொருந்திய, போர்வலான் - போரில் வல்லவனான (என்கணவனாகிய) இராமபிரானது, வில் - கோதண்டம், பழியுண்டது - பழியடைந்தது, வினையினேன் வந்த இல் பழியுண்டது - பாவியாகிய நான் பிறந்த [அல்லது புகுந்த] குடிக்குப் பழியை உண்டாக்குவதாம், என்று - என்று சொல்லி, இரங்கி ஏங்கினாள் - சோகித்து அழுதாள்;(எ - று.)

இராமன் மனைவியாகிய யான் உயர்ந்தகுலமகளிர்க்கு உரிய கடமைப்படி கற்புநிலை குலையாதுநின்றேனாயினும், அழிவில்லாத பல பராக்கிரமங்களையுடைய என் கணவனான ஸ்ரீராமன் விற்கொண்டு பொருது பகையழித்து வெற்றியும் புகழும் பெறுதற்கு இட

மில்லாதபடி அவனை இவ்விடத்தைவிட்டு நீங்கச்செய்தேனாதலால், இக்கொடுஞ்செயல்செய்த யான் பிறந்தகுலமும் புகுந்தகுலமும் எனதுசம்பந்தத்தால் பழியையடைந்தேவிடும் என்று புலம்பினளென்க: வலம்=பலம்: வடசொல். இல் - வீடு: குடிக்குஆகுபெயர். இச்செய்யுள் சிலபிரதிகளில் அடுத்தபாடலின்பின் உள்ளது. (946)

**136.** [1]எல்லியல் விசும்பிடை யிருந்த [2]நேமியாய்
சொல்லிய [3]லாய்நெறி தொடர்ந்த தோழமை
நல்லிய லருங்கடன் [4]கழித்த நம்பியைப்
புல்லுதி யோவெனப் பொருமிப் [5]பொங்கினாள்.

(இ - ள்.) எல் இயல் - ஒளிபொருந்திய, விசும்பிடை - மேலுலகத்திலே, இருந்த - சென்றிருந்த, நேமியாய் - (தசரத) சக்கரவர்த்தியே! சொல் இயல் - புகழ்பொருந்திய, ஆய் நெறி தொடர்ந்த - ஆராய்ந்த நல்லொழுக்க வழி சேர்ந்த, தோழமை - நட்புக்குஉரிய, நல் இயல் அரு கடன் - நன்மைபொருந்திய அருமையான கடமையை, கழித்த - செய்துமுடித்த, நம்பியை - உத்தமனான சடாயுவை, புல்லுதி - (இப்பொழுது அங்குத்) தழுவிக்கொள்வாயோ? என - என்றுசொல்லி, பொருமி பொங்கினாள் - விம்மி விம்மி அழுதாள்; (எ - று.)

முன்பு உயிர்நீத்துத்துறக்கமடைந்த தசரதசக்கரவர்த்தியை நினைத்து விளித்து முன்னிலைப்படுத்திக் கூறியது, இது. உனது நற்றோழனான சடாயு அத்தோழமைக்குஉரியபடி உனதுமருமகளான என்னைப் பாதுகாக்கத்தொடங்கிப் பொருது அப்போரில் தான் உயிர்நீத்து இவ்வாறு அரியதோழமைக்கடனைச் செய்துமுடித்து மேலுலகத்துக்குச் சென்றனனாதலால், தோழமைக்கடனை நிறைவேற்றிய அருமைக்காக நீ உவந்து அவனை அங்குக் கட்டியணைத்துக்கொள்வையோ? என்றுகூறிச் சீதை புலம்பினளென்க. [1]எல்லையின் விசும்பு என்ற பாடத்துக்கு - எல்லையற்றதாகிய பரமபதமென்க. அருங் கடன் - பிறராற் செய்தற்குஅரிய கடமை. [2]நேமியான் சொல்லிய வறநெறி என்றும், [4]கழிதது நம்பியைஎன்றும் பாடம்ஓதி, மேலுலகஞ்சென்ற தசரதசககரவர்த்தி கூறியிருந்த தோழமைக்கடனை இங்குக் கழித்து அங்கு அவ்வுத்தமனைச் சேரச் சென்றனையோ? என்று சடாயுவைநோக்கிக் கூறியதாக உரைப்பாரும் உளர். பி - ம்—[3]அறநெறி. [5]ஏங்கினாள். (947)

## 137.—அப்பொழுது இராவணன் சீதையுடனே விரைந்து அப்பாற் செல்லுதல்.

ஏங்குவா [1]டனிமையு மிறகி ழுந்தவன்
ஆங்குறு [1]நிலைமையு மரக்க னோக்கினான்
வாங்கினன் றேரிடை வைத்த மண்ணொடும்
வீங்குதோண் மீக்கொடு விண்ணி னேகினான்.

(இ - ள்.) ஏங்குவாள் தனிமைஉம் - இவ்வாறு புலம்புகிற சீதையினது துணையற்ற நிலைமையையும், இறகு இழந்தவன்

ஆங்குஉறு நிலைமைஉம் - சிறகுகளை யிழந்த சடாயு அவ்விடத்தில் [அப்பொழுது] அடைந்த (பிழைப்பற்ற) நிலைமையையும், நோக்கினன் - பார்த்து, அரக்கன் - இராவணன், (இனித்தடையின்றிச் செல்லலா மென்று கருதி), தேரிடைவைத்த மண்ணொடுஉம் வாங்கினன் - (தனது) தேரின்மேல்வைத்த நிலத்தோடு (சீதையை) எடுத்து, வீங்கு தோள்மீ கொடு - பருத்த (தனது) தோள்களின் மேல் வைத்துக்கொண்டு, விண்ணின் ஏகினன் - ஆகாயமார்க்கத்திற் சென்றான்; (எ - று.)

கீழ்ச் சடாயு இராவணனது தேர்க்குதிரைகளைக் கொன்று தேரையும் சிதையச்செய்து வாளால் சிறையறுப்புண்டு வீழ்ந்திட்டன னாதலால், இராவணன் 'இனித் தடுப்பாரில்லை' என்று, தரையோடு சீதையைத் தோளின்மேற்கொண்டு விண்வழியே விரைந்து செல்பவனானான். பி-ம்:—[1] தன்மை. (948)

## 138.—அப்பொழுது சீதை மூர்ச்சித்துக் கிடத்தல்.

விண்ணிடை வெய்யவ னேகும் வேகத்தால்
கண்ணொடு மனமவை [1] சுழலுங் கற்பினாள்
உண்ணிறை யுணர்வழிந் தொன்று மோர்ந்திலள்
மண்ணிடைத் தன்னையு மறந்து சாம்பினாள்.

(இ - ள்.) விண்ணிடை - ஆகாயமார்க்கத்திலே, வெய்யவன் - கொடியவனான அவ்விராவணன், ஏகும் - செல்லுகிற, வேகத்தால்- விரைவினாலே, கண்ணொடு மனமவை சுழலும்-கண்களும் மனமும் சுழலலுற்ற, கற்பினாள் - பதிவிரதையான சீதை, உள் நிறை உணர்வு அழிந்து-உள்ளத்தில் நிறைந்த அறிவு அழியப்பெற்று, ஒன்றுஉம் ஓர்ந்திலள் - யாதொன்றையும் உணரமாட்டாதவளாய், தன்னைஉம் மறந்து - தன்னையும் மறந்தவளாய் [மூர்ச்சித்து], மண்ணிடை சாம்பினாள் - நிலத்திற் சோர்ந்துகிடந்தாள்; (எ - று.)

கொடியோனான இராவணன் விண்ணிடைச் செல்லும் வேகத்தினால், கற்பின் வடிவான சீதை, கண்ணும் மனமும் சுழல, மூர்ச்சித்துக் கிடந்தாளென்பதாம். கீழே இராவணன் சீதையை மண்ணொடும் தோளிடைக்கொண்டு விண்ணேகினான் என வந்ததனால், மண்ணிடை என்றது அவ்வாறு தோண்டி யெடுக்கப்பட்ட மண்ணிடத்து என்றவாறு. நிறையுணர்வு-வினைத்தொகை. பி - ம்:—[1] சுழன்ற. (949)

## 139.—இராவணன் அப்பாற் செல்லுதலைக் கண்ட சடாயு இரங்கல்.

ஏகின னரக்கனு மெருவை வேந்தனும்
மோகவெந் துயர்சிறி தாறி [1] முன்னியே
[2] மாகமே நோக்கினான் வஞ்சன் வல்லையிற்
போகுதல் கண்டகம் புலர்ந்து சொல்லுவான்.

(இ - ள்.) அரக்கன்உம் - இராவணனும், ஏகினன் - (இவ்வாறு) சென்றான்; எருவை வேந்தன்உம் - கழுகரசனான சடாயுவும், மோகம் வெம் துயர் சிறிது ஆறி - மயக்கத்தைத்தந்த கொடிய துன்பத்தினின்று சிறிது தெளிந்து, முன்னி - (சிறிது பொழுது) ஆலோசித்துநின்று, மா கமே நோக்கினான் - பெரிய வானத்தையே பார்த்து, வஞ்சன் வல்லையில் போகுதல் கண்டு - வஞ்சகனான இராவணன் விரைவிற்செல்லுதலைக் கண்ணுற்று, அகம் புலர்ந்து - மனம்வருந்தி, சொல்லுவான் - சிலசொல்பவனானான்; (எ - று.)— அவற்றை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க. பி - ம்:—[1]மூர்ச்சியா. [2]மாகமேல். (950)

## 140.—இதுமுதல் ஐந்து கவிகள் - ஒருதொடர்: சடாயு இரங்கல்.

வந்திலர் மைந்தர்[1]நம் மருகிக் கெய்திய
வெந்துயர் [2]துடைத்தன னென்னு மெய்ப்புகழ்
[3]தந்திலா விதியினார் தரும வேலியைச்
சிந்தினர் மேலினிச் செயலென் னாங்கொலோ.

(இ - ள்.) மைந்தர் - (எமது) மக்களாகிய இராமலட்சுமணர், வந்திலர் - இன்னும்வந்தார்களில்லை: 'நம் மருகிக்கு எய்திய வெம் துயர்-எமது மருமகளான சீதைக்கு நேர்ந்த கொடுந்துன்பத்தை, துடைத்தனன் - நீக்கினேன்,' என்னும் - என்கிற, மெய் புகழ் - உண்மையான கீர்த்தியை, தந்திலா - (எனக்குத்) தந்திடாத, விதியினார் தருமம் வேலியை சிந்தினர் - விதியானது தருமத்தின் வேலியை முறித்துவிட்டது; இனி மேல் செயல் என் ஆம் கொல் ஓ - இனிமேல் விளையுஞ் செயல் யாதோ? (எ - று.)

தருமம் நிலைநில்லாது நீங்குறுதற்கு விதி காரணமாயிற்றென்பான், 'விதியினார் தருமவேலியைச்சிந்தினர்' என்றான். வேலி-பாதுகாப்பு. தரும வேலி யெனபதற்கு-தருமமாகிய வேலி யென்றலும் ஒன்று. விதியினார் என்று உயர்வுப்பன்மையாற் கூறியது, இழிவை விளக்கும். 'இனிச்செயலென்னாங்கொல்' என்பது - இன்னும் யாதுசெய்கை நிகழுமோ என்றும் பொருள்படும். இனி, [3]தந்திலர் என்ற பாடத்திற்கு—எனது மருமகளுக்கு நேர்ந்த கொடுந்துன்பத்தை நான் நீக்கினேனென்ற மெய்க்கீர்த்தியை எனக்கு விதி தந்திலது: தருமத்தினது காவலைச் சிதறடித்த அரக்கர்களின்மேல் இனி நான் செய்வது யாதோ? என்று உரைக்க. பி - ம்:—[1] தாம். [2] துடைத்தனர். (951)

141. [1]வெற்றிய ருளரெனின் மின்னி னுண்ணிடைப்
பொற்றொடிக் [2]கிந்நிலை [3]புகுதற் பாலதோ
உற்றதை யின்னதென் றுணர கிற்றிலேன்
சிற்றவை வஞ்சனை முடியச் செய்ததோ.

(இ - ள்.) வெற்றியர் - (இராவணனைக் கொன்று) சயத்தை அடைய வல்லவர்களான இராமலக்குமணர், உளர் எனின்-இங்கு

உள்ளாராயின், மின்னின் நுண் இடை பொன்தொடிக்கு - மின்னல் போல விளங்குகிற நுட்பமான இடையையும் பொன்னினாலாகிய தொடியென்னும் கைவளையையுமுடைய சீதைக்கு, இ நிலை - இப்படிப்பட்டகொடியநிலைமை, புகுதற்பாலதுவோ - நேர்தற்கு உரியதோ? [அன்றென்றபடி]; உற்றதை இன்னது என்று உணர்கிற்றிலேன் - (இராமலக்குமணர்களுக்கு) நேர்ந்த நிலைமையை இன்னதென்று அறிகின்றிலேன்; சிறு அவை வஞ்சனை - சிறியதாயாகிய கைகேயியினது வஞ்சனைதான், முடிய செய்ததுவோ - (இவ்வாறு) முடித்து விட்டதோ! (எ - று.)

'உற்றதை இன்னதென்று உணர்கிற்றிலேன்' என்பதற்கு - இப்படி நேர்ந்த தீங்கின் காரணத்தை இன்னதென்று அறியமாட்டிற்றிலே னென்னலாம். 'சிற்றவையின் வஞ்சனை, வெற்றியாரை முடிந்திடுமாறு செய்ததோ' என்று ஈற்றடிக்குப் பொருளுரைப்பாருமுளர். பி-ம்—[1]வெற்றியார். [2]இன்னலை. [3]புகுதப். (952)

142. பஞ்சணை பாம்பணை யாகப் பள்ளிசேர்
அஞ்சன வண்ணனே யிராம னாதலால்
வெஞ்சின வரக்கனால் வெல்லற் பாலனோ
வஞ்சனை யிழைத்தனன் கள்ள மாயையால்.

(இ - ள்.) பாம்பு அணை-ஆதிசேஷ சயநம், பஞ்சுஅணை ஆக - பஞ்சுமெத்தைபோல அமைய, பள்ளி சேர்- (அதனிடத்துப்) படுக்கைகொண்டருளுகிற, அஞ்சன வண்ணனே - மைபோலுங் கரிய திருநிறமுடையவனான ஸ்ரீமந் நாராயணனே, இராமன்-இராமனாகத் தோன்றியவன், ஆதலால்—,(அவ்விராமன்), வெம் சினம் அரக்கனால் வெல்லற்பாலனோ - கொடியகோபத்தையுடைய இவ்விராக்கதனால் வெல்லப்படுதற்கு உரியனோ? [அல்லன்]; (ஆனதுபற்றியே அவ்வரக்கன்), கள்ளம் மாயையால் வஞ்சனை இழைத்தனன் - திருட்டுத்தன்மையுள்ள மாயச்செய்கையால் இவ்வாறு வஞ்சனை செய்தான்; (எ - று.)

இராமன் திருமாலினவதாரமாதலால் அவனை எதிர்த்து நின்று வெல்லமுடியாத இராவணன் மாயை புணர்த்துச் சீதையைக் கவர்ந்தனனென்பதாம். காற்றைஉணவாகக்கொள்ளுந் தன்மையதாகிய பாம்பு காற்றடைத்த மெத்தையின் தன்மைவாய்ந்து பஞ்சு மெத்தைபோல மெத்தென்றமைய என்பது, 'பஞ்சணை பாம்பணையாக' என்பதன் கருத்து. (953)

143. வேரற வரக்கரை வென்று வெம்பழி
தீருமென் [1]சிறுவனுந் தீண்ட வஞ்சுமால்
ஆரியன் றேவியை யரக்க [2]னன்மலர்ப்
பேருல களித்தவன் பிழைப்பில் சாபத்தால்.

((இ - ள்) என்சிறுவன்உம்-எனது மகனான இராமனும், அரக்கரை வேர் அற வென்று வெம் பழி தீரும் - (இனி இச்செய்தியை உணர்ந்தபின்பு) இராக்கதர்களை நிர்மூலமாம்படி கொன்று வெற்றிகொண்டு (தனக்குநேர்ந்தகொடிய) இப்பழியைத்தீர்த்துக்

கொள்வான்; அரக்கன் - இராவணனும், நல் மலர் பேர் உலகு அளித்தவன் பிழைப்பு இல் சாபத்தால் - சிறந்த தாமரை மலரில் தோன்றிப் பெரிய உலகங்களைப் படைத்தவனான பிரமதேவனது தவறுதலில்லாத சாபத்தால், ஆரியன் தேவியை தீண்ட அஞ்சும்- சிறந்தவனான இராமனது மனையாளாகிய சீதையைத்தொடுதற்கு அஞ்சுந்தன்மையன்; (எ - று.)

பிரமன் தந்த சாபத்திற்கு அஞ்சி இராவணன் அவளைத் தீண்ட மாட்டானாதலின், இராமன் அரக்கரை அழித்துப் பழி தீர்த்துக் கொண்டபின்பு சீதையைக் கைக்கொள்ள யாதொரு தடையுமில்லை என்பதாம். திக்குவிசயஞ்செய்து எதிரற்றவனாய்த் திகழ்ந்த இராவணன் மூவுலகத்துமுள்ள தேவர் அசுரர் கந்தருவர் நாகர் முதலியோருள் அழகுவாய்ந்த மங்கையர்பலரையும் வலியக் கற்பழியா நிற்க, அதுபற்றி வருத்தமுற்ற அம்மங்கையரும் அவரைச் சார்ந்த ஆடவர்களும் அவனது பிரபிதாமகனான பிரமதேவனைச் சரண மடைந்து அவ்வரக்கனது வரம்புகடந்த ஒழுக்கக்கேட்டைக் கூறி முறையிடவே, அதனையுணர்ந்து அருள்கூர்ந்த நான்முகக்கடவுள் 'இனி இராவணன் எந்தமாதரையேனும் வலியக்கற்பழிக்கலுறின் தலை வெடித்து இறந்திடுவான்' என்று சாபமிட, அதனையறிந்தபின் அவ்வரக்கன் அஞ்சி ஒருவரையறைப்பட்டு நின்றனனென வரலாறு காண்க. ஆல் - ஈற்றசை. பி -ம்:—[1] சிறுவனே. [2] அம். (954)

144. [1]பருஞ்சிறை யின்னன பன்னி யுன்னுவான்
அருஞ்சிறை யுற்றன ளாமென[2]மனம்
பொருஞ்[3]சிறை [4]யிற்றதேற் பூவை கற்பெனும்
இருஞ்[3]சிறை [5]யிறுதென விடரு நீங்கினான்.

(இ-ள்.) பருஞ் சிறை-பெரிய சிறகுகளையுடைய சடாயு, இன்னன பன்னி - இத்தன்மையனவான வார்த்தைகளைக் கூறி, அரு சிறை உற்றனள் ஆம் என மனம் உன்னுவான் - (பிராட்டி) நீங்குதற்கு அரிய சிறைச்சாலையை அடைந்தாள் போலும் என்று மனத்திற் சிந்திப்பவனாகி,—'பொரும் சிறை இற்றது ஏல் - போர்செய்கிற (எனது) சிறகு அழிவடைந்ததாயினும், பூவை கற்பு எனும் இருஞ் சிறை இறுது - நாகணவாய்ப்பறவைபோன்ற(இன்சொற்களையுடைய) சீதையினது கற்பு நிலைமையாகிய பெரிய சிறகுஅழிவடையாது' என-என்று எண்ணி, இடர்உம் நீங்கினான் - துயரொழிந்தவனு மானான்; (எ - று.)

பாவி இராவணன் சீதையை இப்போது சிறை வைத்திருப் பானென்று சிந்தித்து, சடாயு, என் சிறைபோலச் சீதையின் கற் புச்சிறை இறுதென்று கவலைநீங்கினனென்பதாம். நல்லொழுக் கத்துச் செல்லச் சாதனமாக இருத்தலால், கற்பைச் சிறைஎன்று உருவகித்தான். 'கற்பெனு மிருஞ்சிறை யிறுது' என்பதற்கு - கற்பு நிலையாகிய பெரிய சிறைக்காவல் அழியாதென்று உரைப்பினும் அமையும்; "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக் குங் காப்பே தலை" என்ற திருக்குறளினால், சிறைக்காவலினும் மகளிரின் நிறைக்காவல் சிறந்ததாதல் உணர்க: ஆனதுபற்றியே,

'இருஞ்சிறை' எனப்பட்டதென்க. அருஞ்சிறையுற்றனளாம் - இராவணனால் அரியசிறைக்காவலில் வைக்கப்பட்டாள் போலும். பருஞ்சிறை - பண்புத்தொகையன்மொழி. [2]மனம்பொரிஞ்சிறகிற்றதேல் என்று பாடமோதி, 'மனம்பொரிஞ்சு' என்பதற்கு - மனம்பொரிந்து என்று உரைத்து, இறகு இற்றதேல் - என்று எடுப்பாரும் உளர்; பொரிஞ்சு - நகரதகரங்களுக்கு ஞகரசகரங்கள் முறையேபோலி. இன்னன - பெயர். பி - ம்:—[1]பரிஞ்சிறை. [3]சிறகு. [4]அற்றதேற், இற்றதே. [5]அருமெதன. (955)

## 145.—சடாயு சோர்ந்து துயில் கொள்ளல்.

[1]அஞ்சிறை குருதியா லழிந்து [2]சோர்வுற
வஞ்சியை மீட்கிலே னென்னு மானமும்
செஞ்செவே மக்கள்பாற் சென்ற காதலும்
நெஞ்சுறத் துயின்றன னுணர்வு நீங்கலான்.

(இ - ள்.) அம் சிறை - (தனது) அழகிய இறகுகள், குருதியால் - இரத்தப் பெருக்கால், அழிந்து - அழிவடைந்து, சோர்வுற - தளர்ச்சியடையவும்,—வஞ்சியை மீட்கிலேன் என்னும் மானம்உம் - வஞ்சிக்கொடிபோல மெல்லியளாகிய சீதையை மீட்கமாட்டாதவனாயினேன் என்று கருதுதலாலாகிற வெட்கமும், மக்கள்பால் செம்செவே சென்ற காதல்உம் - (தனது) குமாரர்களாகிய இராமலக்குமணர்களிடத்தில் மிகவுஞ் செவ்விதாகப் போய்ப்பொருந்திய அன்பும், நெஞ்சு உற - மனத்தில் நிறைந்துநிற்கவும், துயின்றனன் - தூக்கமுற்றான், உணர்வு நீங்கலான் - அறிவுநீங்காதவனான அச்சடாயு; (எ - று.)

வாளால் வெட்டுண்டசிறகினின்று குருதிப்பெருக்கு மிக்குப் பெருகவே, சடாயு அறிவுசோர்வுற, சீதாபிராட்டியை மீட்கிலேனென்ற நாணமும், இராமலட்சுமணர்களிடத்திற் சென்ற காதலும் கருத்தில் நிறைய, உணர்வுநீங்காமலே தூக்கமுற்றானென்பதாம். 'உணர்வுநீங்கலான்' என்றது, எப்பொழுதும் நிலைகுலையாத நல்லறிவுடையானென்ற இயல்பை விளக்குவதோடு, இப்பொழுது உயிரொழிந்திலனென்ற செய்தியையும் விளக்கும். [1]அஞ்சிறைக் குருதியாறழிந்து என்று பாடமோதி, அழகிய இறகுகளினின்று இரத்தநதி பெருகி என்று உரைப்பாரும் உளர். வஞ்சி-உவமையாகுபெயர். மானம்-அவமானம்: "மானந்தலைவருவசெய்பவோ" என்பதிற்போல. செம்செவே = செம்செவ்வே. பி - ம்:—[2]சோரவும். (956)

## 146.—இராவணன் சீதையை அசோகவனத்திற் சிறை வைத்தானெனல்.

வஞ்சியை யரக்கனும் வல்லை கொண்டுபோய்ச்
செஞ்செவே திருவுருத் தீண்ட வஞ்சுவான்
நஞ்சிய லரக்கியர் நடுவ ணுயிடைச்
[1]சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத் தானரோ.

(இ - ள்.) அரக்கன்உம் - இராவணனும், வஞ்சியை-சீதாபிராட்டியை, வல்லைகொண்டு போய்-விரைவில்எடுத்துக்கொண்டு (இலங்கைக்குச்) சென்று, திரு உரு செம் செவே தீண்ட அஞ்சுவான்-(அப்பிராட்டியின்) திருமேனியை வலியத்தொடுதற்கு அச்சங்கொண்டவனாய், ஆயிடை - அவ்விடத்தில், சிஞ்சுபவனத்திடை - (அசோகவனத்தில்) சிம்சுபாமரத்தின்கீழ், நஞ்சு இயல் அரக்கியர் நடுவண்-விஷத்தின் தன்மைபொருந்திய [கொடிய] இராக்கதமாதர்களின் நடுவிலே, சிறை வைத்தான் - (அவளைக்) காவலில் வைத்திட்டான்; (எ - று.)—அரோ - ஈற்றசை. இதுவும் அடுத்த செய்யுளும்-கவிக்கூற்று.

சீதையை விண்வழியாகத் தூக்கிச்சென்ற இராவணன், அன்னவளை அசோகவனிகையில் சிம்சுபாமரத்தின்கீழ்ச் சிறைவைத்தமையை இதனாற் கூறுகின்றார், கவி. ஆயிடை = அ + இடை. சிஞ்சுபவனம் - வடசொல்திரிபு. பி-ம்:—[1]சிஞ்சுவா. (957)

## 147.—இலக்குமணன் செய்தியைக் கூறுவோமெனல்.

இந்நிலை யினையவன் செய[1]லி யம்பினும்
பொன்னிலை மானின்பின் றொடர்ந்து போகிய
மன்னிலை யறிகென மங்கை யேவிய
[2]பின்னவன் றன்னிலை பேசு வாமரோ.

(இ - ள்.) இனையவன் செயல் - இவ்விராவணனது செய்கையை, இ நிலை இயம்பினும் - இந்தவிதமாகக் கூறினோம்: 'பொன் நிலை மானின்பின் - பொன்மயமாய்ப் பொருந்திய மானின்பின்னே, தொடர்ந்துபோகிய - தொடர்ந்துசென்ற, மன்-(நமது) தலைமகனான இராமபிரானுக்கு நேர்ந்த, நிலை-நிலைமையை, அறிக - அறிவாயாக,' என-என்று, மங்கை - இளம்பருவமுடையவளான சீதாபிராட்டி, ஏவிய - கட்டளையிட்ட, பின்னவன் - இளையவனான இலக்குமணனது, நிலை-நிலைமையை, பேசுவாம் - இனிக்கூறுவோம்; (எ-று.)—அதனை மேற் காண்க.

இராவணன் செயலைக் கூறிய நாம் இளையபெருமாள் செயலைக் கூறுவோமென்கிறார் கவிஞர். அரோ-ஈற்றசை. பி - ம்:—[1]இயம்பினோம். [2]பின்னிளையவன். (958)

## 148.—சீதையின் தனிமைக்காக இலக்குமணன் சிந்தித்தல்.

ஒருமக டனிமையை யுன்னி யுள்ளுறும்
பருவரன் மீதிடப் பதைக்கு நெஞ்சினன்
பெருமகன் றனைத்தனி பிரிந்து [1]பேதுறுந்
[2]திருநகர் தீருமப் பரதன் செய்கையான்.

(இ - ள்.) ஒரு மகள்-ஒப்பற்றவளாகிய சீதாபிராட்டியினது, தனிமையை-தனித்திருக்குந்தன்மையை, உன்னி - நினைத்தலால், உள் உறும்-மனத்திற் பொருந்திய, பருவரல்-துன்பம், மீது இட-அதிகப்பட, பதைக்கும்-துடிக்கின்ற, நெஞ்சினன் - மனத்தையுடை

யவனும், பெரு மகன் தனை தனி பிரிந்து பேதுஉறும் - புருஷோத்தமனை இராமபிரானைத் தனியே பிரிந்து வருத்தமுறுகிற, திரு நகர் தீரும் அ பரதன்-சிறந்த அயோத்தியாபுரியைவிட்டு நீங்கிய அந்தப்பரதனது, செய்கையான் - செயல்போன்ற செயலையுடையவனுமாய்,—(எ - று.)—"விரைவிற் செல்கின்றான்" என வருங் கவியோடு தொடரும்.

இராமனை வனத்தினின்று மீட்டு நகர்க்கு அழைத்துக்கொண்டு போகவேண்டு மென்ற விருப்பத்தோடு அயோத்தியினின்று புறப்பட்டுச் சித்திரகூடபருவதத்துக்கு வந்துசேர்ந்த பரதன் அப்பொழுது மீண்டு நகர்புகுதற்கு உடன்படாத இராமனை அங்குவிட்டுப் பிரிந்துசெல்லும்பொழுது அடைந்த வருத்தத்தை, இப்பொழுது இலக்குமணன் சீதையைத் தனியேவிட்டுச் செல்லும் பொழுது அடையும் வருத்தத்துக்கு உவமைகூறினர். அங்கு இராமனை விட்டுப் பிரிந்து செல்ல மனமிலனாயினும் பரதன் அப்பெருமானது கட்டளையை மறுக்கமாட்டாமற்சென்றமைபோல, இங்குச் சீதையைத் தனியேவிட்டு நீங்கக் கருத்திலனாயினும் இலக்குமணன் அப்பிராட்டியின் கட்டளையைக் கடக்கமாட்டாமற் செல்கின்றன னென்க. பெருமகன் - தமையனுமாம். 'பெருமகன் தனைத் தனி பிரிந்து பேதுறும்' என்றதைத் திருநகருக்கு அடைமொழியாக்கி, இராமன்பிரிந்ததனால் வருத்தமுற்ற சீதையைக் காவல் செய்யாது தனியேவிட்டு இராமனைத் தேடிக்கொண்டு வனத்தை நோக்கிச்செல்லும் இலக்குமணன், இராமன்பிரிந்ததனால் வருத்தமுற்ற அயோத்தியாபுரியைக் காவல்செய்யாது தனியேவிட்டு இராமனைத்தேடிக்கொண்டு வனத்தை நோக்கிச்சென்ற பரதனது செய்கையை யொக்குஞ் செய்கையையுடையான் என்று உவமை பொருத்தினுமாம். பி - ம்:— [1]பேதுற்றுத். [2]திருநகர்ச் செல்லும். (959)

## 149.—இலக்குமணன் இராமனைக் காணுதல்.

தெண்டிரைக் கலமென விரைவிற் செல்கின்றான்
புண்டரீ கத்தடங் காடு பூத்தொரு
கொண்டல்வந் [1]திழிந்தன்ன கோலத் தான்றனைக்
கண்டனன் மனமெனக் களிக்குங் கண்ணினான்.

(இ - ள்.) தெள் திரை கலம் என-தெளிவான அலைகளையுடையதாகிய கடலில் ஓடும் மரக்கலம்போல, விரைவின் செல்கின்றான் - விரைவாகப் போகின்றவனான இலக்குமணன்,—புண்டரீகம் தட காடு பூத்து-பெரிய செந்தாமரை மலர்த் தொகுதி பூக்கப்பெற்று, ஒரு கொண்டல் வந்து இழிந்து அன்ன-நீர் கொண்டதொரு காளமேகம் வந்து இறங்கினாற்போன்ற, கோலத்தான் தனை-திருமேனியழகுடையவனான இராமபிரானை, கண்டனன் - பார்த்து, மனம் என களிக்கும் கண்ணினான் - (தன்) மனங்களிப்புறுதல் போலக் களிப்படையுங் கண்களையுடையவனானான்; (எ-று.)

வேறுஉவமை கிடைத்தல் அரிதாதல்பற்றி, இராமதரிசனத்தாற் கண்கள் அடைந்த களிப்புக்கு அவன்மனம் களித்தலையே

உவமைகூறினர். 'மனமெனக் களிக்குங் கண்ணினன்' என்று உபமானமும் உபமேயமுமாக வைத்துக்கூறினும், மனமும் கண்ணும் ஒருங்கே களிக்கப்பெற்றனனென்பதே கருத்து. மனமெனக் கண்டனன் என்று எடுத்து, இராமனுக்கு யாதொரு தீங்குமில்லையென்று தன்மனத்திற் கருதியவாறே யாதொரு தீங்குமின்றிவரக் கண்டனன் என்றலும் ஒன்று. இராமனது நீலமேனிக்குக் காளமேகமும், கண் கை கால் வாய் உந்தியாகிய திருவவயவங்களின் அமைப்புக்குச் செந்தாமரை மலர்த்தொகுதியும் உவமை யெனக் காண்க. 'புண்டரீகத்தடங்காடுபூத்து ஒருகொண்டல் வந்து இழிதல்' - இல்பொருளுவமை. பி-ம்:—[1] இழிந்தெனக். (960)

## 150.—இராமன் இலக்குமணனைக் காணுதல்.

துண்ணெனு மவ்வுரை [1]தொடர்ந்த தோகையும்
பெண்ணெனும் பேதைமை மயக்கப் பேதினல்
உண்ணிறை சோருமென் றூச லாடுமக்
கண்ணனு மிளவலைக் [2]கண்ணுற் ருனரோ.

(இ - ள்.) 'துண்ணெனும்-(கேட்பவர்) அஞ்சித் திடுக்கிடுதற்குக் காரணமான, அ உரை - (மாயமானினது 'ஹா ஸீதே! லக்ஷ்மணா' என்ற) அவ்வார்த்தை, தொடர்ந்த - சென்று செவிபடப்பெற்ற, தோகைஉம்-மயில்போல்பவளான சீதையும், பெண் எனும் பேதைமை மயக்கம் பேதினல்-(தனது) பெண்மையென்கிற அறியாத்தன்மைக்கு உரிய மயக்கமாகிய வேறுபாட்டினல், உள் நிறை சோரும்-மனத்தின் உறுதிநிலை குலைவாள்,' என்று-என்று எண்ணி, ஊசல் ஆடும்-மனத் தடுமாற்றமடைந்துவருந்துகிற, அ கண்ணன்உம் - கருநிறமுடையவனை அவ்விராமனும், இளவலை கண்ணுற்ருன் - தம்பியான இலக்குமணனைப் பார்த்தான்;(எ - று.)

'மாதருக்குஉரிய பேதைமையால் மாரீசனது மாயக்குரல் கேட்டுச் சீதை மனவுறுதி குன்றுவாளே! அதனல் என்னவிளையுமோ?' என்று தடுமாற்றங்கொண்டு வருந்துகிற இராமன் அச்சீதை வசிக்கும் இடநோக்கி வருகையில் இளவலை இடையே கண்டனனென்பதாம். கண்ணன்-க்ருஷ்ணன் என்ற வடசொல்லின் சிதைவு; இது அவதாரப்பெயரன்றித் திருமாலுக்கு உரிய பொதுப்பெயராய் இங்கு இராமனுக்கு வந்தது. இனி, கண்ணனென்பது - கருநிறமுடையானென்பதுபற்றி இராமனுக்கு வந்த காரணப்பெயரெனினுமாம். இராமனென்ற பெயருக்கு - கருநிறமுடையானென்று ஒரு பொருளுள்ளதனல், கண்ணனென்பது அதன்பரியாயமாகத் தட்டில்லை. அரோ-ஈற்றசை. பி-ம்:—[1] தொடரத். [2] கண்ணி நோக்கினன்.

வேறு.

## 151.—இலக்குமணன்வருங் காரணத்தை இராமன் ஆலோசித்தல்.

புன்சொற்க டந்த பகுவாய ரக்க னுரைபொய்யெ னுது[1] புலர்வாள்
வன்சொற்[2]க டந்து மடமங்கை யேவ நிலைதேர வந்த [3]மருளே

தன்சொற்க டந்து தளர்கின்ற நெஞ்ச முடையேன் மருங்கு தனியே
என்சொற் கடந்து மனமுந்த ளர்ந்த விளவீரன் வந்த வியல்பே.

இதுவும், அடுத்த கவியும்-குளகம்.

(இ - ள்.) என் சொல் கடந்து - (சீதையைப் பர்ணசாலையிற் பாதுகாத்திருக்கும்படி கட்டளையிட்ட) எனது வார்த்தையையும் (சீதைவற்புறுத்தியதனால்) மீறி, (அதனால்), மனம்உம்தளர்ந்தஇள வீரன்-(உடம்போடு)மனமும் தளர்ச்சியடையப்பெற்ற இளைய வீரனான இவ்விலக்குமணன்,-தன் சொல் கடந்து-('இது மாயமான், இதனைத் தொடரலாகாது' என்று உண்மையை யுணர்ந்து முந்திக்கூறிய) தனது வார்த்தையைக் கடந்து, (அதனால் நேர்ந்த தீங்குக்கு உள்ளாகி வருந்தி), தளர்கின்ற நெஞ்சம் உடையேன் மருங்கு- (இங்கு வந்து) சோர்வடைகிற மனத்தையுடையவனான எனது அருகிலே, தனியே வந்த இயல்பு-தனித்துவந்த தன்மையானது,—மட மங்கை - (பெண்களுக்குஉரிய) பேதைமையுடைய சீதை, புல் சொற்கள் தந்த பகு வாய் அரக்கன் உரை பொய் எனாது-வருத்தந்தருஞ் சொற்களைக் கூறிய பிளவுபட்ட வாயையுடைய மாயமானாய்வந்த இவ்வரக்கனது வார்த்தைகளை வஞ்சனை யென்று கருதாமல், புலர்வாள் - வாடுபவளாய், வல் சொற்கள் தந்து ஏவ - கொடிய வார்த்தைகளைக் கூறி (வலிய) ஏவியதனால், நிலை தேர வந்த - (தான் தெளிவாகத்தெரிந்திருந்த எனது) நிலைமையை (த்தனக்காக அன்றி அந்தச்சீதையின் பொருட்டு)அறிதற்குவந்த, மருளே-மயக்கச்செயலே; (எ-று.)"என்று உன்னி" எனவருங் கவியோடு தொடரும்.

நான் சீதையின் தூண்டுதலால் இலட்சுமணனுடைய பேச்சை இலட்சியஞ்செய்யாது அவமதித்து மாயமான்பின்னே சென்று அதனை எய்துவீழ்த்த, அவ்வரக்கன் தனக்கு இயல்பான புன் சொல்லைப் பகுவாய்திறந்து பிதற்றினானன்றோ! 'இதனால் என்ன விளையுமோ!' என்று யானும் தளர்வுறுவேன்: அவ்வாறான என்னிடத்து, சீதையைப் பாதுகாத்தவண்ணம் பர்ணசாலையில்தானே இருப்பாயென்ற என்சொல்லைக் கடந்து, அங்ஙன் என்கட்டளையை மீறுதலாகிய தகாதசெயலைப் புரிவதனால் மனத்தோடு உடலமும் தளர்ந்து இளவீரன்வருகிறானே? இதற்குக்காரணம் - அரக்கன் புன் சொல்லைப் பொய்யென்று உணராது மெய்யென்று சீதை தன் பேதைமைக் குணத்தால் மனம் புலர்வாளாகி வன்சொற்சொல்லி ஏவவே, தனக்காகவன்றி அவளுக்காகவந்த மருளேபோலும்எனக் கருதினனென்க. அரக்கன் - மாரீசன்: இறக்கும்போது வாயைத் திறந்து கதறியதனால் அவனுக்குப் பகுவாயென்று அடைமொழி கொடுத்தார். புன்சொற்கள்-'ஹா ஸீதே! லக்ஷ்மணா!' என்று இராமன்குரலால் வஞ்சனையாக விளித்தவை. தன் சொல்-இலக்குமணனது சொல். தனியே வீரன்வந்த இயல்பு என்றது - இலட்சுமணனைப்போலவே என் திறனை யுணர்ந்திருந்தாளாயின், என்னாலிறந்த அரக்கனைக் கண்டு எனது வீரத்தைமெச்ச அவ்விலக்குமணனோடு சீதையும் வந்திருப்பாளென்பதைக் குறிப்பிக்கு மென்ப.பி-ம்:—
[1] புகல்வாள். [2] கடந்த. [3] மருளோ.

இதுமுதல் எழுகவிகள் - ஒன்று மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாங்காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (962)

## 152.—இராமன் இலக்குமணனைத் தழுவி வந்த காரணம் வினவல்.

என்றுன்னி யென்னை விதியார்மு டிப்ப தெனவெண்ணி நின்ற விறையைப், பொன்றுன்னு விற்கை [1]யிளவீரன் வந்து புனைதா ளிறைஞ்சு பொழுதின், மின்றுன்னு நூலின் மணிமார்பழுந்த விரை வோடு புல்லி[2]யுருகா, நின்றுன்னி வந்த நிலை[3]யென்கொ லென்று நெடி யோன்வி ளம்ப நொடிவான்.

(இ - ள்.) என்று உன்னி-என்று எண்ணி, விதியார் முடிப்பது என்னை என எண்ணி நின்ற - ஊழ்வினை முடிக்குஞ் செயல் யாதோவென்று சிந்தித்துநின்ற, இறையை - இராமபிரானை, பொன் துன்னு வில் கை இள வீரன் - அழகியதாயமைந்த வில்லை யேந்திய கையையுடைய இளைய வீரனான இலக்குமணன், வந்து புனை தாள் இறைஞ்சு பொழுதில்-அருகிற் சார்ந்து அழகிய திருவடிகளில் வணங்கும்பொழுது,—நெடியோன் - தமையனான அவ்விராமன்,— மின் துன்னு நூலின் மணி மார்பு அழுந்த விரைவோடு புல்லி- மின்னல்போல் விளங்குகிற பூணூலையுடைய அழகிய தன்மார்பு அழுந்தும்படி விரைவாக(அவ்விலக்குமணனை யெடுத்து)இறுகத்தழு விக்கொண்டு,உருகா நின்று -(அன்புமிகுதியால்)மனம் உருகப்பெற்று, உன்னி வந்த நிலை என் கொல் என்று விளம்ப - 'நீ நினைத்துவந்த விதம் என்ன காரணத்தால்?' என்று வினவ, நொடிவான் - (இலக்குமணன்) விடைகூறுவான்; (எ- று.)—அதனை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

'விதி என்ன கேடு விளைக்குமோ?' என்று சிந்தை கொண்டி ருந்த இராமன், தன்தாளில் வீழ்ந்து வணங்கிய இலக்குமணனை எடுத்து மார்போடணைத்து 'நீ எதற்காகவந்தாய்?' என்று வினவ வும், விடைகூறலானானென்பதாம். உன்னிவந்த நிலை என்கொல்- யாதுநினைத்து எதன்பொருட்டு வந்தாய்? என்றபடி. புனைதாள் - வீரக்கழலையணிந்த பாதமுமாம். மூன்றுமடியில், துன்னு - உவம வுருபு; அன்றி, மின்னலின்தன்மை பொருந்திய முப்புரிநூ லென்ற லும் அமையும். நெடியோன்-மூத்தவன்; இனி, திருக்கலியாண குணகணங்களாற் பெரியவனும், திரிவிக்கிரமாவதாரத்தில் நீண்டு வளர்ந்தவனும், நெடிய விசுவரூபமுடையவனுமாம். பி - ம்:—[1]வய. [2]ஒருகால். [3]என்னை. (963)

## 153.—இதுவும், அடுத்த கவியும்-இலக்குமணன் தான் வந்த காரணங் கூறல்.

இல்லாநி லத்தி னிசையாத வெஞ்சொ லெழவஞ்சி [1]யேவ [2]முறையால், வல்வாய ரக்க னுரையாகு மென்ன மதியாண்ம றுக்க

முறுவாள், நில்லாது மற்றி தறிபோதி யென்ன நெடியோய் புயத்தின் வலியென், சொல்லான்ம னத்தினடையாள்சி னத்தின் முனிவோடு நின்று துவள்வாள்.

இதுமுதல் ஆறு கவிகள் - குளகம்.

(இ - ள்.) நிலத்தின் இல்லா - உலகத்தில் இல்லாததும், இசையாத-பொருந்தாததுமான, வெம் சொல் - ('ஹா ஸீதே லக்ஷ் மணு!', என்ற) கடுஞ்சொல், எழ - (திடீரென்று) எழுந்ததாக,— அஞ்சி - (அதுகேட்டு) அச்சங்கொண்டு, ஏவ-(சீதை சென்று செய்தி யறிந்துவரும்படி எனக்குக்) கட்டளையிட,—(அப்பொழுது யான்), முறையால் - முறைமைப்படி, வல் வாய் அரக்கன் உரை ஆகும் என்ன - 'கொடிய வாயையுடைய (மான்வடிவாகிய) இராக்கதனது சொல்லேயாகும் இது' என்றுகூற,—மதியாள்-(அதனை உண்மை யென்று) மதியாமல், மறுக்கம் உறுவாள்-கலக்கமடைபவளாய்,இது அறி நில்லாது போதி என்ன - '(சென்று)இதன் உண்மையை அறிந்துவா: இங்குநில்லாமற் செல்' என்று (மீண்டும் சீதை என்னை) ஏவ,—என் சொல்லால்:(அவள் சொல்லைமறுத்து உனது ஆற்றலை யெடுத்துக்கூறிய) எனது வார்த்தையால், நெடியோய் புயத்தின் வலி - உத்தமனான உனது தோள்வலிமையை, மனத்தின் அடையாள் - (தன்) மனத்திற் கொள்ளாதவளாய் [அறிந்துகொள்ளாமல் என்றபடி], சினத்தின் முனிவோடு நின்று துவள்வாள்-கோபமிகுதி யோடுநின்று தளர்பவளாய்,—(எ-று.)—"என்று ஓடலோடும்" என வருங் கவியில் தொடரும். மற்று - அசை; வினைமாற்றுமாம்.

இலக்குமணன் இராமபிரானை நோக்கி, சுவாமி! நான் இது மாரீசன் மாயக்குரலே என்னவும், இராமபிரானிடம் நீ போகவேண் டும்என்று சீதை என்னை மீண்டும் ஏவ, அச்சீதாபிராட்டியாரை நோக்கி நான் வற்புறுத்திக் கூறவும் அன்னவள் உன் தோள் வலிமையை மனத்திற் கொள்ளாது சினம்மிக்குத் தளர்பவளானு ளென்றுதெரிவித்தான் என்க. பி-ம்:—[1] எவ்வம்.[2] முறையான். (964)

154. ஏகாது நிற்றி யெனின்யானெ ருப்பி னிடைவீழ்வெ னென்று முடுகா, மாகான கத்தி னிடையோட லோடு மனமஞ்சி வஞ்ச வினையேன், போகா[1]தி ருக்கி னிறவாதி ருக்கை புணராளெ னக்கொ டுணரா, ஆகா[2]தி றக்கை யறனன்றெ னக்கொ டிவண்வந்த தென்ன வமலன்.

(இ - ள்.) 'ஏகாது நிற்றி எனின் - (நீ இராமனிடத்துக்குச்) செல் லாமல் இங்குநிற்பாயானால், யான் நெருப்பினிடை வீழ்வென் - நான் நெருப்பிற்குதித்து உயிர்விடுவேன்,' என்று - என்றுசொல்லி, முடுகா - விரைந்து, மா கானகத்தினிடை - பெரிய காட்டிலே, ஓடலோடும் - (தீயை நாடிச் சீதை) ஓடியவளவிலே,—மனம் அஞ்சி-மனத் திற் பயந்து, வஞ்சம் வினையேன் போகாது இருக்கின் இறவாது இருக்கை புணராள் என கொடு உணரா - 'வஞ்சனைச் செய்கையை யுடையனென்று (அவளாற்) கருதப்பட்டயான் (இவ்விடம் விட்டுப்) போகாமலிருந்தால் (அவள்) இறவாமலிருக்கமாட்டாள்' என்று

அறிந்துகொண்டு, இறக்கை ஆகாது அறன் அன்று என கொடு - '(அவள்) இறத்தல் தகாது, (அது) தருமமன்று' என்றும் எண்ணி, இவண் வந்தது - (நான்) இவ்விடத்திற்கு வந்தசெயல் (நிகழ்ந்தது), என்ன-என்று (இலக்குமணன்) சொல்ல, (அது கேட்டு), அமலன் - குற்றமற்றவனான இராமபிரான்,—(எ - று.)— "என்று தெருளா" என வருங் கவியோடு தொடரும்.

'அங்ஙன் சினத்தோடு தளர்ச்சியுற்ற அவள் நீ இராமபிரானிடம் செல்லாயாயின் யான் நெருப்பில் வீழ்வே னென்று கானகத்திடை யோடலும், நான் காத்தல்தொழிலை விட்டுச் செல்லாதிருப்பின் இவள் உயிரிழப்பது திண்ணம்: இவளையிறக்கவிடுவது அறனன்று என்று யான் வந்தது' என்று பின்னர் இலக்குமணன் தான் வந்த காரணத்தைக் கூறினனென்பதாம். இறவாதிருக்கை புணராள் - இறந்தேவிடுவாள் என்றபடி. பி - ம்:—[1]நிற்கின். [2]இருக்கை. (965)

## 155.—நடந்த செயலைக்குறித்து இராமன் சிந்தித்தல்.

[1]சாவாதி ருத்த லிலளான துற்ற [2]தைையோ த டுக்க [3]முடியாது
ஆவாவ லக்க ணுறுவாளு ரைத்த பொருளோவ கத்தி [4]னடையா
காவாநி லத்தின் வருமேத [5]மற்ற தொழியாது கைக்கொ டகலப்
போவார் பிரிக்க முயல்வார்பு ணர்த்த பொருளாமி தென்று தெருளா.

(இ-ள்.) 'சாவாது இருத்தல் இலள் ஆனது உற்றது - (இவன் சீதையை விட்டுவராதிருப்பின் அவள்) இறவாமலிருக்குந் தன்மையில்லாதவளான நிலைமை நேர்ந்தது; அதைஓ தடுக்க முடியாது - (அவள் அடைவதாகச் சொன்ன) மரணத்தைத் தடுத்தலோ (இவன் விட்டுவருதலொழிய வேறொன்றால்) முடியாதாயிற்று; உரைத்த பொருள்ஓ - (இவன் அவளுக்குத் தேறுதலாகச்) சொன்ன சொற்களின் பொருள்களோ, அலக்கண் உறுவாள் அகத்தின் அடையா - கலக்கமடைந்த அவளது மனத்திற் பதியவில்லை; ஆ ஆ - அந்தோ அந்தோ!! காவா நிலத்தின் ஏதம் வரும் - பாதுகாவலொழிந்த அவ்விடத்தில் தீங்கு வந்து சேரும்: அது ஒழியாது - அத்தீங்கு வாராது நீங்காது; இது-(மாயமான் வந்ததுமுதலிய) இச்செய்கை, கை கொடு அகல போவார் பிரிக்க முயல்வார் புணர்த்த பொருள் ஆம் - (சீதையைக்) கைப்பற்றிக் கொண்டு செல்லக்கருதியவர்கள் (அவளைவிட்டு எம்இருவரையும்) பிரிக்க முயன்றவராய் (அதற்குஏற்ப)ச் செய்த வஞ்சனைச்சூழ்ச்சியாம்', - என்று தெருளா-என்றுநிச்சயித்து, - (எ-று.) "என" என்று வருங் கவியோடு தொடரும். மற்று - வினைமாற்று.

சீதையை இறவாதிருக்கச்செய்த செயலாதலால் அவளைவிட்டு வந்த இதில் இலக்குமணன்மீதும் குற்றமில்லை; இவன் சீதையைப் பாதுகாத்தலைத் தவிர்ந்து என்னிடம் வாராவிட்டால் தன்னுயிரைச் சீதை மாய்த்துக்கொண்டே விடுவாளன்றோ! இலக்குமணன் சொல்லும் தேறுதல்மொழிகளோ அந்தச் சீதையின் மனத்துப் பதியாது: ஆனால், காவா நிலத்தில் ஏதம் வந்தே தீருமென்று கருதுகின்றேன்:

இது அரக்கர் செய்த மாயமன்றோ என்று தெளிந்தான் இராமபிரா னென்பதாம். எங்ஙனமாயினும் சீதைக்குப் பாதுகாவலில்லாமையால் அங்குத் தீங்குநேர்ந்தே விடும் என்று நிச்சயித்தனன் இராமபிரா னென்க. ஆவா - இரக்கக் குறிப்பிடைச்சொல்லடுக்கு. பி - ம்:—[1] சாவானதிறறலில்லானதுற்றது:. [2] அஃதோ. [3] முடியார். [4] அடையாள். [5] உற்றது. (966)

## 156.—இராமன் இலக்குமணனை நோக்கிச் சிலகூறல்.

வந்தாய்தி றத்தி னுளதன்று குற்ற மடவாண்ம றுக்க முறுவாள்
சிந்தாகு லத்தொ டுரைசெய்த செய்கை யதுதீரு மென்று தெளிவாய்
முந்தேத டுக்க வொழியாதெ டுத்த வினையேன்மு டித்த முடிவால்
அந்தோகெ டுத்த தெனவுன்னி யுன்னி யழியாத வுள்ள [1]மழிவான்.

(இ - ள்.) 'வந்தாய் திறத்தின் - (சீதையைத் தனியேவிட்டு இங்கு) வந்த உன்னிடத்திலே, குற்றம் உளது அன்று-குற்றமில்லை;' 'மடவாள் - பேதைமைக்குணமுடைய சீதை, மறுக்கம் உறுவாள் - தடுமாற்றமடைந்தவளாய், (ஹா ஸீதே! லட்சுமணா! என்ற மாய மானின் கூக்குரலைக் கேட்டபோது எனக்கு என்ன விளைந்ததோ! என்று), சிந்தா ஆகுலத்தொடு - மனக்கலக்கத்தோடு, உரைசெய்த- சொன்னதால் நிகழ்ந்த, செய்கை - செயலாதலால், அது - (உன்னு டைய) அந்தக்குற்றம், தீரும் - நீங்கும்,' என்று - என்றுசொல்லி,— 'தெளிவாய் - (மாயமானென்று ஐயமற நீ) தெளிந்து கொண்டு, முந்தே தடுக்க - முன்னமே (என்னைத்) தடை செய்ய, ஒழியாது-அவ் வாறேவிட்டுநீங்காமல், எடுத்த வினையேன் - மானைப் பிடிக்கத் தொடங்கியஅச்செய்கையையுடையேனான நான், முடித்த - செய்து தீர்த்த, முடிவால் - முடிவினால், அந்தோ கெடுத்தது - ஐயோ (அச் செயல்) என்னைக்கெடுத்துவிட்டது!' என - என்று (தம்பியைநோக் கிக்) கழிவிரக்கமாகச் சொல்லி, உன்னி உன்னி-(அதையே) நினைத்து நினைத்து, அழியாதஉள்ளம் அழிவான் - என்றும் அழியாத தனது மனம் அழிபவனாய்,—(எ - று.)—"என்று கடுகி" என வருங் கவி யோடு தொடரும்.

நின்செயல் சீதையைச் சாவாமல் தடுத்தற்குச் செய்ததாத லால் குற்றமற்றது; சீதையும் பொங்கும் பரிவால் மனக்கலக்கங் கொண்டு உன்னை என்னிடத்து ஏவியதாதலால் குற்றமற்றதே; உங்கள் இருவர் செய்கைக்கும் காரணமாகி, நீ தடுத்துங் கேளாது மாயமான் பின்சென்ற என் செயலே கேடு விளைத்தது என்று இராமபிரான் தன்னுள்ளம் அழிபவனானா னென்பதாம்.

இனி, அது தீரும்-மாயமான் பின்னே செல்லும் அச்செயலை நீங்குமின், என - என்று சொல்லி, முந்தேதடுத்த என்று உரைப் பினுமாம்; இப்பொருளில், தீரும் - ஏவற்பன்மைமுற்று இங்கு, உயர்வுப்பன்மையாய் நின்றது. 'அழியாத வுள்ளம்' என்றது. இராமனுக்கு இயல்பாகவுள்ள மிக்க தைரியத்தைக் காட்டும். அழி யாதவுள்ளமழிவான் - தொடைமுரண். பி - ம்:—[1] அழியா. (967)

## 157.—இனித் தாமதஞ் செய்யலாகா தென்று இராமன் விரைந்து பர்ணசாலைக்கு மீளுதல்.

**[1]பாணிக்க நின்று பயனுவ தென்னை பயில்பூவை யன்ன குயிலைக்
காணிற்[2]க லந்த துயர்தீரு மன்றி யயலில்லை யென்று கடுகிச்
சேணுற்ற கன்ற நெறியூடு [3]சென்று சிலைவாளி யன்ன விசைபோய்
ஆணிப்ப சும்பொ னனையாளி ருந்த வவிர்சோலை வல்லை யணுகா.**

(இ - ள்.) 'பாணிக்க நின்று பயன் ஆவது என்னை - பொழுது நீட்டிக்க இங்குநிற்றலா லாகும் பயன் யாது? பயில் பூவை அன்ன குயிலை - (இன்சொற்களைக்கூறிப்) பழகிய நாகணவாய்ப்பறவை போன்ற சீதையை, காணின் - கண்டால், கலந்த துயர் தீரும் அன்றி-(நமது மனத்தில்) நேர்ந்த துன்பம் நீங்குமே யல்லாமல், அயல் இல்லை-வேறொருவகையுமில்லை,' என்று-என்று சொல்லி, கடுகி-துரிதப்பட்டு, சேண் உற்று அகன்ற நெறியூடு சென்று - நெடுந்தூரம் பொருந்திப் பரந்துள்ள வழியிலே நடந்து, சிலை வாளி அன்ன விசை போய்-வில்லினின்று எய்யப்பட்ட அம்பின் வேகம் போன்ற வேகத்தோடு சென்று, ஆணி பசும்பொன் அனையாள் இருந்த அவிர் சோலை வல்லை அணுகா-பசிய ஆணிப்பொன்னைப் போன்றவளான சீதை இருந்த விளங்குகிற பஞ்சவடியாச்சிரமத்தை விரைவிற்கிட்டி,—(எ - று.)—"ஓடிவந்தனன்" என வருங் கவியோடு முடியும்.

இனித் தாமதித்தல் தகாது: அச்சீதையைக் கண்டாலன்றி என் துன்பம் தொலையாது என்று விரைந்து மிக்க விசையோடு சீதையைவிட்டுவந்த சோலையை இராமன் அணுகலானனென்பதாம். குயில் - அதுபோன்ற இன்குரலையுடைய சீதைக்கு உவமையாகுபெயர். ஆணிப்பொன் - மாற்றுயர்ந்த பொன். இராமனது அப்பொழுதைய நடைவிரைவுக்கு இராமபாணத்தின் வேகம் உவமை கூறப்பட்டதென்க; பின்னர் அங்கதன் தூதுபோனபோதும், "வீரன் வெஞ்சிலையிற்கோத்த அம்பென விசையப்போனான்" என வருதலும் காண்க. பி - ம்:—[1]பாணித்து. [2]கரந்த. [3]சென்ற. (968)

வேறு.

## 158.—அங்குச் சீதையைக் காணாமல் இராமன் வருந்தல்.

**ஓடி [1]வந்தனன் [2]சாலையின் [3]சோலையி னுதவுந்
தோடி வர்ந்தபூஞ் சுரிகுழ லாடனைக் [4]காணான்
கூடு தன்னுடை யதுபிரிந் தாருயிர் குறியா
நேடி வந்தது [5]கண்டில தாமென [6]நின்றான்.**

(இ - ள்.) ஓடி வந்தனன் - (இவ்வாறு) விரைந்து ஓடிவந்த இராமன்,—சாலையின் - அப்பர்ணசாலையில், சோலையின் உதவும் தோடு இவர்ந்த பூ சுரி குழலாள் தனை - சோலையிலுண்டாகிற இதழ்கள் நெருங்கிய மலர்களைச் சூடிய கடைகுழன்ற கூந்தலையுடையவளான சீதையை, காணான்-காணாதவனாய், —ஆர்உயிர் -

அருமையான ஓர் உயிர், தன் உடையது கூடு பிரிந்து - தன்னுடைய தான உடம்பைப் பிரிந்து சென்று, குறியா நேடி வந்து - மீண்டும் (அவ்வுடம்பைக்) குறிக்கொண்டு தேடிவந்து, அது கண்டிலது ஆம் என - அதனைக் காணப்பெறாது நின்றாற் போல, நின்றான் - திகைத்து நின்றான்; (எ - று.)

சீதையைக்காணாமையால் உடலைவிட்டு வெளியேபோயிருந்த உயிர் மீண்டுவந்து தன்னுடலைக்காணாமல் திகைப்பதுபோலத் திகைத்தனன் இராமபிரானென்பதாம். பிராணநாயகனான இராமனுக்கு உயிரும், சீதைக்கு உடம்பும் உவமையெனக் காண்க. உயிர் உடம்பை இன்றி அமையாதவாறுபோல, இராமன்சீதையை இன்றி அமையானென்க. இனி, கூடு - ஓர் உடம்பானது, தன்னுடையது ஆர் உயிர் பிரிந்து - தனது அருமையான உயிரைப் பிரிந்து, குறியா நேடிவந்து - (மீண்டும் அதனைக்) குறிக்கொண்டு தேடிவந்து, அது கண்டிலது ஆம் என - அதனைக்காணப்பெறாதவாறுபோல, நின்றானென்று உரைப்பாரும் உளர்; அப்பொழுது, இராமனுக்கு உடம்பும், அவனது பிராணநாயகியான சீதைக்கு உயிரும் உவமையெனக் காண்க. சோலையினுதவும் பூ என இயையும். பி - ம்:— [1]வந்தனர். [2]சர்லையிற், சாலையுஞ். [3]சோலையும். [4]காணார். [5]கண்டிலர். [6]நின்றார்.

இதுமுதல் இருபத்துநான்கு கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ் சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். *(969)*

## 159.—இதுவும் அது.

கைத்த சிந்தையன் கனங்குழை யணங்கினைக் காணாது
உய்த்து [1]வாழ்தர வேறொரு பொரு[2]ளிலா னுதவ
வைத்த மாநிதி மண்ணொடு [3]மறைத்தனர் [4]வாரிப்
பொய்த்து ளோர்கொளத் திகைத்துநின் றானையும் போன்றான்.

(இ - ள்.) கனம் குழை அணங்கினை காணாது - கனமான [அல்லது விலையுயர்ந்த] குழையென்னுங் காதணியையுடைய சிறந்த பெண்ணாகிய சீதையைக் காணாமல், கைத்த சிந்தையன் - (உயிர் வாழ்க்கையை) வெறுத்த மனத்தையுடையவனான ஸ்ரீராமன்,— உதவ - (தனக்கு) உதவுதற்காக, (ஒருவன்), மண்ணொடு வைத்த - மட்பாத்திரத்தோடு (நிலத்திற்) புதைத்துவைத்த, மா நிதி - மிக்க செல்வங்களை, பொய்த்துளோர் - வஞ்சனைச் செய்கையையுடையரான கள்வர், (மண்ணொடு) வாரிமறைத்தனர் கொள - (புதைத்து வைத்த அந்த) மட்பாத்திரத்தோடு (தோண்டியெடுத்துக்)கவர்ந்து மறைத்துக் கொண்டுபோய்விட, (வைத்தபொருளைக் காணாமையால்), உய்த்து வாழ்தர வேறு ஒரு பொருள் இலான் - வைத்துக்கொண்டுவாழ்தற்கு வேறே ஒருபொருளு மில்லாதவனாகி, திகைத்துநின்றானையும் - திகைப்படைந்து நின்றவனையும், போன்றான்—; (எ - று.)

ஒருவன் தனக்கு உள்ள செல்வமனைத்தையும் பிறர்கவர வொண்ணாது பத்திரப்படுத்தி நிலத்தில் மட்பாத்திரத்துப் புதைத்து

வைக்க, அதனைக் கள்ளர் அந்தமட்பாத்திரத்தோடு மறைத்துக் கவர்ந்துஎடுத்துக்கொண்டால், கொண்டுவாழ்வதற்கு வேறொரு பொருளில்லாதவனை அப்புதையலுக்குஉடையவன் கலங்குமாறு போல, இராமன் தனக்குஉரியஎல்லாச்செல்வமுமான சீதையைப் பர்ணசாலையில் பத்திரப்படுத்திவைக்க, வைக்கப்பட்ட அந்தப் பர்ணசாலைநிலத்தோடு அந்தச்சீதை கவரப்பெற்றுக்காணுதிருத்தலை நோக்கி அவளையின்றி வாழமாட்டாத இராமன்கலங்கி நின்றன னென்க. உவமையணி. 'நின்றானையும் போன்றான்' என்றஉம்மை - கீழ்க்கவியிற்கூறியஉவமையைநோக்கி இறந்ததுதழுவிய எச்சமாய் நின்றது. நிதியைப் புதைத்துவைப்பவர் செப்புக்கலம் மட்கலம் என்றாற்போன்ற பாத்திரங்களிலிட்டுப் புதைத்துவைப்பாராதலாலும், கவர்பவர் அந்தக்கலத்தோடுகவர்வது இயல்பு ஆதலாலும், 'மண் ணொடுவைத்த மாநிதி மண்ணொடுவாரிமறைத்தனர்கொள' என்றது. நிதிபோன்ற சீதையை மண்ணொடுகவர்ந்தானென்றதற்கும் ஏற்ப, ஆகுபெயர்ப்பொருளையுங் கொண்ட 'மண்ணொடு' என்ற சொல்லைப் பெய்த கவிநயம் பாராட்டற்கு உரியது. மட்கலத்தைக் காட்டும்போது 'மண்'—காரணவாகுபெயர். 'மண்ணொடு' என்பது வைத்துஎன்பத னோடும், வாரி என்பதனோடும் மத்திமதீபமாக இயைந்தது. மறைத் தனர் - முற்றெச்சம். பி - ம்:—[1]வாழ்தற்கு. [2]இலன். [3]மறைந்தன. [4]வாங்கிப். (970)

## 160.—இதுமுதல் மூன்று கவிகள் - அப்பொழுது உலகத்திலுண்டான குழப்பத்தைக் கூறும்.

மண்சுழன்றது மால்வரை சுழன்றது மதியோர்
எண்சுழன்றது சுழன்றதவ் வெறிகடலேழும்
விண்சுழன்றது வேதமுஞ் சுழன்றது விரிஞ்சன்
கண்சுழன்றது சுழன்றது கதிரொடு மதியும்.

(இ - ள்.) (சர்வாந்தர்யாமியான அந்தப் பகவானுடைய திருவுள்ளம் இவ்வாறு கலங்கித்திகைத்துச்சுழலவே), மண்சுழன் றது - பூமி சுழன்றது; மால் வரை சுழன்றது - பெரிய மலைகள் சுழல லுற்றன; மதியோர் எண் சுழன்றது - திவ்வியஞானமுள்ளவர்க ளுடைய எண்ணமும்நிலைதிரிந்தது; அ எறி கடல் ஏழ்உம் - அலைவீசு கின்ற அந்த ஏழுசமுத்திரங்களும், சுழன்றது - சுழலலுற்றன; விண் சுழன்றது - வானமும் சுழலலுற்றது; வேதம்உம் சுழன்றது - (என்றும் நிலைகுலையாத) வேதங்களும் நிலைகுலைந்தன; விரிஞ்சன் கண் சுழன்றது - (பதினான்குஉலகங்களுள் மேலுலகமாகிய சத்திய லோகத்திலுள்ள) பிரமதேவனது கண்களும் சுழலலுற்றன; கதிரொடு மதிஉம்-சூரியனோடு சந்திரனும், சுழன்றது-சுழலலுற்றது; (எ-று.)

எல்லாப் பொருள்களின் வடிவமாயுள்ள எம்பெருமானது மனம் சுழலவே, மண்முதலிய யாவும் சுழன்றன வென்க. 'அவ்வெறிகடல்' என்பதில், அகரம்-உலகறிசுட்டு. வரை, எண், வேதம், கண் என்பவை - சாதியொருமையாதலால், 'சுழன்றது' என்ற ஒருமைமுற்றைக்

கொண்டன. கடலேழும் சுழன்றது - ஒருமைப்பன்மை மயக்கம். சுழன்றன எனப் பன்மையாகிய பாடமுங் கொள்ளலாம். (971)

161. அறத்தைச் சீறுங்கொ லருளையே சீறுங்கொ லமரர்
திறத்தைச் சீறுங்கொன் முனிவரைச் சீறுங்கொ றீயோர்
மறத்தைச் சீறுங்கொ லென்கொலோ முடிவென்று மறையின்
[1]நிறத்தைச் சீறுங்கொ னெடுந்தகை யோனென [2]நடுங்கா.

இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்.

(இ - ள்.) நெடு தகையோன் - பெருமைக்குணமுள்ளவனாகிய ஸ்ரீராமன், அறத்தை சீறும் கொல் - தருமத்தைக் கோபிப்பானோ? அருளை சீறும் கொல் - கருணையென்னுங் குணத்தையே கோபிப்பானோ? அமரர் திறத்தை சீறும் கொல் - தேவர்களுடைய தன்மையைக் கோபிப்பானோ? முனிவரை சீறும் கொல்-முனிவர்களைக் கோபிப்பானோ? தீயோர் மறத்தை சீறும் கொல் - கொடிய அரக்கர்களுடைய கொடுமையைக் கோபிப்பானோ? மறையின் நிறத்தை சீறும் கொல் - வேதங்களின் தன்மையைக் கோபிப்பானோ? என - என்றும்,—முடிவு என்கொல்ஓ என்று-(அக்கோபத்தின்) முடிவுயாதாகுமோ? என்றும் கருதி, நடுங்கா - நடுக்கங்கொண்டு,—(எ - று.)—"பொருள்கள் மேல கீழுறக் கீழன மேலுறும் வேலை" என் வருங் கவியோடு தொடரும்.

அறமும் அருளும் ஆகிய உயர்குணங்களையுடைய தனக்குத் தீங்கு நேர்ந்ததனாலும், அங்ஙனம் நேர்ந்தபொழுது அவ்வறமும் அருளும் துணைநின்று காத்து அதனை விலக்காதொழிந்ததனாலும், அவற்றைச்சீறுவானோ என்னுங் கருத்து நிகழ்ந்தது. தேவர்கள் துயரம்தீர்த்தற்பொருட்டாகவே திருவவதரித்து முனிவர்கள் வேண்டுகோட்கு இணங்கி அவர்கட்குப் பகைவர்களான அரக்கர்களை அழித்தற்குச் சித்தனாய்நின்ற தனக்கு நேர்ந்த தீமையை அத்தேவர்களும் முனிவர்களும் தடாதொழிந்தன ரென்ற காரணத்தால், அவர்கள்மீது கோபங்கொள்வானோ என்ற எண்ண முண்டாயிற்று. 'தீயோர்மறத்தைச் சீறுங்கொல்' என்று கருதியதன் காரணம், வெளிப்படை. 'தருமமே வெல்லும்' என்று கூறிய வேதமொழி பொய்த்ததென்று, அதனைச் சீறுவானோ என்ற நினைப்பு நேர்ந்தது. பி - ம்:—[1] திறத்தை. [2] தியங்கா. (972)

162. நீல [1]மேனிய நெடியவன் மனநிலை [2]திரிய
மூல காரணத் தவனொடு முடிவுற முற்றுங்
கால மாமெனக் [3]கடையிடு கணிக்கரும் பொருள்கண்
மேல கீழுறக் [4]கீழன மேலுறும் வேலை.

(இ - ள்.) கடை இடு - முடிவைக்கொண்ட [மிச்சமில்லாத என்றபடி], கணிக்க அரு - கணக்கிடுதற்கு அருமையான [அளவிறந்த], பொருள்கள் - உலகத்துப்பொருள்கள்யாவும்,—நீலம் மேனிய நெடியவன் மனம் நிலை திரிய-நீலநிறமுள்ள திருமேனியையுடைய பெரியோனாகிய இராமனது மனம் நிலை மாறியதனால்,—மூல காரணத்து அவனொடு முடிவு உற முற்றும் காலம் ஆம் என - முதற்காரணமாக

வுள்ள அவ்வெம்பெருமானது சொரூபத்துடனே இலயப்படும்படி அழியுங்கற்பாந்தகாலம் இதுவாகுமென்று கருதுமாறு, மேல கீழ் உற கீழன மேல் உறும் வேலை - மேலுள்ளவை யெல்லாம் கீழாகக் கீழுள்ளவையெல்லாம் மேலாக நிலைதடுமாறுகிற அப்பொழுது, (எ - று.)—"இளையவன் தொழலும்" என அடுத்தகவியோடு தொடரும்.

இராமபிரானது மனநிலை திரியவே, மூலகாரணமான பெருமானது திருமேனியில் யாவும் இலயப்படும் ஊழிக்காலத்துப்போல எல்லாப்பொருளும் மேலன கீழனவாகவும், கீழன மேலனவாகவும் அப்போது நிலைதடுமாறின என்பதாம். காரணத்தவனொடு - காரணத்தவனிடத்தில்; வேற்றுமை மயக்கம். இனி 'மூலகாரணத்தவனொடு முடிவுற முற்றுங் காலமா மென' என்பதற்கு - படைத்தற் கடவுளாதலால் முக்கியகாரணமாகவுள்ள பிரமனுடனே எல்லாப் பொருளும் மிச்சமில்லாமல் அழியும்ஊழிக் காலத்திற்போல என்றும் பொருள் கொள்ளலாம். பி - ம்:—[1]மேனிநன். [2]திரியா. [3]கடையிடுங் கணக்கரும். [4]கீழின. (973)

## 163.—'சீதையைக் கொண்டுபோனவனைத் தொடர்வோம்' என்று இலக்குமணன் கூறல்.

தேரி னாழியுந் [1]தெரிந்தனந் தீண்டுத லஞ்சிப்
[2]பாரி னோடுகொண் [3]டகழ்ந்ததும் [4]பார்த்தனம் [5]பயனின்று
ஓருந் தன்மையீ தென்னென்ப துரனிலா தவர்போல்
தூரம் போதன்முன் றொடர்துமென் றிளையவன் [6]றொழலும்.

(இ - ள்.) 'தேரின் ஆழிஉம் தெரிந்தனம்-தேரினது சக்கரங்கள் (இங்குப்) பதிந்திருத்தலையும் கண்டோம்; தீண்டுதல் அஞ்சி-(பிராட்டியைத்) தொடுதற்குப்பயந்து, பாரினோடு கொண்டு அகழ்ந்ததும் - தரையுடனே பெயர்த்துக்கொண்டுபோனதையும், பார்த்தனம்-பார்த்தோம்; (இவற்றைப் பார்த்தபின்பும்), உரன் இலாதவர் போல் - வலிமையில்லாதவர்கள்போல, பயன் இன்று ஓரும் தன்மை ஈது-பயனில்லாமல் ஆலோசிக்கின்ற இத்தன்மையை, என் என்பது - என்னவென்றுசொல்வது? தூரம் போதல் முன் தொடர்தும் - (பிராட்டியைத் தரையோடு பெயர்த்தெடுத்துப் போகிறவன்) வெகுதூரம் போய் விடுதற்கு முன்னமே (அவனைத் தேடித்) தொடர்ந்துசெல்லுவோம்,' என்று - என்று சொல்லி, இளையவன் - இளையபெருமான் [இலக்குமணன்], தொழலும் - வணங்கியவளவிலே,—(எ - று.)—"அமலனும் ஆம் அதே இனியமைவது என்று" என வருங் கவியோடு தொடரும்.

அப்போது இலக்குவன் இராமனை நோக்கி 'சீதையைக் கவர்ந்தவர் தீண்டுதற்கு அஞ்சித் தரையோடு பெயர்த்தெடுத்ததையும் தேர்சென்ற தடத்தையும் பார்த்தனம்: ஆகவே, வலியற்றவர் போன்று சிந்தைகொண்டு இங்கு நிற்பது ஏதுக்கு? சீதையைக் கவர்ந்தவன் சேய்மையிற் செல்லுமுன் தொடர்ந்து போவோம் என்று சொல்லித் தொழுதனனென்க. கொண்டு அகழ்ந்தது -

அகழ்ந்துகொண்டது; விகுதிபிரித்துக் கூட்டல். இன்று - இன்றி யென்னும் வினையெச்சம் ஈறுதிரிந்தது. [1]தெரிந்தனர், [4]பார்த்தனர் என்ற பாடத்துக்கு - 'தேரினுழியும்...பார்த்தனர்' என்ற வரையில் கவிக்கூற்றும், 'பயனின்று' என்பது முதல் இலக்குமணன் கூறியது மாகக் கொள்க. பி - ம்:—[1]தெரிந்தனன். [2]பாரினேடும். [3]அகன்றதும். [4]பார்த்தனன். [5]பலன். [6]சொன்னன். *(974)*

## 164.—அதற்கு இராமன் உடன்பட, இருவரும் தேர்ச்சக்கரச் சுவட்டின் வழியே செல்லல்.

ஆம தேயினி [1]யமைவ தென் றமலனு மெய்யில்
தாம வார்கணைப் புட்டிலு முதலிய தாங்கி
வாம மால்வரை [2]மரனிவை மடிதர வயவர்
பூமி மேலவன் றேர்சென்ற நெடுநெறி போனர்.

(இ - ள்.) அமலன்உம் - குற்றமற்றவனான ஸ்ரீராமனும், ஆம் அதே இனி அமைவது என்று - 'ஆம், (நீ சொன்ன) அச் செயலே இப்பொழுது செய்யத் தகுவது' என்று உடன்பட்டுக்கூற, (பின்பு), வயவர் - வீரர்களாகிய அவ்விராம லக்ஷ்மணர் இருவரும், தாமம் வார் கணை புட்டில்உம் முதலிய மெய்யில் தாங்கி - ஒளியையுடைய நீண்ட அம்பருத்தூணி முதலியவற்றை உடம்பில் உரியபடி தரித்துக் கொண்டு, வாமம் மால் வரை மரன் இவை மடி தர பூமிமேல் அவன் தேர் சென்ற நெடு நெறி - அழகிய பெரிய மலைகளும் மரங்களும் அழியும்படி பூமியில் அவ்விராவணனது தேர் சென்ற நீண்ட வழியிலே, போனர் - சென்றார்கள்; (எ - று.)

இராமபிரான் இலட்சுமணன்பேச்சுக்கு உடன்பட, இரு வீரரும் அம்பருத்தூணி முதலியன தாங்கியவராய், இராவணன் தேர் சென்ற வழியே அடியொற்றிச் சென்றார்களென்பதாம். 'ஆம்' என்பது - அங்கீகாரப்பொருளது; இனி அமைவது அதே ஆம் என்று மொழிமாற்றி, இனிச் செய்யத்தகுவது நீ சொன்ன அச்செயலே யாமென்று உரைப்பினும் பொருந்தும். புட்டிலும், உம் - அசை. மடிதரச் சென்ற என இயையும். 'என்று' என்பதை என்னவெனச் செய வெனெச்சமாகத் திரிக்க. பி - ம்:—[1]ஆவது. [2]மாநிலம் படிவதேவவ்வும், மாநிலம் படிவதேவயவும். *(975)*

## 165.—தரையில் தேர்ச்சுவடுமறைந்தமை கண்டு இராமன் திகைத்தல்.

மண்ணின் மேலவன் றேர்சென்ற சுவடெலா மாய்ந்து
விண்ணி னேங்கிய தொருநிலை மெய்யுற வெந்த
புண்ணி னூடுறு வேலென மனமிகப் புழுங்கி
எண்ணி நாமினிச் செய்வதென் னிளவலே யென்றான்.

(இ - ள்.) அவன் தேர் மண்ணின்மேல் சென்ற சுவடு எலாம் மாய்ந்து - சீதையைக் கவர்ந்தெடுத்துக்கொண்டவனது தேர் பூமியின்மேற்சென்ற சக்கரங்களின் அடையாளம் மறைபட்டு, ஒருநிலை

விண்ணின் ஓங்கியது-ஓரிடத்தில் (அத்தேர்) வானத்தில் எழுந்ததாகத் தெரிந்தது; (அதனால், இராமன்), மெய் உற வெந்த புண்ணினூடு உறு வேல் என-உடம்பில் நன்றாகவெந்ததனாலாகிய புண்ணினுள்ளே நுழைந்த வேல் போல [தீப்பட்ட புண்ணில் வேல் நுழைந்தாற் போல], மனம் மிக புழுங்கி - மிகவும் மனம் தவித்து, இளவலே இனி நாம் எண்ணி என் செய்வது என்றான் - 'தம்பி! இனி நாம் ஆலோசித்துச் செய்யவேண்டுவது யாது!' என்று (இராமன் இலக்குமணனை நோக்கிக்) கூறினான்; (எ-று.)

அந்த இராமலட்சுமணர் தேர்ச்சுவட்டைப்பற்றிச் செல்கையில் அச்சுவடு மறைந்து அத்தேர் விண்ணினோங்கியநிலை தெரிந்தது: அப்போது இராமபிரான் மெய்யுறவெந்த புண்ணினூடுறு வேலென மனம்மிகப்புழுங்கி, 'இளவலே! நாம் இனி எண்ணிச் செய்யத்தக்க செயல் என்? ஒன்றுந்தோன்றவில்லையே!' என்றான். புண்ணினூடு உறுவேல் - துன்பத்தின்மேல் துன்பமுறுதற்கு உவமை. *(976)*

## 166.—'தேர்சென்ற தென்திசையை நோக்கிச் செல்வோம்' என்று இலக்குமணன் கூறல்.

தெற்கு நோக்கிய தெனும்பொரு [1]டெரிந்ததத் திண்டேர்
மற்கு நோக்கிய திரள்புயத் தண்ணலே வானம்
விற்கு நோக்கிய பகழியி னெடிதன்று விம்மி
[2]நிற்கு நோக்கிதென் [3]பயத்ததென் றிளையவ னேர்ந்தான்.

(இ - ள்.) (அதுகேட்டு), இளையவன் - இலக்குமணன், (இராமனை நோக்கி), 'மற்கு நோக்கிய திரள் புயத்து அண்ணலே - மற்போருக்கு எதிர்பார்த்துள்ள திரண்ட தோள்களையுடைய பெருமையிற்சிறந்தவனே! அ திண் தேர் தெற்கு நோக்கியது எனும் பொருள் தெரிந்தது - வலிய அத்தேர் தென்திசையை நோக்கிச் சென்ற தென்ற உண்மை தெரியலாயிற்று; விற்கு நோக்கிய பகழியின் வானம் நெடிது அன்று-(உனது) வில்லினின்று செல்லும் அம்புக்கு வானம் நீண்டதன்று; விம்மி நிற்கும் நோக்கு இது - கலங்கிநிற்கிற இவ்வாலோசனை, என் பயத்தது - என்ன பயனைத் தருவது?' என்று நேர்ந்தான் - என்று விடைகூறினான்; (எ - று.)

'விற்குநோக்கிய பகழியின் வானம் நெடிதன்று' என்றது - உனது கோதண்டத்தினின்று விசையோடு எய்யப்பட்டு மிக்கவேகமுடைத்தாய் வெகுதூரம் செல்லவல்ல உனது அம்பு, வானத்தில் அத்தேர் எவ்வளவுதூரத்திற் சென்றாலும் அதனைத் தவறாது தாக்கியழிக்கவல்லது என்றவாறு; ஆனதுபற்றி, தேர்சென்ற தெற்குத்திசையை நோக்கி வானத்தைப் ப்ார்த்துக்கொண்டே செல்வோமென்றானும். விம்மிநிற்கும் நோக்கு இது என்பயத்தது - இங்ஙனம் திகைத்துநின்று ஆலோசிப்பதிற் பயனில்லை யென்றபடி. போரை விரும்பி எதிர்பார்க்கிற தோள்வலிமையுடையாயென்பான், 'மற்குநோக்கிய திரள்புயத் தண்ணலே' என்றான்: இங்ஙனம் விளித்தது, நீ போருக்கு அஞ்சுவாயல்லையெனப் புகழ்ந்து ஊக்கத்

தைக் கிளரச்செய்தவாரும். விற்கு-உருபுமயக்கம். பி-ம்:—[1] தெரிந்தது. [2] நிற்கநோக்கிலென், நிற்கநோக்கியென். [3] பயினென. (977)

**167.—அங்ஙனம் தெற்கேசெல்லும் வழியில் வீணைவடி வெழுதிய கொடி விழுந்து கிடக்கக் காணுதல்.**

ஆகு மன்னதே கருமமென் றத்திசை நோக்கி
ஏகி யோசனை யிரண்டுசென் றாரிடை யெதிர்ந்தார்
மாக மால்வரை கால்பொர மறிந்தது மானப்
பாக வீணையின் கொடியொன்று கிடந்தது பார்மேல்.

(இ - ள்.) ஆகும் அன்னதுவே கருமமென்று - ஆம் அதுவே ஏற்றசெயலென்று (இராமன்) கூறி (உடன்பட), —(இருவரும்), அ திசை நோக்கி ஏகி - அந்தத்தென்திசையை நோக்கிச் சென்று, யோசனை இரண்டுசென்றார் - இரண்டுயோசனைதூரம்போய், இடை - அவ்விடத்தில், மாகம் மால் வரை கால் பொர மறிந்தது மான - பெரிய வானத்தையளாவிய பெரிய மலையொன்று ஊழிக்காற்று வீசுதலாற் சாய்ந்துவிழுந்துகிடந்ததுபோல, பார்மேல் கிடந்தது - பூமியில் விழுந்துகிடந்ததாகிய, பாகம் வீணையின் கொடி ஒன்று - துணிபட்ட வீணைவடிவ மெழுதிய துவசமொன்றை, எதிர்ந்தார் - சந்தித்தார்கள்; (எ - று.)

பகைஞன் எங்குச்சென்றாலும் அவனைத் தொலைப்பதே நமது செய்தொழிலென்று நிச்சயித்து இரண்டுயோசனைதூரம் இராமலட்சுமணர் கடந்து அங்கு வழியிடையே வீணைவடிவெழுதிய கொடியொன்று பெருந் தோற்றத்துடனே மண்மிசைக்கிடந்ததனைக் கண்டன ரென்க. பாகக் கொடியென இயையும். பாகம்-துண்டு. கர்மம், பாகம் - வடசொற்கள். மான - உவமவுருபு. (978)

**168.—அதுகண்டு சங்கிக்கையில் இராமன் ஒன்று கூறலுறல்.**

கண்டு கண்டக ரோடுமக் காரிகை பொருட்டால்
அண்ட [1]ராதியர்க் காரமர் [2]விளைந்ததென் [3]றயிர்த்தார்
துண்ட [4]வாளினிற் சுடர்க்கொடி துணிந்ததென் றுணராப்
புண்ட ரீகக்கண் [5]புனல்வரப் புரவலன் [6]புகல்வான்.

(இ - ள்.) கண்டு - (அக்கொடியைப்) பார்த்து,—'அ காரிகை பொருட்டால்-அந்தப்பெண்ணின் நிமித்தமாக, கண்டகரோடும் - கொடியபகைவர்களுடனே, அண்டர் ஆதியர்க்கு - தேவர்கள்முதலானவர்களுக்கு, ஆர் அமர் விளைந்தது - அரியபோர் உண்டாயிற்றுப்போலும்,' என்று அயிர்த்தார் - என்று சங்கித்தார்கள்; (அப்பொழுது), புரவலன் - காத்தல் தொழிலில் வல்லவனான ஸ்ரீராமன், 'துண்டம் வாளினில் - (சடாயுவினது) மூக்காகிய வாளினால், சுடர் கொடி - ஒளியையுடைய (பகைவனது) இத்துவசம், துணிந்தது - துணிபட்டது போலும்,' என்று உணரா - என்று ஆலோசித்து, புண்டரீகம் கண் புனல் வர - செந்தாமரைமலர்போன்ற (தனது) கண்களினின்று நீர் ஒழுக, புகல்வான் - ஒன்றுசொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

அந்த இராமலட்சுமணர்கள் 'சீதைக்காகக் கண்டகர்க்குத் தேவர் முதலியோரோடு போர் விளைந்ததோ?' என அயிர்த்து, சடாயுவின் மூக்கினால் இது துண்டுபட்டிருக்கவேணும் என்று ஊகித்துணர, அப்போது சடாயுவின் முதிர்ந்த மூப்பையும் தனிமையையுங் கருதி யெழுந்த கவலையால் கண்ணீர்வர ஸ்ரீராமன் கூறலானானென்பதாம். கண்டகர் - முட்போன்றவர்; பிறரை வருத்துபவர்: கண்டகம்-முள். காரிகை - அழகியபெண்; சீதை. காத்தற்றொழிற்கடவுளான திருமாலின் அம்சமானவன் என்ற பொருளோடு உலகமுழுதும் ஆண்ட சக்கரவர்த்தியின் மூத்த குமாரனாதலால் அவ்வுலகமுழுதாட்சிக்கு உரியவனென்ற கருத்தும், 'புரவலன்' என்ற பெயரில் தோன்றும். ஆல் - அசை. துண்டம்-வடசொல். பி - ம்: —[1] ஆதிமற்றோர். [2] விளைத்தது. [3] அயிர்த்தான். [4] வாளியில். [5] அமலனுக்கிளையவன். [6] புகன்றான். (979)

## 169.—சடாயு போர் செய்திருப்பா ரென்று இராமன் கூறல்.

[1] நோக்கி னாலைய [2] நொய்திவ ணெய்திய நுந்தை
மூக்கி னாலிது முறிந்தமை முடிந்ததால் மொய்ம்பின்
தாக்கி னானடு வடுத்தது தெரிகிலந் தமியன்
யாக்கை [3] தேம்பிடு மெண்ணரும் பருவங்க ளிறந்தான்.

(இ - ள்.) 'ஐய - தம்பி! நோக்கினால் - (இக்கொடி முறிந்து கிடப்பதைப்பற்றி) ஆலோசித்தால், நொய்து இவண் எய்திய - விரைவில் இங்கு வந்து சேர்ந்த, நுந்தை - நினது தந்தையான சடாயுவினது, மூக்கினால்—, இது முறிந்தமை முடிந்தது - இக்கொடி முறிபட்டமை நேர்ந்ததுபோலும்: மொய்ம்பின் தாக்கினான் - (அச்சடாயு) வலிமைகொண்டு தாக்கியிருப்பார்; நடு அடுத்தது தெரிகிலம்-(அவருக்கு) இடையிற் சம்பவித்த நிலைமையை அறிகிறோமில்லை; தமியன் - (அவரோ துணையில்லாது) தனிப்பட்டவர்; யாக்கை தேம்பிடும் - உடல்மெலிகிற, எண் அரு பருவங்கள் இறந்தான் - கணக்கிடுதற்கு அருமையான பிராயங்கள் கழியப்பெற்றவர்,' (என்று இராமன் கூறினான்); (எ - று.)—ஆல் -'அசை.

இந்தக் கொடி முறிந்திருக்கும் நிலையைப் பார்க்குமிடத்து, சடாயுவின் மூக்கினால் முறிபட்டதெனக் காண்கின்றது. அந்த நமது தந்தையான சடாயு, பருவம் கடந்தவராகி உடல்மெலிந்தவராயிருந்தும் வலிகொண்டு தாக்கியதனால் இங்ஙனாயிருக்க வேணும்: இடையில் என்ன சம்பவித்துள்ளதோ! என்று ஸ்ரீராமன் கூறினனென்பதாம். 'தேம்பிடும்' என்ற பெயரெச்சம், 'எண்ணரும்பருவங்களிறந்தான்' என்ற பெயரைக் கொள்ளும். தேம்பிடும் என்றதை முற்றாகக் கொண்டு உரைக்கவும் இடமுண்டு. நொய்து நோக்கினால் என்று எடுத்து - நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால் எனினுமாம் பி - ம்:— [1] நோக்கினன். [2] நொய்தின்வந்து. [3] தேம்பிட. (980)

## 170.—'ஆயின் விரைவிற்செல்வோம்' என்று இலக்குமணன் கூறல்.

நன்று சாலவு நடுக்கரு மிடுக்கின னுழும்
சென்று கூடலாம் பொழுதெலாந் தடுப்பது திடனால்
வென்று மீட்கினு மீட்குமால் வேறுற வெண்ணி
நின்று [1]தாழ்த்தொரு பயனிலை யென்றலு நெடியோன்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'சாலஉம் நன்று - மிகவும் நலமாயிற்று; நடுக்கு அரு மிடுக்கினன் - (எவராலும்) அசைக்கவொண்ணாத வலிமையை யுடையவர் (அச்சடாயு); பொழுது எலாம் தடுப்பது திடன் - இன்றைப் பொழுது முழுவதும் (அவர் பகைவனைச் செல்லவிடாமல்) தடை செய்வது திண்ணம்; நாம்உம் சென்றுகூடல் ஆம் - நாமும் போய் (அவரை)ச் சேரலாம்; வென்று மீட்கின்உம் மீட்கும் - (அவர் தாமே பகை) வென்று (பிராட்டியை) மீட்டிட்டாலும் மீட்டிடுவர்; வேறு உற எண்ணி நின்று தாழ்த்து ஒருபயன் இலை - வேறுவிதமாக ஆலோசித்துக்கொண்டு இங்குநின்று காலதாமதஞ்செய்தலால் யாதொரு பயனுமில்லை,' என்றலும் - என்று (இளையபெருமாள்) கூறியவளவிலே, நெடியோன் - பெரியோனான இராமபிரான்,—(எ - று.)—"தொடர்வதே நலமாம் என" என்று வருங் கவியோடு தொடரும். 'ஆல்' இரண்டும் - ஈற்றசை.

சடாயு எதிர்த்திருப்பின் சாலநல்லதே: அவர் எவராலும் அசைக்கவொண்ணாத மிடுக்கினர். இன்றைப்பொழுதெல்லாம் எதிர்ப்பர்; அவரே பகைவென்று சீதையை மீட்டாலும் மீட்கலாம்; நாம் அவர்க்குத் துணையாகச் சேரலுமாம்: வேறு வேறுஎண்ணிக் கொண்டு இங்குக் காலதாமதஞ் செய்வதில் பயனில்லை யென்று இலக்குமணன் கூறினனென்பதாம். திடன் = த்ருடம்: வடசொல்லின் திரிபாகிய திடமென்பதன் இறுதிப்போலி. பி - ம்:—[1]தாழ்ந்து.

## 171.—இராமலக்குமணர் அப்பாற்செல்லுகையில் வில்முறிந்து கிடத்தலைக் காணுதல்.

தொடர்வ தேநல மாமெனப் படிமிசைச் சுற்றிப்
படருங் காலெனக் கறங்கெனச் [1]செல்லுவார் பார்த்தார்
மிடல்கொள் வெஞ்சிலை விண்ணிடு வின்முறிந் தென்னக்
கடலின் மாடுயர் [2]திரையெனக் கிடந்தது கண்டார்.

(இ-ள்.) தொடர்வதுஏ நலம் ஆம் என-அவ்வாறு தொடர்ந்து செல்வதே நல்லதா மென்றுகூறி (இராமன்) உடன்பட,—படிமிசை சுற்றி படரும் கால் என - பூமிமேற் சுற்றிச் செல்கிற காற்றுப் போலவும், கறங்கு என-காற்றாடி போலவும், செல்லுவார்-விரைந்து செல்லுகிற அவ்விராமலக்குமணர்,—பார்த்தார்-(ஆங்காங்குப்) பார்ப்பவராகி, விண் இடு வில் முறிந்து என்ன - வானத்தில்தோன்றுகிற இந்திர வில் முறிந்துவிழுந்திருப்பதுபோலவும், கடலின் மாடு உயர் திரை என - கடலினிடத்து ஓங்கியெழுகிற அலைபோலவும், கிடந்தது -

(தரையில்) முறிந்து விழுந்து கிடந்ததாகிய, மிடல் கொள் வெம் சிலை - வலிமைகொண்டகொடியவில் ஒன்றை, கண்டார்-பார்த்தார் கள்; (எ-று.)

இராமன் அவரைத் தேடிக்கொண்டு செல்வதே நலமென்று உடன்பட, விரைந்து செல்லும் அவர், பெரிய வில்லொன்று முறிந்து விழுந்து கிடந்திருந்ததைக் கண்டன ரென்பதாம். ஆங்காங்குச் சுற்றித் தேடிக்கொண்டு விரையச் செல்வதுபற்றி, படிமிசைச்சுற்றிப் படருங் காலையும் கறங்கையும் உவமைகூறினர். நீட்சியும் வளைவும் பற்றிக் கடலின் மாடு உயர்திரையை அவ்வில்லுக்கு உவமைகூறியது கொண்டு, அவ்வில் இரத்தப்பெருக்கில் விழுந்துகிடந்ததென்பது விளங்கும். பி-ம்:—[1]செல்பவர். [2]கரை. (982)

## 172.—இராமன் அவ்வில்லின்வலிமையையும், அதைத் துணித்தவனது ஆற்றலையும் வியந்துகூறல்.

சிலைகி டந்ததா லிலக்குவ தேவர்நீர் கடைந்த
மலை[1]கி டந்தென [2]வலியதே வடிவினன் மதியின்
கலைகி டந்தெனக் [3]காட்சிய னிதுகடித் தொடித்தான்
நிலைகி டந்தவா நோக்கென நோக்கின னின்றான்.

(இ - ள்.) 'இலக்குவ-இலக்குமணனே! கிடந்தது சிலை - (இங்குக்) கிடக்கின்ற இவ்வில், தேவர் நீர் கடைந்த மலை கிடந்து என வலியதுஏ-தேவர்கள் பாற்கடலைக்கடைந்த (கருவியாகிய) மந்தரமலை கிடந்தாற்போல வலிமையையுடையதே; வடிவினால் மதியின் கலை கிடந்து என காட்சியன் - (தனது) உடம்பின் நிறத்தால் சந்திரனது கலை இருந்தாற்போன்றவெள்ளியதோற்றமுடையவனான சடாயு, இது கடித்து ஒடித்தான் - இவ்வில்லைப்பல்லாற் கடித்துத் துணித் திட்டனன்போலும்; நிலை கிடந்த ஆ நோக்கு - (அவனது வலிமை) நிலையாயிருந்த விதத்தை (நீ) ஊன்றிக்கருதுவாய்,' என - என்று சொல்லி, நோக்கினன் நின்றான் - (இராமன் தான் அவ்வலிமை நிலைமையைக்குறித்து) ஆலோசித்துநின்றான்; (எ-று.)

'நோக்கென நோக்கினனின்றான்' என்பதற்கு - நோக்குவா யென்று இராமன்கூற, இலக்குமணன் நோக்கிநின்றானென்றலும் ஒன்று. இனி ஈற்றடிக்கு - வில்லின்நிலைமை இருந்தவிதத்தைப் பாரென்றுகூறி, அவ்வில்லைப்பார்த்துநின்றானென்றுஉரைப்பாரு முளர். நீர் - கடலுக்கு, ஆகுபெயர்; இங்கு இலக்கணையால், பாற் கடலைக் குறித்தது. கலை - சந்திரன்பங்கு. ஆல்-ஈற்றசை. பி - ம்:— [1]கிடந்தன. [2]வலியவேல். [3]காட்சியின். (983)

## 173 —அவர்கள் பின்னுஞ் செல்லுகையில் சூலத்தையும், அம்பறாத்தூணிகளையும் காணுதல்.

நின்று பின்னரு நெடுநெறி கடந்துற நிமிரச்
சென்று நோக்கினர் திரிசிகைத் [1]திணிநெடுஞ் சூலம்

[2]ஒன்று பல்கணை மழை[3]யுறு புட்டிலோ ரிரண்டு
குன்று [4]போலவட் கிடந்தன குறுகின ருற்றார்.

(இ - ள்.) நின்று - (அவ்வாறு நோக்கி) நின்று, பின்னர்உம் - பின்பும், நெடு நெறி கடந்து - நீண்ட வழியைக் கடந்து, உறநிமிர சென்று - வெகுதூரம் நேராகப் போய், அவண் - அவ்விடத்தில், திரி சிகை திணி நெடு சூலம் ஒன்று - மூன்று தலைகளையுடைய வலிய பெரிய ஒருசூலாயுதமும், பல் கணை மழை உறு புட்டில் ஓர் இரண்டு - பலவான அம்புகளின் தொகுதி நிறைந்த தூணீரங்களிரண்டும், குன்றுபோல் கிடந்தன-மலைகள்போலக் கிடந்தவற்றை, நோக்கினர் - பார்த்து, குறுகினர் உற்றார் - (அவற்றை) அணுகச் சென்றார்கள்;

மழை - தொகுதியென்றமாத்திரமாய்நின்றது; வெள்ளம், காடு என்பனபோல. இனி, பல் கணை மழை யுறுபுட்டில் - பல அம்புகளை யுடைய மேகத்தைப்போன்ற புட்டிலென்றலும் ஒன்று; மழை பொழிதற்கு நீரை நிறையக்கொண்ட மேகம்போல, மிகுதியாகப் பிரயோகித்தற்குப் பாணங்களை நிறையக்கொண்ட புட்டி லென்றபடி; உறு-உவமவுருபு. பி - ம்:—[1]கதிர். [2]ஒன்றும். [3]உறை புட்டிலோடிரண்டும். [4]போல்வன கிடந்தகண் டதிசயங் கொண்டார். (984)

## 174.—அவர்கள் மற்றுஞ்செல்லுகையில் கவசங்கிடக்கக் காணுதல்.

மறித்துஞ் சென்றனர் வானிடை வயங்குற வழங்கி
எறிக்குஞ் சோதிகள் யாவையுந் தொக்கன [1]வெனலாம்
நெறிக்கொள் கானக மறைதர நிருதர்கோ னெஞ்சிற்
பறித்து வீசிய கவசமுங் கிடந்தது பார்த்தார்.

(இ - ள்.) மறித்துஉம்சென்றனர் - மீண்டும் (அப்பாற்) சென்ற இராமலக்குமணர்,—வானிடை வயங்குற வழங்கி எறிக்கும் சோதிகள்யாவைஉம் தொக்கனஎனல்ஆம் - வானத்தில் விளக்கமுண்டாம்படி சஞ்சரித்து ஒளிவீசுகிற (சூரியன் சந்திரன் முதலிய) சுடர்களெல்லாம் ஒருங்கு சேர்ந்தன என்று சொல்லுதற்கு ஏற்றதான, நிருதர் கோன் நெஞ்சில் பறித்து வீசிய கவசம் - இராக்கதராசனான இராவணனது மார்பினின்று (சடாயு) பிடுங்கியெறிந்த கவசம், நெறி கொள் கானகம் மறைதர கிடந்ததுஉம் - செல்லும்நெறியைக் கொண்ட காட்டினிடம் மறையும்படி விழுந்துகிடந்ததையும், பார்த்தார்—; (எ - று.)

மாற்றுயர்ந்தபொன்னினாற் செய்யப்பட்டு ஒளிநிறைந்த நவரத்தினங்களும் பதிக்கப்பட்டுள்ளதாதலால், 'வானிடைவயங்குற வழங்கி யெறிக்குஞ் சோதிகள் யாவையுந் தொக்கன வெனலாங் கவசம்' என்றார். 'நெறிக்கொள் கானகம் மறைதரக்கிடந்தது' என்றதனால், அக்கவசத்தினது மிக்க அகற்சி நீட்சிகள் விளங்கும்; அது, இராவணனுடம்பின் பருமையைத் தொனிப்பிக்கும். நெஞ்சு - மார்புக்குத் தானியாகுபெயர். பி-ம்:—[1]எனலாய். (985)

### 175.—குதிரைகளும் சாரதியும் இரத்தவெள்ளமும் கிடக்கக் கண்டு அவர்கள் சடாயுவிழுந்து கிடக்குமிடத்துக்கு வருதல்.

கான்கி டந்தது மறைதரக் கால்வயக் கலிமாத்
தான்கி டந்துழிச் சாரதி கிடந்துழிச் சார்ந்தார்
ஊன்[1]கி டந்தொளி ருதிரமுங் கிடந்துள துலகின்
வான்கி டந்தது [2]போல்பவன் கிடந்துழி வந்தார்.

(இ - ள்.) கான் கிடந்தது மறைதர - காடுஉள்ள இடம்முழுதும் மறையும்படி, கால் வயம் கலிமா தான் கிடந்த உழி-காற்றுப்போன்ற வேகத்தையுடைய குதிரைகள்விழுந்துகிடந்த இடத்தையும், சாரதி கிடந்த உழி-தேர்ப்பாகன் விழுந்துகிடந்த இடத்தையும், சார்ந்தார் - சேர்ந்தார்கள்; (அவ்விடங்களில்), ஊன் கிடந்து ஒளிர் உதிரம்உம் கிடந்துளது - தசையோடு பொருந்திவிளங்குகிற இரத்தமும் சிந்திக் கிடந்தது; (பின்பு), உலகின் வான் கிடந்தது போல்பவன் கிடந்த உழி வந்தார் - பூமியில் வானம் விழுந்துகிடந்தாற்போல்பவனாய்ச் சடாயு விழுந்துகிடக்கிற இடத்துக்கு அருகில் வந்தார்கள்; (எ-று.)

வான்-பெருவடிவுக்கு உவமை. மறைதர, தா - துணைவினை. கால் வயம் - கால்களின் வலியவேகமுமாம். கலிமா - கடிவாளம் பூண்ட விலங்கு; எனவே, குதிரையாயிற்று. கிடந்துழி - தொகுத்தல். 'உலகின் வான்கிடந்தது போல்பவன் கிடந்துழி வந்தார்' என்பதற்கு-பூமியில் கரியவானம் கிடந்தாற் போல்பவனாய் இராவணன் முன்பு மூர்ச்சித்து விழுந்துகிடந்த இடத்துக்கு வந்தார்களென்று உரைப்பாரும் உளர். பி - ம்:—[1]கிடந்ததோள். [2]போல்வது, போல்வதே. ()

### 176.—அங்கு அவர்கள் குண்டலங்களையும் மற்றும்பல அணிகளையுங் காணுதல்.

கண்ட லங்குதங் கைத்தலம் விதிர்த்தனர் கவினார்
விண்ட லந்துறந் திறுதியின் விரிகதிர் [1]வெய்யோன்
மண்ட லம்பல [2]மண்ணிடைக் [3]கிடந்தன மணியின்
குண்ட லம்பல குலமணிப் பூண்களின் [4]குவியல்.

(இ - ள்.) இறுதியின் - கற்பாந்தகாலத்திலே, விரி கதிர் வெய்யோன் மண்டலம் பல - வீசுகிற ஒளியையுடைய சூரியமண்டலங்கள் அநேகம், கவின் ஆர் விண் தலம் துறந்து - அழகமைந்த வானத்தினிடத்தை நீங்கி, மண்ணிடை கிடந்து அன - பூமியில் விழுந்துகிடந்தாற் போன்ற, மணியின் குண்டலம்பல-இரத்தினம் பதித்தஅநேகம் குண்டலங்களையும், குலம் மணி பூண்களின்குவியல் - சிறந்த இரத்தினங்கள் பதித்த மற்றும் பலவகை ஆபரணங்களின் தொகுதியையும், கண்டு - (இராமலக்குமணர் அங்குப்) பார்த்து, அலங்கு தம் கைத்தலம் விதிர்த்தனர் - அசையுந்தன்மையனவான தங்கள் கைகள் (வியப்பினால் தோன்றிய அச்சத்தால்) நடுங்கப்பெற்றார்கள்; (எ - று.)

குலமணி - உயர்ந்தசாதியிரத்தினம்; குலம் - தொகுதியுமாம். குவியல் - 'அல்' விகுதிபெற்ற தொழிற்பெயர். உவமையணி. பி-ம்:—[1]பருதி. [2]மண்மிசை. [3]கிடந்தென. [4]குப்பை. (987)

## 177.—இராமன் தம்பியைநோக்கி 'சடாயுவுடன் பலர் பொருதனர் போலும்' என்றல்.

தோள ணிக்குலம் பலவுள குண்டலத் தொகுதி
வாளி மைப்பன பலவுள மணிமுடி பலவால்
நாள னைத்தையுங் கடந்தனன் றமியனந் தாதை
யாளி [1]போல்பவர் பலருளர் பொருதன ரிளையோய்.

(இ - ள்.) இளையோய் - தம்பி! தோள் அணி குலம் பல உள - தோள்வளைகளின் கூட்டம் அநேகம் இருக்கின்றன; வாள் இமைப்பன குண்டலம் தொகுதி பல உள - ஒளிவீசுவனவானகுண்டலங்களின் கூட்டம் அநேகம் இருக்கின்றன; மணி முடி பல - இரத்தின கிரீடங்களும் பல இருக்கின்றன: ஆல்-ஆதலால்,—நாள் அனைத்தை உம் கடந்தனன் தமியன் நம்தாதை-வெகுகாலங்கடந்தவனும் துணையில்லாமல் தனித்தவனுமாகிய நமது தந்தையான சடாயுவுடன், பொருதனர்-போர்செய்தவர்கள், யாளி போல்பவர் பலர் உளர்-சிங்கம் போன்ற வீரர் பலராதல் வேண்டும்; (எ - று.) - என்று இராமபிரான் இலக்குவனை நோக்கிக் கூறினான்.

தோள்வளை குண்டலம் இவை பல சிந்தியிருத்தலால், இராமன், தன் தந்தை சடாயுவுடன் பலர்பொருதனர் போலுமென்றானென்க. 'நாளனைத்தையுங்கடந்தனன்' என்றது, மிகமுதிர்ந்த மூப்புடையவனென்றவாறு. பி - ம்:—[1]ஒப்பவர். (988)

## 178.—அதற்கு இலக்குமணன் 'பொருதவன் இராவணன் போலும்' என்றல்.

திருவி னாயக னுரைசெயச் சுமித்திரை சிங்கம்
தருவி னீளிய தோள்பல தலைபல வென்றால்
பொருது தாதையை யித்தனை நெறிக்கொடு போனான்
ஒருவ னேயவ னிராவண னாமென வுரைத்தான்.

(இ - ள்.) திருவின் நாயகன்-இலக்குமிக்குக் கணவனான [திருமாலின் திருவவதாரமாகிய] இராமபிரான், உரைசெய - (இவ்வாறு) சொல்ல, சுமித்திரை சிங்கம் - சுமித்திராதேவியினது குமாரனாகிச் சிங்கம்போன்ற வீரனான இலக்குமணன், 'தருவின் நீளிய தோள் பல தலை பல என்றால் - (பலதோளணிகளும் பல கிரீடங்களும் விழுந்து கிடத்தலால்) மரங்கள்போல நீண்டுள்ள தோள்கள் பலவும் தலைகள் பலவும் உள்ளன என்று விளங்கினால்,பொருது தாதையை இத்தனை நெறி கொடு போனான் ஒருவனே - போர் செய்து நமது தந்தையான சடாயுவை இவ்வளவு தூரமான வழியிற் கொண்டுசென்றவன் ஒருவனே: அவன் இராவணன் ஆம் - அவன் (இருபது தோள்களையும்

பத்துத் தலைகளையுமுடைய) இராவணனாதல்கூடும்,' என உரைத்தான் - என்று சொன்னான்; (எ - று.)

கால்கள்பல வுள்ளன என்பது விளங்காமல் தோள்களுந் தலைகளும் மாத்திரமே பலவுள்ளன என்று விளங்குதலால், இருபது தோள்களையும் பத்துத்தலைகளையுமுடைய இராவணனொருவனே யெதிர்த்தவனென்பது ஊகித்து உணரப்பட்டது. மகா புத்திமானான இலக்குமணன்,முக்காலத்துவரலாறுகளையும் உய்த்துணரும் ஆலோசனையிற் சிறத்தலால், இங்ஙனம் உண்மையை அநுமானித்து அறிந்தனனென்க. இராமன் இதனை முன்னர் உணராதது, மனைவியைப் பறிகொடுத்ததனாலான மிக்க கலக்கத்தாலென்க. இங்கே 'திரு' என்றது - திருமகளினது திருவவதாரமாகிய சீதாபிராட்டியை. சிங்கம்போன்றவனைச் சிங்கமென்றது உபசார வழக்கு. (989)

## 179.—இராமன் சடாயுவிழுந்துகிடத்தலைக் காணுதல்.

மடலு ணாட்டிய தா[1]ரிளை யோன்சொலை மதியா
மிடலு ணாட்டங்க டீயுக நோக்கினன் [2]விரைவான்
உடலு ணாட்டிய குருதியம் பரவையி னும்பர்க்
கடலு ணாட்டிய [3]வரையெனத் தாதையைக் கண்டான்.

(இ - ள்.) மடல் உள் நாட்டிய தார் இளையோன் - பூவிதழ்கள் தன்னிடத்திலே அமையவைக்கப்பட்டுள்ள மாலையையுடைய இலக்குமணனுடைய, சொலை-சொல்லை, மதியா - நன்குமதித்து, மிடல் உள் நாட்டங்கள் தீ உக நோக்கினன் விரைவான்-வலிமையையுடைய மனமும் கண்களும் கோபாக்கினியைச் சிந்தும்படி எங்கும் நாடிப்பார்த்துக்கொண்டு விரைந்து செல்பவனான இராமபிரான்,—உடலுள் நாட்டிய குருதி அம் பரவையின் உம்பர் - உடம்பினின்று வெளிப்பட்ட இரத்தவெள்ளத்தின்மேல், கடலுள் நாட்டிய வரை என- கடலில் (மத்தாக) நாட்டியமந்தரமலையைப்போல, தாதையை-(தனது) தந்தையான சடாயுவை, கண்டான் - பார்த்தான்; (எ - று.)

இரத்தவெள்ளத்துக்குக் கடலும், சிறகுகள் அற்றுவிழுந்து கிடக்கும் பெரிய சடாயுவின் வடிவத்துக்கு மலையும் உவமை. குருதியம்பரவை யென்பதில், அம் - சாரியை. பி - ம்:—[1]இளையோன்றனை. [2]விரைவால். [3]மலையன்ன. (990)

## 180.—இராமன் சடாயுவின்மேல் விழுந்து புலம்பல்.

துள்ளி யோங்குசெந் தாமரைக் [1]கண்கணீர் சொரியத்
தள்ளி யோங்கிய வமலன்தன் றனியுயிர்த் தந்தை
வள்ளி யோன்றிரு மேனியிற் றழனிற வண்ணன்
வெள்ளி யோங்கலி லஞ்சன மலையென வீழ்ந்தான்.

(இ - ள்.) ஓங்கிய அமலன் - (எல்லாப் பொருள்களினும்) உயர்ந்தவனும் குற்றமற்றவனுமான ஸ்ரீராமன்,—துள்ளி ஓங்கு செம்தாமரை கண்கள் நீர் சொரிய தள்ளி-செழிப்புற்று வளர்ந்த செந்தாமரைமலர்போன்ற (தனது) கண்கள் நீர்சொரியும்படி (நீரைப்)பெருக்

கிக்கொண்டு, தன் தனி உயிர் தந்தை வள்ளியோன் திருமேனியில் - ஒப்பற்ற தனது உயிர்போன்ற தந்தையாகிய வண்மைக்குணமுடைய சடாயுவினது உடம்பின்மேல், தழல்நிறம் வண்ணன் வெள்ளி ஓங்கலில்-நெருப்பினது நிறம்போலுஞ் செந்நிறத்தையுடைய சிவபிரானது வெள்ளிமலையின்மேல், அஞ்சனம் மலை என - மைம்மலையொன்று படிந்திருந்தாற் போல, வீழ்ந்தான் - பெருந்துயரால் விழுந்திட்டான்; (எ - று.)

வெள்ளிமலை-வெண்ணிறமான பெரிய சடாயுவின் வடிவத்துக்கும், அஞ்சனமலை-கருநிறமுடைய கம்பீரமான இராமபிரானது திருமேனிக்கும் உவமை. சடாயு தன்னையுங் கருதாது சமயத்தில் உதவிய உதாரகுணத்தைப் பாராட்டி, அவனுக்கு 'வள்ளியோன்' என்று ஒரு பெயர் கூறினர். துள்ளிச் சொரிய என்று இயைத்து - நீர்த்துளிகளைச் சிந்த வென்று உரைத்தலு மொன்று; அப்பொழுது, துளியென்பது துள்ளியென விரித்தல்விகாரம் பெற்றதெனக. தழல்நிற வண்ணன் வீற்றிருக்கிற வெள்ளிமலையை உவமை கூறியதனால், சடாயுவினுடம்பு செந்நீர் அரும்பப்பெற்றுள்ளமை தொனிக்கு மென்பர். பி - ம்:—[1]நயனங்கள். (991)

## 181.—இராமன் மூர்ச்சித்துத் தெளிந்து புலம்பலுறுதல்.

**உயிர்த்தி லன்னொரு நாழிகை யுணர்விலன் கொல்லென்று**
**அயிர்த்த தம்பிபுக் கங்கையி னெடுத்தன னருவிப்**
**புயற்க லந்தநீர் தெளித்தலும் புண்டரீ கக்கண்**
**[1]பெயர்த்துப் பைப்பய வயர்வுதீர்ந் தினையன [2]பேசும்.**

(இ - ள்.) ஒரு நாழிகை உயிர்த்திலன் - (அவ்வாறுவிழுந்த இராமபிரான்) ஒருநாழிகைப்பொழுது வரையிலும் சுவாசமில்லாதவனானான்: உணர்வு இலன்கொல் என்று அயிர்த்த தம்பி-உணர்ச்சியிலனாயினனோ என்று ஐயமுற்ற தம்பியாகிய இலக்குமணன், புக்கு-(அருகிற்) சென்று, அம் கையின் எடுத்தனன் - அழகிய (தன்) கைகளால் (இராமனை) எடுத்து அணைத்துக் கொண்டு, புயல் அருவி கலந்தநீர் தெளித்தலும் - மேகத்தினின்று பொழிந்து மலையருவியிற் கலந்ததான தண்ணீரை (இராமன்மேல்) தெளித்தவளவிலே, (இராமன்), புண்டரீகம் கண் பெயர்த்து-தாமரைமலர்போன்ற (தன்) கண்களைத் திறந்து, பைப்பய அயர்வு தீர்ந்து-மெல்லமெல்லச் சோர்வு நீங்கி, இனையன பேசும்-இத்தன்மையனவான வார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)—அவற்றை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க.

சடாயுவின்மீது விழுந்திட்ட இராமபிரான் பேச்சுமூச்சின்றிக் கிடக்கவே, இலக்குவன் தன்கையால் வாரியெடுத்து மிகவும் தண்ணென்ற நீரை அவன்மீது தெளிக்க, இராமபிரான் மெல்லமெல்லக் கண்விழித்து அயர்வுதீர்ந்து பின்வருமாறு புலம்புபவனானனென்பதாம். குளிர்ந்த நீரென்றற்கு, 'அருவிப்புயற்கலந்தநீர்' என்றார். பி - ம்:—[1]பெயர்த்துடன்பய, வியர்த்துப்பைப்பய. [2]விளம்பும். (992)

வேறு.

## 182.—இதுமுதல் ஐந்துகவிகள் - சடாயுவைக் குறித்து இராமன் புலம்பலைத் தெரிவிக்கும்.

தந்தா தையரைத் தனயர் கொலை[1] நேர்ந்தார்
முந்தாரே யுள்ளார் [2]முடிந்தான் முனையொருவன்
[3]எந்தாயோ வெற்காக நீயு [4]மிறந்தனையோ
அந்தோ வினையே னருங்கூற்ற [5]மானேனே.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தம் தாதையரை - தமது தகப்பன்மாரை, கொலை நேர்ந்தார்-கொலை நிகழுமாறு உடன்பட்டவராகிய, தனயர் - புத்திரர், முந்து ஆரே உள்ளார் - (எனக்கு) முன் எவர் இருக்கிறார்? [எவருமில்லை யென்றபடி]; ஒருவன்-எனது தகப்பனார் [தசரதர்], முனை முடிந்தான் - (என்னைப் பிரிந்ததற்காக) முன்னமே இறந்துள்ளார்; எந்தாயோ - எனது தந்தையே [சடாயுவே]! எற்கு ஆக நீஉம் இறந்தனை ஓ - எனக்கு உதவிசெய்வதற்காக நீயும் இறந்துவிட்டாயோ! அந்தோ - ஐயோ! வினையேன் - பாவியாகிய யான், அரு கூற்றம் ஆனேனே - (தந்தையரிருவர்க்கும்) தடுத்தற்கரிய யமனாயிருந்தேனே! (எ - று.)

அயோத்தியில் பெற்ற தகப்பனார் என் பிரிவினால் உயிரொழியக் காரணமாக இருந்தேன்: இங்குத் தந்தையாகப் பாவிக்கப்பெற்ற சடாயு உயிரொழியக் காரணமானேன். இங்ஙனம் தந்தையார் உயிரொழியக் காரணமான தனயர் என்னைப் போன்று எவரும் முந்து இல்லையே என்று இராமன் சடாயுவுக்குப் புலம்புகின்றான். எந்தாயோ - புலம்பல்விளியாதலின், ஓகாரம் வந்தது; "புலம்பின் ஓவும் ஆகும்." பி - ம்:—[1]சூழ்ந்தார். [2]முடிந்தானேமுன். [3]எந்தாயே. [4]இறந்தனையால். [5]ஆனேனே.

இதுமுதல் ஒன்பதுகவிகள் - நாற்சீரும் வெண்டளையால் வந்த அளவடி நான்குகொண்ட கலிப்பாக்கள். (993)

183. பின்னுறுவ தோராதே பேதுறுவேன் பெண்பாலாள்
தன்னுறுவ றீர்ப்பான் றனியுறுவ [1]தோராதே
உன்னுறவு [2]நீதீர்த்தா யோருறவு மில்லாதேன்
என்னுறுவான் வேண்டி யிடருறுவே [3]னென்றாயே.

(இ -ள்.) என் தாயே - எனது தாய்போன்றவனே! தனி உறுவது ஓராது ஏ-(நீ) ஒருதுணையுமின்றித் தனியே நிற்பதையும் (ஒரு பொருளாகக்) கருதாமலே,—பின் உறுவது ஓராது ஏ பேதுறுவேன்பெண்பாலாள்தன் - பின்வரும்பயனை இன்னதென்று ஆராயாமலே (மாயமானினிடத்து) மயக்கங்கொண்டு சென்ற எனது மனையாளான சீதையின், உறுவல் தீர்ப்பான் - துன்பத்தைத் தீர்த்தற்காக (முயன்று), உன் உறவு நீ தீர்த்தாய் - உனது உறவின் கடமையை நீ தீர்த்துக்கொண்டாய்; ஓர் உறவுஉம் இல்லாதேன் -

உறவுக்குரிய கடமையைச் சிறிதும் தீர்த்தலில்லாத யான், என் உறுவான் வேண்டி இடர் உறுவேன் - யாதுபயனை அடைய விரும்பி (இப்பொழுது) கலக்கமுறுகிறேன்? (எ-று.)

தனியுறுவது ஓராதே உறவு நீ தீர்த்தாயென்க. எனது உறவுக்குஉரிய கடமையைச் செலுத்த வகையில்லாத யான் மனக் கலக்கம் மாத்திரத்தை யடைதல் வீண் என்றவாறு. 'உறு' என்ற பகுதியினின்று பிறந்தசொல் பன்முறைவந்த நயம்காண்க. பி-ம்:— [1]ஓராதேன். [2]தீர்த்தாயோ. [3]எந்தாயே, எந்தாயோ. (994)

184. மாண்டேனே யன்றோ மறையோர் குறைமுடிப்பான்
பூண்டேன் விரத மதனு னுயிர்பொறுப்பேன்
நீண்டேன் மரம்போல [1]நின்றொழிந்த புன்றொழிலேன்
வேண்டேனிம் மாமாயப் புன்பிறவி [2]வேண்டேனே.

(இ-ள்.) மாண்டேன்ஏ அன்றோ - (இங்ஙனம் நேர்ந்த தீமைகளால் யான்) இறந்தவனையேயொப்பேனன்றோ! (எனக்குநேர்ந்த அவமானத்தால் என்னுயிர் போயிருக்கவேணும்: போகாவிடின் "உயிர்நீப்பர் மானம்வரின்" என்றபடி நானேயாவது உயிரையொழித்திடவேணும்: அவ்வாறாகவும் ஏன் இறக்கவில்லை யென்றால்),—மறையோர் குறை முடிப்பான் விரதம் பூண்டேன் அதனால் உயிர் பொறுப்பேன் - வேதம்வல்லவர்களான முனிவர்களுடைய குறைகளை நீக்குவதாக விரதத்தை மேற்கொண்டுள்ளே னாதலால் (இறவாமல்) உயிரை (அரிதில்) தரிப்பவனாகி, நீண்டேன் - வாழ்நாள் நீளப்பெற்றேன்: மரம்போல (நீண்டேன்) நின்று-மரம்போல நீண்டு வளர்ந்து நின்று, ஒழிந்த - யாதொரு பயனையும்பெறாத, புல் தொழிலேன்-தீவினையுடையேனான நான், இ மா மாயம் புல் பிறவி-பெரிய வஞ்சனைகளுக்கு இடமான இழிவுள்ள இப்பிறப்பை, வேண்டேன் வேண்டேன் - விரும்பேன் விரும்பேன்; (எ - று.)

எனக்குநேர்ந்துள்ள துயரத்தாலும் அவமானத்தாலும் நான் உயிரொழிந்தேயிருக்கவேணும்: ஒழியாது உயிரைத் தாங்குவது, மறையோரின் குறைமுடிக்குமாறு விரதம்பூண்டதனாலேயேயாகும். ஆயுளொழியாது நீளுமாறு கொண்டிடினும், தன்னைவெட்டுதல் எரித்தல் வேரோடுகளைதல் முதலிய தீங்குசெய்வார்க்கும் மாறு செய்யமாட்டாது நின்றொழியும் மரம் போன்ற என்செய்கை, குற்றமுற்றசெய்கையே: மெய்யாம்முத்திநிலைக்குமாறான இந்தப்பொய்ப் பிறவி எனக்கு எற்றுக்கு? வேண்டவே வேண்டா என்று இராமபிரான் நொந்து கூறுகின்றன னென்க. மாயம்-பொய், வஞ்சனை: உள்ளதை இல்லதுபோலவும் இல்லதை உள்ளதுபோலவும் தோற்றுவிக்கும் மாயாசக்தியுமாம். மானுடபாவனையே மிகப் பேசுவதனால், 'மாயப்பிறவி வேண்டேன்' என்கிறான். இங்கு, பிறவி பெருவருத்தத்தையும் பெருமயக்கத்தையும் விளைவிக்கவல்லது: இதனை வேண்டாது மீண்டிடப்பார்ப்பதே மானிடர் செய்ய வேண்டிய செயல் என்பது தெரியவரும். 'நின்றொழிந்த' என்பதை 'நின்று வற்றும்' என்றாற்போலக் கொள்க; நின்றுபயனில்லாத என்றபடி. 'மரம்போல நீண்டேன்' என்று உலகவழக்குப்பற்றிக்

கூறியதாகக் கொண்டு, என்வளர்ச்சி பயனற்றது எனக் கருத்துக் கூறலாம். ஆலமரம்போலவன்றிப் பனைமரம்போல நீண்டிருப்பது நிழலுக்கும் உதவாமை கருதத்தக்கது. பி - ம்:—[1]நின்றொழிந்தேன். [2]வேண்டேனல். (995)

185. என்றாரம் பற்றுண்ண வேன்றாயைச் சான்றோயைக்
கொன்றானு நின்றான் கொலையுண்டு நீகிடந்தாய்
வன்றாட் சிலையேந்தி வாளிக் கடல் சுமந்து
நின்றேனு நின்றே னெடுமரம்போ னின்றேனே.

(இ - ள்.) என் தாரம் - (என்னாற்காக்கப்படவேண்டிய) எனது மனைவி, பற்றுண்ண - (காக்கப்படாமையால் ஒருவர்கையிற்) பிடிபட்டவளாக, ஏன்றாயை-(அவளை மீட்டற்பொருட்டு) எதிர்த்தவனை, சான்றோயை-பெரியோனாகிய உன்னை, கொன்றான் உம்- கொன்ற அப்பகைவனும், நின்றான்-இறவாது உயிரோடுநின்றான்; கொலையுண்டு நீ கிடந்தாய் - நீயோ கொல்லப்பட்டுக்கிடக்கின்றாய்; வல் தாள் சிலை ஏந்தி-வலியதண்டத்தையுடைய வில்லைத் தரித்துக்கொண்டும், வாளி கடல் சுமந்து - பாணங்களின் தொகுதியைச் சுமந்துகொண்டும், நின்றேன் உம்-(எதிர்செய்யமாட்டாது)நின்றவனை நானும், நின்றேன் - (தோற்றத்தில் வீரன்போல்) நின்றேன்: (உண்மையாகப்பார்க்குமிடத்து), நெடு மரம் போல் - பெரிய மரம் போல, நின்றேன் - (ஓங்கி வளர்ந்து பயனின்றி) நின்றேன்; (எ - று.)

'என்தாரம்பற்றுண்ண' என்றதனால் தன்மனைவியைப் பாதுகாக்கத்தவறியதற்காக நாணமும் கழிவிரக்கமும், 'ஏன்றாயைச் சான்றோயைக் கொன்றானும் நிற்கக் கொலையுண்டு நீ கிடந்தாய்' என்றதனால் அச்சீதையைப் பாதுகாக்கவேணுமென்றுசமயத்தில் உதவ வந்து உயிர்நீங்கிக் கொலையுண்டமைக்காகச் சடாயு பக்கல் மதிப்பும் நன்றியறிவும் அன்போடுகூடிய பெருவருத்தமும், 'வன்றாட்சிலையேந்தி வாளிக்கடல் சுமந்துநின்றேனும் நின்றேன் நெடுமரம்போல் நின்றேன்' என்றதனால் தீங்குசெய்தார்பக்கல் சீற்றமும் மாறுசெய்யமாட்டாமற் போனமைக்கு நாணமும் தன்னிடத்துப் பெருவெறுப்பும் தோன்ற இராமபிரான் கூறியனவாக அமைத்த கவித்திறம் இச்செய்யுளிற் பாராட்டத்தக்கது. கடல் என்றது, தொகுதியென்றமாத்திரமாய் நின்றது; கீழ் 173-ஆம் கவியில் 'மழை' என்றதுபோல. ஏன்றாயை-ஏற்றாயை; ஏல்-பகுதி. (996)

186. சொல்லுடையா ரென்போ லினியுளரோ தொல்வினையேன்
இல்லுடையாள் காண விறகுடையா யெண்ணிலாப்
[1]பல்லுடையா யுன்னைப் படையுடையான் [2]கொன்றகல
வில்லுடையே னின்றேன் விறலுடையே னல்லேனே.

(இ - ள்.) இனி என்போல் சொல் உடையார் உளரோ - இனி என்னைப்போலப் புகழுள்ளவர் (உலகத்தில்) இருக்கின்றனரோ? இறகு உடையாய் - இறகுகளின் வலிமையையுடையவனே! எண் இலா பல் உடையாய் - அளவற்ற பற்களையுடையவனே! தொல் வினையேன் இல் உடையாள் காண - பழமையான [முற்பிறப்பிற்

செய்த] தீவினையையுடைய எனது மனையாள் காண, உன்னை—, படை உடையான் - ஆயுதவலிமையையுடைய பகைவன், கொன்று அகல-கொன்றிட்டுச்சென்றுவிட, வில் உடையேன் நின்றேன் - வில்லையுடையேனாய் (அதற்குப் பரிகாரஞ்செய்யாது) வீணே சீவித்து நின்றவனான நான், விறல் உடையேன் அல்லேன்ஓ - வீரமுடையே னன்றோ! (எ - று.)

என்னைப்போலப் புகழ்பெற்றவர் யாருளர்? ஆயுதமில்லாத உன்னை ஆயுதமுடையான் கொன்றுபோய்விட, ஆயுதம்படைத்த யான் யாதுஞ்செய்யாதுநின்றேனே; நான் பெரு வீரனேயன்றோ! என்று புலம்பினன் இராமபிரானென்க. 'சொல்லுடையா ரென் போ லினியுளரோ' என்றது, பிறகுறிப்பு வகையால், என்போலப் பழிபூண்டவர் உலகத்தில் எவருமில்லை யென்ற எதிர்மறைப் பொருளைத்தரும்; 'விறலுடையேனல்லேனோ' என்பதற்கும் இவ் வாறேகொள்க; அன்றி, சொல் - நிந்தனைச்சொல்லுமாம். இனி, டம்பமாகப்பேசிக் காரியத்தில் வாளாவிருக்கும் என்போலுளரோ என முதலடிக்குக் கருத்துக்கொள்ளினுமாம். முதலடியும், ஈற்றடி யும்-தன்னைத் தானே வெறுத்து நிந்தித்துக்கொண்டவாறும். இல் உடையாள் - வீட்டுக்கு உரிமையுடையவள்; இல்லறவாழ்க் கைத்துணைவி. இறகுகளைக்கொண்டும், பற்களைக்கொண்டும் போர் செய்த உன்னை யென்பார், 'இறகுடையாய் எண்ணிலாப்பல் லுடையாய் உன்னை' என்றார். பி - ம்:—[1]பல்லுடையான். [2]கொன் றேக. (997)

## 187.—இங்ஙனம் புலம்புகையில் சடாயு சிறிதுமூர்ச்சை தெளிதல்.

[1]அன்னா பலபலவும் பன்னி யழுமயங்கும்
[2]தன்னே ரிலாதானுந் தம்பியுமத் தன்மையனா
[3]உன்னா வுணர்வுசிறி துண்முளைப்பப் [4]புள்ளரசும்
[5]இன்னா வுயிர்ப்பா னிருவரையு நோக்கினான்.

(இ - ள்.) தன்நேர் இலாதான்உம் - தனக்கு ஒப்புமை தானே யன்றி வேறு இல்லாதவனான இராமனும், அன்னா பல பலஉம் பன்னி அழும் - அத்தன்மையானவார்த்தைகள் பற்பலவற்றையும் மிகுதியாகக்கூறிப்புலம்புவான்: மயங்கும் - மதிமயக்கங்கொள்வான்; தம்பிஉம் - இளையபெருமாளும், அ தன்மையன் ஆ - அங்ஙனம் அழுதுமயங்கும்நிலைமையையுடையவனாக,-புள் அரசுஉம் - கழுகரச னான சடாயுவும், உள் சிறிது உணர்வு முளைப்ப-உள்ளத்திற் சிறிது உணர்ச்சிதோன்ற, உன்னா - நினைப்புற்று, இன்னா உயிர்ப்பான் - துன்பத்தோடு சுவாசம்விடுபவனாய், இருவரைஉம் நோக்கினான் - அவ்விருவரையும் கண்திறந்துபார்த்தான்; (எ-று.)

அன்னா - அன்ன என்ற சுட்டடி உடன்பாட்டுப்பலவின்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர், எதுகைநயம்நோக்கி நீட்டல் விகாரமுற்றது. பி - ம்:—[1]அன்ன. [2]தன்னேரிலாத. [3]முன்னை. [4]புள்ளரசன். [5]இன்னுயிர்ப்பானொத்தான். (998)

## 188.—சடாயு இராமலக்குமணரைக் கண்டதனால் மகிழ்தல்.

உற்ற [1]துணரா துயிருலைய வெய்துயிர்ப்பான்
[2]கொற்றவரைக் கண்டான் றனுள்ளங் குளிர்ப்புற்றான்
இற்ற [3]விருசிறகு [4]மின்னுயிரு மேழுலகும்
பெற்றனனே [5]யொத்தான் பெயர்த்தேன் பழியென்றான்.

(இ - ள்.) உற்றது உணராது-(பின்பு சீதைக்கு) நேர்ந்த நிலைமையை அறியாமல், உயிர் உலைய - உயிர்நடுங்க, வெய்து உயிர்ப்பான் - வெவ்விதாகப் பெருமூச்செறிபவனான சடாயு,—கொற்றவரை கண்டான் - வெற்றியையுடைய அவ்விராமலக்குமணர்களைப் பார்த்தவனாய், (அதனால்), தன் உள்ளம்குளிர்ப்பு உற்றான் - தனது மனம் (தவிப்பொழிந்து) குளிர்ச்சியடையப்பெற்றவனாகி, இற்ற இருசிறகுஉம் இன்உயிர்உம் ஏழ் உலகுஉம் பெற்றனனே ஒத்தான்-துணிபட்ட(தனது) இரண்டு சிறகுகளையும் இனிய உயிரையும் ஏழுலகங்களையும் அடைந்தவன்போன்று (மிகமகிழ்ச்சியுற்று), பழி பெயர்த்தேன் என்றான் - பழியை நீக்கிவிட்டேனென்று கருதினான்; (எ - று.)

இராவணன் சீதையையெடுத்துச்சென்ற செய்தியை இப்பொழுது நான் இவர்கட்குத் தெரிவிக்கச் சந்தர்ப்பம் வாய்த்தலால் என்பழியைத் தீர்த்துக்கொண்டேனென்றும், இனி இவர்கள் தவறாதுபகைவென்று சீதையை மீட்பாதலால் அவர்கள் பழியையொழித்தவனுமானேனென்றுங் கருதினான். பி - ம்:— [1]உணரா. [2]கொற்றவனை. [3]இருஞ். [4]ஏழுலகுமின்னுயிரும். [5]ஒத்தேன். (999)

## 189.—சடாயு அவர்களை அருகில் அழைத்து உச்சிமோத்தல்.

பாக்கியத்தா லின்றென் பயனில் பழியாக்கை
போக்குகின்றேன் கண்ணுற்றேன் புண்ணியரே [1]வம்மினென்று
தாக்கி யரக்கன் மகுடத் தலை[2]துமித்த
மூக்கினா லுச்சி முறை[3]முறையே மோக்கின்றான்.

(இ - ள்.) 'புண்ணியரே -நல்வினையுடையவர்களே! பயன் இல் - பயனற்றதும், பழி - பழிப்படைந்ததுமான, என் யாக்கை - எனது உடம்பை, இன்று போக்குகின்றேன் - இப்பொழுது ஒழிக்கின்றவனான நான், பாக்கியத்தால் கண்ணுற்றேன் - (எனது) நல்வினைப் பயனால் (இப்பொழுது உங்களைப) பார்க்கப்பெற்றேன; வம்மின் - வாருங்கள்,' என்று-என்று இன்சொற்கூறி (அவர்களை அருகில் அழைத்துச் சடாயு), அரக்கன் மகுடம் தலை தாக்கி துமித்த மூக்கினால் - இராவணனது கிரீடமணிந்த தலைகளைத் தாக்கித்துணித்திட்ட (தனது) மூக்கினால், உச்சி-(அவர்களுடைய) தலையுச்சியை, முறைமுறையே மோக்கின்றான் - மாறிமாறிப் பலமுறை மோந்திடுகின்றவனானான்; (எ - று.)

பகைவன் தலையை வன்மையாகப் பெருஞ்சீற்றத்தோடு கொத்திய அதேமூக்கால் புதல்வரின் உச்சியைமென்மையாக அன்புடன் மோந்தானெனக்கூறியநயம் காண்க: இதனை அணிநூலார் வ்யாகாதாலங்காரம் என்பர். இராவணனைவென்று சீதையைத் தான் மீட்டிடாமைபற்றிய கழிவிரக்கத்தால், 'பயனில்பழியாக்கை' என்று வெறுத்துக்கூறுகிறான். 'இன்று' என்பதை 'கண்ணுற்றேன்' என்பதனோடும் கூட்டுக. 'புண்ணியரே' என்றது, எனது நல்வினைப் பயன்போல எதிரில்வந்து வாய்த்தவர்களேயென்று கொண்டாடி விளித்தவாறும். கிரீடங்களைக் கீழேதள்ளித் தலைகளைக் கொத்த முயன்றதையே, 'மகுடத்தலைதுமித்த' என்கிறான். பாக்கியத்தாற் போக்குகின்றேனென்று இயைப்பின், உற்றுழி உதவலுற்ற போரில் உயிர்போக்க நேர்ந்ததையே பாக்கியமென்றதாகக் கொள்ள வேண்டும். உச்சிமோத்தல் - புத்திரவாற்சலிய முடையார் மிக்க அன்பினாற் செய்யுஞ்செயல்: இச்செயல் நமதுகண்ணுக்குமுன்னே நிகழ்வதுபோல 'மோக்கின்றான்' என நிகழ்காலத்தாற் கூறிய நயம் பாராட்டத்தக்கது. பி - ம்:—[1] வாருமென்று. [2] தகர்த்த. [3] முறையான். (*1000*)

## 190.—சடாயு இரங்கிக்கூறும் வார்த்தை.

வஞ்சனையால் வந்த வரவென்ப தென்னுடைய
[1] நெஞ்சகமே முன்னே நினைவித்த தானாலும்
அஞ்சொன் மயிலை யருந்ததியை நீங்கினிரோ
எஞ்சலிலா வாற்ற லிருவீரு மென்றுரைத்தான்.

(இ - ள்.) 'வந்த வரவு - (பொன்மானும் இராவணசந்யாசியும்) வந்த வருகை, வஞ்சனையால் - வஞ்சனைச்சூழ்ச்சியாலாகியது,' என்பது-என்கிற விஷயத்தை, என்னுடைய நெஞ்சகமே - எனது மனந்தான், முன்னே நினைவித்தது - முன்னமே நினைக்கும்படி செய்தது; ஆனாலும் - ஆயினும், எஞ்சல் இலா ஆற்றல் இருவீர்உம் - குறைவில்லாத வலிமையையுடைய நீங்கள் இரண்டுபேரும், அம் சொல் மயிலை அருந்ததியை நீங்கினிர்ஓ - அழகியசொற்களையுடைய மயில் போன்ற சாயலுள்ளவளும் கற்புநிலையில் அருந்ததிபோன்றவளுமான சீதையைத் தனித்திருக்கவிட்டுப் பிரிந்து போனீர்களோ?' என்று உரைத்தான் - என்றுகூறினான், (சடாயு); (எ - று.)

பொன்மான் வந்தபொழுதும், கபடசந்நியாசி வந்தபொழுதும் அவ்வரவு மாயையாலாகியதென்று கருதினேன்: ஆயினும், நீவிர் இருவீரும் பர்ணசாலையில் இருக்கின்றீரென்று எண்ணியிருந்தேன்; இப்படிப் பாதுகாப்பின்றிச் சீதையைத் தனியேவிட்டு இருவீரும் சென்றீரென்று அறிந்திலேன் என்றனனென்பதாம்; இப்படி அறிந்திருந்தேனாயின் இன்னும் முன்சாக்கிரதைப்பட்டுச் சீதையைப் பாதுகாக்கமுயன்றிருப்பேன் என்பது தாற்பரியம். நினைவித்தது-நினைத்தது என்றபடி; பிறவினை தன்வினைப்பொருளில்வந்தது. மயில், அருந்ததி - உவமையாகுபெயர்கள். பி - ம்—[1] நெஞ்சமே முன்னம். (*1001*)

வேறு.

## 191.—அப்பொழுது இலக்குமணன் நடந்த செய்தியைத் தான் அறிந்தவரையிற் கூறுதல்.

என்றவ னியம்பலு மிளைய கோமகன்
ஒன்றுமாண் டுறுபொரு ளொழிவு ருவகை
வன்றிறன் மாயமான் வந்த தாதியா
நின்றது நிகழ்ந்தது [1] நிரப்பி னனரோ.

(இ - ள்.) என்று அவன் இயம்பலும் - என்று அச்சடாயு சொன்னவளவிலே, இளைய கோமகன் - தசரதசக்கரவர்த்திகுமாரர்களான அவ்விருவரில் இளையவனான லக்ஷ்மணன், ஆண்டு உறு பொருள் ஒன்றும் ஒழிவு உரு வகை - அவ்விடத்தில் நிகழ்ந்த செயலொன்றும் விட்டிடாதபடி, வல் திறல் மாயம் மான் வந்தது ஆதி ஆ நின்றது நிகழ்ந்தது - மிக்கவலிமையையுடைய பொய்ம் மான் வந்தது முதலாக நடந்துநின்ற நிகழ்ச்சியை, நிரப்பினன்-கூறி முடித்தான்; (எ - று.)

நின்றதும் நிகழ்ந்ததும் என எடுத்து - தான் இராமபிரான் கட்டளைப்படியே பர்ணசாலையில் காத்து நின்றதும், அப்போது மாய மான் குரலைக்கேட்ட பிராட்டியார் பலபடி வற்புறுத்துக்கூறத் தான் பாதுகாத்தலைவிட்டு இராமனிடத்துச்செல்ல நிகழ்ந்ததும் என்றுமாம். அரோ-ஈற்றசை. பி - ம்:—[1] நிகழ்த்தினனரோ.

இதுமுதல் எட்டுக்கவிகள்-கீழ்ப்படலத்தின் 6-ஆம் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (1002)

## 192.—சடாயு அவர்கட்குத் தேறுதல்வார்த்தை கூறத் தொடங்கல்.

[1] ஆற்றலோ னவ்வுரை யறைய வாணையால்
ஏற்றுணர்ந் [2] தெண்ணியவ் வெருவை வேந்தனும்
மாற்றருந் [3] துயரவர் மனக்கொ ளாவகை
தேற்றுத னன்றென விணைய [4] செப்புவான்.

(இ - ள்.) ஆற்றலோன் - வல்லமையுள்ளவனான இலக்குமணன், ஆணையால் - (இராமபிரானது) கட்டளையின்படி, அ உரை அறைய - அந்தவார்த்தைகளைச் சொல்ல,—அ எருவை வேந்தன் உம் - கழுகரசனான அச்சடாயுவும், ஏற்று-(அவ்வார்த்தையைச் செவியால்) ஏற்று [கேட்டு], உணர்ந்து-அறிந்து, எண்ணி-ஆலோசித்து,—'அவர்-அவ்விராமலக்குமணர், மாற்ற அரு துயர் மனம் கொளா வகை-நீக்குதற்கு அரிய துன்பத்தை மனத்திற் கொள்ளாதபடி, தேற்றுதல்-தேறுதல் கூறல், நன்று-நல்லது,' என-என்றுகருதி, இணைய - இத்தன்மையவான வார்த்தைகளை, செப்புவான் - சொல்பவனானான்: (எ - று.)— அவற்றை மேற் காண்க.

ஆற்றல் - புத்திபலமுமாம். இணைய - பெயர். பி - ம்:—[1] ஆற்றலானவ்வுரைபகர. [2] எண்ணிய. [3] துயரிவர். [4] செப்பினன். (1003)

**193.—இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒருதொடர்: சடாயு கூறும் தேறுதல்வார்த்தை.**

அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்ப துன்பந்தான்
விதி[1]வய மென்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யான்விதி வெல்ல வல்லமோ.

(இ - ள்.) ஒருவரால் அதிசயம் அமைக்கல் ஆகும்ஓ - ஒருவரால் புதுமையைச் செய்யமுடியுமோ? [முடியாது என்றபடி], துதி அறு பிறவியின் இன்ப துன்பம்தான் - புகழற்ற [பழிக்கத்தக்க] பிறப்பினது சுகதுக்கங்கள், விதிவயம்-ஊழ்வினையின் வசத்தனவாயுள்ளன [ஊழ்வினைப்படி நடப்பன], என்பதை - என்ற கொள்கையை, மேல் கொளா விடின் - ஏற்றுக்கொள்ளாவிட்டால், மதி வலியான் விதி வெல்ல வல்லம்ஓ - அறிவின் வலிமையால் ஊழை வெல்லுதற்கு வல்லமையுடையோமோ? [அல்லோம் என்றபடி]; (எ - று.)

தான் சீதையைப் பிரிந்த பிழையினால் மாற்றால் சீதை கவரப் பெற்றாளென்று இராமபிரான் கொண்டுள்ள எண்ணத்தைப் போக்கித் தேற்றுவானாய், சடாயு, 'புதுமையாக ஒன்று நேர்ந்ததென்றால் அது நம்மாலாவதோ? பிறவியில் தோன்றும் இன்ப துன்பங்கள் விதிவயத்தனவன்றோ! பிறவியின் இன்பதுன்பங்கள் விதிவசமென்பதை மேற்கொண்டால் அப்போது மதிவலியால் விதியை வெல்லவல்லோமாவோமேயன்றி, இன்பதுன்பங்கள் விதிவசமென்பதை மேற்கொள்ளாவிடின் மதிவலியால் விதியைவெல்லவல்லோமாவோமல்லோம்' என்றுதேற்றியவாறு. ஊழ், விதி, பால், முறை, தெய்வம் என்பன - ஒருபொருட்கிளவி. அதிசயம்என்பதை 'அத்ருச்யம்' என்றவடமொழியின்திரிபு என்று கொண்டு, கண்ணுக்குக் காணப்படாதது எனப் பொருளுரைத்து, காரண காரியம் தெரியப் படாது நிகழ்வதனைத் தெய்வச்செயல் என்ப: அது எதிர்பாராது நிகழ்வதாதலால், அது புதுமையானதாம். முதலடிக்கு - (ஊழ்வினையைக் கடந்து அதனினும்) மேலாக ஒன்றனைச்செய்தல் ஒருவராலாகுமோ? [ஆகாது] என்று பொருளுரைக்கவும்படும்: இப்பொருளில் அதிசயம்—மிகுதியென்னும் பொருளதான வடசொற்றிரிபு. பி-ம்:—[1]வலியென்பதே. (1004)

194. தெரிவுறு துன்பம்வந் தூன்றச் சிந்தையை
[1]எரிவுசெய் [2]தொழியும திழுதை நீரதால்
பிரிவுசெய் துலகெலாம் பெறுவிப் பான்றலை
அரிவுசெய் விதியினார்க் கரிதுண் டாகுமோ.

(இ - ள்.) தெரிவு உறு - (இங்ஙனம் விதிவசத்தால் வருவதென்று) தெளியப்பட்டதான, துன்பம்—,—வந்து ஊன்ற - (ஒருவனுக்கு) வந்துசேர, (அவன்), சிந்தையை எரிவு செய்து - மனத்தைத் தவிக்கவிட்டு, ஒழியுமது-அழிவது, இழுதை நீரது - பேதைமைக் குணமுடையது; உலகு எலாம் - உலகங்களையெல்லாம், பிரிவு செய்து - வகுத்து, பெறுவிப்பான் - படைப்பவனான பிரமனது,

*தலை - தலையை, அரிவு செய் - அறுத்தல்செய்த, விதியினார்க்கு - ஊழ்வினைக்கு, அரிது - முடித்தற்கரிய காரியம், உண்டாகும்ஓ - (ஒன்றேனும்) உள்ளதாமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)— ஆல் - ஈற்றசை.*

*மனம் துன்பத்தாற் கலங்கிநிற்கையில் அதனை மேலும் தாபத்துக்கு உள்ளாக்குதல் தவறு மென்பது, முன்னிரண்டடியின் கருத்து. விதித்தற்கடவுளென்று பேர்பெற்ற பிரமனையும் தலையரிந்துபோகுமாறுசெய்தது விதியென்றால் அந்த விதிக்குச் செய்தற்குஅரியது எதுவுமில்லையென்பது, பின்னிரண்டடியின்கருத்து. பிரமனது ஐந்துதலைகளுள் ஒன்றைச் சிவபிரான் கையாற் கிள்ளியெடுத்த சரித்திரம், பிரசித்தம். அங்ஙனம் கிள்ளியெடுத்தற்குக் காரணம் - காலவிசேடத்தில் ஐந்துதலைகளைக் கொண்டு விளங்குகிற தன்னைப்போலவே பிரமன் ஐந்துதலைகளையுடையா னென்று அவன்மீதுகொண்ட அழுக்காறு என்று புராணம் கூறும். 'விதியினார்' என்பதில் ஆர் என்ற பலர்பால்விகுதி - கொடுமைச்சிறப்பை விளக்க வந்தது. பி - ம்:—[1] இரிவு. [2] ஒழியுமீது.* (1005)

195. அலக்கணு மின்பமு மணுகு [1]நாளிவை
விலக்குவ மென்பது மெய்யிற் றாகுமோ
[2]விலக்கமுப் புரங்களை யெய்த வில்லியார்
தலைக்கலத் [3]திரந்தது தவத்தின் பாலதோ.

*(இ - ள்.) அலக்கண்உம் - துன்பமும், இன்பமும்—, அணுகும் நாள் - வரும்பொழுது, இவை-அவ்வின்பதுன்பங்களை, விலக்குவம் என்பது - (வரவொட்டாமல்) தடுத்துவிடுவோ மென்பது, மெய்யிற்று ஆகும்ஓ - உண்மையுடையதாமோ? [ஆகாது என்றபடி]; முப் புரங்களை - திரிபுரத்தை, விலக்க-ஒழித்தற்காக, எய்த - அம்பு தொடுத்த, வில்லியார் - வில்லையுடையவரான சிவபிரான், தலை கலத்து இரந்தது - மண்டையோட்டிற் பிச்சையெடுத்தது, தவத்தின்பாலதுஓ - தவத்திற்குஉரியதோ? [அன்று என்றபடி]; (எ-று.)*

*துன்பமேனும் இன்பமேனும் அணுகுங் காலத்து அவற்றை நம்மால் விலக்குதலாகாது; முப்புரங்களையெய்த வில்லியார் தலைக்கலத்திலிரந்தாரே, அது அவருடைய தவத்தின் பயனாகாது விதியின் விளைவேயன்றோ என்பதாம்; முன்னிரண்டடியிற் கூறிய பொருள்களைப் பின்னடிகள் சமர்த்தித்தது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்: பொதுப்பொருளும் சிறப்புப்பொருளும் ஆகா ஆதலால் வேற்றுப்பொருள்வைப்பணி யாகாது. சினங்கொண்டு பிரமனது தலையொன்றைக் கிள்ளியெடுத்த சிவபிரான் அதன்பயனாகப் பிரமகபாலத்தைக் கையிலேந்திக்கொண்டு பலகாலம் பலவிடத்தும் இரந்துதிரிந்தமை பிரசித்தம்: மூன்றாமடியில் இலக்கம் எனப்பிரித்து, முப்புரத்தை லட்சியமாகக்கொண்டு எய்தஎன்பாருமுளர்: இலக்கம் = லக்ஷயம்: குறி. பி - ம்:—[1] நாளவை. [2] இலக்கு, விலக்கு. [3] இரந்ததும். 'தலைக்கலந் துயல்வரு தலைவர்க் கன்றியே' என்று சில பிரதிகளில் நான்காமடி.* (1006)

196. பொங்குவெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்
அங்கண்மா ஞாலத்தை விளக்கு மாய்கதிர்த்
திங்களு மொருமுறை வளருந் தேயுமால்.

(இ - ள்.) பொங்கு - சீறுகிற, வெம் - கொடிய, கோள்-கொலைத் தொழிலையுடைய, அரா - (இராகுகேது வென்னும்) பாம்பு, விசும்பு பூத்தன வெம் கதிர் செல்வனை-வானத்தில் (பூப்பூத்தாற்போலப்) பரந்துவிளங்குவனவான உஷ்ணகிரணங்களாகிய செல்வத்தை யுடையவனை சூரியனை, விழுங்கி நீங்கும் - (ஒவ்வொருசமயத்தில்) முதலில் விழுங்கிப் பின்புவிட்டொழியும்: அம் கண் மா ஞாலத்தை விளக்கும் - அழகிய இடத்தையுடைய பெரிய பூமியை (இருளொழிந்து) விளங்கச்செய்கிற, ஆய் கதிர் - சிறந்த கிரணங்களையுடைய, திங்கள் உம் - சந்திரனும், ஒரு முறை வளரும் தேயும்-(மாதந்தோறும்) ஒரு முறை வளர்வதும் (மீண்டும்)தேய்வதுமாயிருக்கும்;(எ-று.)

சூரியனைக் கோளராத்தீண்டுவதும் சந்திரனுக்குத் தேய்வு வளர்வுநேர்வதும் விதியின்பயனே யென்றவாறு. கிரகணகாலங்களில் இராகுகேதுக்களாகிய கரும்பாம்புசெம்பாம்புகள் சூரியசந்திரரைப் பிடித்து விடுதற்குக் காரணம் - பாற்கடல்கடைந்தகாலத்தில் அசுரர் கூட்டத்தைவிட்டுத் தேவர்கோட்டியினிடையிலே புக்குக் கையேற்று அமிருதம்வாங்கியுண்ட இராகுகேதுவென்னும் அசுரர் மீது அருகிலிருந்த சூரியசந்திரர் திருமாலினிடத்திலே கோள் சொன்னமை; அக்கோட்சொல்லைக்கேட்டுத்திருமால் அவ்வசுரனை அமுதம்மொள்ளும் அகப்பையைக்கொண்டு அடிக்கவே, உடல் வேறு தலைவேறான அசுரன் அமுதமுண்டதனால் இறவாமல் அத்திருமாலைவேண்டி வரம்பெற்று அதனால் ஒவ்வொருசமயத்தில் சூரியசந்திரரைப் பிடித்து நலிகின்றன னென்க. சந்திரன்தேய்தற் குக்காரணம் - தன்மனைவியரான இருபத்தேழுநக்ஷத்திரங்களுள் உரோகிணியிடத்தில்மாத்திரம் சந்திரன் மிக்க அன்புவைத்தமை பற்றிச் சினந்த அவர்கள் தந்தையாரான தக்ஷமுனிவர் இட்ட சாபத்தால் நேர்ந்த க்ஷயரோகமும், வளர்தற்குக்காரணம் - அச்சந்திரனால் சரணமடையப்பட்ட சிவபிரான் அச்சாபத்திற்கு மாறாக அவனுக்கு அளித்த வரமுமாம். இங்ஙனம் இரண்டும் வினைப்பயனாதல் காண்க. பூத்தன என்ற பலவின்பாற்பெயர், 'கதிர்' என்ற பால்பகா அஃறிணைப்பெயர்க்கு அடைமொழி. பூத்து ஆன எனப்பிரித்து, வானம் பூத்தாற்போன்ற கிரணங்களின் செழுமையுடையானெனினும் அமையும். 'ஆல்' இரண்டும் - ஈற்றசை. (1007)

197. அந்தரம் வருதலு மனைய தீர்தலும்
சுந்தரத் தோளினிர் தொன்மை [1]நீரவால்
மந்திர விமையவர் குருவின் வாய்மொழி
இந்திர னுற்றன வெண்ண வொண்ணுமோ.

(இ - ள்.) சுந்தரம் தோளினிர் - அழகிய தோள்களையுடையவர்களே! அந்தரம் வருதல்உம் - (ஒருவர்க்குத்) தீங்குகள் வந்துநேர்தலும், அனைய தீர்தல்உம் - அத்தீங்குகள் நீங்குதலும்,தொன்மைநீர-

தொன்றுதொட்டுவருகிற ஊழ்வினையின் தன்மையனவாம்; மந்திரம் இமையவர் குருவின் வாய்மொழி - ஆலோசனையையுடைய [அல்லது வேதமந்திரங்களையுணர்ந்த] தேவகுருவான பிருகஸ்பதியின் வாயினின்று வந்த சாபவார்த்தையால், இந்திரன் உற்றன-தேவேந்திரன் அடைந்த துன்பங்கள், எண்ண ஒண்ணும்ஓ - கணக்கிடமுடியுமோ? [முடியா என்றபடி]; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

தீங்குகள் நேர்வதும் நீங்குவதும் தொல்வினைப்பயனே: குருவின் சாபத்தால் இந்திரன் பெரும்பாடுபட்டனனே: அப்பாடுகளை ஊழ் வினைப்பயனென்றுதானே சொல்ல வேண்டுமென்பதாம்: வேற்றுப் பொருள்வைப்பணி. இதிற் குறித்த வரலாறு:—மூவுலகத்துக்குந் தலைவனை தேவேந்திரன் ஒருநாள் சுவர்க்கலோகத்தில் தனது சபா மண்டபத்திலே வித்தியாதரர், யக்ஷர், கந்தர்வர், கின்னரர் முதலிய பதினெட்டுவகைத்தேவகணங்களும் தனது பாதங்களை வணங்கவும், முனிவர்கள் புடைசூழ்ந்து வாழ்த்துக்கூறவும், தேவமாதர்கள் ஆடல் பாடலாதி விநோதங்களைச் செய்யவும் மிக்க சிறப்போடு அரசுவீற்றிருக்கையில், தேவகுருவான பிருகஸ்பதி அருகில்வந்து சேர, அவரது வரவைச் செல்வச்செருக்கினால் அறியாதவனாய் இந்திரன எழுந்து உபசரியாமல் சிங்காசனத்தில் வீற்றிருந்தான். அதுகண்ட குரு மனவருத்தத்தோடு அவனையும் அவனது அரசாட்சியையும் வெறுத்துக்கொண்டே அச்சபையை விட்டுநீங்கி மீண்டுசென்றார். பின்பு அதனையறிந்த தேவராசன் அக்குருவை நாடிச் சென்றபொழுது, அவர் காணவொண்ணாதபடி மாயையால் மறைந்திட்டார். இச்செய்தியையறிந்த அசுரர்கள் 'குருவை இகழ்ந்ததனால் இந்திரன் இப்பொழுது வலியழிவானாதலின், இதுவே அவனையழித்தற்கு ஏற்ற சமயம்' என்று உட்கொண்டுவந்து எதிர்த்துப்போர் செய்ய, இந்திரன் தோற்று முன்நிற்கமாட்டாதவனாய் ஓடிச்சென்று பிரமனைச் சரணமடைந்தவளவிலே, அவன் 'துவஷ்டாவின்மகனான விசுவரூபனை உனக்குக் குருவாகக்கொண்டு நீ வெற்றிபெறுக' என்றான். அவ்வாறே இந்திரன் சென்று விசுவரூபனை வணங்கித் தேவகுருவாக வரித்து, அவன் உபதேசித்த நாராயணகவசமென்ற மந்திரவிசேஷத்தின் மகிமையால் அசுரர்களை அழித்து வெற்றியுற்றான். அந்த விசுவரூபன் அசுரமாதினிடம் பிறந்தவனாதலால் அசுரர்கள்பக்கல் அன்புகொண்டவனாய் யாகத்தில் வஞ்சனையாக அசுரர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுக்க, அதுகண்ட இந்திரன் கோபங்கொண்டு அவனைத் தலைதுணித்து அதனால் நேர்ந்த பிரமகத்தி தோஷத்தைத் திருமாலின் அருளாற் போக்கிக்கொண்டான். தன் மகனை இந்திரன் கொன்றதையுணர்ந்த துவஷ்டா 'இந்திரசத்துருஎழுக' என்று ஒருயாகத்தைச் செய்ய, அவ்வேள்வித்தீயினின்று மகாபல பராக்கிரமசாலியான விருத்திராசுரன் தோன்றித் தேவர்களைப் புடைக்க, இந்திரன் திருமாலைச் சரணமடைந்து அப்பரமன் அருளியபடி ததீசிமுனிவரது முதுகெலும்பை வச்சிராயுதமாகக்கொண்டு அதனால் அவனைக் கொன்றான். அவனைக் கொன்றதனாலான பிரமகத்திதோஷம் ஒரு சண்டாளஸ்திரீயின் வடிவங்கொண்டு இந்திரனைத் தொடரவே, அவன் அஞ்சியோடி மாநசசரசில் ஒரு தாமரைத்தண்டினுள்ளே வெகுகாலம்மறைந்துநின்றான். பூலோகத்தில் நூறு அசுவமேத

யாகங்களைச் செய்துமுடித்தவனான நகுஷனென்னும் அரசன் அதன் பயனால் அப்பொழுது இந்திரபதவியை அடைந்து அரசனில்லாத தேவலோகத்தை அரசாண்டு, இந்திராணியின்மீதுகொண்ட காமங் காரணமாக அகத்தியமுனிவனது சாபத்துக்கு இலக்காய் மலைப் பாம்புவடிவங்கொண்டு தரையில் விழுந்திட்டான். இந்திரன் தன்னை அலட்சியஞ்செய்ததனாற் பலவாறு துன்பமுற்று மானபங்கமடைந்த நிலைமையை உணர்ந்த பிருகஸ்பதி, பின்பு தேவர்கள் வேண்டுகோளாற் சினந்தணிந்து அவன்பக்கல் இரக்கத்தோடு சென்று அவனை அழைத்துவந்து திருமாலைக்குறித்து அசுவமேதயாகஞ்செய்விக்க, அதனால், இந்திரன் பிரமகத்திதோஷந் தீரப்பெற்று முன்போலவே சிறப்புற்று வாழ்வானாயினன் என்பதாம். பி-ம்:—[1] ஆதலால். (*1008*)

198. தடைக்கரும் பெருவலிச் சம்ப ரப்பெயர்க்
கடைத்தொழி லவுணனாற் குலிசக் கையினன்
படைத்தனன் பழியது பகழி [1]வில்வலாய்
துடைத்தன னுந்தைதன் குவவுத் தோளினால்.

(இ - ள்.) பகழி வில் வலாய்-அம்புகளைச்செலுத்துகிற வில்லின் தொழிலில் வல்லவனே! தடைக்கு அரு பெரு வலி-தடுத்தற்கு அரிய மிக்க வலிமையையுடைய, சம்பரன் பெயர்-சம்பரனென்னும் பெயரையுடைய, கடை தொழில் அவுணனால்-இழிவான தொழில்களையுடைய அசுரனால், குலிசம் கையினன் - வச்சிராயுதத்தையேந்திய கையையுடையவனான இந்திரன், பழி படைத்தனன் - (தோற்று அரசாட்சியை இழத்தலாகிய) பழிப்பை அடைந்தான்; அது - அப்பழியை, உந்தை - உங்கள் தந்தையான தசரதன், தன் குவவு தோளினால் - திரட்சியையுடைய தனது தோள்களின் வலிமையால், துடைத்தனன் - நீக்கினான்; (எ - று.)

இங்ஙனம் விதியின்வலியையுணர்ந்து மனந்தேறி, தேவர்க்கும் முனிவர்கட்கும் அபயமளித்திருப்பது நிறைவேறுமாறு கள்ளவரக்கரையொழிக்கவேணுமென்று கூறக் கருதிய சடாயு, இராமபிரானது தந்தையான தசரதசக்கரவர்த்தி அசுரனையொழித்துத் தேவர்க்கு உதவியதை யெடுத்துக்காட்டுகின்றான். மாயையில் வல்ல சம்பரனென்னும் அசுரத்தலைவன் இந்திராதிதேவர்களை எதிர்த்துப் பொருது வென்று இந்திரனது அரசாட்சியைக் கவர்ந்து கொள்ள, அரசிழந்தஇந்திரன் தசரதனிடம்வந்து குறைகூறலும், தசரதன் சென்று பொருது அழிக்கத்தொடங்குகையில், அவ்வசுரன் மாயையால் மறைந்துஓடத்தொடங்க, தசரதன் அவனோடிய இடமெங்கும் அவனை விடாமல் தொடர்ந்துபோய்ப் போர்செய்து அவனை அழித்து அவனது அரசாட்சியைத் தான் கைக்கொண்டு அதனை இந்திரனுக்கு அளித்தனன் என்பதுவரலாறு. சம்பரன் + பெயர் = சம்பரப்பெயர்: "சில விகாரமா முயர்திணை." பி-ம்:—[1] வில்லின்வாய்த். (*1009*)

வேறு.

199. பிள்ளைச்சொற் [1]கிளிய னாளைப் பிரிவுற [2]லுற்ற பெற்றி
தள்ளுற்ற வறமுந் தேவர் துயரமுந் தந்த தேயால்

கள்ளப்போ ரரக்க ரென்னுங் [3]களையினைக் களைந்து வாழ்தி •
[4]புள்ளிற்கும் [5]புலனில் பேய்க்குந் தாயன்ன புலவு வேலோய்.

(இ - ள்.) புள்ளிற்குஉம்-பறவைகளுக்கும், புலன் இல் பேய்க்கு உம்-அறிவில்லாத பேய்களுக்கும், தாய் அன்ன-(நல்ல உணவை மிகுதியாக உண்பித்தலில்) தாய்போன்ற, புலவு வேலோய்-புலால் நாற்றத்தையுடைய வேற்படையையுடையவனே! தள்ளுற்ற அறம் உம்-(அரக்கர்களால்) தள்ளப்பட்ட தருமமும், தேவர் துயரம்உம் - (அரக்கர்களால்) தேவர்கள்படுகிற துன்பமும், (ஆகிய இவ்விரண்டும்), பிள்ளை சொல் கிளி அனை - இனிய மழலைச்சொற்களைச் சொல்லுதலில் கிளிப்பிள்ளை போன்றவளான சீதையை, பிரிவுறல் உற்ற-பிரிதலாகிய, பெற்றி-தன்மையை, தந்தது-தந்தன; ஆல்-ஆதலால், கள்ளம் போர் அரக்கர் என்னும் களையினை களைந்து வாழ்தி-வஞ்சனையான போரையுடைய இராக்கதரென்கிற களைப் பூண்டுகளையொழித்து வாழ்வாயாக; (எ-று.)

'அரக்கர்களால் தள்ளப்பட்ட தருமம் தான் உய்யவேண்டியும் அவ்வரக்கரால் தேவர்கள்படுகிற துன்பம் தான் நீங்கவேண்டியும், சீதையை இராவணன் கவர்ந்துசெல்லுதலாகிய இந்நிகழ்ச்சியை விளைத்தன' என்றது-இந்நிகழ்ச்சி இனி நீ கொடிய அரக்கரைக் கொன்று அவர்களாலகற்றப்பட்ட தருமத்தை நிலைநிறுத்தற்கும், தேவர்களின் துன்பத்தைத்தீர்த்து அவர்களைப் பாதுகாத்தற்குங் காரணமாம் என்றபடி. பயிர்செழித்துவளர்தற்கு இடையூறுயுள்ள புல்பூண்டுகளாகிய களையைக் களைதல் இன்றியமையாதவாறுபோல, நல்லோர்கள்செழித்துவளர்தற்குப் பெருந்தடையாகவுள்ள தீயோர்களைத் தொலைத்தல் இன்றியமையாததாதலின், அதனைச்செய்து வாழ்வாயென்கிறான். புலவு-தசையுமாம். அடிக்கடி போர்செய்து பகைவர்களைக்கொன்று அவர்களுடலின்தசையைப் பருந்து கழுகு காக்கை முதலிய பறவைகளும் பேய்களும் தின்னவிடுதல்பற்றி, 'புள்ளிற்கும்புலனில் பேய்க்குந்தாயன்ன புலவுவேலோய்' என்று இராமனை விளித்தான். ஊனைத்தின்று ஊனைப்பெருக்குதல் பேதைமையென்பதுபட, 'புலனில் பேய்' எனப்பட்டது. அறமும்துயரமும் தந்தது - பன்மையொருமைமயக்கம்; தனித்தனி தந்ததென்க. தந்ததே, ஏ-அசை. பி - ம்:—[1]கிளியினாளை. [2]பெற்ற. [3]களைகளை. [4]புள்ளுக்கும். [5]புலம்பு.

இதுமுதல் முப்பத்தைந்துகவிகள் - கீழ்ப்படலத்தின் 14-ஆங் கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (1010)

200. வடுக்கண்வார் கூந்த லாளை யிராவணன் மண்ணி னோடும்
எடுத்தன னேகு வானை யெதிர்ந்தெனை தாற்றல் கொண்டு
தடுத்தனெ னுவ தெல்லாந் [1]தவத்தரன் [2]றந்த வாளால்
படுத்தன னிங்கு வீழ்ந்தே னிதுவின்று பட்ட தென்றான்.

(இ - ள்.) வடு கண் வார் கூந்தலாளை - மாவடுவின் உட்பிளவு போன்ற கண்களையும் நீண்டகூந்தலையுமுடையவளான சீதையை, மண்ணினோடுஉம் எடுத்தனன் ஏகுவான் - தரையோடு எடுத்துச்

செல்பவனை, இராவணனை —, எதிர்ந்து-(நான்) எதிர்த்து, எனது ஆற்றல்கொண்டு - எனது வல்லமையால், ஆவது எல்லாம்-இயன்ற வரையிலும், தடுத்தனென்-தடுத்தேன்; (முடிவில் அவன்), தவத்து அரன் தந்த வாளால் படுத்தனன் - தவத்தின்பயனாகச் சிவபிரானால் அளிக்கப்பெற்ற வாட்படையால் (என்னை) அழித்தான்; இங்கு வீழ்ந்தேன்-இவ்விடத்தில் (இவ்வாறு) விழுந்தேன்; இது இன்று பட்டது - இச்செய்தி இன்றுநிகழ்ந்தது, என்றான் - என்று (சடாயு) கூறினான்; (எ - று.)

சீதையை இராவணன் தரையோடு எடுத்துச்செல்லுகையில் எதிர்ந்து தடுத்து எனது ஆற்றல்கொண்டு இயன்றவரையிலும் போர்புரிந்தேன்: இறுதியாக அவன் சிவபிரான்கொடுத்த வாளைக் கொண்டு என்சிறகுகளை வெட்டினான்: அதனால் வீழ்ந்திட்டேன்: இது நிகழ்ந்தசெய்தி என்று தன்நிலைமையைக் காரணத்துடன் சடாயு தெரிவித்தனனென்பதாம். "வடுப்பிள வனைய கண்ணாள்" என்றார், சிந்தாமணியாரும். தவத்துத் தந்த என இயையும்; தவத்து அரன் எனஎடுத்து, தவத்தையுடைய சிவபிரானெனினு மாம். ஆவது எல்லாம்- ஒருமைப்பன்மைமயக்கம். எல்லா மென் பது, இங்கே, முழுது மென்னும் பொருளது. ஏகுவான் இராவ ணனை என்று உருபுபிரித்துக்கூட்டப்பட்டது. பி - ம்:—[1] தவத் தவன். [2] சமைத்த. (1011)

## 201.—அதுகேட்டவுடனே இராமன் கொண்ட கோபம்.

கூறின மாற்றஞ் சென்று செவி[1]த்துளை குறுகா முன்னம்
ஊறின வுதிரஞ் செங்க ணுயிர்த்தன வுயிர்ப்புச் செந்தீ
ஏறின புருவ மென்மே[2]லிரிந்தன சுடர்க ளெங்கும்
கீறின தண்ட கோளங் கிழிந்தன கிரிக ளெல்லாம்.

(இ - ள்.) கூறின மாற்றம் - (இங்ஙனம் சடாயு) சொன்ன வார்த்தை, சென்று—, செவி துளை குறுகா முன்னம்-(இராமனது) காதுகளின் துவாரத்திற் சேருமுன்னம் [செவிப்பட்டவுடனே யென்றபடி], செம் கண் உதிரம் ஊறின-(அப்பெருமானது) சிவந்த கண்கள் இரத்தஞ்சொரிந்தன; உயிர்ப்பு செம் தீ உயிர்த்தன - பெருமூச்சுக்கள் சிவந்தநெருப்பை எறிந்தன; புருவம் மெல்மேல் ஏறின-புருவங்கள் மிகுதியாக நெறிப்புற்றன; சுடர்கள் இரிந்தன - (அக்கோபாவேசத்தாற் சூரியன்முதலிய) ஒளிகள் அஞ்சியோடின; அண்டகோளம் எங்கும் கீறினது - உலகவுருண்டைபலவிடங்களிற் பிளப்புற்றது; கிரிகள் எல்லாம் கிழிந்தன - மலைகள்யாவும் உடை பட்டன; (எ - று.)

அந்தச்சடாயுவின் சொல் செவியிற்பட்டதோ இல்லையோ இராமபிரானது புருவங்கள் நெற்றிமேலேற, கண்கள் சினத்தால் குருதியைக் கக்க, வெய்துயிர்ப்புத் தீயை வெளிப்படுத்தின: அந் தக்கோபாவேசத்தைக்கண்டு சுடர்கள் இரிய, அண்டகோளங்கள் கீறக் கிரிகள்கிழிந்தன என்பதாம். பி - ம்:—[1] தலம். [2] இழுந்தன.

## 202.—அப்பொழுது பிரபஞ்சத்திலுண்டான தடுமாற்றம்.

மண்ணகந் திரிய நின்ற மால்வரை திரிய மற்றைக்
கண்ணகன் புனலுங் காலுங் கதிரொடுந் திரியக் காவல்
விண்ணகந் திரிய மேலை விரிஞ்சனுந் திரிய வீரன்
எண்ணரும் பொருள்க ளெல்லா மென்பது தெரிந்த தன்றே.

(இ - ள்.) மண் அகம் திரிய - பூமி (தனதுநிலையொழிந்து) சுழல, நின்ற மால் வரை திரிய - அசலமாகியபெரியமலைகள் (தமதுநிலையொழிந்து)சுழல, மற்றை-மற்றும், கண் அகல் புனல்உம்-இடமகன்ற நீரும் [கடலும்], கால்உம்-காற்றும், கதிரொடுஉம்-சூரியசந்திரர்களுடனே, திரிய-(தமதுநிலையொழிந்து) சுழல, காவல் விண் அகம் திரிய - (தேவர்களாற்) காக்கப்படுவதான மேலுலகம் (தனதுநிலையொழிந்து) சுழல, மேலை விரிஞ்சன்உம் திரிய-(எல்லாவுலகங்களுக்கும்) மேலிடத்துள்ள பிரமனும் சுழல, (இங்ஙனம் இராமன் நிலைதிரிந்தவளவிலே யாவும்நிலைதிரிதலால்), வீரன் எண் அரு பொருள்கள் எல்லாம் என்பதுதெரிந்தது அன்றே - வீரனை அவ்விராமன் (தானே) அளவிறந்த பிரபஞ்சப்பொருள்களெல்லாவற்றின் வடிவமாயுமுள்ளான் என்கிற உண்மை நன்கு புலப்பட்டது; (எ-று.)

இராமபிரான் மனநிலை திரிந்த அப்பொழுது மண்ணகந்திரிதல் முதலியவற்றின் அநுமானத்தால், "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி உலகமுழுவதும் எம்பெருமானது சொரூபமாகவேயிருக்கு மியல்பு அறியப்பட்ட தென்க. மேலை-மேன்மைக் குணமுமாம்: இதில் 'ஐ' - சாரியை. அன்றே - தேற்றம். அன்று - அப்பொழுதுமாம். (1013)

## 203.—இராமன் கோபாவேசத்தோடு சிலகூறத் தொடங்கல்.

குறித்தவெங் கோபம் யார்மேற் [1]கொள்ளுறுங் கொல்லென் றஞ்சி
வெறித்துநின் றுலக மெல்லாம் விம்முறு கின்ற வேலைப்
பொறிப்பிதிர் படலைச் செந்தீப்[2]புகையொடு பொடிப்பப் பொம்மென்று
[3]எறிப்பதோர் முறுவ லேன்ற விராமனு மியம்ப லுற்றான்.

(இ - ள்.) 'குறித்த வெம் கோபம் - (இவ்வாறு) மனத்திற்கொண்ட கொடியகோபத்தை, யார்மேல் கொள்ளுறும்கொல் - யார்மேற்செலுத்துவானோ?' என்று—, அஞ்சி - அச்சங்கொண்டு, உலகம் எல்லாம் - சகலலோகங்களும், வெறித்து நின்று - திகைத்து நின்று, விம்முறுகின்ற வேலை-கலங்குகிற அச்சமயத்தில்,—பொறி பிதிர் படலை செம் தீ - பொறிக்கணங்களின் தொகுதியையுடைய சிவந்தநெருப்பு, புகையொடு - புகையுடனே, பொடிப்ப - தோன்றியெழவும், எறிப்பது ஓர் முறுவல் பொம்மென்று தோன்ற - ஒளிவீசுவதாகிய ஒருசிரிப்புப் பொம்மென்னும் ஒலிபட உண்டாகவும், இராமனும்—, இயம்பல் உற்றான்-(சில) சொல்லத் தொடங்கினான்; (எ-று.)—அவற்றை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

இராமபிரானது சினநிலையைக் கண்டு உலகமெல்லாம் 'இது யார்மீதுசெல்லுமோ? என்று திகையாநிற்க, புகைப்படலத்தோடு

செந்தீயெழ, அப்பிரான் வெகுளிமுறுவல்புரிந்து பின்வருமாறு கூறலானானென்பதாம். இங்குக்கூறிய நகை, வீரத்து எழுந்த வெகுளிநகை. படலை = படலம். பொடிப்ப என்பதற்கு - எதிர்ப்பட்ட பொருள்களை நீறுக்க வென்றுமாம். பிதிர் - பிதிருந்தன்மையது; பிதிர்தல் - சிதறல். புகுவது புகையெனக் காரணக்குறி. பி - ம்:— [1]கோளுறுங். [2]புகையொடும். [3]இரைப்பதோர். (1014)

## 204.—இதுமுதல் மூன்று கவிகள்-இராமன் கூறும் கோபவார்த்தை.

பெண்டனி யொருத்தி தன்னைப் பேதைவா ளரக்கன் பற்றிக்
கொண்டன னேக [1]நீயிக் கோளுறக் குலுங்கல் செல்லா
எண்டிசை [2]யிறுதி யான வுலகங்க ளிவற்றை யின்னே
கண்டவா னவர்க ளோடுங் களையுமா றின்று காண்டி.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பெண் தனி ஒருத்திதன்னை - துணையற்றவளாய்த் தனியே நின்ற ஒருபெண்ணை [சீதையை], பேதை வாள் அரக்கன் - அறிவற்றவனான கொடிய இராக்கதன்[இராவணன்], பற்றி கொண்டனன் ஏக-கவர்ந்துகொண்டு செல்லுதலாலும், நீ இ கோள் உற - நீ இப்படிப்பட்ட வேதனையை அடைதலாலும், குலுங்கல் செல்லா - (நடுநடுங்கவேண்டியிருக்க அங்ஙனம்) நடுங்காது நின்ற, எண் திசை இறுதி ஆன உலகங்கள் இவற்றை - எட்டுத்திக்குக்கள்வரையிலுமுள்ள இவ்வுலகங்களையெல்லாம், கண்ட வானவர்களோடுஉம் - (இச்செயல்களைக்) கண்டு எதிர்செய்யாது நின்ற தேவர்களுடனே, இன்று-இன்றைக்கு, இன்னே-இப்பொழுதே, களையும் ஆறு- (நான்) முற்றும் அழித்தொழிக்கும் வகையை, காண்டி-(நீ)பார்ப்பாய்; (எ-று.)

தனிப்பட்டிருந்த சீதையை அறிவிலியான அரக்கன் கவர்ந்து செல்லவும் நீ இந்நிலையுறவும் ஒன்றும் மாறுசெய்யாது பார்த்துக் கொண்டிருந்து நடுங்குதலும் கொள்ளாத தேவர்களோடும் உலகங்களையெல்லாம் அழிப்பேன்: பார்ப்பாயாக என்றான் இராமபிரானென்பதாம். 'நீ காண்டி' என்றது, சடாயுவைநோக்கி. வாள் அரக்கன் - வாட்படையையுடைய அரக்கனுமாம். பி - ம்:—[1]நீதிக். [2]உறுதி. (1015)

205. தாரகை யுதிரு மாறுந் தனிக்கதிர் பிதிரு மாறும்
பேரகல் வான [1]மெங்கும் பிறங்கெரி பிறக்கு மாறும்
நீரொடு நிலனுங் [2]காலு நின்றவுங் கிடந்த யாவும்
[3]வேரொடு மழியு மாறும் விண்ணவர் விளியு மாறும்.

(இ - ள்.) (என்னால்), தாரகை உதிரும் ஆறுஉம் - நக்ஷத்திரங்கள் உதிரும் வகையையும், தனி கதிர் பிதிரும் ஆறுஉம் - ஒப்பற்ற கிரணங்களையுடைய சூரியன் பொடிப்பொடியாய்ச் சிதறும்வகையையும், பேர் அகல்வானம் எங்குஉம் - பெரிய அகன்றவானம்முழுவதிலும், பிறங்கு எரி பிறக்கும் ஆறுஉம் - விளங்குகிற தீப்பற்றி

யெழும்வகையையும், நீரொடு நிலன்உம் கால்உம் - நீரும் நிலமும் காற்றும், நின்றவும் - ஒழிந்த நெருப்பும் வானமும், (ஆகிய பஞ்ச பூதங்களும்), கிடந்த யாஉம் - (உலகத்திற்) பொருந்திய சராசர வர்க்கமனைத்தும், வேரொடுஉம் அழியும் ஆறுஉம் - அடியோடு அழியும்வகையையும், விண்ணவர் விளியும் ஆறுஉம் - தேவர்கள் அழியும்வகையையும்,—(எ - று.)

கீழ்ச்செய்யுளிற் கூறிய பொருளையே இதனாலும் அடுத்தசெய் யுளாலும் விவரித்துக் கூறுகின்றான். பேர்அகல் - ஒருபொருட் பன்மொழி. நின்ற, கிடந்த-பெயர்கள். பி - ம்:—[1]எல்லாம். [2]மற்று. [3]வேரொடுமடியுமாறும். (1016)

206. இக்கண மொன்றி னின்ற வேழினோ டேழு [1]சான்ற
மிக்கன போன்று தோன்று முலகங்கள் [2]விளியு மாறும்
திக்குடை யண்ட [3]கோளப் புறத்தவுந் தீந்து நீரின்
மொக்குளி னுடையு மாறுங் காணென [4]முனியும் வேலை.

(இ - ள்.) நின்ற-நிலைபெற்று நின்றனவான, மிக்கனபோன்று தோன்றும்-மிகவும் பெரியவைபோலக் காணப்படுகிற, ஏழினோடு ஏழு சான்ற - ஏழோடுகூடிய ஏழு [பதினான்கு] என்னும் தொகை யமைந்த, உலகங்கள் - உலகங்களெல்லாம், இ கணம் ஒன்றில் - இந்தஒருகணத்திலே, விளியும் ஆறுஉம்-(என்றால்) அழியும்வகை யையும், திக்கு உடை - எட்டுத்திக்குக்களை யெல்லையாகவுடைய, அண்ட கோளம்-இந்த அண்டகோளத்தின், புறத்தஉம் - வெளியி லுள்ளவையும் [பகிரண்டங்களிலுள்ள பொருள்களும் என்றபடி.], (இ கணம் ஒன்றில்)-இந்த ஒருகணத்திலே, தீந்து - (எனதுகோபத் தாற்) கரிந்து, நீரின் மொக்குளின் - நீரிலெழுகிற குமிழிபோல, உடையும் ஆறுஉம்-எளிதில் அழியும்வகையையும், காண்-(நீ) பார்த் திடுவாய், என-என்று (சடாயுவை நோக்கிச்) சொல்லி, (இராமன்), முனியும் வேலை-கோபங்கொண்ட சமயத்திலே,—(எ-று.)—"சுடர்க் கடவுள்மறையலுற்றான்" எனவருங்கவியோடுதொடர்ந்துமுடியும்.

என்றால் இக்கணத்தில்தானே பதினான்குலோகங்களும் அழியு மாறும், புறவண்டத்திலுள்ள பொருள்களும் தீந்து நீர்மொக்குள் போல உடையுமாறும் காண்பாயென்று இராமபிரான் பெருஞ்சினங் கொண்டா னென்பதாம். 'இக்கணமொன்றில்' என்பது, 'விளியும்' என்பதனோடன்றி 'உடையும்' என்பதனோடும் எடுத்துக் கூட்டப் பட்டது. இக்கணமொன்றிற் காண் என இயைப்பினும் அமையும். நின்ற, சான்ற, தோன்றும் என்றமூன்றும் - உலகங்களுக்கு அடை மொழியாம். 'மிக்கன போன்றுதோன்று முலகங்கள்' என்றது, அவை எனது ஆற்றலுக்குமுன் ஒருபொருளல்ல என்ற கருத்தைத் தொனிப்பிக்கும். பி-ம்:—[1]மேல்கீழ். [2]வீயும். [3]கோளத்திறக்கவுந் தெரிந்தது. [4]முனிதலோடும். (1017)

207.—அப்பொழுது சூரியன் மறைய யாவும் அஞ்சுதல்.

வெஞ்சுடர்க் கடவுள் மீண்டு மேருவின் மறைய லுற்றான்
எஞ்சலி றிசையி னின்ற யானையு மிரியல் போய

[1] துஞ்சின வுலக மெல்லா [2] மென்பதென் றுணிந்த [3] நெஞ்சின்
அஞ்சின னிளைய கோவு மயலுளோர்க் கவதி யுண்டோ.

(இ - ள்.) வெம் சுடர் கடவுள் - வெவ்வியகிரணங்களையுடைய சூரியன், மீண்டு-(அக்கோபத்திற்கு இலக்காகாது) தப்பி உய்பவனுகி, மேருவில் மறையல் உற்ருன்-மகாமேருமலையிலே மறையத் தொடங்குபவனுனன்; எஞ்சல் இல்-குறைவற்ற, திசையில் - (எட்டுத்) திக்குகளிலும், நின்ற—, யானைஉம்-(அஷ்டதிக்) கஜங்களும், இரியல் போய-அஞ்சியோடின; உலகம் எல்லாம் துஞ்சின என்பது என்-உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளும் மிக்கவருத்தமுற்றன என்பதைப்பற்றிச் சொல்லவேண்டுவ தென்ன! துணிந்த நெஞ்சின்-மிகவுந்தைரியங்கொண்ட மனத்தையுடைய, இளைய கோஉம்-இலக்குமணனும், அஞ்சினன் - அஞ்சிநின்ருன்: (என்ருல்), அயல் உளோர்க்கு அவதி உண்டுஓ-மற்றுமுள்ளோர் கொண்ட அச்சத்திற்கு ஓரெல்லையுண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

சூரியன் அத்தமித்த அப்பொழுது இராமன்கொண்ட கோபாவேசத்தைக் கண்டு, திசையானைகளும் இரியலுற உடன்பிறியாதுறைபவனுய் மகாதைரியசாலியான இலக்குமணனும் அஞ்சினனே, உலகத்து எல்லாப்பிராணிகளும் மிகஅஞ்சி நிலைகுலைந்தனவென்று சொல்லவும்வேண்டுமோ? மற்றுள்ளோரின் அச்சத்திற்கு எல்லையுண்டோ! என்பதாம். தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி.
பி-ம்:—[1] துஞ்சினது. [2] என்பது. [3] நெஞ்சன். (1018)

208.—இதுமுதல் ஐந்துகவிகள் - சடாயு இராமனுக்குக் கூறும் தணிவுரை.

இவ்வழி நிகழும் வேலை [1] யெருவைகட் கிறைவன் யாதுஞ்
செவ்வியோய் முனியல் வாழி தேவரு முனிவர் தாமும்
வெவ்வலி வீர நின்னல் வேறுமென் றேமுற் றுய்வார்
எவ்வலி கொண்டு வெல்வா ரிராவணன் செயலை [2] யென்ருன்.

(இ - ள்.) இ வழி நிகழும்வேலை - இவ்வாறுநடக்கும்பொழுது, எருவைகட்கு இறைவன் - கழுகுகளுக்கு அரசனுன சடாயு, (இராமனை நோக்கி), 'செவ்வியோய் - நன்மைக்குணமுடையவனே! வாழி - வாழ்வாயாக; யாதுஉம் முனியல் - சிறிதும் கோபங்கொள்ளாதே; வெம் வலி வீர - (பகைவர்க்குக்) கொடிய வலிமையையுடைய வீரனே! தேவர்உம் முனிவர்தாம்உம்-தேவர்களும் முனிவர்களும், நின்னல் வேறும் என்று ஏமுற்று உய்வார் - உன்னைக்கொண்டு (தம்பகையாகிய அரக்கர்களை) வெல்வோ மென்று கருதி மகிழ்வுற்றுஉயிர் வாழ்கின்ருர்;(அப்படிப்பட்டவர்கள்), எ வலிகொண்டு இராவணன் செயலை வெல்வார் - வேறு எவ்வகை வலிமையைக் கொண்டு இராவணனது கொடுஞ்செயலை வென்றிடுவார்?' என்ருன் - என்று கூறினுன்; (எ - று.)

தேவர்கள் முதலியோர் இராவணன்முதலிய இராக்கதர்களை வெல்லும் வல்லமை யில்லாராய் மகாவீரனுன உன்னைக்கொண்டு

வெல்லலாமென்றுகருதி அதனை எதிர்பார்த்து மகிழ்வுகொண்டு உயிர்வாழ்ந்திருக்கின்றனர். அப்படியுள்ள அவர்கள் இராவண னுக்கு எதிர்செய்யவில்லையென்று நீ கோபித்தால் அன்னவர் செய்யுமாறு என்னே! என்றுகூறி இராமன்கோபத்தைச் சடாயு ஆற்றுபவனானான். 'செவ்வியோய்' எனறது, இராம என்ற திருநா மத்தின் பொருளைக்கொண்ட விளியாம். ஏமுற்று - ஏமமுற்று; விகாரம். பி-ம்:—[1] எருவையர்க்கரசன். [2] என்னு. (1019)

209. நாட்செய்த கமலத் தண்ண [1]னல்கிய நவையி லாற்றல்
தோட்செய்த வீர மென்னிற் கண்டனை சொல்லு முண்டோ
தாட்செய்த [2]கமலத் தானே முதலினர் தலைபத் துள்ளாற்கு
ஆட்செய்கின் றார்க ளன்றி யறஞ்செய்கின் றார்கள் யாரே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நாள் செய்த கமலத்து - அன்றுமலர்ந்த செந்தா மரைமலரில் தோன்றிய, அண்ணல்-தலைவனானபிரமதேவன், நல்கிய - (வரமாகக்) கொடுத்த, நவை இல் ஆற்றல் - அழிவில்லாதவலிமையை யுடைய, தோள் - புயங்களினால், செய்த - (இராவணன்) செய்த, வீரம் - வீரச்செயலை, என்னில் கண்டனை - (சிறகு அறுபட்டுக்கிடக் கிற) என்னிடத்திலே பிரதியட்சமாகப் பார்த்தாய்; சொல்உம் உண்டுஓ - (அதைப்பற்றி) வேறுசொல்லவேண்டுவதும் உளதோ? [இல்லையென்றபடி]: தாள்செய்த கமலத்தானே முதலினர் - நாளத் தோடு கூடிய தாமரைமலரில் தோன்றிய பிரமன் முதலிய தேவர்கள் எல்லோரும், தலை பத்து உள்ளாற்கு ஆள் செய்கின்றார்கள் அன்றி - பத்துத் தலைகளையுடைய இராவணனுக்கு அடிமைத் தொழில் செய் கின்றனரே யல்லாமல், அறம் செய்கின்றார்கள் யாரே - (அவர்களில் தத்தமக்குஉரிய) தருமங்களை விடாது செய்பவர் எவர்தாம்? [எவரு மில்லை யென்றபடி]; (எ - று.)

ஆதலின், அவர்கள்மீது நீ சினங்கொள்ளக் காரணமில்லை யென் பதாம். முதலடியை 'என்னில்' என்பதற்கு அடைமொழி யாக்கி, பிரமன் தந்தருளிய அழிவற்ற வலிமையையுடைய என்னிடத்தில் (அவ்விராவணன்) தோள்வலிமையாற்செய்த வீரச்செயலைக் கட்புல னாகக் கண்டா யென்று உரைப்பாரும் உளர். பி - ம்:—[1] நல்கினன் நவையின். [2] நளினத்தோனே முதலினர் தலைபத்தோனுக்கு. (1020)

210. தெண்டிரை யுலகந் [1]தன்னிற் செறுநர்மாட் டேவல்செய்து
பெண்டிரின் வாழ்வ ரன்றே யிதுவன்றோ தேவர் பெற்றி
பண்டுல களந்தோ [2]னல்கப் பாற்கட லமுத [3]மந்நாள்
உண்டில [4]ராயி னிந்நா ளன்னவர்க் குய்த லுண்டோ.

(இ - ள்.) தெள் திரை உலகந்தன்னில் - தெளிவான அலைகளை யுடைய (கடல்சூழ்ந்த) உலகத்திலே, பெண்டிரின் - மகளிர்போல [மகளிர் ஆடவர்க்கு அடிமைபூண்டுவாழ்தல்போல], செறுநர் மாட்டு ஏவல்செய்து வாழ்வர் அன்றே - (இந்திரன் முதலியோர் அனைவரும் தம்) பகைவர்களான இராவணன் முதலிய அரக்கர்களிடத்திலே

பணிவிடைசெய்து வாழ்கின்றார்களல்லவர்; தேவர் பெற்றி இது அன்றோ - தேவர்களின் தன்மை இதுவன்றோ? (அத்தேவர்கள்), பண்டு உலகு அளந்தோன் - முன்பு உலகங்களை அளந்துகொண்டவனை திருமால், பால் கடல் அமுதம் நல்க - திருப்பாற்கடலினின்று தோன்றிய அமுதத்தைக் கொடுத்தருள, அ நாள் உண்டிலர் ஆயின் - அந்நாளில் உண்ணாதிருந்தனராயின், இ நாள் - இக்காலத்தில், அன்னவர்க்கு - அவர்கட்கு, உய்தல் உண்டோ - உயிர் பிழைத்தலும் உளதாமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

முன்பு அமிருதமுண்டதுபற்றித் தேவர்கள் அரக்கரால் இறவாது உயிர்கொண்டுவாழ்கின்றனரே யன்றி வேறில்லை யாதலின், அவர்கள் அரக்கனுக்கு மாறுசெய்யவில்லை யென்று நீ கோபித்தற்கு உரியரல்ல ரென்றபடி. 'இதுவன்றோ தேவர்பெற்றி' என்றது, இரங்கிக்கூறியவாறு. 'அன்றே', 'அன்றோ' இரண்டும்-தேற்றம். பி - ம்:— [1] தன்னுள். [2] தந்த. [3] வாய்கொண்டு. [4] ஆகில். (1021)

211. வம்பிழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின்போய்க் குலப்பழி[1] கூட்டிக் கொண்டீர்
அம்பிழை வரிவிற் செங்கை யையன்மீ ராயுங் காலை
உம்பிழை யென்ப தல்லா லுல்கஞ்செய் பிழையு முண்டோ.

(இ - ள்.) அம்பு இழை - அம்புதொடுக்கிற, வரி வில் - கட்டமைந்த வில்லையேந்திய, செம் கை - சிவந்த கையையுடைய, ஐயன்மீர் - அருமைமக்களே! வம்பு இழை - கச்சையணிந்த, கொங்கை - தனங்களையுடைய, வஞ்சி - வஞ்சிக்கொடிபோல் மெல்லியளான சீதை, வனத்திடை - காட்டிலே, தமியள் வைக - தனித்தவளாய்நிற்க, கொம்பு இழை மானின் பின்போய் - கொம்புகள் பொருந்தியமானின் பின்னே சென்று, குலம் பழி கூட்டிக்கொண்டீர் - (சீதையையிழந்து உங்கள்) குலத்துக்குப் பழியைஉண்டாக்கிக்கொண்டீர்கள்; ஆயும் காலை - ஆராய்ந்துபார்க்குமிடத்து, உம் பிழை என்பது அல்லால் - (இது) உங்கள் குற்றமாகுமே யல்லாமல், உலகம் செய் பிழைஉம் உண்டோ - உலகத்தார் செய்த குற்றமும் உள்ளதோ? (எ-று.)

தேவர்மீது பிழையில்லாமையை நிரூபித்துக்காட்டிய சடாயு, இதனால்சீதையின் சொல்லைக்கேட்டதும் அவளைத்தனியேவிட்டுச் சென்றதும் பிழையாயிருக்க உலகத்துமீது பிழை கூறுவது தகுதியன்றென்று காட்டுகின்றான். வஞ்சி - ஆகுபெயர். 'கொம்பிழை மான்' என்பதற்கு - கொம்புகள் இரத்தினம்பதிக்கப்பெற்ற மானென்று உரைப்பாரும் உளர். மக்களை 'ஐயன்மீர்' என்று விளித்தது, அன்புபற்றி. பி - ம்:—[1] பூட்டிக்கொண்டீர். (1022)

212. ஆதலான் முனிவா யல்லை யருந்ததி யனைய கற்பின்
காதலா டுயர நீக்கித் தேவர்தங் கருத்து முற்றி
வேதநூன் முறையின் யாவும் [1] விதியுளி நிறுவி வேறும்
தீதுள துடைத்தி யென்றான் [2] சேவடிக் கமலஞ் சேர்வான்.

(இ - ள்.) ஆதலால்—, முனிவாய் அல்லை - (நீ) கோபங்கொள்ளாதொழி; அருந்ததி அனைய கற்பின் காதலாள் துயரம் நீக்கி-வசிஷ்டர்

பத்தினியான அருந்ததிதேவியை யொத்த தவருக்கற்பு நிலைமை யையுடைய உன்மனையாளது துன்பத்தைநீக்கி, தேவர் தம் கருத்து முற்றி - (அரக்கர்களை வேரோடு தொலைத்தலாகிய) தேவர்களுடைய எண்ணத்தைநிறைவேற்றி, யாஉம் - செய்யவேண் டுஞ் செயல்களை யெல்லாம், வேதம் நூல் முறையின் விதியுளி நிறுவி - வேதசாஸ்திரங்களில் ஒழுங்காகக்கூறப்பட்ட விதிப்படி செய்துநிறுத்தி, வேறுஉம் தீதுஉள துடைத்தி-மற்றுமுள்ள தீமை களையும் தீர்த்தருள்வாய், என்றான்-என்றுகூறினான், சே அடி கமலம் சேர்வான் - (அவ்வெம்பெருமானது) சிவந்த திருவடித்தாமரைமலர் களைச் சேர்பவனான சடாயு; (எ - று.)

இங்ஙன்கருதிப்பார்த்து உலகோர்மீதும் தேவர்மீதும் முனியா தொழிக; நீ செய்யவேண்டுவது, சீதையைத் துன்பம்நீக்கித் தேவர் கருத்தை நிறைவேற்றி வேதநூன்முறைப்படி யாவற்றையும் நிலை நாட்டித் தீமைநிகழாது ஒழிப்பது என்றனன் சடாயு என்க. 'யாவும்' என்றது உலகாளுதல் வேள்விசெய்தல் முதலியவற்றைக் குறிக்கும். வேறுந்தீதுள துடைத்தல்-மற்றும் உலகத்தில் நிகழும் அக்கிரமச் செயல்களைக் கண்டித்தல். சேவடிக்கமலம் சேர்வான் - பரமபதமடைய விருப்பவனென்றபடி. பகைவென்றபின் பிராட்டியை அங்கீகரிக்கத் தடையாதுமில்லை யென்பது விளங்க, 'அருந்ததியனைய கற்பிற் காத லாள்' என்றார். பி - ம்:—[1]விதியுள. [2]தேவர்தமுலகம். (1023)

## 213.—இராமன் உலகத்தார்மேற் கொண்ட கோபந் தணிதல்.

புயனிற வண்ண னுண்டப் புண்ணியன் புகன்ற சொல்லைத்
தயரதன் பணியீ தென்னச் சிந்தையிற் [1]றழுவி நின்றான்
அயலினி முனிவ தென்னை [2]யரக்கர்தம் வருக்கத் தீர்க்குஞ்
செயலினிச் செயலென் றெண்ணிக் கண்ணிய சீற்றந் தீர்ந்தான்.

(இ - ள்.) புயல் நிறம்வண்ணன் - மேகத்தினதுநிறம்போன்ற நிறத்தையும் குணம்போன்றகுணத்தையுமுடையவனான ஸ்ரீராமன், அ புண்ணியன் ஆண்டு புகன்ற சொல்லை - நல்வினையுடையவனான அச்சடாயு அப்பொழுது சொன்ன வார்த்தையை, ஈது தயரதன் பணி என்ன சிந்தையில் தழுவிநின்றான் - 'இதுதசரதசக்கரவர்த்தி யினது கட்டளையே' என்று (அதனைத்தவறாது ஏற்றுக்கொள்ளு தல்போலத்) தன்மனத்தில் ஏற்றுக்கொண்டு நின்றவனாய்,—'இனி-, அயல் முனிவது என்னை - பிறரைக் கோபித்தலில் யாது பயன்? அரக்கர்தம் வருக்கம் தீர்க்கும் செயல் இனி செயல் - இராக்கதர்களை இனத்தோடு அழிக்குந்தொழிலே இனிச்செய்யத்தக்க செயலாகும்,' என்று எண்ணி - என்று நினைத்து, கண்ணிய சீற்றம் தீர்ந்தான் - (உலகத்தார்மேல்) மனத்திற்கருதிய கோபந்தணிந்தான்; (எ-று.)

"தந்தைசொன்மிக்கமந்திரமில்லை" என்பதைக் கடைப்பிடித் தவனான இராமன் சடாயுவின்வார்த்தையைத் தந்தை வார்த்தை யாகவே பாவித்துத் தலைமேற்கொண்டு நன்கு மதித்தன னென்க. பி - ம்:—[1]தாங்கி. [2]அரக்கரை. (1024)

## 214.—பின்பு சடாயு உயிர்நீத்தல்.

ஆயபி னமலன் ருனு [1]மையநீ யமைதி யென்ன
வாயிடை மொழிந்த தன்றி மற்றொரு செயலு முண்டோ
போயதவ் வரக்க னெங்கே புகலெனப் புள்ளின் வேந்தன்
ஓய்வின [2]னுணர்வுந் தேய வுரைத்தில னுயிருந் தீர்ந்தான்.

(இ - ள்.) ஆயபின் - (இவ்வாறு) ஆனபின்பு [சினந்தணிந்த பின்பு], அமலன்தான்உம் - குற்றமற்றவனான இராமபிரானும், (சடாயுவைநோக்கி), 'ஐய-தந்தையே! நீ—, அமைதி என்ன வாயிடை மொழிந்தது அன்றி-(சினங்கொள்ளாது) பொறுமையோடிரு என்று (உனது) வாயினாற் சொல்லியபடியே (நான்) நடத்தலல்லாமல், மற்று ஒரு செயல்உம் உண்டோ-(அதற்கு) மாறானதொரு செயலும் (நான் செய்தற்கு உரியது) உண்டோ? (இது நிற்க), 'அ அரக்கன் போயது எங்கே புகல்-அந்த இராக்கதன் [இராவணன்] சென்றது எவ்விடத்தில்? (அதனைச்) சொல்வாய்,' என - என்றுவினவ, (அவ்வளவிலே), புள்ளின் வேந்தன்-பறவைகளுக்குத் தலைவனாகிய சடாயு, ஓய்வினன்-தளர்ச்சியையுடையவனாய், உணர்வுஉம்தேய - அறிவும்குறைபட, உரைத்திலன்-(அதற்கு மறுமொழியொன்றும்) கூறமாட்டாதவனாய், உயிர்உம் தீர்ந்தான்-உயிரும் நீங்கினான்; (எ-று.)

எனது தந்தையாகிய நீ என்னைநோக்கி 'முனிவாயல்லை' என்று கூறியருளிய கட்டளையின்படி நான் அமைதிகொண்டிருத்தலேயன்றி, அதற்குமாறான கோபச்செயல்ஒன்றையுஞ் செய்யமாட்டேனென்று தனது உடன்பாட்டை வெளியிட்டு, சீதையைக் கவர்ந்த அவ்வரக்கன் எங்குப்போனானெனவினவ, சடாயு தளர்ச்சிமிகுந்து மறுமாற்றம் கூறமுடியாமலே உயிரும் நீங்கினனென்பதாம். [1]ஐயனீ! என்ற பாடம்-தந்தையாகிய நீ யென்று பொருள்படும். இங்ஙனம் எம்பெருமானுக்குத் தன்வலியன்றவளவும் உதவிய சிறப்புநோக்கி, இப்படிப்பட்ட சிறப்புவாய்ந்த பறவை வேறொன்று இல்லையென்பதுபட, 'புள்ளின்வேந்தன்' என்றார். ஈற்றடியிலுள்ள உம்மைகள் எச்சப்பொருளன. பி-ம்:—[1]அரச. [2]உணர்வு. (1025)

## 215.—சடாயு பரமபதமடைதல்.

சீதங்கொண் மலரு ளோனுந் தேவரு மென்ப தென்னே
வேதங்கள் [1]காண்கி லாமை வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணிற் பார்த்தான் [2]படிவங்கொ ணெடிய பஞ்ச
பூதங்கள் விளியு நாளும் போக்கிலா வுலகம் புக்கான்.

(இ - ள்.) சீதம் கொள் மலர் உளோன்உம் - குளிர்ச்சியைக் கொண்ட தாமரைமலரில் தோன்றியவனான பிரமனும், தேவர்உம் - மற்றையதேவர்களும், (காணுதற்குஅரியவன்), என்பது என்னே - என்பதைப்பற்றிக் கூறவேண்டுவது என்ன? வேதங்கள் காண்கிலாமை - (பகவானுடையசொரூபத்தை உணர்ந்து வெளியிடுதற்கென்றேஅமைந்த) வேதங்களும்காணமுடியாமல், வெளிநின்றுஏ - (அவற்றிற்கும் எட்டாது) புறத்தேநின்று, மறையும் - மறைகின்ற

சொரூபத்தையுடைய, வீரன்-மகாவீரனுன திருமாலினுடைய [இராம பிரானது], பாதங்கள்-திருவடிகளை, கண்ணின்பார்த்தான் - (தனது) கண்களால் (அந்திமதசையிலே) தரிசிக்கப்பெற்றுஞதலின், (சடாயு), நெடிய படிவம் கொள் பஞ்ச பூதங்கள் விளியும் நாளும் போக்கு இலா உலகம் புக்கான்-பெரிய வடிவத்தைக் கொண்ட (நிலம் நீர் தீ காற்று வான மென்னும்) ஐம்பெரும்பூதங்களும் அழியுங் கற்பாந்தகாலத்தி லும் அழிதலில்லாத ஸ்ரீ வைகுண்டலோகத்தை அடைந்தான்;

வேதங்களும் காணமாட்டாத எம்பெருமானது திருவடிகளைத் தரிசிக்கப்பெற்றதனல், சடாயு மீளாவுலகமாகிய ஸ்ரீவைகுண்டத்தை யடைந்தா னென்க. ஸ்ரீராமன் பரமபதமடைவாயென்று சொல்லி ப்ரஹ்மமேதத்தால் ஸம்ஸ்காரஞ் செய்தானென்று ஸ்ரீ வான்மீகத் துப் பெறப்படும். பி - ம்:—[1]காண்கிலாதான். [2]படிவங்கள். (1026)

## 216.—அப்பொழுது அனைவரும் இரங்கலும், சடாயுவை நன்குமதித்தலும்.

வீடவ னெய்தும் வேலை விரிஞ்சனே முதல மேலோர்
ஆடவர்க் கரச னேடு [1]தம்பியு மழுது [2]சோரக்
காடமர் மரமு[3]மாவுங் கற்களுங் கரைந்து சாய்ந்த
சேடரும் [4]பாருளோருங் [5]கரஞ்சிரஞ் சேர்த்தா ரன்றே.

(இ - ள்.) அவன் வீடு எய்தும் வேலை - அந்தச்சடாயு (உயிர் நீத்து) முத்தியையடையுஞ் சமயத்தில், ஆடவர்க்கு அரசனேடு - புரு ஷோத்தமனுன இராமனும், தம்பிஉம் - இளையபெருமாளும், அழுது சோர-புலம்பிமெலிய,—காடு அமர் - காட்டிற் பொருந்திய, மரம்உம் - மரங்களும், மாஉம்-மிருகபட்சிகளும், கற்கள்உம்-மலைகளும், கரைந்து சாய்ந்த - (இரக்கத்தால்) கரைந்து தளர்ந்தன; விரிஞ்சன்ஏ முதல மேலோர் - பிரமன்முதலிய மேலுலகத்தார்களும், சேடர்உம் - (கீழுல கத்தவரான) நாகர்களும், பாருளோர்உம்-(இடையிலுள்ளதான) நில வுலகத்திலுள்ளாரும், (ஆகமூவுலகத்தோரும்), கரம் சிரம் சேர்த் தார் - (சடாயுவின்பக்கலுண்டான நன்குமதிப்பினல்) கைகளைத் தலை மேற்சேர்த்தார்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

சடாயு தம்மைவிட்டுப்பிரிந்ததற்கு இராமலட்சுமணர் அழுது சோர, ஓரறிவுயிர்களும் மனங்கரைந்துதளர மூவுலகத்தாரும் தலை மேற் கைவைத்துத் திரியங்கநமஸ்காரஞ்செய்தன ரென்பதாம். [5]கரஞ் சிரஞ்சேர்ந்தவன்றே என்ற பாடத்திற்கு - அவரவரின் உள்ளத்தின் முயற்சியின்றியே ஆநந்தபரவசத்தால் கைகள் தாமே தலைமேற் குவிந்தன என்பது விளங்க, 'கரம்சிரஞ் சேர்ந்த' என்றுர். இனி, 'கரம் சிரம் சேர்ந்த' என்பதற்கு-சடாயுமரிக்கையில் மக்கள் தேவர் நாகர் அனைவரும் தலையிற்கைவைத்துச்சோகிப்பாராயினர் என்னுங் கருத்துப்பட உரைத்தலுமுண்டு. எல்லாப்பொருள்களும் எம்பெரு மானுடைய சொரூபமேயாதலால், அப்பெருமான் அழுதுசோர்கையில் மரம்முதலியவும் கரைந்து சாய்ந்தனவென்க. மா - விலங்கு. சேடர்= சேஷர். விரிஞ்சனே, ஏ-உயர்வுசிறப்பு. பி - ம்:—[1]நம்பியும். [2]சோர்ந் தார். [3]புள்ளும். [4]பாரினேர்க்கும். (1027)

## 217.—இராமன் தம்பியைநோக்கிக் கூறிய இரங்கன்மொழி.

அறந்தலை நின்றி லாத [1]வரக்கனி னாண்மை [2]தீர்ந்தேன்
துறந்தனென் றவஞ்செய் கேனோ துறப்பெனோ வுயிரைச் சொல்லாய்
பிறந்தனென் பெற்று நின்ற பெற்றியாற் பெற்ற தாதை
இறந்தன னிருந்து ளேன்யா னென்செய்கே னிளவ லென்றான்.

(இ - ள்.) 'இளவல் - தம்பி! அறம்தலை நின்றிலாத அரக்கனின் - தருமத்தில் நிலைநிற்றலில்லாத அரக்கனால், ஆண்மை தீர்ந்தேன் - ஆண்மையை இழந்தவனான நான், துறந்தனென் தவம் செய்கேனோ - முற்றத்துறந்து தவஞ்செய்வேனோ? உயிரை துறப்பெனோ-உயிரை விட்டுவிடுவேனோ? சொல்லாய் - (இவ்விரண்டில் எது தக்கது?) சொல்வாய்; பெற்று நின்ற பெற்றியால் - (என்னை மகனாகப்) பெற்றுநின்ற பேற்றினால், பெற்ற தாதை இறந்தனன் - பெற்றதந்தை இறந்துபோனான்; பிறந்தனென் யான் இருந்துளேன்-(மகனாகப்)பிறந்தவனான யான் இறவாமல் இருந்துள்ளேன்; என் செய்கேன் - யாது செய்யக்கடவேன்? என்றான் - என்று (இரக்கத்தால் இராமபிரான்) கூறினான்; (எ - று.)

கொடிய அரக்கனது வஞ்சனைக்கு உள்ளாகி மனைவியை யிழந்து மானங்கெட்டே னென்பான், 'அறந்தலைநின்றிலாத அரக்கனின் ஆண்மைதீர்ந்தேன்' என்றான். 'பெற்றதாதையிறந்தனன்' என்றது- இரட்டுறமொழிதலால், தன்னைப்பிரிந்ததன் நிமித்தம் தசரதன் இறந்ததையும், தனதுமனையாளைப் பாதுகாத்து உதவலினிமித்தம் சடாயு இறந்ததையும் குறிக்கும். சடாயுவை 'பெற்றதாதை' என்றது, உபசாரம். என் தந்தைஎனக்காக இறந்ததனால், அவன் செய்யும் கடமை தீர்ந்தது: மைந்தனாகிய யான் அவனுக்காக இறவாமல் உயிர்த்திருத்தலால், யான்செய்யுங் கடமை தீர்ந்திலது என்று பிரலாபித்தனன். பி - ம்:—[1]ஆதனேன். [2]வீந்தேன். (1028)

## 218.—இலக்குமணன் 'அரக்கரையழித்தலே செய்தற்பாற்று' என்றல்.

என்றலு மிளைய [1]கோவு மிராமனை யிறைஞ்சி யாண்டும்
வென்றியாய் விதியின் றன்மை [2]பழியல [3]விளைந்த தொன்றோ
நின்றினி நினைவ தென்னை நெருக்கியவ் வரக்கர் தம்மைக்
கொன்றபி னன்றோ வெய்ய கொடுந்துயர் குளிப்ப தென்றான்.

(இ - ள்.) என்றலும் - என்று (இராமன்) கூறியவளவிலே, இளையகோஉம்-இளையபெருமானும், இராமனை இறைஞ்சி - அவ்விராமபிரானை வணங்கி, 'வென்றியாய் - வெற்றியை யுடையவனே! யாண்டுஉம் - எப்பொழுதும், விதியின் தன்மை அல விளைந்தது பழி ஒன்றுஓ - ஊழ்வினையின் தன்மையாலல்லாது நேர்ந்ததொரு தீங்கு உண்டோ? இனி நின்று நினைவது என்னை - இனி(க்காலதாமதப்பட்டு) நின்று சிந்தித்தலில் யாதுபயன்? அ அரக்கர்தம்மை நெருக்கி கொன்ற பின் அன்றோ வெய்ய கொடு துயர்குளிப்பது - அந்த இராக்கதர்களை(ப் போரில்) நெருக்கிக் கொன்றபின்பன்றோ

வெவ்விய கொடிய துயரத்தில் மூழ்கவேண்டுவது?' என்றான் - என்று கூறினான்; (எ-று.)

ஊழ்வினையாலன்றி வருவதொருதீங்கு இல்லை யாகையாலும், அவ்வினைப்பயன் தடுக்கவொண்ணா தாதலாலும், கழிவிரக்கத்தோடு சிந்தித்தலிற் பயனில்லை; சீதையை யிழந்ததற்காகவும், சடாயு உயிர்நீத்ததற்காகவும் இரங்குதலினும் முந்திச்செய்ய வேண்டுவது, இவற்றிற்குக் காரணமான அவ்வரக்கர்களைக் கொன்று பழிதீர்த்தலே யென்றானென்க. பழி - பழிக்கப்படுவது: தீங்கு. பி - ம்:—[1]கோவவ்விறைவனை. [2]இவன்முதல், பழியில. [3]விளைந்ததன்றே. (1029)

## 219.—இதுவும் அது.

எந்தைநீ யியம்பிற் [1]றென்னை [2]யெண்மைய னாகி யேழைச்
சந்தவார் குழலி னாளைத் துறந்தனை தணிதி யேனும்
உந்தையை யுயிர்[3]கொண் டானை யுயி[4]ருண்ணு மூற்ற மில்லாச்
சிந்தையை யாகி நின்று [5]செய்வதென் செய்கை யென்றான்.

(இ - ள்.) எந்தை-எனது தலைவனே! நீ —, எண்மையன் ஆகி - எளியதன்மையை மேற்கொண்டவனாய், ஏழை சந்தம் வார் குழலினாளை - (பெண்டிர்க்குஉரிய) பேதைமைக்குணமுடையளான அழகிய நீண்ட கூந்தலையுடைய சீதையை, துறந்தனை தணிதி ஏனும் - கைவிட்டுத் தணிவுகொள்வாயாயினும், உந்தையை உயிர்கொண்டானை உயிர் உண்ணும் ஊற்றம் இல்லா சிந்தையை ஆகி நின்று - உனது தந்தையைக் கொன்ற அரக்கனைக் கொல்லும் முயற்சியில்லாத மனத்தையுடையவனாய் நின்று, செய்வது செய்கை என் - செய்யக்கூடிய செயல்யாது உளது? இயம்பிற்றுஎன்னை-(நீ) சொல்லியது என் [நீ சொல்லியது எனக்குச் சிறிதும்பிடிக்கவில்லை யென்றபடி], என்றான் - என்றும் கூறினான்; (எ - று.)

சீதையை எடுத்துப்போனதற்காக அவளிடம் உனக்குள்ள காதலன்பால் இராவணனைக் கொல்லவெண்டும்: இங்ஙன் கொல்லுதற்கு நீ துணியாமல் அவளை முற்றும் துறந்துவிடக் கருதினையாயினும், நமதுதந்தையான சடாயுவைக் கொன்றதற்காகவாவது,நமக்காகத் தன்னுயிர்கொடுத்த அவனிடம் நமக்குஉள்ள உறவுரிமையாலாவது அவ்விராவணனைக் கொல்லவேண்டாவோ? அங்ஙனமுமன்றித் தவத்தை மேற்கொள்வதாகக்கூறியது தகுதியன்றே யென்றனனென்க. பி - ம்:—[1]என்னே. [2]எளிமையையாகி. [3]கோண்டோனை. [4]கொள்ளும். [5]செய்தவம். (1030)

## 220.—இராமன் 'இனிச் சடாயுவுக்குச் சரமக்கிரியை செய்வோம்' என்றல்.

அவ்வழி யிளவல் கூற வறிவனு மயர்வு நீங்கி
இவ்வழி யினைய [1]வெண்ணி னேழைமைப் பாலதென்னா
வெவ்வழி பொழியுங் கண்ணீர் விலக்கினன் விளிந்த தாதை
செவ்வழி யுரிமை [2]யாவுந் [3]திருத்துவஞ் சிறுவ வென்றான்.

(இ - ள்.) இளவல்-இளையபெருமாள், அ வழிகூற - அவ்வாறு சொல்ல, அறிவன்உம் - யாவும் அறியும் முற்றுணர்வுடையவனான இராமபிரானும், இ வழி இனைய எண்ணின் ஏழைமைப்பாலது என்று-'இப்பொழுது [அல்லது இவ்விடத்தில்] இத்தன்மையன வான சிந்தைகளைச் சிந்தித்திருந்தால் அது அறிவின்மையின்பாற் பட்டதே' என்று தானும் திருவுள்ளத்திற்கொண்டு, அயர்வுநீங்கி - (அதனால்) சோர்வுஒழிந்து, வெம் வழி பொழியும் கண் நீர் விலக்கினன் - கொடிய துன்பங் காரணமாகச் சொரிகிற கண்ணீரை நீக்கினவனாய், (இலக்குமணனை நோக்கி), 'சிறுவ - தம்பி! விளிந்த தாதை - இறந்ததந்தையான சடாயுவுக்கு, உரிமை யாஉம் - செய்யவேண்டிய கடமைகளெல்லாவற்றையும், செம் வழி திருத்துவம் - செவ்விய முறைமையால் திருந்தச்செய்வோம்', என்றான் - என்று கூறினான். பி-ம்:—[1]எண்ணல். [2]யானே. [3]திருத்துவன். (1031)

221.—இதுமுதல் நான்குகவிகள்-சடாயுவுக்கு இராமன் அந்திமக்கிரியைசெய்ததைக் கூறும்.

இந்தன [1]மெனைய வென்னக் [2]காரகி லீட்டத் தோடும்
சந்தனங் குவித்து வேண்டுந் தருப்பையுந் திருத்திப் பூவும்
சிந்தினன் [3]மணலின் வேதி தீர்தர வியற்றித் தெண்ணீர்
தந்தனன் றாதை தன்னைத் [4]தடக்கையா னெடுத்துச் சார்வான்.

(இ - ள்.) இந்தனம் எனைய என்ன - விறகுகள் எத்தன்மையனவென்று (காண்பவர்) வியக்கும்படி, கார் அகில் ஈட்டத்தோடு உம் - கரிய அகிற்கட்டைகளின்கூட்டத்துடனே, சந்தனம்-சந்தனக் கட்டைகளையும், குவித்து - (காஷ்டமாகக்) கொண்டுவந்துசேர்த்து, வேண்டும் தருப்பைஉம் திருத்தி - வேண்டிய தருப்பைப் புற்களையும் திருத்தமாக அமைத்து, பூஉம்சிந்தினன் - மலர்களையும்கொணர்ந்து வைத்து,மணலின் வேதி தீர்தர இயற்றி - மணலினால் மேடையை அமையச்செய்து, தெள் நீர் தந்தனன் - தெளிவான நீரைக்கொணர்ந்து வைத்துக்கொண்டு,—தாதைதன்னை தட கையான் எடுத்து சார்வான்-(இராமன் தனது) தந்தையான சடாயுவைப் பெரியகைகளால் எடுத்துக்கொண்டு (இந்தனங்குவித்து வேதியமைத்த விடத்தில்) சேர்பவனானான்; (எ - று.)

அந்திமக்கிரியைசெய்தற்கு வேண்டிய விறகு தருப்பை பூ தண்ணீர் இவைகளைச் சித்தமாகக் கொணர்ந்துவைத்துக்கொண்டமையும், மணல் மேடையமைத்து வைத்தமையும், இதிற் கூறப்பட்டன. பி - ம்:—[1]ஆகவேண்டும். [2]காழகில். [3]அரணிதன்னாற்றீக் கடைந்து, அரணிதன்னில் தீக்கடைந்து, மணலின் வெந்தீத்தருக் கடைந்து, மணலின் வெந்தீத்தருக்கடிது. [4]தடக்கைமீது. (1032)

222. ஏந்தின னிருகை தன்னா லேற்றின னீமந் தன்மேல்
சாந்தொடு மலரு நீருஞ் சொரிந்தனன் றலையின் [1]சாரல்
காந்தெரி கனல மூட்டிக் கடன்முறை கடவா வண்ணம்
நேர்ந்தன னிரம்பு நன்னூன் மந்திர நெறியின் வல்லான்.

(இ - ள்.) நிரம்பும் நல் நூல் மந்திரம் நெறியின் வல்லான் - நிறைந்த நல்லசாஸ்திரங்களிற் கூறிய மந்திரங்களின்முறைமையில் வல்லவனான இராமபிரான்,—நீர்உம் சாந்தொடு மலர்உம் சொரிந்தனன் - நீரையும் சந்தனத்தையும் புஷ்பங்களையும் (உரியபடி) உபயோகித்து [உயிர்நீத்த உடலுக்குத் திருமஞ்சனமும் அலங்காரமும் செய்து என்றபடி], (அவ்வுடலை), இரு கை தன்னால் ஏந்தினன் ஈமம் தன்மேல் ஏற்றினன்-(தனது) இரண்டுகைகளாலும் எடுத்து (மணல்மேடையில் அமைத்த) அவ்விறகடுக்கின்மேல் இட்டு, தலையின் சாரல் காந்து எரி கனல மூட்டி - தலைப்பக்கத்திலே எரிகிற நெருப்பைப் பற்றவைத்து, கடன் முறை கடவா வண்ணம் நேர்ந்தனன்-மற்றும் (அப்பொழுது) செய்யவேண்டியகடமைகளை முறை தவறாதபடி செய்தான்; (எ-று.)—பி -ம்:—[1]வைத்து: (1033)

223. [1]கிளித்தன [2]களித்த மேனி[3] தாமரைக் கெழுவு செம்பூத்,
துளித்தன வனைய வென்னத் துள்ளிசோர் வெள்ளக் கண்ணன்,
குளித்தனன் கொண்ட [4]லாற்றுக் குளித்தபின் கொண்ட [5]நன்னீர்,
அளித்தன னரக்கர்ச் செற்ற சீற்றத்தா னவலந் [6]தீர்ந்தான்.

(இ - ள்.) அரக்கர் செற்ற சீற்றத்தான் அவலம்தீர்ந்தான் - இராக்கதர்களை அழிக்கவேண்டுமென்ற கோபத்தால் (சீதையையிழந்த) துன்பம் சிறிது தணிந்தவனான இராமபிரான்,—கிளித்து அன - கிளியினதுநிறத்தை யொத்த [பசுஞ்சாமநிறமுள்ள], களித்த மேனி-செழிப்புற்ற (தனது) திருமேனியிலே, தாமரை கெழுவு செம் பூ துளித்தன அனைய என்ன - செழித்த செந்தாமரை மலர்கள் தேன்துளித்தவற்றைப் போல்வன என்று சொல்லும்படி, வெள்ளம் துள்ளி சோர் கண்ணன் - நீர்ப்பெருக்குவழிகிறகண்களையுடையவனாய்,கொண்டல்-மேகம்போல, ஆறு-நதியிலே, குளித்தனன்-நீராடினான்; குளித்த பின்-நீராடியெழுந்த பின்பு, கொண்ட நல் நீர் அளித்தனன் - (தன் கையிற்) கொண்டநல்லநீரை(ச்சடாயுவுக்கு)த்தர்ப்பணமாகக் கொடுத்தான்; (எ - று.)

இராமபிரான் ஆற்றுநீரில்மூழ்கியது ஆற்றில் கொண்டல் படிந்தாற்போலும். கிளியின்நிறமும், இராமபிரானது திருநிறமும் தம்மில்ஒத்திருத்தல்பற்றி, 'கிளித்தன களித்தமேனி' என்றார்; சிறு கிளிப்பைதலே, *** நின்பசுஞ் சாமநிறத்தன்" என்றார், சடகோபரும். கண்களுக்குத் தாமரைப்பூவும், அவைசொரியுங் கண்ணீர்க்குத் தாமரைசொரியுந் தேனும் உவமை. துள்ளி-விரித்தல். பி - ம்:—[1]தளிர்த்தன. [2]கிளர்ந்தபச்சை, அனையமேனி. [3]தாமரைகெழுவுஞ் செந்தேன். [4]ஆற்றில். [5]கொண்டல். [6]தீர்ப்பான். (1034)

224. மீட்டினி யுரைப்ப தென்னே விரிஞ்சனே முதல மேல்கீழ்
காட்டிய வுயிர்க ளெல்லா மருந்தின களித்த போலாம்
பூட்டிய கைக ளாலப் புள்ளினுக் கரசைக் கொள்கென்று
ஊட்டிய நன்னீ ரைய னுண்டநீ ரொத்த தன்றே.

(இ - ள்.) விரிஞ்சன்ஏ முதல - பிரமன்முதலிய, மேல்கீழ் காட்டிய - உயர்ந்தவையாகவும் தாழ்ந்தவையாகவும்குறிக்கப்பட்ட, உயிர்

கள் எல்லாம்-சீவராசிகள் யாவும், அருந்தின களித்த போல்ஆம் - (இராமன் சடாயுவுக்குச் சலதர்ப்பணங்கொடுத்தவளவிலே தாம் தாம்)உண்டுகளித்தவைபோல ஆயின; அ புள்ளினுக்கு அரசை - பறவைக்கு அரசனான அச்சடாயுவைக்குறித்து, கொள்க என்று - ஏற்றுக்கொள்வாயாக என்று சொல்லி, பூட்டிய கைகளால் - சேர வைத்த (தனது) கைகளால், ஊட்டிய - உண்பித்த [தர்ப்பணம் கொடுத்த], நல் நீர்-நல்ல அந்தநீரானது, ஐயன் உண்ட நீர் ஒத்தது அன்றே - இராமபிரானாகிய திருமால் தானே உட்கொண்ட நீரைப் போன்றதன்றோ! மீட்டு இனி உரைப்பது என்னே - (அந்தவாஸோதக திலோதகத்தின் மகிமையைப்பற்றி) மற்றும்சொல்லவேண்டுவது யாது? (எ - று.)

சடாயுவுக்கு இராமன் தர்ப்பணஞ்செய்தவளவிலே, அச்சடாயுவின் உயிரேயன்றி அனைத்துயிரும் உண்டுகளித்தனபோ லானதனால், அந்நீர் ஐயனுண்டநீரையொத்த தென்றார். எம்பெருமான் சிறிதுஉணவை உட்கொண்டவளவிலே, அவ்வெம்பெருமானது சொரூபமான ஜீவராசிகள் தாம்தாம்உண்டனபோல நிறைவுறுதல், இயல்பு; (இதனை மகாபாரதத்துத் துர்வாசமுனிசருக்கத்தாலும் உணர்க.) பூட்டியகைகள்-சேரங்கை. அன்றே-தேற்றம். (1035)

## 225.—சூரியாஸ்தமன வருணனை.

பல்வகைத் துறையும் வேதப் பலிக்கடன் பலவு முற்றி
[1]வெல்வகைக் குமர னின்ற வேலையின் வேலை சார்ந்தான்
தொல்வகைக் குலத்தின் வந்தான் றுன்பத்தாற் புனலுந் தோய்ந்து
செல்வகைக் குரிய வெல்லாஞ் செய்குவா னென்ன வெய்யோன்.

(இ - ள்.) வெல் வகை குமரன் - வெற்றிபெறும்வகையில் வல்ல சக்கரவர்த்தித்திருமகன், பல்வகை துறைஉம் - (பித்ருக்களைக்குறித்துச் செய்யும்) பலவகைச்சடங்குகளையும், வேதம் பலி கடன் பலஉம் - மற்றும் வேதவிதிப்படிசெய்தற்குஉரிய பிண்டபலி முதலிய கடமைகள் பலவற்றையும், முற்றிநின்றவேலையின் - முடித்துநின்ற சமயத்திலே, - வெய்யோன் - சூரியன், தொல் வகை குலத்தின் வந்தான் துன்பத்தால் - தொன்றுதொட்டுவரும் வகையையுடைய (தனது) குலத்திலே தோன்றியவனான சடாயுவின் மரணங்காரணமாக நேர்ந்த துன்பத்தால், புனல்உம் தோய்ந்து-(தானும்) நீராடி, செல் வகைக்கு உரிய எல்லாம் செய்குவான் என்ன-அவன் செல்லுங் கதிக்கு உதவுகிற சடங்குகளையெல்லாம் செய்பவன் போல, வேலை சார்ந்தான் - மேல்கடலை அடைந்தான்; (எ - று.)

சூரியகுலத்தில் அவதரித்த இராமனுக்குத் தந்தைமுறை பூண்ட சம்பந்தத்தால், சடாயுவைச் சூரியகுலத்திலுதித்தவனாகக் கற்பித்து, 'தொல்வகைக் குலத்தின் வந்தான்' என்றன ரென்க. அன்றியும், காசியபமுனிவனது மனைவிமார் பதின்மூவருள் அதிதியின் குமாரன் சூரியன்; விநதையின்மகனான அருணனது புதல்வன் சடாயு; ஆகவே, சூரியனுக்குச் சடாயு புத்திரனாதல் காண்க. இனி, 'தொல்வகைக்குலத்தின்வந்தான் துன்பத்தால்' என்பதற்கு-தனது

குலத்திற் பிறந்தவனன இராமனுக்கு நேர்ந்த மனத்துயரம் காரண மாக என்று உரைப்பர் ஒருசாரார்: சூரியன் கடலில்மூழ்குதற்குக் காரணமாகாததொன்றைக் காரணமாகக் கவி கற்பித்துக்கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]வில். (1036)

இப்படலத்திற் கூறிய வரலாற்றில், சீதை இலக்குமணன் விஷய மாகக்கொண்ட கருத்தினுலும், கூறிய சொற்களினுலும், அவற்றின் பயனுக உடனே அடைந்த தீங்கினுலும், 'பெண்புத்தி பின்புத்தி' என்பது நன்குவிளங்கும். அன்றியும், லக்ஷ்மணன் விஷயத்தில் அவள் சொன்ன சொற்கள் அவளுக்குஉடனே தீமை விளையக்காரண மானமை, 'பாகவதாபசாரம் உடனே பெருந்தீங்கு பயக்கும்' என்ற உண்மை நிலையை உணர்த்தும். சடாயுவின் செயலால், பெரியோர் தமது உயிர்கொடுத்தாயினும் தம்மையுற்றுரது துன்பத்தைத் தம்மாலியன்றவளவு தீர்த்தற்குத் துணிவரென்பது புலனும்; இராம தரிசனத்தால் சடாயுவுக்குப் பரமபதங்கிடைத்தமை, அவ்விராம பிரானே முழுமுதற்கடவுள் என்பதற்குச் சான்ரும். இராமன் சடாயு வுக்குத் தீக்கடன் நீர்க்கடன் முதலியன செய்து முடித்ததனுல், அப்பெருமானது செய்ந்நன்றிமறவாப்பெருந்தகைமை வெளியா கின்றது.

சடாயுவுயிர்நீத்த படலம் முற்றிற்று.

---

# 9 - ஆவது அயோமுகிப் படலம்.

அயோமுகியினது சம்பந்தமான அல்லது அயோமுகியைப் பற்றிய படலம் என விரியும், அயோமுகி என்ற இவ்வடமொழிப் பெயர்-இரும்பினுலாகியது போன்ற முகமுடையவளென்று பொருள் படும். சில பிரதிகளில், இப்படலத்துக்குப் பெயர், அசோமுகிமூக்கரி படலம் எனக் காண்கின்றது.

சடாயுவுக்கு ஈமக்கடன்செய்தபின் இராமபிரான் மிக்கவருத்தத் தோடு தம்பி உடனிருக்கச்சீதாபிராட்டியைத்தேடிக்கொண்டு வனத் திற்செல்லுகையில், தாகங்கொண்டு இலக்குமணனைநோக்கி 'தண் ணீர்வேண்டும்' என்ன, அவ்விளையபெருமாள் நீர்கொண்டு வருதற் குச் சென்ருன். வழியிலே, அயோமுகியென்னுங் கொடிய அரக்கி அவ்விலக்குமணன்மேற்காதல்கொண்டு மோகனமந்திர பலத்தால் அப்பெருமானை மயக்கி வலியத் தழுவியெடுத்துச் செல்லலானுள். அவ்வளவில், மோகம்நீங்கிய லக்ஷ்மணன் அவளுடைய மூக்கைத் துணித்து அவளையகற்றிமீண்டான் என்றசெய்தி, இப்படலத்திற் கூறப்படுகின்றது.

### 1.—இராமலக்குமணர் ஒருமலையிற் சேர்தலும், இருள் மிகுதலும்.

அந்திவந் தணுகும் வேலை யவ்வழி [1]யவரு நீங்கிச் [டார்
சிந்துரச் [2]சென்னித் தாண்டோர் மைவரைச் சேக்கை [3]கொண்

இந்திரற் கடங்கல் செல்லா விராக்கத ரெழுந்த தென்ன
வெந்துயர்க் கூற்ற மாய விரியிருள் வீங்கிற் றன்றே.

(இ - ள்.) அந்தி வந்து அணுகும் வேலை - மாலையந்திப்போது வந்து சேரும் வேளையிலே, அவர்உம் - அவ்விராமலக்குமணரும், அ வழி நீங்கி - (சடாயுவுக்குக் கிரியைசெய்துமுடித்த) அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, ஆண்டு-அவ்வனத்திலே, சிந்துரம் சென்னித்து-சிந்தூரப்பொடிகள்நிறைந்த சிகரத்தை யுடையதாகிய, ஓர் மை வரை-மேகந்தவழும் [பெரிய] மலையொன்றை(ச் சந்தித்து), சேக்கை கொண்டார் - (அதனைத்) தங்குமிடமாகக் கொண்டார்கள்; (பின்பு), வெம் துயர்க்கு ஊற்றம் ஆய - கொடிய துன்பத்துக்குஇடமான, விரி இருள் - பரந்த இருளானது, இந்திரற்கு அடங்கல் செல்லா இராக்கதர் எழுந்தது என்ன - இந்திரனுக்கு அடங்காத கொடிய இராக்கதர்கள் கிளம்பினாற்போல, வீங்கிற்று-மிக்குத்தோன்றிற்று; (எ-று.) —அன்றே - ஈற்றசை.

சடாயுவுக்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்த பின்பு மாலையந்தி வந்தணுக, இராமலட்சுமணர், ஒரு மலையைத் தங்குமிடமாகக் கொண்டாராக, அப்போது அரக்கர்கள் எழுந்தாற்போன்று கன்னங்கரேரென்ற இருள் மிக்குத் தோன்றிய தென்க. காமோத்தீபகமாகிய இருட்பொழுது சீதையைப்பிரிந்த இராமனது விரகவேதனையை மிகுவித்தற்குக் காரணமாகு மென்பார், 'வெந்துயர்க்கு ஊற்ற மாய விரியிருள்' என்றார். 'அவரும் நீங்கிச் சேக்கைகொண்டார்' என்ற உம்மை-கீழ்க்கவியில்வந்த "வெய்யோன் வேலை சார்ந்தான்" என்றதை நோக்குதலால், இறந்தது தழுவியஎச்சப்பொருளது. வெம் துயர் கூற்றம் ஆய எனப்பிரித்து - கொடிய துயரத்தைச் செய்யும் யமன்போன்ற என்றும், சிந்துரச்சென்னித்து என்பதற்கு-யானைகள் பொருந்தப்பெற்ற உச்சியையுடையது என்றும் பொருள் கொள்ளலாம்; பின்னிரண்டடி - தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1] அயரும். [2] சென்னிக்காட்டோர், செந்தீக்காட்டோர். [3] சேர்ந்தார், சார்ந்தார். *(1037)*

## 2.—இரண்டுகவிகள்-அவர்கள் அவ்விரவில் மிகப்பரிதபித்தலைக் கூறும்.

[1] தேனுக வருவி சிந்தித் தெருமர லுறுவ போலக்
கானமு [2] மலையு மெல்லாங் கண்ணினீ ருகுக்குங் [3] கங்குல்
மானமுஞ் சினமுந் தாதை மரணமு மைந்தர் சிந்தை
ஞானமுந் துயருந் தம்முண் [4] மலையென [5] நலிந்த வன்றே.

(இ - ள்.) கானம்உம் மலைஉம் எல்லாம் - காடுகளும் மலைகளுமாகிய அனைத்தும், தெருமரல் உறுவ போல - (இராமலக்குமணர்க்கு நேர்ந்த துயரத்திற்காகத் தாம்) சோகித்தலை அடைவனபோல, தேன் அருவி உக சிந்தி கண்ணின் நீர் உகுக்கும் - தேன் பெருக்கையும் நீர்ப்பெருக்கையும் வழியும்படி பெருகவிடுதலால் கண்ணீர்சொரிவனவாகத் தோன்றப்பெற்ற, கங்குல் - அந்த இரவிலே,—மானம்உம்-(சீதையையிழந்ததனாலாகிய) அவமானமும், சினம்உம்-(இராவணன்

மேலுண்டான) கோபமும், தாதை மரணம்உம்-சடாயுவின்மரணத்தா லாகிய சிந்தையும், துயர்உம் - (கீழ்க்கூறிய காரணங்களால் உண் டான) மனத்துயரமும், ஞானம்உம் - (இவற்றை அடக்கவேண்டு மென்ற) நல்லறிவும், தம்முள் - தமக்குள்ளே, மலை என - மலைகள்போர் செய்தாற்போல, மைந்தர் சிந்தை-இராசகுமாரர்களாகிய இராமலக்கு மணர்களுடைய மனத்திலே, நலிந்த - (ஒன்றேடொன்று) தாக்கி வருத்தின; (எ - று.)

கானமும் மலையுமெல்லாம் தெருமரலுற்றுக் கண்ணினீர் உகுப் பன போலத் தேன் அருவி உகச்சிந்துங் கங்குலென்க. இந்த முன் னிரண்டுஅடி - தற்குறிப்பேற்றவணி. காடுகள், மலர்களினின்றும் கூண்டுகளினின்றும் தேனைச் சொரியும்: மலைகள், நீரருவியைச் சொரிவன. மானம், சினம், தாதைமரணம், துயர் இவை மனத்தில் தோன்றுமளவில் தத்துவஞானம் சிறிதுதோன்றி இவற்றை ஒழிக் கத்தொடங்க, மீண்டும் இவை தலையெடுத்து அந்தஞானத்தை அகற்ற, இங்ஙனம் மாறிமாறி மனந் தடுமாற்றமுற்றது என்பது, பின் னிரண்டடியின்கருத்து. பி - ம்:—[1]தேனுகுகமலமானைத் தேடிடுந் திறத்தோர்க்கண்டு. [2]மலர்களெல்லாம். [3]மாலை. [4]மலைந்தன, மலிந் தன. [5]நலிந்தது. (1038)

3. மெய்யுற [1]வுணர்வு செல்லா [2]வறிவினை வினையி [3]னூக்கும்
பொய்யுறு பிறவி போலப் போக்கரும் பொங்கு கங்குல்
நெய்யுறு நெருப்பின் [4]வீங்கி நிமிர்தர வுயிர்ப்பு நீளக்
கையற வுறுகின் ரூராற் காணலாங் கரையிற் [5]றன்றே.

(இ - ள்.) மெய் உற உணர்வு செல்லா - உண்மைபொருந்த அறியமாட்டாத [தத்துவஞானமில்லாத], அறிவினை - (ஒருவனு டைய) புத்தியை, வினையில் நூக்கும் - தீவினைவழியிலே வலியச் செலுத்துகிற, பொய் உறு பிறவிபோல - பொய்த்தன்மைகள் பொருந்திய பிறப்புப்போல, போக்கு அரும் பொங்கு கங்குல் - நீக்க முடியாது மேன்மேல்வளர்கின்ற அந்த இரவிலே,—(இராமலக்ஷ் மணர்), உயிர்ப்பு - பெருமூச்சு, நெய் உறு நெருப்பின் வீங்கி நிமிர் தர - நெய்சொரியப்பெற்ற நெருப்புப்போல (மிக்கவெப்பங்கொண்டு) மிகவும் ஓங்கிநிற்க, நீள - நெடுமையாக, கையறவு உறுகின்ரூர் - செயலறுதலை [அளவிறந்தசோகத்தை] அடைகின்றவர்களா ஞர்கள்; (அவர்களுற்ற கையறவு), காணல் ஆம் கரையிற்று அன்று - காணுதற்கு உரிய முடிவையுடையதன்று [கரைகாண வொண்ணுதது]; (எ - று.)—ஆல், ஏ - அசைகள்.

தத்துவஞானமுடையோர்க்கன்றி மற்றையோர்க்கு விடாது வருகிற பிறப்பு நீக்கமுடியாதவாறுபோல, மனவுறுதியில்லாது வருந்துகிற இவர்க்கும் சோகம் நீக்கமுடியாதிருந்ததென்பதாம். கையறவு - செயலற்றிருத்தல், மூர்ச்சையுமாம். வினையின்னூக்கும் எனப் பிரித்துரைப்பினுமாம். சாரமற்றதாயிருந்தும் சாரமுடை யதுபோலத் தோன்றி மயக்குதலின், 'பொய்யுறு பிறவி' எனப்பட் டது. நெய்யுறு நெருப்பின் கங்குல் வீங்கி நிமிர்தர என்றுஎடுத்து, நெய்சொரிந்த நெருப்புப்போல இருள் மேன்மேல் வளர்ந்துவருத்த

என்று உரைப்பாருமுளர். காணலாங்கரையிற்றன்று என்பதற்குக் கங்குலை எழுவாயாகக்கொள்ளின், இணைபிரிந்தவர்களுக்கு விரக வேதனையால் இரவுநீட்டித்துத் தோன்றி வருத்துமாதலால், சீதையைப்பிரிந்த இராமனுக்கு இரவு எல்லை காணமுடியாததாக, இராமன் படும் வருத்தத்தைக் காணுதலால், இலக்குமணனுக்கும் அவ்விரவு அவ்வாறாயிற்று என்க. பி - ம்:—[1]உணர்தல். [2]அறிவு, அறிவினன். [3]ஊங்குப். [4]மானநிமிர்தர. [5]அன்றே. *(1039)*

## 4.—இராமபிரான் அவ்விரவுமுழுவதுஞ் சிறிதுந் துயில்கொள்ளாமை.

யாமது தெரித றேற்று மின்னகைச் சனகி யென்னும்
காமரு திருவை நீத்தோ முகமதி காண்கி லாதோ
தேமரு தெரியல் வீரன் கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கங்குற் போதும் [1]குவிந்திலாத் தன்மை யென்னே.

(இ - ள்.) தேன் மரு தெரியல் வீரன் - தேன் பொருந்திய மலர் மாலையை யணிந்த வீரனாகிய இராமபிரானது, கண் என தெரிந்த - கண்களென்று சொல்லப்பட்டு விளங்கிய, செய்ய தாமரை - செந்தாமரைமலர்கள், கங்குல் போதும் - (குவியவேண்டிய) இராப்பொழுதிலும், குவிந்திலா தன்மை - குவியாதிருந்தமை,— இன் நகை சனகி என்னும் காமரு திருவை நீத்துஓ - இனிய புன் சிரிப்பையுடைய சீதையென்கிற அழகிய இலக்குமியை இழந்ததனாலோ? முகம் மதி காண்கிலாதுஓ - (அவளது) முகமாகிய சந்திரனைக்காணாததனாலோ? என்ஓ - யாதுகாரணத்தாலோ? யாம் அது தெரிதல் தேற்றும் - நாம் அக்காரணத்தை (இன்னதென்று) அறிய மாட்டோம்; (எ - று.)

இது, கவிக்கூற்று: திருவை [செல்வத்தை] இழந்தவன் இரவிற் கண் மூடியுறங்காமைபோல, திருவை [சீதையை] இழந்த இராமனும் அவ்விரவிற் கண்மூடித் தூங்கவில்லை; சந்திரனைக் கண்டு குவியுந் தன்மையுள்ள தாமரை அதனைக் காணுவிடத்துக் குவியாதாதலால், இராமனது கண்களாகிய தாமரைகளும் சீதையின் முகமாகிய சந்திரனைக் காணப்பெறுமையாற் குவியவில்லையென்க. 'கண்ணெனத் தெரிந்த செய்யதாமரை' என்ற தொடரில் - 'எனத்தெரிந்த' என்ற சொல்லாற்றலால் கண் எனவே கொண்டு, அது மூடாததற்கு 'திருவை நீத்தோ' என்றும், தாமரையென்றதற்கு ஏற்ப அது குவியாததற்கு 'மதிகாண்கிலாதோ' என்றும் காரணங் கூறினரென்க: காரணம்துணிந்து சொல்லக்கூடாமையால் 'யாமது தெரித றேற்றும்' என்றது. இனி, திருவில்லாதபொழுது பொலிவிழந்து குவிதலும், சந்திரனில்லாத இரவிலும் சிறுபான்மை குவிதலும் தாமரைக்கு இயல்பாயிருக்க, இதுஅதற்கு மாறாயிருத்தல் பற்றி, 'யாமதுதெரிதல் தேற்றும்' என்றாரென்பாருமுளர். இவ்வாறன்றி ஒருமனைக்கு உரியளாய் அதனுள் தனியே வாழ்ந்திருந்தவள் திடீரென்று அம்மனையைவிட்டு அகன்றால், அம்மனை இரவிலுங் கதவடைக்கப்படாமல் திறந்தபடியே வாளாகிடத்தல் இயல்பு ஆதலால், அத்தன்மையை இங்கே கொண்டு, செந்தாமரை மலர்க்கு உரியளாய்

அதில்வாழுந் திருமகளாகிய சீதை நீங்கியதனால் அத்தாமரைமலர் இரவிலுங் குவியாதுகிடந்ததோ என்று சங்கித்துக் கற்பனைகூறின ரென்றலுமாம். இராமனது திருக்கண்ணுக்குத் திருமகள் வாழுஞ் செந்தாமரையை உவமையெடுத்துக் கூறியதனால், அப்பெருமான் பிராட்டியைத் தனது கண்ணினுள்வாழுங் கருமணியாகக் கொண்டு மிகப்பாராட்டி வெகுஅருமையாகப் போற்றிவந்தன னென்பது தொனிக்கும். ஓகாரங்கள்-ஐயப்பொருளன. உம்மை-சிறப்பும்மை. இச் செய்யுளில் உருவகவணியும், ஐயத்தற்குறிப்பேற்றவணியும் விரவின. தேற்றும் என்ற தன்மைப்பன்மை, தன்வினைப் பொருளது, பி - ம்:—[1]குவியலாத். (*1040*)

## 5.—இதுவும் அது.

பெண்ணியற் றீப மன்ன பேரெழி லாட்டி மாட்டு
நண்ணிய பிரிவு செய்த [1]நவையிலா நவையி னுள்ளத்து
எண்ணிய தறித றேற்று [2]மிமைத்தில விராம னென்னும்
புண்ணியன் கண்ணும் வன்றோட் டம்பிகண்[3]போன்ற வன்றே.

(இ - ள்.) பெண் இயல் தீபம் அன்ன - பெண்தன்மைபெற்ற தொரு விளக்கைப் போன்ற, பேர் எழிலாட்டி மாட்டு - மிக்க அழகையுடையவளான சீதையின் விஷயமாக, நண்ணிய - பொருந்திய, பிரிவு—,செய்த - (தனக்கு) உண்டாக்கிய, நவை இலா நவையின் - இகழ்ச்சியில்லாத பெருவருத்தத்தினால், (இராமன்), உள்ளத்து எண்ணியது - (தன்) மனத்தில் நினைத்ததை, அறிதல் தேற்றும் - (இன்னதென்று) யாம் அறியோம்: இராமன் என்னும் புண்ணியன் கண்உம் - நல்வினைவடிவாகிய அவ்விராமனது கண் களும், இமைத்தில - மூடியுறங்காதனவாய், வல் தோள் தம்பி கண் போன்ற - வலியதோள்களையுடைய (அவனது) தம்பியாகிய இலக்குமணனது கண்களை யொத்திருந்தன; (எ-று.)—அன்றே - ஈற்றசை.

வனஞ்சென்றது முதல் மீளுமளவும் பதினான்கு வருஷகாலம் இராமனையும் சீதையையும் துன்பமின்றிக் காப்பதற்காக இலக்கு மணன் இரவிலும் கண்மூடாமலிருந்தமைபற்றி, அவனது கண்கள், விரகவேதனையால் துயிலற்றிருந்த இராமனது கண்களுக்கு உவமை யாயின வென்க. "அல்லையாண்டமைந்த மேனியழகனு மவளுந் துஞ்ச, வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன், கல்லையாண்டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல், எல்லை காண்பளவு நின்று னிமைத்தில நயன மென்றான்" என்ற குகப்பட லத்துச் செய்யுளும், "மாலைவாய் நியமஞ்செய்து மரபுளியியற்றி வைகல், வேலைவாயமிர்தன்னாளும் வீரனும் விரித்தநாணல், மாலை வாய்ப்பாரின்பாயல் வைகினன் வரிவிலேந்திக், காலைவாயளவுந் தம்பி யிமைப்பிலன் காத்து நின்றான்" என்றும், "மடங்கலன்னான், துயிலெனுமணங்குவந்து தோன்றலுமவளை நாமே, எயிலுடை யயோத்தி மூதூரெய்து நாளெய்து மென்றான்" என்றும் வந்துள்ள கங்கைப்படலத்துச் செய்யுட்களும் ஈண்டுக் காண்டற்கு உரியன. கண் துயிலாமைக்குக் காரணம் உள்ளத்திற்கொண்ட சிந்தனையென்

பதை அறிவோமாயினும், அப்பெருமான் அப்பொழுது சிந்தித்த வற்றையெல்லாம் இன்னவென்று அறியோமென்பார், 'உள்ளத்து எண்ணியது அறிதல்தேற்றும்' என்றார். மிக்க அழகையுடைய சீதைக்கு உலகிலுள்ளபொருளொன்றும் ஒப்பாகாதாதலால், அவ் வழகுமிகுதியை விளக்க, 'பெண்தன்மைகொண்டதொரு விளக்கு' என இல்பொருளுவமை கூறினர். விளக்குச் சுடர்விட்டுத் தான் விளங்குவதோடு பிறபொருள்களையும் விளங்கச்செய்வதுபோலச் சீதாபிராட்டி தான் புகழால் திகழ்வதோடு பெண்தன்மையையும் விளங்க வைத்தாள் என்பது 'பெண்ணியல் தீபமன்ன எழிலாட்டி' என்றதற்குக்கருத்து. நவையென்றது - சீதையைப் பிரிந்த வருத்தம். தான் காப்பாற்றவேண்டிய தருமபத்தினியைப் பிரிந்ததனால் வருந்து வது நியாயமேயென்பதை விளக்க, 'நவையிலா' என்ற அடைமொழி அதற்குக்கொடுக்கப்பட்டது. எழிலாட்டி - எழிலை ஆள்பவள். பி-ம்:—[1] நவையினர்வங்கொல்சிந்தை, நவையினரவங்கொல்சிந்தை, நவையினரவர்கள் சிந்தை. [2] இமைப்பில. [3] போனறது. (1041)

### 6.—சந்திரன் உதித்தல்.

வண்டுளர் கோதைச் சீதை வாண்முகம் [1] பொலிய வானிற்
கண்டனெ [2] னென்று வீரற் [3] காங்கொரு காதல் காட்டத்
தண்டமிழ்த் தென்ற லென்னுங் கோளராத் [4] தவழுஞ் சாரல்
விண்டலம் [5] விளக்குஞ் செவ்வி வெண்மதி விரிந்த தன்றே.

(இ - ள்.) 'வண்டு உளர் கோதை சீதை-வண்டுகள் மொய்த்து ஒலிக்கிற பூமாலையை யணிந்த சீதையினது, வாள் முகம்-ஒளிபொருந்திய முகத்தை, வானில் - ஆகாயத்தில், பொலிய-விளங்க, கண்டனென்-பார்த்தேன்,' என்று—, வீரற்கு ஒருகாதல் காட்ட - இராமபிரானுக்கு ஒரு ஆசையையுண்டாக்கும்படி,—தண் தமிழ் தென்றல் என்னும் - குளிர்ந்தஇனிமையையுடைய தென்றலெனப்பட்ட, கோள் அரா - கொல்லுந்தன்மையுள்ளபாம்பு, தவழும் - தவழப்பெற்ற, சாரல் - மலைப்பக்கத்திலே, விண் தலம் விளக்கும் - ஆகாய தலத்தை விளங்கச்செய்யவல்ல, செவ்வி - அழகிய, வெள் மதி - வெண்மையான சந்திரன், ஆங்கு - (இராமன் வருந்தும்) அச்சமயத்தில், விரிந்தது - உதித்துஒளிவீசி விளங்கிற்று; (எ - று.)— அன்றே - ஈற்றசை.

இனிச் சீதையைக் காணமாட்டோமென்று ஆசையொழிந் திருந்த இராமபிரானுக்கு, அவளதுமுகத்தைக் கண்டோமென்று ஓராசையுண்டாம்படி சந்திரன் உதித்தனனென்க. பிரிந்தவரை வருத்துகிற காமோத்தீபகப்பொருள்களுள் தென்றலும் ஒன்று ஆதலால், அதனைக் கோளராவாக உருவகப்படுத்தினர். தமிழ் என்பது - இனிமையென்னும் பொருளதாதலை, "தமிழ்தழிய சாயலவர்" என்னுஞ் சிந்தாமணியாலும் உணர்க. சாரலில் வெண் மதி விரிந்தது எனவே, மலையின் உயர்ச்சி விளங்கும். வண்டு உளர்கோதைச்சீதை - இயற்கை நறுமணத்தாலும் சூடியமலர்களி

ளுலாகிய செயற்கைநறுமணத்தாலும் வண்டுகள்மொய்த்து ஆர வாரிக்கப்பெற்ற கூந்தலையுடைய சீதை யெனினுமாம். தமிழ்த் தென்றல் - தமிழ்மொழிபோ லினிய தென்றல்; தமிழ்நாட்டி லிருந்துவருகிற தென்றல் எனலுமாம். தென்றலென்னும் கோ ளரா - அபநுதியணி. பி - ம்:—[1]போல. [2]என்ன. [3]ஆண்டு. [4]தழுவும். [5]விளங்கும். (1042)

## 7.—நிலவு இராமனை வருத்துதல்.

களியுடை யனங்கக் கள்வன் கரந்துறை கங்குற் காலம்
வெளிபடுத் துலக [1]மெங்கும் விளக்கிய நிலவின் வெள்ளம்
நளியிருட் பிழம்பென் றீண்டு நஞ்சொடு கலந்த நாகத்
துளையெயிற் [2]றூன்ற லுற்ற வாலெனச்[3]சுட்ட தன்றே.

(இ - ள்.) களி உடை அனங்கன் கள்வன் - செருக்கையுடைய மன்மதனாகிய திருடன், கரந்து உறை - ஒளித்து வசிக்கிற, கங்குல் காலம் - அவ்விராப்பொழுதிலே, உலகம் எங்கும் - உலகம் முழுவதையும், வெளிபடுத்து விளக்கிய - வெளிப்பட்டு விளங்கச் செய்த, நிலவின் வெள்ளம்-நிலாவின் மிகுதியானது,—நளி இருள் பிழம்பு என்று ஈண்டு நஞ்சொடு கலந்த - பெரிய இருட்கூட்ட மென்னப்பட்டு நெருங்கிய விஷத்துடன் சேர்ந்த, நாகம்-பாம்பினது, துளை எயிறு - துளைபொருந்திய விஷப்பல்லில், ஊன்றல் உற்ற - உள்ளிருத்தலைப் பொருந்திய, ஆல் என - விஷம்போல, சுட்டது - (இராமனை) மிக வருத்தியது; (எ-று.)—தற்குறிப்பேற்றவணி.

இராப்போதில், நிலாவெள்ளம், இராமபிரானை நஞ்சொடுகலந்த நாகத்துளையெயிறூன்றுதலாலான விடம்போன்று சுட்டதென் பதாம். நளியிருட் பிழம்பை நஞ்சொடுகலந்த கரு நாகமாகவும், பிறைச் சந்திரனை அதன் துளையெயிருகவும், நிலாவெள்ளத்தை எயிறூன்ற லுற்ற நஞ்சாகவும் கொள்க. ஒருசாரார் பாம்பு - சந்திரனுக்கும், பாம்பின்பற்கள் - நிலவின் வெள்ளத்திற்கும், நஞ்சு - இருட்பிழம் பிற்கும் உவமையென்ப. சகலலோககர்த்தாவாகிய இராமபிரானையே வருத்துஞ் சமயம் வாய்த்ததனால், மன்மதன் செருக்குடைய வனாயினன். மன்மதனைக்குறிக்கும் 'மதநன்' என்ற வடமொழிப் பெயர்க்குக் களிப்புச்செய்பவனென்று பொருளாதலால், அதுபற்றி 'களியுடை யனங்கன்' என்றாருமாம். அநங்கன் - அங்கம் [சரீரம்] இல்லாதவன். அவனைக் கள்வனாக உருவகப்படுத்தியது, தான் கட்புலனாகாது மறைந்திருந்து பிரிந்தாரை வருத்துதலால். மிக்க நிலாவானது இருளில் முழுகிக்கிடந்த உலகத்தை அதினின்று நீக்கி விளக்கியது என்பது, இரண்டாமடியின் கருத்து. [2]ஊறலுற்ற வாலென என்ற பாடத்திற்கு, துளை எயிறு - தொளையையுடைய நச்சுப்பற்களினின்று, ஊறல் உற்ற - சுரத்தல்பொருந்தின, ஆல் என - விஷம்போல என்க: ஆல் - ஆலம் என்பதன் விகாரம். பி-ம்:— [1]எல்லாம். [2]ஊறலுற்றதாமென. [3]சுட்ட. (1043)

## 8.—இதுமுதற் பதினேழுகவிகள்-இராமன் சீதையை நினைந்து வருந்துதலைத் தெரிவிக்கும்.

இடம்படு [1]மானத் துன்ப [2]மிருடர [3]வெண்ணிற் றீர்ந்தான்
விடம்பரந் தனைய தாய வெண்ணிலா வெதுப்ப வீரன்
படம்பரந் தனைய வல்குல் பால்பரந் தனைய [4]வின்சொல்
தடம்[5]படு கண்ணி ளுடன் றனிமையை நினைய லுற்ருன்.

(இ - ள்.) வீரன் - இராமபிரான்,—விடம் பரந்து அனையது ஆய - விஷம்பரவியதுபோன்றதாகிய, வெள் நிலா வெதுப்ப - வெள்ளியநிலாவானது வருத்தவும், இடம்படு மானம் துன்பம் இருள் தர - (இராவணன் சீதையைக் கவர்ந்ததனாலாகிய) பெரிய அவமானத்தினாலுண்டான துன்பம் அறிவைக் கெடுக்கவும், எண்ணின் தீர்ந்தான் - பிற எண்ணங்களினின்று ஒழிந்தவனாகி,—படம் பரந்து அனைய அல்குல் - பாம்பின்படம்விரிந்தாற்போன்ற அல்குலையும், பால் பரந்து அனைய இன் சொல் - பாலின் இனிமைமிகுந்தாற் போன்ற இனியசொற்களையும், தட படு கண்ணினுள் தன் - நீட்சி பொருந்திய கண்களையு முடையவளாகிய சீதையினது, தனிமையை- (தன்னைப்பிரிந்து) தனிப்பட்டதன்மையைப்பற்றி, நினையல்உற்ருன்- நினைப்பவனானன்; (எ - று.)

வெண்ணிலாவெதுப்பவே, இராமபிரான் தான் வீரனாதலால் மானத்துன்பம்இருள்தர, வேறொரு எண்ணமின்றிச் சீதையின் தனிமையைக் குறித்துச் சிந்தைகொண்டானென்க. மனையாளை மாற்ருன் கொண்ட பேரவமானத்துன்பத்தினா லுண்டான அறிவுமயக்கத்தை 'இருள்' என்ருர். பால்-அதன் இனிமைக்கு ஆகுபெயர். 'விடம்பரந் தனையதாய்வெண்ணிலா' என்றது, மிகவருத்தந் தருங் கொடுமை பற்றிய தற்குறிப்பேற்றம்: நிறம்பற்றியதன்று. தடம் படு-தடாகத்தை யொத்த, கண்எனினுமாம். பி - ம்:—[1]மானம். [2]இரண்டும் வந்துற்ற போது. [3]எண்ணம். [4]தீஞ்சொற். [5]பெருங். (1044)

வேறு.

9\. மடித்த வாயன் வயங்கு முயிர்ப்பினன்
துடித்து வீங்கி யொடுங்குறு தோளினன்
பொடித்த தண்டளிர்ப் பூவொடு மால்கரி
ஒடித்த கொம்பனை யாடிறத் துன்னுவான்.

(இ - ள்.) (இராமபிரான்),—மடித்த வாயன் - (வருத்தத்தினாலும் கோபத்தினாலும்) மடித்த உதட்டையுடையவனும், வயங்கும் உயிர்ப்பினன்-வெளிவிளங்குகிற பெருமூச்சையுடையவனும், துடித்து வீங்கி ஒடுங்குறு தோளினன் - (மனச்சஞ்சலத்தால்) துடித்துப் (பகைவனையழிக்கவேண்டுமென்ற மனக்கிளர்ச்சியால்) பூரித்து (மனவுறுதியழிந்தமையால்) தளர்ச்சியடைகிற தோள்களையுடையவனுமாகி,—மால் கரி ஒடித்த-பெரிய யானையினால் ஒடிக்கப்பட்ட, பொடித்த தண் தளிர் பூவொடு கொம்பு அனையாள் திறத்து - வெளித்தோன்றிய குளிர்ந்த தளிரோடும் பூக்களோடுங் கூடிய கொம்பை யொத்தவ

ளாகிய அச்சீதையின் விஷயமாக, உன்னுவான் - நினைப்பவனு னன்; (எ - று.)

மால்கரி - இராவணனுக்கும், கொம்பு - சீதைக்கும், தளிரும் பூவும் - அவளது மேனிநிறத்துக்கும் அவயவங்களுக்கும் உவமை.

இதுமுதற் பத்தொன்பது கவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் 245 - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (1045)

10. [1]வாங்கு வில்லன் வரும்வரு மென்றிரு
[2]பாங்கு நீணெறி [3]பார்த்தன ளோவெனும்
[4]வீங்கு வேலை விரிதிரை யாமென
ஓங்கி யோங்கி யொடுங்கு முயிர்ப்பினன்.

(இ - ள்.) (இராமபிரான்),—வேலை வீங்கு விரி திரை ஆம் என - கடலில் மிகுகின்ற பரந்த அலைகள்போல, ஓங்கி ஓங்கி ஒடுங்கும் - உயர்ந்து உயர்ந்து அடங்குகிற, உயிர்ப்பினன் - பெருமூச்சை யுடையவனாகி,—வாங்கு வில்லன் வரும்வரும் என்று இரு பாங்குஉம் நீள் நெறி பார்த்தனள் ஓ எனும் - (இராவணன் கை யில் அகப்பட்டபோது சீதை) 'வளைத்த வில்லையுடையவனாய் (நம் கணவன்) வருவான்வருவானென்று எண்ணி இரண்டுபக்கங்களிலு முள்ள நீண்டவழியைப்பார்த்தாளோ?' என்று சிந்திப்பான்; (எ-று.)

வரும்வரும் என்ற அடுக்கு - தன்னைமீட்பதற்கு இராமன்வருவது நிச்சய மென்ற கருத்தை விளக்கிற்று. ஓங்கி ஓங்கி - அடுக்கு, இடைவிடாமைப் பொருளது. பார்த்தனளோ, ஓகாரம் - ஐயத்தோடு இரங்குதற் பொருளது. பெரியகடலில் கிளர்ந்து கிளர்ந்து அடங்கும் அலை, கரியஇராமனிடத்தில்உயர்ந்துஉயர்ந்து தோன்றி யொடுங்கும் மூச்சுக்கு உவமையாயிற்று. பி - ம் :—[1]வாங்கும். [2]பாங்கின். [3]பார்த்தனையோ. [4]வீங்கும். (1046)

11. [1]என்னி னைந்தில ளென்பது [2]சாலுமோ
மின்னி னைந்த [3]விலங்கு மெயிற்றினன்
நின்னி லென்று [4]நெருங்கிய போ[5]தவள்
என்னி னைந்தன ளோவென வெண்ணுமால்.

(இ-ள்.) 'மின் நினைந்த விலங்கும் எயிற்றினன்-மின்னல்போன்ற விலகியுள்ள கோரதந்தங்களையுடைய இராவணன்,—நில்நில்என்று நெருங்கியபோது - நில்நில்என்றுசொல்லிக்கொண்டு கிட்டியகாலத்தில், அவள் என் நினைந்திலள் என்பது சாலும் ஓ-அச்சீதை என்னை நினைக்கவில்லை யென்று சொல்லுவது (அவளதுகுணத்துக்குத்) தகுதியாயிருக்குமோ? [இராது என்றபடி]; (அப்படி அவள் நினைத்து எதிர்பார்த்தும் நான் அவளைக் கிட்டாமையால்), என் நினைந்தனள்ஓ- (என் விஷயத்தைப்பற்றி) யாது நினைத்தாளோ?' என எண்ணும் - என்று நினைப்பான், (இராமன்); (எ - று.)

கீழ்க்கவியில் தன்னைச் சீதை எதிர்நோக்கியிருப்பாளென்று கருதியதை, இக்கவியின் முதலடியால் அவ்வாறு நினையாமலிருப்

பது அவள் தன்மைக்கு ஏற்காதென்று கருதி வற்புறுத்துகிறான். 'என் நினைந்தனளோ' என்றது - உதவவேண்டியகாலத்திலும்தான் வந்து உதவாமையால், மானுருக்கொண்டு வந்த அரக்கனால் இராமனுக்கு யாது தீமைநேர்ந்ததோ என்று எண்ணிச் சீதை வருந்தியிருப்பாளென்பதைக் குறிப்பிக்கும். [1]தன்னினைந்திலள் என்றபாடத்துக்கு, தன் நினைந்திலள் என்பது சாலுமோ- (இராவணன்சமீபித்தபோது அவள்) தனது நிறையொழுக்கத்தைக் கருதினாளில்லை யென்பது தகுதியுடைத்தோ என்றுபொருள்: அவள் கற்புநிலைகுலைந்திருப்பளென்று எண்ணுவது தகாது எனபது கருத்து: இனி அப்பாடத்துக்கு, தன்னில் நைந்திலள் என்று பதம்பிரித்து, தன்னிலேதான் வருந்தினாளில்லையென்றுகருதுதல் அடாது என்று உரைப்பாருமுளர். நினைந்த-உவமவுருபு. என் நினைந்தனளோ என்பது-என்னை நினைந்தாளோ என்றும் பொருள்படும். ஆல் - ஈற்றசை. பி - ம்:— [2]சாலுமே. [3]எயிற்றின்விலங்கனான். [4]நெருக்கிய. [5]அவண். (1047)

12. நஞ்சு காலு நகைநெடு நாகத்தின்
வஞ்ச வாயின் மதியென மட்குவாள்
வெஞ்சி னஞ்செ யரக்கர்தம் வெம்மையை
அஞ்சி னன்கொலென் றையுறு மாலென்பான்.

(இ - ள்.) 'நஞ்சு காலும் நகை நெடு நாகத்தின் வஞ்சம் வாயில் மதி என மட்குவாள் - விஷத்தைக் கக்குகின்ற பற்களையுடைய (இராகுவென்னும்) பெரிய பாம்பினது கொடுமையுடைய வாயில் (அகப்பட்ட) சந்திரன்போல ஒளிமழுங்குபவளாகியசீதை, (நான் வாராததனால்), வெம் சினம் செய் அரக்கர்தம்வெம்மையை அஞ்சினன் கொல் என்று ஐயுறும்-கொடிய கோபத்தையுடைய இராக்கதர்களது கொடுமைக்கு (இராமன்) பயப்பட்டானோ?' என்றுசந்தேகப்படுவாள், என்பான்-என்றுசிந்திப்பான் (இராமன்); (எ-று.)

இராகுவின் வாய்ப்பட்டமதி, இராவணன்கைப்பட்டசீதைக்கு உவமை. ஐயுறும் - ஐயமுறும்; தொகுத்தல்: செய்யுமென்முற்று, இங்கே பெண்பாலுக்கு வந்தது. கொல்-ஐயம். ஆல் - அசை: தேற்றமுமாம். (1048)

13. பூண்ட மானமும் போக்கருங் காதலும்
தூண்ட நின்றிடை தோமுறு மாருயிர்
மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினான்
வேண்டு மோவெனக் கின்னமும் வில்லென்பான்.

(இ - ள்.) பூண்ட மானம்உம் - (தனக்கு) நேரிட்ட அவமானமும், போக்கு அரு காதல்உம் - நீக்கமுடியாத ஆசையும், தூண்ட-தூண்டுதலினால், இடை நின்று - நடுவிலே அழியாது நின்று, தோம் உறும் - வருத்தமடைகிற, அரு உயிர் - அரியஉயிரை, மீண்டு மீண்டு வெதுப்ப - (அவை)மாறி மாறி வருத்துவதனால், வெதும்பினான் - மனம்வருந்தினவனாகி, (இராமன்), 'எனக்கு இன்னம்உம் வில் வேண்டுமோ—?' என்பான் - என்று சொல்வான்;

சீதையை யிழந்த அவமானம் ஒருபக்கத்திலும், மீண்டுங் கிடைப்பாளோ என்ற ஆசை மற்றொரு பக்கத்திலுமாக மாறிமாறி வருத்த இடையில் அகப்பட்டுக்கொண்டு, போகவும் மாட்டாமல் நிற்கவும் மாட்டாமல் தவிக்கும் உயிருடையவனாகி, இராமன், ஒரு செயலுஞ்செய்யமுடியாமல் 'சமயத்திற் பயன்படாத இந்தவில், இனி இருந்து யாதுபயன்?' என வருந்திக்கூறினனென்க. சில ஏட்டுப் பிரதிகளில், முதலிரண்டடிகள் மாறிக்கிடக்கின்றன. (1049)

14. வில்லை நோக்கி நகுமிக வீங்குதோட்
கல்லை நோக்கி நகுங்கடைக் கால்வரும்
சொல்லை நோக்கித் [1]துணுக்கெனுந் தொன்மறை
எல்லை நோக்கினர் யாவரு நோக்குவான்.

(இ - ள்.) தொல்மறை எல்லை நோக்கினர் யாவர்உம் நோக்குவான் - பழமையான வேதத்தின் முடிவை [வேதாந்தத்தை] அறிந்தவர்களெல்லாராலும் கண்டறியப்படுபவனான இராமபிரான்,— வில்லை நோக்கி நகும் - (தன் கையிலுள்ள) வில்லைப்பார்த்து(ப் பயனற்றதே யென்று) சிரிப்பான்; மிகவீங்கு தோள் கல்லை நோக்கி நகும் - மிகவும்பருத்துள்ள (தனது) தோள்களாகிய மலைகளைப் பார்த்து (வீணுக்குப்பருத்திருக்கின்றனவே என்று) சிரிப்பான்; கடைக்கால் வரும் சொல்லை நோக்கி துணுக்கெனும் - (மனைவியைக் காவாதுஇழந்தனனே யென்று தனக்கு) இறுதிக்காலத்து நேரிடக்கூடியதான (உலகத்தார்கூறும்) பழிச்சொல்லைச் சிந்தித்துத் திடுக்கிடுவான்; (எ - று.)

வேதாந்த வறிவினரான ஞானவான்களாலேயே அறியப்படும் பரம்பொருளான இராமபிரானே இவ்வாறுவருந்தின னென்று, பிரிவின் கொடுமையை விளக்கியவாறு. நகை-இகழ்ச்சிபற்றியது. கல் - ஆகுபெயர். கடைக்கால் - பின்பு என்றபடி. பி - ம்—[1]துணுக்குறும். (1050)

15. கூதிர் வாடைவெங் கூற்றினை நோக்கினன்
வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை யென்வயிற் றீர்ந்தன ளோவெனும்
போத கம்மெனப் பொம்மெ னுயிர்ப்பினன்.

(இ - ள்.) போதகம் என பொம்மென் உயிர்ப்பினன் - யானை போலப் பொம்மென்றஒலியுடன் விடும் பெருமூச்சையுடையவனாய், கூதிர் வாடை வெம் கூற்றினை நோக்கினன் - குளிர்ந்த காற்றாகிய கொடிய யமனை நோக்கியதனால், 'வேதம் விதி முறை வேள்வி மேவிய - வேதவிதிப்படி செய்த சடங்கினால் மணந்துகொண்ட, சீதை—, என்வயின் - என்னிடத்தினின்றும், தீர்ந்தனள் - நீங்கி விட்டனள்: ஓ - அந்தோ!' எனும் - என்பான், (இராமன்); (எ-று.)

விரகவேதனையால் அறிவுமழுங்கிக் கிடந்த இராமன், பிரியாதார்க்குக் குளிர்ந்திருக்கவேண்டிய காற்று, கொடியயமன்போலக் காமோத்தீபகமாய்த் தன்னைவருத்தியதனால், சீதையின்பிரிவை யுணர்ந்தானென்க. மூன்றுமடிக்கு - சீதை என்னிடத்தினின்று

நீங்கினாளோ என்பான் எனினுமாம். ஓகாரம் - இரக்கம். போதகம்மென - விரித்தல். போதகம் - யானைக்கன்று. பொம்மெனல்-ஒலிக் குறிப்பு. நோக்கினன் - முற்றெச்சம். (1051)

16. நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்தயான்
என்று ணைக்குல மங்கையொ ரேந்திழை
தன்[1]று யர்க்குந் [2]தகவிலெ னாயினேன்
நன்று நன்றென் வலியென நாணுமால்.

(இ - ள்.) 'நின்று பல் உயிர் காத்தற்கு நேர்ந்த யான் - (முன்பு தந்தையின் வார்த்தைப்படி அரசனாய்) நின்று (உலகத்துப்) பலவுயிர்களையும் பாதுகாத்தற்கு உடன்பட்ட நான், ஓர் ஏந்து இழை என் துணை குலம் மங்கை தன் துயர்க்குஉம் தகவு இலென் ஆயினேன் - அணிந்த ஆபரணங்களையுடையவளாகிய எனக்குத் துணைவி [மனைவி] யான ஒரு குலஸ்திரீயினது துன்பத்தை நீக்குதற்கும் தகுதியற்றவனாய் விட்டேன்; என் வலி நன்று நன்று - எனது பலம் மிகநன்றாயிருந்தது!' என - என்று, நாணும் - நாணமடைவான், (இராமன்); (எ - று.)—ஆல் - அசை.

'நின்று பல்லுயிர்காத்தற்கு நேர்ந்த யான்' என்பதற்கு, (கீழ் அகத்தியப் படலத்தில்) "ஆரறத்தினொ டன்றி நின்றா ரவர், வேரறுப்பென் வெருவன்மின்னீர்" என்று இருடிகளை நோக்கி யாவரையுந் தீங்கின்றிக் காப்பதாக வாக்குத்தத்தஞ்செய்த யானென்று பொருள்கூறினும் அமையும். அடுக்கு - இகழ்ச்சிபற்றியது. பி-ம்:— [1]துயர்க்குத், துணைக்குந். [2]தகைப்பிலன். (1052)

17. [1]சாயுந் தம்பி திருத்திய தண்டளிர்
தீயு மங்கவை [2]தீர்கெனுஞ் [3]செவ்விருந்து
ஆயு [4]மாவி புழுங்க வழுங்குமால்
[5]வாயு நெஞ்சும் புலர மயங்குவான்.

(இ - ள்.) வாய்உம் நெஞ்சுஉம் புலர மயங்குவான் - வாயும் மனமும் வறண்டுபோக மயக்கமுற்றவனாகி,—தம்பி திருத்திய தண் தளிர் சாயும் - தம்பியான இலக்குமணன் தேடியமைத்த குளிர்ந்த தளிர்க்குவியலிற் படுப்பான்; அங்கு - அப்பொழுது, தீயும் - (தன்னுடம்பின் வெம்மைபொறுக்கமாட்டாது) தீந்துபோகிற, அவை - அத்தளிர்கள், தீர்க - நீக்கப்படக்கடவன, எனும்-என்று (இலக்குமணனை நோக்கிச்) சொல்வான்; செம் விருந்து ஆயும் - (பிறகு இலக்குமணன் அவ்வாறே நீக்கி வேறுகொணர்ந்து அமைத்த) சிவந்த புதிய தளிர்களை (இவையாயினும் இன்பந்தருமோ என்று மனத்தில்) ஆராய்வான்; ஆவி புழுங்க அழுங்கும் - (அவைகளும் முன்போலவே வருத்தத் தொடங்கவே) உயிருருகச் சோர்வான், (இராமன்); (எ - று.)—ஆல் - அசை.

சீதையின் பிரிவுத்துயரால் வருந்தும் இராமனது நிலையைக் கண்டு இலக்குமணன் தளிர்களைப்படுக்கையாகப்பரப்ப, அவற்றில் இராமபிரான் சாயவும் அவை தீய்ந்துவிடவே, மற்றும் ஆய்ந்து

வேரோர் தளிர்ப்படுக்கையமைக்க, அதுவும் இன்பந்தராது போகவே உயிருருகச் சோர்வா னென்பதாம். தளிர்ப்படுக்கையமைப்பது, சீதோபசாரத்திற்காக. தீயும் என்பதை முற்றுகக்கொள்ளுதலும் ஒன்று. [3]செல்விருந்தாயும்என்றபாடத்திற்கு - தன்னைநோக்கிவரக் கடவவிருந்தைக் குறித்து ஆராய்வா னென்று பொருள்: இனித் தன் பக்கல் விருந்தினர்வந்தால் அவர்களைக் கிருகத்தாச்சிரமதரு மப்படி மனைவியுடனே கூடி உபசரிக்கமுடியாதே யென்பதைப்பற் றிச் சிந்திப்பா னென்பது கருத்து. பி - ம்:—[1]தேயும். [2]தீய்தலும், செய்தலும். [4]ஆவியுநெஞ்சுமழுங்கிட. [5]ஓயுமோயுமுயிர்க்குமுயிர்க் குமே. (*1053*)

18. பிரிந்த [1]வேதுகொல் பேரபி மானங்கொல்
தெரிந்த தில்லை திருமலர்க் கண்ணிமை
பொருந்த வாயிரங் கற்பங்கள் போக்குவான்
இருந்து கண்டிலன் கங்குலி னீறரோ.

(இ-ள்.) திரு மலர் கண் இமை-அழகிய தாமரைமலரை யொத்த (தனது) கண் இமைக்கும்பொழுதில், ஆயிரம் கற்பங்கள் பொருந்த போக்குவான்-பலவூழிகள் கழியப் பெறுபவனுன திருமாலினவதார மான இராமபிரான்,—இருந்து - (படுக்கையிற்படுக்கப் பொருந்தாது) இருந்த நிலையாகவே யிருந்து, கங்குலின் ஈறுகண்டிலன் - இரவின் முடிவைக் காணுதாயினுன்; (இந்த மாறுபாட்டிற்குக் காரணம்), பிரிந்த ஏது கொல்-(சீதையைப்) பிரிந்த காரணத்தினுலோ, பேர் அபிமானம் கொல்-(அவளிடத்துத் தான் கொண்டிருந்த) ஆசைமிகுதியாலோ, தெரிந்தது இல்லை - (எமக்குத்) தெரியாது; (எ - று.)—அரோ - ஈற்றசை.

சீதையின்பிரிவு அன்னுளிடத்துக்கொண்ட காதல் இவ்விரண் டுமே காரணமாக, இராமபிரான் இரவின்விடிவைக்காணுது மிகவருந் தின னென்பதாம். திருமலர்க்கண்ணிமை பொருந்தஆயிரங் கற்பங் கள் போக்குவான் - ஒருகால் கண்ணிமைக்குங் காலத்திற்குள் பல கற்பங்கள்கழியப் பெறுபவ னென்று, அப்பிரானது பெருமையை விளக்கியவாறு: இதில், எம்பெருமான் காலங்கடந்த கடவு ளென்ப தும் விளங்கும். அன்றி, தனதுதிருக்கண் துயில்கொண்டு விழித்த லால் ஊழிகள் கழியச்செய்பவ னென்றலும் தகுதியே. இனி, கண் ணிமைபொருந்த ஆயிரங்கற்பங்கள் போக்குவான் என்பதற்கு - கண் ணிமைக்கும் பொழுதில் ஆயிரங் கற்பங்கள் பொருந்த வருந்திப் பொழுதுபோக்குபவ னென்றுமாம்: இப்பொருளில், பிரிவினை மிக்க துயரத்தால் ஓரிமைப்பொழுதே பலவாயிரம் ஊழிகளுக்கு ஈடாயின வென்க. கற்பம்-பிரமனுயுள். பிரிந்த வேதுகொல் என்று எடுத்து - பிரிந்ததனுலான மனவெப்பத்தினுலோ என்றும் பொருள்கொள்ள லாம். பேரபிமானங்கொல்-தனது பெருமிதத்தைப்பற்றிய பேரபிமான மோ? தெரியவில்லை யென்று உரைப்பினுமாம்.

பேரபிமானங்கொல் என்பதற்கு—(இராவுக்கு மன்னவன் என்றும் ஒரு பொருள் கொண்ட) இராமனென்ற நாமதேயத்தி

லுள்ள விருப்பத்தாலோ என்று தொனிப்பொருள் கூறுவர். பி-ம்:—[1]ஏதங்கொல், பேதங்கொல். (1054)

19. வென்றி வேற்கை யிளவலை [1]மேலெலாம்
ஒன்று போல வுலப்பில நாள்கடாம்
நின்று காண்டியன் றேநெடுங் கங்குல்தான்
இன்று நீள்வதற் கேதுவெ னென்னுமால்.

(இ - ள்.) வென்றி வேல் கை இளவலை - வெற்றிக்குக் காரணமான வேலையேந்திய கையையுடைய தம்பியாகிய இலக்குமணனை (நோக்கி), 'ஒன்றுபோல உலப்பு இல நாள்கள் மேல் எலாம் நின்று காண்டி அன்றே - ஒரே மாதிரியாகத் தம் இயல்புகெடாமல் கழிந்த [அளவிறந்த] நாள்களை முன்னெல்லாம் (என்னுடனே) இருந்து பார்த்துள்ளாயன்றோ? நெடு கங்குல் இன்று நீள்வதற்கு ஏது என் - இராப்பொழுது இன்றுமாத்திரம் நெடியதாய் வளர்வதற்குக் காரணம் யாதோ?' என்னும்-என்றுவினவுவான், (இராமன்); (எ-று.)—தாம், தான், ஆல்-அசைகள்.

நின்று என்பதற்கு - இராமுழுவதும் விழித்திருந்து என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]முன்னெலாம். (1055)

20. நீண்ட மாலை மதியினை [1]நித்தமும்
மீண்டு மீண்டு மெலிந்தனை வெள்குவாய்
பூண்ட பூணவள் வாண்முகம் [2]போதலால்
ஈண்டு சால விளங்கினை யென்னுமால்.

(இ - ள்.) நீண்ட மாலை மதியினை-(விரகிகளுக்கு) நீண்டு காணப்படுகிற மாலைப்பொழுதில் தோன்றுஞ் சந்திரனை (நோக்கி), 'நித்தம் உம் மீண்டுஉம் மீண்டுஉம் மெலிந்தனை வெள்குவாய் - (சீதை இங்கு உள்ளமட்டும் அவள் முகத்துக்கு ஒப்பாகவேண்டுமென்னுங் கருத்துடனே) நாடோறும் திரும்பித்திரும்பி வந்தும் (அவள் முகத்துக்கு ஈடாகமாட்டாமையால்) உடல்தேய்ந்தவனாய் வெட்கங் கொண்ட நீ, ஈண்டு - இப்பொழுது, பூண்ட பூணவள் வாள் முகம் போதலால் - அணிந்த ஆபரணங்களையுடைய அச்சீதையின் ஒளிபொருந்திய முகம் நீங்கிப்போனதுபற்றி, சால விளங்கினை - மிகவும் ஒளியுடன் விளங்குகிறாய்,' என்னும் - என்று சொல்வான், (இராமன்); (எ - று.)—ஆல் - அசை.

'சீதையின் மதிமுகம் என்னருகே விளங்கியிருந்த காலத்தில் விளக்கமற்றுத் தோன்றிய நீ, இப்போதுவிளக்கமுற்று என்னைத் துன்புறுத்துகிறாயே!' என்று இராமன் அந்த நீண்ட இரவில் மிகவும்வருந்தினனென்க. இனி, வேறு கருத்து:—கிருஷ்ணபக்ஷத்தில் இயல்பிலே குறையுந்தன்மையுள்ள சந்திரனைச் சீதையின் முகத்துக்கு ஒப்பாகமாட்டாமல் தேய்ந்ததாகக் காரணங் கற்பித்தவாறு; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. சீதையின் முகமண்டலத்துக்குச் சந்திர மண்டலம் சிறிதும் ஒப்பாகாதென்று இராமன் கருதியிருந்தமை, இங்குவிளங்கும். இச்செய்யுள்-சந்திரோபாலம்பநம் [சந்திரனைப்பழித்தல்]. பி - ம்:—[1]நித்தலும். [2]போதர. (1056)

21. நீணி லாவி னிசை[1]நிறை தன்குலத்து
ஆணி யாய பழிவர வன்னது
நாணி நாடு கடந்தன னாங்கொலோ
சேணு லாந்தனித் தேரவ னென்னுமால்.

(இ - ள்.) 'சேண் உலாம் தனி தேரவன் - ஆகாயத்திற் செல்லுகின்ற ஒப்பற்ற தேரையுடைய சூரியன்,—நீள் நிலாவின் இசை நிறை தன் குலத்து - மிகுந்தநிலாவை யொத்துவிளங்குகிற கீர்த்திநிறைந்த தனது குலத்தில், ஆணி ஆய பழி வர - நீங்காது நிலைநிற்குந்தன்மையதான பெரும்பழிவந்ததனால், அன்னது - அப் பழிக்கு, நாணி - வெட்கமுற்று, நாடு கடந்தனன் ஆம் கொல் ஓ- இந்நாட்டைவிட்டு அகன்று போயினனோ!' என்னும் - என்று சொல் வான், (இராமன்); (எ - று.)—இதுவும் அடுத்த கவியும் - இராம பிரான் இரவு நீட்டித்ததற்குக் காரணம் கற்பித்துக் கூறலைத் தெரி விக்கும்.

சூரியன் தனதுகுலத்துப் பிறந்த இராமனது மனைவியை மாற் றான்கொண்டதனால் நேரிட்ட பழிக்கு வெள்கி மறுபடிவராமல் நாடு கடந்து சென்றிட்டானோ என்று, இரவு நீட்டித்தற்கு ஒரு காரணங் கற்பித்துக்கூறியவாறு; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. புகழை வெண் ணிறமுடையதாக் கூறுதல் கவிசமயமாதலால், அதற்கு நிலாவை உவமை கூறினார். உலாம்=உலாவும்; செய்யுமெனெச்சத்து ஈற்று உயிர்மெய் சென்றது. சில ஏட்டுப் பிரதிகளில் இச்செய்யுள் அடுத்த செய்யுளின்பின் உள்ளது. பி - ம்:—[1]நின்ற. (1057)

22. சுட்ட கங்கு னெடிதெனச் சோர்கின்றான்
முட்[1]ட மைந்த நெடுமுடக் [2]கோனொடும்
[3]கட்டி வாளரக் கன்கதி ரோனையும்
இட்ட னன்கொ லிருஞ்சிறை யென்னுமால்.

(இ - ள்.) சுட்ட கங்குல் நெடிது என சோர்கின்றான் - (தன்னை) வருத்திய அவ்விரவு மிகநீண்டதென்று தளர்பவனான இராமன்,—'வாள் அரக்கன் - கொடிய இராக்கதனாகிய இராவணன், முட்டுஅமைந்தநெடுமுடம்கோனொடுஉம் - கடிவாளத்தைக் கையிற் கொண்ட [சாரதியாகிய] பெரிய அருணனுடனே, கதிரோனைஉம் - சூரியனையும், கட்டி - (கயிற்றால்) கட்டி, இரு சிறை இட்டனன் கொல்- பெரிய சிறையில் வைத்திட்டானோ?', என்னும் - என்று கருதுவான்; (எ - று.)—ஆல் - அசை.

ஒருகால் இராவணன் பகலவனை அன்னவன்பாகனோடும் சிறை வைத்திட்டானோ! என்று வேறொருகாரணம் இதனால் இராமன் கூறுகின்றானென்க. ஏதுத்தற்குறிப்பேற்றவணி.

சூரியன் சாரதியான அருணன் துடையில்லாதவனாதலால், 'முடக்கோன்' எனப்பட்டான்; இவன், கருடனது தமையன். காசியப முனிவரது மனைவிமார் பலருள் கத்துரு என்பவள், ஒருநாள், ஆகாய மார்க்கத்தே சென்ற உச்சைச்சிரவமென்னும் வெள்ளைக் குதிரையைக் கருநிறமுடையதென்று மாறுபாடாகக்கூற, அவள் சக்களத்தியான

விநதை அதனை மறுத்து வெண்ணிறமுடையதென்று உள்ளபடி கூறவே, இதுகாரணமாக இருவர்க்கும் மாறுபாடுஉண்டாகி 'யாருரை பொய்யாகின்றதோ், அவள் மற்றவட்கு அடிமையாகக் கடவள்' என்று தம்மில் சபதம் நியமித்துக் கொள்ள, உடனே கத்துரு, தனது மக்களாகிய கருநாகங்களால் அவ்வெண்பரியை மறைப்பித்துக் கரியதாகக் காட்டி வஞ்சனை வழியால் விநதையைத் தனக்கு அடிமையாக்கி, 'நீ உன்மகனால் தேவலோகத்திலிருந்து அமிருதங் கொணர்ந்து என் மக்களுக்குக் கொடுக்கையில் உனது இவ்வடிமைத் தன்மை யொழியும்' என்று விடைகூற, பின்பு விநதை, தன் கணவனருளால் ஆயிரம் வருஷகாலங் கழித்தபின் பலிக்கும்படியான இரண்டு அண்டங்களைப் பெற்று அடைகாத்து வருகையில், ஐந்நூறு வருஷங்கழிந்தவாறே ஒருநாள் 'பெண்புத்தி பின்புத்தி' ஆதலால் தனது அடிமைத்தனத்தை விரைவில் ஒழித்தலிலே கருத்துக் கொண்டு ஒருமுட்டையை எடுத்து உடைக்க, காலம் நிரம்பாமையால் அதனுள் இடைக்குக்கீழ்ப்பட்ட அவயவங்க ளில்லாமல் பாதி வடிவமாயிருந்த குமாரனொருவன்தோன்றி, அருணனெனப் பெயர் பூண்டு சூரியனுக்குச் சாரதியாயினனென்ற கதை இங்கு அறியத்தக்கது. பி - ம்:—[1] இழந்த. [2]கோனொடு. [3]கட்ட. *(1058)*

23. துடியி னேரிடை [1]தோன்றல ளாமெனில்
கடிய காரிருட் கங்குலின் கற்பம்போய்
முடியு மாகின் முடியுமிம் மூரிநீர்
நெடிய மாநில மென்ன நினைக்குமால்.

(இ - ள்.) 'துடியின் நேர் இடை - உடுக்கையை யொத்த இடையையுடைய சிதை, தோன்றலள் ஆம் எனில்-காணப்படாவிட்டால், —கடிய கார் இருள் கங்குலின் கற்பம் போய் முடியும் ஆகில்-கொடிய கரிய இருளையுடைய இரவாகிய கற்பமானது கழிந்து விடியுமானால், இ மூரி நீர் நெடிய மா நிலம் - கடலாற் சூழப்பட்ட மிகப்பெரிய இந்தவுலகம், முடியும்-அழிந்துவிடும்,' என்ன நினைக்கும் - என்று நினைப்பான், (இராமன்); (எ - று.)

சீதை அகப்படாமலே பொழுது விடிந்தால் இவ்வுலகத்தை நீறுக்கிவிடுவே னென்று இராமபிரான் கோபித்து நினைத்தனனென்க. மூரிநீர் - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; பழமையாகிய நீரையுடையதென விரியும். ஆல் - அசை. பி - ம்:—[1]தோன்றுவள். *(1059)*

24. திறத்தி னுதன செய்தவத் தோருற
ஒறுத்து ஞாலத் துயிர் [1]தமை யுண்டு[2]ழன்
மறத்தி னர்கள் வலிந்தனர் வாழ்வரேல்
அறத்தி னுலினி யாவதெ னென்னுமால்.

(இ - ள்.) 'திறத்து -(தங்கள்) வலியினால், செய் தவத்தோர் இனைதன உற - தவஞ்செய்யும் இருடிகள் துன்பங்களை அடைய, ஒறுத்து - (அவர்களை) வருத்தி, ஞாலத்து உயிர்தமை - உலகத்திலுள்ள உயிர்களை, உண்டு-தின்று, உழல்-திரிகிற, மறத்தினர்-அதரு

மத்தையுடைய இராக்கதர்கள், வலிந்தனர் வாழ்வர் ஏல் - (கற்புடை மாதரைக் கவர்ந்து இப்படி) வலிபெற்று வாழ்வாராளுல், இனி அறத்திஞல் ஆவது என்-இனிமேல் தருமத்திஞல் ஆகும் பயன் யாதோ?' என்னும் - என்றும்சொல்வான்; (எ - று.)

தருமவான்களான முனிவர் முதலியோர் வருந்தவும், அதரும வான்களான அரக்கர்கள் வெற்றியுற்று வாழவும் தலைப்பட்டத ஞல், தருமத்துக்குப் பயன் விளையுங் காலமில்லையே யென்று இராமன் வருந்தின னென்க. ஆல்-அசை. பி - ம்:—[1] தனை. [2] முன். ()

25.—இதுவும், அடுத்த கவியும் - மன்மதன் செயலைக் கூறும்.

தேனின் றெய்வத் திருநெடு நாண்சிலைப்
பூநின் றெய்யும் பொருகணை வீரனும்
மேனின் றெய்ய விமலனை நோக்கிஞன்
[1]தானுந் தேர்கில ஞய்த்[2]தடு மாறுவான்.

(இ - ள்.) தேனின் தெய்வம் திரு நெடு நாண் - வண்டுகளாகிய தெய்வத்தன்மையுள்ள அழகிய நீண்ட நாணியையுடைய, சிலை - (கரும்பு) வில்லில், பொரு கணை பூ நின்று எய்யும் - போர் செய்கின்ற அம்பாகக் கொண்டு மலர்களை எதிர்நின்று தொடுக்கின்ற, வீரன் உம்-வீரஞகிய மன்மதனும், மேல் எய்ய விமலனை நின்று நோக்கி ஞன் - இராமன்மேல் அம்புதொடுத்து விடும்படி அவனை உற்றுப் பார்த்தான்; (அவ்வளவில்), தான் உம் - அவ்விராமனும், தேர்கிலன் ஆய் - ஒன்றுந்தோன்ருமல் (அறிவுமயங்கி), தடுமாறுவான் - கலங்குபவஞஞன்; (எ - று.)

மன்மதனும் இராமபிரான்மீது அம்பு தொடுக்க, அப்பிரானும் அறிவு மயங்கித் தடுமாறுபவஞனென்க. விமலன் - குற்றமற்ற வன். மன்மதனுக்குக் கரும்பை வில்லாகவும், மலரை அம்புகளாக கவும், வண்டுக்கூட்டத்தை நாஞகவுங் கூறுதல், கவிமரபு. எப் படிப்பட்டவரையும் வசீகரிக்கவல்ல ஆற்றலுடைமை தோன்ற, நாணுக்கு 'தெய்வம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, காமநூலென்னும் பூவிசேடம் காமனுக்கு வில்லா மென்று தமிழ நூலிலும், மன்மததந்திரமென்னும் புஷ்பம் மன்மதனுக்கு வில்லா மென்று வடநூலிலும் கூறுமாறு பற்றி, இச்செய்யுளின் முதலிரண் டடிக்கு-வண்டொழுங்காகிய திவ்வியமான அழகிய நீண்ட நாணியை யுடைய தனதுவில்லாகிய பூவிசேடத்தினின்று தொடுக்கும் போரம்புகளையுடையமகாவீரஞன மன்மதனென உரைப்பினும் அமை யும்; "நீறுபடு துட்ட மதன் வேறுருவெடுத்தலரி னீள்சிலை குனித்து வழிதே, ஞறுகணை தொட்டு வெளியே சமர் விளைப்பதும்" என்ற மதுரைக்கலம்பகம்இங்குக்கருதத்தக்கது; மன்மதனது 'புஷ்பதந்வா' என்ற வடமொழிப்பெயரையுங் காண்க. எளிய கருவிகளைக் கொண்டே எங்குந் தவருது வெற்றிபெறுதல் தோன்ற, மன்மதன் 'வீரன்' எனப் பட்டான். பி - ம்:—[1] தானின்றெய்யகிலான். [2] தடுமாறிஞன். (1061)

26. உழந்த யோகத் தொருமுதல் கோபத்தால்
இழந்த மேனியு மெண்ணி [1]யிரங்கிஞன்

[2]கெழுந்த கைக்கொரு வன்மை கிடைக்குமேல்
பழந்து யர்க்குப் பரிவுறும் [3]பான்மையால்.

(இ - ள்.) கெழும் தகைக்கு ஒரு வன்மை கிடைக்கும் ஏல் - (தன்னிடத்திற்) பொருந்திவிளங்குகிற குணத்திற்கு ஒரு உறுதிப்பாடு கிடைக்குமானல், (அப்பொழுது), பழ துயர்க்கு பரிவு உறும் பான்மையால் - கீழ்ப்போன துயரத்திற்கு வருந்துகிற உலகவழக்கப்படியே, (மன்மதன்),—உழந்த யோகத்து ஒரு முதல் கோபத்தால் - மிக்குச் செய்த தவத்தையுடைய ஒருமுதற்கடவுளாகிய சிவபிரானது கோபத்தினல், இழந்த - (முன்பு தான்) இழந்துவிட்ட, மேனிஉம் - (தனது) சரீரத்தை, எண்ணி-நினைத்து, இரங்கினன்-வருந்தினன்; (எ-று.)

வருத்தமுற்ற ஒருவன், ஓர்உறுதிநிலைபெற்றபோது, தனக்குக் கீழ் நேர்ந்த துயரத்தை நினைத்து வருந்துவதுபோல, அனங்கனகிய மன்மதனும், மகாவீரனை இராமனை வருத்தும் வீரம் இப்பொழுது தனக்கு உண்டாகி நிலைத்தது பற்றி, தான் முன்பு சிவபிரானல் அங்கமிழந்ததை நினைத்து வருந்தின னென்க. மேனியும், உம்மை - இசைநிறை. சிவபிரான் யோகமுழந்தது, தன்னை அடுத்து வேண்டிய சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கும் யோகநிலையை யுணர்த்துதற் பொருட்டு.

இனி, கீழ்க்கவியோடு இக்கவியையுஞ் சேர்த்து, வீரன் விமலனை நோக்கி, கெழுந்தகைக்கு ஒருவன்மை கிடைக்குமெனிலும் பழந் துயர்க்குப் பரிவுறும் பான்மையால், தான் இழந்த மேனி எண்ணி இரங்கினனகி, தானுந் தேர்கிலனய்த் தடுமாறுவான் என ஒரு முடிபாகக் கொண்டு, 'திரிமூர்த்திகளில் ஒருவனன தவவேடங் கொண்ட சிவபிரான்மேல் முன்பு அம்பெய்து சரீரத்தையிழந்தோமே! இனி அக்கடவுளரில் ஒருவனகிய தவவேடமுள்ள இராமனும் வலியற்றவன்போற் காணப்படினும் இவன்மேல் அம்பெய்தால் இவனல் நமக்கு மற்றும் யாதுதீங்குநேரிடுமோ?' என்று மன்மதனும் அம்பு எய்யமாட்டாது மதிமயங்கித் தடுமாறின னென்று பொருள் கூறினும் பொருந்தும்; முன்புசோர்ந்த தளர்வுக்குப் பின்பு ஒருவலி கிடைக்குமாயினும் பழைய அத்தளர்வாகிய துன்பத்தை நோக்கி வருந்தும் இயல்பின்படி யென்பது, பின்னிரண்டடியின் பொருள். இனி, சிறந்துவிளங்குகின்ற உத்தம குணங்களையுடைய இவ்விராம மூர்த்திக்கு ஆற்றல் உண்டாமாயின் அப்பொழுது தனக்கு மீண்டும் ஏதேனுந் தீங்குநேருமே யென்பதைக் கருதி இரங்குந் தன்மையால் என்றலும் நேராம். கெழுந்தகை - பண்புத்தொகையன்மொழி.

பி - ம் :—[1]இரங்குவான். [2]அழுந்துவன்றுயராமெனவஞ்சினன். [3]பான்மையான்.

(1062)

## 27.—இரவு கழிதல்.

நீல மாய நிறத்த [1]னினைப்பிடைச்
சூல மாகத் தொலைவுறு [2]மெல்லையின்
மூல மாமலர் முன்னவன் முற்றுறுங்
கால மாமெனக் கங்குல் கழிந்ததே.

(இ - ள்.) நீலம் ஆய நிறத்தன் ,- நீலநிறமுள்ளவனை இராம பிரானது, நினைப்பிடை - மனத்திலே, (சீதையைப் பிரிந்ததனாலுண்டான துன்பம்), சூலம் ஆக - சூலாயுதம்போல்வருத்த, தொலைவு உறும் எல்லையின்-(இங்ஙனம்) வருந்துகிற சமயத்திலே,—மூலம் மா மலர் முன்னவன் முற்றுறும் காலம் ஆம் என - (எல்லாவற்றுக்கும்) முதற்காரணமான (எம்பெருமானது) பெரியநாபித்தாமரைமலரில் தோன்றிய முதற்கடவுளான பிரமன் முடிகின்ற ஊழிக்காலம் கழிந்தாற்போல, கங்குல் கழிந்தது-அந்தப்பேரிரவு நீங்கிற்று; (எ-று.)

பிரிவுத்துயரின் கொடுமையை விளக்க, அதனைச் சூலமாக உருவகப் படுத்தி, கங்குலின் மிக்கநீட்சிக்கு மலர்முன்னவன் முற்றுறுங் காலம் [பிரமகற்பம்] உவமை கூறப்பட்டது. "அத்திசை முகனோடு, உந்திக்கமலம் விரிந்தால்விரியும் உகக்கடையில், முந்திக் குவியிலுடனே குவியு மிம்மூதண்டமே" ஆதலால், மூலமாமலரெனப் பட்டது. ஏ - ஈற்றசை. பி-ம்:—[1]நினைந்திடை. [2]வேலையின். (*1063*)

வேறு.

## 28.—இதுவும், அடுத்த கவியும்-இராமன் வருந்துதலைக் கூறும்.

வெள்ளஞ் சிலம்பு பாற்கடலின் விரும்புந் துயிலை வெறுத் [1]தளியும்
கள்ளுஞ் சிலம்பும் [2]பூங்கோதை கற்பின் கடலிற் படிவாற்குப்
புள்ளுஞ் சிலம்பும் பொழில்சிலம்பும் புனலுஞ் சிலம்பும் புனைகோலம்
உள்ளுஞ் சிலம்புஞ் [3]சிலம்பாவா லுயிருண் டாகும் வகையுண்டோ.

(இ - ள்.) வெள்ளம் சிலம்பு பால் கடலின் - வெள்ளம் ஒலிக்கப்பெற்ற திருப்பாற்கடலில், விரும்பும் - (தான்) விரும்பிச்செய்யும், துயிலை - யோகநித்திரையை, வெறுத்து - நீக்கிவிட்டு, அளிஉம் கள்உம் சிலம்பும் பூ கோதை-வண்டுகளும் தேனும் ஒலிசெய்யப் பெற்ற மலர்மாலையையணிந்த கூந்தலையுடைய சீதையினது, கற்பின் கடலில் - கற்பாகிய சமுத்திரத்திலே, படிவாற்கு - அமிழ்ந்துள்ள இராமன்விஷயமாக, புள்உம் சிலம்பும் - பறவைகளும் (இரங்கி) ஒலிக்கும்; பொழில் - சோலைகளும், சிலம்பும்—; புனல்உம் - மலையருவிகளும், சிலம்பும்—; புனை கோலம் - (சீதையினது) அலங்கரித்த உருவமானது, உள்உம் சிலம்பும் - மனத்தில்தோன்றி வருத்தும்; சிலம்பா - (கண்ணுக்குப்) புலப்படாது: ஆல் - ஆதலால், உயிர் உண்டாகும் வகை உண்டுஓ - (இராமனுக்கு) உயிர் ஒழியாது தரித்து நிற்கும் வழி உளதோ? [இல்லை]; (எ - று.)

உதயகாலத்தில் இயல்பாக ஒலிக்கும் பறவைகளின் ஒலிமுதலியவற்றை, இராமபிரான் விஷயமாக இரங்கியொலித்தனவாகக் குறித்தார். முதலிரண்டடியால், பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பரமனான திருமால் இராமனாகத் திருவவதரித்துப் பிராட்டியான சீதையை மணந்தமை விளங்கும். [1]அளிய என்ற பாடத்துக்கு - அன்புசெய்யத்தக்க என்று பொருளுரைத்து, அதனைச் சீதைக்கு

அன்மொழியாக்குக. 'பாற்கடலின் விரும்பும் துயிலை வெறுத்துப் பூங்கோதை கற்பின்கடலிற் படிவாற்கு' என்றதில், இராமன் திருப் பாற்கடலில் திருமகளுடன்கூடி வாழ்தலினும் இங்குச்சீதையுடன் கூடிவாழ்தலை மிகவும் இனியதாகக் கருதினனென்பது தோன்றும். பிராட்டியின் கற்புக்குக் கடலை உவமைகூறியதனால், அதன் மிகுதியும் ஆழ்ச்சியும் எல்லைகாணவொண்ணாமையும் விளங்கும். கோதை- கூந்தலையுடையாளுக்குச் சினையாகுபெயர். பூங்கோதை-பூமாலைபோல் பவளெனினுமாம்; உவமையாகுபெயர். [2]பூங்கோதைக்கற்பிற்கடல் என்ற பாடத்துக்கு, பூங்கோதைக்கு அற்பின் கடல் என்று பிரித்து, சீதையினிடத்துக் கடல்போன்ற பேரன்புள்ளவனென்று பொருள் கொள்க: அற்பு = அன்பு. வினைப்பகுதிகள் வேண்டிய பொருளை விளக்குமாதலால், சிலம்புதல் என்னும் வினைக்குப் புலப்படுதலென் றும் பொருள்கொள்ளப்பட்டது. பொழில் சிலம்புதல் - சோலைகளி லுள்ள மரங்கள் விடியற்காலத்துக் காற்றுவீசுதலால் அசைந்து ஒலித்தல். சிலம்பா - சிலம்பாது என்பதன் விகாரம்.

இனி, இராமபிரானுக்கு இரவுகழிந்ததை யுணர்த்துமாறு புள் முதலியன ஒலித்தன; புனை கோலம் உள்ளும் - (சீதையினது) அழகிய வடிவத்தையே (இராமன் எப்பொழுதும்) கருதுவான்; சிலம்பும் சிலம்பா - (அவள் எதிர்நின்று கண்ணுக்குப் புலப்படா விட்டாலும் அவள் நடந்துவருவதற்கு அடையாளமாக அவளு டைய) காற்சிலம்புகள் ஒலித்தலேனும் நிகழலாமே, அவையும் ஒலித்தில; ஆல் - ஆதலால், இனி இராமன் உயிர்த்திருக்கும் வகை யுள்ளதோ? என்றும் பொருள்கொள்ளலாம். [3]சிலம்பாவேல் என்ற பாடத்துக்கு, புனைகோலம்-தான் கொள்ளும் போர்க்கோலத்தை, உள்ளும்-நினைப்பூட்டுகின்ற, சில் அம்புஉம் - சில அம்புகளும், சிலம்பா ஏல் - ஒலிசெய்யாவிட்டால் என்று உரைக்க; அப்பொழுது கருத்து:—உதயகாலத்தில் பறவை முதலியன ஒலித்தலும், அம்புகள்ஒலித்துப் போரை நினைப்பூட்டுதலுஞ் செய்யாவிட்டால் இராமன் உயிர்பெற்றிரா னென்பதாம், [1]அளியின் என்ற பாடத் துக்கு - வண்டுகளுடனே யென்க. பி - ம்:—[3]சிலம்பாது.

இது முதல் ஐந்து கவிகள் - மாரீசன் வதைப்படலத்தின் 113 - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (1064)

29. மயிலும் பெடையு முடன் [1]றிரிய மானுங் கலையு மருவிவரப்
பயிலும் பிடியுங் கட[2]கரியும் வருவ திரிவ பார்க்கின்றான் [கும்
குயிலுங் கரும்புஞ் [3]செழுந்தேனுங் குழலும் யாழுங் கொழும்பா
[4]அயிலு மமுதுஞ் சுவை[5]நீத்த மொழியைப் [6]பிரிந்தா லழியானே.

(இ - ள்.) பெடைஉம் மயில்உம் உடன் திரிய - பெண்மயிலும் ஆண்மயிலும் கூடிக்குலாவித் திரிய (அவற்றையும்), மான்உம் கலைஉம் மருவிவர - பெண்மானும் ஆண்மானும் கலந்து பொருந்த (அவற்றையும்), பயிலும் பிடிஉம் கடகரிஉம் வருவ திரிவ- (ஒன்றோ டொன்று) பழகிவிளையாடும் பெண்யானையும் ஆண்யானையும் (தன் எதிரில்) வருவனவாகத் திரியும் அவற்றையும், பார்க்கின்றான்-பார் க்கின்றவனாகிய இராமன்,—குயில்உம் - குயிலோசையும், கரும்புஉம்-

கருப்பஞ்சாறும், செழு தேன்உம் - செழிப்பான தேனும், குழல்உம்- வேய்ங்குழலோசையும், யாழ்உம் - வீணையொலியும், கொழு பாகுஉம்- செழிப்பான சர்க்கரைப் பாகும், அயிலும் அமுதுஉம் - விரும்பி யுண்ணப்படுகிற தேவாமிருதமும், (ஆகிய இவை), சுவை நீத்த- (தன் இனிமைக்குமுன் தம்தம்) இனிமை கெடும்படியான, மொழியை -சொல்லையுடைய சீதையை, பிரிந்தால்-, அழியான்ஓ - வருந்தாம லிருப்பனோ? [இராமன்]; (எ - று.)

மயில் முதலியவை தம்தம் பெடையுடன் கூடிக்குலாவி இராம னுக்குச் சீதையைப்பிரிந்த துயரத்தைமிகுவித்தனவென்க. கடகரி - மதம்பிடித்த யானை. மொழி - அதனையுடையவளுக்கு ஆகுபெயர். குயிலும்...மொழி - குயிலொலி முதலியன இனிமையற்றன வென் னும்படியான சொல்லினிமையையுடைய சீதையென்க. குயில், கரும்பு, குழல், யாழ் - ஆகுபெயர்கள். பி-ம்:—[1] திரிவ. [2] களிறும். [3] பெருந். [4] அயிரும். [5] தீர்த்த. [6] பிரிந்தான். (1065)

## 30.—சூரியோதயம்.

முடிநாட் டியகோட் [1]டுதயத்து முற்ற [2]வுற்றுன் முது கங்குல், விடிநாட் கண்டுங் கிளிமிழற்று மென்சொற் கேளா வீரற்காண்டு, அடிநாட் [3]செந்தா மரை[4]யொதுங்கு மன்ன மிலளால் யானடைத்த, கடிநாட் [5]கமலத் தெனவவிழ்த்துக் காட்டு வான்போற் கதிர்வெய் யோன்.

(இ - ள்.) கதிர் வெய்யோன் - கிரணங்களையுடைய சூரியன்,— முது கங்குல் விடி நாள் கண்டுஉம் - நீண்ட இரவு விடிந்து பகற் பொழுதானமையைக் கண்டும், கிளி மிழற்றும் மெல் சொல் கேளா - (பேச்சில்) கிளியை யொத்த சீதை சொல்லுகிற இனிய சொற்களைக் கேளாத, வீரற்கு - இராமனுக்கு, ஆண்டு - அப் பொழுது,—'யான் அடைத்த கடி நாள் கமலத்து - யான் (முதல் நாளில்) மூடிய வாசனையுள்ள புதிய தாமரைமலரில், அடி நாள் செம் தாமரை ஒதுங்கும் அன்னம் - முற்காலத்திற் செந்தாமரை மலரில் தோன்றிய அன்னப்பறவை போன்ற சீதை, இலள் - (இப்பொழுது) இல்லை,' என - என்று, அவிழ்த்து காட்டுவான் போல் - மலர்த்திக் காட்டுபவன்போல, முடி நாட்டிய கோடு உதயத்து முற்ற உற்றுன்- முடிவைத்ததுபோல விளங்குகிற சிகரத்தையுடைய உதயகிரியில் நன்றாய்த்தோன்றி விளங்கினுன்; (எ - று.)—ஆல் - அசை.

இயல்பில் தாமரை மலரும்படி உதிக்குஞ் சூரியனை,—முன்னே தாமரையில் வசித்த திருமகளாகிய சீதை இப்பொழுதும் அதில் இருக்கின்றுளோ என்று இராமனுக்குஉண்டாகக்கூடும் ஐயத்தை நீக்கும்பொருட்டு முன்னுள் மூடிய தாமரைகளையெல்லாம் மலர்த்திக் காட்டுவதற்காக உதயகிரியில் உதித்தனன்போலு மெனக் காரணங் கற்பித்துக் கூறினுர்; பயன்தற்குறிப்பேற்றவணி. முடி - கிரீடம். மூன்றுமடி, சீதை இலக்குமியின் அமிசமானவளென்பதை விளக்கும். அன்னம் - உவமையாகுபெயர். பி - ம்:—[1] உதயத்தின். [2] முற்று. [3] பைந்தாமரை. [4] ஓங்கும். [5] கமலத்தாட்டிறந்து. (1066)

## 31.—இராமபிரானது பிரிவுத் துயரம்.

பொழிலை நோக்கும் பொழிலுறையும் புள்ளை நோக்கும் பூங்கொம்
பின், எழிலை நோக்கு மிளமயிலி [1]னியல்பை நோக்கு மியல்பானுள்,
குழலை நோக்கிக் கொங்கையிணைக் குவட்டை நோக்கி யக்குவட்டின்,
தொழிலை நோக்கித் தன்னுடைய தோளை நோக்கி நாள்கழிப்பான்.

(இ - ள்.) (இராமன்), பொழிலை நோக்கும் - (அங்குள்ள) சோலையைப் பார்ப்பான்; பொழில் உறையும் புள்ளை நோக்கும்-அச்சோலையில் வசிக்கிற சக்கரவாகப்பறவைகளைப் பார்ப்பான்; பூ கொம்பின் எழிலை நோக்கும்-பூங்கொம்புகளினது அழகைப்பார்ப்பான்; (அப்படிப் பார்ப்பவன்), இள மயிலின் இயல்பைநோக்கும் இயல்பு ஆனுள் - இளமையுடைய மயிலின் சாயலை யொத்த சாயலையுடைய சீதையினது, குழலை நோக்கி - கூந்தலைக்கருதியும், கொங்கை இணை குவட்டை நோக்கி - மலைகள்போன்ற இரண்டு தனங்களைக் கருதியும், அ குவட்டின் தொழிலை நோக்கி - அத்தனங்களின்மே லெழுதியுள்ள சித்திரங்களைக் கருதியும், தன்னுடைய தோளை நோக்கி - (அக் கொங்கைகளிற் சேர்தற்குரிய) தனதுதோள்களைப் பார்த்தும், நாள் கழிப்பான் - பொழுது போக்குபவனுனன்; (எ - று.)

சீதையைப் பிரிந்து வருந்தும் இராமன், பொழிலைப்பார்த்துச் சீதையின் கூந்தலையும், சக்கரவாகப்பறவைகளைப்பார்த்து அவள் தனங்களையும், பூங்கொடிகளின் அழகைப்பார்த்து அவள் தனங்களின் மீது எழுதியுள்ள தொய்யிலையும் நினைத்ததாகக் கூறியதனுல் நினைப்பணி; பொழில் - குழலுக்கு இருண்ட கருநிறத்திலும், இணை பிரியாத சக்கரவாகப்பறவையும் பூங்கொம்பும் - இணைக்கொங்கைக்கும் தொய்யிலுக்கும், வடிவத்திலும் உவமை யெனக்காண்க. இது - முறைநிரனிறை. 'நாள் கழிப்பான்' என்றது. சீதையைத் தேடுதற்கும் இராவணனைத் தொலைத்தற்கும் விரைந்து முயலாமல் இராமன் இங்ஙனஞ் சிறிதுபொழுது கழிக்கலுற்ருனென்றவாறு; ஆனதுபற்றியே, அடுத்த கவியில் இலக்குமணன் "பொன்னை நாடா தீண்டிருத்தல் பொருளோ" என்பான். பி-ம்:—[1] இயலை. (1067)

## 32.—இராமலக்குமணர் இராவணனுள்ளவிடத்தைத் தேடிச் செல்லுதல்.

அன்ன காலை யிளவீர னடியின் வணங்கி நெடியோயப்
பொன்னை நாடா தீண்டிருத்தல் பொருளோ வென்னப் புகழோனுஞ்
சொன்ன வரக்க னிருக்குமிடந் துருவி யறிதுந் தொடர்ந்தென்ன [ரால்.
மின்னுஞ் சிலையார் மலை[1]தொடர்ந்த வெயில்வெங் கானம் போயின

(இ - ள்.) அன்ன காலை - அப்பொழுது, இள வீரன் - இளைய பெருமாளான இலக்குமணன், அடியின் வணங்கி - (இராமனது) திருவடிகளில் வணங்கி, 'நெடியோய் - பெரியோனே! அ பொன்னை நாடாது ஈண்டு இருத்தல் பொருள் ஓ - அந்தச் சீதையைத் தேடாமல் (இவ்வாறு) இங்கேயே இருப்பது தகுதியோ?' என்ன - என்று சொல்ல,—புகழோன்உம் - புகழுடைய இராமபிரானும், 'சொன்ன -

(சடாயுவினால்) சொல்லப்பட்ட, அரக்கன் - இராவணன், இருக்கும் இடம் - இருக்கிற இடத்தை, துருவி தொடர்ந்து அறிதும் - தேடிச் சென்று அறிவோம்,' என்ன - என்று சொல்ல,—(பின்பு), மின்னும் சிலையார்-விளங்குகிற வில்லையுடைய அவ்விருவரும், மலை தொடர்ந்த- மலைகள் தொடர்ச்சியாகப்பொருந்திய, வெயில் வெம் கானம்-வெயிலினால் வெப்பங்கொண்ட காட்டில், போயினர்-சென்றார்கள்; (எ - று.)

மின்னும் சிலை ஆர் என்று எடுத்து, மின்னுகின்ற கற்கள் நிறைந்த என மலைக்கு அடைமொழியாக்குதலும் ஒன்று. ஆல் - அசை. பி-ம்:—[1] தொடர்துமென. (1068)

வேறு.

## 33.—இராம லட்சுமணர் இராவணனிருக்கையைத்தேடிய வண்ணம் பதினெட்டுயோசனை தூரங் கடத்தல்.

ஆசை சுமந்த [1]நெடுங்கரி யன்னார்
பாசிலை துன்று வனம்பல பின்னாக்
காசறு குன்றினொ டாறு கடந்தார்
யோசனை யொன்பதொ டொன்பது சென்றார்.

(இ - ள்.) ஆசை சுமந்த நெடு கரி அன்னார்-திக்குக்களைத் தாங்குகிற பெரிய யானைகளை [திக்கஜங்களை] ஒத்தவர்களாகிய இராம லக்குமணர்,—பசு இலை துன்று பல வனம் பின ஆ - பச்சிலைகள் நெருங்கிய பல காடுகள் பின்னாகக்கழிய, காசு அறு குன்றினொடு - குற்றமற்ற மலைகளையும், ஆறு-நதிகளையும், கடந்தார்-தாண்டினவர்களாகி, ஒன்பதொடு ஒன்பது யோசனை சென்றார்-பதினெட்டுயோசனை தூரம் நடந்துசென்றார்கள்; (எ-று.)

இனி, முதலடிக்கு - (பகைவனைக் காணவேண்டுமென்ற) ஆசை நிறைந்த இராமலக்ஷ்மண ரென்றும் கூறுவாருமுளர். [1]நெடுங்கிரி யன்னார் என்ற பாடத்துக்கு-குலமலைபோன்றவரென்க.

இதுமுதல் முப்பது கவிகள்-பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (1069)

## 34.—சீதையைத் தேடிய இராமலட்சுமணர் ஒருசோலையைச் சேர்தல்.

மட்படி செய்த தவத்தினின் வந்த
கட்படி கோதையை நாடினர் காணார்
உட்படி கோப முயிர்ப்பொடு பொங்கப்
புட்படி யுங்குளிர் [1]கார்ப்பொழில் புக்கார்.

(இ-ள்.) (இராமலட்சுமணர்கள்),—மண் படி செய்த தவத்தினின் - பூமி செய்த நல்வினைப்பயனால், வந்த - (அதனிடத்து) அவதரித்த, கள படி கோதையை - தேன்பொருந்திய மாலையையுடைய சீதையை, நாடினர் காணார் - தேடிக் காணாதவர்களாய்,—உள் படி கோபம்

உயிர்ப்பொடு பொங்க-மனத்திற்பொருந்திய கோபம் பெருமூச்சோடு வெளிப்பட, புள் படியும் குளிர் கார் பொழில்-பறவைகள் தங்கப்பெற்ற குளிர்ந்த பெரியதொரு சோலையில், புக்கார்-புகுந்தார்கள்; (எ-று.)

தேடிய சீதையைப் பலவிடத்துங்காணுமல் இராமலட்சுமணர்கள் ஒருசோலையிற் புக்கனரென்பதாம். சீதை பூமிக்குப் பெண்ணுகப் பிறந்தமையால், 'மட்படிசெய்ததவத்தினின்வந்த கட்படிகோதை' என்றுர். கார்ப்பொழில் - மேகந்தவழுஞ் சோலையுமாம். பி - ம்:—[1]வார்பொழில். (1070)

## 35.—சூரியாத்தமனம்.

ஆரியர் சிந்தை யலக்க ணறிந்தான்
நாரியை யெங்கணு [1]நாடின ணுடிப்
பேருல கெங்கு [2]முழன்றனன் பின்ஞு
[3]மேருவை வெங்கதிர் மீள [4]மறைந்தான்.

(இ - ள்.) வெம் கதிர் - உஷ்ணகிரணங்களையுடைய சூரியன்,—ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான் - அறிவிற் சிறந்த அவ்விராமலக்குமணரது மனத்திலுள்ள துன்பத்தை அறிந்தவனுகி, நாரியை எங்கணும் நாடினன் நாடி - சீதையை எங்கும் நன்றுகத் தேடிப்பார்த்து, பேர் உலகு எங்கும் உழன்றனன்-பெரியபூமிமுழுதும் அலைந்துதிரிந்து, மேருவை பின் ஆ மீள மறைந்தான்-மேருபருவதம் தனக்குப் பின்புறத்திலேயாம்படி அஸ்தமித்தான்; (எ - று.)

சூரியன் மேருவின் இப்புறம் முழுதும் தேடிப்பார்த்தும் சீதை அகப்படாமையால் அப்புறத்தேனும் உளளோ என்று தேடிப் பார்க்கச் செல்பவன்போல மறைந்தா னென உத்பிரேட்சித்துக் கூறியவாறு; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. வெங்கதிர்-பண்புத்தொகையன்மொழி. பி - ம்:—[1]நாடினர். [2]உழன்றனர். [3]மேருவின்வெங் கதிரோனும். [4]விரைந்தான். (1071)

## 36.—எங்கும் இருள் மூடுதல்.

[1]அரண்டரு குஞ்செறி யஞ்சன புஞ்சம்
முரண்டன [2]போலிரு ளெங்கணு முந்தத்
தெருண்டறி வில்லவர் சிந்தையின் முந்தி
இருண்டன மாதிர மெட்டு மிரண்டும்.

(இ - ள்.) அரண் தருகும் - (இவர்களை இஷ்டப்படி எங்கும் போகவொட்டாது தடுத்துக்) காவல்செய்கிற, செறி - நெருங்கிய, அஞ்சன புஞ்சம் - மையின் கூட்டங்கள், முரண்டன போல் - மாறுபாடுகொண்டு எதிர்த்தனபோல, எங்கணும் இருள் முந்த - எல்லாப்பக்கங்களிலும் இருள் முற்பட்டு நிறைய,—மாதிரம் எட்டும் இரண்டும் - பத்துத்திக்குக்களும், தெருண்ட அறிவு இல்லவர் சிந்தையின் - தெளிந்த அறிவு இல்லாதவருடைய மனம் (அஜ்ஞாநவிருள் நிறையப்பெறுதல்) போல, முந்தி - விரைந்து, இருண்டன—;

இருட்படலங்கள் மாறுபாடுகொண்டு எதிர்த்தனபோலப் பத்துத்திசைகளிலும் கம்மிக்கொண்டன என்பதாம். அங்ஙன் இருள் நிறைந்ததற்கு அறிவில்லவர் சிந்தையை உவமை கூறினர்: இதில் தற்குறிப்பேற்றமும், உவமையும் சேர்ந்துவந்தன. பத்துத் திசைகள் - நான்குபெருந்திசைகளும், நான்குகோணத்திசைகளும், கீழும், மேலும். [1]இரண்டருகுஞ் செறியஞ்சனபுஞ்சம் என்ற பாடத்துக்கு, செறி அஞ்சன புஞ்சம் - அடர்ந்த மைத்திரள், இரண்டு அருகும் முரண்டன போல் - இருபுறத்தும் வளைந்து கொண்டாற் போல என்க. பி - ம்:—[2]பேருலகெங்கணு முந்தித். (1072)

## 37.—அவ்விருவரும் அங்கு ஓர் பளிக்கறையில் தங்குதல்.

[1]இளிக்கறை யின்சொ லியைந்தன பூவை
கிளிக்கறை யும்[2] பொழில் கிஞ்சுக வேலி
ஒளிக்கறை [3]மண்டில மொத்துள [4]தாங்கோர்
பளிக்கறை கண்டதில் வைகல் பயின்றார்.

(இ - ள்.) இளிக்கு - இளியென்னும் இசைக்கு, அறை - (ஒப்புமையாகக்) கூறப்பட்ட, இன் சொல் - இனியசொற்களை, இயைந்தன - உடையனவான, பூவை - நாகணவாய்ப்பறவைகள், கிளிக்கு - கிளிகளுக்கு, அறையும் - (அவ்வினியசொற்களைக்) கற்பித்தற்கிடமான, பொழில் - (தாம்புகுந்த) அச்சோலையில், கிஞ்சுகம் - முருக்கமரங்களை, வேலி - வேலியாகவுடையதும், ஒளி கறை மண்டிலம் ஒத்து உளது - பிரகாசத்தையும் களங்கத்தையுமுடையதான மண்டலத்தை [சந்திர மண்டலத்தை] ஒத்துள்ளதுமாகிய, ஓர் பளிங்கு அறை - பளிங்குக்கற்களினாலாகிய ஓர் அறையை, கண்டு—, அதில் வைகல் பயின்றார் - அதில் - (இராமலக்ஷ்மணர்) தங்குபவரானார்கள்; (எ-று.)—ஆங்கு - அசை.

அச்சோலையில் பளிக்குப்பாறை யொன்றைக் கண்டு அதில் தங்கினரென்பதாம். இளி - ஏழிசைகளி லொன்று. அறை - உவமவுருபுமாம். ஒளிக்கறை மண்டிலமெனவே, சந்திரமண்டலமென்றாயிற்று. பி-ம்:—[1]இளிக்கிறையுஞ், இளிக்கறையும். [2]கிளர். [3]மண்டிலம். [4]அங்கோர். (1073)

## 38.—இராமன் கட்டளைப்படி இலக்குமணன் நீர் கொணரச் செல்லுதல்.

அவ்விடை யெய்திய வண்ண லிராமன்
வெவ்விடை போலிள வீரனை [1]வீர
இவ்விடை [2]நாடினை நீர்கொணர் கென்றான்
தெவ்விடை வில்லவ னுந்தனி சென்றான்.

(இ - ள்.) அ இடை எய்திய - அவ்விடத்தில் தங்கிய, அண்ணல் இராமன் - பெருமையிற்சிறந்த இராமபிரான், வெம் விடை போல் இள வீரனை - வலிய காளைபோன்ற இளையவீரனை இலக்குமணனை (நோக்கி), 'வீர - வீரனே! இ இடை நீர் நாடினை கொணர்க - இவ்விடத்தில் தண்ணீர்தேடிக் கொண்டுவருவாய்,' என்றான்—;

(அப்பொழுது), தெவ் இடை வில்லவன் உம் - பகைவர்கள் பின்னிடு தற்குக் காரணமான வில்லையுடைய இலக்குமணனும், தனி சென்றான் - தனியே போயினான்; (எ - று.)

வீரனுக்கு விடை - பலத்திலும் நடையிலும் காம்பீரியத்திலும் உவமை. விடை - வ்ருஷமென்ற வடமொழி. தெவ் - பண்பாகு பெயர். பி-ம்:—[1]வீரா. [2]நாடி நன்னீர். (1074)

**39 —இதுமுதல் நான்குகவிகள் - அயோமுகி இலக்குமணனைக் கண்டு காமுற்று அவனெதிரில் வருதலைக் கூறும்.**

எங்கணு [1]நாடின னீரிடை காணான்
சிங்க மெனத்தமி யன்றிரி வானை
அங்க[2]வ னத்து ளயோமுகி [3]யான
வெங்க ணரக்கி விரும்பினள் கண்டாள்.

(இ - ள்.) எங்கண் உம் நாடினன் நீர் இடை காணான் - எவ்விடத்தும் தேடியும் நீரை அவ்விடத்திற் காணாதவனாய், சிங்கம் என தமியன் திரிவானை - சிங்கம்போலத் தனியே திரிகின்ற இலக்குமணனை, அங்கு - அப்பொழுது, அ வனத்துள் - அக்காட்டில், அயோமுகி ஆன வெம் கண் அரக்கி - அயோமுகி யென்னுங் கொடுந்தன்மையுள்ள இராட்சசி, கண்டாள் விரும்பினள்-பார்த்து ஆசைகொண்டாள்; (எ - று.)

நீரைத் தேடித் தனிச் சென்ற வீரனை அக்காட்டில் அயோமுகி கண்டன ளென்பதாம். சிங்கம் - பலபராக்கிரமங்களுடன் வனத்தில் தனியேதிரிதற்கு உவமை. 'அங்கவ்வனத்துள்' எனபது, அங்க வனத்து ளெனத் தொக்கது. பி-ம்:—[1]நாடிநன்னீர். [2]வனத்தில். [3]என்பாள். (1075)

40. நன்மதி யோர்புகல் மந்திர நாமச்
சொன்மதி யாவர வின்[1]றொடர் கிற்பாள்
தன்மத னோடுதன் வெம்மை தணிந்தாள்
மன்மத னாமிவ னென்னு மனத்தாள்.

(இ - ள்.) நல் மதியோர் புகல் - நல்லறிவுடையவர் கூறுகிற, நாமம் மந்திரம் சொல் - அச்சத்தைத்தரும்படியான மந்திரங்களை, மதியா - மதித்து அடங்காத, அரவின்-பாம்பு போல, தொடர்கிற்பாள் - (இலக்குமணனைத்) தொடர்ந்துசெல்லும் அயோமுகி,— இவன் மன்மதன் ஆம் என்னும் மனத்தாள் - இவன் (அழகினால்) மன்மதனேயாவ னென்ற எண்ணமுடையவளாய், தன் மதனோடு தன் வெம்மை தணிந்தாள் - (அவனிடத்திலுள்ள காதலால் தான் அவனைத் தழுவ எண்ணித்) தனது செருக்கும் தன்கொடுமையும் தணியப்பெற்றாள்; (எ - று.)

தடைக்கு அஞ்சாத பாம்புபோலத்தொடர்பவளாகி, அயோமுகி, இலக்குமணனிடத்துக் காதலால் செருக்கும் கொடுமையும் தணியப் பெற்றாளென்க. இனி, முதலிரண்டடிக்கு - பெரியோர் சொல்லும்

சிறந்த உபதேசமொழிகளைக் கேளாதவளும் பாம்புபோலக் கொடிய வளுமான அயோமுகி யென்று பொருள் கூறலுமொன்று. மதன்- இறுதிப்போலி. பி - ம்:—[1]சுடர்கிறபாள். (1076)

41. அழுந்திய [1]சிந்தை யரக்கி யலக்கண்
[2]எழுந்துயர் [3]காதலின் வந்தெதிர் நின்ருள்
[4]புழுங்குமென் னேவொடு புல்லுவெ [5]னன்றி
விழுங்கு வெனேவென [6]விம்ம லுழன்ருள்.

(இ - ள்.) அழுந்திய - (இலக்குமணனிடத்துப்) பதிந்த, சிந்தை- கருத்தையுடைய, அரக்கி - அயோமுகி,—அலக்கண் எழுந்து உயர் காதலின்-வருத்தம் மிக மிகுதியாயுண்டாதற்குக்காரணமான ஆசை யினால், எதிர் வந்து நின்ருள் - இலக்குமணனெதிரில் வந்து நின்று, —'புழுங்கும் என் நோவொடு புல்லுவென் அன்றி - மனமழிதற்குக் காரணமான எனது ஆசைநோயினால் (இவனைத்) தழுவுவேனே யல் லாமல், விழுங்குவென்ஓ-கொன்றுதின்பேனே? [தின்னமாட்டேன்],' என - என்று எண்ணி, விம்மல் உழன்ருள - ஏக்கங்கொண்டு வருந் தினள்; (எ-று.)

தான் மனிதரைக் கொன்றுதின்னும் அரக்கியாயிருந்தும், இலக்குமணனிடத்துக்காதல்கொண்டு இன்பமனுபவிக்கக்கருதின ளாதலின், விழுங்கேனென்ருள். நோவொடு, 'ஒடு' - கருவிப்பொரு ளில் வந்தது. ஓ - எதிர்மறை. பி - ம்:—[1]சிந்தையளாகி. [2]எழுந்தன. [3]காதலெழத்தனி. [4]புழுங்குறுநோய்கொடு, புழுங்கியமெய்யொடு, புழுங்குமென்னேய்கெடப். [5]என்கோ. [6]வெம்மை யுழந்தாள். (1077)

42. இரந்தனெ னெய்திய போ[1]தி சையாது
[2]கரந்தன னேனனி கொண்டு கடந்தென்
[3]முரஞ்சினின் மேவி முயங்குவெ [4]னென்று
[5]விரைந்தெதிர் வந்தன டீயினும் வெய்யாள்.

(இ - ள்.) தீயின்உம் வெய்யாள் - நெருப்பினுங் கொடிய அந்த அயோமுகி,—'இரந்தனென் எய்திய போது - (நான் இவனை) வேண் டிக்கொண்டு நெருங்கும்பொழுது, (இவன்), இசையாது-(என்வேண்டு கோளுக்கு) உடன்படாமல், நனி கரந்தனன் ஏல் - மிகவும் மறுத்து விடுவனுனால், கொண்டு - (இவனை) எடுத்துக்கொண்டு, கடந்து-அப் பாற்சென்று, என் முரஞ்சினில் மேவி - எனது குகையிற் போய், முயங்குவென் - (இவனை) வலியத் தழுவுவேன்,' என்று - என்று எண்ணி, விரைந்து எதிர்வந்தனள் - வேகமாக இலக்குமணனெதிரில் வந்தாள்; (எ - று.)

முரஞ்சு - பாறை. மலைக்குகைக்கு, ஆகுபெயர். மேல் 58 - ஆங் கவியில் "என்முழைதன்னுள் அடைத்து" எனவருதலால், இங்குக் குகையென்று பொருள்கொள்ளுதல் சாலும். பி - ம்:—[1]இயையாது. [2]கரந்தனனென்னிற். [3]உரந்தனின்மேவியுயங்குவென். [4]என்னு. [5]விரைந்தனள். (1078)

## 43.—இதுமுதல் ஆறுகவிகள் - அயோமுகியின் தன்மை கூறும்.

[1]உயிர்ப்பி னெருப்புமிழ் கின்றன [2]ளொன்ற
எயிற்றின் மலைக்குல [3]மென்றினி துண்ணும்
[4]வயிற்று [5]வயக்கொடு மாசுணம் [6]வீசு
கயிற்றி [7]னிசைத்த முலைக்குழி கண்ணாள்.

ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உயிர்ப்பின் நெருப்பு உமிழ்கின்றனள்-பெருமூச்சினால் நெருப்பை வெளிப்படுத்துகிறவளும்,—எயிற்றின் - பற்களினால், ஒன்ற - ஒருசேர, மலை குலம் - யானைக்கூட்டங்களை, மென்று இனிது உண்ணும் - கடித்து நன்றாகஉட்கொள்ளுகிற, வயிறு - வயிற்றையும், வய கொடு மாசுணம் வீசு கயிற்றின் - வலிய கொடிய பெரும்பாம்புக ளாகிய நீண்டகயிற்றினால், இசைத்த - சேர்த்துக்கட்டிய, முலை - தனங்களையும், குழி கண்ணாள்-ஆழ்ந்தகண்களையு முடையவளும்,—

மலை - யானைகளுக்கு உவமையாகுபெயர். வய - வலியுணர்த்தும் உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது தொல்காப்பியம். பி - ம்:— [1]உயிர்ப்பு. [2]போன்ற. [3]எண்ணிலது. [4]வயிற்றள். [5]வலக். [6]வீசும். [7]நிரைத்த. (1079)

44. பற்றிய கோளரி யாளி பணிக்கண்
தெற்றிய பாத சிலம்பு [1]தரித்தாள்
[2]இற்றுக யாவையு [3]மீறுறு மந்நாள்
முற்றிய ஞாயிறு [4]போலு முகத்தாள்.

(இ - ள்.) பற்றிய - (தான்) பிடித்த, கோள் அரி - வலிய சிங்கங் களையும், யாளி - யாளிகளையும், பணிக்கண் தெற்றிய - பாம்பாகிய கயிற்றிற் சேர்த்துக்கட்டிய, பாத சிலம்பு-பாதசரத்தை, தரித்தாள்- அணிந்தவளும்,—யாவைஉம் இற்று உக ஈறு உறும் அ நாள் - எல் லாப்பொருள்களும் அழிந்தொழியும்படி முடிவுறுகிற அவ்வூழிக்கால த்தில், முற்றிய - உக்கிரங்கொண்ட, ஞாயிறு - சூரியனை, போலும் - ஒத்த, முகத்தாள் - முகத்தையுடையவளும்,-(எ - று.)—பணி= பணீ: படத்தையுடையதெனப் பாம்புக்குக் காரணக்குறி. பி - ம்:— [1]சிலம்ப. [2]எற்றிய. [3]வீவுறும். [4]போல. (1080)

45. ஆழி வறக்க முகக்க [1]வமைந்த
மூழை யெனப்பொலி மொய்பில வாயாள்
கூழை புறத்து [2]விரிந்ததொர் கொட்பால்
ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பாள்.

(இ-ள்.) ஆழி வறக்க முகக்க அமைந்த-கடலும் வற்றிப்போம்படி மொள்ளுவதற்கு அமைந்த, மூழை என பொலி - அகப்பை போல விளங்குகிற, மொய் பிலம் வாயாள்-வலிய பெரிய உட்டுளையையுடைய வாயையுடையவளும்,—கூழை புறத்து விரிந்தது ஓர் கொட்பால் -

செம்பட்டமயிர் வெளியே விரிந்து விளங்குந் தன்மையால், ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பாள்-பிரளய காலாக்கினியின் வடிவத்தை யொப்பவளும்,—(எ - று.)

திறந்த வாய் மூழையை யொத்திருக்க, கூழை ஊழின் நெருப் பினை யொக்குமென்க. இனி, மூழை = முழை என்பாரும் முகவை யென்பாரு முளர். முகவை - நீர்முகக்குங்கருவி. கூழை - பெண்மயிர். ஊழித்தீயை உவமை கூறியதனால், கூழை என்பதற்கு - செம்பட்ட மயிரென்க. உருத்தனை-உருவை; தன்-சாரியை. இனி, நான்காமடிக்கு -காலாக்கினிருத்திரனைப் போன்றவளென்று உரைகூறுவாரும்உளர். பி - ம்:—[1] அமைத்த. [2] விரித்தது. (1081)

46. தடி[1] தட வத்[2] தலை பல[3] தழு வத்[4] தாள்
நெடிதடை யக்குடர் [5]கெழுமு [6]நிணத்தூண்
[7]படிதட வப்[8]பல பாவ மிசைக்கும்
[9]கடிதட வத்தின ளுருமு கறிப்பாள்.

(இ - ள்.) தடி தடவு அ தலை பல தழுவ-அளவுகோலால் அளத் தற்குரிய அவ்விடத்தை யொத்த பல இடங்கள் (ஓரடிவைப்பிலே) பொருந்தும்படி, தாள்-(தனது) பாதங்கள், நெடிது அடைய - வெகு தூரம் செல்லவும்,—குடர் கெழுமு நிணத்து ஊண் படி தடவ- (தான் தின்னுகின்ற) குடல்களோடுகூடிய கொழுப்பையுடைய (மாமிசமாகிய) உணவு தரையிற் சிந்தவும், (நடக்கின்ற நடையையுடையவளும்),—பல பாவம் இசைக்கும் கடி தடவத்தினள் - மிக்கபாவங்களைச்செய்தற்குக் காரணமான அல்குலையுடையவளும், உருமு கறிப்பாள் - இடியை யொத்த ஓசை யுண்டாம்படி பற்களைக் கடிப்பவளும்,—(எ-று.)

அயோமுகி, தனது ஒவ்வோர் வைப்புக்கும் இடையி லுள்ள இடம் பலகோல் நீளமாகும்படி யிருக்கவும், வரும் வேகத்தால் உண்ணும் மாமிசங்கள் தரையிற் பலபடி சிதறவும் நடந்துவந்தன ளென்க. 'உருமு கறிப்பாள்' என்றது, அவள் பற்களைக் கடிக்கும் போது உண்டாகும் ஓசை இடியோசைபோன்றிருத்தலால். கடி தடம் - இடையிடம் அல்லது அல்குல். சிறுபான்மை அத்துச் சாரியையின் அகரம் கெடா தாதலால், கடிதடவத்தினள் என வந்தது.

இனி, இப்பாட்டுக்கு—தடி தடவ - இறைச்சித்துண்டுகள் பொருந்தவும், பல தலை தழுவ-அநேகந் தலைகள் பொருந்தவும், தாள் நெடிது அடைய - கால்கள் மிகுதியாகப் பொருந்தவும், குடர் கெழுமு நிணம் தூண் படி தடவ-குடல்களோடு பொருந்திய கொழுப்புத்திரள் (நீட்சியால்) தரையை அளாவவும், பல பாவம் இசைக்கும்-(இவ்வாறு சின்னபின்னமாக்கி) அநேகம் பிராணிகளைக் கட்டிய, கடிதடவத் தினள்-இடையையுடையவளும், உருமு கறிப்பாள்-இடியை மென்று தின்னவல்லவளும் என்று உரைப்பாரு முளர். முன்னையபொருளில், பாவம்-பாபமென்ற வடசொல்லின் திரிபாய், தீவினையென்ற பொரு ளது. பின்னைய பொருளில், பாவம் - பவத்தை [பிறப்பை] யுடையது: பிராணியென்க. பி-ம்:—[1] தடவி. [2] பலதலை. [3] தழுவி. [4] தான். [5] கெழுவு.

[6]நிணத்தாள். [7]அடி. [8]படவரவம், பலவரவம். [9]கடிதடமொத்தவள். (1082

47. [1]இவை[2]யிறை யொப்பன வென்ன விழிப்பாள்
அவை[3]குளி ரக்கடி தழலு மெயிற்ருள்
குவைகுலை யக்கடல் [4]குவிய வலைப்பாள்
நவையில் புவித்திரு நாண நடப்பாள்.

(இ-ள்.) இவை-இக்கண்கள், இறை ஒப்பன-சிவபிரான் கண்களையொக்கும், என்ன - என்றுசொல்லும்படி, விழிப்பாள்- விழித்துப் பார்ப்பவளும்,—அவை குளிர-அந்நெருப்புகள் குளிர்ந்தனவென்னும்படி, கடிது அழலும்-மிகவுங் கொடுமை கொண்டுள்ள, எயிற்ருள் - பற்களையுடையவளும்,—குவை குலைய-(மலைகள்) நிலைகுலைந்து அழியும்படியும், கடல் குவிய - கடல்கள் ஒன்ருேடொன்று சேரும்படியும், அலைப்பாள் - வருத்துபவளாகி, நவை இல் புவி திரு நாண நடப்பாள்-குற்றமற்ற பூமிதேவி வெட்கமடையும்படி நடப்பவளும்,—(எ-று.)

முதலடிக்குச்சிவபிரானையொத்து நெருப்புவெளிப்பட விழிப்பவளென்க. உலகத்தில் ஒருவர்செய்த பழி அவ்வினத்தவரையுந் தொடருமாதலால், மெல்ல நடக்கவேண்டிய பெண்ணினத்தைச் சேர்ந்தவளான அயோமுகியொருத்தி மிகக்கடுமையாக நடந்தது பற்றிப் பெண்தன்மையுள்ள நமக்கும் பழிவருமேயென்றுபூமிதேவி வெட்கமுற்றன ளென்பது, பின்னிரண்டடியின் கருத்து. இனி, நாண-நடைவிசையால் அதிர்ச்சியடைய எனினுமாம். இறுத்தல் - அழித்தலாதலால், இறை-ஊழித்தீயென்பாருமுளர். பி-ம்:—[1]இவர். [2]பிறையொப்பனவெனின திழிப்பாம். [3]கனல. [4]குமுறவுரைப்பாள், குமிறவுரைப்பாள். (1083)

48. நீளர வச்சரி தாழ்கை நிரைத்தாள்
[1]ஆளர வப்புலி யார மணைத்தாள்
[2]யாளி யினைப்பல தாலி யிசைத்தாள்
கோளரி யைக்கொடு தாழ்குழை யிட்டாள்.

(இ - ள்.) நீள் அரவம் சரி தாழ் கை நிரைத்தாள் - நீண்ட பாம்புகளைக் கைவளைகளாகத் தொங்குகின்ற (தன்) கைகளில் வரிசையாக அணிந்தவளும்,—அரவம் ஆள் புலி ஆரம் அணைத்தாள் - கர்ச்சனையையுடைய ஆண்புலிகளை ஆரமாகக்கொண்டு அணிந்தவளும்,—பல யாளியினை தாலி இசைத்தாள் - அநேகயாளிகளைச் சேர்த்துத் தாலியாகக் கட்டிக்கொண்டவளும்,— கோள் அரியை கொடு தாழ் குழை இட்டாள் - வலிய சிங்கங்களைக்கொண்டு தொங்குகின்ற காதணியாக அணிந்தவளும் ஆகிய அயோமுகி,—(எ - று.)—நின்றனளென அடுத்த கவியில் முடியும்.

இனி, 'ஆளரவப்புலியாரமணைத்தாள்' என்பதற்கு, ஆள்கின்ற [தாங்குகின்ற] பாம்பாகிய கயிற்றிற் கட்டிய புலியை ஆரமாக அணிந்தவள் என்றும் பொருள்கொள்ளலாம்; இப்பொருளில், அரவம் என்றசொல் - 'அரா' என்பது குறியதன்கீழ் 'ஆ' குறுகி

அம்முச்சாரியை பெற்ற தென்க; முன்னைய பொருளில், 'ரவம்' என்ற வடசொல் முதலில் அகரம்பெற்று வந்ததாம். பி-ம்:—[1] ஆளிவயப். [2] தாளரியைப். (1084)

## 49.—இலக்குமணன் அயோமுகியைக் காணுதல்.

நின்றன ளாசையி னீர்கலு ழுங்கண்
குன்றி நிகர்ப்ப குளிர்ப்ப விழிப்பாள்
மின்றிரி கின்ற வெயிற்றின் விளக்கால்
கன்றிரு ளிற்றிரி கோளரி கண்டான்.

(இ - ள்.) குன்றி நிகர்ப்ப - (இயற்கைச் செந்நிறத்தாற்) குன்றி மணியை ஒத்திருப்பனவான, ஆசையின் நீர் கலுழும் கண் - காம நோயால் நீர் பெருகுங் கண்களைக்கொண்டு, குளிர்ப்ப விழிப்பாள் - குளிரநோக்குபவளாகி, நின்றனள்—;(அப்பொழுது), கன்று இருளில் திரி கோள் அரி - மிக்க இருட்டில் திரிகின்ற வலியசிங்கம் போன்ற இலக்குமணன், மின் திரிகின்ற எயிற்றின் விளக்கால் - காந்தியை வீசுகின்ற (அவளது) பற்களினொளியாகிய விளக்கொளியினால், கண் டான் - (அவ்வயோமுகியைப்) பார்த்தான்; (எ - று.)

அயோமுகி குன்றிநிகர்க்குங் கண்களைக் காதலால் குளிர விழிப் பாளாய்த் தன் எயிற்றினொளியால் இருளிரிய நிற்க அந்தச்செறிந்த இருள்வேளையில் நீர் கொணரத்திரியும் இலக்குமணன் அவ்வரக்கி யைக் கண்டனனென்பதாம். கோளரி - வீரனுக்கு உவமையாகுபெயர். நிகர்ப்ப - பெயர். (1085)

## 50.—இலக்குமணன் அவளை அரக்கி யென்று அறிதல்.

பண்டையி னாசி யிழந்து பதைக்குந்
திண்டிற லாளொடு தாடகை சீராள்
கண்டக ராய வரக்கர் கணத்தோர்
ஒண்டொடி யாமிவ ளென்ப துணர்ந்தான்.

(இ - ள்.) 'பண்டையில் - முன்பு, நாசி இழந்து பதைக்கும்-மூக்கு முதலிய உறுப்புக்களை யிழந்து வருந்தின, திண் திறலாளொடு - மிக்கவலிமையுடைய சூர்ப்பணகையோடு, தாடகை - தாடகையென் னும் அரக்கியை யொத்த, சீராள் - குணத்தையுடையவளான, இவள்—, கண்டகர் ஆய அரக்கர் கணத்து ஓர் ஒள் தொடி ஆம் - துஷ்டர்களாகிய இராக்கதர்கூட்டத்திற் பிறந்த ஒரு பெண்ணவள்,' என்பது - என்பதை, உணர்ந்தான் - (அவளைக்கண்ட மாத்திரத்தில்) அறிந்தான், (இலக்குமணன்); (எ - று.)

இராவணன் தங்கையான சூர்ப்பணகை இராமலட்சுமணர்களைக் கண்டு காமுற்று மூக்குமுதலிய உறுப்புக்களை யிழந்தமை பிரசித் தம். தாடகை - பதினாயிரம்யானைபலங்கொண்டஓர் அரக்கி; சுபாகு மாரீசர்களின் தாய். இவள் இருடிகளுக்கு மிக்க துன்பஞ் செய்து வந்தமையால், விசுவாமித்திரமுனிவர் வேண்டுகோளின்படி இராம னாற் கொல்லப்பட்டாள். பண்டை - ஐயீற்றுடைக் குற்றியலுகரம்,

நாசி - நாஸிகா என்னும் வடசொல்லின் சிதைவு. திண்திறல் - ஒருபொருட்பன்மொழி. கண்டகர் - முட்போலக் கொடியவர்; கண்டகம் - முள். ஒண்டொடி - ஒளிய தொடியை யணிந்தவளெனப் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (1086)

## 51.—இலக்குமணன் அயோமுகியை 'நீ யார்?' என்று வினவல்.

பாவிய ராமிவர் பண்பிலர் [1]நம்பான்
மேவிய காரணம் [2]வேறிலை யென்பான்
மாவியல் கானின் வயங்கிருள் வந்தாய்
யாவ ளடீயுரை செய்கடி தென்றான்.

(இ - ள்.) பண்பு இலர் - நற்குணமில்லாதவரும், பாவியர் ஆம்- பாவிகளும் ஆகிய, இவர் - இவள்போன்ற ராக்ஷசிகள், நம் பால் மேவிய காரணம் - நம்மிடத்தில் விருப்போடுவருதற்குஉரிய காரணம், வேறு இலை - (காமவிருப்பமேயன்றி) வேறில்லை, என்பான் - என்று எண்ணினவனாகி,—(இலக்குமணன்), 'மா இயல்கானின் - கொடிய மிருகங்கள் திரிகின்ற இக்காட்டில், வயங்கு இருள் - மிக்க இருட்டில், வந்தாய் - வந்த நீ, யாவள் அடீ - யாரடீ? கடிது உரைசெய் - விரைவாகச் சொல்,' என்றான் - என்று வினவினான்; (எ - று.)

பாவிகளாகிய இந்த அரக்கிமார் வேறு காரணமின்றிக் காம விருப்பத்தையே கொண்டு நம்மிடத்து வருகின்றாரென்று கருதி, 'நீ யார்? எங்கே வந்தாய் அடீ?' என்று இலக்குமணன் வினவினனென்பதாம். அடீ - பெண்விளியைக்காட்டும் இழிவுகுறிக்கும் இடைச்சொல். வந்தாய் - முன்னிலை யொருமை வினையாலணையும் பெயர். பி - ம்:—[1]நண்பால். [2]வேறினி. (1087)

## 52.—அயோமுகி தான் வந்த காரணத்தைக் கூறுதல்.

பேசின னங்கவள் பேசுற [1]நாணாள்
ஊச [2]லுழன்றழி [3]சிந்தைய ளுந்தான்
[4]நேசமி லன்பின ளாயினு நின்பால்
ஆசையின் வந்த வயோமுகி யென்றாள்.

(இ-ள்.) பேசினன்-(இலக்குமணன் இவ்வாறு) கூறினன்: அங்கு -அப்பொழுது, ஊசல் உழன்று அழி சிந்தையள் அவள்உம் - (தன் கருத்து முற்றுமோ முற்றாதோ என்று)ஊசலாடிவருந்தும் மனத்தையுடைய அவ்வரக்கியும், பேசுற நாணாள் - (அவ்வாண்மகனெதிரிற்) பேசுதற்கு நாணமடையாதவளாய், 'நேசம் இல் அன்பினள் ஆயின் உம் பழையநண்பு இல்லாத அன்புடையவளானாலும் [நான் இது வரையில் உன்னிடத்தில் அன்போடு பழகாதவளாயிருந்தாலும்], நின்பால்-உன்னிடத்தில், ஆசையின்-காதலினால், வந்த—, அயோமுகி-அயோமுகி யென்னும் பெயருடையேன்,' என்றாள் - என்று கூறினாள்; (எ-று.)—தான்-அசை.

'பேசினன்' என்பது, முற்பாட்டின் அநுவாதம். காமநோய் மிகுதியால் அவளுக்கு உயிர் போவதுவருவதுமாயிருந்தது என்பதும், இரண்டாமடியின் கருத்தாகலாம். நேசமிலன்பின ளென்பதை - நேசமன்பிலளென விகுதி பிரித்துக் கூட்டி, நான் இயல்பாக மனிதர்களிடத்து நண்பும் அன்பும் இல்லேனாயினும் என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]நாண. [2]இழந்தழி. [3]சிந்தையினேடு. [4]நேசமிலன்பிலனாயினும், ஏசலனன்பினனமினி. (1088)

53. பின்னு [1]முரைப்பவள் பேரெழில் வீரா
முன்ன மொருத்தர் தொடா[2]முலை யோடும்
பொன்னின் மணித்தட மார்பு புணர்ந்தென்
இன்னுயி ரைக்கடி தீகுதி யென்றாள்.

(இ - ள்.) பின்னும் உரைப்பவள் - மேலும் சொல்லுகின்றவளாய், (அவ்வரக்கி),—(இலக்குமணனை நோக்கி), 'பேர் எழில் வீரா - மிக்க அழகையுடைய வீரனே! முன்னம் ஒருத்தர் தொடா முலையோடு உம் - இதற்குமுன்னே ஒருவராலும் தொட்டு அனுபவிக்கப்படாத (எனது) தனங்களுடனே, பொன்னின் மணி தட மார்பு புணர்ந்து - பொன்னிறமான அழகிய பெரிய (உனது) மார்பு (பொருந்தத்) தழுவி, என் இன் உயிரை கடிது ஈகுதி - எனது இனியஉயிரை விரைவிற் கொடுத்தருள்வாய்,' என்றாள்—; (எ - று.)

என்னை விரைவிற் புணராயாயின் இறந்துபடுவே னென்பது கருத்து. மிகக்கொடிய அரக்கி இலக்குமணனிடத்தில் தாழ்ந்து கூறினமையை விளக்க 'ஈகுதி' என இழிந்தோர் கூற்றிறாற் கூறினர். கண்டவரோடும் புணர்பவளென்று என்னைக் கருதாதே யென்பது, இரண்டாமடியில் தெரிவிக்கப்பட்டது: இங்ஙன் கொள்ளுதலால், முன்னர்ச்செய்யுள் 46 - இல் 'பலபாவ மிசைக்குங் கடிதடவத்தினள்' என்றதனேடு மாறுகொளாதது காண்க. பி - ம்:—[1]உரைத்தனள். [2]முலையோடுன். (1089)

## 54.—அவள் வேண்டுகையை இலக்குமணன் மறுத்தல்.

ஆறிய சிந்தைய ளஃதுரை செய்யச்
சீறிய கோளரி கண்கள் சிவந்தான்
[1]மாறில வார்கணை யிவ்வுரை வாயிற்
கூறிடி னின்னுடல் கூறிடு மென்றான்.

(இ - ள்.) ஆறிய சிந்தையள் - கொடுமைதணிந்த மனமுடையவளாய், (அவள்), அஃது உரை செய்ய - அவ்வார்த்தையைச் சொல்ல, (உடனே) சீறிய கோள் அரி-கோபங்கொண்ட வலிய சிங்கம் போன்ற இலக்குமணன், கண்கள் சிவந்தான் - (அக்கோபத்தாற்) கண்கள் சிவந்து, 'இ உரை வாயின் கூறிடின் - இப்படிப்பட்ட சொற்களை (நீ மீண்டும்) வாயினாற் சொன்னால், மாறு இல வார் கணை - ஒப்பில்லாத நீண்ட (எனது) அம்பு, நின் உடல் கூறிடும் - உனது உடம்பைத் துண்டாக்கிவிடும்,' என்றான்—; (எ - று.)

நீ கூறிவிட்டால் அதற்கு எதிராக என் அம்புங் கூறிடுமென நயந்தோனறக் கூறியவாறு. கோளரி - உவமையாகுபெயர். கோளரி கண்கள் சிவந்தான் - உயர்திணை யெழுவாயின் பயனிலையோடு அஃறிணையெழுவாய் முடிந்த திணைவழுவமைதி. பி - ம்:—[1] மாறிலி. ()

## 55.—இரண்டுகவிகள் - அயோமுகி மீண்டும் இலக்குமணனை வேண்டுதல் கூறும்.

மற்றவ னவ்வுரை செப்ப மனத்தால்
செற்றிலள் கைத்துணை சென்னியின் வைத்தாள்
கொற்றவ நீயெனை வந்துயிர் கொள்ளப்
பெற்றிடி னின்று [1]பிறந்தனெ னென்றாள்.

(இ - ள்.) அவன் மற்று அ உரை செப்ப - அவ்விலக்குமணன் தன்கருத்துக்குமாறாக அவ்வார்த்தையைக் கூற, (அயோமுகி), மனத்தால் செற்றிலள் - மனத்திற் கோபங்கொள்ளாதவளாய், கை துணை சென்னியின் வைத்தாள் - (தனது) இரண்டு கைகளையும் தன் தலைமேல் வைத்துக்கொண்டு [தலைமேற் கைகூப்பி வணங்கி], (இலக்குமணனை நோக்கி) 'கொற்றவ-தலைவனே! நீ—, வந்து - (என்னிடம்) வந்து, எனை - என்னை, உயிர்கொள்ள - உயிர்பெற்றுவாழும்படி செய்ய, பெற்றிடின் - பெறுவேனானால், இன்று பிறந்தனென்-இன்று தான் (நான்) பிறந்த பயன்பெற்றவளாவேன்,' என்றாள் - என்று சொன்னாள்; (எ - று.)

பிறகு வெகுநாளாயும் பிறப்பெடுத்ததற்குப் பயனாக இலக்குமணனைக் கூடாது காலம் வீணே கழிந்தமையாற் கீழ்ச்சென்ற காலங்களைப் பிறவாத நாளாகவே வைத்து, அவனைக் கூடப்பெறும் அந்த நாளையே தான் புதியதாகப் பிறந்தநாளாகக் கருதி, 'இன்றுபிறந்தனென்' என்கிறாள்: இனி, காமநோயால் இறந்ததுபோன்றுள்ள தனதுஉயிரை இவ்வீரனுடைய சேர்க்கையாலேயே பெறுவதாக இவள் நினைத்தமையால், 'பிழைத்ததுபுநர்ஜந்மம்' என்றபடி 'இன்று பிறந்தனென்' என்றாளுமாம். எனை உயிர்கொள்ளுதல் - என்னை அங்கீகரித்தல். உயிர் வாங்கப்பெறுதலென்ற பொருளும் இதில் தொனிக்கும். பி - ம்:—[1]பிழைத்தனென். *(1091)*

56. வெங்கத மில்லவள் பின்னரு [1]மேலோய்
இங்கு நறும்புன [2]னாடுதி யென்னின்
அங்கையி னாலெனை யஞ்சலை யென்றால்
கங்கையி னீர்கொணர் வென்கடி தென்றாள்.

(இ - ள்.) வெம் கதம் இல்லவள் - கொடுங் கோபமற்றவளாய், (அவ்வயோமுகி),—பின்னர்உம் - பின்பும், (இலக்குமணனை நோக்கி), 'மேலோய்-சிறந்தவனே! இங்கு நறு புனல் நாடுதி என்னின் - இங்கே நல்லநீரைத் தேடுகிறாயானால், எனை-என்னை [எனக்கு], அம் கையினால்-(உனது) அழகியகையினால், அஞ்சலை என்றால் - அஞ்சாதே யென்று அபயம் அளித்தால், கங்கையின் நீர் கடிது கொணர்வென்-

கங்கையின் நீரையும் வெகு விரைவிற் கொணர்ந்து தருவேன்,' என்றாள்—; (எ - று.)

உன்னருள் பெற்ற மாத்திரத்தில் வெகுதூரத்திலுள்ளதும் மிகச்சிறந்ததுமான கங்கையின் நீரையும் கொணர்ந்துதருவதற்கு யான் சித்தமாயிருக்க, நீ ஏன் இப்படி இவ்விரவில் கஷ்டப்பட வேண்டும்? என்றாள் என்பதாம். அங்கை என்பதை அகம் கையென்று பிரித்துப் பொருள் கூறுதலும் பொருந்தும். பி-ம்:—[1]வேலோய். [2]நாடுதியேனுன், நாடுதியேலுன். (1092)

## 57.—இலக்குமணன் அயோமுகியை அச்சமுறுத்தல்.

சுமித்திரை சேயவள் சொன்னசொ லன்ன
கமித்தில னின்னிரு காதொடு நாசி
துமிப்பதன் [1]முன்பக லென்பது சொல்ல
[2]இமைத்தில ணின்றன ளின்ன நினைந்தாள்.

(இ - ள்.) சுமத்திரை சேய்-சுமத்திரையின் புதல்வனான இலக்குமணன், அவள் சொன்ன அன்ன சொல் - அவ்வயோமுகி சொல்லிய அவ்வார்த்தைகளை (க் கேட்டு), கமித்திலன் - மனம் பொருதவனாய், (அவளை நோக்கி), 'நின் இரு காதொடு நாசி துமிப்பதன் முன்பு - உனது இரண்டு காதுகளையும் மூக்கையும் அறுத்தொழிப்பதற்கு முன்னமே, அகல்-(இவ்விடம்விட்டு) ஓடிப்போ,' என்பது சொல்ல - என்றவார்த்தையைக் கூற, (அயோமுகி), இமைத்திலள் நின்றனள் - கண்ணிமையாமல் திகைத்துநின்று, இன்ன நினைந்தாள் - இவைகளை நினைப்பவளானாள்; (எ-று.)—அவற்றை அடுத்த கவியிற் காண்க.

அயோமுகியின் பேச்சைக் கேட்டதும் பொருதவனாகி, சௌமித்திரி 'உன்காதொடு நாசியையும் நான் துண்டுபடுத்தற்கு முன்னம் அப்பாலகல்வாய்' என்ன, திகைத்துக் கண்கொட்டுதலுமின்றிப் பின்வருமாறு நினைப்பவளானாளென்க. கமித்திலன் = க்ஷமித்திலன். 'காதொடுநாசி' என்றது, தனங்களுக்கும் உபலக்ஷணம். பி - ம் :—[1]முன்னகல். [2]இமைப்பற நின்றனளின்ன லுழந்தாள். (1093)

## 58.—அயோமுகி இலக்குமணனை எடுத்துச் செல்லக் கருதுதல்.

எடுத்தனெ னேகினெ னென்முழை தன்னுள்
அடைத்திவன் [1]வெம்மை யகற்றிய பின்னை
[2]உடற்படு மாலுட னேயுறு நன்மை
திடத்திது வேநல னென்றயல் சென்றாள்.

(இ - ள்.) 'எடுத்தனென் ஏகினென் - (நான் இவனை) எடுத்துச்சென்று, என் முழைதன்னுள் அடைத்து இவன் வெம்மை அகற்றிய பின்னை - எனது குகைக்குள் அடைத்துவைத்து இவனது உக்கிரத்தைத் தணித்தபின்பு, உடற்படும் - (இவன்தானே எனது கருத்துக்கு) இசைவான்; உடனே நன்மை உறும்-உடனே (எனக்கு) நல்ல சுகம் கிடைக்கும்; திடத்து இதுவே நலன் - உறுதியுடைய இச்செயலே நன்மை தருவது', என்று - என்று நினைத்து, அயல்

சென்றாள் - (தான் அவ்வாறேசெய்வதற்கு இலக்குமணனது) பக்கத்திற் போனாள்; (எ - று.)—ஆல் - ஆசை.

இவனை என் முழைஞ்சுக்கு எடுத்துப்போய் அதில் அடைத்து வைத்து இவன் வெம்மையையடக்கினால் பிறகு உடன்படுவான்: இதுவே நான் செய்யவேண்டிய திடமான செயலென்று கருதி, அயோமுகி அவ்விலக்குமணனது பக்கத்துச்சென்றன ளென்பதாம். உடன்படும் = உடற்படும்: எதுகைநோக்கித் திரிந்தது. திடம் = த்ருடம். பி - ம்:—[1]மேன்மையடக்கியபின்றை. [2]உடற்படுமாறுடனே யுறைதன்மை. (*1094*)

## 59.—அயோமுகி இலக்குமணனை எடுத்துச்செல்லுதல்.

> [1]மோகனை யென்பது [2]முந்தி முயன்றாள்
> மாக நெடுங்கிரி போலியை வவ்வா
> ஏகின ளும்பரி னிந்துவொ டேகும்
> மேக மெனும்படி நொய்தினின் வெய்யாள்.

(இ - ள்.) வெய்யாள்-கொடிய அவ்வயோமுகி,—முந்தி-விரைந்து, மோகனை என்பது -மோகத்தையுண்டாக்கும் மாயையைச் செய்வதில், முயன்றாள் - யத்தனப்பட்டு, மா கம் நெடு கிரி போலியை வவ்வா - பெரிய ஆகாயத்தை யளாவிய உயர்ந்த மலையை யொத்த இலக்குமணனைத் தூக்கிக்கொண்டு,— உம்பரின்-ஆகாயத்தில், இந்துவொடு ஏகும் மேகம் எனும்படி-சந்திரனோடுகூடிச் செல்லுகிற மேகமென்று சொல்லும்படி, நொய்தினின் - விரைவாக, ஏகினள் - சென்றாள்;

அயோமுகி மாயத்தில்முயன்று இலக்குமணனை வவ்வி வான வழியோங்கிச் சென்றாளென்க. இலக்குமணனுக்கு மலையுவமை, கலங்காநிலைமைக்குஎன்க. சந்திரன் - இலக்குமணனுக்கும், மேகம் - அயோமுகிக்கும் உவமை. பி-ம்:—[1]போகலை. [2]முந்துபுகன்றாள். (*1095*)

## 60.—இலக்குமணனை யெடுத்துச்செல்லும் அயோமுகி வருணனை.

> மந்தரம் வேலையில் [1]வந்ததும் வானத்து
> இந்திர னூர்[2]பிடி யென்னலு மானாள்
> வெந்திறல் வேல்கொடு சூரடும் வீரச்
> சுந்தர னூர்தரு தோகையு மொத்தாள்.

(இ - ள்.) (இலக்குமணனை வவ்விச்செல்லும் அயோமுகி),— மந்தரம் வேலையில் வந்ததுஉம்-சமுத்திரத்தில் வந்துபொருந்தின மந்தரபருவதமும் [மந்தரபருவதம்பொருந்தப்பெற்ற பாற்கடலும் என்றபடி], வானத்து இந்திரன் ஊர் பிடி - தேவலோகத்தில் இந்திரன் ஏறிநடத்துகிற பெண்யானையும், என்னலும் ஆனாள் - என்று உவமைகூறத்தக்கவளுமானாள்; (மேலும்), வெம் திறல் வேல் கொடு சூர் அடும் வீரம் சுந்தரன் ஊர் தரு தோகைஉம் - கொடிய பலத்தையுடைய வேலாயுதத்தால் சூரபதுமனைக்கொன்ற வீரத்தை

யுடைய அழகிய முருகக்கடவுள் ஏறிநடத்துகிற மயிலையும், ஒத்தாள்—; (எ-று.)

மந்தரத்தை இலக்குமணனுக்கும், பாற்கடலை அயோமுகிக்கும் உவமை கூறினது, பாற்கடலை மந்தரம் கலக்கினதுபோல அரக்கியை இலக்குமணன் கலக்குவிப்பா னென்று குறித்தற்கு. பிடியும், மயிலும் - அயோமுகிக்கு, கீழ் நின்று தாங்குவதில் உவமை. அழகும் சிறப்பும் வலிமையும்பற்றி, இலக்குமணனுக்கு இந்திரனும் முருகனும் ஒப்பாவர். 'இந்திரனூர்பிடி' என்றது, இந்திரனது வாகனமாகிய ஐராவதத்தின் மனைவியான 'அப்பிரமு' என்ற பெண்யானையைக் குறிக்கும். என்னலும், தோகையும், உம்மைகள் - இறந்ததுதழுவிய எச்சப்பொருளன. சூர் - சூரனென்பதன் விகாரம். சுப்பிரமணியன் மிக்க அழகுடையவனாதல்பற்றி, அவனை 'சுந்தரன்' என்ற பெயராற் குறித்தார். தோகை - சினையாகுபெயர். பி - ம்:—[1]வந்ததுமான, வந்ததுமானத்து. [2]முகில்.

அசுரேசன் மகளாகிய மாயையென்னும் பெயர்பெற்ற சுரசை யென்பவள் காசியபமுனிவரைக் கூடிப்பெற்ற புத்திரர்களாகிய சூரபதுமன் சிங்கமுகன் தாரகன் என்ற மூவரும் சிவபிரானைக் குறித்துத் தவமும் வேள்வியுஞ் செய்து அவனருளால் அளவிறந்த வரங்களைப் பெற்று மிகச்செருக்குற்றுத் தமது குருவாகிய சுக்கிரனது தீயஉபதேசத்தால் மற்றும்பல ஆயிரம் அசுரர்களுடன் கூடி இந்திரன் முதலிய தேவர்களை யெதிர்த்துப் பொருது வென்று பற்பல வகையாக உலகத்தை வருத்திய வளவிலே, அத்துன்பம் பொறுக்கலாற்றாத தேவர்கள் சிவபிரானைத் தொழுது துதிசெய்து 'உன்னைப்போல ஒருபுத்திரனையுண்டாக்கி அந்தக்குமாரனால் அசுரர்களையழித்து எங்களைக்காத்தருள்க' என்று பிரார்த்திக்க, சிவபெருமான் அவ்வேண்டுகோளுக்கு இரங்கிக் குமாரக்கடவுளை யுண்டாக்கி அனுப்பியருள, அம்முருகமூர்த்தி, வீரவாகுமுதலிய சிவகுமாரர்களுடனே சென்று போர் புரிந்து அவ்வசுரர்களனைவரையும் அழித்து அமரர்களைக் காத்தருளின னென்பது 'சூரடும்வீரச் சுந்தரன்' என்பதில் அடங்கிய கதை. சுப்பிரமணியனால் வேல்கொண்டு பிளக்கப்பட்ட சூரபதுமனது உடம்பின் கூறுஇரண்டும் மயில்வடிவமும் கோழிவடிவமும் பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்கு வாகனமும் கொடியுமாய் அமைந்தன என்ற வரலாறும் உணரத்தக்கது. (*1096*)

## 61.—அயோமுகி இலக்குமணனைத் தழுவுதல்.

ஆங்கவண் மார்[3]பொடு கையி னடங்கிப்
பூங்கழல் வார்சிலை மீளி பொலிந்தான்
வீங்கிய வெஞ்சின வீழ்மத வெம்போர்
ஓங்க [1]லுரிக்கு முருத்திர னொத்தான்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, அவள் மார்பொடு கையின் அடங்கி - அவளது மார்பினுள்ளும் கைகளினுள்ளும் அடங்கி, பொலிந்தான் - விளங்கியவனாகிய, பூ கழல் வார் சிலை மீளி - அழகிய

வீரக்கழலையணிந்த பெரிய வில்லையுடைய வீரனான இலக்குமணன்,— வீங்கிய வெம் சினம் - மிக்ககொடிய கோபத்தையும், வீழ் மதம் - பெருகுகிற மதத்தையுமுடைய, வெம் போர் - கொடிய போரைச்செய்கிற, ஓங்கல் - யானையை, உரிக்கும் - உரித்துப்போர்த்த, உருத்திரன் - சிவபிரானை, ஒத்தான்—; (எ - று.)

அயோமுகியால் இரண்டுகைகளாலும் மார்போடு தன்உடம்பு முழுவதும் மறையும்படி தழுவப்பட்ட இலக்குமணன், உடம்புமுழுதும் மூடும்படி யானைத்தோலைப் போர்த்த சிவபிரானை யொத்தனன் என்க. மீளி - ஆண்பாற் சிறப்புப்பெயர். ஓங்கல் - உயர்ந்த மலை போன்ற யானைக்கு இருமடியாகுபெயர். பி - ம்:—[1] உரிக்குள்.

சிவபிரான் யானையுரித்த கதை:—சிவபெருமான், தன்னைமதியாத தாருகவனத்து முனிவர்களது மனநிலையைப் பரிசோதிக்க நினைத்து ஒருவிடவுருவங்கொண்டு அவர்கள் வீடுதோறுஞ்சென்று பிக்ஷாடனஞ்செய்து, தன்னை நோக்கிக் காதல்கொண்ட அவர்கள் பத்தினிமார்களது கற்புநிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாக மொன்று செய்து, அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி யானை முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக் கொன்றுவரும்படிஏவ, சிவபிரான், தன்மேற் சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனது கணங்களாகவுங் கொண்டு, மானைக் கையில் ஏந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, யானையினுட் சென்று உடல் பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்டு, முயலகனை முதுகிற்காலாலூன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து அவற்றை யெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம். அருந்தவ மியற்றிப் பெருவரம் பெற்ற கஜாசுர னென்பவன், தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித் துரத்த, அஞ்சியோடின அவர்களது பிரார்த்தனையால் சிவபிரான் தன்னையெதிர்த்துப் போர் செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத் தள்ளிக்கொன்று அவ்யானையின் தோலையுரித்துப் போர்த்துக்கொண்டன னென்ற கதையையுங் காண்க. (1097)

## 62.—இலக்குமணன் வாராததுகண்டு இராமன் தேடத்தொடங்குதல்.

இப்படி [1]யேகின ளன்னவ ளிப்பால்
அப்பிடை தேடி நடந்த வெனாவித்
துப்புடை மால்வரை தோன்றல னென்னா
[2]வெப்புடை மெய்யுடை வீரன் [3]விரைந்தான்.

(இ - ள்.) அன்னவள் - அவ்வயோமுகி, இ படி ஏகினள் - இவ்வாறு (அவ்விலக்குமணனைத் தழுவியெடுத்துச்) சென்றாள்; (அதுநிற்க): இப்பால் - இவ்விடத்தில், வெப்பு உடை மெய் உடை வீரன் - தாபத்தைக்கொண்ட மேனியையுடைய வீரனான இராமபிரான்,—'அப்பு இடை தேடி நடந்த - தண்ணீரைக் காட்டிடத்திலே தேடிச் சென்ற, என் ஆவி - எனது உயிர்போன்ற, துப்பு உடை

மால் வரை - வலிமையையுடைய பெரிய மலையையொத்த இலக்குமணன், தோன்றலன் - இன்னும் வரவில்லை,' என்று - என்று எண்ணி, விரைந்தான் - (அவனைத் தேடுதற்கு) விரைந்தான், (எ - று.)

வெப்பு - விரகதாபமும், தாகதாபமும், தம்பியைக் காணாமையாலான தாபமும். பி - ம்:—[1] அன்னளேகினள். [2] வெப்பிடை. [3] உரைத்தான். (1098)

வேறு.

## 63.—இதுமுதற்பதினான்கு கவிகள் - இராமன் இலக்குமணனைப்பற்றிப் பலவாறு சிந்தித்து வருந்துதலைக் கூறும்.

வெய்தா கியகா னிடைமே வருநீர்
ஐதா தலினோ வயலொன் றுளதோ
[1] நொய்தாய் வரவே கமுநொய் திலனால்
எய்தா [2] தொழியா னிதுவென் னைகொலாம்.

பன்னிரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (இலக்குமணன்),—நொய்து ஆய் வர - விரைவாய்வர, வேகம்உம் நொய்து இலன் - வேகமும் அற்பமாகவுடையவனல்லன்; எய்தாது ஒழியான் - வாராமல் நீங்கத்தக்கவனுமல்லன்: (அப்படியிருக்க, அவன் வாராமைக்குக் காரணம்),—வெய்து ஆகிய கானிடை மேவரும் நீர் ஐது ஆதலின்ஓ - வெப்பத்தையுடையதான காட்டிலே பொருந்திய தண்ணீர் அருமையானதனாலேயோ? அயல் ஒன்று உளதுஓ - வேறு நேர்ந்த செயல் யாதாயினும் உள்ளதோ? இது என்னை கொல் ஆம் - இது யாதுகாரணம் பற்றியதோ? (எ-று.)

மிக்கவேகமுடையவனும் காரியத்தை முடித்துக்கொள்ளாமல் திரும்பாதவனுமான இலக்குமணன் இத்துணைநேரமாகியும் வாராதது, காட்டில் தண்ணீர் கிடையாமையாலோ? வேறு யாது நேர்ந்ததோ? என்னவோ! என்று இராமபிரான் கலக்கமடைந்தனன் என்பதாம். ஆல், ஆம் - அசைகள். பி-ம்:—[1] நொய்தாய்வலாதவு நொய்தினவால், நொய்தாயவலாதவுநொய்தின்வரல். [2] ஒழிவானிடர்.

இதுமுதற் பதினாறுகவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் 210 - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (1099)

64. [1] நீர்கண் டனையிவ் வழிநே டினைபோய்ச்
[2] சார்கொண் டெனவித் துணைசார் கிலனால்
வார்கொண் டணிகொங் கையைவவ் வினர்பால்
போர்கொண் டனனோ பொருளுண் டிதென்னோ.

(இ-ள்.) 'இவ்வழி நேடினை போய் - (நீ) இவ்வழியில் தேடிச் சென்று, நீர் கண்டனை கொண்டு சார் - தண்ணீரைக் கண்டு எடுத்துக்கொண்டு வா', என - என்று (நான்) சொல்லியனுப்ப, இத்துணை சார்கிலன் - இவ்வளவு நேரமாயும் வரவில்லை; வார் கொண்டு அணி கொங்கையை-

கச்சைக்கொண்டு அணிந்துள்ள தனங்களையுடைய சீதையை, வவ்வினர்பால் - கவர்ந்த அரக்கரிடத்தில், பொருள் உண்டு இது எனா - (போர் செய்வதில்) பயனுண்டென்று கருதி, போர் கொண்டனனோ - போர்செய்யத்தொடங்கினனோ? (எ - று.)

வார்கொண்டணிகொங்கை-அன்மொழித்தொகை. ஆல்-ஆசை. பி - ம் :—[1] நீர்கொண்டனனிவ்வழிநேடியெனை. [2] சார்கின்றிலன், சார்கென்றனன். (1100)

65. அஞ்சொற் கிளியன் னவணங் கினைமுன்
வஞ்சித் தவிரா வணன்வவ் வினனோ
நஞ்சிற் [1]கொடியா னடலைத் தொழிலால்
துஞ்சுற் றனனோ விதியின் றுணிவால்.

(இ - ள்.) அம் சொல் கிளி அன்ன அணங்கினை முன் வஞ்சித்த இராவணன் வவ்வினன்ஓ-அழகிய சொற்களையுடைய கிளி போன்ற சீதையை முன்னே வஞ்சித்துக்கவர்ந்த இராவணன் (இவனையும்) கவர்ந்துசென்றானோ? நஞ்சின கொடியான் நடலை தொழிலால் - விஷத்தைக்காட்டிலுங் கொடியவனான அவ் விராவணனது வஞ்சனைத் தொழிலால், விதியின் துணிவால்-ஊழ்வினையின் வலியால், துஞ்சுற்றனன்ஓ-இறந்தொழிந்தானோ? (எ - று.)

இனி, அணங்கினை முன் வஞ்சித்த நஞ்சிற்கொடியானான இராவணன் நடலைத்தொழிலால் (இவனையும்) வௌவினனோ? அன்றி, விதியின் துணிவால் (தற்செயலாய்த்) துஞ்சுற்றனனோ என்று அந்வயித்துப் பொருள் கூறினுமாம். அணங்கு - பெண்ணிற் சிறந்தவள். 'ஆல்' இரண்டும் - கருவிப்பொருளன. துஞ்சுற்றனன்-மங்கலவழக்கு. பி - ம்:—[1] கொடியார். (1101)

66. வரிவிற் கையெனா ருயிர்வந் திலனால்
தருசொற் கருதே னொருதை யலையான்
[1]பிரிவுற் றனெனென் பதொர்பீ ழைபெருத்து
[2]எரிவுற் றிடவா வி[3]யிழந் தனனோ.

(இ - ள்.) வரி வில் கை என் ஆர் உயிர் வந்திலன் - கட்டமைந்த வில்லையேந்திய கையையுடைய எனது அரிய உயிர் போன்ற தம்பி வந்தானில்லை; 'தரு சொல் கருதேன்-(தான்) சொன்ன வார்த்தையை மதியாமல், யான்-நான், ஒரு தையலை-ஒப்பற்ற சீதையை, பிரிவு உற்றனென்-பிரியப்பெற்றேன்,' என்பது-என்ற, ஓர் பீழை ஒரு துன்பம், பெருத்து-அதிகப்படுதலால், எரிவு உற்றிட-தாபம்மிக, ஆவி இழந்தனன்ஓ-உயிர் நீங்கினனோ? (எ-று.)

மாரீசன் மாயப்பொன்மானாய் எதிர்வந்து மயக்கிநிற்கக்கண்டு சீதை அதைப் பிடித்துத்தரவேண்டுமென்று இராமனைக் கேட்டுக் கொண்டபோது, இலக்குமணன் 'இது மாயம், இதனைப் பின்தொடரலாகாது' என்று பலதரங் கூறிவற்புறுத்தியும் கேளாமல் ஸ்ரீராமன் அதன்பின்னே தொடர்ந்ததனால், சீதையைப் பிரியநேரிட்டது

என்பது, வரலாறு. உயிர் - உவமவாகுபெயர். பி - ம்:—பிரிவித்தன னென்றெரு. [2]எரிவித்திட. [3]இறந்தனனே. (1102)

67. உண்டா கியகா ரிருளோ [1]டொருவென்
கண்டா னயல்வே றொருகண் ணிலனால்
புண்டா னுறுநெஞ் சுபுழுங் குறுவேன்
[2]எண்டா னிலெனெங் ஙனநா டுகெனோ.

(இ - ள்.) உண்டு ஆகிய கார் இருளோடு - நிறைந்து பொருந்திய பேரிருளில், ஒருவு என் கண் அயல் - (என்னைவிட்டு) நீங்கிய என்கண்ணான இலக்குமணனுக்குப் புறம்பாக, வேறு ஒரு கண் இலன் - வேறொருகண்ணையுடையவனல்லேன்; புண் உறு நெஞ்சு புழுங்குறுவேன்-(இலக்குமணனாகிய கண்ணை யிழந்ததனால்) முன்னே புண்பட்ட மனத்தில் மீண்டும் வருத்தமுறுகிறேன்; எண் தான் இலென் - (மனம் மிகக் கலங்கினதனால் இன்னதென்று எண்ணுகிற) எண்ணமும் அற்றேன்; எங்ஙனம் நாடுகென்ஓ - (அவனை எங்குச் சென்று) எவ்வாறு தேடுவேனோ? (எ - று.)

கண்போலவே கூடவிருந்து எவ்விதத்திலும் உதவின இலக்குமணனை யிழந்த வருத்தத்தால், கண்கள் இருந்தும் பயன்பெறாமை பற்றி, 'அயல் வேறொரு கண்ணிலன்' என்றான். தேடிக் கண்டு பிடித்தற்கு இன்றியமையாதனவான கண்களோ இல்லை: மற்றும் மனமும் அதன்காரியமான எண்ணமும் ஒழிந்தன: இனி, 'எங்ஙனம் நாடுகெனோ?' என்று இராமன் வருந்துகிறான். இருளோடு-உருபுமயக்கம். 'இருளூடும்' என்றும் பாடம். ஒருவென் என எடுத்து, ஒருவென் - நீங்கினேன் எனினுமாம். தான், ஆல்-அசைகள். பி - ம்:—[1]ஒருவன். [2]எண்டானினி. (1103)

68. தள்ளா வினையேன் றனியா ருயிராய்
உள்ளா யொருநீ யுமொளித் தனையோ
பிள்ளாய் பெரியாய் பிழைசெய் தனையால்
[1]கொள்ளா வுலகுன் னையிதோ கொடிதே.

(இ - ள்.) தள்ளா வினையேன் - ஒழிக்கமுடியாத விதியையுடைய எனது, தனி அரு உயிர் ஆய் உள்ளாய் - ஒப்பற்ற அரிய உயிராயுள்ளவனாகிய, ஒரு நீஉம் - நீ ஒருத்தனும், ஒளித்தனைஓ - மறைந்துவிட்டாயோ! பிள்ளாய் - (பருவத்தில்) இளையவனே! பெரியாய் - (அறிவிற்) பெரியவனே! பிழை செய்தனை - (என்னை இவ்விருளில் தனியே காட்டில்விடுதலாகிற) தவறு செய்தாய்; இதுஓ கொடிது - இத்தவறோ மிகக்கொடிது; உலகு உன்னை கொள்ளா - பெரியோர் உன்செயலை (நன்றென்று) மதியார்; (எ-று.)

'ஒருநீயும்' என்ற உம்மை-கீழ்ச் சீதைபிரிந்ததைத் தழுவுதலால், இறந்தது தழுவியஎச்சம். "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்றதனால், உலகுஎன்பது - அறிவுடையோர்மேல் நின்றது: இது, பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் பால்பகாவஃறிணையாதல்பற்றி, கொள்ளா என்ற அஃறிணைப்பன்மை முடிபை யேற்றது.

இது, ஓ! கொடிது!! எனினுமாம். ஓ = அந்தோ. ஆல் - அசை. பி - ம்:—[1]கொள்ளாது. (1104)

69. பேரா விடர்வந் தனபேர்க் கவலாய்
தீரா விடர்தந் தனை [1]தெவ் வர்தொழும்
வீரா வெனையிங் ஙன்வெறுத் தனையோ
வாராய் புறமித் துணைவை குதியோ.

(இ - ள்.) வந்தன பேரா இடர் பேர்க்க வலாய் - வந்தனவாகிய நீக்க வரிய துன்பங்களை ஒழிக்க வல்லவனே! தீரா இடர் தந்தனை - (என்னைப் பிரிந்து) நீங்காத துக்கத்தை (எனக்கு) உண்டாக்கினாய்; தெவ்வர் தொழும் வீரா-பகைவர்களாலும் வணங்கப்படுகிற வீரனே! எனை இங்ஙன் வெறுத்தனைஓ-என்னை இக்காட்டிலே இருந்துவருந்த இவ்வாறு வெறுத்து நீங்கினாயோ? வாராய் - இங்குவாராமல், புறம் - வெளியில், இ துணை - இவ்வளவு காலம், வைகுதிஓ - தங்கியிருக்கக் கடவையோ? (எ-று.)

எத்துயரம் எனக்கு நேரினும் அதனை யெல்லாம் போக்கவல்ல னை நீ இந்தக் காட்டிடையிலே என்னை வெறுத்துவிட்டு நீங்கித் தீரா இடரை உண்டாக்கியுள்ளாயே: இத்தனை நேரம் வாராது புறத்தே தங்கியிருப்பது நினக்குத்தகுதியோ என்று இராமபிரான் புலம்பினனென்பதாம். வாராய் - எதிர்மறை முன்னிலை யொருமை முற்றெச்சம்; வருவாய் என உடன்பாட்டு ஏவலாக்கி உரைப்பினு மாம். பி - ம்:—[1]தேவர். (1105)

70. என்னைத் தருமெந் தையை [1]யென் னையரைப்
பொன்னைப் பொருகின் றபொலங் குழையாள்
தன்னைப் பிரிவே [2]னுளெனா வதுதான்
உன்னைப் பிரியா தவுயிர்ப் பலவோ.

(இ - ள்.) என்னை தரும் எந்தையை - என்னைப்பெற்றெடுத்த தந்தையையும், என்னையரை - எனது தாய்மாரையும், பொன்னை பொருகின்ற பொலம் குழையாள் தனை - இலக்குமியை யொத்த வளான பொன்னாலாகிய குழையையணிந்தசீதையையும், பிரிவேன் - பிரிந்த நான், உளென் ஆவது - உயிருடையேனாயிருப்பது, உன்னை பிரியாத உயிர்ப்பு அலஓ - உன்னொருத்தனைப் பிரியாததனா லுள தாகிய உயிர்ப்பினா லல்லவோ? (எ - று.)

இராமன் இலக்குமணனைப் பிரியாமலிருந்தது, மற்றையோர் பிரிவு வருத்தத்தை மறைத்ததென்க. இதனால், இராமன் மற்றை யோரினும் இலக்குமணனிடத்தில் மிக்க அன்பு கொண்டமை நன்கு விளங்கும். எந்தை - என் தந்தை; என்னை - என் அன்னை; மரூஉ. பிரிவேன் - காலவழுவமைதி; இது, பெயர். தான் - அசை. பி - ம்:—[1]யாயரைப். [2]உளதாயது. (1106)

71. பொற்றோ டிவர்கின் றபொலங் குழையாள்
தற்றே டிவருந் துதவம் புரிவேன்

நிற்றே டிவருந் தநிரப் பினையோ
எற்[1]றே டினைவந் தவிளங் களிறே.

(இ - ள்.) என் தேடினை வந்த இள களிறே - (மாயமானின் வார்த்தையைக் கேட்டுச் சங்கைகொண்டு) என்னைத் தேடி வந்த இளைய ஆண்யானையை யொத்தவனே! பொன் தோடு இவர்கின்ற பொலம் குழையாள் தன் - பொன்னாலாகிய தோடென்னும் காதணியை யணிந்த சீதையை, தேடி வருந்து - தேடிவருந்துகிற, தவம் புரிவேன் - எளியனான நான், நின் தேடி வருந்த - உன்னையுந்தேடி வருந்தும்படி, நிரப்பினைஓ - செய்துவிட்டாயோ? (எ-று.)

என்னை நீ தேடிவரும்படி நான் மானின்பின்னேசென்றதற்குப் பதிலாக இப்பொழுது நான் உன்னைத்தேடிவரும்படி நீ செய்து விட்டாய்போலு மென்ற கருத்து, பின்னிரண்டடியில் தொனிக்கும். பொலங்குழையாள் - பொற்குழையுடையாள்; இங்கு, பெயர்மாத்திர மாய் நின்றது. தன் - சாரியை. எளியவனென்னும் பொருளதாகிய 'தபஸ்வீ' என்ற வடசொல்லின் பொருளைக்கொண்டு, 'தவம்புரிவேன்' என்றான். பி - ம்:—[1]தேடிட. (1107)

72\. இன்றே யிறவா தொழியே னெமரோ
பொன்றா தொழியார் புகல்வா ருளரோ
ஒன்றா கியவுன் கிளையோ ரையெலாம்
கொன்றாய் கொடியா [1]யிதுவுங் குணமோ.

(இ - ள்.) புகல்வார் உளர்ஓ - (நீ இருக்குமிடத்தை எனக்குச்) சொல்வார் உண்டோ? [இல்லை]; (ஆகையால்), இன்றுஏ இறவாது ஒழியேன் - இன்றைக்கே (நான்) இறவாமலிருக்கமாட்டேன்; (நான் இறந்துவிட்டால்), எமரோ பொன்றாது ஒழியார்-எம்மைச் சேர்ந்தவர் யாவரும் இறவாமலிருக்கமாட்டார்; (ஆகையால்), ஒன்று ஆகிய உன் கிளையோரை எலாம் கொன்றாய்-ஒற்றுமைப்பட்ட உனது பந்துக்களை யெல்லாம் ஒருமிக்கக் கொல்பவனாவாய்: கொடியாய்-இவ்வாறு கொடுமையுடையவனே! இதுஉம் குணம்ஓ-இதுவும் (உனக்குத்) தகுதியோ? [அன்று என்றபடி]; (எ - று.)

இலக்குமணன் வாராவிட்டால் இராமன் இறந்துபடுவன்; அதனால், உற்றார் யாவரும் ஒழிவர்: இப்படி எல்லோருடைய அழிவுக்குங் காரணமாயிருத்தலால், இலக்குமணன், 'கொடியாய்' என இராமனால் விளிக்கப்பட்டான். கொன்றாய் - தெளிவுபற்றிய கால வழுவமைதி. ஓகாரம் மூன்றில், முன்னது - தெரிநிலையும், மற்றவை - எதிர்மறையுமாம். பி-ம்:—[1] இவையுன். (1108)

73\. மாந்தா முதன்மன் னவர்தம் வழியில்
வேந்தா கைதுறந் தபின்மெய் யுறவோர்
தாந்தா மொழியத் தமியே னுடனே
போந்தா யெனைவிட் டனைபோ யினையோ.

(இ - ள்.) மாந்தா முதல் மன்னவர் தம் வழியில் - மாந்தாதா முதலிய (நம்குலத்து முன்னோராகிய)அரசர்களது முறைப்படி, வேந்து

ஆகை - அரசனுதலை, துறந்த பின் - துறந்து (மூத்தவனாகிய நான் காட்டுக்குச் செல்லத்) துணிந்தபின்பு,—மெய் உறவோர் தாம் தாம் ஒழிய-உண்மையான சுற்றத்தோர் யாவரும் உடன் வாராது நீங்கவும், தமியேனுடன் போந்தாய் - தனியனான என்னுடனே நீ வந்தாய்; (அப்படிப்பட்ட நீயும்), எனை விட்டனை போயினை ஓ - என்னைவிட்டுப் போய்விட்டாயோ? (எ - று.)

'மெய்யுறவோர்' என்றது, தந்தை தாய் முதலிய உள்ளன்புடைய சுற்றத்தாரை; தேகபந்துக்க ளென்ற பொருளில் 'மெய்யுறவோர்' என்றுருமாம். மாந்தா - மாந்தாதா என்றவடசொல்லின் விகாரம். சூரியகுலத்துத் தோன்றிய் யுவனாசுவனென்பவன் வெகு காலம் புத்திரனில்லாமலிருந்து வெறுப்படைந்து, ரிஷிகளின் ஆச்சிரமத்தில் திரிந்துகொண்டிருக்க, அவர்கள் இவன் மீது அன்பு கொண்டு, புத்திரனுண்டாகுமாறு ஒருயாகஞ் செய்து, அவனது மனைவி உண்ணும்படி மந்திரத்தினால் பரிசுத்தமான ஜல கலசத்தை யாகவேதிகையில் வைத்திருந்தனர்: அதனையுணராத மன்னவன் மிக்கதாகத்தினால் அதைப பருகிக் கருக்கொள்ள, அக்கருப்பம் முதிர்ந்து, அவ்வரசனுடைய வயிற்றைத் தன் வலக்கட்டைவிரலினாற் கிழித்துக்கொண்டு புதல்வனாய் வெளிப்பட்டது. அது ஸ்தந்யமில்லாமையால் அழ இந்திரன், அப்புதல்வனுக்குத் தனது மோதிரவிரலை '(இக்குழந்தை) மாம் [என்னை]தாதா (தாயாகவைத்து)முலையுண்பான்' என்றுசொல்லிக்கொடுத்தான்: ஆதலால், இவன் இப்பெயர் பூண்டான். இந்த மாந்தாதா, புலிப் போத்தும் புல்வாயும் ஒருதுறையில் நீர் பருகுமாறு அரசுபுரிந்த சிறப்பினனென்ப. (1109)

74. என்னு வுரையா வெழும்வீ ழுமிருந்து
[1]உன்னு வுணர்வோய் வுறுமொன் றலவால்
[2]மின்னு திடியா திருள்வாய் [3]விளைவீது
[4]என்னு வெனுமென் றனிநா யகனே.

(இ-ள்.) என் தனி நாயகன்-எனது ஒப்பற்ற தலைவனான இராமபிரான்,—என்னு உரையா எழும் - என்று கூறி எழுந்திருப்பான்; வீழும்-கீழே விழுவான்; இருந்து உன்னு - இருந்தபடியே நினைத்து, உணர்வு ஓய்வுறும் - அறிவு ஒழியப்பெறுவான்; இருள்வாய் - இப்பேரிருளில், மின்னுது இடியாது-மின்னுமலும் இடியாமலும், விளைவு ஈது என் ஆ எனும் - 'விளைந்த இது என்ன! அந்தோ!!' என்பான்; ஒன்று அல - (இவ்வாறு அவன் பட்ட துன்பம்) ஒன்றல்ல [பல]; (எ - று.)—ஆல்-அசை: தேற்றமுமாம்.

இது முதல் மூன்றுகவிகள் - இராமபிரான் துயரத்தைப்பற்றிய கவிக்கூற்று. மழைக்கு மின்னலும் இடியும் முற்குறியாகத்தோன்றுவதுபோலத் தம்பியைப் பிரிதலாகிற இப்பேரிடர்க்கு அறிகுறியாக முன்னே யொன்றுங் காணப்படவில்லையே யென்று இராமன் வருந்தி இரங்கினு னென்பதாம். 'மின்னுதிடியாது' என்றது, ஓர் வழக்கு. பி - ம்:—[1]உன்னா. [2]மின்னா விடியா. [3]விளையீது. [4]என்னா மெனும். (1110)

75. நாடும் பலசூ ழல்கடோ றுநடந்து
ஓடும் பெயர்சொல் லி[1]யுளைந் துயிர்போய்
வாடும் வகைசோ ருமயங் குறுமால்
ஆடுங் களிமா மதயா னையனான்.

(இ - ள்.) ஆடும் களி மா மதம் யானை அனான்-போர்செய்தற்கு உரிய செருக்குக்கொண்ட மிக்க மதத்தையுடைய யானையையொத்த வனாகிய இராமன்,—பல சூழல்கள் தோறும் நடந்து நாடும் - (அங்குள்ள) பல இடங்களிலுஞ் சென்று (தம்பியைத்) தேடுவான்; ஓடும் - விரைந்து செல்வான்; பெயர் சொல்லி உளைந்து உயிர் போய் வாடும் வகை சோரும்-(தம்பியின்) பெயரைச் சொல்லி வருந்தி உயிர் ஒழிந்து வாடும்படி தளர்வான்; மயங்குறும்-மயக்கமடைவான்;(எ-று.)—ஆல்- அசை. இராமபிரான் தம்பியைத் தேடிய்வண்ணம் பலபடி வருந்தியது, இது. பி-ம்:—[1] உளைத்து. *(1111)*

76. கமையா ளொடுமென் னுயிர்கா வலினின்று
இமையா தவனித் துணைதாழ் வுறுமோ
[1]சுமையா வுலகூ டுழறேல் [2]வினையேன்
அமையா துகொல்வாழ் வறியே னெனுமால்.

(இ - ள்.) 'கமையாளொடும் - பொறுமையை யுடையவளான சீதையுடனே, என் உயிர் - எனது உயிரையும், காவலில் - பாதுகாக்குந் தொழிலில், நின்று இமையாதவன் - கண் இமையாது [ஜாக்கிரதையுடன்] நின்ற இலக்குமணன், இ துணை தாழ்வுறும்ஓ - இவ்வளவுகாலம் தாமதிப்பனோ? [தாமதியான்]: சுமை ஆ உலகூடு உழல் தொல் வினையேன் - பாரமாக இவ்வுலகத்தில் திரிகிற பழவினையையுடைய எனக்கு, வாழ்வு - (உயிருடன் இன்புற்று) வாழ்தல், அமையாது கொல் - தகாதோ? அறியேன்—,' எனும் - என்றுஞ் சொல்வான்; (எ - று.)—ஆல் - அசை.

என்னை வெகுவிழிப்புடனே பாதுகாத்துவந்த இளையோன் இவ்வளவுநேரமாகத் தாமதிக்கின்றானே! அவனையின்றி உயிர் வாழ்தல் எனக்கு ஏற்குமோ என்று சொல்லிவருந்துவான் இராமபிரானென்பதாம். கமையாள் = க்ஷமாஎன்ற இவ்வடமொழி கமையெனத்திரிந்து, 'ஆள்' விகுதிபெற்று வந்தது. நின்று இமையாதவன் = இமையாது நின்றவன். 'கமையாளொடுமென்னுயிர்காவலினின்றிமையாதவன்'— இவ்வளவுகாலந் தாழ்க்கமாட்டா னென்ற பொருளை விளக்குகின்ற கருத்துடையடைகொளியாம். பி - ம்:—[1]சுமையால். [2]வினையேற்கு. ()

## 77.—இராமன் தற்கொலைசெய்யத் துணிதல்.

அறப்பா லுளதே லவன்முன் னவனாய்ப்
பிறப்பா னுறின்வந் துபிறக் கவனா
மறப்பால் வடிவாள் கொடுமன் னுயிரைத்
துறப்பா னுறுகின் றதொடர்ச் சியின்வாய்.

இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'அறம் பால் உளது ஏல் - நல்வினைப்பகுதி உண்டானால், அவன் முன்னவன் ஆய் பிறப்பான் உறின் - அவனுக்குத்

தமையனுய்ப் பிறக்கக் கூடுமானுல், வந்து பிறக்க - வந்துபிறக்கக் கடவேன்,' என - என்றுசொல்லி, மறம் பால் வடி வாள்கொடு- கொடுமைத்தன்மையுடைய கூரிய வாளைக் கொண்டு, மன் உயிரை -(தனது) நிலைபெற்றஉயிரை, துறப்பான் உறுகின்ற தொடர்ச்சியின் வாய் - (இராமபிரான்) நீக்கிக்கொள்ளத் தொடங்குஞ் சமயத்தில்,—(எ - று.)—இது, அடுத்தகவியில் "பூசல் செவித்துளையிற் சேர்ந்தார் தலும்" என்றதனோடு முடியும்.

தம்பியும் நானும் மறுபடி சகோதரர்களாகப் பிறக்கும்படி நல்வினை வந்து உதவினுல் அப்படியேபிறந்து உயிர்வாழக்கடவோம் என்று சொல்லி இராமபிரான் உயிர்விடத்துணிந்தன னென்க. ()

## 78.—இலக்குமணன் அயோமுகியை அங்கபங்கப்படுத்தல்.

பேர்ந்தா னெடுமா யையினிற் பிரியா
ஈர்ந்தா [1]னவணு சிபிடித் திளையோன்
[2]சோர்ந்தா ளிடுபூ சல்செவித் துளையிற்
சேர்ந்தார் தலுமே திருமா றெருளா.

(இ - ள்.) இளையோன் - இளையபெருமாள் [இலக்குமணன்], நெடுமாயையினில் பேர்ந்தான் - (அரக்கியின்) மிக்க மாயையினின்று நீங்கினுன்; பிரியா - (அவ்வாறு) நீங்கி, அவள் நாசி பிடித்து ஈர்ந்தான்-அவ்வயோமுகியினது மூக்கு முதலிய உறுப்புக்களைப் பிடித்து அறுத்தான்; சோர்ந்தாள - (உறுப்பு அறுப்புண்டதனுல்) தளர்ந்தவளாகிய அவ்வரக்கி, இடு - கூக்குரலிட்ட, பூசல் - பேரொலி, செவி துளையில் சேர்ந்து ஆர்தலும்-(இராமனது) காதுகளிற் பட்டவுடனே, திருமால் - இராமபிரான், தெருளா - (கலக்க மொழிந்து) மனந்தேறி, —(எ - று.)—"அங்கியினெடும்படைவாங்கி" என, மேல் 80 - ஆங் கவியோடு தொடரும்.

இளையோன் அயோமுகியின் நாசியைப் பிடித் தீரவே, சோர்ந்த அவ்வரக்கி யிடும் பூசல் இராமபிரான் உயிரைவிடத்துணிகையில் அப்பிரான் செவியிற் சேர்ந்ததென்க. 'தெருளா' என்பது, அரக்கியின் கூக்குரலைக் கேட்ட இராமபிரான் 'இலக்குமணன் நான் சந்தேகித்தபடி இறவாமல் அரக்கியின் வசப்பட்டுள்ளான்' என்று ஊகித்து அறிந்து துயரொழிந்து அவளைத்தொலைத்து அவனை மீட்பதே கடமை யென்று துணிவுற்று னென்பதைக் குறிக்கு மென்ப. நாசி - காதுகளுக்கும், தனங்களுக்கும் உபலக்ஷணம்: இது, மேல் விளங்கும். பி - ம் :—[1]நெடு. [2]சேர்ந்தாள். (1114)

வேறு.

## 79.—இராமன் அக்குரலால் அரக்கியென்று துணிதல்.

பரற்[1]றரு கானகத் தரக்கர் பல்கழல்
[2]முரற்றரு வெஞ்[3]சம முரல்கின் றுரெதிர்
உரற்றிய [4]வோசையன் ஞெருத்தி யூறுபட்டு
அரற்றிய குரலவ ளரக்கி [5]யேகொலாம்.

(இ - ள்.) (இவ்வொலி),—பரல் தரு கானகத்து - பருக்கைக்கற்கள் நிறைந்த காட்டில், பல் கழல் முரற்று அரு வெம் சமம் முரல்கின்றார் - பலவீரக்கழல்கள் ஒலிக்கப்பெற்ற (செய்தற்கு) அரிய கொடிய போரை மிக்குச் செய்கின்றவர்களாகிய, அரக்கர் - இராக்கதர்கள், எதிர் உரற்றிய - மாறுகச் செய்த, ஓசை அன்று - ஆரவாரமன்று; (இது), ஒருத்தி ஊறு பட்டு அரற்றிய குரல் - ஒரு பெண் ஆபத்தை யடைந்து கதறிய குரலாகும்; அவள் அரக்கிஎ-அவள் இராட்சசியே யாவள்; (எ - று.)—கொல், ஆம் - அசைகள்.

நள்ளிரவில் நடுக்காட்டில் அரக்கியர் தவிர வேறொருமகளிரும் வாராராதலால், பெண்குரல்கொண்டு அவளை அரக்கியென்றே இராமபிரான் துணிந்தனனென்க. முரல் தருவெம்சமம் என்றும் பிரிக்கலாம். சமம் = ஸமரம். உரற்றுதல் - ஒலித்தல். பி - ம்:—[1]தொகு. [2]முரற்றெருகு. [3]சமர்முயல்கின்றார். [4]ஓசையின். [5]ஆமெனு.

இதுமுதல் 24 - கவிகள், மாரீசன்வதைப்படலத்தின் 6 - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (1115)

80.—இதுவும்அடுத்தகவியும்-இராமன் [1]ஆக்கினேயாஸ்திரத்தைத் தொடுத்துவிட முயலுதலைத் தெரிவிக்கும்.

அங்கியி னெடும்படை வாங்கி [1]யங்கது
செங்கையிற் கரியவன் [2]றிரிக்கு [3]மெல்லையில்
பொங்கிரு ளப்புறத் துலகம் புக்கது
கங்குலும் பகலெனப் பொலிந்து காட்டிற்றே.

(இ - ள்.) கரியவன் - கருநிறமுடையவனான இராமபிரான், (இவ்வாறு கருதி), அங்கு - அப்பொழுது, அங்கியின் நெடு படை வாங்கி - அக்கினியினது பெரிய அம்பை [ஆக்நேயாஸ்திரத்தை] எடுத்து, அது - அதனை, செம் கையின் - (தனது) சிவந்த கையினால், திரிக்கும் எல்லையில் - பிரயோகிக்கத் தொடங்கியபொழுது, பொங்கு இருள் - மிக்க இருட்டானது, அ புறத்து உலகம் புக்கது - உலகத்தின் (இப்புறத்தைவிட்டு) அந்தப்பக்கத்தைச் சேர்ந்தது; (அதனால்), கங்குல்உம் பகல் என பொலிந்து காட்டிற்று - (இங்குள்ள) இரவும் பகல்போல விளக்கமுற்றுத் தோன்றிற்று; (எ - று.)

அரக்கி இலக்குமணனால் ஊறுபட்டதனாலும், இராக்கதர்க்குப் பலம்மிகுதற்குக் காரணமான இரவாதலாலும், 'நடுக்காட்டில் ஒன்றியாய் அகப்பட்டுக்கொண்ட இவனுக்கு யாது தீங்கு விளையுமோ?' என்று சங்கித்து, இராமன் ஆக்கிநேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க எடுத்தானென்க. கை சிவந்திருத்தல், உத்தமபுருஷ லக்ஷணம். திரிக்கும் எல்லையில் - சுழற்றும்பொழுது என்று உரைப்பாரு முளர். அங்கியினெடும் படை - அக்கினியைத்தெய்வமாக வுடைய சிறந்த அஸ்திரம். அப்புறத்து உலகம் - மேருவின் வடபுறமென்றபடி. இரண்டாம்அடி - தொடைமுரண். அங்கி = அக்நி. பி - ம்:—[1]ஆங்கது. [2]தரிக்கும். [3]வேலையில். (1116)

81. நெடுவரை பொடிபட நிவந்த மாமரம்
ஒடி [1]வுற நிலமக ளுலேய வூங்கெலாம்
சடசட வெனுமொலி தழைப்பத் [2]தாக்குமா
முடுகின [3]னிராமன்வெங் காலின் மும்மையான்.

(இ - ள்.) இராமன்—,— நெடு வரை பொடி பட - பெரிய மலைகள் தூளாகவும், நிவந்த மா மரம் ஒடிவுற - உயர்ந்த பெரிய மரங்கள் ஒடிபடவும், நிலமகள் உலேய - பூமிதேவி வருந்தவும், ஊங்கு எலாம் சடசட எனும் ஒலி தழைப்ப - பக்கங்களிலெல்லாம் சடசட வென்ற ஓசை மிகவும்,—வெம் காலின் மும்மையான்-சண்டமாருதத்தினும் மூன்றுமடங்கு அதிகமான வேகமுடையவனாய், தாக்கும் ஆ முடுகினன் - (அவனையெதிர்த்துத்) தாக்கும்படி விரைந்தான்; (எ - று.)

முற்கூறிய நான்கும், ஆக்கினேயாஸ்திரத்தின் தன்மைகள். சடசட - இரட்டைக்கிளவி ஒலிக்குறிப்பு. வெங்கால் - கொடுங்காற்று: எனவே, சண்டமாருதமாம். ஆ - ஆறு என்பதன் விகாரம். பி-ம்:— [1]பட. [2]தாக்கவும், தாங்குபு. [3]முரலும். (1117)

82.—இதுவும் அடுத்த கவியும்-இலக்குமணன் வந்த இராமனை வருந்தாதே யென்று சொல்லிக் கிட்ட, இராமன் மகிழ்தலைக் கூறும்.

ஒருங்குயர்ந் துலகின்மே லூழிப் பேர்ச்சியுள்
கருங்கடல் வருவதே யனைய [1]காட்சியான்
பெருந்துணைத் தம்முனை நோக்கிப் பின்னவன்
வருந்தலை [2]வருந்தலை வள்ளி யோயென.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) ஊழி பேர்ச்சியுள் - ஊழிக்காலம் மாறுஞ் சமயத்தில் [பிரளயகாலத்தில்], உலகின் மேல் - பூமியின்மீது, கரு கடல் - கரிய கடலானது, ஒருங்கு உயர்ந்து - ஒருமிக்கக் கிளம்பி, வருவது - வருவதை, அனைய - ஒத்த, காட்சியான் - தோற்றத்தையுடையவனான, பெரு துணை தம் முனை - (தனக்குப்) பெரிய துணைவனான தமையனை, நோக்கி - பார்த்து, பின்னவன் - இளையபெருமாள், 'வள்ளியோய் - ஈகைக்குணமுடையவனே! வருந்தலை வருந்தலை - வருந்தாதே வருந்தாதே,' என - என்றுசொல்லி,—(எ-று.)—"என்று கூறுவான்" என்று அடுத்தசெய்யுளில் முற்றுப்பெறும்.

கடுஞ்சினத்தோடு கிளர்ந்து வருங் கார்நிறவண்ணனான இராமபிரானுடைய காட்சிக்கு, ஊழிப்பேர்ச்சியுள் வருகிற கருங் கடற் காட்சியை உவமை கூறினர். கடல்வருவதேயனையகாட்சியானை பின்னவன் என்று சேர்த்தல் இனிது பொருந்துவதாகத் தோன்றவில்லை. பிரளயகாலத்தில் பூமியைக் கடல் பொங்கி யழிக்கு மென்பது நூற்கொள்கை. தம்முன் - தனக்கு முன் பிறந்தவன்; முன்-காலவாகு பெயர். வருந்தலை வருந்தலை - அடுக்கு, தேற்றப்பொருளது. பி-ம்:— [1]காட்சித்தன். [2]வந்தனன்.

(1118)

83. வந்தனெ னடியனேன் வருந்தல் வாழிநின்
அந்தமி லுள்ளமென் றறியக் கூறுவான்
சந்தமென் [1]றளிர்புரை சரணஞ் சார்ந்தனன்
[2]சிந்தின நயனம்வந் தனைய செய்கையான்.

(இ - ள்.) 'அடியனேன் வந்தனென் - அடியேன் வந்துவிட்டேன்; நின் அந்தம் இல் உள்ளம் வருந்தல் - உனது மயக்கமற்ற மனம் வருந்தாதே,' என்று அறிய கூறுவான் - என்றும் விளங்கச் சொல்லிக்கொண்டு, சந்தம் மெல் தளிர் புரை சரணம் சார்ந்தனன் -அழகிய மெல்லிய தளிரையொத்த (இராமபிரானது) திருவடிகளைச் சேர்ந்தான்; (அதனால் இராமன்), சிந்தின நயனம் வந்து அனைய செய்கையான் - போன கண் மறுபடிவந்தாற் போன்ற செய்கையை யுடையவனானான்; (எ - று.)

வாழி - முன்னிலையசை; வாழ்க வென்று, மிக்க அன்பால் வாழ்த்தியதுமாம். இலக்குமணனைக் கண்ணாகவே எண்ணியிருந்த இராமன், அவனை யிழந்து மீண்டும்பெற்றதனால், போன கண் வரப்பெற்றவன் போன்றான்: மேல், சுந்தரகாண்டத்து இராமனது மோதிரம்கண்ட சீதையைப்பற்றிக் கூறும்போது, கம்பர், "உழந்து விழிபெற்ற தொருயிர்ப்பொறையுமொத்தாள்" எனக் கூறுதலை ஒப்புக்காண்க. இனி, நான்காம் அடிக்கு - இலக்குமணனென்றே கொண்டு பொருள் கூறினும் பொருந்தும். அந்தம் - இருள்என்று பொருள்: இங்கே, அஜ்ஞான மனவிருள். அந்தமில் உள்ளம்-அழிவற்ற மனமெனினுமாம். பி - ம்.—[1]தாமரைச். [2]சிந்தனை மனமுயிர் வந்த. (1119)

84.—இலக்குமணன் வந்துசேரப்பெற்ற இராமனது நிலைமையின் வருணனை.

ஊற்றுறு கண்ணினீ ரொழுக [1]நின்றவன்
[2]ஏற்றிளங் கன்றினைப் பிரிவுற் [3]றெங்கணும்
[4]ஆற்றலி னாற்றுவ தரிதி [5]னெய்திய
[6]பாற்றுறும் பனிமுலை யாவின் பான்மையான்.

(இ-ள்.) ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன் - (இலக்குமணனைப் பிரிந்ததனால்) ஊற்றுப்போலக் கண்களினின்று நீர் பெருகும்படி யிருந்த இராமன்,—(இலக்குமணனை அடைந்ததனால்),— இள ஏறுகன்றினை பிரிவுற்று-(தனது) இளமையான ஆண்கன்றைப் பிரிந்து, எங்கண்உம் ஆற்றலின் ஆற்றுவது அரிதின் - எவ்விடத்திலும் (தன்) வல்லமையால் தேடுவது அரிதாயிருந்தபொழுதில், எய்திய - (அக்கன்று) தானே வந்துசேரப்பெற்ற, பால் துறும் பனி முலை ஆவின் - பால்நிறைந்து சோர்கின்ற மடியையுடைய பசுவினது, பான்மையான்-தன்மையையுடையவனானான்; (எ-று.)

தம்பியின் பிரிவால் ஊற்றுப்போல் கண்ணீர்பெருகநின்ற ஸ்ரீராமன், தன் கன்றினைப்பிரிந்த ஆ அதனைத் தேடியடையமாட்டாது தவிக்கும்நிலையில் அந்தக்கன்று தானே வரப்பெற, அதனை

மீண்டும்பெற்ற அந்தஆவின்நிலைமையனானன். முதலடியால்சோகக் கண்ணீரும் ஈற்றடியால் மகிழ்ச்சிக்கண்ணீரும் ஒழுக நின்றனன் இராமன் என்றபடி. சிறப்புப்பற்றி, ஏற்றைக் கூறினார். எங்கணும் ஆற்றலின் ஆற்றுவது அரிதின் - எவ்வாற்றானும் தன்மனோ தைரியத்தாற் பொறுத்தற்கரியதாயிருந்த நிலைமையில் எனினுமாம். பனிமுலை-வினைத்தொகை. பி - ம்:—[1]நின்றனன். [2]ஈற்றிளம். [3]ஏங்கி நின்று. [4]ஆற்றலால். [5]எய்திடப். [6]பாற்றிளம்பான், பாற்றும் பனிமுலை. (1120)

## 85.—இராமன் இலக்குமணனை நோக்கி மனநெகிழ்தல்.

தழுவினன் பன்முறை தாரைக் கண்ணினீர்
கழுவின னாண்டவன் கனக மேனியை
வழுவினை யாமென [1]மனக்கொ டேங்கினேன்
எழுவென மலையென வியைந்த [2]தோளினாய்.

இதுவும், வருங் கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (இராமன் இலக்குமணனை), ஆண்டு - அப்பொழுது, பல் முறை தழுவினன் - பலதரம் கட்டித்தழுவி, அவன் கனகம் மேனியை-அவனது பொன்னிறமான உடம்பை, தாரை கண்ணின் நீர் கழுவினன் - தாரையாக வடிகிற (தன்) கண்ணீரினால் கழுவி,— (அவனை நோக்கி), எழு என மலை என இயைந்த தோளினாய் - இரும்புத்தூண்போலவும் மலைபோலவும் பொருந்திய தோள்களை யுடையவனே! வழுவினை ஆம் என மனம் கொடு ஏங்கினேன் - (நீ இதுவரையும் வாராததனால்) தவறிப்போய்விட்டாயென்றே கருதி வருந்தினேன்; (எ-று.)

தாரை - தாரா என்ற வடசொல்லின் சிதைவு. கனகமேனி = "சுவண வண்ணன்" என்றார், கீழ் விராதன்வதைப்படலத்தும். பி-ம்:—[1]மனக்கொண்டே னென்றான். [2]தோளினன். (1121)

## 86.—நிகழ்ந்ததை, இராமன் இலக்குமணனை வினவி யறிதல்.

என்னையங் கெய்திய தியம்பு வாயென
அன்னவ [1]னஃதெலா மறியக் கூறலும்
இன்னலு முவகையு மிரண்டு மெய்தினான்
தன்னல தொருபொரு டனக்கு [2]மேலிலான்.

(இ - ள்.) 'அங்கு எய்தியது என்னை இயம்புவாய் - அங்கே நடந்தது யாது? சொல்வாய்', என - என்று கேட்க,—அன்னவன் - அவ்விலக்குமணன், அஃது எலாம் அறிய கூறலும் - அவையெல்லா வற்றையும் தெரியும்படி சொன்னவுடன்,—தன் அலது ஒரு பொருள் தனக்குமேல் இலான் - தானேயல்லாமல் தனக்குமேலாக ஒரு பொரு ளும் இல்லாதவனான இராமபிரான், இன்னல்உம் உவகைஉம் இரண்டு உம் எய்தினான் - துன்பமும் மகிழ்ச்சியும் ஆகிய இரண்டையும் ஒருங்கே அடைபவனானான்; (எ-று.)

இலக்குமணன் அரக்கியின் வசப்பட்டதனால் வருத்தத்தையும், வென்றுமீண்டதனால் மகிழ்ச்சியையும் ஸ்ரீராமன் தான்கொண்டுள்ள மானுட பாவனைக்கு ஏற்க அடைந்தானென்க. இராமன் தானே எல்லாவற்றுக்கும் மேலான பரம்பொருளென்பது, நான்காமடியின் கருத்து. அஃது எலாம்-ஒருமைப் பன்மை மயக்கம். பி-ம்:—[1] அவை. [2] வேறிலான். (1122)

## 87.—இராமனைநோக்கி இலக்குமணன் சமாதானவார்த்தை.

ஆய்வுறு பெருங்கட லகத்து [1] ளேயவன்
பாய்திரை வருதொறும் பரிதற் [2] பாலனோ
தீவினைப் பிறவிவெஞ் சிறையிற் பட்ட [3] யாம்
நோயுறு துயரென [4] நுடங்க னோன்மையோ.

நான்கு கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) ஆய்வு உறு பெரு கடல் அகத்துள் ஏயவன் - (யாவராலும் அளவற்றதென்று) ஆராயப்படுகிற பெரியகடலின் நடுவில் அகப்பட்டவன், பாய் திரை வரு தொறுஉம் பரிதல் பாலன்ஓ - பாய்கிற அலை வரும்பொழுதெல்லாம் வருந்துதற்கு உரியவனோ? [உரியவனல்லன்]; (அதுபோல),தீ வினை பிறவி வெம் சிறையில் பட்ட யாம்-தீவினைவயத்தால் நேர்கிற பிறப்பாகிய கொடியசிறையில் அகப்பட்ட நாம், நோய் உறு துயர் என - வருத்தம்பொருந்திய துன்பம் (நேர்ந்ததோ)என்று, நுடங்கல்-தளர்தல், நோன்மைஓ-பெருமையோ? (எ - று.)—என்று இலக்குமணன் இராமனை நோக்கிக் கூறினனென்க.

பெருங்கடலுள் அகப்பட்டுக்கொண்டவன் அலைகளுக்காக அஞ்சி வருந்துதல் தகாதவாறுபோல, துன்பமயமான பிறவிச்சிறையில் அகப்பட்டவன் அதில் நேருந் துன்பங்களுக்கு அஞ்சிவருந்துதல் தகாது என்று தன் பிரிவுக்காக வருந்திய இராமபிரானை இலக்குமணன் தேற்றியவாறு. இனி, பிறவிச் சிறைப்பட்ட நாம் வருந்துதல் கூடாது: ஆதலால், அரக்கியின் கையில் அகப்பட்டுக்கொண்ட துன்பத்திற்கு வருந்தவேண்டா வென்று இராமன் இலக்குமணனைத் தேற்றியவாறு என்று கருத்துக் கூறுவாருமுளர்: இச்செய்யுள்—எடுத்துக்காட்டுவமையணி. 'தீவினை' என்றது, இங்கே புண்ணியம் பாவம் இரண்டையுங் குறிக்கும். பிறவிவெஞ்சிறை-உருவகம். ஓ-எதிர் மறை. பி - ம்:—[1] எய்திய, ஆயினார். [2] பாலனும், பாலரோ, பாலதோ. [3] யான். [4] நுடங்குநோன்மையேன், நுடங்குநொய்ம்மையேன். (1123)

## 88.—இரண்டு கவிகள்-இராமன் இலக்குமணனைப் புனைந்துகூறுதல்.

மூவகை யமரரு முலக மும்மையும்
மேவரும் பகையெனக் காக [1] மேல்வரின்
ஏவரே கடப்பவ ரெம்பி நீயுளை
ஆவதே வலியினி யரணும் வேண்டுமோ.

(இ - ள்.) மூ வகை அமரர்உம் - (பிரமன் விஷ்ணு சிவன் என்ற) மூன்று வகையான தேவர்களும், மும்மை உலகம்உம் - (மேல் கீழ் நடு என்ற) மூன்றுவகையுலகத்திலுள்ளவர்களும், எனக்கு மேவு அரு பகை ஆக மேல்வரின் - எனக்குக் கிட்டமுடியாத [மிக அதிகமான] பகைவர்களாக (என்) மேல் எதிர்த்து வந்தாலும், ஏவரே கடப்பவர் - (அவர்களுள் என்னை) யாவர்தாம் வெல்ல வல்லவர்? எம்பி-தம்பியே! நீ உளை ஆவதுஏ-நீ (என்பக்கத்தில்) இருக்கிறு யென்ற இவ்வொன்றுமே, வலி - (எனக்கு அவர்கள் யாவரையும்) வெல்லும் வல்லமையாயிருப்பது; இனி - இனிமேல் [உன்னையன்றி யென்றபடி], அரண் உம் வேண்டும்ஓ - (எனக்குப் பிறிதொரு) காவலும் வேண்டுமோ?

நீயே அரணாக ஏற்பட்டிருத்தலால், எனக்குப் பகையாக எதிர் நின்று என்னை வெல்லவல்லார் எவருமிலர்: இத்திறன் உன்னாலல்லவோ என்றவாறு: இதனால், உன் பிரிவுக்கு நான் வருந்தாமலிருக்க முடியவில்லை யென்றபடி. "இருமைவகை தெரிந்து" என்னுங் குறளில் 'இருமை' போல, 'மும்மை' என்றது - இங்கே எண்ணின்கண் நின்றது; "தெரிமாண்டமிழ் மும்மைத்தென்னம் பொருப்பன்" என்பதிலும் இது. அரணும், உம்மை - சிறப்பும்மை. பி - ம்:—[1]எய்தினும். (1124)

89. பிரிபவர் யாவரும் பிரிக பேரிடர்
வருவன யாவையும் வருக வார்கழற்
செருவலி வீரநிற் [1]றீரு மல்லது
[2]பருவர லென்வயிற் [3]பயிலற் பாலதோ.

(இ - ள்.) பிரிபவர் யாவர்உம் பிரிக - (என்னைவிட்டுப்) பிரிகின்றவர்கள் எல்லாரும் பிரியக்கடவர்; வருவன பெரு இடர் யாவைஉம் வருக - (எனக்கு) வருகின்ற பெருந்துன்பங்கள்யாவும் வரக்கடவன; வார் கழல் செரு வலி வீர - நீண்டவீரக்கழலையும் போர்த்திறலமையையுமுடைய வீரனே! பருவரல் - (எனக்குநேரிடுந்) துன்பம், நின் தீரும் அல்லது - உன்னால் நீங்குமே யல்லாமல், என் வயின் பயிலல் பாலதோ - என்னிடத்தில் தங்கி வருத்தும் இயல்புடையதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

எவர் பிரிந்தாலும் எவ்வகைத்துன்பம் நேர்ந்தாலும் அவை யாவும் உன்னாலே தீர்ந்திடும்: என்வயின் அவற்றால் வருத்தம் நேராதென்றவாறு. "திண்பொருளெய்தலாகும் தெவ்வரைச் செருக்கலாகும், நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகும், ஒண்பொருளாவ தையா வுடன் பிறப் பாக்கலாகா, எம்பியை யீங்குப் பெற்றேன்என்னெனக்கு அரிய தென்றான்" என்ற சீவகசிந்தாமணிச் செய்யுள் இங்கே நோக்கத்தக்கது. "தேசே தேசே களத்ராணி, தேசே தேசேச பாந்தவா:—தந்துதேசம் நபச்யாமி, யத்ர ப்ராதா ஸஹோதர:" என்ற ச்லோகமும் காணத்தக்கது. (இந்தசுலோகம், இராவணன் விட்ட சக்தியென்னும் படையால் இளையபெருமாள் உயிர் நீங்கியவர்போற் காணப்பட, அப்போது இராமபிரான் கூறியதாக ஸ்ரீவான்மீகத்தில் யுத்த காண்டத்தில் 102 - ஆவது ஸர்க்கத்து வருகின்றது.) பி - ம்:—[1]தீரின். [2]பருவரன். [3]பயிற்றல். (1125)

## 90.—இராமன் இலக்குமணனை நோக்கி அரக்கியைக் கொல்லாமையைப் பற்றி வினவல்.

வன்[1]றொழில் வீரபோர் வலிய ரக்கியை
வென்று[2]போர் மீண்டனெ னெனவி ளம்பினாய்
புன்றொழி லனையவள் புகன்ற சீற்றத்தால்
கொன்றிலை போலுமாற் கூறு வாயென்றான்.

(இ - ள்.) வல் தொழில் வீர - கொடிய போர்த்தொழிலையுடைய வீரனே! போர் வலி அரக்கியை போர் வென்று மீண்டனென் என விளம்பினாய் - 'போர்செய்யும் வல்லமையுடைய இராட்சசியைப் போரிற் சயித்துத் திரும்பினேன்' என்று கூறினாய்; புல் தொழில் அனையவள்-இழிதொழிலையுடைய அவ்வரக்கி, புகன்ற-(தகாத சொற்களைச்) சொன்னதனாலுண்டாகிய, சீற்றத்தால் - கோபத்தால் [அவள் வார்த்தையாற் கோபங்கொண்டு என்றபடி], கொன்றிலை போலும் - (நீ அவளைக்) கொல்லவில்லைபோலும்; கூறுவாய்-(அதைப் பற்றி நீ) சொல்வாய், என்றான்-என்று வினவினான்; (எ - று.)

புகன்ற சீற்றம் - இறந்தகாலப்பெயரெச்சம் காரணப்பொருளது. போலும் - ஒப்பில்போலி. புன்தொழி லனையவள் என்பதற்கு - இழி தொழில்களுக்குத் தாய்போன்றவளெனினுமாம்; அனையவள் = அன்னையவள். ஆல் - அசை. பி - ம்:—[1] திறல். [2] பின். (1126)

## 91.—இலக்குமணன் மறுமொழி கூறல்.

துளைபடு மூக்கொடு செவிது மித்துகத்
தளைவயி னகிலொடு தடிந்து நீக்கிய
அளவையிற் பூசலிட் டரற்றி னாளென
இளையவன் விளம்பிநின் றிருகை கூப்பினான்.

(இ - ள்.) '(அவ்வரக்கியினது), துளை படு மூக்கொடு - துளைகள் பொருந்திய மூக்கையும், செவி-காதுகளையும், தளைவயின் நகிலொடு - கட்டுக்குள் அடங்கிய தனங்களையும், துமித்து உக தடிந்து நீக்கிய அளவையில் - துண்டு பட்டு விழும்படி அரிந்து தள்ளிய பொழுதில், பூசல் இட்டு அரற்றினாள் - (அவள்) கூக்குரலிட்டுக் கதறினாள்,' என விளம்பி நின்று-என்று சொல்லி நின்று, இளையவன்-இலக்குமணன், இரு கை கூப்பினான்-(தனது)இரண்டு கைகளையுங் கூப்பி (இராமனை) வணங்கினான்; (எ-று.)

மூக்கு முதலியவற்றை அரிந்த செய்தியை இங்கே கூறியதனால் முன்பு இந்த விவரம் இலக்குமணனாற் கூறப்படவில்லையென்பது விளங்கும். முன்பு சொன்னது, தொகுத்துச் சுட்டல்; இங்கே வகுத்துக்காட்டல். தளைவயினகில் - 43 - ஆம் கவியைக் காண்க. இச்செய்யுளின் முன்னிரண்டடிகள் 'தொளையுடை மூக்கொடு செவிகடும்பென, வளையதாத் தொடு மரிந்து மாற்றினேன்' என்றும், 'துளையுடைச்செவிகளுந் தொள்ளைமூக்கொடும், வளைவிதழ்மலைமுலை யரிந்துமாற்றிய' என்றும், மூன்றாமடி 'உளைவினள் பூசலிட்டோடினாளென' என்றும் பிரதிகளிற் காணப்படுகின்றன. ()

## 92.—இராமன் இலக்குமணனைத் தழுவுதல்.

தொல்லிரு [1]டணைக்கொலத் [2]தொடர்கின் ருளையும்
கொல்லலை நாசியைக் கொய்து நீக்கினய்
வல்லைநீ மனுமுதன் மரபி னேயெனப்
புல்லின னுவகையிற் பொருமி விம்முவான்.

(இ-ள்.) உவகையின் பொருமி விம்முவான் - மிக்க மகிழ்ச்சியால் உடல் பூரித்துள்ளவனை இராமபிரான்,—'தொல் இருள - மிக்க இருட்டில், தனை-உன்னை, கொல - கொல்லுதற்கு, தொடர்கின்றளை உம்-தொடர்ந்து வந்த அரக்கியையும், கொல்லலை - (நீ) கொல்லாமல், நாசியை கொய்து நீக்கினய்-(அவளது) மூக்கு முதலிய உறுப்புக்களை மாத்திரம் அறுத்துவிட்டாய்; (ஆகையால்), வல்லை நீ - (தரும சாஸ்திரங்களில்) வல்லவனை நீ, மனுமுதல் மரபினேய் - மனுவை முதலாகக்கொண்ட இவ்வம்சத்திற்கு ஏற்ற முறைமையுடையாய்,' என-என்று சொல்லி, புல்லினன்-(அவனைத்) தழுவினன்; (எ-று.)

பெண்கொலை பெரும்பாதக மாதலால், அதைச் செய்யாது விட்ட இலக்குமணனை இராமன் இங்ஙனம் புகழ்ந்தனன். தொடர் கின்றளையும், உம்மை-இழிவு சிறப்புப் பொருளது; சூர்ப்பணகையைப் போலவே இவளையும் நாசிமுதலிய உறுப்புக்களை அறுத்துத் தள்ளினை யெனக் கீழே நோக்குதலால், இறந்தது தழுவிய எச்ச மெனினுமாம். மனு-சூரியனது மகன்; இவனே, இச்சூரியகுலத்து அரசர்க்கெல்லாம் முதல்வன்; வைவசுவதமநுவெனப் பிரசித்தி பெற்றவன். தொடர்கின்றுள் - இயல்பினல், இறந்தகாலம் நிகழ்கால மாக வந்த காலவழுவமைதி. பி-ம்:—[1] தனில். [2] தொடங்கினளையும். ()

## 93.—இராமலக்குமணர் நீர்பருகி ஒருமலையில் தங்குதல்.

[1]பேருந் [2]துயரறப் [3]பேர்ந்து ளோரென
வீரனுந் தம்பியும் [4]விடிவு நோக்குவார்
[5]வாருணம் விடுத்தந்த வான நீருண்டு
தாரணி தாங்கிய கிரியிற் றங்கினர்.

(இ-ள்.) வீரன்உம் தம்பிஉம் - இராமனும் இலக்குமணனும்,— பேர் அரு துயர் அற பேர்ந்துளோர் என-நீங்குதற்கு அரிய துன்பத் திலிருந்து நீங்கினவர்க ளென்னும்படி [அரக்கியாலாகிய துன்பம் நீங்கி யென்றபடி], வாருணம் விடுத்து - வாருணஸ்திரத்தைத் தொடுத்துவிடுத்து, அந்த வானம் நீர் உண்டு-(அதனல்) வானத்தி னின்று கிடைத்த நீரைப்பருகி, விடிவு நோக்குவார்-பொழுதுவிடியுங் காலத்தை எதிர்பார்த்தவர்களாய், தாரணி தாங்கிய கிரியில் தங்கி னர் - பூமியைத்தாங்குவதான் ஒரு (பெரிய) மலையில் தங்கியிருந் தார்கள்; (எ-று.)

[5]வாருணம்நினைந்தனர் வானநீரினல் தாரணித்தங்கொருகிரியில் என்ற பாடத்துக்கு-வருணமந்திரத்தை ஜபித்து அதனற்கிடைத்த வானநீரையுண்டு களைப்புநீங்கி அங்கே ஒருமலையிலே தங்கினர்க ளென்க: தாரணித்தல் - உடம்புதரித்தல். வாருணம்-வருண சம்பந்த

மானது. பி-ம்:—[1]பேர்வருந். [2] துயரிறைப், துயரிடைப். [3]பேர்த்துளா ரென. [4]விடியல். (1129)

## 94 —இராமன் பள்ளிகொள்ளல்.

கல்லகல் வெள்ளிடைக் [1]கான கத்துள
பல்லவ மலர்கொடு படுத்த பாயலின்
எல்லையி றுயரினோ டிருந்து சாய்ந்தனன்
மெல்லடி யிளையவன் வருட வீரனே.

(இ - ள்.) வீரன் - இராமன்,—கல் அகல் வெள்ளிடை - கற்கள் பரந்துள்ள வெளியிடத்தில், கானகத்து உள பல்லவம் மலர் கொடு படுத்த பாயலின்-காடுகளிலுள்ள தளிர்களையும் பூக்களையுங் கொண்டு (இலக்குமணன்) அமைத்த படுக்கையில், எல்லை இல் துயரினோடு இருந்து-அளவற்ற துன்பத்துடனே இருந்து, மெல் அடி இளையவன் வருட-(தனது) மெல்லிய பாதங்களை இலக்குமணன் தடவிப் பிடிக்க, சாய்ந்தனன்-படுக்கை கொண்டான்; (எ-று.)

ஈற்றடி, சகோதரவாற்சலியம் தெரிக்கும்: அன்றியும், சீதை வருடத் துயிலுமவன் இளையவன் வருடத்துயிலுமதே என்ற இரக்கமும் பெறப்படும். வெள்ளிடை-மேல்மறைவில்லாத இடம். பல்லவம்-வடசொல். பி-ம்:—[1]கானகத்தினுள், கானினுண்மணற். (1130)

## 95.—இராமன் விரகவேதனையால் வருந்துதல்.

மயிலியல் பிரிந்தபின் மான நோயினால்
அயில்வில னொருபொரு ளவல மெய்தலால்
துயில்வில னென்பது சொல்லற் பாலதோ
உயிர்நெடி துயிர்ப்பிடை யூச லாடுவான்.

(இ-ள்.) (இராமன்),—மயில் இயல் பிரிந்த பின் - மயில் போன்ற சாயலையுடைய சீதையைப் பிரிந்த பின்பு, மானம் நோயினால் ஒரு பொருள் அயில்வு இலன்-அவமானமாகிய வியாதியால் ஒரு பொருளையும் உண்ணவில்லை; அவலம் எய்தலால் துயில்வு இலன்-(இவ்வாறு) வருத்தம் மிகுதலால் தூங்கவுமில்லை, என்பது-என்கிற இவ்விஷயம், சொல்லல் பாலதுஓ - சொல்லுதற்குத் தகுதியுடையதோ? நெடிது உயிர்ப்பிடை உயிர் ஊசல் ஆடுவான் - பெருமூச்சின் நடுவில் உயிர் ஊசலாடப் பெறுபவனானான்; (எ - று.)

உயிர்போகுநிலையிலிருப்பவன் திறத்தில் 'உண்ணவில்லை, உறங்கவில்லை' என்பதைப் பெரிதாக எடுத்துச்சொல்லவேண்டா என்க. பெருமூச்சினால் உயிர் போவதும் வருவதுமா யிருந்தது என்பது, ஈற்றடியின் கருத்து. மயிலியல் - அன்மொழித்தொகை. ()

## 96.—இதுமுதல் ஐந்து கவிகள் - இராமன் விரகதாபத்தால் வருந்திக்கூறுதலைத் தெரிவிக்கும்.

மானவண் மெய்யிறை மறக்க லாமையின்
ஆனதோ வன்றெனி னரக்கர் மாயமோ

கானக முழுவதுங் கண்ணி னோக்குங்கால்
சானகி யுருவெனத் தோன்றுந் தன்மையே.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கண்ணின் நோக்கும் கால் - (நான் எனது) கண்களாற் பார்க்கும்போது, கானகம் முழுவதும் - காடுமுழுவதும், சானகி உரு என தோன்றும் தன்மை - சீதையின் உருவமாகவே (எனக்குக்) காணப்படுந் தன்மை,—மானவள் மெய் இறை மறக்கலாமையின் ஆனதுஓ - பெருமையுடைய அச்சீதையின் மேனியை (நான்) சிறிதுபொழுதும் மறக்க முடியாமையால் உண்டானதோ? அன்று எனின் - அப்படியல்லாவிட்டால், அரக்கர் மாயம்ஓ-இராக்கதர்கள் செய்த வஞ்சனைத் தொழிலால் உண்டானதோ; (எ - று.)

உருவெளித் தோற்றத்தாற் காடுமுழுவதும் சீதையின் உருவமே இராமனுக்குக் காணப்பட்டது; ஆசை முதலியவற்றால் இடைவிடாது நினைக்கப்பட்ட பொருள் அந்நினைப்பின் மிகுதியால் எங்குங் கட்புலனாகத் தோன்றுதல் இயல்பு. ஜானகி - ஜநகராஜன் மகள்: வடமொழித் தத்திதாந்தம். மானம் - பெருமை; அதையுடையவள், மானவள்: இனி, மான்போன்ற அவளென்றலும் ஒன்று. ஓகாரங்கள் - விகற்பப் பொருளன. ஏ - ஈற்றசை. (1132)

97. கருங்குழற் சேயரிக் [1]கண்ணி கற்பினோர்க்கு
அருங்கல மருங்குவந் திருப்ப வாசையால்
ஒருங்குறத் தழுவுவா [2]னூறு காண்கிலேன்
மருங்குல்போ லானதோ வடிவு மெல்லவே.

(இ - ள்.) கரு குழல் - கரிய கூந்தலையும், சேய் அரி கண்ணி - சிவந்த அரி[ரேகை] பரந்தகண்களையுமுடைய, கற்பினோர்க்கு அருகலம் - கற்பினையுடைய மகளிர்க்கு அருமையான ஆபரணம் போன்ற சீதை, மருங்கு வந்து இருப்ப - (என்) பக்கத்தில் வந்திருக்க, ஆசையால் - (அவளிடத்து உள்ள) காதலால், ஒருங்கு உற தழுவுவான் - ஒருசேரத் தழுவும்படி (சென்று), ஊறு காண்கிலேன்- (அவளுடைய) பரிசத்தைக் கண்டேனில்லை; வடிவுஉம் - (அவளது) உருவமும், மருங்குல் போல் மெல்ல ஆனதுஓ - (அவளது) இடைபோலவே சிறிது சிறிதாகத் தேய்ந்து (முடிவில்) ஒன்று மில்லாததாய் விட்டதோ? (எ - று.)

உருவெளித்தோற்றத்திற் கண்ட சீதையின் உருவத்தைத் தழுவச் சென்ற இராமனுக்கு அங்கு ஒன்றுங் கிடையாமையால், அவன் வருந்தினன். இடுப்பு மிகச் சிறுத்திருத்தல், உத்தமஸ்திரீகளின் லக்ஷணம். அருங்கலம் - ஆகுபெயர். தழுவுவான் - 'வான்' ஈற்று எதிர்கால வினையெச்சம். ஏ - ஈற்றசை. பி - ம்:—
[1] கண்ணிற். [2] ஒன்றும். (1133)

98. புண்டரி கப்புது மலரிற் [1]றேன்பொதி
தொண்டையஞ் சேயொளித் துவர்த்த [2]வாயமுது

[3]உண்டனெ னீண்டவ ளுழைய ளல்லளால்
கண்டுயி [4]லின்றியுங் கனவுண் டாகுமோ.

(இ - ள்.) புது புண்டரிகம் மலரில் - (அவள் முகமாகிய அன்று பூத்ததாமரைமலரில், தேன் பொதி - தேன்நிறைந்த, தொண்டை அம் சேய் ஒளி - கொவ்வைப்பழம் போன்ற அழகையும் செந்நிறத்தையுமுடைய, துவர்த்த - (நிறத்தால்) பவழத்தின் தன்மையைக் கொண்ட, வாய் - வாயினது, அமுது - அமிருதத்தை, உண்டனென் - உண்டேன்; ஈண்டு - இங்கு, அவள் உழையள் அல்லள் - அச்சீதை சமீபத்தில் இல்லாதவளாய்விட்டாள்; (முதலிற் பக்கத்திலிருந்தவளாகத் தோன்றி உடனே இல்லாதவளானது கனவென்போ மெனின்),—கண் துயில் இன்றியும் கனவு உண்டாகும்ஓ - தூக்கமில்லாமலிருக்கையிலும் கனா உண்டாகுமோ? (எ-று.)—ஆல் - ஈற்றசை.

நான் அவளது வாயமுதை உண்டதாக எனக்குத் தோன்றிற்று; பார்த்தால், அவள பக்கத்தில் இல்லை; தூக்கமில்லாமையால் இதைக் கனவென்று சொல்லக்கூடவில்லையே என்று வருந்திக் கூறினனென்க. புண்டரிகப் புதுமலர் - உவமையாகுபெயர். வாயமுது உண்ணல் - அதரபானம். பி - ம்:—[1]தேம். [2]வாயமிர்து. [3]உண்டனனிடையவள். [4]அன்றியும். (1134)

99. மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்
எண்ணினும் பெரியதோ ரிடர்வந் தெய்தினல்
தண்ணறுங் கருங்குழற் சனகன் மாமகள்
கண்ணினு [1]நெடியதோ கொடிய கங்குலே.

(இ - ள்.) மண்ணின்உம் - நிலத்தினும், வானின்உம் - ஆகாயத்தினும், மற்றை மூன்றின்உம் - மற்ற (நீர் நெருப்புக் காற்று) என்ற மூன்றினும், [ஆகப்பஞ்சபூதங்களைக் காட்டிலும்], எண்ணின்உம் - எண்ணத்தைக்காட்டிலும், பெரியது - பெரியதாகிய, ஓர் இடர் - ஒரு துன்பம், வந்து எய்தினல் - (எனக்கு) வந்து அடைந்தால்,—கொடிய கங்குல் - கொடிய இரவானது,—தண் நறு கரு குழல் சனகன் மா மகள் கண்ணின்உம் நெடியது ஓ - குளிர்ச்சியும் மணமும்கருநிறமுமுள்ள கூந்தலையுடைய சீதையின் கண்களைக்காட்டிலும் நீண்டதாய் விடக்கடவதோ? (எ - று.)—ஏ-ஈற்றசை.

மிகப்பெரிது என்று காட்டுதற்கு, பஞ்சபூதங்களையும் எண்ணத்தையும் துன்பத்திற்கு உறழ்பொருவாக்கினர். "எண்பது கோடி நினைந்தெண்ணுவன" ஆதலால், எண்ணம் மிகப்பெரிது என்பது விளங்கும். "கடலினும் பெரிய கண்கள்" என்றபடி சீதையின் கண்கள் மிகப்பெரியன வாதலால், 'கண்ணினும் நெடியதோ கொடிய கங்குல்' என்றார். பிரிவுற்றார்க்குக் கங்குல் நெடிதாகத் தோன்றுதல் இயல்பு என்க. பி-ம்:—[1]நெடியையோ. (1135)

100. அப்புடை யலங்குமீ [1]னமரு மார்கலி
உப்[2]புடை யிந்துவென் றுதித்த ஊழித்தீ

வெப்புடை [3]விரிகதிர் விரிப்ப மெய்யெலாம்
கொப்புளம் [4]பொடித்ததோ கொதிக்கும் வானமே.

(இ - ள்.) அப்பு உடை-நீரையுடையதும், அலங்கும் மீன் அமரும் - அசைந்துசெல்லுகிற மீன்கள் நிறையப்பெற்றதுமான, ஆர்கலி - கடலில், உப்பு உடை இந்து என்று உதித்த - அழகுடைய சந்திரனென்றுபெயர்கொண்டு பிறந்த, ஊழித்தீ - பிரளயாக்கினியானது, வெப்புஉடை விரி கதிர் விரிப்ப-வெப்பத்தையுடைய பரந்த கிரணங்களை வீசுவதனால், கொதிக்கும் வானம் - தாபங்கொண்ட ஆகாசம், மெய் எலாம் கொப்புளம் பொடித்ததுஓ - உடம்பு முழுவதும் கொப்புளங் கொண்டதோ? (எ-று.)—ஏ-ஈற்றசை.

நட்சத்திரங்களையுடைய ஆகாசத்தை, சந்திரனால் தாபமடைந்து கொப்புளங்கொண்டதாக உத்பிரேட்சித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. "செப்பிளங்கொங்கைமீர் திங்கட்சுடர் பட்டுக், கொப்புளங்கொண்ட குளிர்வானை - யிப்பொழுது, மீன் பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ, தேன்போதிந்த வாயாற்றெரிந்து" என்னும் நளவெண்பா இங்குக் காணத்தக்கது. இது, சந்திரோபாலம்பநம். உப்பு - அழகு. இந்துவென்றுதித்தவூழித்தீ - அவநுதியணி. ஊழித்தீ - பிரளய காலத்தில் கடலினின்று வெளிக்கிளம்பி உலகத்தை யழிக்கும் வடவாமுகாக்கினி. ஆர்கலி-மிக்க ஓசையுடையதெனக் கடலுக்கு அன்மொழித்தொகை. பி-ம்:—[1]மருவும். [2]இடை. [3]வெங்கதிர்வெதுப்ப. [4]பொடித்தபோல். (1136)

## 101.—சூரியோதய வருணனை.

[1]இன்னன வின்னன பன்னி [2]யீடழி
[3]மன்னவர் மன்னவன் மதிம யங்கினான்
[4]அன்னது கண்டன னல்கி னானெனத்
[5]துன்னிய செங்கதிர்ச் செல்வன் றோன்றினான்.

(இ - ள்.) இன்னன இன்னன பன்னி - இத்தன்மையான பல வார்த்தைகளைச் சொல்லி, ஈடு அழி - வலியொடுங்குகிற, மன்னவர் - மன்னவன் - சக்கரவர்த்தியாகிய இராமன், மதிமயங்கினான் - அறிவு கலங்கினான்: (அப்பொழுது), துன்னிய செம் கதிர் செல்வன்-நிறைந்த சிவந்த கிரணங்களையுடைய சூரியன்,—அன்னது கண்டனன்-(இராமனது) அந்தநிலைமையைப் பார்த்து, அல்கினான் என - (நம்குலத்துப் பிறந்த இவன் இப்படி துன்பப்படுகிறானே யென்று) வருந்தினவன் போல, தோன்றினான் - (அவ்வருத்தத்தை யொழித்தற்கு) உதயமானான்; (எ-று.)

சூரியன் இயல்பாகஉதித்ததற்கு வேறுகாரணங் கற்பித்துக் கூறியதனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]என்ன. [2]இடர்ப்படும். [3]மன்னர்மன்னன் மதலை. [4]அன்ன. [5]துன்னுசெங்கதிர்ச் செல்வனும். இங்குக் காட்டிய பாடபேதங்களுள் இரண்டாவது தவிர மற்றைப் பாடபேதத்தைப் பார்க்கின், இச்செய்யுள் வேறுவகைச் செய்யுளாக அமைந்துள்ளதென்பது பெறப்படும்.

இராமபிரானுக்குத் தம்பியினிடமுள்ள பேரன்பு இப்படலத்தில் நன்கு வெளியாகும். (*1137*)

சடாயுவின் கிரியையைச் செய்துமுடித்தபின்பு, இராமலட்சுமணரிருவரும், சீதையை நாடினவர்களாய்த் தென்மேற்குத்திசையாக ஜநஸ்தாநத்திலிருந்து மூன்றுகுரோசதூரம் அப்பாற்சென்று, கிரௌஞ்சாரணிய மென்ற பெருங்கானகத்தைக் கடந்து, மதங்காச்சிரமத்துக்குக் கீழ்திசையாக மூன்று குரோசதூரஞ்சென்று, அவ்வாச்சிரமத்தைச் சேர்ந்தஒருவனத்திலுள்ள குகைக்குச் சமீபத்தில், மிகக்கொடியவளான அயோமுகியென்னும் அரக்கியைக் கண்டனர்; அவளும் அவர்களைக் கிட்டி, இராமனுக்குமுன் செல்லும் இலட்சுமணனை நோக்கித் தனது வேட்கையையறிவித்துக் கூடிக் கலந்து மகிழும்படிவேண்ட, இலட்சுமணன் சினங்கொண்டு, வாளையெடுத்து அவளது செவி மூக்குதனம்இவைகளை யறுத்துவிட, அவளும் வந்த வழியே சென்றனளென்று ஸ்ரீவால்மீகிராமாயணத்தில் ஒன்பது சுலோகங்களாற் சொல்லப்பட்டுள்ளது: ஸ்ரீவான்மீகத்தில் ஆங்காங்கு ஸ்ரீராமன் இளையபெருமாளிடத்துப் பிரியமாட்டாப் பேரன்பினனென்று குறிப்பித்திருப்பதைக் கம்பரென்ற மகாகவி தாம் அறிந்திருக்கின்றாராதலால் அயோமுகி சரித்திரத்தை ஒருபெரியபடலமாக அமைத்து, இராமபிரானுக்கு இளையபெருமாளிடத்துள்ள அப்பேரன்பை உலகோர்க்குக் காட்டியுள்ளார்: இங்ஙனம் முதனூலினும் சிறிது வேறுபடத்தொடுத்திருப்பது "பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி" என்றதனால் அமைவுடைத்தாம்: இங்ஙனம் கற்பனைபோற் காட்டிய இந்த அயோமுகியைப் பற்றிய சரித்திரமும் மகாகவிஞராகிய கம்பரால் எங்கேனும் காணப்பட்டதாதல் வேண்டும்.

**அயோமுகிப்படலம் முற்றிற்று.**

---

# 10 - ஆவது கவந்தப் படலம்.

இதற்கு, 'அயோமுகிப்படலம்' என்பதுபோலப் பொருள். வயிற்றுக்குள் தலை அடங்கியமைபற்றிக் கவந்தம்போலத் தோற்றமுடையவனாயிருந்ததனால், இவனுக்குக் கவந்தனென்று பெயர். கவந்தம் - கபந்தம் என்ற வடசொல்லின் திரிபு; இதற்கு-தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடல் என்று பொருள். கவந்தன்வதைப்படலம் என்றும், கவந்தன்படலம் என்றும் இப்படலத்தின் பெயர் காணப்படுகின்றது.

அயோமுகியினின்று விடுபட்டபின் இராமலக்ஷ்மணர் சீதையைத்தேடிச்செல்லுகையில் நடுப்பகலாம்போது கவந்தன்வசிக்கும் வனத்தை யடைய, அக்கவந்தன் தனது வழக்கப்படி இரண்டு கைகளையும்நீட்டி அதற்குள்சிக்கிய எல்லாப்பிராணிகளையும் வாரித் தனது வயிற்றிலுள்ள வாயினுள் இடத்துணிய, அதற்குள் அடங்கிய இராமலக்குமணர் சிறிதுநேரம் ஆலோசித்துக் கலங்கிப் பிறகு

தங்கள் கைவாள்களினால் அவனது இரண்டுதோள்களையும் வெட்டித் தள்ளினமாத்திரத்தில், அவன் சாபத்தினால் நேர்ந்த தனது கோர ரூபம் நீங்கித் திவ்வியசொரூபத்தையடைந்து ஆகாயத்தில் நின்று கொண்டு இராமபிரானைத் துதித்துத் தனது முற்பிறப்பின் வரலாற்றைக் கூறியதுமன்றி, இராமலக்குமணர் இனிச் செய்யவேண்டிய தொழில்களையும் எடுத்துச் சொல்லிப் போயினமை, இப்படலத்திற் கூறப்படுகின்றது.

## 1.—இராமலக்குமணர் சீதையைத் தேடிச்செல்லுதல்.

நிலம்பொறை [1]யிலதென நிமிர்ந்த கற்பினாள்
நலம்பொறை கூர்தரு மயிலை [2]நாடியே
அலம்புறு பறவையு மழுவ வாமெனப்
புலம்புறு விடியலிற் கடிது போயினார்.

(இ - ள்.) நிலம் பொறை இலது என - பூமிபொறுமையுள்ள தன்று என்று சொல்லும்படி, நிமிர்ந்த - உயர்ந்த, பொறை நலம் கூர்தரு - பொறுமைக்குணம் மிக்கிருக்கிற, மயில் - மயில்போன்ற சாயலையுடைய, கற்பினாளை - கற்பையுடைய அச்சீதையை, நாடி - தேடியவண்ணம், (இராமலக்குமணர்),—அலம்பு உறு பறவைஉம் அழுவ ஆம் என புலம்புறு விடியலில் - (இவர்களை நோக்கி) வருத்தங்கொள்ளுகிற பட்சிகளும் அழுகின்றன என்று சொல்லும்படி ஒலி செய்கிற விடியற்காலத்தில், கடிது போயினார் - விரைந்து சென்றார்கள்; (எ - று.)

விடியற்காலத்தில் இயல்பாகப் பறவைகள் கூவியொலித்தலை, இவர்களை நோக்கி வருந்தி அழுவனவாகக் குறித்தலால், தன்மைத் தற்குறிப்பேற்றவணி. தன் திறத்துத் தீங்குசெய்தாரை ஒறுக்காது பொறுக்கும் சீதைக்கு, அகழ்வாரையுந் தாங்கும் பூமியை உவமை கூறினார். கற்பு - கணவனையே தெய்வமென்று உணரும்மேற்கோள். மயில் - உவமையாகுபெயர். இங்கே ஐயுருபு பிரித்துக் கூட்டப்பட்டது. பி-ம் :—[1]ஈதென. [2]நாடிய. (1138)

வேறு.

## 2.—இராமலக்குமணர் நடுப்பகலில் கவந்தவன மடைதல்.

ஐயைந் தடுத்த யோசனையி னிரட்டி [1]யடவி புடைபடுத்த
வையந் திரிந்தார் கதிரவனும் வானி னுப்பண் வந்துற்றான்
எய்யுஞ் சிலைக்கை யிருவருஞ்சென் றிருந்தே நீட்டி யெவ்வுயிரும்
கையின் வளைத்து வயிற்றடக்குங் கவந்தன் [2]வனத்தின் கண்ணுற்றார்.

(இ - ள்.) எய்யும் சிலை கை இருவர்உம் - (அம்பு) எய்தற்கு உரிய வில்லைப் பிடித்த கையையுடைய இராமலக்ஷ்மணர் இருவரும், —ஐந்துஐந்து அடுத்த யோசனையின் இரட்டி அடவி புடை படுத்த வையம் திரிந்தார் - ஐம்பது யோசனை தூரம் காடுகளாற் சூழப்பட்ட இடத்தில் திரிந்தவர்களாகி, சென்று - போய்,—இருந்துஏ-(ஓரிடத்தில்) இருந்தபடியே, நீட்டி - (தனதுகைகளை) நெடுந்தூரம் நீளச்

செலுத்தி, எ உயிர் உம்-எல்லாப்பிராணிகளையும், கையின் வளைத்து-கைகளாற் சுற்றி அகப்படுத்தி, வயிறு அடக்கும் - (தன்) வயிற்றில் மடியச்செய்கிற, கவந்தன்-கவந்தனென்னும் அரக்கனது, வனத்தின் கண்-காட்டினிடத்தில், உற்றுர்-சேர்ந்தனர்; (அவ்வளவில்), கதிரவன் உம் வானின் நாப்பண் வந்து உற்றுன் - சூரியனும் ஆகாயத்து நடுவில் [உச்சியில்] வந்து சேர்ந்தான்; (எ - று.)

ஐயைந்து - ஐந்தாகிய ஐந்து என விரியும்; இருபத்தைந்து என்று பொருள்: அதன் இரட்டி - ஐம்பது. ஐவைந்து என்றுல், ஐந்துஐந்துவீதம் என்று பொருளாம். "வழங்குமுயிரனைத்தும் வாரி வாய்ப் பெய்து, விழுங்குங் கவந்தன்" என்பது, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி. பி - ம்:—[1] அளக்கர் புடையுடுத்த. [2] வனத்தைக்.

இச்செய்யுள் - மாரீசன்வதைப்படலத்தின் 113 - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தம். (1139)

வேறு.

**3-5.—இவை மூன்றுகவிகளும்-ஒருதொடர்: அக்கவந்தன் கையில் அகப்பட்டவற்றின் தன்மையைக் கூறும்.**

3. எறுப்பினங் கடையுற யானை யேமுதல்
உறுப்புடை யுயிரெலா முலைந்து சாய்ந்தன
[1] வெறிப்புறு நோக்கின வெருவு கின்றன
பறிப்பரு வலையிடைப் பட்ட [2] பான்மைய.

4. மரபுளி நிறுத்திலன் புரக்கு மாண்பிலன்
உரனில னொருவனுட் டுயிர்கள் போல்வன
வெருவுவ சிந்துவ [1] குவிவ விம்மலோடு
இரிவன மயங்குவ வியல்பு நோக்கினர்.

5. மால்வரை யுருண்டன வருவ மாமரம்
[1] கால்பறிந் திடுவன கான யாறுகள்
மேலுள திசையொடு [2] வெளிக ரப்பன
சூன் [3] முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன.

(இ - ள்.) (3) (கவந்தன் கைகளை வீசித் திரட்டினபோது அங்கு அகப்பட்ட), யானைஏ முதல் எறும்பு இனம் கடை உற - யானையின் இனம் முதலாக எறும்பின் இனம் இறுதியாக (உள்ள), உறுப்பு உடை உயிர் எலாம் - உறுப்புக்களையுடைய எல்லாப்பிராணிகளும்,— உலைந்து சாய்ந்தன-வருந்தியழியுந் தன்மையன; வெறிப்பு உறு நோக்கின வெருவுகின்றன-நடுக்கமுற்ற கருத்தையுடையனவாகி அஞ்சுந்தன்மையன; பறிப்பு அரு வலையிடை பட்டபான்மைய-நீக்கமுடியாத வலையிற்சிக்கிக்கொண்ட தன்மையையுடையன; (4) மரபுளி நிறுத்திலன் - வழிமுறைப்படி (குடிகளை)நிலைபெறச் செய்யாதவனும்,புரக்கும் மாண்பு இலன்-அரசாளும் மாட்சிமை யற்றவனும், உரன் இலன் - திறமையில்லாதவனுமாகிய, ஒருவன்-ஓர் அரசனது, நாடு - நாட்டிலுள்ள, உயிர்கள்-பிராணிகளை, போல்வன - ஒத்தனவாகி, வெருவுவ - நடுங்குவன; சிந்துவ - சிதறிப்போவன; குவிவ - திரண்டு கூடுவன; விம்ம

³லோடு இரிவன - வருத்தத்தோடு விரைந்து செல்வன; மயங்குவ - (செய்வது அறியாமல்) திகைத்து நிற்பன; (5) மால் வரை உருண்டன வருவ - பெரிய மலைகளும் உருண்டு வருவன; மா மரம் கால் பறிந் திடுவன - பெரியமரங்களும் வேரற்று விழுவன; கானம் யாறுகள் - காட்டாறுகளும், மேல்உள திசையொடு வெளி கரப்பன - (புரண்டு வந்து) மேலிடத்தையும் மற்றத்திசைகளையும் வெற்றிடமில்லாமல் மறைப்பன; சூல் முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன-கருவுற்ற மேகங் களும் துவண்டு கீழ் விழுவன; (4) இயல்பு-(இவ்வாறான)தன்மைகளை, நோக்கினர்-(இராமலட்சுமணர்) பார்த்தார்கள்; (எ - று.)

(3) பிராணிகளுள் பெரியவுருவத்துக்கு யானையையும், சிறிய வுருவத்துக்கு எறும்பையும் எல்லை கூறுவது வழக்கம். உறுப் புடையுயிர்-அங்கத்தைப் பெற்றுள்ள பிராணன்: எனவே, பிராணி யென்றாயிற்று. எறும்பு, எறுப்பு என மென்றொடர் வன்றொட ராயிற்று. இச்செய்யுளில் இறந்தகால நிகழ்காலங்கள் தன்மையை யுணர்த்தின. வெறுப்பு உறு நோக்கின-திகைப்பையடைந்த பார்வை யையுடையன எனினுமாம். பி - ம்:—[1]வெறிப்புற, வெறுப்புற. [2]பான்மையே.

(4) கவந்தன் கைகளின் நடுவில் அகப்பட்டு வருந்தும் பிராணி களுக்கு, கொடுங்கோல்மன்னன்கீழ் வாழுங் குடிகள் உவமை. மரபுளி நிறுத்துதல்-குடிகள் தங்கள் தங்கள் குலமுறைமை தவறாதொழுகும் படி நடத்துதல். மரபுளி, உளி-ஏழனுருபு. உரன்-இறுதிப்போலி. இச் செய்யுளில் எதிர்காலங்கள் தன்மையை யுணர்த்தின. பி-ம்:—[1]வீவ.

(5) சூல் முதிர் மேகங்கள் - நீர்கொண்ட காளமேகங்கள். மேகங் களுக்குக் கருமுதிர்தல்-நீர்கொண்டு பொழியும் பருவத்தனவாதல். பி - ம்:—[1]கால்பறிந்திறுவன. [2]வெளிகளாவன. [3]முகில்.

இது முதல் இருபத்தைந்து கவிகள்-இப்படலத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (1140-42)

## 6.—இராமலட்சுமணர் கவந்தன்கையில் அகப்படுதல்.

நாற்றிசைப் பரவையு மிறுதி நாளுறக்
காற்றிசைத் தெழவெழுந் துலகைக் கால்பரந்து
ஏற்றிசைத் [1]துரந்துவந் திடுங்கு கின்றன
போற்[2]றிசை சுற்றிய[3]கரத்துப் புக்குளார்.

(இ-ள்.) இறுதி நாள் உற (யாவும் அழியும்) பிரளயகாலம் வந்த மாத்திரத்தில்,காற்று இசைத்து எழ-ஊழிக்காற்றுப் பேரொலியுடன் வீசியதனால், நால் திசை பரவைஉம் - நான்கு திக்குக்களிலுமுள்ள கடல்களெல்லாம், எழுந்து - பொங்கி, கால் பரந்து - பரவி, உலகை ஏற்று - உலகத்தை மூடுவதாய், இசை துரந்து வந்து - ஆரவாரத் தோடு தொடர்ந்து வந்து, இடுங்குகின்றன போல்-நெருங்குகின்றவை போல, திசை சுற்றிய-திக்குக்களை வளைத்த, கரத்து-(அக்கவந்தனது) கைகளினிடையிலே, புக்குளார் - (இராமலக்ஷ்மணர்) அகப்பட்ட வரானார்கள்; (எ - று.)

உலகை மூடி உயிர்களை அழிக்கும் கடல்கள், திக்குக்களை மூடிப் பிராணிகளை யழிக்கிற கவந்தன் கைகளுக்கு ஒப்புமை. கால் பரந்து, கால்-தமிழுபசர்க்கம். பி-ம்:—[1]உயர்ந்து. [2]திசைச். [3]கரத்திற். (1143)

## 7.—இராமலட்சுமணர் கவந்தன்கைகளை அரக்கன் சேனையென்று கருதி மகிழ்தல்.

தேமொழி திறத்தினு [1]லரக்கன் சேனைவந்து
ஏமுற வளைந்ததென் றுவகை யெய்தினார்
நேமிமால் [2]வரைவர நெருக்கு கின்றதே
ஆமென லாயகைம் மதிட்கு ளாயினார்.

(இ-ள்.) நேமி மால் வரை வர நெருக்குகின்றதே ஆம் எனல் ஆய கை மதிட்குள் ஆயினார்-சக்கரவாள மென்னும் பெரிய மலை வரவர நெருக்குகின்றது என்னும்படியான (கவந்தனது) கைகளாகிய மதிட்குள் சிக்கிய இராமலக்ஷ்மணர்கள்,—'தேன்மொழி திறத்தினால்-தேன்போன்ற இனிய பேச்சையுடைய சீதையின் நிமித்தம், அரக்கன் சேனை-இராவணனுடைய சேனையானது, வந்து ஏம் உற வளைந்தது-வந்து காவலாக(த் தம்மை) வளைந்து கொண்டது,' என்று - என்று நினைத்து, உவகை எய்தினார்-களிப்புக் கொண்டார்கள்; (எ - று.)

இவர்கள் களிப்புற்றது, இப்பொழுதே பகைவன் சேனையை யழித்துச் சீதையை மீட்குங்காலம் நேர்ந்தது என்ற எண்ணத்தினால்; போர் நேர்ந்த தென்ற மாத்திரத்தில் மனம் பூரித்தல், சுத்த வீரர்களின் இயல்பு. சக்கரவாளமலை - உலகத்தைச் சூழ்ந்துள்ள கடலைச் சுற்றிலும் எல்லையாக வட்டமாய் அமைந்துள்ளதொரு பெருமலை; அதனை இவன் கைக்கு உவமைகூறியது, வலிய பெரிய தோற்றத்துடன் வளைதலால்; கையை மதிளாக உருவகப்படுத்தியதும், அது பற்றியே. ஏமுற = ஏமமுற: தொகுத்தல். தேமொழி - அன்மொழித்தொகை. தங்களைச் சுற்றிய கவந்தன் கைகளை, தங்களை வளைந்த இராக்கதர்சேனையென மயங்கியதனால், மயக்கவணி. மதில் = மதிள்: போலி. பி - ம்:—[1]அரக்கர். [2]வரையென.

## 8.—'இது அரக்கச்சேனையாதலால், அரக்கனூரும் அருகிலுள்ளது போலும்' என்று இராமன் இலக்குமணனுக்குக் கூறுதல்

இளவலை நோக்கின னிராம னேழையை
உளைவுசெ யிராவண னுறையு மூருமிவ்
வளவைய தாகுத லறிதி யையநாம்
கிளர்பெருந் துயரமுங் கீண்ட தா[1]மென்றான்.

(இ - ள்.) இராமன்—, இளவலை நோக்கினன் - தம்பியாகிய இலக்குமணனைப் பார்த்து, 'ஐய—! (அரக்கச்சேனை நம்மைச் சூழ்ந்துள்ளதால்), ஏழையை உளைவு செய் இராவணன் உறையும் ஊர் உம் இ அளவையது ஆகுதல் அறிதி - சீதையை(க் கவர்ந்து) வருத்தின இராவணன் வசிக்கிற ஊரும் இவ்விடத்திலுள்ள தென்பதை

அறிவாயாக; (ஆதலால்) நம் கிளர் பெரு துயரம்உம் கீண்டது ஆம் - நமது வளர்ந்துவருகிற மிக்கதுன்பமும் ஒழிந்ததாகும்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

இது அரக்கச்சேனை யாதலின், அவனூர் சமீபத்திலேயே இருக்க வேண்டும்; ஆதலால், நாம் அங்குச் சென்று சீதையை மீட்டுத் துயரை நீக்கிக்கொள்ளலா மென்று இராமன் தம்பியை நோக்கிக் கூறினான். தம்பியை அண்ணன், 'ஐய' என்று விளித்தது, அன்பினால் வந்த மரபுவழுவமைதி. பி - ம்:—[1]என. (1145)

**9.—'அரக்கச் சேனையன்று' என்று இலக்குமணன் கூறுதல்.**

முற்றிய வரக்கர்த முழங்கு தானையேல்
எற்றிய முரசொலி யேங்குஞ் [1]சங்கிசை
பெற்றில [2]தாகலிற் பிறிதொன் றாமெனச்
சொற்றன னிளையவன் றொழுது [3]முன்னினான்.

(இ - ள்.) (அதற்கு), இளையவன் - இலக்குமணன், '(நம்மை வளைந்த இது), முற்றிய அரக்கர் தம் முழங்கு தானை ஏல் - (நம்மைச்) சூழ்ந்துள்ள அரக்கர்களது ஒலிக்கின்ற சேனையாயின், எற்றிய முரசு ஒலி - அடிக்கப்பட்ட முரசவாத்தியங்களின் கோஷமும், சங்கு இசை - சங்குகளின் ஓசையும், ஏங்கும் - ஒலிக்கும்; பெற்றிலது ஆகலின் - (இது அவ்வோசைகளைப்) பெற்றிராதபடியினால், பிறிது ஒன்று ஆம் - வேறொன்றேயாம் [சேனையன்று]', என தொழுது சொற்றனன் - என்று (இராமனைத்) தொழுது சொல்லி, முன்னினான் - (அதனை இன்னதென்று அறிய) ஆலோசிப்பவனானான்; (எ - று.)—ஏதுவணி. பி - ம்:—[1]சங்கொலி. [2]ஆமெனில். [3]முன்னின்றான். (1146)

**10.—இலக்குமணன் 'இது பெருநாகமாகஇருக்கலாம்' என்று குறித்தல்.**

தெள்ளிய வமுதெழத் தேவர் வாங்கிய
வெள்ளெயிற் றரவந்தான் வேறோர் நாகந்தான்
தள்ளரு வாலொடு தலையி னால்வளைத்து
உள்ளுற[1]க் கவர்வதே யொக்கு மூழியாய்.

இதுவும், மேற்கவியும் ஒருதொடர்.

(இ - ள்.) ஊழியாய்-பிரளயத்திலும் அழியாது நிலைநிற்பவனே! தெள்ளிய அமுது எழ-தெளிவான அமிருதம் உண்டாகும்படி, தேவர் வாங்கிய - தேவர்கள் (மந்தரமலையிற் சுற்றி) இழுத்த, வெள் எயிறு அரவம் தான் - வெள்ளிய பற்களையுடைய (வாசுகியென்னும்) பாம்பு தானோ? (அன்றி), வேறு ஓர்நாகம் தான்-பிறிதொருபாம்பு தானோ? தள்ள அரு வாலொடு தலையினால்வளைத்து உள் உற கவர்வதுவே ஒக்கும் - தள்ளமுடியாத வாலோடு தலையையுஞ் சேர்த்து வளைத்து (அதனால் நாம்) உள்ளே அகப்பட்டுக் கொள்ளும்படி கவர்வது போலும்; (எ - று.)

நாகமொன்று வாலொடு தலைசேர வளைந்துநின்று நாம் உள்ளே அகப்படக் கவர்வது போலு மென்கின்றான், இலக்குமணனென்க. அசுரரும் கடல்கடைந்திருக்க இங்குத் தேவரைமாத்திரமே கூறினது, தலைமை பற்றி; இது, 'சிறப்புடைப்பொருளைத் தானெடுத்து மொழிதல்' என்னுந் தந்திரவுத்தியாம். 'தான்' என்னும் இடைச்சொற்கள் - இங்கே விகற்பப்பொருளன. பி - ம்:—[1]வளைவதை யொத்தது. *(1147)*

## 11.—இருவரும் கவந்தனெதிரிற் செல்லுதல்.

[1]என்றிவை விளம்பிய விளவல் வாசகம்
நன்றென [2]நினைந்தன னடந்த நாயகன்
ஒன்றிரண் டியோசனை யுள்புக் கோங்கலின்
நின்றென விருந்தவக் கவந்த னேர்சென்றார்.

(இ - ள்.) என்று இவை விளம்பிய - என்று இவ்வாறு கூறிய, இளவல் வாசகம் - தம்பியினது வார்த்தையை, நடந்த நாயகன் - முற் செல்லுகிற இராமன், நன்று என நினைந்தனன் - சரியானதென்று கருதினான்; (உடனே அவ்விருவரும்), ஒன்று இரண்டு யோசனை உள் புக்கு - இரண்டு யோசனை தூரம் உள்ளே சென்று, ஓங்கல் தான் நின்று என இருந்த - மலைநின்றாற்போல இருந்த, அ கவந்தன் - அந்தக் கவந்தனது, நேர் - எதிரில், சென்றார் - போனார்கள்; (எ-று.)

ஒன்றிரண்டு - பண்புத்தொகை; ஓரிரண்டு. தான் - அசை. ஓங்கல் - உயர்ந்திருப்பதென மலைக்குக் காரணப்பெயர். பி - ம்:— [1]என்றனனியம்பிய. [2]நினைந்தெதிர்நடக்கும். *(1148)*

## 12.—இதுமுதல் ஒன்பது கவிகள்-ஒருதொடர்; கவந்தனது தோற்றத்தைக் கூறும்.

வெயிற்சுட ரிரண்டினை மேரு மால்வரை
[1]குயிற்றிய வாமெனக் கொதிக்குங் கண்ணினான்
[2]எயிற்றினுக் கிடையிரு காத [3]மீண்டிய
வயிற்றிடை வாயெனு மகர வேலையான்.

(இ - ள்.) வெயில் சுடர் இரண்டினை மேரு மால் வரை குயிற்றிய ஆம் என கொதிக்கும் கண்ணினான் - வெம்மையையுடைய இரண்டு சூரியரைப் பெரியமேருபருவதம் (தன்னிற்) பதிக்கப்பெற்றதென்னும் படி கொதிக்கின்ற கண்களையுடையவனும்,—எயிற்றினுக்கு இடை இடை - பற்கள் ஒவ்வொன்றுக்கும் இடையிலே, இரு காதம் ஈண்டிய - இரண்டுகாததூரம் பொருந்தப் பெற்றதும், வயிற்றிடை-வயிற்றின் நடுவில் உள்ளதுமான, வாய் எனும் - வாயென்னப்பட்ட, மகரம் வேலையான் - சுறாமீன்களையுடைய சமுத்திரத்தை யுடையவனும்,—

இரு சூரியரை மேருமால்வரையிற் பதித்துவைத்தாற் போன்றுள்ளன, அக்கவந்தனுடைய கொதிக்குங் கண்களெனக் குறித்தார்: தற்குறிப்பேற்றவணி: இதனை, இல்பொருளுவமை யெனறலும் உண்டு. ஈற்றடி - உருவகம். பரந்தகடல் - அகன்ற வாய்க்கும், கடலி

லுள்ள சுறுமீன்கள், வாயினுள்ள பற்களுக்கும் உவமை. பி - ம்:— [1]குயிற்றியது. [2]எயிற்றிடைக்கு. [3]ஈட்டிய. (1149)

13. ஈண்டிய புலவரோ டவுண ரிந்துவைத்
தீண்டிய நெடுவரைத் தெய்வ மத்தினைப்
பூண்டுயர் வடமிரு [1]புடையும் வாங்கலின்
[2]நீண்டெனக் கிடந்தன நிமிர்ந்த கையினன்.

(இ - ள்.) ஈண்டிய புலவரோடு - திரண்டதேவர்களும், அவுணர்- அசுரர்களும், இந்துவை தீண்டிய நெடு வரை தெய்வம் மத்தினை - சந்திரனை அடைதூணாகக் கொண்ட பெரிய மந்தரமலையாகிய தெய் வத்தன்மையுள்ள மத்தை, பூண்டு - சுற்றி, உயர் வடம் - சிறந்த (வாசுகியென்னும் பாம்பாகிய) கயிற்றை,—இருபுடைஉம் வாங்கலின்- இரண்டுபக்கங்களிலும் இழுத்துக் கடைதலினால், நீண்டு என - (அந் நாகம்) நீண்டாற்போல, கிடந்தன - கிடந்தனவான, நிமிர்ந்த கையி னன் - நீண்ட கைகளையுடையவனும்,—(எ - று.)

மந்தரமலை - அவனுடலுக்கும், அதன் இருபுறத்தும் நீண்ட வாசுகியென்னும் பாம்பினுடல் - அவன் கைகளுக்கும் உவமை. நீண்டு - எச்சத்திரிபு. என - உவமவுருபு. கிடந்தன - பலவின்பாற் பெயர். இனி, இந்துவைத் தீண்டியநெடுவரை யென்பதற்கு-உயர்ச் சியாற் சந்திரமண்டலத்தை யளாவிய மலை யென்றலும் ஒன்று. பி - ம் :—[1]புடையின் [2]நீண்டன. (1150)

14. தொகைக்கனற் கருமகன் றுருத்தித் தூம்பெனப்
புகைக்கொடி [1]கனலொடு பொடிக்கு மூக்கினன்
பகைத்தகை நெடுங்கடற் பருகும் பாவகன்
சிகைக்கொழுந் [2]தெனவெதிர் தெரியு நாவினன்.

(இ - ள்.) கரு மகன் - கருமானுடைய, தொகை கனல் - மிக்க நெருப்பையுடைய உலைக்களத்திலையுள்ள, துருத்தி- துருத்தியினது, தூம்பு என - துவாரம்போல, கனலொடு - நெருப்பையும், கொடி புகை - (அதற்குக்) கொடியாயிருக்கிற புகையையும், பொடிக்கும் - வெளிப்படுத்துகிற, மூக்கினன் - மூக்கின் துவாரத்தையுடையவனும், பகை தகை - பகைமைக்குணமுடைய, நெடு கடல் - பெரிய கடலை, பருகும் - (அதிகப்படவொட்டாமல்) குடித்து ஒருநிலையில் நிற்கச்செய் கிற, பாவகன் - (படபாமுக) அக்கினியினது, சிகை கொழுந்து என - சுவாலையின் கொழுந்து என்னும்படி, எதிர் தெரியும் - (கண்ணுக்கு) எதிரேதெரிகிற, நாவினன் - நாக்கையுடையவனும்,—(எ - று.)

உட்புறத்துள்ளவெம்மை வெளிக்குப்புலனாகுமாறு கனலோடு புகை மூக்கின்வழியே வெளிப்பட, வடவைக்கனலின் சிகைபோலத் தெரிகின்ற நாவுடையவன் அந்தக் கவந்தனென்றவாறு. துருத்தித் தூம்பு, மூக்குத்துவாரத்திற்கு வடிவத்தில் உவமை. கரு மகன் - இரும்புவேலைசெய்யுங் கம்மாளன். துருத்தி - உலைக்களத்துக் கனல் மிக்கு எரியும்படி காற்றையுண்டாக்கத் தோலினால் செய்யப்பட்ட ஓர் கருவி. கொடி - துவசம். மேல்தோன்றும் கொடிகள் அதற்கு உரிய அரசர்களைத் தூரத்திலுள்ளார்க்கும் புலப்படுத்துவதுபோல, ஆகா

யத்தி லெழும்பும் புகையானது அக்கினியைப் புலப்படுத்துவதனால், அதனை அக்கினிக்குக் கொடியாகக்கூறுவது, வழக்கம். நெருப்புக்கு நீர் மாறு ஆதலால், கடலுக்கு 'பகைத்தகை' என்ற அடைமொழி கொடுத்தார். கடலிடையிலுள்ள படபை யென்னும்பெண்குதிரையின் முகத்திலுள்ள அக்கினியானது, அக்கடலில் விழும் பேராறுகள் முதலியவற்றிறைற் கடலில் நீர் மிகவொட்டாதபடி உறிஞ்சி அதனை என்றும் ஒருநிலையிலே இருக்கச் செய்கின்றதென்பது, நூற் கொள்கை. தொகைக்கனல் - உலைக்களத்துக்குப் பண்புத்தொகை யன்மொழி. பி - ம்:—[1]காலொடு, காலெனப். [2]இதுவெனத்திருகும்.

15. புரண்டுபாம் பிடைவர வெருவிப் புக்குறை
அரண்டனை நாடியோ ரருவி மால்வரை
முரண் [1]டொகு முழைநுழை முழுவெண் டிங்களை
இரண்டுகூ [2]றிட்டென விலங்கெ யிற்றினன்.

(இ - ள்.) பாம்பு புரண்டு இடைவர - (இராகுவென்னும்) பாம்பு புரண்டு தன்னிடத்து வருவதனால், வெருவி - அஞ்சி, புக்குஉறை அரண்தனை நாடி-புகுந்து வசித்தற்கு உரிய பாதுகாப்புள்ள இடத்தைத் தேடி, ஓர் அருவி மால்வரை முரண் தொகு முழை நுழை- அருவிகளையுடைய பெரிய ஒரு மலையினது வலிமை பொருந்திய குகையில் நுழைகிற, வெள் முழு திங்களை - வெண்ணிறமான பூர்ண சந்திரனை, இரண்டு கூறு இட்டு என - இரண்டு கூருகச்செய்து வைத்தாற்போல, இலங்கு - விளங்குகிற, எயிற்றினன் - கோரப்பற்களையுடையவனும்,—(எ - று.)

இராகுவுக்கு அஞ்சி அரணை நாடி முழுத்திங்களொன்று இரண்டு கூருகி மால்வரைமுழையை நுழைந்தாற்போலும், அந்தக் கவந்தனது வாயிலிருக்கும் இரண்டுகோரப்பற்க ளென்றவாறு. மலை - இவனது உடம்பிற்கும், குகை - இவனது வாய்க்கும், கூறிட்ட சந்திரன்-அதிலுள்ள இரண்டு கோரதந்தங்களுக்கும் உவமை; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]தகு. [2]இட்டன. (*1152*)

16. ஓதநீர் மண்ணிவை முதல வோதிய
பூதமோ ரைந்தினிற் பொருந்திற் றன்றியே
வேதநூல் வரன்முறை விதிக்கு [1]மைம்பெரும்
பாதகந் திரண்டுயிர் படைத்த பண்பினன்.

(இ - ள்.) ஓதம் நீர் - குளிர்ச்சியுள்ள நீரும், மண்-பூமியும், இவை முதல-(என்ற) இவை முதலியனவாக, ஓதிய - சொல்லப்பட்ட, பூதம் ஓர் ஐந்தினில்-பஞ்ச பூதங்களிலும், பொருந்திற்று அன்றி-(இவனது உடல்) ஆக்கப்பட்டதல்லாமல்,—வேதம் நூல் வரல் முறை விதிக்கும்- வேதசாஸ்திரங்களிற் கிரமப்படி கூறப்பட்ட, ஐ பெரு பாதகம் - பஞ்ச மகா பாதகங்களெல்லாம், திரண்டு - ஒருங்குசேர்ந்து, உயிர் படைத்த - உயிரைப் பெற்ற, பண்பினன் - (உடலின்) தன்மையுடையவனும்,—

தற்குறிப்பேற்றவணி. உலகத்திலுள்ள பிராணிகளின் குணந் தொழில்கள்போலன்றி இக்கவந்தனது குணந்தொழில்கள் வேறு

பட்டுள்ளதனுல், உலகத்தாருடைய உடல்கள் பஞ்ச பூதங்களினுல் ஆக்கப்பட்டதுபோல இவனது உடல் ஆக்கப்படாமல் பெரும் பாவத்தினுலேயே ஆக்கப்பட்டதாகக் குறித்தார். உலகத்துப் பிராணிகளின் உடல்கள் பஞ்சபூதங்களினுலும் ஆக்கப்பட்டன வென்பது பிரசித்தம். பஞ்சபூதங்கள் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன. முதல-பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். பஞ்சமகாபாதகங்களாவன:—பொய், கொலை, களவு, குடி, பிறர்மனைநயத்தல் என்பன: சிறிது வேறுபடவுங் கூறுவர். பி-ம்:—[1] அப். (1153)

17. வெய்யவெங் கதிர்களை விழுங்கும் வெவ்வராச்
செய்தொழி [1]லிலதுயில் செவியின் றொள்ளையான்
பொய்கிளர் வன்மையிற் புரியும் புன்மையோர்
வைகுறு நரகையு நகும்வ யிற்றினன்.

(இ - ள்.) வெய்ய வெம் கதிர்களை - வெவ்விய்தும் விரும்பத்தக் கதுமான கிரணங்களையுடைய சூரியசந்திரர்களை, விழுங்கும் - உட் கொள்ளுகிற, வெம் அரா - கொடிய (இராகுகேதுவென்னும்) பாம்பு கள், செய் தொழில் இலை-செய்யுந்தொழில் இல்லாமல், துயில் - தூங்குதற்குஉரிய, செவியின் தொள்ளையான் - செவித்தொளைகளை யுடையவனும்,—கிளர் வன்மையின் - மிக்ககொடுமையினுல், பொய் புரியும் - பொய்முதலியபாவங்களைச் செய்கிற, புன்மையோர் - அற்ப குணமுடைய பாவிகள், வைகுறும்-தங்குகிற, நரகைஉம்-நரகத்தையும், நகும்-(தனக்கு ஒப்பாகாதென்று) பரிகசிக்கும்படியான, வயிற்றினன்- கொடுவயிற்றையுடையவனும்,—(எ-று.)

நரகத்தில் உயிர்கள் வருந்துதலினும் மிகுதியாக இவனது வயிற்றில் கொல்லாது ஒருங்கேவிழுங்கப்பட்ட பிராணிகள் தவிக் கின்றன வென்பது, பின்னிரண்டடியின் கருத்து. இராமலக்கு மணரைக் கவரும் இவ்வரக்கன் சந்திரசூரியரையும் கைப்பற்றி விழுங்கவல்லானென்பதுபட, இராகுகேதுக்களுக்குச் செய்தொழி லிலை யென்று ரென்னலாம். இவனது செவித்தொளைகள் பெரும் பிலம்போன்றுள்ளன என்பார், 'இராகுகேதுக்கள் தூங்குதற்கு உரியன' என்றூர். 'வெய்யவெங்கதிர்கள்' என ஒருதொடராகக் கூறினுலும், 'வெய்ய' என்பதைச் சூரியனுக்கும், 'வெம்' என்பதைச் சந்திரனுக்கும் அடைமொழியாக்குக. 'வெம்' என்பது. "வெம்மை வேண்டல்" என்னுந் தொல்காப்பியத்தின்படி இங்கே விரும்ப லென்னும் பொருளது. 'பொய்' என்றது - மற்றையபாவங்களுக்கும் உபலட்சணம். இலை = இன்றி: முற்றெச்சம். தொள்ளை = தொளை: தொளை = துளை: பி-ம்:—[1] இல. (1154)

18. முற்றிய வுயிரெலா முருங்க வாரித்தான்
பற்றிய கரத்தினன் பணைத்த பண்ணையில்
துற்றிய புகுதருந் [1]தோற்றத் தானமன்
கொற்றவாய் தற்செயல் குறித்த வாயினன்.

(இ - ள்.) முற்றிய உயிர் எலாம் - சூழவளைக்கப்பட்ட பிராணிக ளெல்லாவற்றையும், முருங்க - அழியும்படி, வாரி பற்றிய - வாரி யெடுத்த, கரத்தினன் - கைகளையுடையவனாய், பணைத்த பண்ணை யில்-பருத்துள்ள படகுபோன்ற (தனது) வயிற்றில், துற்றிய - உட் கொள்ள, புகுதரும் - (அப்பிராணிகள்) நெருங்கிப்புகுகிற, தோற்றத் தால்-காட்சியால், நமன் கொற்றம் வாய்தல் செயல் குறித்த-யமனது பட்டணத்தின் வெற்றிபெற்றவாயிலின் செயலையொத்த, வாயினன்- வாயையுடையவனும்,—(எ - று.)—தான்-அசை.

கையால்வளைத்த உயிர்களை யெல்லாம் தன்வயிற்றிற்புகுத்து மாறு வாயிற் செலுத்த, அவை பெருவருத்தத்துடன் ஆங்குப்புகு வது - யமனது பட்டணத்தின் வாசலில் வருத்தமனுபவித்தற் பொருட்டுஉயிர்கள் வந்து உட்புகுதற்கு நெருங்குதல் போலுமென்றார். பண்ணைபோல்வதைப் பண்ணையென்றது, உவமவாகுபெயர். பண்ணை- படகு. வாய்தல்=வாயில். பி - ம்:—[1]தோற்றத்தால்யமன். (1155)

19. ஓலமார் கடலென முழங்கு மோதையான்
ஆலமே யென[1]விருண் டழன்ற வாக்கையான்
நீலமா னேமியிற் றலையை நீக்கிய
காலநே மியிற்பெருங் கவந்தக் காட்சியான்.

(இ - ள்.) ஓலம் ஆர் கடல் என முழங்கும் ஓதையான் - ஆர வாரம் மிக்க கடல்போல ஒலிக்கும் பேரொலியுடையவனும்,— ஆலம்ஏ என இருண்டு அழன்ற ஆக்கையான் - ஆலாகல விஷந்தா னென்னும்படி கறுத்துக் கொதிப்புக்கொண்ட சரீரமுடையவனும்,— நீலம் மால் - நீலநிறமுடைய திருமால், நேமியின் - (தனது) சக்கரா யுதத்தினால், தலையை நீக்கிய - தலையை அறுத்துத் தள்ளப்பெற்ற, காலநேமியின் - காலநேமியென்னும் அசுரன்போல, பெரு கவந்தம் காட்சியான் - பெரிய கவந்தத்தின் தோற்றத்தையுடையவனும்,—

அந்தக்கவந்தன், தலைவயிற்றிற்பொருந்தக் கவந்தமான கறுத்த வுடலோடு கடல்போலப் பேரொலியுண்டாக்கியவண்ணம் இடந்தா னென்பதாம். திருமால் காலநேமியென்னும் அசுரனைக்கடிந்த கதை:- நரசிங்காவதாரஞ்செய்த விஷ்ணுவினாற் கொல்லப்பட்ட இரணியனுக் குக் காலநேமி யென்னும் ஓர் மகன் நூறுதலைகளையும் நூறுகைகளை யும் உடையவனாயிருந்தான்: அவன், தேவாசுர யுத்தத்தில் முது கிட்ட அசுரர்கள் பக்கத்தில்வந்து தேவர்கள்யாவரையும் சயித்துச் சத்தியலோகத்திற் சென்று பிரமனைத் தேவர்கள் துதிப்பதுபோல அசுரர்யாவரும் தன்னை வணங்கித் துதிக்கும்படி வீற்றிருந்தான்; பிறகு அவன் செருக்குக்கொண்டு, தன் தகப்பனை [இரணியனை]க் கொன்ற திருமாலினிடத்துச் சென்று பகைமைபாராட்டிப் போர் செய்யத்தொடங்க, உடனே திருமால் தனது சக்கராயுதத்தினால் அவனது நூறுதலைகளையும் நூறுகைகளையும் அறுத்துத்தள்ளி விட்ட பின்பும், கவந்தரூபமாகிய அவன் அஞ்சாது எதிர்த்துநிற்க, அப்பொழுது திருமாலின் வாகனமாகிய கருடபகவான் அக் கால நேமியைத் தனது மார்பினால் வீழ்த்தினா னென்பது. பி - ம்:—
[1] அழன்றிருண்ட. (1156)

## 20.—இராமலக்ஷ்மணர் கவந்தனைக் காணுதல்.

தாக்கிய தணப்பில்கா லெறியத் தன்னுடை
மேக்குயர் கொடுமுடி யிழந்த மேருநேர்
ஆக்கையி னிருந்தவன் றன்னை யவ்வழி
நோக்கின ரிருவரு நுணங்கு கேள்வியார்.

(இ - ள்.) *தாக்கிய தணப்பு இல் கால் எறிய* - மோதுந்தன்மையுள்ள நீங்குதலில்லாத பெருங்காற்று அடித்தலினால், *தன்னுடை* - தனது, *மேக்கு உயர் கொடுமுடி* - மிகவுயர்ந்த சிகரங்களை, *இழந்த*—, *மேரு* - மேருமலையை, *நேர்* - ஒத்த, *ஆக்கையின்* - சரீரத்தோடு, *இருந்தவன் தன்னை* - இருந்தவனாகிய கவந்தனை, *நுணங்கு கேள்வியார் இருவர்உம்* - நுட்பமான நூற்கேள்விகளையுடையவர்களான அவ்விருவரும், *அ வழி* - அவ்விடத்து, *நோக்கினர்* - பார்த்தார்கள்; (எ - று.)

இவனது தலையற்றஉடலுக்கு, சிகரங்களை யெல்லாம் இழந்த மேரு நேரென்று இல்பொருளுவமை கூறினார். இங்குக்கூறிய உவமை வடிவுபற்றியதன்றி நிறம்பற்றியதன்று. வாயு சதாகதியாதலின், அதற்கு 'தணப்பில்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

மேரு கொடுமுடியிழந்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலியென்று விவாத முண்டாக, அதனைப் பரீட்சித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேரு மலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவதென்றும், ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடுஉண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர் முதலியோரின் முன்னிலையில் தம்தம்வலிமையைக் காட்டத்தொடங்கியபோது, ஆதிசேஷன் தனது ஆயிரம்படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையும் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங் காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென் திசையில் தள்ளிவிட்டனன் என்பதாம். மேக்கு = மேல். (*1157*)

## 21.—இராமலட்சுமணர் கவந்தன்வாயைக் காணுதல்.

நீர்புகு நெடுங்கட [1]லடங்கு நேமிசூழ்
பார்புகு நெடும்பகு வாயைப் [2]பார்த்தனர்
சூர்[3]புக லரியதோ ரரக்கர் தொன்மதில்
ஊர்புகு வாயிலோ விதுவென் [4]றுன்னினார்.

(இ - ள்.) *நீர் புகும்* - பேராறுகள் விழப்பெற்ற, *நெடுகடல்*-பெரிய கடல்கள், *அடங்கு*-உள் அடங்கப்பெற்ற [கடல்களைச் சுற்றிய], *நேமி*-சக்கரவாளமலையினால், *சூழ்* - சூழப்பட்ட, *பார்* - பூமி, *புகும்*-நுழையும்படியான, *நெடு பகுவாயை* - நீண்ட பிளந்த [திறந்துள்ள] வாயை, *பார்த்தனர்* - பார்த்து, (அவ்விருவரும்), '*இது*—, *சூர் புகல் அரியது*-தேவர்களாலும் உட்செல்லப்பெறாத, *ஓர்*-ஒரு, *அரக்கர் தொல் மதில் ஊர் புகு வாயில்ஓ* - அரக்கருடைய பழைய மதில்சூழ்ந்த ஊர்க்குட்

புகுவதற்கு ஏற்பட்ட வாசலோ?' என்று உன்னினர்-என்று நினைத்தார்; (எ - று.)

'தேவர்களாலும் கிட்டுதற்கு அரிய அரக்கரின் மதிலுள் புகும் வாயிலோ?' என்று அந்தக்கவந்தன் வாயைப் பற்றிக் குறித்தனரென்க. பூமியைச் சுற்றிக் கடல்களும், அவற்றைச் சுற்றிச் சக்கரவாளமலையும் இருப்பன என்பது ஒருசார் நூற்கொள்கை. கடலடங்கு நேமி சூழ் பாரும் புகவல்ல வாய் என்றது - தொடர்புயர்வுநவிற்சியணி. கடலடங்கும் வாய், பார்புகும் வாய் என இரண்டையும் வாய்க்கு அடைமொழியாக்கினும் அமையும். சூர் - அச்சமுமாம். வாயில் = இல்வாய்; இலக்கணப்போலி. பி - ம்:—[1] ஒடுங்கு. [2] பார்த்தனன். [3] புகலாயது. [4] உன்னினன். (1158)

## 22.—இலக்குமணன் கவந்தனைப் பூதமென்று கருதிக் கவலைகொண்டு இராமனிடம் கூறல்.

அவ்வழி யிளையவ [1]னமர்ந்து[2] நோக்கியே
வெவ்விய தொருபெரும் பூதம் வில்வலாய்
[3]வவ்விய தன்கையின் வளைத்து வாய்ப்பெயும்
செய்வதெ னிவணெனச் செம்மல் சொல்லுவான்.

(இ-ள்.) அ வழி-அப்பொழுது, இளையவன்-இளைய பெருமாள்,— அமர்ந்து நோக்கி - உற்றுப்பார்த்து, (பிறகு), (இராமனை நோக்கி), 'வில்வலாய்-விற்றொழிலில் வல்லவனே! வெவ்வியது ஒரு பெரு பூதம்- கொடியதாகிய ஒரு பெரும்பூதமானது, தன் கையின் வளைத்து - தனதுகைகளால் வளைத்து, வவ்விய - கவர்ந்தபிராணிகளை, வாய் பெயும் - வாயிலே போகட்டுக் கொள்ளும்; இவண் செய்வது என் - (இது தன்கையிலகப்பட்டுக்கொண்ட நம்மையும் அவ்வாறே வாயிற் போகட்டுக்கொள்ளுமாதலால்) இப்பொழுது (நாம்) செய்யக்கூடியது யாது?' என-என்று வினவ,—செம்மல்-இராமபிரான், சொல்லுவான்- மறுமொழி கூறுபவனானான்; (எ - று.)—அதனை, மேற்கவிகளிற் காண்க.

அப்போது இளையபெருமாள் இராமபிரானை நோக்கி, 'வில்வலாய்! தன்கையால்வளைத்து அகப்பட்ட பிராணிகளை வாய்ப் பெய்யும் கொடிய ஒரு பூதத்தின் கையில் அகப்பட்டுக் கொண்டுளோமே; இப்போது நாம் செய்யவேண்டுவது என்?' என்று வினவினனென்பதாம். வவ்விய-பெயர். பி - ம்:—[1] அமைந்து. [2] நோக்கிய [3] வவ்வியே. (1159)

## 23.—இதுமுதல் ஐந்து கவிகள்-இராமன் இலக்குமணனை நோக்கிக் கூறுவன.

பாரிட மேயிது பரவை சுற்றுறும்
பாரிட மிரிதெனப் பரந்த மெய்யது
பாரிடம் [1]வலம்வரப் பரந்த கையது
பாரிடந் தெடுத்தமா [2]வனைய பாழியாய்,

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பார் இடந்து எடுத்த மா அனைய - பூமியைக் (கோட்டாற்) குத்தியெடுத்துக் கொணர்ந்த வராகமூர்த்தியையொத்த, பாழியாய் - பலமுள்ளவனே! இது பாரிடமே - இது பூதந்தான்; (ஏனெனில்),—பரவை சுற்றுறும் பார் [பரு] இடம் அரிது என - கடல்சூழ்ந்த அகன்ற இடமான பூமியும் (இடம்) போதாதென்னும்படி, பரந்த மெய்யது-பரந்துள்ள உடம்புடையது; இடம் வலம் வர பரந்த கையது - இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் பொருந்திய நீண்ட கைகளையுடையது: பார்-(நீ) பார்ப்பாயாக; (எ-று.)

முண்டமாயுள்ள கவந்தனைப் பார்த்து, பரந்த மெய்யையும் இடம் வலம்வரப்பரந்த கையையும் பெற்றிருத்தலால் பூதமேயென ஊகித்தான், ஸ்ரீராமன். ஒவ்வோரடியிலும் முதலில் சில எழுத்துக்கள் ஒருதன்மையனவாய் நின்று பொருள் வேறுபட்டு வந்ததனால், இது - யமகமென்னுஞ் சொல்லணி; இரண்டாமடியில், 'பாரிடம்' என்பது - பரு இடமென்று பிரிந்து, அகலிடமென்று பொருள்படும். மா-விலங்கு; இப்பொதுப் பெயர், இங்கே சிறப்பாய்ப் பன்றியைக் குறித்தது.

பாரிடந் தெடுத்த கதை:—ஒருகாலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற சுவேதவராககல்பத்துக்கு முந்திய பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் திருமால் பிரளயப் பெருங்கடலில் மூழ்கியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவராகரூபத்தைச் செய்தருளிப் பூமியை யெடுத்து வந்தன னென்றும் புராணவரலாறு உண்டு. பி - ம்:—[1] அலம்வர. [2] வாயிற்பாழிவாய். *(1160)*

24. தோகையும் பிரிந்தன ளெந்தை துஞ்சினன்
வேகவெம் பழிசுமந் துழல வேண்டலேன்
ஆகலின் யானினி யிதனுக் காமிடம்
[1] ஏகுதி யீண்டுநின் றிளவ லேயென்றான்.

(இ - ள்.) 'இளவலே - தம்பீ! தோகையும் பிரிந்தனள் - மயில் போன்ற சாயலையுடைய சீதையும் பிரிந்தாள்; எந்தை துஞ்சினன் - தகப்பன் முறையான சடாயுவும்(அவள் நிமித்தம்)இறந்து விட்டான்; வேக வெம் பழி சுமந்து உழல வேண்டலேன்-(இவ்வாறு) மனமழியும்படி கொடும் பழியைத் தாங்கி யலைதற்கு விரும்புகின்றேனில்லை; ஆதலின்-ஆதலால், இனி யான் இதனுக்கு ஆமிடம் - இப்பொழுது நான் இப் பூதத்திற்கு நுகரப்படும் பொருளாவேன்; ஈண்டு நின்று ஏகுதி-(நீ மாத்திரம்)இங்கிருந்து (தப்பி ஊர்க்குத்) திரும்பிச் செல்வாயாக', என்றான்—; (எ-று.)

இளவலே! சீதையும் மாற்றான் கொண்டேகப் பிரிந்திட்டாள்; அவளை மீட்க முயன்று தந்தையாக இருந்த சடாயுமன்னரும் இறந்து விட்டார்; இவ்வகையில் பெரும் பழி விளைந்துள்ளதைத் தாங்கி இவ்வுலகிலுழல விரும்புகின்றிலேன்; ஆகவே, நான் இப் பூதத்திற்கு உணவு ஆவேன்; நீ மீண்டு ஊர்க்குச்செல்வாய் என்று இராமபிரான் இலக்குமணனை நோக்கிக் கூறினு னென்பதாம். தோகை - பெண்ணுக்கு இருமடியாகுபெயர். 'எந்தையும் துஞ்சி னுன்' என்று இருக்கவேண்டிய உம்மை, விகாரத்தால் தொக்கது. 'எந்தை துஞ்சினுன்' என்பதற்குத் தசரதன் மரணத்தைப் பொரு ளாக்குதல் சிறப்பன்று. இனி, வேகம் வெம்பழி என்றும் பிரிக்கலாம்; உக்கிரமான கொடும்பழி அல்லது, (உலகத்தில்) விரையப்பரவுந் தன்மையதான கொடும்பழி யென்க. இங்கே 'வெம்பழி' என்றது - சீதையையும் சடாயுவையும் இழந்ததாலாகியதை. ஆமிடம் - ஆமிஷ மென்ற வடமொழியின் திரிபு; நுகரத் தக்க வஸ்து என்றுபொருள். இனி,இவ் வடமொழிக்கே மாமிசமென்றுபொருள் கூறுதலும், ஆம் இடமென்று தமிழ்மொழியாகப் பிரித்து உரைத்தலும் சிறவா. பி - ம்:—'ஏகுவனேகுதியிளவன்மீண்டென்றான். (1161)

25. ஈன்றவ ரிடர்பட வெம்பி துன்புறச்
சான்றவர்[1] துயருறப்[2] பழிக்குச்[3] சார்வுமாய்த்
தோன்றலி[4] னென்னுயிர் துறந்த போதலால்
ஊன்றிய பெரும்பழி துடைக்க வொண்ணுமோ.

மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஈன்றவர் இடர்பட - பெற்றவர் விசனமடையவும், எம்பி துன்பு உற - எனது தம்பியாகிய நீ வருத்தமடையவும், சான்ற வர் துயர் உற - பெரியவர் துன்பமடையவும், பழிக்கு சார்வுஉம் ஆய்-பழிகளுக்கும் ஆதாரமாய், தோன்றலின்-(யான்) தோன்றியுள்ள தனுல், என் உயிர் துறந்த போது அலால் - எனது உயிரை விட்ட போதல்லாமல் [யான் இறந்தாலன்றி], ஊன்றிய பெருபழி - நிலை பெற்ற இப்பெரும்பழியை, துடைக்க ஒண்ணும்ஓ-நீக்குதல் கூடுமோ? [கூடாது என்றபடி]; (எ - று.)

ஈன்றவர் - தந்தையாகிய தசரதனும், தாயாகிய கௌசலை முதலியோரும்: அவர்கட்கு இடர், புத்திரரைப்பிரிந்ததனுலானது. எம்பி - முன்னிலைப் படர்க்கை இடவழுவமைதி. துன்பு - வனவாசத் தாலானது. சான்றவர் - வசிட்டர் முதலியோர் என்னலாம்; சான்ற வர் துயருற-சடாயு எனக்காகப் போராலபுண்பட்டுத் துயருற்று இறக்க எனின், சான்றவரென்பது உயர்வுப்பன்மையாம். பழி - கொண்ட தாரத்தையும் காக்கத் திறனற்றவன், தந்தையார் உயி ரிழக்கக் காரணமானவன் என இவ்வாறுனது. ஒண்ணுமோ = மருஉ. பி - ம்:—[1] துயர்பட. [2]பழிக்கும். [3]சான்றுமாய். [4]இன். (1162)

26. இல்லியல் புலடயநீ ரளித்த வின்சொலாம்
வல்லியவ் வரக்கர்தம் மனையு ளாளெனச்

[1]சொல்லிநன் மலையெனச் சுமந்த [2]தூணியன்
வில்லினென் செல்வெனோ மிதிலை வேந்தன்பால்.

(இ - ள்.) மிதிலை வேந்தன்பால் - மிதிலைநகரத்து அரசனான சனகராசனிடத்தில்,—'இல் இயல்பு உடைய - இல்லற வாழ்க்கைக்கு உரியகுணத்தையுடைய, நீர் அளித்த - உம்மால் (கன்னிகாதானஞ் செய்து) கொடுக்கப்பட்ட, இன் சொல் ஆம் வல்லி - இனிய சொற்களை யுடையளான பூங்கொடி போன்ற சீதை, அ அரக்கர்தம் மனை உளாள் - அந்த இராக்கதர்களுடைய வீட்டிலிருக்கிறாள்,' என சொல்லி - என்று சொல்லிக்கொண்டு, நல் மலை என சுமந்த தூணியன் - நல்ல மலைபோலத் தாங்கப்பட்ட தூணியை யுடையேனாகியும், வில்லினென் - வில்லையுமுடையேனாகியும், செல்வெனோ-போவேனோ?

மனையாளை மாற்றார்கையில் விட்டிட்டு அதற்கு மாறு செய்ய மாட்டாமலே வீரர்க்குஉரிய சின்னங்களோடும் அம்மனைவியின் பெற்றோர் முன்னிலையிற் செல்வதினும் இழிவுதருவது வேறொன்றில்லை: அதனால், இந்தப் பூதத்திற்கு உணவாதலே தகுதியென்பது கருத்து. இல், வல்லி - ஆகுபெயர்கள். அவ்வரக்கரென்ற சுட்டு, பிரசித்தியைக் காட்டும். 'மலையெனச்சுமந்த' என்ற அடைமொழியை, வில்லுக்குங் கூட்டுக. மிதியென்னும் அரசனால் அமைக்கப்பட்ட நகரமாதல்பற்றி, 'மிதிலை' என்று பெயர். நீர் - உயர்வுப்பன்மை. பி - ம்:— [1]சொல்லினன். [2]தோண்மிசை, தூணியென். (1163)

27. தளையவிழ் கோதையைத் தாங்க [1]லாற்றலன்
இளைபுரிந் தளித்தன்மே லிவர்ந்த [2]காதலன்
உளனென வுரைத்தலி னும்ப ரானென
விளிதனன் றுதலின் விளித [3]னன்றென்றான்.

(இ - ள்.) தளை அவிழ் கோதையை தாங்கல் ஆற்றலன் - (இதழ்கள்) முறுக்கு அவிழப்பெற்ற பூமாலையை யணிந்த சீதையைக் காப்பாற்றத் திறமையற்றவனாய், (பறிகொடுத்து), இளை புரிந்து அளித்தல்மேல் இவர்ந்த காதலன் - தம்பியினால் விரும்பிக் காப்பாற்றப்படுதலில் ஆசைகொண்டவனாய் (மனைவியை யிழந்த சோகத்தினால் தற்காத்துக் கொள்ளும் வலியும் அற்று], உளன் - இருக்கின்றான், என- என்று, உரைத்தலின் - (பிறரால் குறைவாகச்) சொல்லப்பெறுவதை விட, உம்பரான் என விளிதல் - (இராமன்) மேலுலகத்திலுள்ளான [இறந்தான்] என்று சொல்லப் பெறுதல், நன்று - நல்லது; ஆதலின் - ஆகையினால், விளிதல் நன்று - (நான்) இறந்துவிடுவதே நல்லது, என்றான் - என்றுங்கூறினான்; (எ - று.)

இளை - இளையோனுக்குப் பண்பாகுபெயர். இனி, இளைபுரிந்தளித்தல்மேல் என்பதற்கு - பூமியைவிரும்பி அரசுபுரிதலில் என்று பொருள்கொள்ளல் சிறக்கும். பி - ம்:—[1]ஆற்றலென். [2]காதலென். [3]நன்றரோ.
(1164)

வேறு.

28.—இதுமுதல் எட்டுக்கவிகள்-இலக்குமணன் மறுமொழி.

ஆண்டா னின்னன பன்னிட வையற் கிளவீரன்
[1]ஈண்டியர னுன்பின் [2]னேகிய பின்னிவ் விடர்வந்து
மூண்டான் முன்னே யாருயி ரோடு முடியாதே
மீண்டே போதற் காமெனி [3]னன்றென் [4]வினையென்றான்.

(இ - ள்.) ஆண்டான் இன்னன பன்னிட - (எம்மை) அடிமையாகவுடையவனான இராமபிரான் இவ்வார்த்தைகளைச் சொல்ல, ஐயற்கு இளவீரன் - அவ்விராமனுக்கு இளையவனாகிய லட்சுமணன், 'ஈண்டு - இந்தக்காட்டில், யான் உன் பின் ஏகிய பின் - நான் உன் பின்னே வந்தபிறகு, இ இடர் வந்து மூண்டால் - இப்படிப்பட்ட பெருந்துன்பம் (உனக்கு) வந்துநேரிட்டதென்றால், முன்னே - முன்னமே, முடியாதுஏ - (நான்) இறந்திடாமலே, ஆர் உயிரோடு மீண்டே போதற்கு ஆம் எனின் - அருமையான உயிருடன் திரும்பிச் செல்வதற்குக் கூடுமாயின், என் வினை - எனது தொழில், நன்று - மிக அழகிது,' என்றான் - என்று (மனங்கசிந்து) கூறினான்; (எ - று.)

உனக்குப் பணியாளனாய்க் காட்டுக்கு உன்னுடன் வந்து, நீ பேரிடரை அடைந்தபோது நான்மாத்திரம் உயிர்தப்பி மீள்வது, எனக்குத் தருமமன்று என்று இலக்குமணன் கூறினான். 'நன்று' என்றது, பிறகுறிப்பு. ஆண்டான் - தலைவனென்றபடி. ஐயற்கு - இராமனைநோக்கி, என்றான் என்றலும் ஒன்று. மூன்றுநான்காமடிகளில், "மன்னுந் நகர்க்கேயிவன் வந்திடின்வாவதன்றேல், முன்னம் முடி" என்ற தாயின் ஆணையை இலக்குமணன் நினைவு கூர்ந்து பேசுவதாகக் கம்பர் இங்கு அமைத்துள்ளார்: மேல் 31-ஆம் பாட்டில் வெளிப்படையாகக் கூறுவர். பி-ம்:—[1]ஈண்டர் அல்லது ஈண்டாயான் பின். [2]ஏகியதன்பின். [3]இன்றென். [4]விறல்.

இதுமுதல் ஒன்பது கவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் 171-ஆங் கவிபோன்ற கலிநிலைத்துறைகள். (1165)

29. என்றா [1]னென்னுப் பின்னு மிசைப்பா னிடர்தன்னை
வென்றா [2]ரன்றோ வீரர்க ளாவார் [3]மேலாய
தன்றாய் தந்தை தம்மு னெனுந்தன் மையர்முன்னே
[4]பொன்றா நின்றா னீங்குவ தன்றோ புகழும்மா.

இதுமுதல் ஏழுகவிகள்- ஒருதொடர்.

(இ - ள்.) என்றான் - என்றுகூறிய இலக்குமணன், என்னா-இவ்வாறுசொல்லி, பின்னும் இசைப்பான் - மேலும் சொல்லுவான்:— 'இடர் தன்னை வென்றார் அன்றோ வீரர்கள் ஆவார் - துன்பத்தைச் சயித்தவர்களல்லவா வீரர்களாவார்: மேல்ஆய தன் தாய் தந்தை தம்முன் எனும் தன்மையர் முன்னே - மேம்பட்டவரான தனது தாயும் தகப்பனும் தமையனும் என்றாற்போன்ற உறவுத்தன்மையோரிருக்கையில் அவர்கட்குமுன்னே, பொன்றா நின்றால் - (தன்னை)

மாய்த்துக்கொண்டுநின்றால், புகழ் நீங்குவது அன்றோ - புகழானது நீங்கிவிடுமல்லவோ? (எ-று.)—அம்மா-வியப்பிடைச்சொல்.

இராமன் இலக்குமணனை ஊர்க்குமீண்டு செல்லுமாறு கூறி, தான் உயிரைத்துறப்பதாகவும் 24, 25-செய்யுளில் கூறியுள்ளான்: கீழ்ச் செய்யுளால் தான் மீண்டுப்போதல் நன்றன்று என விளக்கிய இலக்குமணன், நீ உன்னுயிரைத்துறப்பதுநன்றன்றுஎன இங்குக் காட்டுகிறான். இடரை வெல்லுதலாவது - எவ்வளவுதுன்பம் வந்தாலும் மனத்தளர்ச்சியின்றி யிருத்தல். எவ்வாறான இடர்நேர்ந்தாலும் மனங்கலங்காது அவ்விடரை வென்றோரே வீரரென்ற புகழ்க்கு உரியர்: அவ்வாறன்றி, பெற்றோர் உடன்பிறந்தோர் என்றாற் போன்றவர் பெருந்துன்பமடைய, நேர்ந்த இடரைத் தாங்கும் மனவுறுதியின்றி ஒருவர் உயிரை மாய்ப்பின் அவர்க்கு வீரரென்ற புகழ் வாய்க்காது நீங்குமன்றோ! ஆதலால் வீரனென்னப்படுகிற நீ எம்போலியர்க்கு முன்னே இடரைத்தாங்கமாட்டாது உயிர்நீத்தல் தக்கதன்றென்பதாம். நீ உன்னுயிரை நீத்தலால் பழி நீங்காது: புகழே நீங்கும் என்றான் இலக்குமணன் எனக. இனி, [3]விரவாரின், [4]பொன்றுனென்றால் என்ற பாடங்களைக்கொண்டு, தமையனை நீ இறந்துபடுவதாயிருப்பின், தம்பியாகிய நான் உனக்கு முன்னே இறந்தொழிந்தாலன்றோ எனக்குப் புகழ் நிலைநிற்கும் என்பது, பிந்தினவாக்கியத்தின் கருத்து என்பாருமுளர். இப்பொருளில் உண்மையுறவினர்க்கு அடையாளம், தமது உற்றார்க்குத் துன்பம் வந்தால் தாமும் கூடத் துன்பமுறுதலேயாம்: தமையன் முதலியோர்க்குத் துன்பம் நேர்ந்தவிடத்துக் கன்னெஞ்சனாகி அழியாதிருந்தால் அவன் அவர்க்குப் பகைவன்போன்றவனே யென்றுபொருளுரைக்க. விரவார் - தன்னோடுகலவாதவர்: எனவே, பகைவர். இந்தப்பாடமும் பொருளும் முன்னிரண்டடிகளோடு ஒட்டாமையால் சிறவா. பி - ம்:—[1]என்னே. [2]அன்றே. (1166)

30. மானே யன்னா டன்னொடு தம்முன் [1]வரையாருங்
கானே [2]வைகக் கண்டுயில் [3]கொள்ளா தயல்காத்தற்கு
[4]ஆனா னென்னே யென்றவர் முன்னே [5]யவரின்றித்
தானே வந்தா [6]னென்றலின் வேறோர் தவறுண்டோ.

(இ - ள்.) 'மானே அன்னாள் தன்னொடு - மான்போன்ற பார்வையையுடைய மனையாளோடு, தம்முன் - (தனது) தமையன், வரை ஆரும் கானே வைக - மலைகள் நிறைந்த காட்டில் வசிக்க, (அவன் தம்பி), கண் துயில் கொள்ளாது அயல் காத்தற்கு ஆனான் - தூங்காமல் பக்கத்திலிருந்து (அவர்களைக்) காப்பதற்கு ஏற்பட்டுள்ளான்; என்னே - (இந்தஉறவுமுறைமை இருந்தபடி) என்!' என்றவர் முன்னே - என்றுகூறிப்புகழ்ந்த நாட்டவர்முன்னே, அவர் இன்றி தானே வந்தான் என்றலின் - அத்தமையனும்மனைவியும் இல்லாமல் தான் மாத்திரம் (உயிருடன் திரும்பி) வந்துவிட்டான் என்று இகழ்ந்து சொல்லப்பெறுதலினும், வேறு ஓர் தவறு உண்டோ - (எனக்கு) வேறொரு குற்றமுள்ளதோ? (எ - று.)

கீழ்ச்செய்யுளில் நீ உயிரைமாய்க்க உன்னுதல் தகாது என்று காரணத்துடன்கூறிய இலக்குமணன், இச்செய்யுளால் நீ இறக்க

நான் ஊருக்குமீள்வது தக்கதன்று என்பதை மீண்டும் காரணத்துடன் விளக்குகின்றான்; புகழற்றவாழ்க்கை இழுக்குப்பட்டதாமென்றவாறு. 'மானேயன்னாள்...ஆனேனென்னே' என்ற தொடர் - இலக்குமணனைப்பற்றிய நாட்டவரின் புகழ்மொழி. பி - ம்:—[1] தனிவைகும். [2] என்னை. [3] கொள்ளான்றனி. [4] ஆனேன். [5] அதுவன்றி. [6] என்றபின். (1167)

31. என்றா யுன்முன் [1]னேவிய யாவு [2]மிசையின்னல்
[3]பின்றா தெய்திப் பேரிசை யாளற் கழி[4]வுண்டேல்
பொன்றா முன்னம் பொன்றுதி யென்றா ளுரைபொய்யா
நின்றா லன்றோ நிற்பது வாய்மை நிலையம்மா.

(இ - ள்.) என் தாய் - எனது தாயாரான சுமித்திரை, - (என்னை நோக்கி), 'உன் முன் ஏவிய யாஉம் இசை - உனது தமையனான இராமன் கட்டளை யிட்டவற்றையெல்லாம் செய்ய உடன்படுவாய்; (அவனுக்கு ஏதாவது துன்பம் நேரிட்டால் நீயும்), இன்னல் பின்றாது எய்தி - அத்துன்பத்தைப் பின்வாங்காமல் (கூட இருந்து) அனுபவித்து, பெரு இசையாளற்கு அழிவு உண்டுஏல் - பெரும் புகழையுடைய அவ்விராமனுக்கு அழிவுவருமென்று (உனக்குத்) தோன்றினால், பொன்றா முன்னம் பொன்றுதி - (அவன்) இறப்பதற்கு முன்னே (நீ) இறந்துவிடுவாய்', என்றாள் - என்று கட்டளையிட்டுள்ளாள்; உரை பொய்யா நின்றால் அன்றோ-வார்த்தை தவறாதபடி (நான்) நிலைநின்றா லல்லவோ, வாய்மை நிலை நிற்பது - (எனது) சத்தியம் நிலை நிற்பதாகும்? (எ - று.)—அம்மா-அசை.

நான் மீண்டும் செல்வதில் தாய் சொல்லைமீறிய குற்றமும் நேர்படுமென்று இதனாற்காட்டுகின்றான்: "பின்னும் பகர்வாள் மகனே யிவன் பின்செல் தம்பி, யென்னும்படியன்றடியாரினி லேவல் செய்தி, மன்னும் நகர்க்கே யிவன் வந்திடின் வா அதன்றேல், முன்னம் முடியென்றனள் பால்முலை சோர நின்றாள்" என்று கீழ் (அயோத்தியா காண்டத்தில்) சுமித்திரை கூறிய வார்த்தையை இங்கு இலக்குமணன் அநுவதித்துக் கூறினான். இங்கே, சத்திய மென்றது - தாய் சொற்கு உடன்பட்டு வந்த தான் அச்சொற்கடவாது நிற்றலை. பி-ம்:—[1] ஏயன. [2] வரும். [3] பின்றாசெய்தி. [4] உண்டோ. (1168)

32. எற்பெற் றாளும் யானு மெனைத்தோர் வகையாலு
நிற்[1]பெற்றாட்கு[2] நிற்கு நினைப்புப் பிழையாமல்
நற்பொற் றோளாய் நல்லவர் பேண நனிநிற்கும்
சொற்பெற் றான்[3]மற் றாருயிர் [4]பேணித் துறவேமால்.

(இ - ள்.) நல் பொன் தோளாய் - அழகிய பொன்னாபரணங்களையணிந்த தோள்களையுடையவனே! என் பெற்றாள்உம்-என்னைப்பெற்ற சுமித்திரையும், யானும்—, நின் பெற்றாட்குஉம் - உன்னைப்பெற்ற கௌசலைக்கும், நிற்குஉம்-உனக்கும், நினைப்பு பிழையாமல்-எண்ணம் மாறுபடாதபடி, எனைத்து ஓர் வகையால்உம் - எவ்விதத்தினாலும், நல்லவர் பேண நனி நிற்கும்-நல்லோர் விரும்பும்படி நன்றாக நடந்து நிற்கிறோ மென்கிற, சொல்-புகழை, பெற்றால்-அடைவதாயிருந்தால்,

மற்று-(அதற்கு) மாறுக, அரு உயிர் பேணி-(எங்களது) அருமையான உயிரைப் பாதுகாக்க விரும்பி, துறவேம் - (உங்களை) விட்டு விலக மாட்டோம்; (எ-று.)

எனக்கும் என் தாய்க்கும், நீ உன் தாய்என்ற உங்களுக்கு மாறுபாடில்லாமல் நடக்கிறோமென்கிற புகழொன்றும் முக்கியமேயன்றி உங்களினின்று தப்பி நீங்கி உயிர்பிழைத்தல் முக்கியமன்று என்பது கருத்து. இதனால், இளையோன், உயிரைப்பேணுதல் தனது தன்மைக்கு ஏற்றதன்று எனக் காட்டுகின்றான். மற்று - வினைமாற்றுப்பொருளது. பி - ம்:—[1]பெற்றார்க்கும், பெற்றாற்கும். [2]நிற்ப அல்லது நிற்பு நினைப்பும் பிழையாமே. [3]அஃது. [4]தம்மைத் துறவாமல். (1169)

33. ஓதுங் காலப் பல்பொருண் முற்றுற் றொருவாத
வேதஞ் சொல்லுந் தேவரும் வீயுங் கடைவீயாய்
மாதங் கத்தின் றுய்ந்திவ் வனத்தின் றலைவாழும்
பூதங் கொல்லப் பொன்றுதி [1]போலும் பொருளுண்டோ.

(இ - ள்.) ஓதும் கால் - சொல்லுமிடத்து, அ பல் பொருள் முற்றுஉற்று-அந்த உலகத்துப் பொருள்களெல்லாம் அழிவடைந்து, ஒருவாத வேதம் சொல்லும் தேவர்உம் வீயும் - ஒருகாலும் அழிந்து நீங்காத வேதம் புகழ்ந்து கூறுகிற (சாவாமருந்து உண்டதனால் அமரரான) தேவர்களும் இறந்தொழிகிற, கடை - கல்பாந்த காலத்திலும், வீயாய்-அழிவடையாத நீ, மாதங்கம் தின்று உய்ந்து இ வனத்தின் தலை வாழும் - யானை முதலிய பிராணிகளை யெல்லாம் தின்று உயிர்பிழைத்து இந்த வனத்தில் வசிக்கிற, பூதம் - பூதமானது, கொல்ல - கொன்றுவிட, பொன்றுதிபோலும் - அழிவாய் போலும்; பொருள் உண்டுஓ-(இதுபோன்ற) விஷயமும் (உலகத்தில்) உண்டோ? (எ - று.)

இதனால், உன் தன்மையை நோக்குமிடத்து ஒரு பூதத்தால் உயிரை மாய்க்கவிடுவது நிகழக்கூடிய பொருளன்றென்றவாறாயிற்று. என்றும் அழியாத ஒருவன் அழியுந்தன்மைய்தான இழிந்த ஒரு பூதத்தினால் உயிரிழப்பது உலகத்தில் நடக்கலாகாத செயலென்றபடி. இராமனைக் கல்பாந்தத்திலும் அழியாதவனாகக் குறித்தது, விஷ்ணுவின் அவதாரமென்பதை அறிவுறுத்துவதற்காக. 'மாதங்கம்' என உருவிற் பெரியதைக் கூறியது, மற்றைச் சிறிய உருவமுடைய பிராணிகளையும் உளப்படுத்த. அ உலகறிசுட்டு. வீயாய் - பெயர். பி-ம்:—[1]என்னும். (1170)

34. கேட்டார் கொள்ளார் கண்டவர் பேணார் கிளர்போரில்
தோட்டார் கோதைச் சோர்குழ றன்னைத் துவளாமல்
மீட்டா [1]னென்னும் பேரிசை [2]கொள்ளான் செருவெல்ல
மாட்டான் மாண்டா [3]னென்றபின் மேலும் வசையுண்டோ.

(இ - ள்.) கேட்டார் கொள்ளார் - (இச்செயலைக்) கேட்டவர்கள் (சரியானதென்று) அங்கீகரிக்கமாட்டார்கள்; கண்டவர் பேணார் -

பார்த்தவர்கள் விரும்பமாட்டார்கள்: தோடு ஆர் கோதை சோர் குழல்தன்னை - இதழ்கள் நிறைந்த பூமாலையைச் சூடிய தாழ்ந்த கூந்தலையுடைய சீதையை, துவளாமல் - வருந்த வொட்டாமல், கிளர் போரில் மீட்டான் - மிக்குச் செய்கிற யுத்தத்தினால் மீட்டுக்கொண் டான், என்னும்-என்று (யாவரும்) பாராட்டிக்கூறுகிற, பெரு இசை-பெரும்புகழை, கொள்ளான்-பெறுமலும், செரு வெல்ல மாட்டான் - போரில் வெல்ல முடியாமலும், மாண்டான்-இறந்தான், என்ற பின் - என்று சொல்லப் பெற்றபின்பு, மேலும் வசை உண்டு ஓ-அதனினும் அதிகமான பழி வேறொன்று உளதோ? [இல்லையென்றபடி]; (எ-று.)

பழியை நீக்கிக்கொள்ளும்படி இறக்கக்கருதுகிறவனுக்கு இறத்த லாற் பெரும்பழிவிளையுமாதலால், அவ்வாறு உயிர்விடுதல் தக்க தன்று என்றவாறு. பழியை நீக்கிக்கொள்ள உயிரைப் போக்குவதாக இராமபிரான் கூறியதை, கீழ் 25, 27, கவிகளில் காண்க. சோர்குழல்-அன்மொழித்தொகை. கொள்ளான், மாட்டான் - முற்றெச்சங்கள். பி - ப்:—[1]ஏனும். [2]கொள்ளாய். [3]என்றலின். (*1171*)

35. தணிக்குந் [1]தன்மைத் தன்றெனி னன்றித் தகைவாளாற்
கணிக்குந் தன்மைத் தல்ல விடத்திற் கனல்பூதம்
பிணிக்குங் கையும் பெய்பில வாயும் பிழையாமல்
துணிக்கும் வண்ணங் காணுதி துன்பந் துறவென்றான்.

(இ - ள்.) விடத்தின் கனல் பூதம் - விஷம் போலக் கொதிக் கிற இந்தப் பூதமானது, கணிக்கும் தன்மைத்து அல்ல - (ஒரு பொருளாக) எண்ணத்தக்கதன்று; இ தகை வாளால்-இந்தச் சிறந்த வாளினால், தணிக்கும் தன்மைத்து அன்று எனின் அன்று-(நம்மால்) உயிர்நீக்குந்தன்மையுடையதன்று என்போமென்றாலோ அவ்வா றன்று [உயிர்நீக்குந்தன்மையுடையதே]; பிணிக்கும் கைஉம் - (நம்மை) வளைத்துக்கட்டுகிற (இதனது)கைகளையும், பெய் பிலம் வாய்உம் - (எல்லாப்பிராணிகளையும்) வாரியுட்கொள்ளுகிற பிலம் போன்ற (இதன்) வாயையும், பிழையாமல் - தவறாமல், துணிக்கும் வண்ணம் - (நான்) வெட்டித்தள்ளும் விதத்தை, காணுதி - பார்ப்பா யாக: துன்பம் துற - மனக்கவலையை ஒழிவாயாக, என்றான்-என்று (இலக்குமணன்) கூறினான்,— (எ - று.)—பி - ம்:—[1]தன்மை. (*1172*)

## 36 —இராமலட்சுமணர் கவந்தனிடத்தில் ஒருவரினும் ஒருவர் முற்பட்டுச் செல்லுதல்.

என்னா முன்னே [1]செல்லு மிளங்கோ விறையோற்கு
முன்னே [2]செல்ல முன்னவ னன்னா னுறு[3]முந்தத்
தன்னே ரில்லாத் தம்பி [4]தடுப்பான் பிறரில்லை
[5]அன்னோ [6]கண்ட வும்பரும் வெய்துற் றழுதாரால்.

(இ - ள்.) என்னா முன்னே - என்று கூறுவதற்கு முன்னே, செல்லும் இறையோற்கு முன்னே - (தன்சொல்லைக் கேளாமல் கவந் தனிடத்து உயிர்விடுதற்கு முந்திச்) செல்லும் இராமனுக்கு முன்னே, இளங்கோ - இலக்குமணன், செல்ல - (தான் உயிர்விடுதற்காக)

விரைந்துபோக, முன்னவன் அன்னானின்உம் முந்த - தமையன் தம்பியினும் விரைந்துசெல்ல, தன் நேர் இல்லா தம்பி தடுப்பான் - தனக்கு ஒருவரும் ஒப்பாகப்பெறாத தம்பியான இலக்குமணன் (இராமனைப் போகவொட்டாது) தடைசெய்பவனானான்; பிறர் இல்லை - (இவ்வாறு தடுப்பதற்கு) வேறொருவரும் இல்லை; அன்னோ - ஐயோ! கண்டஉம்பர்உம் - பார்த்த தேவர்களும், வெய்து உற்று அழுதார் - தவிப்படைந்து புலம்பினார்கள்; (எ - று.)

தமக்குப்பகையான அரக்கர்களை வேரறுப்பதற்காகவே திருவவதரித்த திருமாலான இராமபிரானுக்கு யாதுதீங்குநேரிடுகிறதோ என்று அஞ்சித் தேவர்கள் வருந்துபவராயினரென்க. அன்னோ-கவியின் இரக்கம். இறையோன் - கடவுள்; இதற்கு - (யாவர்மனத்திலுந்) தங்குகிறவனென்று பொருள்: இறுத்தல் - தங்குதல்; இறைமையுடையோனுமாம்; இறைமை - தலைமை. பி - ம்:—[1]சொல்லும். [2]செல்லும். [3]முந்தும். [4]தடுத்தான். [5]அந்நாள். [6]கண்டார். (*1173*)

வேறு.

### 37.—யாரென்று கவந்தன் கேட்க, இருவரும் சினங் கொள்ளல்.

இனைய ராகிய விருவரு முகத்திரு கண்போல்
கனையும் வார்கழல் வீரர்சென் றணுகலுங் கவந்தன்
வினையி னெய்திய வீரர்நீர் யாவர்கொ லென்ன
நினையு நெஞ்சின [1]ரிமைத்தில ருருத்தனர் நின்றார்.

(இ - ள்.) இனையர் ஆகிய - இப்படிப்பட்டவர்களான, முகத்து இரு கண்போல் கனையும் வார் கழல் வீரர் இருவர்உம் - முகத்திலுள்ள இரண்டுகண்கள் போலச் சிறந்தவர்களான ஒலிக்கின்ற நீண்ட வீரக்கழலையணிந்த வீரர்களான இராமலட்சுமணரிருவரும், சென்று அணுகலும் - போய்க்கிட்டியவுடன்,—கவந்தன்—, வினையின் எய்திய வீரர் நீர் யாவர்கொல் என்ன - தீவினையால் (என்கையிற்) சிக்கிய வீரர்களாகிய நீங்கள் யாவர்? என்று வினவ, (அவ்விருவரும்), நினையும் நெஞ்சினர் - (அவன்கூறிய சொற்களைக்) கருதும் மனமுடையவர்களாகி, உருத்தனர் - கோபித்து, இமைத்திலர் நின்றார் - கண்ணிமையாது (அவனெதிரில்) விழித்துப்பார்த்து நின்றார்கள்; (எ - று.)

இறக்கத்துணிந்து சென்ற இராமலட்சுமணர்க்கு, 'வீரர்களாயிருந்தும் தீவினையால் என்கையில் அகப்பட்டுக்கொண்டீர்களே, நீங்கள் யாவர்?' என்று கவந்தன் வினவிய கொடுஞ்சொற்கள் மனத்திற் பொத்தின; பொத்தவே, கோபமுண்டாகி, உருத்து இமைத்திலராய் நின்றார்களென்பதாம். இவ்விருவர்க்கும் 'முகத்திருகண் போல்' என்று உவமைகூறியது, "நோக்கல்தான் கண்ணிரண்டு மொன்றையே" என்றவாறு இருவரும் ஒரே கருத்துடையரென்பதை விளக்குதற்காகவுமாம். கண்ணிமையாது நின்றது, கோபக்குறி. பி - ம்:—[1]பதைக்கிலரிமைக்கிலர்.

இதுமுதல் ஐந்துகவிகள் - சடாயுவுயிர்நீத்தபடலத்தின் 158 - ஆங் கவிபோன்ற கவிநிலைத்துறைகள். (1174)

## 38.—இராமலட்சுமணர் கவந்தனது தோள்களை வெட்டித்தள்ளுதல்.

அழிந்து ளாரல ரிகழ்ந்தனர் ரென்னையென் றழன்றுன்
பொழிந்த கோபத்தன் புதுப்பொறி மயிர்ப்புறம் பொடிப்ப
விழுங்கு வேனென [1]வோங்கலும் விண் [2]ணுற வீரர்
எழுந்த தோள்களை வாள்களா லரிந்தன ரிட்டார்.

(இ - ள்.) (கவந்தன்), 'அழிந்துளார் அலர் - (என்னைக்கண்ட பின்பும்இவர்கள்) மனங்கலங்காதவர்களாய், என்னை இகழ்ந்தனர் - என்னை இகழ்ந்தார்கள்,' என்று அழன்றுன் - என்று கொதிப்புக் கொண்டு, பொழிந்த கோபத்தன் - மிக்கு வெளித்தோன்றுங் கோப முடையவனாய், புது பொறி மயிர் புறம் பொடிப்ப- (அக்கோபத்திளுலு ண்டாகிய) புதிய தீப்பொறிகள் ஒவ்வொருமயிர்க்காலிலும் தோன்ற, விழுங்குவேன் என ஓங்கலும் - (நான் இவர்களை) விழுங்கிவிடுவே னென்றுசொல்லிக் கிளம்பியவளவில்,—வீரர் - இராமலட்சுமணர், விண் உற எழுந்த தோள்களை - ஆகாயத்தைஅளாவ உயர்ந்த (அவனது) தோள்களை, வாள்களால் அரிந்தனர் இட்டார் - (தமது) கைவாள்களிளுல் வெட்டித்தள்ளிளுர்கள்; (எ-று.)

தன்னைக் கண்டவுடன் அழிந்தொழியாது இராமலட்சுமணர் கண்ணிமையாது உருத்துநின்றதையே, கவந்தன், தன்னை நோக்கி யிகழ்ந்ததாகக் கருதினுன். 'புதுப்பொறி மயிர்ப்புறம்பொடிப்ப' என் றது, கோபத்தின் மிகுதியைக் கூறியபடி. இராமபிரான் கவந்தனது வலக்கையையும், இலக்குமணன் இடக்கையையும் துணித்தனரென் பதை முதனூலால் அறிக. பி - ம்:—[1]வீங்கலும். [2]இற. (1175)

## 39.— கைகள்அற்ற கவந்தனது தோற்றம்.

கைக ளற்று[1]வெங் குருதியா [2]ரொழுக்கிய கவந்தன்
மெய்யின் [3]மேலொடு கீழுறப் பெருநதி [4]விரவுஞ்
சைய மாநெடுந் தாழ்[5]வரைத் தனிவரை தன்னேடு
ஐய நீங்கிய பேரெழி லுவமைய ஞனுன்.

(இ - ள்.) கைகள் அற்று - கைகள் அறுபட்டதனுல், வெம் குருதி ஆறு - வெவ்விய இரத்த வெள்ளம், மெய்யின் - உடம்பில், மேலொடு கீழ் உற - மேலும் கீழுமாகிப் பொருந்த, ஒழுக்கிய-பெருக்கி நின்ற, கவந்தன்—,—(மேலொடு கீழுற)— , பெரு நதி விரவும் - பெரிய நதிகள் பெருகப்பெற்ற, சையம் மா நெடு தாழ் வரை தன்னேடு - கற் கள் நிறைந்த மிகப் பெரிய சாரலையுடைய ஒப்பற்ற [பெரிய] மலை யோடு, ஐயம் நீங்கிய பேர் எழில் உவமையன் ஆனுன் - சந்தேகமற்ற மிகத் தகுதியான உபமானமாகக் கூறுவதற்கு உரியவனுனுன்;

கவந்தனது உடலுக்கு-மலையும், தோள்கள் அறுபட்டு உடலின் மேல் கீழ் என்ற இரண்டு பக்கங்களிலும் பெருகுகிற இரத்த வெள்

ளத்துக்கு - மலையின் மேலும்கீழும் பெருகுகிற ஆற்று வெள்ளமும் உவமை. தோளின் இரண்டு பக்கங்களிலும் பெருகுகிற இரத்தவெள ளத்துக்கு - மலையிலிருந்து கிழக்கு மேற்கு என்ற இருபக்கங்களிலும் பெருகுகிற ஆற்றுவெள்ளம் உவமை என்றலும் ஒன்று. சையம் மாவரை - பெரிய ஸஹ்யகிரியுமாம். பி - ர்:—[1] உகு. [2] ஒழுகிய. [3] மேற் கொடுகிழக்குற [4] இயங்கும், விளங்கும். [5] தடத். (1176)

## 40 —அரக்கவுருவையொழித்துக் கவந்தன் நல்லுருப்பெற்று ஆகாயத்தில் விளங்குதல்.

ஆளு நாயக னங்கையிற் றீண்டிய வதனால்
மூளுஞ் சாபத்தின் [1]முற்றிய தீவினை முடித்தான்
தோளும் வாங்கிய தோமுடை யாக்கையைத் துறவா
நீள நீங்கிய பறவையின் விண்ணுற நிமிர்ந்தான்.

(இ - ள்.) ஆளும் நாயகன் அம் கையின் தீண்டிய அதனால்- (யாரையும்) ஆட்கொள்ளுந் தலைவனான இராமபிரான் (தனது) அழகிய கைகளால் தொட்ட தன்மையினால், (கவந்தன்), மூளும் சாபத்தின் முற்றிய தீவினை முடித்தான் - (தனக்கு) நேர்ந்த சாப வடி வாய் முதிர்ந்த பாவத்தை ஒழித்தவனாகி, தோளும் வாங்கிய தோம் உடை யாக்கையை துறவா - தோள் அறுபட்ட குற்றம் நிறைந்த (தனது) கோரரூபத்தை விட்டு, நீளம் நீங்கிய பறவையின் - கூட்டை விட்டு வெளிப்பட்ட பறவைபோல, விண் உற நிமிர்ந்தான்-ஆகாயத் திற் பொருந்திவிளங்கினான்; (எ - று.)

கவந்தனது கோரரூபத்தினின்று வெளிப்பட்டு ஆகாயத்தில் தோன்றின நல்வடிவம், கூட்டை விட்டு நீங்கியபறவையையொத்தது; கூடு ஒழுங்கின்றியிருக்கப் பறவை இன்னுருவத்துடனிருத்தலால் உவமை: உவமையணி. தோம் - தோஷம்: நீளம் - நீடம் என்றவட சொல் தமிழில் டகரளகரப்போலி பெற்றது. தோளும், உம்மை-இசை நிறை. பி - ம் :—[1] முந்திய. (1177)

## 41.— கவந்தன் ஆகாயத்தில் நின்று இராமனைத் துதிக்கலுறல்.

விண்ணி னின்றவன் விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணி னின்றவ னிவனெனக் கருத்துற [1]வுணர்ந்தான்
[2]எண்ணி யன்னவன் குணங்களை வாய்திறந் திசைத்தான்
புண்ணி யம்பயக் கின்றுழி யரியதெப் [3]பொருளே.

(இ - ள்.) விண்ணில் நின்றவன் - ஆகாயத்தில் (திவ்விய சொரூ பத்தோடு விளங்கி) நின்ற கவந்தன்,—'இவன் விரிஞ்சனே முதலி னர் யார்க்கும் கண்ணில் நின்றவன் என - இவ்விராமனே பிரமன் முதலிய தேவர்கள் யாவர்க்கும் (தியானத்தில்) பிரதியக்ஷமா யிருப்ப வன்' என்று, கருத்து உற உணர்ந்தான் - மனத்திற் பொருந்த அறிந்து, அன்னவன் குணங்களை எண்ணி வாய்திறந்து இசைத் தான்-அவ்விராமனது குணங்களை மனத்தினாலாராய்ந்து வாயாலே யெடுத்துக்கூறித் துதித்தான்; புண்ணியம் பயக்கின்ற உழி - (ஒருவ னுக்கு) நல்வினைப்பயன் வந்து அநுகூலித்தபோது, அரியது எ

பொருள் - ஏந்தப்பொருள்தான் பெற முடியாதது? [எல்லாப்பொரு ளுங் கைகூடும் என்றபடி]; (எ - று.)—கவந்தன் செய்த தோத் திரத்தை, மேல் ஒன்பது கவிகளிற் கூறுகிறார்.

பெரும் பாவங்களைச் செய்துகொண்டிருந்த கவந்தனும் நல்ல வடிவம் பெற்றுப் பரம்பொருளாகிய இராமனைத் துதிக்கும் பேறு பெற்றானென்றவாறு. இந்தச் சிறப்புப்பொருளை 'புண்ணியம் பயக் கின்றுழி யரிய தெப்பொருளே' என்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியது வேற்றுப்பொருள்வைப்பணி. புண்ணியமாவது - பகவா னுடைய அனுக்கிரகம். பயக்கின்றுழி - விகாரம். பி - ம்:—[1]உணர் வான். [2]எண்ணில். [3]பொருளோ. (1178)

வேறு.

42.—இதுமுதல் ஒன்பது கவிகள் - ஒருதொடர்: கவந்தன் செய்த தோத்திரம்.

ஈன்றவனோ வெப்பொருளு மெல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனோ தேவர் தவத்தின் றனிப்பயனோ
மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ
தோன்றி [1]யிருவினையேன் சாபத் [2]திடர்துடைத்தாய்.

(இ - ள்.) தோன்றி - (இங்கு எனக்கு எதிரில்) வந்து, இரு வினை யேன் - மிக்கபாவத்தையுடைய எனது, சாபத்து இடர் - சாபத்தி னால் நேர்ந்த துன்பத்தை, துடைத்தாய் - நீக்கியருளிய நீ,—எ பொருள்உம் ஈன்றவன்ஓ - (உலகத்திலுள்ள) எல்லாப் பொருள்களை யும் படைத்தவனோ? எல்லை தீர் நல் அறத்தின் சான்றவன்ஓ - அழி வில்லாத நல்ல தருமத்துக்குச் சாட்சியானவனோ? தேவர் தவத்தின் தனி பயன்ஓ-தேவர்கள் முன்பு செய்துள்ள தவத்தினது ஒப்பற்ற பயனின் வடிவு ஆனவனோ? மூன்று கவடு ஆய் முளைத்து எழுந்த மூலம்ஓ - (பிரமன் விஷ்ணு சிவன் என்ற) மூன்று பிரிவாகத் தோன் றிக் கிளர்ந்த பரம்பொருளோ? (எ - று.)

இச்செய்யுளிற் கூறிய தன்மைகளை யெல்லாம் உடையவன் இராமனே யென்பதைத் தெரிவித்தற்கு, பலபடியாக விகற்பித்துக் கூறினான். 'நல்லறத்தின்சான்றவன்' என்றதற்கு - உலகத்தில் புண் ணியஞ்செய்கிற உயிர்களுக்கு அந்நல்வினைகளை உள்ளபடி உணர்ந்து அவற்றிற்கு ஏற்ற பயன்களைத் தவறாமல் ஊட்டுபவ னென்பது கருத்து; இதனால், தீவினைசெய்யும் உயிர்கட்கும் அவற்றையுணர்ந்து அவற்றின்பயனை இவனே ஊட்டுவிப்பா னென்பது போதரும். இவற் றால், 'அபூர்வமே பயனளிக்கும்' என்னுங் கோட்பாடு மறுக்கப்பட் டது. திருமால் அரக்கர்களைச் சங்கரிக்கத் திருவவதரித்ததனால், இராமனை 'தேவர் தவத்தின் தனிப்பயன்' என்றான். ஆதிமூலமான திருமாலே படைக்கும் பொருட்டுப் பிரமனாகவும், காக்கும்பொருட்டுத் தானான தன்மையனாகவும், அழிக்கும்பொருட்டுச் சிவனாகவுமிருந்து அவ்வத்தொழில்களை நடத்துகிறானென்பது, மூன்றாமடியின் கருத்து. "மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்

தன்னை" என்றார் நம்மாழ்வாரும். கவடு - கிளைப்பிரிவு. மூலம் - அடி
பி - ம்:—[1] அரு. [2] துயர்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - காய்ச்சீரும் மாச்சீரும் விளச் சீருமாய் விரவிவந்த நாற்சீரடி நான்கு கொண்ட தரவுக் கொச்சகக் கலிப்பாக்கள். (1179)

43. மூலமே யில்லா முதல்வனே நீ [1]யெடுத்த
கோலமே யார்க்குந் தெரிவரிய [2]கொள்கைத்தால்
ஆலமோ வாலி னடையோ வடைக்கிடந்த
பாலனோ [3]வாதிப் பரனோ பகராயே.

(இ - ள்.) மூலமே இல்லா முதல்வனே - (தனக்குமுந்திய) காரணப் பொருள் வேறொன்றுமில்லாத முழுமுதற்கடவுளே! நீ எடுத்த கோலம் யார்க்குஉம் தெரிவு அரிய கொள்கைத்து - நீ கொள்ளும் வடிவம் எவராலும் அறிய முடியாத தன்மையையுடையது; (எங்ஙனமெனின்),—(உன் வடிவம்), ஆலம்ஓ-(பிரளயகாலத்தில் தோன்றும்) ஆலமரமோ? ஆலின் அடைஓ - அந்த ஆலமரத்தின் இலையோ? அடை கிடந்த பாலன்ஓ - (அப்பொழுது) அந்த ஆலிலையிற் பள்ளிக் கொண்டிருக்கிற குழந்தை வடிவமான கடவுளோ? ஆதி பரன்ஓ - (எல்லாவற்றிற்கும்) மூலமான பரமபதநாதனோ? பகராய் - சொல்வாயாக; (எ - று.)—ஆல் - அசை.

யாவும் உன்னிடத்தினின்று தோன்றினவாக நீ ஒன்றினின்றுந் தோன்றாதவனென்பது, 'மூலமேயில்லா முதல்வனே' என்பதன் கருத்து. எல்லாம் அழியும் பிரளயகாலத்தில் பொங்கிய உலகங்களை மூடிக்கொள்ளும் அந்தப் பிரளயப் பெருங்கடலிலே ஓர் ஆலமரம் தோன்ற அம்மரத்தின் ஓர் இலையின்மீது எம்பெருமான் ஒருவனே சராசரங்களை யெல்லாம் ஊறுபடாமல் தனது திருவயிற்றில் அடக்கி வைத்துக்கொண்டு ஒரு சிறு குழந்தை வடிவத்துடன் படுத்து யோக நித்திரை செய்தருளுகின்றனனென்பது, நூற்கொள்கை. இரண்டாமடியில் கோலமே ஏ-தெரிநிலை. 'நீயெடுத்த கோலமே யார்க்கும் தெரிவரிய கொள்கைத்து' என்று கூறிய கருத்தைப் பின்னிரண்டடிகளைக் கொண்டு சமர்த்தித்ததனால், தொடர்நிலைச்செய்யுட்குறியணி; வடநூலார் காவியலிங்க மென்பர். ஆலம், அம்-சாரியை. பி - ம்:—[1]முயலும். [2]கொள்கையதால், கொள்கையதாம். [3]வேலைப் பரப்போ. ()

44. காண்பார்க்குங் காணப் படுபொருட்குங் கண்ணாகிப்
பூண்பாய்போ னிற்றியால் யாதொன்றும் [1]பூணாதாய்
மாண்பா லுலகை வயிற்றொளித்து வாங்குதியால்
ஆண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ.

(இ - ள்.) காண்பார்க்குஉம்-(உலகத்தில்) காண்கிறவர்களுக்கும், காணப்படு பொருட்குஉம்-காணப்படுகிற பொருள்களுக்கும், கண் ஆகி-ஆதாரமாயிருந்து, பூண்பாய் போல் நிற்றி - (எல்லாப்பொருள்களினிடத்தும்) பற்றுள்ளவன்போலத் தோன்றுகிறாய்; (ஆயினும்), யாது ஒன்றுஉம் பூணாதாய்-(அவற்றினின்று) நன்மை தீமைகளைச்

சிறிதும் பெறுகின்றுயில்லை; மாண்பால் - மிக்குள்ள தெய்வத்திறமை யால், உலகை - இவ்வுலகங்களை, வயிறு ஒளித்து - (பிரளயத்தில் அழிந்திடாதபடி உன்) வயிற்றில் அடக்கிவைத்திருந்து [காப்பாற்றி], வாங்குதி - (அப்பிரளயம் நீங்கினவுடனே அவற்றை மீளவும்) வெளிப் படுத்துகிறாய்; (நீ) ஆண்பாலோ—? பெண்பாலோ—? அப்பாலோ - (அந்த இரண்டு மல்லாத)அலியோ? எப்பாலோ-வேறு எந்தப்பகுப்பிற் சேர்ந்தவனோ? (எ - று.)

எம்பெருமான், இயங்குதிணைப்பொருள் நிலைத்திணைப்பொருள் ஆகிய எல்லாப்பொருள்களினிடத்தும் எள்ளினுளெண்ணெய்போல உள்ளே பொருந்தியிருந்தும், அவற்றின் சம்பந்தமான இருவினைகள் தொடரப் பெறுதவ னென்பது, முன்னிரண்டடியின் கருத்து; "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற சுடரே" என்றதும், இக்கருத்துப்பற்றியே; "யாவையும் யவருந்தானா யவரவர் சமயந் தோறுந், தோய்விலன்" என்ற திருவாய்மொழியையுங் காண்க. புருஷோத்தமனான இவனுக்குப் பெண்தன்மையும் அலித்தன்மை யும் இல்லாமைபோலவே உலகத்திற் காணப்படும் ஆண்தன்மையும் இல்லை யென்பது - ஈற்றடியிற் கூறிய பொருள்: எம்பெருமானோடு ஒவ்வாமைக்குப் பெண் அலிகளோடு ஆண்களோடு வாசியில்லை யென்பது இதன் தாற்பாரியம். இப்படி இவன் இம்மூன்று பாலிலுங் கலவாதவனென்பதை "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லாவலியு மல்லன்" என்ற நம்மாழ்வார்பாசுரத்தாலும் அறியலாம். இம்மூன்று பாலிலுங்கலவாமலும், இன்னதென்று சொல்லத்துணியாமலும் இருத்தலால், 'எப்பாலோ' என்றார். பி - ம்:—[1]பூணுதே. (1181)

45\. ஆதிப் பிரமனுநீ யாதிப் பரமனுநீ
[1]ஆதியுறு பொருளுக் கப்பாலுண் டாயினுநீ
[2]சோதிச் சுடர்ப்பிழம்பு நீயென்று சொல்லுகின்ற
வேத [3]முறைசெய்தால் வெள்காரோ வேறுள்ளார்.

(இ-ள்.) ஆதி பிரமன்உம் நீ-(முத்தொழில்களுள்) முதல் தொழி லாகிய படைப்புத்தொழிற்கு உரிய பிரமனும் நீயே; ஆதிபரமன்உம் நீ - (அப்பிரமனுக்கு) மூலமான பரம்பொருளும் [திருமாலும்] நீயே; ஆதி உறு பொருளுக்கு அப்பால் உண்டாயின்உம் நீ-ஆதியென்று கூறப்படுவதற்குமேலாகத் துரியம் துரியாதீதம் என்று ஒன்று உண்டானாலும் அதுவும் நீயே; சொல்லுகின்ற வேதம் - (யாவர் தன்மையையுங்) கூறுகிற வேதமானது, சோதி சுடர் பிழம்பு நீ என்று முறைசெய்தால் - பரஞ்சோதி நீயே யென்று முறையிட்டால் [முறையிடுதலால் என்றபடி], வேறு உள்ளார் - (தாமே பரம்பொரு ளென்று கூறித்திரியும்) மற்றைக்கடவுளர்கள், வெள்காரோ - (அவ் வாறு சொல்லுதற்கு) வெட்கங்கொள்ளார்களோ? [கொள்ளவேண்டு மேயன்றோ?] (எ-று.)

உலகத்தில் ஒளிவடிவமாயுள்ளவையும், அதனால் 'ஜ்யோதிஸ்' என்று சொல்லப்படுபவையுமான ஆத்மாக்க ளெல்லாவற்றுக்குந் தலைவனாகிய பரமாத்மா இவனாகையால், இவனை 'பரஞ்சோதி' என்று வேதங் கூறும். 'சோதிச்சுடர்ப்பிழம்பு'—பரஞ்சோதி.'உண்டாயினும்'

என்ற உம்மை, அப்பாலொன்றில்லை யென்ற கருத்தை யுட்கொண்டது. சிலபிரதியில் இது அடுத்த பாடலுக்குப்பின். பி - ம்— [1] ஆதியெனும், ஓதியுறு. [2] சோதிநீ சோதிச்சுடர்ப்பிழம்பு நீயென்று. [3] உரை. (1182)

46. எண்டிசையுந் திண்[1]சுவரா வேழேழ் நிலை[2]வகுத்த
அண்டப் பெருங்கோயிற் கெல்லா [3]மழகுடைய
மண்டலங்கண் மூன்றின் [4]மேலென்று மலராத
புண்டரிக மொட்டின் [5]பொகுட்டே புரையம்மா.

(இ-ள்.) எண் திசைஉம் திண் சுவர் ஆ - எட்டுத்திக்குக்களின் எல்லையும் வலிய சுவராக, ஏழ் ஏழ் நிலை வகுத்த - பதினான்கு நிலைகளாக வகுத்துச் செய்யப்பட்ட, அண்டம் பெரு கோயிற்கு எல்லாம் - அண்டமாகிய பெரிய கோயில் முழுதுக்கும், அழகு உடைய - விளக்கத்தைச் செய்கிற, மண்டலங்கள் மூன்றின்மேல் - (சந்திரமண்டலம் சூரியமண்டலம் நக்ஷத்திரமண்டலம் என்னும்) மூன்று மண்டலங்களுக்கும் மேலேயுள்ள பரமபதத்தில், என்றுஉம் மலராத புண்டரிகம் மொட்டின் பொகுட்டுஏ-எப்பொழுதும் மலராத தாமரையரும்பினுடைய உள்ளேயுள்ள கொட்டையே, புரை- (உனக்குஎப்பொழுதும்) இருப்பிடமாவது; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்.

அண்டம்-பதினான்கு உலகங்களும் சேர்ந்த (உலக) வுருண்டை; அவ்வண்டத்தைக் கோயிலாகவும், திக்குக்களின் எல்லையைச் சுவராகவும், ஒன்றன்மேலொன்றாக அமைந்துள்ள கீழேழுலகம் மேலேழுலகம் என்ற பதினான்கு உலகங்களையும் அக்கோயிலுக்கு நிலைகளாகவும், மூன்று மண்டலங்களையும் அதற்கு விளக்குக்களாகவும் உருவகப்படுத்தினார். கோயில்-சிறந்த வீடு. எல்லாவுலகங்களுக்கும் மேலுள்ள பரமபதத்தில் திருமாமணி மண்டபத்தில் ஆதிசேஷன்மீதுள்ள தருமாதிபீடத்தின்மேல் பன்னிரண்டு இதழ்களையுடைய தாமரைமலரின் கர்ணிகை [கொட்டை]யில் எம்பெருமான் எழுந்தருளியுள்ளானென்பது கருத்து; இவ்விஷயத்தை, அர்ச்சிராதிமுதலிய நூல்களிற் பரக்கக்காணலாம். 'என்று மலராத புண்டரிகமொட்டு' என்றது, உலகத்துத்தாமரைமலர்போல ஒருபொழுது மலர்தலும் ஒருபொழுது குவிதலுமில்லாமல் எப்பொழுதும் ஒரு தன்மைத்தான செவ்வியுடையது என்பதை விளக்குதற்கு. இனி, என்று மலராத புண்டரிகம்-சூரியனால் மலராத தாமரை யெனினுமாம்; என்று - சூரியன். மூன்றாம் அடிக்கு, (சோதிடசாஸ்திரத்திற்கூறியபடி) சந்திரமண்டலம் புதமண்டலம் சுக்கிரமண்டலம் என்ற மூன்றுமண்டலங்களுக்கும் மேலுள்ளதான சூரியமண்டலத்தின் ஒளியால் மலருந்தன்மையதல்லாத என்றலும் ஒன்று. எல்லாவுலகங்களுக்கும் மேலுள்ள பரமபதத்தில் எம்பெருமான் வீற்றிருக்கின்ற தாமரையின் கீழுள்ள அழகிய தர்மாதிபீடம், ஆதிசேஷன், திருமாமணிமண்டபம் என்ற மூன்றையும் 'அழகுடையமண்டலங்கள் மூன்று' என்று குறித்ததாக் கொள்ளலுமாம்; அண்டப்பெருங்கோயில்களெல்லாவற்றிற்கும் (மேல்) அழகுடைய மண்டலங்கள் மூன்று என்க.

இனி, அண்டப்பெருங்கோயிற்கெல்லாம் புரை யென இயைத்து, அண்டங்களாகிய பெரிய கோயில்களுக் கெல்லாம் (உனது நாபித்)

தாமரைமலரின் உள்ளிடமே உற்பத்தித்தான மென்றுமாம்; "அத் திசைமுகனேடு, உந்திக்கமலம் விரிந்தால் விரியும் உகக்கடையில், முந்திக் குவியி லுடனே குவியும் இம்மூதண்டமே" என்ற திருவரங்கத்துமாலையைக் காண்க; "புறக்குன்று புல்லிதழ் முந்நீர் பிரசம் பொருவில் செம்பொன், னிறக்குன்று கன்னிகை யெண்கிரி தாது நிலமதனுட், பிறக்குந்துகள் முதுமாசுணம்நாளம் பிரமன் வண்டு, சிறக்குந்திகிரியரங்கேச ருந்திச் செழுமலர்க்கே" என்ற திருவரங்கத்துமாலைச்செய்யுளினல், எம்பெருமானது திருநாபித்தாமரை மலரின் தன்மை நன்கு விளங்கும்; ஒவ்வொரு நாளும் பகலில் மலர்ந்து இரவிற்குவியும் இயல்பினவான தாமரை மலர்கள்போலன்றி, திருவுந்தித்தாமரை ஒரு காலவிசேஷத்திலே மலர்ந்து ஒருகாலவிசேஷத்திலே குவியுந்தன்மையதாதலால், 'என்றும்மலராத புண்டரிகமலர்' எனப்பட்ட தென்க. 'அழகுடைய மண்டலங்கள் மூன்றின்மேல் புண்டரிகமலர்' என்றது - அழகுள்ளனவான சூரியமண்டலம் சந்திரமண்டலம் நக்ஷத்திரமண்டலம என்னும் இம் மூன்றினும் மிக அழகு பெற்று விளங்குவ தென்றவாறுமாம். பி - ம்:—[1]சுவராய். [2]எடுத்த. [3]உடைத்தாம். [4]மேனின்று. [5]பொருட்டோ. (1183)

47. மண்பா லமரர் வரம்பாருங் காணுத
எண்பா லுயர்ந்த வெரியோங்கு நல்வேள்வி
உண்பாய்நீ யூட்டுவாய் [1]நீ யிரண்டு மொக்கின்ற
பண்பா ரறிவார் [2]பகராய் பரமேட்டி.

(இ - ள்.) பரமேட்டி - (எல்லாவுலகங்களிலும்) மேலான பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனே! வரம்பு ஆரும் காணுத எண்பால்- எல்லைகாணமுடியாத எட்டுத்திக்குக்களிலுமுள்ள, மண்பால் அமரர்- பூதேவர்களான பிராமணர்களாற் செய்யப்பட்ட, உயர்ந்த எரி ஓங்கு நல் வேள்வி - மிக்கெரிகிற ஓமாக்கினியையுடைய சிறந்த நல்ல யாகங்களில், உண்பாய் - (அவிர்ப்பாகத்தை) ஏற்றுக்கொள்பவனும், நீ—: ஊட்டுவாய் - (அந்த அவிர்ப்பாகத்தை) உண்பிக்கிறவனும் [யஜமானனும்], நீ—; இரண்டுஉம் ஒக்கின்ற பண்பு - (உன்னிடத்து) இவ்விரண்டு தன்மையும் ஒத்திருப்பதை, ஆர் அறிவார்-எவர்தாம் அறியவல்லவர்? பகராய் - சொல்வாயாக; (எ - று.)

பிராமணர் இவ்வுலகத்துத் தேவர்போன்று மேன்மைபெற்று விளங்குதலால், 'மண்பா லமரர்' எனப்பட்டனர்: (இது, 'பூசுரர்' என்ற பெயரின் பொருள்கொண்டது.) 'அந்தணர்செய்த வேள்வி' எனறது, அரசர்முதலியோர் யாகஞ் செய்தற்கு உரியவராயினும் அந்தணரைக்கொண்டே செய்யவேண்டுவது அவசியமாதலால். எம்பெருமானே, யாகங்களைச்செய்யும் யஜமானனுயும் அவிர்ப்பாகத்தைப் பெறுந்தேவர்களாயும் வடிவங்கொண்டு நடத்துகின்ருனென்பது, மூன்ருமடியின் கருத்து. பரமேஷ்டீ என்பதற்கு—பரமே - (எல்லாவுலகத்தினுஞ்) சிறந்ததாகிய பரமபதத்தில், ஸ்தீ - இருப்பவன் என்பது பொருள். பி - ம்:—[1]என்றிரண்டும். [2]பகர்வாய் பரம்பரனே. இச்செய்யுள், சிலபிரதிகளில் "மாயப்பிறவி" (50) என்ற செய்யுளின்பின் உள்ளது. (1184)

48. நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போல [1]முளைத்தெழுந்த வண்டங்கள்
ஒக்க[2]வுயர்ந் துனுளே தோன்றி யொளிக்கின்ற
பக்க மறிதற் கெளிதோ [3]பரம்பரனே.

(இ - ள்.) பரம்பரனே - மிகச்சிறந்தவனே! நிற்கும் நெடு நித்தம் நீரில் - நிலைபெற்ற பெரிய வெள்ளமாகிய நீரில் [மகார்ணவத்தில்], முளைத்து எழுந்த - தோன்றிய, மொக்குளே போல - நீர்க்குமிழிகள் போல, முளைத்து எழுந்த - தோன்றி வெளிப்பட்ட, அண்டங்கள் - உலகவுருண்டைகள், ஒக்க உயர்ந்து உ(ன்)னுளே தோன்றி - (உன்னுடைய சங்கல்பத்தால்) ஒரே தன்மையனவாகச் சிறந்து உன்னிடத்தினின்று (முதலில்) வெளிப்பட்டு, ஒளிக்கின்ற-(இறுதியில் மகாப்பிரளயத்தில் அவை மீண்டும் உன்னிடத்திலே) அடங்கிவிடுகிற, பக்கம் - தன்மை, அறிதற்கு எளிதோ - (ஒருவரால்) அறிதற்குச் சுலபமானதோ? (எ - று.)

எம்பெருமான் முதலில் மகார்ணவத்தை யுண்டாக்கி அதில் ஒரே தன்மையனவான பலகோடி அண்டங்களைத் தனது சங்கல்பத்தாற் படைக்கின்றன னென்பதும், பிரளயகாலத்தில் அவற்றைப் பழம்படியே தன்னுள் அடக்கிக்கொள்ளுகின்றன னென்பதும் நூற்கொள்கை. "சின்னூல் பலபல வாயா லிழைத்துச் சிலம்பிபின்னும், அந்நூலருந்திவிடுவதுபோல வரங்க ரண்டம், பன்னூறுகோடி படைத் தவையாவும் பழம்படியே, மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே" என்ற திருவரங்கத்துமாலைச்செய்யுளை இங்கு உணர்க. பரம்பரன் என்பதற்கு - (எல்லாத் தேவர்களினும்) மேற்பட்டவர்களான பிரமன் சிவன் இவர்களுக்கும் மேற்பட்டவன் என்பது பொருள். பி - ம்:—[1]முரணிற்ற. [2]உயர்ந்துனுள்ளே. [3]பரமேட்டி.

49. நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள்
உன்செய்கை யன்னவைதான் சொன்ன வொழுக்கினவோ
என்[1]செய்தேன் முன்ன [2]மறஞ்செய்கை [3]யெய்தினர்
பின்[4]செல்வ தில்லாப் பெருஞ்செல்வ நீ[5] தந்தாய்.

(இ - ள்.) நீள் மறைகள் - அநந்தமான வேதங்கள், நின் செய்கை கண்டு நினைந்தனவோ - உனது செய்கைகளைக் கண்டு நினைத்துச்செய்யப்பட்டனவோ? (அன்றி), உன் செய்கை அன்னவை தான் சொன்ன ஒழுக்கினவோ - உனது செய்கைகள்தாம் அவ்வேதங்கள்கூறியபடியே உள்ளனவோ? நீ - அத்தன்மையுடைய நீ, மறம் செய்கை எய்தினர் பின் செல்வது இல்லா பெரு செல்வம் - தீவினைசெய்தவர்கள் பின்பு அடையமுடியாத பெருஞ் சிறப்பை, தந்தாய் - (எனக்குக்) கொடுத்தாய்; முன்னம் என் செய்தேன் - (நீ இவ்வாறு எனக்குக் கொடுக்கும்படி) முற்பிறப்பில் (நான்) என்ன நல்வினை செய்துள்ளேன்? [ஒன்றுமில்லையே யென்றபடி]; (எ - று.)

நான் ஓர்உபாயமும் செய்யாதிருக்கையிலும் நீ ஓர்காரணமுமின்றியே எனக்கு நற்கதியளித்தாய் என்று கூறிப் புகழ்ந்தானென்பது, பின்னிரண்டடியின் கருத்து. 'மறஞ்செய்கையெய்தினர் பின்செல்வ

இல்லாப் பெருஞ்செல்வம்' என்றது-இங்கே, சுவர்க்கவின்பம். சருவே சுவரனுடைய செயல்களும் வேதத்தின் பொருளும் ஒத்துள்ளபடியால், இவனது செயல்களை நோக்கியே வேதங்கள் செய்யப்பட்டனவோ? அன்றி, வேதங்களிற்கூறியபடி இவன் செய்கிருனே? என்று விகற்பிக்க இடமுண்டாயிற்று. சிலபிரதிகளில் பின்னிரண்டடிகள் முன்னிரண்டடிகளாகவும், முன்னிரண்டடிகள் பின்னிரண்டடிகளாகவும் பின்வரும் பாடபேதத்தோடு காணப்படுகின்றன. பி - ம்:—[1]செய்தனை. [2]இச்செய்கை. [3]எய்திறைய். [4]செய்வது. [5]பெற்ருய். இச்செய்யுள் சிலபிரதிகளில் 43-ஆஞ்செய்யுளின்பின் உள்ளது.

50. மாயப் பிறவி மயனீக்கி [1]மாசிலாக்
காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்
[2]பேயொத்தேன் பேதைப் பிணக்கறுத்த [3]வெம்பெருமான்
நாயொத்தே னென்ன நலனிழைத்தே னென்ருன்.

(இ - ள்.) பேய் ஒத்தேன் - பேய்போன்றஎனது, மாயம் பிறவி மயல் - வஞ்சனைக்கு இடமான (சாபத்தால்நேர்ந்த) இராக்கதப் பிறப்பினு லுண்டாகிய குற்றங்களை, நீக்கி - ஒழித்து, மாசு இலா காயத்தை நல்கி - குற்றமற்ற திவ்யசரீரத்தை (எனக்கு)க் கொடுத்து, துயரின் கரை ஏற்றி - (சாபத்தால் நேர்ந்த) துன்பமாகிய கடலினின்று (என்னை) உய்வித்து, பேதை பிணக்கு அறுத்த - அறியாமையாற்கொண்ட (எனது) பகைமையை யொழித்தருளிய, எம் பெருமான் - எமது தலைவனே! நாய் ஒத்தேன் நான் - நாய்போல் மிக இழிந்தவனுன நான், என்ன நலன் இழைத்தேன் - (இவ்வாறு நீ கருணைசெய்தற்கு) என்னநல்லுபாயம் செய்தேன்? என்ருன்—;

நான் யாதொரு நல்லுபாயமுஞ்செய்யாமல் உன்னிடத்துப் பகைமையையே பாராட்டவும், நீ அதனை மனத்திற்கொள்ளாது, எனது சாபப்பிறப்பை யொழித்து, திவ்வியசரீரத்தைத்தந்து, என் துன்பங்களைநீக்கியருளியது என்ன நிர்ஹேதுககிருபையோ! என்று, முற்செய்யுளிற்கூறியதையே மறுபடி விவரித்துக்கூறினன். பி - ம்:—[1]மாசில்லா. [2]பேயொத்த. [3]எம்பெருமா, எம்பெருமானன்.

## 51.—ஆகாயத்தில் திவ்யசரீரத்தோடுநின்ற கவந்தனை இராமன் காணுதல்.

என்ருங் கினிதியம்பி யின்றறியக் கூறுவெனேல்
ஒன்ருது தேவ ருறுதிக் கெனவுன்னுத்
தன்ருயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனுய்
நின்ருனைக் கண்டா னெறிநின்ருர் நேர்நின்ருன்.

(இ - ள்.) என்று ஆங்கு இனிது இயம்பி- (கவந்தன்) இவ்வாறு அப்போது இனிமையான துதிமொழிகளைக் கூறி, 'இன்று - இப்பொழுது, அறிய கூறுவென் ஏல்-(சீதையுள்ள இடத்தை இவர்கள்) அறியுமாறு சொல்வேனுனல், தேவர் உறுதிக்கு ஒன்ருது - தேவர்களது மனவுறுதிக்குப் பொருந்தாது,' என உன்னு-என்று நினைத்து, தன் தாயை கண்ணுற்ற கன்று அனையதன்மையன் ஆய் நின்ருனை -

தனது தாயைப்பார்த்து மகிழ்ச்சிகொண்ட கன்றுபோன்ற தன்மை யுடையவனும் (இராமனைப் பார்த்து மகிழ்ந்து) நின்ற கவந்தனை, நெறி நின்றார் நேர்நின்றான் - நல்லொழுக்கநெறியில் நடப்பவர்க்குப் பிரதி யட்சமாகுந்தன்மையனான இராமபிரான், கண்டான்—; (எ-று.)

சீதை யுள்ளஇடத்தை இராமலக்குமணர்களுக்கு நான் சொல்லிவிட்டால் உடனே இவர்கள் சென்று அவளை மீட்டுதல் கூடும்; அவ்வாறு மீட்டுவிட்டால், தேவர்கள் கருத்திற்கொண்டுள்ள ராக்ஷஸசங்காரத்தோடு தாங்கள் அடிமை பூணுதலும் இல்லாமற் போய்விடு மென்றுநினைத்து, கவந்தன் அங்ஙன்கூறாமல் நின்றான் என்பதாம். (தேவர்கள் வானரர்களாகப் பிறந்துள்ளார் என்பதை ஈண்டுநினைவுகூர்க.) 'நெறிநின்றார்நேர்நின்றான்' என்றது, தத்துவ ஞானிகளுக்கே புலனாகுபவ னென்றவாறு. (1188)

## 52 —இராமன் இலக்குமணனுக்குக் கவந்தனைச் சுட்டிக் காட்ட, அவன் கவந்தனை நீ யாரென்று வினவல்.

பாரா [1]யிளையோனே [2]பட்டவனோ வேறேயோர்
பேராளன் [3]றானோ வொளியோங்கு பெற்றியனாய்
[4]நேராத காயத்தி னிற்கின்றா னீயிவனை
ஆரா யென [5]வவனை யார்கொலோ நீயென்றான்.

(இ - ள்.) 'இளையோனே - தம்பியே! ஒளி ஓங்கும் பெற்றியன் ஆய் - ஒளிவிளங்குகிற தன்மையமைந்தவனாய், நேராத - எளிதிற் கிடைக்காத, காயத்தின் - சரீரத்தோடு, நிற்கின்றான்-நிற்கின்றவன், பட்டவன்ஓ - (நம்மால்) இறந்துபட்டவனோ? வேறே ஓர் பேர் ஆளன் தானோ-வேறேஒரு பெருமை பெற்றவனோ? நீ—, இவனை-, பாராய் ஆராய் - பார்த்து ஆராய்வாயாக,' என - என்று (இராமன்) கூற,— (அவ்விலக்குமணனும்), அவனை-(ஆகாயத்தில் நிற்கின்ற) அன்னானை, நீ ஆர்கொல் ஓ - நீ யாவன்? என்றான் - என்று வினவினான்; (எ-று.)—ஏ, தான், கொல், ஓ - அசைகள்.

சர்வஜ்ஞனான இராமபிரான் இலக்குமணனை நோக்கி நீயிவனை ஆராய என்றது, தேவியைப் பிரிந்த பின்னர்த் தான் சலனபுத்தி யுடையவனாயிருந்தமையானும், இலக்குமணன் அறிவிற் சிறந்த ஆதிசேடன் அவதாரமாதலானும் என்க. பி - ம்:—[1]இளையவனே. [2]பட்டவிவன். [3]தானாய். [4]நேராகாயத்தின் மிசை. [5]அவனும். (1189)

## 53.—கவந்தன் தன்வரலாறு கூறுதல்.

சந்தப்[1]பூ ணலங்கல் வீர தனுவெனு நாமத் தேனோர்
கந்தர்ப்பன் சாபத் தாலிக் கடைப்படு பிறவி கண்டேன்
வந்துநீர் மலர்க்கை தீண்ட முன்னுடை [2]வடிவம் பெற்றேன்
எந்தைக்கு மெந்தை [3]நீரே யிசைப்பது கேண்மி னென்றான்.

(இ - ள்.) சந்தம் பூண் அலங்கல் வீர - அழகிய ஆபரணங்களை யும் மாலையையும் அணிந்த வீரனே! (நான்), தனு எனும் நாமத்தேன் ஓர் கந்தர்ப்பன - தனுவென்ற பெயரையுடையஒரு கந்தர்வனாவேன்; சாபத்தால் இ கடைப்படு பிறவி கண்டேன் - (ஸ்தூலசிரஸ் என்னும்

முனிவனது) சாபத்தினால் இந்த இழிந்த இராக்கதப்பிறப்பை யடைந்தேன்; வந்து உற்றீர் மலர் கை தீண்ட முன் உடை வடிவம் பெற்றேன்- இங்கு வந்தடைந்த உங்களுடைய தாமரை மலர்போன்ற கைகள் தீண்டினமாத்திரத்தில் எனது முன்னையவடிவத்தை அடைந்தேன்; எந்தைக்கும் எந்தை நீர் - எனது தந்தைக்குந் தந்தை போன்றவர்களாகிய நீங்கள், இசைப்பது- (நான்) சொல்வதை, கேண்மின் - கேளுங்கள், என்றான் - என்று (கவந்தன்) கூறினான்; (எ - று.)—ஏ - அசை.

தனது துன்பம் தீர்தற்கு இவர்கள் காரணமாயிருந்ததனால் இவர்களை 'எந்தைக்குமெந்தைநீர்' என்று புகழ்ந்தான். கந்தர்ப்பன் வடமொழித்திரிபு. உற்றீர் - பெயர். பி - ம்:—[1]போர், பேர். [2]வடிவு. [3]நீர்யான். (1190)

ஸ்ரீவான்மீகத்தில் இதுபற்றி வருமாறு:—ஸ்ரீராமலக்ஷ்மணர் கவந்தனது இருதோள்களையும் வெட்டியதும் அவன்முற்பிறப்பின் வரலாறு நினைவுக்கு வரப்பெற்று பின்வருமாறு கூறலானான்;—ஸ்ரீராமா! நான் *தனுவமிசத்து ஸ்ரீயென்பவனுக்குப் புதல்வனாகத் தோன்றியவன்: **அழகிய வடிவுபடைத்த யான் கோரரூபத்தைக் கொண்டு பலரையும் அச்சுறுத்திவருகையில், ஸ்தூலசிரஸ் என்ற முனிவர் உணவுக்காக ஆராய்ந்துவைத்திருந்த காய் கிழங்குகளை நான் கவர்ந்தேன்: அவர் சினந்து 'இந்தக் கோரரூபமே உனக்கு நிலைக்கக்கடவது' என்று சபித்தார்; நான் கெஞ்சிக் கேட்கவே, 'ஸ்ரீராமபிரான் வந்து உன்கையைத் துண்டித்து எரிக்கும்போது உனது நல்லுருவம் மீண்டும் வரும்' என்றார். பின் நான் கடுந்தவம் புரிந்து தீர்க்காயுசைப் பெற்று அதனால் செருக்குக்கொண்டு இந்திரனை யெதிர்க்க, அவன் தனது வச்சிரப் படையினால் என் கைகளை வயிற்றிற்குள்ளும் தலையை மார்புக்குள்ளும் தள்ளிவிட்டான்: 'யான் உணவின்றி எங்ஙனம் தீர்க்காயுசுடன் இருப்பது?' என்று கேட்க, ஒருயோசனை தூரம் நீளும் இந்தப் புஜங்களைத் தந்தனன் என்று மொழிந்து தன்னை ஸம்ஸ்காரம் செய்யும்படி வேண்டினனென்பது.

இதுமுதல் இக்காண்டம்முடியுமளவும் பதினைந்து கவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் 14 - ஆங்கவி போன்ற அறுசீராசிரிய விருத்தங்கள்.

### 54.— இரண்டுகவிகள் - கவந்தன் இராமலக்ஷ்மணரை நோக்கி 'உங்களுக்குத் துணைவேண்டும்' என்றதைத் தெரிவிக்கும்.

கணையுலாஞ் சிலையி னீரைக் காக்குந [1]ரில்லையேனும்
இணையிலா டன்னை நாடற் [2]கேயன செய்தற் [3]கேற்கும்

---

*இந்தத் தனுவமிசத்தவனை ஸ்ரீஎன்பவனையும் தனுவென்றே வழங்கியுள்ளது.

**அழகுபடைத்த வடிவுள்ள அக்காலத்து இந்தக் கவந்தன் பேர், விசுவாவசு என்பது என்ப.

புணையிலா தவற்கு வேலை போக்கரி தன்ன தேபோல்
துணை[4]யிலா தவற்கு [5]மின்று பகைப்புலந் தொலைத்து நீக்கல்.

நான்கு கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) கணை உலாம் சிலையினீரை காக்குநர் இல்லை எனும் - அம்புகளை மிகுதியாகத் தொடுத்தற்கு உரிய வில்லையேந்திய உங்களைப் பாதுகாக்கவல்ல துணைவர் (எவரும்) இல்லையேயானாலும், இணை இலாள் தன்னை-ஒப்பில்லாத சீதையை, நாடற்கு-தேடுதற்கு, ஏயன-பொருந்துந்தொழில்களை, செய்தற்கு—, ஏற்கும் - (துணைவரால்) இயலும்; புணை இலாதவற்கு வேலை போக்கு அரிது - தெப்பமில்லாதவர்க்குக் கடலைக்கடந்து போதல் அரியது: அன்னதே போல்-அதுபோலவே, துணை இலாதவற்கும் பகை புலம் தொலைத்து நீக்கல் இன்று-துணையில்லாத ஒருவனுக்கும் சத்துருபக்ஷத்தைத் தொலைத்தொழிப்பது முடியாது; (எ - று.)

நீங்கள் கூட்டொருவர் வேண்டாக் கொற்றவரென்பான் 'கணையுலாஞ்சிலையினீரைக் காக்குநரில்லையேனும்' என்கின்றான். நீர் அசகாய சூரராயிருத்தலால் எதிர்ப்பவரை வெல்லவல்லவரானாலும் பகையைத் தனியே துணையின்றி யொழிக்கவல்ல நீங்களும் இப்போது சீதாபிராட்டியாரை நாடி அன்னாருள்ள விடத்துச்சென்று பகையொறுத்து அன்னாளை மீட்க வேண்டியிருத்தலால், துணை தேடிக்கொள்ளுதல் அவசியம் என்பது கருத்து. [3]ஏற்றும் என்பது பாடமாயின், அது புணைக்கு அடைமொழியாம்; அப்போது 'செய்தற்கு' என்பதற்கு முடிக்குஞ்சொல் வருவிக்க வேண்டும்.

இந்தக் கவந்தனுயிருந்தவன் இராமலக்ஷ்மணரால் எரிக்கப்பெற்றதும், திவ்யசரீரத்துடன் வானத்தில் தோன்றித் துதித்துச் சுக்கிரீவனை நட்பாகக்கொண்டு பகையொழிக்குமாறு கூறி, அவன் வசிக்குமிடத்தையும் காட்டிவிட்டு விடைபெற்றுச்சென்றானென்று ஸ்ரீ வான்மீகத்திற் கூறியுள்ளது. பி-ம்:—[1] இன்மை. [2] ஏயின. [4] இலாதவர்க்கு. [5] ஒண்ணு, ஒன்னார், இன்றால். (1191)

55. பழிப்பறு நிலைமை யாண்மை பகர்வதென் பதும பீடத்
துழிப்பெருந் தகைமை சான்ற வந்தண னுயிர்த்த வெல்லாம்
அழிப்பதற் கொருவனான வண்ணலு மறிதி ரன்றே
ஒழிப்பருந் [1]திறல பூத கணத்தொடு முறையு முண்மை.

(இ - ள்.) பழிப்பு அறு நிலைமை ஆண்மை பகர்வது என்-குற்றமற்ற தன்மையையுடைய (சிவபிரானது) ஆண்தன்மையைப் பற்றிச் சொல்லவேண்டுவது யாது? [மிகப்பிரசித்தமான தன்றோ!] பதுமம் பீடத்து உழி பெரு தகைமை சான்ற அந்தணன் உயிர்த்த எல்லாம் அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணல்உம் - தாமரைமலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கிற மிக்கபெருமைபொருந்திய பிரமதேவன் படைத்த எல்லாப்பொருள்களையும் அழிக்க ஏற்பட்ட ஒப்பற்ற அந்தச் சிவபிரானும், ஒழிப்பு அரு திறல பூதம் கணத்தொடுஉம் உறையும் உண்மை-நீக்கமுடியாத வலிமையையுடைய பூதகணங்களைத் துணைக்

கொண்டு அவற்றுடன்கூடி வசிக்குந் தன்மையை, அறிதிர் அன்றே- (நீங்கள்) அறிவீர்களன்றோ? (எ-று.)

எத்துணைவல்லார்க்குந் துணைவர் இன்றியமையாதவரென்பதற்கு, பேராற்றலையுடைய அழித்தற்றொழில் கடவுளான சிவபிரான் பூதகணங்களைத் துணைக்கொண்டுள்ளமையைத் திருட்டாந்தமெடுத்துக்காட்டினன். திறல-குறிப்புப்பெயரெச்சம். பி-ம்:—[1] திறற்பல். (1192)

## 56.—இதுவும் அடுத்த கவியும் குளகம்: கவந்தன், சீதையைத்தேட நல்லுபாயஞ் சொல்லுதல்.

ஆயது செய்கை யென்ப தறத்துறை நெறியி னெண்ணித்
தீயவர்ச் சேர்க்கி லாது [1]செவ்வியோர்ச் சேர்த்துச் செய்தல்
தாயினு முயிர்க்கு நல்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னாள்
ஏயதோர் [2]நெறியி னெய்தி [3]யிரலையின் குன்ற மேறி.

(இ - ள்.) ஆயது செய்கை என்பது - செய்யவேண்டியதான தொழில் இப்படிப்பட்டதென்பதை, அறம் துறை நெறியின் எண்ணி - தருமமார்க்கத்தின்முறைப்படி ஆலோசித்து, தீயவர் சேர்க்கிலாது- கொடியவரைத் துணையாகக்கொள்ளாமல், செவ்வியோர் சேர்த்து - நல்லோரைத் துணைக்கொண்டு, செய்தல் - செய்க; (அப்படிச்செய்தற்காக), உயிர்க்கு தாயின்உம் நல்கும் சவரியை தலைப்பட்டு - எல்லாவுயிர்களுக்கும் தாயைப்பார்க்கிலுங் கருணை செய்கிற சபரியென்பாளைச் சந்தித்து, அன்னாள் ஏயது ஓர் நெறியின் எய்தி - அவள் ஏவுவதாகிய ஒருவழியிலேசென்று, இரலையின் குன்றம் ஏறி - ருசியமூகபருவதத்தின்மேல் ஏறி,—(எ-று.)—இப்பாட்டில் 'ஏறி' என்பது, "தழுவி அமர்ந்து நாடுதல் விழுமிது" என அடுத்த கவியோடு முடியும்.

ருச்யமூகம் என்னும் வடமொழிப்பெயர்க்கு - கலைமான்கள் ஒலியாமல் வாழப்பெறும் மலை யென்று பொருள்; அப்பெயர்க்கு ஞாபகமாக அதில் 'ருச்யம்' என்னும் முதல்மொழியின் பொருளை மாத்திரம் எடுத்துக்கொண்டு, அம்மலையை 'இரலையின் குன்றம்' என்றார்: இது, நாமைகதேச நாமக்கிரகணத்தின் [ஒருபொருளது பெயரின் ஒரு பகுதியைக்கொண்டு அப்பொருளின் பெயரைக்குறித்தலின்]பாற்படும். இரலை-கலைமான்; இன் - சாரியை. ஏயது - ஏவியது. செய்தல்-வியங்கோள். ஆயது செய்கை என்பது - செய்யவேண்டிய செய்கையாவது ......சேர்த்துச்செய்தலாம் என்றும் உரைக்கலாம்; இப்பொருளில் செய்தல் - தொழிற்பெயர். சபரியின் வரலாறு, மேல் விளங்கும். பி - ம்:—[1]செவ்வியோர்ச் சேர்க்குஞ் செய்கை, செவ்வியோர்செய்கை தேர்ந்து. [2]நெறியையெய்தி. [3]இரலையங். (1193)

57. கதிரவன் சிறுவ னான [1]கனகவா ணிறத்தி னானை
எதிரெதிர் தழுவி நட்பி னினிதமர்ந் தவனி னீண்ட
வெதிர்பொரு தோளி னாளை [2]நாடுதல் விழுமி தென்றான்
அதிர்கழல் வீரர் தாமு மன்னதே [3]யமைவ தானார்.

(இ - ள்.) கதிரவன் சிறுவன் ஆன கனகம் வாள் நிறத்தினானை- சூரியனது மகனான பொன்போன்ற ஒளிபொருந்திய வடிவமுடைய சுக்கிரீவனை, எதிர் எதிர் தழுவி - (ஒருவருக்கொருவர்) அளவளாவித் தழுவிக்கொண்டு, நட்பின் இனிது அமர்ந்து- (அவனுடன்) இனிமையாகச் சினேகஞ்செய்து, அவனின்-அவனுடைய துணையால், நீண்ட வெதிர் பொரு தோளினாளை நாடுதல்-நீண்ட மூங்கில் போன்ற தோள்களையுடைய சீதையைத் தேடுதல், விழுமிது - சிறந்தது, என்றான் - என்று (கவந்தன்) கூறினான்; அதிர் கழல் வீரர் தாமும் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த வீரர்களான இராமலக்ஷ்மணர்களும், அன்னது அமைவது ஆனார்-அப்படிச்செய்வதையே உடன்பட்டவரானார்கள்;

சாபத்தாற் பெண்வடிவம்பெற்ற 'ருக்ஷரஜஸ்' என்னும் வானரராஜனது கழுத்தின் அழகைக் கண்டு காமுற்ற சூரியனுக்கு அப்பெண்குரங்கினிடம் பிறந்தவன் சுக்கிரீவனென்று உணர்க. பி-ம்:—[1] கண்கவர். [2] நாடுதிர் விரைவின். [3] அமையுமென்றார். (1194)

## 58.—கவந்தன் செல்ல, இராமலட்சுமணர் அன்றிரவில் மதங்காச்சிரமம் அடைதல்.

[1] ஆனவன் தொழுது வாழ்த்தி [2] யந்தரத் தெழுந்து போனான்
[3] மானவக் குமரர் தாமு மத்திசை வழிக்கொண் டேகிக்
கானமு மலையு நீங்கிக் கங்குல்வந் [4] திறுத்த காலை
யானையி [5] னிரட்டை யென்ன மதங்கன திருக்கை சேர்ந்தார்.

(இ - ள்.) ஆனவன்-அவ்வாறான கவந்தன், தொழுது வாழ்த்தி - (இராமலக்ஷ்மணர்களை) வணங்கி வாழ்த்தி, அந்தரத்து எழுந்து போனான்-ஆகாயத்திற் கிளம்பிப் போய்விட்டான்; மானவர் குமரர் தாமும்-மநுவம்சத்திற்பிறந்த குமாரர்களான இராமலக்ஷ்மணர்களும், அ திசை வழி கொண்டு ஏகி - (கவந்தன் கூறிய) அத்திக்கின் வழியைப் பற்றிச் சென்று, கானம்உம் மலைஉம் நீங்கி - காடுகளையும் மலைகளையுங் கடந்து, கங்குல் வந்து இறுத்த காலை - இரவு வந்த பொழுது, யானையின் இரட்டை என்ன - இரண்டு ஆண் யானைகள் போன்று, மதங்கனது இருக்கை சேர்ந்தார் - மதங்கனென்னும் முனிவனது ஆச்சிரமத்தை அடைந்தார்கள்; (எ - று.)

மதங்காச்சிரமம், பம்பாநதிக்கு மேற்குக்கரைப்பக்கத்திலுள்ளதென்று முதனூல் கூறும். மாநவர்-வைவசுவதமநுவின் வமிசத்திற் பிறந்தவர்; மானம் அ குமரர் என்றும் பிரித்துப் பொருள் கூறலாம். இருக்கை-இருக்குமிடம். வழிக்கொண்டு-பிரயாணப்பட்டு. பி - ம்:—[1] ஆனபின். [2] அந்தரமெழுந்து, அந்தரத்தவனும். [3] மானவன். [4] இறுக்குங்காலை. [5] இரட்டியான. (1195)

கவந்தப்படலம் முற்றிற்று.

# 11 - ஆவது சவரி பிறப்புநீங்கு படலம்.

சவரியென்பவள் தான்வசிக்கும் மதங்காச்சிரமத்துக்கு இராம லக்ஷ்மணர் எழுந்தருளுஞ் செய்தியை முன்னமேயறிந்து எதிர் நோக்கி அவ்வனத்திலுள்ள நல்ல கனிகளைச் சேர்த்துவைத்துக் கொண்டிருந்து அவர்கள் அவ்வாச்சிரமத்துக்கு எழுந்தருளிய வுடன் அப்பழங்களை அவர்கட்குக் கொடுத்து உபசரித்து இராம பிரானருளால் தனதுபிறப்பையொழித்து நல்லகதியையடைந்த தைக் கூறும் பாகம். சபரீ - வடசொல்: இவள், மதங்கரது சிஷ்யர்களுக்கு உபசாரஞ்செய்துகொண்டு அவ்வாச்சிரமத்திலேயே வசித்துவந்த துறவறம்பூண்ட ஓர் தவப்பெண். க்ஷத்திரியஜாதி ஸ்த்ரீயினிடம் வைசியஜாதிபுருஷனுக்குப்பிறந்த பிரதிலோமஜாதி யார் சபரரெனப்படுவர்; இச்சாதியார் தொழில் - தேன்கொணர்ந்து விற்றல். சபரனென்பதன் பெண்பால், சபரீ. பிறப்புநீங்குதல் - மீண்டும்பிறவாதபடி முத்திப்பேரின்பத்தையடைதல். இக்காரியம் காரணமான வீடடைதலைக் குறித்தலால், காரணத்தைக்காரியத் தாற்கூறின உபசாரவழக்கு; பிறப்பு நீங்குதற்கு வீடடைதல் காரணம்.

### 1.—மதங்காச்சிரம வர்ணனை.

கண்ணிய தருதற் கொத்த கற்பக தருவு மென்ன
[1]நண்ணிய நல்குந் [2]தெய்வக் கடிநறுஞ் சோலை [3]ஞாலம்
எண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான
புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே [4]போன்ற தன்றே.

(இ - ள்.) கண்ணிய தருதற்கு ஒத்த கற்பக தருஉம் என்ன - நினைத்தவைகளைத் தரவல்ல கற்பகவிருட்சம் என்று சொல்லும்படி, நண்ணிய - (மனத்தினால்) விரும்பினவற்றை, நல்கும் - கொடுக்கிற, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, கடி நறு சோலை - விளக்கமுள்ள வாசனைவீசுகின்ற (மதங்காச்சிரமத்தின்) சோலையானது,-ஞாலம் எண்ணிய இன்பம் அன்றி - உலகத்தார் மனத்தால் விரும்பிக் கருது கின்ற இன்பமே யல்லாமல், துன்பங்கள் இல்லை ஆன - துன்பங்களே யில்லாத, புண்ணியம் புரிந்தோர் வைகும் துறக்கம்ஏ - நல்வினை செய்தவர்கள் சென்றுசேர்கிற சுவர்க்கலோகத்தையே, போன்றது - ஒத்திருந்தது; (எ - று.)

கற்பகம்போன்ற மரங்களை யுடைமையாலும், இன்பத்தையளித் தலாலும், அந்தமதங்காச்சிரமச்சோலை சுவர்க்கமே போலு மென்ப தாம். வேண்டியவர்வேண்டியவற்றைக் கொடுக்கிற கல்பக விருட்சம் ஐந்தையேயுடைய சுவர்க்கத்தினும் மேலாக, இச்சோலையில் அத் தன்மைய பல மரங்கள் உள்ளன வென்று வேற்றுமையணி தொனிக் கக் கூறினர். சோலை - மரங்களடர்ந்தஇடம். ஞாலமெண்ணிய துறக்க மெனினுமாம்: சுவர்க்கத்துக்கு 'ஞாலமெண்ணிய' என்ற அடைமொழி கொடுத்தல், கர்மபூமியாகிய மண்ணுலகத்திற் பிறந்தவரே புண்ணி யஞ்செய்து சுவர்க்கஞ்சேர்தற்கு உரியவராதலா லென்க. கண்ணிய - பெயர். தருவும், உம் - இசை நிறை. ஞாலம் - இடவாகுபெயர்.

அன்றே - ஈற்றசை. பி - ம்:—[1]உண்ணிய. [2]செல்வமுறு. [3]சாரல். [4]போலும். (1196)

## 2.—இராமன் சவரியைக்கண்டு க்ஷேமம்விசாரித்தல்.

[1]அன்னதா மிருக்கை நண்ணி யாண்டுநின் றளவில் காலந்
தன்னையே நினைந்து நோற்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னாட்கு
இன்னுரை யருளித் தீதின் றிருந்தனை போலு மென்றான்
[2]முன்னிவற் கிதுவென் றெண்ண லாவதோர் மூல மில்லான்.

(இ - ள்.) இவற்கு முன் இது என்று எண்ணல் ஆவது ஓர் மூலம் இல்லான் - இவனுக்குமுன் இபபொருள் உள்ளதென்று எண்ணக்கூடிய ஒரு முதற்பொருள் [காரணம்] இல்லாத [எல்லாவற்றிற்கும் முதல்வனான] இராமபிரான்,—அன்னது ஆம் இருக்கை நண்ணி-அப்படிப்பட்டதான மதங்காச்சிரமத்தை யடைந்து, ஆண்டு நின்று அளவு இல் காலம் தன்னை நினைந்து நோற்கும் சவரியை தலைப்பட்டு - அவ்வாச்சிரமத்திலேயே யிருந்துகொண்டு பலகாலமாக(ப் பரம்பொருளான) தன்னையே தியானித்துத் தவஞ்செய்கிற சவரியென்பவளைக் கிட்டி, அன்னாட்கு இன் உரை அருளி-அவளுக்கு இனியவசனங்களைச் சொல்லி, 'தீது இன்று இருந்தனை போலும் - நீயாதொருதுன்பமுமின்றி இருக்கின்றனையோ?' என்றான் - என்று க்ஷேமம் விசாரித்தான்; (எ - று.)

காரணமென்பது காரியத்துக்கு நியதமாய் முன்நிற்ப தாதலால், அவ்வியற்கை விளங்க, மூலம் என்பதற்கு 'முன்னிவற்கிதுவென் றெண்ணலாவது' என அடைமொழி கொடுத்தார்; இதனால், இராமனே எல்லாவற்றுக்கும் மூலமான பரம்பொருளென்பது விளங்கும். 'தீதின்று' என்பதில், இன்று என்பது - இன்றி யென்னும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சத்தின் திரிபு; இதனை முற்றெச்சமாகக்கொள்வது நேரென்று சிலர்கொள்கை. 'இருந்தனைபோலும்' என்ற இதில், போலும் என்னும் அசைச்சொல் - ஓசை வேறுபாட்டால் வினாப்பொருளை உணர்த்திநின்றது. பி - ம் :—[1]அன்னவ ளிருக்கைநீங்கி. [2]முன்னவற்கிது. (1197)

## 3.—சவரி இராமனுக்கு விருந்துசெய்து உபசரித்தல்.

ஆண்டவ ளன்பி னேத்தி யழுதிழி யருவிக் கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம் வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது பிறவி [1]யென்பாள்
வேண்டிய [2]கொணர்ந்து நல்கி விருந்துசெய் திருந்த வேலை.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, அவள் - அந்தச்சவரி, அன்பின் ஏத்தி - பக்தியோடு புகழ்ந்து, அழுது இழி அருவி கண்ணள் - (ஆனந்தமிகுதியால்) அழுது பெருகுகிற நீரருவிகள் பொருந்திய கண்களையுடையவளாய், 'என் மாயம் பாசம் மாண்டது - (உன்னைத் தரிசிக்கப்பெற்றதனால்) எனதுமாயமான உலகப்பற்று நீங்கியது; வரம்பு இல் காலம் பூண்ட மாதவத்தின் செல்வம் வந்தது - அளவற்ற பலகாலமாக யான்மேற்கொண்டு செய்த பெருந்தவத்தின்

பயன் சித்தித்தது: பிறவி போயது - பிறப்பு ஒழிந்தது,' என்பாள் - என்றுசொல்லி, வேண்டிய கொணர்ந்து நல்கி விருந்து செய்து இருந்த வேலே - (நல்லவையென்று தான்) விரும்பிச் சேர்த்து வைத்த பழம்முதலியவற்றைக் கொணர்ந்து விருந்துசெய்திருந்த சமயத்தில்,—(எ-று.)—இது, ஐந்தாம்பாட்டிலுள்ள "என்ன" என்ற எச்சத்தைக்கொண்டு முடியும்.

இங்குக் கண்ணீர், ஆனந்தத்தின்மிகுதியாலானது. மாண்டது, போயது - தெளிவுபற்றிய காலவழுவமைதி. இராமன் தன்னிடம் வரும்போது அவனுக்குத்தரவேண்டு மென்று இவள் பல கனிகளை ருசிபார்த்து இனியவற்றைத் தேர்ந்து வைத்திருந்தமை தோன்ற, 'வேண்டிய' என்றார். [2]கொணர்ந்துநல்க என்ற பாடத்துக்கு - வேண்டியவற்றைச் சவரி கொணர்ந்துநல்க இராமன் அவ் விருந்துணவை அமுதுசெய்திருந்த பொழுதி லென்க. பி-ம்:—[1]என்றாள். [2]தவத்தினுளுமேவிடங்கொண்டுபுக்காள். (1198)

## 4.—பிரமன் முதலியோர் தன்னைத் தத்தம் உலகிற்கு வரும்படி அழைத்தன ரென்று சவரி கூறுதல்.

ஈசனுங் கமலத் தோனு மிமையவர் யாரு மெந்தை
வாசவன் றனு மீண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி
ஆசறு தவத்திற் கெல்லை யணுகிய திராமற் காய
பூசனை விரும்பி யெம்பாற் போதுதி யென்று போனார்.

(இ - ள்.) எந்தை - எமது தலைவனே! ஈசனும் - சிவபிரானும், கமலத்தோனும் - (திருமாலின் உந்திக்) கமலத்தில் தோன்றிய பிரமதேவனும், இமையவர் யாரும் - தேவர்கள் யாவரும், வாசவன் தானும் - இந்திரனும், ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி - இங்கு வந்து மகிழ்ச்சியுடன் (என்னைப்) பார்த்து, 'ஆசு அறு தவத்திற்கு எல்லை அணுகியது-(உனது) குற்றமற்ற தவத்துக்குச் சித்திபெறுங் காலம் நெருங்கிவிட்டது; இராமற்கு ஆய பூசனை விரும்பி - (சிறிது காலம் இங்கேயிருந்து இங்குஎழுந்தருளப்போகிற) இராமபிரானுக்குத் தக்க உபசாரங்களை விரும்பிச்செய்து, (பிறகு), எம்பால் போதுதி - எமது உலகத்துக்கு வருவாயாக,' என்று - என்றுகூறி, போனார் - சென்றார்கள்; (எ - று.)

இவள் பெருந்தவஞ்செய்தவ ளாகையால், இவள் வருவது தமக்குப்பெருமையென்று எண்ணி, பிரமன் முதலியோர் இவளைத் தம் உலகத்துக்கு அழைப்பவராயின ரென்க. இச்செய்தி முதனூலிற் கூறப்படவில்லை; அதில் மதங்கசிஷ்யர்கள் இவளை நோக்கி 'லட்சுமணனோடு கூடிய இராமபிரான் வருவர்; அவருக்கு அதிதி பூசை செய்து பிறகு நல்லுலகமடைவாய்' என்று கூறினதாகச் சொல்லியிருக்கிறது. (1199)

## 5.—சவரி இராமனைப் புகழ, இராமன் அவளை நோக்கி முகமன் கூறல்.

இருந்தன னெந்தை நீயீண் டெய்துதி யென்னுந் தன்மை
பொருந்திட வின்று தானெனன் புண்ணியம் பூத்த [1]தென்ன

அருந்தவத் தரசி தன்னை யன்புற நோக்கி [2]யெங்கள்
வருந்துறு துயரந் [3]தீர்த்தா யம்மனை [4]வாழி [5]யென்ருன்.

(இ - ள்.) எந்தை - எமது தலைவனே! நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை பொருந்திட - இங்கே நீ வரப்போகிருயென்ற செய்தி தெரிந்ததனுல், இருந்தனன் - (உனது வருகையை எதிர்நோக்கிக் கொண்டு) இருந்தேன்; (அவ்வாறே நீ எழுந்தருளியதனுல்), இன்று தான் என் புண்ணியம் பூத்தது - இப்போதுதான் எனது தவம் பலித்தது, என்ன - என்று புகழ்ந்து கூற,—(இராமபிரான்), அரு தவத்து அரசி தன்னை அன்புஉற நோக்கி - மிக்கதவத்தை யுடையவளான அச்சவரியை அன்போடுபார்த்து, 'அம்மனை - தாயே! எங்கள் வருந்துறு துயரம் தீர்த்தாய் - எங்களது வருத்தம் பொருந்திய வழிநடைத் துன்பத்தை (நீசெய்த உபசாரத்தால்) தீர்த்தாய்; வாழி - வாழ்வாயாக,' என்ருன் - என்று கூறினுன்; (எ - று.)

இவர்கள் அவளை 'அம்மனை' என்று கூறியது, அன்புபற்றிய மரபுவழுவமைதி; அவளது உயர்வையுங் காட்டும். வாழி - வாழிய என்னும் வியங்கோளமுற்றின் விகாரம். பி - ம்:—[1]என்ற. [2]நங்கள். [3]தீர்ப்பாயெம்மனை. [4]வாழ்தி. [5]என்ருர். (1200)

இப்பாடலின்பின் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படும் பாடலொன்று வருமாறு:—

மாங்கனி தாழை யின்காய் வாழையின் கனிக ளோடும்
ஆங்கனி யாவ தேயென் றருந்திநான் விரும்பி வைத்தேன்
பாங்கினி லமுது செய்மி னென்றவள் பரிவி னல்குந்
தேங்கனி யினிதி னுண்டு திருவுள மகிழ்ந்த வீரன்.

## 6—சவரி அவர்களுக்குச் சுக்கிரீவனுள்ளவிடத்துக்குச் செல்லும் வழியைக் கூறுதல்.

அனகனு மிளைய கோவு மன்றவ ணுறைந்த பின்றை
வினையறு நோன்பி னுளு மெய்ம்மையி னேக்கி வெய்ய
துணைபரித் தேரோன் மைந்த னிருந்தவத் துளக்கில் குன்றம்
நினைவரி தாயற் கொத்த நெறியெலா நினைந்து சொன்னுள்.

(இ - ள்.) அனகன்உம் - குற்றமற்றவனுகிய இராமபிரானும், இளைய கோஉம் - இளையபெருமாளான இலக்குமணனும், அன்று அவண் உறைந்த பின்றை - அப்பொழுது அங்கு வசிக்குஞ்சமயத்தில்,—வினை அறு நோன்பினுள்உம்-தீவினைகள் அழிதற்குக் காரணமான தவத்தையுடையளான சவரியும், மெய்ம்மையின் நோக்கி - (அவர்களை) மெய்யன்போடுபார்த்து,—வெய்ய துணை பரி தேரோன் மைந்தன் இருந்த அ துளக்கு இல் குன்றம் - வெப்பமுடையவனும் வேகமாகச்செல்லுங் குதிரைகட்டிய தேருடையவனுமான சூரியனது மகனை சுக்கிரீவன் வசிக்கிற அழிவற்ற அந்த (ருசியமூகமென்னும்) மலையினது, நினைவு அரிது ஆயற்கு ஒத்த நெறி எலாம் - நினைக்க முடியாததும் ஆராயத்தக்கதும் [மிகக் கொடியதும்] ஆன வழிமுழுவதையும், நினைந்து சொன்னுள்-ஆலோசித்துச் சொன்னுள்; (எ-று.)

இச்செய்தி முதனூலில் இல்லை; அதில், இவ்விவரத்தையுங் கவந்தனே கூறியதாகவுள்ளது. அகம் - தோஷம்: அது இல்லாதவன் - அநகன். துளக்கு - துளங்குஎன்ற முதனிலை திரிந்த தொழிற் பெயர். (1201)

## 7.—சவரிகூறினவற்றை இராமன் கேட்டல்.

வீட்டினுக் கமைவ தான மெய்ந்நெறி வெளியிற் றாகக்
காட்டுறு மறிஞ ரென்ன வன்னவள் கழறிற் றெல்லாம்
கேட்டன னென்ப மன்னோ கேள்வியாற் செவிகண் முற்றுந்
தோட்டவ ருணர்வி னுண்ணு மமுதத்தின் சுவையாய் நின்றான்.

(இ - ள்.) கேள்வியால் செவிகள் முற்றும் தோட்டவர் கேள்விகளினால் (தங்கள்) காதுகள் முழுதும் துளைக்கப்பட்டவராகிய பெரியோர், உணர்வின் உண்ணும் - (தங்கள்) தத்துவஞானத்தினால் நுகர்கிற, அமுதத்தின் சுவை ஆய் நின்றான் - அமிருதத்தின் ருசியாயிருக்கின்ற இராமபிரான்,—வீட்டினுக்கு அமைவது ஆன மெய் நெறி வெளியிற்று ஆக காட்டுறும் அறிஞர் என்ன-மோட்சவுலகத்துக்குப் போவதற்கு உரியதான உண்மைநெறியை வெளிப்படையாக [நன்றாக]த் தெரிவிக்கிற அறிவையுடைய நல்லாசிரியர்போல, அன்னவள் கழறிற்று எல்லாம்-அந்தச்சபரிகூறியவற்றை யெல்லாம், கேட்டனன்—; (எ-று.)—என், மன், ஓ-அசைகள்.

ஒருவர் நற்கதியடைந்து உய்யுமாறு அவர்க்கு நல்லாசிரியர் முத்திமார்க்கத்தைக் கூறுதல்போல, இராமன் சுக்கிரீவனைச் சேர்ந்து தன்கருத்துமுற்றும்படி அவ்விடத்திற்குச்செல்லும் வழிகளை அவனுக்குச் சபரி தெரிவித்தன ளென்பதாம். "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப்படாத செவி" என்ற திருக்குறளும், 'கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்,'. 'மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலின், கேள்வியைக் கருவியாக்கிக் கூறினர்; பழைய துளை துளையன்று என்பதாம்' என்ற பரிமேலழகருரை வாக்கியங்களும், 'கேள்வியாற்செவிகள் முற்றுந்தோட்டவர்' என்ற விடத்து உணரத்தக்கன. பெரியோரிடத்துக் கேட்டறிந்த நுண்ணறிவுடையவரே தங்கள் தத்துவஞானத்தினால் பரம்பொருளான தன்னைப் பலபடியாலும் இன்பமுற அனுபவிக்கப்பெறுபவன் இராம னென்பது,' ஈற்றடியின்கருத்து. கழறிற்றுஎல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். நின்றான் - இறந்தகாலவிடைநிலை, காலத்தைக் காட்டாது தன்மையுணர்த்திற்று. (1202)

## 8—சவரி முத்தியடைய, இராமலட்சுமணர் அப்பாற்செல்லுதல்.

பின்னவ [1]ளுழன்று பெற்ற யோகத்தின் பெற்றி யாலே
தன்னுட றுறந்து [2]தானத் தனிமையி னினிது சார்ந்தாள்
[3]அன்னது கண்ட வீர ரதிசய [4]மளவின் றெய்திப்
பொன்னடிக் கழல்க ளார்ப்பப் புகன்றமா நெறியிற் போனார்.

(இ - ள்.) பின் - பிறகு, அவள் - அந்தச்சவரி, உழன்று பெற்ற யோகத்தின் பெற்றியாலே - மெய்வருந்திச் செய்து பெற்ற தவத்தின் பயனால், தன் உடல் துறந்து - தனது உடம்பை விட்டு [இறந்து], அ தனிமையின் - ஒப்பற்றதான அந்த முத்தியுலகத்தில், இனிது சார்ந்தாள் - இனிமையாகச் சென்று சேர்ந்தாள்: அன்னது கண்ட வீரர் - அச்செயலைப் பார்த்துநின்ற இராமலக்ஷ்மணர்கள், அதிசயம் அளவு இன்று எய்தி - ஆச்சரியத்தை மிகுதியாகப் பொருந்தி, பொன் அடி கழல்கள் ஆர்ப்ப - (தங்கள்) அழகிய திருவடிகளிற் கட்டிய வீரக்கழல்கள் ஒலிக்கும்படி, புகன்ற மா நெறியில் போனார் - (சவரியாற்) கூறப்பட்ட பெரிய (காட்டு) வழியிற் போனார்கள்; (எ-று.)—தான் - அசை.

இராமலக்ஷ்மணர்களுக்கு அதிதிபூசை செய்வதற்குக் காத்திருந்த சவரி அவ்வாறே அவ்விருவர்க்கும் அதனைச் செய்த பின்பு அவர்களனுமதிபெற்று அக்கினியில் உடலைத்துறந்து தன் யோக மகிமையால் நற்கதிபெற்றனளென்று முதனூல் கூறும். பி - ம்:— [1]உழந்து. [2]வானம். [3]அன்னவை. [4]அளவிற்று. (*1203*)

## 9.—இராமலட்சுமணர் பம்பைப்பொய்கையை யடைதல்.

[1]தண்ணெனுங் கானுங் குன்றுந் [2]திசைகளுந் தவிரப் போனார்
மண்ணிடை வைக றோறும் [3]வரம்பிலா மாக்க ளாடக்
கண்ணிய வினைக ளென்னுங் கட்டழல் [4]கதுவ லாலே
புண்ணிய [5]முருகிற் றன்ன பம்பையாம் பொய்கை புக்கார்.

(இ - ள்.) (இராமலட்சுமணர்), தண் எனும் கான்உம் குன்றுஉம் திசைகள்உம் - குளிர்ந்துள்ள காடுகளும் மலைகளும் திக்குகளும், தவிர - பின்னாகும்படி [அவற்றைக்கடந்து], போனார் - சென்றவர்களாய்,—வைகல்தோறுஉம் மண்ணிடை வரம்பு இலா மாக்கள் ஆட - நாடோறும் பூமியிலுள்ள கணக்கில்லாத மனிதர்கள் வந்து நீராடுதலினால், கண்ணிய வினைகள் என்னும் கட்டு அழல் கதுவலால் - (அவர்களிடத்து) மிக்குள்ள தீவினைகளாகிய பெருந் தீ வெதுப்புதலினாலே, புண்ணியம் உருகிற்று அன்ன - புண்ணியம் உருகினது போலத் தோன்றுகிற, பம்பை ஆம்பொய்கை - பம்பையென்னும் சரசை, புக்கார் - அடைந்தார்கள்; (எ-று.)

உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த தற்குறிப்பேற்றவணி. தன்னில் மூழ்கினோரது பாவத்தைத் தவறாது ஒழிக்குமென்பது, பின்மூன்றடிகளின் கருத்து. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. பி-ம்:—[1]தண்ணறுங், தண்ணுறுங். [2]நதிகளும். [3]வரம்பிலாதாடு மாக்கள். [4]கழிதலாலே, அவிதலாலே. [5]மருங்கிற்றன்ன, உருவிற்றன்ன. (*1204*)

சவரி பிறப்புநீங்குபடலம் முற்றிற்று.

ஆரணியகாண்டம் முற்றுப்பெற்றது.

# கம்பராமாயணத்து ஆரணியகாண்டத்தின்

## அரும்பதவகராதி முதலியன.*

அகத்தவர் - பரமபதத்திலுள்ளவர்: விராத-50
அகத்தியன், அகத்-26, 32: அகத்தியன் இராமனுக்கு வில் முதலியன அளித்தவன், அகத் - 55: குண்டிகையிற் காவிரி கொணர்ந்தவன், அகத்-46: அகத்தியன் தந்தவாள் புவன மூன்றும் ஒரு தட்டிலிட்டால் ஒப்புவராவிற்று, அகத் 56: அகத்தியன் தமிழாநுலகையளந்தவன், அகத் - 36: தேவர்வேண்டக் கடலைப்பருகி மீண்டுமிழ்ந்தவன், அகத்-37: வாதாபி காயமுண்டு உவலி னிடரைக் களைந்தவன், அகத்-38: விந்தியமலையை யடக்கியவன், அகத்-39: அகத்தியனருளே இமையோரும் தவமுற்றும் செடியோரினெடியோரும் பெருமை, அகத்-50
அகத்துறை - அகப்பொருளிலக்கணத் துறை, இடமுள்ள சீராடு துறை, சூர்ப்ப-1
அகம் நிகைத்தல், சூர்ப்ப-59
அகிலே-மனகிலே, சரப-33
அகம்பன், கல்விச் செல்வியான்: நிமித்தங்களைக் கரனுக்கு எடுத்துக்கூறியவன், கான்-69
அகம்புலர்தல் - மனம்வருந்துதல், சடாயுவு 139
அகலிகை, மாரீச-181
அகழி, விராத-21
அகிலமுமுண்டவன், சரப-14
அங்கண்-அவ்விடத்து, சரப-1
அங்கவலயம், விராத-16
அங்கியின்படையா விருளப்புறத்தகலுதல், அயோமு-80
அச்சமென்பது உயிர்க்குத்துணையாகாது, கரன்-142
அச்சு-இரிசு, கரன்-78
அசனி, மாரீச-27
அசும்பு-நீரூற்று X மதம்: கரன் 53
அசைதல்-கலங்குதல், விராத-27
அசைவு-நடுக்கம், தளர்ச்சியுமாம், கரன்-57
அஞ்சலித்தல்-கைகுவித்தல், சடாயுகா-31
அஞ்சனக்கிரியனான், விராத-25
அஞ்சனபுஞ்சம், அயோமு 36
அஞ்சனமேகம், சூர்ப்ப-84
அஞ்சனமயில், சடாயுவு-190
அட்டதிக்கு, மாரீச-247
அடக்கமென்பது இன்னது, மாரீச-17
அடங்கிவாழாச்சிறியோர் அடாத பொருளை இடைபே யிழத்தல், மாரீச-117
அடர்தல் - நெருங்குதல், சூர்ப்ப - 103
அடல்-வலிமை, சூர்ப்ப-117
அடவி-காடு, கவந்த-2
அடி-பாதம், கரன்-77
அடிப்பொடி செருப்புச்சிதறுதல், சூர்ப்ப-105
அடிப்பொடியும் இராது எற்கிலாப் புரந்தான், சூர்ப்ப-25
அடிபணிவது, சூர்ப்ப-2
அடிபதைத்தல் - கால்களை புதறுதல், சூர்ப்ப-97

---

* இங்குக் காட்டப்படுபவை படலப்பெயரின் முதற்குறிப்பும், படலச் செய்யுள்களினெண்ணும்.

அடியிணைபடியிற்றோய்தல், சூர்ப்ப-59
அடுக்கியவடுக்கல், கரன்-156
அடுத்தல்-பொருந்துதல், சடாயுவு-1
அடைத்தல்-மூடுதல், அயோமு-30
அடைப்பை, சடாயுவு-44
அடைய முழுவதும், விராத-10
அண்டசத் தருந்துயிறுறந் தவையன், சூர்ப்ப-11
அண்டசம்-முட்டையிலிருந்துண்டாவது: இங்கே, பாம்பு: சூர்ப்ப-11
அண்டம் கடவுள் பக்கல்தோன்றியொளிக்கும், கவந்த-8
அண்ணல், சூர்ப்ப 6
அணங்குதல் -வருந்திப் பெறுதல், அழகுடையதாதல், விராத-16
அணவு - அனுகூலித்தல்: அணைவு என்றுமாம்: சூர்ப்ப-77
அணி-ஆபரணம், சூர்ப்ப-24
அணுகுறல், விராத-61
அணை-பஞ்சுமெத்தை, மாரீச-121
அத்திரி, விராத-2
அத்திரி முக்குறும் பெறிந்த தவவினையுடையவன், விராத-3
அதர்-வழி, கரன் 62
அதருமத்தால் இந்திரனிழிவையடைந்தது, மாரீச-181
அதவம்-செய்த்துடுப்பு, விராத-45
அதள்-தோல், விராத-15
அதிகம், சூர்ப்ப-17
அதிசயம் அளிப்பதற்குக் கற்பகதரு முதலியன முறைமுறை நின்று நீட்டும், மாரீச-19
அதிதி முப்பத்து முக்கோடி விண்ணோரைப் பெற்றாள், சடாயுகா-25
அந்தகற்களிப்பது, கரன்-56
அந்தகன் இராமன் விருந்திட உமருயிரையுண்டது, சடாயுவு 96
அந்தகன் மனந்தளர, விராத-8
அந்தகன்றூது × காணிலி (சூர்ப்பணகை); கரன்-14
அந்தகனடிதொழுது ஆணைக்கு அடங்குதல், கரன் - 41
அந்தகாரம், மாரீச-138
அந்தணர்தொழில், மாதவத்தொழுகுதல் முதலியன: அரக்கரால் தண்டகவனத்து முனிவர் மாதவத் தொழுகல முதலியவற்றினின்று நீங்கினமை, அகத்-14
அந்தணர்பாவை, சூர்ப்ப-49
அந்தணன், மாரீச-28
அந்தம்-முடிவெல்லை, விராத-28
அந்தமிலுயர்பதம்-பரமபதம், சரப-41
அந்தரம்-தீமை, மாரீச - 28, ஆகாயம், மாரீச-169
அந்தோ, சூர்ப்ப-115
அந்தோகெடுத்தது, சடாயுவு-156
அநங்கபாணம், மாரீச-93
அநங்கன், சூர்ப்ப-13
அநங்கனுக்குத்தப்ப ஒளிக்கலாமிடமில்லை, சூர்ப்ப-79
அநங்கனுருவந்தேயக்கற்பித்த காரணம், மாரீச-71
அப்பு-நீர், அயோமு-100
அப்புறத்தண்டம், மாரீச 29
அபயம், அகத்-16
அபிமானம்-ஆசை, அயோமு-18
அம்பரம்-ஆகாயம், விராத-65: கா-127
அம்பு-ஆயுதம், மாரீச-184
அம்பு மனனுழையூர வந்தகாரம், மாரீச-142
அம்மனை, சூர்ப்ப-116
அம்மா, மாரீச-61
அமரர், விராத-4, சூர்ப்ப-103
அமரர் இராவணற்குக் காமிறுக்குங் குடி, சூர்ப்ப-124
அமரர் மன்னன், கரன்-44
அமரும்-அடங்கிய, குறுகிய, அகத்-38
அமளி-படுக்கை, மாரீச - 124
அமுதகுத் தனையமழலை, மாரீச-237
அமுதுண்ணினும் பொன்றுவென், சூர்ப்ப-28

அமைத்தல்-உபசரித்தல், அகத் -49
அமைதல்-சம்மதித்தல், மாரீச -209
அமைதி-இடம், விராத-2: பொழுது, சரப-39: சுகம், அகத்-26: தன்மை, சூர்ப்ப 42
அயர்தல்-தளர்தல், மாரீச-172
அயல்-அருகு, பக்கம், சரப - 3 சூர்ப்ப-37
அயல்படி-அருகான இடம், சரப -3
அயன்-பிரமன், விராத-18
அயன்பண்டையன், அகத்-3
அயன்முதலோர் போவதுகருதும் நெறி மோட்சநெறி, சரப-43
அயிர்-நுண்மணல், சடாயுகா 23
அயிர்த்தல்-சந்தேகித்தல், சடாயுகா-9
அயிருறக் கலந்தநீர், மாரீச-107
அயில் - கூர்மை,விராத-32 வேல், சூர்ப்ப-37
அயில்தொகை-மிக்ககூர்மை, விராத-6
அயில்வு-ஊண், அயோமு - 95
அயோததி, சடாயுகா-36
அயோமுகி தாடகையையுஞ் சூர்ப்பணகையையுமொத்தவள், அயோமு - 50: அயோமுகியின் றன்மை, அயோமு-43-48
அரக்கர்சேனையாற் பறவைகளும் விலங்குகளும் அஞ்சியோடுதல், கான்-58; அரக்கா ஒரு தொடையாக (இராமன் மேல) அம்பு விடுதல் × கணமுகில் கல்மழை விடுதல், கான்-89: அரக்கர்க்கு முன் முதல் மூவரின் செயல், அகத் - 14இல்-5-6: அரக்கர்கண்மணி கருடனும அஞ்சப் பெற்றவற்றைக்காகமும் கவர்ந்த, கான் - 88: அரக்கர்குலந்தொலைத்து நகர் புகுவேம், சூர்ப்ப - 136: அரக்கர் குலம் தேவருமிரியக் கூற்றுமுட்குங் குலம், சூர்ப்ப - 100: அரக்கர் சினம் உருமைச் சுடும், அகத்-45: அரக்கர் சேனை இராமனை வளைத்தல் × மடங்கலை வேழம் வளைத்தல், கான் - 75: அரக்கர்தம் வருக்கந்தீர்க்குஞ் செயல், சடாயுவு - 213: அரக்கர் தேவராய்த் தம்முடைக் கவந்தநாடகங் காணுதல், கான் - 121
அரக்கர்பொரத்திரளுதல் × ஒக்கிய மலையெலாமொருமாடு தொகுதல், கான்-29
அரக்கர்முதலிய குறித்தார்யாவரையும் கோறும், சூர்ப்ப-137
அரக்கர்வருநதிசையின் முந்துற் றிருக்கை நன்று, அகத்-54
அரக்கர்வழியைத் தொடர்ந்து நடப்பதே கதி, சடாயுவு 55
அரக்கர் வேணடுரு வரிக்கவல்லர், சடாயுவு 54
அரக்கர்வேதமும் வேதியாருளும் வெஃகலர், சடாயுவு-51
அரக்கரிற்சிலர்அமரர் கூட்டத்தராகி, தங்களதோள்களை ஒரு பக்கத்துப் பேயும் மற்றொரு பக்கத்து நாயுங் கொள்ள நகையுறுதல், கான்-122
அரக்கரிற்சிலர் உம்பரெய்தி யிருவினை நீங்கியவராகி இராமன் தனிமைக்கு வருந்துதல், கான் -123
அரக்கரின்றிஎங்கும் அமரரைக் காணுமை, அகத்-14 இல்-4
அரக்கரை மானுயர்மணத்தல் பொருத்தமன்று, சூர்பப-51
அரக்கனுள்ளம் × வெயிலுடை நாளிலுற்ற வெண்ணெய், மாரீச-85
அரக்குருக்கன்ன கண்ணன், சடாயுவு 108
அரங்கு, விராத-64
அரசு-ராச்சியம், சடாயுகா-38
அரண்டருகுதல் - காவல்செய்தல், அயோமு-36
அரம்பை, விராத-64: அருணன் மனைவி, சடாயுகா-29

அரவக்கோளிரண்டு சுடரையும் தொடர்தல் × விராதன் இராம லட்சுமணர்களை (ப்பிடிக்க)த் தொடர்தல், விராத-43
அரவம்-பாம்பு, அயோமு-48
அரவிந்தமலர், சூர்ப்ப-59
அரவிந்தராகம், மாரீச 96
அரவுசூடுமுகலோன், அகத்-40
அரற்றுகையில் குலத்தினோர் பெயரெலாங் கூறுதல், சூர்ப்ப-100
அரற்றுஞ்சூர்ப்பணகை × அத்தனை யாற்றழுங்கும்பேரி, கான்-2
அரற்றுதல்-புலம்புதல், சடாயுகா-20: ஆரவாரித்தல், சூர்ப்ப-47
அரனையும் வெற்றிகொண்ட காமனை, மாரீச-83
அராச் சூரியனை விழுங்குதல், சடாயுவு-196
அராவணை, விராத-31
அரிசியும்மலரும் மங்கலமாச்சிந்துதல், மாரீச-21
அரிமா, விராத-6
அரியேறு × இராமன், சரப-23
அருக்கன், சடாயுகா-2: × சுதீக்கண முனிவன்: அகத்-28
அருக்கனு மஞ்சுமஞ் சோதியபடை, கான்-36
அருட்டை, சடாயுகா-29
அருடிரண்டவரக்கன், கான்-28
அருடீர்ந்தநெஞ்சிற்கரிது, மாரீச-139
அருணன், சடாயுகா-8
அருணன்மனைவி அரம்பை, சடாயுகா-29
அருணோக்கம், விராத-50
அருத்தியள் - ஆசையுள்ளவள், வேண்டுபவளெனினுமாம்: சூர்ப்ப-51
அருந்ததிகற்பு, சூர்ப்ப-50, 65
அருப்பம் - அரண், பாதுகாவல், அருமை, அல்பம், சடாயுவு-17
அருவித்திரள் × தேன்; அகத்-35
அருவிப் புயற்கலங்கநீர் தெளித்தலும் அயர்வுதீர்தல், சடாயுவு-181
அருள்-தயை, விருப்பம், அகத்-54
அருள் தருந்திறத்தறன், கான்-88
அருள்வாவழுதல், சரப-33
அரைகடையிட்டமுக்கோடி, சடாயுவு-30
அல்-இருள், சடாயுகா-8: மாரீச-130
அல்லல்-துன்பம், அகத்-10
அல்லாண்டான் × தோல்வியடைந்த அரசன், மாரீச-118
அல்லித்தாமரை, சடாயுகா-41
அல்லிபுல்லுமலரன்னம் × சீதை: விராத-20
அலக்கண்-துன்பம், சடாயுவு-66, 155: கான்-59
அலகு-அளவு, சடாயுகா-14
அலகை × வரை, கான் 154
அலங்கல் - (வெற்றி)மாலை, கான்-51
அலங்காரம், சடாயுகா-22
அலங்குதல் - பொருந்துதல், சடாயுகா. 2: அசைந்து பெருகுதல், சூர்ப்ப-3: அசைந்துசெல்லுதல், அயோமு - 100: அசைந்து மொய்த்தல், மாரீச-3
அலச-வருந்த, சூர்ப்ப-18: துவள, சூர்ப்ப-66
அலம்பு-வருத்தம், கவந்த-1
அலம்புதல்-ஒலித்தல், விராத-16
அலமாத்தல்-மனங்கலங்கிச் சுழலுதல், விராத-39
அலைத்தல்-அலைவீசுதல், வருத்துதல், சூர்ப்ப-75
அலைமாறும் ஆசை, மாரீச-214
அவசம், சரப-26
அவஞ் செய்தல்-வீண் படுதல்: சூர்ப்ப-18
அவதி-முடிவானஎல்லை, சூர்ப்ப-36: மாரீச-231, சடாயுவு-207
அவம்-வீண், அகத்-31
அவர்க்கேயந்தாம் நன்மையவர்க்கிலை யுனக்கே, மாரீச-75
அவனி-பூமி, சூர்ப்ப-19
அவுணர், சரப-29
அழகன், சரப-35
அழகிற்கவதியுண்டோ, சூர்ப்ப-36

ஆசை-திக்கு, விராத-28, ('ஆசை பத்திற்கும்'), சடாயுவு-106
ஆசை சுமந்த நெடுங்கிரி யன்னார், அயோமு-33
ஆசைகளத்தாற்றுதல்-திக்கினெல்லையிற்கேட்கும்படி கத்துதல், மாரீச-249
ஆசைமருந்து, சூர்ப்ப-85
ஆசைமூக்கினோடு முடிதல், கரன்-191
ஆசையால் நொந்தழுங்குதல் மாரீச-92
ஆடகக்கோயில், மாரீச-88
ஆடகத்தகும்பு-பொற் கலசம், கரன்-53
ஆடகம்-பொன், கரன்-119
ஆடல்-லீலை, மாரீச-121, கரன் 152
ஆடவர்-வீரர், விராத-10
ஆடவர்க்கரசன் - புருஷோத்தமன், சடாயுவு-216, சூர்ப்ப-73
ஆடையால் மூக்கையும் வாயையுஞ் சுற்றிமூடுதல், மாரீச-17
ஆண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ, கவந்த-44 [25
ஆணுதன்-புருஷோத்தமன்: சரப-
ஆணிக்கமைபொன், மாரீச-158
ஆணிப்பசும்பொனனையாள், சடாயுவு-157
ஆணிப்பொன், மாரீச-96
ஆணியாயபழி, அயோமு-21
ஆத்த-கட்டப்பட்ட, கரன்-17
ஆதரித்து-விரும்பி, அகத்-34
ஆதரிப்பான்-விரும்புவான் - கரன்-136
ஆதனேன், விராத-71
ஆதிநாதன், விராத-1
ஆதிநான்முகன், விராத-32
ஆதியுறபொருளுக் கப்பாலுண்டாயினு நீ, கவந்த-45
ஆம்தேயினி யமைவது, சடாயுவு-164
ஆமிடம் நுகரத்தக்கபொருள், கவந்த-24

ஆமையினிருக்கை - கூர்மாசனம், சடாயுவு 23
ஆய்மணி-ஆராய்ந்தெடுத்த இரத்தினம், மாரீச-6
ஆய்மை-ஆராய்ச்சி, சடாயுகா-5
ஆய்வருதல் மேன்மேல் மிக்கு வளர்தல், அகத்-5
ஆய்வு-விவேகம், சூர்ப்ப-41
ஆயிடை-அப்போது, சரப-37
ஆயிரங்கண்ணவன், சடாயுவு-116
ஆயு-வாழ்நாள், சடாயுவு-30
ஆர்-அரம், மாரீச-31
ஆர்கலி × சேனை, கரன்-25
ஆர்த்தல்-ஆரவாரித்தல், சூர்ப்ப-103
ஆர்ப்பு-ஆரவாரம், கரன்-11
ஆர்வம்-காதல், சூர்ப்ப 86
ஆரணமறையோன் - விப்ரவஸ், சூர்ப்ப-50
ஆரம்நவமணிபதித்துள்ளது × திகிரி நவக்கிரகங்களை யாளுதலுடையது, சடாயுகா-7
ஆரியக்கூத்து, மாரீச-22
ஆரியமுனிவர், சூர்ப்ப 43
ஆரியர், அயோமு-35
ஆருயிர்விருப்பனேன், சடாயுவு-17
ஆலகாலந்திரண்டன்ன வாக்கையர், கரன்-11
ஆலத்தினும் வெய்யன், மாரீச-132
ஆலம்-ஆலமரம், கவந்த-43, விஷமென்றபொருளில் ஹாலாஹலமென்ற வடசொல்லின்சிதைவு: ஆலமென இங்ஙனமே ஒருவடசொல்லுண்டென்றலும் ஒன்று: விராத-27 [42
ஆலமும்வெளிதெனுநிறம், கரன்-
ஆலி-நீர்த்துளி, [முத்துக்கன போன் முகத்துஆலி வீழ) சடாயுவு-106
ஆவது-முடிவு, கரன்-76
ஆவற்போன்பு, சூர்ப்ப-127
ஆவா, சடாயுவு-155
ஆவியோயினுமாசை யோயாமை, சூர்ப்ப-87

இராமன்தோள் நீலமலையை நிகர்க்கும்: கன்மலையும் பொன் மலையும் அத்தோள்கட்கு உவமமாகா, சூர்ப்ப-15 × மந்தாரம்.சொரிந்த அம்பு X மழை, கரன்-181

இராமன் பிறந்ததன்பயன் அரக்கர் வலிதொலைத்தல், அகத்-19

இராமன் மானைத்தொடர்ந்தவிசை வருணனை, மாரீச-242

இராமன் முகம் தாமரைப்பூவையொவ்வா: மதி கதிர்தேய்தலும் மறுவுடையதுமாதலால் அதுவும் ஒவ்வா, சூர்ப் - 17

இராமன்முன் (பொரத்) தூடணன் வருதல் × கூற்றெதிராவி செல்லுதல், கரன்-157

இராமன்முனியிற் பஞ்சபூதங்களும் பேரும், சடாயுவு-7

இராமன்மேல் அரக்கர் (பொருமாறு) திரண்டு வருதல் × சூரியன்மேல் இருள் திரண்டு வருதல், கரன்-28

இராமன் வந்தது அமரர்யாவரொடும் எவ்வுலகும் வந்ததாகும், விராத-4

இராமன் வருகையால் அத்திரி முனிவன் தமரெலாம் வரவுகந்தனைய தன்மையன், விராத-4

இராமன் வனம்புகுந்ததனால் வேந்தன் வீதல் முதலியன நிகழினும் முனிவர்க்குதவ வழியுள்ளதனால் புண்ணியமே, அகத்-18

இராமன் வில்லில் அம்புதொடுக்க வளைக்கையி லிறுதல், கரன்-175

இராமன் வில்லொன்றிற் கடிகைமூன்றில் கரன் முதல்வீரர்விண்ணிலேறினர், மாரீச-64

இராமன் துங்கவரைப் புயத்தினிடைக்கிடந்த பேராசை, மாரீச-1

இராமனது கோபத்தால் இலக்குமணனும் அஞ்சுதல், சடாயுவு-207

இராமனது வடிவம் × குவளைக்கானத் திடையிடைமலர்ந்து நின்ற கமலம், சூர்ப்ப-6

இராமனழகு அணிகலனால் மேற்படாது × மணிக்காசு வேறொரு மணியால்விளங்காது, சூர்ப்-24

இராமனுதியர் தண்டக வனத்து முனிவராச்சிரமங்களிற் பத்து வருடங்கள்கழித்தமை, அகத்-26

இராமனால் இமைப்பிலர் உய்ந்தனர், தவத்தோர் உயிர்த்தனர், அந்தணரறத்தினெறி நின்றனர், அகத்-44

இராமனுக்கு எவ்வம் வந்தமைப்பின் மேல் கீழண்டங்கள் உடைந்துபோம், சடாயுவு-8

இராமனுக்குப் புவனமூன்றுமேயன்றி முப்பதுகோடி யென்றபோதும் எதிரல, அகத்-24

இராமனுக்குரிய சீதையை இராவணன் விரும்புதல் × எரியிற் புனிதரீயு மவியை நாய்வேட்டல், சடாயுவு-69

இராமனுக்கேற்ற மோர் திண்மையாரிலர், சடாயுவு-5

இராமனுஞ் சீதையும் கமலத்துக்கடவுள் உலக மூன்றிலிருதிறத்தார்க்குஞ் செய்தவரம்பு இவரிருவர், சூர்ப்ப-61

இராமனும் அகத்தியனும்பரஸ்பரம் கூறிய முகமன், அகத்-49-51

இராமனைக் கண்ட (நல்லுணர்வு பெற்ற) கவந்தன் × தாயைக் கண்ணுற்ற கன்று, கவந்த-51

இராமனைச்சூழ்ந்த சேனைத் தலைவர் (மாண்டு) பிரிதல் × கதிர் தழுவிய ஊர் பிரிதல், கரன்-99

இராமனைச் சேனைத்தலைவர்வளைத்தல் × சிவபெருமானை முப்புரர் வளைத்தல், கரன்-97

இராமனைச் சேனையோடும் வளைத்த கரன் × இந்துவை வளைக்கும்எழிலிக்குலம், கரன் -163

இராமனைப்பிரிந்த சீதை × துணைபிரிந்த அன்றிற் பெடை, சடாயுவு-131

இறந்தார்பிறந்தாரெனவுயிர்பெற்றமன்னன், மாரீச-155
இறந்துபாடு, சடாயுவு-18
இறந்துபோகினும் புல்லர் வலி தொலையாவிடின்நன்று, அகத்-19
இறவுபார்க்கின்ற விராவணன், (இறவு-நீங்கிச்செல்லுதல்) சடாயுவு-20
இறுத்தல்-முடித்தல், சடாயுகா-43
இறுதல் ஒடிபடுதல், கரன்-44
இறுதி-மரணம், சடாயுகா-10
இறுதிசெய்பகல் - உலகமழியுங் காலம், சரப-41
இறுதியிற்புவனிதியவெழுதீ, கரன்-171
இறை-சிறிது, சூர்ப்ப-37: தலைவன், கரன்-16
இறைஞ்சினர், விராத-3
இன்சுவை-சிருங்காரரசம், மாரீச-42
இன்பதுன்பங்களுள்ளத்தோடியைந்தவை, மாரீச - 100
இன்னபோதிவ்வழி, நோக்குமென்பதை யுன்னலர் காதலஞ் சுமந்த வுச்சியர் விஞ்சையர், மாரீச-8
இன்னல்-துன்பம், அகத்-1
இன்னல்காத்து-துன்பம்வரவொட்டாமல்தடுத்து, அகத்-25
இன்னலிருக்கை - தழைக்குடிசை, மாரீச - 171
இன்னறிருமீகை, விராத-68
இனியர், சூர்ப்ப-55
இனியவர், அகத்-1
ஈசற்குக்கண்மூன்று, சூர்ப்ப-12
ஈசன்-பரமசிவன், அகத்-40 [108
ஈடழிவு-பெருமைக்கேடு, சடாயுவு-
ஈண்டு, சூர்ப்ப-43, இவ்விடத்து, மாரீச-185
ஈண்டுதல்-வளர்தல், மாரீச-185
ஈதுயார், மாரீச-31
ஈமம், சடாயுவு-222
ஈர்தல் - பிளத்தல், சூர்ப்ப - 113: வெட்டுதல், மாரீச-139
ஈரம்-குளிர்ச்சி, மாரீச-105, சூர்ப்ப-80
ஈரல் × கமலம், கரன்-94
ஈரேழுலகுமாளுஞ் செல்வம், சடாயுவு-68
ஈறுறுநாண்முற்றியஞாயிறுபோலுமுகம், அயோமு-44 [9
உகுதல்-இறந்துவிழுதல், விராத-
உச்சவீரன், கரன்-139
உட்குதல்-அஞ்சுதல், கரன்-57
உடம்பில் இரத்தம்பொழிய விண்ணில் தோன்றுஞ் சடாயு × உதிரவாரிகடலென்று நுகர்ந்தஞான்று விண்ணிற் பொலிகின்ற மேகம், சடாயுவு-112
உடலமு மிகை, சடாயுவு-51
உடலிரண்டுக்குயிரொன்றானன், சடாயுகா-32
உடற்படும்-சம்மதிப்பான், அயோமு-58
உடற்பொறையாம் பிழை, சடாயுகா-32
உடற்றுதல் - (பிறவுயிரை) வருத்துதல், கரன்-49
உடன்று - கோபங்கொண்டு, சூர்ப்ப-121
உடுத்தநீராடையள் - பூமிதேவி, சூர்ப்ப - 19
உடுபதி × குடை, சடாயுகா - 21, மாரீச - 114
உடைதல் - உறுதிநிலை கெடுதல், கரன்-95
உடைமை-சொத்து, சடாயுகா-14
உடையிடம்-உடைமையாகக் கருதுகிற இடம், சரப-33
உடைவாள் - கரன்-62
உண்டாட்டம்-விளையாட்டு, சூர்ப்
உண்டாட, மாரீச-231 [ப-51
உண்டாடுதல் - இன்பமனுபவித்தல், மாரீச-79
உண்மையான் - இலக்குமணன், சடாயுவு-5
உணங்குதல்-பகைத்தல், சூர்ப்ப-58, வாடுதல், சடாயுமு-73
உணர்வு-எண்ணம்: மாரீச-125

உணர்வுக்குணர்வு, சரப-27
உணர்வுசெல்லாவறிவினை வினை யினூக்கும் பிறவி, அயோமு-8
உணர்வுசோர்வு, விராத 34
உத்தமன், சரப-29 [129
உதயகாலவருணனை, மாரீ - 117-
உதயம்-ஒருமலை, அயோமு-30
உதவுதல்-தருதல், சடாயுவு 158 துணைசெய்தல், சடாயுகா-34
உதவுந்துணை, விராத-40
உதிரப்பொய்கைக்கு, ஈரல் கமலம், கரி முதலை, இரதம் புளினம், குடர் பாசடை, கரன்-94
உதிரம் × செச்சை, விராத 9, × அருவிமாலை, கரன்-79
உதிரமாரி, சூர்ப்ப-97
உதிரயாறு உவரியைப் புதுக்கின, கரன்-120
உந்தி-விட்டு, விராத-22
உந்தியினுலகளித்தான், சூர்ப்ப-12
உந்துதல்-தள்ளுதல், விராத-12
உந்தை, சடாயுகா-40
உப்பு - அழகு (உப்புடையிந்து) அயோமு - 100
உம்பர்க்கரசு, சரப - 22
உம்பருக்கரசன் - தேவேந்திரன், விராத-13
உய்விடம் - துன்பம் நேருங்காலம், சடாயுகா-34
உயங்கும்-மயங்கும், சடாயுவு-130
உயர்குலத்துத் தோன்றினோர் ஒப் பழியச்செய்கில்லார், சூர்ப்ப-134
உயிர்-உயிர்ப்பு, சூர்ப்ப-79
உயிர்க்குறுதிநோக்கின் கணைவிர வாமுன் ஓடியொளித்தி, சடா யுவு-70
உயிர்காணுதல் - மரணதசையி னின்று நீங்குதல், சூர்ப்ப-50
உயிர்கான்று - பெருமூச்சுவிட்டு, சூர்ப்ப-79
உயிர்கிடக்க உடம்பைவிசும்பேற்றி னர் உணர்விறந்த கூற்றனார், சடாயுகா-23
உயிர்த்தல்-உயிர்பெறுதல், அகத்-43, படைத்தல், கவந்த-55
உயிர்த்துணைவர், மாரீச-121
உயிர்ப்பினெருப்பு, அயோமு-43
உயிர்ப்பு × திரை: அயோமு-10
உயிர்ப்புநெய்யுறுநெருப்பின் வீங்கு தல், அயோமு-3
உயிர்விம்முதல் - பெருமூச்செறி தல், மாரீச-48
உயிருளைதல்-உயிர்வருந்துதல், சூர் ப்ப-73
உரகர் யமனைக்கண்ட நரகர்போல் நடுங்குதல், மாரீச-11
உரங்களானடர்த்தார், கரன்-20
உரம்-வலிமை, சூர்ப்ப-14
உரவோன், கரன் - 20
உரற்றுதல்-ஒலித்தல், அயோமு-79
உரற-ஒலிக்க, விராத-24
உரறுதல் - பேரொலிசெய்தல், கரன்-39
உரி-தோல், விராத-15
உரிதல்-கழற்றுதல், சரப-36
உருக்கள்-உடல்கள், கரன்-126
உருக்கியசுவணம் × உதயத்துச்சி சேர் சூரியன், சடாயுகா-2
உருக்கியசெம்பினுற்றநீர் × உள் ளே கொதித்துத்தானேயடங் கிய மாரீசன், மாரீச-201
உருக்கு-உயர்ந்த இரும்பு, மாரீச-176
உருகியது-கரைந்தது, சூர்ப்ப-95
உருகெழுசீற்றம், (உரு-தாபம்) சடாயுவு-65
உருட்டல்-புரட்டுதல், மாரீச-
உருடிரண்டெழுந்தேரொலி, கரன் -28
உருத்தெரிதல் - மிக்கெரிதல், சூர்ப்ப-112
உருப்பசி வாலாறு, மாரீச-22
உரும் × குரல், விராத-18
உருமெனவுரறுதல், கரன்-39
உருவநாறும் வான்சுடர் - வடி வத்தினின்று தோன்றுகின்ற பளபளப்பு, சூர்ப்ப-58

உருவுதல்-உறையினின்று வெளியெடுத்தல், விராத-35
உருவெளித்தோற்றத்துச் சீதையை இராவணன் தன்னோயைப் பொருது சீதைவந்தாளெனல், மாரீச-146
உருவெளித்தோற்றம் தொன்னெறித்து, மாரீச-151
உருளுடைநேமி, அகத்-16
உரைகடந்தான், சூர்ப்ப-123
உலகம் துறக்கம்போல் தோன்றுதல், மாரீச-102
உலகமுழுதுள்ள வீரர்தலையையறுத்தாலும் தங்கையுறுப்பிழந்ததனுல் இழந்த மானம் மீண்டு பெறமுடியாது, மாரீச-59
உலகமோதும் வழக்கு, அகத்-41
உலகியாவையு மெவ்வுயிருந்தந்தான், சரப-15
உலகின்வான் கிடந்ததுபோல்பவன், சடாயுவு-175
உலகு நாழி, அண்டம் அளவு கருவி: நான்முகன் அளப்பவன், சரப-29
உலகுமூன்றையு முடைமையாக் குறமிலக்கணம், சடாயுகா-14
உலகெலாமுலையச்சிரித்தல், கான்
உலப்பு-அழிவு, கான்-46 [74
உலவை-உலர்ந்தமரம், அகத்-4
உலை, உலைக்களம், கான்-102
உலைதல்-சஞ்சரித்தல், மாரீச 136
உலைந்துசாய்தல் - நடுங்கித்தளர்தல், கான்-112
உலையுற்ற வேலை வாளை வென்ற கண்ணுர், மாரீச 72
உலையுறுதீயெனவுயிர்த்தல், சூர்ப்ப-99
உலைவு-நீங்கு, மாரீச-2
உலைவுறுதல் - துன்பமடைதல், அகத்-39 [அகத்-36
உவகைவேலையேமுலகெய்தல்,
உவணவண்ணன் அறஞ்சிவணதனை சிறையினன், விராத-38 (உவணவண்ணன்-கருடன்)
உவமைநீங்கியதோன்றல், அகத்-31
உழக்குதல் - வருந்திப்பழகுதல், அகத்-41
உழலுதல்-அலைதல், அயோமு-35
உயிர்கொண்டு வாழ்தல், மாரீச-200 முயன்றுசெய்தல்,மாரீச-2
உழுவை-புலி, விராத-10
உழுவை, அரி × சேனைத்தலைவர் (சிற்றத்திலுவமை:) கான்-49
உழை-இடம், சூர்ப்ப-36
உழைத்தல்-மிகவருந்துதல்,கான்-95: வருந்துந்தன்மையைப் பெற்றிருத்தல், மாரீச-250
உழையர்-அருகிலுள்ள ஏவலாளர், கான்-23
உழையள்-அருகிலிருப்பவள், சூர்ப்ப-5
உள்குதல்-சிந்தித்தல், சடாயுவு-130
உள்ளத்தின்பெற்றி, சூர்ப்ப-47
உள்ளத்துறைகுவான், சடாயுகா-45
உள்ளுறுதல்- மனத்திற்பொருந்துதல், சடாயுவு-148
உளங்கோடலிழைத்தாள், சூர்ப்ப-140
உளமிழைத்தல்-மனம் ஆராய்தல், மாரீச-225
உளர்தல்-ஒலித்தல், அயோமு-6
உளுக்குதல் - உடல்நெளித்தல், அசைந்துசெல்லுதல், கான்-87: சிதைதல், விராத-25
உளை-பிடரிமயிர், கான்-157
உளைந்த-வருந்திவிழுந்தன, கான்-76 [-67
உளைவன-துன்பந்தருவன, சூர்ப்ப
உளைவு-வருத்தம், கவந்த-8: சடாயுவு-120
உற்பாதம்-பகலில் விண்ணினின்று நட்சத்திரம்விழுதல் முதலியன, விராத-28
உற்ற-உவமவுருபு, விராத-13
உறக்கமுற்றுனெனவுணர்வு நீங்குதல், சடாயுகா-19

உறவு, சூர்ப்ப-38
உறுவல்-துன்பம், சடாயுவு-183
உறுவதுதெரிவோர் - எதிர்கால வரலாறுணர்ந்தவர், சரப-43
உறையுள், சரப-34
உன்னருள் சுமந்ததனால் அனைத் துலகும்வென்றனன், அகத்-50
உன்னருளெய்திய என்னின் தவம் முற்றினர்யாருளர், அகத்-30
உன்னி - நினைத்து, சடாயுகா-10, சூர்ப்ப-23
உன்னுதல் - எண்ணிக் கணக்கிடுதல், கரன்-38: அறிதல், மாரீச-8
ஊக்கி வலிமைகொண்டு, சூர்ப்ப-94
ஊங்கில் - ஊன்றி நோக்கினால், சூர்ப்ப-53
ஊசல்-தடுமாறுகின்ற கருத்து,சூர்ப்ப-47
ஊசிவேர், சடாயுவு-42
ஊடல், விராத-64
ஊதை-காற்று, சடாயுவு-88
ஊதை யுள்ளமுருவச்செல்லுங்கதி, மாரீச-241
ஊர்-பரிவேஷம், சரப-9
ஊர்க்குருவி, சடாயுகா-27
ஊருவிற்றோன்றிய வுருப்பசி, மாரீச-22
ஊழ்வினையீது, மாரீச-177
ஊழி-வெகுகாலம், விராத-65
ஊழிநெருப்பு X புறத்து விரி கூழையளான அயோமுகி, அயோமு-45
ஊழிப்பேர்ச்சியுள் கருங்கடல் வருவது, அயோமு 82
ஊழிமுதல்வன், விராத-41
ஊழியாய், விராத-71
ஊழியெறிகால் ஓங்கல் X கணைகளால் நூறப்பெற்று அற்ற ஆழி புரவியாள், கரன்-105
ஊழிவெங்கனலுற்றவள் × காமத் தீயிலகப்பட்ட •சூர்ப்பணகை, சூர்ப்ப-85
ஊற்றம்-ஊன்றுகோல், ஆதாரம்; மாரீச-66: முயற்சி, சடாயுவு-219: ஏற்றவலிமை, சூர்ப்ப-27
ஊற்றினசேனை- வலிமைபொருந்திய சேனை, கரன்-38
ஊறு-ஸ்பரிசம், மாரீச-161: அயோமு-97
ஊன்-மாமிசம், அகத்-45
ஊன்விடுதல்-உடலை விட்டிடுதல், சரப-39
ஊன்றல்-உள்ளிருத்தல், அயோமு-7
ஊன்றினகண்ணைப் பறிக்கமுடியாமை, சூர்ப்ப-27
ஊன்றினார்-நிலைநின்றவர், கா-154
ஊனுடையிவன், கரன்-68
எஃகம் அற்றுவிழுதல் X பகலே நெடு மீன் விண்ணிடைநின்று விழுதல், விராத-28
எங்கடாபோவது, சடாயுவு-87
எஞ்சித்தீதல்-ஒடுங்கியழிதல், சடாயுவு-124
எஞ்சித்தீர்தல் - குறைந்தழிதல், விராத-23
எஞ்சுதல் - குறைதல், சூர்ப்ப-76
எண-மனம், விராத-44
எண்கையரெழுகையர், கரன்-46
எண்டகுகுணம் - எண்ணத் தக்க குணம், அஷ்டகுணமுமாம், அகத்-51
எண்டிசையுஞ்சுவர், கவந்த - 46
எண்ணருளுதல் - திருவுள்ளத்திலருள் புரிதல், சூர்ப்ப-35
எண்ணிச்செய்தலமைதி, மாரீச-236
எண்பிறங்குதல் மனத்தில்நீங்காது விளங்குதல், சூர்ப்ப-60
எண்மை-எளிமை, சடாயுவு-5
எண்மையன் - எளியதன்மையை மேற்கொண்டவன்,சடாயுவு-29
எதிர்கிடைத்தல்-எதிரேகிட்டுதல், கரன்-110
எதிர்கொண்டு, சரப-14
எதிர்தல்-எதிர்செல்லல்,கரன்-174
எதிர்விலங்குதல் - குறுக்காகநிற்றல், விராத-19

எதிர்விழித்தல்-எதிரே காணப்படுதல், மாரீச-226
எதிருற்ற-எதிர்த்துச்செய்த, விராத-9
எந்திரத்தேர், சடாயுவு-92
மந்திரம்-சக்கரம், பொறியுமாம்: கான்-181
எம்பிநீயுளேயாவதேவலி, அயோமு-88
எம்மடிமைத்தொழினன்று, கரன்-12
எம்மான், மாரீச-48
எம்மையோரனைவரும்-எவ்வுலகத்தவரும், சடாயுவு-48
எமரின்யார்தவமுயன்றனர், விரா-4
எய்வு-மெலிவு, விராத-35
எயிற்றினேந்துதல், விராத-58
எயிறலேத்தல்-பற்களைக்கடித்தல், சடாயுவு-2
எயிறிற்றபின் அராவழன்றதனைய வாற்றலான், கான்-184
எயிறுடையரக்கி, சூர்ப்ப-29
எரி × ஓதி, சூர்ப்ப-93
எரிக்கடவுள், மாரீச-18
எரிதல்-விளங்குதல்,விராத-13
எரிபுகுதல், சாப-38
எரிமுகத்தினீந்தநெய், மாரீச-117
எரியோன்-சிவபெருமான்,சாப-31
எருவை, சடாயுகா-3
எருவைக்கிறைXமால்வரை, சடாயுவு-121
எருவையின்றலைவன், சடாயுவு-19
எல்-சூரியன், சாப-13: சூர்ப்ப-22 சூரியனொளி, கான்-108: ஒளி, சடாயுவு-115
எல்லி-இருள்: ('எல்லியங்குவளை') சூர்ப்ப-6
எல்லொன்றுகமலம் × கண்,மாரீச-64
எவ்வம்-துன்பம், சடாயுவு-8
எழில்-கிளர்ச்சி, கான்-43
எழிலி-மேகம், கான்-163
எழு × கை, கரன்-19
எழுகுரல், மாரீச-36
எழுதருமேனி, சூர்ப்ப-48
எழுதுபாவையனையாள், விராத-41
எற்ற-மோத, விராத-31
எறித்தல்-ஒளிவீசல், சடாயுவு-203
எறிதல்-பகைபழித்தல், கான்-52
எறுழ்வலி, சடாயுகா-10
என்குரலாலிசைத்தழைத்தது, மாரீச-250
என்குறிப்பின்வழிநிற்றி, மாரீச-200
என்றுமில்லதோராழுகுரல், மாரீச-36
என்றனும்-எவ்வளவும், சிறிதும்: சாப-15
என்னில்லிடைவந் தருந்தவ முடித்தனை, அகத்-49
என்னுயிர்உமது, சூர்ப்ப-131
என்னே - அம்மே என்பது போல் இரங்கற்பொருள், மாரீச-183
என்னைக்கரந்திலர்;சடாயுகா-12
என்னைமகனைப் பெற்றதனற்சடாயுவிறந்தான், சடாயுவு-217
என்னையே - வியப்புப்பொருளது, மாரீச-30
எனதாணைவழியேவல்செய், மாரீச-199
எனின்-ஆதலால், மாரீச-251
ஏக்கம்-துன்பம், சடாயுகா-19
ஏகியவின்னலர், அகத்-22
ஏகினாய்-மங்கலவழக்கு, சடாயுகா-21 ('நடந்தனை' சடாயுகா-22 என்பதும் அது)
ஏங்கி-இரங்கி, சூர்ப்ப-3
ஏண்-நிலைமை, சூர்ப்ப-46
ஏத்தவும் புரிய வீகலான் பொருள் காத்தவன்புகழ் X தேயுங்கற்பு: சூர்ப்ப-26
ஏத்து-தோத்திரம், அகத்-11
ஏத்துதல்-துதித்தல், சாப-32
ஏத்துவாய்மையிராமன், கான்-17
ஏதமூள்வது-,மாரீச-252
ஏதி-படைக்கலம், விராத - 22, கான்-36
ஏது-காரணம்; அயோமு-18
ஏந்தல்-பெருமை, அகத்-18: மலை X தோள், சூர்ப்ப-54

ஏந்துதல்-தாங்குதல், சடாயுகா-37
ஏமுற்று-மகிழ்ந்து,சடாயுவு-208
ஏமுற-களிப்படைய, சூர்ப்ப-22
ஏமுறுதல்-களிப்படைதல், அகத்-34
ஏமுறுமுயிர், (ஏம் = ஏமம்:இன்பம்) சூர்ப்ப-45
ஏயெனுமளவு, மாரீச-168
ஏவமென் பழிதானென்னே, சடாயுவு-86
ஏவரும், சரப-43
ஏழுமெட்டுமானமுகத்தர்,கரன்-46
ஏழுலகினுக்குமொரு நாயகன், கரன்-173
ஏழுலகு, அகத்-53
ஏழேழ்நிலைவகுத்த அண்டப் பெருங் கோயிற்கும் அழ செய்யும் மண்டலங்கண் மூன்றின்மேற் புண்டரிக மொட்டு, கவந்த-46
ஏழை-பெண், சீதை: சரப-34
ஏழைமைதுடைத்தல் -அறியாமையைப்போக்குதல், சூர்ப்ப-35
ஏழையர்-அற்பர், சடாயுவு-6
ஏற்ற - உணர்த்த, மாரீச-128
ஏற்றமுன் - எதிர்வந்தமுன், கண்ணிற் பட்டவுடனே, மாரீச-151
ஏற்றியநுதலன் - நெறித்தநெற்றியன், கரன்-132 [24
ஏறியசெவ்வி-மிக்க அழகு, சூர்ப்-
ஏறுசேவகன், விராத-32
ஏறுதல்-மேம்பாடடைதல், கரன் -40: மிக்குவருதல், கரன்-101
ஏறுநெறி-சன்மார்க்கம், மாரீச-55
ஏன்ற-எதிர்த்த, அகத்-24
ஏன்றாய்-எதிர்த்தவனானீ, சடாயுவு-185
ஏனைகதிலோத்தமை, சடாயுவு-44
ஏனம்-பன்றி, கரன்-32 [60
ஏனமாய்மண்ணிடந்தான், விராத-
ஐது-அருமை, அயோமு-63
ஐந்திணைநெறி - ஐந்திணைகளினிலக்கணம், ஐவகை நிலங்களின் வழி, சூர்ப்ப-11

ஐம்பெரும் பாதகந் திரண்டுயிர் படைத்த பண்பினன் கவந்தன், கவந்த-16
ஐய-வியக்கத்தக்க, சூர்ப்ப-78
ஐயநுண்மருங்குல், மாரீச-232
ஐயன்வல்ல னென்னாருயிர் வல்லன், மாரீச-248
ஐயோபோனான், மாரீச-184
ஐராவதத்தின் மேலுள்ள இந்திரன் × வெள்ளிமலைமீதுள்ள அண்ணல், விராத-6
ஐராவதம் வெண்ணிற முள்ளது, சரப-6
ஒசிகொம்பு × சீதை, விராத-39
ஒதுங்குதல் - ஒடுங்குதல்,மாரீச-93: தோன்றுதல், அயோமு-30
ஒப்பிறையும் பெறலரியவொருவன், விராத-61
ஒப்பு - சமமென்றுகொண்டு தொழில் செய்வது, மாரீச-175
ஒருங்குறநோக்குதல் - ஒருமுகமாகப் பார்த்தல், சூர்ப்ப-2
ஒருங்கும் உணர்வோர - தத்துவஞானிகள், விராத-31
ஒருபகல்பழகினா ருயிரை யீவர், சடாயுவு-13
ஒருமை-ஒற்றுமை, கரன்-43
ஒருவருஞ்செல்வம், சூர்ப்ப-56
ஒருவற்கொருவன் - ஆண்மகன், மாரீச-197
ஒருவன் இருநூறு ஆளெனச் செருமுயல்வான், கரன்-134
ஒருவுதல்-நீக்குதல், சரப-48
ஒரேந்திழைதன்றுயர்க்குந் தகவிலேன், அயோமு-16
ஒல் - விரைவு, சூர்ப்ப - 93: ஒலி, கரன்-30
ஒல்லை-விரைவு, சூர்ப்ப-27
ஒலியேறு-பேரொலி, விராத-24
ஒழுகுதல் - சிந்துதல், பொருந்துதல், சூர்ப்ப-32
ஒளிர்-விளக்கம், சூர்ப்ப-31
ஒளிர்தல்-விளங்குதல், விராத-9
ஒளிறுதல்-விளங்குதல், கரன்-155
ஒளிறுவேல், கரன்-21

ஒற்றுதல்-சூர்ப்ப-99
ஒறுத்தல்-வருத்துதல், விராத-71
ஓங்கல்-மலை, கான்-105: யானை, இருமடியாகுபெயர், கான் - 23: குவியல், மாரீச-7
ஓங்குயர்வரை, சடாயுகா-9
ஓச்சுதல் - உயரவெடுத்து வீசுதல், கான்-183
ஓசைபிறத்தல், கான்-24
ஓசையால் அத்திசைகுறித்துப் பார்த்தல், சூர்ப்ப-34
ஓட்டந்தாள், சூர்ப்ப-121
ஓட்டாய் - (வார்த்தையை) ஓடவிடாதே, அல்லது அறிவில்லாதவனே: வலியற்றவனே: சடாயுவு-103
ஓடியஅரக்கரைத் தூடணன் ஏசித்தைரியங்கூறுதல், கான் - 142 -147
ஓடை, விராத-13
ஓதாதுணர்வார் - குறிப்பினாலறிபவர், சடாயுவு-80
ஓதி-பெண்மயிர்: மாரீச-70
ஓதிமம் சீதையின் நடையை யொவ்வாது, சூர்ப்ப-5
ஓதை-ஓசை, சாப-21
ஓந்தி, சடாயுகா-28
ஓம்புதல்-பாதுகாத்தல், அகத்-16
ஓமராமர், விராத-31
ஓய்வு-வலியழிவு, சூர்ப்ப - 107, இளைப்பாறுகை, கான்-58
ஓயாத-ஒழிவில்லாத, விராத-53
ஓலம்-ஆரவாரம், கவந்த-19
ஓவியம் × திகைப்படைந்த சூர்ப்பணகை, சூர்ப்ப-27
ஓவில்வாழ்த்தொலி × கடன்முழக்கு, கான்-161
ஓளி-வரிசை, சடாயுவு-64 [151
கங்கபத்திரம்-ஓர்வகையம்பு, கான்-
கங்கம்-கழுகு, கான்.170
கங்கு-இருள், விராத-14
கங்குலன்ன கான், கான்-190
கங்குற்றூரம், மாரீச-118
கங்கைமுதலிய கடவுட் கன்னியர், மாரீச-21
கச்சை, கான்-150
கசேந்திரமோட்சகதை, விராத-49
கஞ்சம்-தாமரை, சூர்ப்ப-31
கஞ்சுகி = கஞ்சுகம்; கவசம், சாப.10
கஞலுதல்-சொலித்தல், சடாயுவு- [222
கட்டம்-துன்பம், விராத-46
கட்டிய - பிடுங்கப்பெற்ற, கட்டப்பெற்ற, கான்-162
கட்டு-உறுதிநிலை, சாப-8
கட்டுரை, கான்-68 [122
கடம்-யானையின்கன்னம், மாரீச-
கடல் - தொகுதி (வாளிக்கடல்), சடாயுவு-185
கடலகத்துள்ளவன் திரைக்குப் பரிதற்பாலனல்லன் × பிறவிச் சிறைப்பட்டவர் நோயுறு துயரென நுடங்கல் நோன்மையன்று, அயோமு-87 [30
கடவுதல்-செலுத்துதல், விராத-
கடவுள் அறங்காக்கக் கறங்கெனத் திரிபவன், விராத-50 [-54
கடவுள் தீயாரினொளித்தல், விராத
கடவுள் பிறவிகடக்கும் புணை, விராத-52
கடவுள் பூதங்களிலுறைந்தாலும் அவற்றிற்கும் ஆதாரமாயிருத்தலால் அவைபொறுக்கும், விராத -48
கடவுளடியனவே மதம், விராத-54
கடவுளாகிய உலகின்றாய் எப்பொருளும் அறிவான், விராத-55
கடவுளின்பாதம் உலகெல்லாம் விரிந்திடின் அவனுருவம் எப்படியோ, விராத-48
கடவுளுக்கு இறப்பும் பிறப்பும் விளையாட்டு, விராத-51
கடவுளுக்குப் பகை நண்பில்லையாயினும் அடைந்தாரையளிப்பன், சாப-28
கடவுளுக்குப் பெருமாயை விளையாட்டு, விராத-54
கடவுளுக்கு முதலிடையோடீறில்லை, முன்னில்லை பின்னில்லை, சாப-28

கலாம்-கலகம், கோபம், சூர்ப்ப-141
கலிகாலம், விராத-14
கலிமா-குதிரை, சடாயுவு-175
கலுழன், சடாயுகா-10, சடாயுவு-89
கலை-கதிர், சூர்ப்ப-22: ஆடை, மாரீச-41
கலைதல்-நிலைகுலைதல், சூர்ப்ப-22
கவசம், சரப-26
கவந்தபந் தக்களிநடம், அகத்-20
கவந்தபந்தம், (பந்தம் - ப்ருந்தம்: கூட்டமென்று பொருளுள்ள வடசொல்), கரன்-87
கவந்தமாடுபவை X அரம்பையர் நாடகத் தொழிலினை நடித்துக் காட்டுவன, கரன் - 119
கவந்தன்கண்கள் X மேருமால் வரையிற் குயிற்றிய வெயிற் சுடரிரண்டு, கவந்த - 12
கவந்தன்கை X யுகாந்தகாலக்கடல், கவந்த-6: X மந்தரமலையைச்சுற்றிய வாசுகியாகிய கடைகயிறு, கவந்த - 13
கவந்தன் சாப வரலாறு, கவந்த-40
கவந்தன் தன்வரலாறு, கவந்த-53
கவந்தன் மூக்கு x கருமகன் துருத்தித் தூம்பு, கவந்த - 14
கவரியுங்குடையும் x நுரை, கரன்-120
கவன்றனன், சரப-25
கவி-செய்யுள், அகத்-41
கவிகை - குடை, கரன்-48
கவினுஞ்சிலை, சடாயுவு-69
கழல் - பாதம், விராத-42
கழல்அரக்காதியோர்மகுட நண்ணலால் தேயுந்தோறும் ஒளி மிகுதல், மாரீச-6
கழிந்துபோதல் - இறந்து படுதல், கரன்-9
கழு - சூலாயுதம், விராத-6
கழுகின்வேந்து, சடாயுகா-1
கழுது - பேய், கரன்-87
கழை, சடாயுகா-29
கள் - மது, மாரீச-98
கள்வுள்ளம் தம்பி உள்ளம்என்பன ஒருவழிகிடத்தல், மாரீச - 37
கள்வி, சூர்ப்ப-68
கள்ளமாயவாழ்வு, விராத-63
கள்ளமாயை, சடாயுவு-142
கள்ளவாசகம், சூர்ப்ப-69
களங்கோடல், சூர்ப்ப-140
களி - களிப்பு, கரன்-88
களிகள் x யானைகள், மாரீச-122
களித்த-செழிப்புற்ற,சடாயுவு-223
களித்தன - மகிழ்ந்து கூத்தாடின, கரன்-87
களிறு, விராத-10
களைகண்-பற்றுக்கோடு, ஆதரவு, சடாயுகா-34
கற்பகம் X கை, கரன்-17
கற்பகம் கொடைக்குணமுடையது, சடாயுகா-21
கற்பகமுயிர்த்தகாமவல்லி, சூர்ப்ப-33
கற்பகதருகண்ணியதருதற்கு ஒத்தது, சவரி-1
கற்பங்கள் பகல்போலக் கடிது செல்லக்கண்டுளான், சடாயுகா-8
கற்பம்-பிரமனுயுள், சரப-18
கற்பமைந்தார் தம்பெருமை தாம் கழறார், சூர்ப்ப-127
கற்பழியாமையென்கடமை, சடாயுவு-135
கற்பாறை, அகத்-2
கற்பினுள்பால் மோகம் படைத்தான், சடாயுவு-120
கற்பினுக்கணியினை யிராவணனோக்குதல், சடாயுவு-26
கற்பு, விராத-5
கற்பெனுமிருஞ் சிறை பூவைக்கு இறுது, சடாயுவு-144
கற்றை-திரட்சி, விராத-15:தொகுதி, சரப-3
கறந்தாலென நீர்தருதல், மாரீச - 155
கறி-உணவுக்குத் துணையாகத்தின்னும் பண்டவகை,சூர்ப்ப-74
கறை-கோபம், மாரீச-136
கன்மனத்தி, சூர்ப்ப-69
கன்றி-மனம்வெதும்பி, விராத-33

கன்றைப்பிரிந்த ஆX இலக்குவனைப் பிரிந்த இராமன், அயோமு-84
கன்னக்கனிதல், மாரீச-137
கன்னங்களின் காணுதல்-காதுகளினாற் கேட்டறிதல், மாரீச-224
கனகமிதுவானாற் காரியமென், மாரீச-230
கனந்தலைவருங்குழல், மாரீச-42
கனம்-திணிவு, மாரீச-142: மேகம், கரன்-54: சிறப்பு, சடாயுகா-16
கனலிலழியுங்கொடி X இராவணன் கையிலகப்பட்டு அவன் கடிது தேர்விடுஎன்று சொல்லக்கேட்ட சீதை: சடாயுவு-76
கனலி, சூர்ப்ப-58
கனலுறுதல்- தீயிடையகப்படுதல், சூர்ப்ப-85
கனவினுமூடறீர்ந்திலர், மாரீச-119
கனைகடல், சடாயுகா-17
காகுத்தன், கரன்-91, சடாயுவு-38
காசிபன் தக்கன்புதல்வியர்பதின் மூவரைமணந்தான், சடாயுகா-25
காசினி-பூமி, சரப-24
காட்சி-தோற்றம், சடாயுகா-15
காட்டெரியிற் றொடருஞ்சீதை X தாமரை வனத்திடைத்தாவு மன்னம், சடாயுவு-14
காடை, சடாயுகா-27
காதல்-வருத்துகை, விராத-72: காமநோய்: சூர்ப்ப-89
காதல்வடிவினனுடன் வாழ்வதே வாழ்வு, சூர்ப்ப-90
காதலி-மனைவி, சரப-42
காதலித்து, விராத-18
காதலிற்கலந்தசிந்தை, சூர்ப்ப-54
காந்தம்-சந்திரகாந்தம், மாரீச-157
காந்தர்ப்பம்-மறைகள்வகுத்த கூட்டம், சூர்ப்ப-54
காந்துதல்-கருகுதல், சூர்ப்ப-80: வெதும்புதல், சடாயுகா-37
காப்பு-தடுத்தல், சடாயுவு-22
காம்பறியுக்தோளான், சூர்ப்ப-139
காமக்குணம், மாரீச-113
காமத்தாற் குளிக்கும்நீருங் கொதிக்கும், சூர்ப்ப-79
காமத்தீச் சீலத்தாலவிக்கப்படுவதன்றிச் செய்யலாவது உண்டோ, மாரீச-104
காமதாபம் ✶ மொய்கொள்தீ, சூர்ப்ப-78
காமநோய்X மதியிலிசெய்ததீமை, (வளர்தலினுவமம்,) மாரீச-86
காமநோய் (அறிவைக்) காக்கும், விராத-66
காமம் அனல்வர மெய்யிடைத் தீண்டகிற்பது, சூர்ப்ப-88
காமமாவது, சடாயுவு-119
காமரம்-ஓர்பண், மாரீச-69
காமவல்லியாங்கன்னி, சூர்ப்ப-39
காமவிடம், மாரீச-196
காமன் • இராமலட்சுமணரின் கழற்பொடிக்கும் ஒவ்வான், சடாயுகா-13
காமனுக்கு அஞ்சினவள் நாகம் வாழ்முழைசேர்தல், சூர்ப்ப-81
காமனென்றொருவன் செய்யும் வன்மை, சூர்ப்ப-45
காயம்-உடல், அகத்-38, கவந்த-52
காயம்வேறாகிக்கருமமும்வேறாதல், மாரீச-244
காயெரி, சரப-37
காயெரியனையகள்ள வுள்ளத்தாள், சூர்ப்ப-65
கார்த்தவீரியனைப் பரசுராமன் வென்ற வரலாறு, மாரீச-195
கார்முகத்தோடு கடைப்புருவங் குனித்தான், சடாயுவு-108
கார்முகம்-வில், கரன்-132Xநாகம், சடாயுவு-105
காரிழிதல் X கணைகள் சிந்துதல், கரன்-131
கால்-காற்று, பாதம், கரன்-33
கால்கிளர்தல்-காற்றினாற் பொங்கியெழுதல்; கரன்-25
கால்பறிந்திடுதல் - வேரற்றுவிழுதல், கவந்த-5
கால்வருடல், சடாயுவு-44
காலக்கூற்று, சூர்ப்ப-104

கோடு மலைச்சிகரம், அயோமு-30: தந்தம், கான்-149
கோத்துவாங்குதல், தொடுத்து எய்தல், கான்-118
கோதாவரி × சான்றோர்கவி, சடாயுகா-1, சூர்ப்ப-1
கோதாவரி இராமனுதியர் செல்கையில் அலையெழுந்து அடங்குதல் அன்னரைக்கண்டு அடிபணிவது போலும், சூர்ப்ப-2
கோதாவரிக்குக் கமலம் முகமும், குவளை கணகளும், திசைகாமும், சூர்ப்ப-2
கோதாவரியைச் சீதை தன் நிலையை இராமனுக்குத் தெரிவிக்குமாறு வேண்டுதல், சடாயுவு-80
கோதை, காண்: விராத-24: கூந்தல், விராத-39: பூமாலை, விரற்சட்டை, மாரீச-192
கோபக்கனல், கான்-9
கோபம்முதலிய சீதையின் விஷயமான காமநோயாற் பற்று நீங்குதல் × பாபம் நின்றிடத்துத்தருமம் நில்லாது நீங்குதல், மாரீச-82
கோமகன்-அரசகுமாரன், சூர்ப்ப-34
கோயில்-அரண்மனை, சடாயுவு-45
கோரவெங்கண், விராத-19
கோல்-தடி: கான்-35: = கோலம்-அழகு, சடாயுவு-75
கோல்திரித்தல் பாடுதல் ஆடுதல், மகிழ்ச்சியின் செயல், அகத்-23
கோல்வளை, கான்-142
கோள்-கிரகம், விராத-12: சடாயுகா-7: உயிரைக் கொள்ளுதல், விராத-10: கொடுமை, மாரீச-164, வேதனை, சடாயுவு 204: ஒளிகொண்டிருக்குந் தன்மை, சரப-22
கோள்களை வாரிச் சிறைவைத்தவன், சடாயுவு-47
கோள்கிடந்தசிறை × ஆரம், மாரீச-5
கோளரி, கான்-21
கோளரிமா × ராமன், கான்-21
கோளின்வனக்குழு- கொல்லுதலையுடைய அழகியகூட்டம், (வனம்-அழகு, கான்-166
சக்கரத்திற் றகைவரிதாயபகழி, மாரீச-249
சக்கரவாகப்பறவை, மாரீச-126
சசிதேவி × மலராள், சரப-6
சஞ்சலம், மாரீச-106
சடசடவொலி, அயோமு-81
சடசடவொலி மரங்களுந் தூறுந் தாளிலகப்பட்டு ஒடிவதனுல் தோன்றியது, கான்-59
சடாயு × மேரு, சடாயுகா-87: சம்பாதியின் தம்பி, சடாயுகா-30. கலை துணிந்தகேள்வியன், சடாயுகா-5: சேவடிக்கமலஞ் சேர்பவன், சடாயுவு-212: திருமால் முதலிய பல தேவர்களையும் கண்ணிற் கண்டவன், சடாயுகா-12-13: தயாதனுக்கு ஆவி, சடாயுகா-23; நடுக்கருமிடுக்கினன், சடாயுவு-170: மதியன் கலை கிடந்தெனக் காட்சியன், சடாயுவு-172
சடாயு இராமலட்சுமணர்க்காக எரி புகாது உயிர்வைத்துக் கொண்டிருத்தல், சடாயுகா-36
சடாயு இராமலட்சுமணரைக்கண்டதாற் பெருமகிழ்வு று தல், சடாயுவு-188
சடாயு கோபந்தணியுமாறு கூறிய மொழி, சடாயுவு-208
சடாயு சீதையைக்கவர்ந்து சென்றமைக்கு இரங்கல், சடாயுவு-140-144
சடாயு தசரதனிறந்தது குறித்துப் புலம்பல், சடாயுகா-21,23
சடாயு மொழியைத் தசரதன் பணியென்னச் சிந்தையில் தழுவுதல், சடாயுவு-213
சடாயு விழ விண்டுவிளுட்டவர் பொன் மாரிசொரிதல், சடாயுவு-120

சூரியாத்தமனவருணனை, சடாயுவு-225
சூரியோதயவருணனை, அயோமு-30, சாப-36
சூரொடுங்கயில், (சூர் - தேவர்) விராத-29
சூல்-கரு, கவந்த-5
சூழல்-சுற்றிடம், அகத்-57: இடம், அகத்-2
சூளுற்ற-சபதஞ் செய்த, சித்தாந்தஞ் செய்த என்றபடி; சாப-31
சூளுறவு-சபதம், மாரீச-55
சூறை-சுழல்காற்று: × சூர்ப்பணகை, கான்-192
செக்கர் - செவ்வானம், விராத-9, சூர்ப்ப-71
செக்கர்சூடிய கந்தரம், (கந்தரம்-கழுத்து.) சடாயுவு-92
செங்கணுதிரமூறுதல், சடாயுவு-201 [9
செச்சை-சந்தனக்குழம்பு, விராத-
செஞ்செவே, சடாயுவு-145, 146
செந்நெல்வாலையுடையது, அகத்-58
செந்நெல் சூடறுப்புண்டவை × கழுத்தறுப்புண்ட நாகங்கள், கான்-149
செந்நெறி - செம்மையானநெறி, நல்வழி, சாப-26
செப்பம்-நன்மை, சடாயுவு-56
செம்பராகம் படச்செறிந்த கூந்தல், சூர்ப்ப-9
செம்புகாட்டியகண்ணிணை பாலெனத் தெளிந்தீர், கான்-145
செம்மயிர்ச்சாலம், கான்-42
செம்மயிர்விரிந்தகருந்தலை, கான்-82, 86, 91, 92
செம்மல் - புதல்வன், சடாயுகா-8, கான்-177
செம்மலை-செந்நிறமலை, சடாயுகா-15
செய்கை-செய்யத்தக்க வுபசாரம், அகத்-29
செய்கை செவ்விதன்று, சூர்ப்ப-40
செய்திரு - மோட்சலக்ஷ்மி, சாப. 38
செய்வினை-கைத்தொழில், மாரீச-156
செயிர்-துன்பம், சடாயுவு-2: குற்றம், சடாயுகா-23
செயிர்த்து-அயிர்த்து, சடாயுகா-10
செருக்கர், மாரீச-201
செருக்கு-கருவம், அகத்-28: உற்சாகம், கான்-39
செருப்படியிற் பொடியொவ்வா மானிடர், சூர்ப்ப-105
செருப்பெருத்தினவுறுதோள், கான்-44
செருவம்-போர், விராத-9
செலசாம், சடாயுகா-26
செலவு-நடை, சாப-3
செவ்வழி - செவ்வியமுறை, சடாயுவு-220
செவ்வி-அழகு, சூர்ப்ப-2, மாரீச-170
செவ்வியோர் - சிறப்புப்பெற்றவர், சடாயுவு-10
செவிஅரிபுக்குமுழங்குவது, விராத-9
செவிகளைக் கைகளாலே சேமஞ்செய்தல், சடாயுவு-69
செவி கால் மாணிக்கமயத்து ஆணிப்பொனிறு கிய மான், மாரீச-219
செவித்துளை, சடாயுவு-201 [15
செற்ற-அழித்த, கொன்ற: விராத-
செற்றம்-கோபம், மாரீச-176
செற்று-வலியடக்கிவென்று, மாரீச - 12
செற்றுதல்-பதித்தல், சாப-10
செறிகழல், சடாயுகா-10
செறுத்தல் - உக்கிரங்கொள்ளுதல், கான்-171
செறுநர்-பகைவர், சடாயுவு-210
சென்னி துண்டமதிவைத்தவன் × அகத்தியன்: அகத்-51
சென்னியிற்கொள்ளுதல் - சிரஸாவஹித்தல், அகத்-15

